கோஸ்வாமி துளசிதாஸரின்

# ராமசரித மானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

மொழி பெயர்ப்பும், கருத்துக்களுடனும்,
மஹேபாவத்துடனும்

## பால காண்டம்

பிரசுரகர்த்தர் :

S. ஜகந்நாராயணன்
25, லேடி ஹார்டிஞ் ரோடு,
புது டில்லி—1

*First Edition—October*, 1971

மத்திய அரசாங்கத்தாரால் பொருளுதவி செய்யப்பட்டது

விலை ரூ.

---

காபிகள் கிடைக்குமிடம்:

மதராஸ்:

S. ஜகந்நாராயணன்,
C–588, ASHOK NAGAR, MADRAS–33

புது டில்லி:

S. ஜகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி–1

Kabeer Printing Works, Madras (1406)



रामचरित मानस चतुःशती
राष्ट्रीय समिति

टेलीफोन ३८२९९७

४२, अशोक रोड, नई दिल्ली

July 10, 1971

## FOREWORD

Tulsidas is not only a great poet of Hindi, but in writing Ramacharita Manas he laid down a unique code of human behaviour for all times and for every body. He belonged to the Bhakti movement in India during the Medieval period. His vision of "Ram Rajya" encompassed humanity; it sought the deliverance of man from physical, mental and economic sufferings and the slings of misfortune through continuous evolution and refinement of the spirit. In order to commemorate the Four Hundredth Anniversary of such an immortal classic like Ramacharita Manas, written by this great social reformer saint, a National Committee has been set up under the patronage of Shri V.V. Giri, President of India. Smt. Indira Gandhi is the President of the Committee, and Shri Kamalapati Tripathi its working President Renowned scholars and writers from India and abroad representing different languages and cultures are associated with this National Committee.

I am happy to learn that Shri S. Jagannarayanan, a Tamil resident of Delhi (Under Secretary, Ministry of Finance) has rendered a translation of Tulsidas's Ramacharita Manas in Tamil. His book also contains interpretations and parallel illustrations from other Ramayana authors like Valmiki, Veda Vyasa, Kamban, Nammalvar and other venerable Acharyas and writers of this country, and also the life sketch of Tulsi and a brief commentary on his other works. By translating Ramacharita Manas from Hindi to Tamil through his hard labour, sincerity and singleminded devotion, Shri Jagannarayanan has not only served the cause of literature but has built a bridge between two of our great languages through the medium of an epic, which has contributed uniquely to the enrichment of the cultural heritage of India

Whether it is Tulsidas or Kamban, all those seers and savants who have tried to uplift society through their life and work, will remain for ages as beacon lights to the human race.

I congratulate Shri S. Jagannarayanan for bringing out this volume, which is of national importance. I am particularly happy that the Tamil translation of Ramacharita Manas is appearing on the occasion of its Fourth Centenary and thereby helping to fill a gap and further the objectives of the National Committee.

I hope that his work will be popular among Tamil-knowing people.

K C Pant

(Krishna Chandra Pant)
General Secretary,
Ramcharita Manas Chatushati Rashtriya Samiti

RAMANA KENDRA, DELHI
M-9, Netaji Nagar, New Delhi-23

Secretary :
K. Swaminathan



துளசிதாசர் அருளிய "ராம சரித மானஸ்" என்பது இமய மலைக்கும் விந்திய மலைக்கும் இடையே வாழும் பல கோடி மக்களுக்குத் தலைமுறை தலைமுறையாக இலக்கியச் சுவையையும் பக்தி ரசத்தையும் ஒருங்கே வழங்கிவரும் மாபெரும் நூலாம். இந்த நூலை உணர்ச்சி வேகம் குன்றாது தமிழாக்கித் தந்ததன் மூலம் திரு. ஜகந்நாராயணன் அவர்கள் நமது தாய் நாட்டின் ஒருமைப் பாட்டுக்குப் பெருந் தொண்டு புரிந்துள்ளார். இந்தத் தொண்டினைப் பாராட்டி வரவேற்கும் வகையிலே துளசிதாசர் வற்புறுத்தி விளக்கும் சைவ-வைணவ ஒருமைப் பாட்டையும் சிந்தித்து மகிழ்தல் சாலப் பொருந்தும்.

துன்பத்துள் துன்பம் என்று வள்ளுவர் பழிக்கும் "இகல்" என்பது வேறுபாட்டை மாறுபாடாகக் கருதிப் பகை வளர்க்கும் அழிவு முறை. வேற்றுமையைப் பயன் படுத்தி வலிமையை வளர்ப்பது 'பகுத்தறிவென்ற விஞ்ஞான முறை. பன்மையிலே ஒருமை கண்டு அனைத்தையும் உள்ளொளியுள் அடக்கி இன்பம் வளர்ப்பது ஞான நெறி. உள்ளங்கை மறையக் கரத்தை மூடிக்

களுக்களை மோதிப் போராட்டம் மூட்டுவது உண்மையா, அறிவா, இன்பமா? கண் இரண்டு; பார்வை ஒன்று. கை யிரண்டு; தொழுகையும் உழைப்பும் ஒன்று. கால் இரண்டு; நடை ஒன்று

இம்மை மறுமை யெனுமவ் விடுமைப்
பொய்ம்மை யுறுகற் பனைபோன் றிடவே
எம்மை யிலுமெய் யொருமையிதுகாண்
செம்மை யுறுசிற் பரமே சிவமாம்.

இது முருகனார் திருவாக்கு. உலகை ஒன்று படுத்தும் இந்த அன்பைச் சிவம் என்றும், அறிவென்றும் சொல்லலாம்; அதையே ராமனென்றும் அறமென்றும் சொல்லலாம். இகலைத் தாண்டி இனிமை அடைந்து, துறவாது உலகைக் கருவியாய்ப் பற்றி, அறத்தைப் பேணி ஒற்றுமை வளர்த்து ஸ்ரீ ராமர் காட்டிய செவ்வழியொன்றே பழமை புதுமை யிரண்டையும் கடந்து, அறம் பொருள் இன்பம் வீடாம் நான்கையும் ஒருங்கே காக்கும் பாரத நாட்டுப் பொதுவழியாகும். இதனையே

"பற்பல நெறியாய்ப் பரந்த பெருவழி,
சோதி மார்க்கம் ஆதிசன் மார்க்கம்,
நின்று நடக்க ஒன்றி நடக்க...
உலகம் ஒருமைக் கிலமா யிலங்கும்"

என்று வள்ளுவர், வள்ளலார் வழிவந்த திரு வி. க.

போற்றிப் புகழ்ந்து, கண்ணனி கடவுளின் இன்னருள்

வேண்டி "அருளைப் பொழிக! அருளைப் பொழிக!"

என்று பாடியுள்ளார்.

பொன்னாழி யேந்தினான் பொன்னடியை

நாள்தோறும் நாடியும், பாடியும், சூடியும்,

"என்னாகில் என்னே எனக்கு" என்று யானற்றியலும்

அடியார்க் கூட்டம் முடிந்தா விட்டது? துளசிதாசர்

போற்றும் ராம நாமத்தின் மகிமையை நேற்றும்

இன்றும் தியாகப் பிரம்மமும் காந்தியடிகளும்

இசையிலும் செயலிலும் விளக்க வில்லையா?

12-7-1971
சம்பூர்ண காந்தீ வாங்மயம்
ராமகிருஷ்ணபுரம்
புது தில்லி-22

கி. சுவாமிநாதன்

ஸ்ரீராமச்சந்திரன் சீதையுடன் ராஜ சிம்மாஸனத்தில் ஏறி உட்கார ஸகலரும் ஜய மங்கள கோஷங்கள் செய்தனர். முதன் முதலாக வஸிஷ்டர் ராஜ்திலகத்தை அவர்களுக்கு அணிவித்தார். அவருக்குப் பின்பு ஸகல பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி ராஜ திலகத்தை அணிவித்தார்கள். ஸகல மாதாக்களும் சீதா ராம தம்பதிகளுக்கு மங்கள ஆரத்திகளை எடுத்தார்கள்.

# ஸமர்ப்பணம்

நாராயணம் நமஸ்கிருத்ய நரம் சைவ நரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயமுதீரயேத்

ராமசரித மானஸம் எனப்படும் கோஸ்வாமி துளசிதாஸரின் மானஸ ராமாயணத்தின் ஏழு சோபானங்களின் மொழிபெயர்ப்பை (கருத்துக்களுடன்) ஐந்து பாகங்களாக வெளியிட்டிருக்கிறேன். இப் புத்தகத்தில் பாலகாண்டம் என்கிற முதல் சோபானத்தை ஸமர்ப்பித்துள்ளேன். பாலகாண்டத்தில் மானஸ ராமாயணத்தின் அமைப்பையும், ஸகுண பிரும்மத்தின் உபாஸனையைப் பற்றிய மேன்மைகளையும், ராம தாரக மந்திரத்தின் பெருமைகளையும் விவரித்துவிட்டு, துளசிதாஸர் சிவ பார்வதி பரிணயத்தை விவரிக்கிறார். அதற்குப் பிறகு ராமனுடைய அவதார ரஹஸ்யங்களை வர்ணித்துவிட்டு, துளசிதாஸர் உமாதேவியை சிஷ்ய பாவமாக வைத்து பகவான் சங்கரரை ஆசார்ய ஸ்தானத்தில் வைத்து, ராமகதா விருத்தாந்தங்களைச் சொல்லும்படி சித்திரித்திருக்கிறார். அதேமாதிரி ஸம்வாத ரூபங்களாக, யாக்ஞ்யவல்கியர் பரத்வாஜருக்கும், காகபுசுண்டி பக்ஷிராஜனான கருடருக்கும், துளசிதாஸர் நம் போன்றவர்களுக்கும் சொல்லுவதாக, இந்த மானஸ ராமாயணத்தை நான்கு உத்தம ஸம்வாதரூபமாக துளசிதாஸர் நமக்கு அளித்திருக்கிறார். ராமன் தசரத மைந்தனாக அவதரித்து, சீதாக்கல்யாணம் வரையிலுள்ள விருத்தாந்தங்களைச் சொல்லிவிட்டு, கோஸ்வாமி துளசிதாஸர் பால காண்டமாகிற முதல்சோபானத்தை முடித்திருக்கிறார்.

இப்புத்தகத்தில் துளசிதாஸரின் ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பர்களால் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த மொழி பெயர்ப்பில் போடப்பட்டிருக்கும் பிராக்கட்டுகளிலுள்ள வசனங்களும், தியானமும் எனது கருத்துக்களையும் மனோபாவத்தையும் விமர்சனம் செய்கின்றன.

இந்த உத்தம காவியத்தை மொழி பெயர்க்கும் ஆவலில் இருந்த எனக்கு, அப்போதைக்கப்போது தோன்றின மனோபாவங்களையும், கருத்துக்களையும், ஆர்த்தி நிறைந்த வசனங்களையும், சீதாராமனுடைய பரத்வ சௌலப்ய குண விசேஷங்களில் மூழ்கப்பட்டவனாக ஆர்வம் அடங்காமல் தியானத்திலும், செய்யுட்களின் பிராக்கட்களிலும் நான் விளக்கும்படி நேர்ந்தது. துளசிதாஸரின் கதையை மாத்திரம் படிக்க நோக்கம் உள்ளவர்கள் செய்யுட்களின் நம்பர்களில் போடப்பட்டிருக்கும் கதை விருத்தாந்தங்களைத் தொடர்ச்சியாகப் படிக்கலாம். இந்தத் தியான யேற்பாட்டினால், நான் இதர ராமாயணங்களின் கருத்துக்

களையும், வால்மீகி, வேதவியாஸர், சுகர், கம்பன், தியாகராஜர், நம்பூத்ரி பட்டர் போன்ற மஹான்களின் கருத்துக்களையும் ஓரளவு சொல்லும்படி நேர்ந்தது. இதர ராமாயணங்களின் கருத்துக்களில் பரக்கப் பாடப் பெற்றிருக்கும் சீதாராம தம்பதிகளினுடைய கல்யாண குணச் சிறப்புக் களை என்றால் ஓரளவுதான் சொல்லமுடிந்தது. பரந்த பாற்கடலில் தேங்கியிருக்கும் பாலைப் பருகுவதற்கு ஆசையுடன் ஓடிவரும் ஒரு பூனையினால் முடியுமா? மந்திராசலம் போன்ற மலையையோ, ஸுமேரு பர்வதத்தையோ நளினமான ஒரு ஹம்ஸம்தான் தாங்கமுடியுமா? சீதாராமனை குரு, பிதா, மாதா, தெய்வமாகிற ஸ்வாமி என்று நினைக்கும் பாவத்துடன் எனக்கு என் ஆற்றாமைகளைத்தான் சொல்லித்தீருமா? தீரனும், நரவரனும், மரியாதா புருஷோத்தம ராமசீதா தம்பதிகளின் பெருமைகளை ஒரு சிசு எவ்வளவு தூரம் பரிகிரஹிக்க முடியுமோ, அதைப்போல தீன ஸ்திதியில் இருப்பவனாக என்னை அறிந்துகொண்டு, எனது குற்றங்களையும், வாசக தோஷங்களையும் மனநிறைவுடன் மன்னிக்கும்படி தாழ்மையுடன் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்தை மேல் பார்த்து, இலக்கியப் பிழைகளைத் திருத்திக் கொடுத்துதவிய எனது நண்பரும், புதுடில்லி தயால்சிங் காலேஜின் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் R. பார்த்தசாரதி அவர்களுக்கு நான் மிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அதேபோல மத்திய அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட மேற்பார்வையாளரும், ஆக்ரா பல்கழகம் ஹிந்தி தமிழ் பேராசிரியர் ஸ்ரீமான் Dr. A. N. ராஜகோபாலன் அவர்களுக்கும், அவர்களுடைய சிறந்த மனப்பான்மையினால் யேற்பட்ட புத்தி ஆலோசனைகளுக்கும், கருத்துக்களுக்கும் நான் மிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு சிலபேர்கள் காரணமாயிருந்தனர். அவர்களில் முக்கியமாக காலம்சென்ற தேசீய உயர்நீதிபதி ஸ்ரீமான் T. L. வெங்கட்ராமய்யர் அவர்களும், புதுடில்லியில் மஹாத்மா காந்தியின் வாழ்க்கை சரித்திரம், அது சம்பந்தப்பட்ட நூல்களைத் தயாரிக்கும் கேந்திரத்தின் தலைவரும் டில்லி ரமண கேந்திரத்தின் காரியதரிசியும், அருளே உருவாகக்கொண்டு, என் போன்றவர்களுக்கு ஊக்கம் அளிவிக்கும் Prof. K. சுவாமிநாதன் அவர்களும் ஆவார்கள். என் மன உல்லாஸத்திற்காகவும், ஆத்மதிருப்திக்காகவும் எழுதப்பட்ட இப்புத்தகத்தை அவர்களே வெளியிடும்படி தூண்டினார்கள். அவர் களுக்கு நான் மிக்க கடமைப்பட்டிருக்கிறேன். அதுமாதிரி, என் னுடைய பரம மித்ரரும், பேரறிவாளியும், சாஸ்திரீய சங்கீதத்தில் மிக்க அறிவுள்ளவருமான, மதராஸ் Dr. V. ராகவன் அவர்களுக்கும், என் குல பந்துவும், அறிஞரும், மதராஸ் அட்வகேட் வீ. வீ. ராமதுரை அவர்களுக்கும் நான் மிக்கக் கடமைப் பட்டவனாகவிருக்கிறேன். இப்

புத்தகத்தின் தோஷங்கள் என்னையும், பெருமைகள் அவர்களைச் சேரட்டும்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு மத்திய அரசாங்கத்தினர், சிக்ஷா நிலையம் (Ministry of Education) எனக்குப் பண உதவி செய்துள்ளார்கள். அவர்களுக்கும் நான் மிக்க நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாக விருக்கிறேன். முக்கியமாக எனது நண்பர்களான ஸ்ரீமான் N. S. பட்நாகர் அவர்களுக்கும், ஸ்ரீமான் D. N. சாக்ஸீனா அவர்களுக்கும், மற்றுமுள்ள நண்பர்களுக்கும் நான் மிக்க நன்றியைச் செலுத்துகிறேன்.

ராமசரித மானஸமென்கிற மானஸ ராமாயணத்தின் ஏழு காண்டங்களையும் சரிவர நான் எழுதி முடிப்பதற்கு உதவியவர் எனது மனைவி திருமதி ராஜலக்ஷ்மி ஜகந்நாராயணன் அவர்கள். அவர்களின் தூய மன அன்பினால், எழுதுவதற்குப் போதுமான அவகாஸம் கொடுத்து, எனது முயற்சியில் தேக உழைப்புடன் பரிபூர்ணமாக ஈடுபட்டு, எனக்கு மிக்க உதவி செய்துள்ளனர். அவர்கள் சமீபத்தில் காலமான போதிலும், அவர்களுடைய நல் நினைவாகவும் சீதாராமர்ப்பணமாகச் செய்திருக்கும் இந்தச் சிறிய நூலை டில்லியிலுள்ள தமிழர்களும், மற்றைய பிரதேசங்களிலுமுள்ள எங்களது தமிழ் அன்பர்களும் மன நிறைவுடன் வரவேற்று, என்னை ஆசிர்வதிக்கக் கோறுகிறேன். வாசக தோஷங்கள் பலவிருப்பினும், என்னை மன்னிக்கும்படி தாழ்மையுடன் நான் அடிக்கடி அவர்களைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இந்த புத்தகத்தை அச்சிட்டு எனக்குக் குறித்த காலத்தில் பிரதிகளை அளித்த M/s கபீர் பிரிண்டர்ஸ், திருவல்லிக்கேணி, மதராஸ் அவர்களுக்கு நான் மிக்க நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகத்தில் காணப்படும் படங்களை எனக்கு இலவசமாகக் கொடுத்து, பண உதவியும் வாக்களித்தவர்கள் டில்லியிலிருக்கும் ஸ்ரீமத் ராமசரித மானஸ சதுஸ்ஸதி அதாவது கோஸ்வாமி ஸ்ரீ துளசிதாஸரின் நான்காவது நூற்றுண்டு நினைவுச் செயலாளர்களின் ராஷ்டிரீய கேந்திரம். அதன் காரியதரிசிகளாகவிருக்கும் ஸ்ரீமான் கிருஷ்ணசந்திர பண்ட் அவர்களுக்கும், உபகாரியதரிசியான ஸ்ரீமான் ரத்னாகர் பாண்டே அவர்களுக்கும் நான் மிக்கக் கடமைப்பட்டவனாக விருக்கிறேன்.

விரோதிகிருது வருஷம்,<br>ஆடி மீ 16ம் உ,<br>ஞாயிற்றுக்கிழமை,<br>1st August 1971.

சீனிவாஸ ஜகந்நாராயணன்<br>25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,<br>புது டில்லி–1

# பாலகாண்டத்தின் ஸ்துதிகள்

## பிரும்மஸ்துதி (பக்கம் 332)

(1)

ஜய ஜய சுரநாயக ஜன சுகதாயக ப்ரணத பால் பகவந்தா
கோத்விஜ ஹிதகாரீ ஜய அஸுராரீ ஸிந்து ஸுதாப்ரியகந்தா.

(2)

பாலனசுர த⁴ரணி அத்புதகரநீ மர்மந ஜானஇ கோஈ
ஜோஸஹஜ க்ருபாளா தீனதயாளா கரஉ அனுக்ரஹ ஸோஈ.

(3)

ஜய ஜய அவிநாஸி ஸப்க⁴ட் வாஸீ வ்யாபக் பரமானந்தா
அவிகத கோதீதம் சரித புநீதம் மாயாஹித முகுந்தா.

(4)

ஜே ஹிலாகி விராகி அதி அனுராகீ விகதமோஹ முனிவ்ருந்தா
நிஸி வாஸர த்யாவஹிம் குணகண க³ாவஹி ஜயதி ஸச்சிதானந்தா.

(5)

ஜே ஹிஸ்ருஷ்டி உபாஈ த்ரிவித பநாஈ ஸங்க ஸஹாய நதூஜா
ஸோ கரஉ அக⁴ாரீ சிந்தஹமாரி ஜானிஅ பக்தி நபூஜா.

(6)

ஜோபவ பய பஞ்ஜன முனி மனரஞ்ஜன கஞ்ஜன விபதி வரூதா
மனவச கர்ம வாணீ சாடீ ஸயாநீ ஸரண் ஸகல ஸுர ஜூதா.

(7)

ஸாரத ஸ்ருதி ஸேஷா ரிஷிய அஸேஷா ஜாகஹும் கோஉ நஹிம்ஜானு
ஜேஹி தீனபிஆரே வேதபுகாரே த்ரஉஸோ ஸ்ரீபகவானு.

(8)

பவவாரிதி மந்தர ஸப்விதி சுந்தர குணமந்திரஸு கபுஞ்ஜா
முனிஸித்த ஸகல ஸுரபரம பயாதுர நமதநாத பதகஞ்ஜா.

## கௌஸல்யையின் ஸ்துதி (பக்கம் 346)

(1)

கஹதுஇ கர்ஜோரீ அஸ்துதிதோரீ கேஹிவிதி கரௌம் அநந்தா
மாயா குணக்யாநுதீத அமாநு வேதபுராண ப$^{4}$நந்தா.

(2)

கருணாசுக ஸாகர ஸப்குண ஆகர்ஜேஹிகாவஹிம் ஸ்ருதிஸந்தா
ஸோமமஹித லாகீஜன அனுராகீ பயஉப்ரகட் ஸ்ரீகந்தா.

(3)

ப்ரும்மாண்ட நிகாயா நிர்மித மாயாரோம ரோமப்ரதி வேதகஹை
மமஉரஸோ வாஸீயஹ் உபஹாஸீ ஸுநத்தீ$^{4}$ர மதித$^{2}$ர நரஹை.

## அஹல்யையின் ஸ்துதி (பக்கம் 387–388)

அதிநிர்மல வாணீம் அஸ்துதி டானீக்ஞானகம்ய ஜய ரகுராயீ ॥

மைம் நாரி அபாவன் ப்ரபு ஜக் பாவன் ராவணரிபு ஜனசுகதாயீ ।
ராஜீவ விலோசன பவபய மோசன பாஹி பாஹி ஸரண ஹிம்ஆஈ ॥

முனி ஸ்ராபஜோ தீன்ஹா அதிபல கீன்ஹா பரம அனுக்ரஹமைம் மாநு ।
தேகேஊம் ப$^{4}$ரிலோசன ஹரி ப$^{4}$வமோசன இஹ இலாப$^{4}$'சங்கர் ஜாநா ॥

வினதி ப்ரபு மோரீ மைம்மதி பே$^{4}$ாரீ நாத$^{2}$ந மாக$^{3}$ஊம் ப$^{3}$ர்ஆநா ।
பதகமல பராக$^{3}$ாரஸ அனுராக$^{3}$ா மமமன மதுப கரை பாநா ॥

ஜேஹிம்பத$^{3}$ ஸுரஸரிதா பரமபுநீதா ப்ரகட ப$^{3}$ஈசிவசீஸத$^{4}$ரீ ।
ஸோஈபத பங்கஜ ஜேஹி பூஜத அஜமம சிரதரே உக்ருபாள ஹரீ ॥

## ஜனகமஹாராஜரின் ஸ்துதி (பக்கம் 623–626)

1. ராம் கரௌம் கேஹி பா³ந்தி ப்ரஸம்ஸா
முனி மஹேஸ்மன் மானஸ ஹம்ஸா ||

2. கரஹிம் ஜோக்³ ஜோகீ³ ஜேஹிலாகீ³
கோஹீ மோஹீ மமதா மது²த்யாகீ³ ||
வ்யாபகு ப்ரஹ்மூ அலக்² அவிநாசி
சிதா³னந்து³ நிர்குண குண்ராஸீ ||

3. மன்ஸமேத ஜேஹி ஜான் ந வாணீ
தர்கி ந ஸக்ஹிம்ஸகல் அனுமானீ ||
மஹிமா நிக³மு நேதிகஹி கஹஈ
ஜோதிஹீம் கால் ஏகரஸ ரஹஈ ||

4. நயன விஷய மோ கஹீம் ப⁴யஉஸோ ஸமஸ்த சுக²மூல ।
ஸப்இ லாப⁴ ஜ³க³ ஜீ³வ் கஹீம் ப⁴ஏம் ஈஸி அனுகூல ||

5. ஸப்ஹி பா⁴ந்தி மோஹி தீ³ன்னிஹி ப³டா⁴யீ
நிஜஜன ஜாநி லீன்ஹ அப்நாயீ ||
ஹோஹிம் ஸஹஸ் த³ஸ் ஸாரத³ ஸேஷா
கரஹிம் கலப் கோடிக் ப⁴ரிலேகா² ||

6. மோர் பா⁴க்ய ராஉர் கு³ண் கா³தா²
கஹிநஸிராஹிம் ஸுநஹீ ரகுநாதா ||
மைம் கச்சு கஹஊம் ஏக் ³பல மோரேம்
தும்ஹரீ ஜஹு ஸநேஹ்ஸுடி² தோ²ரேம் ||

7. பா³ர் பா³ர் மாக³ஊம் கர்ஜோ³ரே மனுபரிஹரை
சரண ஜநி போ⁴ரேம் ||
ஸுநி ப³ர் வசன ப்ரேம ஜனு போஷே
பூர்ண காம் ராமு பரிதோஷே ||

சுபம்

# கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட
# ராமசரித மானஸம் அல்லது
# மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்

---

## பால காண்டம்

[தியானமும் 1934 ஸ்லோகங்களும்]

# முன்னுரை

## 1. அவதாரிகை

ஸ்ரீமத்ராமாயணத்தின் மூலகதாநாயகர்களான ஸ்ரீராமன் சீதை ஆகியவர்கள் அனாதிகாலமாக இருந்துவரும் பாரததேசத்தின் மஹா பெரிய சொத்து, மாபெரும்தனம். ஆதிகவியாகிய வால்மீகி பகவானால் இயற்றப்பட்டது இந்த மஹாகாவ்யம். பகவான் நாராயணருடைய சூக்ஷ்ம, ஸ்தூல ஸ்வரூப ஸ்வபாவங்களை அறிந்த நாரதபகவான், என் குருநாதர், ஸ்ரீராம மந்திரமாகிய ஷடாக்ஷரியை வால்மீகி மஹரிஷிக்கு உபதேசித்து, அந்த மஹா காவ்யம் ஸம்பவிப்பதற்கு அடிக்கோலாக உதவினார். அந்த காவ்யம் எழுதப்பட்டதிலிருந்து மஹா பக்தியுள்ள ராமதாஸர்கள் பலவிதமாக பரபிரும்மமாகிற நாராயணரின் அம்சமாகிய ஸ்ரீராமனையும் அவனுடன் இணைபிரியாதவளும் அன்பாயினி என்று அழைக்கப்படுகிறவளும், அவனுக்கு மனோ அனுகூலையாக சேதனா சேதனர்களை உஜ்ஜீவிக்கச் செய்கிற மஹா உத்தமியான மஹா லக்ஷ்மியும் சீதையாக அவதரித்து நம்மைக் காலந்தோறும், யுகந் தோறும் கல்பந்தோறும் ஆட்கொள்ள வந்த விபவ அர்ச்சாவதார மூர்த்திகள். அவர்களுக்கு நாம் எவ்விதம் நன்றி செலுத்துவோம்?

இந்த திவ்ய தம்பதிகளின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிவதோ சொல்வதோ மிகமிகக் கடினம். எளியவர்களுக்கு எளியவர்களாகவும் பெரிய ஞானிகளுக்கு பெரும் மாபொருளாகவும், முக்குணங்க ளாகவும் அவைகளின் சேஷ்டிதங்களாகவும், முக்குணங்களுக்கும் அதீதர்களாகவும், காலமாகவும், காலத்தின் சக்தியாகவும், ஆணாகவும் பெண்ணாகவும் நபும்ஸமாகவும், ஞான ஆனந்த வடிவாகவும் ப்ருக்ருதி புருஷனாகவும், இவைகளுக்கு அப்பாலுள்ள பரபாராவாரப் பொருளாகவும், ஆதித்யனாகவும், அந்த ஆதித்யனுக்கும் பின்னா லிருக்கும் இருளுக்கும் அப்பால் உள்ளவரும், பொன்னுருவமுள்ள புருஷராயும், ஜீவாத்மாகவும் பரமாத்மாவாகவும், விராட் புருஷராயும் அவைகளையும் தாண்டி அறியும் ஸத்குண புருஷராயும், இந்திரி யங்களுக்குப் புலப்படுவதற்கு அரிய அகோசரமான அதோக்ஷஜராகவும், ஆதிமூலப்பொருளாகவும், ப்ருஸ்னி கர்ப்பராகவும், ஸகுண ஸ்வ ரூபியாகவும், சுபதர்சனத்தினால் மயிர்கூச்சல் பெறுகும்படி அழ குள்ளவர்களான மூர்த்திகளை எவ்விதம் 'வர்ணிப்பது, அனுபவிப்பது, மற்றவர்களுக்கு எவ்விதம் உரைப்பது; உரைத்தாலும் களைப் படைந்து முடிவை யாராவது அடைந்திருக்கிறார்களா? பிரேமை வெள்ளத்தில் மூழ்கிமிதந்து அக்கரையை ஒருவேளை அவர்கள் பகவத் கிருபையினால் அடைந்தும், மீண்டும் மீண்டும் ப்ரேமை ஸாகரத்தில்

1406—1

விழுந்து தன்னையும் அவர்களையும் ஆனந்திப்பது அல்லவா ஜீவவாழ்க்கையின் உண்மை தத்வம்? இதை அறிந்துதானே மஹாபக்தர்கள், உதாரணமாக வஸிஷ்டர் போன்ற திவ்யஞானம், சக்ஷுஸ் அடைந்தவர்கள், திருவிக்கிரமனுடைய மகிமை எல்லையில்லாதது; எந்த மனிதன் அதை அளவிடச் செய்வானோ, அவன் பூமியிலுள்ள தூசிகளையெல்லாம் எண்ணத்துணிவான் என்றார். எங்ஙனம் பூமியிலுள்ள தூசிகளை எண்ணுதல் இயலாததோ, அவ்விதம் விஷ்ணு பகவானுடைய குணவிபவங்களையும் கணக்கிடுதலும் இயலாதது, என்று அருள் செய்தார். அப்பேர்பட்ட பகவான் விஷ்ணுவின் மகிமைகளை அகக்கண்களால் பார்த்த மஹான் வஸிஷ்டர். அவர் மாதிரி நாரதர், மார்க்கண்டேயர், வேதவியாஸர் போன்ற மஹான்கள், தவத்தையே தனமாகவும் மோக்ஷபராயணர்களாகவும் பரபிரும்மத்தை நாடி, தங்கள் வாழ்நாட்களையும் பல ஜன்மாக்களையும் தேய்த்த மஹா வித்வான்கள். அதுமாத்திரமா, பரமாத்மாவினுடைய அபார கருணையினால் விளைவதும், தன்னைத்தானே காண்பித்துக்கொள்ளும் உதார ஹ்ருதயத்தில் ஏற்படும். பெரும் கருணையினால் எவ்விதம் பரபிரும்மத்தை அதிருஷ்டம் படைத்தவர்களாகத்தான் பார்த்து அனுபவிக்க அவர்களால் முடிந்ததோ, அதுபோல பகவானுடைய கிருபையும் நிர்ஹேதுவானது. இவன் பாபி, புண்யாத்மா, ஞானி அக்ஞானி, பலமுள்ளவன் பலமில்லாதவன், தேவன் அசுரன் மனுஷ்யன் விலங்கு திர்யக், நாகர், கின்னரர் போன்ற எண்பத்து நான்கு லக்ஷம் ஜன்மராசிகளுக்கும் பாரபக்ஷம் காட்டாதவன். அவனைப் பல மார்க்கங்களால் அடையலாம் என்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஸ்திதப் பிரக்ஞனுக்கு ஒருவிதமாயும், காம்ய கார்யங்களில் ஈடுபட்டிருப்பவனுக்கு ஒரு விதமாகவும், அன்புள்ளவனுக்கு ஒருவிதமாகவும் அகோரமாக நினைப்பவனுக்கு அவன் ஒரு விதமாகவும் தோன்றுகிறான். அதனால் ஞானிகளான முனிவர்கள் ஞானக் கண்களுடன் வாஸுதேவ ஸ்வரூபத்தை அவலம்பித்து ஸகலத்தையும் ஆத்மஸ்வபாவமாகப்பார்த்து, இன்பங்களை அடைகிறார்கள். அர்த்தகாமி அவனுடைய விபூதிகளை அடைந்துரமிக்கிறான். எவ்விதமாயினும், ஒவ்வொரு ஜந்துவும் தனது வாழ்நாளில் ஒரு க்ஷணமாவது அந்தப் பரம்பொருளை நினைப்பவனாயும், தான் அதற்கு ப்பராதீனமாக விருப்பதையும் அறிகிறான். ராவணனைப் போன்ற ஸ்வாபிமானிகள்கூட ராமனை தன் குடும்ப நாசத்தின் சமயம் அறிந்து "ஸ்ரீராமன் நாராயணன், அநாமயம் தான்," என்று யூகித்தான். இதையும் கருணை என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். மஹேந்திரன் போன்ற பக்தர்கள் கூட வழிதவறிப்போகும் சமயங்களில் பகவானால் தண்டிக்கப்பட்டு, ஸத்பதத்தை கருணையினால் அடைந்திருக்கிறார்கள். பக்தர்களான கஜேந்திரன் திரௌபதி ஆகியவர்களிடம் இவன் காட்டிய பரபரப்பைப் பார்த்துத்தான், நல்லமனம் உள்ளவர்கள் நாராயணனை

ஸதா அடைந்து நிலைத்துப் பெறும்படி முயற்சிக்கிறார்கள். இதையே நம் ஆசார்யர்கள் க்ஷீராப்தியை கடைந்து, அம்ருதத்தை க்ரஹிப்பது போல, சுலபமாக ஒரு கவளமாக வெண்ணெயைப் போல ஸாரமாகவும் எடுத்துத் தந்திருக்கிறார்கள், அவர்களுடைய சுவடிகளில் நாம் சென்றால், நம்முடைய பாதையும் கடினமில்லாமல் சுலபமாகத் தோன்றும்.

ஆண்டாள் ப்ரேமையினால் கண்ணனை "உலகினிர் தோற்றமாய் நின்ற சுடரே" என்றும், ராமனை "மனத்துக்கினியான்" என்று கூறி, எழுப்பி ராமகிருஷ்ண அவதாரங்களை பாமர ஜனங்களும் காணும்படி எடுத்துச்சொல்லி, அடியார்களைக் காப்பதில் அவர்களை ஊக்கம் காண்பிப்பவர்களாகவும், அவர்களுடைய தாஸர்களுக்கு ரக்ஷணத்தையும், அவர்களுடன் சேர்ந்து அனுபவிக்கும் தசை போக பாக்யங்களையும், புகழையும் அளிக்கிறதாகவும் அவர்களை வள்ளல்களாகவும் சித்தரித்தாள். ஆகவே எல்லா உலகங்களையும் ஸ்ருஷ்டித்த பகவான், பரமார்த்தம், பரமாராத்யம் என்று பராசரரால் புகழப்படுகிறவர், மனிதருடைய தேகமன இந்திரியவாக்கு புத்தி ஆத்மாவாகிய "என்னுடையவை எல்லாம் கண்ணனுக்கே," "ஹே ராமா, கிருஷ்ணா இவை எல்லாம் உம்முடையவைகளாக அங்கீகரிக்கக் கடவீர்; எனது அஹங்காரம் மமகாரங்களை ஒழித்து உம்முடைய சரணாரவிந்தங்களில் என் பொறுப்பாகிய ஸ்வரக்ஷணம் என்பதை ஆத்மஸமர்ப்பணமாக அங்கீகரிக்க வேண்டும்" என்றார்கள். அந்த ஆத்ம ஸமர்ப்பணத்தை அவர் பிரத்யக்ஷமாக பூமியில் அவதாரம் செய்திருக்கும் போது, செய்வது, அவருடைய ஸந்நிதியில் சாக்ஷாத்காரத்தில் செய்வது, பெரும் பாக்கியமல்லவா? உதாரணமாக, பரம பாகவதரும், தர்மங்களின் மர்மங்களை அறிந்த தர்ம நந்தனனாகிற யுதிஷ்டிரருக்குக் குருவான பீஷ்மர், "கிருஷ்ணனுக்கு செய்யும் ஒரு சுக்ருத நமஸ்காரம், பத்து அஸ்வமேதயாகங்களைச் செய்து அவப்ருத ஸ்நானம் செய்ததற்கு சமானம் என்றும்; பத்து அஸ்வமேதங்களைச் செய்தவன் பூமியில் ஜன்மம் திரும்பியும் எடுப்பான் என்றும்; ஆனால் கிருஷ்ணனை ஒரு தடவை நமஸ்கரிப்பது ஜன்மத்தைக் கொடாது" என்று அருளினார். "காயாம்பு நிறமுள்ளவரும், பட்டுப் பீதாம்பரம் தரித்தவரும் பரமபதநாதர் விபவஅர்ச்சா அவதாரத்தின் காலத்திலும் ஸ்வரூபஸ்வபாவங்கள் மாறாமல் இருப்பவருமான கோவிந்தரை நமஸ்கரிக்கிறவர்களுக்கு பயமில்லை. சம்சாரபயமில்லை. சிரத்தையோடு ஒரு மனிதன் ஆத்ம சுகத்திற்காகவும், பொறுமையுடன் தன் செல்வத்தையும் காலத்தையும் தைரியத்துடன் புருஷோத்தமனிடத்தில் செலுத்தி அவனிடம் பக்தி பெறுக்குற்றவர்களுக்கு சம்சாரத்தில் ஏற்படும் கோபம் இல்லை. பகை இல்லை; பொருளாசையும் இல்லை. இந்த பரமாத்வா அன்றோ பரம்பொருள், பெரும் தனம் என்று நினைக்கிறான். அவனுக்கு ஒருவரிடமும் கெட்ட எண்ணமில்லை. வாஸுதேவனே முடிவான பலன் என்று உறுதியுடன் ஜீவனத்தை நடத்தும் தீரனுக்கு, மஹாவித்வா

னுக்கு, எல்லா தோஷங்களும் நீங்கி, பரிசுத்த ஆத்மாவுடன் அவன் சாஸ்வதமானதும், ஸ்தான பிரம்சம் அடையாததுமான துருவபதத்தை அடைகிருன்'' என்று கிருஷ்ணஸாக்ஷாத்காரத்தில் சொன்னுர். இதனுல் அல்லவோ ராமகிருஷ்ண அவதாரங்கள் மஹாபெருமைகளை அடைந்திருக்கின்றன. மஹாபாக்கியவசத்தினுல், சகல ஜீவராசிகளும் இந்த அவதாரங்களின் சமயம், நேரிலேயே சாக்ஷாத்கரித்த பகவானுடைய ஔதார்ய சௌலப்ய, சௌசீல்ய ஐஸ்வர்யாதி குணவிலாஸங்களை அறிய முடிந்ததல்லவா! அதிலும் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஆரண்ய காண்டமும், கிருஷ்ணுவதாரத்தில் மிக எளியவர்களான கோபாலர்களிடமும், பாண்டவர்களிடமும் பகவான் காட்டிய கருணையை யாரால் வருணிக்க முடியும்? சரபங்கர் போன்ற மஹரிஷிகள் தங்கள் தவத்தை எல்லாம் பகவானுக்கே அர்ப்பணம் செய்து, இந்திரலோகத்தையும் தியாகம் செய்துவிட்டு, பகவான் தானே நேரில்வந்து தனது சுபதர்சனத்தால் மனம் குளிரக் கடாக்ஷிக்க வேண்டுமென்று பல நாட்கள் காத்துக் கிடந்தார் அல்லவா? அதற்குப்பலனுக இந்திரலோகத்தைவிட மேலானதும், பிரும்மாவினுல் ஸுஸ்வாகதம் செய்யப்பட்ட உத்தம பதத்தை அடைந்தார் என்று ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படி மாபெரும் அவதார காலங்களில், பக்த கோடிகள் அநேகம் பேர்கள் பகவானுடைய காரியத்துக்காகவே அவதரிக்கின்றனர். அந்த சூழ்நிலை அவதார ரஹஸ்யத்தைப் பொறுத்திருக்கிறது. ஒரு பக்தனைக் காப்பதற்காக நரசிம்ம மூர்த்தியாக அவதரித்த பிரபு இன்றும் ஸர்வ பக்தப்ரியனுகவிருக்கிருன். அவனே ஸர்வ அந்தர்யாமி, ஸர்வ சராசரங்களின் பொருள்களிலும் ஜகத்திலும், ஹிருதயத்திலும், ஸ்திரமாக வீற்றிருந்து பிரத்யக்ஷ பிரமாணமாக ஸம்பூர்ண ஜகத்திற்கும் சாஸ்வதமாகவும் பரமாத்மாவாகவும் நிரூபணம் செய்யும், அம்ருதமயமான உபதேசத்தைச் செய்யும் வள்ளல் ஆசாரியராகவும் விளங்குகிருன் அன்ருே? சப்த கோசரங்களுக்கு எட்டாத விஸ்வ ரூபமுடைய பகவான் தாமே மஹாகாருண்யத்துடன் யோகிகள் சதா தியானம் செய்யும் பரமபதத்திலிருந்து எழுந்தருளி தாமே தம்மை வெளிப்படுத்தி, "நான் உனக்கு மாத்திரம் பிரம்மபூதன் இல்லை; சம்பூர்ண பிரஜைகளுக்கும் பதி. ஜகத்தை நடத்தும் கர்த்தா, எல்லோரையும் அவரவர் காரியங்களில் நிறுச்செய்து, எந்த எந்த தேவதைகளிடம் அவரவர்கள் இஷ்டப்படி பக்தி செய்பவர்களுக்கு அனுக்ரஹிக்கும் நியந்தா, தாமே தர்மத்தை உபதேசித்து, தாமே அதன்படி நடந்து, உலகத்தைத் தாங்கும் தாதா. பக்தர்களுடைய குற்றங்களைப் பொறுத்து, பாபங்களுக்கு பயன்களைத் தரத்தக்க யாதனைகளைப் போக்கும் விதாதா. அந்த பகவான் காலம் என்கிற சக்தியினுல் ஸமஸ்த பிராணிகளையும் தங்கள் தங்கள் விஷயங்களிலும் சேஷ்டைகளிலும், ஸத்வம் ரஜஸ்தமஸ்ஸாகிற மூன்று குணங்களால் பிரவர்த்திக்கிருர். எல்லாப்

  

பொருள்களுக்கும் பிரதான பொருள் என்று சாங்கியர்கள் சொல்வதும்; சகல சராசரங்களையும் உண்டுபண்ணிய ஸநாதன, புராண காரணபுருஷன் என்று யோகிகளால் சொல்லப்படுபவர்; பக்தர் களுக்கு புனர்நவ: என்கிறபடி நவீனமாக அனுபவங்களைக் கொடுத்து, குளிரக் கடாக்ஷித்து, ராவணஹிரண்யாக்ஷன் முதலான அசுரர்கள் கூட, அவனை ஸ்மரித்த மாத்திரத்தில், தங்கள் துர்செயல்களையும் துர்புத்திகளையும் நினைத்து அந்த பயத்தாலேயே, தங்களை சீக்கிரம் நஷ்டப்படுத்திக் கொண்டார்களே, அப்பேற்பட்ட மூர்த்தியை வேதங் களோ, பக்தர்களோ, அனாதிகாலமாகப் புகழ்வதாலும் அநேக தடவை கள் புகழ்தலாலும், அவருடைய எல்லையற்ற மகத்வங்களைச் சொல்லி முடிவடையாதவையன்றோ? கல்பங்கள் தோறும் செய்யும் அவதாரங் களையும், அந்த பகவானுக்கு எந்த நாமங்கள் குணங்களாகவும் செய்கை களாகவும் வந்தனவோ, பிரஸித்தி பெற்றனவோ அவைகளையே நமக்காக, நம்வாழ்க்கை உஜ்ஜீவிப்பதற்காக, பரம காருண்யத்தால் கீர்த்தனம் செய்யப்பட்டு பெரும் சேமநிதியாக கொடுத்திருக்கும் வால்மீகி, பராசரர், நாரதர், வேதவியாஸர், சுகர், சௌனகர் போன்ற மஹரிஷிகளுக்கு நாம் நன்றி செலுத்தி, அவர்களை முன்னிட்டு பகவானை சரணமடைய வேண்டும். அந்த வர்க்கத்தில் கம்பன், துளசி தாஸர், தியாகராஜர், நாராயண நம்பூதிரியும் ஆவார்கள். அவர்களையும் புறம்வைத்து பகவானை நாம் சரணமடைவோம்.

வேதவியாஸர் பராசரரின் புத்ரர். பராசரர் உமா மஹேஸ்வரர்களை ஆராதித்து வேதவியாஸரைப் புத்ரராக அடைந்தார். இவ்விதம் புகழ் பெற்ற மஹாயோகியும், மூப்பும் இறப்பும் இல்லாதவரும், வேதங்களை வகுத்தவரும் பாரதமாகிய ஐந்தாம் வேதத்தை எழுதியவர் வியாஸர். இவர் திரிகால ஞானத்தை வரமாகப் பெற்றவர். இப்பேர்பட்ட பகவா னால் உமாமஹேஸ்வரர்களையும் ஜனார்த்தனரையும் சொல்லும்போது "ஸஹஸ்ரசீர்ஷாய நம: சிவாய, ஸஹஸ்ரநாமாய ஜனார்த்தனாய" என்று சொல்லுகிறார். ஜனார்த்தனருடைய ஆயிர நாமாக்கள் அவ ரால் நம் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்டன. ஸகல பிராணிகளுக்கும் ஹிம்சை செய்யாதவர்களும், ஆத்மஞானம் உடைய ஏகாந்திகளும் எல்லா பிராணிகளிடத்திலும் ஹிதத்தை விரும்பும் மஹான்கள் பகவான் நாராயணரை பரமாக வைத்து ஏகாந்த பக்தியுடன் பஜிக்கிறார்கள். தேவர்களுக்கு ஹிதமானவரும், நாரதர், ஏகதர், த்விதர், திரிதர் ஆகிய பிரும்ம ரிஷிகளால் மிக்க தபஸ்ஸுடன் ஆராதிக்கப்படுபவரும், ஏகாந்த பக்தியுள்ளவர்களுக்கு மோக்ஷத்தைத் தருபவரும், தர்மத்தை அறிந்து நன்றாக அனுஷ்டிப்பவர்களுக்கு மேலான கதியைக் கொடுப்பவரும், பயத்தைப் போக்குகிறவரும் அபராஜிதரும், சகல மங்கள ஸ்ரேஷ்டங் களுக்கு இருப்பிடமானவரும், வாஸுதேவ ஸ்வரூபத்தால் நிர்குணர் (குணரக்ஷிதர், குணங்களுக்கு வசப்படாதவர், குணங்களின் சேஷ்டிதங் களால் பற்றப்படாதவர்) என்று சொல்லப்படுகிறவரும், ஸர்வ

சாக்ஷியும், ஜனனமற்றவரும், அனாதியும், ஸூர்யனைப்போல நிறத்தை உடையவரும் புருஷருமாகிய நாராயணரைப் பற்றியே, அவருடைய பரமஸ்தானத்தைப் பற்றியே இந்த ஆயிர நாமாக்களும் புகழ்கின்றன.

இந்த நாமாக்களின் விசேஷம் என்னவென்றால் அனாதியான பகவானுக்கு அமானுஷ்ய ஸ்வரூபஸ்வபாவங்கள் அநேகம், கல்பம் தோறும் இருக்கிறபடியால், அவைகளின் மர்மங்களை அறிவது மிகக் கடினம். பகவானை ஏகாந்த பக்தியுடன் மனத்தினாலும் செய்கை களாலும் வாக்குக்களாலும், பூஜிக்க முயல வேண்டும். "செந்தாமரைக் கண்ணரான பகவான் அவருடைய பக்தனாகிறவனால் கூட பார்க்க முடியாதவர். எப்பொழுது தேவகார்யத்தை உத்தேசித்து அவரே பூமி யில் அவதரிக்கிறாரோ, அச்சமயமும் கூட அவரைக் கண்டு அறிவதும் மிகக் கடினம். அந்த தேவர் நம் போன்ற மானிடர்களின் கோபத் திற்கோ, ரோஷத்திற்கோ விஷயமில்லாதவர். எவனுக்கு அவர் அருள் செய்கிறாரோ, அவனே அவரைப் பார்ப்பதற்குத் தகுந்தவன்," என்று ஒரு தடவை பிரும்மாவின் மானஸ புத்ரர்களாகிய ஏகதர்த்விதர்திரிதர் ஆகியவர்கள் பிரஹஸ்பதிக்கு உபதேசித்தார்கள். அதே பகவான் ஸ்வேத தீபத்தில் நாரதரால் காணப்பட்டார். விஸ்வரூபத்தை தரிக்கிற வரும், ஸநாதனரும், விகாரமற்றவரும் ஸ்ரீமானுமான புருஷர் அவரால் பார்க்கப்பட்டார்; எல்லா உலகங்களையும் தரிக்கிற பகவான் அவ்யக்த மான ரூபத்துடன் எந்த லக்ஷணங்களால் காணப்பட்டாரோ, அந்த ஹரியானவர் வ்யக்த ரூபத்துடன் அர்ச்சாவதாரங்களிலே அதே லக்ஷணங்களுடன் காணப்பட்டார். ஆகவே நாரதரைத் தவிர பகவான் அவ்யக்த காரணத்தால் காண்பதற்கு அரியவர். நிலைத்த மனமுள்ளவர் களும் நியமங்கள் உள்ளவர்களும், இந்திரியங்களை அடக்கினவர்களும், ஒரேவித பாவனையை அடைந்தவர்களே பகவானை ஸதா அடைகிறார்கள். அப்பேர்பட்ட பகவான் ஒரு சமயம் பிரும்மாவுடன் கூடிய தேவர் களுக்கு சொன்னதாவது. "கலியுகத்தில் தர்மம் ஒரே பாதத்துடன் தான் எங்கேயாவது இருக்கும்," என்று சொன்னதின் பேரில், தேவர்கள் "நாங்கள் அச்சமயம் என்ன செய்வோம்?" என்று வியா குலத்துடன் கேட்டதற்கு, பகவான் மீண்டும் சொல்லலானார். "எந்த விடத்தில் நல்ல ஆசாரத்தை உடைய குருக்கள் பூஜிக்கப்படுகிறார்களோ, எந்தவிடத்தில் தர்மமானது குறையாமலிருக்கிறதோ, எந்தவிடத்தில் வேதங்களும் யக்ஞங்களும், தவமும் ஸத்யமும் இந்திரிய நிக்ரஹமும் அஹிம்சையும், தர்மத்துடன் சேர்ந்து நடக்குமோ, அந்தவிடத்தை நீங்கள் அடையுங்கள். அதர்மம் உங்களை ஸ்பரிசிக்காமல் இருக் கட்டும்," என்று சொன்னார். அப்பேர்பட்ட பரபிரும்மத்தை சாஸ்திர ஞான நேத்ரத்தால் தான் பார்க்கத்தக்கது. நாசமற்றவரும், ஞானத் தாலே பார்க்கச்கூடிய பகவானை நாமங்களாகிற ஞான நேத்ரங்களாலே காணத்தகுந்தது. அவ்விதம் பார்ப்பவன் காணும் பொருள்களின் அழகா

யும் அந்த காக்ஷிக்கும் ஸத்யம் என்கிற நிஜமான ஆதாரமாகவும் தோன்றும் பரபிரும்மம், நம் உடல்தோறும் உறைபவனே, கிருஷ்ண பிங்கள நிறைவுள்ள வடிவை, நீலலோஹிதரானவரும் உமையுடன் கூடினவரும், அவருக்கும் அந்தர்யாமியாகவுள்ள நாராயணலக்ஷ்மியாக நினைப்பவர்களும் அவ்விதமாகத் தோன்றும் பரபிரும்மத்தைப் பார்க்கிறன். அவனே உலகனைத்துக்கும் காரணமானவனும், எட்டாத பெருமை உடையவனுமாகிய விராட் புருஷனை தனது ஹ்ருதயகுகையிலும் காண்கிருன். அந்த பரமாத்மாவிடமிருந்து நாம் இகத்திலும் பரத்திலும் சுகத்தை அடைய வேண்டுகிரும். நிகழ்கால துன்பத்திலிருந்தும் எதிர்கால துன்பங்களிலிருந்தும் விடுதலையை வேண்டி, சாந்தி அளிக்கும் நற்கருமம் எதுவோ அதையும் ஆர்வத்துடன் அடைகிரும். பசி தாகம் விசனம் மயக்கம், மூப்பு இறப்பு ஆகிய ஷடுர்மிகள் எனப்படும் ஆறுவகையான ஸம்சாரக் கடலின் அலைகளினுலும், அவித்யை முதலிய மஹாகிலேசங்களினுலும் மதம் முதலிய உபகிலேசங்களாலும் வேதனைக்குட்பட்ட ஜீவனை இளைப்பாறுவதற்குத் தகுந்த மோக்ஷம் என்று சொல்லும்படி களைத்துப்போன ஜீவனுக்கு இளைப்பாறுவதற்கு இடம் என்கிற பயனையும் பெறுகிரும். அதனுல் அல்லவோ பகவான் நாராயணரை விஸ்ராமர் என்று அழைக்கிரும்.

பகவான் ஜனர்த்தருடைய ஆயிரம் மங்கள நாமாக்களுள் ராமனைப் பற்றிய நாமாக்கள் மிக உத்தமமானவை. ராமர் என்னும் பதத்திற்கு ரூபத்தினுலும் குணங்களாலும் செய்கைகளாலும் நம்மை வசீகரிப்பவர் என்கிற பொருள். சத்ருக்களிடமிருந்து நம்மைக் காக்கும் வீரர். வரங்களால் பெருமை அடைந்த ராவணுதி அரக்கர்களுக்கும் மேல்பட்டு முடிவாக விளங்குபவர். அடுத்தவர்களுக்கு குற்றமில்லாத வழியைக் காட்டுபவர். தம்மை அண்டினவர்களுக்கு ரஜோதமோ குணமில்லாதபடி செய்கிறவர். தம்மிடம் அன்பு வைத்த ரிஷிகள் முதலானவர்கள் கட்டளையிட்டபடி அவர்களுக்கு அடங்கி நடக்கும் சுத்த ஸத்வமாகயிருப்பவர். உலகத்தில் தன்னைவிட நன்மையைத்தரும் கிருபாளு வேறு ஒருவரும் இல்லாதபடி நன்மையைச் செய்பவர். மானிடராக அவதரித்தும் மானிடக் கடவுளாக திகழ்ந்தவர் அந்த ஸ்ரீராமர். அதனுல் ஸ்ரீராம மந்திரம் மிருதசஞ்சீவினி மந்திரமாகச் சொல்லப்படுகிறது. மரிக்கப்போன சீதைக்குத் தஞ்சமாகவும், கடலைத் தாண்டும் ஆஞ்சநேயருக்கு பாஹு பலமாகவும், விபீஷணன் போன்ற சரணுகதர்களுக்கு ஆத்மபலமாகவும், சம்பாதிக்கு இறக்கைகள் முளைத்து புதிய ஜீவனைத் தந்த சஞ்சீவினியாகவும், விளங்கியது ஷடாக்ஷரியான மஹாமந்திரம் ஸ்ரீராம மந்திரம், ஸ்ரீராம நாமம் எனப்படுவது.

நமக்குள் நாம் எது ஸ்ரேயசைத் தரும் என்று நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். மனிதர்களுள் தெரிந்தவர்களின் இலக்கணம் தர்மத்தில் நிச்சய புத்தியுடன், தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும். தர்மிஷ்டர்கள் தம்மாலேயே தம்மை மேன்மையாகச் செய்து கொள்ளு

கின்றனர். தவத்தினுலும், ஈஸ்வர பூஜையினுலும் முந்திய புண்யத்தாலும், கல்வி தேர்ச்சிகளினுலும், தானத்தினுலும் ஜபத்தாலும் உள்ளம் சுத்தமடைகிறது. தவத்தையும் தேவதா பூஜையையும் தர்மமாகவே செய்யவேண்டும். ஜயத்தையும் மனதேக ஆத்ம ஒளிகளையும் தருவது தர்மம்தான். மூன்று காலங்களிலும் தருவது தர்மம்தான். "எந்த ஞானியும் மனிதனை கையால் பிடித்து நடத்துவதில்லை. தர்மத்தால் தூக்கிக்கொண்டு போகப்பட்டுத்தான்", என்று பீஷ்மர் தர்மருக்கு உரைத்தார். தர்மத்தால் அன்றோ எவனும் மேல்பதத்தை அடைகிறுன். அதே பீஷ்மர் மீண்டும் உரைத்தார். "இவ்விதம் எந்த மனிதன் பாபத்திலும் புண்யத்திலும் பற்றுதல் இல்லாமலும், பொருளிலும் தர்மத்திலும் காமத்திலும் பற்றுதல் இல்லாமலும், ஸர்வஸங்க தோஷங்களை விட்டவனும், எதுஸாரம், எது அஸாரம் என்று விவேகத்தாலும் குருகிருபாகடாக்ஷத்தாலும் அறிகிருனே, அந்த மனிதன் சுகதுக்கங்களிலிருந்து விடுபடுகிருன். பிராணிகள் இறப்பு பிறப்பு உள்ளவைகளாகவும், கிழத்தனம் முதலிய விகாரங்களையும் மாறுதல்களையும் கூடின அவஸ்தைகளால் கஷ்டப்படுகின்றனர். அவைகள் திரும்பவும் அதே விகாரங்களால் பீடிக்கப்பட்டு தொடரப்படுகின்றன. ஆகையால் பெரியோர்கள் மோக்ஷத்தை வெகுவாகக் கொண்டாடுகிருர்கள். ஸ்நேகத்தால் கட்டுப்பட்ட நாம் அதை அறிய முடிகிறதில்லை. மனிதன் பிரியத்தையும் அப்ரியத்தையும் செய்யாமல், விதியால் ஏவப்பட்டவனுக, அடையத்தக்க மோக்ஷத்தை கர்மத்தால் அடைய முடியாதென்றும், அறம் பொருள் காமங்களை விட்டவனே மோக்ஷம் என்னும் பதத்தை அடைகிருன் என்று பீஷ்மாச்சார்யார், தர்மபுத்ரருக்கு உபதேசிப்பதாக, வியாஸர் அதையே நமக்குச் சொல்லியிருக்கிருர். "இந்த மோக்ஷமானது உலகங்களின் நன்மைகளுக்குக் கார்ணமான ரஹஸ்யமாகும் என்றும், அந்த பகவானே எல்லா தர்மங்கள் அனைத்திலும் மிக்க மேலானவர், அவரே மேலான தர்மம் என்றும், அளவிடக் கூடாத மகிமைகள் பெற்ற பகவான் தம்மைத் தாமே அளிக்கும் உதார குணமுள்ள மஹாபுருஷரான நாராயணர் என்றும், ஆயிரம் நாமாக்களால் அந்த தாமரைக் கண்ணரை இடைவிடாமல் பூஜித்து தனக்கும் ஸ்வாமி என்றும் சொன்னுர். எவன் ஒருவன் அகங்கார மமகாராதிகளை ஒழித்து பகவானுடைய பாதாரவிந்தங்களில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்து, அவரையே புஷ்பம் கந்தம் நைவேத்யம் ஆகிய உபசாரங்களால் பூஜிப்பவன், எல்லா துக்கங்களையும் கடந்து மேலான புருஷோத்தமருடைய பதத்தை அடைவான்," என்று பீஷ்மர் அடிக்கடி தர்ம நந்தனருக்குச் சொல்லியிருக்கிருர். இதையே குறிக்கோளாக நமது சமய ஆசார்யர்களும் எடுத்துக்காட்டியிருக்கிருர்கள். அந்த உண்மைக்கு ராமாவதாரம் பலவிதங்களில் நிரூபணமாகவும் உத்தம சான்ருகவும் விளங்குகின்றது.

அதேமாதிரி நாரதரும் நாராயணரையே பரமாக நம்பி வாழும் ஏகாந்திகளின் பெருமைகளைச் சொல்லி, மீண்டும் வேதவியாஸருக்கும்,

ஏகதர் போன்ற மஹரிஷிகளுக்கும் சொன்னார், "தேவர்களும் முனிகளும் ரஜஸ்தமஸ்ஸிலிருந்து விலகி, சூக்ஷ்மமான ஸத்வத்தால் மோக்ஷத்தால் நிச்சயிக்கப்பட்ட மனம் உள்ளவர்களாக, நாராயணரையே பரகதிக்கு உரியவனாக ஏகாந்த பக்தியுடன் எப்பொழுதும் புருஷோத்தமரை சிந்திக்கிறார்கள். அப்பேர்பட்டவர்கள் நாளடைவில் ஸத்வத்தையும் விட்டவர்களாகி நாராயணருடைய அழிவற்ற ஏகாந்த கதியை அடைகிறார்கள்." என்றார். இவ்விதமாக எல்லா சாஸ்திரங்களிலும் நாராயணரே அனாதியானவர் என்று சொல்லப்பட்டார். "ரிஷியான அவரிடமிருந்து ஸகலமும் உண்டாயின என்று சூக்ஷ்ம ஞானத்தினால் வேதவியாஸர் புருஷஸூத்தம் என்கிறதை சிந்தித்து ஒரே புருஷன் அவர்தான் என்பதையும் சித்தாந்த பூர்வமாகச் சொன்னார். அவரை ஒரே காரணமாகவும் விராட் என்கிற அநிருத்தராகவும், ஸூத்ராத்மாவாகிய பிரத்யும்னர் என்றும், காரணர் என்று சொல்லக்கூடிய ஸங்கர்ஷணர் என்றும், நிர்குணர் என்றும் வாஸுதேவ ஸ்வரூபியாகவும், சாஸ்வதமான புராண புருஷராகவும் சொல்லுகிறார்கள். அவரே ஸர்வ அந்தர்யாமியாக எல்லாச் சரீரங்களிலும் காணப்படுகிறார். புஜிப்பதும், புஜிக்கப்படுவதும், முகருகிறதும் முகரத் தக்கவனும் அவனே. வேதங்களில் சொல்லப்பட்ட கர்மாக்கள் அவனுடைய திருப்திக்காகவே செய்யத் தக்கன. நான்கு பாகங்களாகப் பிரிந்த நாராயணர் எப்படி விரும்புகிறாரோ, அவ்விதம் லீலை செய்கிறார்," என்று பிரும்மா தன் புத்ரராகிய சங்கரருக்குச் சொன்னார். இந்த ஆத்மகதியைப் பற்றின விசாரத்தினால் பரமபுருஷனை நாம் இடைவிடாமல் தியானிக்க வேண்டும்.

வேதவியாஸரைக் கண்ணாகவும் பீஷ்மரை ஹ்ருதயமாகவும், நாராயணரை என் ஆதாரமாகவும், நாரதரை என் குருவாகவும் உமா மஹேஸ்வரர்களின் மனப்பான்மையை லக்ஷ்யமாகவும், வைத்து, நான் இந்த புஸ்தகத்தை எழுதியிருக்கிறேன். என் மனம் இவர்களின் அபார கருணையினால் ஏற்பட்ட சகல சிஷ்யபாவங்களுடன் விளங்குகின்றது. நாராயணார்ப்பணம் என்று சொல்லி, துளசிதாஸருடைய ராமசரித மானஸம் என்கிற காவியத்தை எனது கருத்துக்களுடன், என் மன உல்லாசத்திற்காகவும் ஆத்ம உஜ்ஜீவனத்திற்காகவும் நாராயண ப்ரீதிக்காகவும் ஸமர்ப்பித்திருக்கிறேன். அபார கருணையுடன் அதிவாத்ஸல்யத்துடனும் இதை ஸத்சீல ஸம்பன்னர்கள் ஸ்வீகரித்து அறிவிற்சிறியவனான என்னை அனுக்ரஹித்து, அருள்பாலிக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

25, லேடி ஹார்டிஞ் ரோடு
புதுடில்லி
ஜூலை 1, 1970.

சீனிவாஸ ஜகந்நாராயணன்

## 2. கோஸ்வாமி துளசிதாஸரின் வாழ்க்கை வரலாறு

பிரயாகைக்கு சமீபத்திலிருக்கும் பாந்தா ஜில்லாவைச் சேர்ந்த ராஜாபூர் என்கிற கிராமத்தில் ஆத்மராம்டுபேக்கும் ஹீலசி என்கிற நாரீமணிக்கும் ஸத்குரு ஸ்ரீ துளசிதாஸர் புத்ரராக 1554ம் ஆு ஸ்ராவண மீ சுக்ல ஸப்தமி யன்று, அபுக்தமூலம் என்கிற கேட்டைமூலம் கூடும் சந்திமுகூர்த்தத்தில் ஜனித்தார். பிறந்தவுடன் அவர் சாதாரண குழந்தையைப்போல கத்தாமல், ராமநாம ஜபம் பண்ணிக்கொண்டிருந்தார் என்று சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரைப்போல கிருதலக்ஷணராகப் பிறந்து, அவருடைய வாயில் முப்பத்தி ஏழு பற்கள் இருந்தனவாம். அவருடைய சரீரம், அங்க அமைப்புக்கள் முதலியவைகளால் ஐந்து வயது பாலகன் மாதிரி தோற்றம் அளித்தார் என்று சொல்லப்படுகிறது. இதை அமங்கள சின்னங்களாக கருதிய அவருடைய தகப்பனார் பயங்கொண்டு, தன் புத்ரனை தியாஜ்யம் செய்ய தீர்மானித்தார். இதனால் கலவரம் அடைந்த தாயார் ஹீலசி ஒரு தாதியிடன் அந்த சிசுவைக் கொடுத்து தன் மாமனாரிடம் அனுப்பி வைத்தாள். மறுதினம் அவள் வருத்தம் தாங்காமல் உயிர் நீத்தாள்.

சுனியா என்கிற தாதி அந்த பாலகனைப் ப்ரேமையுடன் வளர்த்து வந்தாள். அவளும் கொஞ்சகாலம் கழிந்த பின்பு மரித்துவிட்டாள். அந்த குழந்தை அனாதையாகி, அவருடைய பிதா மஹராலும் நிராகரிக்கப்பட்டு, வீட்டுக்கு வீடு பிச்சை எடுத்து உண்ணும்படி விதியால் நாரதரைப்போல உந்தித் தள்ளப்பட்டார். ராமானந்தர் என்கிற ஸாதுவால் ஸ்வீகரிக்கப்பட்டு, போலாநாத் என்கிற பெயருடன் வளர்ந்து வந்தார். ஜகஜ்ஜனனியாகிற பார்வதிதேவி இந்த பாலகரிடம் கருணை காட்டி, தினந்தோறும் பிராமணி வேஷம் தரித்து ஆகாராதிகளைக் கொடுத்து வந்ததாக சில வரலாறுகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒரு சமயம் சங்கர பகவானுடைய ஆக்ஞையின் பேரில் ராமசைலம் என்கிற ஊரில் வசிக்கும் ஸ்ரீ அனந்தானந்த்ஜி என்பவருடைய ப்ரிய சிஷ்யரான நரஹரி ஆனந்தஜி இந்தப் பையனைத்தேடி அவனுக்கு மந்திரோபதேசம் செய்துவைக்க ஏற்பாடு செய்தார். யக்ஞோபவிதம் செய்வித்து, வைஷ்ணவர்களின் பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்வித்து, அதன் பிறகு ராமமந்திரத்தையும், தீக்ஷையையும் அளித்தார். குருவும் சிஷ்யரும் சூகர்க்ஷேத்ரம் (ஸோரோம்) என்கிற வராஹ க்ஷேத்ரத்தை அடைந்தார்கள். அங்குதான் ராமசரிதமாகிற ராமாயணத்தை அவர் துளசிதாஸருக்குச் சொல்லி வைத்தார். அதன் பிறகு காசி க்ஷேத்ரம் அடைந்து, சேஷஸநாதனஜி என்பவரிடம் பதினைந்து வர்ஷங்கள் வேத வேதாகமங்களை அத்யயனம் செய்தார். பிறகு தன் சொந்த கிராமத்திற்கு திரும்பியபோது, தன்னைச்சார்ந்த பந்துக்கள் ஒருவருமில்லை என்று தெரிந்துகொண்டார். 1583ம் ஆு பரத்வாஜ கோத்ரத்தில்

பிறந்த ரத்னுவளி என்கிற பெண்ணை மணந்து, தாரகா என்கிற பையனை புத்ரனுக அடைந்தார். அந்த குழந்தையும் மரித்துவிட்டது. ஒரு சமயம் அவருடைய பத்னி தன் பிதாவின் வீட்டிற்குச் சென்ற சமயம், இவரும் அவள்பால் காம உணர்ச்சியுடன் சென்றுர். அதனுல் அருவருப்பை அடைந்த அவர் பத்னி, "மாம்ஸ பிண்டமாகிற என் சரீரத்தின்மீது உமக்கு இருக்கும் ஆசையை, பகவான் ஸ்ரீ ராமசந்திரனிடம் வைத்தால், நீர் இந்த ஸம்ஸாரக் கடலையே தாண்டி விடலாமே" என்று போதித்ததாகச் சொல்லப்படுகிறது. இந்த சப்தங்கள் அவர் மனத்தில் வேரூன்றிவிட்டன. ஒரு க்ஷணமும் தாங்காமல் அவ்விடத்தை விட்டுச் சென்றுர்.

நேரே பிரயாகைக்குப் பிரயாணமானுர். அவ்விடமிருந்து பல தீர்த்த க்ஷேத்திரங்களுக்குச் சென்றுர். மானஸ ஸரோவரில் காகபுசுண்டியையும் தரிசித்ததாகவும் சொல்லப்படுகிறது.

காசி க்ஷேத்ரத்திற்கு திரும்பிவந்து ஸ்ரீமத் ராமாயணத்தை பிரவசனம் செய்ய ஆரம்பித்தார். அவருக்கு ஒரு சமயம் ஸ்ரீ ஹனுமாருடைய தரிசனம் கிடைத்தது. அவரிடம் ஸ்ரீ ரகுநாதனின் தர்சனம் வேண்டுமென்று பிரார்த்திக்க, "நீர் சித்திரகூடம் போவீராகில், அங்கு ஸ்ரீ ராமனின் தர்சனம் கிடைக்கும்" என்று ஹனுமார் சொன்னதின் பேரில், சித்திரகூடம் சென்றுர். "ராம் காட்டில்" உட்கார்ந்திருக்கும் சமயம் அழகான குதிரைகளில் தனுஷ்பாணிகளாக இரு ராஜகுமாரர்கள் அழகாகச் செல்வதைக் கண்டார். அதிக சந்தோஷ மடைந்தாலும், அவரால் சரியாக அவர்களை அடையாளம் தெந்துகொள்ள முடியவில்லை. பின்னுல்வரும் ஹனுமாரால் விளக்கப்பட்டு, மிகுந்த பச்சாதாபத்தை அடைந்தார். மீண்டும் 1607ம் ஞு மௌனி அமாவாஸ்யை புதவாரம் ஸ்ரீ ராமன் மீண்டும் அவர்முன் பாலரூபராகத் தோன்றி, "எனக்கு சந்தனப் பொட்டு இடுங்கள்" என்று கேட்கும் பாவனையில் வந்தார். ஹனுமார் இந்தத் தடவை துளசிதாஸர் ஏமாறக்கூடாதென்று நினைத்து, கிளி ரூபமாக "சித்திர கூடத்தில் இருக்கும் சந்தனம் நீயாகயிருக்க, துளசிதாஸர் உமக்கு எவ்விதம் சந்தனம் கொடுப்பார்?" என்று இங்கிதமாகச் சொல்லும்போது, பரமதயாளுவான ராகவன் தன் கையினுல் சந்தனம் எடுத்து, துளசிதாஸரின் நெற்றியில் பொட்டு வைத்து, சுப தர்சனத்தை அளித்து அந்தர்தானமாகிவிட்டார்.

1618ம் ஞு ஹனுமாரின் ஆக்ஞையின்பேரில் அவர் அயோத்திக்கு வந்தார். பிறகு மாசி மகத்திற்காக பிரயாகைக்குச் சென்றுர். வட வ்ருக்ஷத்தின் கீழ் பரத்வாஜயாக்ஞ்யவல்கிய ரிஷிகளைக் கண்டதாகவும் சொல்லப்படுகிறது. மீண்டும் காசி க்ஷேத்திரத்திற்கு வந்து அநேக காவியங்களை இயற்றினர். ஒரு சமயம் ஆச்சரியகரமான ஸ்வப்னம் அவருக்கு ஏற்பட்டது. பகவான் சங்கரர் தோன்றி "நீ உன் சொந்த பாஷையில் ஹிந்தியில் ராமசரிதமான காவ்யம் இயற்று. அயோத்திக்குச் செல். என்னுடைய பரம அனுக்ரஹத்தினுல் ஸாமவேதத்திற்கு

ஸமானமாக காவ்யரசனைகள் உனக்கு ஏற்படும்" என்று ஆசீர்வதித்து அருளினார்.

ஸம்பத் வருஷம் 1631ம் ஸூ ராமநவமியன்று ஸ்ரீ ராமசரிதத்தை துளசிதாஸர் எழுதுவதற்கு துவங்கினார். இரண்டு வர்ஷங்கள், ஏழு மாதங்கள், இருபத்தாறு தினங்களில் அந்த காவ்ய கிரந்தத்தைப் பூர்த்தி செய்தார். 1633ம் ஸூ மார்கழி மீ சுக்ல பக்ஷத்தில் ராமசீதா விவாஹதினத்தில் ஏழு காண்டங்களும் பூர்த்தி அடைந்தன.

முதன் முதல் அரங்கேற்றத்தை காசி க்ஷேத்திரத்தில் விஸ்வநாதரின் ஸந்நதியிலும் அன்னபூர்ணாவின் ஸந்நதியிலும் அவர் செய்தார். "ராமசரித மானஸ்" என்கிற காவியம் உதயமாகி, இரவில் விஸ்வநாத க்ஷேத்ரத்தில் ஸந்நிதியின் முன்பு வைக்கப்பட்டது. பொழுது விடிந்ததும், அந்த காவ்யத்தின்மேல் "சத்யம், சிவம், சுந்தரம்" என்று எழுதப்பட்டிருந்ததாகச் சொல்லப்படுகிறது. அந்த சுபமான வேளையில் சத்யம், சிவம், சுந்தரம் என்கிற மணி ஒலிகளும் ஆகாயவாணிகளாகவும் எங்கும் கேட்கப்பட்டன.

இதனால் பொறாமையடைந்த பண்டிதர்கள் அவரிடமிருந்து புஸ்தகத்தை திருடுவதற்கு முயற்சித்தனர். திருடர்கள் அவர் இருக்குமிடம் சென்ற சமயம், இரு தனுஷ்பாணிகளான யுவர்கள்—ஒருவன் கருநீல நிறம், மற்றொருவன் இளம் சூரியன்போல அருணச் சிகப்பு நிறமாயும் நடமாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்டு பயப்பட்டு அவர்கள் அந்த புஸ்தகத்தை கவரும் நோக்கத்தை கைவிட்டார்கள். அந்த மஹா காவியத்தின் கீர்த்தி புகழ் பரவ ஆரம்பித்தது. பண்டிதர்கள் ஸ்ரீ மதுசூதன ஸரஸ்வதியை அடைந்து, அந்த புஸ்தகத்தை மேற்பார்வையிடும்படி தூண்டினார்கள். அவர் அந்த பிரதியைப் பார்த்துச் சோதித்துவிட்டு, "இந்த காசிரூபியான ஆனந்தவனத்தில் துளசிதாஸர் என்கிற துளசிச்செடி இருக்கிறது. அவருடைய கவிதாரூபியான மஞ்சரி ரொம்ப சுந்தரமாக விருக்கிறது. அதன்மீது ஸ்ரீ ராமரூபியான வண்டு சதாசுற்றி வந்துகொண்டிருக்கிறது" என்று காதை பாடி புகழ்ந்தார்.

பண்டிதர்களுக்கு இதைக்கண்டு மேலும் பொறாமை வளர்ந்தது. அவர்கள் மற்றொரு பரிக்ஷை நடத்த விரும்பினார்கள். பகவான் விஸ்வநாதர் ஸந்நதியில் வேதங்கள் முதலாகவும் அதன் கீழே சாஸ்திர புராணங்களும், அவைகளின் கீழே ராமசரித மானஸமும் வைக்கப்பட்டன. இரவில் அவைகளை வைத்துவிட்டு, மறுநாட் காலையில் வந்து பார்க்கும்போது, துளசிதாஸருடைய "ஸ்ரீ ராமசரித மானஸ்" வேத புத்தகங்களுக்குமேல் வைக்கப்பட்டிருந்தது. பின்புதான் பண்டிதர்கள் தங்களுக்குள் சமாதானமடைந்து, துளசிதாஸரிடம் க்ஷமையைப் பிரார்த்தித்தார்கள்.

துளசிதாஸர் காசியில் "அஸிகாட்டில்" வசிக்க ஆரம்பித்தார். ஹனுமாரால் அவர் எழுதிய வினயபத்திரம் ஸ்ரீ ராமஸந்நதியில்

  

ஸமர்ப்பிக்கப்பட்டது. ஸ்ரீ ராமனுடைய ஹஸ்தாக்ஷரம் பெற்று, அவர் கலியினிடமிருந்து நிர்ப்பயமாக வசிக்க ஆரம்பித்தார். 1680ம் ஷு ஸ்ராவண கிருஷ்ண திருதியில் சனிவாரத்தில் காசியிலிருக்கும் அஸி காட்டில் கோஸ்வாமி, ராம், ராம் என்று ஜபித்துக்கொண்டிருக்கும் போது, அவருடைய ஆத்மா சரீரத்திலிருந்து பிரிந்தது. இன்றும் அவர் வசித்த வீடு ஸர்வ ஜாக்ரதையாக காப்பாற்றப்பட்டு வரு கிறது.

அவர் ராமாயணம் பிரவசனம் செய்துகொண்டு ஊர் பிரயாணம் செய்கையில் டில்லி இர்வின் ரோடில் உள்ள ஹனுமார் கோவிலுக்கு வந்ததாகவும், அங்கு ஸ்ரீ ராமசரித மானஸம் என்கிற காவ்யத்தை பிரவசனம் செய்ததாகவும் சொல்லப்படுகிறது.

## 3. ராமசரித மானஸம்

(ஸம்பத் வருஷம்—1631—1574 A. D. கி. பி.)

வால்மீகியின் ஆதிகாவியமாகிய ஸ்ரீமத் ராமாயணம் சில அறிஞர் களால் கிருஸ்து பிறப்பதற்கு சில நூற்றாண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்டது என்று கருதப்படுகிறது. அந்த காவியத்தை ஒட்டி பல காவி யங்கள் சீதாராமனை கதாநாயகர்களாக பலவேறு காலங்களில் எழுதப் பட்டிருக்கின்றன. பல பாஷைகளிலும் செய்யப்பட்டிருக்கின்றன.

துளசிதாஸர் அத்யாத்ம ராமாயணத்தைப் பின்பற்றி ராமசரித மானஸம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. இந்த காவ்யம் கி. பி. பதினைன்காம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருந்ததாகச் சொல்லுகிறார்கள். ஹனுமன் நாடகம், பிரஸன்ன ராகவம் ஆகிய நூல்களின் உட்கருத்துக் களை துளசிதாஸர் பின்பற்றியதாகச் சொல்லுகிறார்கள். பண்டிட் ராம் நரேஷ்திரிபாடி பாகவத புராணத்திலிருந்து 23 செய்யுட்களும், பகவத் கீதையிலிருந்து ஏழு செய்யுட்களும் ராமசரிதமானஸ்ஸில் இருப்பதாகச் சொல்கிறார்.

கிரியர்ஸன் என்கிற மேல்நாட்டு எழுத்தாளர் துளசிதாஸருக்கு ஸம்ஸ்கிருதம் சரியாகத் தெரியாதபடியால் சாதாரண ஜனங்கள் அறியும் படி எளிய ஹிந்தியில் எழுதவேண்டியிருந்தது என்று அபிப்ராயப்படு கிறார். ஆனால் அவருடைய அபிப்ராயத்தை நாம் பூர்ணமாக ஏற்றுக் கொள்ள முடியாது. அவர் எழுதிய காலத்தில் சமஸ்கிருதம் சிலருக்குத் தான் தெரியப்பட்டிருந்தது. துளசிதாஸரின் சமஸ்கிருத ஞானம் அழ கான பதங்களின் பிரயோகங்கள், சொற்களின் கம்பீரத்திறம், அர்த்த புஷ்டி, மதுரமாக நிறைய இடங்களில் பரிமளிக்கின்றன. அவருடைய நோக்கமும் ஜனங்களை எளிதில் அடைவதற்கும், ராமநாம மஹிமைகளைப் பற்றி அறிவுறுத்துவதற்காகவும், ராமனுடைய பரந்த கீர்த்திகளையும், சீதையினுடைய காருண்ய ஸ்வபாவத்தைச் சொல்லி வால்மீகி பகவானுல்

இயற்றப்பட்ட காவ்யத்தை சில மாறுதல்களுடன் சீதாராம பரதத்வத்தை எளிதில் புரியும்படி இயற்றியிருக்கிறார்.

வால்மீகி பகவானுடைய காவ்யத்திலிருந்து சில மாறுதல்களும், மொத்தத்தில் நாராயண பரமாகக்கொண்ட ஸ்ரீமத் ராமாயணத்தை மதுரதிராக்ஷாரஸ பாகமாக ஸ்ருஷ்டித்திருக்கிறார். வால்மீகி ராமாயணம் போல துளசி ராமாயணமும் ஏழு காண்டங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது. இரு காவியங்களிலும் ஸ்ரீ ராமன், நாராயண பரத்வம் உள்ளவராக இருந்தபோதிலும், கதையில் அவ்வப்போது அமானுஷ்யராகவும், விஷ்ணுவாகவும், பரபிரும்மமாகவும் கருதப்பட்டாலும், அநேக இடங்களில் ஸ்வசங்கல்பத்தினால் மானிடராக லீலைகளை நடத்திக் காட்டினார் என்று சொல்லப்படுகிறார். சீதையின் அழகை வர்ணிக்கும் சமயம், ஸ்வயம்வர கட்டத்தில் சீதை மும்மூர்த்திகளின் தேவிகளைவிட மிக்க அழகியவளாகவும், அவர்களால் ஆஸ்ரயிக்கப்பட்டவளாகவும் துளசி தாஸர் சொல்லுகிறார். சிவபார்வதி கல்யாண விருத்தாந்தத்தின் மூலம் ராமனுடைய பரதத்வத்தை ஞானோபதேசமாக சூசிப்பிக்கிறார். வால்மீகி பகவான் சீதையின் அக்னி குளிப்பிற்குமுன் ராமன் மானிட நாடகம் நடத்திக் காட்டினார் என்றும், அடிக்கடி தன்னை "ஆத்மானம் மானுஷம்மன்யே" என்கிறபடி வெகு லகுவாக காட்டுகிறார்.

துளசிதாஸர் ராமசரித மானஸம் என்கிற காவ்யத்தை பழமையான பைஸ்வாரி அல்லது அவதி என்று சொல்லப்படும் ஹிந்தியில் எழுதியிருக்கிறார். ப்ரஜ், பந்தல்காண்ட், போஜ்புரி பாஷைகளின் நடைமொழி உருவங்களிலும், அறுபது நடைமொழி பழக்கத்தில் உள்ள அராபிய, பெர்ஷியன் பதங்களும் காணப்படுவதாக சில எழுத்தாளர்கள் அறிகிறார்கள். துளசிதாஸர் கைப்பட எழுதிய காப்பியை ஒரு திருடன் யமுனா நதியில் எறிந்து விட்டதாகவும், அயோத்யா காண்டம் மாத்திரம் அகப்பட்டது என்றும் சொல்லுகிறார்கள். கிரியர்ஸன் என்கிறவர் இன்னொரு பிரதி மலிஹாபாத்தில் இருந்தது என்று அபிப்ராயப்படுகிறார். மொத்தத்தில் ராமசரிதமானஸம் சாதாரண பாமர ஜனங்களும் புரியும்படி எழுதப்பட்டிருக்கிறது. இந்த காவ்யத்தில் அத்வைத மதத்தின் கருத்துக்கள், வைஷ்ணவர்களின் பரதத்வ கொள்கைகள், ஈஸ்வரனையே உபாயம் உபேயம் எனக் கைக்கொள்ளுதல் ஆகிற பெரும் சிந்தனைகளிலிருந்து சாதாரண லௌகீக விஷயங்களாகிற ராஜகுமாரனின் வீரம், அன்பின் அழகு, ராமனுடைய சிறந்த தர்மமான மரியாதை நிலையைக் காட்டும் புனித வாழ்க்கை, கடவுள் நம்பிக்கை, ஜனங்களின் பழக்க வழக்கங்கள் எல்லாம் சிறந்த முறையில் வெகு சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. உதாரணமாக லக்ஷ்மணனுக்குள்ள ராம விஸ்வாசம், பரதனுடைய தியாகம், சீதையின் தவக்கோலம் பூண்ட வாழ்க்கை ஆகிய கட்டங்களை படிப்பவர்கள் தங்கள் மனத்தை காவ்ய ருசியிலும் அழகிய முறையில் தீட்டப்பட்ட அலங்காரங்களிலும் சுலபமாக யிழந்துவிடுகிறார்கள். அதனால் இந்த காவ்யம் சீக்கிரமாக

  

பிரபல்யமடைந்து, முன்னூறு வர்ஷங்களில் ஒவ்வொரு வீட்டிலும், கிராமத்திலும் பெரும் பொக்கிஷமாக வைக்கப்பட்டு, பாடப்பட்டு இன்றும் வருகிறது.

வட இந்தியாவில் நடக்கும் ராமலீலா என்கிற உத்ஸவத்தை துளசிதாஸர் காசியில் முதன் முதலாக ஏற்படுத்தினுர் என்று சொல்லுகிறுர்கள். காசியில் ராம் நகர் என்கிற காசி மஹாராஜாவின் விளையாட்டு மைதானத்தில் இந்த விழா இன்றும் நடந்து வருகிறது. மூன்று வாரங்கள் இந்த உத்ஸவம் கொண்டாடப்படுகிறது. அயோத்தி, மிதிலை, சித்ரகூடம் லங்கை ஆகிய இடங்களில் நடக்கும் ராமாயணக் காக்ஷிகளை சித்தரித்து நடத்திக் காட்டுகிறுர்கள். கடைசிக் காக்ஷியாகிற "பரத்மிலாப்"—ராமன் பரதனை மீண்டும் காணுதல், காசியில் நடந்ததாக நினைக்கப்பெற்று, இருவர்களும் அன்புடன் தழுவுதலும் மகா சிறப்புடன் கொண்டாடப்படுகிறது.

காவ்யத்தின் ரஸ அமைப்புக்களும், அழகுகளும் ரொம்ப இருக்கின்றன. இயற்கை உபமானங்களும், செயற்கை காக்ஷிகளும் அழகாக சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. பலாக்காயின் தோலின் முள் போன்று ஒவ்வொரு மயிர் காம்பும் புளகாங்கிதமடைந்தது என்று துளசிதாஸர் சொல்லும்போது, அவர் அனுபவித்துதான் பேசியிருக்கிறுர் என்று தோன்றுகிறது.

ராமானந்தரின் சிஷ்ய பரம்பரையில் வந்த நரஹரி துளசிதாஸரை வளர்த்து, தீக்ஷை முதலியவைகளைச் செய்து வைத்து ராம மந்திரத்தை உபதேசித்தார் என்று பரம்பரை கதைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ராமானந்தர் தென் வைஷ்ணவ சம்பிரதாயத்தாரோடு சண்டை போட்டு, வெளியேறி, ராமபதி குழுவத்தினர் என்று தனிப்பட்ட முறையில் ராமனையே பரதெய்வமாகக் கொண்டாடி நாராயணரின் ஸ்தானத்தை அவருக்கு அளித்திருந்தார்கள். இக்குழுவத்தினர் தங்களை அவதூதர்கள் என்றும், பரந்த மனப்பான்மை கொண்டவர்கள் என்றும், கடவுள் நம்பிக்கை, எல்லோரையும் ஒருமிக்க நேசிக்க வேண்டும், பேதங்கள் கூடாது என்று சொல்லிவந்தார்கள். அதனுல் இந்த காவ்யத்தில் ராமனையே மும்மூர்த்திக்கு மேலான பொருளாகவும், ஆதிபரனுகவும், அவருடைய பக்தர்கள் பரந்த உள்ளத்தினர்கள் என்று அடிப்படையாக கருதுது கொள்ளும்படி அமைந்திருக்கிறது.

கம்பன் இயற்றிய ராம நாடகத்தில் நான்கு வரிகள் கொண்ட 10569 செய்யுட்கள் இருக்கின்றன. வால்மீகியின் ஆதிகாவ்யத்தில் இரண்டு வரிகள் கொண்ட 21018 ஸ்லோகங்கள் இருக்கின்றன. மஹாபாரதத்தில் அதேமாதிரி இரண்டு வரிகள் உள்ள ஒரு லக்ஷம் ஸ்லோகங்கள் இருக்கின்றன. துளசிதாஸர் ராமசரிதமானஸில் 6700 ஸ்லோகங்கள் இருவரிகள் கொண்ட ஸ்லோகங்கள் காணப்படுகின்றன. "துளசிதாஸர் 'கருத்துக்கள் ஸர்வஸம்மதமாகவிருக்கின்றன. அவர் ஒரு மதத்தை ஸ்தாபிக்கவில்லை; ஒரு மதஸ்தினர் அனுஷ்டிக்க

வேண்டிய கடின நியமங்களை நிர்ணயம் செய்யவில்லை; அதனால் இந்த புஸ்தகம் ஒவ்வொரு இடத்திலும் அரச சபையிலிருந்து பாமர ஜனங்களின் குடிசைகளிலும் காணப்படுகிறது. வட இந்தியாவில் பகல்பூரிலிருந்து பஞ்சாப் வரையிலும், ஹிமய மலையிலிருந்து நர்மதை வரையிலும் ஒரு நூற்றாண்டுக்கு முன்பு இந்த புத்தகம் ஸர்வசம்மதமாக ஒப்புக்கொள்ளப்பட்டு, சிறந்த காவ்யமாக விளங்கு கிறது" (கிரியர்ஸன்). மஹாராஷ்டிர தேசத்திலும் துளசிதாஸர் "சாந்தமாலிகா" என்று சொல்லப்படும் மஹாராஷ்டிர மஹன்யர்களின் குழாம்களில் சேர்க்கப்பட்டு, மிக்க மரியாதையுடன் இன்றும் போற்றப் பட்டு வருகிறார். சில வருஷங்களுக்கு முன்பு ஜபல்பூரில் உள்ள ஜாம்தார் என்கிற மஹராஷ்டிர அறிவாளர் ஹிந்தியிலிருந்து மொழி பெயர்த்து, இந்த புஸ்தகத்தை மராத்தி பாஷையில் வெளியிட்டார். நம் போன்ற பாமரர்களுக்கு வேதத்தின் சிறந்த கருத்துக்களை, மன மாற அம்ருத பிரவாஹமாக துளசிதாஸர் இந்த காவியத்தில் கொட்டி யிருக்கிறார். அதனால் இந்த தாமரை மலர் நித்யம் புஷ்பித்து மணம் தரும ஆயிரம் இதழ்கள் உள்ள சௌகந்தகப் புஷ்பம் போலவும், யாவராலும் மதிக்கப்பெற்று சிறந்த சூடாமணியாக இன்றும் விளங்கு கிறது.

## 4. ராமசரிதமானஸ்
## பாராயணம் செய்வதற்கு முறை

முதன் முதலில் பரமகிருபாளுவாகிற கோஸ்வாமி துளசிதாஸரை மனத்தில் தியானம் செய்யவேண்டும்

துளசீக நமஸ் துப்யமி ஹாகச்ச சுசிவ்ரத
நைர்ரித்ய உபவிஸ்யேதம் பூஜனம் ப்ரதி கிருண்ஹதாம்
ஓம் துளசிதாஸாய நம:

வால்மீகி ரிஷியை பிறகு வந்தனம் செய்யவேண்டும்

ஸ்ரீ வால்மீக நமஸ்துப்ய மிஹாகச்ச சுபப்ரத
உத்தர பூர்வயோர் மத்யே திஷ்ட கிருஷ்ணிஷ்வ மேஅர்சனம்
ஓம் வால்மீகாய நம:

பிறகு உமா சம்பு மஹாதேவரை பூஜை செய்யவேண்டும்

கௌரீபதே நமஸ்துப்யமி ஹாகச்ச மஹேஸ்வர
பூர்வதக்ஷிணயோர் மத்யே திஷ்ட பூஜாம் கிருஹாணமே
ஓம் கௌரி பதயே நம:

பிறகு லக்ஷ்மணனை வந்தனம் செய்யவேண்டும்

ஸ்ரீலக்ஷ்மண நமஸ்துப்யமி ஹாகச்ச ஸஹப்ரிய:
யாம்யபாகே ஸமாதிஷ்ட பூஜனம் ஸம்கிருஹாணமே
ஓம் ஸ்ரீ ஸபத்னீகாய லக்ஷ்மணாய நம:

அதற்குப் பிறகு ஸ்ரீ சத்ருக்னனை வந்தனம் செய்யவேண்டும்

ஸ்ரீசத்ருக்ன நமஸ்துப்யமி ஹாகச்ச ஸஹப்ரியः
பீடஸ்ய பஸ்சிமே பாகே பூஜனம் ஸ்வீகுருஷ்வமே
ஓம் ஸ்ரீ ஸபத்னிகாய சத்ருக்னாய நமः

அதன் பிறகு பரதனை ஆவாஹனம் செய்து பூஜை செய்யவேண்டும்

ஸ்ரீபரத நமஸ்துப்யமி ஹாகச்ச ஸஹப்ரியः
பீடகஸ்யோத்தரே'பாகே திஷ்டபூஜாம் கிருஹாணமே
ஓம் ஸ்ரீ ஸபத்னிகாய பரதாய நமः

இதன் பிறகு ஹனுமாரைப் பிரார்த்திக் கொள்ளவேண்டும்

ஸ்ரீஹனுமன் நமஸ்துப்யமி ஹாகச்ச க்ருபாநிதே
பூர்வபாகே ஸமாதிஷ்ட பூஜனம் ஸ்வீ குருபிரபோ
ஓம் ஸ்ரீ ஹனுமதே நமः

இதன் பிறகு பிரதான பூஜையாகிற ராம சீதா தம்பதிகளை ஆராதிக்க வேண்டும்.

புஷ்பங்களை கைகளில் எடுத்துக்கொண்டு, பகவத்தியானம் செய்ய வேண்டும்.

### தியானம்

ரக்தாம் போஜதளாபி ராமநயனம் பீதாம்பராலங்கிருதம்
ஸ்யாமாங்கம் த்விபுஜம் பிரஸன்னவதனம் ஸ்ரீ சீதையா சோபிதம்
காருண்யாமிருத ஸாகரம் ப்ரியகணைர் ப்ராத்ராதிபிர் பாவிதம்
வந்தே விஷ்ணு சிவாதி ஸேவ்யமநிசம் பக்தேஷ்ட ஸித்திப்ரதம்
ஆகச்ச ஜானகிநாத ஜானக்யா ஸஹராகவ,
கிருஹாண மமபூஜாம்ச வாயுபுத்ராதிபிர்யுதः
ஸுவர்ணரசிதம் ராமதிவ்யாஸ் தரணசோபிதம்
ஆஸனம் ஹிமயா தத்தம் கிருஹாண மணிசித்ரிதம்.

### பாதியம் அர்க்ய ஆசமனுதி பூஜாகிரமங்கள்

ஓம், அஸ்ய ஸ்ரீமன்மானஸ ராமாயண ஸ்ரீராம
சரிதஸ்ய ஸ்ரீசிவகாகபுசுண்டி யாக்ஞ்ய வல்கிய
கோஸ்வாமி துளசிதாஸா ரிஷயः
ஸ்ரீசீதா ராமோ தேவதா ஸ்ரீராமநாம பீஜம்
பவரோக ஹரீபக்திः சக்திः மம நியந்திரிதா
சேஷவிக்னததா ஸ்ரீசீதாராம ப்ரீதிபூர்வக
ஸகல மனோரத ஸித்யர்த்தம் பாடே வினியோகः

ஆசமன்யம் செய்துவிட்டு, ஸ்ரீ சீதாராமாய நமः ஸ்ரீ ராமசந்திராய நமः ஸ்ரீ ராமபத்ராய நமः என்று மூன்று தடவைகள் ஆசமன்யம் செய்ய

வேண்டும். பிரணுயமம் செய்து ராமபீஜ மந்திரத்தை சீதை ராமன் இவர்களை தியானித்துச் செய்யவேண்டும். கரன்நியாஸம் செய்ய வேண்டும்.

ஜகமங்கள குணக்ராம ராம்கே
தானிமுக்தி தனதர்ம் தாம்கே—அங்குஷ்டாப்யாம் நம:
ராமராம கஹிஜே ஜமுஹாஹ்
தின்ஹஹி நபாப்புஞ்ச் ஸமுஹாஹி—தர்ஜிநீப்யாம் நம:
ராமஸகல நாமன்ஹதே அதிகா
ஹோவுநாத அக[4] க[2]க[3] க[3]ன வதிகா—மத்யமாப்யாம் நம:
உமாதாரு ஜோஷ்த கீநாயி
ஸப்[3]ஹி நசாவத ராமு கோஸாயி—அனுமிகாப்யாம் நம:
ஸன்முக ஹோஇ ஜீவ்மோஹி ஜப்ஹும்
ஜன்மகோடி அக[4]நாஸஹிம் தப[3]ஹீம்—கனிஷ்ட காப்யாம் நம:
மாமபிரக்ஷ்ய ரகுகுல நாயக
த்ருதவர சாபருசிர கரஸாயக—கரதல ப்ருஷ்டாப்யாம் நம:

**அங்கநியாஸம்**

ஜக[3]மங்கள குணக்ராம ராம்கே
தானிமுக்தி தனதர்ம தாம்கே—ஹ்ருதாய நம:
ராம் ராம் கஹிஜே ஜமுஹாஹீம்
தின்ஹஹி நபாப்புஞ்ச் ஸமுஹாஹீ—சிரஸே நம:
ராமஸகல நாமனஹதே அதிகா
ஹோசன நாத அக[4] க[2] க[3] கணபதிகா—சிகாயவஷட்
உமாதாரு ஜோஷித கீநாயீ
ஸப்[3]ஹி நசாவத் ராமுகோஸாயி—கவசாயஹீம்
ஸன்முக[2] ஹோயி ஜிவ்மோஹி ஜப்ஹிம்
ஜன்மகோடி அக[4]நாஸஹிம் தப்ஹீம் நேத்ராப்யாம் நம:
மாம்அபிரக்ஷ்ய ரகுகுல நாயக
த்ருத வரசாப ருசிர கரஸாயக—அஸ்திராயபட்

**தியானம்**

பகவானுடைய ஸ்வரூபத்தை தியானிக்க வேண்டும்

மாமவ லோகய பங்கஜ[3] லோசன
க்ருபா விலோகினி ஸோச விமோசன
நீலதாமரஸ ஸ்யாம காம அரி
ஹ்ருத[3]ய க்ஞ்ச[3]மகரந்த[3] மது[4]பஹரி
ஜ[3]ா துதா[4]ன வக்ய ப[3]ல ப[4]ஞ்ஜ[3]ன
முனிஸஜ்[3]ஜ[3]ன ரஞ்ச[3]ன அக[4] க[3]ம்ஜ[3]ன
பூஸுர ஸஸிநவ வ்ருந்த[3] ப[3]லாஹக

அஸரன ஸரண தீ³ன ஜ³ன கா³ ஹக
புஜபல விபுல பா⁴ர மஹி க²ண்டி³த
க²ர தூ³ஷண விராத⁴ வத பண்டித
ராவணாரி ஸுக²ரூப பூ⁴பவர
ஜயதசரத² குல குமுத³ சுதா⁴கர
ஸுஜ³ஸ் புராண்விதி³த நிக³மாக³ம
காவத ஸுரமுனி ஸந்த ஸமாக³ம
காருணீக வ்யலீக மத³ க²ண்ட⁴ன
ஸப்³விதி⁴ குஸல கோஸல மண்ட⁴ன
கலிமல மத²ன நாம மமதாஹன
துளசிதாஸ பிரபு பாஹி ப்ரணதஜ³ன

**ராம சரிதமானஸ பாராயண நிறுத்த கட்டங்கள்**

நவாஹ பாராயணம் மாஸ பாராயணம் புஸ்தகத்தில் அங்கங்கே காட்டப்பட்டிருக்கிறது.

## 5. துளசிதாஸரின் இதர நூல்கள்

1. **கீதாவளி :** ஸ்ரீராமனின் கதையை நளினமான பாட்டுக்களால் சித்தரிப்பது. இந்த கதை அவர் சித்திரகூடத்தில் மிகச்சிறந்த பக்தரும், சாஹித்யகர்த்தாவுமான சூரதாஸ் என்பவரை சந்தித்தபின் எழுதியதாகக் கருதப்படுகிறது.

2. **ராமாயண கவிதை :** ஸ்ரீராமனுடைய கல்யாண குணங்களை சித்திரிக்கும் கவிதைகள். சப்பாயா சவைய்யா, கணக் ஸரிகவித்தா மீட்டர்களில் செய்யப்பட்டு, ரொம்ப அழகாக ராமனின் குணம்ருதங்களை எடுத்துக் காட்டும் செய்யுட்கள்.

3. **தோஹாவலி :** நீதியைச் சொல்லும் நூல். தோஹா சோரதா மீட்டர்களில் செய்யப்பட்டது.

4. **ராம சடாசை :** ஏழு ஸர்க்கங்கள்; ஒவ்வொரு ஸர்க்கமும் நூறு டோஹாக்களைக் கொண்டது. துளசிதாஸருடைய மனக் கருத்துக்களைச் சொல்லும் நூல். பக்தி பரபக்தி, ராமரஸம் என்கிற ராமனைப் பற்றிய ரஸமான விஷயங்கள். ஆத்ம போதனை, கர்மங்களின் ஸ்வரூபங்கள், ஞானம், பக்வந் நாமாக்களின் பெருமை ராஜ தர்மம் ஆகியவைகளைப் பற்றிச் சொல்வது.

5. **கிருஷ்ண கீதாவளி :** 61 பாட்டுக்கள் ஸ்ரீகிருஷ்ணனைப் பற்றி ப்ரஜ்பாஷையில் எழுதப்பட்டது.

6. **வினய பத்திரிகை :** 279 லிகிதங்கள் கொண்டவை. அவைகளில் 43 லிகிதங்கள் வேறு தெய்வங்களைப் பற்றியும், புண்ய நதிகள்,

க்ஷேத்ரங்கள், ராமாயணத்தில் உள்ள கதாபாத்ரங்கள், இவைகளை விஷயமாகக் கொண்டவை. மீதி 234 லிகிதங்கள் ஸ்ரீராமனைப்பற்றி எழுதியவை. மீதி இரண்டு லிகிதங்களும் அந்த லிகிதங்களின் சுபமான பலன்களைச் சொல்பவை.

7. **ராமக்ஞப்ரஸ்னவளி :** ஏழு அத்யாயங்கள் கொண்ட ஏழு புஸ்தகங்கள். ஒவ்வொரு புஸ்தகமும் ஏழு டோஹாக்கள் கொண்டவை. ஒவ்வொரு அத்யாயமும் ராமாயணத்தின் ஒவ்வொரு காண்டத்தை விஷயமாகக் கொண்டது. அந்த தோஹாக்களின் உதவியைக் கொண்டு நல்லது, கெட்டது என்கிற விஷயங்களைக் ராமசக்கிரம் போலவைத்துச் சால்வது.

8. **ஜானகி மங்களம் :** 480 வரிகள் கொண்டவை. சீதாராமனின் விவாஹத்தை வர்ணிப்பது.

9. **பார்வதி மங்களம் :** சிவபார்வதி பரிணயத்தைப்பற்றிச் சொல்வது.

10. **வைராக்ய ஸந்தீபினி :** வைராகிய ஸந்யாசியின் லக்ஷணங்களை விவரிப்பது. அவருடைய மனச்சாந்தியையும் விவரிப்பது.

11. **ராமலாலநஹசு :** 20 செய்யுட்கள் கொண்டவை. ஸ்ரீராமனுடைய நகங்களை ஸ்பர்சிப்பதால் ஏற்படும் ஆனந்தத்தை வர்ணிப்பது. இது ராமனுடைய யக்ஞோப வீதத்திற்கு முன்னால் ஏற்படும் சடங்கு.

12. **பாரவை ராமாயணம் :** ராமனுடைய கதையை சுருக்கமாகச் சொல்லுகிறது.

இவைகளைத் தவிர துளசிதாஸர் ஒன்பது சிறிய காவியங்களை இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. அவைகளாவன : (1) ஸங்கட மோசனா. (2) ஹனுமத்பஹுகா. (3) ராமஸலாகா. (4) சந்திரவளி. (5) சப்பாயா ராமாயணம். (6) காரக ராமாயணம். (7) ரோல ராமாயணம். (8) ஜூலானா ராமாயணம். (9) குண்டலிய ராமாயணம்.

## 6. துளசிதாஸரின் ராமசரித மானஸம் என்கிற மானஸ ராமாயணமும் இதர ராமாயணங்களும்

கோஸ்வாமி துளசிதாஸர் உத்தர காண்டத்தில் சொல்லுகிறார் :— ரகுவம்ச பூஷணனுடைய மஹா புண்யமான சரித்திரமாகிற ஸ்ரீமத் ராமாயணம் முதன் முதலில் உமா சம்புவினால் கானம் செய்யப்பட்டு, பிற்பாடு பிரும்மா, நாரத வால்மீகி போன்ற விக்ஞான விசாரதர்களால் ஸதா கரனம் செய்யப்பட்டு வந்தது. புருஷஸ்ரேஷ்டரும், மஹாகவியும் ஆத்மா ராமனுமாகிற பகவான் சம்பு உமா தேவிக்கும், ஸகல ஜகத்திற்கும் ஹிதத்தைச் செய்வதற்காக மானஸ ராமாயணம் என்கிற

உத்தம காவியத்தை தன் மனத்திற்குள்ளே பல காலம் தேக்கி வைத்திருந்தார். பிற்பாடு, அதை ஸ்ரீமத் ராம பதாப்ஜங்களில் ஸமர்ப்பித்து, நித்ய நிரந்தரமாக, ஒப்புயர்வற்ற அனன்ய பக்தியை ஸ்ரீராமனிடமிருந்து அடைவதற்கு இந்த காவியத்தை அர்ப்பணம் செய்தார். புண்யமானதும் சிலாகிக்கத் தகுந்ததுமான அவருடைய பக்தியை என் பிரபு ஸ்ரீரகுநாத் ஸ்வீகரித்துக் கொண்டார்." அந்த பக்தி பெரும் காவியத்தை பரமாசாரியரும் மார்க்கதரிசியுமான பிரபு கோஸ்வாமி துளசிதாஸர் பக்தர்களுக்கும் ராமதாஸர்களுக்கும் ஹிதத்தைச் செய்வதற்கு சாதாரண பாஷையில், யாவரும் புரிந்து கொள்ளும்படி இந்த ராமசரிதமானஸம் என்கிற மானஸ ராமாயணத்தை எழுதி ரஞ்சனம் செய்தார். அவர் மீண்டும் சொல்லுகிறார், "இது கலிகாலம். இந்த கலிகாலத்தில் யோகமோ, யக்ஞமோ, ஜபமோ தவமோ மஹாவிரதங்களோ, பூஜை முதலியயாவையும் மஹத்வம் வாய்ந்திருந்தபோதிலும், மோக்ஷ ரூபமானதும் மறுபடியில் பூமியில் ஜனிக்கச் செய்யாததுமாகிற ராம பிரும்மத்திற்கு இணையில்லை. இவைகள் ஸாதனங்கள் இல்லை." இதையே பீஷ்மர் சரதல்பத்தில் படுத்திருந்த யுதிஷ்டிராதிகளுக்கு உபதேசம் செய்தார். "கிருஷ்ணனுக்குச் செய்த ஒவ்வொரு சுக்ருத நமஸ்காரம் ஜன்மத்தைக் கொடாது" என்றார். இவ்விதம் அவர்கள் சொல்வதற்குக் காரணமென்ன? அது ஒன்று தான் இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. பகவானே பரமார்த்தம், பகவான் ராமனே, கிருஷ்ணனே, நாராயணனே, ஸதா தியானிக்கப்படவேண்டிய விஷயம்; அவர்களுடைய மங்கள மூர்த்தியை ஹிருதயத்தில் தரித்துக் கொண்டு, அவர்களுடைய தாரக நாமாக்களை உச்சரித்துக் கொண்டு, அவர்களுடைய கல்யாண குணங்களில் பரம ஆனந்தம் கொண்டு ஒருவன் தனது ஜீவிய வாழ் நாட்களை கழித்துவருவானாகில், அயோத்தியா வாசிகளிடம் கருணை காட்டிய ஸ்ரீராமன் நம்மிடமும் கருணை காட்டுவார்; அவகதி அடைந்த ஸகல ஜீவர்களுக்கும் அவர் உத்தாரகமாக விருப்பார். எல்லோருக்கும் தீபச் சுடராக நின்று வழி காட்டி அனுக்ரஹிப்பார் என்பது தான் அந்த பரமாசார்யருடைய குறிக்கோளாகவிருக்க வேண்டும்.

துளசிதாஸர் தனது காவியத்திற்கு கிருத லக்ஷணமுள்ள சம்பு பகவானையும், அவரை ஏகாக்ர புத்தியுடன் ஆராதித்து வந்தவளும், அவரைவிட்டு ஒரு க்ஷணமும் பிரியாத சக்தி தேவதையாகிற அம்பிகையையும் ஆதாரமாக வைத்து, ஸ்ரீசீதாராமனை பரதத்வமாகவும், ஸ்ரீராம தாரக மந்திரத்தை மிக உயர்ந்த தாரக நாமாவாகவும் சித்தாந்த பூர்வமாக ஸ்தாபித்தார். மஹாபாரதத்தில் சங்கரருடைய பெருமையைப் பற்றி கிருஷ்ண வாக்குக்களினால் சொன்ன வியாஸ பகவானைப் போல துளசிதாஸரும் ராம தாரக நாமத்தினால் மஹேசரிடமும் பக்தி அடையப்படுகிறது என்கிறார். மேலும் அவர் நாரத உபாக்யானத்தைச் சொல்லும் போது மஹேஸ்வருடைய பெருமைகளைக் கூறுகிறார்.

நாரதர் சொல்லுகிறார், "ஸ்வாமி, நாராயணரே, நான் தங்களை தகாதபடி கடூரமான வசனங்களால் அநேகம் சொல்லிவிட்டேன். என் பாபங்கள் எவ்விதம் நாசமடையும்?" என்று கேட்டதற்கு, பகவான் ஸ்ரீராமசந்திரன் பதில் சொன்னார். "சங்கரருடைய நாமாக்களை நூறு தடவை ஜபம் செய்து, ஹ்ருதயத்தில் சாந்தியை அடை. சிவனுக்குச் சமமான பிரிய புருஷன் எனக்கு உலகில் இல்லை. நாரதரே, திரிபுராரியான சிவன் எவனுக்கு அனுக்ரஹம் செய்யவில்லையோ, அவனுக்கு என் மீது பக்தியும் உண்டாகாது" என்கிறார். இதே கருத்தை பராசரர் விஷ்ணுபுராணத்தில் கிருஷ்ணாவதாரத்தில் நடந்த பாணாஸுர யுத்தத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். "நீர் யாருக்கு அபயம் கொடுத்தீரோ, அவனுக்கு என்னாலும் அபயம் கொடுக்கப்பட்டது." இந்த ஹ்ருதயத்துடன் ராமனை பரதத்வமாக ஸ்வீகரித்து, சமதிருஷ்டியுடன் பகவான் சங்கரர் நோக்குவதாக துளசிதாஸர் கல்பித்துக் கொண்டு, மனோவிசாலத்துடனும் உதாரஹ்ருதயத்துடனும் இந்த காவியத்தைச் செய்திருக்கிறார். அதே மாதிரி உமாதேவியும் பகவான் சங்கரருடைய பாதி (அர்த்த) சரீரத்தில் இருந்து கொண்டு, தர்மமாகிற ஸாது ஸம்ரக்ஷணத்தை மஹேசருடன் பரிபாலிக்கிறாள். அவளே ஸுரகாரியங்களில் ஹிதகாரியாகவும், லோக ஸந்தான காரிணியாகவும், ஸ்திரி வர்க்கங்களிலே அநிந்திதையாகவும், புருஷோத்தம சப்தத்தால் அழைக்கப்படுகிறவளாகவுமிருக்கிறாள். அவளே தான் உத்தம உத்தமானதும் சாஸ்வதமுமான ஸ்திரிதர்மமாக விளங்குகிறாள். ஆகையால் அவளும் பகவான் சம்புவைப் போலமிக்க மதிப்புக்குரியவளாகிறாள். அவர்கள் இருவரையும் நான் துளசிதாஸரைப்போல அடிக்கடி அடிக்கடி வணங்கி, என்னையும் அவர்களுடைய தாஸனாக ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு இதை எழுதியிருக்கிறேன்.

ராமசரிதமானஸத்தில், ஏழு காண்டங்கள் ஆதிகாவ்யமாகிற ஸ்ரீமத் ராமாயணத்தைப்போல விருக்கின்றன. ஆனால் கதையின் போக்கின் விஷயங்களில் வால்மீகி ராமாயணத்திலிருந்து சில மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டு ராம கதைகளில் உள்ள ஒற்றுமைகளை சிறிது ஆராய்வோம். இரு ராம கதைகளிலும் ராமனும் சீதையும் ஆத்மாவும் புத்தியும் போல மிக்க ஒற்றுமையாக விளங்குகிறார்கள். தர்மத்தைக் கைப்பிடித்த மஹாபுருஷனுடைய வாழ்க்கை எவ்வளவு கடினமானது; எத்தகைய கஷ்டம் வந்திடினும் லோக ஹிதத்திற்காகவும், ஆத்ம சுகத்திற்காகவும், குலத்தின் கீர்த்திக்காகவும், தர்மத்தையே லக்ஷ்யமாக உள்ள அரசனாகிற ராமன் காமத்திற்காகவோ அர்த்தத்திற்காகவோ தர்மத்தை தியாகம் செய்வதற்கு முயலவில்லை. தர்ம வீர்யத்தினால் தன்னை வியவஸ்தை செய்து கொண்டு, தானும் உயர்ந்து, மற்றவர்களுக்கும் ஒரு உதாரணமாகவும் பிரமாணமாகவும் விளங்குகிறவன் ராமன் அன்றோ? அது போல ஜனகரின் மகளாகிற சீதையும் ராமனுடன் சேர்ந்து சுத்தமான

வாழ்க்கையை நடத்தி, ஸஹ தர்மசாரிணி என்கிற பட்டப் பெயரையும் அடைந்திருக்கிருள். அரசனுடைய கர்மாக்களான துஷ்ட நிக்ரஹம், சிஷ்டபரிபாலனம், ஸாமதான பேதம் தண்டம் ஆகிற நான்கு உபாயங் களால் அரசர்களின் தர்மங்களையும், பாதுகாத்தல், ஆகிற வழிகளை அனுஸரித்தவன் புருஷோத்தம ராமன். உலகரீதியின்படி நடந்தும், உலக மரியாதையைக் காப்பாற்றியும், பெரும் ஆபத்துக் காலத்திலும் தர்மத்தை தர்மத்திற்காகவே அனுஷ்டித்தலும், சத்ருவினிடமும் மித்ரனிடமும் ராஜதர்மங்களுடன் நடத்தலும் ஆகிற தர்ம ஆசரணைகள் சீதா ராமர்களுக்கே விலக்ஷணமாக விளங்குகின்றன. ஆதலால் ஸ்ரீ ராமசந்திரனை மரியாதா புருஷோத்தமனுகச் சொல்லுகிருர்கள்.

வேதவியாஸரும் ராமனுடைய விருத்தாந்தங்களை மஹாபாரதத்தில் வனபர்வத்தில் வனவாசத்தை அடைந்தவர்களும், ஜயத்ரதனுல் அப ஹரிக்கப்பட்ட திரௌபதியை மீட்டு வந்து ஸந்தாபத்தை அடைந்த போது, மார்க்கண்டேய மஹரிஷியின் வாக்யங்களால் ராமகதையை எடுத்துச் சொல்கிருர். யுதிஷ்டிரர் வினவுகிருர் “ தர்மங்களை அனுஷ்டிப்ப வளுமான பாஞ்சாலியினுல், எவ்விதம் சுத்தமாயிருப்பவனை பொய்யான திருட்டுக் குற்றம் அடைவதுபோல, இப்படிப்பட்ட துக்கமானது எவ்வாறு அடையப்பட்டது? அவளால் ஒரு பாபமும் செய்யப்பட வில்லையே. தர்மத்தின் ஆசரணையினுல் காட்டில் வசிப்பவர்களும், பந்துக்களை விட்டுப் பிரிந்தவர்களும், மனைவியை அபஹரிக்கப்பட்டவர் களும் ஆகிய துக்கங்கள் சகிக்கமுடியாதபடி விருக்கின்றன. இவ்வித மான பாக்ய ஹீனனுக யாராவது ஒரு மனிதன் உலகத்தில் இருந்திருக்கி ருேனு” என்று யுதிஷ்டிரர் கேட்க, மார்க்கண்டேயரிஷி “பரதஸ்ரேஷ் டனே, ராமரால் நிகரற்ற துக்கம் அடையப்பட்டது” என்று சொன்னுர். ஜானகி கெட்ட எண்ணமுள்ள ராக்ஷஸ அரசனுன ராவணனுல் கொண்டு போகப்பட்டாள். அவன் பலத்தினுல் ஜடாயு என்கிற கழுகு அரசனைக் கொன்ருன்; ஆஸ்ரமத்திலிருந்து கபடமாக ஜானகி அபஹரிக் கப்பட்டாள். ராமர் சுக்ரீவ பலத்தினுல் கடலுக்கு அணைகட்டி கூர்மை யுள்ள பாணங்களால் லங்கையை எரித்து, ராவணனையும் கொன்று, சீதையை மீட்டு வந்த கதையை விஸ்தாரமாகச் சொன்னுர். பிரும்ம தேவருடைய வரபலத்தினுல் ராவணனுடைய அட்டஹாஸத்தை பொறுக்க முடியாத தேவர்கள் பிரும்மாவினிடம் முறையிட்டனர். அப்பொழுது பிரும்மதேவர் “விஷ்ணு பகவானே அவதரித்து ராவணனை வதம் செய்வார். நீங்கள் அவருடைய காரியத்திற்கு ஒத்தாசையாக அவதரியுங்கள்” என்று சொன்னுர். அவருடைய கட்டளையின்படி தேவர்கள் வானரர்களாகப் பிறந்தனர். துந்துபி என்கிற கந்தர்வ ஸ்திரி மந்தரையாகப் பிறந்தாள். தெய்வத்தின் தூண்டுதலால் ராமன் வனவாசம் சென்ருன். கபந்தனைக் கொன்றதின் பேரில், அவனுடைய தேகத்திலிருந்து திவ்யமான தேஜஸ் உள்ள கந்தர்வ புருஷன் தோன்றித் தன்னை அவன் விஸ்வாவஸ் என்று அறிமுகப்படுத்தி, சீதை

யைத் தேடிப் போகும் ராமலக்ஷ்மணர்களுக்கு சுக்ரீவஸக்யத்தையும், வைதேஹி ராவணனால் லங்கையில் சிறை அடைக்கப்பட்டிருப்பதையும், அவளை அடையும் வழியையும் அந்த கந்தர்வன் சொன்னான். சீதை மீட்கப்பட்டபின்பு ராமன் அயோத்திக்குத் திரும்பி, பட்டாபிஷேகம் செய்து கொண்ட விருத்தாந்தங்களைச் சொல்லிவந்த மார்க்கண்டேய ரிஷி கடைசியாகச் சொன்னார், "தர்ம நந்தனா, அளவற்ற தேஜஸ் உள்ளவரும், வனவாசத்தினால் யேற்பட்டதும் மிக்க உக்ரமாக இருப்பதான துயரத்தை ராமன் அடைந்தார். சகாய மில்லாமலிருந்த ராமரால் வேறு ஜாதியைச் சேர்ந்த குரங்குகளையும் கரடிகளையும் கொண்டு, அவர்களின் சகாயத்தினால் போரில், பயங்கரமான ராக்ஷஸ ராஜனான ராவணன் யுத்தத்தில் கொல்லப்பட்டான். நீ துயரப்படாதே. உன்னைப்போன்ற மஹாத்மாக்கள் துக்கத்திற்கு ஆளாகமாட்டார்கள். மனோதைர்யமடை" என்று மார்க்கண்டேய மஹரிஷி தர்மருக்கு புத்திமதி கூறினார். சீதையைப்போலவே சாவித்திரியும், திரௌபதியும் கஷ்டப்பட்டார்கள். சாவித்திரியினால் அவள் கணவனும், அவனுடைய மாதாபிதாக்களும் கரையேற்றிவிடப்பட்டாள். "ஆகையால் எல்லா பிராணிகளிடமும் செய்கையாவும் மனத்தாலும் வாக்கினாலும் துரோஹம் செய்யாமையும் அருளுடைமையும், கொடையும், ஆயுள்தானமும் சரணாகத ஸம்ரக்ஷகமும், சாதுக்களுடைய பழமையான தர்மம். ராவணனுடைய தம்பியான விபீஷணனிடமும், சுக்ரீவனிடமும் அன்பு காட்டிய ராமன் மாதிரி ஸாதுக்கள் தங்களை அடைந்த பகைவர்களிடமும் கருணையைக் காட்டுகிறார்கள். சாதுக்களிடம் யேற்படுகிற நம்பிக்கை தன்னிடத்திலும் ஏற்படுவதில்லை. அன்புடனிருப்பதால் எல்லாப் பிராணிகளும் நம்பிக்கையை அடைந்து, மன அடக்கமுள்ளவர்களா கவும், சமாதானமான மனம் உள்ளவர்களாகவும், பகை நட்பு என்கிற வேறு பாடில்லாதவர்கள் சாதுக்கள் அன்றோ? ஸநாதனமான தர்ம விருத்தியில் இருப்பவர்களுக்கு, மனம் ஸந்தாபத்தினால் வாட்டமடைகிற தில்லை. ஸத்யத்தையே கதியாக வைத்து, பிறருக்கு உபகாரத்தைச் செய்துகொண்டு, பிரதிபிரயோசனம் ஒன்றையும் எதிர்பாராமல், சந்தோஷம், அர்த்தம் (தனம்), கௌரவம் மரியாதை ஆகிய மூன்றிலும் தங்களைப்போல பிறர்களையும் கருதி, பிறர்களுக்குச் சுகத்தை அளிக்கிறார் கள். ஆகையால் மனிதனுக்கு தன்னடக்கம், தைரியம், பொறுமை, தெய்வ நம்பிக்கை, எவ்விதம் அவசியமோ, அதுபோல ஸ்திரிகளுக்கும் தவமும் இந்திரிய நிக்ரஹமும் ஆசாரமும், பதிபக்தியும், மாதாபிதாக் களின் ஸேவையும், சாதுக்களிடமும் தர்மத்தினிடமும் பிரியமும் நம்பிக் கையும் மஹாதுயரங்களிலிருந்து விடுபடும் கருவிகளாக விளங்கு கின்றன." நற்குலத்திலும் ராஜகுலத்திலும் பிறந்தவர்களும் நல்லொழுக் கத்தை விரதமாக பூண்டவளும், மஹாபாக்யவதியான பெண்ணினால் இருள் மயமான மடுவில் முழுகிப்போகும் வியஸனங்களை எதிர்த்துப் போராடி, பதியினுடைய வாழ்க்கை, தன்குலம், தான்பிறந்த குலம்,

  

தான் புகுந்த பதியின் குலம் ஆகிய மூன்று குலங்களையும் சீல நடத்தை யுள்ள ஜானகியினாலோ, சாவித்திரியினாலோ, திரௌபதியினாலோ நன்றாக மேலே தூக்கப்படுகின்றன அல்லவா? இப்பேர்பட்ட மஹத்வம் வாய்ந்த சீதை ஸ்ரீராமனுக்கு சரிக்குச் சமமாக தர்ம ஆசரணையில் வாழ்ந்து, "சீதாயாః சரிதம் மஹத்" என்று சொல்லும்படி உத்தம வாழ்க்கையை நடத்திக் காட்டினாள். இதையே துளசிதாஸர் தனது காவியத்திலும் பாகவத தர்மம், ஸாதுக்களின் பெருமைகள், உத்தம சீல நாரிகளின் தர்ம ஆசரணைகள், சீதையின் பதிபக்தி, பிரேமை, தர்மானுஷ்டானங்கள், பதிதர்மங்கள் ஆகிய எல்லாவற்றையும் சொல்லி, ஸ்ரீராமனை தியாக ராஜாதிகள் புகழ்ந்தது மாதிரி ராஜரிஷியாகவும் மனதேக அடக்கமுள்ள சுகுமார ராஜனாகவும் பிராம்மணப் பிரியனாகவும், ரிஷிபிரியனாகவும், லோக பிரியனாகவும் வெகு அழகாக சித்தரித்திருக்கிறார்.

ஸ்ரீ பாகவதத்திலும் பரிக்ஷித்துக்குக் குரு குலத்தின் வம்சத்தை வர்ணிக்கும் சமயம், சுகப்பிரும்மரிஷி சொல்ல ஆரம்பித்தார். "வால்மீகி பகவானால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதும், அநேக தடவைகள் பரிக்ஷித்தினால் மற்றவர்களிடமிருந்து கேட்கப்பட்டதுமான ஸ்ரீராம சரிதத்தை நான் சுருக்கமாகச் சொல்கிறேன். பகவான் தனது தகப்பன் வசனத்தில் கட்டுப்பட்டவராகி, ராஜ்யத்தை தியாகம் செய்துவிட்டு, காடுகளிலும் மலைகளிலும் சீதையுடன் அலைந்து திரிந்தார். அவருடைய பாத பங்கஜங்களின் சிரமங்கள் மஹா பாக்யவானான லக்ஷ்மணனாலும், ஹனுமான்ஜியினாலும் போக்கப்பட்டன. சீதையை அன்வேஷணாகப் போகும் சமயத்தில் அவருடைய புருவ நெரிப்புக்களினால் பயந்த சமுத்திரராஜன் பயந்து ஓடிவந்து தன்மீது ஸேது வாகிற பாலத்தை அமைக்க இசைந்தான். பகவான்ராமன் மானிட வேஷம் தாங்கியதால் தன் தம்பியுடன் தீனனாகி, கிருபணனாகி, பிரியையான சீதையைத் தேடும் வியாஜத்தில் மஹா துக்கமடைந்து, ஸ்திரி ஸங்கத்தினால் யேற்படும் தோஷங்களையும் துக்கங்களையும் உலகத்திற்கு அறிவிப்பது போலவே, தீன உள்ளத்துடன் அலைந்து திரிந்தார். அதே பகவான் ஜடாயுவுக்கு அவருடைய தியாக புத்திக்கு ஏற்ப, கர்மக் கூட்டடங்களை நாசம் செய்தார். அவருடைய பரத்வ மகிமைகளை வருணனால் சொல்லும்படி சுகர் நமக்கு தெளிவுறுத்தினார். "பிரபு, நீர் எங்களால் அறியமுடியாத கூடராகவிருக்கிறீர். ஆதி புருஷரும், ஜகதீசரும், மூவுலங்களுக்கும் மேலான அதீஸராகவுமிருக்கறீர். உம்முடைய ஸத்வ குணத்திலிருந்து தேவர்கள் உண்டானார்கள். நீரே பிரகிருதிக்கு மேற்பட்ட ஸநாதனமான புருஷன். உம்முடைய ராஜஸ குணத்திலிருந்து மனிதர்கள் முதலானவர்களும், தமஸ்ஸாதி குணத்திலிருந்து பூதங்கள் முதலியவை உண்டாயின. நீரோ இந்த மூன்று குணங்களின் ராசிக் கூட்டங்கள்" என்று வருணன் பிரபுவை ஸ்துதி செய்தான். சீதையை மீட்டுவந்த பின்பு, அயோத்திக்கு

ராமன் திரும்பிச்சென்று, பரதனுடைய சம்மதத்தின்பேரில் ராஜ்யாபிஷேகம் செய்துகொண்டார். சீதையுடன் ராஜ்ய போகங்களை அனுபவித்த பின்பு, ராமன் மீண்டும் சீதையை ஒரு அயோத்யாவாசி சொல்லியதின் பேரில் பரித்யாகம் செய்தார். இந்த விருத்தாந்தங்கள் துளசிதாஸரால் ராமசரிதமானஸத்தில் சொல்லப்படவில்லை. ராஜ்யாபிஷேகத்திற்குப் பின்பு நடந்த சீதையின் துயரங்கள் ராம சரிதமானஸத்தில் இடம் பெறவில்லை. ஆனால் சுகமஹரிஷியோ அவைகளை விவரமாக வர்ணித்து, சோகத்துடன் சீதையை விட்டுப் பிரிந்து வாழும் ஸ்ரீராமனால் அநேக யாகங்கள் செய்யப்பட்டனவென்றும், ராமன் சகல ஐஸ்வர்யங்களையும் தானம் செய்தார் என்றும், ராம ராஜ்யத்தில் ஏற்பட்ட சிறப்புக்களையும் மனிதர்கள் அடைந்த பல க்ஷேமங்களையும் சொன்னார். துளசிதாஸராலும், ஸ்ரீராமன் பல உத்தம தானங்களைச் செய்தார் என்றும், சகல ராஜ ஐஸ்வர்யங்களையும் தியாகம் செய்தார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ராம ராஜ்யத்திலுள்ள சிறப்புக்களையும் விசேஷங்களையும், ஸகல ஜீவராசிகளும் அடைந்த நன்மைகளையும் விவரமாக துளசிதாஸர் உத்தரகாண்டத்தில் சொல்லியிருக்கிறார். கடைசியில் ஸ்ரீ சுகர் சொல்கிறார். "பிராம்மணப் பிரியரும், புவனேஸ்வரரும், உதாரஹ்ருதயம் உள்ளவரும், எவருடைய திவ்ய ஞானத்தினால் தமஸ் முதலான அக்ஞானக் கூட்டங்கள் விலகி, எவருயை பாத பத்மங்களை, தண்டம் முதலிய ஹிம்சைகள் நிறைந்த வழிகளை விட்டுவிட்டு, அஹிம்ஸா ரூபமாக சகல சித்தத்துடன் மஹா யோகிகள் ஒருமிக்க மனத்துடன் ஏகாக்ர அவிச்சின்ன பக்தியினால் வணங்குகிறார்களோ, அப்பேர்பட்ட உத்தமஸ்லோகனை நான் வணங்குகிறேன்." பதின்மூவாயிரம் வருஷங்கள் பிரபு சீதையை பரித்யாகம் செய்துவிட்டு, பிரும்மசர்ய விரதத்துடன், அகண்டமான அக்னிஹோத்ரம் செய்தார். சீதையினுடைய உத்தமகுண விலாஸங்களை பிரபு அடிக்கடி நினைப்பவராகி, ஈஸ்வரரும், மஹா பிராக்ஞயரும், மஹாத்மாவுமான ஸ்ரீராமன் ஸ்திரிகளிடம் அதிக அன்பு வைத்து, எவ்விதம் சாதாரண மனிதர்கள் கஷ்டப்படுவார்களோ, அதைப்போல் கதறினார். அவருடைய மிருதுவானப் பாதங்கள், கல்பதருவின் பல்லங்களைப் (கொடிகளைப்)போல விருந்தன. அந்த மிருதுவான பாதங்களை எந்த பாக்யவான்கள் தங்கள் ஹ்ருதய புண்டரத்தில் தரிசித்துக்கொண்டு, ஸதா நினைக்கிறார்களோ, தண்டக வனத்தில் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டில் நடமாடிய அந்த புண்ய பாதங்களை எவர்கள் நினைக்கிறார்களோ, அவர்கள் சம்சாரத்தில் உள்ள கிலேசங்களை விலக்கிக்கொள்கிறார்கள். ரகுபதி விளையாட்டாக தேவர்களின் காரியத்தை ஸாதிக்கும் பொருட்டு, மானிட தேகத்துடன் அவதரித்து, அதே விளையாட்டினால் சேதுவை அமைத்து, வானரங்களுடன் சக்யம் செய்துகொண்டு சீதையை மீட்டார். அப்பேர்பட்ட அமலனான ஸ்ரீராமன் உத்தம ராஜரிஷியைப்போல வாழ்க்கையை நடத்திக்

காண்பித்தார். இதே மனோபாவத்துடன் துளசிதாஸரும் எழுதியிருக்கிறார். காகபுசுண்டி கருடனிடம் சொல்லும்போது, "பிரபு, கருட மஹாராஜரே, இந்த பவித்திரமான கதை பகவான் சுகதேவரையும் ஸனகாதி மஹரிஷிகளையும், பகவான் சம்பு பார்வதியையும் பிரியப்படுத்தும். இந்த ஸம்சாரத்திற்கு மிக்கத் தேவையான பொருள் ஸாது ஸங்கமம் ஒன்றே. அந்தஸத் ஸங்கமம் ஒரு நிமிஷமானாலும் சரி, வாழ்க்கையில் ஒருதடவை கிடைத்தாலும் சரி, அதுமாத்திரம் ஒருவனுக்கும் ஸம்பவித்துவிட்டால் போதும்," என்கிறார். மேலும் அவர் சொல்லுகிறார். "ஞானம் வைராக்யமே சிறந்தது. சகல மனோநோய்களுக்கும் ஆதிகாரணம் மோஹம்தான். நிலையில்லாத தேகத்தில் நிலையற்ற ஜீவிய வாழ்க்கையில், காமத்தின் வசமிருக்கும் புருஷனுக்கு இவ்வுலகிலும், பரலோகத்திலும் நன்மை ஏற்படுவதில்லை. அதனால், அவன் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்காமல் பிரதிகூலமான காரியங்களிலிருந்து ஒழிவை அடைகிறானில்லை. அவன் அந்த மனோவியாதியினால் கஷ்டப்பட்டு, அதிலிருந்து சூலம்போல கொடிய நோய்களினால் கஷ்டப்படுகிறான். காமம் வாதரூபமாக அவனுடைய தர்மபுத்தியைக் கெடுக்கிறது. அதனால் அவன் சீக்கிரமாகவே கோபத்திற்கு வசமடைகிறான். லோபம் எனப்படும் வியாதி அவனுடைய உடம்பில் கபம்போல விருக்கிறது. அவனுக்குக் காமத்தின் ஏமாற்றத்தினாலும், லோபபுத்தியினாலும் க்ரோதம் ஏற்படுகிறது. க்ரோதம் அவனுக்கு பித்தமாக வாகவிருக்கிறது. ஆகவே மனிதன் கபம் வாதம் பித்தம் ஆகிய மூன்றிலும் வாட்டப்படுகிறான். அஹங்காரம் என்பது அத்யந்த துக்கத்தைத் தரும் கால்வலி, முழங்கால் விக்கம்; டம்பம், கபடம், மதம், மானம் ஆகியவையும் வியாதிகளாக வருகின்றன. விஷய போகங்களில் இச்சையாகிற திருஷ்ணை ஜலோதரம் போன்ற உதர ரோகம், மேகநீர் ரோகம் போலவிருக்கின்றது. மூன்றுவித ஆசைகளாகிற புத்ர புத்ரிஸ்நேகம், தனம், கௌரவம் மரியாதை ஆகிய மூன்றும் குளிர்க்காய்சலாக விருக்கிறது. மத்ஸரம் எனப்படும் பொறாமை, பிறர் சுகத்தைக் காண சகியாமை, அவிவேகம் எனப்படும் ஈஸ்வரநிந்தை ஆகிய இரண்டும் ஜ்வரம்போல இருக்கிறது. இந்த மாதிரி மனோவியாதிகள் தேகவியாதிகள் பலவிருக்கின்றன. இவைகளுக்கு, மனிதனிடம் நியமம், தர்மத்தில் நம்பிக்கை, ஆசாரம் ஆகிய தர்மானுஷ்டானம், தவம், ஞானம் எனப்படும் ஜீவாத்மாவின் பாரதந்திரிய ஸ்வரூபம், பரமாத்மாவின் ஸர்வ ஸ்வாமித்வ விபவம், அதை அறிந்து, யாகம், தவம், ஜபம், தானம் ஆகிய கோடிக்கணக்கான அருமருந்துகள் இருக்கின்றன. ஆனால் அவைகளால் மனிதனுடைய ரோகங்கள் பூர்ணமாக நாசமடைகிறதில்லை. இந்த ரோகங்களின் தாபங்களும், சந்தோஷமும் பயமும், உற்றார் உறவினர்கள், தனம் தான்யம், க்ருஹம் முதலியவைகளினால் யேற்படும் துக்கங்களும் ஜீவனை பலவிதங்களால் துன்புறுத்துகின்றன. அப்பேர்

பட்டவனுக்கு அதிருஷ்ட வசத்தினுல் ராமபக்தி யேற்படுமாகில் விஷய சுகங்களிலிருந்து நிவ்ருத்தி ஏற்பட்டு, ஸாதுக்களின் ஸங்கமத்தை அடைந்தவனுக, பச்சாதாபமில்லாமல் வித்வான்கள் அடையும் சாந்த புத்தியுடன் நிஜமான மானஸரோகங்களுக்கு ராம சஞ்சீவினியை அருமருந்தாக அடைகிருன்'' என்கிருர் பிரபு துளசிதாஸர். குரு கடாக்ஷம் ஏற்பட்டு, அந்த மஹானுபாவனுக்கு பெரிய பாப நிவிருத்தி ஏற்பட்டு, தர்மமானது மரணத்திற்குப் பின் சுகத்தைத் தருவதுபோல, இகலோகத்திலே பூர்ணமான சாந்தி, பூர்ணமான புத்தி ஏற்பட்டு, தர்மா தர்மங்களினின்று விடுபட்டு, ஸகல சந்தேகங்களிலிருந்தும் விடுபட்டு, புண்ணிய பாபக் கூட்டங்களிலிருந்து விடுபட்டு, அந்த ஜீவன் ராமகிருபையினுல் ஞானம் வைராக்ய பூஷணனுக, நின்ற மெய் நிலையை அடைபவனுக, அழிவற்றதும், சுசியானதும் ஆயாஸ மில்லாததுமான உத்தம மோக்ஷ நிலையை (தியாகராஜாதிகளைப்போல) அடைகிருன்'' என்கிருர் துளசி மஹா பிரபு. அப்பேர்பட்டவனுக்கு நாதபிரும்ம வித்யை யாகிற பிராண அனல ஸம்யோகம் ஏற்படுகிறது. மனம் ஆத்மாவிலும், ஆத்மா பரமாத்மாவிடமும் லயிக்கிறது. தெளிந்த புத்தியினுல் அவனுக்கு ஈஸ்வர ஞானம் எனப்படும் பரஞானம் ஏற்படுகிறது. ஜீவாத்மா ஸ்வரூப லாபத்தை அடைந்து அவன் ராம பக்தியையே ஸாம்ராஜ்யமாக தியாகராஜாதிகளைப் போல உபகரிக்கிருன். அவனுக்கும், தியாகராஜாதிகளைப் போல வாக்கேயக்கார்களுக்கும் ஸ்ரீ ராம பாதபங்கஜங்களில் அத்யந்த விஸ்வாஸத்துடன் பூர்ணபக்தி ஏற்படுகிறது. இதையே ஸகலவேதங்களும் புராணங்களும் ஏகமனதாக உத்கோஷிக்கின்றன. அதனுல் அல்லவோ தியாகராஜர் "ஸ்ரீரகுபதியினுடைய பக்தியில்லாமல், ஸ்ரீராமனைப் பற்றிய விஷயமில்லாமல் எதுவும் எனக்கு சுகத்தைத் தராது'' என்று சொல்கிருர். "ஸ்ரீராமனுடைய தர்சனமில்லாமல் என் வாழ்க்கை வீண். எந்த மனிதர்கள் ஸ்ரீ ஹரிபகவானை உபாஸனை செய்து, பஜிக்கிருர்களோ, அந்த மஹானுபாவர்கள் கடக்க முடியாததும், அதிக ஆபத்துக்கள் நிறைந்ததும், அகாதமாகவிருக்கும் ஸம்சாரக்கடலை எளிதில் தாண்டுகிருர்கள்'' என்று துளசிதாஸர் தியாகராஜரைப் போல உத்கோஷிக்கிருர். அவருடைய வார்த்தைகள் வேதவியாஸ பகவானின் வார்த்தைகளான "என் வார்த்தைகள் ஸத்யம். கேசவனைவிட வேறு தெய்வம் உயர்ந்ததில்லை,'' என்பதை பிரமாணமாகச் செய்கின்றன. அதனுல் அல்லவோ தியாகராஜர், துளசிதாஸரைப் போலச் சொல்லுகிருர், "என் பிரபு ரகுபதியை விட்டுவிட்டு, அந்த பிரபுவுக்கு நித்ய கைங்கர்யமாகிற துளசி வில்வம் மல்லிகைப்பூக்களால் அர்ச்சிப்பதை விட்டுவிட்டு, எவனுவது நரஸ்துதி செய்யலாமா? ராமநிதியை விட்டு விட்டு, உன் சுகத்திற்காக, ஹே மனஸே, அழிந்துபோகும் தன்மையை உடைய நிதியாகிற மற்றச் செல்லங்களை அடைவதற்கு முயற்சிக்கலாமா? தயிர் வெண்ணெய் சாப்பிடுவதற்குப் பதிலாக, கள்ளைக்குடிக்கலாமா?

கங்காஸ்நானமாகிற தமம் சமம் என்பதை விட்டு விட்டு, துர்விஷயங்களாகிற கிணற்றின் ஜலத்தினுல் ஏற்படும் ஸ்நானம் சுகத்தைத் தருமா? மமதை கொண்ட நரர்களை ஸ்துதி செய்துவருவது சுகத்தைத் தருமா? ஹே சீதாராமா, நீங்கள்தான் எனக்கு சால சுகம்'' என்கிறுர். பல தடவைகள் துளசிதாஸரும் தியாகராஜரும் சொல்லுகிறுர்கள், இதையே சுகர் பரம ஆனந்தமடைந்து சொல்லுகிறுர் "அப்பேற்பட்ட அமலனுன ராமன் உத்தம ராஜ ரிஷியைப்போல வாழ்க்கை நடத்திக் காண்பித்தார். அந்த மஹானுபாவரால் ஸ்பரிசிக்கப்பட்டோ, அல்லது அவரை தர்சனம் செய்தோ, அவருடன்கூட ஸம்பாஷணம் செய்வதோ, கூடச் சென்ருே மஹாபாக்கியங்கள் பெற்ற அயோத்யாவாசிகளின் பாக்கியங்களின் கூட்டங்களை எவ்விதம் வர்ணிக்கக்கூடும்? மஹாயோகிகளுக்கும் கிடைக்கப் பெருத அசாதாரணமான ஸ்தானத்தை அவர்கள் அடைந்தார்களன்ருே? பரிக்ஷித், அப்பேர்பட்ட மஹாபுருஷருடைய ராம சரித்திரத்தைக்கேட்டு, அவருடைய ரூபகுண விலாஸங்களைத் தாரணம் செய்து கொண்டு, சமாதிநிலையை அடையும் மனிதன் கர்மபந்தங்களையே வேறுடன், வாசனையுடனே ஒழிக்கிருன் அல்லவோ? அப்பேர்பட்ட ராமனை வழியில் தரிசித்த அயோத்யாபுரி வாசிகளின் ஸ்துதியைக் கேள்.'' "ஸ்வாமி தாங்கள் ஆதிகாலத்தில் யக்ஞவராக ரூபமெடுத்து, பூமியை நிலைநிறுத்தினீர். பிரபோ, எங்களைப் பாரும். எங்களைக் காப்பாற்றும், அரவிந்தலோசன அம்ருதநேத்ரங்களால் எங்களைக் கடாக்ஷிக்க வேண்டும்,'' என்று மாடி உப்பரிகைகளிலிருந்து சுந்தம், புஷ்பம் அக்ஷதைகளை வீசி, பகவானை நித்ய தரிசனம் செய்த அயோத்யா வாஸிகளின் மஹாபாக்யங்களை எவ்விதம் வர்ணிக்கக்கூடும்? "கல்ப வல்லிபோல ம்ருதுவான பாதங்களை உடைய பகவான் சகல காமங்களை அனுபவித்து, அவைகளின் ஆசையால் தர்மத்தை ஸ்வகாரியத்திற்காக பிடிக்காமல், நிர்மலமான மானிட வாழ்க்கையை நமக்காக வாழ்ந்து காண்பித்தார்.'' இதையே தியாகராஜரும் அடிக்கடி சொல்லி அனுபவிக்கிறுர். "என் பிரபு ராமன் ஞானதீபத்தைப் போல ஸ்வயம் பிரகாசமாகவிருக்கிறுர். ஹேமனஸே, நான் உனக்குச் சிறந்த ரகஸ்யத்தைச் 'சொல்லுகிறேன். ராமசந்திரனுடைய கருணுந்தரங்கத்தை நன்ருகத் தெரிந்து கொள். வேதங்களில் சொல்லப்பட்ட கர்மகாண்டங்கள், பிறப்பு இறப்பாகிற காட்டில் சேதனர்களை அலையவைக்கின்றன. அவர்கள் துன்பத்தைத் தான் அடைகிறுர்கள். மனிதனுக அவதரித்த ஸ்ரீசீதாராமன் தனது நடத்தையினுல் வழி காண்பித்தான். அதுபோல நீ ஏன் நடக்காமல் உதாஸீனனுக விருக்கிருய்?'' என்கிறுர் தியாகராஜர். அதை அறிந்து கொண்ட தியாகராஜர் ஞான வழியாகச் சென்று நளினமான சீதாராம பதத்தை அடைந்தார். மேலும் சுகர் சொல்லுகிறுர், "பகவானுடைய ஸாந்நித்யத்தை அயோத்தியா வாசிகள் அடைந்தது மாதிரி நாமும் ராமனை பஜிப்பதால் பூர்ணகடாக்ஷத்தை அடையலாம்.'' இதே அபிப்ராயத்தை

தியாகராஜரும் சொல்லுகிருர், "ஹேராமய்யா, உன் அவதாரம் எதற்காக ஏற்பட்டது? நீ மஹாராஜகுலத்தில் பிறந்து ரிஷியினுடைய வாழ்க்கையை அனுசரித்தாயே." ராமன் பன்னிரண்டாவது வயதில் விஸ்வாமித்திரருடன் சென்று யாகரக்ஷணம் செய்து சீதையை மணந்தார். இருபத்தைந்தாம் வயதில் பிரபு துறவியைப்போல தண்டகைக்குச் சென்ருர். சுகரும் ராமனை மனித தர்மத்தை நடத்திக் காட்டுவதற்கே அவதரித்தார் என்று சொல்லுகிருர். அஹல்யா சாப விமோசனத்திஞல் ராமன் பதித பாவனஞக ஆஞர் என்கிருர். தண்டகாரண்யத்தில் வாழும் முனிவர்களுக்கு பிரபு அஞதரக்ஷகன் ஆஞர். பரசுராமரிடமிருந்து வைஷ்ணவதேஜஸை ராவண வதத்திற்காகப் பெற்றுக்கொண்டார். பன்னிரண்டு வருஷகாலம் சீதையுடன் தசரதரின் அயோத்தியில் போகங்களை அனுபவித்தார். மற்ற வரலாறுகள் வால்மீகியினுல் சொல்லப்பட்டவைபோல விருக்கின்றன. சபரிக்கு மோக்ஷம் கொடுத்ததைப் பற்றிச் சொல்லும்போது, சபரிக்கு தனது தர்சனத்தாலும் குருகிருபையிஞலும் நித்ய அக்னி ஹோத்ரம் செய்த மதங்கர் முதலியவர்களுக்குக் கிடைத்த வைகுண்ட பதவியை அவள் அடைந்தனள். எந்த பதத்தை ஏகாந்திகளும் ஸதா தியானித்து அடைகிருர்களோ, அந்த உத்தம ஸ்தானத்தை பிரபு சபரிக்கு அளித்தார் என்கிருர் சுகர். அவர் மீண்டும் சொல்லுகிருர், "ராமா, உனது பெயர்களை வேதங்கள் புகழ்கின்றன. உன்னுடைய சுபலக்ஷணங்களுள்ள சுபமங்களரூபத்தை பிரும்மருத்ராதிகள் ஸதா நமஸ்கரித்து ஆனந்தமடைகிருர்கள். அப்பேர்பட்ட முனிராஜவேஷத்தையும், பரம வீரச் செயல்கொண்ட உனது சரித்திரத்தையும் நான் நினைத்து நினைத்து ஆனந்தப்படுகிறேன். உனது பாதங்களில் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்," என்கிருர் சுகர்.

ஸ்ரீ பாகவதத்திலும் சீதையினுடைய அசோக வனவாஸம் தவக் கோலத்தில் இருந்ததாகவும், அதைக் கண்டு ராமன் கருணைகொண்டார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சீதையும் மலர்ந்த முகத்துடன் ராமனை தரிசித்தாள். ராமன் நடத்திய கோபநாடகமும் அக்னி பிரவேசமும் சுகரால் சொல்லப்படவில்லை. ராமன் அவளைக் கைப்பிடித்து, விபீஷணனுக்கு தீர்க்க ஆயுஸையும் லங்காராஜ்யத்தையும் கொடுத்துவிட்டு தன்னை, பதிஞன்கு வருஷங்களின் வனவாசம் முடிந்ததாகக் கருதி, அயோத்தி திரும்பிஞர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ராமசரணங்களை வர்ணிக்கும்போது சுகர் ராமபக்தியின் உச்ச நிலையை அடைகிருர். "என் பிரபு தந்தை சொல்லுக்கு கட்டுப்பட்டவராகி, அதை ஸத்யமாக்குவதற்கு ராஜ்யத்தை தியாகம் செய்துவிட்டு, தாமரை மலர் போன்ற மெல்லிய பாதங்களால் காடுகளில் அலைந்தார். அந்தக் கால்கள் சீதையின் மென்மை வாய்ந்த கைப்பிடிப்பினுல் பொறுக்கமாட்டாமல் சிவந்துபோகிவிடுமே. சுக்ரீவனும் லக்ஷ்மணனும்

காட்டில் நடந்த கால்களின் சிரமத்தை கைகளால் பிடித்து சிரமத்தைப் போக்கினுர்கள். பிராட்டியின் வசனத்துக்காக கட்டுப்பட்டு மாரீசனைத் தேடிச் சென்ற பிருந்தவன சரணங்களை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்,'' என்கிருர் சுகமஹரிஷி. அயோத்தியில் பட்டாபிஷேகம் செய்துகொண்ட ராமன் நம் எல்லோருக்கும் மங்களங்கள் செய்து கொண்டு, ரக்ஷை செய்ய வேண்டும் என்று சுகர் பிரார்த்திக்கிருர். பராசரரும் ஸ்ரீராம சரிதம் மிருத சஞ்சீவினி என்கிருர். இதையே துளசிதாஸரும் சொல்லி, ஸ்ரீ ராம மந்திரம் சஞ்சீவினி ஔஷதியைப் போல விருக்கிறது என்கிருர்.

நாராயணபட்டத்திரியும் ஸ்ரீராம அவதாரத்தை இருபது ஸ்லோகங்களில் சொல்லி முடிக்கிருர். रामस्त्वं जात: என்று கிருஷ்ணனைப் பார்த்துச் சொல்லும் நம்பூதிரிக்கு குருவாயூர் அப்பன் ராமனுக காக்ஷி அளித்ததாகச் சொல்லுகிருர்கள். தேவர்களின் பிரார்த்தனைகளுக்கு இணங்கவும் ராவணனுடைய உபத்திரவம் தாங்க மாட்டாமல், பகவான் தசரதருக்கு புத்திரகாமேஷ்டி யாகத்தின் பலனுகப் பிறக்கிருர். வால்மீகியின் காவியத்தை நம்பூதிரி பின்பற்றிக்கொண்டு போகிருர். மாரீசனை ஆஸ்ரமத்திற்கு வெளியே கொல்வதாலும், ராவணன் சீதையை அபஹரிப்பதினுலும், ராமன் வருத்தமடைந்தாராயினும், ராவணனைத் கொல்ல ஒரு உபாயம் கிடைத்ததால் மனதில் சந்தோஷமடைந்ததாக நம்பூதிரி சொல்லுகிருர். அதே ராமனுல் ஹனுமத் ஸ்நேகம் அடையப்பட்ட பொழுது, அவர் மனம் தெளிகிருர். கவலையை அடைந்தவன் புத்திமானை அடைந்தால் கவலை தீரும் என்பதை விளக்க ஹனுமாரை அடைந்த பின்பு ராமன் भृशमुदित मना:, மிகவும் மனம் சந்தோஷமடைந்தவராகச் சொல்லப்பட்டார். பிரும்மாவினுல் வாலிக்குக் கொடுக்கப்பட்ட வரத்தை நிரூபணம் செய்வதற்காகவும், அந்த வரதாதாவைக் கட்டிக் காக்கவும் அளவுகடந்த பலவானுகிய வாலியை பிரபு மறைந்து கொன்ருர். சீதைக்கு ஹனுமாரால் ஸமர்ப்பிக்கப்பட்ட கணையாழியையும், அவளால் ராமனுக்கு கொடுக்கப்பட்ட மௌளி ரத்னமாகிற சூடாமணியை ஹனுமார் எடுத்துவருகிருர். விபீஷண சரணுகதி, ஸேதுபந்தனம் ஆகியவற்றையும் துளசிதாஸரைப் போல வர்ணிக்கிருர். முதல்நாள் பதினுன்கு யோசனை தூரமும், இரண்டாவது நாள் இருபது யோசனை தூரமும், மூன்ருவது நாள் இருபத்து ஒன்று யோசனை தூரமும், நான்காம்நாள் இருபத்திரண்டு யோசனை தூரமும், ஐந்தாம் நாள் இருபத்து மூன்று யோசனை தூரமுள்ள அணையைக் கட்டினுர் என்று அனந்தராம தீக்ஷதர் சொல்லியிருக்கிருர். ஒரு யோசனை பத்து மைல் நீளமுள்ளது. ராமனுடைய ஸேது நூறுயோசனை தூர நீளமும், பத்து யோசனை அகலமுமுள்ளதாகவிருந்தது என்கிருர். நளன் லங்கையிலுள்ள ஸுவேலம் என்கிற மலையை பிடிப்பாகக் கொண்டு, தன் பிதாவான விஸ்வகர்மாவைப் போல திருடமான அணையைக் கட்டி, பிறரால் சாதிக்கமுடியாத காரியத்தைச் செய்துமுடித்ததாக வால்மீகி

பகவான் சொல்லுகிருர். இதையே தியாகராஜர், ராமாவதாரத்தில் ஸேதுவும், கிருஷ்ணவதாரத்தில் கீதையும் சிறந்த பொக்கிஷங்களாக விளங்குகின்றன என்கிருர். "ஸேதுபந்தனத்தைச் செய்த ராமா, நீ என் ஸம்சாரதாபத்தையும் போக்கி, என்னையும் கட்டிக் காக்க வேண்டும்" என்று தியாகராஜர் அடிக்கடி வேண்டுகிருர். ஸேது தரிசனம் புத்ரபிரதிபந்தக தோஷம், பிரும்மஹத்தி தோஷம், மஹத் தான புண்யம், பகவான் சங்கரருடைய அருள், சம்சார தாபங்களி லிருந்து விடுதலை அடைதல் ஆகிய பலன்களைக் கொடுப்பதாக ஸ்ரீபாகவதத்தில் சுகர் பெருமையாகச் சொல்லியிருக்கிருர்.

ராம ராவண யுத்தம் நம்பூதிரியினுல் மூன்று ஸ்லோகங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இந்திரஜித் வதம், கும்பகர்ண வதம், கருட ஆகமனம், நாகபாச விமோசனம், ஹனுமார் ஒஷதிகிரியைக் கொண்டு வருதல், இந்திரன் மாதலியை தேருடனும் கவசத்துடனும் அனுப்பித் தல், ராவணன் பிரும்மாஸ்திரத்தினுல் மரணமடைதல், சீதையின் அக்னி பிரவேசம், ராமசீதா பட்டாபிஷேகம் ஆகியவற்றை வர்ணிக்கிருர். அதைப்போலவே துளசிதாஸரும் ராம சரிதமானஸத்தில் அருளியிருக் கிருர். ஆனுல் சீதையின் அக்னிபிரவேசத்தில் துளசிதாஸர் ஒரு மாறுதலை உண்டுபண்ணி யிருக்கிருர். ராமன் சீதையுடன் மாயா நாடகம் ஆடநினைத்து, ராவணவதத்திற்காகவும், தேவகாரியத்திற் காகவும் நிஜசீதையை அக்னியில் ஒளித்துவிட்டு, மாயா சீதையை ராவணன் சீதையை அபஹரணம் செய்வதற்கு முன்பே பிரகடணப் படுத்தினுர். ஆகையால் அக்னி பிரவேசத்தில் மாயை சீதை எரிந்து போய், நிஜசீதை மீண்டும் பிரகடணப் படுத்தப்பட்டாள் என்று துளசிதாஸர் சொல்லுகிருர். இதற்கு ஆதாரம் வால்மீகி ராமாயணத் திலோ, பாரதத்திலோ, ஸ்ரீபாகவதத்திலோ, நாராயண பட்டத்திரியினுல் இயற்றப்பட்ட நாராயணியத்திலோ காணப்படவில்லை. ஆனுல் தியாக ராஜர் துளசிதாஸரைப் பின்பற்றி "சீதம்மா மாயம்மா" "சீதையை என் தாயார்" என்கிருர். நாராயண நம்பூதிரி பிரபு ராமன் பதினுயிரத் திற்கு அதிகமான வர்ஷங்கள் சீதையுடன் சுகமாக அயோத்தியில் வசித்தார் என்று சொல்லுகிருர். இந்த கால அளவு துளசிதாஸரால் வ்யக்தமாகச் சொல்லப்படவில்லை. துளசிதாஸரால் சொல்லப்படாத சீதையின் பரித்யாகத்தை பட்டத்திரி சொல்லியிருக்கிருர். ஆகவே சீதையுடன் பதினுயிர வர்ஷங்கள் இல்லற வாழ்க்கையை நடத்திய ஸ்ரீராமன் அவளைப் பிரிந்து பிரும்மசார்ய வாழ்க்கையில் ஓராயிரம் வர்ஷங்கள் வாழ்ந்துவந்தார். வனவாச காலத்தில் பதினேரு வர்ஷங்கள் முனிவர்களுடனும், மற்ற மூன்று வர்ஷங்கள் கமனு கமனங்கள், யுத்தம் முதலியவைகளில் கழிந்ததாகவும், அந்த பதினேரு வர்ஷங்களும், பதினேராயிரம் ஆண்டுகளும் ஸாது சங்கமத்தினுல் ராமன் ராஜ்யபரிபாலனம் செய்ததாக அறியவேண்டும் என்று அனந்த ராமதீக்ஷிதர் சொல்லியிருக்கிருர். வால்மீகி பகவானுடைய வசனம் ராமன்

பதினோராயிரம் வர்ஷங்கள் ஆண்டதாகவிருக்கிறது. ஸ்ரீராமன் பதின்மூன்று வருஷங்கள் சீதையுடன் வனவாசம் செய்தார். ஒரு வருஷம் சீதையைவிட்டுப் பிரிந்திருந்தார். இந்தக் கணக்கு அளவுகள் துளசிதாஸரின் மானஸராமாயணத்தில் காணப்படவில்லை. நாராயணபட்டத்திரியோ சீதையைப் பரித்யாகம் செய்ததுபற்றி வருத்தப்பட்டுக்கொண்டு ஸ்ரீராம அவதாரத்தின் மர்ம ரஹஸ்யங்களைச் சொல்லுகிறார். "காமத்திலும் தர்மத்திலும் அதிகமான பற்றுதலால் யேற்படும் பிரிவின் துன்பம், குற்றமற்றவர்களையும் தியாகம் செய்வதும் நிச்சயமாக வாழ்க்கையில் ஸம்பவிக்கும், என்று மனிதர்களுக்கு விளக்கவேயல்லவா தங்களுடைய இந்த மனுஷ்ய அவதாரம் யேற்பட்டது? இல்லாவிட்டால் சுகத்தையும் துக்கத்தையும் ஸமமாகப் பாவிக்கிற ஆத்மா ராமனாகிற தங்களுடைய மனத்திற்கு எவ்விதம் விசாரம் ஏற்படும்? ஹே சக்ரபாணி, சுத்த ஸத்வமான மூர்த்தியே, குருமூர்த்தியே" என்று சொல்லி நமஸ்கரிக்கிறார்.

ராமனுடைய சீதையின் பரித்யாகம் ராஜநீதியை ஒட்டியதாகும். தன் செயலால் உலகம் நற்செயல்களை உடையதாக ஆகவேண்டும். அரசன் எப்படியோ, மக்களும் அப்படி என்கிற பழமொழி உண்மையாகிவிடுகிறது. ஆகையால் உலகத்திற்காகவே ராமன் சீதையைத் தியாகம் செய்தான். இதன் உண்மையை தேசாபிமானிகள் உணரவேண்டும் என்கிறார் அனந்தராமதீக்ஷதர். இது ராமனுக்கு மஹத்தான அப கீர்த்தியை விளைவித்தாலும், பூர்ணகர்ப்பிணியான சீதையை பரித்யாகம் செய்தது, அவளுடைய பாபத்திற்காகவே என்று பாத்மபுராணம் சொல்லுகிறது. அவளால் என்ன பாபம் செய்திருக்கக் கூடும் என்று சொல்லப்படும் போது, "சீதை சிறுவயதில் தம்பதிகளான ஆண்பெண் கிளிகளைப் பிரித்தபடியால், அவளுக்குப் பெண் கிளியின் சாபம் ஏற்பட்டது." அதுபோல அம்பரீஷனுடைய கதையில் துர்வாஸரால் பகவானுக்குக் கொடுத்த சாபத்தினால், ராமனும் சீதையும் பிரிந்துவாழ நேர்ந்தது என்று பாத்ம புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பவபூதியும் உத்தர ராமசரித்திரத்தில் "யதாஸ்திரீணாம் ததாவாசாம் ஸாதுத்வே துர்ஜனே ஜன," ஸ்திரிகளுடைய நற்செயலிலும் பேச்சின் சிறப்பிலும் உலகம் ஏதாவது குற்றத்தைச் சொல்லும், என்று கூறியிருக்கிறார். இதன்படி புண்யம் பாபம் ஆகிய இரண்டும் உள்ளவர்கள்தான் பூமியில் கிலேசங்கள், துக்கங்களை அனுபவிப்பதற்கு பிறக்கிறார்கள். இவர்களைப் பற்றி உலகம் தூற்றாமலிருக்காது. விவேகிகள் சந்தோஷம் துக்கம் ஆகியவைகளில் சந்தோஷமோ வருத்தமோ அடையாமல் ஸ்ரீபகவான் ஒருவரையே பஜிப்பதில் மனத்தைச் செலுத்துகிறார்கள். சுகரும் "ஸ்ரீராமன் மாறு வேஷத்துடன் ஜனங்களின் அபிப்பிராயத்தை அறிந்துகொள்வதற்குச் சென்றார்," என்று சொல்கிறார். ஸ்ரீராமன் அச்சமயம் கேட்ட வசனங்களால் அறிவிழந்து, ஜனங்கள் எது வேண்டுமானாலும் சொல்லுவார்கள் என்று நினைத்து, அந்த உலக அபவாதத்திற்குப் பயந்து மஹாராஜாவான ஸ்ரீராமச்சந்திரன் சீதையைத் தியாகம் செய்தார் என்று சுகர்

சொல்லுகிருர். ஸ்ரீராமனைவிட்டுப் பிரிந்த சீதை குசலவர்களை வால்மீகி ஆஸ்ரமத்தில் பெற்ருள். வால்மீகியினுல் ஸ்ரீராமனுடைய காவ்யம் இயற்றப்பட்டது. ராமனைவிட்டுப் பிரிந்த சீதை பரமதுக்கத்தை அனுபவித்தாள். அந்த துக்கத்திலும் சீதை தனது பதியாகிய ஸ்ரீராமனுடைய கதாம்ருதத்தைப் பருகி, உயிரைக் காப்பாற்றிக் கொண்டாள். ஒருசமயம் வால்மீகி பகவான் சீதையை ஏற்றுக்கொள்ளும்படி ராமனை கட்டளையிட்டார். ரிஷிகளின் வார்த்தைகளுக்கு கௌரவம் கொடுத்தும் அதன்படி நடந்து காட்டும் பிரபு சம்மதித்தார். அப்பொழுது பூமிதேவி சீதையை தன்னிடம் வரும்படி அழைத்தாள். பூமிபிளந்தது. அதற்குள் தேவி பிரவேசித்துவிட்டாள். அதன்பிறகு ராமன் யமதர்ம ராஜனையும், துர்வாஸரையும் சந்தித்தார். துர்வாஸருடைய வார்த்தையினுல் லக்ஷ்மணனை ஸ்ரீராமன் பரித்யாகம் செய்தார். துர்வாஸர் ஸ்ரீராமனிடம் சொல்லிய வார்த்தைகளை நினைத்துப் பார்த்தாலே நமக்கு பயமாகவிருக்கிறது. ஆனுல் ஸ்ரீராமன் எந்த ஆபத்திலும் தர்மத்தை விடாத தர்மதுரந்தரராகவிருந்தார். வால்மீகி ராமாயணத்தில் துர்வாஸருடைய வசனங்களும் நினைக்கத்தக்கது. "ராமா பிரதிக்ஞையை மீருதே. தர்மம் நஷ்டமானுல் மூவுலகங்களும் அழிந்துவிடும். மூவுலகத்தைக் காப்பாற்றுவதால், உலகத்தைக் காப்பாற்று". தர்மத்தை மீறவிரும்பாத ராமன் சீதையைவிட்டதுபோல, லக்ஷ்மணனையும் தியாகம் செய்தார். அதனுல் நம்பூதிரி ராமனை "சொன்னபடி நடந்துகொள்ளுபவனும், தர்மத்தைக் காப்பதிலும் லக்ஷ்மணனைவிட உலகம் மிகப்பெரியதென்று காட்டுபவன் ஸ்ரீராமன்," என்று சொல்லியிருக்கிருர். வால்மீகிபகவானும் இதைச் சொல்லும்போது "விஸர்ஜயே த்வாம் ஸௌமித்ரே மாபூத்தர்ம விபர்யய: த்யாகோவதோவா விஹித: ஸாதூனும் தூபயம் ஸமம்," என்கிற வார்த்தைகளால் ராமனுடைய தர்மவிரதத்தைப் புகழ்ந்திருக்கிருர். இதையே பெரியவாச்சான் பிள்ளை வேறுவிதமாக புகழ்ந்து சொல்லியிருக்கிருர். "பிராட்டியை விட்டுப் பத்தாயிரம் ஆண்டுகள் பிரிந்த பகவான் லக்ஷ்மணனை விட்டு பகல் முகூர்த்த நேரம்கூட பிரிய ஸம்மதிக்கவில்லை." பகவான் தனதுயிருப்பிடத்திற்கு போகும்போது அயோத்தியில் உள்ள ஸரயுநதிக் கரையில் பிரவேசித்த கட்டம் வால்மீகி பகவானுல் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அயோத்திவாசிகள் பிரபுவை வேண்டி தங்களையும் அழைத்துச் செல்லும்படி வேண்டினுர்கள். "தாங்கள் எங்கு சென்ருலும் நாங்கள் கைவிடத் தகாதவர்களானுல் எங்களையும் அழைத்துச் செல்லவேண்டும். இது எங்களுடைய பரம பிரியம். இதுவே எங்கள் உள்ளத்தில் உள்ள அன்பு."

"கசசந்த மனுகச்சாம: யத்ர ராமகமிஷ்யஸி
பௌரேஷூ யதிதேப்ரீதி: யதிஸ்நேஹோ ஹ்யனுத்தம:
ஸபுத்ரதாரா: காகுத்ஸதத் ஸமாகச்சாம் ஸத்பதம்"

—உத். காண். 107-12-13.

ராமன் "சரி" என்று ஒப்புக்கொண்டார். விபீஷணனை மட்டும் நிறுத்தி அவனிடம் சொன்னார். "நீ லங்கையில் மக்கள் உள்ள மட்டும், பூமி உள்ள மட்டும், உலகில் என் கதை உள்ள மட்டும் மக்களை நீதி வழுவாமல் அரசாளக் கடவாய், மேலும் இக்ஷ்வாகுகுலத்தினரால் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீரங்கநாதனை ஆராதித்து வரவேண்டும்" என்று கூறினார். ஹனுமாரைப் பார்த்து "உலகில் என் கதை உள்ளவரை மிக்க சந்தோஷத்துடன் நீ வசித்து வரக் கடவாய்," எனக்கூறி, ஹனுமார் அங்கதன், ஜாம்பவான், மைந்தன், த்விவிதன் ஆகிய ஐவரையும் வாழ்ந்து வரும்படி அனுக்ரஹித்தார். அப்பொழுது ஹனுமார் "ஸ்வாமி, தங்கள் உத்திரவின்படி, தங்களுடைய புனிதமான கதை பூலோகத்தில் உள்ள வரை இங்கே இருந்து சிரவணம் செய்து வருவேன்," என்று பதில் சொன்னார். பிறகு ஸ்ரீராமன் அயோத்தியிலுள்ள எல்லா பிராணிகளுடனும் சுக்ரீவனுடனும் மற்ற வானரர்களுடனும் விபீஷணனைத் தவிர்த்து, மற்ற ராக்ஷஸர்களுடனும் ஸரயு நதியில் இறங்கி ஸ்ரீவைகுண்டம் சென்றார். யத், தத், பதமனுத்தமம் என்று விஷ்ணுஸஹஸ்ர நாமத்தில் சொல்லியபடி, விஹாயஸகதி, சாந்தி: பராயணம் என்கிற சொற்களுக்குப் பிரமாணமாக பகவான் கருணை உள்ளத்துடன் அயோத்யாபுரி வாசிகளுக்கு மஹாசுக்ருதமாகிய தன்னுடைய நித்ய சேவையை அவர்களுக்கு அயோத்தியிலும் கொடுத்து, முடிவில் அவரையே உபாயமாகவும் அவர்களுடைய பரபக்தி, பரஞானம், பரமபக்திக்கு அனுசரணையாக அந்த ஏகாந்த பக்தியின் முடிவான நிலையாகிற பரமபதத்தையும் அளித்தார். அப்பேர்பட்ட மஹாபாக்கியத்தை அடைந்த அயோத்யா வாசிகளுக்கு பிரபு பகவத் பாகவத தர்மத்தை உபதேசித்தார். அந்த உபதேசங்கள் துளசிதாஸரால் ஸாங்கோபாங்கமாக உத்திர காண்டத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் அவர்களால் அடையப்பட்ட வைகுண்ட ராமபதத்தைப் பற்றி அவரால் ஒன்றும் விஸ்தாரமாகச் சொல்லப்படவில்லை.

ஸ்ரீதுளசிதாஸர் பகவானுடைய உபதேசங்களைப் பலவிதமாக பல சந்தர்ப்பங்களில் நமக்கு போதிக்கிறார். கிஷ்கிந்தா காண்டத்தின் இறுதியில் பகவான் நாரதருக்கு பக்தபாகவத லக்ஷணங்களையும், ஸ்ரீராம நாமத்தின் பெருமையையும் விளக்குகிறார். ஆரண்ய காண்டத்தில் பஞ்சவடியில் பிரபு லக்ஷ்மணனுக்கு பாகவத தர்மத்தை விரிவாக உபதேசிக்கிறார். உத்தர காண்டத்தில் பிரபு ஸனகாதி மஹரிஷிகளால் வந்தனம் செய்யப்பட்ட பின்பு, பரதலக்ஷ்மண சத்ருக்ன ஹனுமாருக்கு மீண்டும் பக்த பாகவத லக்ஷணங்களை உபதேசிக்கிறார். அதன் பிறகு, பிரபு அயோத்தி ஜனங்களுக்கு சமம்தமம் இத்யாதிகளின் பெருமைகளையும், யோக சாஸ்திரத்தின் ரஹஸ்யங்களையும் விளக்கி, ராமபக்தியையும் விவரித்துச் சொல்லி, பாகவதப் ப்ரேமையின் அவசியத்தையும் எடுத்துச் சொல்லுகிறார். அதே உத்தர காண்டத்தில்

பிரபு சுக்ரீவ வானராதிகளுக்கு விடை கொடுத்து அனுப்பும்போது, ஸ்ரீராமபக்தியின் பெருமைகளை விளக்கிச் சொல்கிறார். இந்த உபதேசங்கள் பகவானுடைய ஸ்ரீமுகமண்டலத்தால் நமக்கு துளசிதாஸரால் அளிக்கப்பட்டவை.

கம்பன் எழுதிய ராமாயணமும் ஸ்ரீராமனை, பிரபு துளசிதாஸரைப் போல பரத்வமாக கொண்டு, அவரை நாராயண அம்சமாகக் காட்டி எழுதப்பட்டிருக்கிறது. கம்பனுடைய கதையும் வால்மீகி ராமாயணத்தை அனுசரித்துச் செல்லுகிறது. ஆனால் சில விஷயங்களில் அவராலும் மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. விஷ்ணுபகவான் ராவண ஸம்ஹாரத்திற்கு மானிட வேஷம் தாங்கினார். சாதாரண மனிதனைப் போல பூமியில் சஞ்சரித்து, சீதையைத் தேடும் விஷயத்தில் வானரர்களை சகாயமாகக் கொண்டு லங்கையை அடைந்து, ராவணனைக் கொன்றார். ராமனுடைய பரத்வம் தேவர்களாலும் சரபங்க முனிவராலும் பிரதியக்ஷமாக வெளியிடப்படுகிறது. ஹனுமார் சுக்ரீவனிடம் ராமனைப்பற்றிச் சொல்லும்போது, விஷ்ணுவே நேரில் வந்திருப்பதாகச் சொல்லுகிறார். சீதையைப் பற்றி நினைக்கும் போது தர்மமே உருவெடுத்து அவளைக் காப்பாற்றினதோ அல்லது ஜனகரின் சுக்ருதங்கள் தான் அவளுடைய பதிவிரதை விரதத்தைக் காப்பாற்றியதோ என்று ஹனுமார் எண்ணமிடுகிறார். ராவணனுடைய ஐஸ்வர்யங்கள் சீதையின் திடமான கற்புக்கு எம்மாத்திரம்? அண்ணல் ராமன் அவளை அந்த ஸ்திதியில் பார்க்கவில்லை என்று வருத்தப்படுகிறார். கற்பின் ரத்னத்தைக் கண்டார். பெரும் குலம், மாபெரும் க்ஷமையாகிற பொறுமை, பதிவிரதை தன்மையில் கல் நெஞ்சு ஆகிய மூன்றும் ஒருங்கே களித்தாடக் கண்டார். அவளுடைய கண்களிலும், எண்ணங்களிலும், உதட்டிலும் விரஹதாபங்களினால் துடிக்கும் வேதனைகளிலும் ராமனையே கண்டார். ராமனுடைய வீரத்தைவிட அவளுடைய நெஞ்சின் உறுதியையும் தர்மத்தின் பலத்தையும், ராமனுடைய அம்புகளைக் காட்டிலும் அதனுடைய தீக்ஷ்ணயமானது மிக்கதேஜஸ் வாய்ந்ததாகக் கம்பர் கண்டார். சீதையினுடைய கற்பு ராமனுக்காகவா, ஜனகரின் குலத்தின் சிறப்புக்களுக்காகவா, அவளுடைய ஆத்ம திருப்திக்காகவா என்று தனக்குள் வினவிய ஹனுமார் தனக்குள்ளே சமாதானத்தை அடைகிறார். ஆம், தர்மத்தின் பேரில் காட்டிய விஸ்வாஸத்தையும், தனது ஆத்ம கௌரவத்திற்காகவும் காட்டிய வீரத்தனத்தின் முன்பு, ராவணனுடைய சொந்த பலமோ, படை பலமோ, ஐஸ்வர்ய பலங்களோ எம்மாத்திரம்? ராமனையும் சீதையையும் அடைவதற்கு ஹனுமாரைவிட வேறு சிறந்த குரு எங்கு கிடைக்கும்? இவ்விதமாக விவரணைகள் ஹனுமாருடைய தீர்க்க ஆலோசனைகள் ஒன்றும் துளசிதாஸருடைய சுந்தர காண்டத்தில் காணப்படவில்லை. துளசிதாஸர் இங்கே ஒரு சிறிய மாறுதலை உண்டு பண்ணியிருக்கிறார். லங்கையில் தேடுபவரான ஹனுமான் துளசிதளம் கொண்ட நந்தவனம், ராம சரிதத்தின் சித்திரங்கள் கொண்ட அடை

  

யாளங்களால் விபீஷணனுடைய மாளிகையை 'அடையாளம் தெரிந்து கொண்டு, அவருடைய கிரஹத்தில் விப்ரரூபத்தில் புகுந்து, ஸாதுவாகிற விபீஷணனிடம் தன்னை ராம பக்தனாக அறிமுகப்படுத்திக் கொண்டு, அவன் மூலம் சீதையின் இருப்பிடத்தை அறிகிறார். விபீஷணனுக்கும் ஆறுதலாக ராமனுடைய பரந்த உள்ளத்தையும் சரணாகத ஸம்ரக்ஷகம் என்கிற விரதத்தின் மகிமையையும் அவனுக்குச் சொல்லி, ராக்ஷஸ வீரனை தனது பக்கம் சேர்த்துக் கொள்ள அடிக் கோல் உதவினார். இந்த ஹனுமாரின் விபீஷண சந்திப்பு எந்த ராமாயணத்திலும் துளசிதாஸரைத் தவிர சொல்லப்படவில்லை.

ஹனுமாரின் பிரபுத்வத்தையும், மேன்மைகளையும் பலவாறு பல பேர்களின் வாயிலாக கம்பர் தலைக்கட்டுகிறார். ஆனால் துளசி ராமாயணத்தில் ஹனுமார் ராமபிரானின் சிறந்த சேவகனாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறார். அவருடைய வீரச் செயல்களையும் பிரபுத்வங்களையும், அவரால் ராமனிடமும் ராம பக்தர்களிடமும் காட்டப்பட்ட பக்திதாஸ உள்ளம் வென்றுவிட்டது. உதாரணமாக கம்ப ராமாயணத்தில், மால்யவான் என்கிற அரக்கன் ராவணனிடம் ஹனுமார் மூன்று மூர்த்திகளுடன் (மும்மூர்த்திகள்) நான்காவது கடவுளாக விருக்கவேண்டும். அவரைத் தவிர ஒஷதி மலையை யாரால் மேருவிலிருந்து கொண்டு வரமுடியும்? வேதங்களில் சொல்லப்பட்ட மூன்று கடவுளைத் தவிர ஹனுமாரைச் சேர்த்து கடவுள் நான்காக இருக்கவேண்டும் என்று கம்பர் சொல்லுகிறார். குருவுக்கு அந்தப் பட்டம் பொறுத்தமானதல்லவா? லக்ஷ்மணனுக்கும் ராமனுக்கும் வானர வீரர்களுக்கும் சீதைக்கும், ஏன், சொல்லப்போமாகில், ராமாயண கதாவிருத்தாந்தத்திற்கே ஹனுமாரே உயிர் கொடுத்த மஹானுபாவனல்லவா? அவரைக் கடவுள் என்று சொல்வது மஹா பொருத்தமாகும்.

இந்திரஜித்தும், ராமனும் லக்ஷ்மணனும் நாகபாசம், பிரும்மாஸ்திரம், நாராயண அஸ்திரங்களினால் பாதிக்கப் படாமல் விடுதலை அடைந்ததிலிருந்து, இவர்கள் நாராயண அம்சமாகத் தான் இருக்க வேண்டும் என்று யூகிக்கிறான். கருடனும் ஆகாசத்திலிருந்து ராமனிடம் அபார அன்பைக் காட்டி நாகபாசத்திலிருந்து விடுவித்தான். ராவணனுக்கு ராமனுடைய பரத்வத்தை மால்யவான், ஹனுமான், மாரீசன், இந்திரஜித், விபீஷணன் ஆகியவர்கள் உபதேசிக்கிறார்கள். இதையே துளசிதாஸரும் பின்பற்றியிருக்கிறார். இவர்களைத் தவிர புலஸ்தியரும் அங்கதனும் உபதேசிப்பதாக துளசிதாஸர் விவரமாகச் சொல்லுகிறார். அவர்களின் வார்த்தைகளை லக்ஷ்யம் செய்யாத ராவணன் யுத்த களத்தில் அடிக்கப்பட்டு நிராயுதபாணியாக கம்பனால் லங்கைக்கு அனுப்பப்படுகிறார். அப்பொழுது ராமன் அவனைக் கொல்லாமல் தர்மத்தில் மஹா விஸ்வாஸம் வைத்து, 'ராவணனுக்கு வீர முழக்கம் செய்கிறார். "சீதையை என்னிடம் ஒப்பித்துவிட்டு, தேவர்களுக்கு ஸ்வர்க்கத்தின் சிம்மாஸனத்தைக் கொடுத்து, விபீஷணனுக்கு அரச

பட்டாபிஷேகம் செய்தால், என் பாணங்களிலிருந்து நீ தப்பலாம்'' என்கிறார். இந்த மாதிரி நிபந்தனைகள் துளசிதாஸருடைய ஸ்ரீராமனால் போடப்படவில்லை. ஸ்ரீராமனுடைய பரத்வ மகிமைகளைக் கண்ட கம்பருடைய பரசுராமர் ''ஆம், இந்த வைஷ்ணவ வில்லை சுலபமாக வளைப்பதைப் பார்த்தால் கட்டாயம் நீ விஷ்ணு பகவானாகத்தான் இருக்கவேண்டும்,'' என்கிறார். லக்ஷ்மணனும் இந்திரஜித்தை வதைக்கும் பாணத்தைப் பூட்டும் சமயம், ''என் பிரபு ராமன் நாராயணரே அவதாரம் எடுத்து வந்திருந்தார், வேதங்களும் பிராம்மணர்களும் அவரையே புகழ்கின்றன என்பது சத்தியமானால், இந்த அஸ்திரம் இந்திரஜித்தின் தலையை அறுக்கட்டும்,'' என்று சொல்லிவிடுகிறான். விபீஷணனும், வாலிவதம், சப்தசால விருக்ஷங்கள், விராதன், கரதூஷணாதிகளின் வதம் ஆகியவைகளை ஆதாரமாகக் கொண்டு, நாராயணன் ராமரே என்று நிரூபித்துச் சொல்கிறான். இதையே சுகசாரணாதிகள் துளசிதாஸரின் ராவணனுக்கு உபதேசிக்கிறார்கள். துளசி பிரபுவின் கும்பகர்ணனும் இவ்விதமே அபிப்ராயப்படுகிறான். அதனால் யுத்த களத்தில் கும்பகர்ணன் விபீஷணனை ஆசீர்வாதம் செய்கிறான். ''பிள்ளாய், நீ செய்தது தான் சரி. ராவணன் கால வசத்தை அடைந்தான். அவன் ஒருவருடைய பேச்சையும் கேட்க மாட்டான். நீதான் தன்யன். சீதாராம சரணங்களை அடைந்த நீ ராக்ஷஸ குலத்திற்கே மணி பூஷணமாக ஆவாய். நீ சகல ராக்ஷஸ குலத்தையும் சுகம் அடையச் செய்த பாக்யவான். நீ ராமனை அடைந்தாய். நானும் ராவணனும் எங்களது துஷ்கர்மங்களால் மிருத்யுவின் வசமடைந்தோம். உனக்கு என்னுடைய பரிபூர்ண ஆசீர்வாதங்கள். க்ஷேமமாக போய் வா'' என்று சிரஞ்சீவியாக அவனை வாழ்த்துகிறான். ஆனால் ராவணனிடம் அவன் இவ்விதம் விவரித்துச் சொல்லவில்லை. யுத்தம் நேர்ந்து விட்டது, தமையன் பெரும் கஷ்டத்திலிருக்கிறான் என்கிற சஹோதர உணர்ச்சி மேலோங்கி, கும்பகர்ணன் யுத்த களத்திற்கு வருகிறான். துளசிதாஸரின் கும்பகர்ணன் ராமனைப் பெரும் கடவுளான நாராயண அம்சமாக நினைக்கிறான். தனது சஹோதரனாகிற ராவணனுக்குச் சொல்லி, கும்பகர்ணன் மீண்டும் சொல்லுகிறான். ''அண்ணா, இப்போது காலம் கடந்துவிட்டது. நமது பாக்ய விசேஷத்தால் அவனே வந்து நம்மை ஆட்கொள்ள வந்து விட்டான். நாம் யுத்தம்தான் செய்திட வேண்டும், நாம் அவனிடம் லயமடைவோம்,'' என்று சொல்லி யுத்தத்திற்குச் செல்கிறான். கம்பருடைய கும்பகர்ணனும் துளசிதாஸருடைய கும்பகர்ணனும் ஒருமிக்க ராமனிடம் அதிக அன்புள்ளவர்களாகவிருக்கிறார்கள். யுத்த களத்தில் கும்பகர்ணனின் கால்கள், கைகள் வெட்டப்பட்டு, அவன் பூமியில் விழுந்திருக்கும் சமயம் கம்பரின் வசனங்களால் அவனுடைய வார்த்தைகள் நினைக்கத் தக்கது. ''ஆயிரம் ராவணர்கள் வந்தாலும் என் பிரபுவான ராமன் முன்பு நின்று ஜயிக்க முடியாது.'' ராமனைப் பார்த்து, கும்பகர்ணன் சொல்கிறான், ''சிபியின் குலத்தில்

  

பிறந்த ராமா, என் தம்பி விபீஷணனை சதா காப்பாற்று. உன்னை வந்தடைந்திருக்கிறன். ராக்ஷஸ குலத்தில் பிறந்தபோதிலும், அவனுடைய மனம் ராக்ஷஸனைப்போல வில்லை. ரிஷிகளும் தேவர்களும் பரிகாசம் செய்யாமல் இருப்பதற்கு, என் முண்டமான சரீரத்திலிருந்து தலையை அறுத்துவிடு,'' என்கிறன். ராமனும் அவ்விதமே செய்கிறர். கும்பகர்ணனை பக்தனுகவும் கம்பர் சித்தரிக்கிறர். வாலியும் நாராயணரின் அம்சமாக ராமனை நினைக்கிறன். இதுவே துளசிதாஸர் கம்பர் ஆகியவர்களின் மன ஒற்றுமை. கம்பரின் வாலி நினைக்கிறன், "ஒரே அம்பினுல் சகல கர்மவாசனைகளையும் தொலைத்து உத்தம கதியை அடைய வைக்கிறன்.'' "வேதங்கள், ரிஷிகள், பிரும்மா முதலானவர்கள் புகழும் நாராயணன் தர்மத்தை ஸ்தாபிப்பதற்காக பூமியில் அவதரித்திருக்கிறர். அவரையே நாம் எல்லோரும் தியானம் செய்கிறேம்,'' என்று கம்பரின் வாலி நினைக்கிறன். வாலி சுக்ரீவனுக்குப் புத்திமதி கூறுகிறன் "ராமனை மறந்துவிடாதே, நன்றியுடன் பூஜித்து சாஸ்வதமான பதத்தை அடை.'' ஆனுல் துளசிதாஸரின் சுக்ரீவனே ஹனுமானுடைய பிரபாவத்தினுல் ராமபக்தனுகவே ஆதியிலிருந்து விளங்குகிறன். மயனுடைய புத்ரியான ஸுவர்ண பிரபையின் வசனப்படி, சுக்ரீவன் ராமனுடைய வருதலுக்கு வெகு நாட்களாக தவத்துடன் காத்திருக்கிறன். இந்த விடத்தில் துளசிதாஸர் ஸஹஜமாக ராம பக்தர்களிடம் காட்டப்படும் ஆஞ்சநேயருடைய உதார ஹ்ருதயத்தைக் காண்பிப்பவராக, ஆஞ்சநேயரால் சுக்ரீவனுக்கும் அனுக்ரஹம் வேண்டப்படுகிறது. தாரையின் வசனங்களும் இதையே ஒலிக்கின்றன.

கம்பருடைய அங்கதனும், துளசிதாஸருடைய அங்கதனும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகத் தோன்றுகிறர்கள். துளசிதாஸர் அங்கதனுடைய பக்தி பிரபாவத்தை வர்ணிப்பதில் உச்சநிலையை அடைகிறர். உத்தர காண்டத்தில் ராமனை விட்டுப் பிரியும்போது, சுக்ரீவாதி எல்லோரையும்விட அங்கதனே தனக்கு நேரப் போகும் ராமவிஸ்வேஷ துக்கங்களை வாய்விட்டு கதறி ராமனிடம் நிவேதனம் செய்கின்றன். "பிரபு, உம்மைவிட்டு எனக்கு எந்த கார்யம் பெரிதாகவிருக்கக்கூடும்? நான் சதா தாங்கள் நியமிக்கும் காரியங்களைச் செய்துசொண்டு இன்புற்று வாழ்வேன்,'' என்கிறன். ராமனுடைய பரத்வ மகிமைகளை சரிவர உணர்ந்த அங்கதன் ராவணனுக்கு நீதி உபதேசங்கள் செய்கிறன். துளசிதாஸர் ஹனுமத் பிரபாவத்தைப்போல, அங்கதனுடைய மகிமைகளையும் உள்ளன்பையும், வெகு அழகாகச் சொல்லுகிறர். அங்கதன் ஹனுமாரிடம் பிரபு ராமனுக்கு தன்னைப்பற்றி அடிக்கடி நினைவு படுத்த வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறன். இது மாதிரி கம்பரின் அங்கதனும் நினைத்திருக்கவேண்டும். வாலியின் வசனங்களாகிற இவைகளே அதை நிரூபிக்கின்றன. "ராமன் ஸர்வாந்தர்யாமி, சுக்ருதங்களால் நேரில் வந்து எனக்கு நல்ல கதி கொடுக்க வந்திருக்கிறன். ஆதிபொருள் உருவெடுத்து, நம்முன் வந்திருக்கிறது. மாயை நிரம்பிய

பிறப்பு இறப்புக்களிலிருந்து விடுபட அவரை ஆராதனம் செய். அவர் எனக்கு மரணம் கொடுத்தார் என்று நினைத்துவிடாதே. உனது உத்தம கதிக்கு நீ அவரைப் பணிந்து, யுத்தத்தில் சகாயம் செய்து அவருடைய ப்ரீதியை சம்பாதித்துக்கொள்,'' என்று கம்பரின் வாலி தனது புத்ரனுகிற அங்கதனைப் பார்த்துச் சொல்கிருன். வாலி ஸ்ரீராமனைப் பார்த்து "அங்கதன் தர்மத்தை நேசிக்கிருன். அதனுல் அவனை ரக்ஷி,'' என்று கேட்டுக்கொள்கிருன். இவைகளிலிருந்து வாலி ஸௌஹ்ருதயத்துடன், ராமனின் வில்லால் அடிபட்டும் இருக்கிருன். ஆனுல் சுக்ரீவனே பயந்த ஸ்வபாவமுள்ளவன். இதையே கம்பரும் துளசிதாஸரும் அழகாகக் காட்டியிருக்கிருர்கள். துளசிதாஸர் ராமஸக்யத்திற்குப் பின்பு சுக்ரீவன் பயம் தெளிந்தவனுகவும், ராமனுடைய பூர்ணமான தயையை ஸம்பாதித்தவனுகவும் காணப்படுகிருன். இவனுக்கு யத்ருச்சையாக பகவானுடைய ஸ்நேகம் கிடைக்கிறது. இதைத்தான் பெரியோர்கள் நிர்ஹேதுவான கிருபை என்று சொல்லுவார்கள். சுக்ரீவன் ராமனை இந்த உத்தம கதிக்கு நம்மை ஆளாக்கினவன் என்று நன்றி பெருக்குடனும் பக்தி விஸ்வாஸத்துடனும் பார்க்கிருன். ஆஞ்சநேயரும் அதையே அவனிடம் வளர்த்து விடுகிருர். கம்பரின் வாலி ஹனுமாரை ராமனிடம் புகழ்ந்து உரைக்கிருன். வால்மீகியின் வாலியும் ராமனிடம் தாரையையும் கவனித்துக்கொள்ளச் சொல்லுகிருர். ஆனுல் கம்பன் அவனை சந்தேகத்துடன் எண்ணிப்பேசாமல் இருந்து விடுகிருன். இந்தவிடத்தில் துளசிதாஸர் வால்மீகியைப் பின்பற்றுகிருர். துளசிதாஸரின் ராமர் வாலியைப் பார்த்துச் சொன்னுர். "உன் தம்பியின் மனைவியை நீ கவர்ந்தாய். அவள் உன் சஹோதரிக்கும் புத்ரனின் மனைவிக்கும், உனது பெண்ணுக்கும் சமமானவள். இவ்விதமின்றி இவர்களை நடத்துபவன் மஹாபாபி. அவனைக் கொன்ருல் ஒருவித பாபமில்லை. மேலும், வாலி, நீ அத்யந்த அபிமானமுள்ளவனுகவிருக்கிருய். உன் குற்றங்கள் உனக்குத் தெரிவதில்லை. தாரை உனக்கு பலதடவைகள் சொல்லியும், நீ அவளுடைய வார்த்தைகளை லக்ஷ்யம் செய்யவில்லை. சுக்ரீவன் என்னை ஆஸ்ரயித்தவன். அவ்விதமிருந்தும், என் பக்தனுகிற அவனை அதமனும் ஸ்வ்ய அபிமானம் கொண்ட நீ கொல்ல விரும்பினுய்.'' வாலி இந்த வார்த்தைகளுக்கு பதில் உரைத்தான். "பிரபு உம்மிடம் நான் வாதாட முடியுமா? நியாயம் அநியாயம் என்பது உமது மனதில் ஏற்படும் சங்கல்பம்தானே. ஸ்வாமி, நீர் கருணையுடன் என்னைப் பார்க்கவேண்டும். உமது கைகளால் மரணம் ஏற்பட்டும்கூட, அந்திம காலத்தில் உமது பாதபத்மங்களே எனக்கும் பரமாம் கதி. நான் பாபாத்மாகவிருந்தபோதிலும், உம்மை அடுத்து வந்திருக்கும் என்னை சம்ரக்ஷிக்காமல் உதறித் தள்ளவேண்டாம்,'' என்று ராமனை வாலி வேண்டிக்கொள்ளுகிருன். ராமன் வாலியைப் பார்த்து அம்ருத கடாக்ஷத்தினுல் சொன்னுர். "நான் உன் சரீரத்தை அம்ருதமாக்கி விடுகிறேன். பிராணனைத் தரித்துக்கொள்.'' அதற்கு வாலி பதில்

  

சொன்னான். "ஸ்வாமி என் அபிமானத்தை நாசம் செய்து, உலக மரியாதையைக் காப்பாற்றுவதற்கு நீர் அவதாரம் செய்திருக்கிறீர். என்னையும் உம்மைச் சேர்ந்தவனாக ஆக்கிவிட நினைத்தீர். பூர்ண காமங்களை அளிக்கவல்ல தங்களுடைய பாதபத்மங்களை விட்டுவிட்டு, கற்பக நிழலை விட்டுவிட்டு, அக்ஞானத்துடனும் அபிமானத்துடனும் வளர்ந்து வந்த இந்த சரீரத்தை நான் இன்னும் போஷிக்கலாமா? ஒவ்வொரு ஜன்மத்திலும் தங்களுடைய பாதபத்மங்களில் அனுராகம் உடையவனாக எனக்கு வரதானம் செய்யவேண்டும். என் புத்ரனாகிற அங்கதனையும் உமது தாஸனாக ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்று பிரார்த்தித்துக்கொண்டே உயிரை விட்டான். துளசிதாஸர் சொல்லு கிறார், "ஸ்ரீராமன் வாலியை தன்னுடைய நிஜபதமான வைகுண்டத் திற்கு அனுப்பினார்; பரமகிருபாளு என் பிரபு" என்கிறார். தாரைக்கு பிரபு தேகஆத்மவித்யாஸத்தைச் சொல்லி அவளுடைய தாபங்களை சமனம் செய்கிறார். அதனால் உமாதேவியினிடம் பிரபு சிவன் சொல்லு கிறார். "உமா, என் பிரபு ராமன் பதினாறு கலைகளுடன் விளங்கும் ராமசந்திரன். ஸகலரையும் பொம்மை மாதிரி ஆட்டி வைக்கிறார். அவருக்கு உட்படாதவர் யாருமில்லை," என்கிறார்.

ராவணனும் ராமனை நாராயணனாகக் கருதினான் என்று துளசி தாரும் கம்பரும் சொல்லுகிறார்கள். துளசிதாஸர் ராமனை நாராயணன் என்று கருதி மும்மூர்த்திகளுக்கும் மேலானவன் ஹரிபகவான் என் கிறார்; ஆகையால் தனது பதமாகிய வைகுண்டத்தை வாலிக்குக் கொடுத்தார் என்று சொல்லிய துளசிதாஸர் ராமனை நாராயணனாகக் கருதியிருக்கிறார். மந்தோதரி நாராயணனே ராமனாக வந்திருக்கிறான் என்று நீதி புகட்டுகிறாள். அதற்கு முன்பே, சூர்ப்பனகையின் விருத்தாந்தங்களைக் கேட்ட ராவணன் கோபம் கொண்டான். சூர்ப்பனகையின் வசனங்களை நாம் இவ்விடத்தில் ஆராயலாம். "கரதூஷணாதிகளை வதம் செய்த இரு ராஜகுமாரர்கள் அதுளித பலம் கொண்டவர்கள். அவர்கள் ஹிம்சை செய்யும் துஷ்டர்களை அடக்கி, தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் சுகத்தைக் கொடுக்கிறார்கள். அவர்கள் தான் அழகு சோபை, புருஷத்வம், கீர்த்தி பிரபாவங்கள், சௌலப்ய சௌசீலயாதி குணங்களுக்கும் அஹிம்சை, சத்யம், அக்ரோதம், தானம், ஆகிய தர்ம சூக்ஷ்மங்களுக்கும் இருப்பிடம், சிறந்த பொக்கிஷ மாகிற சீதையை ஸ்ரீநிதியைப் போல வைத்திருக்கிறார்கள். அவர் களில் பெரியவன் பெயர் ராமன். அவனுக்குப் பக்கத்தில் சியாமை யாகிற சீதை அழகுடன் வீற்றிருக்கிறாள்," என்கிறாள். ஆம். ராவணன் ராமநாமத்தைக்கேட்டு விட்டான். தம்மன்யே நாராயணம் அநாமயம், என்று வால்மீகி பகவான் சொல்லியதுபோலவும், கள்ளச் சகடம் பேய் முலை நஞ்சுண்டு எனக்கேட்டு கம்ஸன் பரிதவித்தாற்போல, ராவணன் கதி கலங்கினான். விடியும்வரை சிந்தை கலங்கினவனாக ராமசீதா

நினைவாக இரவைக் கழித்தான். அவனுடைய மனத்தில் தோன்றிய எண்ணங்களை ஆராய்வோம். "தேவர்களோ, நரர்களோ அசுரர்களோ நாகர்களோ பக்ஷிகளோ என் சேவகர்களிடம் அருகே செல்வதற்குக் கூட பயப்படுவார்கள். கரதூஷணுதிகள் எனக்குச் சமமான பல ஸம்பத்துள்ளவர்கள். அவர்களையே இந்த ராமன் கொன்றிருப்பதால் இவனே பகவான் நாராயணனுகத்தானிருக்க வேண்டும். ஒருவேளை ரமாரமணன் அவதாரம் எடுத்து பூபாரத்தை நீக்குவதற்கு வந்திருப்பாரோ? மானிடவேஷம் பூண்டு வந்தாரோ? (இவனுக்கு மானிடனுல் இறப்பு உண்டாகும் என்று பிரும்மா சொல்லியதாக தானே யுத்த காண்டத்தில் அங்கதனிடம் கூறுகிருன்.) அவ்விதம் வந்திருப்பாராகில், நான் வைரம் பூண்டு (ஹிரண்யாக்ஷன் மாதிரி) சண்டை செய்வேன். அந்த பிரபுவினுல் ராக்ஷஸ ஜன்மத்தில் பிறப்பு, மரணம் ஆகிற பவஸாகர சுழல்களிலிருந்து கரையேற்றப்படுவேன். எம்பெருமானுடைய "ஸம்பந்தத்தை" மீண்டும் பெறுவேன். தாமஸ குணங்கள் அதிக்ரமித்திருக்கும் இந்த ராக்ஷஸஜன்மத்தினுல் எனக்கு ஸர்வ ஸ்ரேஷ்டமான நாராயணமூர்த்தியைப் பஜித்து, ஸத்வ குணங்களால் அவரை திருப்தி செய்து, இனிமேல், இவ்வளவு காலத்திற்குப் பின்பு ஸாத்யமில்லை. மிகக் கடினம். பகவான் அவதரித்திருக்கும் சமயம் நான் சீக்கிரமாகவே ஒரு முடிவுக்கு வரவேண்டும். ஆம். எனக்கு நரரூபம் கொண்டவரால் மரணம் ஸம்பவிக்கப் போகிறது என்பது பிரும்மாவின் வாக்கு. ஆகவே நான் ராமனிடம் சண்டை செய்கிறேன். அவரால் மரணம் ஏற்பட்டால் ஸ்லாக்கியம், இவன் சாதாரணமான அரச குமாரனுகவிருக்கும் பக்ஷத்தில், சூர்ப்பனகைக்காக இவனுடன் சண்டை போட்டுத்தான் ஆகவேண்டும். எனது ராக்ஷஸ தர்மத்தின்படி அவனுடைய வைரத்தை சம்பாதிப்பதற்கு, வைதேஹியை அபகரிப்பேன்," என்று தசமுகன் எண்ணினுன். மாரீசனுல் பலதடவைகள் போதிக்கப்பட்டும் அவன் தனது எண்ணத்தை விட்டுவிடவில்லை. துளசிதாஸர் சீதையிடம் ராவணன் நெருங்குவதை வர்ணிக்கும்போது சொல்லுகிருர்: "சீதையை லக்ஷ்மணன் வனதேவதைகளிடம் ஒப்பிவித்துவிட்டு, ராமனுக்கு அபராதம் செய்பவனுக சென்ருன். அவன் ராவணரூபியாகிற சந்திரனை ஹிம்சை செய்யும் ராஹுவாகிற ஶ்ரீராமனிடம் சென்ருர்," என்று சொல்லுகிருர். அழகிய பெண் சிங்கத்தை துச்சமான முயல் நாடுவதுபோல, சீதையை அண்டின ராக்ஷஸ ராஜன், "நீ என்னைச் சேர்ந்தவள்" என்று கூறி மிருத்யுவின் வசத்தை அடைந்து விட்டான். ஆனுல் அவனுடைய மனம் சீதாபிராட்டியின் சரணங்களை நாடின. அவன் அடைந்த சுகம், ஸ்நேகம், ஸந்தோஷம், ஸம்பந்தம் யாவும் சொல்ல முடியாதபடி யிருந்தது," என்று சொல்லுகிருர் துளசிதாஸர். இந்த மனுேபாவத்தைத்தான் திரிஜடையும் சீதைக்கு லங்காகாண்டத்தில் சொல்லுகிருள். சீதை திரிஜடையைக்

  

கேட்கிறாள், "ஸம்பூர்ண விஸ்வத்திற்கு துக்கத்தைக் கொடுக்கும் இந்த பாபியாகிற ராவணன் எவ்விதம் அழிக்கப்படுவான்? என்பிரபு ரகு பதிஅவனுடைய சிரங்களை வெட்டியும் அவன் அழிகிறதாக இல்லையே." திரிஜடைசொன்னாள். "ஜனககுமாரி, தேவதைகளின் சத்ருவாகிற ராவணன் மார்பில் அடிக்கப்பட்டால், அவன் நிச்சியமாக மரித்துப் போவான். ஆனால் பிரபுவுக்கு அவனுடைய மார்பை அடிக்க இஷ்ட மில்லை. இதற்குக்காரணம் தாயே, ஜகன்மாதா, தாங்கள் அல்லவோ அவனுடைய ஹ்ருதயத்தில் ஸாந்நிதியம் செய்து கொண்டு வசிக்கி றீர்கள்." "நீ வசிப்பதால் காகுத்த ராமன் உனக்கு கோபம் வாரா மலிருக்க உன்னை வணங்கிய ராவணனிடம் அருள் கொண்டு, பொறுமை யுடன் அவனுக்குத்தன் பதமாகிய நாராயண பதத்தை அளிக்க விரும்பு கிறான்" என்கிறாள். சீதைக்காக ராவணனும் ராமனுக்கு வேண்டிய வனாக ஆகிவிடுகிறான். அவ்விதம் அவன் நினைக்கிறான். மந்தோதரி ராமனுடைய பரத்வ விபவங்களைச் சொல்லும் சமயம் ராவணன் பதிலளிக்கிறான். "மிருக லோசனி, உன் வசனங்கள் ரொம்ப மர்மமாக வும், ரஹஸ்யங்கள் நிறைந்த வாக்கியங்களாகவு மிருக்கின்றன. அவைகளை நீ சொல்லும்போது, எனக்குச் சுகமும் ஆனந்தமும் ஏற்படுகிறது. பயமும் நாசமடைகிறது." மந்தோதரியும் தனது பர்த்தா காலவசம் அடைந்து விட்டபடியால், அவனுடைய புத்தியும் விபரீத ரீதியில் பிரமை வசமடைந்திருந்தது என்று நினைத்தாள். மந்தோதரியைப்போல இவ்விதம் உபதேசித்தவர்கள் பல பேர்கள் இருந்தார்கள். சீதை, சாரணர்கள், மாரீசன், மால்யவான், பிரஹஸ் தன், விபீஷணன், ஹனுமான், அங்கதன், கும்ப கர்ணன் ஆகியோர் அனைவரும் உபதேசித்தும், ராவணனின் மனம் மாறவில்லை. துளசி தாஸர் இதை வர்ணிக்கிறார், "ராக்ஷஸ ராஜனுடைய மனத்திலே ஒரே எண்ணமிருந்தது. எவ்விதமாவது சாகவேண்டும். இல்லாவிடில் ஜயிக்கவேண்டும். ஆனால் ராமனின் உள்ளமோ வேறுவிதமாக விருந்தது. தான் பரமாத்மா, வைகுண்டத்திலிருந்து பூமிக்கு அவதாரம் செய்திருக்கிறேன். உன்னையும் காணப்போகிறேன். என்னுடைய ஸௌலப்யத்தை நீ உணராத போனால், எனது அருளை உனக்கு அடைய இஷ்டமில்லையானால், என்னுடைய பரத்வ மகிமை களைப் பார். என்னுடைய சேஷ்டிதங்களால் என்னைப் யார் என்று புரிந்து கொள்ளவில்லையானால், என்னுடைய காலசக்தி உன்னைப்புரிய வைக்கும். அதனால் அல்லவோ அவனுக்கு புத்தி புகட்டுவதற்கு, ஸேதுவை அணைகட்டினது போல, ஆயுதங்களையும் ராவணனுடைய கைகளிலிருந்து நழுவிவிடும்படி செய்தார். ராமன் தனது ஜயத்திற்கு நிர்மலமானதும் பாபரஹிதமான மனமும், ஸ்திரமான மனமும் ஆகிய இரண்டும் அம்புறாத்துணியாகவும், சமம் என்கிற மன அடக்கம், அஹிம்சை முதலிய யமாதி நிஷ்டைகளும், தேகசுத்தியும், பிராம்மண பூஜையும் குருவின் சேவையும் கவசமாகவும் பாணங்களாகவும்

விருஷபத்வஜரிடமும் திடமான பக்தியுமுள்ள பாக்யசிலன் ஜன்ம மிருத்யு ரூபங்களிலிருந்து சுலபமாகத்தாண்டுகிறன். அவ்விதமிருக்கும் போது ராவணனைப் போல சாதாரணமான சத்ருவைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா?'' என்கிறர் ராமன் விபிஷணனிடம். ராம ராவண யுத்தம் மிக்கக்கடுமையாக விருக்கிறது. ராவணனுடைய மிக்க தீவ்ரமான மாயாஜாலங்கள் ராமனைத்திகைக்க வைக்க முடியவில்லை. பொறுமை யாகிற கருணை விரதம் கொண்ட ராமன் க்ரோதமற்ற சிகப்பு நேத்ரங்களுடன் பொறுத்துப்பார்த்தும், ராவணன் தனது பரிவாரங் களுடன் தன்னை வந்து சரண் அடையவில்லை என்கிற மன ஏமாற்றத் தினல் தேய்ந்து போன ஹ்ருதயத்துடன் காக்ஷி அளித்தார். விப்ர பிரியரான பிரபு இனி தாமதித்தால் ஹானி நமக்கல்லவோ ஏற்படும் என்று அஹிம்சை விரதத்தை அனுஷ்டித்த ராமன் தேவர்களுக்குக் கொடுத்த வரதானத்தை நினைவுபடுத்திக்கொண்டு ராக்ஷஸர்களை அழிப்பதற்காக எடுத்துள்ள அவதார ரஹஸ்யத்தையும் நினைப்பவராக, வரங்களை அளிக்கும் பிரும்மாதி தேவர்களுக்கும், அவர்களால் அளிக்கப்பட்ட வரங்களும் வீண்போகாமலும், வரங்கள் பெற்ற ராவணுதிகளும் தம்மிடத்தில் அதிக்ரிமிக்காமல் காலாந்தகனைப்போல விருக்கும் விராமர், ராவணனை முப்பத்துஒன்று பாணங்களால் ரகுநாயகன் கொன்றர். ஒரு பாணம் ராவணனுடைய நாபியிலிருக்கும் அம்ருதகலசங்களை வற்ற அடித்தது. மற்ற முப்பது பாணங்கள் மிக்க ரோஷத்துடன் அவனுடைய இருபது புஜங்களையும் பத்துத் தலைகளையும் அறுத்துத்தள்ளி மந்தோதரியின் முன்பு வைத்தன. ராவணனுடைய முண்டம் மற்றொரு பாணத்தினல் இரு துண்டங்களாகச் செய்யப் பட்டது. மரணம் அடையும் சமயம் ராவணனும், இந்திரஜித்தும், கும்பகர்ணனும், ராக்ஷஸ வீரர்களும், ''ராமன் எங்கே, சீதாராமன் எங்கே? நான் அவனை யுத்தத்திற்கு அழைத்துக் கொல்வேன்,'' என்று பலவிதமாகக்கதறி, ஸ்ரீராம நாம பிரபாவத்தினல் ஸகலரும் புனித மாக்கப்பட்டு, ராமபதமாகிற உத்தம கதியை அடைந்தார்கள். ராவணனுடைய பெரும் தேஜஸ் பிரபுவினுடைய முகத்தில் புகுந்தது. மஹேஸ்வரரான சம்புவும், பிரும்மாவும் இதைக் கண்டு சந்தோஷ மடைந்தனர். அவர்கள் தேவர்கள் புடை சூழ பிரபுவை ஸ்துதிகீதம் செய்தார்கள். அப்பொழுது விஜயராகவனுடைய சோபைகிருபை யுடன் தேஜோமயமாகவும் அபய முத்திரையுடனும் விளங்கியது. மந்தோதரியின் புலம்புதலும் பலவிதமாக விருந்தது. ''நீர் அழிந்து போனதிற்குக்காரணம் ஸர்வ பிதாமஹாரான ஸ்ரீராமனிடத்தில் வைரம் செலுத்தியதுதான். அந்த பிரபு லங்கைக்கு ஸ்வயமாக வந்திருந்தும், அலக்ஷ்யமாகவும் விமுகனுகவும் தாங்கள் இருந்தீரே, அதுதான் காரணம்'' என்று மந்தோதரி புலம்பினுள். ''பரம அபராதிகளுக்கும் மரணமானல் வைகுந்தம் கொடுக்கும் பெருமாள் என் சுக்ருத நமஸ்காரங்களை யேற்றுக்கொண்டு, என்பதிக்குக் கருணை செலுத்தி

 

அருள் பாலிக்க வேண்டும்'' என்று பிரார்த்திக்கிறுள். மந்தோதரியின் வசனங்களைக் கேட்ட ஸர்வ அந்தர்யாமியான பிரபு அவளுடைய பக்தி விசேஷங்களை பகிரங்கமாக வெளிப்படுத்த ஸங்கல்பித்து உத்தம கதியை அளித்தவராக பேசாமல் மந்தோரியைக் கடாக்ஷித்தார். அவளுடைய வசனங்கள் பதிதர்மத்தை ஒட்டியதும், ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப் பட்டதாக விருந்தன. பிரும்மாமஹேசர் நாரதாதி ஸனகாதி முனிவர் கள் பரமாத்மாவின் கருணையாகிற. நிஜஸ்வரூப ஸ்வபாவங்களைப் பார்த் தவர்கள் பரமாத்மாவாதிகள் அப்பொழுது பிரபுவின் கண்கள் கலங்கின தாகவும், அன்பு வசத்தினுலும் தர்மத்தில் கட்டப்பட்டவராக மிக்க மென்மையான ஹ்ருதயம் கொண்டவராக ராமனைக் கண்டார்கள். இந்த காக்ஷி ஸகலருக்கும் சுகத்தை அளித்து, மந்தோதரியின் காமங் களையும் பூர்த்தி செய்தது. அப்பேர்பட்ட பரிபூர்ணகாமராகிய புரு ஷோத்தம ராமனின் கருணை அவருடைய வீரத்தையும் வென்றுவிட்டது என்கிறுர் பிரபு துளசிதாஸர்.

கம்பனுடைய ராவணனும் ராமனை நாராயணனுகக் கருதினுன். சிவனுடைய சூலம் ஹீங்காரத்தினுல் விலக்கப்பட்டவுடன் ராமன் மஹாதபஸ்ஸினுல்தான் இவ்விதமான அமானுஷ்ய செயலைச் செய்யக் கூடும் என்று நினைக்கிறுன். ஆனுல் அவனுடைய உடல் .மென்மைக்கு கடும் தபஸ் ஏற்றதல்லவே. ஒருவேளை இவனே காரண புருஷனுகிற வனும் வேதங்களால் புகழப்படும் காரிய காரணபுருஷரான நாராயணனுகத்தானிருக்க வேண்டும் என்கிறுன். யாராகவிருந்தால் என்ன? நான் வீரனுக வாழ்க்கையைக் கடைப்பிடித்து, புறம் காட்டாமல் வெற்றியோ இறப்போ எது வந்தாலும் அவனுடன் சண்டைபோடுவேன் என்று நினைக்கிறுன். பிரும்மாஸ்த்திரத்துடன் சேர்ந்த விஷ்ணுவின் சக்ராயுதமும் ஆகிய இரண்டின் பலத்தாலும் விடப்பட்ட ராமபாணம் ராவணனைக் கொன்றது. மாதலியின் ரதத்துடன் விஷ்ணுவின் சக்ராயுதம் வந்து சேர்ந்தது. மூன்று கோடி ஆயுள் நிறைந்த உடலையும், தவத்தின் பலன்களையும், பிரும்மாவினுடைய வரபிரஸாதங்களையும் புவியில் ஜயிக்க முடியாதவன் என்கிற பெரும் புகழையும் ஆகிய எல்லாவற்றையும் ராமபாணம் பாழாக்கியது. தேவர்களாலும் பிராம்மணர்களாலும் புகழப்பட்டு, அந்த பாணம் அவனுடைய ரத்தத்தைக் குடித்து, பாற்கடலுக்குப் போய், ரத்தக்கரைகளை அலம்பி விட்டு, ராமனுடைய அம்புராத்துணியில் வந்து சேர்ந்தது. கம்பரின் சித்திரத்தில் ராவணன் ஹிரண்யகசிபுக்கு அடுத்ததான மாபெரும் வீரனுக திகழ்ந்திருக்கிறுன். பாஸ்கரன் என்கிற தெலுங்கு புலவர் வால்மீகியைப் பின்பற்றி அவனுடைய பிரதாபங்களை சூர்ப்பனகையின் வசனங்களால் இகழ்ந்திருக்கிறுர். இதையே துளசிதாஸரும் பின் பற்றியிருக்கிறுர். ராவணன் தனது வீரபிரபுத்வ பிரதாபங்களை சீதையின் முன்பு தற்பெருமை அடித்துக் கொள்கிறுன். கம்பனும் ராவணனை தனக்குள் ஆழ்ந்தயோசனை செய்பவனுகவும் சித்தரித்

திருக்கிறுன். பல தோல்விகளுக்குப் பின்பும், புத்ரன் தம்பி பந்து மார்கள் பல பேர் இறந்த பின்பும் அவனுல் ஏன் யுத்தம் செய்யப் பட்டது? துளசிதாஸரும் இதையே ஆராய்ந்து, அவனுடைய ஸ்வ அபிமானத்திஞல் இந்த புத்தி ஏற்பட்டது என்கிறுர். அவனுக்கு பூர்ணமான ராமகிருபை ஏற்படவில்லை என்று சாதிக்கிறுர். சுகசாரணர்களைப் பார்த்து அவன் வினவுகிறுன் "நீங்கள் சொல்வது வாஸ்தவம்தானு? ராமன் அலைகளை நிறுத்தி, ஜலத்திரள்களை ஸ்தம்பனம் செய்து கடலைப் பந்தனம் செய்து மஹா சமுத்திரத்தை ஹீங்காரத் திஞல் அடக்கி, அவனுடைய சபலமனத்தையும் ஆண்டு, அவனையும் கைங்கரியத்தில் நியமித்து, ஆழமான மடுக்களை உடைய அவனுடைய உதரத்தையும் முதுகுப்புறத்தையும் நிலை நிறுத்தி, அதன்மேல் வந்து வடியும் நதி பிரவாஹங்களின் நீரையும் அடக்கித் தேக்கி, அவைகளின் உவர்ப்புத் தண்ணீர்களையும் அலைகளாக மாற்றி, மஹாசமுத்திரத்தின் ஆழமான அமைதியைப்போல செய்தல்லவா ஸேது பந்தனம் செய்திருக்கவேண்டும். இவ்வளவையும் ராமன் செய்திருக்கிறுனு? என்று ராவணன் வியக்குகிறுன். சரி. நாம் இவர்களிடம் நம் மனதில் இருப்பதை தெரியப்படுத்த வேண்டாம்" என்று ராவணன் நினைக்கிறுன். மந்தோரி யிஞல் மீண்டும் வேண்டப்படுகிறுன். "பிரபு, இந்த ராமன், "நீர்தான் என்னை ரக்ஷிக்க வேண்டும்" என்கிற பிரார்த்தனையை எதிர்பார்க்கும் அபிமுக்யனுக நம்மிடம் எதிர்பார்க்கிறுன்." ஆம். அதே மந்தோதரி ராவண உடலைப்பார்த்து விலபித்து மீண்டும் சொல்லுகிறுள். "கருணாமய ராமனை சாதாரண மனிதன் என்று நம்பி ஏமாந்து போனீர். சமயத்தை நழுவவிட்டு, மமகாரத்தில் மூழ்கி, விஷய போகிகளைப்போல கிடைப்பதற்கரிய விப்ர ஜன்மாவைப் பாழ்படுத்திக்கொண்டீர். ஆம். அதற்கு உமது ஜன்மமும், பிறப்பும் உமக்குத் துரோஹம் செய்துவிட்டது. புலஸ்திய குலத்தில் பிறந்தபோதிலும் ராக்ஷஸ குலத்தின் இயற்கை ஸ்வபாவங்களாகிற பரத்ரோஹம், பரஹிம்சை பரபீடை ஆகியவைகளால் தாங்கள் பிறந்தது முதற்கொண்டே இதுவரை கணக்கிடமுடியாத பாதகங்களைச் செய்துவிட்டு, உம்மை ஸர்வ அபராதங்களையும் மன்னிக்கும் புருஷோத்தம ராமனிடம் அர்ப்பித்துக்கொள்ளாமல், அவனையும் சீதையையும் நமஸ்கரிக்காமல் ஏமாந்து போய்விட்டீர்." இதையே கம்பனும் த்வனிக்கிறுன். "ராமன் ஸத்ய விரதன். விருப்பு வெறுப்பு ஆகிற த்வந்தங்களிலிருந்து விடுபட்டவன். விகாரமற்றவன், பரம ஸௌம்யமான மூர்த்தி" என்கிறுன். வால்மீகி பகவானும் அவ்விதமே மந்தோதரியின் வசனங் களால் ராமனைப் பார்க்கிறுர். "பிரபு, வ்யக்தமேஷ மஹாயோகி, பரமாத்மா, ஸநாதன:; ஸ்ரீமான், மானுஷம் ரூபமாஸ்தாய விஷ்ணு: ஸர்வலோகேஸ்வர: லோகானும் ஹிதகாம்யயா"; மரணந்தானி வைராணி நிர்விருத்தம் ந: பிரயோசனம்; தமஸ; பரம், என்று பல சப்தங்களால் அறிவிக்கிறுர். ராவணன் மரித்தும் நல்லகதி அடைந்த

தற்கு மந்தோதரியின் வசனங்களால் யேற்பட்ட ராமகருணையே என்று சொல்லவேண்டும். என் பிரபு ராமன் ஸஹிஷ்ணுவல்லவா. கடுத்த அபராதிகளையும் மன்னித்து உத்தமகதியைக் கொடுக்கும் நாராயணர் அல்லவோ? ராவணனும் பகவான் நாராயணனை அந்தர்யாமி யாக வைத்து பூஜை செய்திருக்கவேண்டும். இல்லாதபோனால் ஸர்வ தேவர்களும் நடுங்கும்படி உத்தம ஸம்பத்துக்களும் மஹாதபஸ்ஸு களும் அவனிடம் வந்து சேர்ந்திருக்கமாட்டா. அந்த மஹத்வ விபவங்களே அவனுக்குச் சத்ருவாக வந்தன. அவனுடைய ஸ்வய அபிமானம் ஹிமயமலையை ஒத்து நின்றது. இல்லாதபோனால், அவன் அங்கதனிடம் இவ்விதம் சொல்வானா, "அங்கதா, நீ ஒருவேளை சமுத்திரத்தை அணைகட்டியது ஒரு பெரிய அமானுஷ்யமான கார்யம் என்று சாதிப்பாயோ? பக்ஷிகள் அநேகம் சமுத்திரத்தைத் தாண்டு கின்றன. இதனால் உங்கள் ராமன் சூரன், மஹாவீரன் என்று சொல்லக்கூடுமா?"

நாம் இப்போது சீதையைப்பற்றி ஆராய்வோம். வால்மீகி பகவான் சீதையின் சரித்திரம் மஹத்தானது என்கிறார். கம்பரும் அன்னை ஜானகியின் ஸ்வரூபகுண அழகை பலவிடங்களில் வர்ணித் திருக்கிறார். வியாஸர், வால்மீகி, சீதையின் வடி அழகு வர்ணனைகளில் மிக்க உச்சநிலையை அடைகிறார்கள். அழகு பலவிதமாக உள்ளது. சீதாஸ்வயம்வரத்தில் சீதையின் அழகு வெகு நேர்த்தியாக துளசிதாஸ ரால் சொல்லப்பட்டிருக்கிறது. தமயந்தியின் அழகும் பெயர் போன்றது. திரௌபதியின் அழகும் பெயர் போன்றது. "ஸ்யாமா," என்று நளன் தமயந்தியை விட்டுப்பிரிந்துபோது அவளை நினைக்கிறான். கண்ணுக்கு இனிமை. ஸ்பரிசத்திற்கு இனிமை. தமயந்தியின் இடையை ஒத்த கொடியை நளன் தொழுகிறான். "வார் அணியும் கொங்கைமடவாள் நுடங்கு இடைக்குப்பேர் உவமை ஆகப் பிறந்து உடையீர்." வால்மீகி பகவானும் சீதையை ஸுமத்யமா என்கிறார். சீதையின் நாணம், லஜ்ஜை அடக்கமும் பெயர்போனது. இடைதுவளும் தன்மையைப் போல மனமும் மிகமிக மென்மையானது. வேல் படையும் வாளுமே கண்ணாவதன மதிக்குடைக்கீழ் ஆளுமே பெண்மை அரசு—என்கின்றார் புகழேந்திப் புலவர். பெண்களுக்கு அரசியாகிற தமயந்தியைப் பற்றிச் சொல்லும்போது, அவளுக்கு நெற்றியில் தாமரை மருவிருந்தது. அவளுடைய நடையை கற்க அன்னம் வந்தது. நளன்பால் அவள் கொண்ட காதல் அப்ராகிருத மானது, உள்ளம்போய் நாண்போய் உரைபோய் வரிநெடுங்கண், வெள்ளம்போய் வேகின்றமென் தளரிபோல்—பிள்ளைமீன், புள் அரிக்கும் நாடன் திருமடந்தை பூவாளி, உள்அரிக்கச் சோர்ந்தாள் உயிர்," என்கிறார் புகழேந்திப் புலவர். பகவான் வேதவியாஸர் திரௌபதி ஸைரந்திரியின் வேஷத்தை அடைந்து விராட் நகரத்தில் ஸுதேஷ்ணை யின் க்ருஹத்தில் வேலைக்காக வந்தபோது, ஒரு பெண் மற்றொரு

பெண்ணை அழகினால் காதலிப்பதுபோல, மறைந்திருக்கிற கணுக்கால்களை உடைய திரௌபதியைப் பார்த்தாள். உத்தமமான நுடங்கு இடை, சிவந்தும் நீண்டுமிருக்கின்ற கண்கள், தோஷமற்ற அங்கங்கள், வணங்கின சரீரத்தை உடையவள், அதிக குறுமையும் நெடுமையுமில்லாதவளும், மான்போன்ற விழிகளை உடையவளும், இகழத்தகாதவளும், அழகிய கூந்தலை உடையவளும், பயந்திருக்கின்ற பெண் மானைப் போன்றவளும், கூட்டத்திலிருந்து தவறிப்போன பெண் யானை போன்றவளும், லக்ஷ்மிதேவியைப் போன்ற அழகு போலவும் கீர்த்தியுள்ள வித்யை போன்றவளும், நக்ஷத்திரங்களுள் ரோஹிணி போன்றவளும், ஜ்வலிக்கின்ற அக்னிஜ்வாலை போன்றவளும், ருத்ர பத்தினியாகிற உமையைப் போன்றவளும், மஹோததியினுடைய கரை போன்றவளும், நாககன்னிகைகளுள் ஸுலபை போன்றவளும், பெண் மான்களுள் கின்னரி போன்றவளும், கங்கையைப் போன்ற பரிசுத்தமான அங்கங்கள் உடையவளும், சரத்காலத்தின் ராத்ரி போன்றவளும், உலகத்தில் இவ்வித அழகு ஸ்வரூபமுடையவள் என்று எண்ணத்தகாதவளும், இளாதேவியைப்போல உத்தம கீர்த்தியைப்போலவும், ஸாவித்திரியைப்போல எவ்விதத்திலும் அவமதிக்கத்தகாதவளும், பிரும்மதேஜஸ்ஸுடன் கூடியவளும், ஸீதையைப்போல பதிவிரதையும், அருந்ததியைப்போல் தேகமன கர்ம சுத்தத்தை உடையவளும், பிரியமுள்ளவளுமான அந்த திரௌபதியை ஸுதேஷ்ணையானவள் ஆச்சரியத்தினால் மலர்ந்த கண்களை உடையவளாகப் பார்த்து வினவுகிறாள், " நீ யார் ? மறைந்திருக்கின்ற கணுக்கால்களையும், ஸமமான தொடைகளையும், சப்தம் புத்தி நாபி ஆகிய மூன்றிலும் ஆழ்ந்தவளும், மூக்கு இரண்டு கண்கள் காதுகள், நகங்கள், ஸ்தனங்கள் பிடரி ஆகிய ஆறுகளிலும் உன்னதமாகயிருப்பவளும், சிவந்திருக்கின்ற உள்ளங்கை, உள்ளங்கால், கடைக்கண், உதடு, நா, நகம், ஆகிற ஐந்து இடங்களிலும் பளபளப்பு உள்ளவளும், ஹம்ஸத்தைப்போல மதுரஸ்வரத்துடன் பேசுபவளும் கோவைப்பழம் போன்ற உதடு, அழகிய இமை மயிர், அழகிய கூந்தலையுடையவளும், அழகிய குரல் இனிமை கொண்டவளும், சங்கம் போன்ற கழுத்து, பருத்திருக்கின்றதும் வில்வப் பழங்கள் போன்று கெட்டியானதும் வட்டவடிவமானதும், மருக்கள்கொண்ட அழகிய உன்னத இருஸ்தனங்களும், மறைந்திருக்கின்ற நரம்புகளை உடையவளும், பூர்ணசந்திரனைப் போன்ற வதனத்தையும் அழகிய பல் வரிசைகளையும் உடைய நீ, காம விலாஸங்களுடன் கூடய நீ, அசுரஸ்திரியா? கின்னரியா; கந்தர்வஸ்திரியா, வனதேவதையா, அப்சரஸா, தாரையா, அலம்புஷையே, மிஸ்ரகேசியா, புண்டரீகையா, மாலினியா, இந்திராணியா, சொல். உன் ரூபமானது பூஷணங்களால் விடுபட்டாலும் ஒப்பற்றதாகவிருக்கிறது. பிரும்மதேவர் உன்னைப் படைத்துவிட்டு படைப்பதினின்று ஒழிந்திருப்பார் என்று நினைக்கிறேன். உன்னைப்பார்த்து

  

ஸ்திரிகளே திருப்தி பெறுகிறுர்களில்லை. புருஷர்களுக்கு எவ்விதம் ஆசை உண்டாகாமலிருக்கும்? நான்கு பக்கங்களிலும் நிறைந்த வனதேவதைகள் யௌவனத்தின் மத்தியில் இருப்பவளான உன்னையே உன் ரூபத்தின் நிறைவினுல் வியப்புற்று உன்னையே பார்க்கிறுர்கள். கல்யாணி, அந்தப்புரத்திலுள்ள ஸ்திரிகளும் மிருகங்களும் பக்ஷிக் கூட்டங்களும், புருஷர்களும் எல்லோரும் மிக்க வியப்புற்று உன்னையே பார்க்கின்றுர்கள். மூவுலகங்களிலும் உன்னைப்போன்ற ஸ்திரி ஒரு சுந்தரியானவள் இதற்கு முந்தி பார்க்கப்படவுமில்லை; கேட்கப்படவு மில்லை. அழகிய கண்களுள்ளவளாக நீயிருக்கிறுய், என்கிறுள். துளசிதாஸர் ஸ்திரி வர்க்கத்தைக் கண்டிக்கும்போது "ஸ்திரிதான் மாயை. எங்கேயாவது ஒரு ஸ்திரி மற்றொரு ஸ்திரியின் அழகைப் புகழ்கிறுளா?" என்று கேட்கிறுர். அந்த கேள்விக்கு இது மாறுக அழகு ஒன்றினுலேயே மற்றொரு ஸ்திரியின் மனத்தை அபஹரிப்பதாக விருக்கின்றது. அப்பேற்பட்ட அழகை சீதை உடைத்தவளா யிருந்தாள். வால்மீகி பகவானும் அவளை ஸ்யாமா, என்கிறுர். அவளுடைய அழகின் ஸம்பத்துக்களை சுந்தரகாண்டத்தில் தாஸ்ய உள்ளம் படைத்த ஹனுமார் வெகு சுந்தரமாக வர்ணித்திருக்கிறுர். சூர்ப்பனகை போன்ற காமிகளும் சீதையின் அழகைக்கண்டு வியப்புற்று பொருமையினுல் மனம் கலங்கினவளாக ஆனுள்.

பிரபு துளசிதாஸர் சீதையின் அழகு லக்ஷணங்களை பிரபு ராமச்சந்திரன் வாயிலாகவும், அயோத்தியா ஜனகபுரிவாசிகளின் வசனங்களாலும், காட்டிலுள்ள ஸ்திரி ஜனங்களின் சொற்களாலும் அழகுடன் விவரித்திருக்கிறுர். ஜானகியை ராவணன் அபஹரித்த பின்பு பிரபு ஆஸ்ரமத்திற்கு வந்து சீதையின் மறைதலுக்கு சாதாரண மனிதனைப்போல தேம்பித்தேம்பி அழுதார். எவருடைய பிரபாவத் தால் பக்தர்களுக்கு மறைந்திருக்கும் தமது பிரபாவத்தை அறியும்படி அவர்களுடைய அகக்கண்களையும், புறக்கண்களையும் திறக்கும் திறமை யுள்ள அப்ராகிருதமான பேரொளிகொள்ட அர்ச்சிஷ்மான், ஏகபத்னி வ்ரதமாக கன்றைவிட்டுப் பிரிந்த தாய்ப்பசுவைப்போல கதறி அழுதார். பக்ஷிகளிடம் கேட்கிறுர். என்னை இன்பமூட்டும், மதுசுரமாகச் செய்த சீதை எங்கே? தாமரைப் பூக்கொத்துப் போலவிருக்கும் அழகான சீதையைப் பார்த்தீர்களா? மிருகங்களிடம், சஞ்சலமான மான் கண் களை உடைய பெண் மானுகிய சீதையைக் கண்டீர்களா? பக்ஷிகளிடம், கஞ்சன பக்ஷியாகிற சீதையைக் கண்டீர்களா? புருவிடம், வெண்மை யான ஹ்ருதயம்கொண்ட மைதிலியைக் கண்டீர்களா? மீன்குஞ்சு களைப் பார்த்து, மீனுக்ஷியாகிற சீதையைப் பார்த்தீர்களா? வண்டுக் களைப் பார்த்து, மஹா அறிவாளியான சீதையைக் கண்டீர்களா? கோகிலங்களைப் பார்த்து, கொஞ்சி கொஞ்சி சலங்கை மாதிரி கிங்கிணி சப்தத்துடன் பேசும் பாடும் மதுர கோகிலமான சீதையைக் கண்டீர் களா? மல்லிகை மொட்டுப் போல குவிந்திருந்த வாயை உடைய

சீதையைப் பார்த்தீர்களா? இளம் மாதுளம் பூவைப்போல நிறத்தை உடைய லலிதா தேவியைப் பார்த்தீர்களா? மின்னல் கொடி போலவும், கற்பகக் கொடிபோலவும், தங்க நிறமுள்ள பொற்கொடியைக் கண்டீர் களா? தாமரைப் பூப்போல பூத்திருக்கும் புன்சிரிப்புள்ள சீதையைப் பார்த்தீர்களா? இவ்விதம் துளசிதாஸர் சீதைக்கு ராஜஅழகு சம்பத்து லக்ஷணங்களைச் சகலசேதன சேதனங்களிலுள்ள அழகின் அம்சங்களே ஒருங்கே நிறைந்த பரிபூர்ண சீதையாக வர்ணிக்கிறார். அவளுடைய இளம் புன்னகை, சரீர அழகு, சரீரத்தின் கந்தம், ஸ்பரிசசுகம், மதுர மான குரல், இன்சொல், சொல்லின் அழகு, அக்ரோதமற்ற மனம், கருணை, இயற்கையாகவுள்ள நாணம், அச்சம், மடம், பார்க்கப் பார்க்க ரம்யம், விகஸித்தமுகம், நாகங்கள் போன்று நீண்ட தலைமயிர் பின்னல்கள், புருவம், நடை, கதி, கம்பீரம், மதம், மந்தகதி, பெண் சிம்மத்தைப் போல ஒடுங்கி இளைத்திருக்கும் ஸுமத்யமா, தொடைகள், ஆகிய ஒவ்வொன்றையும் வர்ணித்து, கண்களில் கருணை கடாக்ஷங் களையும் வர்ணிக்கிறார். அவள் திரிபுரசுந்தரி அல்லவா? அவளுக்கே இந்த உவமை தகும். அவைகளும் அவளுடன் ஸம்பந்தம் கொள் வதால் பிரபலமாக கீர்த்தியை எக்காலத்திலும் அடைகின்றன.

சீதைக்கு அழகு மட்டுமிருந்தால் அவ்வளவு சோபிதம் தராது. அழகைவிட அவளுடைய குணோத்தமங்கள் மிகச் சிறப்புடையவை. அவளுடைய ஸ்வரூபம் பொறுமையுடன் கலந்த கருணையன்றோ? அத்துடன் ராமனுடன் சேர்ந்து அவள் தர்மவத்ஸலையாகிறாள். என்னதர்மம் அவளால் ரக்ஷிக்கப்பட்டது? அபராதிகளை க்ஷமிக்கும் தர்மம் அவளால் காக்கப்பட்டது. இந்தப் பரந்த சம்சாரத்தில் அவளே சக்தி தேவதையாக வர்ணிக்கப்படுகிறாள். அவளே ஸமஸ்த ஜீவர்களுக்கும் தாயாகிய ஜகஜ்ஜனனி. கம்பனும் இதையே விவரிக் கிறான். யாரிடம் போய் ராவணன் கெடுமதிகொண்டான் என்று பரிதபிக்கிறான். அதற்கு எதிரான மனோபாவத்தை உடைய ஆஞ்சநேயர் என்னபதில் சொல்கிறான்? கம்பரின் சீதை கேட்கிறாள்: "அப்பனே, நீ வரும்வழியில் பெரியகடல் இருக்கின்றதே அதனை எவ்வாறு கடந்து வந்தாய்?" ஆஞ்சனேயன் "அம்மா, தங்களுடைய நாயகரின் திருவடிகளை மறவாத தூய்மையுடையோர், மாயை என்னும் பெருங்கடலைக் கடந்து முத்தியுலகு அடைவதுபோல, நானும் அவருடைய திருவருளால் இக்கடலைக் காலினாலே கடந்து வந்தேன்" என்கிறான். அதே சீதையை கம்பர் ராமனிடம் சென்ற ஆஞ்சநேயரால் வர்ணிக்கப்படும்போது சொல்லுகிறார்: "கற்பினுக்கே ஒரு அணியாகவுள்ளவளை நான் கண்டேன்; தங்களுடைய உயிரனைய சானகிதேவியாரை இலங்கையில் கண்டேன். அவளுடைய உயர்ந்த பண்புகளும், தங்களிடம் வைத்துள்ள அன்பும், அளவிட்டுகூற இயலாதன. இராவணன் அவரைத் தீண்டாமல் மண்ணோடு அப்பன்னக சாலையைப் பெயர்த்துக்கொண்டு போயிருக்கிறான்.

கண்டனன் "கற்பினுக் கணியைக் கண்களால் தெண்டரை அலைகடல் இலங்கை தென்னகர்", என்று ஆஞ்சநேயரின் வாக்கால் சீதையைப் புகழ்கிறன். இந்தவிடத்தில் ராமனின் அழகும் சந்தோஷமும் சோபித்தது. புகழேந்தியார் நளனை மனைவிமக்களுடன் கூடியபோது வர்ணித்தாரே, மேகத்தின் வருகையைக் கண்ட மயிலின் மகிழ்ச்சியையும் இழந்த கண்பார்வையை மீண்டும் பெற்ற முகத்தின் பொலிவையும், எதிர்பார்த்த மழை நீரைப் பெற்ற விளைநிலத்தின் அழகையும் உவமையாக வல்லவோ சொல்லலாம்!

சீதையின் மற்றொரு காக்ஷியாகிற சரணாகத தர்மத்தை ராமனுடைய ஸஹதர்மசாரிணியாக காண்போம். இதைப்பற்றி துளசிதாஸர் ஆரண்யகாண்டத்தில் அத்ரி, வால்மீகி, அகஸ்திய வசனங்களாலும், யுத்தகாண்டத்தில் உமா மஹேஸ்வரர்கள், தேவர்கள் பிரும்மா முதலியவர்களின் ஸ்துதிகீதங்களாலும், லங்கா காண்டத்தில் ஸ்ருதிகீதை, ஸனகாதி முனிவர்களின் புகழ்வசனங்களாலும் நாம் அறிகிறோம். வைஷ்ணவ நூல்களில் பிராட்டியின் புருஷகாரத்வம் முக்கியத்வம் பெற்றது. அதைப்பற்றிய முழுவிவரங்கள் வால்மீகி பகவானால் சரணாகதரக்ஷகம் என்கிற ராக்ஷஸிகளுக்கும் தேவமாதர்களுக்கும் அபயம் கொடுத்ததைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் கம்பரும் துளசிதாஸரும் அவைகளை வர்ணிக்கவில்லை. வைஷ்ணவர்களின் ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த துளசிதாஸர் அதை மனத்தில் ஸ்மரித்து பிராட்டிக்கும் முக்கியத்வத்தைக் கொடுத்திருக்க வேண்டும். இதை நினைத்துத்தான் துளசிதாஸர் லங்காகாண்டத்தில் திரிஜடை சீதை ஸம்வாதங்களை ராவணனுடைய ஸம்ஹாரத்திற்கு முன்பு புகுத்தியிருக்கிறர். ஆனால் பரதனுடைய சரணாகதியும் பிராட்டியின் ஸந்நிதானத்திலே நடந்தது. காக்கையும் உயிர்பெற்றது பிராட்டியின் ஸந்நிதியிலே தான். வாலியும் வதம் பெற்றது பிராட்டியின் அருகில் இல்லாமையாலே என்று கம்பர் சொல்லுகிறர். இந்த கட்டங்களை துளசிதாஸர் சொல்லியபோதிலும் பிராட்டியினுடைய புருஷகாரத்வமும், பகவானுடன் பிராட்டி சேர்ந்து செய்யும் ரக்ஷகத்தொழிலும் பிராதான்யமடையவில்லை. ராமனைப்பற்றிச் சொல்லும்போது பிராட்டியும் அதில் அடங்கி விட்டாள். அவ்விதமே நாம் ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும். ஆனால் துளசிதாஸரும் கம்பரும் சீதையை ஆதிதம்பதிகள் என்று சொல்லுகிறர்கள். கம்பன் மேலும் சொல்லுகிறன். "பாற்கடலில் அவர்கள் பேசிவைத்துக்கொண்டு பூமியில் ஒருவருக்கொருவர் சகாயம் செய்வதற்காக படுக்கையிலிருந்து பிரிந்து மீண்டும் சேருவதற்காக லீலை நடத்துகிறர்கள்." இந்தக் கருத்தை ஒட்டி, பஞ்சவடியில் சீதா பஹரணத்திற்கு முன்பு ராமன் சீதையிடம் சொல்லும் வார்த்தைகளை ராமசரிதமானஸத்தில் கவனிப்போம். "பிரியே, சுசீலமான பதிவிரதா நடத்தை உள்ளவளே, நான் மனுஷ்ய லீலை செய்து இந்த உலகத்தில் மனோஹரமாக லீலை செய்ய விரும்பு

கிறேன். மனுஷ்யர்களின் ஹிதத்திற்காக ராக்ஷஸர்களை அழிக்கும் வரையில் நீ அக்னியில் ஒளிந்துகொண்டு, மாயை ரூபம் எடுத்துக் கொண்டு என் ஸ்திரியாக வசி.'' பிரபுவின் வசனப்படி அந்த சீதை அக்னியில் புகுந்து, தனது நிழலாகிற பிரதிபிம்பத்தைப் பிரகடனப் படுத்தினுள். இதே மாதிரி தனது நாடகத்தை வேறு ஒரு சந்தர்ப் பத்தில் ராமன் சீதையிடம் சொல்லி, பரதனுக்கு பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும் என்று இருவரும் திட்டம் போடுகிருர்கள். சீதை ராமனுடைய நாடகத்தில் மனேனுகூலையாக விருப்பதாலும் மானிட ஸ்திரியைப் போல நடந்துகொண்ட படியாலும், தர்மவத்ஸலையாகவும், தர்மபத்தினியாகவும் ஆகிருள். சீதை லக்ஷ்மியின் அவதாரமாக விருந்தபடியால், அவளையும் மனித ஸ்வபாவத்திற்கு ஏற்ப கம்பனும் துளசிதாஸரும் நடிக்கவைக்கிருர்கள். சீதை தனது பெற்ருேர் களிடமும் தசரதர், கௌஸல்யாதிகளுடனும், லக்ஷ்மணுதிகளுடனும் பெரியோர்களிடமும் நடந்துகொண்ட சாரித்திரிய வாழ்க்கையும், ராவணனிடமும் காட்டிய கருணையும் பொறுமையும், உபதேசங்கள் யாவும் அடங்கிய புத்திமதியும் வியக்கத்தக்கவை அல்லவா? மனிதனின் அதர்ம வாழ்க்கைக்கு அவள் அழிக்கும் கருவியாக உருவத்திலும், குணத்தாலும் கம்பரும் துளசிதாஸரும் கற்பித்திருக்கிருர்கள். ஆனல் ஒன்று மிகமுக்கியமான விஷயம். அதையும் சொல்லித்தான் ஆக வேண்டும். சீதை ராவணனை திருத்தமுயன்ருள். தன்னை வலுவில் சிறைப்படுத்திக்கொண்டு தேவமாதர்களை ராவண சிறையிலிருந்து விடுவித்த கருணுமூர்த்தி. அவளுடைய சீலமே ராமனுக்கும் ரகு குலத்திற்கும் ஜனககுலத்திற்கும் பெருமை கொடுத்தது. ஆஞ்ச நேயரின் சிரமங்களும் ராமனுடைய பரிஸ்ரமங்களும் வீண்போகவில்லை. மாயை சீதை இந்திரஜித்தால் வெட்டப்பட்ட சமயம் மிக்க மனம் கலங்கின ராமன், ராவணயுத்தத்திற்குப் பின்பு ஏன் அந்த கடூரமான வர்த்தைகளைச் சொல்லி அவளைத் தீயில் குளிக்கும்படி தூண்டினுன்? "பிற புருஷனுடைய வீட்டில் வசித்து, மாமிசாதிகளை உண்டு, களித் திருக்கிருய், உனது கற்பு அழிந்து விட்டிருக்கும். அதனை இழந்து நீ சிறிதும் நாணமில்லாமல் சிங்காரித்துக்கொண்டு, வந்திருக்கிருயே, நான் உன்னைச் சேர்த்துக்கொண்டு விடுவேன? தேவர்களின் துன்பத்தை நீக்கவும், சாதுக்களைக் காக்கவும், இராவணனல் எனக்கு நேர்ந்த அவமானத்தைப் போக்கவும் இராக்கதர்களுடன் போர் புரிந்தேனேயன்றி, உன்னை நினைத்தல்ல,'' என்கிருர். அதற்குபதிலாக சீதையின் வசனங்களும் தீக்குளித்தலும் ஏற்பட்டன. வால்மீகி பகவானுடைய பதிலே மிகமிகச் சிறந்ததாக விருக்கிறது "எனது கற்பிற்காகவும், என் பெருமைக்காகவும் எனது ஆத்மதிருப்திக்காகவும். நான் மானத்துடன் வாழ்ந்தேன். என்பிறப்பு, பிரபு, உம்முடைய பிறப் பினும் மிக உத்தமமானது, என்ருலும் உமது இஷ்டத்திற்காகவும் திருப்திக்காவும், நான் பாரதந்த்ரியம் விரதம்கொண்டு உம்மையே

  

அனன்யகதியாக அடைந்து, உமக்கு இந்த உடலும் ஆத்மாவும் உரிமையாவதாலும், அனன்யார்ஹ விசேஷத்தாலும் நான் உமது வசனப்படி தீயில் குளிக்கிறேன்'' என்று சொன்னாள் என் பரதேவதை. அவளுடைய அடக்கத்திற்கு ஏற்ப லக்ஷ்மணனிடமிருந்தும் மன்னிப்பைப் பெற்றுக்கொண்டாள். கடைசியில் ராமனும் சீதையிடம் "தேவி, உன்னுடைய தூய்மைத்தனத்தை யாவருக்கும் அறிவிக்கும் பொருட்டே உன்னைத் தீயிற் பாயச்செய்தேன். ஆதலின் நீ அது குறித்துக் கவலைப் படாதே,'' என்று தேற்றினான். சீதை ராமன் வராமலிருந்தோ, நேரம் கடந்தோ வந்திருந்தால் மரித்து விட்டிருந்தால் ராமனின் கதி என்ன ஆகும்? ஆகையால் ராமனுடைய மகத்துவங்களைப் போல சீதையின் பெருமைகளும் பெருமைகளே. அதனால் வால்மீகி பகவான் பிறப்பிலும், சாரித்திரிய வாழ்க்கையிலும் தனக்கும் பிறர்களின் நன்மைக்காகவும், குலத்தின் பெருமைக்காகவும் வாழ்ந்து வந்த தியாக மூர்த்தியான சீதாதேவியின் பெருமை பன்மடங்கு உயர்ந்தது என்கிறார். அவளுடைய ஆத்ம கௌரவம் பரத்வத்தைப்போல மிக்கச் சிறப்புள்ளது. வீரம் எவ்விதம் ரகு குலத்திற்கு சிறப்போ, சொந்த மரியாதைக்கும் ராமனுக்கும் அவசியமோ, ஜானகிக்கும், அழகும் பதிவிரதையின் ஸ்வரூபமும் அவசியமே. ராமனும் சீதையும் மனிதர்களுக்குத் தர்மத்தை நடத்திக்காட்ட அவ்வளவு சிரமப்பட்டார்கள். தர்மத்தின் ரக்ஷணம் மஹா கஷ்டங்களை ஸம்பவிக்கும். காமம் தர்மம் ஆகியவற்றில் பற்றுதலினால் அதிக துக்கம்தான் ஸம்பவிக்கும். பகவானும் பிராட்டியும் சுத்த ஸத்வமாதலால், அவர்களுக்கு ஞான ஆனந்தமே ஸ்வரூபம். சாதாரண மானிடர்களைப்போல மனிதர்களாகவும், கடவுளாகவும் அவர்கள் திகழ்ந்தார்கள். சீதையின் பிரிவினால் யேற்பட்ட துக்கம் பற்றுதலினால் ஏற்பட்டது என்று நமக்கு விளக்குகிறார்கள். இரண்டாவது தடவை சீதையை ராமன் தியாகம் செய்வதற்கு ராஜ தர்மம் உதவியது. இந்தச் செயல்களால் உலகம் தன்னை மனிதன் என்று தெரிந்து, சொல்ல வேண்டும் என்று ராமன் நினைக்கிறதாக வால்மீகி சித்திரிக்கிறார். ராம நாடகத்தை சிறப்பாக நமக்குக் காட்டிய ஆதிகவியாகிய வால்மீகி பகவானுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்களும் ஸநாதனமானவை. ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவை. ஆகையால் தர்மங்களை ஆசரணை செய்வதை விட நித்ய தம்பதிகளையே ஆராதிப்பது ஸகல தர்மங்களிலும் மிகச் சிறந்தது. அதுவே பரத்துக்குப்பரம். ஒருவித விகாரமின்றி தர்மத்தை அனுசரித்த அந்த நித்ய தம்பதிகள் நமக்கு மார்க்க தரிசிகளாகவும் வழி காட்டி நிற்பவர்களாகவும் இருக்கிறார்கள். இந்த மனோபாவத்தை அடைந்த துளசிதாஸர் ராமனையும் ராமநாமத்தையும் மிகமிக உயர்த்திச் சொல்லி, உமாமஹேஸ்வர ஸம்வாதங்களையும் அவர்கள் காட்டிய அவிச்சின்ன பக்தியையும் ராமசரித மானஸத்திற்கு பேராதாரமாக வைத்து ராமசரிதமானஸத்தை கற்பித்திருக்கிறார். அப்பேற்பட்ட

புருஷோத்தம ராமனை, மரியாதா புருஷோத்தம ராமனை நாம் இப்போது சுவைக்க ஆரம்பிக்கலாம்.

துளசிதாஸரின் மனோபாவம் சமீபகாலத்தில் வாழ்ந்து வந்தவரும், அவரால் குருவாக மதிக்கப்பட்டவரும், ராமனையே ஆராதித்து நாத யோகத்தின் மார்க்கமாக ராமநாமத்தின் பிரபாவத்தினாலே சித்தி அடைந்த தியாகராஜருடைய மனோபாவத்தைப் போலிருக்கின்றது. அவர்களுடைய தூய வாழ்க்கையினாலும் அனுபவ ஆனந்தங்களாலும் நம் போன்ற ஜீவர்களுக்கும் ராமனுடைய சரணாரவிந்தங்களுக்கும் நித்ய ஸம்பந்தம் உண்டு, ஏற்படலாம், ஜீவிய வாழ்க்கைக்கு தேவைப் படக்கூடிய பிராணவாயுவாகவும், உணவு போலவும், ஆத்மாக்களைப் பிழைப்பிவைக்கும் ராம சஞ்சீவினி ஸம்பவிப்பது போலவும் நாம் மனத் தேறுதல் அடையவாம். ஆகவே அவர்களின் உள்ளக் கருத்துக்களையும் வால்மீகாதிகளின் கருத்துக்களையும் நாம் ஆராயலாம்.

துளசிதாஸரின் ராமன் மரியாதா புருஷோத்தம ராமன் என்று வட இந்தியாவில் பெரும் புகழுடன் சொல்லப்படுகிறான். அவதாரம் என்கிற சொல்லுக்கு பரமபதத்திலிருந்து பூமியில் பகவான் வருவதைக் குறிக்கிறது. அவ்விதமாத்திரமல்ல. பரமவிபவ மூர்த்தி கண்ணுக்குப் புலப்பட்டு, ஸஹஜமாக நம் போன்றவர்களைப்போல சஞ்சரித்து, உண்டு, பழகி, நித்ரைக்கு எழுந்திருந்து, நியம ஆசாரங்களை விடாமல் செய்தும், அந்த மானிட வாழ்க்கையிலும் அவருடைய பரத்வ ஸ்வரூபங்களும் அவரை விட்டு விலகாமலும், ஸௌலப்ய காருண்ய வாத்ஸல்ய ஸ்வாபாவங்கள் இயற்கையாகவேயிருந்து அளிப்பவராகவும், மேகம் மழையைப் பொழிவதுபோல, அண்டினவர்களிடம் கருணையைப் பொழியும் வள்ளலாகவும் பகவான் பிராட்டியுடன் திகழ்கின்றான். தாய் தந்தை குருவுக்கு அடங்கி, தன்னையும் தனது தம்பிமார்களையும் பத்னியையும் அவர்களுடைய வேலைகளுக்கும், லோகஹிதத்திற்கும், உலகத்தின் நன்மைக்காகவும் செய்யவேண்டிய காரியங்களில் நியமித்துக்கொண்டு, பிறர்களால் இட்ட கட்டளைகளை நிறைவேற்றிக்கொண்டு தியாக சீலனாக வாழ்ந்த வாழ்க்கையல்லவோ புருஷோத்தம மனிதனின் வாழ்க்கை.

ராமனை மஹாவீரன், என்று வேதாந்த தேசிகரும் வியாஸபகவானும் சொல்லியிருக்கிறார்கள். சீலத்தை அடுத்த வீரத்தைஉடைய மஹா பராக்ரம முள்ள ராமனை ராவணனே கொண்டாடியிருக்கிறான். கரதூஷணாதிகளை ஒருவனாக வென்ற ராமனை சீதை தழுவிக்கொண்டாள். அதனால் ராவணன் “விக்ரமை: ரஞ்சநீயஸ்ய” என்று புகழ்கிறான். மூலபலவதம், கரதூஷணாதிகளின்வதம், கும்பகர்ணவதம், பரசுராமரின் சந்திப்பு, விராதவதம் இவைகளே அவனுடைய அமானுஷ்யமான வீரத்திற்கு சான்று. விபீஷணனை அழைத்து வரும்போது, சுக்ரீவனுக்கு அவன் இட்ட கட்டளை, “யதிவா ராவணம் ஸ்வயம்.” அதிலும் தர்மயுத்தம் செய்வதில் பிரபு ஸமர்த்தர். ராவணனிடம் காண்பித்த பொறுமையையும் பத்துப் பதின்ஒன்று மாதங்கள் சீதையை விட்டுக்

காத்திருப்பது, ஹனுமான் அங்கதாதிகளை தூதுவிடுதல், அவனுடைய ராஜ தர்மமாகிற ஸாம தான பேத தண்டம். ஆந்தஜேயும், ஆபிமுக்யம் கொள்ளப்பார்த்து, கைகூடாவிடில் கடைசியாக கொன்று ஒழிப்பதே சத்யபராக்ரமத்திற்கு முன்னோர்கள் செய்துள்ள அர்த்தம். அதன்படி, ராமனுடைய பொறுமையையும், மார்பில் ராவணனை அடிப்பதற்கு முன் அவன் காட்டிய கருணையும்தான் துளசிதாஸர் ராமனைப்பற்றிய எழுதிய வீரச்சித்திரம். ராமனுக்கு அவனை அடிக்க மனம் வரவில்லை. ராவணன் பிராம்மணன். தவவலிமை கொண்டவன். அரசன், தன்னிடம் வந்தாலும் வருவான் என்கிற நம்பிக்கை. பிரபு அடிக்கடி விபீஷணனையும் தேவர்களையும் பார்த்துவிட்டு யோசிக்கிறார். வாலியை மறைந்து வதைத்தது மாத்திரம் அவருக்கு அபகீர்த்தியைக் கொடுத்திருக்கிறது. ஆனால் அதன் காரணத்தை துளசிதாஸர் சரியாகச் சொல்லவில்லை. கம்பர், வால்மீகி, பிரும்மாவினால் வாலிக்குக் கொடுக்கப்பட்ட வரதானமே காரணம் என்கிறார்கள். ஒருவேளை வாலி சரணமடைந்து விட்டால் ராமனை நம்பிய சுக்ரீவனின் கதி என்னவாகும்?

ராமன் தர்மக்ஞர், தர்மவிக்ரஹவான். வேதாந்த தேசிகர் ராமனை ஸுஹ்ருத் பிரபன்ன ஜனஸம் ரக்ஷகர் என்கிறார். ஆஸ்ரிதர்களைக் காப்பாற்றும் விஷயத்தில் பரபரப்பைக் காண்பிப்பவர், சரணாகததர்மத்தில் சூக்ஷ்மம், அஹிம்சை, தீனர்களிடம் காட்டப்படும் காருண்யம், பரம அபராதிகளையும் க்ஷமிக்கும் பொறுமை, மேலானவர்கள் சமமானவர்களிடம் காட்டவேண்டிய கருணையாகிறதயை, அனுகம்பை (துக்கத்திற்கு நடுங்குதல்) அனுகிரோசம் (துக்கமடைந்தவனுடன் சேர்ந்து அழுவது), பயமின்மை, ஸர்வஸ்வாமித்வம், ஸர்வசேஷித்வம் எல்லாம் அடங்கியிருக்கின்றன. ஒருவனைச் சரணமடைய வேண்டுமானால், அவனுக்கு ஜீவனை உஜ்ஜீவிக்கச் செய்யும் ஆற்றலும் வள்ளல் தனமுமிருக்கவேண்டும். அவனே ராவணாதிகளையும் பரிஹரிக்கும் விதம் வேருடன் கிள்ளி எரிய ஸாமர்த்தியமும் அமையப் பெற்றிருக்க வேண்டும். அதுமாத்திரமல்ல. ஸர்வசுலபராகவும், எளிதில் அடையக் கூடியவராகவும்இருக்கவேண்டும். இந்த சௌலப்யம் வானராதிகளிடம் பரமகுதூகலத்துடன் காட்டப்பட்டது என்கிறார் துளசிதாஸர். அவர்களைப் பிரபு யோசனை கேட்பதும், பிற்பாடு ராஜதர்பாரில் அவர்களை எனது ஸகாக்கள் என்று குரு வஸிஷ்டரிடமும் தேவர்களிடமும் இந்திரனிடமும் சொல்வதும் ராமனுக்கே பொருந்தும். ஆனால் பிராட்டியைப் பிரிந்து வாழும் நாட்களில் சரணாகதர்களில்லாத வாலியும், ராவண கும்பகர்ணனும் வதத்தை அடைந்தார்கள். அதற்கு பிராட்டியின் ஸந்நிதியில் இல்லாமையே காரணம் என்கிறான் கம்பன். "தேவியைப் பிரிந்தமையால் திகைத்தனை போலுஞ்செய்கை", பிராட்டியின் அருளில்லாமையே வாலியின் வதத்திற்குப் காரணமாகவும், பிள்ளை லோகாச்சாரியார் "இவள் ஸந்நிதியில் காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்கிறார். ராமன் அயோத்யாவாசிகளிடம்

காட்டிய அன்பும் ஒருவிதத்தால் ராமானுக்ரஹத்தால் ஏற்பட்டது. ஆகவே பிரபுவினுடைய சரணுகததர்மஸம்ரக்ஷகத்தை துளசிதாஸரின் வாக்கியங்களால் நாம் இனி அனுபவிப்போம்.

துளசிதாஸரின் ராமசரிதத்தில், சுந்தரகாண்டத்தில் விபீஷண சரணுகதி கட்டம் வருகிறது. ஸ்ரீ ராமன் சுக்ரீவனுக்குச் சொல்கிருர். "எவன் சரணுகதனை ரக்ஷிக்காமல் தள்ளி விடுகிருனே, அவனுக்கு பெரும் பாபம் ஸம்பவிக்கிறது. அவன் கோடி விப்ரர்களை வதம் செய்த பாபத்தை அடைகிருன். அதுமாத்திரமில்லை, அவன் தீனனுக விருக் கட்டும். கோடி விப்ரர்களை வதம் செய்த மஹா பாபியாக விருக்கட்டும். எந்த ஜீவன், என்னை நோக்கி ஸன்முகத்தோடு வருகிருனே, அவ னுடைய கோடிக்கணக்கான ஜன்மங்களில் செய்யப்பட்ட பாபங்களை அந்த க்ஷணத்திலேயே நாசம் செய்வேன். அனுலோசித அசேஷலோக சரண்யன். பாபிகளாகிற ராவணன் போன்றவர்கள் என்னை ஸர்வலோக ரக்ஷகன் என்று தெரிந்துகொள்ளாமல், ஒரு சாதாரண மானிடனைப் போல என்னை நினைத்துக் கொள்கிருன். என்னைப் பரர்ப்பதற்கே பயப்படுகிருன். விரோதியாக விருந்தாலும் சரி, கபடவேஷத்துடன் பசுத்தோலைப் போர்த்திக்கொண்டு வரும் புலியாக விருந்தாலும் சரி, அவனுக்கும் ரக்ஷகம் அளிப்பேன். ஏன் தெரியுமா? நான் ஸர்வசக்தி மான்; ஸர்வஸ்வாமி; ஸர்வஸமர்த்தன்: நான் க்ஷமித்தால் மறுப்பார் யாரும் இருக்கமாட்டார்கள். ஒரு முறை வணங்கினுலும், அனன்ய ஸாத்தியம் என்று என்னை சரணமடைந்தாலும் நான் உதாரஹ்ருதய னுகிவிடுகிறேன். அவன் பயமடைந்திருந்தாலும், நான் ரக்ஷிப்பேன். நானே பிரணதபால், நானே பிரணதார்த்திஹரன், அடர்த்தியான கருணை என்னும் நிதியை உடைய நான் காத்தருள்வேன்." இவ்விதம் பரக்கப் பேசிய எம்பெருமான் அனுதியாக ஞான ஸங்கோசமில்லாத அயர்வறுமமர்களுடைய ஆனந்த ஸாகரத்தில் நிலைக்கப்பெற்று, அழுந்தப்பெற்று, ஆத்மாவுக்கு ஸ்வத: பிராப்தம் அடையச் செய்வதே என் லக்ஷியம். இந்த பகவானே ஏகவசன ஸத்யமுள்ள விரதன். தன்னைப் பெறுகைக்கு தானே உபாயமாக நிற்கின்ருன். அவனே ஸித்த ஸாத்ய உபாயமாகிருன். அவனே ஸித்த ஸாத்ய பிராப்யமாகிருன். ஒன்றை யொன்று விடாமல் பிரதானமாய் நின்று, ஸர்வ ஸங்கிரஹமாகிருன். நாராயண ரஸத்தாலே, சரணுகதனை பொருளாக்கி, ஜராமரணுதிகழ்ந்து, நித்ய சஞ்சீவியாக, ஆனந்தமயமாக, அனந்தமான ஆராவமுதக் கடலிலே நித்யஸூரிக்கு ஒப்பாக என்னை அனுபவி," என்று சொல்லி உதாரஹ்ருதயத்துடன் விளங்குகிருன். இப்பேர்பட்ட ஸௌசில்ய, ஔதார்ய காருண்ய ராமனை விட்டுவிட்டு நாம் யாரை உபாஸிக்க வேண்டும்? என்கிருர் துளசிதாஸர்.

ராகவனை கிருதக்ஞர் என்று சொல்லலாம். வானரர்களின் உதவி யால் ராவணனை ஜயிக்க முடிந்தது என்று அவர்களின் உதவியை பிரபு பலதடவைகள் பறைசாற்றுகிருர். குஹனுக்கும் அவ்விதமே பிரபு

  

நன்றி செலுத்துகிறன். அது அவனுடைய நளின ஸ்வபாவம். ஒரு தடவை கைகூப்பினவனையோ, உபகாரம் செய்தவனையோ, அவனை மறக்காமல், இவனுக்கு நாம் ஒன்றுமே செய்யவில்லையே என்று வருத்தப்படுவானும் அவன். அத்துடன் பிறர் செய்த குற்றங்களையும் மறப்பவர். சுக்ரீவன் ராஜ்ய பட்டாபிஷேகத்திற்குப் பின்பு சீதையைத் தேடும்முயற்சியில் காலவிளம்பம் செய்ததைக் கண்டு கோபித்து, அவனே தன்னை அடக்கிக்கொள்கிறன். பிரபு துளசிதாஸர் இந்த கட்டத்தை நன்ருக வர்ணித்திருக்கிறர். இவன் திரும்புவான், இவனிடம் கருணையைக் காட்டவேண்டும் என்கிற நோக்கத்துடன் அருள் செய்பவர். அதேமாதிரி அயோத்தி ஜனங்களிடமும் சகவாஸ தோழமையைக் காட்டி, "என் ஸ்வஜனங்களே, நான் சொல்லுகிறபடி நடவுங்கள், என்னைப் பஜியுங்கள்," என்று அவர்களுக்கு உபதேசிக்கிறன். துளசிதாஸரின் உத்தரகாண்டத்தில் இந்த உபதேசத்தை நாம் காணலாம்.

ராம கிருபை யாருக்கு பரிபூர்ணமாகக் கிடைக்கும்? வேதங்களில் சொல்லியபடி காரியங்களைச் செய்தும், தகாத காரியங்களை செய்யாமலிருந்தும் ராம கிருபையை அடையலாம். ஆனால் ஜன்மமரண சுழல்களிலிருந்து ஒருவன் தப்பவேண்டுமானால், ஸம்ஸ்ருதி என்று சொல்லப்படும் பவசாகரத்திலிருந்து விடுதலை அடையவேண்டுமானால், அவன் ராம பக்தியை, அவிச்சின்ன ராமபக்தியை அனன்ய பிரயோசனமாகச் செய்யவேண்டும் என்கிறர் துளசிதாஸர். ராமன் ஒருவனே ஞானவைராக்யத்தை அளித்து, மோக்ஷத்தையும் அடையவைப்பான் என்கிறர். ராம சங்கல்பமே பரமஸுக்ருதமாகவிருக்கும். பகவானே ஸர்வக்ஞன், ஸர்வஸூத்திரதாரியானபடியால், அவனே நம்மை ஆட்கொள்கிறன். பகவானே ஆராய்ந்து பார்த்தும் கடாக்ஷித்தும், திருவுள்ளம் பதறியும், நம்மைக் கட்டிக்காக்கிறன். ஆகையால் பகவானே ஸுக்ருதம் என்று நினைக்கும் மஹாபாகவதனை தன் மக்களைப் போலவும் கன்றுகளை தாய்ப்பசு நினைப்பது போலவும் நினைக்கிறன். ஆளவந்தார் சொல்லியபடி, க்ருதிகிருதக்ஞ: என்கிறபடி, கலிகாலத்தில் மனம் சுத்தமில்லாத போதிலும் பாஹ்ய கர்ம வசனசுசிகளை அவன் அங்கீகரிக்கிறன். ஆதலால் கலியுக வரதனுகிற ஸ்ரீராமனை விட்டுவிட்டு வேறு எந்த தெய்வம் ஸர்வசுலபமாக, ஸர்வஹிதராக அடையக்கூடும் என்கிறர் துளசி கோஸ்வாமி.

ராமனுடைய ஸத்ய விரதம் மிக்கப் பெயர்போனது. கடற்கரையில் அவனல் போதிக்கப்பட்ட சரணகத ஸம்ரக்ஷகம் ராமனைப் போன்ற வார்த்தை சுசி உள்ளவனுக்குத்தான் மிகப் பொருந்தும். அவன் தன் சகாக்களான வானரர்களுக்கும், அயோத்யா வாசிகளுக்கும் தன்னையே ஏக தெய்வமாக உபாஸிக்கும்படி சொல்லி, அவர்களின் க்ஷேம யோகங்களை காப்பதாகவும் வாக்களித்தான். வியாஸ ஸ்மிருதியில் ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம், எது பிராணிகளுக்கு ஹிதமோ, அதையே ஸத்யம் என்கிறர்கள். ஸத்யம் அனர்த்தம் விளைவிக்குமானல் ஸத்ய

மாகாது. "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்ய மப்ரியம்" என்பது வியாஸவாக்கியம். சரணாகதனை ப்ருகு மஹரிஷி யானவர் பொய்சொல்லி ஸம்ரக்ஷித்தார். ராமோத்விர்நாபி பாஷதே என்கிறது பிரஸித்தமான வாக்யம். ஒக்கமாட்ட, ஒகபாண, ஒகபத்தனி விரதம் கொண்டவன் ஸ்ரீராமன். ராமன் ஒருக்காலும் பொய் சொன்ன தில்லை; சொல்லப்போகிறதில்லை; சத்தியத்தின்மேல் ஆணை, என்று இரண்டுதடவைகள் ராமன் சுக்ரீவனிடம் தன்னைப்பற்றிச் சொல்கிறான். "அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசன, ஏதத்தே ப்ரதிஜாநாமி ஸத்யேனை வ ச தேகபே" என்று இருதடவைகள் ராமன் சொல்லுகிறான். இதற்கு சான்றாக ராமன் கிஷ்கிந்தாபுரிக்கோ லங்கா புரிக்கோ உள்ளே வரமறுக்கிறான். பரதனை பதினான்காம் ஆண்டின் முடிவிலே சந்திக்கச் சொல்லுகிறான். ஆதலால் ஜடாயுவுக்குக் கொடுத்த மோக்ஷபதம் ராமனின் ஸத்யவாக்குக்களின் பெருமையாகக் கொண்டது என்கிறார் அண்ணங்காச்சாரியார். ஆகையால் ராமன் சத்யத்தால் லோகத்தை ஜயித்தவன் என்கிறார் தசரதர். துளசிதாஸரும் இதை யுத்த அரங்கில் ராமனுடைய வசனங்களால் மெய்ப்பிக்கிறார். "பிரபு (தசரதரே) இவைகள் எல்லாம் உம்முடைய ஸத்ய ஆசரணைகளின் புண்ய பிரபாவங்கள். உம்முடைய அனுக்ரஹத்தால் நாங்கள் ராக்ஷஸ ராஜனை வென்றோம். தந்தைசொல் மிக்க மந்திரமில்லை." "புத்ரன் தகப்பனின் வசனப்படி நடக்கவேண்டும்" என்கிறார். இதுவரை அவ்விதம் செய்யும் புத்ரனை எங்கும் கேட்டதில்லை; அந்த ஸத்ய தர்மத்திற்கு ஏற்ப, புத்ரனின் வசனங்களைக் கேட்ட தகப்பன் அதிப்ரீதியை அடைந்தார். பிரபு அவருக்கு மோக்ஷத்தை அளிக்கவில்லை. அவரைப்போல ஸகுண உபாஸிகளுக்கு உபாஸிப்பது, ஜபிப்பது, எல்லாம் மாயை ரஹிதமான சச்சிதானந்த ஸ்வரூபமும் அதன்படி விளங்கும் அத்புத மான கல்யாண குணங்களுமே. எப்பொழுதும் இன்ப ஆனந்த நிலையில் பரந்தாமனின் அடிகளைப் புகழ்ந்து ஸ்மரித்து, நின்றிருப்பதே. அவ் விதமான ஸகுண உபாஸக பக்தியை பிரபு தசரதருக்கு அளித்தார். அப்பேர்பட்ட பிரபுவை விட்டுவிட்டு நாம் யாரை நமது ரக்ஷகத்திற்கு அடையலாம்? ஹே மனஸே, சாந்தரூபத்தை அடைந்து, பதிதபாவன ரான சீதாராமனை பஜித்துவா. உன்னுடைய துஷ்ட ஸ்வபாவங்களை விட்டுவிட்டு, அந்தரங்க பக்தியுடன் ராமனை பஜித்துவா என்கிறார் துளசிதாஸர். வேதாந்ததேசிகர் சொல்லியபடி ராமன் ஸம்ரக்ஷணைக வ்ரதி, அதுமாதிரி ராக்ஷர்களால் இழைக்கப்பட்ட மஹரிஷிகளின் தொல்லைகளையும் அறிந்த பிரபு. "நீங்கள் அனைவரும் என்னைச் சரண மடைந்திருக்கிறீர்கள். உங்களது கஷ்டங்களைத் தீர்ப்பது எனது சொந்த பிரயோசனம்," என்கிறார். அப்பேர்பட்ட பரம பிரயோசன ராமனை விட்டுவிட்டு, வேறு எந்த தெய்வம் உதவக்கூடும்? என்கிறார் கோஸ்வாமி துளசிதாஸர். சீதாராம பதாப்ஜங்களே ஸம்ஸார பாரிஜாதம். அவரே தீனபந்து, ஹே சஞ்சலமான மனமே, உனது

  

சஞ்சல ஸ்வபாவத்தை விட்டுவிட்டு, ராமனைப் பஜி'' என்கிறார் அவர். பிரபு சரணாகதவத்ஸலன். சரணாகதர்களை காப்பேன் என்கிற தீக்ஷை செய்துகொண்டிருக்கிறான்.

ராமன் பரம சோபனமூர்த்தி, அழகின் உச்சிநிலை. தசரத மன்னர் ராமனை வரவழைக்கும்போது முன்னழகை சேவிப்பாராம், ராமன் செல்லும்போது பின்னழகை அனுபவித்து மாறிமாறி இன்னொரு தடவை வந்துபோ என்பாராம். ராமனுடைய அழகை கண்டு அனுபவித்து திருப்தி அடையாமல், ராமன் வனம் சென்றான் என்கிற செய்தியைத் தாளாமல் உயிர் துறந்தார் தசரத மன்னர். வால்மீகி பகவான் திருப்தி அடையாத தசரதருக்கு திருப்தியே பிறக்க வில்லை என்று சொல்லி முடித்தார். "ந ததர்ப்பஸ மாயாந்தம் பச்யமாநோ நராதிப:''. ராமனுடைய வடிவழகு ஜகன்மோஹன அழகு. ப்ரியதர்சனர் என்கிறார். லோகோத்தரமானது. கம்பர் தோள்கண்டார் தோளேகண்டார் என்கிற செய்யுளில் ஒவ்வொரு அங்கத்தின் அழகை மித்லாபுரி மாதர்கள் அனுபவித்தார்கள் என்று சொல்கிறார். வாலியும் இந்த அழகைப் பருகினான் என்று துளசிதாஸர் சொல்லுகிறார். ஆண்டாள் ராமனுக்கு மனத்துக்கினியான் என்று திருநாமம் சாத்து கின்றாள். சீதாபிராட்டி ராமனின் ரூப அழகுகளும் குண அழகுகளும் மஹார்ணவம்போல விருக்கின்றன என நினைக்கிறாள். துளசிதாஸர் சொல்லுகிறார், சீதை ஹனுமானைப்பார்த்து, "ஹனுமான், என் கண் களுக்கு மீண்டும் அந்த சியாமநீல மிருதுகாத்ரனாகிற ரகுநந்தனைக் காணப்பெறும் பாக்யம் கிடைக்குமா? எனது பரிபூர்ண லோசனங்க ளால் அந்த ஸ்யாம ம்ருது சுந்தரகாத்ரனைப் பார்ப்பதால் எனக்கு ஆனந்தம் சுகம் தாபங்களின் மறைதலால்யேற்படும் குளிர்ச்சி மீண்டும் கிடைக்குமா?. என்று விரஹதாபத்தினால் சீதை அழுகிறாள். ஆரண்ய காண்டத்திலும் முனிவர்களும், ஆஸ்ரமவாசிகளும், காட்டு வாசிகளும், பீல்களும் கோலர்களும் ராம சீதா லக்ஷ்மண திவ்ய சௌந்தர்யங்களைக் கண்டு வியந்தனர். மிருகங்கள், வனவாசிகள், நகர கிராமத்து ஜனங்கள், ஏன் விருக்ஷங்கள்கூட ராம சீதா சௌந்தரியத்தில் ஈடு பட்டன. அதற்கு துளசிதாஸர் காரணம் சொல்லுகிறார் "எப்பேற்பட்ட மன்மதாதி சௌந்தர்யங்களைவிட அதிநேர்த்தியான ரூபலக்ஷணங்கள் கொண்ட திவ்யமூர்த்திகள், விக்ரஹ ஸ்வரூபங்கள், அழகு பிம்பங்கள். அவைகளை ஒருதடவை பார்த்த பின்பு, இந்த பிரும்மாவினால் கொடுக்கப் பட்ட நேத்ரங்கள் ஜன்மலாபத்தையும், பயனையுமடைந்தன என்று சொல்லலாம். ஸ்ரீ சீதாராம தர்சனம் ஸர்வசாதாரணமா? மஹத்தான பாக்யங்களின் பலன் அல்லவா? பரமபாக்யங்களாகிற சுகத்தை அளிக்கக் கூடியது. பாக்யமும் பிரேமையும் வடிவழகும், கருணையும் பரமார்த்த மும் வடிவாகக்கொண்ட பிம்பங்கள் அல்லவா? சுபதர்சனர், பிரியதர் சனர். அவர்களை ஓடிக் கட்டி அணைத்துத் தழுவவேண்டும் என்கிற ஆசை ஒன்றுதான் உதிக்கும். அவர்கள் வழிநெடுக போகும்போது,

கண்களால் அம்ருத திருஷ்டியை வர்ஷித்துக்கொண்டு போனார்கள். ஒவ்வொரு ஜங்கமா ஜங்கம பொருளும், முள்ளும் செடியும் புதரும் மலையும், விருக்ஷங்களும் நதிகளும் யாவும், ஆனந்தமடைந்தன. அவர்களுக்குக் கோடி கோடிக்கணக்கான ஜன்மங்களை ஒரு விநாடியில் முடிவுபெறச்செய்து, முக்தர்கள் விரும்பும் மோக்ஷ சுகத்தை பிரபு அளித்தார். அவரைக்கண்டு ஆனந்த மகிமை அடைந்த ஸகல பிராணிகளுமல்லவோ தங்களுடைய ஜன்மங்களை சாபல்யமாக ஆக்கிக் கொண்ட புண்ணியவான்கள், கிருதகிருத்யர்கள் என்று தெரிந்து கொள்ளவேண்டும்'' என்கிறார் துளசிதாஸர். "இதோபார், நம்மைத் தேடிக்கொண்டு தெய்வம் தானே வந்திருக்கிறது. யத்ருச்சையாகவும் மஹாகிருபையுடனும் வந்திருக்கிறது. சீக்கிரம் ஓடிவாருங்கள், அனுபவியுங்கள், மற்றவர்களையும் அழைத்துவாருங்கள். ஒரு க்ஷணத்தில் கோடிக்கணக்கான ஜன்மங்களில் ஏகாந்த பக்தியுடன் செய்யப்பட்ட தபஸ்ஸிகளின் மாபலனை அனுபவியுங்கள்'' என்று தர்சனம் பாக்யம் பெற்ற ஒருவர் மற்றவர்களுக்குச் சொன்னார்கள். இதே பலனையும் ஆனந்தங்களையும் ஜலஜந்துக்களும் அனுபவித்தன.

பிராட்டியின் அழகு சௌபாக்கிய லக்ஷணங்களைப் போலவும், பகவானுடைய மஹாபுருஷ லக்ஷணங்கள் ஒவ்வொரு திருவடியிலும் இருபத்துநான்கு லக்ஷணங்களாகக் காணப்படும் என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் ரேகைவடிவமாகவும், ஏர், உலக்கை போன்ற உருவங்களாகவும், தாமரைப்பூப் போன்ற சித்ரவடிவங்களாகவும், புண்ய மருக்களாகவும், புண்ய அடையாளங் களாகவும் சொல்லப்படுகின்றன. இவைகளின் விவரங்களை ஆரண்ய காண்டத்தின் முடிவில் காணலாம். அப்பேர்பட்ட சுபாஸ்ரயமான மூர்த்தியை விட்டுவிட்டு, நாம் ஏன் நரஸ்துதி செய்யவேண்டும்? என்கிறார் துளசிதாஸர். அதேமாதிரி தியாகராஜரும், "ராமா, உன்னுடைய தர்சனம், உன் கதை, உன் நாமஜபம் நிதிசால சுகம். ராமசுதா சௌக்யத்தையும் சௌரியத்தையும் சாந்தியையும் கொடுக்கிறது. கர்மபந்தங்களை நாசம் செய்கிறது. எது நியாயம், எது அநியாயம் என்று தெரிவிக்கிறது. ஆகையால் நீயல்லவோ பரமார்த்தமானலாபம். உன்னைக் காண்பதல்லவோ பரமார்த்தமான ஜன்ம லாபம். உன்னை ஜானகி தன் ஹ்ருதயக்கூண்டில் கிளியை மாதிரி அடைந்து வைத்திருந்தாளே, அது மாதிரி நான் என் ஹ்ருதயத்தில் தேக்கி வைத்துக்கொண்டு, ஹே முனிமானஸ ராமா, துளசிதாஸரால் சேவிக்கப்பட்ட சீதா நாயகா, ஸதா அனுபவித்துக் கொண்டு உன் நிஜ ஸம்பந்தத்தை ஸதா பருகவேண்டும்'' என்று பல தடவைகள் தியாகராஜர் வேண்டுகிறார்.

ராமன் நிஜமாகவே ராஜ ரிஷியின் வாழ்க்கையை நடத்தினார். பிராம்மணர்களையும் ரிஷிகளையும் ஸம்ரக்ஷித்து, வர்ணாஸ்ரம தர்மங் களைக் காப்பாற்றி, வேதங்களில் சொல்லப்பட்ட வைதிக கர்மாக்களையும்

தர்மங்களையும் ஸ்வயமாகவே ஆசரணை செய்து காட்டினார். நாபாகன் போன்ற அரசர்களைப்போல, "நான் பெரியவன், நான் சொல்வதுநான் ஸத்யம், நான் செய்வதுநான் தர்மம்," என்று வீணாக நினைக்காமல், பிராம்மணர்களுக்கும், ரிஷிகளுக்கும், வேதங்களில் சொல்லப்பட்ட தர்ம ஆசரணைகளுக்கும் அடங்கி, ஸத்ஸம்பிரதாயமாகிற வஸிஷ்ட விஸ்வாமித்திர சிஷ்ய பரம்பரையில் வந்த சிஷ்யனைப்போல வழுவறச் செய்து வந்தான். விஸ்வாமித்ர முனிவன் பின்னே சென்று யாக ஸம்ரக்ஷணம் செய்தான். காலையில் எழுந்து நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்வதில் ஊக்கம் காண்பித்தான். பிரும்மசார்ய ஆஸ்ரமத்திலும், சீதையை மணம் புரிந்த பின்பு கிரஹஸ்தாஸ்ரமத்திலும், பிராட்டியைப் பிரிந்து பரிதாபத்தோடு உழலும் சமயத்திலும், பிரபு காலம் தவறாது நித்ய கர்மானுஷ்டங்களைச் செய்து வந்தார் என்று துளசிதாஸரும் வால்மீகியும் தெரிவிக்கின்றார்கள். இந்த தர்ம ஆசரணைகளை ஒட்டியே, துளசிதாஸர் ஸனகாதி முனிவர்களின் வருதலையும், நான்கு வேதங்களும் பிராம்மண ரூபங்களைத் தரித்துக்கொண்டு பிரபுவை ஸ்துதி கீதம் செய்தார்கள் என்று சொல்லியிருக்கிறார். பகவான் ஸ்ரீராமச்சந்திரனால் வஸிஷ்டருக்கு அளிக்கப்பட்ட வரதானங்களைப்பற்றியும் துளசிதாஸர் சொல்லியிருக்கிறார். இதனால் பிரபு பிராம்மண, ரிஷிப்ரியர், வேதசாஸ்திரங்களில் அபாரமான நம்பிக்கை உள்ளவர் என்று தெரிகிறது. வால்மீகி பகவான் இந்த ராம விரதத்தை சீதாராம ஸம்வாதமாக சித்தரித்திருக்கிறார். ஆரண்யகாண்டத்தில், பிரபுவினிடம் சீதை சொல்லுகிறாள், "பிரபு, உலகத்தில் பொய்சொல்லுதல், பிறர் மனைவியை வேட்டல், பகையின்றி பரஹிம்சை செய்தல் ஆகிய மூன்றும் தீயச் செயல்கள். முனிவர்களுக்குத் தீங்கு இழைக்கும் அரக்கர்களைக் கொல்வது தருமம். ஆனால் நீரோ ராஜபதவியை விட்டு, தபஸ்வியாக காடு வந்திருக்கிறீர்" என்கிறாள். அதற்கு பிரபு பதில் சொல்லுகிறார். "சீதே, யாரையும் நான் தியாகம் செய்துவிடுவேன். என் பிரதிக்ஞையை, அதிலும் பிராம்மணர்களுக்குச் செய்த பிரதிக்ஞையை நான் தவறமாட்டேன். நீயும் என்னைப்போல தர்மத்தை அனுஷ்டிப்பதற்காக ஸஹதர்மசாரிணியாக, உன்னை நான் மணந்துகொண்டேன்" என்கிறார். ராமாயணத்தின் சர்ம ஸ்லோகங்கள் ஆகியவை—

> மித்ரபாவேன ஸம்பிராப்தம் ந த்யஜேயம் கதஞ்சன
> தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் கர்ஹிதம்
> ஸக்ருதேவ பிரபந்நாய தவாஸ்மிதி ச யாசதே
> அபயம் ஸர்வ பூதேப்ய: ததாமி ஏதத் விரதம் மம"

அவருடைய வாழ்க்கை மிக்க சாரித்ரியமான வாழ்க்கை. நல்ல ஒழுக்கம் கொண்ட வாழ்க்கை. துளசிதாஸர், பிரபுவின் அன்பையும், சஹோதர வாஞ்சையையும், சீதைக்கு தாய்மார்களிடமுள்ள பிரேமை, பக்தி,

கைங்கர்யங்கள் ஸகலத்தையும் விரிவாக உத்தரகாண்டத்தில் வர்ணித்திருக்கிறார். மொத்தத்தில் பெரியோர்களிடம் பணிவு, குருக்களிடம் பணிவு, பிறர் பொருள், மனைவியை நெஞ்சாலும் நினையாமை, தெய்வபக்தி, ஜிதேந்திரியத்வம் ஆகியவைகளைக் கொண்டவர்கள் ராமனும், ராமனுடைய சஹோதரர்களும், ராம ராஜ்யத்தில் வாழ்ந்த மக்களும். ஒரு மனைவியுடன் வாழ்தல், ஏகதாரம் என்பதுதான் நியதியாகவிருந்தது. துக்கங்களும் சுகங்களும் அவரவர்களுக்கு பகவத் சங்கல்பத்தினால் ஏற்படுகிறது என்கிற நினைப்பும், அந்த சமயங்களில் பகவானே ஹிதகாரியாகத் தகுந்த புத்தியை அளிக்கிறார் என்று ஜனங்கள் எண்ணிவந்தார்கள். "ஹரிர் துக்கானி பக்தேப்யோ ஹிதபுத்தயா கரோதிவை" என்கிறது சாஸ்திரம்.

புருஷோத்தம ராமன் பரம வித்வான். ஸகல சாஸ்திரங்களையுமறிந்த சம்பன்னன். குணதோஷங்களை அறியும் ஸர்வக்ஞன். சரணாகதரிகளை ரக்ஷிக்கும்போது தோஷமிருந்தாலும் நான் ஸம்ரக்ஷிப்பேன், தோஷமிருந்தாலும் என்னை வந்து அடைந்துவிட்டான்; அவன் துஷ்டனாகவிருந்தாலும் இருக்கட்டும், கோடி விப்ரர்களையும் கொலை செய்திருக்கட்டும், அப்பொழுதும் நான் அவனையும் ரக்ஷிப்பேன்" என்று பிரபு சுக்ரீவ வானராதிகளிடம் வாதாடுகிறார். துளசிதாஸர் மீண்டும் சொல்கிறார் "விரோதியாகவிருந்தாலும், சரணம் என்று சொல்லிவந்தாலும் சரி; அல்லது பயத்தினால் என்னைக் காப்பாற்று என்று சரண்யனாக வந்தாலும் சரி. விபீஷணனை அழைத்துவா." இதே கருத்தைத்தான் வேதாந்ததேசிகர் பின்பற்றினார். ஸ்ரீமத் ராமாயணத்தில் இந்த பிரகரணத்தில் "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத் ஸதாம் ஏத்த கர்ஹிதம்," தோஷமிருந்தாலும் பரவாயில்லை, அது கிடக்கட்டும் என்று பொருள்தோன்றும். வேதாந்ததேசிகர் "தோஷ: தஸ்யஸ்யாத்"—தோஷம் அவனுக்கு இருந்தே ஆகவேண்டும், அவ்விதமில்லாதபோனால், நமது கருணைக்கு, நிர்ஹேதுக கிருபைக்கு என்ன மதிப்பு? என்பது ராகவனின் திருவுள்ளமாம். அவனே ஸர்வஸ்வாமியாகவிருப்பதாலும், ஸர்வ ஸமர்த்தனாகவிருப்பதாலும், அவன் செய்வதே தர்மமுறையாக விருக்கிறது. சமுத்திரத்தை அணைகட்டிய ராமன் எதைத்தான் செய்யமாட்டான்?

ராமகிருபை என்று சொல்லுகிறார்களே அதுதான் யாது? அதுதான் ராமசீதாவின் கண் வீக்ஷணம், கடாக்ஷ வீக்ஷண்யம். பலவிடங்களில் துளசிதாஸர் ராமனுடைய அழகிய கண்களையும் சீதையின் கண்களின் அழகுகளையும் வர்ணித்திருக்கிறார். துளசிதாஸரின் ராம வர்ணனை ஒவ்வொரு அங்க அங்கமாகவிருக்கிறது. கும்பகர்ணனைக் கொன்ற பின்பு ராமன் யுத்த களத்திலிருந்து திரும்பும்போது அவருடைய அழகை பூர்ணமாக விவரித்திருக்கிறார். ராவண யுத்தத்தின்போது, அவருடைய கடாக்ஷ வீக்ஷண்யங்களை தேவர்களின் மீது பொழிந்திருக்கிறார். வனத்தில் நடமாடும்போது, அவர் தன்னுடைய குளிர்ந்த

  

கடாக்ஷங்களை ரிஷிகளிடமும் ஆஸ்ரமவாசிகளிடமும், ஜடாயு மரித்த சமயம் அந்த பக்ஷிராஜனிடமும், சபரியினிடமும், வாலியினிடமும் வானராதிகளிடமும், அயோத்யா வாசிகளிடமும் தந்து, ஸகலரையும் பரம சுத்தியுள்ளவர்களாகச் செய்திருக்கிறார். ராமனைக் காண்பது ஆனந்தம்தான். ராமன் அவர்களைக் காண்பது இன்னும் பேரானந்த மல்லவோ, அயோத்யா காண்டத்தில்

ய ச்ச ராமம் நபஸ்யேத் துயஞ்சராமோ ந பஸ்யதி
நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப் யேதம் விகர்ஹதே,

இதன் பொருளாவது: ராமனைக் காணாதவனும் ராமனால் காணப் படாதவனும் உலகில் நிந்திக்கத் தக்கவனாவான்; உலகத்தார் நிந்திப்பது இருக்கட்டும்; தன்னைத் தானே நிந்துத்துக் கொள்ள வேண்டியதாகும். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "செங்கமலத் தலர் போலும் கண் கை கால் செங்கனி வாய் அக்கமலத்திலை போலுந் திருமேனியடிகளுக்கே;" வால்மீகி பகவானும் "தம்பத்மதள பத்ராக்ஷம் ஸிம்மவிக்ராந்தகாமி நம்;" துளசிதாஸரும் இதே ஈடுபாடு கொண்டு பெருமாளுடைய பத்ம மலர்போன்ற கண்வீக்ஷணங்களை, குளிர்ந்த கடாக்ஷங்களை, பத்மதளம் போன்ற கண் அழகை, பத்மபத்ரம் (தாமரையிலை) போன்ற மரகதமணி சோபயை உடைய திருமேனி கொண்டவர், பத்மதளமும், பத்மபத்ரமும் சேர்ந்தார்போல் கமலக் கண்களும் மரகத பச்சை நிறமுள்ள திருமேனியும் கொண்ட ஸ்யாமள காத்ரன் என்கிறார் துளசி பிரபு. ஆகையால் ராமனைக் காண்பது போல, ராமனால் காணப்படுவது பரம புருஷார்த்தம் என்கிறார் துளசிதாஸர். துளசிதாஸர் சபரியின் எண்ணங்களையும், ஜடாயுவின் மன ஆனந்தங்களையும், அயோத்யாவாசிகளின் பேரானந்தங்களையும், வஸிஷ்ட, விஸ்வாமித்திர ஸனகாதி முனிவர்கள், நாரதாதி ரிஷிகளின் ஆனந்தங்களையும் இந்த எண்ணத்தையே, இந்த சுபராம தர்சனமாகிற ராம கிருபையையே நினைத்துச் சொல்லியிருக்கிறார். ராமனும் சீதையும் விரும்பிக் காணத்தக்க மஹாலக்ஷண ஸம்பத்து உள்ளவர்கள் அன்றோ?

வால்மீகி ராமாயணத்தில் நாரத வால்மீகி ஸம்வாதத்தில் ஆத்ம வான்க:? என்கிற கேள்வி பிறக்கிறது. ராமன்தான் ஆத்மா, ராமன் தான் ஆத்மவான் என்று பல தடவைகள் பல இடங்களில் துளசிதாஸர் சொல்லியிருக்கிறார். ஸகல ஜீவராசிகளையும் படைத்து மேய்க்கும் ஸர்வ நியந்தா அவரல்லவோ, என்று அவருடைய பரத்வ மகிமைகளை மந்தோதரியும், ஹனுமான் அங்கதனும் மால்யவான் போன்றவர்களும் ராவணனுக்கு உபதேசித்திருக்கிறார்கள். அவனே புருஷன், புருஷோத் தமன் என்று சகல ரிஷிகளும், வால்மீகி, அத்ரி, அகஸ்திய ரிஷிகளும் நம்பி விஸ்வஸித்து அவனைப் பூஜித்து ஆராதித்திருக்கிறார்கள். ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே ராமனாக அவதாரம் செய்திருக்கிறார் என்று விபீஷணனும் சுக்ரீவனும், ஹனுமான்ஜியும், வஸிஷ்ட விஸ்வாமித்

திரரும், ஜனகரும் அவரது மனைவி ஸுநயனாவும், சுமித்திரையும், கௌஸல்யையும் நம்பினார்கள். மானிடராக அவதரித்து, ஒரு ஜீவாத்ம பாவத்தை தானே ஸ்வீகரித்துக்கொண்டு பாலலீலைகளையும், மாயலீலை களையும் செய்த பெருமாள் அனைவரையும் ஒரு பெரிய சூத்திரதாரியைப் போல தனது கைங்கர்யத்திற்கும் தனது லீலைகளுக்கும் உட்படுத்து கிறார். இந்த மாயா லீலா நாடகத்தை பிரபு சம்பு உமைக்கு அவ்வப்போது எடுத்துக்காட்டி நமக்கு விவேக ஞானத்தை புகட்டி யிருக்கிறார். அப்பேற்பட்ட பரமாத்மா, "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்று சொல்லக்கூடிய புருஷோத்தம ராமன் சேஷபூதனாய், பரதந்திரனாய் வானராதிகளிடமும் சுக்ரீவாதிகளிடமும் தனது காரியத்திற்கு உதவி பெற்றுக் கொள்ளும்படி வந்து பிறக்க வேண்டுமா என்று கேள்வி பிறக்கிறது. இதைத் தான்பெரியோர்கள் அவதார ரஹஸ்யம் என்பார்கள். ராமன் கிங்கரனாக விஸ்வாமித்திர யாகத்தை ஸம்ரக்ஷித்தான். தசரதருக்கு அடங்கின மானமுள்ள புத்ரனைப்போல வனம் சென்றான். சுக்ரீவனுக்கும் விபீஷணனுக்கும் உதவி புரிந்து அரசு அவர்களுக்கு ஈட்டிக் கொடுத்தான். அவனுடைய சௌலப்யத்தை தனது தாய்மார்களுக்கும் ரிஷிகளுக்கும், வானரர் களுக்கும் தம்பிகளுக்கும் ஹனுமான்ஜி அங்கதன் விபீஷணாதிகளுக்கும் அயோத்யா வாசிகளுக்கும் வள்ளலாக வாரிக் கொடுத்தான். அப்பேற் பட்ட சமயங்களில் பிரபு ஸர்வ சாதாரண ஜீவாத்மா, பலம் குன்றி பிறர் ஆக்ஞைக்கு நடக்கும் எளியவனாகவும், சுலபராகவும் தன்னைத் தானே ஸ்வயமாகவே நியமித்துக் கொண்டான். அப்பேற்பட்ட தேஹிக்கு ஆத்ம ஞானம் உண்டா என்று கேட்போமாகில், தாரைக்கு வாலி மரித்த சமயம் பிரபு ராமசந்திரனால் செய்யப்பட்ட உபதேசத்தைப் பார்த்தால் தெரியும். துளசிதாஸர் தாரைக்கு பகவானுடைய உபதேசமாக, தேகம் வேறு ஆத்மா வேறு; தேகம் நசிக்கும் தன்மையை உடையது; ஆத்மாதான் நிரந்தரம் என்று ஸர்வசாதாரண மனிதனைப்போல சொல்கிறார். அதே துளசிதாஸர் பகவானுடைய அங்கங்களை வர்ணிக்கும்போது, அவைகள் அபிராகிருத மானது, பிராகிருத குணங்களால் பற்றப்படாதது என்கிறார். அவருக்கு கர்ம ஸம்பந்தத்தால், பாவபுண்யங்களால் ஏற்பட்ட தேஹமில்லை. அவருடைய ஸ்வரூபம் கருணையாதலால், நம்மைக் கடாக்ஷித்து, நம்மை போகோபகரணமாக வைத்து அவர் சுகப்படுகிறார். அவருடைய இயற்கையான ஸ்வபாவம் பாரபக்ஷமின்மை. உயர்ந் தவன், தாழ்ந்தவன், தவம் ஆகிற மேன்மைகளைக் கொண்ட யோக்யன், பாபி என்கிற பாகுபாடு வித்யாஸம் கிடையாது. தன்னை அண்டி சரணமடைந்தவர்களுக்கு ஏகபோகமாக தன்னை அனுபவிக்கும்படி ஔதார்ய குணமுள்ள வள்ளல் ரகுவம்ச பூஷணனாகிற ஸ்ரீராமன். தாழ்ந்த பிறப்புள்ள வானராதிகளையும் கரடிகளையும் அவன் மதியுள்ள மந்திரிகளாக தன் காரியத்தில் யோசனை கேட்டவன். அவன் யாரிடம்

வனுவில் வந்து ஒட்டிக்கொள்கிருனே, அவனே அந்த ராமனை அறிவான். அப்பேர்பட்ட சௌசீல்ய வாத்ஸல்யராமன் ஸர்வஸங்கதியாகன். ஒருவித பற்றுதலையும் அடையான். ஆனல் ஆஸ்ரித பாரதந்திரயம் கொண்டவன். தனது சேர்க்கை ஐஸ்வரியத்தை அவனை அடைந்தவர் களுக்கே கொடுப்பவன். அதனுல் அல்லவா சீதை ஹனுமாரை ஆசையுடன் கேட்கிருள். "ஹனுமான், நான் நீலமேக ஸ்யாமள காத்ரனை மீண்டும் கண்டு, எனது கண்களால் குளிர்ச்சியை அடைவேனு"; விபீஷணனும் அதே ஆனந்த நிலையை அடைகிருன். சுக்ரீவனுடைய உகப்புக்காக, வாலியை வதம் செய்த பக்த பராதீனன், துளசிதாஸர் சொல்கிருர் "வாலி, சுக்ரீவன் என் பக்த பராதீனன் என்றும் தெரிந்தும்கூட, நீ அவனுக்கு கஷ்டம் விளைவித்தாய்" என்று ராமன் சொன்னதாகச் சொல்கிருர். இந்த பக்தபாரதந்திரியமோ, ஆஸ்ரிதவாத்ஸல்யமோ, சௌசீல்ய வாத்ஸல்யாதி குணேத்தமங்களோ பகவானுடைய பரத்வ மதிமைகளை ஒருக்காலும் கட்டுப்படுத்தாது. அதனுல் அவன் என்றும் குறைவில்லாத கோவிந்தனுக, விப்ரபிரியனுக' வேதங்களையும் வேதங்களில் சொல்லப்பட்ட தர்ம உலக மரியாதை களையும், ரிஷிகளையும் அவர்களுடைய ஆஸ்ரம தர்மங்களையும், சரணுகத தர்மத்தையும் ஸகல தேவர்களையும் அவரவர்களின் காரியா கார்யங்களில் நியமிக்கும் சூத்ரதாரியாகவும் ஸர்வ நியந்தாவாகவும் பரிமளிக்கிருன். பரதனை தன் சொந்த தம்பியாகவிருந்தபோதிலும் பதினன்கு வருஷங்கள் நியம நிஷ்டையுடன் காக்க வைக்கிருன். ஸர்வஸ்வதந்தரனுக, தகப்பனையும் விட்டு தாய்மார்களையும் விட்டு, புண்ணிய அயோத்தியையும் அயோத்தி மக்களையும் விட்டு, பதினன்கு வருஷங்கள் தனித்து வாழ்கிருன். தனது சொந்த மனைவியான சீதையையும் ஏறக்குறைய ஒரு வருஷம் பொறுக்குப்படி செய்கிருன். தேவர்களின் காரியத்தைச் சாதிக்கும்பொருட்டு தனது பந்து பரிவாரத் தையும் மஹா க்லேசங்களுக்கு உட்படுத்தும் ஸர்வலோக ஹிதனுக விளங்குகிருன். அப்பேர்பட்ட சுலபரானவரும், ஸர்வ ஹிதருமான ஸ்ரீராமபத்ரமூர்த்தியை விட்டுவிட்டு, மோக்ஷமாகிற தனது உத்தம ராம பதத்தைக் கொடுக்கக்கூடிய வள்ளலைவிட்டு, ஹே மனஸே, மற்ற ஐஸ்வரிய காமாதிகளை ஏன் விரும்புகிருய்?" என்று கேட்கிருர் துளசிதாஸர். ராமபரமாத்மா ஒருவனுக்கே இந்த மகிமை உண்டு. அவர் மும்மூர்த்திகளிலும் சிறந்தவர் என்று தியாகராஜர் சொல்லுகிருர். இதற்குக் காரணம் ராமனுக்கு தாமஸராஜஸ குணங்கள் கிடையாது என்கிறதே. அப்பேர்பட்ட ஸ்ரீராமனை ஹே மனஸே, ஏன் பஜிக்க மாட்டேன்கிருய்? என்று கேட்கிருர் தியாகராஜர்.

ராமனுடைய ஸ்ரீயப்பதித்வம் மிகமிக மேன்மை பெற்றது. அவனுடைய அசாதாரண லக்ஷணங்களில் இதுதான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. திருமந்திரார்த்தத்தில், "அவன் மார்பை விட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது" என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள்.

அதனால் அல்லவோ, அகலகில்லேன் இறையுமின் அலர்மேல் மங்கை யுறை மார்பா என்றும், வாமனவதாரத்தில் பிக்ஷை எடுக்கப் போகும் போது, பிரும்மசாரியாகவிருந்தும் பிரபு ஸ்ரீமானாகயிருப்பதால் யாசகம் செய்வது குறைவாகத் தோன்றியும், எங்கே செய்யப்போகும் யாசகம் வீணாகக் கெடப்போகிறதே என்கிற பயத்தினால் பெருமான் மார்பில் இருந்த பிராட்டியை மறைக்க கிருஷ்ணஜிநத்தைக்கொண்டு போர்வையாக்கி, பிறர் பார்வையில் தெரியாமல் பிராட்டியை மறைத்துக் கொண்டார். ஆதலால் பிராட்டி நித்யானபாயிநீ என்று அழைக்கப் படுகிறாள். ராமனை விட்டு அவள் கல்யாணமாவதற்கு முன்பும், காட்டிலும், அனந்தரத்திலும் பிரிந்து வாழ்ந்தாளா? அதன் அர்த்தம் என்ன என்று சிலர் கேட்கக்கூடும். அவதாரங்களில் மனுஷ்யரூபம் எடுத்து நடத்தியது ராம நாடகம். சீதை நிஜமாகவேப் பிரிந்து வாழ்ந்து வந்திருந்தாலும், ஸ்ரீமந் நாராயணத் தன்மைக்கு அசாதாரண லக்ஷணமாகவிருக்கும் ஸ்ரீயப்பதித்வம் அவரைவிட்டு விலகவில்லை. ஸூர்யனைவிட்டு பிரபையை எவ்விதம் பிரிக்கமுடியாதோ, அதைப்போல நித்ய ஸ்ரீ நித்யமங்களமாகவிருக்கும் பிராட்டியை பகவானிடமிருந்து பிரிக்கமுடியாது. அவனுடைய ஸ்ரீயப்பதித்வத்திற்கு ஏற்றாற்போல, அவனுடைய திவ்யாத்மஸ்வரூபமும் திவ்யமங்கள விக்ரஹமும் பரமசோபிதமாகவிருக்கிறது. திவ்ய ஆத்மஸ்வரூபத்தில் கருணையும் தயையும் பிரகாசிக்கின்றது. திவ்யமங்கள விக்ரஹத்தில் அழகும் வீரமும் பிரகாசிக்கிறது. அது எங்ஙனமெனில், பிள்ளை லோகாசாரியார், முமுக்ஷுப்படியில் சொல்லியபடி, இவளோடு கூடியே, சக்தியுடன் கூடியே பொருள் விளங்குகிறது. சக்தியும் பொருளும் பிரிக்க முடியாதபடி இணைந்துள்ள ஸ்நேகம். மற்றொரு பக்கம், இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அறிவில்லாமையாலே ராவணன் முடிந்தான். திருமேனியிலே திருமார்பு நாச்சியாரை விளங்குவது போல, இவளுடன் சம்பந்தம் பெற்ற ஸ்ரீயப்பதி ஸ்ரீமானாகவும் தயா மூர்த்தியாகவும் சோபிக்கிறான். அவளை விட்டுப்பிரிந்த சமயம் ரௌத்ரமூர்த்தியாகவும் ஈரநெஞ்சற்றவனாகவும் ஸ்ரீயப்பதி விளங்கு கிறான். வாலிவதமும் ராவண கும்பகர்ணாதி வதங்களும் பிராட்டி பக்கலில் இல்லாமையாலே ஏற்பட்டது எனலாம்.

பிராட்டியும் எம்பெருமானும் சேர்ந்து எவ்விதம் லீலாதரங்கத்தில் திருவிளையாடல்கள் செய்கிறார்கள் என்பதை நாம் ஆராய்வோம். ஆதிசேஷனைப் படுக்கையாகக்கொண்டு உயர்ந்த "அணவதரவணை மேல் பூம்பாவை யாகம் புணர்வது" என்கிறபடி ஸ்ரீதரனாகிய நாராயணன் ரமையுடன் சித்தம் விளையாடும் சமயம், ஏகாந்தமாக போகம் அனுபவிக்கும்போது, இந்திரன் இந்திரபத்னி ஆகிற வலக்கண், இடக்கண் விழும் சமயத்தில் அல்லவா, சேதனன் உஜ்ஜிவிக்கப்படு கிறான். தயாதனத்தைக்கொண்ட சேதனன் பாபங்கள் நீங்கினவனாக, பிராட்டியினால் "இவன் நம்மைச் சேர்ந்தவன், நம்மைவிட்டால்

இவனுக்கு வேறுகதி வேறுநாதன் ஒன்றும் கிடையாது என்று வாதிக்கும் மஹாலக்ஷ்மி பெருமானை தனது புருஷகாரத்தனத்தினுல் அங்கீகரிக்கச் செய்கிருள். அப்படி பெருமான் பிராட்டியுடனும் சேருவது பிரியமாகவும், அவர்களை விட்டுப்பிரிவது துக்கமாகவும், உபாயபூதம் உபேயம் ஆகிய இரண்டிற்கும் பிராட்டியே விமர்சனம் செய்கிருள். பிராட்டியை அறுதியிட்டல்லவோ ஸம்பந்த ஞானம், ஸித்தஸாத்ய உபாயங்கள், "சரணம் வ்ரஜ" என்கிற விதிக்கு விருத்தங்களான மமகாராதிகளை ஒழித்தல்; ஸம்ஸ்லேஷ விஸ்லேஷ துக்கங்கள், சந்தோஷங்கள் யாவற்றிற்கும், தயைக்கும் தாத்பர்யமாக லக்ஷ்மியாகிற ரெங்கநாயகி விளங்குகிருள். பிராட்டியின் ஸ்வரூபம் ஞான ஆனந்தமயம். பிராட்டியின் ஸ்வரூபத்தை அனுஸரித்தே பகவானும் "பரமசுக சித் ஆத்மக: ஆத்மா" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிருன். சீதை அன்று அசோக மரத்தின்கீழ் ராவணனுக்கு உபதேசித்தது இதுதான், "பகவானே சாஸ்வதம், ஸநாதனம். மற்றப்பொருள் யாவற்றிற்கும் மாறுதல் உண்டாகும். பகவானே விகாரமற்றவன். எல்லாப் பிராணிகளிடத்திலும் ஸமமான புத்தியுள்ளவன். பகவானே பரமார்த்தம், அவனை அடைவது மனசுத்தமாகிற சமம், இந்திரிய அடக்கமாகிற தமம் ஆகிய இரண்டினுலுமே என்று நிரூபித்து காண்பதுபோல தன்னைத் தவ வாழ்க்கையில் ஈடுபடுத்திக்கொள்கிருள், தயாதேவி, பொறுமையையே விரதமாகக் கொண்ட என் பிராட்டி சீதே. அந்த தர்மத்தில் நிலைபெற்ற அவள் "என்னைக் காக்கும் தர்மம் ஸ்ரீராமனுடையது;" எனக்கும் ராமனுக்கும் ஏற்பட்ட ஸ்நேகம் கர்மவசத்தால் ஏற்பட்டதல்ல. நான் செய்யும் தவம், ராமஜபம், நியமம் எல்லாம் காரியார்த்தமாகச் செய்யப்படவில்லை. நான் என்னையே ராமனுக்கு அர்ப்பித்துக்கொண்டு, நான் அனன்யார்ஹ சேஷத்வம் பூண்டு, ஸர்வசேஷியான பகவானை க்ருபா மார்க்கமாக அடைய விரும்புகிறேன். அப்பேர்பட்ட அசோகவன வாழ்வு பிராட்டிக்கு ஏற்பட்டதுபோல, ராமகிருபையை ஏங்கி நிற்கும் சுத்தமான சேதனனுக்கு பிரகிருதி ஸம்பந்தமான தேகத்துடன் ஸம்சார வாழ்வை ஒத்ததாகும். அதனுல் பிராட்டிக்கு கிடைத்த ராக்ஷஸ ஸகவாசம் இவனுக்கு துஷ்ட ஸ்திரிபுத்ர பந்துக்களின் ஸஹவாசத்தைப்போலவும், ஸாது ஜனங்களின் நிஸ்ஸங்கத்வம்போல விருக்கிறது. அப்பேர்பட்ட சேதனனுக்கு, பிராட்டிக்கு கணையாழியும் ஆஞ்சநேயரும் வந்தாற்போல, ஆசார்யர்களால் அருளிச்செய்யப்பட்ட குருபரம்பரையும், பூர்வபுண்ணியங்களின் பலனுகவோ அல்லது பகவானின் நிர்ஹேது கிருபையைப்போல பகவத் தரிசனம் கிடைக்கும். சூடாமணி ஆசாரியன் சொன்ன திருமந்திரம் போலவிருக்கும். ராவண கும்பகர்ணவதங்கள் இவனுக்கு பிராப்யப்ராபக விரோதிகளை அழித்தலைப்போலவும், பிரக்ருதி ஸம்பந்தத்தை ஸம்ஹரிப்பதும், ஸ்வரூப லாபம், புருஷார்த்த லாபம், நித்யசூரிகளோடு சேர்க்கை, பகவத்பாகவத நித்ய அனுபவம் ஆகியவைகளைக் கொடுக்கும்.

ஆஞ்சநேயரின் கிருபை ஆசார்யகடாக்ஷத்தைப் போலவிருக்கும். இவ்விதமே பிராட்டியும், ஸம்சாரத்திலுள்ள சேதனனும் உஜ்ஜீவிக்கப் படுகிறார்கள்.

இதிலிருந்து நமக்கு ஒன்று தெரிய வருகிறது. ஸம்சாரமாகிற விருக்ஷத்துக்கு தொடக்கம் நிலைமை முடிவு ஆகியவைகளை அறியத் தக்கது. எவனிடமிருந்து இந்த ஸம்ஸாரம் அஸ்வத்த விருக்ஷம் உற்பத்தி ஏற்பட்டு, எவனால் வளர்க்கப்பட்டு, எவனிடம் முடிவில் லயமடைகிறதோ, அந்த ஆதிபுருஷனாகிய நாராயணனை மமகாராதிகளை விட்டு, விபரீத ஞானத்தை விட்டு, பற்றுதல் என்கிற தோஷம் நீங்கி, ஞானம் வைராக்யம் அடைந்து, பகவானுடைய சரணங்களைப் பற்ற வேண்டும். ஞானமார்க்கத்தில் நிலைபெற்று, சுத்தமான கர்மாக்களால், பகவத்ப்ரீதி ஒன்றையே குறிக்கோளாக வைத்து, ஆஞ்சநேய பரதன் லக்ஷ்மண சத்ருக்னாதிகளைப் போல ராமனையும் சீதையையும் ஆராதிக்க வேண்டும். அப்பேற்பட்ட சேதனனுக்குப் பிராட்டியின் பிரஸாதத்தால் தோஷங்கள் நீங்கி, மாயை மோஹங்கள் அறுபட்டு, பகவானுடைய திருவடிகளை அநிஷ்ட நிவ்ருத்திக்காகவும் இஷ்டப் பிராப்திக்கும் சேதனன் உபாயமாக வரிக்கிறான். இதற்கு பிராட்டி ஸஹகாரிகையாகவிருக்கிறாள். பிராட்டி அந்த சமயத்தில் பகவானுக்கு அவதார ரஹஸ்யமாகிற ஸாது ஸம்ரக்ஷணத்தையும், பகவானுடைய ஸங்கல்பத்தையும் நினைவுறுத்து கிறாள். அந்தசமயம் பகவான் பிராட்டியின் அழகில் தன் மனத்தை பறிகொடுக்கிறான். அவளுடைய கண்வீச்சுக்களும், பிரேமையும், குப்த மான காம விலாஸங்களும், அந்தரங்க விளையாட்டுக்களும் பிரபுவின் விசாலமான வக்ஷஸ்தலத்தின்மீது பதிந்துள்ள சந்தன பூச்சுக்களில் அடையாளம் செய்யப்பட்ட திருமுலைத்தடங்கள், அடிக்கடி அவிழும் கச்சைகள், அவைகளை பிடிவாதமாக பிராட்டி சீரமைக்கும்போது பக்தி லஜ்ஜையுடன் கூடிய காதலை பிரகடனப்படுத்த எம்பெருமான் எண்ணம் கொண்டபோது, அவள் சேதனின் தீனநிலையை அவரிடம் வாதாடுகிறாள். அப்போது அவளுடைய திருஷ்டி சேதனா சேதனர்களிட மிருக்கும்போது ராமனுக்கும் பிரபஞ்சத்தில் திருஷ்டி ஏற்படுகிறது. தர்மத்தில் நிற்கும் பிரபு பிராட்டியின் ஸ்வரூபத்தினால் கலங்குகிறான்; மனோ அபிப்பிராயங்களில் பிராட்டிக்கு வசப்படுகிறான். அப்பொழுது பிராட்டியின் பக்தியினால், பெருமாளுக்கு தயை ஏற்படுகிறது. கர்ம மடியாகிற பிரபஞ்சம் கருணையுடன் சேரும்போது, தர்மமும் பக்தியும் பெருமாளுக்கும் யேற்படும் சமயம், சேதனர்கள் போகோபகரணங் களாக ஆகி, மோக்ஷஹேதுவை சம்பாதிக்கிறார்கள். தேவியின் வரபிரஸா தத்தினால் கர்மபலன் கருணையின் பலனாக மாறுகிறது. அப்போது பிராட்டி ஞானவடிவாகவும் அருள் வடிவாகவுமிருக்கிறாள். "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய், உனக்கு ஒரு கைம்மாறு நான் ஒன்றிலேன் எனது ஆவியும் உனதே, தெய்வநாயகனே, என்று சொல்லும்படி ஜீவன் பகவத் சம்பந்தத்தைப் பெறுவதற்கு

மன உறுதியை இயற்கையாகவே பிராட்டியின் அருளினால் அடைகிறான். லக்ஷ்மி என்கிற தாதுவுக்கு பாஸனம் (விளங்கச் செய்தல்) என்கிறபடி பிருகிருதியிலிருந்து கொண்டு, பிரும்மபாவத்தை அடையும் ஜீவன்தான் வேறு, பிருகிருதி வேறு என்று பிராட்டியினால் அறிவிக்கப்பட்டு, ஜீவாத்மா மோஹங்களிலிருந்து விடுபட்டு பரமாத்மாவை அடைகிறான். அதனால் ஜீவனும் கடைத்தேறப்படுகிறான். பிரபஞ்சமும் வாழ்கின்றது. பெருமாளுடைய ரௌத்ரமும் வீரமும் அடங்குகிறது. பகவான் பல சித்தமான மாசுச: என்கிற வரபிரஸாதத்திற்கு பிராட்டியின் இயற்கை ஸ்வபாவமாகிற தயையே காரணமாகிறது. எம்பெருமான் ஸர்வ சேஷியானாலும், என்மட்டிலும் அவன் பிராட்டியின் கருணையால், "பகவத: பிரியா ஸம்ஸ்ரித த்ராண தீக்ஷாயாம்" என்கிறபடி, ஆஸ்ரிதர்களைக் காக்கும் விஷயத்தில் ஸஹதர்மசாரி ஸ்ம்ருதா அவனுடன் இருந்து எந்த தர்மத்தையும் செய்பவளாக பிராட்டியும் பிரமாணங்களால் சொல்லப் படுகிறாள். ஆகவே பிராட்டியும் பெருமாளும் சேர்ந்துகூடிய ஐக்ய மிதுனம், பிரபஞ்சத்திலும் வியாபிக்கப்பட்டு, ஸர்வ ஜீவராசிகளாலும் உபாஸிக்க வேண்டிய அந்தஸ்தை அடைகிறது. ப்ரபாப்ரபாவதோ, எப்படி ஒன்றாகச் சொன்னால் மற்றொன்றிற்கு சம்பந்தம் வெளியாகின்றதோ, அதுபோல, பெருமாளைப் போல பிராட்டியும் ஸம்ஸாரார்ணவதாரிணி என்று ஸ்மிருதிகளால் சொல்லப்படுகிறாள். வைஷ்ணவர்களின் த்வ்யமந்திரத்தில் இருவர்களுமே சேஷிகளாகச் சொல்லப்படுகிறார்கள். ஆகவே ஸர்வகாலங்களிலும் லக்ஷ்மிநாராயண பதங்களே, ராமசீதா பதங்களே பரமார்த்த புருஷார்த்தமாக அடையப்பட வேண்டியது என்று பூர்வாசார்யர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்த திவ்ய நித்யதம்பதிகளை அடைவது ஆசாரிய கிருபையினால்தான் முடியும். அந்த ஆசார்ய கிருபை ஸம்பவிப்பதற்கு பகவத்கிருபைதான் அவசியம். பிராட்டியையே முதல் ஆசாரியராகச் சொல்லுகிறார்கள்.

ஆசார்யகிருபை எவ்விதம் சேதனர்களை உத்தாரணம் செய்கிறது என்று சற்று ஆராய்வோம். பிராட்டியையும் பெருமாளையும் பரத்வமாகவும், ஆஸ்ரிதவாத்ஸல்ய சௌசீல்யாதி குணங்களின் விசேஷமாக நாம் அறிய வேண்டியது. அதை அறிந்தபின்பு சத்குருவை நாடவேண்டும். ஸத்குரு ஒருவனே ஸ்வரூபலாபமாகிற பாரதந்திரியத்தையும் பரமார்த்தத்தை நியம நிஷ்டைகளினால் அடைவதற்கும் போதிக்கிறார். பகவானுடைய சரீரம் நாரம் என்று சொல்லப்படுகிறது. சேதனாசேதனங்கள் நாரபதத்தால் அறியப்படுகிறது. குருவின் கிருபையால், குருவே சேதனனுக்கு பிரதான புருஷார்த்தமாக ஆகிவிடுகிறான். குருவினுடைய பாதங்களைப் பற்றின சேதனனுக்கு குருவும் உஜ்ஜீவிப்பது போல, சேதனனும் உஜ்ஜீவிக்கப்படுகிறான். குருவின் ஸம்பந்தம்கொண்ட சேதனனுக்கு பகவத் ஸம்பந்தம் நிலைபெறுகிறது. குருவை சேதனனாகவும், சேதனவர்க்கங்களை அசேதனமாகவும் எண்ணப்படுகின்றது. சேதனா சேதனர்களுக்கும் ஆனந்தம் உண்டு.

சரீர ஆத்ம ஸம்பந்தத்தைப் போல, ஒருபக்கம் பகவான் ஆசாரியர் ஸம்பந்தம், மற்றொருபக்கம் ஆசார்ய சிஷ்யனுகிற சேதன ஸம்பந்தம். அப்பேற்பட்ட இருவித ஸம்பந்தத்தால் லக்ஷ்மிநாராயண பதங்கள் அடையப்படுகிறது. ஆசார்ய ஸம்பந்தமும் நிலைப்பதற்கு பாகவத ஸம்பந்தமும் தேவையாகவிருக்கிறது. பகவானைத்தேடி அலைந்து திரிகிறவர்கள் முதலில் பாகவதர்கள் மூலமாக பகவத் ஞானத்தையும் ஆசார்ய ஸம்பத்தையும், பேறு என்கிற ஆனந்த நிலையையும் நிலைக்கச் செய்கிறார்கள். ஆசார்யரை உபாயமாக வைத்து ஆசாரியரையே பரம புருஷார்த்தமாக அடைவது இதனால் ஸித்திக்கிறது. ஆகவே பகவானைப் போல ஆசாரியரும் ராமதரிசனத்தில் முக்யத்வம் பெறுகிறார். சீதா ராமனை அடைவதற்கு ஹனுமாரை ஆசார்யனாகவும் சொல்லுகிறார்கள். ஹனுமான்ஜியே சீதாராம தம்பதிகளுக்கு கிங்கரனாகவிருப்பதால், அவர் அருள்கொண்டுவிட்டால் வேதத்தின் உட்பொருளாகிற சீதாராம பாதங்கள், லக்ஷ்மிநாராயணனின் திருவடிகள் நம்போன்ற சேதனர் களுக்கு எளிதில் ஸித்திக்கின்றன. மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரைப் பின்பற்றி கண்ணன் அவதரித்த காலத்தில், பெருமாளை விட ஆசார்யனே நம்மால் அடையத் தக்கது என்று நிரூபணம் செய்தார். "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே, மிக்கவேதியர் வேதத்தில் உட்பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சினுள் நிறுத்தினான், தக்கசீர் சடகோபன் என் நம்பிக்கு, ஆட்டிக்கக் காதல் அடிமைப் பயனென்றே" என்று அவர் ஸாதிக்கிறார்.

இந்த உண்மையைப் பின்பற்றினவர்கள் ஸகல ஆசார்யர்களும் ஆவார்கள். துளசிதாஸர் இந்த சூழ்நிலையில் வளர்ந்து, இந்த சூழ் நிலையையே பெரிதாகக் கருதுகிறார். அடிக்கடி அடிக்கடி துலசிதாஸர் ஸம்சாரக் கடலைக் கடப்பதற்கு குருவின் கிருபை அவசியம் என்று சொல்லுகிறார். குருவே ஞானபோதகாரனபடியால், காமக்ரோதங்களை ஒழித்து அக்ஞானத்தை அகற்றி, பிரகிருதி சேஷ்டிதங்களால் விளையும் அவித்யை முதலான தோஷங்களை விலக்கி, பகவத் ப்ராப்திரூப மாகிறதும், ஸகல ஐஸ்வர்யாதி கைவல்யங்களையும் திருணமாக மதிக்கும் ஸ்வரூப குணங்களை உடையதும், ஸ்வயம் பிரயோசன மாக அடையப்படுவதும், பக்தியினால் வளர்க்கப்படுவதும், சுத்தமான மனத்தினால் காப்பாற்றப்படுவதுமான அவிச்சின்ன, அகண்ட ஏகரஸ மாகிற சீதா ராமபக்தியை, உமாமஹேஸ்வரர்களைப் போல பிரார்த்திக் கிறார். இப்பேற்பட்ட ராமபக்தி ராம ப்ரீதி ஒன்றையே உத்தேசமாக அடையப்படுகிறது. அதனால் அடையப்படும் ஆனந்தமும் சீதா ராமனுடையதே என்கிறார். "என்னை ஸ்வீகரித்து போகோபகரணமாக உபயோகித்து தானும் இன்பமடைந்து, என்னையு, கிருதக்ருத்யனாக ஆக்குகிறார் என் பிரபு ராமசந்திரன்" என்கிறார். காகபுசுண்டி கருடஸம் வாதங்களும், நாரத உபாக்யனமும், ஸனகாதி மஹரிஷிகளின் ஸ்துதியும், ஆரண்யத்தில் லக்ஷ்மணனுக்கும், அயோத்தியில் பரத

சத்ருக்ன லக்ஷ்மண ஹனுமான்ஜிக்கும் அருளப்பட்ட உபதேசங்கள் இந்த மஹார்த்தங்களேயே உபகரிக்கின்றன.

முதலில் காகபுசுண்டி கருடஸம்வாதங்களை ஆராய்வோம். "எந்த நிமிஷத்திலிருந்து பிரபு ரகுநாயகன் என்னை ஸ்வீகரித்து, பொருளாக்கி ஞரோ, அந்த க்ஷணத்திலிருந்து ரகுநாயகனுடைய கிருபையினுல் மாயை என்னை திகைக்க வைக்கிறதில்லை. மாயையின் பிரபாவம் எனது மதியைக் கலக்குகிறதில்லை," என்கிருர் காகபு சுண்டி. பகவான் ராமச் சந்திரன் தனது பிராட்டியுடன் எவனை ஸ்வீகரிக்கவேண்டும் என்று நினைக்கிருரோ, அவன்தான் அவருடைய கிருபையை அடைகிருன். பிரபுவினிடம் பரபத்தி, பரஞானம், பரமபக்தி ஏற்படாமல் பிரபுவி னிடம் ஸம்பந்தம் நிலைக்கிறதில்லை. ஜலத்தைப் பிளந்தும் கடைந்தும், அதனுடைய வாசனை முதலியன சேர்க்கை ஸம்பந்தமாகிறதும் பிசின்போன்றதுமான வெண்ணெயை எடுக்க முடிகிறதோ? இல்லை. அதுபோல பரமாபக்தி இல்லாமல் சீதாராம ஸம்பந்தம் நின்று நிலைக்கிற தில்லை. மஹாகுருவின் அனுகிரஹத்தினுல் ஒழிய ஞானம் சித்திக்கிற தில்லை. பற்றுதலற்ற மனத்துடன் இருப்பவனுக்கு வைராக்யமும் ஞானமும் ஸித்திக்கிறது. ஹரிபக்தி ஒன்றினுலேயே தேகசுகம், மனசாந்தி ஆகிய நித்ய சுகம் நிரந்தரமாக அடையப்படுகிறது. மனம் சாந்த நிலையை அடையாதபோனுல் அவனுக்கு ஸஹஜ சந்தோஷம் எவ்விதம் ஏற்படும்? ஜலபிரவாஹத்தின் மகிமையினுல் அல்லவா ஓடம் சஞ்சரித்து அக்கரையை அடைகிறது. மனசாந்தியினுல் ஏற்படும் லாபங்கள் காமம் என்கிற ஸங்கல்பத்தின் நாசமடைதல், பாகவத பிரேமையாகிற ஸமதிருஷ்டியினுல் ஸத்ஸங்கமும், அதனுல் ஏற்படும் விக்ஞானமும். மஹாவிஸ்வாஸமின்றி பரபக்தி ஸம்பவிக்கிறதில்லை. பரபக்தியுடன் பஜிக்காதவரை ராமகிருபையை ஸ்வப்னத்தில்கூட அடையமுடியாது. ரகுவீரனைப் பூஜித்து வருகிறவ னுக்கு கிலேசங்கள் பாதிக்கிறதில்லை. ரகுவீரனுடைய கீர்த்திகளும் பிரபாவங்களும் ஆனந்தமானவை. அவைகளை ராமகிருபை ஒன்றினுல் மட்டும்தான் அடையக்கூடும். ஸ்ரீராமன் தன்னை அண்டினவர்களுக்கு சுகத்தை வள்ளலாக அளிக்கிருன். "ஆகையால் " நான் பெரியவன் ", என்கிற ஸ்வ அபிமானம், மதம், மமதை ஆகியவற்றை தியாஜ்யம் செய்துவிட்டு, ஜானகி நாதனுகிற சீதாபிரபுவை, ஸ்ரீராமனை, ஹே மூட மனமே, பஜித்து வா," என்கிருர் துளசிதாஸர். காக புசுண்டியும் ராம பக்தியினுல் ஏற்பட்ட நன்மைகளையும் லாபங் களையும் கருடனுக்கு உபதேசிக்கிருர். காகபுசுண்டிக்கு மாயை, மஹா மோஹங்கள் ஏற்படுவதில்லை. அவர் அடைந்த ஞானம் பேரின்ப பொக்கிஷமாகவிருக்கிறது. ஆத்மஞானமாகிற விக்ஞானம் எனப்படும், ஸுக்ஞானமும் ஏற்பட்டிருக்கிறது. பிரளய காலத்திலும் நாசமடையாத தீர்க்க ஆயுள்ளும், ஸ்வய இச்சையினுல் ஏற்படும் மரணமும் அவருக்கு ஏற்பட்டிருக்கிறது.

அந்த ஸம்வாதத்தில் மீண்டும் காகபுசுண்டி கருடனிடம் அந்த ராமபக்தி எவ்விதம் ஸம்பவிக்கிறது என்கிறதைப்பற்றிச் சொல்லுகிறார். “அநேகவிதமான ஜபதபங்கள், யக்ஞங்கள், மன அடக்கமாகிற சமம், இந்திரிய அடக்கமாகிற தமம், அநேக விரதங்கள், தானதர்மங்கள், வைராக்யபுத்தி, விஷயங்களிலிருந்து விடுபடுதல், ராமபரமாத்மாவையே பெரும்தனம் எனக் கருதும் புத்தி, விக்ஞானம் ஸுக்ஞானம் ஆகியவையும், ராம பேரின்பத்தை அடைவதற்கு யோக ஸாதனங்கள், பிரபத்தி போன்ற உபாயங்கள் ஆகிய எல்லாம் ராமகிருபையினால் ஏற்படுகிறது. இவைகள் எல்லாவற்றிற்கும் ஏகபலனாக அமைவது ரகுபதியினிடம் வைக்கும் பிரேமை ஒன்றே. சீதாராம பதாப்ஜங்களின் நிழலை அடைவதே ஏகபலனாக ஸித்திக்கிறது. ராம சரணாரவிந்தங்களைத்தவிர கல்யாண மங்களங்களைக் கொடுப்பவை வேறு ஒன்றுமில்லை. ராம பக்தியின் விளைவாக அதுவே ராம பதாப்ஜகங்களிலுள்ள பக்தியை நீடிக்கச்செய்து, அந்த பதாப்ஜங்களின் மகிமையினால் ராமசரணாரவிந்தங்கள் நிரந்தரமாக எனக்கு ஆதரவாகவிருக்கின்றன,” என்கிறார் பிரபு துளசிதாஸர். “கருடரே, ஒரு ஜீவன் நற்கதியை அடையவேண்டுமானால், அதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் இருக்கிறது. மனம் கர்மம் வசனம் ஆகிய மூன்றினாலும் ஸ்ரீசீதாராம பாதங்களை சரணமடைந்து ஸதா பஜிக்க வேண்டும்” என்று அவர் தலைக்கட்டுகிறார்.

இந்த ராமபக்தி ப்ரேமை ஏற்படுவதற்கு ஸ்ரீராம நாமம் மிகவும் உதவுகிறது. பகவான் சங்கரர் தாக்ஷாணியைவிட்டுப் பிரிந்த சமயம், ராமநாம ஜபமே அவரைக் காப்பாற்றி, அவரை மீண்டும் உமையினிடம் சேர்த்தது என்று துளசிதாஸர் கருதுகிறார். ராமநாம ஜபம் ராமநாம கைங்கர்யமாகிவிடுகிறது. ராமநாம ஜபமே பக்தனை நம்மாழ்வாரைப்போல நின்ற நிலையாகவிருக்க உதவுகிறது. ராம நாமம் அவனுக்கு நல்ல சீலமான வாழ்க்கையைத் தருகிறது. சோகம், பயம், மோஹம் யாவும் நீக்கப்பட்டு, அவனுக்கு ராமனுடைய பரத்வ மகிமைகள் புரிபடுகின்றன. சுகமும் துக்கமும் நசிக்கக்கூடியது என்கிற மனோநிலை ஏற்பட்டு, பிறர்களுடைய சுகங்களும் ஆனந்தங்களும் இவனைப் பாதிக்காமல், இவனுக்கு பரலோக நம்பிக்கையேற்பட்டு, அதற்கு உறவினரோ, செல்வமோ, நல்லகுலமோ, கல்வி வித்யைகளோ, மந்திரங்களின் பலமோ, ஒன்றும் காக்கத் திறமை உள்ளவை அல்ல என்று அவன் அறிகிறான். ராமதனத்தையே பெரிதாக மதித்து, அவன் சாந்தியை இகலோகத்திலும் பரலோகத்தில் உத்தமபதமாகிற சீதாராம பாதங்களையும் அடைகிறான். இந்த உண்மையையே சகல ஆஸ்ரம தர்மங்களும் உபதேசிக்கின்றன. இதுவே மோக்ஷஸாதனமாகவும், ஸ்ரேயசாகவும் கருதப்படுகிறது. ஸர்வ பிராணிகளிடத்திலும் நன்மையைச் செலுத்துகிறவன், அஹிம்சையாகிற தவம் ஒன்றினாலேயே இவ்வுலகிலும் பரலோகத்திலும் மிகுதியான நன்மையை அடைகிறான்.

பகவான் சபரிக்கு ஒன்பதுவித பக்திகளை உபதேசிக்கிறார். அந்த பக்திகளில் ஆசார்யரால் உபதேசிக்கப்பட்டவன் ஸ்வரூபலாபத்தை அடைந்து ராமநிதியை அடைந்து, அவனைப்போல விருக்கும் ஸாது ஜனங்களை அடைந்து அவர்களால் சீதாராமனைப் பற்றிய ஹரி கதையை ஸ்ரவணம் செய்து பேரானந்த நிலையை அடைகிறான். ஆகவே ராமகதா ஸ்ரவணம் மிகமுக்யத்வம் வாய்ந்திருக்கிறது. தியாகராஜர் சொல்லுகிறார், "ராமகதா அம்ருதத்தைப் போல ருசியுள்ளதாக விருக்கிறது. தைரியத்தையும் ஆனந்த சுகத்தையும் சாந்தியையும் சௌக்யத்தையும் அளித்து, கர்மபந்தங்களையும் நாசம் செய்கிறது. சகல புருஷார்த்தங்களையும் கொடுத்து, ஸம்சாரக் கடலில், அவனுக்கு ஓடம் போல விளங்கி, அவனை அக்கரை சேர்க்கிறது. கலிகாலத்தில் ஏற்படும் தோஷங்களையும் பாபங்களையும் நாசம் செய்கிறது."

அடுத்தாற்போல துளசிதாஸரின் கருத்துக்களில் எவ்விதம் பாகவதப்பிரேமை சிலாக்கிக்கப்படுகிறது என்பதை ஆராய்வோம். சபரியிடம் பிரபு வைஷ்ணவ தாஸர்களின் லக்ஷணங்களைச் சொல்லும் போது, சொல்லுகிறார். "ராமபராயணர்களாக விருப்பவர்கள், என்றால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் முழுவதும் ராமமயமாக அறிந்து, ஸமதிருஷ்டியுடன், காமம் க்ரோதமின்றி, ஸர்வபூத ஹிதகாங்க்ஷர்களாக, ஸத்யம் ஞானம் ஆனந்தம் ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்று பூர்ணமாக விஸ்வசித்து, தர்மபுத்திரர்களைப் போல பிறர்களிடம் தோஷத்தைப் பாராமல், நாரத வியாஸதிகளைப்போல, கள்ளம் கபடமின்றி, அனுகம்பையுடன், அசுரனோ, தேவனோ, மனிதனோ, ராக்ஷஸனோ, புழுவோ, மிருகமோ, பக்ஷியோ, விருக்ஷமோ எதையும் பாராமல் எல்லாப் பொருள்களிலும் வியாபகமாகவிருக்கும் என்னை ஸர்வம் என்று நினைப்பவர்களாக, எந்த அவஸ்தையிலும் லாபத்திலும் நஷ்டத்திலும் மானத்திலும் அவமானத்திலும், சீதோஷ்ண ஸ்திதியின் மாறுதலிலும், விகாரமடையாமல், "இது பரமாத்மாவின் திருவுள்ளம்," என்று நின்ற நிலையை அடைந்தவர்களாக, அப்போது அலர்ந்த தாமரைப் பூப்போல, முகாரவிந்தத்தையுடைய கருணாரவிந்தர்கள் உலக ஹிதத்தை ஸதா நினைப்பவர்களாக, பக்திரஸம் கொண்டவர்களாக கல்லிலும் பொன்னிலும் ஸமதிருஷ்டி உள்ளவர்களாக ஸாது ஜனங்கள் வாழ்கிறார்கள். அவர்களே அகில குருக்கள். சுலபமாக அடையக் கூடியவர்கள். லோகத்தை உத்தாரணம் செய்வதற்குப் பிறந்தவர்கள். அவர்கள் ஸ்திரியோ, புருஷனோ, ஜடமோ, சேதனமோ யாவற்றையும் கவனியாத மஹனீயர்கள். அவர்கள் உத்தமஸ்ரேணியில் பிறந்த ஜாதிக் குதிரைகளைப் போல சுமந்து, வழிகாட்டி ஸம்சார தாபங்களைப் போக்கி, ஸம்ஸாரத்தின் அக்கரையை சேர்த்துவைப்பவர்கள். பாமினி, நான் அவர்களிடம் அத்யந்தபிரியம் வைத்திருக்கிறேன். என்னை அவர்கள் பூர்ணமாகத் தெரிந்துகொண்டு, மஹாகருணையுடன் அவர்கள் பிறர்களுக்கும் காட்டிக் கொடுக்கும் மஹா புண்யசீலர்கள். இவர்

களிடம் நான் மணமும் பூவும்போல ஒட்டிக்கொண்டிருக்கிறேன்'' என்கிறார் பிரபு ராமசந்திரன் சபரியிடம்.

அந்த உத்தம ஸம்பிரதாயத்தில் நாரத பகவான் அக்ரகண்யராக விருக்கிறார். பகவானும் அவரை ஸஹஜ ஸ்நேகத்துடன் ஆதரிக்கிறார். மஹாகுருவும், மஹாபாக்கியவானும் லோகத்தையும் தீனர்களையும் உத்தாரணம் செய்யும் மஹாகிருபாளுவாகிற என்பிரபு, பரமேஷ்டி ஆசார்யரான நாரதரிஷி லக்ஷ்மணனுடன் கூடிய ராமச்சந்திரனை பம்பா தடாக தீரத்தில் துளசிதாஸ சரிதத்தில் சந்தித்து, பல அரிய உபதேசங்களை நமது நன்மைக்காககப் பெறுகிறார். அந்த உபதேசங்களை நாம் சிறிது காண்போம். அதற்கு முன்பு ஒரு விஷயத்தைச் சொல்லி ஆகவேண்டும். சீதா ராமர்களின் பூலோக அவதாரத்திற்கு நாரதரின் சாபம் காரணமாகிறது என்று துளசிதாஸர் கற்பித்திருக்கிறார் (பால காண்டத்தில் இது காணப்படுகிறது.) ஸ்ரீமதிபரிணயத்தில் நாரதரை ஏமாற்றி பகவான் ஸ்ரீமதியை மணம்புரிந்து கொண்டபடியால், நாரதர் க்ரோதமுற்று பகவானுக்கு சாபம் அளிக்கிறார். அந்த சாபத்தின் பலனாக ராமன் பிராட்டியுடன் அவதரித்து, பிராட்டியை யிழந்து, சீதான் வேஷணராக தபித்துக் கொண்டிருக்கும் சமயம் பகவானை லக்ஷ்மணனுடன் நாரதர் பம்பா தீரத்தில் சந்திக்கிறார். நாரதர் பிரபுவின் கஷ்டங்களைப் பார்த்து பச்சாதாபங்கள் கொண்டவராக, பகவானுடைய க்ஷமையைப் பிரார்த்திக்கிறார். இந்த ஸம்பவம் பகவான் துளசிதாஸர் ஒருவரால்தான் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற புராணங்களில் இதைப் பற்றிய விருத்தாந்தங்கள் சொல்லப்பட வில்லை. பகவான் சொல்லுகிறார் ''ஏகாந்திகளில் சிறந்த முனியே, விஸ்வரூபத்தை உடைய நான் விகாரமற்றவராக உம்மிடத்தில் அருள் உள்ளவனாகவிருக்கிறேன். இப்பொழுது நீர் விரும்புகிற வரத்தைப் பெற்றுக்கொள்ளும்.'' நாரதர் பிரார்த்திக்கிறார், ''பிரபோ, உமக்கு பல நாமங்கள் இருப்பினும், அவைகளில் ஸ்ரீராம நாமமே அகிலதாரக மந்திர மாக விளங்கட்டும். ராம நாமமே மஹாபிரபாவங்களுடன் அகில போஷகமாக விளங்கட்டும். பாபரூபி, அக்ஞானி ரூபியாகிற பக்ஷிக் கூட்டங்களை சம்ஹரிக்கும் வேடனைப்போல உமது திவ்ய ராம நாமம் விளங்கட்டும். உம்மிடம் வைத்திருக்கும் எனது ராம பக்தி பௌர்ணமி ராத்திரி மாதிரி விளங்கட்டும். அந்த அபாரமான சந்திரனைச் சுற்றி நிர்மலமான ஆகாயத்தில் தாராகணங்களாகிற பக்த ஜனங்களின் ஹிருதயங்கள் நித்யமாக வசிக்கட்டும். எனக்கு அருள் செய்ய வேண்டும்'' என்று நாரதர் பிரார்த்திக்கிறார். அதன்படி பிரபு ரகுநாதன் வரமளிக்கிறார். அந்த உத்தம வரதானத்தினால் ஸ்ரீராம நாமம் அகில பிரபலமாகவிருக்கிறது. இதையே உமாதேவி பரமேஸ்வரரிடமிருந்து வரதானமாகப் பெற்று, விஷ்ணுவின் ஆயிரம் மங்கள நாமாக்களில் ஸ்ரீராம நாமம் ஒன்றை உச்சரிப்பதாலே, ஆயிரம் நாமங்களை ஜபிப்ப தின் பலனை அடையலாம் என்கிற ஸித்தியைப் பெற்றாள். இந்த ராம

தாரகத்தை காசிபதியான சம்பு மரித்த ஜீவர்களின் வலது காதில் ஓதி, ஹ்ருதய கிரந்திகளிலிருந்து முடிச்சுகளாகிற பந்தங்களை அறுத்து, அம்பிகையுடன் ஜீவனைக் கடைத்தேறவைக்கிறார் என்று காசியின் ஸ்தல புராணங்கள் கோஷிக்கின்றன.

அதற்கு அடுத்தாற்போல பிரபு நாரத ரிஷிக்கு பாகவத தர்மத்தை உபதேசிக்கிறார். "நாரதரே, என் பக்தர்களுக்கு இல்லாதது என்னிடம் ஒன்றுமில்லை. நான் என் பக்தர்களை ஒரு மாதா தன் சிசுவை எவ்விதம் காப்பாளோ, அதுபோல ஸர்வ ஜாக்ரதையுடன் காத்து ரக்ஷிக்கிறேன். ஞானியானவன் வளர்ந்த சிசுவைப்போல தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள சக்தி பெற்றவனாகிறான். ஆனால் என்னையே நம்பி பராயண மாக வாழும் பக்தர்கள் கண் தெரியாதவனைப்போல, மூடனைப்போல ஒன்றையும் விசாரிக்காமல், கொல்லாமை, ஸத்யம், பொறுமை, கொடை ஆகிய நான்கையும் அனுஷ்டித்து, பரம்பரை பரம்பரையாக வந்த ஒழுங்கான கட்டுப்பாட்டில் ஊன்றி, பாகவத பிரேமையை வளர்த்து, குரு மஹாராஜரால் எனது தத்வம் உபதேசிக்கப்பட்டு, இவ்வுலகமனைத் தையும் ராம மயமாகப் பார்த்து, பாரதந்திரியம் என்கிற ஸ்வரூப லாபம் ஏற்பட்டு, என்னிடம் பரஞானம், பரம பக்தியுடன் விளங்கும் அடியார்கள் இருக்கிறார்களே, அந்த அடியார்களுக்கு அடியார் என்று சொல்லும் வரை நான் மனம் உவந்து ஆஸ்ரயித்து அவர்களை விடாதபடி ஒட்டிக் கொள்கிறேன். இவர்கள் எனக்கு மிகவும் பிடித்தவர்கள். பக்தியுடன் வரும் ஞானியையும், என்னை நம்பி வாழும் பாகவத உத்தமர்களையும் காப்பாற்றுவேன். ஆனால் பக்தியில்லாத ஞானிகளோ, காமக்ரோத வசமடைந்து எனது ப்ரேமையை இழந்து விடுகிறார்கள். ஆனால் தீர்த்த பாதர்களான பாகவத உத்தமர்கள் நிர்மலமான ஹ்ருதயத்துடன், காமம் க்ரோதம் லோபம் மதம், பிரபலமான மோஹம் யாவும் நீங்கப்பட்டு, மன சாந்தியுடன் என்னைப் பூஜித்து என் கிருபையை அடைகிறார்கள்." மேலும் பிரபு நாரதருக்குச் சொன்னார் "என் பக்தர்கள் ஜிதேந்திரியர்கள். தங்கம் வெள்ளி முதலியவற்றைப் பார்த்தும் திருணமாகக் கருதும் இச்சாரஹிதர்கள். என்னையே அனன்யபோக்யமாகக் கருதுவதால், மிதமான ஆகாரத்தை உண்டு, ஸத்யம் என்கிற விரதத்தைக் கைக்கொண்டவர்களாக, எப்பொழுதும் ஹரிநாம பஜனை செய்துகொண்டு, பரமாத்மாவை யோகிகளைப்போல, தன்னுள்ளும் எங்கும் ஆத்மாவைப் பார்ப்பவர்களாக, ஸ்வயம்பிரகாசர் களாக விளங்குகிறார்கள். மஹாலக்ஷ்மியுடன் கூடிய என்னையே நம்பி வாழ்வதால், அவர்கள் நிமித்த காரணம், உபாதான காரணம், ஸஹகாரிக காரணம், ஆகிய எல்லாம் நான், போக்யம், போக்தா, போகோபகரணம் எல்லாம் நான் என்று நினைத்து, ஸதா ஆஸ்ரயித்த வண்ணமிருக்கிறார்கள். அவர்களுக்கு நான் அடிமை கொண்டு அருள் கொண்டு வாழ்கிறேன். இந்த ஸம்சாரம் துக்ககரமாகவிருக்கிறது. அப்பேர்பட்ட மஹாதுக்கங்களிலிருந்து, பாகவத உத்தமர்கள் துக்கங்

களால் பிளக்கப்படும் ஜீவர்களை கரையேற்றுகிறார்கள். அவர்களுக்கு தயையே இயற்கையான குணமாகவிருக்கிறது. அவர்களுக்கு பொறுமை, பிறர்களிடம் அசூயை கிடையாது. அவர்களுக்கு என் நாம ஜபம் இருக்கிறது. அவர்களுக்கு தமம் சமம் தியாக புத்தி, நியமங்களாகிற சித்த சுத்தி, பிராண சுத்தி, குருசரணாரவிந்தங்களில் ஆழ்ந்த பக்தி, சிரத்தை, க்ஷமை, கபடமின்மை, தயை, ஆத்மகளிப்பு, வைராக்யம், ஞானம், ராமபக்தி, மதமின்மை ஆகிய ஸத் குணங்கள் இருக்கின்றன. அவர்கள் லோக கல்யாணார்த்தம் வாழ்ந்துகொண்டு தங்களையும் பிறர்களையும் ஆனந்தித்துக்கொண்டு வருகிறார்கள். இந்த ஸாரமான பாகவத தர்மத்தை பிரபு நாராயணர் பாஞ்சராத்திர வித்யையில் நாரத ரிஷிக்கு ஸ்வேத தீபத்தில் உபதேசித்ததாக மஹாபாரதத்தில் நாராயணீயம் என்கிற அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நாரத ராம ஸம்வாதத்தின் முடிவில் துளசிதாஸர் சொல்லுகிறார் "நாரதர் அல்லவோ தன்யர். மணி மந்திர ஔஷதமாகவிருக்கும் ராம நாமத்தையும், அகண்டமான ராம பக்தியையும், அதை அனுஸந்திக்கும் பாகவதர்களின் பக்தியையும் நாரதரை வியாஜமாக வைத்து பிரபு பிரகடனப்படுத்தினார். லோக கல்யாணார்த்தமாக விளங்கும் இந்த பகவத் பக்தி பாகவத தர்மம் அனுக்ரஹ சித்தமுள்ள ராமனிடமிருந்து நம்போன்ற நித்ய ஸம்சாரிகளுக்கு அளிக்கப்பட்டது. அவ்விதமான உத்தம ராமமூர்த்தியை வணங்கி உத்தம சாந்தியை அடைவதை விட்டுவிட்டு, யுவதியை பக்தி செய்து, கர்ம போகங்களில் ஈடுபட்டு, விஷயங்களில் நேரத்தைச் செலுத்தி, ஹே மனஸே ஏன் நாசமடைய விரும்புகிறாய்! ராம நாமத்தைப் பஜித்து, ஸாதுக்களை அண்டி, ஸம்சார தாபங்களிலிருந்து நிவர்த்தியை அடைய ஏன் தயங்குகிறாய்! காமத்தையும் மதத்தையும் விட்டுவிடு. ஸத்ஸங்கத்தை அடை. காலத்தை வீணாக்காதே," என்று துளசிதாஸர் சொல்லித் தலைக் கட்டுகிறார்.

இப்பொழுது நாம் ஸாதுக்களின் பெருமைகளை ஆராய்வோம். ஜடாயு மரணம் ஏற்படுகிறது. பிரபு ஜடாயுவுக்கு ஈமக்கடன்களை தானே ஸ்வயமாகச் செய்கிறார். துளசிதாஸர் சொல்லுகிறார். "என் பிரபு ஸ்ரீரகுநாதன் அதி மென்மையான சித்தத்தை உடையவர். தீன தயாளு ஒருவித காரணமுமின்றி நிர்ஹேதுவாக, "இவன் நம்மைச் சேர்ந்தவன்" என்று சங்கல்பிக்கும் உதாரர். ஜடாயு பிறப்பில் திர்யக் ஜாதியைச் சேர்ந்தபோதிலும், மஹத்தான கர்மத்தால் பகவத் கைங்கர்ய பிராப்தி பெற்று யோகி ஜனங்களும் அடையமுடியாத மஹா துர்லபமான பலனை அடைந்தார். அப்பொழுது ஸர்வ சாக்ஷியான சம்பு உமையிடம் உரைக்கிறார் "உமாதேவி, விஷயங்களில் ஈடுபடும் மனிதர்கள் மஹா அபாக்யவான்கள். ஹரியின் பதங்களை விட விஷய போகங்களில் அனுராகம் கொண்டவர்கள் சிறந்த பாக்யத்தை அடைகிறதில்லை." மீண்டும் சங்கரர் உமையிடம் சொல்கிறார். "என்

பிரபு ஸ்ரீராமச்சந்திரன் விஸ்வம் முழுவதற்கும் ஆதாரயோனியாக இருப்பதால், ஒன்றிலும் பற்றப்படாத குணைத்தமர். தம்மைத்தாமே தாங்கிக்கொள்ளும் ஸ்வதந்த்ரர். சராசர ஆத்மா. இவ்விதம் என்பிரபு ராமன் சீதையைப் பிரிந்ததினால் தனது தீனத் தன்மையை மறை சாற்றிக்கொள்வதால், காமத்தை ஆதாரமாக வைத்து வாழும் ஸம்சாரி ஜனங்களுக்கும், மனத்தையும் இந்திரியத்தையும் அடக்கி, புத்தியை ஆத்மாவினிடம் ஸமர்ப்பித்திருக்கும் தீரர்களான யோகி ஜனங்களுக்கும் பிரபு வைராக்ய உபநிஷத்தை, விமலமான ஞானத்தினால் மனத்தை திருடமாக்கும் ராமபக்தியை உபதேசிக்கிறார். ஆசை நிறைவேறாமல் கடூர வசனங்களால் யேற்படும் க்ரோதம் காமம் லோபம் மதம் மாயா மோஹம் ஆகிய ஐந்தும் பகவான் சீதாராமனுடைய அனுக்ரஹ ஸங்கல்பத்தினால் நாசமடைந்து போகின்றன. எவர்கள் ஸ்ரீராமனை பஜிப்பார்களோ, ஸதா ஹரிபகவானை பஜனை செய்வார்களோ, அவர்கள் இந்த உலகத்தில் இருப்பதுயாவும் நசிக்கும் குணத்தை உடையது; ஸ்வப்னத்தைப்போல இறந்து விடக்கூடியது. ஆனால் பிரபுவின் பூஜை ஆராதனைகளும், அவருக்காக கைங்கரியம் செய்வதும், அவருடைய நாமாக்களை ஸதா ஜபித்துக்கொண்டு வழிபடுவதும் ஒன்று தான் இந்த ஜகத்தின் உண்மையான விஷயம்'' என்று சொல்லி முடிக்கிறார் உமையிடம் சம்பு பகவான். அப்பேர்பட்ட ஸாதுக்கள் லோக கல்யாணார்த்தம் வாழ்பவர்கள். அவர்களிடம் ஷடூர்மிகள் என்று சொல்லப்படும் காமம் க்ரோதம் லோபம் மோஹம் மதம், மாத்ஸர்யம் ஆகிய தோஷங்கள் இல்லை. பிரபு பரதனிடம் மேலும் சொல்லுகிறார். "பரதா, ஸாதுக்களும் துஷ்டர்களும் சந்தன மரத்தையும் கோடாரியை யும் போன்றவர்கள். சந்தனமரம் வெட்டப்பட்டாலும் பிளக்கப்பட்டாலும் அது தன்னுடைய வாசனையை கோடாரிக்குக் கொடுத்து, அதை பரிமளிக்கச் செய்கிறது. அதுபோல ஸாதுக்களின் ஸம்பந்தத்தைப் பெற்ற துஷ்டர்கள் சுகந்தமான கல்யாண குணங்களை அடைந்து, தங்களது துஷ்டகுண ஸ்வபாவங்களை விடுகிறார்கள். இந்தக் காரணத்தினால் சந்தனம் ஸ்ரீகண்டமாக தேவதைகளின் தலையின் மேலே விளங்குகிறது; ஸர்வ சுகந்தமான சந்தனம் யாவராலும் விரும்பப்படுகிறது. ஆனால் பிறருக்கு ஹிம்சை செய்யும் கோடாரி நெருப்பில் சுடப்பட்டு, சுத்தியினால் அடிக்கப்படுகிறது. ஸாதுக்கள் பிறர்களுடைய துக்கங்களைத் தங்களுடைய துக்கங்களாகப் பார்ப்பார் கள். உப்பைப்போல அவர்கள் தங்களை அழித்துக்கொண்டு, தியாக சீலர் களாக இருப்பார்கள். அவர்களை ஒருவன் நிந்தித்தால், அவர்கள் சினத்தை விட்டு விட்டு, "அடியேனுடைய குறைகளை நினைவூட்டி யதற்கு நன்றி,'' என்று மகிழ்வார்கள். அவர்கள் பூததயை கொண்டவர் களாக, மமகாரம் அஹங்காராதிகளை ஒழித்து, ஞான வைராக்ய ஸம் பன்னர்களாக, ஸர்வ ஸங்கதியாக சீலர்களாக, பகவத் பாகவத அபசாரங்களை பெரும் குற்றமாகக் கருதி, ஸகல ஜீவராசிகளிடமும் ஜன்ம

நிரூபணம் போன்ற அபசாரங்களைச் செய்யாமல், "நம்பிள்ளை கோஷ்டியோ, நம் பெருமாள் கோஷ்டியோ" என்று வியக்கும்படி வைஷ்ணவ தாஸர்களாக வாழ்ந்துகொண்டு, பெருமாளுடைய பிரியத்திற்காகச் செய்வார்கள். அவர்களுடைய ஹ்ருதயம் மிகமிக மென்மையானது. அவர்கள் தீனர்களுக்கு மார்க்க தரிசிகளாகவும், தயையே கவசமாகக் கொண்டு, மனம் வசனம் கர்மம் இத்யாதிகளால் ராம பராயணமாக வாழ்ந்து, பகவானுடைய திருவடிகளை ஸ்வயம் பிரயோசனமாக ஆராதிக்கும் வைஷ்ணவ சீலர்கள். கபடமின்றி, பரமா பக்தி விரதம் பூண்டு, அவர்கள் எப்பொழுதும் ஆர்த்திகளைக் காப்பாற்றிய வண்ணம் இருப்பார்கள். அவர்கள் திருடர்களாக விருந்தாலும் அவர்களுக்கும் ஆத்ம உபதேசம் செய்வார்கள். அப்பேர்பட்ட ஆத்ம அபஹாரிகளை அவர்கள் சீல முள்ளவர்களாக ஆக்கிவிடுகிறார்கள். அப்பேர்பட்ட ஸாது ஜனங்கள் என் உயிருக்கு ஸமானம். அவர்களிடம் நான் ஸதா கோயில்கொண்டு வாழ்கிறேன்" என்கிறார் பிரபு. "பரதா, அவர்கள் ஸாத்விக குணத்தில் நிலை பெற்றிருக்கிறபடியால் நான் அவர்களை மிக்கவும் நேசிக்கிறேன்" என்று முடிக்கிறார். "அதே மாதிரி துஷ்டர்கள் எனக்கு விரோதிகள். நான் அவர்களைத் தண்டித்து, நல்வழிதிருப்பியும், அவர்களிடமும் அனுக்ரஹ உள்ளத்துடனிருக்கிறேன்" என்கிறார் பிரபு.

பிரபு லக்ஷ்மணனுக்கும் பரதனுக்கும் மாயையைப் பற்றியும் ஞான வைராக்யத்தைப் பற்றியும் உபதேசித்தார். பஞ்சவடியில், லக்ஷ்மணனுக்கு உபதேசித்ததை நாம் முதலில் கவனிப்போம். "லக்ஷ்மணா, உன் மனம் எந்தெந்த விஷயங்களில் பற்றுதல் கொண்டு, காற்றாய்த் திரிந்து அலைகிறதோ, உனது மனது விஷய போகங்களில் லயித்து எதை விரும்புகின்றதோ, அதை மாயை என்று தெரிந்துகொள். மாயையிலிருந்து விடுபட ஆத்மவித்யையைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்கிறார் பிரபு. அவித்யையினால் ஜனன மரணத்க்கிணற்றில் ஸம்ஸாரச்சுழலில் விழுதல்தான் யேற்படுகிறது. ஆனால் ஆத்மவித்யையினால், ஸத்வம் ரஜஸ் தமஸ்ஸாதிகளால் பற்றப் படாதவனாகி, தோஷரஹிதனாக, பிரபுவினுடைய பாதாரவிந்தங்களை ஸதா ஆஸ்ரயித்துக்கொண்டு, ஜிதக்ரோதனாக, ஜிதேந்திரியனாக, பகவானையே நம்பி, தன்னால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை என்று ஸங்கல்ப ஹீனனாக வாழ்வான். அவனுக்கு அஹங்கார மமகாரங்கள் கிடையாது. ஆஸ்திகனாகவும் நாராயண பக்தி கொண்டவனாகவுமிருக்கிறான். அவன் பரமவைராகி. பரபக்தி பரம பக்தியாக பரிமளித்து, பகவத் பிரேமையை ஸ்வயம் பிரயோசனமாக அப்யஸித்து, மனோவாக்கு காயங்களின் அடக்கமாகிய மோக்ஷத்தில் தெளிவுபெற்றவனாகிறான். பரபக்திக்கு வேண்டிய ஸாதனங்களில் விப்ரசரணசேவையும் வர்ணாஸ்ரம தர்மங்களின் பரிபாலனமும் மிக முக்கியம். இவைகளினால், அவனுடைய புத்தி பிருவிருத்தியிலிருந்து விடுதலையடைந்து, ஒழிவு

ஏற்படுகிறது. அவனுக்கு பகவத் பாகவத தர்மத்தில் ருசி யேற்பட்டு, பகவானே பரமான நிதி என்று எண்ணுகிறன். அவன் பாகவதர்களின் சேர்க்கையை அடைந்து, ஸ்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாத ஸேவனம் ஆகிய வழிகளின்படி பகவத் பக்தியை அடைகிறன். நாளடைவில் அவனுக்குப் பாகவத பிரேமை ஏற்பட்டு, நியம நிஷ்டனுக அவன் விளங்குகிறன். அவனுக்குத் தக்க காலத்தில் பகவானே குரு மாதா பிதா ஸர்வமும் ஆகிவிடுகிறன்.'' ஸர்வசேஷியான பகவானுக்கு நான் அடிமை கொண்டேன். நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் எனக்கு வேண்டும்,'' என்று அனுஸந்திப்பவனுக, தயையே காரணமாக வைத்து, அந்த சேதனன் பகவானுடைய ரக்ஷணத்தை அடைகிறன். அவனுக்கு பகவானுடைய கதாம் ருதங்கள் பரமபோக்யமாக விருக்கின்றன. வேறு தேவதைகளிடம் பக்தி செலுத்தாமல், வேறு பலன்களையும் நாடாமல், ஸ்வயம் பிரயோ சனமாக பக்தி பிரபத்தி செய்யும் பாகவத உத்தமர்களிடம் நான் கருத்துடனும், தேஹத்துடனும் ஆத்மாவுடனும் ஸதா வசிக்கிறேன்'' என்கிருர் பிரபு. அப்பேர்பட்ட மஹானுபாவன் ஸகல கர்மங்களையும் பகவத் பிரீதி பகவத் ஆராதனம் என்று நினைக்கிறன். அவர்களுடைய செய்கைகள் ஹிம்சையில்லாதவை. அவர்களிடம் நிஷ்காம பக்தி வாழ்ந்து வருகிறது. அவனுக்குப் பக்தி பிரபத்தியோகங்கள் ஸித்திக் கின்றன. அவன் பகவானின் பொற் பாதங்களில் தெளிவுற்று, நிலை பெற்று, ஆசார்ய ஸம்பந்தத்தாலும் ஸதாசாரங்களாலும் அவன் உத்தம கதியை அடைகிறன்'' என்ருர் பிரபு லக்ஷ்மணனிடம்.

பிரபு ராமன் சீதையை விட்டுப் பிரிந்து அவளை தேடிக்கொண்டு போகும்போது, லக்ஷ்மணனிடம் கதறுகிருர். அதனல் காமம் தர்மம் ஆகிய இரண்டிலும் பற்றுதல் உள்ள எம்பெருமான், அதிக துக்கத்தால் ஏற்பட்ட வருத்தங்களைத் தெரிவிக்கிருர். சீதையை விட்டுப்பிரிவது ஸர்வ சாதாரண நஷ்டமா? ராஜ்யத்தை விட்டுவிடலாம்; தாய்தகப்பனை விட்டுப்பிரியலாம்: மஹா உத்தமியான சீதையை விட்டுப்பிரிவது மஹாகஷ்டம், என்கிறதை பிரபு நிரூபிக்கிருர். அவள் எப்பேர்பட்டவள், எதற்காக லங்கைக்குச் சென்ருள்? அவளுடைய ஸ்வய இச்சையால் சென்ருளா? அல்லது அவளுக்கு பிரபுவின் லீலா நாடகங்களில் பங்கு இல்லையா? என்கிற பலகேள்விகள் பிறக்கும். பராசரர் பகவான் லக்ஷ்மி தேவியின் பெருமைகளைச் சொல்லும்போது, ''தேவி பகவா னுடைய உள்ளத்திற்கு ஏற்ப, அவதாரங்கள் ஸ்வய இச்சையினல் எடுக்கிருள். மானிடராக பெருமாள் அவதரிக்கிற சமயம் அவளும் மானிட உருவை எடுக்கிருள். தேவராக அவதரிக்கும் சமயம், தேவ ஸ்திரீயாக அவள் அவதரிக்கிருள்'', என்கிருர். அவளும் பகவானுடன் கூட அவதாரம் எடுத்து அவருடன் லீலதரங்கத்தில் விளையாடுகிருள். அவளுக்கும் ஸ்வய இச்சை ஏற்பட்டாலும், பகவானுடைய கருத்துக்கு இணங்க நாடகம் நடிக்கிருள். ராவண வதத்திற்காக அவதரித்த

பெருமாள் சீதையைப் பிரியும்படி செய்து, தானே ஸ்வயமாக சீதையைத் தேடிப்போகும் வியாஜத்தினுல் லங்கைக்குச் செல்கிறர். சீதையும் தேவமாதர்களின் சிறையை விடுவிப்பதற்காக பகவானைப்போல, தனது ஸ்வய இச்சையினுல் தன்னை சிறைப்படுத்திக்கொண்டு லங்கைக்குச் செல்கிறுள். மஹா கருணுமூர்த்தி, அதே கருணையினுல் அவள் ராக்ஷஸிகளால் வேண்டப்படாமலிருந்தபோதும் அவள் தனது ஸ்வய இச்சையினுல் ராக்ஷஸிகளுக்கு ரக்ஷகம் அளிக்கிறுள். கருணை என் பதை ஆராய்வோமாகில், "பிராட்டியோ, பகவானே சேதனனைப்பற்றி நினைக்கும் சமயம் அவர்களுடைய சிந்தனைகள் கீழ்க்கண்டவாறு இருக் கின்றன. நம் கருணை புகுவதற்கு இவன் (சேதனன்) இடம் தராமல் தடை செய்கிறனே, ஐயோ, பாவம் என்று அவர்கள் கண்ணீர் பெருக்கு கிறர்கள்." சேதனனுக்கு அனுகூல பிரவிருத்திகள் இல்லாவிட்டாலும், பிரதிகூலமாகவும் விபரீதமாகவும் இருக்கக்கூடிய கர்மாக்களைச் செய் யாமலிருந்தால், அவர்களுடைய அருள் வெள்ளம் தடையின்றி பாய் கின்றது. இது பிராட்டி விஷயத்திலும் மிக்க உன்னத ஸ்திதியை அடைகிறது. ராக்ஷஸிகளால் ரக்ஷை வேண்டப்படாமலிருந்தும் அவ ளால் ரக்ஷை அளிக்கப்பட்டது. அது மாதிரி பிரபு ராகவனும் விபீஷண னைக் கூட்டி அழைத்துவரச் செல்லும் சுக்ரீவனைப் பார்த்து "விபீஷண னுகவிருந்தாலும் சரி, ராவணனே இருந்தாலும் சரி கூட்டிவா" என்று ஆக்ஞை செய்கிறர். அப்பேர்பட்ட பிராட்டியின் கருணை பெருமாளின் கருணையை விட ஒருபடி மேலாக இருக்கிறது என்று பட்டர் வாதிக்கிறர்.

எவ்விதமிருக்கினும் பிராட்டி பெருமாள் ஸம்பந்தம் பெறுவதே ஜீவனின் உன்னத நோக்கு. பகவானுடைய ஸம்பந்தத்தை அடைவ தற்கு ஒன்பது வழிகள் இருக்கின்றன. அதாவது பகவத் அனுபவத்தை ஒன்பது ஸம்பந்தங்களாக ஜீவர்கள் மஹாபாக்யவசமடைந்து அனு பவிக்கிறர்கள். தசரதர் கௌஸல்யா ராமனை புத்ரனுகவும், வஸிஷ்டர் விஸ்வாமித்ர ரிஷிகள் சிஷ்யனுவும், சீதை நாயகனுகவும், பரதன் இஷ்ட பந்துவாகவும், காட்டிலுள்ள ரிஷிகள் அறியப்படவேண்டிய பெரும் பொருளாகவும், பரமபுருஷார்த்தமாகவும், விபீஷணுதிகள் சரீர ஆத்மா வாகவும் சுக்ரீவன் ஸ்வாமியாகவும், ஆஞ்சநேயாதிகள் ஆதார ஆதேய ஸம்பந்தமாகவும் போக்ய வஸ்துவாகவும் இவ்விதமாக பல பக்தர்கள் பலவிதமாக அனுபவித்திருக்கிறர்கள். பெருமாளை ஸர்வவித பந்தத்துவ சம்பந்தத்தால் மனத்தினுல் அடைந்தவன் அர்ஜுனன் என்றும் சொல்லலாம்.

பெருமாளை ஸர்வவித பந்துத்வத்தாலும், ப்ராப்யத்வமாகவும், ப்ராபகத்வமாகவும், ஸகல ஜகத்காரணத்வத்தாலும் அடையவேண்டும் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அதனுலே அவர்கள் பகவா னிடம் நித்ய கைங்கர்யங்களையும் ரக்ஷகத்தையும் பிரார்த்திப்பார்கள். தங்களது ஸ்வாதந்திரியத்தையும் அவரிடம் ஸமர்ப்பித்து, அவரையே உபாயமாகவும் உபேயமாகவும் வரிப்பார்கள். ஈஸ்வரனுல் ஸ்ருஷ்டிக்கப்

பட்ட சகல சேதன அசேதனங்களிடம் ராகத்வேஷம் காட்டாமல், ஸமதிருஷ்டியுடன் வாழும் பரமபாகவத உத்தமர்கள் தங்களுடைய அனுபவங்களுக்கு பந்துத்வ பிரதிபந்தங்களை அறுத்து எரிந்து பகவானை பரதனைப்போல பரமபுருஷார்த்தம் என்று பெரும்மதியினுல் ஆராய்ந்து, அனுபவிப்பார்கள். பகவானும் அந்த அந்த தாஸர்களின் மன எண்ணத்திற்கு ஏற்ப தன்னை அந்த கைங்கர்யத்தில் அர்ப்பித்துக் கொள்வார். உதாரணமாக துளசிதாஸர் இரண்டு இடங்களில் பகவானுடைய உதாரஹ்ருதயத்தினுல் யேற்படும் தனது அனுபவத்தை பக்தர்களுக்கு ஸ்வயமாக அளிப்பதுபற்றிச் சொல்கிறுர். முதலாக ஜனகரின் ஸ்வயம்வரத்தில் கூடின பக்தர்களுக்கு பகவான் ராமச்சந்திரன் சீதையுடன்கூடி ஒவ்வொரு பக்தனுக்கும் அவனவன் இஷ்டப் பிரகாரம் காக்ஷி அளித்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே மாதிரி, பிரபு வானரர்களிடமும் ஒவ்வொருவரையும் நேராக குசல பிரஸ்னம் செய்து, தனது கிருதக்ஞையைச் செலுத்தி, அவர்களை சந்தோஷிப்பித்தார் என்று ராமசரிதமானஸத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இது அவர் ஒருவரால்தான் முடியும். ஏனெனில் அவர் ஸர்வக்ஞர், ஸர்வ அந்தர்யாமி அன்றே? பெரியோர்களால் ஸர்வ ஸம்மதமாக ஒப்புக்கொள்ளக்கூடிய பகவத் ஸம்பந்தங்கள் ஒன்பது விதங்களாகவிருக்கின்றன. பிதாபுத்ர ஸம்பந்தம், ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம், சேஷ சேஷி ஸம்பந்தம், பர்திருபார்யா ஸம்பந்தம், ஞாத்ருஞேய ஸம்பந்தம், ஸ்வாமி கிங்கர ஸம்பந்தம், சரீர ஆத்ம ஸம்பந்தம் (இதையே நாராயணனுக்குச் சொல்லும்போது சரீரசரீர ஸம்பந்தம் என்பார்கள்), ஆதார ஆதேய ஸம்பந்தம் போகித்ருத்வ போக்யத்வ ஸம்பந்தம் ஆக ஒன்பது வித ஸம்பந்தத்தால் ஜீவன் பரபிரும்மத்தை அடைந்து அனுபவிக்கிறுன் என்பார்கள். இவ்வித ஸம்பந்தங்களிலும் பகவான் ஸ்வயமாக தானே ஜீவர்களை அனுபவிப்பதும் ஆனந்தம் என்பார்கள். அதே மாதிரி பிராட்டிக்கும் சேதனர்களுக்கு ஸம்பந்தச் சேர்க்கைகளின் ஆனந்தத்தை அனுபவிக்கக் கொடுப்பதற்கு ஸர்வதீர உரிமையுண்டு என்று நாம் எடுத்துக்கொள்ள வேண்டியது. ஆனுல் ஸ்ரீயப்பதித்வம் பகவான் ஒருவனுக்கே யேற்பட்ட அசாதாரண லக்ஷணம். அதேபோல பகவானுக்கு இன்னும் சில விசேஷங்கள் ஸ்ருஷ்டிஸ்திதி, பஞ்சாயுதங்கள் ஆகியவை ஏற்பட்டிருக்கின்றன. பகவானுடைய உன்னத ஸ்தானமும் பகவான் ஒருவராலேதான் தரிக்கப்படுகின்றது. ஆனுல் ஜீவர்கள் மாத்திரம் பகவானை பலவித ஸம்பந்தங்களால் அனுபவிக்க ஆசைப்படுகிறுர்கள். அந்த ஆசைகளில்தான் அனுக்ரஹம் நிக்ரஹம், பரிக்ரஹம் ஆகியவை யேற்படுகின்றன. ஒவ்வொரு அவதாரத்திலும் சில ஸம்பந்தங்கள் பூர்வமாகவே, கர்மவாசனைகளின்படி, சித்திக்கின்றன. அவ்விதமிருப்பினும், அந்த ஸம்பந்தங்கள் அவதாரங்களில் மாறுதலை அடைகின்றன. குரு சிஷ்ய ஸம்பந்தம் பெற்ற வஸிஷ்டர் பகவானை பரமபுருஷார்த்தமாக வரித்து அனுபவித்தார். பரதனும்

தம்பியாக பிறந்திருந்தபோதிலும், தன் பிறப்பே அவனை ராம அபராதியாக்கிவிட்டது, அதனாலே ராமன் வனம் செல்லவேண்டியிருந்தது என்று பரிதபித்து, அந்த பந்துத்வ ஸம்பந்தத்தை அதிகிரமித்து, கிங்கரனாக பரதன் வாழ்ந்தான். ராமஸங்கல்பத்தின்படி வாழும் பரம வைஷ்ணவ பக்தனாகத் திகழ்ந்தான். வாலியும் சுக்ரீவனைப்போல ராம கைங்கர்யம் செய்வதற்கு பாக்யம் நான் பெறவில்லையே, என்று பரிதபிக்கிறான். அங்கதனும் ஹனுமான்ஜியைப்போல ராமனுக்கு நித்ய கைங்கர்யம் செய்யும் பாக்யத்தைப் பெறவில்லையே என்று வருந்துகிறான். தசரதரும் ராமன் காட்டுக்குப் போவதால் ஸர்வவித ஸம்பந்தமும் போய்விடுமோ என்று பயந்து முதலில் கண்களையிழந்து, பின்பு உயிரையும் இழக்கிறான். ஆனால் ஸம்பந்தம் நீடிக்கவும் செய்கிறது, மாறவும் மாறுகிறது. அதுவே பகவத் ஸங்கல்பத்தால் குறையவும் செய்கிறது. ஒவ்வொன்றிற்கும் காரணம் பூர்வஸுக்ருதங்களும், பகவத் ஸங்கல்பமும்தான். எவ்விதமிருப்பினும் ஆசார்யரான துளசிதாஸர் ராமபக்தியை வரமாக வேண்டி, கைவல்ய அனுபவத்தை வேண்டாமென்று ஒதுக்கித்தள்ளி, நம்மாழ்வாரைப்போல இகத்திலும் பரத்திலும் சுகத்தைத்தரும் ஆனந்தமாகிற நின்ற நிலையாகவுள்ள இறை நிலையை பெரும் பக்தியுள்ளத்துடன் வேண்டுகிறார்.

## துளசிதாஸரின் ராமசரித மானஸத்தின் சில விசேஷ லக்ஷணங்கள்

துளசிதாஸருடைய ராமாயணமான ஸரோவரில் குளிப்பதற்காக அவர் அழகான ஏழு படிக்கட்டுகளை (ஸோபான்) அமைத்திருக்கிறார். ஒவ்வொரு காண்டமும் ஒவ்வொரு படியாக விருக்கிறது ; பாலகாண்டம், அயோத்யா காண்டம், ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், லங்கா காண்டம், உத்தரகாண்டம். வால்மீகி கம்பராமாயணங்களைப்போல எழுதப்பட்டுள்ள காவியமாக விருந்தாலும், துளசிதாஸர் சிலவிடங்களில் அவருடைய கதையில் சில மாறுதல்களைச் செய்திருக்கிறார். அவைகளை நாம் முதலில் காண்போம்.

**பாலகாண்டம் :** துளசிதாஸர் ராமனையே பரத்வமாகக் கருதியிருக்கிறார். தியாகராஜரைப்போல அவர் ஸ்ரீராமனை மும்மூர்த்திகளுக்கும் மேலாகக்கருதி, உமாமஹேஸ்வரர்களின் ஸம்வாதங்களாக ராமசரிதமானஸத்தை அமைந்திருக்கிறார். அந்த உமாமஹேஸ்வரர்களின் ஸம்வாதங்களை ஒட்டி இதர ஸம்வாதங்களும் அங்கங்கே காணப்படுகின்றன. துளசிதாஸர் சொல்லுகிறார் : "இந்த காவியம் முதலில் சம்பு பகவானால் ரஞ்சனம் செய்யப்பட்டு, அவரால் காகபுசுண்டிக்கு அளிக்கப்பட்டது. காகபுசுண்டியினிடமிருந்து யாக்ஞ்யவல்கியரும், யாக்ஞ்யவல்கியரிடமிருந்து பரத்வாஜரும் பெற்றார். ஆகவே காகபுசுண்டி கருட ஸம்வாதம், யாக்ஞ்யவல்கிய பரத்வாஜ ஸம்வாதங்கள்,

  

அவைகளை ஒட்டி துளசிதாஸரின் கருத்துக்கள், உபதேசங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஸந்தர்ப்பங்களை ஒட்டி நானும் எனது கருத்துக்களையும் அளித்திருக்கிறேன்.

துளசிதாஸர் ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும் சிவபெருமானை வாயாறத் துதிக்கிறார். அவருக்கு உமாமஹேஸ்வரர்களிடம் அத்யந்தப் பிரியம். பாகவத தர்மத்தை வாயாறப் புகழும் துளசிதாஸருக்கு பரதத்வத்தில் வாதப்போர் எதற்கு? தியாகராஜரும் "மனஸா ஸ்ரீ ராமசந்திரன்" என்கிற கீர்த்தனத்தில் ராமனுடைய பரதவத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் ஆதிகாவியமாகிய ஸ்ரீமத் ராமாயணத்தில், மூன்றாவது, ஆறாவது அத்யாயங்களைப் படிக்கலாம் என்கிறார். துளசிதாஸர் பிரபு ராமசந்திரன் அயோத்தி ஜனங்களுக்கு உபதேசம் செய்கிறபோது, சொல்கிறார்: "எனக்கு (ராமனுக்கு) சிவனைப்போல பிரியமானவர் வேறு எவருமில்லை. சிவத்ரோஹிகள் எவ்வளவுதான் தங்களை ராமபக்தர்கள் என்று பறையடித்துக் கொண்டாலும், நான் அவர்களை அடைகிறதில்லை. சிவனை மதிக்காமல் என்னிடம் பக்தி செய்பவர்கள் மூடர்களே. அவர்கள் நரகம்தான் செல்வார்கள்," என்கிறார். அதேபோல சிவபக்தன் என்று தன்னைச் சொல்லிக்கொள்பவனும் என்னைத் துவேஷிப்பவனும் இருவருமே நரகத்திற்குச் செல்கிறார்கள். நாரத ரிஷி தனது சாபத்திற்கு வருந்தி பச்சாதாபப்பட்டு பிராயசித்தம் செய்யவேண்டியபோது, பிரபு நாரதரை "சிவநாமாவை நூறு தடவைகள் ஜபி," என்று உத்தரவிடுகிறார். ஆகவே துளசி பிரபு சிவ–விஷ்ணு அத்வைதி. தியாகராஜரைப்போல அவருடைய காவியத்தில் எல்லாத் தத்வங்களும் பரிமளிக்கின்றன. மானஸ ஸரோவரும் புனிதமான உள்ளமும் புனிதமான கங்கையைப்போல அல்லவா இந்த தத்வங்களில் விளங்குகின்றது. துளசிதாஸருடைய பெருமை மாருதியின் அருளாக நாம் நினைக்கவேண்டும். மாருதி சிவசக்தியின் ஐக்ய ஸ்வரூபமாகக் கருதப்படுகிறார். மாருதி யில்லாவிடில் ராமாயணமே சோபித்திருக்காது. பிராட்டி பெருமாளுடைய பூர்ண அனுக்ரஹத்தைப் பெற்றவர் மாருதியல்லவோ?

ஆகவே பாலகாண்டத்தில் துளசிதாஸர் கதை தொடக்கத்திற்கு முன்பு மஹேசருடன் உமையின் காதலுற்ற கல்யாணத்தை அழகாக வர்ணிக்கிறார். அதற்கு முன்பு நிர்குண பிரும்மத்தைப் பற்றியும், ஸகுண பிரும்மத்தின் பெருமைகளையும் சொல்லிவிட்டு, ராமநாம பிரபாவத்தை சித்தாந்தம் செய்கிறார். அதற்குப் பின்பு ராமசரித மானஸத்தின் ஆதி காரணமாகிற உமாமஹேஸ்வரஸம்வாதங்களுக்கு அடிப்படையாக நின்ற தாக்ஷாயணி கதையையும், அதற்குப் பின்பு நடந்த பார்வதி பரிணயத்தையும் விவரணம் செய்த பின்பு, ஸ்ரீராமனுடைய கதையை பிரஸ்ன ரூபத்தில் கேட்ட உமாதேவிக்கு, சம்பு அருள் செய்வதாக ஸ்ரீராம கதை ஆரம்பமாகிறது. அதற்கு ஏற்ப பரத்வாஜரின் பிரஸ்னம், அதற்கு யாக்ஞ்யவல்கியரின் உத்தரமாக ராம

கதை அவருக்கு எழும்புகிறது. அதேமாதிரி, நாக பாசத்தின் சமயம் உதவிக்கு வந்த கருட மஹாராஜருக்கு ராமனின் பரத்வ சந்தேகங்களை விளக்குவதற்கு, காகபுசுண்டியின் ஸம்வாதங்கள் தோன்றுகின்றன. அதை ஒட்டி துளசி பிரபுவும் கதையைத் தொடக்கம் செய்கிறார். இவ்விதம் ஸம்வாத ரூபமாக எழுந்த இந்த காவியம் எளிய பாஷையில் எழுதப்பட்டு, யாவராலும் சுலபமாக அறியக்கூடியதாகவிருக்கிறது. அங்கங்கே பிரபு துளசிதாஸர் நடை பாஷை, பதபிரயோகங்கள் விவரணைகள், நுணுக்கத்துடன் ஆராய்ந்து உச்சநிலையை அடைந்திருக்கிறார். இந்த காவியம் சந்தேகமின்றி எக்காலத்திலும் உயிர்கொண்டு ஜீவனோடு வாழும் பரம பொக்கிஷ காவியமாகத் திகழும். அதில் லவலேசமும் தயக்கமோ சந்தேகமோ ஏற்படாது.

பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய அவதாரத்திற்கு பல காரணங்களும், மூன்று இதிகாஸ கதைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. நாரத உபாக்யாநமும் பிரதாப பானுவின் சரிதமும் சதருபைமனு ஆகியவர்களின் தபஸ்ஸும் அவர்கள் அடைந்த வரங்களும் காரணங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

ராமனுடைய பால லீலைகள் பூர்ணமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை காகபுசுண்டி உத்தரகாண்டத்தில் கருடனுக்குச் சொல்லும்போது மீண்டும் அனுபவிக்கிறார். பால ராமரின் லீலைகள் வால்மீகி ராமாயணத்திலோ, மற்ற காவியங்களில் காணப்படவில்லை.

ஜானகியின் ஸ்வயம்வர சமயம் பரசுராமரின் ஆகமனம் சொல்லப்பட்டிருக்கிறது. ராமலக்ஷ்மண பரசுராம ஸம்வாதங்கள் வீர ரஸம் பொருந்தியதாகவிருக்கின்றன. அந்த ஸம்வாதத்தின் பலனாக, சிற்றரசர்கள் ராமனுடன் சீதைக்காக சண்டை செய்யும் நோக்கத்தை விட தீர்மானித்தார்கள். பிருகுகுல மஹரிஷியின் சமரஸமான பேச்சுக்களும் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அதன்பிறகு சீதை ராமனுக்கு ஜயமாலை சூட்டுகிறாள். விவாக ஏற்பாடுகள், தசரதருக்கு செய்தி அனுப்புகிறது, கல்யாண விமரிசைகள், அயோத்தி ஆகமனம், சீதாராமனின் இல்வாழ்க்கை ஆகிய யாவும் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

**அயோத்யா காண்டம்:** ராம பட்டாபிஷேக ஏற்பாடுகள்; ராமவனகமனம்; குஹனைக் காணுதல்; பரத்வாஜருடைய சந்திப்பு. சித்திரகூடத்திற்கு சீதை லக்ஷ்மணனுடன் ராமன் செல்லுதல்; தசரதரின் மரணம், பரதாக மனம்; பரதனின் சித்ரகூட விஜயம், ராம பாதுகைகளின் பட்டாபிஷேகம். இங்கே ஒரு மாறுதல் துளசிதாஸரால் செய்யப்பட்டிருக்கிறது. சித்திரகூடத்தில் ஜனக மஹாராஜாவின் வருதல் சொல்லப்படுகிறது. இதைப்பற்றி மற்ற கதைகளில் பிரஸ்தாபம் கிடையாது.

**ஆரண்ய காண்டம்:** ராமன் சீதை லக்ஷ்மணனுடன் அத்ரி, வால்மீகி அகஸ்திய முதலிய ரிஷிகளின் ஆஸ்ரமங்களுக்குச் செல்லுதல்;

கரதூஷணுதிகளின் வதம்; ராவணனுடைய சீதா அபஹரணத்திற்கு முன்பு பிரபு ராமன் சீதையை அக்னியில் ஒளிந்து கொள்ளும்படி வேண்டுதல்; மாயை சீதை நிஜ சீதைக்குப் பதிலாக அக்னியிலிருந்து கிளம்பி ராமனிடம் வந்தமர்தல்—மாரீசவதம், ராவணனுடைய சீதா அபஹரணம். ராமன் சீதையைத் தேடுதல். சீதையின் அசோக வனவாஸம். (இந்தக் காண்டத்தில் மாயா சீதை தோன்றியதைக் கவனிக்கவும்.)

**கிஷ்கிந்தா காண்டம்:** ஆஞ்சநேயரின் முதல் சந்திப்பு—சுக்ரீவ ஸ்நேகம், வாலி வதம், சுக்ரீவ பட்டாபிஷேகம், சீதையைத் தேட வானரர்கள் புறப்படுதல். ஸ்வர்ணபிரபையின் உதவி. ஸ்வயம்பிரபை ராமனிடம் வந்து வரம் பெறுதல். ஸம்பாதியின் சந்திப்பு. இங்கேயும் ஸ்வயம் பிரபையையும் சுக்ரீவனேயும் துளசிதாஸர் ஏற்கனவே ராமனே பஜித்துவரும் பக்தர் களாகச் சித்திரித்திருக்கிருர்.

**சுந்தர காண்டம்:** ஆஞ்சநேயரின் லங்கா பிரவேசம். ராம பக்தரான விபீஷணனே ஹனுமார் சந்திப்பதும், அவரிடமிருந்து சீதையின் இருப்பிடத்தையும், அவளுடைய புனிதமான வாழ்க்கையை யும் அறிதலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ராவண வரவு, சீதையின் பதில், ஹனுமான் சீதையைக் காணுதல், ஹனுமாரின் ராம ஸந்தேசம், அங்குளியத்தைக் கொடுத்து சூடாமணியைத் திரும்பிப் பெறுதல், மாருதியின் யுத்தம், வானரங்கள் திரும்பி வருதல், சீதையின் ஸந்தேசம், ராமன் சமுத்திரக் கரைக்குப் போய் விபீஷணனேயேற்று அணைகட்டுதல், வானரங்களின் லங்கை புறப்பாடு. இந்த காண்டத்திலும் விபீஷண சந்திப்பும், அணை கட்டுதலும் வானரங்களின் புறப்பாடும் வால்மீகி ராமாயணத்திலிருந்து செய்யப்பட்ட மாறுதல்களாகவிருக்கின்றன.

**லங்கா காண்டம்:** மந்தோதரியின் புத்திமதி, ராமன் தனது அஸ்திரத்திஞல் மந்தோதரியின், காது குண்டலங்களேயும், ராவண னுடைய குடையையும் அறுத்தல், அங்கதன் தூது செல்லுதல், ராம ராவண யுத்த ஆரம்பம், ராக்ஷஸர்களின் வதம், கும்பகர்ண இந்திர ஜித் ராவண மரணம், மந்தோதரியின் விலலாபம், ராமன் மந்தோதரி யின் வேண்டுகோளே அங்கீகரித்து ராவணனுக்கு உத்தமகதியைக் கொடுத்தல், சீதையின் அக்னி பிரவேசம், நிஜ சீதையை பிரபு பிரகடனப் படுத்துதல், பிரும்மாவின் ஸ்துதி, மஹேந்திரன் தேவர் களின் ஸ்துதி, உமாமஹேஸ்வரர்களின் ஸ்துதி, விபீஷண பட்டாபி ஷேகம், மரித்த வானரர்கள் பிழைத்தல், மரித்த ராக்ஷஸர்களுக்கு உத்தம கதியைக் கொடுத்தல். ராமன் அயோத்திக்குச் சீதை லக்ஷ்மணன் வானரங்களுடன் கிளம்புதல். (இந்தக் காண்டத்திலும் பகவானுடைய அம்பு ராவணனுக்கு பயத்தைக் கொடுத்தும், அவனுக்கு அஹங்காரம் அடங்கவில்லே; அதனுல் அங்கதனுடைய தூதும் பலனளிக்கவில்லே; அதனுல் பிரபு ராவணனே பரிவாரசஹிதம் கொல்ல நேர்ந்தது என்கிற விருத்தாந்தங்கள் காணப்படுகின்றன. ஆனுல்

பிரபுவினுல் ஸம்ஹரிக்கப்பட்ட ராவணனும், ராக்ஷஸர்களும் ராம கிருபையினுல் உத்தமகதியை அடைந்தார்கள் என்று துளசிதாஸரால் சொல்லப்பட்டிருக்கிறது.)

உத்தர காண்டம்: ராம பட்டாபிஷேகம். ராம ராஜ்யம், ஸனகாதி முனிவர்களின் வருதல், ராமனுடைய உபதேசங்கள் ஆகியவை காணப்படுகின்றன.

காகபுசுண்டியின் ஆத்ம கதை, கருடனுடைய கேள்விகள், காகபு சுண்டியின் பதில், துளஸிதாசரின் பிரார்த்தனை.

இதில் சீதாவிருத்தாந்தங்கள் கொண்ட இரண்டாவது வனவாசம் ஆகிய விவரங்கள் ஒன்றும் சொல்லப்படவில்லை. லவகுசர்களின் பிறப்பும், ராமாயண காவியம் எழுந்த வகையும், ராமராஜ்ஜியத்தின் சிறப்புக்களும் நன்ருகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றன.

ராமனைப் பெரும் பரதத்வமாக ஸ்தாபித்திருந்தபோதிலும், துளசி தாஸர் ராமனை மனிதர்களுள் புருஷோத்தமனுக நினைக்கிருர். அவரை வடக்கு இந்திய பிரதேசங்களில் மரியாதா புருஷோத்தம ராமன் என்று அழைக்கிருர்கள். பகவானுடைய பரத்வவிபவ ஐஸ்வர்யங்கள் ஒருபுர மிருக்கட்டும். அவர் சாதாரண மனிதனைப்போலத் திகழ்ந்தாரே, தன்னைக் கருதிக்கொண்டாரே; அவருடைய ஆசரணைகள் நமது மதிப் பிற்கும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ரீதிக்கும் எவ்வளவு தூரம் அவரால் பண்புடன் அனுஷ்டிக்கப்பட்டிருக்கின்றன என்பதை ஆராயுங்கால் அவருடைய சீல மரியாதைகள் யாவராலும், எக்காலத்தி லும் ஸர்வ ஸம்மதமாக ஒப்புக்கொள்ளப்படுகின்றன. ராமன் மனிதனுகவே இருக்கட்டும். மனிதத் தன்மைக்கு ஏற்ப அவனுடைய குண தோஷங்கள் அவனை எவ்விதம் உத்தம மரியாதைக்குரிய புருஷோத்தம ராமனுக அருகதை செய்கின்றன. மனிதன் மனிதனுகவே நடந்தால், மனிதன் என்றுதான் சொல்லப்படுகிருன். அவனுடைய தோஷங்களே குண விபூஷணங்களாக மாறிவிடுகின்றன. உதாரணமாக, ராமன் தாய் தகப்பன் வசனப்படி பரதனுக்கு அரசு ஈந்து வனம் சென்ருன். சுக்ரீவ பட்டாபிஷேகத்திற்கோ, விபீஷணப் பட்டாபிஷேகத்திற்கோ அவன் பட்டணம் புகுந்திலன். அவன் காட்டில் வசிப்பவனுக தன்னை ஸ்வீகரித்துக்கொண்டு, அவன் நகரில் புக மறுத்துவிட்டான். பரதனுடைய வசனங்களையும் ஆரத்திகளையும் குரு வசிஷ்டர், மாமனுராகிய ஜனகரின் வேண்டுகோள் ஆகிய அனைத்தையும் தர்ம துரந்தரான பிரபு ஏற்க மறுத்து விட்டார். தர்மத்தை ஆபத்திலும் விடாமல் ஊர்ஜித சாஸனராக பிரபு விளங்கினுர். வனவாசியாக அவர் வாழ்க்கையை நடத்திக் காட்டினுர்.

அதேமாதிரி, அன்னை ஜானகியையும் நோக்கிப் பிரபு சொன்னுர். "ஜானகி, நீ எங்கு வேண்டுமானுலும் செல்லலாம். நான் ரகுகுலத் தின் கீர்த்திக்காகவும், க்ஷத்திரிய தர்மத்தையும், ராஜ தர்மத்தையும் ஒட்டி வீரத்தனத்தால் நான் உன்னை ராவணனிடமிருந்து மீட்டேன்."

  

இந்த வார்த்தைகள் தர்மாத்மாவான ராமனுக்கே பொருந்தும். உலக மரியாதையைக் காப்பாற்றுவது அரசனின் கடமை. வாலி வதமும் இதன்படியே ஆகும். அரசனுடைய கடமையை சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் "மாநிலம் காவலனாவான்" என்கிற செய்யுளில் "தனக்குத் தெரியாமலே தன்னாலும், தன் உறவினர்களாலும், பகைவர்களாலும், கள்வர்களாலும் விலங்கு முதலிய உயிர்களாலும் உண்டாகக்கூடிய ஐந்துவகைப்பட்ட அச்சங்களை அகற்றி நாட்டைக் காத்தல் அரசனது கடமை என்று சொல்லுகிறார். அதே போல கருணைமிகுதியாகக் கொண்ட அரசன் நிகழவிருக்கும் போரை நிறுத்துவதற்கு முயல்வான். கல்வியறிவும் கேள்வியறிவும், அறிவு நுட்பமும், பாஹுபலம் மதிபலம் கொண்ட தகுந்த தலைவனை அரசன் தூது பகைவனிடம் அனுப்புவான். இரண்டு அரசர்கள் போர்புரியும் காலத்தில், தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவும், பகைவனின் படை பலத்தையும் குணதோஷங்களையும் அறிவதற்கு பகைவர்களைச் சேர்ந்த ஒருவனை தனது நண்பனாக ஆக்க முயல்வான். (வீபீஷணனை பிரபு அங்கிகரித்தது இதற்கு உபமானம். ஹனுமானையும் அங்கதனையும் ராமன் தூதர்களாக அனுப்பியதும் இதன் கருத்தே).

பொருள் இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாதது. வள்ளுவரும் இவ்வுலக இன்பம் பொருள் இல்லார்க்கு இல்லை என்று சொல்லுகிறார். அப்பேர்பட்ட பொருள் ராமனால் தேடப்படவில்லையே எனலாம். வாலியின் அரசை சுக்ரீவனுக்கும், லங்காராஜ்யத்தை விபீஷணனுக்கு ஈந்தும் ராமன் தனது விரதத்தின்படி தவமுனியின் வாழ்க்கையை அடைந்தான். ஆனால் அந்த அரசர்கள் ராவனுடைய பட்டாபிஷேக சமயத்தில் வந்திருந்து ராமனை, கோஸல தேச அரசனை வணங்கி, ராஜ மரியாதைக்கு ஒப்ப, கப்பம் செலுத்தினார்கள். அதுமாத்திரமா, பிரபு ராமன் அந்த தனங்களின் உதவியைக்கொண்டு பல யாகங்கள் செய்து, அரச சின்னங்களான யானை குதிரை, பொன், வெள்ளி, பசுக்கள் முதலியவற்றை தானம் செய்தார். பரசுராமரிடம் வாதுக்குப் போனதும், க்ஷத்திரிய தர்மத்தைக் காப்பாற்றுவதற்கும், நாட்டிற்கு யாவராலும் ஏற்படக்கூடிய அச்சத்தை அகற்ற வேண்டியது அரசரின் கடமையானதாலும் அல்லவோ ஏற்பட்டது. "என்னை யார் போருக்கு அழைத்தாலும், அவனிடம் போர்புரிய தயங்கமாட்டேன்" என்கிறார் பிரபு ராமசந்திரன்.

பொருளைச் சேர்த்தலைப்போல பொருளைப் பிரியும் காலத்திலும் ஆத்மபலத்தையும் கஷ்டங்களைச் சகிப்பதிலும் மன உறுதியை அடைவது போன்ற அரிய குணங்களை ராமன் தனது நடத்தையினால் பிரகாசப்படுத்தினார். "அயோத்தியை பரதனுக்குக் கொடுக்க வேண்டும்; நீ பதினான்கு வருஷங்கள் முனிவேடத்துடன் வனம் செல்ல வேண்டும்" என்று கைகேயினால் விதிக்கப்பட்ட ராமனின் முகம் ஒருவித விகாரமுமடையாமல் அப்போது மலர்ந்த செந்தாமரையைப்

போலிருந்தது என்கிறுர் வால்மீகி முனிவர். அதேபோல காமத்திலும் சீதையை விட்டுப் பிரிந்த ராமன் துன்பமடைவதும், அவளிடம் அவன் வைத்த காதலையும் அன்பின் பணியையும் ஆதாரமாகக்கொண்டு, தனது உயிர் தங்கிராது என்று சொல்லுமாப்போலே அவன் கதறினுன். இதுவும் மானிட இயல்பைச் சேர்ந்ததன்ருே? வள்ளுவர் தன்னை ஆற்ற முயன்ற தோழியை நோக்கி தலைவி கூறுதல் போல "தொடின் சுடின் அல்லது காமநோய் போல விடின் கடல் ஆற்றுமோதீ," என்ருர். தன்னைத் தொட்டால் தீயானது சுடும். தன்னை விடுத்து அகன்றவர் களை தீயானது சுடுமோ? ஆனுல் காமநோய் அப்படியன்று. காம நோயோ நீங்கினுல் சுட்டுவிடும். இக்குறளுக்கு பரிதியார் என்னும் உறையாசிரியர் "தீயானது தொட்டால் சுடும்; காமத்தீபோல விட்டால் சுடவல்லதோ? ஆதலால் பிரியாமல் இருப்பதே நல்லது," என்று உரை எழுதியுள்ளார். தலைவன் தலைவியை விட்டு இருக்கக் கூடுமா என்று கேட்டால், சில சமயங்களில் பிரிதல் ஏற்பட்டுவிடுகிறது. ராவணன் சீதையை அபகரித்துவிடுகிறன். பொருள் தெய்வசங்கல்பத் தால் நஷ்டமாகப்போகிறது. தலைவன் யாது செய்யக்கூடும்? அதற்கு ஏற்ப பிரபு ராமன் சராசரங்களின் அழகைக் குறித்து அழுகிறுர். சகல சராசரங்களின் அழகின் அம்சங்களை ஒருங்கே திறட்டி ஒரு பிம்பமாக படைத்தால் எவ்விதமிருக்குமோ, அதைப்போலவல்லவா ராமனுடைய சீதை விளங்கினுள். யாழிசை, நிலவு, தென்றல், மாலைக் காலம், இயற்கையின் ருதுக்கள், அவைகளினுல் ஏற்படும் மாறுதல்கள் அழகின் சித்திரங்களாகிற பசு பக்ஷிகள், விலங்குகள் செடிகள் மலர்கள் யாவையும் தனித்திருப்போரை வருத்துமே ஒழிய இனி நேரப்போகும் தலைவியனுடைய கூடல்கூட இன்பம் தராது.

தலைவன் தனது பிரிவை தலைவியினிடமும் சொல்லி, அவளுடைய விரகதாபங்களையும் அவன் அறிய முயல்கிறன். அதன்படி ராமன் ஹனுமனை அனுப்பி ஸந்தேசம் சொல்லி, சீதையின் விருத்தாந்தங்களை யும், ஸந்தேசத்தையும் அறிய விரும்புகிறுன். அதைப்போல் பிரத்யக்ஷ நிரூபணம் என்று சொல்லுமாப்போல ராமன் கணையாழியை அளித்து சீதையின் சூடாமணியை சீதையினிடமிருந்து ஹனுமார் மூலம் கிரஹிக்கிறன். அதேபோல சீதையும் ஆற்ருயிருத்தல் வேண்டும், அவ்விதம் இருத்தலே "முல்லை" என்னும் ஒழுக்கமாகும் என்று பழந்தமிழ் அகப்பொருள் இலக்கண நூலாசிரியர்கள் கூறியுள்ளனர். அத்தகைய நினைவினுல் சீதை மெலிந்துபோனுள். அவளுடைய கண்கள் ராமனைக் காண்பதற்கு வருந்தின. வள்ளுவர் கூறுகின்ருர், "வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை, ஆர் அஞர் உற்றன கண," என்கிருர். காதலன் வராத காலத்தில் அவரது வரவை எதிர்பார்த்துக்கொண்டு தூங்காமல், காதலன் வந்த காலத்தில் அவன் பிரிந்துவிடுவானே என்று அஞ்சித் தூங்காமலிருத்தல். ஆதலால் இருவழியிலும் அவள் துன்பமடைதல். கம்பரும் சீதையின்

அசோகவன வாசத்தை இந்த நிலையில் படிப்போர் மனத்தை உருக்கும் வண்ணம் இயற்றியிருக்கிறார். அவர் நன்கு படம்பிடித்துக் காட்டுகிறார். "சீதை கண் இமைத்தலையும் மூடுதலையும் விட்டனள். அவளுடைய ஒளியில்லாத உடம்பு வெயில் முன்பு வைக்கப்பட்ட தீபத்தைப் போலிருந்தது. விழுதல், விம்முதல், வெதும்புதல், அஞ்சுதல், எழுதல், ஏங்குதல், இரங்குதல், தொழுதல் தளர்தல், நடுங்குதல், பெருமூச்சு விடுதல், அழுதல் முதலியவற்றை அவள் செய்துகொண்டிருந்தாள். மேகம், மை முதலிய கரிய பொருள்களைக் கண்டவுடன் அவளுக்கு ராமனுடைய நினைவு உண்டாயிற்று. பிரிவு என்னும் துயரம் ஒரு உருவம் கொண்டால் எவ்விதமிருக்குமோ, அதைப்போல துன்பத்தை அவள் அடைந்தாள். மெல்லிய ஆடையை அவள் அணிந்திருந்தாள். அவள் ஸ்நானம் செய்யாமல் அழுக்குடனிருந்தாள். கடலினிடத்தே தோன்றிய அம்ருதத்தைக்கொண்டு, மன்மதன் தீட்டிய சித்திரம் ஒன்று எவ்விதம் புகைபடிந்து காணப்படுமோ, அதுபோல அவள் தோன்றினாள். ஆகவே உண்மைக் காதலர்களுக்கு நிறை அழிதல் ஏற்படும். நிறை என்பது மனத்தில் சாந்தியுடன் நிறுத்தி வைக்கும் பண்பு ஆகும். ஆகவே சாந்தி ஏற்படாமல், அடக்கத்தக்க உணர்ச்சிகளை தலைவனும் தலைவியும் வாய்விட்டுக் கூறுகின்றனர். அப்பேற்பட்ட ராமசீதா ஆகியவர்களுக்கு ஹனுமான் தோழன் தோழியாகவல்லவோ அமைந்தனன். நாணம் லஜ்ஜை எனப்படும் பண்பு நிறை மறைந்து, அவர்கள் ஆற்றல் அற்றவர்களாக, காமவேட்கைகள் அதிகமாயின. இதுவல்லவோ தெய்விகக் காதல். ஆனால் அவர்கள் கூடும்போது, ராமனுடைய கடும் சொற்களுக்கு அர்த்தமென்ன என்று கேட்கத்தான் தோன்றும். தலைவன் தலைவியை அவமதித்து தனது விருப்பப்படி நடந்தாலும், "பேணாது பெட்பவே செய்யினும், கொண்கனைக் காணா(து) அமையலகண்," (வள்ளுவர்). தலைவனைக் காணாமல் தலைவியால் வாழமுடியாது. தலைவனைக் காண்பதற்கு முன்பு அவன்மீது ஊடல் கொண்டிருப்பாள் தலைவி. அவனிடம் தன் ஊடற் குறிப்பை வெளிப்படுத்தவேண்டும் என்னும் எண்ணத்துடன் செல்வாள். அவனைக் கண்டளவில் அவளது மனம் அவனோடு கூடுதலையே விரும்பும், இவ்விதம் சீதை நடந்தாள். ஆனால் ராமன் நாடகம் நடத்தினான். அதுவே பேரின்பமாக இருவர்களுக்கும் கடைசியில் முடிந்தது. காதலர்கள் எவ்விதம் இன்ப வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பதற்கு ராமசீதாவின் சீல ஆசாரங்கள், அன்பு நெறிகள் விமர்சனம் செய்யும் இலக்கணமாகவுள்ளன.

இனி ராமனுடைய சொந்த வாழ்க்கையையும் ஆராய்வோம். பிரபு ராமன் தர்மத்தை தர்மத்திற்காகவே அனுஷ்டானம் செய்தார். அரசனுடைய கர்மாக்களான சிஷ்டபரிபாலனம் துஷ்டம் நிக்ரஹம், ஸாமதானபேதம் தண்டம் ஆகிற நான்கு உபாயங்களால் அரசர்களின் தர்மங்களையும் பாதுகாத்தல் ஆகிய வழிகளை அனுஸரித்தவன் ராமன்.

ராஜவாழ்க்கை எவ்வளவு கடினமானது, எத்தகைய கஷ்டம் வந்திடுனும், லோகஹிதத்திற்காகவும், தர்மமரியாதைக்காகவும், உலகரீதி உலக மரியாதைகளுக்காகவும், தனது ஆத்ம சுகத்துக்காகவும் தர்மத்தையே லக்ஷ்யமாகச் செய்துகொண்டு அவன் வாழ்ந்துவந்தான். ஆபத்காலங்களிலும் பாரபக்ஷமின்றி பொறுமை விரதத்துடன், அவன் சத்ருமித்ரு என்று பாராமல் சரிவர ராஜதர்மங்களைச் செய்துகொண்டு சாரித்திரிய புருஷனாக, கருணாமூர்த்தி விளங்கினான். எல்லா பிராணிகளிடத்திலும் வானராதிகளிடமும் மஹரிஷிகளிடமும், அயோத்தி வாசிகளிடமும், செய்கையாலும், மனத்தாலும் வாக்கினாலும் துரோஹச் செய்கைகளைச் செய்யாமலும், அருளுடைமையும் கொடையையும் ஆயுள் தானமும் சரணாகதசம்ரக்ஷகமும், சாதுக்களுடைய வர்ண ஆஸ்ரம தர்மங்களைப் பரிபாலித்தலும், ராமனுடைய ஸநாதன தர்மங்களாக விளங்கின. சாதுக்களிடம் ஏற்படுகிற நம்பிக்கை தன்னிடத்திலும் ஏற்படுவதில்லை. அன்புடனிருத்தலால் எல்லா பிராணிகளும் ராமனிடம் சமாதான உள்ளன்புடன், பகைநட்பு என்கிற வேறுபாடில்லாமல் நடந்து வந்தார்கள். ஸநாதன தர்மவிருத்தியில் அன்பு வைத்து வாழும் தர்ம சீலர்களுக்கு, மனம் ஸந்தாபத்தினால் வாட்டமோ, சோர்வையோ அடையாமல், ஸத்யத்தையும் அஹிம்சையையும் பிறருக்கு ஹிதம் செய்வதையும் கதியாக வைத்து, பிறர்களுக்கு உபகாரம் செய்து கொண்டு, பிரதிபிரயோசனம் ஒன்றையும் எதிர்பாராமல் சந்தோஷம், தனம், கௌரவம் மரியாதை ஆகிய மூன்றிலும் தங்களைப்போல பிறர்களையும் கருதி தாங்களும் சந்தோஷம்கொண்டு, பிறர்களையும் இன்பமடையச் செய்கிறார்கள். ஆகையால் மனிதனுக்கு இந்த சீல வாழ்க்கைக்கு தேவைப்படக்கூடிய ஆத்ம குணங்களாகிற தன்னடக்கம், தைர்யம், பொறுமை, தெய்வ நம்பிக்கை, தர்மத்தினிடம் பிரியமும் ஆசரணைகளில் ஒப்புயர்வுற்ற சீலமும் ராமனுக்கு ஆபரணங்களாக விருந்தன. அரசனாகவிருந்து ரிஷிவாழ்க்கையையும், ரிஷியாயிருந்தும் மனிதனாகவிருப்பதும், அரசன் ரிஷி மனிதன் ஆகிய மூன்றிலும் நடத்திக்காட்டிய ராமனின் வாழ்க்கை தேவர்களும் பொறாமைப்படக் கூடியதாக விருந்தது. அதைப்போல, சீதையும் ஸ்திரீகளுக்குரிய தவமும், இந்திரிய நிக்ரஹமும் ஆசாரமும், பதிபக்தியும், மாதா பிதாக்களின் சேவையும், சாதுக்களிடமும் தர்மத்தினிடமும் காட்டவேண்டிய பிரியமும் நம்பிக்கையும் கைக்கொண்டு சாரித்திரிய ஸ்திரிபோல பார்வதி தேவியைப்போல வாழ்க்கை நடத்தினாள். நற்குலத்தில் பிறந்த ஜானகி ராஜகுமாரியானாலும் ஸர்வசாதாரண ஸ்திரியைப்போல நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து, இருள்மயமான மடுவில் மூழ்கிப்போகும் வியஸனங்களை எதிர்த்துப் போராடி பதியினுடைய வாழ்க்கை தன் குலம், தான் பிறந்த ஜனககுலம், தான் புகுந்த தசரதனின் குலம் ஆகிய மூன்று குலங்களையும் தனது ஒப்புயர்வற்ற கீர்த்தி பிரபாவங்களாலும் கற்பு நெறிகளாலும் ரக்ஷித்தாள். அவ்வித சீல நடத்தை

யினுல் தன்னையும் உயர்த்திக்கொண்டு, அவள் பதியின் சந்தோஷத்தையும் கீர்த்திகளையும் வளர்த்தினுள். சீதையின் பதிபக்தி, பதிபிரேமை, ராமனுடன் காட்டுக்குச் செல்லுதல், பிரிந்து வாழ்தல், மீண்டும் கூடுதல் ஆகிய சந்தர்ப்பங்களில் உச்சநிலையை அடைந்திருக்கின்றன. ஆகவே ராமதம்பதிகள் மானிடர்களாகப் பிறந்து மானிடர்களாக நடத்திக் காட்டிய வாழ்க்கை மிகப் புனிதமானது. ரிஷிகளாலும் தேவர்களாலும், மானிடர்களாலும், ஸர்வஸம்மதமாக ஒப்புக்கொள்ளப்படும் உத்தம ராம சீதா வாழ்க்கை புருஷோத்தமன் என்று சொல்லப்படுவதற்கு அணிகலமாக விருக்கிறது. உலகமரியாதைகளும் அவர்களால் ரக்ஷிக்கப்பட்டன. "நான் பெரியவன், நான் செய்வதுதான் தர்மம்" என்கிற எண்ணமில்லாமல், ராமன் வேதங்களில் சொல்லப்பட்ட தர்மங்களை அனுஷ்டானம் செய்தார். ஆகவே தர்மபரிபாலனம் மாதிரி, வேதங்களின் பரிபாலனமும், அவைகளைத் தனமாகக்கொண்ட பிராம்மணர்கள், ரிஷிகள், தேவர்கள் ஆகியவர்களின் ரக்ஷணத்தால் உலக பரிபாலனமும் நன்கு செய்யப்பட்டது. ஜகத்ரக்ஷணம் சரிவர செய்யப்படும்போது, ராம ராஜ்யம் மஹா ஸம்பத்துக்களைக்கொண்ட அரசாகவும், ஜனங்கள் ஸந்துஷ்டியுடனும் தர்மவியவஸ்தைகளுடனும் வாழ்ந்துவந்தார்கள். ராம ராஜ்யத்தின் சிறப்புக்களும் ஸகல ஜீவராசிகளால் அடையப்பெற்ற நன்மைகளையும் துளசிதாஸர் விவரமாக உத்தர காண்டத்தில் செல்லியிருக்கிருர்.

அவ்விதம் மானிட வாழ்க்கையை நடத்திக்காட்டியபோதிலும், அவரால் சில அமானுஷ்ய செய்கைகளும் நடத்திக் காண்பிக்கப்பட்டன. பெரும் கடலை அணைகட்டுவது என்பது அஸாத்தியமான காரியம். அப்பேற்பட்ட ரகுபதியை ஸம்சாரமாகிற கடலுக்கும் ஸேதுவாக நினைப்பதில் ஒரு தவறுமில்லை.

அஹல்யை ராம பாத ஸ்பர்சத்தால் கல்லிலிருந்து சாபவிமோசனமடைந்து வெளிவருகிருள். அதனுல் அவர் பதிதபாவனராகக் கருதப்படுகிருர்.

தேவர்களாலும் சரபங்க முனிவராலும் ராமனுடைய பரத்வம் விளக்கப்பட்டிருக்கிறது. நாகபாச விமோசனத்தாலும், பிரும்மாஸ்திரம், நாராயண அஸ்திரம் ஆகியவற்ருல் பாதிக்கப்படாமல் இருப்பதைக் கண்ட இந்திரஜித் ராமனையும், லக்ஷ்மணனையும் நாராயண அம்சமாகக் கம்பர் கருதுகிருர். கருடன் வருதல் துளசி ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பரசுராமரும் ராமனுடைய பரத்வத்தை உணர்ந்தார் என்று துளசிதாஸர் சொல்லுகிருர்.

வாலி வதம், கரதூஷணர்களின் வதம் ஆகியவை ராமனை சாதாரண மனிதனுக நிரூபணம் செய்யவில்லை. கும்பகர்ணனும் இதை ராவணனிடமும் சொல்லியும், விபீஷணனிடம் உரைக்கிருன். சபரிக்கும், ஜடாயுவுக்கும் மோக்ஷம் கொடுத்ததும் ஸர்வ சக்திமானுகிற பிரபுவினுடைய வள்ளல் தனத்தையும், மேன்மைத் தனத்தையும் விளக்குகின்றது.

துளசிதாஸருடைய மனதில் சீதையின் ஸ்வரூபம் ஞானஸ்வரூப மாகவிருந்திருக்கவேண்டும். கிஷ்கிந்தா காண்டமே ஸ்ரீவித்யா தத்வத்தை விளக்குகிறதாக விருக்கிறது. சுந்தர காண்டமும் அதன் சிகரமாக விருக்கிறது. ஒருஜீவன் பிரகிருதியிலிருந்து விலகி, பரமாத்மாவுடன் இணையும்போது, அதற்கு பிராட்டியின் கடாக்ஷம் தேவையாகிறது. எது மோஹம், எது சுத்தமான ஞானம், எது ஆனந்த மயம் என்கிற விஷயங்களை பிராட்டியின் தயையினுல் சேதனன் போதிக்கப் படுகிறுன். மஹாலக்ஷ்மியே இருப்பத்தாருவது தத்வமாகிற ஞான ஆனந்த மயம் என்பதற்கு சௌந்தர்ய லஹரியில் காணப்படும் ஸ்லோகமே ஆதாரமாக விளக்கும். சரீரம்த்வம்சம்போ: சசிமிஹிர வக்ஷோருஹயுகம் "தவாத்மானம் மன்யே பகவதி நவாத்மான மனகம்," அதர்சேஷ: சேஷீத்யய முபய ஸாதாரண தயா ஸ்தித: ஸம்பந்தோ வாம்ஸ மரஸ பரானந்த பரயோ:." ஆகவே பிராட்டியின் கிருபையினுல் சேதனன் ஜடமான பிருதிவியை அறிந்து வித்வானுகிறுன். அவனே ஞான ரூபத்துடன், பக்தி பிரபத்தி யோகத்துடனும் பகவானுடைய பரத்வசௌசீல்ய மாத்ரு ஸ்நேகத்திற்கு யோக்யனுகிறுன். சம்சார தாபங்களை அடக்குவதற்கு ஞானமும், தேவியின் கிருபையும் அவசியம் என்று மார்க்கண்டேயாதி ரிஷிகள் சொல்லுகிறுர்கள். தேவியின் கிருபையினுலே புத்தியானது மஹா மாயைகளிலிருந்தும், மஹா மோகங்களிலிருந்தும் விடுபடுகிறது. புத்தி தெளிவுற்றுல், அகோரமூர்த்தியாகிற பிரபு ஞானவடிவாகவும், ஆனந்த வடிவாகவும் தோன்றுகிறுன். நாராயணர் என்று சொல்லப்படும் ஆதி புருஷன் ஜீவாத்மா ஸமூஹங்களை பிராட்டியின் சரீரத்தில் தரிக்கிற வராகவும், தன்னையும் இந்த ஆத்ம ஸமூஹங்களையும் பிரபஞ்சமாக ஸ்ருஷ்டித்து, ரக்ஷிக்கிறுர். ஆகவே பிராட்டியைப்போல அவருடைய சரீரமாகிற உலகத்தையும் அவர் ஸதா பார்த்துக் கொண்டிருக்கிறுர். ஸர்வத்தையும் பார்க்கும் பிரபுவை அடுத்துத்தான் ஜீவாத்மாவான சேதனன் அபிமானம் அஹங்காரம் யாவற்றையும் துறந்து, ஆசார்ய ஸம்பந்தம் பெற்று பிராட்டியின் கருணையினுல் மஹாமோஹங்களிலிருந்து விடுபட்டு, பகவத் பிராப்தியை அடைகிறுன். அதை ஆசார்ய கைங்கர்யத்தினுல் பகவத் பிராப்தியை நிலைநிற்கச் செய்கிறுன். ஆதலால் சேதனன் ஆசார்ய ஸம்பந்தம், பிராட்டி பெருமாளுடைய ஸம்பந்தத்தைப் போல எப்பொழுதும் உள்ளதும், பிரியாததும் பிரிக்க முடியாததான ஸம்பந்தத்தால் சேதனன் ஸஹஜ புத்ரவாத்ஸல்யத்தால் யாவரையும் ஸர்வலோகங்களையும் ஆனந்திக்கிறுன். அந்த ஆனந்தத்தால் தானும் ஆனந்தமடைகிறுன். ஆகவே அந்த ஆனந்த ஸம்பத்தை உடைய சேதனனுக்கு ஞானத்வம், பக்தி, ஸதாசார்ய ஸம்பந்தத்வம் புத்திரவாத்ஸல்யத்வம், ஆனந்த நிலைமை, லோக கல்யாணர்த்தம் வாழ்வது, ஆகிய மங்கள ஸ்வரூபம் அனைத்தையும் குருவான ஸதாசார்யர் காண்பிப்பவராகவிருக்கிறுர். ஆஞ்சநேயர் அப்படி திகழ்வதால்

அல்லவோ, ராமதாஸர்களுக்கு குருவாக மதிக்கப்படுகிறார். அவரே ராமசஞ்சீவியாகவிருக்கிறார். அவரையும் அவருடைய ஸ்வரூபத்தையும் நினைத்துப் பார்த்தால், ராமதரிசனம் முழுவதும் விளங்கிவிடுமே. பாஹீ பலத்தைப் போல ஆத்ம பலத்தையும் ஸர்வபக்த ரக்ஷகம் என்கிற யோக பலத்தையும் அவர் சீதாராமனிடமிருந்து வரபிரஸாத மாகப் பெற்றிருக்கிறார். அதனால் கம்பன் போன்ற கவிகள் ஆஞ்ச நேயரை நான்காவது மூர்த்தியாக (மும்மூர்த்திகளைத் தவிர) கருதியிருக் கிறார்கள், அப்பேர்பட்ட ஆஞ்சநேயருக்கு, எனக்குத் துணை செய்பவ ராகவும், ஆத்ம குருவாகவும் மதித்து ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.

நாம் சற்று தியாகராஜரையும் துளசிதாஸரையும் சேர்ந்து கவனிப் போம். சமீபகாலத்தில் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு திருவாரூரில் பிறந்த தியாகராஜர் வால்மீகியின் அம்சமாககக் கருதப்படுகிறார். பிரஹ்லாத விஜயத்தில் முதல் பாட்டில் "நான் துளசிதாஸருடைய பிருந்தவனத்திற்குப் போய் ஆனந்தமாக சஞ்சரிக்கிறேன்," என்று கிருதக்ஞபூர்வமாக துளசிதாஸரை குருவாக மதித்து நன்றி செலுத்து கிறார். துளசிகானன மந்துன விலஸிநமுக ஹரினிஜீசி விஸ்மய்யுதுடை புலக்ருததனு டகுநா துளசீதாஸ வருஸன்னுதலு ஸேதுமதின் என்று அவர்புள காங்கிதமடைந்து துளசிதாஸரைத் துதிக்கிறார். துளசி தாஸரால் மிகப் புகழுடன் உத்கோஷிக்கப்பட்ட ஸ்ரீராமநாம பிர பாவத் தாலே, இவர் ராமபக்தியை வளர்த்திக்கொண்டு, நாத உபாஸனை மூலம், ராம பிரும்மத்தை நாதஸம்யோக முறையில், பிராண அனல ஸம்யோக முறையில் அடைந்தார். நாத உபாஸனை ஆத்மாவிடமிருந்து பிறந்து நாதத்தையே உடலாகக் கொண்டு ஓங்காரமாக பரிணமித்து சிவா காரமாயுள்ளது என்கிற உண்மையை அறிந்தவர்கள் ஜீவன் முக்தர்கள் என்று நான் அறிவேன் (ராக சுதாரஸ). ராம மந்திரமே இவருக்கு பிரணவ மந்திரம். ராம கதையே இவருக்கு ஜீவனம். ராம தாஸர்களே இவருக்கு நித்ய ஸகாக்கள். நாத சாஸ்திரமாகிற சங்கீத சாஸ்திரமே இவருக்கு ஸாரூப்யமாகிற ஞான ஸாரூப்யம், அதன் உதவி யால் ஜீவர்களுக்கு பகவானுடைய சரணாரவிந்தங்களை நிலைக்கவைக்கும் நித்ய ஸம்பந்தத்தைப்‧பெறலாம் என்று சித்தாந்த பூர்வமாக நிரூபித்து மார்க்கதரிசியாக வாழ்ந்து வந்தார். இந்த சங்கீத சாஸ்திரத்தை பார்வதி சம்பு, நாரதர் ஆஞ்சநேயர், மதங்கர், பராசரர், அகஸ்தியர், சுகசௌனகாதி ரிஷிகள், பிரும்மா, இந்திரன், குமாரக்கடவுள், ப்ருங்கி, தும்புரு, மார்க்கண்டேய, ஸனகாதி முனிவர்கள் அனுஷ்டித்து பக்த மார்க்கத்தினால் ராமனை அடைந்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறார் இந்த மஹாத்மா.

துளசிதாஸரைப் போல தியாகராஜரும் சரீரத்திற்கு இயற்கை யாகவே ஆறுவித தீயகுணங்களாகிற க்ரோதம், லோபம், மதம், மாத் ஸர்யம், காமம், மோஹம் இருக்கின்றன என்று கருதுகிறார். இந்த

தோஷங்கள் விலக, நாபி ஹ்ருதயம், கழுத்து, நாக்கு, மூக்கு முதலிய இடங்களிலிருந்து உற்பத்தியாகும் நாத பிரணவத்தை ஸப்த ஸ்வரங்களாகிற தேவதைகளாக அறிந்து ராமனை சுத்தமான மனத்துடன் பக்தி செய்யவேண்டும் என்கிறார். "ஹேராமா, பார்வதி, ஆஞ்சநேயர், நாரதர், வியாஸர் முதலியவர்களுடைய உள்ளமான தாமரைத் தண்டில் வசிப்பவனே, நீ என்னிடம் வருவாய். நீரஜநயனா, சீதாரமணி மனோஹரா, நான் உன்னை சிம்மாஸனத்தில் உட்காரவைத்து, ஸ்ருங்காரம் செய்து, கஸ்தூரி பொட்டிட்டு முக்தாஹாரம் கொடுத்து, யோகமாகிய உன் நாம ஜபத்தைச் செய்து, துளசி பில்வ மல்லிகை போன்ற உத்தம புஷ்பங்களால் அர்ச்சித்து, தூபம் கற்பூரம் காட்டி, உனக்கு பலராஜ மரியாதைகளைச் செய்து, மனமோஹனா, ஆனந்தகனா, சகோரநயனா, குந்தரதனா, சந்திரவதனா, சுந்தராங்கா என்று தம்புராவினால் சுகந்தமான சாரீரத்தினால் லயபாவராக தாளத்துடன்பாடி உன்னைத் திருப்தி செய்து உனது அனுக்ரஹமாகிற அன்பைப் பெறுவேன் என்கிறார். ருக் யஜுர் ஸாமம் போன்ற வேதங்கள் மகிமை வாய்ந்த காயத்திரி மந்திரம், தேவர்கள், ஸத்வகுணமுள்ள நரோத்தமர்களைப்போல விளங்கும் ஸப்த ஸ்வரங்களாகிற தேவதைகளை வணங்கி, ஹேமனமே, ராமனுடைய கருணையை பிரஹ்லாதிகள் அடைந்ததுபோல அடைவாய் என்கிறார். ராம நாமமே அவரைப் பஜிக்கும் வழி. ராம கதாம்ருதம் சிரவணம் செய்யவேண்டிய அம்ருதரஸம். அதுவே சகல புருஷார்த்தங்களையும் கொடுத்து கர்ம பந்தங்களை அறுத்து, கலியின் பாபங்களைப் போக்கி, ராமபக்தியாகிற ஸாம்ராஜ்யத்தைக் கொடுத்து மனசாந்தியையும் சுகத்தையும் சௌக்யத்தையும் கொடுக்கிறது. சௌமித்ரியாகிற லக்ஷ்மணன், பரதன் சத்ருக்னன் ஆஞ்சநேயர் ஆகியவர்களின் கைங்கர்யபாக்யமே பாக்யம் என்கிறார். லக்ஷ்மணன் சேஷதல்பமாகிய படுக்கையில் சீதாராமனை ரத்னமய மஞ்சத்தில் திருப்பள்ளியமரச் செய்து டோலை சேவிக்கும் பாக்யமே பாக்யம் என்று சொல்லுகிறார். தும்புரு நாரதாதிகள் பல ராகங்களை ஆலாபனம் செய்து பக்தியுடன் உள்ளம் உருகப் பாடி அதை செவியுற்று புல்லரிக்க, அந்த நாதமே கோதண்ட ராமனாக அயோத்தியில் அவதரித்து, ஸகல தத்வார்த்தமான ரகசியங்களை லக்ஷ்மணனுக்குப் போதித்தாரே, அந்த லக்ஷ்மணனின் பாக்யமே பாக்யம் என்கிறார். (மித்ரி பாக்யமு என்கிற கீர்த்தனை.)

துளசிதாஸரைப் போல சீதாராமனுடைய கந்தர்ப்ப லாவண்யத்தில் தியாகராஜர் ஈடுபடுகிறார். "ராமா நீஸமானமெவரு" என்கிற பாட்டில், பிரபு தியாகராஜர் "மருக்கொழுந்தைப் போன்ற எழில் நிறையும் சீதாதேவியின் பக்தி என்கிற கூட்டில் வளரும் பைங்கிளியான ராகவனே, தித்திக்கும் தேன்மொழியைப் பகரும் தம்பிமார்களுடன் என்குல தெய்வமாக அவதரித்த இன்சொல் வள்ளலே, மிருதுஸுபாஷ, ரகுகுலவிபூஷ, உனக்குச் சமமானவர் எவர் இருக்கிறார்? வேதங்களில் காணப்படும் கர்மங்களினால் நானாவித கஷ்டங்கள் நேரிடுகின்றன.

கர்மகாண்டத்தில் காணப்படும் தர்மங்கள் மனிதனை மாறிமாறி பிறக்கச் செய்யும். ராமா, உன்னிடம் கொண்ட பக்தியோ ஜன்மப் பிறப்பை ஒழிக்கச் செய்யும். அது மாத்திரமா ராமா, இந்த லோகத்தில் வாழும்போதும், வேதங்களுக்குச் சிகரமாக விளங்கும் உபநிஷத்தின் கருத்துக்களை ஒட்டி, பரபிரும்ம ஸ்வரூபத்தை விளக்கி, போற்றும் வகையில், உனது ராம கதையை உத்தமமான பக்தியுடன், திராக்ஷை ரஸபாகமாகச் செய்து ஸ்ருங்காரம் போன்ற நவரஸங்களால் பொருந்தி இயற்றப்பட்ட க்ருதிகளால் உன் புகழைப்பாடி ஆனந்தமடைய வேண்டுமென்கிறார். துளசிதாஸரும் இதே கருத்தைத்தான் உத்தரகாண்டத்தில் சொல்லுகிறார். நாரத ரிஷி அடிக்கடி அயோத்திக்கு வந்து ராம கதையை பக்தியுடன் ரஞ்சனம் செய்து கானமாக ராமஸந்நிதியில் பாடி, ஆனந்தித்து, பிரும்மலோகத்திற்கும் சென்று ராம கதையை பிரகடனப் படுத்தினர் என்று சொல்லுகிறார். அப்பேர்பட்ட அவிச்சின்ன பக்தி—இடைவிடாது தியானிக்கப்படும் பக்தியோ—ஜன்மப் பிறப்புக்களை ஒழித்து இகலோகத்திலும் தாபத்தையும் அழித்து, முடிவில் முக்தியையும் அளிக்கிறது. ராமனைத் தியாகராஜர் நாதாத்மக, த்யாக ராஜ நாத, அப்ரமேய ஸதா என்கிறார்.

ராமனுடைய பரத்வத்தைப் பேசும்போது, ராமனை மும்மூர்த்திகளுக்கும் மேலானவர் என்று துளசிதாஸரும் தியாகராஜரும் அபிப்பிராயப்படுகிறார்கள். அதற்குக் காரணம் ராமன் சுத்தஸத்வமானவன். தாமஸகுண ரஹிதன். ஆதலால் உமாமஹேஸ்வராதிகளால் ஸதா கானம் செய்யப்படுகிறார் என்று இருவரும் சொல்லுகிறார்கள். நித்யரூப எவர்பாண்டித்ய என்கிற கீர்த்தனையில் ராமனே என்றும் அழியாதவராகவிருக்கிறார். அவருடைய பாண்டித்யம், ஸர்வஸாமர்த்தியம் எதையும் நடத்த வல்லது. அவருடைய ஆக்ஞையை யாரும் மீற முடிகிறதில்லை. துளசிதாஸரும் இதையே சொல்கிறார். பரதனுடைய நினைவுகளும் அப்படித்தானே இருந்தன. சூரியன் இராப்பகலாக மேருவை சுற்றுகிறான். ஆதிசேஷன் சதா பூமியைத் தாங்குகிறான். காசிபதியான பரமசிவன் அங்குள்ள பக்தர்களுக்கு ராம தாரக மந்திரத்தை உபதேசிக்கிறார். இதே கருத்தை லோகாபிராம என்கிற கீர்த்தனையில் சொல்லுகிறார். குலபாவன கலியுக மனுஜா லகுன நீதாரகமு நிடல நேத்ருனி சேதனு வினு வனு ப³ல்கா ஜேஸின—கலியுகத்தில் வசிக்கும் மனிதர்கள் நற்கதி அடைய பரமசிவன் அவர்களுடைய காதுகளில் ஸ்ரீராம தாரக மந்திரத்தை உபதேசிப்பதாகச் சொல்லுகிறார். மரித்தவர்களுடைய காது மடல்கள் விரிந்து ராம மந்திரத்தைக் கேட்பது போல பாவனையுடன் நம்பிக்கையை ஊட்டுகிறதல்லவா, என்கிறார். இந்தப் பாட்டில் ராம அழகை அழகான பதங்களால் வர்ணிக்கிறார். முகஜித, ஸுதாகர ஜலஜாருண சரண, அசுரஜலதாசுக, என்கிற பதங்களை உபயோகிக்கிறார். ஓங்கார ஸதன, முரஹரா, கஜரக்ஷகா, உன் தயையைப் பெறுத பிழைப்பு என்ன பயன்

பெற்றதாகும்? அதே மாதிரி துளசிதாஸர் ராமனிடம் விமுகனுக விருப்பவன் ஜன்மத்தைப் பாழ்செய்து கொண்டவன் என்கிறுர். "தயலேனி ப்ரதுகேமி," என்கிற கீர்த்தனையில் தியாகராஜர் நூறு வயது வாழ்ந்தாலும், தரணி முழுவதையும் ஆண்டாலும், வாழ்ந்து என்ன பயன்? என்கிறுர். தசரதர் ராமரின் அனுக்ரஹம் பெறுமல் உயிர் நீத்தார். கைகேயி அபஹரித்துக் கொடுத்த ராஜ்யத்தை பரதாழ்வான் ஏற்க மறுத்தான். பரதன் அரச வாழ்க்கையைத் தியாகம் செய்து எளிய வாழ்க்கையை நடத்திஞன். ராமபாதுகைகள் ராஜ்யத்தை ஆண்டன. விபீஷணன் ரங்க விமானத்தை லங்கைக்கு எடுத்துப்போக முடிந்ததா? ஆகையால் ராமகிருபைதான் ஒவ்வொரு காரியத்துக்கும் அவசியம் என்கிறுர் தியாகராஜர்.

தியாகராஜர் ராமபக்திக்கு ராம பக்தர்களின் இணக்கமும், உறவும் அவசியம் என்கிறுர். இதையே துளசிதாஸரும் ஸாதுக்களின் பெருமை களையும் ஸாது ஸங்கத்தின் பெருமைகளை விளக்கும்போது சொல்லி யிருக்கிறுர். ஸகுணப் பிரும்மம் நிர்குணப் பிரும்மம், ஆறுசமயங்கள், அணிமாதி சித்திகள் இவைகளின் உண்மைகளை அறிந்து கொள்வது நல்ல ஸாதுக்களின் சேர்க்கையைப் போல பயன்தராது. நீலமேகம் போல சரீரமுடையவனே, ராமா, அவ்யய, கருணு ஸமுத்ர, கமலா களத்ர, கௌஸல்யா ஸுபுத்ரா, கமனீயகாத்ரா, காமாரியாகிற பரமசிவனின் மித்ரா, முனிதாஸுல வனஜலோசனு, ராமனின் பாதங்களை எப்போது தரிசிப்பேன்?

பட்டிவிடுவராது என்கிற பாட்டில் ராமா, நீ என் கையைப் பிடித்துக்கொண்டு ஸம்சாரக் கடலின் அக்கரையில் சேர்ப்பாய். "க்ருத்யாக்ருத்ய முலனு தெலிபிஞ்சி" என்கிற கீர்த்தனையில் எனக்கு எது செய்யவேண்டும் எது செய்யக்கூடாது என்பதை போதிக்க வேண்டும் என்கிறுர். துளசிதாஸரும் காகபுசுண்டி கருடஸம்வாதத்தில் "ராமனுக்குத்தான் எது நியாயம், எது அநியாயம் என்று தெரியும்" என்று சொல்லுகிறுர். எது சாஸ்வதம், எது அநித்யம் என்கிற தத்வ ஞானத்தை நீதானே எனக்குப் போதித்தாய். நீயே என் முன் தோன்றி "நான்தான் பிரத்யேக ஆத்மா, நான்தான் பரம்பொருள்—கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு சர்ம ஸ்லோகத்தில் அஹம், மாம் என்கிற பதங்களால் தன்னையே சுட்டிக் காண்பித்தாரே—அதைப்போல எனக்குக் காட்டித் தந்தாயே—எனது அந்தர்யாமியாக வசித்துக் காட்டித் தந்தாயே—நான் உன்னுடைய நிரந்தரமான கிங்கரன்—ப்ருத்யன் —அல்லவா" என்கிறுர் தியாகராஜர். இது பகவானுடைய ஸௌலப்ய வாத்ஸல்யாதி குணங்களைச் சொல்லுகிறது.

இப்பொழுது பரத்வத்தில் ராமனுடைய நிஷ்டூரத் தன்மையையும் பார்ப்போம். தியாகராஜர் பொறுத்துப் பார்க்கிறுர். ராமதர்சனம் கிடைக்கவில்லை. அப்பொழுது மனம் கசிந்து பேசுகிறுர். ராமா, உன் போக்கை அறிவது மிகக் கடினம். சீதை உனக்காக எவ்வளவு கஷ்டப்

பட்டாள்? உன்னைக் காதலிக்க வந்த சூர்ப்பனகை அவமானப் பட்டாளே. கோபிகைகள் தங்களுடைய நாயகர்களை விட்டு விட்டு, வந்ததுமில்லாமல், அவர்களுடைய ஆசையும் நிறைவேறுமல் காட்டில் மதிமயங்கினரே, தேவகிக்கு உனது பாலலீலைகளையும் வடிவழகையும் பார்க்க முடியவில்லையே. பாண்டவர்கள் பதின்மூன்று வருடங்கள் காட்டில் கஷ்டப்பட்டார்களே! ஹே தனுஜகணபீம, நவகனஸ்யாம, பாகவத சுந்தராங்கத, நந்தகி ஆயுதா, துர்வாஸரின் பசி மந்த மாயிற்றே" அதுபோல துளசிதாஸரும் பகவானுடைய திருவுள்ளத்தை அறிவது மிகக் கடினம் என்கிறார். அவர் நாரதரை ஏமாற்றவில்லையா? பரதனை பதினான்கு வருஷங்கள் காக்கவைக்கவில்லையா. அவருடைய சூக்ஷ்மஸ்வரூபம் பிராட்டி ஒருவருக்கே தெரியுமாதலால், பிராட்டியிடமே கருணையை வேண்டவேண்டும் என்று தோன்றுகிறது. சில சமயங் களில் அவரே பிராட்டிக்கும் தனது லீலைகளை விவரிக்கும்படி நேரிடு கிறது. என்றாலும் ஸர்வ ஸ்வதந்தரரான பகவான் பக்த பராதீனனாக சுலபமாக ஆகிவிடுகிறார்.

ஆட மோடி கலாதர என்கிற பாட்டில் பிரபு லக்ஷ்மணனை விட்டு ஸகல கலைகளிலும் வல்லவனும் சிவனுடைய அம்சமான ஹனுமாரிடம் முதன் முதல் ஸந்திப்பில் பேசக் சொன்னாய். நீயாக அவரிடம் நேரில் பேசவில்லை. ஆனால் துளஸிதாஸரோ ராமன் தானே ஸ்வயமாக ஹனுமாரிடம் பேசி தன்னையும் லக்ஷ்மணனையும் அறிமுகப்படுத்தினார்.

ராமன் மும்மூர்த்திகளுக்கும் மேலானவர் என்பதை மீண்டும் விளக்குகிறார் தியாகராஜர். ராமா, நீ யாருக்காக வேஷம் போட்டாய்? உனது நிஜ சௌந்தர்யத்தை காட்டில் வசிக்கும் முனிவர்களுக்குக் காட்டவா நீ அவதரித்தாய். நீ சாதாரண மானிடன் இல்லை. நீ நாராயணனேதான். தாமஸகுணத்தை சிவனுக்கும், ராஜஸ குணத்தை பிரும்மாவுக்குக் கொடுத்து, நீ ஸத்பக்தர்களின் மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வதை தொழிலாகக் கொண்டாயா?

ராமா, நீ நந்தகம் என்கிற கத்தியை வைத்திருப்பது என் போன்ற வர்களுக்கு சம்சாரமாகிற பாபக்கூட்டங்களாகிற காடுகளை அழிக்கிறதற் கல்லவா? பிரபு என் உள்ளத்தில் வசித்துக்கொண்டு, காமாதி லோப மோஹம் மதம் முதலியவைகளை அழிக்கும் சந்திர சூர்ய நேத்ரா, நீதானே எனக்கு நல்வாழ்வு கொடுக்கவேண்டும். மேலும் தியாகராஜர் சொல்லுகிறார். கருடாரூடா, மூப்பு ஆரோக்ய குறைவு, பிணி இவை களால் துன்புறுத்தப்பட்ட மானிடர்கள் மிக்க மனம் சோர்வுற்று, அறிவைக் கெடுத்துக்கொண்டு, ஞானக்கண்ணை அழிக்கும் காமாதி க்ரோதங்களால் மதியை யிழந்து, பிரபு உன்னை அடைகிறார்களில்லை. மனமும் உடலும் தூயமாய் இருப்பதற்கு நீ அருளவேண்டும். ஹே தயாநிதி, க்ஷேமாதி சுகங்களை நீ யல்லவா தருபவன். கலியுகத்தில் யேற்படும் கர்மகதியால் அவதிப்படும் என்னை, நீயே உனது மகிமை யால் ரக்ஷிக்கவேண்டும். ஸ்ரீமந்துடௌ ஹனுமந்து ரீதியாக

1406—7

ஸ்ரீகாந்தனுன நீ என்னை உனக்குப் பணி செய்பவனுகவும், உன் பாதங்களையே நம்பி வாழும் என்னை பரதனைப்போல உனது அருகில் வைத்துக்கொள். கருடன் புஜகோத்தமனுன ஆதிசேஷன் நாராயண ரிடம் இருப்பதுபோல என்னையும் உன் அருகில் வைத்துக்கொள் என்று தியாகராஜர் சொல்லுகிருர். இவைகளின் ஒலிகளை துளசிதாஸ ரிடமும் நாம் காணலாம்.

பிரபு, உன் நாமம், உனது கிருபை, உன்னைப்பற்றிய ஞானம், உன்னைப் பணி செய்வது, உனது பக்தர்களின் பாத தர்சனம், ஆகியவை உன் கிருபாகடாக்ஷத்தினுல் ஏற்படுகிறது. இங்கே துளசி பிரபுவைப்போல தியாகராஜர் பாகவத பெருமையை பிரஸாதிக்கிருர். இந்தச் செல்வங்கள் முற்பிறவிகளில் செய்த புண்யங்களின் விளைவு. இவையில்லாமல் நான் வேறு எந்த மார்க்கத்திலாவது நல்வழி அடைய முடியுமா ? கருணுமூர்த்தியாகிற நீ ஸந்தாபம் கொண்டு, ஆயாஸத் துடன், மிக்க பரபரப்பை காண்பித்துக்கொண்டு, " இவன் நம் உத்தம பக்தன் " என்று என்னை ஸ்வீகரித்துக்கொண்டு ஸர்வசாக்ஷியாக விருக்கும் நீர் அல்லவோ காலத்தை எதிர்பாராமல் கஜேந்திரனையும் திரௌபதியையும் சீதையையும் காத்த மாதிரி, என்னையும் காப்பாற்ற ஓடிவரவேண்டும். அப்பா, உன் நிஜமான பரத்வத்தை அறிந்தவன், உன்னை சூத்ரதாரியாகவும், சூர்ய வம்சத்தில், பாற்கடலில் உதித்த சந்திரனுகவும் அன்பினுல் அந்த கடலை எழுப்பும் சந்திரனுகவும் கருது கிருன். உடலே உண்மை, பிரத்யக்ஷமாகப் பார்ப்பதுதான் நம்பத் தக்கது, பரலோகம், கர்மம், மறுபிறப்பு ஆகியவைகள் பொய் என்று வாதாடும் தேகாதிகளும் நீயல்லவோ ? ராமா, அதுபோல உனது பரத்வத்தையும் அறிந்தவர்களும் நீயன்ருே, என்கிருர். அவ்வித மிருக்கும்போது, என்னைக் காப்பதற்கு உன்னைத் தவிர வேறுயாரு மில்லை, என்று தனது அகிஞ்சனத்தை வெளியிடுகிருர் தியாகராஜர். அதேபோல துளசிதாஸபிரபுவும் சொல்லுகிருர், " ஹே ரகுவீரா, நான் உம்மிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறேன். இன்னமும் சொல்லுகிறேன். எனக்குச் சமமாக தீனனும் நாதனற்றவனும் தங்களுடைய கிருபையை வேண்டுபவனும் யாரும் இல்லை. ரகுவம்ச சிகாமணி, எதைக் கேட்டா லும் " இல்லை " என்று சொல்லாமல், ஸகலத்தையும் தானம் செய்யக் கூடிய ரகுவம்சத்திற்கு சிரோண்மணியாக தாங்கள் விளங்குகிறீர். தீனர்களுடைய துக்கங்களையும் போக்கி ஹிதத்தைச் செய்யும் கிருபாளு, என்னிடம் கிருபைகொண்டு, எனக்குத் தாபங்களைத் தரும் ஜன்ம மிருத்யு பயங்களிலிருந்து விடுதலையை நீர்தான் அளிக்க வேண்டும்," என்று தாழ்மையுடன் அகிஞ்சனனுக பிரார்த்திக்கிருர். என் கஷ்டங்களை நன்ருகப் புரிந்துகொண்டு, எனக்கு நீர்தான் உதவி செய்யவேண்டும். எவ்விதம் காமிகளுக்கு ஸ்திரி முதலிய விஷய போகங்களில் இச்சை யிருக்கின்றதோ, லோபிகளுக்கு தனம் எவ்விதம் மிக்க ஆசையாகவிருக்கின்றதோ, அதுபோல ரகுநாத்ஜி,

  

தங்களுடைய ஸ்ரீராமநாமமும் தங்களிடம்யேற்படும் ராம பக்தியும் நிரந்தரமாக எனக்குப் பிரியமாகவிருக்கும்படி அருள் செய்து, நீரும் என்னிடம் ஸதா பிரஸன்ன மனத்துடன் விருக்கவேண்டும். ஸ்வாமி, எங்களை ஸதா உனது தாஸர்கள் என்று ஸ்விகரித்துக்கொண்டு ரக்ஷிக்க வேண்டும்,'' என்று அகிஞ்சனனாகப் பிரார்த்திக்கிறார். "ஹே மனஸே, சாந்த ரூபத்தை அடைந்து, பதிதபாவனரான சீதாராமனை ஸந்ததமும் பஜித்து வா. உன்னுடைய துஷ்ட ஸ்வபாவங்களை விடு, சீதாராமனை அந்தரங்க பக்தியுடன், பதிவிரதையான ஸ்திரி ஸத்புருஷனை உபாஸிப்பது போல, பூஜித்து வா. இந்த விஷயத்தில் கலக்க மடையாமல் மஹரிஷிகளின் உபதேசத்தைப் பெரும் பாக்கியமாகக் கருதி அனுதினமும் பூஜித்து வா. ஸ்ரீசீதாராம பாதங்களைத் தவிர துக்கமயமாக விருக்கும் ஸம்சாரத்தில் உனக்கு வேறு கதியில்லை. ராமனை அடைந்து எவனாவது கெட்டிருக்கிறானா? மனமே, உனது சஞ்சலத்தைவிடு, ஆஞ்சநேயரை திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள். பிங்களை அஜாமிளன் ஜடாயு போன்ற பக்ஷிகள், கஜேந்திரன் இவர்களுடைய சரிதங்களை நினைத்துப்பார். இவர்கள் மாத்திரமில்லை. இன்னும் அநேகம் பேர்கள் ராம பிரபாவத்தினால் உத்தம கதியை அடைந்திருக்கிறார்கள். இதை ஞாபகம் செய்துகொள்'' என்கிறார் பிரபு துளசிதாஸர்.

தியாகராஜர் மீண்டும் சொல்லுகிறார், "ராமா, உன் மனைவி சீதாதேவி பராசக்தி அல்லவா? என் மனம், புலன்கள், நன்னெறி, நல் வாழ்க்கை என்பதை அறியாது. என் மனத்தை இந்திரிய சுகங்களுக்கு ஒப்பிவித்தால், உன் கிருபை எப்படி அப்பா எனக்குக் கிடைக்கும்? லக்ஷ்மியே சரணாக அடைந்த புருஷன் நீயல்லவோ? உன் பாத கமலங்களைப் பூஜிக்காமல், துராசையினால் தூண்டப்பட்டு, சம்சார பாசத்தினால் கட்டப்பட்ட என்னால் கஷ்டங்களைப் பொறுக்கமுடிய வில்லை. சுகத்தை அனுபவிக்கும் நீயோ நாகசயனன், கருணாஸாகரன், பாவனரூபன், தானவஸர்வ விதாரண, தியாகராஜ பக்ஷனாகவிருக்கும் ஸ்ரீராமன், பிரபு தெளிந்த அறிவு உன்னுடைய பாகவதச் சேர்க்கை யினால்தானே எனக்கு கிடைக்கும்?'' என்கிறார்.

"பிரபு, நீயோ வல்லவன், தூணிலும் யசோதையின் மடியிலும் காணப்பட்டவன். முசுகுந்தனை அணுகி அவனுக்கு பின் வாங்கி மறைந்து கடாக்ஷித்தவன். யுகம்தோறும் பிறப்பவன். யோக சித்தியை அடைந்தவர்களையும் கூட பலவகைப்பட்ட மனிதர்களையும், அவரவர்களுக்குத் தகுந்தபடி, நீ கறையேற்றுகிறாய். அவ்விதமிருக்கும் போது என்னை மாத்திரம் ஏன் நீ ரக்ஷிக்கக்கூடாது? நான் உனக்குச் சொல்லவேணும்கிறதில்லை. பிரபு, மோக்ஷத்தைத் தரும். உன்னைவிட்டு, கர்மத்தைத் தந்து வளர்க்கும் பிறமதங்களில் செல்லவொட்டாமல் எனது பாசபந்தங்களை அறுத்து, என்னைக் கட்டிக்கொள். உன்னைச் சமயத்தில் பக்தர்களை கைவிடாதவன் என்று நான் மதிக்கிறேன். பாசிமணியைச்

கோப்பதுபோல, நான் வெகு பிரயாசையுடன் உன்னிடம் பக்தி பாராட்டுகிறேன். சுக்ரீவன், வீபீஷணன் ஆகியவர்களை ரக்ஷித்தாயே. பிறந்தநாள் முதற்கொண்டு பிரபு, உன்னையே பக்தி செலுத்திய தியாகராஜனைக் கட்டிக்காப்பாற்ற வேண்டும் என்று "நீகுதனுகு ரணரணீ பாவமுலேத நேதரு" என்கிற கீர்த்தனையில் சொல்லுகிறுர்.

ராமபக்தியை துளசிதாஸர் வரமாகக் கேட்கிறுர். அதையே காகபுசுண்டியும் ராமனிடமிருந்து வரம் பெற்றதாகச் சொல்கிறுர். அதையே ராமனிடம் தியாகராஜர் வேண்டுகிறுர். "பிரபு, உனது தயை எனக்கு ஸித்திப்பதற்கு நான் உனக்கு என்ன பணிவிடைசெய்ய வேண்டும். என்ன ஞானமுள்ளவனுக விருக்கவேண்டுமென்று சொல். நீ, நான் என்கிற பேதபுக்தியை படைத்து, மனத்தை அடக்க முடியாமல், பிறரை ஏமாற்றும் தொழிலாக உடையவர்கள் எங்கேயாவது முக்தி அடைவதுண்டா? பிரபு நிஜபக்திதானே வேண்டும்? எனக்கு நன்மை அனைத்தும் வந்தாலும், உன் தயைதான் எனக்கு வேண்டு மென்று சொல்வேன். பரமாத்மாவாகிற உனக்கும் ஜீவனுகிற எனக்கும் உள்ள ஸம்பந்தம் ராகவா, உன் தயைதானே செய்யும். ஸ்ரீஹரிபகவானைக் கட்டித் தழுவி அணைத்துக் கொள்ளாத உடம்பை நான் தேஹமே இல்லை என்று சொல்வேன் என்கிறுர். மீண்டும் "கலியுண்டே ஏகதா" என்கிற கீர்த்தனையில் தியாகராஜர் "பிரபு காமிதபலதாயகா, உன் கிருபையாகிற தயையை அடைய வேண்டு மானுல் உனது பாதங்களை சுத்தமான அந்தரங்க பக்தியுடன் நாரத பிரஹ்லாதபராசர ராமதாஸர்களைப்போல பூஜித்திருக்க வேண்டும். கலிகாலத்தில் உன் மனதைத் தெரிந்து கொள்ளாமல் உன்னை வைகிறேனே, நான் உன் கிருபையை ஸம்பாதிப்பதற்கு என்ன நல்ல காரியங்கள் செய்திருக்கிறேன், என்ன புண்ணியங்கள் பூர்வஜன்மங் களில் என்ன ரீதியில் செய்திருக்கிறேன்?" என்று அழுகிறுர். "என் பாபங்களே, என் தோஷங்களே எனக்கு சத்ருக்கள். அவைகளே நான் உன்னை அடைவதற்கு பிரதிபந்தகமாக விருக்கின்றன," என்று அசிஞ்சனனுகச் சொல்கிறுர்.

இன்னெரு கீர்த்தனையில், பிரபு தியாகராஜர் சொல்லுகிறுர் "என் பாபங்களாகிய மேகங்களைச் சிதற அடிக்கும் புயலைப்போன்ற ராமா, உன் பாதங்களே எனக்குத் தஞ்சம். ஏன் அப்பா, பூர்வ காலத்தில் பக்தர்களின் வரலாறுகளை எழுதியிருக்கிறுர்கள்? நான் எப்போதும் உன் நாமத்தை வாயினுல் ஜபித்துக்கொண்டிருப்பதற்கு, இதுதானு உன் கருணை. தாய் தந்தை புத்ரன் புத்ரி குரு தெய்வம் என்பதெல்லாம் எனக்கு நீதானே. எனது உள்ளத்திலும் யேற்படும் பேரானந்தம் என்பதிலும், நான் காணுவது உன்னிடம் வைத்த பிரேமையே. ஆம். நான் என் முன்ஜன்ம தீவினையை அறிந்தேன். கைப்புண்ணுக்கு கண்ணுடி தேவையா? சிறந்த வரகு சம்பா, கேழ்வரகின் அடியில் முளைத்து வளருமா? ஹே மனசே, நீ சீதாராமனை அடைந்து பஜித்து

வழிபடுவாய். எல்லாவற்றையும் நுட்பமாக அறிந்தவனாயினும், பக்தன் என்கிற நல்ல பெயர் எடுத்தாலும் தனக்குள் சாந்தி யில்லாத போனால் இன்பமில்லை. (சாந்தமுலேக) சாந்தமுள்ளவர்களுக்குத்தான் சௌக்யமுண்டு. நான் பேராசை கொண்டு உன்னைக்காணவில்லை, உன்னுடன் பேசவில்லை என்று நினைத்துக் கொண்டாலும், பிரபு, என் மனம் உன்னையே நாடுகிறது. நான் காணுவது காணாதது, காணக் கிடைக்காதது எல்லாம் நீ என்று நினைத்து இன்புறுவேன் (விடஜாலதுரா). நான் செய்யும் முயற்சிக்கு ராம நாமமே இன்பம் தரும். அதுவே மானிடப் பிறவியின் எடுத்த பயன். ஸ்மரணேசுகா என்கிற பாட்டில் "ராம நாம ஸ்மரணமுவல்ல நாமரூபமே ஹிருதயமு நிண்டி ப்ரேம புட்ட ஜேயக லேதா, மனிதனாகப் பிறந்த ஒருவனுக்கு வர ராஜயோகத்தின் ஆனந்த பலனைத்தருவது. நிஷ்காம புத்தியுட னிருக்கும் தியாகராஜருக்கு அதுவே ஆனந்தமாகவிருக்கிறது. ராம நாமத்தை செவியுற்ற மாத்திரமே, ராமபிரானின் திருவுருவம் இதயத்தில் நிறைந்து விளங்கி, பக்தி பரிணமிக்கிறதே என்கிறார். பத்து அவதாரங்களில் நாராயணா, ராமவேஷம் பஹுபாகனுத்ஸு கோரு நன்னு ப்ரோவ, ரொம்பச் சிறந்தது என்று எண்ணுகிறேன். சீதை என்னைப் பற்றி உன்னிடம் சொல்லவில்லையா?" என்று தியாகராஜர் சொல்லுகிறார்.

ஸதாசிவனையும் புகழ்ந்து' தியாகராஜர் துளசிதாஸரைப்போல சொல்லுகிறார். ஸதாசிவன் தயை நிறைந்தவர். ஆனந்தஸ்வரூபன். ஸத்யமோதஹ்ருதயம் உள்ளவர். ஸதா ராமபதஸரோஜத்தை உடையவர். அஷ்டதிக்குக்களை ஆடையாகக்கொண்ட திகம்பரன், தைத்யஹரன், கங்காதரன், நடனசதுரர், மதி, நதியைத் தரிப்பவர், சதாசிவரே, இது சமயம் என்று நினைத்து தியாகராஜரிடம் வருவீர், என்கிறார்.

கலிகாலத்தின் தோஷங்களை துளசிதாஸர் காகபுசுண்டி கருடஸம் வாதத்தில் விவரமாகச் சொல்லி, அதற்குப்பிறகு சொல்கிறார். "கருடரே, மாயை, பக்தி ஆகியவைகளைச் சொல்கிறேன். இவைகள் இரண்டும் ஸ்திரிரூபமுள்ளது. ஆனால் பிரபு ரகுவீரனிடம் கொண்டுள்ள பக்தியானது பதிஸ்திரியைப்போல உறவு கொண்டதாகவும், அதிகமாக போக்யமாகவுமிருக்கிறது. அந்த ராமபக்தியின் முன்பு மாயை நிச்சயமாகவே நாட்டியமாடும் நர்த்தக ஸ்திரியைப்போல விளங்குகிறாள். பகவான் ஸ்ரீராமன் பக்தர்களிடம் விசேஷமான அனுகூலத்தைக் காண்பிக்கிறான். இதனால் மாயை அத்யந்த பயத்துடன் ராமபக்தர் களிடம் தனது சேஷ்டைகளை காண்பிக்கிறதில்லை. எவனிடம் விசுத்த ஆத்மாவினால் செய்யப்படும் ராம கைங்கர்யமிருக்கிறதோ, அவனை பகவான் ஸ்ரீராமன் மிக்க நேசிக்கிறார். பிள்ளாய், அந்தப் பக்தியாகிற ஸ்திரி ரத்தினத்திடம் மாயையாகிற தாசி நடுநடுங்குகிறாள். பக்தி யுள்ளவனே கிலேசங்களின்றி சுகமாக வாழ்கிறான். பக்தியே

சுகத்தைத்தரும் ஸ்தானம் என்று நினைத்து அதையே ஏகமாத்திரமாக ஸ்வீகரிக்கிறார்கள்.'' "ரகுநாதருடைய மகிமையினால் இது ஏற்படுகிறது. இது யாருக்கும் சுலபமாகப் புலப்படுகிறதில்லை. ரகுபதியினுடைய கிருபை ஒன்றினால்மட்டும் அவருடைய பக்தர்கள் இதை அறிகிறார்கள். அவர்களுக்கு ஸ்வப்னத்தில்கூட மோஹம் ஏற்படுகிறதில்லை. கருடரே, ஞானத்திற்கும் பக்திக்குமுள்ள பேதத்தை விவரித்துச் சொல்கிறேன். அதைக்கேட்கும்போது, ஸ்ரீராம பாதங்களில் என்றும் மாறுதலும் அவிச்சின்ன பக்தியும் பிரேமையும் அனன்ய போக்யத்வமும் யேற்படு கிறது,'' என்று துளசிதாஸர் சொல்கிறார். ஜீவன் அவிநாசியான ஈஸ்வரனுடைய அம்சம். இந்த ஜீவன் இயற்கையாகவே அமலன், நிர்மலன், தோஷங்களிலில்லாதவன். மாயையினால் அவன் பரிதபிக் கிறான். பற்றுதல்களால் கஷ்டப்படுகிறான். தியாகபுத்தியினாலும் அப்யாஸத்தினாலும் சமதமாதி குணங்களாலும் அவன் மனம் சந்தோஷமடைகிறான். வைராக்ய புத்தியுடன் இருப்பவனுக்கு, ஞானம் யேற்பட்டு, நான், நீ என்கிற புத்தி நாசமடைகிறது. அவன் எது ஸாரம், எது அஸாரம் என்று அறிகிறான். ஞானதீபத்தைப்போல, ஸ்வயம்பிரகாசமாக, பிரகாசிக்கிற அந்த ஜீவனுக்கு விக்னங்கள் கஷ்டங்கள் ஏற்படாமல்போனால், சித்தி அடைகிறது. ஆனால் கைவல்ய மார்க்கத்தை அனுஷ்டிப்பது, அதில் சித்திபெறுவது மிக்க கஷ்டமாகவிருக்கிறது. ஆனால் ராமபக்தி செய்பவனுக்கு இச்சா மாத்திரத்தில் ஒருவித கிலேசமின்றி முக்திபதம் தானே ஸ்வயமாக வந்து சேருகிறது. இதை நன்றாகப் புரிந்துகொள்ளும்'' என்கிறார் காகபுசுண்டி. இதேமாதிரித்தான் தியாகராஜரும் ராமனுடைய பக்தியை வரமாகப் பிரார்த்திக்கிறார். "கலிபுருஷன் துஷ்டமதங்களாகிற யாகத் திற்கு மனிதர்களையே பலியாக வரித்து தன் நாடகத்தை நடத்த எண்ணம் கொண்டுவிட்டான். ராமா, உன் தயைதான் எனக்கு வேண்டும்'', என்கிறார் தியாகராஜர்.

கடைசியில் ராம வர்ணனையை தியாகராஜ வாக்யங்களால் அனுபவிப்போம். "ஹே ராமா, உன் நாமத்திற்கு ஜயமங்களம். உன் ரூபத்திற்கு ஜயமங்களம். ஆஞ்சநேயர் பற்றிய உன் பாத கமலங்களுக்கு நமஸ்காரம். பட்டுவஸ்திரங்கள் நவரத்தினங்கள், நவமுக்தாஹாரங்கள் யாவையுடனும் விளங்கும் உனது வக்ஷஸ்தலத் திற்கு ஜயமங்களம். என்னை மோஹிக்கச் செய்வதும், நளினமானதும் மந்தஸ்மிதமான முகமண்டலத்திற்கு நமஸ்காரம். பங்கஜாக்ஷியான சீதையைத் தழுவின உன் கரங்களுக்கு நமஸ்காரம்.

சுருள்சுருளாக அலைபோல திரண்டு வருவதும், எனது பாபக் கூட்டங்களை அழிப்பதுமான கரும் மயிர்க்கொத்துக்களுக்கு, நெற்றியில் தொங்கும் ஊர்த்வ புண்டரங்களுக்கு, முகுடாமணிக்கு, புருவ நெற்றிக்கு, உனது செப்புவாய் இதழ்களுக்கு, எனது தாபங்களை அடக்கின அம்ருததாரையாகிய ஸத்யவாக்குக்களுக்கு, பிரணவாகார

மான விமானத்திற்கும், ஈஸ்வர ஜீவாத்மாவைச் சேர்த்துவைக்கும் உன் அச்யுத பாதரக்ஷைகளுக்கும், நாங்கள் அடிக்கடி நமஸ்காரங்கள் செய்கிறோம். பிரஹ்லாத நாரதாதி வால்மீகி வேத வியாஸ சுக துளசிதாஸ தியாகராஜ ராமபக்தர்கள் கூட்டம் கூட்டமாக நித்ய ஸேவை பண்ணுகின்ற மஹான்களை முன்னிட்டு அவர்களின் திருவடி ஸம்பந்தம் பெற்ற என்னை, உனது திவ்யநாம, திவ்யமங்கள ரூபத்தை ஸதா உனக்கு மங்களத்தையும் ஜயத்தையும் நினைக்கிற என்னை, ராஜீவநயனனாகிய ஹே சீதாராமா, ரக்ஷித்து அன்பு காட்டவேண்டும். கஜரக்ஷகனே, ஸதாசிவனாந்தகரனே, அம்பிகையை மோத ஹ்ருதய மாகச் செய்பவனே, ராமானுஜனே, சத்ரம் தரித்த பரதனே, சாமரம் தரித்த சத்ருக்னனே, தசரத நந்தனே, ஜனகஜாஸமேதனே, நீங்கள் எனக்கு கிருபை செய்யவேண்டும் என்று பூர்வாசார்யர்கள் வணங்கின ஸ்ரீராம பாதங்களுக்கு நான் அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன்.

இவைகளிலிருந்து ஒரே ஒரு உண்மை சரியாகப் புரிகிறது. ஸ்ரீராமநாமம் மிகமிக உன்னதமானது. ஸ்ரீராமபக்தி மிக நேர்த்தி யானது. ஸ்ரீராம கதாம்ருதம் மிகச்சிறப்புடன் கூடியது. ஸ்ரீராம கதாம்ருதத்தைப் பருகும் பாகவத உத்தமர்கள் பரமபாக்யமடைந்தவர் கள். பிரவிருத்தி நிவிருத்தி ஆகிற இரு தர்மங்களும் சாஸ்திர விதி என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அவைகளை விஸ்தாரமாக ஸாதுக் கள் அனுஷ்டிக்கிறார்கள். ஏகம் என்று சொல்லக்கூடிய பகவான் ஒரே தர்மமாக விளங்குகிறான். பழமையானதும் சாஸ்வதமானதும், விகாரங்கள் ஒன்றையும் அடையாத பகவான் ஸகல தர்மங்களாலும் ஆராதிக்கப்படவேண்டியவர். அவரே பரத்துக்குப்பரமான தர்மமாக விளங்குகிறார். அவருடைய விருப்பத்தைத் தெரிவிப்பதே வேத விதிகளின் கருத்து. அவருடைய கதாம்ருதங்களை பருகுகிறவர்கள், நிஜமாகவே பரமஸுக்ருதங்களைக் கொண்டவர்கள். கருணைக் கடலாகிய பிரபு ராமர் ஒருவித மாறுதலுமின்றி தர்மத்தை அனுசரித்து நமக்கு மார்க்கதரிசியாக நின்றார். அவரை நாம் நமது தோஷங்களை விலக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். மனம், இந்திரியங்களின் அடக்கத் தாலும் பகவானை அடைந்தோர்க்கு முக்தி மார்க்கமாகவும், சம்சாரத்தில் நிழல்தரும் பழுத்தமரம் மாதிரி விருக்ஷராகவும், விஸ்ராம விடுதியாகவும் பிரபு அசையாமல் நிற்கிறார். அப்பேர்பட்ட சுத்தஸ்வரூபமான சீதா ராமர் நம் எல்லோருக்கும் சகல ரோகங்களிலிருந்து ஏற்படும் தாபங் களைப் போக்கி க்ஷேமத்தைக் கொடுக்கவேண்டுமென்று நான் பிரார்த் திக்கிறேன்.

சுபம் மங்களம்

## கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட

# ராமசரித மானஸம் அல்லது
# மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்



## பால காண்டம்

அக்ஷரங்களுக்கும், அக்ஷரங்களின் அர்த்த பாவத்திற்கும், காவ்ய ரஸங்களுக்கும் சந்தஸ்ஸுகளுக்கும், சகல மங்களங்களைக் கொடுப்பவளும், எல்லாவற்றிக்கும் (ஆதிகாரணமாகவிருக்கும்) ஸரஸ்வதி தேவிக்கும், [சதா ஹரிபகவானை மனதில் தரித்துக் கொண்டு நடனமாடும்] ஸ்ரீ மஹா கணபதியையும் நான் நமஸ்கரிக்கிறேன். (1)

ஸ்ரத்தை, விஸ்வாஸம் ஆகியவைகளின் ஸ்வரூபமாக விளங்கும் பார்வதி பரமேஸ்வர தம்பதிகளை நான் வந்தனம் செய்கிறேன். அவர்களுடைய திருவருளின்றி ஸித்த ஜனங்கள் தங்களுடைய அந்தக்கரணத்தில் நிலைபெற்று ஸர்வத்துக்கும் ஈஸ்வரரான பரபிரும்மத்தை அறிகிறார்களில்லை. (2)

நான் மீண்டும் ஞானமயமாக விருப்பவரும், நித்யரும், அகில குருவாக விளங்கும் பகவான் சங்கரரை வணங்குகிறேன். அந்த மஹானை ஆஸ்ரயம் செய்யாமல் யாவரும் குணப் பூர்த்தியை அடைகிறதில்லை. அவரை அடைந்து ஆஸ்ரயம் செய்ததால் அல்லவோ தேய்ந்த கலைகளுடன் விளங்கின சந்திரன் மீண்டும் பூர்ணகலைகளுடன் நிரம்பினவனாகவும், லோகத்தாரால் மிக்க கௌரவத்துடன் பாராட்டப்படுவதற்கு யோக்யனாகவும் ஆனான். (3)

---

குறிப்பு:—இந்த புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரிதமானஸ ராமாயணத்தில் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும் மொழி பெயர்ப்பில் பிராக்கட்டுகளில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனோபாவத்தையும் துளசிதாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன. (மொத்தம் 1927 ஸ்லோகங்கள்)

—ஆசிரியர்.

சீதாராம குணங்கள் மஹாபுண்யமான ஒரு அரண்யம் போல விருக்கின்றது. அந்த அரண்யத்தில் அலைந்து திரிந்த விசுத்த விக்ஞான ஸம்பன்னர்களாக விளங்கிய கவிச்சக்கிரவர்த்தியான வால்மீகி பகவானையும், கபிகளாகிற வானரங்களுக்கு ஈஸ்வரராக விளங்கும் ஸ்ரீமத் ஆஞ்சனேயரையும் நான் அடிக்கடி வணங்குகிறேன். (4)

[தியானம்

தாய்க்குத் தாயாகவும், லோக குருவுக்கும் குருவாக விளங்குபவரும் மகத்தான கல்யாண குண ஸமூஹங்களுக்கு முடிவான இருப்பிடமாகவும், புண்ணிய கர்மங்களுக்கும் முடிவாகவும் சுத்தமான ஞான ஐஸ்வர்யங்களைக் கொடுப்பவரும், மூன்றுவித தாபங்களைப் போக்கும் சீதாராமன் என்கிற நித்ய தம்பதிகளை, பிராசேதஸ்வம்சத்தில் உதித்தவரும் ஆதிகவியுமாக விளங்குகிறவரும், மகத்தான ராமமந்திரத்தை சித்தி செய்து, ஸ்ரீராம சரித்திரத்தை உலகங்களுக்குப் பிரகடனப்படுத்தி அருளிச் செய்த ஸ்ரீ வால்மீகி முனிவரை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். ராமதாஸரும், தாயான சீதையையும், பிதாவான ஸ்ரீ ராமனின் உயிரையும் காப்பாற்றினவரும், எவருடைய தர்சனத்தால் ஜானகியும், ராகவனும், நதிக்கரைகள்போலவிருக்கும் மனத்தை அன்புமிக்க பெருவெள்ளங்கள் உடைப்பதுபோல, கண்டு களித்து அவர்களின் மனம் அபஹரிக்கப்பட்டு ஸதா குளிர்ந்த வண்ணமாகவிருந்தோ, இருக்கின்றுர்களோ, அப்பேர்பட்ட ஆனந்த ஸ்திதிக்குக் காரணமானவரும், அஞ்சனு தேவியின் குமாரரும் வாயுபகவானுல் பூர்ணமாக அனுக்ரஹிக்கப்பட்ட ஸ்ரீமத் ஆஞ்சநேயரை முன்னிட்டு, ஸ்ரீ சீதாராம தம்பதிகளை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.]

உற்பத்தி ஸ்திதி சம்ஹாரம் ஆகிய மூன்று தொழில்களைச் செய்பவளும், ஆதி ஆத்மிக, ஆத்தைவிக, ஆதிபௌதிக க்லேசங்களைப் போக்கிடுகிறவளும், சகல ஸ்ரேயசுடன் கூடிய மங்களகரமான காரியங்களை ஸதா செய்கிறவளும், பகவானுன ஸ்ரீ ராமச்சந்திரனுக்கு அந்தரங்கப் பிரிய பார்யையாகிற ஸ்ரீ சீதா தேவியை [பக்தஜனங்களை] முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். (5)

எவருடைய மாயையின் ஆக்ஞைக்கு பிரும்மாதி தேவ அசுர ஸமூகங்களும், சகல சராசரங்களும் வசப்படுகின்றனர்களோ, அவித்யையும், அக்ஞானமும், கயிற்றை ஸர்ப்பமாக




விக்னேஸ்வரரின்
அனுக்ரஹத்தைப்
பிரார்த்தித்தல்.
(8வது ஸ்லோகம்)

நினைக்கும் தடுமாற்றமான பிரமையும், உண்டாகின்றதோ, இந்த அநித்யமான உலகம் எவர்களின் கண்முன்பு நித்யமாகவும் சாஸ்வதமாகவும் விளங்குகின்றதோ, அப்பேர்பட்டவர்களின் மன இருளைப்போக்குகிறவரும்; எவருடைய பாத சரணங்களை (சிவ சக்தியின் ஐக்ய ஸ்வரூபமாக விளங்கும் ஆஞ்சநேயர் சதா ஆஸ்ரயித்த வண்ணமாக விளங்குகின்றாரோ) ஆஸ்ரயித்த பக்தர் கள் சம்சாரமாகிற சமுத்திரத்தின் அக்கரையை தோணி மாதிரி ஒரு ஸாதனத்தால் வெகு சுலபமாக அடைகிறார்களோ, அப்பேர் பட்டவரும், சகல காரிய காரணங்களுக்கு ஆதிமூலமாகவும் ஈஸ்வரராகவும் விளங்கும் ஹரிபகவானாகிற சீதாராமனுடைய சரணங்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். (6)

ஆதிகவியாகிய வால்மீகி பகவானால் எழுதப்பட்ட மஹா காவ்யமான ஸ்ரீமத் ராமாயணம் முதல் அநேக புராணங்கள், வேதசாஸ்திரங்கள், மற்றுமுள்ள ராம கதைகள், ராம சரித்திரங் கள், இன்னும் அநேக ராம சங்கீத கீர்த்தனங்கள் ஆகிய அனைத்தையும் ஜீவாதாரமாக வைத்து, சக்கரவர்த்தி திருமக னின் கதையைத் துளசிதாஸர் தனது தேக ஆத்ம சுகத்திற் காகவும், மன உல்லாஸத்திற்காகவும், என்றும் அழியாத நவீன பாஷா ரசனமாக அளித்து அதற்கு ராமசரிதமானஸம் என்று பெயரிட்டு, பிரகடனப்படுத்தினார். [அந்த மாபெரும் புண்ய காவ்யத்தை முதலில் அவருக்கு நான் சுக்ருத நமஸ்காரம் செய்து விட்டு, உலகத்தின் நன்மைக்காக ஸமர்ப்பிக்கிறேன்.] (7)

[தியானம்

நாரதரைக் குருவாகக் கொண்டவரும் திருவையாற்றில் ஜனித்தவரும், ராமபிரும்மத்தின் திருக்குமாரரும், ராமதர்சனத் தையே மாபெரும் பாக்கியமாகக் கருதியவரும், நாதபிரும்மத் தின் ஸ்வரூபமும், சீதாராமனுடைய கிருபையினால் பகவான் ஸ்ரீ ராமசந்திரனுடைய ஜீவிய வாழ்க்கையின் திவ்ய காக்ஷிகளையும் அவருடைய அந்தரங்கப் பேச்சுக்களையும், மதுர ஸல்லாபங் களையும் பார்த்து, கேட்டு, ரசித்து கருணை உள்ளத்துடன் உலகத் தின் நன்மைக்காக ஜீவன் ததும்பும் கீர்த்தனங்களாக அளித்த மஹானை ஸ்ரீமத் தியாகராஜரை நான் நமஸ்கரிக்கிறேன்.]

எவருடைய நினைவால் சகல காரியங்களும் கைகூடுமோ, எவர் ஸர்வலோகங்களுக்குப் பதியும், ஸர்வகணங்களுக்கும் ஈஸ்வரரும், (ஸௌம்யம், ரௌத்ரம் ஆகிய கணங்களுக்கும், யோகபூத கணங்களுக்கும் ஈஸ்வரரோ,) ஹஸ்திவதனத்துடன்

கூடியவரும், சித்திபுத்தி இவர்களால் ஸதா ஆஸ்ரயிக்கப்பட்ட வரும், (சங்கரபகவானுடைய பிரிய புத்ரரும், மஹாலக்ஷ்மிக்குத் தோழருமான) பகவான் விஷ்வக்ஸேனரை நான் மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கிறேன். ஸர்வ சுபகுணங்களைப் பூஷண மாகக் கொண்ட பகவான் விஷ்வக்ஸேனர் என்னிடம் கிருபை செய்யவேண்டும். (8)

[தியானம்

உமையவளுடன் கூடியவரும், உமையின் புத்ரரும், பிராம்மணகுலப் பிரியரும், சக்திவேல் ஆயுதத்தைத் தரித்த வரும், கங்கையில் அவதரித்தவரும், ஆறுமுகங்களைக் கொண்ட வரும், மாத்ரு கணங்களாலும் தேவ யக்ஷ ராக்ஷஸ கின்னர சமூகங்களாலும் போற்றப்பட்டவரும், குமார பகவானுமான ஸ்ரீசுப்பிரமண்ணியரை நான் திரும்பவும் திரும்பவும் நமஸ்கரிக் கிறேன்.]

மஹாமகிமைகளுடன் கூடியவரும், சித்த ஸாத்ய புருஷர் களால் ஆஸ்ரயிக்கப்பட்டவரும், எந்த மஹானுபாவருடைய கிருபா வேகத்தினால் ஊமையானவன் மிக்கச் சிறந்த பாண்டித் யம் பெற்று, அழகாகவும் இன்சொல்லுடன் பேசும் திறமையை அடைவானோ, எவருடைய கராவலம்பனமாகிற ஆதாரத்தினால் கடினமான மலைப்பாதையையும் சுலபமாக தாண்டக்கூடுமோ, எவர் கலியுக அதர்மங்களுக்கும், பாபக் கூட்டங்களுக்கும் நாசரோ, அப்பேற்பட்ட தயாசமுத்திரமான பகவான் நாராய ணன் விஷ்வக்ஸேனராக என்னை அனுக்ரஹம் செய்ய வேண்டு மென்று பிரார்த்திக்கிறேன். ''பிரபோ, நீர் என்னிடம் தயை செய்யவேண்டும். எனக்கு ஆதரவு அளிக்கவேண்டும். என்னி டம் பரிபூர்ணமான அன்புடன் எக்காலமும் எல்லா அவஸ்தை களிலும் என்னைவிட்டுப் பிரியாமலிருக்க வேண்டும்.'' (9)

நீலோத்பலத்தின் நிறமுள்ளவரும், கனத்த கருமேகஸ்யாமள வர்ணரும், (நெற்றி, காது ஓரத்தில் மிக்க சுந்தரமாக படிந்திருக் கும் மயிர் சுருள்கள் உள்ளவரும்,) மிக்க அழகானவரும், குளிர்ந்த பார்வையுள்ளவரும், பூர்ணமாக மலர்ந்து இன்பம் தரும் ரோஹிதமான சிகப்பு வர்ணத்துடன் கூடிய தாமரை இதழுக்குச் சமமான இரு நேத்ரங்கள் உள்ளவரும், சதா க்ஷீராப்தியில் லக்ஷ்மி ஸமேதனாக வீற்றிருப்பவரும் (சகல லோகங்களுக்கு நாயகரும் ஆதாரபூதரும், புருஷனும், புராண ரும், ஸநாதனமானவரும், மஹா உரகத்தின் மீது சயனித்

  

திருப்பவரும், பெரிய திருவடியைக் கொடியாகவும் வாகனமாக வும் உள்ளவரும், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி இவர்களால் ஆஸ்ரயிக்கப்பட்டவரும்,) பகவானுமான ஸ்ரீமந்நாராயணரை நான் நமஸ்கரிக்கிறேன். என் குருநாதரின் அருளால், குருகிருபா கடாக்ஷத்தினால், அவர் நாதரூபமெடுத்து என் மனதில் ஸதா வாசம் செய்வாராக. (அவரே என் பாராயணராக விருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன் எவருடைய வீர்யத்தினால் சகல சராசரங்களும் நடக்கின்றதோ, அப்பேர்பட்ட விஸ்வேஸ் வரரும் அஜருமான பிரபு நாராயணன் என்னை மீண்டும் மீண்டும் அனுக்ரஹிப்பாராக.) (10)

குந்த புஷ்பம், சந்திரன் போன்ற நிறமுள்ளவரும், பார்வதி தேவியின் அந்தரங்கப் பிரியரும், (நாராயணரின் ப்ரீதிக்காக) தயை செய்பவரும், தீனர்களிடமும் மிக்க வாத்ஸல்யமுள்ள வரும், காமதேவனை எரித்தவரும், முக்கண்ணரும், சந்திர கலையை உடையவரும் உமையவளுக்குப் பதியும் (உமையின் மடியில் பாலரூபமாக விளையாடியவரும் ஸஹஸ்ர தலைகளை உள்ள வருமான) பகவான் சங்கரர் எனக்கு, அருள்செய்யவேண்டும். என்னிடம் அவர் சதா கிருபையுடன் இருக்கவேண்டும் என்று நான் பிரார்த்தித்துக் கொள்கிறேன். (11)

நான் ஸகல குருமஹாராஜர்களுக்கும் வந்தனை செய்கிறேன். அவர்கள் கிருபைக்கு இருப்பிடம்; அபாரமான கிருபா ஸமுத்திரம்போல விருக்கிறார்கள். அவர்களே மனுஷ்ய ரூபியான ஹரிபகவானாக எனக்கு தோன்றுகிறார்கள். அவர்க ளுடைய உபதேச பலத்தினால் அல்லவா மஹாமோஹரூபியாகிற அடர்ந்த கும்பிருட்டு நாசமடைகின்றது. அந்த மன இருள் நாசமடைவதற்கு அவர்களுடைய வசனங்கள் சூரியகிரணங் களைப் போல விருக்கின்றன. (12)

குருமஹாராஜரின் சரணக்கமலங்களை நான் மீண்டும்மீண்டும் நமஸ்கரிக்கின்றேன். அந்த குருமஹாராஜரின் கால் தூசிகள் என் மனத்திற்கு மிக்க விருப்பமுள்ளவைகளாகவும், ருசியுள்ள வைகளாகவும், அதிசுகந்தமான மணமுள்ளவைகளாகவும், புஷ்டியுள்ளவைகளாகவும் இருக்கின்றன. மிக்கத் திறமை வாய்ந்தவைகளும், பக்தர்களின் இச்சைகளைப் பூர்த்தி பண்ணு வதில், அமரமூலிகை எனப்படும் சஞ்சீவினி ஒஷதிகளைப் போல விருக்கும் அந்த சூர்ணங்களை நான் தரித்துக்கொள் கிறேன். அப்பேர்பட்ட அழகான என் குருநாதரின் ஸ்ரீபாத ரேணுக்கள் பவஸாகரத்தின் ஸகலவிதமான தாபங்களைப் போக்கு

கிற திலகமாக எங்களுக்கு எப்போதும் எல்லா அவஸ்தைகளிலு மிருக்கட்டும். (13)

புண்ய புருஷன், அல்லது ஸ்திரி ஆகியவர்களின் சரீரங் களுக்கு ஆபரணமாக விளங்குவதும், சம்பு பகவானின் சரீரத் தின்மேல் அழகாகப் பூசப்பட்டதுமான பஸ்மம் என்று சொல்லப் படும் விபூதியைப்போல எனக்கு என் குருநாதரின் ஸ்ரீபாத ரேணுக்கள் மிக்க அழகாகவும், மங்களகரமான ஆனந்தங்களை உண்டுபண்ணுவதாகவுமிருக்கட்டும். பக்தி பரவசமான என் மனம், நிர்மலமான கண்ணாடியைப்போல பிரதிபலிக்கட்டும். அவைகளைத் திலகமாக அணிவதால், என்னிடமுள்ள குணங் களின் குறைகளையும், தோஷங்களையும் நிவர்த்திக்கட்டும். (14)

என் குருநாதரின் சரண கமல நகஜ்ஜோதியின் ஒளிகள் திவ்யமான ரத்னங்களின் ஒளிகளுக்குச் சமமாகவிருக்கின்றன. அவைகளின் ஒளியினால் என் மனத்தில் திவ்யதிருஷ்டி ஏற்படு கிறது. அக்ஞானமான மன இருள்கள் என்னை விட்டு விலகு கின்றன. அந்த ஒளிப்பிரகாசங்கள் மஹாகிருபையுடன் என் மீது வீசும்போது, நான் மிகுந்த பாக்யத்தை அடைந்தவனாக ஆகிறேன். (15)

[தியானம்

இந்த குரு கிருபையை மஹாவிரதங்கள் கொண்ட வஸிஷ்டர், வேதநிதியான பராசரர், மஹாஉரகராகிய அனந்தர், மஹா தபஸ்வியும் மஹாதேஜஸ் உள்ளவரும், மஹாயோகீஸ்வரரும் எப்பொழுதும் மஹாலக்ஷ்மியினால் ஆஸ்ரயிக்கப்பட்டவரும், மிக்கக் கருணையுடன் கூடினவருமான வேதவியாஸர், பீஷ்மர், தர்மபுத்ரர், உபமன்யுரிஷி ஆகியவர்கள் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும். மற்றும் பிருதிவியிலுள்ள மஹரிஷிகளும், சித்தபுருஷர்களும், அழகான இரக்கைகள் உள்ள பக்ஷிராஜ ரான ஸுபர்ணரும் என்னைக் காப்பாற்றட்டும். அவர்களுடைய பூர்ணமான அனுக்ரஹமும் எனக்கு கிட்டட்டும்.]

என்மீது அந்த மஹானுபாவர்களின் திருஷ்டி விழுந்ததும், என் அகக்கண்கள் நிர்மலமாகத் தெளிந்து, பூரித்து நிற்கின்றன. சம்சாரமாகிற இருட்டின் தோஷங்களும் துக்கங்களும் நாச மடைகின்றன. கேவலம் ஸ்ரீராமச்சந்திர பிரபுவின் திவ்யதர்சனம் ஒன்றுதான் என் முன்பு தோன்றுகிறது. மணிகள் மாணிக் கங்கள் போன்ற ராமசரிதம் அவருடைய குப்தமான பொக்கி

ஷங்கள் போலிருக்கும் சேஷ்டிதங்கள், வெளிப்படையாகச் செய்த சேஷ்டிதங்கள் யாவும் என் முன்பு பிரகடனமாகின்றன. (16)

எப்படி சித்த புருஷர்கள், த்ருட விரதமுள்ள ஸாதகர்கள், அறிவுள்ளவர்கள், ஸித்தாஞ்சனம் என்கிற மையின் உதவியினால் (தங்கள் அகக் கண்களில் ஸுஹ்ருதயமுள்ள சுபமான மனிதர்களையும்,) பர்வதங்களையும், காடுகளையும், பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள இதர இடங்களையும் சுலபமாக ஊடுருவிப் பார்த்து, பல விசேஷமான பொக்கிஷக் காக்ஷிகளைக் காண்கிறார்களோ, (17)

அதைப்போல எனக்கு உதவி செய்வதில் என் குருநாதர்களின் ஸ்ரீபாத ரேணுக்கள் கோமளமானதும் அழகானதும், அம்ருதமானவை. என் கண்களுக்கு ஸித்தாஞ்சனம் (கண்ணின் மைகளைப்) போலவிருக்கின்றது. என் நேத்ரங்களின் தோஷங்களைப் போக்குகின்றன. என் கண்களில் தீட்டப்பட்ட மையின் பிரபாவத்தால் என்னுடைய அவிவேகம் நாசமடைகிறது. சம்சாரத்தின் தாபங்களைப் போக்கும் ஸ்ரீராமச்சந்திர பிரபுவின் கதா அம்ருதத்தை நான் பருக ஆரம்பிக்கிறேன். (18)

[தியானம்

அழகிய கன்னப் பிரதேசத்தை உடைய ஸ்ரீராமப் பிரபோ, மாற்றுந்தாயான ஸுருசியின் வார்த்தைகளைக் கேட்டு வருத்தமும் ரோஷமும் தாங்காமல் வனம் சென்ற ஸ்ரீ துருவன் ஸ்ரீ ஹரியைப் பூஜித்து 'எக்காலத்திலும் ஸ்தானபிரம்சம் அடையாத ஸுகஸ்தானத்தை அடையவில்லையா? ஜடாயு ராம கைங்கர்யத்தினால் மேன்மையான மோக்ஷபதத்தை அடையவில்லையா? பயத்தை உண்டுபண்ணுகிறவரும், பயத்தை நசிக்கச்செய்கிறவரும் நீர் அல்லவோ? பிரபோ நீர்க்ருபையுடன் இருக்கவேண்டும். ஆசைப்பட்டு, அன்புடன் உன் பாதகமலங்களை ஸதா பற்றிக்கொண்டிருக்கும் பாக்யத்தை நான் அடைவேனாக. ஆஞ்சநேயனே சாக்ஷி, கைலாஸவாஸன் சாக்ஷி. நாரதர், பராசரர், அகஸ்தியர், விஸ்வாமித்திரர், சுகஸௌனகர், புரந்தரர், பார்வதி, சீதை, பரதன், மார்க்கண்டேயர் என்னை அனுக்ரஹிக்க வேண்டும். ரத்ன கிரீடத்தை அணிந்தவனே, சக்ரவர்த்தியின் திருக்குமாரனே, கனிவு நிறைந்த உன் மங்களகரமான முகத்தை எப்பொழுதும் நான் பார்த்துக்கொண்டிருப்பேனாக.]

முதலில் பூமியின் தேவதைகளான பிராம்மணர்களின் சரணங்களை நான் வந்தனம் செய்கிறேன். அவர்களின் அருளால்

எனது அக்ஞானம் விலகி, என் மனம் சந்தேகமின்றி புத்தி நிச்சயத்துடன் உறுதிப்படுகிறது. பிறகு பிரேமையுடன் கலந்த குரலில், நான் ஸகல கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாக வுள்ள சாது ஜனங்களைக் கூப்பிட்டு பிரேமையுடன் வந்தனம் பண்ணுகிறேன். (19)

ஸாது புருஷர்களின் ஜீவ சரித்திரம் சுபங்களைக் கொடுக்கிறது. பருத்திச் செடியின் பழம் ரஸமில்லாதது; ஆனால் சுத்தமானதும் உபயோகமுள்ளதாகவும் உள்ளது. அதைப் போல சாதுக்களின் ஹ்ருதயமும் களங்கமில்லாதது. அவர்களின் வாழ்க்கைச் சரித்திரம் ஆதர்ச சரித்திரமாக விருக்கிறது. எப்படி பருத்திக் காயும், பூவும் பருத்தியும் மிக்க சிரமப்பட்டு அழகான வஸ்திரமாக மாறுகிறதோ, அது மாதிரி சத்புருஷர்கள் பிறர்களுக்காகவே துக்கங்களை சகித்துக் கொண்டு, தங்களையும் பிறர்களையும் மேன்மைப்படுத்துகிறார்கள் அல்லவா? அதனால் அவர்களை உலகம் பலவாகப் போற்றுகின்றது. (20)

சாதுக்களின் சங்கமம் ஆனந்தத்தையும் சுபபலன்களையும் கொடுக்கிறது. சாதுக்கள் சுத்தமான தீர்த்தமன்றோ? பார்த்த மாத்திரத்தில் அவர்கள் பிறர்களின் சகல பாபங்களையும் போக்க வல்லமை பெற்றவர்கள். சாதுக்களின் சேர்க்கை ராமபக்தி என்கிற கங்காதேவியின் பிரவாஹத்தை உண்டுபண்ணுகிறது. சாதுக்களின் ஸமாஜத்தின் சேர்க்கை ஆத்ம விசாரத்திற்கும் பிரும்ம விசாரத்திற்கும் உதவும் சரஸ்வதி தேவியைப்போல மகிமை கொண்டது. (இங்கு ஸாது ஸமாஜத்தை தீர்த்த ராஜமான பிரயாகைக்கும், ராமபக்தி ஸுரஸரிதாவாகிற கங்கைக்கும், பிரும்ம விசாரம் அந்தர் வாஹினி சரஸ்வதியாகிற நதிக்கும் உபமானமாகச் சொல்லப்படுகிறது. இந்த சரஸ்வதி நதி யமுனை கங்கையுடன் சேர்ந்து திரிவேணி ஸங்கமம் என்று சொல்லப்படுகிறது.) (21)

வேதங்களில் விதிக்கப்பட்ட விதிகளும், செய்யத்தகாத கர்மாக்களின் பிரவாஹங்களாகிற, கதைகள் கலியுகத்தில் யேற்படும் பாபங்களையும் தேக ஆத்ம மலங்களையும் போக்கும் சூர்ய புத்ரியான யமுனாதேவியைப் போலவிருக்கின்றன. அந்த கதைகள் கலிகாலத்தில் யேற்படும் சேஷ்ட புத்தியையும் விபரீத ஞானத்தையும் அடக்குகின்றன. எதைச் செய்யவேண்டியது, எது செய்யத் தகாதது என்கிற கர்ம விசாரங்களை அறியச் செய்ய வைக்கும் திறமையுள்ளன. பகவான் ஸ்ரீராமச்சந்திரன் சீதையுடனும் பரத லக்ஷ்மண சத்ருக்னனுடனும் பூமியில் அவதாரம்

செய்த ஸ்ரீராம சரிதம் என்கிற அம்ருதம், திரிவேணி சங்க மத்தைப் போல, பகவான் விஷ்ணுவான நாராயண ஹரி, பகவான் சங்கரர் ஆகியவர்களைப்பற்றிய கதாம்ருதங்களைப் பிரகாசிக்க வைக்கும்படி யுள்ளது. அவைகளைக் கேட்ட மாத்திரத்தில் எல்லா ஆனந்தங்களையும் சகலவித புருஷார்த்தங்களையும் திடமாகக் கொடுக்க வல்லமையுள்ளன. (தியாகராஜர் சொல்லியதுபோல, ராமசரிதமாகிற அமிர்தம் தைர்யம், சௌக்யம் இவைகளை அளித்து, கர்மபந்தம் என்கிற சம்சாரக் கடலுக்கு ஒரு தோணியைப் போன்றது. சுருக்கச் சொல்லுங்கால் சகல கல்யாண மங்களங்களைக் கொடுக்கிறதாகவிருக்கிறது.) (22)

பிரயாகை என்னும் தீர்த்த ராஜக் கட்டத்தில் விஸ்வாஸத்துடன் செய்யப்படும் தர்மங்கள் அக்ஷய வடம் மாதிரி நித்ய பலன்களை அளிக்கவல்லச் சுபகர்மாக்களைப் போலவிருக்கின்றன. அவைகளைப்போல, சாதுக்களின் சங்கம் எந்த தேசத்திலும், எல்லாக் காலங்களிலும் எல்லோருக்கும் அடையப்படுவதாகவும் சுலபமாகத் துன்பங்களைப் போக்கி, அமோகமாக இன்பங்களை அளிப்பவையாகவுமிருக்கின்றன. (23)

சாதுக்களின் மகிமைகள் சொல்ல முடியாதபடி பரந்த எல்லையுள்ளதாக விருக்கின்றன. சுப பயன்களை உடனடியே அளிக்க வல்லமை உள்ளது. எந்த மனிதர்கள் பிரயாகை என்கிற தீர்த்த ராஜத்தின் மகிமை போன்று விளங்கும் சாதுக்களின் உத்தம சேர்க்கையை அடைகிறார்களோ, அவர்களைப்பற்றிச் சொல்லுகிறார்களோ, பக்தி பிரேமையுடன் சாதுக்களை வசப்படுத்துகிறார்களோ, அவர்கள் இந்த உலகில் சரீர யாத்திரைக்குத் தேவைப்படக்கூடிய தர்ம, அர்த்த காம மோக்ஷங்களாகிற சதுர்வித புருஷார்த்தங்களை உடனேயே இந்த ஜன்மத்திலேயே அடைகிறார்கள். இது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். (24)

இப்பேர்ப்பட்ட புனிதமான சாதுக்களாகிய கங்கையில் ஸ்நானம் பண்ணின பலன் உடனேயே நமக்குக் கிட்டுகிறது. காக்கைகள் கோகிலங்களாக மாறிவிடுகின்றன. வாத்துக்கள் ஹம்ஸங்கள்போல் ஆகிவிடுகின்றன. இதைக்கண்டு, ஆச்சர்யப் படாதீர்கள். சாதுக்களின் சேர்க்கை மிகுந்த பலன்களை அளிக்க வல்லது என்பது உலகம் தெரிந்த உண்மை. (25)

வால்மீகி முனிவர், தேவரிஷியான நாரதர், கும்பத்திலிருந்து உண்டான அகஸ்தியர் இவர்களின் ஸ்ரீமுகத்தாலே சொல்லப்பட்ட ஆத்ம கதைகளே நமக்கு திருஷ்டாந்தங்களாகவிருக்கின்றன. ஜலத்தில் வசிப்பவைகளும், பூமியில் நடமாடுபவை

களும், ஆகாயத்தில் குறுக்கும் நெடுக்குமாக சஞ்சரிக்கும் (திரியக்கு) ஜாதி போன்ற பறவைகளும், சுருக்கமாகச் சொல்லப் போனால் உலகத்தில் இருக்கும் உயிருள்ள, உயிரில்லாத சகல சேதனுசேதன வஸ்துக்கள் எல்லாவற்றுலும், இந்த ஜகம் முழு வதிலும், எக்காலங்களிலும், எந்த விதமான இடத்திலும் பெரும் முயற்சியினுல் அடையப்பட்ட புத்தியையோ, கீர்த்தியையோ, அல்லது அவர்களின் ஜீவனின்மேல் நோக்கிப் போன உத்தம கதியையோ, பாக்ய ஐஸ்வர்யங்களையோ, யாவையும், இகபர லோகத்திற்கு வேண்டிய சகல நன்மைகளையும் இவர்கள் அடைந் தார்கள் என்றுல், அவைகள் சாதுக்களின் பிரபாவத்திஞலேயே ஏற்பட்டது என்று அறியவேண்டும். வேதத்திலோ அல்லது சாமான்ய லௌகிக உலகத்திலோ இந்த மார்க்கத்தைத்தவிர வேறு உபாயம் காணப்படவில்லை, காணப்படப் போவதுமில்லை. இது ஸத்யம், ஸத்யம். (26)

மிக்க மகிமை பொருந்திய சாதுக்களின் சேர்க்கையின்றி மன இருளை விலக்கும் சூர்யன் போன்ற விவேகமும் மனிதர்களை அடைகிறதில்லை. ஶ்ரீராமச்சந்திரமூர்த்தியின் கிருபையின்றி சாதுக்களின் சேர்க்கையும் கிடைக்கிறதில்லை. இந்த உண்மையை எந்த வித்வானுனவன் அறிகிருனே, அவன் சத்சங்கத்தின் பூவாகிய சாதனத்திஞல், சத்சங்கத்தின் சித்தி யான பழத்தையும் பெறுகிருன். (27)

துஷ்டர்களும் ஸாதுக்களுடைய அம்ருதமயமான சேர்க் கையை அடைந்து நல்ல கதியை அடைகிருர்கள். இரும்பானது சித்த புருஷர்களின் ஸ்பர்சத்திஞல் தங்க மயமாக ஆகின்ற தல்லவா? தேவ புருஷர்கள் சாதுக்களின் ஸ்நேக பாக்யத்தை இழந்து, விதி வசத்தால் சீர்கேடான நிலைமையை அடைந்த போதிலும், தங்களுடைய நற்செய்கைகளாலும் குணவிசேஷங் களாலும் மீண்டும் நற்கதியைப் பெறுகிருர்கள் அல்லவா? எவ்விதம் நல்ல நாகமணி சர்ப்பத்தை அடைந்திருந்தபோதிலும், சர்பத்தின் விஷத்தை கிரஹிக்காமல் தனக்குள்ள இயற்கை ஸ்வபாவமானதும், தனக்கே உரித்தானதும், மிக்க விசேஷ மானதுமான கிரணங்களை பிரகாசிக்கச் செய்கின்றதோ, அதைப்போல துஷ்டர்களின் சேர்க்கையை அடைந்தபோதிலும், சாதுக்கள் தங்கள் குண விசேஷங்களை விடாமல் தாழ்ந்த கதியி லிருந்து மேலான கதியை மீண்டும் அடைகிருர்கள். (28)

பிரும்மா, விஷ்ணு, சிவன், சுக்ராசாரியர் போன்ற மஹா கவிகள், பிரஹஸ்பதியைப் போன்ற மஹா பண்டிதர்கள் கூட

சாதுக்களின் மகிமைகளை பல காலம் பல தடவைகள் சொன்னாலும் தயங்கிவிடுகிறார்கள். காய்கறிகள் விற்பவர்களால் பேஷான சிறப்பு குண சமூகங்களடங்கிய ரத்னங்களின் மதிப்பை எடுத்துக்கூற முடியுமோ? (29)

ஆகையால் மஹானுபாவர்களான சாதுக்களை நான் நமஸ்கரிக்கிறேன். அவர்களின் மனம் வெறுப்பு விருப்பு அற்றது. அவர்களின் சித்தம் எப்பொழுதும் நிரதிசய சாந்தியுடன் இருக்கின்றது. எவ்விதம் செடியிலிருந்து பறித்த அழகான புஷ்பமானது தனது இயற்கையான சுகந்தத்தை ஒருவனின் பறித்த கையின் அஞ்சலியிலும் பழையபடி செடியிலும் இருந்தாலும் ஒரேவிதமாக பரிமளிக்கச் செய்கின்றதோ, அதுபோல யாவரிடமும் சமமான நோக்குள்ள சாதுக்கள் சத்ரு, மித்ரன் என்கிற பேதமின்றி ஒரேவித கருணையுடன் யாவரிடமும் பிரகாசிக்கிறார்கள். (30)

[தியானம்

ஹே ராமச்சந்திர பிரபோ, அப்படிப்பட்ட சாதுக்கள் தங்கள் ஹ்ருதய கமலத்தில் பூரண சந்திரனுக்கு ஒப்பான உன்னுடைய முகத்தின் அழகை யோகத்தினால் நிறுத்தி பிரம்மானந்தத்தை அனுபவிப்பார்கள். ஸாம கானலோலா, உன்னுடைய ஸ்வரூபத்தை ஆஞ்சநேயரைப்போல, மனமாகிய காட்டில் சஞ்சரித்து, தரிசித்து கிருதார்த்தர்களாக ஆவார்கள். உம்முடைய மேன்மையான பாதாரவிந்தத்திற்கு மலரிடுவார்கள். ஸ்வரம், லயம் ராகம் இவைகளுடன் உன் புண்யமான கீர்த்தியை அந்தக்கரண சுத்தியுடன், நிஜமான மார்க்கத்தை தெரிந்தவர்களாய், ஸல்லாபத்துடனும் மதுரமான பாவத்துடனும் கானம் பண்ணுவார்கள். ஹரிகுணமய ரத்னங்களால் நிறைந்த மாலைகள் கழுத்தில் பிரகாசிக்க, ஹரியின் பக்தகோடிகள் இவ்வுலகில் தெய்வீக ஞானத்துடனும் ப்ரேமையுடனும், தயை உடையவர்களாக, உலகமெல்லாவற்றையும் அம்ருத திருஷ்டியினால் ரக்ஷிப்பவர்கள். பரம ஸ்ரேஷ்டர்களான பாகவதர்கள், மகரிஷிகள், சந்திரன், சூரியன், ஸனக ஸனந்தனாதிகள், இந்திரன் போன்ற திக்பாலர்கள், தேவர்கள், கிம்புருஷர்கள், ஹிரண்யகசிபின் மகனாகிய ப்ரஹ்லாதன், நாரதர், தும்புரு, ஆஞ்சநேயர், சந்திர கலாதரனான மஹேஸ்வரர், சுகப்பிரும்மம், பிரும்மா, தபஸ்சித்தி அடைந்த பூதேவர்கள், மிக சிஷ்டாசாரமுள்ள பெரியோர்கள், சிரஞ்சீவிகள், பிரும்மானந்தத்தை சதா அனுபவிக்கும் மஹாத்

மாக்கள், இன்னும் ஸ்ரீ பாகவதம், ஸ்ரீ மஹாபாரதம், விஷ்ணு புராணம் போன்ற புராண இதிகாஸங்கள், ராமாயணம் பகவத் கீதை, வேதங்கள், சாஸ்திரங்கள், ஆழ்வாராதிகளின் பிரபந்தங்கள், ஷண்மதங்கள் முதலியவைகளைத் தீர ஆராய்ந்து மறைந்து கிடக்கும் ரத்ன உண்மைகளை தெளிவாகக் கண்ட மகான்கள், இன்னும் நாதபிரம்மத்தின் பாவம், ராகம், லயம் ஓங்காரம், ஸுஸ்வரம், மூர்ச்சனை ஆகியவைகளின் மாறுபாடுகள், ஸப்த ஸ்வரங்களின் தேவதைகள், தேவகன்னிகைகள், மஹா பாக்யமுள்ள அப்சரஸ் கூட்டங்கள், காயத்திரி மந்திரத்தை சித்திபண்ணிய மஹாபுருஷர்கள், புரந்தரர், தியாகராஜர், ஸ்யாமா சாஸ்திரி, முத்துஸ்வாமி தீக்ஷிதர் போன்ற வாக்கேய கீர்த்தனுச் சாரியர்கள், இன்னும் கானத்தினால் மார்க்கண்டேயரைப் போல நீண்ட வயது, நிரந்தரமான சுகத்தை அடைந்த மஹானுபாவர் கள் அனைவருக்கும், எனக்கு ஆப்தமானதும், பிரேமையுடன் கூடியதும் எனக்கும் பிறருக்கும் உத்ஸாகத்தை உண்டு பண்ணுவதுமான ஸ்ரீ ராமநாமத்தை சதா பக்தியுடன் மனனம் செய்கிற பரம பாகவதர்களுக்கும் முன்புறமும், பின்புறமும் மீண்டும், மீண்டும் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். அன்று "ஸர்வஸ்வரூபரே," "தேவ தேவரே" என்று சரீரத்தை நன்கு பணியும்படி செய்த அர்ஜுனன் கிருஷ்ணனை க்ஷமிக்கும்படி பிரார்த்தித்ததுபோல, எனக்கு அவர்கள் பிரேமையுடன் கிருபை செய்வார்களாக. பதஞ்சலி முனிவரும் வ்யாக்ரபாதரும், சுரபியும் மார்த்தண்டனும், தில்லையில் ஆனந்த நடனம் ஆடிய சதா சிவனும், அம்பிகையும், அப்போது மலர்ந்த செந்தாமரை இதழ் போன்ற கண்களை உடைய மஹாலக்ஷ்மியும், வேதக் காற்றை உண்டுபண்ணும் பதகேஸ்வரனுமான கருடனும், திக்கஜங்களும், அஷ்டவசுக்களும், த்வாதச ஆதித்யர்களும், வாலகில்யர்களும், மஹாபத்மன் போன்ற நாகர்களும் எனக்கு அருள் புரிவார்களாக.]

இந்த மஹானுபாவர்கள் உலக நன்மைக்காகவும், உலகம் செழிப்பதற்காகவும் வாழ்கிறார்கள். அவர்களின் ஸரள ஹ்ருதயத்துடனிருக்கும் ஸ்நேகத்தை அனுசரித்து, குழந்தை உள்ளம் போன்ற என் மனதை நான் பக்தி பூர்வமாக ராம சரணங்களுக்கு சமர்பிக்கிறேன். "ஹே சாது ஜனங்களே, உங்களுக்கு என்னிடம் அனுதாபமும் தயையையுமிருக்கட்டும்; எனக்கு ராம சரணங்களில் பக்தியேற்படட்டும் என்று வேண்டு கிறேன்." (31)

நான் தீனமான ஹ்ருதயத்துடன் துஷ்டர்களையும் நமஸ்கரிக்கிறேன். பிறருக்குத் தீங்கு செய்வதே அவர்களுக்கு ஸ்வபாவமாக விருந்தபோதிலும், பிறருடைய கஷ்டம் அவர்களுக்குச் சந்தோஷத்தை அளித்தபோதிலும் பிறருடைய செழிப்பு வளங்கள் அவர்களுக்கு மாத்ஸர்யம் உண்டுபண்ணுவதாகவிருந்தாலும், (அவர்களும் கடவுளின் ஸ்ருஷ்டியில் படைக்கப்பட்டவர்களானபடியால் அந்த கடவுளும் தன் படைப்பான உலகத்தை வாழ விரும்புகிறபடியால்,) அவர்களையும் நான் வினயத்துடன் நமஸ்கரிக்கிறேன். (32)

ஹரி, ஹரன் இவர்களுடைய கீர்த்தி ரூபமாக விளங்கும் பூர்ண சந்திரனுக்கு ராஹு கேதுக்களைப் போல அவர்கள் ஸ்வபாவமுள்ளவர்கள். மற்றவர்களுக்கு அபஹாரம் செய்வதில் மஹா வீரனை ஸஹஸ்ரபாஹு (கார்த்திய வீர்யார்ஜுனன்) போன்ற வீரர்களைப்போலுள்ளவர்கள். (ஆயிரம் கைகள்கொண்ட கார்த்திய வீர்யார்ஜுனன் ஜமதக்னியின் ஹோமப் பசுக்களை எடுத்துப்போனபடியால், அவனைப்பற்றி இவ்விதம் சொல்லலாயிற்று). பிறர் குற்றங்களை ஆயிரக்கணக்கான நேத்ரங்களால் ஊடுருவிப் பார்ப்பார்கள். பிறருக்கு அபகாரம் செய்வதில் நெய்யில் விழுந்து மாண்டு போகும் ஈக்களைப் போன்றவர்கள். (33)

அவர்கள் அக்னியைப்போல க்ரூரமாக எரிக்கும் தன்மை உள்ளவர்கள். க்ரோதத்தில் யமதர்ம ராஜனுக்குச் சமமானவர்கள். பாபத்திலும், பொல்லாத்தனத்திலும், குபேரனைப் போன்ற தனம் படைத்த, மனம் உள்ளவர்கள். கேது உதையமாகும்போது எல்லாம் நாசமடைவதுபோல எல்லோரையும் அவர்கள் நாசம் செய்விக்கிறார்கள். இப்பேற்பட்டவர்கள் கும்பகர்ணனைப் போன்று, நீண்ட துக்கம் அடைந்து என் விஷயத்தில் சுகமாக இருப்பார்களாக. (34)

எவ்விதம் ஆலங்கட்டி மழை, பூத்துக் குலுங்கும் அறுவடையை நாசம் பண்ணித் தானும் உருகி நாசமடைகின்றதோ, அதுபோல அவர்கள் பிறர் நாசத்திற்காக தங்களையும் தியாகம் பண்ணிவிடுகிறார்கள். நான் ஆயிரம் முகம் படைத்த சேஷ பகவானுக்கு அவர்களைச் சமமாக நினைத்து, பிறர் குற்றங்களை ஆயிர முகங்களால் பிரகடனப்படுத்துவதில் ஆர்வமுள்ள அந்த துஷ்டர்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். (35)

பகவானுடைய சுபமான புண்ய கீர்த்தியைக் கேட்டு அனுபவிப்பதற்கு ஆயிரம் காதுகளை வரமாகக் கேட்ட ப்ருது மஹாராஜனைப்போல பிறர்களின் பாபங்களைக் கேட்டு மகிழ்வதில் பத்தாயிரக்கணக்கான காதுகளைப் படைத்த அவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். அவர்களை நான் மஹேந்திரனைப்போல நினைத்து வணங்குகிறேன். சதா அவர்கள் குடி மயக்கம் கொண்டு இருக்கிறார்கள். அப்பேற்பட்ட இந்திரனுக்குமது கௌரதையாகவும் ஹிதத்தைச் செய்வதாகவுமிருக்கிறதல்லவா. (தேவர்கள் இந்திரனுக்கு உதவுவதுபோல, குடியும் அவர்களுக்கு உதவுகிறதல்லவா ?) (36)

அவர்கள் வஜ்ரத்திற்கு ஒப்பான கடூர வசனங்களை வீசி, பிறர்களின் குற்றங்களை ஆயிரங் கண்களோடு முனைந்து பார்க்கும் சமர்த்தர்கள். அவர்களுக்கு நான் இந்திரனை நமஸ்கரிப்பதுபோல நமஸ்கரிக்கிறேன். (37)

துஷ்டர்களுடைய ஸ்வபாவம் சத்ருமித்ரன் உதாஸீனன் ஆகிய அனைவருக்கும் ஏற்படும் நன்மையைக் கேட்டுக் கோபப்படுவது, தாபப்படுவது, ஆகியவை. இதை அறிந்துகொண்டு நான் இரண்டு கைகளையும் சேர்த்து பிரேமை பூர்வமாக அவர்களுக்கு நமஸ்கரிக்கிறேன். (38)

"என் சம்பந்தமட்டில் என் கடமையைச் செய்துவிட்டேன். ஆனால் அவர்கள் தங்கள் ஸ்வபாவங்களை மறப்பார்களா? அத்துடன் என்னை விட்டுவிடுவார்களா? காக்கையைப் பிரேமையுடன் போஷியுங்கள். அது மாம்ஸத்தை எப்போதாவது தியாகம் செய்யுமா ?" (39)

நான் சாதுக்கள், ஸாதுக்களில்லாத அசாதுக்கள் ஆகிய இருவர்களுக்குமே நமஸ்கரிக்கிறேன். இருவர்களும் துக்கம் விளைவிப்பவர்கள்தான். ஆனால் இதில் ஒரு வித்யாஸ மிருக்கிறது. சாதுக்களின் சேர்க்கையில்லாமல் வாழ்வது மரணத்துக்கு சமமான துக்கமாகக் கருதப்படுகிறது. அசாதுக்களின் சேர்க்கையோ துக்கமயமாக விருக்கிறது. அவர்களால் பிறர்களுக்கு சதா தொந்தரவுதான் ஏற்படுகிறது. (40)

சாதுக்களும், அசாதுக்களும் இந்த உலகத்தில் சேர்ந்துதான் பிறக்கிறார்கள். கமலமும் ரத்தத்தை உறிஞ்சும் அட்டையும் சேர்ந்துதானே இவ்வுலகில் பிறக்கின்றனர். ஆனால் அவைகளின் தாரதம்யம் குணவிசேஷங்களில் எவ்வளவு மாறுபாடுடன் இருக்கிறது. கமலத்தைத் தரிசனம் பண்ணுவதிலோ, ஸ்பர்சிப்பதிலோ, எவ்வளவு ஆனந்தம் உண்டாகிறது. ஸாதுக்கள்

அம்ருதத்துக்கு சமமான குணமுடையவர்கள். அசாதுக்களோ மதிமயக்கம் உண்டுபண்ணக் கூடிய வாருணி(கள்) போன்றவர்கள். அம்ருதமும் வாருணியும் சேர்ந்துதானே க்ஷீராப்தியில் உண்டாயிற்று? (41)

நல்லவர்களோ, கெட்டவர்களோ அவரவர்களின் நல்லது அல்லது துஷ்கர்மங்களுக்குத் தகுந்தபடி கீர்த்தியையோ அபகீர்த்தியையோ அடைகிருர்கள். அம்ருதம், பூர்ணசந்திரன், புனிதமான கங்கை, சாதுக்கள் ஆகியவர்கள் ஒரு பக்கம். மற்ருெரு பக்கம் விஷம், அக்னி, கர்மஸங்கிரமத்தை செய்யக் கூடிய பிரவாஹம், கலியின் பாபங்கள், ஹிம்சையைத் தொழிலாகவுள்ள வேடர்கள். இவைகளில் எவர்கள் நல்லவர்கள், எது கெட்டது என்று எல்லோருக்கும் தெரியும். ஆனுல் யாருக்கு எது பிடிக்கிறதோ, அதுவே அவர்களுக்குப் பிடித்தமாகவிருக்கிறது. நாம் என்ன செய்யக்கூடும்? (42)

நல்லவர்கள் நல்லதைக் கிரஹித்துக் கொள்கிருர்கள். நீசமானவர்கள் நீசமானதை கிரஹிப்பதற்கு சக்திவாய்ந்தவர்களாகவிருக்கிருர்கள். அம்ருதம் சாகாமையைக் கொடுப்பதினுல் புகழப்படுகிறது. அதே மாதிரி, விஷம் மரணத்தைச் சம்பவிப்பதால் இகழப்படுகிறது. (43)

துஷ்டர்களின் பாபச்செய்கைகளின் கதைகளும், சாதுக்களின் புண்யமான கீர்த்திகளைப் பரப்பும் கவிதைகளும் ஆகிய இரு வர்க்கங்களும் அபாரமானதும், ஆழமுள்ளதுமான மஹா சமுத்திரங்கள். ஆகையினுல் அவர்களின் ஏதோ கொஞ்சம் குணங்களும் தோஷங்களும் என்னுல் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைச் சரியாக நாம் தெரிந்து கொள்ளாமல் போனுல், நல்லதை கிரஹிப்பதற்கோ, கெட்டதை விட்டுவிடுவதற்கோ நமக்கு முடியாமல் போகிறது. (44)

உலகத்தில் எது நல்லது, எது கெட்டது என்கிற எவை உள்ளனவோ அவைகளெல்லாம் பிரும்மாவினுல் படைக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல் வேதங்களோ எது நல்லது எது கெட்டது (தோஷமுள்ளது) என்று பகுத்தறிந்து மனிதனுக்கு பெரும் உபகாரத்தைச் செய்திருக்கின்றன. வேதங்கள், இதிஹாஸங்கள் இன்னும் அநேக புராணங்கள் ஆகிய எல்லாம் கடவுளின் ஸ்ருஷ்டியில், நல்லதும் கெட்டதும் சேர்ந்துதான் படைக்கப்பட்டிருக்கின்றன என்று பறை சாற்றுகின்றன. (45)

துக்கம் சுகம், பாபம் புண்யம், பகல் இரவு, சாதுக்கள் துஷ்டஜனங்கள், மேல் பிறப்பு கீழ் பிறப்பு, அசுரர்கள்

தேவதைகள், மேலான ஸ்திதியில் உள்ளவர்கள் தாழ்ந்த பதவியிலுள்ளவர்கள், அம்ருதம் விஷம், சுகஜீவனம் இறப்பு, மாயையின் வசமடைந்த அவிவேகி பிரும்ம ஞானத்தை அடைந்த விவேகி, ஜீவாத்மா சாகா நிலேக்கு ஈசனுகவிருக்கும் பரம புருஷன், ஐஸ்வர்யம் தாரித்ரியம், அரசன் பிச்சைக்காரன், காசி மகதம், கங்கா கர்மநாசம் என்கிற ஸ்வகர்மாக்களை விட்டு கர்மஸங்கிரத்தைச் செய்கிறவர்கள், மார்வார் என்கிற பாலேவன பிரதேசம் செழிப்பான மால்வா, பிராம்மணன் கசாப்பு கடைக் காரன், ஸ்வர்க்கம் நரகம், அனுராகம் வைராக்யம் ஆகிய எல்லாப் பதார்த்தங்களும் பிரும்ம ஸ்ருஷ்டியிலுள்ளன. இவைகளின் குணதோஷங்களை வேதசாஸ்திரங்கள் நமக்காக விபாகம் செய்திருக்கின்றன. (46)

பிரும்மாவிஞல் பிரபஞ்சத்திலுள்ள உயிருள்ள உயிரில்லாத வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் குணதோஷங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. ஆனுல் சாதுக்களான ஹம்ஸங்கள் தோஷ முள்ள ஜலத்தை விட்டுவிட்டு ஸாரமுள்ள பாலேக் குடிக்கத்தான் செய்கிருர்கள். (47)

படைப்புக் கடவுளான பிரும்மா ஹம்ஸத்தின் குணமான விவேகத்தை மனிதனுக்கு அளிக்கும்போது தோஷங்கள் விலக்கப்பட்டு, மனமானது குணங்களே ஆகர்ஷிக்கிறது. ஆனுல் காலத்தின் வேற்றுமையினுலே, மனிதனின் இயற்கையான ஸ்வாபவங்கள் மாறுவதினுலோ, அல்லது முன் வாசனையினுல், கர்மங்கள் சேதமடைந்து சீர்கேடு அடையுமானுல், நல்ல மனிதர்கள்கூட மாயையின் வசம் அகப்பட்டு, சீர்கேட்டை அடைகிருர்கள். (48)

பகவானுடைய தாஸர்கள் காலவசத்தால் சீர்கேட்டை அடைந்த சமயம் துக்கத்தைப் பொறுத்து, அதைப் பெரும் முயற்சியினுல் போக்கி மீண்டும் நிர்மலமான கீர்த்தியை எவ்விதம் அடைகிருர்களோ, அவ்விதமே துஷ்டர்களும் எப்போதாவது பாக்ய வசத்தினுல் கிடைக்கப்பட்ட உத்தமமான சாதுக்களின் சேர்க்கையின் பலனுகவோ அல்லது ஏதோ யத்ருச் சையாகச் செய்யப்பட்ட புண்ய கர்மத்தினுல் நன்மையை அடைகிருர்கள். என்ருலும், அவர்கள் தங்கள் ஸ்வாபாவிக மானபொல்லாத்தனத்தை முழுவதும் விடுகிருர்கள் இல்லே அன்ருே. (49)

கபட வேஷதாரியான சாதுக்களே உலகம் நன்ருக உள்ள மயக்கத்தினுல் மதிக்கிறது. நாளடைவில் மயக்கம் தெளிந்த

பின்பு அவர்களுடைய கபடமான வேஷம் தானுகவே வெளிப் பட்டுப்போகிறது. இதற்கு சிறந்த உதாரணங்கள் காலநேமி, ராவணன், ராஹு போன்றவர்கள். (50)

குரங்கின் வேஷத்தை அடைந்த போதிலும், உலகத்தில் மஹாத்மாக்களான ஜாம்பவான், ஹனுமான் போன்றவர்கள் போற்றப்படுகிருர்கள். நல்ல சேர்க்கையினுல் லாபமும், கெட்ட சேர்க்கையினுல் நஷ்டமும் ஏற்படுகிறது என்று வேதங்களும் சகல ஜனங்களும் பறைசாற்றுகிருர்கள். (51)

காற்றின் சேர்க்கையினுல் தூசியும் ஆகாயத்தின் மேலே கிளம்புகிறது. ஆனுல் ஆகாயத்திலிருந்து கீழே விழும் மழை தாரையின் சேர்க்கையினுலோ அது சகதியில் விழுகிறது. சாதுக்களின் கிரஹங்களில் கிளி, மைனு போன்ற பறவைகள் "ராம் ராம்" என்று அம்ருதமயமான நாமங்களைப் பஜிக் கின்றன. ஆனுல் துஷ்டர்களின் வீடுகளில் வசிக்கும் பறவை களோ எப்பொழுதும் பிறரைத் தூஷித்த வண்ணமாயிருக் கின்றன. (52)

கெட்ட சேர்க்கையின் பயனுக புகை புகைக்கரியாக மாறுகிறது. ஆனுல் அதே புகையானது அழகான மையாக மாறி புராணங்கள் முதலியவைகளை எழுதுவதற்கு உபயோகப் படுகிறது. அதுமாத்திரம் இல்லை. ஜலம், அக்னி, வாயு ஆகியவைகளின் சேர்க்கையினுல் மேகங்களாகமாறி ஜகத்தையே ஜீவிக்கச்செய்கிறது. (53)

கிரஹங்கள், ஒஷதிகள், ஜலம், வாயு, வஸ்திரங்கள் ஆகியவை நல்லவர்களின் அல்லது கெட்டவர்களின் சேர்க்கை விசேஷத்தால் ஸம்சாரத்தில் நல்லவைகளாகவும், கெட்டவை களாகவும் மாறுகின்றன. எல்லாவற்றையும் அறிந்த வித்வா னுனவன் ஸாதுக்களின் சங்கத்தின் மகிமைகளை நன்கு உணரு கிருன். (54)

ஒவ்வொரு மாதத்திலும் இரண்டு பக்ஷங்கள் உண்டா கின்றன. கடவுள் இவைகளுக்குத் தனித்தனியாக பெயர்களைக் கொடுத்திருக்கிருர். சந்திரனின் கலைகள் தேய்தலைக் கிருஷ்ண பக்ஷம் என்றும், கலைகளின் வளர்தலை சுக்லபக்ஷம் என்று சொல்லு கிருர்கள். இது மாதிரி கீர்த்தி, சுபமான கீர்த்தி, அசுபமான கீர்த்தி என்று உலகத்தில் பாகுபாடுடன் விளங்குகிறது. (55)

ஆகையால் இந்த உலகத்திலுள்ள எத்தனையோ கணக் கில்லாத உயிருள்ள சேதனர்கள், உயிரில்லாத வஸ்துக்கள் ஆகிய யாவற்றையும் ராம மயமாகக்கருதி நான் எல்லாவற்றினுடைய

பாத கமலங்களிலும் இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு நமஸ்கரிக்கிறேன். (56)

தேவதைகள், தனுவின் புத்ரர்களான தானவர்கள், தைத்யர்கள், மனிதர்கள், நாகர்கள், பக்ஷிசமூகம், பிரேதப் பிசாசுகள், கந்தர்வர்கள், கின்னரர்கள், இரவில் சஞ்சரிக்கும் ராக்ஷஸர்கள், ஆகிய எல்லோருக்கும் நான் நமஸ்காரம் செய்கிறேன். அவர்கள் எல்லோரும் தீனனுன என்னிடம் கிருபையுடன் இருக்கவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். (57)

எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகள் உள்ளன. (ஸ்வேத ஜம் - வியர்வையினுல் உண்டானவை. அண்டஜம் - முட்டையி லிருந்து வெளிவருவன, பிண்டஜம் - கர்ப்பத்திலிருந்து சிசு ரூபமாக வெளிவருபன, உத்பிஜம் - தாவரங்களைப்போல பூமியைப் பிளந்து வருபவன ஆகிய) நான்கு விதமாக சேதன அசேதனங்கள் ஜனிக்கின்றன. இவைகள் ஜலம், நிலம், ஆகாயம் ஆகியவைகளில் வசிக்கின்றன. இவைகளினுல் நிறப்பப்பட்ட ஜகத் எல்லாவற்றையும் சீதாராம மயமாகநினைத்து நான் இரண்டு கைகளால் அஞ்சலி கூப்பி நமஸ்கரிக்கிறேன். (ரிஷி களும், பித்ருக்களும், தேவர்களும், பெரிய பூதங்களும் ஜங்கமா ஜங்கமங்களும் எல்லாம் அடங்கிய சராசரங்களனைத்தும், ஜகந்நாராயணரிடமிருந்து உண்டான படியால், அப்பேற்பட்ட சீதா ராம மயமான ஜகந்நாராயணரை நான் நமஸ்கரிக் கிறேன்.) (58)

[தியானம்

ஜகத்தை ஆனந்தம் செய்கிற ராமா, ஜய ஜானகியை பிராண நாயகியாக உடைய ஸ்ரீரகுராமா, ராமச்சந்திர பிரபோ, சூரிய குலத்தில் உதித்தவரே, நல்ல குணங்களுக்கு இருப்பிட மானவரே, எப்பொழுதும் மங்களங்களைக் கொடுப்பவரே, அழகிய வதனத்தை உடையவரே, அம்ருதமயமான இன் சொற்களைச் சொல்பவரே, மஹாலக்ஷ்மியின் நாயகரே, கவிகளின் மனதில் வீற்றிருப்பவரே, இந்திர நீலமணியைப் போன்ற காந்தியை ஜயித்தவரே, சந்திரஸூர்ய நேத்ரங்களை உடையவரே, அப்ரமேயரே, சேஷசயனரே, அகல்யைக்குச் சாப விமோசனம் அளித்த மஹாபிரபோ, சபரியை ஆட்கொள்ள வந்த வள்ளலே, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய முத்தொழில்களைச் செய்பவரே, நல்லவர்களின் மனதாகிய சமுத்திரத்திற்கு பூரண



நான் இந்த ஜகம் முழுவதையும் சீதாராம மயமாகப் பார்க்கிறேன். நான் ஒரு கவியுமில்லை. மஹா கெட்டிக்காரன் என்றும் சொல்வதற்கு மில்லை. என் மந்த புத்திக்கு யேற்ப, கல்யாண குணங்களின் ராசிக்குவியல் போல விளங்கும் சக்கிரவர்த்தி திருக்குமாரனுகிற ஸ்ரீராமனின் கதையைச் சொல்ல ஆரம்பிக்கிறேன்.

துளசி பிரபு சொல்கிருர் :—" இந்த பிரபஞ்சம் முழுவதையும் பரம பாவனமானதும் சீதாராம மயமாகவும் பார்க்கிறேன். ஆகவே இந்த உலகத்தில் உள்ள அனைவருக்கும் நான் மன அடக்கத்துடன் சுக்ருத பிரணமம் செய்கிறேன். நான் ஒரு கவியுமில்லை. விவேக புத்தியும் எனக்குக் கிடையாது. இந்த விஷயத்தை நான் சத்தியமாக அறுதியிட்டுக் கூறி, காகிதத்திலும் நிரந்தரமாக விருக்கும்படி, எழுதியுமிருக்கிறேன். நீங்கள் அனைவரும் என்னை மன்னித்து அருள வேண்டும்.

சந்திரனைப் போன்றவரே, ஸுரஸையின் கர்வத்தைப் போக்கின ஆஞ்சநேயரின் புஷ்பத்திற்குச் சமமான கைகளால் வருடப்படும் பாதங்களை உடையவரே, கவிஸ்ரேஷ்டரான வால்மீகியினால் ஆத்மநிவேதனம் முதலிய பக்தி பிரகரணங்களால் எழுதப்பட்ட மஹாசரித்திரத்தை காவ்ய விஷயமாக்கப்பட்டவரே, விராதன், ராவணன், கும்பகர்ணன் போன்ற ராக்ஷஸர்களை வதம் பண்ணினவரே, சுத்தஸத்வமே, வரகவியான தியாகராஜருக்கு ஆப்தமானவரே, ஸுரமுனி கணங்களால் கானம் செய்யப் படுபவரே, பகவத்கீதை, நாராயணீயம் முதலியவைகளிலும், அக்ரபூஜையினால் அக்ரகண்யன் என்று வணங்கப்பட்டதால் சித்தாந்தம் செய்யப்பட்ட உத்தம தர்மானுசாஸனம் என்று சொல்லப்பட்டு, செய்யப்படுவதுமான கருத்தை பொருளோடும், விவேகத்தோடும் அறியப்படுபவரே, எல்லா வித்யைகளுக்கும் ஆசார்யரும் பிரும்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவர்களுமான வேதவியாஸர், தேவசிரஸ், தேவஸ்தானர், நாரதர், வாத்ஸயர், அஸ்மர், சுமந்து முதலான தேவரிஷி கணங்களாலும் பிரும்மரிஷி கணங்களாலும் கீர்த்தனம், வந்தனம் செய்விக்கப்பட்ட மஹா நாராயணப் பிரபோ, கீதை என்னும் சாஸ்திரத்திற்கு ஆசாரி யரும் அர்ஜுனனுக்கு சகாவுமானவரே, திரௌபதியின் மானத் தைக் காப்பாற்றினவரும், கோவிந்தருமான பகவானே, முன்னோர்களான குருக்களுக்கு குருவும், தாமரைக் கண்ணரு மாகிய ஸாக்ஷாத் பகவானே கேட்பவரோடு கூட உட்கார்ந்து கொண்டு, தர்மபுத்ரரால் வினவப்பட்டு, கங்காபுத்ரரும் ஸர்வக்ஞரும், எல்லாவற்றிலும் உண்மையைத் தெரிந்தவரும் ஸூக்ஷ்ம விஷயங்கள் எல்லாவற்றிலும் மனத்திலுள்ள சந்தேகங் களை அறுத்துவிடுபவரும், எவருடைய சபையில் பரிசுத்தர் களான பிரும்மரிஷிகள் எக்காலமும் ஸப்யர்களாகவிருந்தார் களோ, அப்பேற்பட்ட உத்தம தர்மங்களைத் தெரிந்து அனுஷ் டித்தவரும் கௌரவர்களின் பிதாமஹருமான பீஷ்மாசாரியரால் சொல்லப்பட்ட ஆயிரம் மங்கள நாமங்களை உடையவரும், ஆதி தேவரும் ஜனனமில்லாதவருமான பிரபு வ்யாப்ப நாராயணரை நான் நமஸ்கரிக்கிறேன்.]

"ஹே ஸ்வாமி, என்னை உன் தாஸனாகக் கருதி கிருபை யுடனும், பூரண மனதுடனும், தயையுடனும், குளிர்ந்த பார்வை யாலும் என்னையும் உன்னுடைய ஐஸ்வரியங்களில் சேர்த்து ஆட் கொள்ளவேண்டும். என் புத்தி சாமர்த்தியத்தால் ஆவது ஒன்றுமில்லை. அதில் எனக்கு நம்பிக்கையும் இல்லை. ஆகையால்

உன்னை வினயமாக கேட்டுக்கொள்கிறேன்; உன்னையே நம்பி யிருக்கிறேன் என்று என்னிடம் கருணை காட்டவேண்டும்.'' (59)

''ரகுகுல வீரனான ரகுபதியின் குணவிசேஷங்களை வர்ணனை செய்ய விரும்புகிறேன். ஆனால் என் சாமர்த்தியமோ மிகக் குறைவு. ராகவனிடம் அனந்தமான குணசமூகங்கள் பாராபார மாகவிருக்கின்றன. எனக்கு கவித்திறமையுமில்லை. ஆனால் என் மனதும் புத்தியும் பிறரை நம்பிவாழும் ஏழ்மைதனத்துடன் உள்ளன. ஆனால் எனது வேட்கையோ, ராஜாக்களுக்கு ஏற்படும் ஆசையைப் போலிருக்கிறது.'' (60)

''என் புத்தியின் சாமர்த்தியம் மிகக் குறைவுதான். ஆனால் ஆசையும் மஹத்தாகத்தான் இருக்கிறது. அம்ருதத்தைப் பானம் பண்ணுவதில் ஆசை உடையவனுக்கு மோர் தண்ணீர் கூட குடிப்பதற்கு இல்லை! ஆகையால் ஸஜ்ஜனங்கள் எனது முட்டாள்தனத்திற்கு மன்னிக்கவேண்டும். என் குழந்தைப் பருவமான வார்த்தைகளை மிகச் சந்தோஷத்துடன் தயவு செய்து கேட்கவேண்டும்.'' (61)

''பாலகனுடைய மழலைச் சொற்களை பிரேமை பூர்வமாகவும், பிரஸன்ன மனத்துடனும் எவ்விதம் தாய்தந்தையர்கள் கேட்பார் களோ, அதுபோல அவர்கள் என்னிடம் அன்பு காட்ட வேண்டும். ஆனால் துஷ்டர்கள் எப்போதும் க்ரூர எண்ணங் களுடன் கூடிய குடிலபுத்தியினால் பிறர்களுடைய தோஷங்களைக் கண்டு எடுத்து, அவைகளை தங்களுடைய ஆபரணங்களாகக் கருதுகின்றவர்களானபடியால், என்னைக் கண்டு அவர்கள் நிச்சயம் ஏளனம் செய்யத்தான் செய்வார்கள்.'' (62)

நிஜமாகவே ருசியுள்ளதோ, அல்லது வெறும் சுவாரஸ்ய மில்லாதவையோ, எவன்தான் தன்னுடைய கவிதைகளை ரசிக்க மாட்டான்! ஆனால் பிறருடைய கவிதைகளைக் கேட்டு, ஆனந்தப் படுகிறவர்களான உத்தமபுருஷர்கள் இந்த சம்சாரத்தில் பல பேர்களில்லை. (63)

அவர்களை நோக்கிச் சொல்கிறேன்!! ''சகோதரர்களே, இந்த உலகத்தில் குளங்கள், நதிகள் போன்ற மனிதர்கள் நிறையத்தானிருக்கிறார்கள். மழை பெய்தவுடன் கரையை உடைத்து தண்ணீரைப் பரப்புகின்ற குணம் குளம் நதிகளுக்கு யிருப்பது போல, மனிதர்களும் உன்னதியான கதியை அடைந்ததும் மிக்க கர்வத்துடன் வரம்பு மீறி நடக்கத்தான் செய்கிறார்கள். பூர்ண சந்திரனைப் பார்த்த மாத்திரம், (பூர்ண சந்திரனின் பெருமையை உணர்ந்த மாத்திரம்,) ஸமுத்திரம்

எவ்விதம் மட்டற்ற ஆனந்தத்தால் பொங்குகின்றதோ, அது போல் சாதுக்களை ஆதரிக்கும் சாதுக்கள் மிகக் குறைவு தான்.'' (64)

''என் பாக்யம் மிகக் குறைவுதான். ஆனால் என் ஆசையோ மிகமிகப் பெரியதாகவிருக்கிறது. அவ்விதமிருந்த போதிலும், எனக்குத் திடமான நம்பிக்கை ஒன்றிருந்து வருகிறது. ஸாதுக்கள் என் கவிதைகளைக் கேட்டு, சந்தோஷமடைவார்கள். துஷ்ட ஜனங்களும் சிரிக்கத்தான் செய்வார்கள்.'' (65)

''துஷ்டர்களின் சிரிப்பினாலும் நான் நன்மையைத்தான் அடைவேன். காக்கை மதுரமான கோகிலத்தின் குரலைக் கேட்டு, கடூரமானது என்றுதான் சொல்லும். கொக்கு ஹம்ஸத்தைப் பார்த்துச் சிரிக்கும். தவளைகள் சாதகபக்ஷிகளைப் பார்த்து ஏளனம் செய்யும். ஆகையால் துஷ்ட சித்தமுள்ளவர்கள் நிர்மலமான சப்தங்களையும் பேச்சுக்களையும் கேட்டு, கேலி பண்ணத்தான் பண்ணுவார்கள்.'' (66)

''கவிதையில் வல்லவர்களும், ஆனால் ராமசரணங்களில் பூர்ணமாகப் பக்தியுடன் ஈடுபாடு இல்லாத மனிதர்களுக்கு இந்த சரித்திரம் அத்யந்த ஹாஸ்யரஸமாகத்தான் தோன்றும். மேலும் இந்த ராமசரித மானஸம் சாதாரண பாஷையிலும் எழுதப் பட்டிருக்கிறது. எனக்கும் புத்தி குறைவாகவுமிருக்கிறது. ஆகையால் அவர்கள் சிரிப்பதற்கும் யோக்யமானதுதான். நான் ஒப்புக்கொள்கிறேன். அவர்கள் சிரிப்பதினால் அவர்களைப் பற்றி குறை ஒன்றும் சொல்லுவதற்கில்லை. அவர்கள் சிரித்து விட்டுப் போகட்டும்.'' (67)

''எவர்களுக்கு விசாலமான அறிவுயிருந்தும், மஹத்தான ஸாம்ராஜ்யம் என்கிற ராம பிரேமை பூர்ணமாக யில்லையோ, அவர்களுக்கும் இந்த ராம கதையும் ''சப்பு'' என்று சொல்லும் படி ருசியில்லாதபடிவிருக்கும். ஆனால் எவர்களுக்கு ஸ்ரீ ஹரியும், அவர் தோழரான பகவான் சம்புவும் மிக்க அத்யந்தப் பிரிய முள்ள தெய்வங்களாக விருக்கிறார்களோ, அவர்களுக்கு நிச்சய மாக இந்த அம்ருதமயமான ராம கதாரஸம் இனிப்பாகத்தா னிருக்கும். ஸ்ரீ ராமச்சந்திரன் அவதாரம் எடுத்து பூமிக்கு எழுந்தருளினதும் சீதை லக்ஷ்மணன் பரத சத்ருக்னாதிகளோடு கூடின ராம கதை என்கிற சரித்திரம் அம்ருதம்போல அந்த மஹானுபாவர்களுக்கு மஹத்தான சுவையுடனிருக்கும்.'' (68)

[தியானம்

ராமா, ஏன் நீ பூமியில் அவதரித்தாய்? ராவணனோடு சண்டை செய்து, அவனை வதம் செய்வதற்காகவா, அல்லது தர்மமாக அயோத்தியை ஆளுவதற்காகவா அவதரித்தாய்? பூர்வ யுகத்தில் வரம் வாங்கின பிரஹ்லாதனுடைய மனத்தை திருப்தி செய்வதற்காக பூமியில் அவதரித்தாயா? வெறும் காலுடன், முள்ளும் செடியும் நிறைந்த தண்டகக் காடுகளில் சஞ்சரித்து, தவத்தையே தனமாகக்கொண்டு, யோகிகளுக்கும் ரிஷிகளுக்கும் வலுவில் உன் பிரியதர்சனத்தைக் கொடுப்பதற்காகவா அல்லது ஸம்சாரத்தில் என்னைப்போன்று உழலும் பாமர ஜனங்களுக்கு அநேக ஆயிரம் வர்ஷங்களுக்குப் பின்பும் ஊன்றுகோல் போலிருப்பதற்காகவா நீ அவதரித்தாய்? ஹே தியாகராஜருக்கு ஹிதம் செய்த பெருமானே, ஸ்ரீ ராமா, எவ்விதமாயினும், நீ யாருடைய பேச்சை நம்பி பூமியில் அவதரித்தாயோ, அந்த மஹானுபாவனை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். சுலபமான ரா என்னும் எழுத்தும், ம என்கிற எழுத்தும் வேதங்களின் அர்த்தத்தையே பிரதிபலிக்கின்றன. ராஜரிஷியான உனது தர்சனமும் பிரும்மா, ருத்ரன் போன்றவர்களுக்கும் மிக்கப் பிரியமானதன்றோ? உன் செய்கைகள், வீரத்தனமாகவும், சூரத்தனமாகவும், ஸதா ஆனந்தத்தைக் கொடுப்பதாகவும் அல்லவோ இருக்கின்றன.]

ஸத் ஜனங்கள் ஸ்ரீ ராமன் பூமியில் அவதாரம் பண்ணின கதையை மதுரமான குரலில் கானம் பண்ணுவார்கள். பிறர் சொல்லியும் கேட்பார்கள். நானோ கவியுமில்லை. பேசுவதிலும் எழுதுவதிலும் நான் சாமர்த்தியமுள்ளவனுமில்லை. கலைகளிலும் காவ்ய வித்யைகளிலும் தேர்ச்சியும் பெறவில்லை. (69)

நானு பிரகாரமான அக்ஷரங்களும், அவைகளின் அர்த்தங்களும், பிரயோகங்களும், சொல் வரிசை, இசை வரிசை போன்ற அலங்காரங்களும், இன்னும் அநேகவிதமான காவ்ய மீட்டர்களும், பாவங்களும், ரஸபேதங்களும் சிலேடை போன்றவைகளும், இதர காவ்ய நுணுக்கங்களும் பலவிருக்கின்றன. இன்னமும் காவ்ய பரிமள ரசனைக்குத் தேவையான அநேகவிதமான குணங்களும் தோஷங்களும் அநேகமிருக்கின்றன. (70)

காவ்ய ஸம்பந்தமான ஞானமும் என்னிடம் லவலேசமுமில்லை. இவ்வளவு குறைகளுடன் நான் இந்த சரிதத்தை எழுதி, சத்யத்துடன் என்குறைகளை பறைசாற்றுகிறேன். (71)

என்னுடைய காவ்யத்தில் பெருமையாகச் சொல்லும்படி காவ்யரஞ்சனமான குணம் ஒன்றும் சொல்வதற்கில்லை. அவ்வித மிருப்பினும் எல்லோரும் ஸர்வஸம்மதமாக ஒப்புக்கொள்ளும்படி ஒரே ஒரு மகிமைதான் இருக்கிறது. ஞானவான்கள் இதை நன்கு அறிவார்கள். அதை நான் சொன்னால் கேட்கவும் கேட்பார்கள். "சரி" என்று அவர்கள் ஆமோதிக்கவும் செய்வார்கள். (72)

இந்த காவியத்தில் எந்த பகவானுடைய பாத அடிகளால் மூன்று உலகங்களும் அளக்கப்பட்டதோ, அந்த திரிவிக்ரமனின் அம்சமான ஸ்ரீரகுநாதனுடைய பரந்ததும், ஐஸ்வர்யம் நிரம்பினதுமான ஸ்ரீராம நாமம் இருக்கிறது. இதில் மிக்க சுத்த மானதும் பதிதபாவனமானதுமான ஸ்ரீராமநாமம் இருக்கிறது. இந்த ராம நாமம் வேதபுராணங்களின் பிராணமுடிச்சுப் போன்ற ஸாரம். சகல மங்களங்களையும் அளிக்கவல்ல மகத்தான நாமம். சகலவிதமான துக்கங்களைப் போக்க சக்திவாய்ந்த நாமம். எந்த நாமத்தை சதா உமையவளுக்குப் பதியான சங்கரரும், பார்வதி தேவியும் ஜபித்துக்கொண்டு நாதபிரும்மானந்தத்தை அடைகிறார்களோ, அந்த தாரக மயமான ராமநாமத்தை அடிப் படையாகக்கொண்டது இந்த சரிதம். (73)

[தியானம்

ராமா, உன் நாம ரூபமான ஜபத்திற்கு என்ன அர்த்தம்? என்ன ஸ்வரூபம் உள்ளது, எந்தவிதமாக உன்னை பூஜை பண்ணுவது? இதைப்பற்றி ஜனங்கள் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? வால்மீகியும், நாரதரும், தியாகராஜரும் சிவ மாதவனாகவும், பிரும்மமாகவும், பரப்ரும்மமாகவும் நாராயணனாக வும் அல்லவா சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லும் மஹானு பாவர்களான அவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். பஞ்சாக்ஷர மந்திரத்தின் ஜீவனான ம என்கிற சொல்லும், அஷ்டாக்ஷத்திரத் தின் ஜீவமுடிச்சான ரா என்கிற பதமும் சேர்ந்துதானே உன் பெயர் கொண்ட ராம தாரக மந்திரமாக ஆனது? ஏ மனஸே, இந்த அர்த்தத்தை நினைத்து ராமனை ஜபிப்பாயாக. உன் சஞ்சலத்தை அடக்கி, ராமனை பரப்பிரும்மமான நாராயணராக நினைத்து பஜிப்பாயாக. ஹே சீதாராமா, எந்த இடத்தில் அம்ருத ரஸமாகிற தேனின் பிரவாஹமிருக்கிறதோ, மிகப் பிரிய மானதும், சிறந்ததானதும், விஷ்ணுவின் பக்தர்களால் மிக்க ஆசையுடன் வேண்டப்படுவதுமான அந்த வைகுண்டமான

தங்கள் ஸ்தானத்தை இந்த ஜன்மத்திலேயே, உன்னை ஜபிப்பதினால், உன்னை நினைத்து வாழ்வதினால், உனக்காக வாழ்க்கை என்கிற யாக வேதியில் ஆஹுதி அர்ப்பணம் செய்யும் பாக்யத்தைச் செய்வதினால் நான் அடைவேனாக. வேத மாதாக்களான காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி தேவியை நான் நமஸ்கரிக்கிறேன். புருஷ உருவமுள்ளதும், ரத்ன மணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், எல்லா அறிஞர்களாலும், சாவித்திரி தேவியினாலும், பரம கௌதுகலத்துடன் தியானிக்கப்படும் பரமாத்ம ஜ்யோதி என்று அறியத்தக்கதான ஸ்ரீ சீதாராமனை நான் நமஸ்கரிக்கிறேன். உலகங்களுக்குப் பதியும், எல்லாவற்றிற்கும், காரணகாரியங்களுக்குப் பிதாவும், சிவந்த இரண்டு பாதங்கள் உள்ளவரும், ஆஞ்சநேயரால் வருடிய அடையாளங்களை உடையவரும், இந்திர நீலமணிக்கொப்பான மேனி உள்ளவரும், தோள்வளைகளாலும், கிரீடத்தாலும் விளங்குகிறவரும், இந்திரன் முதலிய தேவர்களாலும் ரிஷிக்கூட்டங்களாலும் துதிக்கப்படுகிறவரும், ஸ்ரீ ஹரி, நாராயணர் என்று நாரதராலும் வால்மீகியினாலும் போற்றப்படும் ஸ்ரீராமச்சந்திர பிரபுவை ஜய சப்தத்துடன் தலையால் வணங்கி நான் நமஸ்கரிக்கிறேன். தியாகராஜர் போற்றிய " நீ நாமரூப முலகு நித்ய ஜயமங்களம் " என்று சொல்லி மகிழ்ச்சியுடன் பாடுகிறேன்.]

அழகானதும் மதுரமான கவிதைகளால் காவியங்கள் இயற்றப்பட்டிருந்தாலும், ஸ்ரீராம நாமத்தைக் கருத்தாக அவைகள் கொள்ளாதுபோனால், அந்த காவியங்கள் சோபையைப் பெறாது. எப்படி சந்திரன்போல முகத்தை உடைய சுந்தரமான பெண் ஒருத்தி சுபலக்ஷணங்களைப் பெற்றிருந்த போதிலும், வஸ்திரம் இல்லாமலிருந்தால் சோபையைத் தருவதில்லையன்றோ. (74)

மதுரஹீனமாகவிருந்தாலும், அற்பமான மனிதனால் இயற்றப்பட்டிருந்தபோதிலும், புத்தியில் சிறந்தவர்கள் ராம நாமத்தைப் புகழும் காவ்யங்களைப் பக்திசிரத்தையுடன் கேட்பார்கள். எப்படி தேனீக்கள் புஷ்பங்களிலிருந்து மதுவை நுகர்கின்றனவோ, அது மாதிரி ஸாது ஜனங்கள் ராமநாமத்தின் மகிமையால் அப்பேற்பட்ட காவியத்தை அங்கீகரிப்பார்கள், சன்மானிக்கவும் செய்வார்கள். (75)

என்னுடைய காவியத்தில் கவித்திறமை இல்லாதபோனாலும், அவர்கள் ஸ்ரீராமனுடைய மகிமையைக் காண்பார்கள்.

சத்சங்கத்தினால் மேன்மை அடையாதது எதுதான் இருக்கிறது? ஆகையால் இதில் எனக்கு அபார நம்பிக்கை ஏற்படுகிறது. (76)

அகர்போன்ற வாசனை திரவியத்தின் சேர்க்கையால் புகையானது சுகந்தமாக மாறிவிடுகிறது. ஸ்வாபாவிகமான கடூரமான குணத்தையும் புகை தியாகம் செய்துவிடுகின்றது. என்னுடைய காவியத்தில் சிறந்த கவிதைகள் என்று பெருமையாகச் சொல்லப்படும் விஷயங்கள் இல்லை. வாஸ்தவம்தான்; இருந்தாலும் இந்த உலகத்திற்கு மங்களங்களை அளிப்பதான ராம கதை என்கிற உத்தமான விஷயம் வர்ணனை செய்யப்பட்டிருக்கிறது. (77)

துளசிதாஸர் சொல்கிறார்—ஸ்ரீரகுநாதனுடைய கதை மங்களங்களை அளிப்பவை. கலியுகத்தின் கல்மஷங்களையும் பாபங்களையும் போக்கக்கூடியவை. இந்த கதையின் மார்க்கம் புனிதமான கங்கையின் பிரவாஹம் போல வளைந்துபோகிறது. ஸ்ரீராமச்சந்திரனுடைய சேர்க்கையினாலும், அவருடைய பிரபாவத்தினாலும் இந்த ராம கதையானது சாதுக்களுடைய மனத்தை ஆனந்தம் பண்ணுகிறதாகவிருக்கிறது. ஸம்சாரத்தில் அபவித்திரமாக விளங்கும் சாம்பல்கூட ஸ்ரீமஹாதேவனின் அங்கங்களின் சேர்க்கை பெற்ற விசேஷத்தால் அணிவதற்கு யோக்யமாகவும் நினைப்பதற்கும், பாபங்களைப் போக்குவதற்கும் உபயோகப்படுகிறதல்லவா? (78)

ஸ்ரீராமச்சந்திரனுடைய கீர்த்தியின் சேர்க்கையினால் என்னுடைய கவிதையும் எல்லோருக்கும் பிரியத்தை அளிக்கும். மலயபர்வதத்தின் சேர்க்கையினால் சாதாரண மரக்கட்டைகூட வெகுமானிக்கத்தக்கதாகிவிடுகிறது. மலய பர்வதத்தில் சந்தன மரக்காடுகள் அநேகம் இருக்கிறபடியால் அங்கிருக்கும் சாதாரண மரக்கட்டையும் சந்தனத்தைப்போல வாசனையுடன் கூடியதாகவிருக்கிறது. (79)

பசுமாடு கருப்பு நிறமாகவிருந்தாலும், அதனுடைய பால் வெண்மையாகவும், ருசிகரமுள்ளதாயுமிருக்கிறது. அதன் காரணமாக எல்லோரும் ஆவலுடன் பாலைக் குடிக்கிறார்கள். கிராமத்து பாஷையில் நான் எழுதியபோதிலும் ஸ்ரீ சீதாராமனின் கதையை எழுதியிருக்கிறபடியால் புத்தியுள்ள மனிதர்கள் ஆசையுடன் கானம் பண்ணுவார்கள், காதுகொடுத்து கேட்கவும் கேட்பார்கள். (80)

சர்ப்பத்தின் தலையிலுள்ள மணியும், பர்வதத்தின் உச்சியில் கிடைக்கும் மாணிக்கமும், யானையின் சிரஸிலுள்ள முத்தும்

அவைகள் இருக்கும் இடங்களில் சோபையைத் தருவதில்லை. ராஜாவின் கிரீடத்திலும் இளம் யுவதியின் சரீரத்தின்மேல் அணியப்பட்டால் அவைகள் அதிகமான சோபைகளைத் தருகின்றனவல்லவா? (81)

புத்தியுள்ள மகான்கள் "நல்ல கவியினுடைய கவிதைகள் ஓரிடத்தில் உற்பத்தி ஆகின்றன, மற்றொரு இடத்தில் அவைகள் பிரகாசத்தை அடைகின்றன" என்று சொல்லுகிறார்கள். ஒரு கவி, பக்தி ரஸத்துடன் சாரதாதேவியை வணங்கும்போது, அவள் மிக்க கிருபையுடன் பிரும்மலோகத்தை விட்டு விட்டு அவசரமாக அந்த கவியினிடம் ஓடி வந்து சேருகிறாள். (82)

அவ்விதம் அவள் வெகு சிரமப்பட்டு வந்திருந்தபோதிலும், எவ்வளவு முயன்றாலும், பக்தியுடன் ராமசரிதம் என்கிற அம்ருத சாகரத்தில் கவியானவன் சாரதாதேவியை ஆனந்தமயமாக அபிஷேகம் செய்யாதபோனால், இருவர்களுடைய சிரமமும் வீணே. ஆகையால் பண்டிதர்களும் கவிராயர்களும் ஹ்ருதயத்தில் இவ்வண்ணமாக ஆலோசனைபண்ணி, கலியுகத்தில் பாபங்களைப் போக்கும் ஸ்ரீஹரியினுடைய சுந்தரமான புகழைக் கானம் செய்கிறார்கள். (83)

ஸம்ஸாரிகமான சாதாரண நரனைப் பஜிப்பவர்களைக்கண்டு சரஸ்வதி தேவியானவள் பயந்து அசிரத்தையுடன், தான் வந்திருப்பதற்கும் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கும் வருந்தி பச்சாதாபப்படுகிறாள். புத்திமான்களின் ஹ்ருதயம் ஸமுத்திரத்தைப் போலப் பரந்தது. அவர்களுடைய புத்தி தீவிரம் முத்துச் சிப்பியைப்போலவிருக்கிறது. ஸரஸ்வதி தேவியின் அருள் ஸ்வாதி நக்ஷத்திரத்தில் பெய்யும் மழை தாரையைப்போலவிருக்கின்றது. (84)

ஸ்வாதி நக்ஷத்திரத்தில் பெய்யும் மழை தாரை எவ்விதம் முத்துச்சிப்பியில் விலை உயர்ந்த முத்துக்களை உண்டாக்குகின்றனவோ, அதைப்போல பகவத் கிருபையினால் யேற்படும் த்யான வர்ஷங்கள் கவிதைகளாகிற சிறந்த முத்துக்களை தோன்றுவிக்கின்றன. (85)

[தியானம்

ஹே, ராமா, பிரியமுள்ள ஸ்ரீநாயகா, உனக்குக் கிடைத்த ஸ்நேகிதையான மஹாலக்ஷ்மியினால் அல்லவோ, நீ மகிமை பொருந்தியவராகவும், சூரியனைப்போன்று காந்தியுள்ளவராகவும், தமஸ: என்கிற இருளுக்கு அப்பால் இருக்கும் மஹாபுருஷன்

என்கிற சப்தத்துக்கு பொருள் உள்ளவனுகவுமிருக்கிருய். உன்னுடைய கைகளின் திறமையை தாடகையின் வதத்தாலும், கால்களின் பெருமையை அஹல்யையின் சாபவிமோசனத்தாலும் விஸ்வாமித்திரர் கண்டார். அதுபோலவும் எனக்கும் நீ மனத்துக்கினியவனுக ஆகவேண்டும். உன்னை கவி ஸ்ரேஷ்டர் கள் வேதத்தின் ஸாரமாயும், பல அவதாரங்கள் எடுத்தும் லீலைகளைச் செய்யும் புண்ய ஸ்லோகனுகக் சொல்லுகிருர்கள். இந்த ராமாவதாரத்தில் சக்ரவர்த்தி திருக்குமாரனுக அவதரித்து, மாலினி மந்திரத்தின் அதிதேவதையான ஜானகியை மணந்து, அவளுடைய கிருபா சேர்க்கையினுல் அல்லவா பூமி முழுவதும் பரந்த கீர்த்தியை அடைந்தாய். உன் கீர்த்திக்காக அவள் பட்ட சிரமமும், அவளுக்காக நீ பட்ட துக்க அவஸ்தை களும் சிரமங்களும் ஆக இரண்டும் சேர்ந்துதானே உன்னை உத்தம ஸ்லோகனுக மாற்றிவிட்டது. எவ்விதம் தியாகராஜர் போன்ற மஹான்கள் உங்களை கீர்த்தனம் ஆராதனம் ஆகியவைகளால் சந்தோஷப்படுத்தி, தன் சுகத்தை சம்பாதித்தாரோ, அதைப் போல உங்கள் இருவருடைய ஸ்வரூப, ஸ்வபாவங்களை அறிந்து, அதனுல் ஏற்படும் ஞானத்தையும் சுகத்தையும் அடைந்து எப்பொழுதும் உங்களை கானம் பண்ணும் பாக்யத்தை நான் அடைவேனுக.]

ஹே ராமா, சீதா, உங்கள் இருவர்களையும் புகழுகின்ற கவிதைகள் புகழ்பெற்ற முத்துமணிகளாக இருக்கவேண்டும். அவைகளை சாமர்த்தியமாக ராமசரித்திரம் என்கிற பட்டுக் கயிற்றில் கட்டி, சாதுக்களான மஹாத்மாக்கள் தங்கள் நிர்மல மான ஹ்ருதயத்தின் மீது தரித்துக்கொள்ளவேண்டும். அவர்கள் அதை அணிவதால், முடிவில்லாததும், குறைவற்றதும் உங்கள் மீதுள்ள பக்தியாகிற சோபையுடன் அல்லவா அவர்கள் பிரகாசிக் கின்ருர்கள்? (86)

எவர்கள் பயங்கரமான கலியுகத்தில் ஜன்மம் எடுத்து, காக்கைகள் மாதிரி கேவலமாயும் க்ரூரமாகவும் நடந்து கொண்டும், ஹம்ஸபக்ஷிகளைப்போல வேஷங்களைத் தரித்துக் கொண்டும், வேதமார்க்கங்களைப் புறக்கணித்து, துஷ்டமார்க்கங் களில் பிரவேசித்து, கபட மூர்த்திகளாக விளங்கிக்கொண்டு கலியின் பாபமூட்டைகள் என்று சொல்லும்படி விளங்கு கிருர்களோ, (87)

எவர்கள் ஸ்ரீராமனுடைய பக்தர்கள் என்று நம்பும்படி தங்களை பறைசாற்றிக்கொண்டு லோகத்தை வஞ்சித்துக்

கொண்டு வாழ்கிருர்களோ, எவர்கள் தனத்திற்காக லோபம், க்ரோதம், காமம் ஆகியவைகளுக்கு அடிமைகளாக வாழ்ந்து திரிந்தும், அஹங்காரம் பிடித்தவர்களாக பிறரை ஹிம்ஸித்தும், தர்மத்தைச் காப்பாற்றுவதில் டம்பமாக தங்களைத் தாங்களே பறைசாற்றிச்கொண்டும் கபடத்திஞல் உலகத்தை வஞ்சித்துக் கொண்டுவாழ்கிருர்களோ, அப்பேர்பட்ட குழாம்களில் நான் என்னை முதல்வனுகக் கருதுகிறேன். (88)

ஐயா, என்னுடைய அவகுணங்களைப்பற்றி சொல்ல ஆரம்பித்தால், அவைகள் ரொம்பப் பெரிய கதைகளாகவிருக்கும். அந்த கதைகளின் அக்கரையை அடையமுடியாதபடி எல்லையற்றதாக வும், ஆழமுள்ளதாகவும், மிக்க விசாலமானதாகவும் இருக்கும். ஆகையால் அவகுணங்களில் சிலவற்றைத்தான் நான் சுருக்க மாகச் சொல்லியிருக்கிறேன். இவைகளை புத்தியுள்ள மனிதர்கள் சிறிது சொன்னுலும் நன்ருகப் புரிந்து கொள்ளவேண்டும். (89)

இவ்விதமாக என்ஞல், பலவாறு பலவிதங்களாலும், பல தடவைகளாலும் மன்னிப்பு கேட்கப்பட்டது. மனவருத்தம், பச்சாதாபங்களடங்கிய வினதிகளுடன் கூடிய என்னை எல்லோரும் சரியாக புரிந்துகொள்ள வேண்டுகிறேன். என்ஞல் இயற்றப்பட்ட இந்த ராமசரித மானஸம் என்கிற காவ்யத்தை இந்தக் காரணங்களால் தோஷமுள்ளதாகக் கருதமாட்டார்கள் என்று நினைக்கிறேன். அவ்விதம் என்னை நம்பாமல் தோஷமுள்ள தாக அவர்கள் கருதுவாராகில், அவர்கள் நிச்சயமாக என்னைவிட மூர்க்கர்களாகவும், புத்தியில் மட்டமான மனிதர்களாகவும் இருக்கவேண்டும். (90)

[தியானம்

ஹே ரகுராமா, நீ என்ன காரணத்தால் ரகுகுலத்தில் உதித்தாய்? என்ன கர்மங்களைக் கொண்டு, நற்பயனை அளிக்கும் தர்மங்களை உபதேசிக்க வந்தாய்? சத்ரு ஸம்ஹாரம், ஸத் விஷயங்களின் உபதேசங்கள், அவைகளின்படி நடத்தல் என்கிற ஸதாசாரம், ராஜநீதி, சாதாரண மனித வாழ்க்கையில் செய்யப்படவேண்டிய மனுஷ்ய தர்மங்கள், வியவஸ்தைகள், லோக மரியாதைக்காக செய்யப்படவேண்டிய கார்யங்கள், தன் சொந்த மரியாதைக்காகச் செய்யவேண்டிய கர்மாக்கள், இவைகளால் குலத்தின் புகழையும், உன் புகழையும் நீ உயர்த்திக்கொண்டாய். உன் வாழ்க்கையில் ஏற்பட்ட துக்க விஷயங்களும் உனக்கே

முடிவில் புகழைக் கொடுக்கிறதாகவுமிருந்தன. உன் வாழ்க்கைச் சரிதத்தை யோகசித்தி பெற்றவர்களான சிறந்த விப்ரர்கள், ரிஷிகள், உன் கர்மாக்களால் உனக்கு வந்த குணப்புகழையும், அந்த குணம்புகழ்களால் ஏற்பட்ட மங்களகரமான ஆயிர நாமங்களையும் இடைவிடாது தொழுகிறார்களல்லவா? ஹே ஜானகி, ஸ்ரீ மாதாவே, பராசக்தியாகிய உன்னைவிட்டுப்பிரிந்த உன் நாயகன் அடைந்த துக்கமும் சிரமும் ரொம்ப ரொம்ப பெரிது. அந்த துக்க வியோகத்தின் முடிவில் [உன்னை ராமனால் அடையப் பட்ட பின்பு] ஏற்பட்ட முழுக்கதையும் சேர்ந்து, தானே புண்ணிய புருஷர்கள் துதிப்பதற்கும் கீர்த்தனம் செய்வதற்கும் தகுதி உள்ளதாயிற்று?]

நானோ கவியுமில்லை. சாமர்த்தியமாகப் பேசுகிறவனுமில்லை. இருந்தாலும் என் புத்திக்குத் தெரிந்தவரை ஸ்ரீ ராமச்சந்திரனை விஷயமாகக்கொண்டதும் அவனுடைய பிரிய பார்யையான ஜானகியினுடைய கதையையும், தினகர ஜனக குலங்களின் பெருமைகளையும், இவர்கள் இருவர்களின் அனந்தமான கல்யாண குணங்களின் பெருமைகளையும் கானம் செய்யும் அபாரமான கதையை நான் எழுத ஆரம்பிக்கிறேன். எவ்வளவு மகிமைகள் பொருந்திய சரித்திரம்! ஆ! கஷ்டம்! ஆழமானதும் பரந்ததுமான ஸமுத்திரத்தின் ஆழத்தை அறிய விரும்பும் என் மந்த புத்தியைப் பற்றி என்ன சொல்வது? (91)

பிரசண்டமான எந்தக் காற்றினால் அழகான மேரு மலையின் சிகரத்தின் ஒரு பகுதி தூக்கித் தள்ளப்படுகிறதோ, அந்த காற்றின் முன்பு பஞ்சுப்பொதி என்ன மாதிரி கஷ்டப்படும்? அதைப்போல சிறந்த மகிமைகள் பிரபாவங்கள் அமிதமாகவும் கணக்கற்றதாகவும் மலிந்துகிடக்கும் ஸ்ரீ சீதாராமனுடைய கதையைச் சொல்லுவதற்கும், எழுதுவதற்கும் நான் பயப்படுகிறேன். (92)

வாக்கின்ஸ்வரூபமான சரஸ்வதி தேவியும், ஆயிரம் நாவு படைத்த உரகராஜனான சேஷனும், நாதபிரம்மமே ஸ்வரூபமாக உள்ளவரும், (எவருடைய ஸத்யோ ஜாதாதி ஆகிற ஐந்து முகங்களிலிருந்து ஸரிகமபதநிஸ என்கிற சப்தஸ்வரங்களும் உண்டாயிற்றோ,) அப்பேற்பட்ட மஹேஸ்வரரும், எல்லா உயிர் ராசிகளுக்கும், சேதனாசேதனங்களுக்கும் பிதாமஹரான பிரம்ம தேவரும், வேத சாஸ்திர, ஆகம புராணங்கள் ஆகியவைகளும், எல்லோரும் இடைவிடாது பஜித்தபோதிலும், திருப்தி அடையாமல் " இதுவும் போறாது, இன்னும் இருக்கிறது, இதுவுமில்லை

என்று சொல்லும்படி மீண்டும் வசனங்களால் அறியமுடியாதபடி விருப்பவரும் பரந்த குணங்களை உடைய கல்யாண ஸ்ரீ சீதா ராமனை எங்ஙனம் நான் பாடப்போகிறேன்? (93)

ஸ்ரீ ராமசந்திரனுடைய மஹத்வத்தையும் பிரபுத்துவத்தையும் வர்ணிக்க முடியாததுதான் என்று தெரிந்தும், உணர்ந்து கொண்டும், அவைகளை யாராவது சொல்லாமல் பூமியில் இருக்கிறார்களா? இதற்கு காரணம் வேதத்திலேயே சொல்லப் படவில்லையா? அதாவது பகவானை பஜிக்கும் பிரபாவங்கள் பலவிதங்களாக சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவனுடைய மகிமைகள் பூர்ணமாக வர்ணிக்க முடியாதபடியிருந்த போதிலும், அதற்கு ஏற்ற சக்தி ஒருவரிடமும் இல்லாதபோனாலும், கொஞ்சமாவது அவனைப் பஜித்து, அவனுடைய குணப்புகழை நாம் பாடியாகவேண்டும். (94)

பரமேஸ்வரர் ஒருவர்தான். பரதத்வம் ஒன்றுதான். சத்ய சங்கல்பர் என்று சொல்லக்கூடியவர், தனக்குத்தானே ஸ்வதந்தர முள்ளவரும், தன்னுடையது என்கிற விருப்பங்களில்லாதவரும், எது முன்னிருந்ததோ இனி வரப்போகிறதோ, இப்போதும் எப்போதும் காணப்படுகிறதோ ஆகிய எல்லாம் அரூபராகிய அந்த பரம புருஷனே. எது அன்னமயமான இப்பிரபஞ்சத்தில் மறைவிலிருந்து வெளிப்படுகிறதோ, அதுவும் பரம புருஷனே. அவருக்குக் குறிப்பிட்ட பெயரில்லாததால் அநாமர் என்று சொல்லப்படுகிறார். ஸம்சாரம் என்னும் பெரும் பிணிக்கு பகையாகயிருப்பவரும், பேஷஜரும், கர்மங்களினால் உண்டாகிற மனநோய்களுக்கும் புறநோய்களுக்கும் மிருத சஞ்சீவினியைப் போலவிருந்து அநாமயர் என்கிற பெயருடன் விளங்கும் ஸ்ரீமந் நாராயணரும் அந்த பரம புருஷன்தானே. எக்காலத்திலும் அவர் காணப்படுவதால் அவரே அஜர் என்று சொல்லப் படுகிறார். தானும் ஆனந்தித்து பிறரையும் ஆனந்திக்க வைப்பவனும் அந்த மஹா புருஷன்தானே. சச்சிதானந்தம் என்று போற்றப்படுகிறவனும், பிரும்மாண்டத்திற்கு அபிமான தேவதையும் நாராயணன்தானே. அவரையே நாம் வைகுண்ட பதி என்றும் அறிகிறோம். ஜகத் ஸர்வத்திலும் யாதொன்று வஸ்துவாக விளங்குகிறதோ, அல்லது கேட்கப்படுகிறதோ, அவ்வனைத்துக்கும் உள்ளும் வெளியும் வியாபித்துக்கொண்டு, வித்வான்களாலும், தீரர்களாலும் விராட்புருஷன் என்று அறியப்படுபவரும் நாராயணரே; பகவானாகிய அவர் வைகுண்டத்திலிருந்து பூமிக்கு எழுந்தருளி, சரீரமெடுத்து

நம்மைப்போன்ற ஜனங்களின் நன்மைக்காகவே பண்ணின அவதார லீலைகள் பலவிருக்கின்றன. (95)

அப்பேர்பட்ட அவருடைய லீலைகள் நம்மைப்போல பக்தி உள்ளவர்களின் நன்மைக்காகவே செய்யப்பட்டன. ஏனென்றால் பகவான் நாராயணர் பரம கிருபாஸமுத்திரம். (ஒருக்கால் சரணம் என்று சொன்னவர்க்கு) அவர் அதிகப் பிரியமுள்ளவராக ஆகிவிடுகிறார். பக்தர்களிடம் அவர் காட்டும் கிருபையும், அதனால் பக்தர்கள் பெருமையை அடைவதும், அவர்களால் தானும் பெருமை அடைபவரும் மகிமை பொருந்திய நாராயணர் அன்றோ? அதுமாத்திரமா, பக்தர்களிடம் அபார அன்புப் பெருக்கினால் ஒருதடவை கிருபை செய்துவிட்டு, அதன் வியாஜத்தினால், மீண்டும் மீண்டும் பிற்பாடு அபராதம் செய்திடினும் க்ரோதமின்றி ஸ்வயமாக வந்து வலுவில் ஒட்டிக்கொள்ளும் கிருபாஸமுத்திரமன்றோ, அனுராகி அல்லவோ அவர்? (96)

அப்பேர்பட்ட பிரபு நாராயணரின் அம்சரான ஸ்ரீ ரகுநாதன் இழந்த பொருள்களை மீட்டுக் கொண்டுவந்து கொடுக்கிறான். அவன் தீனர்களான மனிதர்களை மித்ரர்களாக நினைக்கிறான். சுலபமாக புரிந்துகொள்ளும்படி ஸ்வபாவம் உள்ளவனாகவும், எளியவனாகவுமிருக்கிறான். சர்வ சக்திமானாகவுமிருக்கிறான். எல்லோருக்கும் யஜமானனாகவுமிருக்கிறான். இதை அறிந்து தானே வித்வான்கள் என்று சொல்லப்படும் தீரர்கள் ஸ்ரீ ஹரியினுடைய பிரபாவத்தை வர்ணனை பண்ணி தங்களுடைய சக்தி ரூபத்தின் ஒரு அம்சமான வாக்குக்களை சுத்தமாக்கிக் கொள்ளுகிறார்கள். அதன் விசேஷத்தால் உத்தம பலன்களான மாயையாகிற விஷயப் பற்றுதலை விலக்கி போகம் மோக்ஷம், பகவத் ப்ரேமை பாகவத சிஸ்ரூஷை ஆகியவைகளை சுலபமாக அடைகிறார்கள். (97)

பகவத்கிருபை எனப்படும் பாக்ய விசேஷத்தால் ஸ்ரீ சீதா ராமனுடைய பவித்திரமான சரணங்களில் விழுந்து நான் நமஸ்கரிக்கிறேன். ஸ்ரீ ராமசந்திரனின் பரந்த கல்யாண குணங்களைப் பாடுகிறேன். அன்புடன் சரணமடைந்தவர்களைக் காப்பாற்றி அபயவரமளிக்கும் வரதன் அல்லவோ அவன். "ஹே ஸ்வாமி, ஸ்ரீ ஹரியினுடைய கீர்த்தி பிரபாவங்களைப் பாடிய மஹாநுபாவர்கள் அநேகமிருக்கின்றனர். (அவர்களில் என் ஆசாரியார்களான மஹாலக்ஷ்மி, உமாமஹேஸ்வரர்கள், கணபதியாகிற விஷ்வக்ஸேனர், குஹன், பிரும்மா, சாவித்திரி, வால்மீகி, நாரதர், வியாஸர், அகஸ்தியர், மார்க்கண்டேயர், சுகர், பராசரர்,

ஆழ்வாராதிகள், இந்திரன், சூரியன், சந்திரன் யமன், வருணன், குபேரன், அவர்களின் பத்னிகள், யாக்ஞ்ய வல்கியர், வஸிஷ்டர், விஸ்வாமித்திரர், பீஷ்மர், கருடன், மஹாஉரகன் என்கிற ஆதிசேஷன், துருவன், பிரஹலாதன், சுக்ரர், பிரஹஸ்பதி, ஆஞ்சநேயர், தர்மர் முதலிய பாண்டவர்கள், திரௌபதி, ஸப்தரிஷிகள், வைவஸ்தமனு அவருடைய மனைவியான சதரூபை, கம்பர், காளிதாஸன், தியாகராஜர், தீக்ஷதர், ச்யாம சாஸ்திரிகள், நம்பூதிரிபட்டர் ஆகிய) மஹானுபாவர்களால் வழிகாட்டப்பட்டு, அவர்கள் சென்ற நடைபாதையில் நானும் செல்லுகிறேன். இவர்கள் எல்லோரும் எனக்கு மங்களங்களைச் செய்யவேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன். (98)

ஒரு பெரிய வெள்ளப் பிரவாகமுள்ள நதியைக் கடந்து செல்லுவதற்கு நல்லதார்மிக மனமுள்ள அரசனால் கட்டப்பட்ட பாலம் உதவுகிறது. அதன் வழியாக சிறு எறும்புகளும் சுலபமாக அக்கரையை அடைந்துவிடுகின்றன. (அதைப் போல மேலே சொல்லப்பட்ட மஹாத்மாக்களான முனிவர்களுடைய ஹரிகீர்த்திகளின் வர்ணனை பிரபாவங்களை என் சாதனங்களாக வைத்துக்கொண்டு, ஸ்ரீராமசந்திரனுடைய அழகான கீர்த்திகளை நான் வர்ணிக்க ஆரம்பிக்கிறேன்) (99)

எனக்கு முன்னும், இனிமேல் வரப்போகும் காலத்திலும் அநேக பக்தர்கள் ஸ்ரீராமனுடைய பரந்த கீர்த்திகளைக் கானம் செய்வார்கள், செய்யத்தான் போகிறுர்கள். ஆகையினால் என் மனது திடமாக ஸ்ரீ ரகுநாதனுடைய அழகிய கதையை ரசனம் செய்ய விரும்புகிறது. எனக்கு முன்பாகவிருந்த வால்மீகி வியாஸர்களைப்போல இன்னும் அநேக கவிகள் இருந்தார்களே அவர்கள் எல்லோரையும் மிக்க மரியாதையுடன் வணங்கி, நான் ஸ்ரீ ஹரியினுடைய மங்கள கீர்த்திகளை கானம் செய்கிறேன். (100)

மிக்க பிரபாவம் வாய்ந்தவர்களும், என்னுடைய ஸத்குரு ஆசாரியர்களுமான அந்த மஹான்களை நான் அடிக்கடி சுக்ருத பிரணமம் செய்கிறேன். இவர்கள் என் ஆசைகளைப் பூர்த்தி செய்யட்டும். இந்த கலியுகத்தில் புங்கான புங்கமாகத் தோன்றி கல்யாண குணக்கடலாக விளங்கும் ஸ்ரீராமனுடைய சரித்திரத்தை வர்ணனை செய்த பெரும் கவிகளுக்கும் நான் அஞ்சலி செய்கிறேன். (101)

கபடமில்லாமலும், வஞ்சனையில்லாத மனத்துடனும், ஸ்ரீ ஹரியினுடைய மங்கள பிரபாவத்தை சாதாரணமாகப் பேச்சுப்போன்ற பிராக்ருத பாஷையில் எழுதியிருக்கிறேன்.

இதனால் முன்னேயும், இப்பொழுதும், இனி வரப்போகும் காலத்திலும் தோன்றுவிக்கும் சாமர்த்தியமுள்ள கவிகளுக்கு நான் நமஸ்கரித்து, என் குறைகளைப் பொறுத்து, என்னை அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கொள்கிறேன். (102)

"ஹே புத்திசாலியான வித்வான்களே, கவிகளே, நீங்கள் தயவுசெய்து கருணை உள்ளத்துடன் என்னைக் கிருதார்த்தனாக ஆக்கவேண்டும். சாதுக்களின் சமாஜத்தில் என்னுடைய காவியத்திற்கு மகிமை கொடுக்கவேண்டும். சாதுக்கள் என்னை ரக்ஷிக்காதபோனால் மூர்க்க கவியான ஒருவன் பரிஸ்ரமத்துடன் எழுதப்பட்ட இந்த காவியத்தை வியர்த்தமாக்கிவிடுவான். ஆகையால் சாதுக்கள் எனக்கு ரக்ஷணவரதானம் கொடுக்க வேண்டும்." (103)

எப்படி புனிதமான கங்கை தீர்த்தம் எல்லோருக்கும் நன்மையை விளைவிக்குமோ, அதைப்போல கீர்த்தி, கவிதை, சம்பத் ஐஸ்வர்யங்கள் ஆகிய எல்லாம் எல்லோருக்குமே நன்மையைப் பயக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஸ்ரீ ராமசந்திரனுடைய விசாலமான கீர்த்திகளும், அவனுடைய கல்யாண குணங்களை வர்ணிக்கும் கவிதைகளும், அதனால் ஏற்படும் மங்கள சம்பத்துக்களும் எல்லோருக்கும் ஏற்படட்டும் என்று நான் விரும்புகிறேன். என்னுடைய கவிதைகளில் குற்றங்கள் நிறைந்திருந்தபோதிலும், பல தோஷங்கள் உள்ளனவாக இருந்தாலும், அதனால் நான் வியாகூலப்பட்டுக்கொண்டு இருந்தபோதிலும், என் கவிதைகள் மேற்சொன்னபடி ஸ்ரீ ராமசந்திரனைப் பற்றியதானபடியாலும், (104)

சாதுக்களாகிய உங்களுடைய பரம அனுக்ரஹத்தாலும் என்னுடைய வ்யாகுலங்களும், பரிஸ்ரமங்களும் வ்யர்த்தமாகாமல் சுலபமாக நல்ல பலன்களைத் தருவதாகத் தோன்றுகின்றன. முரடான கித்தான் துணி கூட பட்டுத் துணியுடன் சேர்த்து அழகு செய்யப்பட்டால், எவ்வளவு நேர்த்தியாக விளங்குகின்றது என்று நான் சொல்லித்தான் தெரிய வேண்டுமா? (105)

சுலபமாகவும், எளிய பாஷையில் நிர்மலமான கீர்த்தியுள்ள சரித்திரம் ஒன்று வர்ணனை செய்யப்பட்டிருந்தால், அந்த சரித்திரத்தை சாமர்த்தியமுள்ள ஜனங்கள் மிக்க மரியாதையுடன் வரவேற்கிறார்கள். ஸ்வபாவமான சத்ருக்கள் கூட அந்த சரித்திரத்தைக் கேட்டு, தங்கள் பகையை மறந்து புகழவும் செய்கிறார்கள். (106)

ஒரு காவியத்தில் என்ன குறைகளாவது இருந்து விட்டு போகட்டும். ஆனால் அந்த சரித்திரமோ அல்லது கவிதையோ தெளிவான புத்தியினால் எழுதப்பட்டிருக்க வேண்டும். என்னிடமோ புத்தி சாமர்த்தியம் மிகக் குறைவு. இதை நான் அடிக்கடி கோஷம் செய்திருக்கிறேன். ஆகவே என்னிடம் தயை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன். "ஹே ஸாதுக்களே, ஸ்ரீ ஹரியினுடைய மட்டற்ற கீர்த்தியை நான் புகழும்படி கிருபையுடன் எனக்கு உத்தரவு தாருங்கள்." (107)

"ஹே கவிகளே, பண்டித ராஜாக்களே, ராம சரிதம் என்கிற மானஸஸரோவரில் சஞ்சரிக்கும் ஹம்ஸப் பேடுகளே, பாலகனுன என்னுடைய கோரிக்கைகளைக் கேட்டு ஆர்வம் அழகாய் உள்ளது என்று என்னிடம் தயை காட்டுங்கள்." (108)

ஆதி கவி என்று போற்றப்படும் வால்மீகி பகவானுடைய பாத கமலங்களை நான் நமஸ்கரிக்கிறேன். அந்த மஹா கவியினால் ஸ்ரீமத் ராமாயணம் முதன் முதலாக இயற்றப்பட்டது. கரன் என்கிற கடூரமான ராக்ஷஸனைப் பற்றி எழுதியிருந்த போதிலும், தூஷிக்கத் தகுந்த தூஷணன் என்கிற அரக்கனைப் பற்றி எழுதியிருந்தபோதிலும், அந்த மஹா காவ்யம் கோமள மாகவும், போற்றத் தகுந்ததாகவும் இருக்கிறது. (அதாவது கரன் தூஷணன் என்கிற அரக்கர்களை ராமன் வதம் செய்தான். அந்த சரித்திரங்கள் ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அரக்கர்களான கரன், தூஷணன், இவர்களைப்பற்றியிருந் தாலும், ஸ்ரீமத் ராமாயணம் இவர்களுடைய பெயர்களுக்கு ஹானி வரும்படி (கரன் - கரடுமுரடானவன்; தூஷணன் - குற்றங்கள் நிறைந்தவன்) சுந்தரமாகவும், கோமளமாகவும் விளங்குகிறது.) (109)

[தியானம்

தேவதேவ, பிரபோ, ராமா, உம்முடைய மஹிமைகளின் முடிவுகளை முற்றிலும் அறிந்தவன் பிறக்கவும் இல்லை. இனிப் பிறக்கப் போவதுமில்லை. தங்கள் நாமங்களே ஸ்ரயசை அளிக்க வல்லது என்று அறிந்த நான் அடிக்கடி தங்கள் நாமங்களை உச்சரிக்கிறேன். மூன்று உலகத்திற்கு மேலாக விளங்கும் ஸ்ரீ வைகுண்ட லோகத்தில் பிரகாசிக்கும் தங்களுடைய கல்யாண குணங்களைக் கூறும் சொற்களால் நான் ஸ்தோத்திரம் செய்கிறேன். ஹே அனாதியான புருஷரே, ஸர்வலோகேசா,

ஸ்ரீமானே, சகலலோகங்களும் உன்னால் சுகமும் நன்மையும் அடைகின்றன. ஸ்ரீவத்ஸத்தால் அலங்கரிக்கப்பட்டவனே, நித்ய ஸ்ரீ என்கிற மஹா லக்ஷ்மியினால் ஆஸ்ரயிக்கப்பட்ட மங்கள மூர்த்தியான ஸ்ரீமந் நாராயணரே, பக்தர்களுக்கு மங்களங்களைக் கொடுப்பவரே, வேத மூர்த்தியே, எப்பொழுதும் தயையுடன் என்னிடம் இருக்கவேண்டும்.]

ருக், யஜுர் ஸாம அதர்வண வேதங்களை நான் நமஸ்கரிக்கிறேன். அவைகள் சம்சார சாகரத்தின் அக்கரையை சுலபமாக அடைவிக்கக் கூடிய ஒரு ஓடத்தைப்போல விருக்கின்றன. அவைகள் ஸ்ரீ ராமனுடைய நிர்மலமானதும் சுபமான கீர்த்திகள் உள்ள கதையை வர்ணனை செய்வதில், ஸ்வபனத்தில் கூட களைப்பை அடைவதில்லை. (110)

படைப்புக் கடவுளான பிரும்மாவை நான் நமஸ்கரிக்கிறேன். அவரால்தான் சம்சாரம் என்கிற துக்க மயமான சமுத்திரம் படைக்கப்பட்டது. அந்த சமுத்திரத்தின் ஒரு கரையில் நன்மையைப் பயக்கும் அம்ருதமும், மனத்திற்கு ஹிதம் செய்யும் சந்திரனும், காமதேனுவும் உண்டாயின. மற்றொரு கரையில் துஷ்டமனுஷ்ய ரூபிகளான விஷம், மது எல்லாம் உண்டாயின. (111)

தேவதைகள், பிராம்மணர்கள், பண்டிதர்கள், கிரஹங்கள் ஆகியவர்களையும் நான் நமஸ்கரிக்கிறேன். அஞ்சலி பண்ணின என்னிடம் அவர்கள் கிருபையுடனும், சந்தோஷத்துடனுமிருக்க வேண்டும். என்னுடைய அழகான மனோரதங்களை அவர்கள் பூர்த்தி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். (112)

சரஸ்வதி தேவியையும், தேவ நதியான கங்கையையும் வந்தனம் செய்கிறேன். இந்த இரண்டு பேர்களும், பாபங்களைப் போக்க வன்மை உள்ளவர்கள். மனத்திற்குச் சந்தோஷத்தைக் கொடுப்பவர்கள். கங்கையின் ஜலத்தை ஒரு தடவை குடிப்பதால், பாபக் கூட்டங்கள் நசிக்கின்றன. சரஸ்வதி தேவியின் புகழை ஒரு தடவை பாடுவதால் அக்ஞானக் கூட்டங்கள் நாசமடைகின்றன. (113)

எனக்கு ஆசார்யர்களும், மாதா பிதாக்களுமான ஸ்ரீ பார்வதி தேவியையும் மஹேஸரையும் நான் நமஸ்கரிக்கிறேன். அவர்கள் தீனர்களின் பந்துக்கள். எனக்குச் சந்தோஷத்தை தினந்தோறும் தானம் செய்கிறவர்கள், சீதாபதியான ஸ்ரீ ராமசந்திரனுக்கு ஸேவகர்கள், யஜமானர்கள், பிரியமுள்ள

மித்ரர்கள். எனக்கும் துளசிதாஸருக்கும் பிரியமான ஆத்ம பந்துக்கள், சிநேகிதர்கள். (114)

[தியானம்

தாயே பவானி, சிவசக்தி பீஜாக்ஷரங்களை ஆரம்பமாகவும், காயத்ரி மந்திரத்தின் பரோரஜஸே ஸாவதாம் என்னும் நாலாவது பாதத்தைச் சேர்த்து சாதகர்கள் சித்தி பெறுவதுபோல, பஞ்சதசாக்ஷரமந்திரத்தின் நாலாவதாகிய சந்திரகலா கூடத்தை ரமாபீஜமாகிய "ஶ்ரீம்" என்றுடன் சேர்த்து, சாதகர்கள் ஷோடசாக்ஷிரி என்கிற மந்திரத்தின் அதி தெய்வமாக விளங்கும் உன்னை, ஆராதிக்கிறார்கள். வாக்பவ கூடம், காமராஜ கூடம், சக்தி கூடம், சந்திரகலா கூடம் ஆகிய ஸ்வரூபங்களாக விளங்குபவளும், ஜாக்ரதா, ஸ்வப்னம், சுஷுப்தி, துர்யாவஸ்தை களில் ரஹஸ்யமான வித்யையின் பலனை உடையவளும், லோபா முத்ரையினால் சதா அர்ச்சிக்கப்படுகிறவளும், பூர்ண சந்திரன் போல அழகுடன் புன்சிரிப்பால் சிறிது மலர்ந்த பல் வரிசைகளை உடைய வதனமும், சந்திர கலையை கிரீடமாக அணிந்திருப்ப வளும், மன்மதனை எரித்த மஹாதேவனுடைய கண்களாகிற தேன் வண்டுகள் மயங்குகின்றனவோ என்று சொல்லும்படி அப்படிப்பட்ட அமிருதம் ஒழுகும் குளிர்ந்த பார்வையால் நீ ராமனிடம் சிபார்சு பண்ணி, என்னைக் காக்க வேண்டும்.]

லோக குருக்களான சிவ பார்வதி தம்பதிகள் கலியுகத்தின் சிரமத்தைக் கண்டு உலகத்திற்கு நன்மை பயக்க வைக்க த்வனி களால் யேற்படும் ஸாபர் ஆகிற மந்திரக் கூட்டங்களை ஸ்ருஷ்டித் தார்கள். அந்த மந்திர பீஜாக்ஷரங்களின் அர்த்தங்களைச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியாத போதிலும் அந்த மந்திரங் கள் ஜபிக்கப்படாத போதிலும், மஹேஸ்வர தம்பதிகளின் பிரதா பங்களால் அவைகள் சிறந்து விளங்குகின்றன. ஆகவே உமா மஹேஸ்வரர்களின் மகிமைகளை அறிந்து கொண்டு அவர்களை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். (நான் இந்த விடத்தில் ஷோட சாக்ஷரி என்கிற மந்திரத்தைச் சொல்வதாக பாவனை செய்துள் ளேன். இந்த மஹா மந்திரம் ஶ்ரீ வித்யையின் ஆதாரமந்திர மாகவுமிருக்கிறது.) (115)

லோக குருக்களான உமா மஹேஸ்வரர்கள் என்னிடம் பிர ஸன்னமாகி, ஶ்ரீ ராம சரித மானஸம் என்கிற இந்த காவ்யத்தை அனுக்ரஹித்து, ஆனந்தத்தையும் மங்களங்களை அளிக்கும் சௌபாக்யத்தையும், அருள் செய்வார்களாக. இந்த நினைவில்

நான் பார்வதி பரமேஸ்வரர்களை ஸ்மரணை செய்துகொண்டு, அவர்களின் மஹா பிரசாதத்தை அடைந்து மன உருக்கத்துடனும் பக்தி வினயத்துடனும் இந்த கதையை வர்ணனை செய்ய ஆரம்பிக்கிறேன். (116)

பகவான் ஸ்ரீ சிவனுடைய கிருபையால் என் கவிதைகள் சோபிதமாக விளங்கும். தாரா கணங்களின் சேர்க்கையை அடைந்த சந்திரனுடைய பிரகாசத்தால் ராத்திரி எவ்விதம் சோபையை அடைகிறதோ, அவ்விதம் உமா மஹேஸ்வரர்களின் பிரசாதத்தால் என் கவிதையும் சோபிதமடையும். இந்தக் காவியத்தைப் பிரேமையுடனும், நிதானமாகவும் நாம் எல்லோரும் அறிந்தும், பிறருக்குச் சொல்லியும் கலியுகத்தின் பாபங்களைப் போக்கிக் கொள்ளுவோம். மங்களமுள்ள சௌபாக்யங்களையுமடைந்து, இறுதியில் ஸ்ரீ ராமசந்திரனுடைய சரணங்களுக்குப் பிரேமை பாத்ரங்களாக நாம் ஆவோம். (117)

என்னிடம் என் பிரிய நாயகர்களான உமா மஹேஸ்வரர் தம்பதிகள் கிருபை கூர்ந்து, ஸ்வப்னத்தில் கூட உண்மையாகப் பிரஸன்னமானுர்கள் என்பது நிச்சயமானுல், சாதாரண பாஷையில் எழுதப்பட்ட இந்த காவியம் மிகச் சிறந்த பிரபாவத்தை அடையட்டும். (118)

அதிக பவித்திரமான ஸ்ரீ அயோத்யா புரியையும், கலியுகத்தின் பாபக் கூட்டங்களை நாசம் செய்கிற ஸ்ரீ சரயு நதியையும் நான் அடிக்கடி நமஸ்காரம் செய்கிறேன். அந்த இடத்தில் வசிக்கும் ஆண் பெண் எல்லோருக்கும் நமஸ்கரிக்கிறேன். இவர்கள் ஸ்ரீ ராமசந்திரனுடைய கிருபையைப் பரிபூர்ணமாகப் பெற்றவர்கள் அன்ருே! அதனுல் அவர்களுக்கு பாக்கியப் பெருமைகள் அபாரமாகவிருக்கின்றதல்லவா ? (119)

அப்பேர்பட்ட மஹா ஜனங்கள் சீதா தேவியை நிந்தித்துப் பேசி பாபத்தை மீண்டும் சம்பாதித்ததும், பரம தயாளுவான பிரபு, ஸ்ரீ ராமன் அதனுல் ஏற்பட்ட அந்த பாபக் கூட்டங்களை நாசம் பண்ணி, அவர்களை சோகமில்லாமலும் பாவமில்லாமலும் பிரபு செய்து, ராம பதம் என்கிற உத்தமஸ்தானத்தை அவர்களுக்குக் கொடுத்தார். அப்பேர்பட்ட மங்களகரனுக விளங்குபவரும், கௌஸல்யைக்கு ஆனந்தத்தையும், கீர்த்தியையும் சகல உலகங்களிலும் பரப்பின உதாரஹ்ருதயமுள்ள கௌஸல்யா ராமனை கிழக்கு நோக்கி நான் நமஸ்கரிக்கிறேன். (120)

கௌசல்யா குமாரனுன ஸ்ரீ ராமன் ஜகத்திற்கு சுகத்தை அளிப்பதற்காகவும், துஷ்டர்களை அடக்குவதற்காகவும் அவதரித்

தார். அவர் துஷ்ட ரூபிகளான தாமரை மலர்களை குவிய வைக்கும் சந்திரனைப் போல விளங்கினுர். ராஜா தசரதரையும், அவருடன் கூடவிருந்த ராணிமார்களையும், புண்யமானதும், அழகானதும் மங்களங்களைத் தருவதுமாகிற மூர்த்தி ஸ்வரூபங்கள் என்று நினைத்து மனம் வாக்கு தேகத்தினுல் செய்யப்பட வேண்டிய பிரணுமங்களால் நமஸ்கரிக்கிறேன். அவர்கள் என்னைத் தங்கள் புத்ரர்களின் தாஸன் என்று நினைத்து ஸ்வீகரித்து கிருபையுடன் இருக்கவேண்டும். (121)

அயோத்யா ராமனுக்கு தாய் தகப்பனுன கௌசல்யா தேவி, தசரதர் ஆகியவர்கள் உத்தம மகிமைகளைப் பெற்றவர்கள். அவர்களைப் படைத்ததினுல் பிரும்மா தனது ஸ்ருஷ்டியின் பெருமைகளை உயர்த்திக் கொண்டார். அப்பேற்பட்ட மஹா கீர்த்திகளைப் பெற்ற தசரதர் கௌசல்யாதேவி சுக்ருதம் மங்களங்கள் அநேகம் பெற்ற உத்தம மூர்த்தி ஸ்வரூபங்கள் அன்ருே? அவர்களின் மகிமைகளைச் சொல்லித் தீர்க்கவும் முடியாது. (122)

நான் அயோத்யாபுரியின் சக்ரவர்த்தியாகிய ஸ்ரீமான் தசரதருக்கு வந்தனம் செய்கிறேன். அவர் மிக்க பாக்யவான். ராமச்சந்திரனுடைய மங்கள சரணங்களில் உண்மையான பிரேமை உள்ளவர். தீனதயாளுவான பிரபுவின் பிரிவினுல் தனக்குப் பிரியமுள்ள சரீரத்தை சாதாரண புல்லைப்போல சுலபமாகத் தியாகம் செய்த மஹானுபாவன் அல்லவா தசரத மஹாராஜர்?

(123)

[தியானம்

ஹே ஸ்ரீ நாதா, ராமதாஸரான தியாகராஜரின் ஆப்தமானவனே, பாரத தேசத்தின் நாபியான திருவாரூல் பிறந்து வால்மீகி பகவானின் அம்சம் என்று கருதப்படும் தியாகராஜரே, நாத ஸ்வரூபமாக வளர்ந்து, ராமபக்தர்களுக்குச் சிறந்த தாமரை புஷ்பம்போல மணம்கொண்டு விளங்குபவரே, அந்த புஷ்பத்தை நாத உபாஸகர்கள் உலகமாகவும், ஸ்வர, லயபாவ மூர்ச்சனை அந்த புஷ்பத்தின் இதழ்களாகவும், ராமபக்தி என்கிற சாம்ராஜ்யத்தை மேருமலை போன்ற மொட்டாகவும், சம்சார பயங்களைப் போக்கவல்ல ஸ்ரீராம நாமத்தை அந்த புஷ்பத்தின் தேன் போன்ற அமிர்த ரஸமாகவும் கூறுகிருர்களன்ருே?]

(ஹே ரகு நாயகா, சேஷ சயனத்தில் படுத்துறங்குபவரே, மனத்தினுல் ஸ்மரிக்கமுடியாத உன் அழகைப் பார்க்கமுடியாத போனுல் இந்த கண்களால் என்ன பிரயோசனம்? நீ ஆஞ்ச

நேயரைத் தழுவினதுபோல, உன்னால் நான் தழுவப்படாமல் போனால், இந்த உடம்பினால் என்ன பிரயோசனம்? உன்னைத் தியாகராஜர் போன்ற மஹான்கள் புஷ்பம், வாசனையுள்ள கீர்த்தனம் என்கிற ராகரத்ன மாலைகளால் அர்ச்சித்து இன்புற்றது போல அர்ச்சனை பண்ணாத கைகளால் என்ன லாபம்? உன்னை நாரதர், வால்மீகி போன்ற மஹான்களால் ஜபிக்கப்பட்ட ராம நாமம் என்கிற ரஸம் பொருந்திய திவ்ய நாமாவைக் கூறாது போனால் என் நாக்குக்கு என்ன பாக்ய லாபம் மிகச் சிறந்ததாக விருக்கும்? துருவனுக்கு மேலான பதத்தையும், பிரஹ்லாதனுக்கு பரமாபக்தியையும் சுகாச்சாரியருக்கு மேலான ஆனந்தத்தையும் கொடுத்ததைப்போல, எனக்கும் உன் பெருமையையும், உன் கருணையையும், பக்தியையும், நிஜஸ்வரூபத்தையும் உன்னையே என் பெரும் தனமாக நீயே மனமுவந்து எனக்கு அளிக்கவேண்டும். நானும் உன்னை சாந்தமாயும், சௌக்கியமாயும் அனுபவிக்கவேண்டும். என் தாயான கிரிஜாவும், லோக பிதாவும் குருவுமான மஹேஸ்வரனும் எனக்கு அருள்புரிய வேண்டும்.)

(வேத வியாஸரால் அனுப்பப்பட்ட சுகாசார்யருக்கு ஆத்ம உபதேசம் செய்த ஆசார்யரும், கர்மம், ஞானம் என்கிற பிரவாஹத்தில் மேருமலை மாதிரி சிறந்த மலையாக விளங்குகிறவரும், மிதிலையின் அதிபரும், ஜிக்ஞாஸங்களில் தேர்ச்சி பெற்றவரும், ராமரின் பிரியமான மனைவியாகிய சீதை எந்த ஜனக குலத்தில் பிறந்து, அந்த குலத்திற்கும் அந்த மிதிலா தேசத்திற்கும் சிறந்த கீர்த்தியை அடைவித்தாளோ அந்த மிதிலா தேசத்தை அடைந்தவரும், தசரதருடைய சம்பந்தியுமான) ஜனகமஹாராஜரை பரிவாரசஹிதம் நான் நமஸ்கரிக்கிறேன். அவருக்கு ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதசரணங்களில் அத்யந்தப்ரேமை மறைவாக விருந்தது. அவருடைய யோகத்தின் மகிமையும், போகத்தில் வெறுப்பும் ஸ்ரீராமச்சந்திரனைப் பார்த்த மாத்திரத்தில் வெளி உலகினருக்கு பிரகடனப்படுத்தப்பட்டதல்லவா? (124)

தம்பிமார்களுள் எல்லோருக்கும் முதலில் பரதனுடைய பாத சரணங்களை நான் நமஸ்கரிக்கிறேன். நியமத்தாலும், ராமபக்தி என்கிற விரதத்தாலும் பிரகாசித்த பரதனைப்பற்றி நான் முழுவதும் வர்ணனை செய்ய முடியாது. அவருடைய ஆத்மா, ராம சரணங்கள் என்கிற தாமரை மலரிலிருந்து பெருகும் தேனின் ரஸத்தைப் பருகுவதற்கு ஓடிவரும் ஈக்களைப்போல, சதா ஆனந்தத்தை அடைந்ததல்லவா? (125)

(லக்ஷ்மிவர்த்தனனும், ராமகைங்கர்யமே தன் தனமாகக் கொண்டவனும், ஆதிசேஷனின் அவதாரமுமான) லக்ஷ்மண னுடைய பாதங்களில் விழுந்து நான் நமஸ்கரிக்கிறேன். குளிர்ந் தவரும், அழகான லக்ஷணங்களை உடையவரும், பக்தர்களுக்கு மிக்க சந்தோஷத்தையும் சுகத்தையும் அளிப்பவரும், ராமச் சந்திரனுடைய விமலமான புகழ் கீர்த்திகளாகிற த்வஜத்திற்கு தண்டு போன்றவரும், மிக்க பாக்யமுள்ளவரும், சுமித்திரைக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுவருமான லக்ஷ்மணரை நான் நமஸ்கரிக்கிறேன். (126)

ஆயிரம் தலைகள் உள்ளவரும், அவைகளினால் பூமியைத் தாங்குபவருமான சேஷ பகவான் இந்த உலகத்தில் ஏற்படும் பாப பயங்களை விலக்குவதற்காகவும், என் போன்ற எளிய மனிதர்கள் சுகமாக வாழ்வதற்காகவும் இந்த பூமியில் அவரிதத் தார். அவர் கிருபா சமுத்திரம். சுமித்திரையின் புதல்வர்களில் மூத்தவர். குணங்களின் சிறந்த அம்சங்களைப் பெற்றவர். அவர் எனக்கு தன்னுடைய ஸ்ரீமுகத்தினால் கிருபை செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். (127)

லக்ஷ்மணருக்கு இளையவரும், சத்ருக்களை நாசம் செய்கிற வருமான சத்ருக்னனை நான் நமஸ்கரிக்கிறேன். அவர் மிகச் சிறந்த வீரர். நல்ல சீலத்தை ஆபரணமாகக் கொண்டவர். பரதனுக்கு அனுசரணையாக பாகவத உள்ளம் பெற்றவர். அதன் பிறகு, மஹாவீரர் என்று சொல்லப்படுபவரும், ஸ்ரீராமனாலும் சீதையினாலும் மதுரமான வாக்குக்களால் புகழப்பட்டவரும், (சிவசக்தியின் ஐக்ய ஸ்வரூபமாக விளங்குவதால்) சீதாராமனின் பரிபூர்ண கடாக்ஷ அனுக்ரஹம் பெற்றவரும், (அஞ்சனாதேவி யிடம் வாயு பகவானால் உண்டாக்கப்பட்டவரும், என் குருநாத ரும், மிக்க அனுபவமுள்ளவரும், தேர்ந்த ஞானியும், நாதஸ்வ ரூபமுள்ளவரும்,) ராமனாலும் சீதையினாலும் மிக்கப் புகழப்பட்ட வருமான ஹனுமாரை நான் நமஸ்கரிக்கிறேன். (128)

வாயு புத்ரனான ஹனுமாரை நான் மீண்டும் மீண்டும் நமஸ் கரிக்கிறேன். துஷ்டர்கள் என்கிற லங்காவனத்திற்கு பஸ்மம் பண்ணுகிற அக்னியைப் போன்றவர். நவவ்யாகரண பண்டிதர். அவருடைய ஹ்ருதயாகாசத்தில் சீதாராமன் கோதண்டபாணி யாக சதா வசித்துக்கொண்டிருக்கிறார் அல்லவா? (129)

[தியானம்

ஹே, ஸஹஸ்ர பாஹோ, விஸ்வமூர்த்தே, நீ சாங்கிய சாஸ்திரத்தின் இருபத்தைந்தாவது பொருள் என்றும், யோகசாஸ்திரத்தின் இருபத்தாருவது பொருள் என்றும் கொண்டாடப்படுகிருய். ஜீவனைக் காட்டிலும் வேருனதுமான எந்த ஸ்ரீ விஷ்ணு பகவானின் ஸ்வரூபம் என் ஹ்ருதயத்தில் சதா இருக்கிறதோ, அதை நான் அறிந்தும், பனிபோல் வியாபித்திருக்கும் மாயையால் மறைக்கப்பட்டு, மோஹத்தை அடைந்தவனாக வல்லவோ நான் கஷ்டப்படுகிறேன். உன்னிடத்திலேயே நான் மிக்க களிப்புற்று, காம்யகர்மங்களைச் செய்துகொண்டு, முகுந்தனான உன்னிடத்தில் சதாத்யானம், அர்ச்சனம், வந்தனம், பாதஸேவனம், கீர்த்தனம், ஸக்யம் முதலாகிய அங்கங்களாகிற பக்தியே எனக்கு எப்போதும் இருப்பதில்லையே. ஆ! கஷ்டம். இந்த உலகில் ஞானம், கர்ம, பக்தி என்கிற மூன்று மார்க்கங்களும் தங்களை அடையவேண்டிய மார்க்கங்கள் என்று சிலாகிக்கப்படுகின்றன. நாரதர், பிரஹ்லாதன், அர்ஜுனன், துருவன், ஆஞ்சநேயர், தியாகராஜர், துளசிதாஸர் போன்ற மஹான்கள் இந்த மார்க்கங்களின் ஸாரம் என்கிற சரணாகதி என்னும் மார்க்கத்தை அவலம்பித்து, வேறு ஒரு வஸ்துவிலும் பற்றுதல் இல்லாமல், உன்னுடைய சரித்திரம், உன்னுடைய கைங்கர்யம், பக்தி ஆகியவைகளில் ஆசைவைத்து, தங்கள் வாழ்நாட்களை கடத்திவிட்டிருக்கிறார்கள். இப்பேற்பட்ட உத்தம ஆசரணைகளுக்குச் சிறந்த உதாரணமானவரும், ஆதிசேஷனின் அவதாரமும் எனக்கும், என்னைப்போன்ற தீனர்களுக்கு ஆசாரியரும், பரந்த ஹ்ருதயமுள்ளவருமான ஸ்ரீமத் ராமாநுஜரை நான் நமஸ்கரிக்கிறேன். அவருடைய அருளால் விஸ்வமூர்த்தியான உம்மை நான் நமஸ்கரித்து, உமது கருணையை வேண்டுகிறேன்.]

ராம பக்தர்களில் சிறந்தவரும் ஸ்ரீராமனுக்குக் கைங்கர்யம் செய்யும் பாக்யம் பெற்றவரும், வானரர்களுக்கு ராஜாவான சுக்ரீவருக்கும்; திருவிக்ரம அவதாரத்தில் பகவானுடைய வெற்றியை பிரகடனப்படுத்தி, அவரை வலம் செய்து சிறந்த புண்ணியத்தை அடைந்தவரும் கரடிகளின் அதிபதியான ஜாம்பவானையும், [விஷ்ணுபகவான் பிரஹலாதனுக்குக் கொடுத்த வரத்தின் ஸத்திய சின்னமாக விளங்குபவரும்,] ராக்ஷஸர்களின் ராஜாவும், (சிறந்த போகங்களையும் மங்களங்களையும் அளிக்கும் ஸ்ரீரங்கராஜனுடைய சிறந்த பக்திமானாகிய] வீபீஷணனுக்கும், வானர யுவராஜாவான அங்கதனையும், ஸ்ரீராம காரியத்தில் கைங்

சுர்யம் செய்யும் பாக்கியம் பெற்றவர்களும் ராமருக்குப் பிரியமான மித்திரர்கள் என்று ராமனால் ஸ்வீகரிக்கப்பட்ட வானரக் கூட்டங்களையும் நான் நமஸ்கரித்து, அவர்களுடைய அழகான சரணங்களில் என் பக்தி வினயத்தை சமர்ப்பிக்கிறேன். (130)

இப்பேற்பட்ட மஹான்கள் தாழ்ந்த ஜன்மங்களை அடைந்த போதிலும், ஸ்ரீராமச்சந்தரனுடைய மேலான சிநேகத்தைப் பெற்றார்களல்லவா? இதற்கு வேடர்களின் அரசனான குஹனும் சிறந்த உதாரணம் என்று சொல்லப்படுகிறானல்லவா? (131)

பசு, பக்ஷி, தேவதை, மனுஷ்ய, அசுரக் கூட்டங்கள் ஆகிய எல்லா ஜாதிகளிலும் ஸ்ரீராமனுடைய சரணங்களே பெரும் தனம் என்று கருதுகின்ற பக்திமான்கள் நிறையப்பேர்கள் இருக்கிறார்கள். அந்த மஹானுபாவர்கள் அனைவரின் சரண கமலங்களையும் பற்றிக்கொண்டு நான் வந்தனம் செய்கிறேன். இன்னும் ஸ்ரீராமபக்தியே நிஷ்காமமாகச் செய்யும் பக்திமான்களுக்கும் நான் நமஸ்கரிக்கிறேன். (132)

எனக்கு பக்தி மார்க்கத்தில் ஆசார்யர்களாக விளங்கும் சுக தேவர், ஸனகாதி முனிவர்கள், நாரதாதி தேவரிஷிகள் முதலியவர்களுக்கும், இன்னும் பக்தியுள்ள ஞானிகளுக்கும், முனிவர்களுக்கும் பூமியில் விழுந்து பூர்ண அங்கங்களுடன் நான் நமஸ்கரிக்கிறேன். "ஹே, மஹரிஷிகளே, என்னிடம் கிருபைகூர்ந்து, என்னை உங்கள் தாஸன் என்று கருதி அனுக்ரஹிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். (133)

ஜகஜ்ஜனனி என்கிற மங்கள கீர்த்தியை உடையவளும், ஜனகமஹாராஜரின் சிறந்த புத்திரியும், ஸ்ரீராமனுடைய அந்தரங்கபாரியையுமான ஜானகி தேவியினுடைய சரண கமலங்களுக்கு நான் நமஸ்கரித்து, தாழ்மையுடன் வேண்டிக்கொள்கிறேன். அவளுடைய கிருபையால் எனக்கு நிர்மலமான புத்தியும், மனத்தெளிவும் உண்டாகவேண்டும். (134)

பிறகு மனம், வசனம், கர்மம் ஆகிய இதழ்கள் அடங்கிய பக்தியுடன் கமலநயனனும், கோதண்டபாணியும், பக்தர்களுடைய விபத்துக்களை நாசம் செய்து அத்யந்த சுகத்தைக் கொடுக்கும் வள்ளல், சர்வசமர்த்தர், என் பிரபு, பகவானான ஸ்ரீராமச்சந்திரனுடைய சரணகமலங்களில் நான் நமஸ்கரிக்கிறேன். (135)

சொல்லும் அர்த்தமும், ஜலமும் அதன் அலையும், பார்ப்பதற்கும் சொல்லும் சமயத்திலும் தனித்தனியாகவும் பின்னமாக

வும் தோன்றுகின்றன. ஆனால் அவைகள் வாஸ்தவத்தில் ஒன்றாக இணைந்து பின்னமில்லாதபடி காடோபகூடச் சேர்க்கை யாக நிலைத்து நிற்கின்றன. அதேபோல ஏகதத்வமாக காடோப கூடச் சேர்க்கையாக விருப்பவர்களும் நித்ய தம்பதிகளாக விருக்கும் சீதாராமனுடைய பவித்திரமான சரணங்களில் நான் அடிக்கடி வந்தனம் செய்கிறேன். அந்த உத்தம சரணங்கள் தீனர்களுக்கும் பரம துக்கத்தை அனுபவிப்பவர்களுக்கும் சுகத்தையும் சாந்தியையும் அளிக்கும் பரம ஆப்தமான சிநே கிதர்களன்றோ? (136)

[தியானம்

ஹே சீதாராமா, ஸேதுவை பந்தனம் செய்த மஹாவீரனே, மிகச் சிறியதான மனத்திற்குள்ளேயும், மிகப் பெரியதான உலகம் முழுவதிலும் நிரம்பி அதையும் தாண்டியும் வியாபித்து பரமபுருஷனாக விளங்கும் தயாளுவே, அயோத்யாபுரிவாசி களுக்கு மோக்ஷ சுகத்தை, தகுதியில்லாத போதிலும், கொடுத்த மஹானுபாவா, சுக்ராசாரியார் அசுர சிஷ்யர்களுக்கு உபதேசித்த தும், ஸப்த ரிஷிகள் துருவனுக்கு உபதேசித்ததுமான பரம குஹ்யமான "ஓம் நமோ பகவதே வாசுதேவாய சுத்த ஞான ஸ்வரூபிணே" என்கிற த்வாதச மந்திரத்தின் பொருளாகவும், ஞான ஸ்வரூபமாகவும் அல்லவோ நீர் விளங்குகிறீர். இவ்விதம் தாங்கள் உலகில் எல்லாமாக இருப்பதற்கும் தங்களுடைய மகிமைதான் காரணமாகும். அப்பேற்பட்ட ஆனந்தம் நிறைந்த மயமாக விளங்கும் தங்களுடைய வாசுதேவ மூர்த்தியை நான் அடிக்கடி வணங்குகிறேன்.]

ஹே ரகுநாதா, உன்னுடைய ராமநாமத்தை வந்தனம் செய்கிறேன், அக்னி, சூரியன் சந்திரன் ஆகிய மூவர்களுக்கும் ஹேது பீஜாக்ஷரங்களான "ர" "ஆ" "ம" என்கிற மூன்று எழுத்துக்களின் ரூபமாக இருக்கிறீர் அல்லவோ? அந்த ராம நாமம் பிரஹ்மா விஷ்ணு சிவன் ஆகியவர்களின் ஸ்வரூபமாக இருக்கிறதல்லவா? அந்த நாமமே வேதத்திற்குப் பிராணன் அல்லவா? "ஹே பிரபு, நீர் நிர்குணர் என்றும், குணரஹிதர் என்றும் சொல்லப்படுகிறீர். உம்மையே உமக்கு உபமான மாகவும் உமக்கே உரியதும், மிக்க அழகானதும் காதுக்கு இனிமையானதும், கண்களுக்கு இன்பமாகவும், மனத் திற்கு குளிர்ச்சியாகவும் ஆகிய எல்லாம் ஒன்று சேர்ந்து குணக் கடலாகவும் நீர் விளங்குகிறீர் அல்லவா?" (137)

அந்த "ஸ்ரீராம்" என்கிற மகாமந்திரத்தை மஹேசர் நாத ரூபமாக ஜபித்துக்கொண்டு ஆனந்தத்தை சதா அனுபவித்துக்கொண்டிருக்கிருர். அந்த மஹா மந்திரத்தின் வீர்யத்தால் அவர் காசியில் மரித்துப்போன ஜீவனுக்கு முக்தியை அளிக்கிருர்; எந்த மந்திரத்தின் ரகசியத்தைத் தெரிந்து உணர்ந்துகொண்ட கணேசர், உன் பாதகமலங்களே மனத்தில் தரித்துக்கொண்டு தானும் ஆனந்தமடைந்து, உனது நாமத்தை நாரதரின் உபதேசத்தால் முதலில் வலம்வந்து அன்றும் இன்றும் என்றும் "முதல் கடவுளாக" நம் எல்லோராலும் வணங்கப்படுகிருர் அல்லவா? (138)

ஆதிகவியான வால்மீகி பகவான் ராமநாமத்தின் பிரதாபத்தை முற்றிலும் அறிந்தவரல்லவோ? மாருக "மரா" என்று உன் நாமத்தை ஜபம் செய்து, எவ்வளவு பவித்திரமான ஸ்ரேயசை அவர் அடைந்திருக்கிருர்? இப்பேர்பட்ட மஹா மகிமைகளேக்கொண்ட ராம நாம மஹாமந்திரத்தை பரம சிவனுடைய உபதேசத்தினுல், ஒரே ஒரு தடவை ராம நாமத்தை ஜபிப்பதால் விஷ்ணு பகவானுடைய மங்களமான ஆயிரம் நாமாக்களுக்குச் சமம் என்று கேட்டு விஸ்வாசம் செய்து, என் தாயான பார்வதி தேவி எப்பொழுதும் சம்புவின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு ராம நாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கிருள் அல்லவா? (139)

அவ்விதம் ஜபித்து, சந்தோஷத்தைப் பெறும் மிக்க பாக்யவதியான உமையினுடைய அன்பைக்கண்டு ஹரனுன சம்பு ப்ரேமையினுல் ப்ரீதி அடைந்து, ஸ்திரி வர்க்கங்களின் ரத்னமாக விளங்கும் பார்வதி தேவியை தன் சிரோ பூஷணமாக அலங்கரித்துக்கொண்டார் அல்லவா? அவளுடன் ஐக்யமாகி அவளேத் தாரணமும் செய்து கொண்டாரே. ஹே சீதாராமா, உன்னுடைய நாமத்தின் பிரபாவத்தை பரமசிவன் அல்லவோ பூர்ணமாக அறிகிருர். அந்த பிரபாவத்தினுல் அல்லவோ, கால கூட விஷமானது அவருக்கு அம்ருதத்திற்கு ஒப்பானதாக இருந்தது. (140)

[தியானம்

ஹே சீதாராமா, உன் நாமத்தின் ஸ்வரூபத்தையோ, வீர்யத்தையோ, அறியவும் சொல்லவும் எவ்வளவு யுகங்கள் ஆனுலும் முடிகிறதில்லே. உங்கள் இரண்டு பேர்களேயும் நிர்குண ஸ்வரூபமாகவோ, அல்லது சுத்த ஞான ஸ்வரூப

மாகவோ அல்லது சுத்த ஸத்வமாகவோ காண்பதும், அறிவதும் முடிகிறதில்லை. ஆனால் உங்களுடைய புன்சிரிப்பாகிய சிறிது மலர்ந்தாற் போன்றதும், அழகான பல்வரிசைகளுடன் கூடியதும், கேஸங்களுடன் பிரகாசிப்பதும், நல்ல மண முள்ளதும், எந்த கமலங்களாகிய முகங்களை, தேன்வண்டு களால் நிரம்பினதும், மேல் நோக்கின தாமரைக் கண்களுள்ள சீதாதேவியும், ராமா, உங்களைப்பார்த்த மந்த புத்தியுள்ள என் போல இருப்பவர்களும் போதையினால் மயங்குகிறார்களல்லவா? அப்பேற்பட்ட ஸ்பஷ்ட ரூபமாக உங்கள் இருவர்களின் ஐக்ய ரூபத்தை எப்போதும் என் முன் நான் காணவேண்டும். சுருட்டையானதும், சிறு வண்டுகள் சஞ்சரிப்பது போன்ற சோபையை உடையதும், கரதூஷணுதிகளின் வதத்தின்போது, தலைமயிர்கள் கண்களை மறைத்த சமயம், பிடறியை சிம்மம் போல சிலிர்த்ததினால் முன் நெற்றி மயிர்கள் விலக்கப்பட்டு, தனிப்பட்ட சோபையை எந்த ஜானகியும், லக்ஷ்மணரும், தியாகராஜரும் கண்டு களித்தார்களோ, அப்பேர்பட்ட அமிர்த ரஸத்தின் கடலினுடைய அலைகள் போன்ற தங்களுடைய கேசவ ஸ்வரூபம் என்முன் எப்போதும் பிரகாசிக்கட்டும். உங்கள் இருவர்களுடைய சிறந்த கல்யாண குணங்களால் என் மனம் கவரப்பட்டு, ஆனந்தத்துடன் உங்களுடைய ஐக்ய மூர்த்தியை முழுமையாய் நான் ஆஸ்ரயிக்கிறேன். ஹே நாராயணு, லக்ஷ்மிபதி, என்னை நீங்கள்தான் எல்லாவித ரோகங்களி லிருந்தும் க்லேசங்களிலிருந்தும் காப்பாற்றவேண்டும்.]

ஸ்ரீரகு நாதனிடமுள்ள பக்தி மழைக்காலம் போலுள்ளது. அவருடைய உத்தம பக்தர்கள் அரிசியைப்போன்ற தானியங்கள். அதற்கு இரண்டு அக்ஷரங்களடங்கிய ராம நாமம் ஆவணி, புரட்டாசி மாதங்கள் போல இருக்கின்றன, என்கிறார் துளசிதாஸர் (141)

இரண்டு அக்ஷரங்கள் மதுரமாகவும் மனோஹரமாகவு மிருக்கின்றன. ''ராமா, சீதா, உங்களிருவர்களுடைய புண்ய கீர்த்திகளை வர்ணிக்கும் கதைகளுக்கு நேத்ரங்கள் போலவிருக் கின்றன. பக்தர்கள் ஜீவிப்பதற்கு ஆதாரமாக விருக்கின்றன. சகலருக்கும் ஆனந்தத்தையும் சுகத்தையும் மோக்ஷத்தையும், கைங்கர்ய பாக்யத்தையும் அளிக்கின்றன.'' (142)

இந்த மதுரமான இரு அக்ஷரங்களை நினைப்பதற்கும், ஜபிப்பதற்கும், தாரணை செய்வதற்கும் ரொம்ப சுலபமாகவும் அழகாகவுமிருக்கின்றன. எழுத்துக்களுக்குள்ளே இந்த இரு

எழுத்துக்களும் கண்கள்போல விருக்கின்றன. பக்தர்களுக்கு இந்த இரு அக்ஷரங்களும் குலதனமாகவும் ஜீவனமுமாக விருக்கின்றன. துளசிதாஸர் சொல்லுகிருர் "எனக்கு ராமனும் லக்ஷ்மணனும் எப்படிபிரியமாக விருந்தார்களோ, அதைப்போல ஒன்றுக்கொன்று மிகப்பிரியமாக விருக்கின்றன." தனித்தனியாக பிரித்து அக்ஷர பதங்களாகிற "ரா" "ம" என்று சொன்ன போதிலும்கூட, அதாவது பீஜமந்திரத்தின் திருஷ்டியினுல் இப்பதங்களின் உச்சரிப்பு, அர்த்தம் அவைகளின் பலன்கள் தனித்தனியாக அடையப்பட்டபோதிலும் கூட, இயற்கையாகவே சேர்ந்துள்ள இந்த ராம நாமத்தின் இரு அக்ஷரங்களின் சேர்க்கை, ஜீவஸ்வரூபம் பிரும்ம ஸ்வரூபமாகிய இரண்டும் ஒரே ரூபத்துடனும், ஒரே ஆனந்த ரஸமாகவும் தோன்றுவிப்ப தாக இருக்கிறது. (143)

எப்போதும் இணைபிரியாதவர்களான நர நாராயண ரிஷிகளைப்போல (கிருஷ்ணுர்ஜுனர்களைப் போலவும்) இந்த இரண்டு அக்ஷரங்களும் விளங்குகின்றன. இந்த இரு அக்ஷர மந்திரங்கள் ஜகத்தைக் காப்பாற்றுவதற்காகவும், விசேஷமாகப் பக்தர்களைக் காப்பாற்றுவதற்காகவும் இருக்கின்றன. பக்தி ரூபமாக விளங்கும் அழகான ஸ்திரியின் இரு காதுகளில் பிரகாசிக்கும் இரு குண்டலங்களைப்போல இரு அக்ஷரங்களும் விளங்குகின்றன. இவைகள் ஜகத்தின் இருளைப் போக்குவதற்கு சூரியன் சந்திரனைப்போலவும், இருக்கின்றன ? (144)

நல்ல அம்ருதத்தின் ருசியைப்போலவும், மனத்திற்கு திருப்தியைத் தருவதும், எல்லாப் பதங்களிலும் சிறந்த மோக்ஷ பதத்தைத் தரக்கூடிய இரு அக்ஷரங்கள் கொண்ட சக்திவாய்ந்த மஹா மந்திரம்; இந்த ராமமந்திரம் கூர்மாவதாரத்தின் சமயம் ஏற்பட்ட ஆமை ரூபமாகவும்' பூமியைத்தாங்கும் ஆதிசேஷ ரூப மாகவும் சக்தி படைத்த மந்திரம். பக்தர்களின் தாமரைப் பூவிற்குச் சமமான மனத்திற்கு தேனீக்கள் போலவும், சொல்லிக் கூப்பிடுவதற்கு யசோதாதேவிக்கு அழகான ராமகிருஷ்ண சகோதரர்களைப் போலவும், ஆனந்தத்தைத் தருகின்றன. (அப்பேற்பட்ட மஹாத்மியம் வாய்ந்த மந்திர ஸ்ரீராமா, என்னிடம் நீதான் கருணை காட்ட வேண்டும்.) (145)

[தியானம்

ஹே ராமா, நீயும் ஜானகியும் உசத்தியான பொருள்தான். உன் நாமம் உசத்தியானதுதான். உன் பக்தர்கள் மிகச் சிறந்தவர்

கள்தான். ஆனால் உங்களை சதா நினைக்க முடிகிறதில்லை. நான் என்ன செய்வேன்? பூஜை செய்யும் சமயங்களிலும், என்மனம் எங்கேயோ சஞ்சரிக்கின்றது. நான் என்ன பாவம் செய்தேன்? இந்தக் கஷ்டத்திலிருந்து என்னை விடுவிக்கமாட்டாயா? தியாக ராஜர் போன்ற மஹான்கள் சமீப காலத்தில் வாழ்ந்து நாதவடி வானதும், வேதங்கள், சாஸ்திரங்கள், ஆகமங்கள், புராணங்கள் இவைகளின் மர்மங்களைத் தெரிந்து கொண்டு உன்னை ராகரத்ன மாலை என்கிற பாமாலையால் கட்டிச் சூட்டினர். ஆதிகாலத்தில் பரமசிவனால் போதிக்கப்பட்ட "ஸ்வரார்ணவம்" என்னும் சங்கீத சாஸ்திரத்தின் உதவியினால் பார்வதிதேவி உன்னை உபாஸித்தாள். இன்னமும் ஆஞ்சநேயர் சதாசிவனைப்போல உன்னை நாதம், ஓங்காரம், ஸ்வரம், மூர்ச்சனைகளடங்கிய சங்கீத ஞானத்தினால் இன்றும், இனி வரப்போகும் காலத்திலும் உன் நாம அம்ருதத்தைப் பருகுகிகொண்டிருக்கிறார். ஆனால் மந்தபுத்தியுள்ள எனக்கு ஸப்த ஸ்வரங்களின் அதிதேவதை களும், ருக்யஜுர் ஸாமவேதங்களின் பிரதிபாத்யதையாக வுள்ள காயத்ரி மந்திரத்தின் மூச்சு முடிப்பும், மார்க்கதரிசி களான தியாகராஜரைப் போல மஹான்களால் காட்டப்பட்ட வினய பக்தியுள்ள சங்கீதம் எப்படி எனக்கு கிட்டும்? அதன் மூலமாகவோ, அல்லது வேறு எந்த வழியினாலோ, உன்னையும் ஜானகியையும், உங்கள் நாம ரூபத்தையும் எப்போது அடைவேன்? நீதான் கிருபை செய்யவேண்டும்.]

துளசிதாஸர் பறைசாற்றி உத்கோஷிக்கிறார். "ஸ்ரீ ரகுநாத னின் இரண்டு அக்ஷரங்களடங்கிய திவ்ய திரு ராம நாமம் ரொம்ப ரொம்ப அழகாய் இருக்கின்றது. அந்த அக்ஷரங்களின் முதல் பதமாகிய "ரா" என்கிற எழுத்தும், "ம" என்கிற எழுத்தும், சாஸ்வதமான சத்ரமும் (ராஜசின்னமான குடையும்) முகுடாமணியுமாக வல்லவோ எல்லா அக்ஷரங்களையும்விட மிகமிக உயர்ந்தனவாக விளங்குகின்றன." (146)

பொருளையோ புருஷனையோ அறிவதற்கு அதன் நாமம் உபயோகப்படுகிறது. நாமத்தை உச்சரிப்பதால் பொருளோ புருஷனே அறியப்படுகிறான். ஆகவே நாமமும் பொருளும் (புருஷனும்) இரண்டும் ஒன்றையே தான் குறிக்கும். அவை களுக்குள் பரஸ்பரமான ஸ்நேகம் எஜமானர் சேவகர் மாதிரி இருக்கிறது. நாமத்தின் பின் தானே நாமரூபம் கொண்ட புருஷன் செல்கிறான்! பிரபுவான ஸ்ரீ ராமன் தன் பெயரைச் சொல்லி அழைத்த பின்பு தானே தபஸ்விகளிடம் செல்கிறான்? ஆகையால்

நாமமோ ரூபமோ இரண்டும் பகவானுடைய ஆபரணங்களாகிய குணங்கள். வார்த்தைகளால் விவரிக்கமுடியாத ஸ்வரூபங்கள். ஆதி அந்தமில்லாததும் அனாதிகாலத்திலிருந்து வரும் திவ்ய ஸ்வரூபங்கள். அழகானதும், சுத்தபக்தியின் ஸ்வரூபத்தினாலும் புத்தியினாலும் அடையப்படுவதும், என்றும் அழியாத வஸ்துக்களாகவும், அவைகளை அறிவதற்கு முடிகிறது. (147)

இந்த நாமம், ரூபம் இவ்விரண்டுகளிலும் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது? இதைப்பற்றி ஆராய்வது மகத்தான அபராதம். இவைகளின் தாரதம்யத்தை சாது புருஷர்கள் கேட்டும், ஸ்வயமாகவும் அறிகிறார்கள். ரூபமானது நாமத்திற்கு கட்டுப்பட்டதாக விருக்கிறது. ரூபத்தின் ஞானமானது நாமம் இல்லாவிடில் அறியப்படுகிறதில்லை அன்றோ? (148)

எந்த விசேஷமான ரூபமும் அதனுடைய பெயர் இல்லாவிடில், உள்ளங்கையில் வைத்த நெல்லிக்கனியைப் போல பார்க்கப்பட்டாலும், அடையாளமின்றி அறியப்படுகிறதில்லை அல்லவா? ஆனால் ரூபம் இல்லாமல் பார்க்கும் சமயம், அதாவது மந்திரத்தை மாத்திரம் வெறும் ஸ்மரணை, உச்சாரணம் செய்யுங்கால், விசேஷமான பிரேமையினால் அந்த ரூபமானது நாமத்தின் மகிமையினால் ஹ்ருதயத்தில் பிரகாசிக்கிறதல்லவா? (149)

ஆகையால் பக்த ஜனங்களே, ராம நாமம் ராமரூபம் ஆகியவைகளின் கதி, மஹிமை, பிரபாவங்கள் சொல்ல முடியாதவை. நாம் இவைகளை அறிவதால் சுகம் அடைகிறோம். ஆனால் அவைகள் வர்ணிக்க முடியாதவை. நிர்குண உபாஸகர்களுக்கும், கல்யாணகுணங்களைக் கொண்ட சகுண பிரும்ம உபாஸிப்பவர்களுக்கும் நடுவே ராம நாமமானது அழகான தீபம் போல சாக்ஷியாக விளங்குகிறது. இவ்விரு வகையினர்க்கும் மன இருளைப் போக்குவதும் யதார்த்தமான ஞானத்தைப் பிரகாசிப்பதற்கு தேவையான ஒரு பெரிய சாமர்த்தியமுள்ள அறிவுச்சுடராக ராமநாமம் விளங்குகிறதல்லவா? (150)

[தியானம்

ஹே, அதோக்ஷஜா, ஹ்ரிஷீகேசா, உன் தசாவதாரத்தின் ரஹஸ்யார்த்தத்தை ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணமாகச் சொல்லுகிறார்கள். அதிலும் மானிடராக வந்த உன் ராம அவதாரத்தை, சிலபேர்கள் ஆரண்ய வாஸத்தின் போது உன்னுடைய ஸௌலப்யத்தையும் தயையையும் தீனர்களான

ரிஷிகளுக்குக் கொடுப்பதற்காகவும், அம்ருதமயமானதும் காம விலாசங்கள் நிறைந்ததுமான உன் ரூபத்தைக் காண்பிப்பதற்காகவும், நீயே தூங்குபவர்களை தட்டி எழுப்புமாப்போல அவர்களிடம் வலுவில் சென்றதாகவும் சொல்லுகிருர்கள். துளசிதாஸர் போன்ற ராம பக்தர்கள், "நான் ஒரு ராஜ குமாரன், தர்மத்தில் பிரியமுள்ளவன், உலகத்திற்கு ஒரு வியவஸ்தையை நிலைநாட்ட வந்தேன்" என்கிற மனேபாவத்துடன் அவதரித்தாய் என்று உன்னைச்சொல்லுகிருர்கள். தியாகராஜர் போன்ற மஹான்களோ உன் ரூபத்தையும், குணங்களையும் கண்டு ஆனந்த பரவசமாகி ஆடிப் பாடி தனக்கு ஹிதத்தையும், பிறருக்கும் நன்மைகளைத் தரும் சிந்தாமணி என்று உன்னையும், உன் நாமத்தையும் புகழ்ந்து பாடியிருக்கிருர். இவைகளின் சூக்ஷ்மங்கள்தான் என்ன? உன் நாமத்தையும், ரூபத்தையும், உன் கதையையும் நீயே மனமுவந்து உன் பிரிய நாயகியான சீதைக்குக் கொடுத்தாயே. இவைகளால் தானே அவள் உன்னைப் பிரிந்த சமயம் ஒரு வருஷ காலம் சிறந்த சஞ்சீவினியாக உபயோகித்து பிழைத்திருக்க நேர்ந்தது. அப்பேற்பட்ட உன்னையும் உன் நாம ரூப விலாஸங்களையும், பரிபூர்ணமாக தானும் அனுபவித்து, லோகத்தார்களாலும், மந்த புத்தியுள்ள என்னுலும், இன்று முதல் கூட, என்றும் சாஸ்வதமாக இருக்கக்கூடியதுமான உன் ரூப, நாம விலாஸங்களை அனுபவிக்கமுடிகிறதல்லவா? அப்பேற்பட்ட மங்கள மூர்த்திகளான சீதாராமரை நான் நமஸ்கரிக்கிறேன்.]

துளசிதாஸர் சொல்லுகிருர். "உள்ளும், புறமும் பிரகாசிக்க விரும்பினுல் ராமநாமத்தை நாக்கினுல் ஜபிக்க வேண்டும். ஒரு சிறந்த ரத்ன தீபமானது கதவின் நடுவே தொங்கவிடப்பட்டால் அது உள்ளும் புறமும் பிரகாசத்தைத் தருகிறதல்லவா? (151)

ராமநாமம் ஜபிக்கப்படும்போது, பிரும்மாவினுல் படைக்கப்பட்ட இந்த பிரபஞ்சம் முழுவதும் நன்மையை அடைகிறது. வைராக்ய புருஷர்களான முனிகளும் யோகிகளும், சித்த ஜனங்களும் சதாராம நாமத்தை ஸ்மரித்துக் கொண்டும், ஜபித்துக்கொண்டும், ஆசைகளைத் துறந்து, துக்கங்களில் பற்றுதலின்றி, ராம ரூபத்தை ஜாக்ரதா என்கிற முழிப்பு அவஸ்தையிலும், மற்ற அவஸ்தைகளில் ரூபரஹிதமான நாம அனுபவத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியாதபடி அநாமயத்துடன் விளங்கும் பிரும்மானந்தத்தை அடைகிருர்களல்லவா? (152)

பரமாத்மாவினுடைய மிக்க ரஹஸ்யமானதும் யதார்த்தமான மகிமைகளை அறியவிரும்புகிற மஹாஜனங்கள் ராம நாமத்தை ஜபம்பண்ணி, ஜிக்ஞாஸு போன்ற அவஸ்தையை அடைந்து கிருதார்த்தர்களாக ஆகிறார்கள். லௌகிகமான சித்திகளை அடையவிருப்பமுள்ளவர்கள் தியான யோகத்தினால் ராம நாமத்தை ஜபித்து அணிமாதி சித்திகளைப் பெற்று மேன்மையை அடைகிறார்கள். (153)

[தியானம்

ஹே ஜானகி, ஜகஜ்ஜனனி, உன் கிருபா திருஷ்டியினால் புருஷர்களுக்கு சரீரத்தின் ஆரோக்யம், ஐஸ்வர்யங்கள், சத்ருபய நாசம், சுகம் ஆகியவைகள், இன்னும் எவைகள் துர்லபமாக கிடைக்காதோ, அது எல்லாம் கிடைக்கின்றபோது எதுதான் கிடைக்காது? ஹே அம்மா, லோகமாதா, உன்னுடைய சிபார்சினால்தானே பகவானான ராமச்சந்திரனுடைய அனுக்ரஹமும் கிடைக்கிறது. நீங்கள் இரண்டு பேர்களும் நித்ய தம்பதிகள், சம்பூர்ண லோகங்களுக்கு மாதா, பிதா. எல்லாவற்றையும் பரிசுத்தமாக்கும் ஸர்வ பாவனி, விஷ்ணுவின் வக்ஷஸ்தலத்தில் இருப்பவளே, மனிதர்களுக்கு ஸத்புத்ரர்கள், நல்ல ஹ்ருதயத்துடன் செய்யப்படும் காரியங்கள், பசு, வீடு, மனைவி முதலிய ஐஸ்வர்யங்கள், ஆத்ம குணங்களான சமம், சத்யம், சௌசம், சீலம் தமாதி குணங்கள் உன்னால் ஏற்படுகின்றன. அவைகளினால் மனிதர்கள் ஸ்ரேயஸை அடைகிறார்கள். புத்திமான்களாகவும், தன்யர்களாகவும், சூரர்களாகவும் குணஹீனர்களாக விருந்தாலும் குணக்கடலாகவும் போற்றப்படுகிறார்களன்றோ? தேவாதிதேவா, ஜகன்மாதா, உங்களிருவருடைய கிருபாதிருஷ்டி கிடைக்கும்பக்ஷத்தில் எதுதான் கிடைக்காது? அப்படிப்பட்ட ஸ்ரேயோ மூர்த்திகளான நீங்கள் இருவரும் என்னிடம் பிரஸன்னமாகவிருக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் எப்பொழுதும் எங்களைத் தள்ளி விடக் கூடாது.]

"ஹே ராமா, ஆபத்துக்களில் மிக்க பயந்தவர்களும், உன்னுடைய ராம நாமத்தை ஜபம் செய்வாராகில், அவர்களுடைய பெரிய பயங்களும் நசித்துவிடுகின்றன. அவர்களும் மிக்க சுகத்தை அடைகிறார்கள்." இந்த ஜகத்தில் நான்குவித ராமபக்தர்கள் காணப்படுகிறார்கள்; அவர்கள் (1) சங்கடங்களிலிருந்து விடுபட வேண்டுபவர்களும் பயம் நீங்கி சுகத்தை அடைய விருப்பமுள்ளவர்கள் (2) பகவானே, உங்களையே பெரும்

தனமாக கருதி வாழும் ஜிக்ஞாஸு என்று சொல்லும்படியான ஆசாரசீலத்தில் விருப்பமுள்ளவர்கள் (3) ஐஸ்வர்ய காமாதிகளை விரும்பும் அர்த்தார்த்திகள்; (4) பகவானுடைய தத்வ ஸ்வரூபங்களை யதார்த்தமாக அறிந்து இயற்கையாகவும், பிரேமையுடன் பூஜிக்கும் ஞானிகள் ஆகிற நான்குவித ஜனங்கள் ராம பக்தர்களாகவும், புண்ணிய ஆத்மாக்களாகவும், பாவங்கள் தோஷங்கள் விலகினவர்களாகவுமிருக்கிறார்கள். இப்பேற்பட்ட பாக்யவான்கள் உதாரமான மனது உள்ளவர்களாகவிருக்கின்றனர். (154)

அறிவாளிகளான நான்குவித ஜனங்களும் ராம நாமத்தைப் பராயணமாக வைத்து வாழ்க்கையை மஹா விஸ்வாசத்துடன் இந்த ஜகத்தில் நடத்துகிறார்கள். "இவர்களில்; ராமா ஞானிகளான பக்தர்கள் விசேஷ ரூபத்தில் உன்னிடம் ப்ரேமை பற்றுதல் உள்ளவர்களாகவிருக்கிறார்கள். அவர்கள் நான்கு யுகங்களிலும், நான்கு வேதங்களிலும் ராம நாமத்தின் பிரபாவத்தை அறிந்தவர்களாகவுமிருக்கிறார்கள்." ஆனால் கலி யுகத்தில் விசேஷ ரூபமானது ராம நாமத்தில் அடங்கியுள்ளதாக விருக்கிறது. இந்த ராம நாமத்தைவிட்டால் நமக்கு வேறு ஒரு உபாயமும் காணப்படுகிறதாகவில்லை. (155)

இகலோகத்தில் சகலவிதமான போகங்களையும், அதன் பின்பு கிடைக்கும் மோக்ஷ சுகமும் ஆகிய சகல ஆசைகளிலிருந்து விடுபட்டு (மஹானான தியாகராஜரைப் போன்ற) மஹனீயர்கள் ராம பக்தியே ஸாம்ராஜ்யம் என்று கருதி ஸ்வயம் பிரயோசனமாக ராம பக்தியின் தேன் இன்பரஸத்தை பருகுகிறவர்கள் கூட ராம நாமத்தின் அம்ருதமயமானதும், அழகாயுள்ளதும், பிரேமை ரூபமுள்ளதுமான ஒரு பெரிய ஸரோவர் என்று சொல்லப்படும் ஏரியில் தங்கள் மனதுகளை மத்ஸ்யங்களாகப் பண்ணி, அதில் மூழ்கிக்கொண்டு சுகத்தை ஸதா அடைகிறார்களன்றோ? அதாவது ராம நாம ரூபமாகிற அம்ருத ஸாகரத்தில் அவர்கள் மத்ஸ்யங்களைப் போல சதா முழுகிக் கிடந்து பிரும்மானந்தத்தை அடைகிறார்கள் என்று துளசிதாஸர் வாதிக்கிறார். (156)

நிர்குணம், ஸகுணம் என்கிற இரண்டு வகைகளும் பிரும்மத்தின் இருஸ்வரூபங்கள் ஆகும். இவைகளிரண்டும் விவரிக்க முடியாத ஸ்வரூபங்கள். ரொம்ப ஆழமுள்ள சமுத்திரங்கள். ஆதி அந்தமில்லாதவைகள். அவைகளுக்கு உபமானமாகச் சொல்லமுடியாதபடி தனிப்பட்ட, விசேஷத்வம் வாய்ந்த

வஸ்துக்கள். துளசிதாஸர் சொல்லுகிறார் : "என் கருத்தில் ராம நாமம் இந்த இரண்டு ஸ்வரூபங்களைவிட மிகப் பெரியது. ஏனெனில் ராமநாமத்தின் பலத்தினால் பகவானுடைய இரண்டு ஸ்வரூபங்களும் எளிதில் கிடைக்கக்கூடியதாகவிருக்கின்றன." (157)

[தியானம்

ஹே சீதாராமா, மனிதனுக்கு இந்த உலகில் தன் சொந்த ஜனங்கள், ஸந்ததி, தேக சுகம், மனைவி, ஐஸ்வர்யம், மனை, நிலம், பசு, வாகனம் ஆகியவைகளால் என்ன பரமலாபம் இருக்கக்கூடும்? இவைகளின் உதவிகளினால் பரமார்த்தமானவனும் உத்தம ஸ்லோகனுமான உன்னை அடையாமல்போனால் அவன் வாழ்ந்ததின் பிரயோசனம் ஒன்றுமில்லை. உன்னுடைய மேன்மையையும், என்றும் அழியாததுமான உன் சேர்க்கை ஸம்பந்தத்தின் சுகத்தையும் உன்னையே உபாயமாகக்கொண்டு, உன் நாம ஜபத்தினால் உன்னை அடைவதை விட்டுவிட்டு, அறியாமையால்தானே என்போன்ற ஜனங்கள் என்றும் சாஸ்வதமாக மிகக் கஷ்டப்படுகிறார்கள் அன்றோ? பரமயோகிகளான மஹரிஷிகள் நிர்தனமாகவும், நிரஹங்காரமாகவும் சதா உன்னையே ஸ்மரித்துக்கொண்டு அதனால் வரும் பிரும்மானந்த சுகத்தை அனுபவித்துக்கொண்டும் ஆனந்தக் கண்ணீரால் தங்கள் பாபங்களை விலக்கிக்கொண்டும், புண்ணிய தீர்த்தங்களுக்குப் போய் மிக்க சிரமத்துடன் சம்பாதிக்கப்பட்ட சாதுக்களின் சங்கத்தால் உன்னையே வந்து அடைகிறார்கள். ஹே ராமா, மானஸரோவர் என்று பெயரிட்டு ராமசரிதத்தை அனுபவித்து எழுதிய துளசிதாஸரையும், ஆனந்த அம்ருத கீர்த்தன சாகரத்தில் திளைத்த தியாகபிரும்மத்தையும் முன்னிட்டு, உன்னையும் ஜானகியையும் வந்து அடைகிறேன். என் கஷ்டங்களை ஆஞ்சநேயர் உங்கள் இருவர்களிடமும் சொல்லியிருப்பார், நீங்கள்தான் என்னைக்காப்பாற்ற வேண்டும்.]

ஸஜ்ஜனங்கள், துளசிதாஸரால் எடுத்துச் சொல்லப்படும் ராம நாமத்தின் பலத்தினால் கிடைக்கும் லாபங்களை அளவுகடந்த வசனங்கள் என்று தூஷிக்கமாட்டார்கள். மஹானாகிய துளசிதாஸரால் நிர்தாரணம் செய்யப்பட்டதும், சாஸ்வதமான உண்மையும், அவருடைய ஆழ்ந்த விஸ்வாசமும், மகத்தானதும் பரிபூர்ணமானதுமான அன்பை பிரகாசிக்கச் செய்யும் சக்திவாய்ந்த அவருடைய வசனங்கள் உண்மையான

வசனங்களே. அவைகள் கற்பனைகளிலிருந்து எழும் காவ்ய ரசனைகள் அல்ல. பகவானின் ஸகுண, நிர்குண ஸ்வரூபங்கள் ஆகிற இரண்டுவிதமான பிரும்மமும் ஞான அக்னிகளுக்குச் சமமானவை. நிர்குண ஸ்வரூபம் அரணியில் கண் மறைவாக விருக்கும் அக்னியைப்போன்றது. ஸகுண ஸ்வரூபமோ நேரில் சுடராக பிரகடனப்பட்டு காணப்படுவதாகவிருக்கிறது. இந்த இரண்டு ஸ்வரூபங்களையும் அறிவதே மிகக் கடினம். ஆனால் ஸ்ரீராமநாம மகிமையினால் இந்த பேத, பின்ன ஸ்வரூபங்கள் அபின்னமாகவும், வித்தியாஸமின்றியும் ஏகமான ஐக்ய ஸ்வரூபம் கொண்டு ஒன்றாய் அறியப்படுகின்றது. ஆகையால் துளசிதாஸர் பறைசாற்றுகிறார், "ராமநாமத்தின் மகிமை நிர்குண பிரம்மத்தையும் கடந்தது. ஸகுண ஸ்வரூபமான ராமனையும் கடந்தது. இரண்டிற்கும் மேல்பட்டது. பிரும்மம் ஸர்வ வியாபகமாகவுமுள்ளது. ஒரே தத்வமாகவும் அடங்கியுள்ளது. அழியாத ஸ்வரூபமாயும் உள்ளது. சத்யத்தின் ஸாரமாகவும் உள்ளது. சைதன்ய ஸ்வரூபமாகவும் ஆனந்த மயமாகவும் விளங்குகின்றது." (158)

[தியானம்

ஹே பகவானே, ராமசந்திரனே, லக்ஷ்மணனுக்குப் பிரியமான ப்ராதாவே, உன்னை ஒருவனாகிய நாராயணன் என்றும், உனக்கு சமம் ஒருவரும் இல்லை என்றும், நீ எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியாய் பிரதிபாத்யம் பண்ணுகிறாய் என்றும், உனக்கு பல ரூபங்கள் இருந்தாலும் அரூபராக இருக்கிறாய் என்றும், குணக்கடல் என்றும் குணரஹிதர் என்றும், வேதங்கள் பல விதமாக கோஷிக்கின்றன. ஆமாம், பரம வைஷ்ணவ ஆசார்யரான ராமானுஜர் உன்னைப்பற்றி சொல்லும்போது, பலவனவாகவும் ஒன்றாகவும் இருக்கிற நீதான் ஒரே வஸ்துவின் பல பாகங்களாகவும் ஒன்றாகவும் இருக்கிறாய். களிமண்ணும் நிஜமான பொருள்தான். அதனால் செய்யப்படும் மண்பாண்டங்களும் நிஜமான வஸ்துதான். ஒன்று காரணவஸ்துவாயும், மற்றொன்று கார்ய வஸ்துவாகவுமிருக்கின்றது, தோன்றுகிறதாகவுமிருக்கின்றது. முடிவினால் நாம் இரண்டையும் தெரிந்துகொள்கிறோம். ஒன்றைவிட்டு மற்றொன்று இருப்பதில்லை. எப்பொழுதும் அப்படிப்பட்ட ஒன்றே வஸ்து இருக்கிறதோ, அந்த வஸ்து உன்னையேதான் குறிக்கும். ஆகையால் உனக்கு ஈடு இல்லை. உனக்குத் தகுந்த அழகுள்ள புருஷன்

கிடையாது. உனக்கு அநேக ரூபங்கள் இருக்கின்றன. இருந்தாலும் நிரூபணம் செய்யமுடியாத படியும், நிர்ணயமாக ஒரே ரூபமாக இல்லாமையால், பல ரூபங்களுடன் இந்த ஜகத்தில் வியாபித்திருக்கிறாய். அப்படிப்பட்ட உன் ரூபம் வஸ்துவினால் ஆக்கப்பட்டதல்ல. விவரிக்கமுடியாததும், ஸ்மரிக்க முடியாததுமான ஆத்மஜோதி நீ. உன்னைச் சரணமடைந்தால் ரொம்ப கருணை ததும்பின ஹ்ருதயத்துடன் என்னை வரவேற்பாய், என்று உன் மகத்துவத்தை கருணைக்கடலானவரும், உலகத்தை உத்தாரணம் பண்ண அவதரித்த ஸ்ரீராமானுஜர் பறை சாற்றினாராமே. அப்பேற்பட்ட கருணைக்கடலாகிய நீ என்னை சதா சம்ரக்ஷிக்க வேண்டும்.]

ஜகத்தில் உள்ள வஸ்துக்கள் எல்லாவற்றிலும் அந்தராத்மாவாக வியாபித்தவருமான பகவான் ஒருவிதமான மாறுபடுமின்றி (விகாரங்களின்றி) ஒவ்வொருவருடைய ஹ்ருதய குகையிலும் இருக்கிறார். அவ்விதமிருந்தும் ஒவ்வொரு ஜந்துவும் துக்கத்தையும், வருத்தத்தையும் சம்சாரத்தில் அடைகிறது. ஸ்ரீராம நாமத்தின் யதார்த்த ஸ்வரூபம், ரஹஸ்யம் மகிமை, பிரபாவம் ஆகியவற்றவைகளை அறிந்து, சிரத்தையுடன் நாமத்தை ஜபம் செய்து ஸாதனை செய்யும் மஹாதபஸ்விகளுக்கு பகவான் ராம சந்திரன் பிரத்யக்ஷமாக விளங்குகிறார். ரத்னத்தை பரிக்ஷை செய்யும் சமயம் அதனுடைய விலை மதிப்பையும் அறியமுடிகிறதல்லவா ? (159)

இந்தப் பிரகாரம் நிர்குண ஸ்வரூபியான ராமநாமத்தின் பிரபாவம் ரொம்பப் பெரியது. கம்பீரமாக துளசிதாஸர் கோஷம் செய்கிறார். "ஹே ராமா, உன்னுடைய நாமம் உன்னுடைய ஸகுண ஸ்வரூபமாயுள்ள ராமனையும்விட பெரியது." ஸ்ரீராமச் சந்திரன் பக்தர்களின் நன்மைக்காக உலகத்தில் மனுஷ்ய அவதாரம் எடுத்து, மிக்கக் கஷ்டங்களை அனுபவித்து ஸாதுக்களுக்கு சுகத்தை வாரி அளித்தார். வாஸ்தவம்தான். ஆனால் பக்தர்கள் ராமநாமத்தை அன்புடன் இன்றுவரை இனி வருங் காலத்திலும் உச்சரித்துக்கொண்டு வெகு எளிதில் ஆனந்தத்தையும், மங்களத்தையும் அடைகிறார்கள். "ஆகவே, ஹே ராமா உன்னைப் போல கஷ்டங்களை அவர்கள் அனுபவிக்கிறதில்லை." (160)

[தியானம்

ஹே ஜானகி, ராமனுடைய பிரியமான மகிஷியே, நல்ல யௌவனமான யுவதியும், அழகானதும் ஸஞ்சலமான மானைப் போல கண்களை உடையவளே, ஸ்வர்ண விக்ரஹம்போல நிறத்தை உடையவளே, சந்திரனுடைய சகோதரியே, இந்திரா என்று என்னால் அழைக்கப்படுகிறவளே, லக்ஷ்மி என்கிற காரணப் பெயரை உடையவளே, பகவானைவிட்டு எக்காலத்திலும், எந்த அவஸ்தையிலும் பிரியாதவளே, க்ஷீரஸாகரத்தில் உண்டான பத்மத்தில் பிறந்த உனக்கு என் பூஜ்ய ஆசாரியரான பராசரரால் பண்ணப்பட்ட ஸ்தோத்திரத்தினால் அதிகப் பிரியமடைபவளே, நாராயண பக்தர்களிடம் சஞ்சலமற்ற பிரியத்துடன் இருக்கும் உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். ஆதிகாலத்தில் ப்ருகு மஹரிஷியின் புத்ரியாக அவதரித்து, பிற்பாடு அம்ருத மதனத்தின் சமயம் தேவதானவர்களுக்கு உதவுவதற்காக மீண்டும் நீ அவதரித்தாய். ஜகத்துக்கெல்லாம் ஸ்வாமியானவரும், தேவ தேவரும் ஜனார்த்தனர் என்று சொல்லப்படும் பகவான் எப்போதைக்கெப்போது இந்த உலகில் அவதரிக்கிறாரோ, அவருக்கு ஸஹாயமாக, ஸ்ரீதேவி என்று அழைக்கப்படும், என் அம்மா, நீ அவதரிக்கிறாய். பகவான் பரசுராம அவதாரம் எடுத்தபோது தரணி என்கிற பெயருடனும், ராகவன் என்கிற ராம அவதாரத்தில் நீ சீதை என்றும், கிருஷ்ணாவதாரத்தில் ருக்மணி என்றும் அழைக்கப்படுகிறாய். பகவான் விஷ்ணுவினுடைய ஒவ்வொரு அவதாரத்திலும் பகவானுக்கு தேவரூபம் கிடைத்த சமயம் நீயும் திவ்யமான சரீரம் எடுத்துக்கொண்டு அவதரிக்கிறாய். நீ வாமனாவதாரத்திலும் லக்ஷ்மியாக வக்ஷஸ்தலத்தில் இருந்தாய். மனுஷ்ய அவதாரத்தில் மானிட ரூபமாக பிரகடனப்படுத்திக் கொள்கிறாய். விஷ்ணு பகவானுடைய சரீரத்திற்கு தகுந்தாற்போல நீயும் உன் சரீரத்தை அமைத்துக் கொண்டு எல்லா ஜந்துக்களையும் கடாக்ஷிக்க அவதரிக்கிறாய். அப்படிப்பட்ட ஜானகி, உன்னை நான் நமஸ்கரிக்கிறேன்.]

உங்கள் இருவர்களுடைய பாதபத்மங்களில் நமஸ்கரிக்கிறேன். ஹே ராமா, உன் திருமுடியைவிட உன் திருவடி எவ்வளவு சிறந்தது தெரியுமா? உன் திருவடி சம்பந்தத்தால் கௌதம முனிவரின் மனைவியான அஹல்யை, (தப்தசமனி என்று சொல்லும்படி மூன்றுவித தாபங்களால் எரிக்கப்பட்டு, கல்லைப்போல உணர்ச்சியற்று, மஹாதபஸ்வியாகக் கிடந்த ஒரு ஸ்திரி) காப்பாற்றப்பட்டாள். ஆனால் உன் நாமத்தின் மகிமை

யாலோ கோடிக்கணக்கான துஷ்டர்கள் அனுதியாக, வெருகால மாக கெட்ட வழிகளிலிருந்து திருத்தப்பட்டிருக்கிறுர்கள். பிரும்ம ரிஷியான விஸ்வாமித்ரருக்கு ஹிதம் செய்யும் பொருட்டு சுகேது என்கிற யக்ஷனுடைய கன்யையான தாடகையும் அவளுடைய புத்ரனையும், ராமா, நீ சேனையுடன் வதம் செய்தாய். ஆனால் உன் நாம பிரபாவத்தினுல், கோடிக்கணக்கான பக்தர் களின் தோஷங்கள், பாபங்கள், துக்கங்கள், துராசைகள், சூரியனுடைய வெளிச்சத்தினுல் நாசமடையும் இருட்டுக்கும்பல் களைப்போல நாசமடையப்பட்டிருக்கின்றன. ராமா, உன்னுல் மஹேஸ்வரருடைய தனுஷ் உடைக்கப்பட்டது. ஆனால் உன் ராமநாம மகிமையால் சம்சாரத்திலுள்ள சகல பயங்களும் நாசம் செய்யப்படுகின்றன. (அஹல்யை சாபவிமோசனம், தாடகை முதலியவர்களின் வதம், சிவதனுஷ் ஒடித்தல் ஆகியவை ராமனின் அவதார காலத்தில் கொண்ட ரூபத்தால் ஏற்பட்டதென்று கருத்து. (161)

(இந்தவிதமாக மனக்கலக்கமில்லாமல் பிரபுவான ஸ்ரீராமச் சந்திரனை ஹ்ருதயத்தில் தரித்து சம்சாரத்தில் உள்ள தீனர்களும் துக்கிகளும் சூரியன் எவ்விதம் இருட்டுக் குவியல்களை நாசம் செய்வானே, அதைப்போல, துக்கக்கடலை நாசம் செய்கிறுர்கள். ஹே ராமா, உன் நாமத்தின் பெருமைகளை அறிந்து சிரத்தை யுடன் ஜபம் செய்து அவர்கள் பிரும்மத்தையும் அடைகிறுர்கள். எப்படி ரத்னத்தைப் பரிக்ஷிக்கும் சமயம் அதனுடைய விலை மதிப்பை நாம் உணருகிறேமோ, அதைப்போல பக்தியுடன் கூடின உன் நாமஜபத்தின் மகிமையால் உன் ரூபத்தையும் பூர்ணமாகத் தெரிந்துகொள்ளுகிறுர்கள். ஆகவே, ஹே பிரபோ, உன் நாமரூபமாகிய மந்திரத்தை ரத்னத்தைப்போல கூடமாக ஸம்ரக்ஷிக்கவேண்டும். அதேபோல, மந்திரரூபமாகிய உன் ஸ்வரூபத்தையும் புகழ்பெற்ற வசனங்களால் நாம் துதிக்க வேண்டும்.)

[தியானம்

ராமா, நாராயணு, உன் ஸந்நிதானத்தில் சதா ஹரிஸ்மரணை செய்துகொண்டு ஆனந்தத்தை அடைபவரும், பிரணவத்தின் வக்ர துண்டம்போல துதிக்கையைக் கொண்டவரும், உன் நாமரூபத்தில் பற்றுதல் உள்ளவரும், கணங்களுக்கும் கஜங் களுக்கும் ஈஸ்வரரும், பக்தர்களுடைய ஹ்ருதயத்தை மலர்ந்த தாமரைப் புஷ்பத்தைப்போல பிரகாசிக்கச் செய்பவரும், உமா

புத்ரரும், ஏகதந்தரும், கிருபாகரரும், க்ஷமாகரரும், மஹாலக்ஷ்மிக்கு அன்பான தோழரும் எனக்கு யசஸ்கரருமான பகவான் விஷ்வக்ஸேனரை முன்னிட்டு, நான் உன் நாமஜபத்தின் மகிமையை அறிய விரும்புகிறேன். சகல வேதங்களையும், மஹாபாரதத்தையும், புராணங்களையும் எழுதியும், மனசாந்தி அடையாமல் கொதித்து நொந்துபோன வேதவியாஸர், தேவரிஷியும் பகவான் நாராயணருக்குப் பிரியருமான நாரதரால் உபதேசிக்கப்பட்டு, உன்னுடைய குணங்களையும், ரூபங்களையும், செய்கைகளையும் தர்மத்துடன் கூடின ஸ்வரூபத்தையும், மிக்க புகழ்பெற்ற வசனங்களால் சுகர் மூலம் உன்னைத் துதித்தாரே, அந்த விதமான அந்தரங்க பக்தியுடன் நான் உன்னை நமஸ்கரிக்கிறேன். உன் பெருமையைச் சொல்லாத சொற்கள் வீணே. மஹான்கள், தபஸ்விகளாகவும், மோக்ஷபராயணர்களாகவும், பரமஹம்ஸர்களாகவும் உன் ரூபத்தை மனத்தில் தரித்து, மானஸஸரோவரில் மேல்நோக்கி மலர்ந்திருக்கும் தாமரை பூக்களை மலரவைக்கும் ஆதித்யரான உம்மை ஸதா அனுபவிக்கிறார்கள். ஹே அச்சுதா, வால்மீகி பகவானால் "ராமோ விக்ரஹவான் தர்மஃ" என்று சொல்லப்பட்டாயே, எந்த காரியம் செய்யப்படினும் நமக்கு நன்மை உண்டா, அதுதான் தர்மம் என்று சொல்லப்படுகிறது. உன்னால் செய்யப்பட்ட ஒவ்வொரு காரியமும் நன்மையைக் கொடுப்பதாதலால், "ஸ்ரீராமன் தர்மஸ்வரூபி," எனப்புகழ் நீ பெற்றாய். அப்பேறுபட்ட தர்மஸ்வரூபியான ராமரை, என் ஆசாரியரான ராமானுஜரைக் கொண்டும், பக்தியுடன் உனது சாஸ்வதமான குணங்களை தியாகராஜர் கீர்த்தனம் செய்ததுபோல நான் மனத்தெளிவுடன் பாடி ஆனந்திக்கிறேன். ராமா, உன் அருள் எனக்கு கிட்டட்டும்.]

[தியானம்

ராமா, பரமவைஷ்ணவ ஆசார்யரான ஸ்ரீ ராமானுஜர் அஷ்டாக்ஷரத்தின் மர்மசப்தமாகிய நமஃ என்கிற சொல்லின் பிரதிபாத்யமாக விளங்கும் பாகவத சேஷத்வத்தை அடிப்படையாகக் கொண்ட கடகஸ்ருதி என்று பெயர்பெற்ற வைஷ்ணவ தர்மத்தை எல்லா ஜீவர்களையும் உஜ்ஜீவிக்கச் செய்வதற்கு பிரகடனம் செய்தார். இந்த ஸ்ருதி பேதஸ்ருதி அபேதஸ்ருதி ஆகிய இவ்விரண்டு ஸ்ருதிகளுக்கும் நடுநாயகமாக விளங்குகிறது. பரமபாகவத தர்மத்தை அனுஷ்டித்த உன் தம்பிமார்

களில் சிறந்தவனும், கடைசித் தம்பியான சத்ருக்னுழ்வானைப் போல காலத்தை நடத்திவந்த பரம பூஜ்யர்களான பூர்வாசிரியர் களும், நம்மாழ்வார் நாதமுனிகள், கூரத்தாழ்வார், ஆளவந்தார், மணக்கால் நம்பிபோன்ற பூர்வாசாரியர்களும், இன்னும் அநேக வைஷ்ணவர்களும் காட்டின மார்க்கத்தில் ஐகாந்திக பக்தியுடன் ஆத்ம சமர்ப்பணம் பண்ணி உனக்காகவே வாழ வேண்டும்; உன் செய்கைகளுக்கும், குணங்களுக்கும் அனுகூலனாக வாழவேண்டும்; உன்னையே பெரும்பதமாக நினைக்கவேண்டும்; உன்னையே பெரும்தனமாக கருதவேண்டும்; உன் பாகவத கோஷ்டிகளுக்கு பரம அனுகூலனாகவும் அடியார்க்கு அடியார் என்கிற மனோபாவத்துடனும், நான் இருக்கவேண்டும் என்று திண்ணம் கொண்டேன். எந்த ஸ்வரூபத்தால் ஆனந்தமடையும் பரமபாகவத சிரோண் மணிகளான பிரஹ்லாதர், பராசரர், நாரதர், ஆஞ்சநேயர், ஸனகர் முதலிய யோகிகளும் சுகபிரும்மம் போன்ற நித்ய பிரும்மாசாரிகளும், அகஸ்தியர், மார்க்கண்டேயர், விஸ்வா மித்திரர், வஸிஷ்டர் போன்ற சப்தரிஷிகள், துருவன் போன்ற மஹாபக்தரும், மிக்க அறிவாளியான வேதவியாஸரும், நாதஸ்வ ரூபத்தின் வேராக ஊன்றியிருக்கும் மஹேஸ்வரரும், அம்பிகை யும், மஹானுபாவரான தியாகராஜரும் காட்டிய வழிகளில் நான் ஊன்றியிருப்பேனாக. அப்பேற்பட்ட பக்திமார்க்கம், ஞானமார்க்கம் கர்மமார்க்கம் போன்ற வழிகளைவிடச் சிறந்தது. அதிலும் ஐகாந்திக பக்தியுடன் செய்யப்படும் சரணாகதி தர்மத்தின் மிக ஸ்ரேஷ்டமானதும், முடியிலுள்ள ரத்னம்போல பிரகாசிக்கும் பாகவத தர்மத்தை பிரகாசிக்கச் செய்யும் வைஷ்ணவ தர்மத்தின் பூர்வாசாரியர்களை முன்னிட்டு, ராமா னுஜரை நடுநாயகமாக வைத்து, பிற்பாடுவந்துள்ள ஆசார்யர் களையும், அஞ்சலி பண்ணிக்கொண்டு பகவானுடைய பூர்ண மான அனுக்ரஹத்தை அடையவேண்டும். என்னைப்போன்ற மஹா ஜனங்களும் சிறந்த கதியை அடையவேண்டும். பிரபோ கிருபை செய்யவேண்டும்.]

பிரபுவான ராகவன் பயத்தை உண்டுபண்ணும் தண்டக வனத்தை தன் பாததூளியினால் அழகான பூந்தோட்டத்தைப் போல பாவனம் பண்ணினார். ஆனால் அதே பகவான் தன்னுடைய நாம மகிமையினால் எண்ணிக்கைக்கு அடங்காத மனுஷ்ய கோடிகளுக்குப் பாபங்களைப் போக்கி அவர்களை புனிதமாக்கினார். அவரால் பல ராக்ஷஸக் கூட்டங்கள்

அவதாரத்தின் சமயம் சம்ஹரிக்கப்பட்டன. ஆனால் கலியுகத்தில் சகல பாபக்கூட்டங்களும் ராமநாமத்தின் மகிமையினால் நாசமடைகின்றன. (162)

[தியானம்

ஹே கோதண்டராமா, தேவர்கள், மனுஷ்யர்கள், பக்ஷிகள், கந்தர்வர்கள், ராக்ஷஸர்கள், பிசாசர்கள், கின்னரர்கள், மிருகங்கள், தானவர்கள், இன்னும் அநேகவிதமான ஜாதிகளில் சராசரங்களில் பிறந்து சண்டை செய்பவர்கள் உன்னை யுத்தத்தில் வெல்லமுடியாது. உனக்கு ஈடாக யாரும் ஒரு வீரனும் இருக்கமுடியாது. உன்னுடைய யுத்த சாமர்த்தியம் தேவர்களிலும் அசுரர்களிலும் மூன்று உலகங்களிலும் எக்காலத்திலும் இருக்கமுடியாது. அப்பேர்ப்பட்ட தனுஷ்பாணியான ராகவா, என்னை நீ எப்போதும் காப்பாற்றவேண்டும்.]

பகவானை ஸ்ரீ ராமச்சந்திரனால், அவதாரத்தின்போது சபரிக்கும், பக்ஷிராஜனான ஜடாயுவுக்கும், இன்னும் அநேக உத்தம பக்தர்களுக்கும் மோக்ஷம் அளிக்கப்பட்டது. ஆனால் ராமநாமத்தின் கிருபையால் கணக்கில்லாத கோடிக்கணக்கான துஷ்டர்கள், மேலான கதியை அடைந்திருக்கிறார்கள். ஆகையினால்தான் ராமா, உன் நாமத்தின் பெருமைகளை வேதங்களே பிரசித்தமாகப் புகழ்கின்றன. (163)

பகவானால் வானர ராஜனான சுக்ரீவனும் ராக்ஷஸ ராஜனான விபீஷணனும், அவரைச் சரணமடைந்த காரணத்தால் காக்கப்பட்டார்கள். இது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் ஸ்ரீராமனுடைய நாமத்தின் மகிமையால் கோடிக் கணக்கான ஏழைகளுக்கும் அவர் கிருபை கிட்டியது. ஆகையால் தான் ஸ்ரீராம நாமத்தின் அழகான பெருமைகளை விசேஷமாக உலகத்தில் எல்லோரும் வேதங்களும் புகழ்கின்றனர். (164)

(தர்மக்ஞனான மஹாராஜனின் திருக்குமாரனே, ராமா, லோகநாதா, சுகத்தைக் கொடுப்பவனே, சத்யவானே, ஜனங்களை நல்லவழியில் கொண்டுபோய் அந்த ராஜபாட்டையில் ஸ்திரமாக இருக்கச் செய்பவனே,) கரடிகள், வானரங்கள் அடங்கின மகத்தான சேனை ஒன்று உன்னால் தயாரிக்கப்பட்டது. மஹோததி என்கிற பெரிய சமுத்திரத்தின்மீது அணை ஒன்று கட்டப்பட்டது. அதற்கு எவ்வளவு சிரமம் ஏற்பட்டது என்று யாராலும் சொல்லமுடியாது. ஆனால் உன் நாமத்தால் ஸம்சார சமுத்திரமானது வெகு எளிதில் வரட்சி அடைகிறது. ஹே ஸாது

ஜனங்களே, உங்களால் இந்த பவித்திரமான விஷயம் நன்கு ஆராயப்பட்டதா? (அதாவது நாமம், ரூபம் இவை இரண்டிலும் எது பெரியது என்று உங்களால் ஆராயப்படட்டும் என்று துளசிதாஸர் வினவுகிறார்.) (165)

[தியானம்

ஹே ராமா, மலர்ந்த செந்தாமரை இதழ்போன்ற கண்களை உடையவனே, சிங்கம்போன்ற பராக்ரமத்துடன் கூடிய கதியை உடையவனே, செய்நன்றி உள்ளவனே, இனிமையாகப் பேசுபவனே, மிக்க புண்ணியசாலிகளால் பார்க்கப்படும் ராமா, ஸத்ய வ்ரதனே, நீண்ட கைகளை உடையவனே, பூர்ணசந்திர னுக்கு ஒப்பான முகமுள்ளவனே, எல்லோருக்கும் நன்மை செய்கிறவனே, பிரியமாக என்னிடம் இருப்பவனே, உன்னுடைய ஸ்வரூபமான நாராயணரைத்தவிர வேறு பரதெய்வத்தை அறியாமலிருக்கும்படி என்னை நீதானே காப்பாற்றவேண்டும்.]

ஸ்ரீராமனால் ராவணன் குடும்ப சகிதமாகக் கொல்லப் பட்டான். அதன் பின்பு அவர் ஜயலக்ஷ்மியான ஜனகியுடன் அயோத்திக்கு திரும்பிச்சென்று சக்ரவர்த்தியாகவும் முடிசூட்டப் பட்டார். அயோத்தி ராஜதானியாகவும் ஆகிவிட்டது. தேவர் களும் ரிஷிகளும் அழகான குரலில் அவரை மதுரமாகப் புகழ்ந்து பாடினார்கள். ஆனால் அவருடைய தாஸர்கள் ராம நாமத்தை ஸ்மரிப்பதால் ஒரு சிரமுமின்றி மோஹம் முதலிய பலமான சத்ருக்களை ஜெயித்து, மிக்க பிரேமையுடன் அவரை அடைந்து ஆனந்த ரஸத்தில் மூழ்கி சந்தோஷத்துடன் சஞ்சரிக்கிறார்கள். அவருடைய பிரசாதத்தால் ஒரு கவலையையும் ஸ்வப்னத்தில் கூட அவர்கள் அடைகிறார்களில்லை. (166)

இவ்விதமாக ராம நாமமானது நிர்குண ஸ்வரூபமான பிரும்மத்தைக் காட்டிலும் பெரியது. ஸகுணஸ்வரூபமான அவருடைய அழகு விக்ரஹத்தைக் காட்டிலும் மிக உயர்ந்தது. மிக்க பெருமை வாய்ந்த வரதானங்களை அளிக்கவல்லது. ஆகவே சகல வஸ்துக்களிலும் பெரியது. இந்த உண்மையை அறிந்து தான் மஹேசர் தன் ஹ்ருதய புண்டரத்தில் நூறு கோடிக்கணக் கான செய்யுட்கள் அடங்கின ராமாயணம் என்கிற ராம சரித்திரத்தில் இந்த ராம நாமத்தை ஸாரமாகக், கிரஹித்துக் கொண்டார். (167)

## மாதபாராயணம்—முதல் கட்டம்

[தியானம்

ஹே ஸநாதன ராமா, உலகங்களெல்லா வற்றிற்கும் வாசஸ்தானமாகயிருப்பவரே, நீரே அழிவில்லாத ஜீவாத்மா தத்வம். ஸத், அஸத் என்கிற சப்தங்களால் சொல்லப்பட்ட பிரகிருதி தத்வமும் நீரே. அந்த பிரக்ருதி தத்வம் அதனுடன் சம்பந்தம் பெற்ற ஜீவாத்ம தத்வம் இவைகளைக் காட்டிலும் முக்தாத்ம தத்வம் என்று ஒன்று உண்டோ அதுவும் நீர்தானே. அந்த மில்லாத ரூபரே, தேவரீர் தேவதைகளுக்கு எல்லாம் ஆதியான தேவதையும், புராண புருஷருமான நாராயணராக விருக்கிறீர். வராக அவதாரத்தில் ஏகஸ்ருங்கராக அழைக்கப்பட்டீர். இந்த பிரபஞ்சமனைத்துக்கும் ஆதாரமாகவுமிருக்கிறீர். அறிகிறவரும், அறியத்தக்க வஸ்துவாகவும், உத்தமஸ்தானமாகவும் இருக்கிறீர். அப்படிப்பட்ட ஜானகிராமா, என்னிடம் கிருபையுடன் இருக்க வேண்டும்.]

ஸ்ரீராம நாமத்தின் மகிமையால் அல்லவா பரமசிவன் அவிநாசியாக காசி க்ஷேத்திரத்தில் வாஸம் செய்துவருகிறார். பார்ப்பதற்கு அமங்கள ரூபத்துடனிருந்தாலும் [பித்தனுயும், ஜடாதரனுகவும், பஸ்மத்துடனும், விரக்தியுடன் கூடியவராயிருந்தாலும், அவர் அறிவுச்சுடராக விளங்கி, ஜனங்களுக்குப் பரோபகாரமாக எவ்வளவு நன்மைகள் செய்கிறார். ஆச்சர்யம், அதனுல் மங்களங்களின் ராசிக்கூடமான பவர் என்று அவர் புகழப்படுகிறார். சுகத்தை அளிப்பதால் ம்ருடபிரியர் என்று சொல்லப்படுகிறார்.] பரம பாகவதர்களும், ராமனிடம் அந்தரங்க பிரியமுள்ள சுகதேவர், ஸனகாதி போன்ற சித்தயோகிகள், நாரதர், வால்மீகி போன்ற தேவரிஷிகள், வஸிஷ்டர், விஸ்வாமித்திரர், வாமதேவர் போன்ற பிரும்ம ரிஷிகள் ராம நாமத்தின் மகிமையாலும் பிரசாதத்தாலும் சிறந்த பிரும்மானந்த போகத்தை அனுபவிக்கிறார்கள். (168)

நாரத முனிவர் எல்லோரையும்விட ராம நாமத்தின் பிரபாவத்தை மிகத் தெளிவாகத் தெரிந்தவர். மிக்க சிரமத்துடன் தெரிந்துகொண்டவர். ஆச்சர்யமான தபஸ்ஸை தனமாக உடையவர். அவர் பகவான் விஷ்ணுவுக்கும் பாபங்களை அபஹரிக்கும் பகவான் ஹரருக்கும் ரொம்ப பிரியமானவர். ராம நாமத்தை ஜபம் செய்தபடியால் அன்றோ, அவ்விதம் இருவர்களுடைய கிருபாபாத்ரமாக அவர் ஆனார். நாம ஜப

மகிமையினால் அல்லவோ பிரஹ்லாதன் சிறந்த ஹரிபக்தனாக விளங்கினான். [அவன் நாரதருடைய வசனத்தைக் கேட்டு ஹரிநாம ஜபம் செய்ததால் ஹரியினுடைய பக்த சிரோண் மணியாக விளங்கினான்.] (169)

[தியானம்

சமீபகாலத்தில்கூட நாரதருடைய உபதேசத்தால் அல்லவா தியாகராஜரும் சிறந்த ராமபக்தராக விளங்கினார். ஹே நாரத குருஸ்வாமி, நீர் என்னையும் அன்புடன் கடாக்ஷிக்க வேண்டும். உமக்குத் தயை வற்றிப்போய்விட்டதா? வேதங்களையும், யோக சாஸ்திரங்களையும் சங்கீத சாஸ்திரத்தையும் கரைகண்ட நிபுணரல்லவா நீர். உம்முடைய தூண்டுதலின் பேரில் புராணங் களும் ஆகமங்களும், மஹாபுருஷர்களின் சரித்திரங்களும் உலகத்தில் தோன்றின. சத்யபாமாவிடம் கிருஷ்ணனைத் தானம் செய்துகொடு என்கிற யோசனை என்போன்றவருக்கும், தியாகராஜர் போன்றவருக்கும் இன்னும் அநேக பக்தகோடி களின் நன்மைக்காகவும் ஏற்பட்டதே, அந்தயோசனை உம்மைத் தவிர வேறு யாருக்கு முடியும்? நீர்தானே நொந்துபோனவர் களுக்கும், தளர்ந்தமனம் உள்ளவர்களுக்கும் யோகிகளுக்கும், தபஸ்விகளுக்கும் ஆதாரம். பிரஹ்லாதனையும், துருவனையும், தியாகராஜரையும் அனுக்ரஹித்த மஹானே, நான் உம்முடைய கிருபைக்கும் பாத்திரமாக இருக்கவேண்டும்.]

ஹரியினுடைய நாமத்தை ஜபித்து அதனுடைய மகிமை யினால் ஸ்தானபிரம்சம் இல்லாததும், அழிவற்றதுமான துருவ பதத்தை துருவன் அடையவில்லையா? பக்த சிரோண்மணியான ஆஞ்சநேயர் புனிதமான ராம நாமத்தை ஸ்மரணை செய்தல்லவா, பகவான் ராமச்சந்திரனை வசப்படுத்தினார். (170)

நீசமான ஸம்பந்தத்தை அடைந்த அஜாமினன் என்கிற பிராமணன், கஜேந்திரன் என்கிற யானை, பிங்களை என்கிற வேசி, ஸ்ரீ ஹரியினுடைய நாமஜப பிரபாவத்தால் முக்தி அடைந்தார்கள். ஹரியினுடைய ஸ்ரேஷ்டமான நாமத்தின் பெருமையை என்னால் முடிந்தவரை சொல்லியிருக்கிறேன். சுருக்கமாகச் சொல்லுங்கால், ராமச்சந்திரன் கூட தனது ராம நாமத்தின் மகத்துவத்தைப் பூர்ணமாகச் சொல்ல முடிகிற தில்லை. (171)

ராமனுடைய நாமம் ஒரு கல்பக விருக்ஷம். மனத்தின் விருப்பங்களை அளிக்கவல்லது. மோக்ஷம் முதலிய கல்யாணங்

களை வரமாக அளிக்கவல்லது. அந்த ராம நாமத்தை ஸ்மரணை பண்ணி, பக்த சிரோன்மணியும் என்பகவானுமான துளசிதாஸர் கடூரமான ஸ்திதியிலிருந்து பவித்ரமான துளசி தளமாக மாற்றப் பட்டார். [அப்பேற்பட்ட மகத்துவம் வாய்ந்தது ராம நாமம்.] (172)

[தியானம்

நாரதகுரு ராஜரே, சரத்கால சந்திரனைப்போல நிறம் உள்ள வரே, நாராயண திவ்ய நாமத்தை சதா பாடிக்கொண்டிருப்ப வரே, நாத பிரம்மத்தின் மகரந்த ரஸத்தை தேனைக் குடிக்கும் வண்டுபோல ஆனந்தமாக பருகிக்கொண்டிருப்பவரே, உத்தம ஸ்லோக புருஷரே, உம்முடைய திவ்யதிருஷ்டிபட்ட மாத்திரம் என் தாபத்ரயங்கள் அழியுமே, தியாகராஜரும், பிரஹ்லாத துருவர்களாலும், கிருஷ்ணராலும் போற்றப்பட்ட மஹானே, உம் முடைய தர்சனமும் அனுக்ரஹமும் எனக்குக் கிட்டவேண்டும்.]

சாதாரணமாக கலியுகத்தில் மாத்திரம் சொல்லவில்லை. நான்கு யுகங்களிலும், மூன்று காலங்களிலும் ராம நாமத்தை ஜபம் செய்து ஜீவனுன எவனும் தன் சோகத்தை விலக்கிக் கொள்கிருன். வேதங்கள், புராணங்கள், சாது ஜனங்கள் ஆகிய எல்லோரும் ராம நாமத்தின் பலனுன ராமபக்தியையே ஸமஸ்த புண்ணியங்களின் ஏகமாத்திர பலன் என்று ஏகோபித்து கோஷிக்கிருர்கள் (173)

[தியானம்

சீதாராமா, நான் உனக்கு தாஸன். உன் தாஸர்களுக்கு தாஸன். நீயோ எல்லோரிடமும், மிக்க எளிமை உள்ளவனிடமும் இனிய உள்ளம் படைத்தவனுக விருக்கிருய். உன் அழகான முகம், சுபமான கீர்த்திப் பெருமைகள், யாருடைய உள்ளத்தை தான் கவராது? உன் தர்சனத்தினுல் பசும் பாலகனுன துருவன் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கி, பேசமுடியாமல் தத்தளித் தானுமே? உன்னுடைய மங்கள சரணங்களையும் புண்ணிய மான வீரச்செயல்களையும், அழகு, குணவிலாஸங்களையும் ராம கதையாகச் சொல்லிய ஆஞ்சநேயர் சீதையை ஆனந்தப்படுத்தி அவள் செய்யவிருந்த காரியத்திலிருந்து அவளை நிவ்ருத்தி செய்தாராமே? இன்றும் பகவான் சம்பு, நாரதர், சுகர், விஸ்வா மித்திரர், வஸிஷ்டர், பார்வதி, பராசரர், சௌனகர், இந்திரன், சீதாபிராட்டி ஆகியவர்கள் எவ்வளவு பிரேமையுடன் உன்னை

ஸ்மரணை பண்ணுகிறார்கள். ஹே ராமா, உன்னை வால்மீகி, சுகர் ஆகியவர்கள் பித்தனாகவும், மலை நதி செடி மிருகங்களைப் போல அஜங்கமான வஸ்துக்களைக்கூட "என் சீதா எங்கே, என் சீதையைப் பார்த்தீர்களா?" என்று வெட்கமில்லாத வசனங்களால் சீதா அன்வேஷணாக இருந்தாய் என்று சொல்லுகிறார்கள். அவ்விதமிருக்கும் ராமனுக்கு சீதையின் தர்சனம் எவ்வளவு விசேஷமாகவிருந்தது? மனிதனாகப் பிறந்த ஒருவனுக்கு உங்கள் இருவருடைய தர்சனமும், நினைவும், பக்தியும் பெரிய ஆனந்தத்தைக் கொடுக்கிறதல்லவா? இது தானே ராஜயோகம், பரம புருஷார்த்தம். இதைத்தானே எல்லோரும் வேண்டுகிறார்கள். சிரித்த முகமும், தங்கநிறமுள்ள பட்டு பீதாம்பரமும், சிவந்த மாணிக்கம் போன்ற உதடுகளும், ராஜீவலோசனனும், அழகான பல்வரிசைகளுடன் கூடினவனும், பச்சை, முத்து ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டவரும், தியாகராஜர் போன்ற பக்தர்களின் கோரிக்கைகளைக் கேட்டு அனுக்ரஹித்தவரான ஸ்ரீ ராமா, சீதாராமா என்னையும் நீ ஆட்கொள்ள வேண்டும்]

முதலில் சத்ய யுகத்தில் தியானத்தாலும், த்ரேதாவில் யாகங்களாலும், த்வாபரத்தில் பூஜை ஆராதனங்களாலும் ராமன் சந்தோஷப்படுத்தப்பட்டார். ஆனால் கலியுகத்தில் விசேஷமான பாபக்கூட்டங்களும், அசுத்தமான ஹ்ருதயங்களும் கொண்ட பாபரூபமான சமுத்திரத்தில் ஜனங்களின் மனங்கள் மத்ஸ்யங்கள் வசிப்பது போலவிருக்கின்றன. பாபங்களை விலக்குவதற்கு மனிதர்கள் பிரயத்னப்படுகிறதில்லை. இதனால் பகவத் தியானம், யாகம், ஆராதனம் ஆகியவை ஒன்றும் செய்யப்படுகிறதில்லை. (174)

அப்பேற்பட்ட அந்தகாரமான இருள் போன்ற கலியுகத்தில் ராம நாமம் கல்பதருவைப்போல விருக்கிறது. அந்த நாமத்தைத் தாரணை பண்ணி ஸம்சாரதுக்கங்களை நாசம் செய்யலாம். ராமனுடைய நாமமகிமையினால் கலியுகத்தில் மனோவாஞ்சிதமான இச்சைகளையும் பெறுகிறார்கள். ராம நாமம் பரலோகத்திற்குப் பரம ஹிதத்தைச் செய்வதாயும் இருக்கிறது. இந்த உலகத்திலும் தாய் தகப்பனைப் போலவும் ஹிதத்தைச் செய்யக் கூடியதாகவுமிருக்கிறது. (175)

இந்த கலியுகத்திலிருக்கும் யாதொரு கர்மமோ, பக்தியோ ஞானமோ இவை யாவும் ராம நாமத்தையே ஜீவாதாரமாகப் பற்றியிருக்கின்றது. கபடமாகிற கலியுக காலநேமியை வதம்

செய்வதற்கு ராம நாமமே மிக்க புகழ் உள்ளவரும், புத்திமானும் ஸமர்த்தருமான ஹனுமான்ஜியாக இருக்கிறது. (176)

[தியானம்

அஞ்சனாதேவியின் புத்திரரும், ஜானகியின் சோகத்தை நாசம் செய்தவரும், ராம காரியத்தை குறைவின்றி செய்து முடித்தவரும், அழகிய சீதையினுடைய தங்க ஆபரணங்களை மடியில் வைத்துக்கொண்டு தேவர்களுக்குச் சமமான வீரம் படைத்த ஸ்ரீராமனை மிக்க சிரமப்பட்டு ஆஸ்வாஸப்படுத்தி புதிய ஜீவனையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணினவரும், சுக்ரீவன் ஜாம்பவான் அங்கதன் போன்றவர்களுக்கு மிகப் பிரியமான வரும், அவர்களால் பகுமானிக்கப்பட்டவரும், சாந்தரும், பிரபா வத்தில் வாயுவுக்கு ஒப்பானவரும் ராமதிவாகரனான ஆஞ்ச நேயரை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். எனக்குப் பூர்ண மான கிருபையுடன் அவர் ஆதரவாகவிருக்கவேண்டும். பெரிய வெள்ளத்தினால் கரை உடைபடுவதுபோல் துக்கத்தின் எல்லையை அடைந்த சீதாப்பிராட்டியின் மனத்தை அபஹரித்த மஹானு பாவனே, அழிவற்ற கீர்த்தியுள்ளவனே, சிரஞ்சீவியே, என்னை நீதான் காப்பற்றவேண்டும். பிரஹஸ்பதியும் இந்திரனும் பிரும்மாவும் அக்னியும் எனக்குத் துணை செய்வார்களாக. அவர் களை நமஸ்கரித்து நான் ஆஞ்சநேயருடைய மஹா பிரசாதத்தை அடையவேண்டும் ]

ராம நாமம் பிரஹ்லாதனுக்கு அருள்செய்த (ஸர்வ பக்த பிரியனும் தேஜஸ்ஸில் மிக்க உக்ரமானவரும் ஜ்வலிப்ப வரும், எல்லாத் திசைகளிலும் முகத்தை உடையவரும், மரணம் முதலான பயங்களைப் போக்குகிறவரும், மங்களங்களை அளிக்கும் வள்ளலும், பிருஸ்னிகர்ப்பன், விஸ்வகர்ப்பன் என்று பக்தர்களால் புகழப்படுகிறவரும், லக்ஷ்மிதேவிக்கு மிக்கப் பிரியருமான) நரசிம்ம மூர்த்தியாக விளங்கி காப்பாற்றுகிறது. கலியுகமானது ஹிரண்யகசிபைப் போல ஒரு ராக்ஷஸனாகவிருக்கிறான். ராம நாமத்தை ஜபம் பண்ணுகிற மஹா ஜனங்கள் பக்த சிரோன் மணியான பிரஹ்லாத ஆழ்வாரைப் போன்றவர்களாகயிருக் கிறார்கள். தேவதைகளின் சத்ருக்களை நாசம் செய்து, சாது ஜனங்களை இந்த நாமம் காப்பாற்றுகிறது. (177)

சுகந்தமான ஸ்ரீராம நாமம் நல்ல பிரேமையினாலோ அல்லது கெட்ட ஸ்வபாவத்தினாலோ, க்ரோதத்தினாலோ, கொட்டாவி விடும் சமயம் போன்ற சோம்பலினாலோ எந்த விதமான

அவஸ்தையிலோ அல்லது ஸ்வபாவத்திலுலும் ஜபம் பண்ணப் பட்டாலும் பத்து திசைகளிலும் அது மங்களங்களை விளைவிக் கிறது. அப்பேற்பட்ட மகத்துவம் வாய்ந்த ஸ்ரீராம நாமத்தை ஸ்மரணை பண்ணி, ஆனந்த மூர்த்தியான ரகுநாதரை சிரஸிலுலும், எட்டுவித கரணங்களாலும், நான் தாமும் தடக்கையுடன் பூர்ணமாக பூமியில் விழுந்து படிந்து நமஸ் கரித்து ராம குணவிலாஸங்களை, துளசிதாஸரின் பூர்ண அருள் பெற்று, வர்ணனை செய்ய முயல்கிறேன். (178)

துளசிதாஸர் சொல்லுகிறுர்: "ஹே ராமா, உன்னுடைய கருணை வற்றுத சமுத்திரம். என்னுடைய குற்றம் குறைகளை நீ நிவர்த்தி பண்ணவேண்டும். உன்னுடைய க்ருபை என்னைப் போன்றவர்களுக்கு ஆதாரமாக விருக்கட்டும். எப்போதும் வற்றுதபடி என்னிடம் பூர்த்தியாக விருக்கட்டும். உன்னைவிட உத்தமமான ஸ்வாமியோ, புருஷனே இருக்க முடியாது. என்னைவிட மட்டமான சேவகனும், புருஷனும் யாரும் இல்லை, இருக்க முடியாது. இவ்வளவு குறைகளை வைத்துக்கொண்டு, தயாநிதியாகிய உம்மை நேராக நோக்கி, "என்னைக் காப் பாற்று" என்று என்னுல் கேட்கப்படுகிறது. (பிரேமையுடன் ஒரு பசுங் கன்று பெருங் பசுக்கூட்டத்தில் தன்னுடைய தாயை அடைவதுபோல நான் உன்னைச் சரணமடைகிறேன் பிரபு.) (179)

லோகத்தினர்களும், வேதங்களும் ஏகமனதாக கோஷிக் கிறது என்னவென்றுல், நல்ல மனம் படைத்த குருவினுடைய கடாக்ஷம் அவரிடம் விஸ்வாஸமுள்ள பக்தனையும் அவனுடைய வினய நம்ரதிகளையும் ஸம்பத்தையும் எளிதில் அறிகிறது. சிஷ்யன் எளிமையான ஸ்திதியிலிருந்தாலும் அவனுல் சமர் பிக்கப்பட்ட கோரிக்கைகளை குருபூர்த்தி செய்கிறுர். பணக் காரர்கள், ஏழைகள், நாட்டுப்புறம் நகரத்து ஜனங்கள், பண்டிதர்கள் மூர்க்கர்கள், கெட்ட பெயரையும் தீன ஸ்திதியையும் அடைந்தவர்கள், சுபமான கீர்த்தியை உடையவர்கள், (180)

நல்ல கற்பனை மனேபாவம் படைத்த கவிகள், கெட்ட ஸ்வபாவமுள்ள கவிகள், ஸ்திரீகள், புருஷர்கள் ஆகிய எல்லோரும் தங்கள் தங்கள் புத்திக்கு அனுசரணையாக கடவுளின் ஒரு சிறிய அம்சமாகிற மஹாராஜாவினுடைய கீர்த்தி களைப் புகழ்கிறுர்கள். அதனுல் அவனிடமிருந்து ஸன்மானங் களை அடைகிறுர்கள். ஆனுல் சாது ஜனங்கள், புத்திமான்கள் சமம் தமம் படைத்த சுசீலமானவர்கள், ஈஸ்வரனுடைய அம்சத்

  

தினுல் ஏற்பட்ட மஹாராஜாவிடம் மிக்க கிருபையுடன் தங்கள் குறைகளையும் விண்ணப்பிக்கிருர்கள். (181)

அந்த அரசனும் எல்லாவற்றையும் பூர்ணமாகக் கேட்டு, புத்தியினுல் ஆராய்ந்து, அவைகளின் சப்தங்கள், பக்தி வினயத்துடன் சொல்லப்பட்ட குணங்கள், அதனுடைய இதர மேன்மைகள் எல்லாவற்றையும் தீர விசாரித்து, வாக்குக்களினுலும் வெகுமதியாகிற ஸன்மானங்களாலும் அவர்களை யதா யோக்கியமாக கௌரவிக்கிருர். இந்த ஸ்வபாவமானது ஸம்சாரியான மஹாராஜாவுக்கு இருக்கிறது. இந்த விதமான வியவஸ்தை சாதாரணமான லௌகிக அரசர்களுக்கு இருக்குமாகில், பரந்த மனது உடையவரும், கருணை ததும்பும் முகவிலாஸத்துடன் இருப்பவரும், அறிவின் முடிவாக விளங்குபவரும், கர்ப்ப ஸ்ரீமானும், சக்ரவர்த்தித் திருக்குமாரருமான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பற்றி சொல்லுவானேன்? (182)

பகவான் ஸ்ரீராமச்சந்திரன் சுத்தமான அன்பினுல் எல்லோரையும் சந்தோஷப்படுத்துகிருர். ஆனுல் என்னைப் போன்ற மூர்க்கனும் மலினமான அறிவு உள்ளவனும் இந்த உலகத்தில் யார் இருக்கமுடியும்? (183)

எந்தவிதமாக இருந்தபோதிலும் கிருபாளுவான ஸ்ரீராமச்சந்திரன் துஷ்டசேவகனை என்னை கைவிட்டுவிடுவாரா? என்னையும் காப்பாற்றுவார் என்கிற நம்பிக்கை எனக்கு இருந்து வருகிறது. அந்த மஹானுபாவரின் கருணையினுல் மலைக்கற்கள் தண்ணீரில் மிதக்கும்படி செய்யப்படவில்லையா? கரடிகளையும் சஞ்சல ஸ்வபாவமுள்ள வானரங்களையும் அவர் தன்னுடைய புத்தியுள்ள மந்திரிகளாகப் பாவிக்கவில்லையா? (184)

எல்லா ஜனங்களும் என்னை ஸ்ரீராமனுடைய பக்த சிரோண்மணி என்று புகழ்கிருர்கள். நானும் லஜ்ஜையின்றி ராமபக்தன், ராமதாஸன் என்று சொல்லிக்கொள்கிறேன். கிருபாளுவானவரும், அந்தர்யாமியான ஸ்ரீராமர் இந்த வார்த்தைகளைக் கேட்டு சகித்துக்கொண்டுதானிருக்கிருர். "ஹே சீதாராமா, நீர் துளசிதாஸரின் சிஷ்யனை எனக்கும் எஜமானர். என் ஸ்வாமி துளசிதாஸரும் நானும் உமக்குச் சேவகர்கள். உங்களுக்காகவே நானும் வாழ விரும்புகிறேன்." (185)

என்னுடைய மூர்க்க குணங்கள், பாபங்கள் கணக்கில்லாதவைகள். என்னுடைய பாபங்களைக் கேட்டு அந்தகாரமானவைகளும் கொடியவைகளுமான நரகங்கள்கூட நான் வசிப்பதற்கு தகுதியில்லை என்று நிந்தித்து என்னை உதறித் தள்ளி

விடும். இதை நான் நன்கு உணர்ந்துகொண்டு பயத்தினுல் நடு நடுங்குகிறேன். ஆனுல் தயாளுவான ஸ்ரீராமச்சந்திரன் என் குற்றங்களை ஸ்வப்னத்தில் கூட நினைக்கிறதில்லை. (186)

[தியானம்

ஹே கோதண்டராமா, சங்கசக்ர கதாயுதா, ஸ்காந்த புரணத்தில், ஸுலபமாக அடையக்கூடியதும், அடையமுடியாததும், மனதில் தோன்றும் சகல அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வதும், ஜயில் சத்ரு இவைகளிடமிருந்து விடுதலையை அளிக்கக்கூடியதும், ஸர்வ சுப பலன்களையும் மனிதன் ஸ்ரீசுந்தரகாண்டத்தைப் படிப்பதால் அடையக்கூடும், என்று சொல்லப்பட்டிருக்கிறது. ககுத்ஸ குலத்தில் பிறந்த ஸ்ரீராமனை மனதினுல் தியானித்து, வணங்கி, எவன் ஒருவன் சுந்தர காண்டத்தை பக்தியுடன் படிப்பானுகில் அவனுக்கு நூற்றுக் கணக்கான ஜன்மங்களில் செய்து தேங்கிக் கிடக்கும் பாபக் கூட்டங்களை ஸனுதனரும் மிகவும் பிரஸன்னருமான ஸ்ரீராமன் நாசம் செய்யவிருக்கையில் மனதினுல் எண்ணப்படும் அபீஷ்டங்களை அவன் இனிய முகத்துடன் நிறைவேற்றுவான் என்பதில் என்ன தடை யிருக்கக்கூடும் என்று நாங்கள் யோசிக்கிருேம்.]

[தியானம்

சீதாராமா, கங்கையைப் போன்ற புனிதமான நதி கிடையாது. சகலவிதமான பாபங்களைப் போக்கக் கூடியது. கோதண்டபாணியான ராமன் பூமியில் அவதரித்த சமயம் அதுவும் பிறருக்கு என்று வாழ்ந்துவரும் ரகுகுலத்தில் பிறந்தது முதல், கங்கையின் பெருமையையும்கூட கொஞ்சம் குறைவு பட்டுப்போகிறது. அயோத்தியில் பிறந்த எல்லோரும் ஸ்ரீராமனை நேசித்துவந்த பாக்யத்தால் அவனுடைய பதத்தை அவர்கள் இறுதியில் அடைந்தார்கள். எல்லோராலும் வேண்டப்படும் மஹாலக்ஷ்மி ஸ்ரீராமனை நினைக்கும் பொருட்டு ஜானகியாக அவதரித்தாள். ராமா, உன்னுடைய சுபமான ராமநாமமானது போதிக்கப்பட்டதும் அனுஷ்டிக்கப்பட்டதுமான சகலதர்மங்களை விட பெரியதல்லவா? சகல தர்மங்களுக்கும் ஆதாரமாகவும் விளங்குகிறதல்லவா? ராம அவதாரத்தில் கோதண்டபாணியாகவும், கிருஷ்ணுவதாரத்தில் சக்கிராயுதனுகவும் அலங்கரித்து காலசக்ரத்தை துரிதமாக ஓட்டி சாதுக்களை ரக்ஷித்தாயல்லவா? நீரே எனக்குத் தஞ்சம். நீரே கௌஸல்யையின் வயிற்றிலும்,

  

தேவகியின் வயிற்றிலும் தோன்றின புண்ணிய ராசி. யாதவர்களும் அயோத்யாபுரிவாசிகளும் என்ன பாக்யம் செய்தவர்கள்? உன்னுடைய சேர்க்கை பாக்கியத்தினுல் அல்லவா, அவர்கள் தங்கள் தாபங்கள் பாபங்கள் ஆகியவைகளைப் போக்கிக் கொண்டார்கள். ஒன்றும் அறியாத பாமர ஜனங்களும் கோபிகைகளும் உன்னை வந்தடைந்தார்கள். அப்பேற்பட்ட மஹாத்மாவான உனக்கும், உன் திருநாமத்துக்கும் எப்பொழுதும் மங்களங்களும் ஜயங்களும் உண்டாகட்டும்.]

ராமா, என்னுடைய குணங்களைக் கேட்டும், என் மனோபீஷ்டங்களையும் தெரிந்துகொண்டும், குளிர்ந்த பார்வையினுல் என்னைப் பார்த்தும், என் பக்தியையும் உள்ளன்பையும் தெரிந்துகொண்டும் என்னை நீ கடாக்ஷிக்கவேண்டும். அவ்விதமே நீ சங்கல்பம் கொண்டாய் என்று நான் நினைக்கிறேன். உள்ளத்தில் பாபங்களின் சுமையால் நடுங்கும் என்னைப்போன்ற தீனனுக்கு உன் காருண்யமானது எவ்வளவு தைரியத்தையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணுவதாக விருக்கிறது? நானே என் வாய்விட்டு என்னைப் புகழ்வதால் யேற்படும் பாபத்தையும் நீ கவனிக்கிருயில்லை. நான் பகவான் (நாராயணனுக்குச் சேவகன்) ராமபக்தன் என்று என்னைப் பற்றிக் கோஷிக்கும் போதே, எனக்கு அவருடைய கிருபையைப் பெற அருகதை இல்லாவிடினும், என்மனது அவனையே நாடுகிறது. இதை என் பிரபு நன்கு அறிவார். அதனுல் ராமகிருபா பாத்திரனுகி விட்டேன் என்று திடமாய் நான் நம்புகிறேன். (187)

என் பிரபு உதார மனஸுள்ளவர். தன்னுடைய சித்தத்தில் என்னுடைய பக்திபூர்ணமான பிரேமையைத்தான் அவர் நினைக்கிருர். என்னுடைய மலைபோன்ற குற்றங்கள் எல்லாவற்றையும் அவர் மறந்துவிடுகிருர். என் மனோநோக்கத்தை அவர் புரிந்துகொள்கிருர். நூறு தடவைகள் தெரிந்து கொள்கிருர். எந்த பாபத்திற்காக வாலியை தான் வேடராஜா என்று சொல்லிக் கொண்டும் வாலியிடமே சொல்லியும் அவனையும் கொன்ருரோ; அதே பாபத்தைப் பிற்பாடு செய்த சுக்ரீவனிடம் பக்தன் என்று கருணைகாட்டி சும்மாவிருந்தார். அதேமாதிரி ப்ராத்ருத்ரோஹம் என்கிற குற்றத்தை விபீஷணன் கூட செய்து பாபத்தை அடைந்தான். என் பிரபு ஶ்ரீராமச்சந்திரன் அவனுடைய தோஷத்தையும் பொருட்படுத்தவில்லை. (ராவணனை தானே தகனம் பண்ணுகிறேன் என்று சொல்லி விபீஷணனைக் கடிந்தான்.) அந்த ஸ்வபாவத்தினுல் அல்லவோ உத்தம

ஸ்லோகனுன பரத நம்பியிடம் வனவாசம் முடிந்து திரும்பிச் சந்தித்த சமயம் ராமன் புகழ்பெற்ற சுக்ரீவ விபீஷண தியாகத்தையும் கைங்கர்யங்களையும் குணவிலாஸங்களையும் ராஜதர்பாரில் எல்லோர் முன்னிலையிலும் புகழ்தான். (188)

பிரபு ஸ்ரீராமச்சந்திரன் ஒரு மரத்தின் அடியிலும் குரங்குகள் மரத்தின் மேலேயும் கிளைகளிலும் வீற்றிருப்பதை நினைப்பதற்கே கூச்சமாகவிருக்கிறது. அப்பேர்பட்டவர்களை "இவர்கள் என் பந்துக்கள், என் ஸ்வஜனங்கள்" என்று பறைசாற்றி இந்திரனிடம் மரியாதை நிறைந்த ராமன் சொன்னுன். புருஷோத்தமனும் ஸச்சிதானந்தமய பரமாத்மாவுமான ஸ்ரீராமன் எங்கே, மரத்தின் கிளைகளில் சஞ்சரிக்கும் சஞ்சல புத்தியுள்ள குரங்குகள் எங்கே! ஆனுல் அவன் இப்பேற்பட்ட வானரங்களையும் தனக்கிடாக பண்ணிக்கொண்டானல்லவா? ஹே மனமே, ஸ்ரீராமச்சந்திரனைப் போல மஹா கருணை உள்ளம் படைத்த ஸ்வாமி எங்கு இருக்கக் கூடும்? (189)

"ஹே ராமா நீ க்ஷேமமாகவிருந்தால் எல்லோருக்கும் நல்லது. உன்னுடைய கல்யாணகுணங்கள் நிறைந்த ஸ்வபாவம் எல்லோருக்கும் மங்களங்களை உண்டுபண்ணுகிறது. இந்த வார்த்தை சத்யமாகில், துளசிதாஸருக்கும் எனக்கும் சதா மங்களங்கள் நேரிடட்டும்." (190)

இந்தவிதமாக என்னுடைய குணதோஷங்களை விபரமாகச் சொல்லிவிட்டு எல்லோருக்கும் நான் தலையால் வணங்கி, நான் ஸ்ரீரகுநாதனுடைய நிர்மலமான யசஸுகள் அடங்கிய சரித்திரத்தை வர்ணனை செய்கிறேன். அப்பேர்பட்ட புண்ய ஸ்லோகனின் கிர்த்திகளைக் கேட்டமாத்திரம் கலியுகத்தின் பாபங்கள் நஷ்டமடைகின்றன. (191)

இந்த மஹாபுண்ய சரித்திரம் என் ஆசாரியரான யாக்ஞவல்கியர் முனிஸ்ரேஷ்டரான பரத்வாஜருக்குச் சொல்லப்பட்ட ராமகதை. அப்பேர்பட்ட சம்வாதத்தை நான் மீண்டும் எடுத்துச் சொல்கிறேன். ஹே சாது ஜனங்களே, இந்தக் கதையைக் கேட்டு சந்தோஷமடையுங்கள். (192)

பகவான் சம்பு இந்த அழகான ராமகதையை முதலில் ரசனை செய்தார். பிறகு கிருபை கூர்ந்து அவர் பார்வதிதேவிக்குச் சொன்னுர். அந்த மஹாசரித்திரம் சம்புவினுல் மறுபடியும் மஹா ராமபக்தனும் தகுதியுள்ளவருமான காகபுசுண்டி என்பவருக்கு அளிக்கப்பட்டது. (193)

அந்த காகபுஸண்டி யாக்ஞயவல்கிய மஹரிஷிக்கு உபதேசித்தார். அவரால் பரத்வாஜ முனிவருக்குக் கொடுக்கப்பட்டது. யாக்ஞ்யவல்கியரும், பரத்வாஜரும் ஒருவருக்கொருவர் சீலத்திலும், சமதரிசனத்திலும் சமமானவர்கள். ஶ்ரீ ஹரியினுடைய லீலைகளைப் பூர்ணமாக அறிந்தவர்கள். (194)

அந்த இரண்டு மஹரிஷிகளும் மூன்று காலங்களை அறியும் திறமை உள்ளவர்கள். எல்லா விஷயங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல பிரத்யக்ஷமாகப் பார்க்கும் திறமை உள்ளவர்கள். இன்னும் அநேக மஹான்கள் பகவான் நாராயணருடைய லீலைகளின் மர்மங்களை அறிந்த ஹரிபக்தர்கள் பல பேர்கள் இருக்கின்றனர். அவர்களும் இந்த ராமசரித்திரத்தை நானுபிரகாரமாகச் சொல்லியிருக்கிறார்கள். பிறர் சொல்லியும் கேட்கிறார்கள். அவைகளைப் பலவிதமாக தெரிந்துகொள்ளுகிறார்கள். மீண்டும் தெரிந்துகொள்ள ஆசைபடுகிறார்கள். (195)

பிறகு இதே கதையை நான் வராஹக்ஷேத்திரத்தில் (சூகர் கேத்சோரான் என்றும் சொல்லப்படுகிறது), (Western U. P.) என் குருநாதரிடமிருந்து கேட்டேன். அந்த சமயம் நான் இளவயதினன்; அறிவு போருதவன். நான் விஷயங்களைச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. (196)

[தியானம்

ஹே ராமா, தேவதேவா, பிரணதார்த்திஹரா, சங்கடங்களைப் போக்கும் ஜானகிராமா, உன்னை நமஸ்கரித்து சரணமடைகிறேன். கானல்நீரை சத்யமான நீர் என்று நம்பி ஏமாறுவது போல இந்திரிய சுகங்களையும், ஐஸ்வரியம், மதம் இவைகளால் படைத்த கர்வ உள்ளத்துடனும் மாயையான சம்சாரத்தை நம்பி இந்த கதியை அடைந்தேன். பிறரை ஏமாற்றுவது, பிறருக்கு துக்கம் சம்பவிப்பது, இவைகளில் ஆனந்தமடைந்த என் உள்ளத்தை நீர் உமது கிருபையால்தான் சம்ஹரித்து என்னை ஆட்கொள்ள வேண்டும். காலத்தின் கதியை யாரும் தாண்ட முடியாது. அதனால் மிகக் கஷ்டதிசையை அடைந்தவர்கள் உன்னையே உபாயமாக நம்பி உன்னையே அடைகிறார்கள் அல்லவோ? மூவுலகங்களின் சாம்ராஜ்யத்தையோ, தேவ பதத்தையோ, நாகலோக பதத்தையோ அல்லது மற்றும் அழிவதான எந்த மேலான பதத்தையும் நான் விரும்பவில்லை. சிருஷ்டித்தொழிலில் ஏவப்பட்ட அதிகார புருஷர்கள் மரீசி முதலிய ஞானிகளுடைய பதத்தைக்கூட நான் விரும்பவில்லை.

பரபிரம்மமான உன்னைப் பற்றின ஞானமும், ருசியும், பிரம்ம நாட்டமுடையவனாக உன் வாசுதேவ ஸ்வரூபத்தை மார்கண்டேயரும், அர்ஜுனனும், உதங்கரும், தேவகியும், கௌஸல்யையும், தசரதரும், அகஸ்தியர், விஸ்வாமித்திரர், பராசரர், வஸிஷ்டர், சுகர் போன்ற மகரிஷிகளும் ஆஞ்சநேயர் போன்ற வானரக் கூட்டங்களும், துருவனும், பிரஹ்லாதரும், தியாகராஜரும், நாரதரும் அனுபவித்தமாதிரி உன்னையும் உன் பிரிய சதியுமான ஜானகியையும் நான் சரணாம்புஜமாக வந்தடைந்தேன். ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வாசுதேவனாகவும் பாபங்களைப் போக்கும் மஹேஸ்வரராகவும், பரமாத்மாவாகவும் சரணமடைந்தவர்களின் கிலேசத்தைப் போக்குகிறவராகவும், கோவிந்தராயும் கோதண்டராமனாகவும் நான் நினைத்து உன்னை சரணம் அடைந்தேன். என்னை நீதான் காப்பாற்ற வேண்டும்.]

ஸ்ரீராமனுடைய மர்மமான கதாமிருதத்தைச் சொல்லுகிறவனும், கேட்கிறவனும், கேட்கச் செய்கிறவனும் ஞானத்தினுடைய பொக்கிஷத்தை அடைகிறார்கள். கலியுகத்தின் பாபக் கூட்டங்களினால் அமுக்கப்பட்டவனும் மஹாமூடனும் உணர்ச்சியற்ற மரம்போல இருக்கும் என்னால் அதை எப்படி சுலபமாக கிரஹிக்கக்கூடும்? (197)

இவ்வளவு தாழ்ந்த ஸ்திதியிலிருந்த போதிலும், மஹா கிருபையுடன் என் குருநாதர் என்மீது அவருக்கிருந்த மஹா அனுக்ரஹத்தாலும் வாத்ஸல்யத்தாலும் மகத்தான நம்பிக்கையில் பிறந்த உதார ஹ்ருதயத்தாலும் அடிக்கடி ராமகதை என்னும் அம்ருதத்தை அவர் என்னைப் பருகச் சொன்னார். கொஞ்சம் கொஞ்சமாக மந்தமான என்புத்திக்கு வர ஆரம்பித்தது. அந்த கதையைத்தான் நான் ராமனுடைய அனுக்ரஹம் பெற்றுக் கொண்டு என்னுடைய கடினமான நாக்கினால் சொல்ல ஆரம்பிக்கிறேன். அதனால் என் மனது குதூகலத்தினால் துள்ளுகிறது. (198)

எனக்கு புத்தியோ அல்லது விவேகத்தின் பலமோ கொஞ்சமாவது இருக்குமாகில், என்னுடைய ஹ்ருதயம் ஹரியினுடைய தூண்டுதலினால் ஏவப்பட்டு சொல்லயத்தனிக்கிறது. என்னுடைய சந்தேகங்கள் அக்ஞான மயமான சொற்கள் மதத்தினாலோ மயக்கத்தினாலோ ஏவப்பட்ட வார்த்தைகள் எல்லாம் அறுபட்டு, எல்லா அசுபங்களும் சந்தேகங்களும் என்னைவிட்டு அறவே நீங்கி, என்னை இந்த ராமகதையானது சம்சாரமாகிய நதியின் அக்கரையை அடையவிக்க ஓடமாகவிருக்கட்டும். (199)

பகவான் ராமச்சந்திரனுடைய அழகான கதாமிருதம் பண்டிதர்களுக்கு விஸ்ராமமான சாந்தியை அளிக்கிறது. எல்லா ஜனங்களுக்கும் ஹ்ருதயத்தில் ஆனந்தத்தைக் கொடுக்கிறது. கலியுகத்தின் பாபங்களை நாசம் செய்கிறது. கலியுகத்தின் ரூப மான சர்பத்தை அடக்கும் மயில்போல ராமகதை மஹத்வம் பெற்றதாகவிருக்கிறது. விவேகரூபியான அக்னியைத் தூண்டிப் பிரகாசிக்கச் செய்வதற்கு அரணிக் கட்டையைப் போல உதவச் செய்கிறது. (200)

[தியானம்

ஹே ராமா உன்னைவிட எனக்கு பெரியநிதி என்ன இருக்கிறது? தவத்தையே தனமாகக்கொண்ட முனிவர்களும், யோகிகளும் பிரும்மாவும் இந்திராதி தேவர்களுக்கும் கிடைத்து உன்னைத் தரிசனம் பண்ணின பாக்யம் எனக்கு சுலபமாகக் கிட்டுமா? ஆதிசேஷன் மேல் வீற்றிருப்பவரும் தும்புரு நாரதர் அம்பரீஷன் போன்ற பக்தர்களால் புகழப்படுகிறவரும் உன் பாதங்களை என்னைப் போன்ற எளியவர்கள் மல்லிகைப் பூகொண்டு உன் பிரியையான மஹாலக்ஷ்மியையும் பூஜிக்கவும் அர்ச்சிக்கவும் பாக்யம் கிடைக்குமா? தியாகராஜர் உன்னை நாதவெள்ள மயத்தில் உன் கருணையைப் பாட, ஊர்வசி, கிருதாசி போன்ற அப்சரஸ்கள் மணிகளாலும் சலங்கைகளாலும் அலங்கரிக்கப்பட்டு, நாட்டியம் ஆட, மஹரிஷிகள் ஸ்ரீசூக்தங்களினுல் துதிக்க அதனுல் உங்கள் இருவர்களின் கன்னப் பிரதேசங்கள் சிவக்க, தயையுடன் கூடிய பார்வைகளுடன் என்னைப் பார்க்க—அந்த காக்ஷியை நான் எவ்விதம் அடிக்கடி காண்பேன்? உன் மகர குண்டலங்களும் முத்துஹாரமும் ரத்ன கிரீடமும் காயாம்பு வர்ண தேகமும் மந்த ஹாஸத்துடன் விளங்கும் அழகான திருமுக மண்டலமும் என் மனதில் சதா தோன்றும்படி அனுக்ரஹிப்பாயாக. ராமபிரும்மத்தின் மகன் உன்னைத் துதித்தபடி எனக்கும் நீ அருள்வாயாக.]

[தியானம்

ஹே மஹரிஷிகளே, ராம பக்த ஜனங்களே, நான் உங்கள் அனைவரையும் நமஸ்கரிக்கிறேன். நாதவித்யையில் தேர்ச்சி பெற்ற மஹான்களுக்கு நமஸ்காரம். சாமவேத கானத்தில் தேர்ச்சி பெற்ற மஹா புருஷர்களுக்கு நமஸ்காரம். நாதமாகிற ஆத்மாவைக் கொண்ட சப்த ஸ்வரங்களுக்கு நமஸ்காரம். நாத வித்யையின் குரு பரம்பரையைச் சேர்ந்தவர்களும், பூர்வாசாரியர்

1406—12

களுமான லக்ஷ்மி தேவி, பார்வதி தேவி, சரஸ்வதி தேவி, சாவித்திரி, பிரும்மா, விஷ்ணு, சிவன், நாரதர், இந்திரன், பரதர், காஸ்யபர், சண்டிகேஸ்வரர், ஆஞ்சநேயர், குஹனாகிய சுப்ரமண்யர், ஓங்கார வடிவமான விக்னேஸ்வரர், மார்க்கண்டேயர், அகஸ்தியர், தும்புரு, சோமேஸ்வரர், சார்ங்கதேவர், நந்தி மதங்கர், தியாகராஜர் ஆகிய மஹான்களுக்கும், அநேக நாதோபஸகர்களுக்கும் நான் நமஸ்கரிக்கிறேன். என் குரு நாதரான ஹயக்ரீவர் எனக்கு அருள் செய்ய வேண்டும். தியாகராஜர் காலத்தில் வாழ்ந்து வந்த சியாமா சாஸ்திரிகள் முத்துஸ்வாமி தீக்ஷிதரும் என்னைக் கிருபையுடன் பாலிக்க வேண்டும். இவர்களின் அனுக்ரஹத்தின் பேரில், துளசிதாஸர் எழுதின ராம கதா அம்ருதம் என்கிற ராமசரித மானஸ் என்பதை எழுத ஆரம்பிக்கிறேன். ராமனுடன் கூட அவதாரம் செய்த சீதை, சௌமித்திரி என்று சொல்லப்படும் லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் என்று சொல்லப்படும் நான்கு வித புருஷார்த்தங்களான தர்மம் அர்த்தம் காமமோக்ஷம் ஆகியவைகளை அளிக்கும் ராம கதையை ஸமர்ப்பிக்கிறேன். ஆனந்தம், சௌக்யம், தைரியம் ஆகியவைகளுக்கு நிகேதனமாக ராம கதை விளங்குகிறதல்லவா? கலியின் பாபங்களைப் போக்கி, கர்ம பந்தங்களை நாசம் செய்து சம்சாரக் கடலைத் தாண்ட வைக்கும் ஓடமாக விளங்குகிறதல்லவா?]

ராமசரித மானஸரோவர் கலியுகத்தில் எல்லா மனோரதங்களைப் பூர்த்தி செய்து ஆனந்தத்தைக் கொடுக்கும். காமதேனு பசுவைப் போலவும், சாதுக்களுக்கு நல்ல சஞ்சீவினி போன்ற ஓஷதியாகவும் விளங்குகிறது. இந்த சம்சார பூமியில் அம்ருத வடிவான நதி ஒன்று வருவது போலிருக்கிறது. ஜனன மரணங்களின் தாபங்களையும் பயங்களையும் அறுத்து விடுகிறது. பிரமை மயக்கம் மோஹம் போன்ற தவளைகளைச் சாப்பிடும் பெரிய நாகசர்ப்பம் போல அல்லவா விளங்குகிறது? (201)

இந்த அழகான ராமசரித மானஸரோவர் பார்வதி தேவி துர்க்கா தேவியைப்போல அசுர சேனைகளுக்குத் துன்பத்தைத் தந்தும், தருவதும், பிராம்மணர்களுக்கும் சாதுக்களுக்கும் ஹிதத்தை தருவதுமாக விருக்கிறது. இந்த ராம கதையானது க்ஷீரஸமுத்திரத்தில் உண்டான லக்ஷ்மி தேவியைப்போல சாது சங்கங்களுக்குச் சமமாக விளங்குகிறது. பூர்ணமாகிய இந்த விஸ்வத்தின் பாரத்தைத் தூக்குவதிலும் தாங்குவதிலும், அசையாத பூமிதேவிக்கு சமமாகவிருக்கிறது. (202)

யம தூதர்களை விரட்டி, அவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணும் டில்லியில் உள்ள யமுனாதேவியைப் போல விளங்கு கிறது. ஜீவர்களுக்கு முக்தியைத் தரும் விஷயத்தில் அவ் யக்த க்ஷேத்திரமாகிய வாரணசி (காசி) க்ஷேத்ரம் போலிருக் கிறது. சிறந்த ராம பக்தராகிய துளசிதாஸருக்கு இந்த ராம கதையானது ஸர்வ ஸ்ரேஷ்டமான துளசி தளத்திற்குச் சமமாக விருக்கிறது. இன்னும் (ராம பிரும்மம் சீதாலக்ஷ்மி எப்படி தியாகராஜருக்கு விளங்கினார்களோ, அதேபோல) துளசிதாஸ ருக்கு ஆத்மா ராம் த்யூபே, தாயான ஹுளசியைப்போல ஹ்ருதயத்தை ஆனந்தப்படுத்துகிறது. (எனக்கு சீனிவாஸன் அலமேலுவைப் போல இன்பத்தைத் தருகிறது.) (203)

இந்த ராம கதை சிவனுக்கு மிக்கப் பிரியத்தை உண்டு பண்ணும் மேகலா தேவியின் புத்ரியான நர்மதா தேவிக்குச் சமமாகவிருக்கிறது. சகலவிதமான சித்தி, ஸம்பத்தி, சுகம் முதலிய ஐஸ்வர்யங்களுக்கு ஒரு கோசமாக விளங்குகிறது. ஸத்குண ஸ்வரூபமான தேவதைகளுக்குத் தாயானவளும், தேவர் களை ஆபத்துக்களிலிருந்து தாண்டவைத்தவளுமான அதிதி தேவதையைப்போல விருக்கிறது. ஸ்ரீ ரகுநாதனின் பக்தி பிரேமை முதலிய சம்பத்துக்களைப் பயக்கவைக்கும் பெரிய பரி ணமத்தின் எல்லை வரம்பாகாவுமிருக்கிறது. (204)

இந்த பாக்யமான ராமசரித மானஸரோவர் பரம அதிருஷ்ட சாலியானவரும், புண்யங்களின் ராசியுமான துளசிதாஸருக்கு ஆஞ்சநேயர், சீதா ராம லக்ஷ்மண பரத சத்ருக்னதிகளுடன் தர் சனம் தந்த மந்தாகினி நதியின் தீரத்தைப்போல விளங்குகிறது. சுந்தரமானதும் நிர்மலமானதுமான உள்ளம் படைத்த சித்ரகூட மலையைப்போல விளங்குகிறது. இவைகளில் அடர்ந்து சூழ்ந் திருக்கும் பில்வ துளசி காடுகளைப்போல துளசிதாஸருக்கு பரம மித்ரத்தவத்தை உடையதாகச் சோபிக்கிறது. இப்பேர்பட்ட சோபையுள்ள வனங்களில் என் தாயான ஜானகியும் ராமனும் லக்ஷ்மணனுடன்கூட அலைந்து திரிகிறார்கள் அல்லவா? (205)

இந்த ராமசரித மானஸரோவர் புகழ் பெற்றதாகவும் எல்லா மஹான்களாலும், ஆஞ்சநேயர், (ராமபிரான் ஜானகிதேவி) சம்பு, பார்வதி, கருடன், காகபுசுண்டி, பரத்வாஜர் யாக்ஞ்ய வல்கியர் இன்னும் அநேக ராம பக்தர்களாலும் சிறந்ததென்றும் பஹுமா னிக்கப்பட்டது. இது அழகிய சிந்தரமணி ரத்னத்தைப்போல பிரகாசிக்கிறது. ஸாதுக்களின் அழகிய புத்தி ரூபமுள்ள ஸ்திரீ யைப் ப்ரேரணை செய்யும் ஸ்ருங்கார ரஸமாகவுள்ளது. ஸ்ரீ ராமச்

சந்திரனுடைய அழகான குண விலாஸங்கள் இந்த ஜகத்திற்கு மங்களங்களை உண்டுபண்ணக் கூடியது. இன்னும் முக்தி, தனம், தர்மம், பாகவத தர்மம் ஸ்ரீநிகேதனம் என்று புகழப்படும் ஸ்ரீவைகுண்டம் ஆகிற பரம் தாம், தத்விஷ்ணோ: பரமம் பதம் என்று புகழப்படும் பரமபதத்தையும் அளிக்கக்கூடியதாக விருக்கிறது.

[எந்த பதத்தில் நரநாராயண ரிஷிகளும், பிரும்மா காயத்திரி ஸாவித்திரி சரஸ்வதி, வேதவியாஸர், பராசரர், சுகர், பாகவத சிரோண்மணிகளான கருடன் அனந்த விஷ்வக்ஸேனர், குபேரன், பிரஹ்லாதன், துருவன், சிவன் பார்வதி, நாரதர் தும்புரு, உத்தவர், பீஷ்மர், தர்மபுத்ராதி சஹோதரர்கள், திரௌபதி, மார்க்கண்டேயர், ப்ருகு, ஸப்த ரிஷிகள், ஆஞ்சநேயர், சூர்யன், இந்திரன், சந்திரன், யமன், அக்னி, வருணன், குபேரன் போன்ற தேவதைகளும், நாகர்களும் கின்னரர்களும், அப்சரஸ்களுடன் கூடிய அழகுத் திலகமான மஹாலக்ஷ்மியை, வக்ஷஸ்தலத்தில் தரித்துக்கொண்டிருக்கும் ஹரிபகவானும் இருக்கின்றார்களோ, எந்த பதத்தில் தேவரிஷிகளின் நடுவே பிரபுவும், தேவாசுரர்களுக்கு குருவும் மஹாதேவரும், ஸர்வ பூதங்களால் நமஸ்கரிக்கப்படுபவரும் சிந்தைக்கு எட்டாதவரும், ஸர்வப்ராணரும் அயோநிஜரும் ஸர்வருக்கும் பிதா மஹாரான ஜகந்நாதர், நாராயணர் நடுநாயகத் திலகமாக இருக்கிறாரோ, அப்பேற்பட்ட மேலான பதம் கிடைக்கும்.]

(இந்தப் பதம் கிடைத்த அயோத்யா வாசிகளையும், அவர்களின் வம்சத்தினர்களையும் விட மிகுந்த பாக்யசாலிகள் உலகில் யார் இருக்க முடியும்?) (206)

ஞானம், வைராக்யம், யோகம் இவைகள் சித்திப்பதற்கு ராம சரித மானஸரோவர் ஒரு பெரிய ஸத்குருவைப்போல விளங்குகிறது. ஸம்சாரத்தில் மிக்க பயங்கரமான ரோகங்களை நாசம் செய்வதற்கு சூரிய சந்திரனைப்போல பிரகாசிக்கிறது. நாஸத்யன் தஸ்ரன் என்கிற தேவ வைத்யர்களான அஸ்வினி குமாரர்களைப் போலவிருக்கிறது. என் பிரபுவான சீதா ராமனுடைய பிரேமையை வளர்ப்பதில் என்மீது அன்பு வைக்கும் தாய் தந்தையர்களாகவும், (என்றும் பிரியாத அலர்மேல்மங்கை மார்பன் ஸ்ரீனிவாஸன்போல) விளங்குகிறது. இன்னமும் ஸம்பூர்ண விரதம், தர்மம் முதலியவற்றிற்கு, நியமம் ஆசாரம் போன்ற பீஜங்களாகவுமிருக்கிறது. (207)

பாபம் ஸந்தாபம், தாபத்ரயங்கள், சோகம், மோஹம், மதம், மாத்ஸர்யம் முதலியவைகளை நாசம் செய்வதற்கும், இவ்வுலகத்தி லும் பரலோகத்திலும் பிரியமாக யாவரையும் போஷிக்கும் சக்தி வாய்ந்ததாகவுமிருக்கிறது. தத்வ ஆராய்ச்சிரூபியான அரச னுக்கு சூர வீரனும் லோபம் என்கிற அபார சமுத்திரத்தை வற்றச் செய்தவரும் (தேனினும் இனிய தமிழுக்குத் தந்தை யாகிய) அகஸ்திய மாமுனிவரைப்போலவும் விளங்குகிறது. (208)

பக்தர்களின் மனோரூபமான மஹாரண்யத்தில் வசிக்கும் காமம் க்ரோதம் போன்றவைகளும், இன்னும் கலியுகத்தில் பாபி ரூபியாகவிருக்கும் பெரிய யானைகளை அடக்குவதற்கு சிம்மக் குட்டிகளைப்போலவுமிருக்கிறது. மஹா பிரபுவான சிவனுக்கு பூஜ்யரும் பிரியதமருமான அதிதியாகவுமிருக்கிறது. அக்னியி னால் தபிக்கப்படும் தரித்திரக் காடுகளை இச்சாமாத்திரத்தில் தணித்து விடுவதும், சிறந்த ஐஸ்வரியங்களை வர்ஷித்துப் போஷிக்கின்ற மேகவர்ஷங்களைப் போலவுமிருக்கிறது. (209)

விஷயங்களில் பற்றுதலுள்ள சர்ப்பத்தை அடக்கும் மந்திர மாகவும், மஹாமணியைப்போலவும், இந்த ராமசரித சாகரம் விளங்குகிறது. நம் நெற்றியில் பிறக்கும்போது பிரும்மாவினால் எழுதப்பட்ட கடினமான லிபியை அழிக்கும் அதிருஷ்டம் போலவும் விளங்குகிறது. அக்ஞான ரூபமான அந்தகார இருளை நாசம் செய்யும் மிகப் பிரகாசமான சூர்ய கிரணங்களைப்போலவு மிருக்கின்றது. ராம பக்தர்களைக் காப்பாற்றுவதில், பயிர்களுக்கு ஜீவனைத்தரும் மேகவர்ஷங்களைப் போலவுமிருக்கின்றன. (210)

வாஞ்சிதமான மனோபீஷ்டங்களை வாரிக் கொடுப்பதற்கு ஸ்ரேஷ்டமான கல்பதருவைப்போல விளங்குகிறது. சேவை, கைங்கர்யம் முதலியவைகளைச் செய்வதற்கு, பக்தர்களிடம் சௌலப்யமாகவும் சுகத்தையும் ஆனந்தத்தையும் எளிதில் அடையவைக்கும் ஹரியும் ஹரனைப்போல விளங்குகிறது. நல்ல வாக்கு சாதுர்யம் படைத்த கவியாகிற சரத்ருதுவுக்கு சோபிதம் செய்யும் தாராகணங்கள் சூழ் பூர்ணசந்திரனைப்போல ராம பக்தர்களுக்கு இந்த ராமசரித மானஸரோவர் ஜீவனுதாரமாகவும் ஜீவனதனமாகவும் விளங்குகிறது. (211)

[தியானம்

ஹே ஜானகி, காமாக்ஷியின் ஸ்வரூபமே, சிரஸ்ஸில் ஸதா சந்திரகலையை அலங்கரித்திருப்பவளே, காதுவரை நீண்ட கண் களும், யௌவனத்தில் சோபிக்கும் ஸ்தனபாரமும், முழங்கால்

வரை நீண்டு தொங்கும் தலைமயிரும், வேதவாக்குக்களின் உப்பரிகை போன்றவளும், பாபங்களைப் போக்குவதில் சாமர்த்திய முள்ளவளும், இந்திர நீலக்கல்லைப்போல தேஜஸ் உள்ளவளும், மன்மதனுடைய பெருமையைப் போன்றவளும், ஸ்ரீசங்கரருடைய புண்யராசிகள் போலவும் விளங்கும் ஸ்ரீகாமாக்ஷியின் திவ்ய உருவம் என் வழியில் ஆசார்ய கடாக்ஷத்தினால் யேற்படும் மஹாபாக்யம்போல எப்போது எனக்குக் கிடைக்கும்? பார்வையில் அம்ருதம் போலவும், முகத்தில் சந்திரனைப் போலவும், அழகிய புன்சிரிப்பால் மன்மதனை எரித்த சிவனையும் மோஹிக்கச் செய்கிறவளே, உன் மங்களகரமான நீலநிறமான கடாக்ஷங்கள் மந்தஸ்மிதமாகிற வெளுத்த கங்கா பிரவாஹத்தில் யமுனை கலந்ததுபோலவும், சந்தியாகாலத்தின் சிவப்பு போன்ற, உன் உதட்டின் சிரிப்பும், மாணிக்ய குண்டலங்களின் பிரகாசங்களும் என் மன இருள்களை ஸதா அகற்றட்டும். கவிகள் செய்யும் கவிதைகளால் மயிர் கூச்சலடைந்து அந்தக் கவிதைகளை சிரக்கம்பம் செய்து ஆனந்திப்பாயல்லவா? அம்மா உன்னை நான் சரணமடைகிறேன்.]

[தியானம்

அம்மா, காஞ்சி நகருக்கு அலங்காரமாயுள்ள தாயே, கம்பா நதியின் நீலோத்பலமே, அழகான மீனாக்ஷியாகிற நயனங்களால் எங்களைக் கடாக்ஷிக்கவேண்டும். காஞ்சியிலிருக்கும் வரதராஜனின் சஹோதரி, உனது கடாக்ஷ வீக்ஷணமின்றி மனிதர்களுக்கு நல்ல ரஸமுள்ளவாக்கு, உலகில் பரவும் ஸத்கீர்த்தி, மன்மதனுக்கொப்பான சரீரம், மனத்திற்கு இஷ்டமான போக ரஸங்கள், அனுபவங்கள், சீதாராமனுடைய பக்தி, சம்புவின் சேர்க்கை, அவருடைய அனுக்ரஹம் எப்படி கிடைக்கும்?]

[தியானம்

அம்மா, உனது மதுர வசனங்களும், மந்தஸ்மிதமும், யானை நடையும், நல்ல யௌவனமும் என்னை வசப்படுத்துகின்றன. அக்ஞானத்தைப் போக்கும் ஞானதீபமே, மானின் கண்களைப் போன்ற சஞ்சலமான கண்களை உடையவளே, காருண்யம் நிறைந்த பரமசிவானந்தங்கள் என்று போற்றப்படும் பத்மநாப சஹோதரியான காமாக்ஷி தேவி, எங்களை நீதான் காப்பாற்ற வேண்டும். பரமசிவனின் சிரோபூஷணமானவளே, விஜயியான உன்னை நான் சரணமடைகிறேன். கௌரி துண்டீரமென்னும்

காஞ்சி பிரதேசத்திற்கும் வைகை நதியின் கண் போன்ற மதுரை நகரில் வீற்றிருப்பவளுமான மீனுக்ஷிக்கும், காசியில் பரித்த ஜீவனின் ஹ்ருதய கிரந்திகளில் விஷயப்பற்றை அறுத்து, தாரக ராம மந்திரத்தை உபதேசித்து சீதாராம சன்னிதானத்தை அடையவிக்கும் விசாலாக்ஷி, உன் அருளின்றி சீதாராம கிருபை எனக்கு எவ்விதம் கிடைக்கும்? பரமசிவனின் தவப்பயன்கள் மாதிரி எனக்கும் உன் ஹ்ருதயத்திற்கும் நெருங்கிய நட்பு எப்போது கிடைக்கும்?]

[தியானம்

அழகிய நடையில் பெண் ஹம்சத்தை வெட்கமடையச் செய்பவளே, இனிமையான உன் வாக்குக்களினுல் சங்கரனே சந்தோக்ஷிக்கச் செய்யும் தெய்வமே, நீயும் உன் பிரியரான மஹேஸ்வரரும் தர்மங்களில் மிக்க பற்றுதல் உள்ளவர்களாக லோகத்தின் உபகாரத்திற்காகவும் மஹரிஷி, தேவர்கள், நதி ஸாகரக் கூட்டங்களுக்கு மத்தியில், கர்மத்தின் ஸ்வரூபங்களையும் தர்மத்தின் நுட்பங்களையும், ஞானத்தின் பெருமைகளையும், பக்தியின் பிரபாவத்தினுல் மிதந்துவரும் நாதஸ்வரூபத்தையும், அளித்த லோக குருக்களன்ருே? உங்களை நாங்கள் சரணமடை கிருேம். நீங்கள்தான் எங்களுக்குத் தஞ்சம். நீங்கள்தான் சீதாராமனிடம் சொல்லி எங்களுக்குக் கிருபையை கடாக்ஷிக்கச் செய்யவேண்டும். ரிஷிகளின் மனஸ்ஸாகிற பெட்டியில் ரத்தினம் போல கூடமாக வைக்கப்பட்டவர்களாகவும், என் அக்ஞானத் திற்குச் சிறந்த மருந்துபோல விருப்பவர்களாகவும், தங்கப் பிம்பங்களான நீங்கள் இருவர்களும் எனக்கு மீண்டும் மீண்டும் பிரத்யக்ஷமாகவேண்டும். தாயே, பிரபோ உங்க ளுடைய பாத கமலங்களில் தெண்டனிட்டு சரணமடைகிறேன். காமாக்ஷி, மஹேஸ்வரனுடைய கண்களின் கீரீடா மண்டலமே, ஹிமவானின் வம்சத்திற்கு முக்கிய அலங்காரமே, கங்கை யின் சஹோதரியே, பஞ்சாயுதம் தரித்து சீதைக்கும் ருக்மிணிக்கும் அருள் பண்ணினவளே, சந்திரசேகரின் பத்தினி யாகிய பார்வதி தேவியே, நீ எனக்கு தர்சனம் தந்து என் கண் களையும் மனத்தையும் தேகத்தையும் சபலமாக்கவேண்டும். மஹேஸ்வரரின் புண்ய விசேஷங்களே, எப்பொழுதும் தயை யுடன் என்னிடமிருக்கவேண்டும். உன்னிடம் என் பக்தி வளர வேண்டும். கவிகளின் வாக்குக்களுக்கு மூலமே, யோகிகளுக்கு மனேரஞ்சிதமான பரமேஸ்வரி, மஹேஸ்வரரால் ஸர்வஸ்வம்

என்று போற்றப்படுகிறவளே, மஹாதேவியே, உன் ஸ்நேகமும் ஸாந்நித்யமும், உன் புத்திரர்களான வினாயகர், குஹன் ஆகியவர்களின் கிருபையும் அம்மா, ஸம்பூர்ணமாக எங்களுக்குக் கிடைக்கவேண்டும்.]

[தியானம்

கருத்த காந்தியுடன் விளங்கும் நேத்ரங்கள் உள்ளவளே, சுக்ராசாரியரின் மேலான தெய்வமே, நெற்றியில் நெருப்புக் கண் படைத்தவளே, பரமசிவனின் மனோஹாரிணி, சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபத்தின் சின்னமே, பிராம்மணப்ரியே, உன்னை நான் சரணமடைகிறேன். தாயே உனது பேரருளால் பரமசிவனின் அனுக்ரஹமும் பேரருளாளன் எனப் போற்றப்படும் வரதராமகிருபையும் எங்களுக்குக் கிடைக்கவேண்டும். கம்பாதீரவாசியான காமாக்ஷி, வைகை நதிதீரத்தில் வசிக்கும் மரகத ரத்னமயமான மீனாக்ஷி, கங்கை பிரவாஹத்தில் நடுவிருக்கும் விசாலாக்ஷி, நமஸ்கரிக்கின்ற என் தலையை ஸ்பரிசிக்கும் உனது சரணநக காந்திகள் எனது மன இருளை விலக்கி, மூன்றுவித தாபங்களை அழித்து, உன்னை எனது மங்கள தெய்வமாகவும், எனது கிருஹத்தின் மங்கள தீபமாகவும், பரமசிவனுடைய மடியாகிற கிருஹத்துக்கு கீர்த்தி லக்ஷ்மி போலவும் உன்னைப் புகழ்ந்து பாடுகிறேன். அம்மா, காமாக்ஷி, நீ கருணையுடன் என்னிடம் எப்போதும் இருக்கவேண்டும்.]

[தியானம்

ஸஜ்ஜன நேத்ரங்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவளே, நீலோத்பல காந்தியை ஏளனம் செய்கிற சரீரசோபைகளை உடையவளே, பரமேஸ்வரனுடைய கண்களுக்கு ஸுக்ருதம் போல விளங்குபவளே, பரதேவதையான நாராயணருக்கு சஹோதரியே, கவிதா லக்ஷ்மிக்கு மூலஸ்தானமே, பரமேஸ்வரரின் ஸாம்ராஜ்யமாக விளங்குபவளே, ஸநாதனமான வஸ்துவே, கரகமலங்களில் தாமரையை வைத்திருப்பவளே, தேவர்களின் தலைக்கிரீடத்தால் ஸ்பர்சிக்கப்பட்ட பாத கமலங்களை உடையவளே, ஜயலக்ஷ்மி, விமலா, லோபாமுத்ரை, இந்திராணி, லக்ஷ்மியினால் ஆராதிக்கப்பட்ட உத்தமியே, நாதரூப சுந்தரியே, நாரதர் ஆஞ்சநேயர் வால்மிகி தும்புரு தியாகராஜர் போன்ற மஹான்களுக்குப் பிரியமானவளே, எப்போதும் நீ குளிர்ந்த பார்வைகளால் எங்களைக் கடாக்ஷிக்கவேண்டும்.]

[தியானம்

ஹே சீதே, உன் கடாக்ஷத்தை மூன்று விதமாகச் சொல்லு கிறுர்கள். இறந்த ஜீவனை பிழைப்பூட்டுவதான ஸஞ்சீவினி யென்றும், ராமனுடைய ஹ்ருதயத்தை மோஹிக்கச் செய்யும் கடைக்கண் பார்வையை ஸம்மோஹனம் என்றும், என்போன்ற பக்தர்களின் மனத்தை உன்னிடம் அர்ப்பணம் பண்ணும் பாக்ய கடாக்ஷத்தை மமதையாகிய ஆவேசத்தினுடைய சேஷ்டைக்கு ஸம்ஸ்தம்பனம் என்றும், அடியோடு நிறுத்துவதிலும் சிரேஷ்ட மானது என்றும் சொல்லுகிறுர்கள். ஹே காமாக்ஷி, உனது கடைக்கண் பார்வை நீலோத்பலமாகக் கருத்து இருக்கின்றது. என்போன்ற சஞ்சல புத்தியுள்ள மந்தஹீனனுடைய பக்தியைக் கெட்டிப்படுத்துகிறது. உன்னிடம் பக்தியையும், ஸம்சாரத்தி லிருந்து பந்த மோசனமும் உனது கடாக்ஷத்தினுல் அல்லவோ கிடைக்கிறது. ஸ்ரீராமன் கோதண்டத்தைத் தரித்து "குஞ்சித ப்ருசா பாஞ்சிதஃ" தன்னை ஆஸ்ரயித்த பக்தர்களிடம் நீ அனு ராகத்தோடிருப்பதால் ரக்ஷையாகிற உபகாரம் என்றும், ராக்ஷ ஸர்களுக்கு அபகாரம் என்றும், ராமன், கோதண்டராமன் என்றும் சொல்லப்படுகிறுன். புராரி எரித்த மன்மதனுக்கு சரணம் கொடுத்தாயே, இந்த லோகத்தில் எப்பொழுதும் ரக்ஷணம் என்கிற உபகாரத்தை உண்டுபண்ணிக்கொண்டு, என் மனத்தில் வீற்றிருந்து, என் ஆபத்துக்களைப் போக்கவேண்டும். ஸ்ரீகாமகோடி அம்மா, உன்னுடைய அசாதாரணமான கடா க்ஷத்தை வற்றின வயலில் வாடியிருக்கும் பயிரை செழுமையால் வளர வைப்பதுபோல என்மீது ரஸமாக பொழியவேண்டும். உன் கிருபையால் மஹேஸ்வரருடைய கிருபையும் சீதாராம பக்தியும் வளரவேண்டும்.]

இந்த சீதாராம பக்தி மஹத்வம் வாய்ந்ததும், ஸம்பூர்ண மான பூர்வபுண்ணியத்தினுல் அடையத்தக்கது. மஹத்தான போகங்களுக்குச் சமமாக இருக்கக்கூடியது. இந்த ஜகத் திற்கு யதார்த்தமான ஹிதத்தைச் செய்வதில் சாதுக்களின் சேர்க்கைக்குச் சமமாகவிருக்கிறது. என்போன்ற ராம பக்தர் களின் மனேரூபியான மானஸ ரோவருக்கு ராஜஹம்ஸத்திற்குச் சமமாகவும், எங்களைப் புண்ணியமாக்குவதில் கங்கா பிரவாஹத் தின் அலைகளுக்கும் சமமாகவிருக்கிறது. (212)

ஸ்ரீராமச்சந்திரனுடைய பரிபூர்ணமான குணவிலாஸங்கள் கெட்டவழிகளில் பிரவேசிப்பவர்களையும், குதர்க்க வாதத்தைச் செய்பவர்களையும், ஏமாற்றுவதையேத் தொழிலாக உள்ளவர்

களையும் இன்னும் கலியுகத்திலுள்ள கபட, டம்பபாஷண்டிகளை எரிப்பதற்கு அக்னியைப் போலவும் விளங்குகின்றன. (213)

ஸ்ரீராமசரித மானஸஸரோவர் பூர்ணிமை சந்திரனின் கிரணங்களுக்குச் சமமானவை. எல்லோருக்கும் சுகத்தை அளிக்கவல்லது. ஆனால் ஸஜ்ஜன ரூபியான குமுத புஷ்பத்திற்கும் 'சந்திரனின் கிரணங்களைப் பருகும் சகோர பக்ஷிகளின் ஹிருதயத்திற்கும் விசேஷமாக ஹிதத்தைச் செய்கிறது. பூர்ணமாக நிறம்பினதும், மட்டற்ற சுகத்தையும் ஆனந்தத்தையும் அவர்களுக்கு அளிக்கிறது. (214)

இப்பொழுது நான் ஸ்ரீ பார்வதி தேவியினால் கேள்வி மூலமாகக் கேட்கப்பட்டதும் சிவபெருமானால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதுமான ராமசரிதமாகிற மானஸ ராமாயணத்தை எல்லோருடைய நன்மைக்காகவும் விஸ்தரித்துச் சொல்கிறேன். பார்வதி தேவியின் பிரஸ்னத்தினால் விளைந்ததும், ஸ்ரீ சிவனால் விஸ்தாரமாக உத்தரமாகச் சொல்லப்பட்டதுமான இந்தக் கதையை மீண்டும் நான் பக்தர்களின் நன்மைக்காகச் சொல்லுகிறேன். (215)

இந்தக்கதை எவர்களால் முந்தியே கேட்கப்பட்டிருக்காவிட்டால், அவர்கள் இப்பொழுது இதைக் கேட்டு ஆச்சரியப்பட வேண்டாம். புத்தியுள்ள ஸாதுக்கள் இந்த விசித்திரமான கதையை முந்தியே கேட்டவர்களாகவிருந்தாலும், அதை மீண்டும் என்னிடம் கேட்டு ஆச்சரியப்படமாட்டார்கள். இந்த ஸம்சாரத்தில் ராமனைப்பற்றிய கதைகள் அனந்தமாகவிருக்கின்றன. அவர்களின் மனதில் இந்தமாதிரி யோசனைகள் தோன்றக்கூடும். நானாபிரகாரமாக ஸ்ரீராமச்சந்திரனுடைய அவதாரங்கள் இருக்கின்றன. இவைகள் நூறு கோடிக்கணக்கானவையும் அபாரமான ராமாயணங்களாகவுமிருக்கின்றன. (216)

கல்பங்களின் பேதங்களை அனுஸரித்தாற்போல ஸ்ரீ ஹரியினுடைய சுந்தரமான சரித்திரங்களை முனீஸ்வரர்கள் அநேகவிதமாகப் பாடியிருக்கின்றார்கள். சாதுக்களின் ஹ்ருதயங்களில் இவ்விதமான யோசனைகள் தோன்றி ஸந்தேகங்களும் அறுபட்டு, மிக்க மரியாதையுடனும் பிரேமை கலந்த மனத்துடனும் இந்த பார்வதி—சிவன் சம்பாஷணத்தைக் கேளுங்கள். (217)

ஸ்ரீராமச்சந்திரன் அனந்தமான மூர்த்தி. அவருடைய குணவிலாஸங்கள் கணக்கற்றவை. அவரைப்பற்றின கதை விசேஷங்கள் விஸ்தாரமாகக் கணக்கில்லாமல் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையினால் எவர்களுடைய நினைவுகள் நிர்மலமாக

விருக்கின்றனவோ, அவர்கள் இந்த ராமகதையைக் கேட்டுவிட்டு மன விகாரமடையமாட்டார்கள், ஆச்சர்யப்படவும் மாட்டார்கள். (218)

இந்தவிதமாக எல்லா சந்தேகங்களையும் அறுத்துவிட்டு ஸ்ரீஸத்குருவினுடைய பாதகமலங்களை வணங்கி, அவருடைய பாத தூளிகளை என் தலைமேல் வைத்து அணிந்துகொண்டு, நான் மீண்டும் அஞ்சலியுடன் எல்லோருக்கும் என்னுடைய வினதையைத் தெரிவிக்கிறேன். இந்தக் கதைக்கு தோஷங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம் என்று மிக்கத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். (219)

இப்போது நான் மிக்க மரியாதைக்குரியவரான பரமசிவனுக்குத் தலைவணங்கி, நமஸ்கரித்துவிட்டு, அஞ்சலி பந்தத்துடன் ஸ்ரீராமச்சந்திரனுடைய பரிபூர்ணமான குணவிலாஸங்களைப் பற்றிய ராமகதையைச் சொல்லவிரும்புகிறேன். ஸ்ரீ ஹரியினுடைய சரணத்தாள்களை எனது சிரத்தின்மீது வைத்துக் கொண்டு, ஸம்வத் வருஷம் ஆயிரத்து அறுநூற்று முப்பத்து ஒன்று (1631) ஆகிற 1574 A. D.-ல் (1967-ல்) ஸம்வத்ஸரத்தில் இந்த கதையை எழுத ஆரம்பிக்கிறேன். (220)

சித்திரை மாதத்தில் நவமி திதியில் செவ்வாய்கிழமையன்று ஸ்ரீ அயோத்யா நகரில் இந்த சரித்திரம் பிரகாசிக்கத் தொடங்கியது. இந்த சுபமான நவமி தினத்தில் பாரத தேசத்தில் ஸ்ரீராமச்சந்திரனுடைய பிறப்புவிழா நடத்தப்படுகிறது. அந்த சுபதினத்தில் உலகத்திலுள்ள எல்லாப் புண்ய நதிகளும் அயோத்தியை வந்து சேருகின்றன என்று வேதங்கள் சொல்லுகின்றன. (221)

[தியானம்

ஹே தயாநிதே, துஷ்டர்களை அடக்குவதற்காக நீ அவதரித்தாய். அத்துடன் நல்லவர்களையும் காப்பாற்றுவதற்காகவும் அவதரிப்பதாகச் சொல்லுகிறுர்கள். பக்த அனுக்ரஹம், துஷ்ட நிக்ரஹம் ஆகிய இரண்டும் உனது தர்மமாகவிருக்கிறது. ஹே பிரபு உமக்கு யானை, கழுகு, பாம்பு என்றுகூட பிராணிகளின் பிறப்பு உமது கவனத்தை கவராததாகவுமிருக்கிறது. நிர்ஹேதுவான உமது கருணை சகல ஜீவஸ்வரூபமாகிய எந்த பிராணியிடமும் ஏற்படுகிறதல்லவா? கஜேந்திரன், கருடன், அனந்தன் காளிங்கன் போன்றவர்கள் மஹா தவம் செய்து உம்முடைய அனுக்ரஹத்தைப் பெற்றுர்கள். லக்ஷ்மி தேவியானவள்

எவ்வளவு காலம் தபஸ் செய்து மஹாவிரதத்துடன் எல்லா விருப்பங்களையும் துறந்து உம்மை ஆராதித்தாளோ, அவ்வளவு மகிமையுள்ள உமது பாத துளியைப்பெற்ற பின்பு அதைவிட்டுப் பிரியாமல் இருக்கிறாளோ, அப்பேற்பட்ட பாதங்களை நான் சரணம் அடைகிறேன். சம்சார சக்ரத்தில் சுழலும் ஒவ்வொரு பிராணிக்கும் உம்முடைய பாதங்களின் சேர்க்கையால் மேன்மையான சம்பத்து முன் நிற்கிறதோ, அப்பாத தூள்களை மற்றவர்களால் அடைய முடியாததால், அக்ஞானத்திற்கும் கோபத்திற்கும் உட்பட்ட இந்த ஜன்மாவை மிகுந்த கருணையுடன் நீர் கடைத்தேற்றிவைக்க வேண்டும்.]

[தியானம்

ஹே ஆனந்த மூர்த்தியே, நடேசா, சாமாக்ஷி, உங்களுடைய கடாக்ஷமாகிற வஸ்து இந்திர நீலம், மணி, குவலயம், மேகம் இவைகளைக் காட்டிலும் மேன்மையானது. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குறை கண்டதாகவிருக்கிறது. ஆனால் உன் வீக்ஷணம் கருமை நிறம்பியதாகவும், எப்பொழுதும் மலரக் கூடியதாகவும் காரணமில்லாமல் பகற்காலங்களிலோ, இராக் காலங்களிலோ வித்யாசமின்றி சகல ஜகத்துக்கும் பொழிகிறதல்லவா ? அழகிலும் சரி, குளிர்ச்சியிலும் சரி, பக்தர்களின் தாபத்ரயங்களைப் போக்குவதிலும் சரி, எல்லாவற்றிலும் ஸ்ரேஷ்டமானது அல்லவா ? அப்பேற்பட்ட நீங்கள் என்னிடம் பரிபூர்ணமான அனுக்ரஹத்துடன் இருக்கவேண்டும்.]

அசுரர்கள், நாகர்கள், பக்ஷிகள், மனுஷ்யர்கள், முனிகள், தேவதைகள் எல்லோரும் அந்த சுபதினத்தில் அயோத்யாபுரிக்கு வந்து ஸ்ரீரகுநாதனுக்குச் சேவைசெய்கிறார்கள். புத்திமான்கள் இந்த சுபதினத்தை ஜன்மாவின் மஹோத்ஸவமென்று நினைத்து பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனுடைய அழகான கீர்த்திகளைப்பாடி சுகிக்கிறார்கள். (222)

சாதுக்கூட்டங்கள் அந்த சுபதினத்தில் மிக்க பவித்திரமான சரயு நதியில் தீர்த்த ஸ்நானம் செய்து ஹ்ருதயபுண்டரத்தில் சியாமள நிறமான ஸ்ரீரகுநாதனுடைய உருவத்தைத் தியானம் பண்ணி ஸ்ரீராமநாமத்தை ஜபிக்கிறார்கள். (223)

சரயு நதியினுடைய தரிசனம், ஸ்பரிசம், தழுவுதலால் யேற்படும் ஸ்நானம், ஜலத்தைச் சாப்பிடுதல் ஆகிய யாவும் பாபக்கூட்டங்களை நாசம் செய்கின்றன. இந்த நதி மிக்க பவித்திரமானது. இதனுடைய மகிமை எல்லையற்றது.

  

இதனுடைய பிரபாவத்தைத் தெளிந்த புத்தியுள்ள ஸரஸ்வதி தேவிகூட வர்ணிக்க முடியாது என்று வேதங்களும் புராணங்களும் ஸ்ரீசரயு நதியினுடைய பிரபாவத்தை கோஷிக்கின்றன. இந்த நதி வஸிஷ்டரால் அம்ருதமயமான மானஸரோவரிலிருந்து உண்டாக்கப்பட்டது. (224)

இப்பேற்பட்ட சோபையுடன் பிரகாசிக்கும் அயோத்யாபுரி ஸ்ரீராமசந்திரனுடைய பரம்தாமாகிய ஸ்ரீவைகுண்டத்தை அளிக்க வல்லது. இந்த விஷயம் எல்லா உலகங்களிலும் பிரசித்திபெற்றதாகவிருக்கிறது. ஆகையால் அயோத்தி ரொம்ப பவித்திரமான க்ஷேத்ரம். இந்த ஜகத்தில் நான்கு வகைகளான ஜீவராசிகள் அண்டத்தில் பிறந்தவைகள், ஸ்வேதஜத்தில் பிறந்தவைகள் உத்பிஜங்கள், ஜராயுஜங்கள்—ஆகிய நான்கு பிரகாரம் எண்ணிக்கையற்ற ஜீவன்கள் பிறக்கின்றன. இவைகளில் ஏதாவது ஒரு ஜீவன் அயோத்தியில் மரித்தால், அந்த ஜீவன் சம்சாரத்திற்கு மீண்டும் திரும்பிவருவதில்லை. பகவானுடைய மேலான பதத்தை அடைகிறது. (225)

இப்பேற்பட்ட அயோத்யாபுரியின் மகிமையானது எல்லா விதத்திலும் மனோஹரமானது. எல்லாவித சித்திகளை அளிக்க வல்லது. சகல மங்களங்களையும் கொடுக்கும் தன்மை உள்ளது. இதைப் பூர்ணமாக அறிந்துதான் நான் நிர்மலமான ராமசரித மானஸரோவர் என்கிற கதையை அயோத்தியில் எழுத ஆரம்பிக்கிறேன். இந்த சரித்திரத்தைக் கேட்டபின்பு காமம், மதம், டம்பம் எல்லாம் விலகட்டும். (226)

இந்த சரித்திரத்திற்கு ராமசரித மானஸரோவர் என்ற பெயர் இட்டிருக்கிறேன். இந்தப் பெயரை காதினால் கேட்டபின்பு மனத்திற்கு சாந்தி அடைவிக்கும். மனரூபியான மதயானை விஷய ரூபியான நெருப்பில் விழுந்து அகப்பட்டு ஜலத்தில் நனைக்கப்பட்டால் எவ்விதம் சந்தோஷத்தை அடைகிறதோ, அது மாதிரி இந்த சுபமான ராமசரித மானஸரோவரில் மூழ்கினால், யாவரும் மனத்தில் சுகத்தை அடைவார்கள். (227)

இந்த ராமசரித மானஸரோவர் முனிஜனங்களுக்கு மிக்கப் பிரியமான விஷயம். இந்த அழகான சுகவனத்தை (தோட்டத்தை) சம்பு பகவான் இயற்றினர். இந்த கதை மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றில் ஏற்படும் மூன்றுவித தாபங்களை போக்கடிக்கிறது. சம்சாரத்தில் உள்ள துக்கங்களையும், தரித்திரத்தையும் கலியுகத்தின் பாபக்கூட்டங்களையும், கொடூரமான வழிகளையும் நாசம் செய்கிறது. (228)

ஸ்ரீமஹாதேவரால் இது சிருஷ்டிக்கப்பட்டு, அவரால் தன் மனத்திற்குள் பிரயாசையுடன் காப்பாற்றப்பட்டது. பிற்பாடு சரியான சமயத்தில் பார்வதி தேவிக்கு அவர் உபதேசித்தார். அவர் தன்னுடைய மனதில் இந்தக் கதையைத் தேக்கி வைத்திருந்தபடியாலும், அதனால் அவர் மனதில் சந்தோஷம் அடைந்ததாலும், இந்த சுந்தரமான சரித்திரத்தை அவர் ராம சரித மானஸரோவர் என்று பெயரிட்டார். (229)

நான் இப்பேற்பட்ட சுகத்தைக் கொடுக்கும் அழகான ராம கதையைச் சொல்கிறேன். "ஹே சாதுக்களே, ஆதார பூர்வத்துடன் மனமுவந்து இக்கதையைக் கேளுங்கள்" (230)

இந்த ராம சரித மானஸரோவர் எப்படிப்பட்டது, எந்த விதமாகச் செய்யப்பட்டது, எந்தக் காரணத்தினால் இந்த உலகில் தோன்றி பரப்பப்பட்டது, அப்பேர்ப்பட்ட விஷயங்களை ஸ்ரீ உமா விருஷபவாகனரான மஹேஸ்வரரை முதலில் நான் தியானம் செய்துவிட்டு சொல்ல ஆரம்பிக்கிறேன். (231)

பகவான் சம்புவின் கிருபையால் துளசிதாஸருடைய ஹ்ருதயத்திலும் சுந்தரமான புத்தியிலும் இது தோன்றியது. அதனால் துளசிதாஸர் ஸ்ரீ ராமசரித மானஸரோவருக்கு கவியாக ஆனார். அவர் சொல்கிறார் "என் புத்திக்குத் தகுந்த பிரகாரம் இந்த மனோஹரமான கவிதையைச் செய்கிறேன். சாது ஜனங்களே, பொறுமையுடனும், க்ஷமையுடனும், சுத்த ஹ்ருதயத்துடனும் இதைக் கேட்டு என்னையும் அனுக்ரஹிக்க வேண்டும்." (232)

சாத்விகமான புத்தி பூமிக்குச் சமானம்; மனிதர்களின் ஹ்ருதயமானது பூமியிலுள்ள ஆழமுள்ள பள்ளத்தைப் போலவிருக்கிறது. வேதங்கள் புரானங்கள் சமுத்திரமாக விருக்கின்றன. மஹாத்மாக்களான சாது ஜனங்களும், ரிஷிகளும், மேக ரூபியாக ஸ்ரீராமச்சந்திரனுடைய சுபமான கீர்த்தியை அழகாகவும், மதுரமாகவும், மனோஹரமாகவும் மங்களங்களை உண்டுபண்ணும் வர்ஷங்களாகவும் பொழிகிறார்கள் (233)

எவர்கள் ஸகுணஸ்வரூபமான ராமச்சந்திர மூர்த்தியின் லீலைகளை விஸ்தாரமாக கானம் பண்ணுகிறார்களோ, அவர்கள் சுபமான யசஸ்ஸுடைய ராமனின் சுத்த ஜலத்தை வர்ஷிக்கிறார்கள். கலியினுடைய மலங்களை நாசம் செய்கிறார்கள். அவர்களுடைய ப்ரேமை பூர்ணமான பக்தியை வர்ணிப்பது மிக்க சிரமம். அவர்களுடைய மேகவர்ஷம் மதுரமாகவும், அழகாயும் குளிர்ச்சியாகவும் இருக்கிறது. (234)

ராமனுடைய மங்கள கீர்த்தியாகிய மேகவர்ஷம் நல்ல கர்மாக்களை ரூபமாக உடைய தான்யங்களுக்கு ஹிதத்தைச் செய்யக்கூடியதாக விருக்கிறது. பிரபுவான ராமச்சந்திரனுடைய பக்தர்களுக்கு ஜீவனுதாரமாக விளங்குகிறது. அப்பேர்பட்ட பவித்திரமான ஜலம் புத்திரூபமாகவிருக்கும் பூமியில் விழுந்தது. பிரவாகமாக ஒன்ருய்ச் சேர்ந்து காதுகளின் வழியாக ஓடியது. பிற்பாடு ஹ்ருதய ரூபியான ஸ்ரேஷ்டமான ஸ்தானத்தில் பூர்த்தி அடையப்பட்டு ஸ்திரமாக அசைவற்றிருந்தது. அந்த இடத்திலே தேங்கி, ருசியாகவும் சீதளமாகவும் சுகத்தை வாரி இறைப்ப தாகவும் ஆயிற்று. (235)

இந்தக் கதையை புத்தியினுல் ஆராய்ந்து, நான்கு அழகானதும், உத்தமமான ஸம்வாதங்கள் (புசுண்டி—கருடர், சிவன்—பார்வதி ; யாக்ஞ்யவல்கியர்—பரத்வாஜர் ; துளசிதாஸர்—சாது ஜனங்கள்) சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அப்பேற்பட்ட பவித்திரமான ஸரோவரில் நான்கு ஸ்நான கட்டங்கள் இருக்கின்றன. (236)

ஏழு காண்டங்கள், ஏழு படிகளாக அமைந்திருக்கின்றன. இவைகளை சாதுக்கள் ஞானரூபியான நேத்ரங்களால் பார்த்து மனசந்தோஷம் அடைகிருர்கள். ஸ்ரீ ரகுநாதனுடைய நிர்குண மய (பழமையானதும், குணங்களுக்கு அப்பாற்பட்டவரும், குணரஹிதருமான) ஏகரஸமான பரதத்வத்தையும் (நாராயண ரென்னும் பரதத்வத்தை) ஊர்ஜிதம் செய்யப்படும் தீர்மானமான விஷயத்தையும் குணக்கீர்த்திகளையும் வர்ணனே செய்யுமிடங்கள் இந்த சுந்தரமான ஜலத்தின் ஆழமான பள்ளங்கள் (237)

ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கீர்த்தியும், சீதாதேவியினுடைய கீர்த்தியும் அம்ருதமயமான ஜலத்திற்கு ஸமானமாகவிருக்கிறது. இந்த ராமசரித மானஸரோவரில் உபமாக்கள் அந்த ஜலத்தில் மனோஹரமான அலைகளைப்போல வீசுகின்றன. அழகான சௌபாயிகள் அடர்ந்து வளர்ந்த தாமரை பூக்கொத்துக்கள் போல விளங்குகின்றன. கவிதையின் மேன்மைகள் சுந்தரமான முத்துச்சிப்பிகள், ரத்தினங்கள் போல பிரகாசிக்கும் முத்துக் களைப் போல விளங்குகின்றன. (238)

இதர மீட்டர்களான அழகான சந்தங்கள், சொரேடிகள், தோஹாக்கள், பலவித நிறங்களுள்ள கமலங்கள் போல சோபித மாக விளங்குகின்றன. விவரிக்கமுடியாத அர்த்தங்கள் புஷ்பங்கள் போலவும் ; மேலான ஸ்வபாவங்கள், சுந்தரமான நடை அலங்காரங்கள் இனிய மகரந்த ரஸங்கள் போலவும் ;

புஷ்பங்களின் உட்காம்புகள் சுகந்தமான மணம் போலவும் விளங்குகின்றன. (239)

சத்கர்ம கூட்டங்களின் புண்ணிய ராசிகள் வண்டுக் கூட்டங்களாகவும், அழகான பங்திகளுக்குச் சமமாக விருக்கின்றன. ஞானம், வைராக்கியம், மேலான உத்க்ருஷ்டமான எண்ணங்கள், ஹம்ஸப்பேடுகள் போல நீந்துகின்றன. கவிதையின் த்வனி, திறம், குணவிசேஷங்கள், வக்ரோக்திகள் இன்னும் அநேக விசேஷமான சொற்கள் அலங்காரங்கள் அழகான மீன்குஞ்சுகளைப்போல விளங்குகின்றன. (240)

அர்த்தம், தர்மம், காமம் மோஹம் முதலான நான்குவித புருஷார்த்தங்கள், ஞானம் விக்ஞானத்தின் மேலான தத்வங்கள், காவ்யங்களின் ஸ்ருங்காரம், ஹாஸ்யம், கருணை, வீரம், ரௌத்ரம், பயானகம், பிபத்ஸம், அத்புதம், சாந்தம் ஆகிய ஒன்பது ரஸங்கள், ஜபம், தபங்கள், யோகங்கள். வைராக்கியத்தின் பிரசங்கங்கள், ஆகிய இவை எல்லாம் இந்த ஸரோவரில் உள்ள இதர ஜந்துக்கள் போலவிருக்கின்றன. (241)

சுக்ருதுக்கள், புண்ணியாத்மாக்கள், சாதுக்கள் ஆகியவர்களால் ஸ்ரீராம நாமத்தின் மகிமைகளைப்பற்றிச் சொல்லும் சொற்கள் விசித்திரமான நீர் பக்ஷிகள் போல விளங்குகின்றன. சாதுக்களின் சங்கங்கள், இந்த ஸரோவரில் நான்கு பக்கங்களிலும் உள்ள மாந்தோட்டங்களைப் போல விளங்குகின்றன. சிரத்தை என்னும் விஸ்வாசம் வசந்தருது போல விளங்குகிறது. (242)

நானுப் பிரகாரமாக வர்ணிக்கப்படும் பக்தி நிரூபணங்கள், க்ஷமை, தயை, இந்திரிய நிக்ரஹமான தமம், கொடிகள் நிறைந்தும் மலர்ந்த பூக்கள் கொண்ட மண்டபச் சோலைகளாக விளங்குகின்றன. இந்திரிய மன நிக்ரஹம், (அஹிம்சை, சத்யம், நியமம், பிரம்மசர்யம், தானம் வாங்காமலிருத்தல், பிறர் அன்னத்தைச் சாப்பிடாமலிருத்தல்) ஆகிய யமம் முதலிய ஆசாரங்கள், (சௌசம், சந்தோஷம், தபம் ஸ்வாத்யாயம் என்று சொல்லப்படும் வேதபாராயணம், ஈஸ்வர பிரணி தானம் என்கிற ஈஸ்வர அர்ச்சனை ஆகிய) நியமங்கள் பலவித வாசனையோடும் நிறங்களோடுமுள்ள புஷ்பங்கள். பகவானைப் பற்றி அறிய வைக்கும் ஞானம் பழங்களைப் போலவிருக்கின்றன. ஸ்ரீ ஹரியினுடைய சரணாரவிந்தங்களின் மீதுள்ள பிரேமை இந்த ஞானப் பழங்களின் பழரசங்கள், என்று வேதங்களால் சொல்லப்படுகின்றன. (243)

இந்தராமசரித மானஸரோவரில் உள்ள அநேகவிதமான உபகதைகள், பிரசங்கத்தின் தத்துவங்கள் இந்த விருக்ஷத்தி லுள்ள கோகிலங்கள், கிளிகளைப்போல பலவர்ணப் பக்ஷிகளாக விருக்கின்றன. (244)

இந்த ராம கதையிலுள்ள ஆனந்தத்தால் மயிர் சிலிர்க்கும் கட்டங்கள் புஷ்பத் தோட்டங்கள், வனங்கள், சோலைகள் மாதிரி இருக்கின்றன. இன்னும் சுகத்தைத்தரும் இதர கட்டங்கள் அழகான பக்ஷிக் கூட்டங்களின் விஹாரங்கள். நிர்மலமான மனது மாலிகள் (தோட்டக்காரர்கள்) போல விளங்குகிறார்கள். பிரேமை ரூபியான அழகான கண்களின் மூலம் வரும் ஆனந்த கண்ணீரால் அந்த தோட்டக்காரர்கள் அந்த புஷ்பத் தோட்டங் களைப் பேணி வளர்க்கிறார்கள். (245)

எந்த சத்புருஷர்கள் இந்தப் புனிதமான சரித்திரத்தைப் சாவதானமாகப் பாடுகிறார்களோ, அவர்கள் இந்த ஸரோவரைக் காக்கும் கெட்டிக்காரர்களான காவற்காரர்களைப் போல இருக் கிறார்கள். எந்த ஸ்திரீபுருஷர்கள் மரியாதைக்கு உரியதான இந்தக் கதையைக் கேட்கிறார்களோ, அவர்கள் இந்த ஸரோவரின் உத்தமமான அதிகாரி தேவதைகள். (246)

எவர்கள் துஷ்டமனத்துடன் இதைக் கேட்கிறார்களோ அவர்கள் விஷயங்களில் பற்றுதல் உள்ள கொக்குகள், காக்கை களைப் போல அபாக்யமுள்ளவர்களாக விருக்கிறார்கள். இவர்கள் இந்த ஸரோவரின் சமீபம் ஒருக்காலும் நெருங்க மாட்டார்கள். ஏனென்றால் இந்த ஸரோவரில் நத்தைகள், தவளைகள், பாசிகள் இல்லை. பேராசை உள்ளம் படைத்த காக்கைகளைப் போல விருப்பவர்களுக்கு விஷயங்களில் ஊறிப் போன கதைகள் ஒன்றும் இதில் சொல்லப்படவில்லை. (247)

இந்தக் காரணங்களால் பேராசை உள்ள காக்கைகளும், பயத்தைத்தரும் கொக்குகளும், விஷயங்களில் பற்றுள்ளவர் களும் இந்த மானஸரோவரை அடையமாட்டார்கள். மேலும் இதை அடைவதற்குக் கடினமான கஷ்டங்கள் நிறைய இருக் கின்றன. பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கிருபையின்றி இந்த ஸரோவருக்கு எவராலும் வரவும் முடிகிறதில்லை. (248)

பயத்தையும், கோரமான கஷ்டங்களையும் விளைவிக்கும் ரஸ் தாக்கள் பல இருக்கின்றன. இப்பேற்பட்ட குஸங்கயர்கள் என்கிற அசத்துக்கள், சுயநலமுள்ளவர்களின் வசனங்கள் புலி சிம்மம் சர்ப்பம் போல விருக்கின்றன. வீட்டில் மிக்க பற்றுதல் உள்ளவர்களும், கிருஹஸ்தர்களும், சத்சங்கத்தை அடையாத

மனிதர்களும் இந்த ஸரோவரை அடைகிறதில்லை, அடைய முடியாதவர்களாகவுமிருக்கிறார்கள். (249)

மோஹம், மதம், அஹங்காரம் படைத்தவர்களாகிய இவர்கள் இந்த ஸரோவருக்கு வரும் வழியில் இருளடைந்த காடுகளையும் நானாவிதமாகப் பயத்தைத்தரும் நதிகளையும் கடக்கவேண்டும். (250)

எவர்களிடம் சிரத்தை, சத்ஸங்கம், பகவானிடம் ப்ரேமை ஆகிய இம்மூன்றும் இல்லையோ, அவர்களும் இந்த மானஸ ரோவரை அடைவதற்கு மிக்கக் கஷ்டப்படுகிறார்கள். (251)

எல்லாவிதமான கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு மானஸ ரோவரின் கரையை அவர்கள் அணுகினாலும் பிசாசு பிடித்தாற் போல தூக்கம் இவர்களுக்கு வந்துவிடுகிறது. ஹ்ருதயத்தில் மூர்க்கத்தனம் வந்து, அவர்களின் ஹ்ருதயத்தை கடினமாக்கு கிறது. இவைகளின் பலனாக அந்த ஸரோவரின் கரையை அணுகினாலும், அபாக்யத்தினால் அவர்கள் ஸ்நானம் செய்கிற தில்லை. ஜலத்தைக்கூட பருகும் பாக்கியமும்கூட அவர்களுக்குக் கிட்டுவதில்லை. (252)

அப்பேற்பட்ட மந்தபுத்தி உள்ளவர்களால் ஸ்நானமும் ஜலமும்கூட பானம் செய்யப்படுவதில்லை. அவர்கள் வெகு அபிமானத்துடன் திரும்பிப்போகிறார்கள். வழியில் யாராவது இதைப்பற்றி விசாரித்தால் அவர்கள் தங்கள் அபாக்யங்களைக் கூறாமல் இந்த ஸரோவரை நிந்தனை செய்துவிட்டு கேட்கிறவர் களை கெட்டபடி அறிவிக்கிறார்கள். (253)

[தியானம்

ஹே ஜானகி, காமாக்ஷி, பார்வதிதேவியின் பிரியமான சகியே, எப்போது உன் ஸ்மித மந்தஹாஸமான பார்வையை நான் விஸ்வாமித்திரர் ராமனைக் கண்டதுபோல பார்க்கப்போகிறேன்? முன்பு பார்வதி தேவியின் கல்யாணத்தில் லஜ்ஜையால் மிக்க சிரமத்துடன் அடக்கப்பட்ட உமையின் புன்சிறிப்பைக்கண்டு களிப்பதற்கு மிக்க ஆவலுள்ள சம்பு கூத்தாடுவதில் சந்தோஷ மடையும் நந்தியைக் கொண்டு உன் மந்தஸ்மிதமான அழகான புன்சிரிப்பை வேண்டுமென்று வெளிவரச் செய்தாரோ, அப்பேற் பட்ட சிறந்த விலாஸங்களுக்கு இருப்பிடமாகியதும் அழகானது மான உன் புன்னகையை நான் எப்போது பார்ப்பேன்!]

[தாயே, உன் கீழ் உதட்டின் பரிசுத்தமான சேர்க்கையையும் அம்ருதமயமான ரஸத்தையும் பருகுவதற்கு ஓங்கார ரூபமாகிற

உனது புதல்வன், குமார வடிவாகிய கார்த்திகேயன் ஆகியவர்களின் சேஷ்டைகளைக் கண்டு, அதனால் ஏற்படும் பூங்கொத்தான உன் புன்சிரிப்பை எப்போது நான் கண்டுகளிப்பேன்! உனது நெருங்கிய ஸ்தனங்களின் மீதுள்ள சேர்க்கையால் ஒளிகள் வீசும் உன் மாணிக்கத்தின் ஒளியில் மந்தஸ்மிதம் கதிர்விட்டு பரமசிவனிடம் கொழுந்துவிட்டு எரியும் மன்மதபாணங்களால் ஜ்வாலைகளை உண்டாக்கும் மேலான வெண்மை நிறம் படைத்த உன் சிரிப்பை எப்போது நான் காண்பேன்! மஹேசி, புதிய யௌவனமெனும் ராஜ்ய லக்ஷ்மியை அடைந்த பரமசிவனை, என் குருநாதரை, வசப்படுத்தவேண்டிய விஷயத்தில், நீ கருணையுடனும், கிருபையுடனும் இருக்க வேண்டும்.]

[தியானம்

ஹே ஜானகிராமா, வில்லாளிகளில் முதல்வனே, அசைகின்ற வளைந்த புருவக் கொடியால் அழகிய விளையாட்டுப் பார்வை என்னும் அம்பு தொடுப்பவனும், ஸ்திரீயாகிய லக்ஷ்மி தேவியின் ஸ்ருங்கார பாவமாகிற ரதியிலிருந்து பிறந்த கிரியைகள், விலாஸங்கள், விப்ரமங்கள் முதலியவைகளை மனதில் தரித்துக்கொண்டு, சதா உன் கருணையையே நாடி, மனம் உள்ளவளும், ராக்ஷஸிகளால் சூழப்பெற்று, மிக்க கஷ்ட திசையை அடைந்த ஜானகி, என்னிடம் கிருபைகொண்டு, உன் மீது உள்ள பக்தி விலாஸத்தைப் பெருக்கச் செய்யட்டும். உங்கள் கருணையின்றி நான் உலகில் அரை க்ஷணம்கூட இருக்க முடியாது.]

என்போன்ற ஜனங்களுக்கு உலகத்திலுள்ள எல்லா விக்னங்களும் சேர்ந்து என்ன கஷ்டத்தைக் வேண்டுமானாலும் கொடுக்கட்டும்? ஹே ராமா, அழகான உன்னுடைய மகாகிருபாகடாக்ஷத்தினாலும் உன் மந்தஸ்மித பார்வையினாலும், ஜானகி தேவியின் அபார கிருபையாலும், சம்பு பார்வதியின் அனுக்ரஹத்தாலும் எதைத்தான் ஜெயிக்க முடியாது? இப்பேற்பட்ட மரியாதைக்குறிய மஹா ஜனங்கள் சகல கஷ்டங்களையும் விலக்கி இந்த ராமசரித மானஸரோவரில் ஸ்நானம் செய்து, மிக்க பயங்கரமாயுள்ள ஆதிஆத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக தாபங்களைப் போக்கிக்கொள்கிறார்கள். (254)

எந்த ஹ்ருதயகமலத்தில் பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனுடைய சரணகமலங்கள் பிரேமையுடன் பதிந்தனவாகவிருக்கின்றனவோ, அப்பேற்பட்ட ஹ்ருதயமுள்ள மஹான்கள் இந்த ஸரோவரை ஒருக்காலும் விட விரும்பமாட்டார்கள். "ஹே

சாதுக்களே, உங்களில் எவர்கள் இந்த ஸரோவரில் ஸ்நானம் செய்ய விரும்புகிறுர்களோ, அவர்கள் மனத்தை ஏகாக்ரமாகச் செய்துகொண்டு, ஸத்சங்கமாக ஒன்று சேருங்கள்.'' (255)

இப்பேற்பட்ட மானஸரோவரில் ஹ்ருதயம் என்கிற நேத்ரத்திஞல் பார்த்து, ஆனந்தமடைந்து, உத்ஸாகம் பெருகி, பிரேமையுடன் ஸ்நானம் செய்வதால், அவர்களுடைய புத்தி நிர்மலமாகி கவித் தன்மையை அடைகிறது. (256)

அந்த கவித்தன்மையால் அழகான பிரவாகம்போல கவிதா வெள்ளம் பெருகுகிறது. இதனுல் ஶ்ரீராமனுடைய நிர்மலமான கீர்த்தியை பெருகவைக்கிறது. இந்த கீர்த்தி ரூபமான நதி பிரவாகம் ஸரயூ நதியாகவிருக்கிறது. ஸம்பூர்ணமான மங்களங்களை உற்பத்தி பண்ணும் மூலமாக விருக்கிறது. லோகத்தில் வழங்கும லௌகிக கருத்துக்களும், வேதத்தின் சொற்களும், இந்த அழகான ஸரயூ நதிக்கு இருகரைகள். (257)

இப்பேற்பட்ட அழகான மானஸரோவருக்கு கன்னிகையாக அவதரித்த ஸரயூ நதி ரொம்ப பரிசுத்தமானது. கலியுகத்தின் பெரிய, சிறிய எல்லா பாபக்கூட்டங்களையும் வேருேடு போக்க வல்லமைகள் உள்ளது. (258)

[தியானம்

ஹே ராமா, ஜானகி வல்லபா, காமாக்ஷி, பவப்ரியே கங்கையின் பிரவாகம்போல இயற்கையிலேயே மிகக் குளிர்ந்ததும், இனிமை பொருந்தியதும், மிக்க பரிசுத்தமான உனது புன்முறுவல்களின் காந்திக்கூட்டங்கள் பாபக்கொத்துக்களடங்கிய எனது ஜீவனை காக்கட்டும். தக்ஷ சத்ருவாகிய பரமசிவனுடைய பார்வை ஏற்படும்போது வெட்கத்தை அடைந்த பார்வை உள்ள பார்வதியே, பரமசிவனின் சிவந்த திருமேனியைக் காண மிக்க ஆவலுள்ள மனம் உடையவளே, அம்மா காமாக்ஷி, பாசமோசினி, உனது மிருதுள புன்சிரிப்பு காந்தியின் கூட்டங்கள் எனது வாக்குக்களில் தேன், வெல்லம், பால், திராக்ஷை இவைகளிலிருந்து உண்டாகக்கூடிய மேன்மையைச் செய்யட்டும். மேலும் நாராயணருடைய கிருபையான ஸூக்ஷ்மமான மோக்ஷத்தை அவலம்பித்த என்னை ஜானகிநாதனுடைய கிருபைக்குப் பாத்திரனுக்கவேண்டும்.]

மூன்று பிரகாரங்களாகக் கேட்பவர்களின் கூட்டங்கள் இருக்கின்றனர். அவைகளாவன, முதலில் முக்தாத்மாக்கள்; இரண்டாவதாக முக்தியை அடையவிரும்பும் யோகிகள்; மூன்ருவதாக

விஷயபோகங்களில் இச்சை யுள்ளவர்கள், மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்ய விரும்பும் ஜனங்கள். அவர்களின் கூட்டங்கள் இந்த அழகான சரயூவின் இருகரைகளிலுமுள்ள புரங்கள், கிராமங்கள் நகரங்களில் வசிப்பவர்கள். சாதுக்களின் சேர்க்கை அழகான மங்களங்களை விளைவிப்பதும், உவமையில்லாததும் மங்கள மூலமான அயோத்யாபுரியாகவும் விளங்குகிறது. (259)

சுந்தரமான கீர்த்தி ரூபமாயுள்ள ஸரயூ நதி ராமபக்தி என்கிற கங்கைபிரவாஹத்தில் வந்து சேருகிறது. தம்பியான லக்ஷ்மணனுடன் கூடச் செய்த ராமராவண யுத்தத்தின் வீரச் செயல்களின் கீர்த்தியைப்போல ஸோண நதி இவைகளுடன் வந்துசேருகிறது. (260)

இந்த இரண்டு நதிகளுக்குமிடையில் பக்திரூபியான கங்கை யின் பிரவாஹம் ஞானம் வைராக்யம் இவைகளுடன்கூடி சோபிதமாக விளங்குகிறது. இந்த மூன்று நதிகளும் மூன்று வித தாபங்களைப் போக்கி, அந்த சங்கமமான ஜலங்கள் ஸ்ரீராமச்சந்திர அகண்ட ஸ்வரூபியான சமுத்திரத்தில் போய் விழுகின்றன. (261)

இப்பேற்பட்ட கீர்த்தி ரூபமுள்ள ஸரயூ நதியின் உற்பத்தி ஸ்ரீராமசரிதமானஸம் என்கிற மானஸரோவரில் யேற்படுகிறது. அந்த நதி பக்திரூபமான கங்கையின் பிரவாஹத்தில் விழுகிறது. ஆகையால் இந்த ராமசரித மானஸரோவரில் மூழ்கி எழுந்த சாது ஜனங்களின் மனம் பவித்திரமாகிறது. இந்த கதையின் நடுவே பின்னபின்னமாக வரும் விசித்திரமான உபகதைகள், நதியின் கரைகளிலுள்ள வனங்கள், விசித்திரமான தோட்டங்கள், ஆபரணங்களைப்போல விளங்குகின்றன. (262)

உமாமஹேசர்களின் விவாஹத்தின் சமயம் வந்த பராத்—மாப்பிள்ளை ஊர்வலத்தில் வந்த தேவரிஷி முனிகணங்களின் கூட்டங்கள் இந்த ஸரயூ நதியில் உள்ள மீன் கூட்டங்களைப் போலவிருக்கின்றனர். ஸ்ரீரகுநாதனுடைய ஜன்ம உத்ஸவத்தின் போது யேற்பட்ட ஆனந்த அனுபவங்கள் இந்த உத்தமமான நதியினுடைய அலைப் பிரவாகங்கள் போலவிருக்கின்றன. (263)

நான்கு தம்பிமார்களுடன் கூடவிளங்கிய ஸ்ரீராமனுடைய பால சரிதமானது இந்த நதியின் மலர்ந்த தாமரை புஷ்பங்கள். இந்த தாமரை மலர்களின் இன்பரஸத்தைப் பருக வரும் வண்டு களைப்போல மஹாராஜரான தசரதரும் அவருடைய பட்டமகிஷிக ளான கௌசல்யாதேவி கைகேயி சுமித்திரை ஆகியவர்களின் ஸத்கர்ம புண்யராசிகள். அவர்களைச் சூழ்ந்த பரிஜனங்கள்

ஜலத்தைப் பானம் பருக வரும் பக்ஷி, மிருகங்கள்போலவிளங்கு கிருர்கள். (264)

(மஹாலக்ஷ்மியாகிய) சீதையின் ஸ்வயம்வரத்தின் கதை மிக்க அழகானது. அந்த சரித்திரம் இந்த நதியின் அழகானதும் மனோஹரமான காக்ஷிகளைப் போலவிருக்கிறது. இன்னும் அழகான தத்துவங்களை ஆராயும் பிரஸ்னங்கள், உத்தரங்கள் இந்த நதியினுடைய தெப்பங்கள், விவேகபூர்வமாயுள்ள கெட்டிக்கார படகோட்டிகளாக விருக்கிருர்கள். (265)

இந்த கதையைக் கேட்டு பரஸ்பர ஸம்பாஷணைகள் இந்த நதியினுடைய கரையோரங்களில் நடந்து செல்லும் யாத்திரீகர்களுடைய சமாஜங்களின் சோபைகள். பரசுராமருடைய க்ரோதம் இந்த நதியினுடைய பயங்கரமான சுழல்கள். ஸ்ரீராமச்சந்திரனுடைய இனிமையான வார்த்தைகள் அழகாகக் கட்டப்பட்டுள்ள தீர்த்தகட்டங்களைப் போல விருக்கின்றன. (266)

தன் தம்பிமார்களுடன் கூடச் சேர்ந்து நடந்த ஸ்ரீராமச்சந்திரனுடைய விவாஹ உத்ஸவம் இந்த ராமசரித மானஸரோவரின் மங்களங்களை விளைவிக்கும் வெள்ளங்கள். எல்லோருக்கும் சுகத்தைத் தரக்கூடிய ஜலங்கள். இந்தக் கதையைச் சொல்லிக் கேட்பவர்கள் தானும் சந்தோஷமடைந்து பிறருக்கு இன்பத்தையும் கொடுப்பவர்கள். புண்ணிய புருஷர்கள். மிக்க சந்தோஷத்துடன் இந்த நதியில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள். (267)

ஸ்ரீராமச்சந்திரனுடைய ராஜசிம்மாஸனம் ஏறுவதற்குச் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் காட்சிகள், மங்களகரமான ஸாது ஜனங்களின் கூட்டங்கள். பர்வ காலங்களில் கூடி ஆனந்திக்கிறவர்கள். கைகேயியின் கெட்ட புத்தியுள்ள வசனங்கள், விஷயங்கள் பெரிய பயத்தைக் கொடுப்பவைகள், ரொம்பக் கனமாயுள்ள ஆபத்துக்கள், பிரவாஹத்தில் மிதந்து வந்துகொண்டிருக்கும் நுரைகள் போலவிருக்கின்றன. (268)

ஸம்பூர்ணமானதும் கணக்கில் அடங்காதவையுமான உத்பாதங்களை, எதிர்பாராத துக்கக் காக்ஷிகளை அடக்குவதற்கு பரதனுடைய தூய்மையான வாழ்க்கையும், சரித்திரமும் நதிக்கரையில் செய்யப்படும் ஜபயக்ஞமாக விளங்குகிறது. கலியுகத்தின் பாபங்களும் துஷ்டர்களின் கெட்ட குணங்களும் இந்த நதியின் சேர் நிறைந்த பிரதேசங்கள், கொக்குகள் காக்கைகள் போன்ற பக்ஷிகளைப் போலவிருக்கின்றன. (269)

[தியானம்

ஹே உமா, திரிபுரசுந்தரி, உன்னழகை யார்தான் வர்ணிக்க முடியும்? உன்முகத்தின் லாவண்யத்தையும் காந்தியையும் கண்டு பூர்ண சந்திரனின் ஸ்வரூபமும் தேஜஸ்ஸும் வெட்கப்படும். உன் சுந்தர வடிவழகைக் கண்டு, மன்மதனும் மறைந்து விட்டான். உன் கம்பீரத்தைக் கண்டு சமுத்திரமும் மனம் கலங்கி அமைதியாய்விடும். உன்னுடைய அசைவற்ற பலத் தைக் கண்டு மேருமலையும் இறுகி, கல்லாய்விட்டது. உன் கண்களின் சேரபையையும் குணத்தையும் கண்டு மீன் குஞ்சுகள் வெட்கப்பட்டு, சமுத்திரத்தை அடைந்தன. உன்னுடைய புன்சிரிப்பைக் கண்டு பரமசிவன் வெண்மையை அடைந்தார். உன் ஆபரணங்களையும் வஸ்திராலங்காரங்களையும் கண்டு, மின்னல்கூட வெட்கப்பட்டு ஒரு நிமிஷம்கூட நிற்க மறுக்கிறது. உன் மதுரமான குரலைக்கேட்டு, ஸரஸ்வதிதேவியும் தன் நாயக னுகிய பிரும்மாவினுடைய நாக்கில் தஞ்சமடைந்திருக்கிருள். பாவனமான உன் மகிமையைக் கண்டு பாபக் கூட்டங்கள் ஓடி ஒளிந்துபோகின்றன. தாயே, உன் அருள் கடாக்ஷத்தி னுல் கவிகள் அழியாத காவியங்களை இயற்றுகிருர்கள். உன்னை மஹாவிஷ்ணுவின் சகோதரி என்று முனிவர்களும், யோகிகளும் சதா வர்ணித்து ஆனந்தமடைகிருர்கள். அப்பேற்பட்ட நீ கருணையுடன் என்னைக் காக்கவேண்டும்.]

இவ்வளவு கீர்த்தி மகத்துவம் படைத்த ராம கதையாகிற நதி ஆறு ருதுக்களிலும் சுந்தரமாக விளங்குகிறது. எல்லாக் காலங்களிலும் பரமசுகத்தைத் தருவதாயும், அத்யந்த சுத்தமாயு மிருக்கிறது. இந்த கதையில் சிவபார்வதியின் பரிணயம் ஹேமந்த ருதுவைப்போல விளங்குகிறது. ஸ்ரீ ராமச்சந்திரனுடைய ஜன்ம உத்ஸவம் சுகத்தைத் தரும் பனிக்காலமாகவிருக்கிறது. (270)

ஸ்ரீ ராமச்சந்திரனுடைய விவாஹ மஹோத்ஸவத்தில் வரும் ஸமாஜக் கூட்டங்கள் ஆனந்தமும் மங்களமயமாகவுமிருக்கும் ருதுராஜனை வசந்த ருதுவைப்போலவிருக்கிறது. ஸ்ரீராம னுடைய வனப்பிரவேசம் தகிக்கிற கிரீஷ்மருதுவைப்போலவும் விளங்குகிறது. அதனுல் தொடரப்படும் கதையின் போக்கு தூசிகளையும் தாபத்தையும் உண்டுபண்ணும் உஷ்ணக் காற்றுக் களைப்போல விருக்கின்றன. (271)

ராக்ஷஸர்களுடன் செய்த கோரமான யுத்தவர்ணனைகள் வர்ஷருதுவைப்போல விளங்குகின்றன. தேவர்களின் சந் தோஷத்தைப் பெருக்கும் மழைத் தாரைகளைப்போல விருக்

கின்றன. ஸ்ரீ ராமச்சந்திரனுடைய ராஜ்யபார விசேஷங்கள் சுகத்தையும், விநம்ரதையையும் மேன்மையையும் கொடுக்கும் அழகான சரத்ருதுவைப்போல விளங்குகின்றன. (272)

சதிசிரோண்மணியாக விளங்கும் சீதாதேவியின் குண விலாசங்களை வர்ணிக்கும் கதைகள் இந்த ஸரயூ நதியின் நிர்மலமான ஜலங்கள். ஸ்ரீ பரதனுடைய மேன்மையான தபஸ்ஸுகளும் தியாகங்களும் இந்த நதியினுடைய சுந்தரமான குளிர்ந்த ஸ்நானக்கட்டங்கள். இவைகள் சதா ஏகரஸபாவத்துடன் வர்ணிக்கமுடியாத சோபையுடன் விளங்குகின்றன. (273)

நான்கு பிராதாக்களிடம் ஏற்பட்டுள்ள ஒருவருக்கு ஒருவருடன் கூடிய பரஸ்பர பிரேமை விலாஸங்கள் பார்ப்பதற்கும், சொல்வதற்கும் ஹாஸ்ய மொழிகளைக் கேட்பதற்கும் இனிப்பாகவும் சுகந்தமாகவுள்ள இடங்கள், அழகான நீர்தேக்கங்களாக விருக்கின்றன. (274)

என்னுடைய தீனமான ஸ்திதியும் ஆர்த்தியும் அடக்கமும் தயையைப் பிரார்த்திக்கும் மனோபாவங்கள் இந்த சுந்தரமானதும் நிர்மலமானதும் அழகானதுமான சரயூ நதியின் ஆழமில்லாத இடங்கள். இந்த இடங்களிலுள்ள ஜலங்கள் ஆச்சர்யமானவை. கேட்பவர்களின் மனங்களை குணசாலிகளாக மாற்றும் ஸ்வாபமுள்ளவைகள். ஆசை ரூபியான தாகத்திற்கும், மனத்தின் மலங்களைப் போக்குவதற்கும் ரொம்ப உபயோகப்படும். (275)

இந்த மதுரமான ஜலம் ஸ்ரீ ராமச்சந்திரனிடம் சுந்தரமான ப்ரேமையைப் புஷ்டிகொடுத்து வளர்க்கிறது. கலியுகத்தின் ஸமஸ்த பாபங்களைப் போக்கும். துக்கங்களை விலக்கும். பவமென்கிற சம்சாரஸ்ரமத்திலிருந்து ஜன்மமிருத்யு பயங்களை விலக்கி பாபங்கள் தாபங்களை நீக்கி, தரித்திரத்தையும், தோஷங்களையும் நீக்கி, மனிதர்களுக்கு சந்தோஷத்தையும் சந்தோஷத்தின் மூலமாக வரும் ஸந்துஷ்டியையும் கொடுக்கும். (276)

இந்த பவித்திரமான ஜலம் காமம் க்ரோதம் மதம் மோஹம் ஆகியவைகளை நாசம் பண்ணக்கூடியது. நிர்மலமான ஞானத்தையும் வைராக்யத்தையும் விருத்திபண்ணக்கூடியது. இந்த அழகான ஜலத்தில் பூர்ணமான விஸ்வாசத்துடன் ஸ்நானம் பண்ணும் பாக்யமுள்ளவர்கள், குடிக்க ஸாவகாசம் உள்ளவர்கள், தங்கள் ஹிருதயங்களில் எல்லாப் பாபங்களையும் தாபங்களையும் நாசம் பண்ணுகிறார்கள். (277)

சுபகீர்த்திகளடங்கிய இந்த ராமசரிதமான ஸரோவரின் ஜலத்தால் தங்களுடைய ஹ்ருதயங்களை எவர்கள் சுத்தம் செய்யவில்லையோ, அவர்கள் கோழைகள். கலிகாலத்தின் சேஷ்டைகளால் ஏமாற்றப் பட்டவர்கள். எப்படி தாகத்தின் வேட்கையைத் தணிக்க கானல் நீரைக்கண்டு ஏமாறும் மானைப் போல ஏமாறுபவர்கள். ஸம்சாரத்தில் விஷயரூபிகளான வஸ்துக் களில் மனதை செலுத்திக்கொண்டு, குறைவற்றதும் பெரும் புகழை உடையதுமான ராமதனத்தைப் பெருதவர்கள் அதிருஷ்ட மில்லாத ஜனங்கள் என்றே சொல்லலாம். (278)

இவ்விதம் அவரவர்களின் புத்திக்குத் தகுந்தவாறு இந்த சுந்தரமான ஜலத்தின் மேன்மையை அறிந்து தெரிந்து அதில் தன்னுடைய மனதைக் கொடுத்து ஸ்நானம்பண்ணி, பாக்யசாலி களான ஸ்ரீ பவானி சங்கரருடைய ஸம்ரணைகளைச் செய்து, இந்த ராமசரிதமானஸம் எனபதைச் சொல்ல ஆரம்பிக்கிறேன் என்று துளசிதாஸர் சொல்லுகிருர். (279)

[தியானம்

ஹே காமாக்ஷி, தாயே, ஸ்மரமதனன் என்று பெயர் பெற்ற பரமசிவனைப் பாணிகிரஹணம் செய்துகொள்ளுவதில் பரபரப்பு உள்ளவளாயும், நாரதரால் உபதேசிக்கப்பட்ட பஞ்சபாணமனு மந்திரத்தை ஸித்திபண்ணுபவளாயும், மன்மதனுடைய ஹேலா விலாஸங்களின் கோசஸ்தானமாக விளங்குபவளும், சிந்தாமணி என்னும் கிரஹத்தில் வீற்றிருப்பவளும், என்போன்ற தீனர்களிடம் உத்பன்ன தாமரை மலர்போல பிரகாசமான முகத்தை உடையவளும், மந்தஸ்மிதம் என்கிற பெயர்பெற்ற புன்சிரிப்பை உடையவளும், சூர்ய சந்திரர்களை ஸ்தனங்களாக உடையவளும், சம்புவை மோஹிக்கச் செய்கிறவளும், ஸ்வர்ண காந்தியையும் இளம் சூரியன் போன்ற சிவந்த நிறத்தை உடையவளும் தாமரஸ புஷ்பம் முத்துமணி போன்ற ஹாரங் களாலும் கிரீடத்தாலும் அலங்கரிக்கப்பட்டவளும், மந்தமாக நடந்து வருபவளும், முனி தேவரிஷி கணங்களால் வணங்கப் பட்டவளும் குமாரியும் தாமரைத் தண்டுகள் போன்ற கைகளில் தாமரஸ புஷ்பம் போன்ற ஸ்வயம்வர மாலையைத் தரித்திருப் பவளும் மனோஹரனை பவனைக் கடைக்கண்ணால் பார்த்து நிரம்பிய சந்தோஷத்துடன் கூடிய கௌரி என்று சொல்லப்படும் என் தாயையை நான் நமஸ்கரிக்கிறேன்.]

யாக்ஞ்யவல்கிய பரத்வாஜர் ஸம்வாதம்:

இப்பொழுது என் பிரபுவான ஸ்ரீ ரகுநாதனின் சரண கமலங்களை என்னுடைய ஹ்ருதயபுண்டரத்தில் தரித்து, அந்த ஜானகிராமனுடைய பிரசாதத்தை அடைந்து, ஸ்ரேஷ்டமான இரண்டு மகரிஷிகளினுடைய ஸம்வாதத்தை விவரிக்க ஆரம்பிக்கிறேன். (280)

பரத்வாஜமுனி திரிவேணி என்று சொல்லப்படும் பிரயாகையில் வசிக்கும் பிரம்மரிஷி. அவருக்கு ராம சரணங்களில் அத்யந்த ப்ரேமை. அவர் மஹாதபஸ்வி. நிவிருத்தி மார்க்கத்தில் ஊன்றிய மனஸ் உடையவர். ஜிதேந்திரியர், தயாசாகரர், பகவானைத் தேடும் ஆத்ம உஜ்ஜீவன மார்க்கத்தில் மிக்கத் தேர்ந்தவர். (281)

தை மாதத்தில் சூரியன் மகர ராசிக்கு வரும் சமயம். அந்த உத்திராயண புண்யகாலத்தில் சாதுஜனங்கள் தீர்த்தராஜனை திரிவேணி சங்கமத்துக்கு வருவது வழக்கம். தேவதைகள், தைத்யர்கள் கின்னரர்கள், யக்ஷர்கள், மனிதர்களின் கூட்டங்கள் மிக்க பரிசுத்தமனத்துடன் ஸ்நானம் செய்வார்கள். (282)

ஸ்ரீவேணி மாதவனுடைய சரண கமலங்களைப் பூஜித்து அக்ஷயவடத்தை நமஸ்கரித்து வலம்வந்து, புளகாங்கிதமடைகிறார்கள். பரத்வாஜருடைய ரமணீயமானதும் பவித்திரமானதுமான ஆஸ்ரமத்தை அடைந்து, ஸ்ரேஷ்டமான முனிவரின் பிரசாதத்தை அடையவிரும்புகிறார்கள். (283)

தீர்த்தராஜனை பிரயாகையில் ரிஷிமுனிக் கூட்டங்கள் அந்த பரத்வாஜருடைய ஆஸ்ரமத்தை அடைந்து, பிராதக் காலத்தில் ஸ்நானம் செய்து, ஜபதபாதிகளை முடித்தபிறகு பகவானாகிய ஸ்ரீ ஹரியினுடைய குண விசேஷங்களை பரஸ்பரம் சொல்லிக் கொண்டு ஆனந்தப்படுகிறார்கள். (284)

பிரும்மத்தின் நிரூபணம், தர்மத்தின் சூக்ஷமங்கள், தத்வ விசாரங்கள் இவைகளை விவாதித்து, அவர்கள் ஞானம் வைராக்யம் என்கிற சம்பத்துக்களை அடைந்து பகவானுடைய பக்தி பிரவசனங்களைச் செய்கிறார்கள். (285)

இந்தப் பிரகாரம் தை மாதத்தில் ஸ்நானம் செய்கிறார்கள். பிறகு தங்கள் ஆஸ்ரமங்களுக்குச் செல்லுகிறார்கள். இதுமாதிரி பிரதி ஸம்வத்ஸரத்திலும் பெரிய ஆனந்தத்தை அடைந்து, தைமாத முடிவில் அவர்கள் தங்கள் கிருஹங்களுக்கு திரும்பிச் செல்லுகிறார்கள். (286)

ஒரு சமயம் மகர மாதத்தில் ஸ்நானம் பண்ணவந்த முனிகணங்கள் தங்கள் ஆஸ்ரமங்களுக்குச் திரும்பிச்சென்று கொண்டிருந்தார்கள். பரமஞானியான யாக்ஞய வல்கிய முனிவரின் ஸ்ரேஷ்டமான பாதகமலங்களைப் பிடித்துக்கொண்டு, பரத்வாஜ முனிவர் வேண்டிக்கொண்டார். "ஸ்வாமி தாங்கள் பிரயாகையில் சில நாட்கள் தங்கவேண்டும்" என்றார். அதன்படி யாக்ஞ்யவல்கியர் தங்கினார். (287)

[தியானம்

என் ஆசாரியரும், சூரியனைக் குருவாகக் கொண்டவரும், வைசம்பாயனரை மாமாவாகக் கொண்டவரும், சரஸ்வதி தேவி யின் அருளைப் பெற்றவரும், பெயர்பெற்ற பிராம்மணம் என்கிற ஸம்ஹிதைகளைச் செய்தவரும், பிரும்ம ரிஷியும், கர்கிமைத்ரேயி என்கிற ஸ்திரிகளைப் பூஷணமாகக் கொண்டவரும், கர்மயோகத் தில் சிறந்தவரும், ஜானகிக்குத் தகப்பனரான ஜனகமஹாராஜ னின் ஆசார்யரும், சீதை ராமன் பாணிக்ரஹணத்திற்கு மந்திர ஸ்வரூபமாக கணையாழியைக் கொடுத்தவரும், எந்த கணையாழி யினால் பிற்பாடு சீதாதேவி ஆஞ்சநேயர் மூலம் சகல மங்களங் களையும் அடைந்தாளோ, அந்த மஹானுபாவராகிய யாக்ஞ்ய வல்கியரை சரணமடைகிறேன். அவரை நமஸ்கரித்து பூஜை செய்து சீதாராமனுடைய கிருபையை ஆசார்யர் மூலம் அடையப் பிரார்த்திக்கிறேன்.]

மிக்க மரியாதையுடன் அந்த மஹானுபாவரின் சரண கமலங்களைப் பூஜித்து, நல்ல ஆஸனம் கொடுத்து, பாத்யம் அர்க்யம் ஸமர்பித்து, அவருடைய சுந்தரமான யசசுகளை வர்ணித்து, அத்யந்த பிரேமையுடன் கூடிய கோமளமான வசனங்களால் பரத்வாஜ முனிவர் சொல்லலானார். (288)

"ஹே குருநாதரே, என்மனதில் ஒரு பெரிய சந்தேகம் தோன்றியிருக்கிறது. வேதத்தின் தத்வங்கள் எல்லாம் தங்கள் முஷ்டியில் ஒரு நெல்லிக்கனியைப்போல விளங்குகிறது. என் மனத்தில் எழும் சந்தேகத்தைச் சொல்லும்போது எனக்கு பயமும் லஜ்ஜையும் யேற்படுகிறது. தங்களை நான் பரிசைஷ செய்வதாக தாங்கள் நினைக்கக்கூடாது. இவ்வளவு வயது ஆகினும் பூர்ண ஞானம் பெருத என் போன்றவர்களை தாங்கள் மன்னிக்கவேண்டும். என்மீது கருணை கூர்ந்து என் அக் ஞானத்தைப் போக்கி, என்னைக் கிருதார்த்தனக ஆக்க வேண்டும்." (289)

"ஹே பிரபோ, சாதுஜனங்கள் நீதி நிர்ணயம் பண்ணக் கூடியவர்கள். அவர்களிடமிருந்து சந்தேகங்களைக் கேட்டு விலக்கிக்கொள்ள வேண்டும். வேத புராணங்களும் மஹரிஷி சித்த கணங்களும் குருநாதர்களான சாதுக்களிடம் தங்கள் சந்தேகங்களைத் தெரிவிக்காமல், அக்ஞானத்துடன் சூழ்ந்திருந் தால், ஒருக்காலும் நிர்மலமான ஞானத்தை அடையமுடியாது என்று பறைசாற்றுகின்றனர்." (290)

"ஆகையால் நான் இதைப்பற்றி யோசித்து என் அக் ஞானத்தையும் சந்தேகங்களையும் தாங்களிடம் பிரகடனப் படுத்த விரும்புகிறேன். ஹே நாத, உங்கள் சேவகன்மீது கிருபை கூர்ந்து என் அக்ஞானத்தைத் தீர்க்கவேண்டும். ஸ்ரீராம நாமத்தின் பிரபாவத்தை அநேகமாக ஸாதுக்கள், புராணங்கள் உபநிஷத்துக்கள் பலவிதமாக கானம் செய்கின்றன." (291)

"எல்லா மங்களங்களை விளைவிப்பவரும், ஞானம் முதலிய சத்குணங்களின் ராசிக்கூட்டங்கள் போலவிருப்பவரும் அவிநா சியுமான பகவான் சம்பு சதா தன் ஹ்ருதய புண்டரத்தில் ராம நாமத்தை ஜபித்துக்கொண்டு தானும் புளகாங்கிதமடைந்து, ஸம்சாரத்தில் வெந்துபோன ஜீவர்களின் வலது காதில் காசி க்ஷேத்திரத்தில் தாரகமந்திரமாக உபதேசித்து, (அம்பிகை மரித்த ஜீவனின் ஹ்ருதயக்ரந்திகளிலிருந்து அக்ஞானம், பற்றுதல் முதலிய தோஷங்களை விலக்கி,) பரமபதமான ஸ்ரீவைகுண் டத்தை அளிவிக்கும் பாக்யசாலிகளாக இருப்பதற்கு ஸ்ரீராம நாமம் பரம உத்க்ருஷ்டமாக விளங்குகிறது." (292)

"ஹே முனிராஜரே, அப்பேற்பட்ட மகிமையுடன் ஸ்ரீராம நாமம் விளங்குகிறது. அந்த ராம நாமதாரகத்தை மிக்க அபாரக் கருணையுடன் காசி க்ஷேத்ரத்தில் மரிக்கும் ஜீவனுக்கு சம்பு பகவான் உபதேசிக்கிறார். ஹே பிரபோ அப்பேற்பட்ட மகிமையுள்ள ஸ்ரீராமன் யார்? ஹே கிருபாநிதி, தாங்கள் எனக்கு உபதேசித்து, என்னைக் கிருதார்த்தனாக ஆக்கவேண்டும்." (293)

"எனக்குத் தெரிந்தவரை ஒரு ராமன் தசரத குமாரனாக அயோத்தியில் அவதரித்தார். அந்த புகழ்பெற்ற ராமனின் சரித்திரத்தை உலகம் பூராவும் அறிகிறது. அந்த மஹா ராஜாவின் குமாரன் தன்னுடைய சொந்த ஸ்திரியின் பிரிவால் மிக்க விரகதாபமடைந்து, ரோஷம் பெருகி, எல்லோருக்கும் பயத் தைத்தந்த ராவணன் என்கிற ராக்ஷஸனைக் கொன்றார்." (294)

"ஹே பிரபோ, அந்த ஸ்ரீராமனையோ அல்லது வேறு ஒரு ராமனையோ பகவான் சம்பு சதா ஜபித்துக்கொண்டிருக்கிறார்.?

ஸத்யத்தின் பொக்கிஷமாகிய தாங்கள் ஸர்வக்ஞ்யர். எல்லாம் தெரிந்தவரானபடியால் தயவுசெய்து என் அக்ஞானத்தை விலக்கவேண்டும்.'' (295)

''ஹே நாதரே எந்த விதமாக என்னுடைய பாரமான பிரமை மயக்கம் அழியவேண்டுமோ, அவ்விதம் விஸ்தாரமாக பூர்வத்திலிருந்து சொல்லவேண்டும்.'' இதைக் கேட்டதும், பிரும்மரிஷியான யாக்ஞ்யவல்கியர் சிரித்துக்கொண்டு சொல்ல ஆரம்பித்தார்.

''ஸ்ரீரகுபதியினுடைய பிரபுத்துவத்தையும் பிரபாவங்களையும் நீர் பூர்ணமாக அறிவீர்.'' (296)

''நீரோ மனம் வாக்கு காயங்களில் பூர்ணமான ராமபக்தர். நீர் மஹா சாமர்த்தியசாலி என்று நான் அறிவேன். பிரபுவான ஸ்ரீராமனுடைய ரஹஸ்யமான குணங்களைக் கேட்கிறதற்கு ஆசைப்படுகிறீர் என நினைக்கிறேன். இந்த வியாஜத்தினுல் இந்த கேள்வி உம்மால் கேட்கப்பட்டது. நீர் உம்முடைய மனதில் மூடர்போல் பாவித்துக்கொண்டு என்னைக்கேட்கிறீர்''. (297)

''பெரியவரே, ஸ்வாமி, ஏகாக்ரமனத்துடன் ஸ்ரீராமனுடைய பெருமைகளை என்னிடமிருந்து கேளும். பெரிய பாரமான அக்ஞானச் சுமைகளைத் தாங்கியவனும் மஹா மோஹம் பிடித்தவனை மஹிஷா சூரனைக் கொன்ற காளிகாதேவியைப் போல, ஸ்ரீராமனுடைய கதை விளங்குகிறது.'' (298)

ராம கதையானது குளிர்ந்த பூர்ண சந்திரனுடைய கிரணங்களுக்கு சமம். ஸாது ஜனங்கள், சகோர பக்ஷிகள் சந்திரனுடைய கிரணங்களைப் பருகுவதுபோல, சதா ராம கதையைப் பருகி பானம் செய்கிருர்கள். இப்பேற்பட்ட மகத்துவம் படைத்த ராம கதையை, சந்தேகத்தை அடைந்த ஸ்ரீபார்வதிதேவியானவள் முன் காலத்தில் ஒரு சமயம் தன் பதியான சம்புவைக் கேட்டாள். பிரபுவான மஹாதேவர் விஸ்தாரமாக அவளுக்கு பதிலளித்தார்.'' (299)

''இப்போது நான் உமாமஹேஸ்வர ஸம்வாதமாகிய ஸ்ரீராம கதையை என் புத்திக்கு எட்டியபடி தெரிவிக்கிறேன். அந்தக் கதை எப்படி எந்தக் காரணத்தால் எந்த சமயம் உண்டானதோ, அதைக்கேட்டு, உமது அக்ஞானத்தைப் போக்கிக் கொள்ளும்.'' (300)

''முன்பு ஒரு சமயம் த்ரேதா யுகத்தில் பகவான் சம்பு மிக்கப் பிரதாபமுள்ள அகஸ்திய மஹரிஷியைப் பார்க்கச் சென்ருர். ஜகஜ்ஜனனி பவானியும் அவருடன் கூடவிருந்தாள். மஹரிஷி

யும் அவர்களை அகிலேஸ்வரர்கள் என்று அறிந்து பூஜை செய்தார்.'' (301)

''அச்சமயம் அகஸ்திய ரிஷியினால் விஸ்தாரமாக ஸ்ரீராமனுடைய கதை சொல்லப்பட்டது. மஹேஸ்வரர் பரம சுகத்துடன் அந்தக் கதையைப் பருகினார். பிறகு மஹரிஷியினால் வினவப் பட்ட மஹேஸ்வரர் அகஸ்தியரைத் தகுந்த அதிகாரியென்று நிச்சயித்து, ஹரிபக்தியின் லக்ஷணங்களை விளக்கினார். பிறகு அவரால் மஹாகிருபையுடன் எல்லா தத்வங்களும் மஹரிஷிக்கு நிரூபணம் செய்யப்பட்டது.'' (302)

[தியானம்

ஹே ஜயராமா, ரகுராமா, சாதுக்களின் ஹ்ருதயங்களை அபஹரிக்கிறவனே, என்னுடைய இந்த சரீரம் உன்னுடையது. உன் சொத்து. நீயே எனக்கு கதி. நீ தான் என் பரம பொக்கிஷம். என் மீது உனக்கு ஏதாவது வருத்தமா? நான் செய்த அபராதங்கள் உனக்குக் கோபத்தை விளைவிக்கின்றனவா? என் குணக்குறைகளைக் கண்டு தயங்குகிறாயா? என்னிடம் மேன்மையாகச் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை என்று நீ தயங்குகிறாயா? என்னுடைய ஸ்நேகம் உனக்கு அபகீர்த்தியை விளைவிக்கும் என்று பயப்படுகிறாயா? நீ எவ்விதம் நினைத்தாலும் சரி. எனக்கு ஒன்று நன்றாகத்தெரியும். உன்னைவிட உயர்ந்த பொருள், உன் மனைவி ஜானகியைவிட உயர்ந்த ரத்னம் ஒன்றும் இல்லை என்று எனக்குத் தெரியும். உமையும் சம்புவும் இதைத் தெரிந்து கொண்டுதானே எனக்கு உபதேசம் செய்தார்கள். உன் பாதத்தையே நம்பியிருக்கும் என்னை கைவிடக்கூடாது. உங்களைவிட உயர்ந்த கடவுள் இல்லை. என்னைவிட தாழ்ந்த ஸ்திதியில் இருப்பவனும் இருக்க முடியாது. என் மானம் உன்னுடையது. என் குற்றங்களை மறக்கவேண்டும். உன் மனம் என் மீது பாயட்டும். என்தாபங்கள் நீங்கட்டும். என்னை உன்னிடம் அர்ப்பித்துவிட்டேன். என்னை நீதான் காப்பாற்றவேண்டும். பரமபாகவதர்களான அகஸ்திய ரிஷியும், யாக்ஞ்யவல்கியரும் அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

ஸ்ரீரகுநாதனுடைய குணவிசேஷங்களை பல தினங்கள் சம்பு பகவான் சொல்லியும் தானும் கேட்டார். சம்புவும் மன உருக்கத்துடன் எல்லாவற்றையும் அகஸ்திய மஹரிஷியிடமிருந்து கேட்டு அனுபவித்தார். சில தினங்களுக்குப் பின்பு முனிவரிடம் விடை

பெற்றுக்கொண்டு, பகவான் சம்பு ஸதியுடன் தன் இருப்பிடமாகிய கைலாஸத்திற்குத் திரும்பிச் சென்றுர். (303)

பகவான் ராமச்சந்திரன் பூமியின் பாரத்தை குறைப்பதற்காக அந்த சமயம் ரகு வம்சத்தில் அவதரித்திருந்தார். அழியாத செல்வமான ஸ்ரீராமன் பித்ரு வாக்கியத்தின் பரிபாலனத்திற்காக கோஸல ராஜ்யத்தைத் தியாகம் செய்துவிட்டு தபஸ்வி வேஷத்துடன் தண்டக வனத்தை அடைந்திருந்தார். (304)

இவ்விதமாக தன் ஹ்ருதயத்தில் விசாரம் பண்ணிக்கொண்டு பகவான் சிவன் மிக்க கவலையை அடைந்தார். பரம பாக்ய விசேஷமான ஸ்ரீராமச்சந்திரனுடைய தரிசனம் எனக்கு எவ்விதம் கிடைக்கும்? பிரபு மிக்க ரஹஸ்ய தமமாகவும் மனிதனுகவும் அவதரித்து, தன்னை பிறருக்குத் தெரிய விரும்பாமல், கண் மறைத்து பிரகடனப்படுத்த விரும்பாமல் மறைத்துக்கொண்டிருக்கிறுர். நான் அவரைக் கண்டால் உலகம் எல்லாவற்றிற்கும் தெரிந்து விடும். (305)

சங்கரரின் மனம் கலங்கியது. பகவான் ராமச்சந்திரனுடைய தர்சனத்தைக் காண அவருடைய கண்கள் ஆசைப்பட்டன. ஆனுல் அவருடைய மனம் பயந்தது. இந்த விஷயங்கள் சதிதேவிக்கு விளங்கவில்லை. துளசிதாஸர் சொல்லுகிறுர், "சங்கரருக்கு ராமதர்சனத்தைக் காண லோபம் மேலிட்டு, அவருடைய லோசனங்களுக்கு ஆசை அதிகரித்தது." (306)

ராவணன் பிரும்மாவினிடம் மனிதனுல் மரணமடைய வேண்டும் என்று வரம் வாங்கியிருக்கிறுன். பிரபு பிரும்மாவின் வார்த்தைகளை சத்யமாக ஆக்க விரும்பி மனித அவதாரத்தை எடுத்து இருக்கிறுர். ஆனுல் நான் இந்த சமயத்தை நழுவ விட்டு, அவரைப் பார்க்கத் தவறினுல், பின்னுல் பச்சாதாபத்தை அடைவேன். இந்தவிதமாய் பலதடவைகள் யோசனை செய்தும், ஒரு யுக்தியும் அவருக்குப் புலப்படவில்லை. (307)

இவ்விதமாக மஹாதேவர் கவலையை அடைந்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும் சமயம். அந்த சமயம் நீசனுன ராவணன் மாரீசனுடன் கூடப்போய் பிற்பாடு அவனைக் கபடமாக மான் வேஷம் தரிக்கச் செய்து சீதையை அபஹரிக்க நினைத்த சமயம். (308)

மூர்க்கனுன ராவணன் சீதையை அபஹரித்துச்சென்ற சமயம். வாஸ்தவமாக ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரபாவத்தைத் தெரிந்துகொண்டு அவன் இந்த கெட்டகாரியத்தைச் செய்யவில்லை. பிரபு மானை வதம் செய்து விட்டு லக்ஷ்மணன் சகிதம்

ஆஸ்ரமம் வந்து சேர்ந்தார். ஆஸ்ரமத்தில் சீதை இல்லாத படியால் வெறிச் சென்றிருந்தது. பெரிய பொக்கிஷமான சீதையை இழந்து விட்டிருந்தபடியால், ஸ்ரீராமனுடைய கன்னங் களில் பொலபொல வென்று கண்ணீர்கள் உதிர்ந்த வண்ணமா யிருந்தன. (309)

ஸ்ரீரகுராயின் மனுஷ்ய பாவங்கள் மேலோங்கி நின்றன. மகத்தான சோகத்தினால் பீடிக்கப்பட்டு, வியாகுலம் அடைந்த வராகி, சீதையின் விரஹ தாபங்களினால் அங்க தாபங்கள் அடைந்து, ஸ்ரீராமன் மஹாலக்ஷ்மியான சீதையைத் தம்பியாகிய லக்ஷ்மணனுடன் தேட ஆரம்பித்தார். எந்த அவஸ்தையிலும் பிரியாத அலர்மேல் மங்கை உறை மார்பன், அனபாயினி அனபகாமினி என்கிற சொற்களால் புகழப்பட்டு விளங்கும் சீதையின் பிரிவைச் சகிக்க முடியாமல் வியோகத்தினால் ஆக்ரமிக்கப்பட்டு, பிரத்யக்ஷ ரூபமாக சீதையைப் பார்க்க முடியாமல், பிரபு வருத்தம் மேலிட்டு கதற ஆரம்பித்தார். (310)

ஸ்ரீரகு நாதனுடைய சரித்திரம் வெகு விசித்திரமாகவுள்ளது. இதை ஞானிகளான முனிவர்கள் நன்றாக அறிவார்கள். மதி மந்தர்களான மூடர்களுக்கு, மதத்தினாலும் மோஹத்தினாலும் ஆக்ரமிக்கப்பட்ட ஹ்ருதயங்களால், வேறு விஷயங்களில் பற்றுள்ளவர்களான படியால், இந்த விஷயம் அவர்களுக்குச் சரியாகப் புரிபடுகிறதில்லை. (311)

சம்பு அந்த சமயத்தில் சீதையைத் தேடிக்கொண்டு போகும் அன்வேஷனாக பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனைப் பார்த்தார். பார்த்து தன்னை கிருதார்த்தனாக நினைத்துக்கொண்டார். புள காங்கித மடைந்தார். சுமக்கமுடியாத பெரிய ஆனந்தத்தை அடைந்தார். சோபையின் எல்லையாக விளங்கும் அழகு சமுத்திரமான ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டார். ஆனால் அந்த சமயத்திற்கு ஏற்ப அவர் தன்னை அவரிடம் அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. (312)

"ஜகத்தின் பரிசுத்தியை செய்விக்கும் ஸச்சிதானந்த மயமான ஸ்ரீராமனுக்கு ஜயம் ஏற்படட்டும், ஸதா மங்களங்கள் ஏற்படட்டும்" என்று மன்மதனை எரித்த பரமசிவன் மனத் தினால் ஜய கோஷங்கள் செய்துவிட்டு, ஆனந்த மடைந்து திரும்பிச் சென்றார். கிருபாநிதியான சபேசன் அடிக்கடி ஆனந்தமடைந்து புளகாங்கித மடைந்தவராகி, ஆனந்தம் மேலிட்டவராகி, சதியுடன் கூடச்சென்றார். (313)

[தியானம்

முன் செல்லுகிறவர்களும், முன் பிறந்தவர்களும், பல வர்ணக் கிரணங்கள் உள்ளவர்களும், தவத்தால் அழிவில்லாத வர்களும், ரஜோ குணமில்லாதவர்களும், சூரியனுடைய தேஜஸினுல் வெளுப்பும், கருப்புமாகிய பகலையையும் இரவையும் நெய்கிற சிறந்த தறிகாரர்களுமானவர்களும், முந்நூற்றருபது கறவை பசுக்கள் ஸம்வத்ஸரம் என்கிற கன்றை ஈன்று, அந்த பசுக்களிடம் சிலாக்யமான தர்மத்தை கறப்பவர்களும், அஸத்ய மில்லாமையால் நாஸத்யன் என்றும் தஸ்ரன் என்றும் சொல்லப் படும் அசுவினி தேவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். மோக்ஷத்தைக் கொடுப்பவர்களும், கருமபலன்களை விருத்தி செய்கிறவர்களும், அவர்களின்றி மற்ற தேவர்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து பலன்களைக் கொடுப்பதில்லை. "ஹே அஸ்வினி குமாரர்களே, எல்லோரும் ஜீவிக்கும்படி நீங்கள் சூரிய கிரணங்களை வியாபிக்கச் செய்கிறீர்கள். ரக்ஷிக்கத்திறமையுள்ள உங்களை நான் அடைக்கலம் புகுகிறேன். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்."]

சதிதேவி தன் கணவனை சம்புவின் அவஸ்தையைக் கண்டாள். பெரிய சந்தேகம் அவன் மனத்தில் தோன்றியது. தன் மனத்திற்குள் எண்ண ஆரம்பித்தாள். "இந்த ஜகமெல்லா வற்றிற்கும் சங்கரர் முதல் தேவதையாக விளங்குகிறர். எல்லா ஜந்துக்களும் இவரை வந்தனம் செய்கின்றனர். ஜகத்திற்கு ஈஸ்வரரான இவரை தேவர்கள் மனுஷ்யர்கள் முனிகணங்களும் தினமும் வணங்குகின்றனர்." (314)

"இப்பேற்பட்ட மஹேஸ்வரர் ஒரு ராஜகுமாரனை சச்சிதா னந்தம், பரம போக்யமானவஸ்து, என்று நமஸ்கரிக்கிறரே. இன்னும் அவருடைய சோபையைக்கண்டு பிரேமைக்கு அடிமையாகிவிட்டாரே. இதுவரை உண்டாகிய பிரேமையை இன்னும் அவரால் அடக்க சாத்தியப்படவில்லையே என்று எண்ணமிட்டாள்." (315)

"எதுபர பிரும்மமோ, ஸர்வ வியாபகமோ, மாயா ரஹிதமோ, எவர் ஜன்மமில்லாதவரோ, கண்களுக்கும் வார்த்தைகளுக்கும் எட்டாதவரோ, தனக்கென்று ஸங்கல்பம் யில்லாத உதாஸீனரும் தன் ஸ்வய இச்சையால் காரியங்களைச் சாதிக்கும் திறமை உள்ளவரோ, எவரை வேதங்கள், பேதமின்றி பார்த்தல் முதலிய வழிகளுக்கு அப்பால்பட்டவர் என்று புகழ்கின்றதோ, வேதங்

களாலும் சரியாக அறியப்படாமல் எல்லாவற்றிற்கும் மேன்மை யாக விளங்குபவர் எவரோ, (எவரை ஈஸ்வரரென்றும், அந்தர்யாமி யென்றும், நித்யமான பிரணவ ரூபியென்றும், தேசத்தாலும், காலத்தாலும், ரூபத்தாலும் அளவிடக் கூடாத மகிமை பெற்றவரும், ஹம்ஸரென்றும், ஜீவன்களுக்கு எல்லாம் தஞ்சமாயிருப்பதாலும், ஜீவாத்மாக்களுக்கு ஆத்மாவாயிருப்பதி ஞலும் நாராயணரென்றும், தமக்கு மேல் ஈஸ்வரனில்லாதவ ரென்றும், ஒன்றிலும் பற்றில்லாதவரும், கைவல்யம் கைங்கர்யம் என்றும், நிர்குணரென்றும், தாமே பிரும்மரூபமாயிருப்பவரென் றும், அநாதி யென்றும் சொல்லப்படுகிற அந்த பரமபுருஷர், ஸ்ருஷ்டி கர்த்தா, எல்லாப் பிராணிகளுக்கும் மூல புருஷராகிய) அந்த ஸ்ரீ விஷ்ணு பகவான் மனுஷ்ய அவதாரம் செய்து பூமியில் வந்திருப்பாரா? ஒருவேளை அந்த பகவான் தர்மத்தை நிலை நிறுத்துவதற்காக மனிதராக பிறந்திருப்பாரா? (316)

[தியானம்

ஹே காமாக்ஷி, அன்னபூர்னேஸ்வரி, விசாலாக்ஷி, ஜயலக்ஷ்மி, என்னைக் காப்பாற்று. மாணிக்கப் பாத்திரத்தில் பாயஸான்னத்தை வைத்துக்கொண்டிருக்கும் மஹேஸ்வரி, பக்தர் களின் தாபத்தைப் போக்குபவளான மங்களகரி, ஏகாம்ரநாதரின் பிரியையே, என்னைக் காப்பாற்று. அன்றொரு நாள் பகவான் கிருஷ்ணரால் ஸ்லாகிக்கப்பட்ட ருக்மிணிதேவி, ஒருநாள் மீண்டும் நாயகன் மீது வைத்துள்ள ஏகாக்ர பக்தியைச் சோதிக்கும் எண்ணத்துடன் சொல்லிய சொற்களால், கிருஷ்ணன் மீது தனக் குள்ள பக்தியும் ஸ்நேகமும் எங்கு நழுவி விடுமோ என்கிற பயத்தினால், தழுதழுத்த குரலுடன் கண்ணீர் ததும்ப, பகவானின் கருணையை வேண்டியாசிக்கிற ருக்மிணி எந்த ஸ்திதியில் இருந் தாளோ, அந்த ஸ்திதியில் நான் இருக்கிறேன். என் வார்த்தைகள் கண்டத்திலிருந்து வர மறுக்கின்றன. எப்படி சிவந்த குங்குமம் நிறைந்த மார்த் தடங்களில் கண்ணீர் விழும்படி அழுது கொண்டிருந்த ருக்மிணி மனம் நிறைந்த பயத்துடனும் தாபத் துடனும் வெட்கமில்லாமல் தன்னுடைய பக்தி நிலைமையை பகவானிடம் உணர்த்தினளோ, அந்த மாதிரி உன்னையே நான் அவலம்பித்து, பராயணமாகவிருக்கிறேன். விஸ்வாமித்திரரின் கருணைக்குப் பாத்திரமானவளே, வீர்ய லக்ஷ்மியே, தயையுடன் கூடின லக்ஷ்மியே என்னை நீதான் காப்பாற்ற வேண்டும்.]

[தியானம்

ஹே மோஹன ராமா, கல்யாண ராமா, பாவனமான குண ராமா, சம்பு பகவான் உன்னைப் பார்த்ததும் மஹத்தான ஆனந்த மடைந்தார். உன் பாத ஸபர்சனத்தினால் உடைந்த சிவதனுஷ் என்ன பாக்யம் பண்ணிற்றோ? தர்மமே உருவாக வந்த உன் சரணாம்புஜங்கள் தாபத்தையும் சோகத்தையும் நீக்கி உன் சேர்க்கையைக் கொடுக்கும் வல்லமைகள் உள்ளன. இந்த மானிட உலகத்தில் நீ அவதரித்த சமயம் கௌசல்யாதேவி, உன்னை முத்தமிட என்ன பாக்யம் செய்தாளோ, தசரதர் அன்புடன் "ராமா" என்று அழைக்க என்ன தவம் செய்தாரோ, உன் நடை அழகையும் முக அழகையும் சயன அழகையும் காண்பதற்கு விஸ்வாமித்திரர் என்ன பாக்யம் செய்தாரோ. உன் கைகளைப் பார்த்து உடம்பு முழுவதும் புளகாங்கிதமடையும் ஜானகிதேவி என்ன பாக்யம் செய்தாளோ; ஜனகர் உங்கள் இருவரையும் கண் குளிரப் பார்த்து ஆனந்தப்பட என்ன பூர்வ புண்ணியங்கள் செய்தாரோ; லோக மங்களத்தைச் செய்யும் நாரத குரு பகவான், தியாகராஜரின் குருநாதர், ஆத்மநிவேதனம் என்கிற உத்தம தர்மத்தைச் செய்து பரம சுகத்தை அடைந்தாரோ, அப்பேற்பட்ட பகவான் சீதாராமன் என் மனதை நன்கு அறிந்து, நானும் அவருக்காகவே அர்ப்பிக்கப்பட்டேன் என்று நினைத்து பிரசன்னமாகி, கிருதார்த்தனாக ஆக்கிக்கொள்ள வேண்டும், என்று பலவிதமாக சம்பு பகவான் எண்ணமிட்டார்.]

பகவான் சம்பு கலங்கினதைப் பார்த்த சதிதேவியானவள் மீண்டும் மோஹமடைந்து, யோசிக்க ஆரம்பித்தாள். "எந்த பரபிரும்மம், ஸர்வ வியாபகர், மாயாரஹிதரான நாராயணர் தேவதைகளின் காரியத்தை சாதிப்பதற்காக மனுஷ்ய அவதாரம் எடுத்து விஷ்ணு அம்சமாக பூமியில் அவதரித்த பிரபு, என் கணவரான சிவனுக்குச் சமமான ஸர்வக்ஞர். ஞானத்தின் ஸ்வரூபம். லக்ஷ்மிபதி. அசுரர்களின் சத்ருவான விஷ்ணு பகவான் அக்ஞானமாய், பித்தனாய் ஒரு ஸ்திரியைத் தேடுவாரா? ஸ்திரி சங்கமத்தின் தோஷத்தை அடைந்தவரும், கிருபணரும், மரங்களையும், மிருகங்களையும் நதி மலைகளையும் பார்த்து பித்தனைப்போல "சீதையைக் கண்டாயா? என் பிரியையான சீதையைப் பார்த்தாயா?" என்று தாபப்படும் பிரபு சம்சாரியான சாதாரண மனிதனைப்போல நடந்து கொள்வாரா!" (317)

"ஆனால் என் நாதனாகிய பசுபதியின் வசனங்கள் ஒருக்காலும் பொய்யாக மாட்டா. அவர் ஸர்வக்ஞர். அவருக்குத்

தெரிந்த விஷயம் யாவருக்கும் தெரியாதே. எந்த துரதிர்ஷ்டத்தி னாலோ பயங்கரமான சந்தேகம் என் மனதில் தோன்றியிருக் கிறது. என் மனம் இருளடைந்து விட்டிருக்கிறதே. ஞானமற்று சூன்யமாகவல்லவா விளங்குகிறது. மோஹமும், பயமும் ஸந் தேகமும் என்னை ஆட்கொள்ளுகின்றனவே. என் மன எண் ணங்களை நான் எப்படி என் நாயகரிடமிருந்து மறைப்பேன்?''
(318)

[தியானம்

ஹே சீதாபதே உன்னுடைய ஜடா முடியும் அம்ருதமய மான முகமும் நீண்ட கண்களும், நீண்ட கைகளும், மரவுரியும் தாமரை தளம்போலவிருக்கும் மிருதுவான கால்களும் வில்லும் அம்புராத்துணியும் என் மனதை அபஹரிக்கின்றன. மீண்டும் நான் உன்னைப் பார்ப்பேனு? முள்ளும் கல்லும் நிறைந்த காட்டில் உன் மிருதுவான கால்களில் படும் அவஸ்தைகளைப் போக்கி பாதங்களை வருடி, உனக்கு ஸ்ரமம் தீர்த்த உன் மஹத்தான தம்பி லக்ஷ்மணன் என்ன பாக்யம் செய்தான்? ரூபம், குணசீலங்கள் வயது, அங்கங்களின் ரூபம், இவைகளால் மேம்பட்டு விளங்கும் சீதையைப் பார்த்து மார்க்கங்களில் அரச குமாரனுன நீ உன் தகப்பனுரான தசரதரின் வார்த்தையைக் கேட்டு சத்யமாக்கு வதற்காக நீ திரிவதைப் பார்த்தால், என் மனம் தாபப்படுகிறது. தர்மத்திற்காக ஏற்படும் ஸ்ரமங்களை எண்ணிப் பார்க்குங்கால் தர்மத்தின் அனுஷ்டானம் எவ்வளவு கடினமாகவிருக்கிறது என்று சம்பு பகவான் தனக்குள் ராமனின் மானிடத் தன்மையைப் பார்த்து வியந்துகொண்டு புளகாங்கிதத்துடன் நடந்து சென்றுர்.]

இவ்விதம் சம்பு பகவான் யோஜனை பண்ணிக்கொண்டிருக் கும் சமயம் பவானியும் தன் மனத்தில் தோன்றின எண்ணங் களை சம்புவினிடமிருந்து மறைத்துக்கொள்ள முயன்று கொண் டிருந்தாள். ஆனுல் எல்லா ஜீவன்களிலும் அந்தர்யாமியாக விளங்கும் பகவான் ஹரர் எல்லாவற்றையும் புரிந்து கொண்டார். ''பவானி, சதி உன்னுடைய சஞ்சலமான ஸ்திரி ஸ்வபாவங்கள் உன்னை ஹிம்ஸித்துக் கொண்டிருக்கின்றன. பகவான் ராமச்சந் திரனிடம் அசஞ்சலமான பக்தியைச் செய். சந்தேகத்தை விரட்டி விடு.'' (319)

''எந்த பவித்திரமான ராம கதையை நீ கும்பஜரான அகஸ்தியரிடமிருந்து கேட்டாயோ, அந்த ராமனிடம் உன் பக்தியை வளரவிடு. அந்த பிரபு என் இஷ்ட தேவதை-

எவருடைய கைங்கர்யத்தைத் தேவர்களும், முனிவர்களும் சதா செய்யவேண்டும் என்று ஏங்குகிருர்களோ, அந்த ராம கைங்கர்யத்தை வேண்டிக் கொள்.'' (320)

''ஞானிகள், முனிகணங்கள், யோகிகளான புருஷர்கள், ஸித்த ஜனங்கள் நிர்மலமான ஹிருதயத்தால் எந்த பரம புருஷனைத் தியானம் செய்கிருர்களோ, எந்த மூல புருஷனுன நாராயணரை வேதங்கள் புராணங்கள், ஆகம சாஸ்திரங்கள் வர்ணிக்கத் தயங்கி, ''இது அல்ல,'' ''இவர் அல்ல'' என்று கோஷிக்கின்றனவோ, எவருடைய கீர்த்திகள் மூன்று உலகங்களிலும் மகான்களால் கீர்த்தனம் பண்ணப்படுகிறதோ, அப்பேற்பட்ட ஸர்வ வியாபகர், ஸமஸ்த பிரும்மாண்டத்திற்கு ஸ்வாமி, எவர் மேலே உள்ள தேவலோக ஸ்தானத்தை கீழே விழாமல் அந்தரத்தில் நிற்கச் செய்யும் மாயாவதி, ஸ்ருஷ்டிகர்த்தா, எல்லா பிராணிகளிலும் இருந்துகொண்டு அனுதியாக தாமே பிரும்ம ஸ்வரூபமாயிருப்பவரும், விகாரமற்ற ஒரே தன்மையாயிருப்பவருமான நாராயணர் தன் பக்தர்களின் நன்மைக்காக தன் ஸ்வய இச்சையினுல் ரகு குலத்தில் ஸ்ரேஷ்டமணியாகப் பூமியில் அவதரித்திருக்கிருர்.'' (321)

இப்படியாகவும், பலவிதமாகவும், பகவான் சம்புவினுல் அடிக்கடி சொல்லப்படும், சதிதேவியினுடைய மனத்தில் இந்த உபதேசத்தின் பலன் ஒன்றும் சித்திக்கவில்லை. அவளுடைய சந்தேகம் வலுத்துக்கொண்டிருந்தது. அப்பொழுது மஹாதேவர் இதுவும் ஹரியினுடைய மாயை என்று சிரித்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார். ''பிரியே, உன் மனதில் கொடிய சந்தேகம் இருக்கிறது. மோஹத்தால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிருய்? பரிக்ஷை செய்ய விரும்புகிருயா? அப்படியானுல் உனது மோஹம் தீர்ந்துபோகும் வரை, நான் இந்த அரச மரத்தினடியின் கீழே உட்கார்ந்திருக்கிறேன். ஜாக்ரதையாக நடந்து கொள்,'' என்றும் சொன்னுர். (322)

[தியானம்

ஹே ராமா, லாவண்ய ராமா, கருத்த காந்தியுள்ளதும், சுருண்ட அக்ர பாகத்தை உடையதும், நெருக்கமாய் வளர்ந்திருப்பதும், சுத்தமாக விளங்குகிறதும், விசேஷமாக அலங்காரம் செய்யப்பட்டதும், ஸ்திரி புருஷர்களின் சித்தத்தை அபஹரிப்பதான தாமரை மலர் போன்ற முகத்தை உடையவளே, உன் சொகுஸும், மனசும், தினுஸும் உனக்கு ஏற்பட்ட வழி

களும், மந்தார புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பெரிய கேச பாரத்தை நான் எப்போது காண்பேன்? வெளுப்பானதும், பால சந்திரனைப்போல அழகான வீதியை உடைய தான ஊர்த்வ புண்டரங்களையும், அழகான கபோல பிரதேசங்கள் உள்ள உன் சுபமான முகத்தை நான் எப்போது மீண்டும் காண்பேன்? உன் அழகான சரீரத்தை என்னைப் போன்ற ப்ரீதி யுள்ள மனிதர்கள் பார்த்து எல்லாவிதமான ஆபத்துக்களையும் போக்கி, மனசாந்தியை அடைகிறார்களன்றோ? என்று பகவான் சம்பு பலவிதமாக தனக்குள் ஹரியை நினைத்து புளகாங்கித மடைந்தார்.]

தன் மனைவியான சதியைப் பார்த்து, சம்பு மனத்திற்குள் கவலையடைந்தவராக யோசிக்கலானார். சதிதேவியும் புறப்பட்டுப் போனாள். அவள் போனதைக் குறித்து, தனக்குள் யோசித்தார். "தக்ஷகன்யையான சதிக்கு பரம மங்களங்கள் ஏற்படாது போலிருக்கிறதே. இன்னும் பிரபுவான ஸ்ரீ ராமச்சந்திரனைப் பற்றிய சந்தேகங்கள் விலக வில்லையே. அவளுக்கு ஏதாவது சௌக்ய குறைவு ஏற்படுமோ? அவளுடைய விதி எவ்விதம் இருக்கப்போகிறதோ தெரியவில்லையே." (323)

"ராமனால் என்ன விதிக்கப்பட்டிருக்கிறதோ, அது நடந்தே தீரும். யாவராலும் இதை எதிர்க்க முடியுமா? எதற்கும் எனக்கு ராமனே தஞ்சம். அவன் நாமத்தை நான் ஜபிக்கிறேன்" என்று ராம நாமத்தை சொல்ல ஆரம்பித்தார். சதிதேவியும் எந்த இடத்தில் பிரபுவான ஸ்ரீ ராமச்சந்திரன் இருக்கிறாரோ, அந்த இடத்திற்குச் சென்றாள். (324)

சதிதேவி பலதடவைகள் யோசித்துவிட்டு கடைசியில் சீதையின் உருவத்தைத் தரித்துக்கொண்டு ராமன் வரும் மார்க்கத்தில் வந்துகொண்டிருந்தாள். (325)

லக்ஷ்மணன் சதியின் வேஷத்தைக் கண்டு பயமும், பிரமை பிடித்தவன்போல மாறி விட்டான். பேச நா எழவில்லை. தீர புத்தியை அடைந்த பிரபுவான ராமச்சந்திரனுடைய பிரபாவத்தை அறிந்தவன் அவன். (326)

சதிதேவியினால் கபட வேஷத்தை தரிக்கப்பட்டதைப் பார்த்த பிரபு, ஸர்வ அந்தர்யாமியும் எல்லாவற்றையும் ஊடுருவிப் பார்க்கும் சக்தி படைத்தவரும், எவரைத் தியானம் செய்வதால் அக்ஞான இருள்கள் நாசமடையுமோ, அப்பேற்பட்ட ஸர்வக்ஞ ரான ஸ்ரீராமன் எல்லாவற்றையும் கவனித்துப் பாத்தார். (327)

[தியானம்

ஹே சைல ராஜதனயே, சண்டமுண்டர்களை வதம் செய்த மஹாகாளி, சிம்மத்தை வாகனமாகக் கொண்டவளே, திரிமூர்த்திகளின் பத்னிகளாகிற மஹாகாளி, மஹாசரஸ்வதி, மஹாலக்ஷ்மி ஸ்வரூபமான மனோன்மணியே, சாமுண்டாதேவி, ஸர்வ மந்திர ஸ்வரூபமும் ஸர்வ யந்திர ஸ்வரூபமும் ஸர்வதந்திர ஸ்வரூபமும் உடையவளே, மதுரா நகரத்தில் ஜயமாதங்கியாக விளங்கும் சுந்தரேஸ்வரபிரியே, மீனாக்ஷி, பத்மரூப சஹோதரி, உன் அழகான கண்களால் என்னை ரக்ஷி. என்னைக் காப்பாற்று. ஏக ஸ்ருங்கரின் மாதாவே, குமரக் கடவுளின் அருட் செல்வமே, மஹேஸ்வரி, ஸதாசிவனின் பத்னியான திரிபுரசுந்தரி, என்னைக் காப்பாற்று. ஜயலக்ஷ்மி என்னிடம் கருணை வை. எனக்கு மங்களங்களைச் செய். காய்த்ரி மந்திரத்தின் ஹ்ருதயமே, ஸப்த ஸ்வரங்களை சோபிக்கும் தெய்வமே, நாதம் ஓங்காரம் ஸ்வரம் இவைகளை மேனியாகக் கொண்ட ஸதாசிவனின் யக்ஞ பத்னியே, தியாகராஜர் போன்ற மஹான்களால் கீர்த்தனம் செய்யப்பட்ட ஹ்ருதய ராணியே, என்னிடம் கருணை செய்.]

(ஜயலக்ஷ்மியான சதிதேவியே, ஸ்திரி ஸ்வபாவத்தால் நீ ஸர்வக்ஞனை ராமனை பரிக்ஷிக்கப் பார்க்கிறாய். பகவான் முன் பாக இவ்விதம் மாயையை காண்பிக்கிறாய்.) ஸ்ரீராமன் தன்னுடைய அதே மாயையை ஆத்ம பலத்தினால் வசீகரிக்கச்செய்து, சிரித்துக்கொண்டு கோமளமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (328)

முதலில் சதிதேவிக்கு அவர் பிரணாமம் செய்துவிட்டு, தன் பெயரையும் தன் பிதாவின் பெயரையும் சொன்னார். அதன் பின்பு, "விருஷபாரூடரான மஹேஸ்வரர் எங்கிருக்கிறார்? தனியாகக் காட்டில் நீசஞ்சரிக்கக் காரணம் என்ன?" என்று சதிதேவியை அவர் கேட்டார். (329)

பகவான் ராமனுடைய வசனங்களையும் கோமளமான சொற்களையும் கேட்டாள். (சதிதேவி அம்மா, உமா, பகவான் சம்புவினால் பார்க்கப்பட்டும், அதனால் அவர் மோஹமடையப்பட்டிருந்தபோதிலும் அவருக்கு அந்த ராம பிரும்மத்துடன் பேசும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை; அது உனக்குக் கிடைத்ததே. மேலும், தாயே, உன் திருஷ்டி பட்டதால்தானே ராமனுக்கு வீர்ய லக்ஷ்மியும் சம்பத் லக்ஷ்மியும் கைகூடி வருகலானாள். பகவான் இதைப் பெறுவதற்கல்லவா நீ சிவனிடமிருந்து பிரிந்து

தனியாக வலுவில் சென்று ராமனைப் போய்ப்பார்த்துப் பேசினுய்.) ராமனுடைய வார்த்தைகளைக் கேட்டு முதலில் சங்கோசமடைந்து பிற்பாடு பயம் மேலிட்டவள்போல் ஆகி, ஒன்றும் பேசாமல் தன் கணவரான பசுபதியினிடம் சென்ருள். அவள் மனதில் தன் பதியைவிட்டு பிடிவாதத்துடன் தனியாகச் சென்றதுபற்றி வியாகுலமடைந்தாள். (330)

தன் மனத்திற்குள் எண்ண ஆரம்பித்தாள் தேவி. சங்கரரின் வார்த்தைகளை உதாஸீனம் பண்ணி, அக்ஞானம் நிரம்பினவளாக ராமனை நான் பரிக்ஷித்துப் பார்த்தேன். இப்போது நான் என் கணவரிடம் என்ன சொல்வேன்? பயத்தினுல் தாபம் அடைந்து, என் ஹ்ருதயம் எல்லையற்ற சோகத்தை அடைகிறதே என்று சதிதேவி நினைக்கலானுள். (331)

பகவான் ஸ்ரீராமனுக்கு சதிதேவியின் மனசங்கடங்கள் தெரியவந்தது. தன் பிரபாவத்தை அவளுக்குக் கொஞ்சம் காட்ட நினைத்தார். சதிதேவியின் மார்க்கத்தின் முன்பாக ஸ்ரீராமன் சீதை லக்ஷ்மணன்கூட போய்க்கொண்டிருப்பதை அவள் பார்த்தாள். அவளுக்கு அதிசயமாகவிருந்தது. இந்த ஆச்சர்யமான கட்டத்தில் சதிதேவிக்கு தன் நிஜஸ்வரூபத்தைக் காட்ட அவர் ஆரம்பித்தார். சிதையின் பிரிவினுல் ஏற்பட்ட விரஹதாபமோ துக்கமோ இன்னும் என்ன விதமாக சதிதேவியானவள் ராமனைப் பற்றி கற்பனை செய்தாளோ, அந்த பிருத்வி சம்பந்தமான மானுஷ குணங்கள் விலகி, சுத்தஸத்வமாகவும், ஸச்சிதானந்த மயமாக விளங்கும் பரமபத ஸ்வபாவத்தை வெளிப்படுத்தினுர். ராமன் விஸ்வாத்மாவானபடியால் சதிதேவி திரும்பிப் பார்த்தாள். அப்போது சீதை லக்ஷ்மணன் சகிதராக ராமன் அழகாக காட்சி அளித்தார். எந்தப் பக்கம் திரும்பினுலும் ஸித்தமுனி ஜனங்களால் சூழப்பட்டு ராஜ சிம்மாஸனத்தில் அமர்ந்து நானுவிதமான பரிசர்களால் சேவிக்கப்பட்டு, மிக சோபிதமாக பிரபு விளங்கினுர். (332)

சதிதேவி மீண்டும் அநேக சிவன்கள், விஷ்ணுக்கள், பிரும்மாக்கள் ஒருவரையொருவர் மிஞ்சி ராமனுடைய பிரபாவங்களைக் கீர்த்தனம் செய்வதாகக் கண்டாள். பலவிதமாக வழிபட்டும், அவர்கள் பிரபுவான ராமச்சந்திரனுடைய சரணங்களை ஆஸ்ரயித்து சேவை செய்துகொண்டிருந்தார்கள். (333)

கணக்கற்றதும் எண்ணிக்கையில் அடங்காத சதிதேவிகளும் சரஸ்வதிதேவிகளும், லக்ஷ்மிதேவிகளும் இன்னும் அவர்கள் என்ன என்ன அவதாரங்கள் செய்தார்களோ, அவர்களின்

அனுகூல ரூபமான சக்தி தேவதைகளையும் சதிதேவி கண்டாள். (334)

சதிதேவியானவள் எந்த எந்த இடங்களில் ரகுநாதரைக் கண்டாளோ, அந்தவிடங்களில் அவரை சக்தி தேவதையுடன் கூடவும் சகல தேவதைகளையும் கண்டாள். ஸம்சாரத்திலுள்ள சகல சராசரங்கள் அனைத்தையும் அநேகப் பிரகாரமாகவிளங்கும் ஜீவஸ்வரூபங்களையும் அவள் பார்த்தாள். (335)

அநேக விதங்களாக வேஷங்கள் தரித்துக் கொண்டு, தேவதைகள் பிரபுவான ராமச்சந்திரனைப் பூஜை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் ராமன் மாத்திரம் மற்றொரு வேஷத்தோடோ அல்லது ரூபத்தோடோ வேறிடத்திலும் காணப்படவில்லை. அனபாயினி அனபகாமினி, நித்யான பாயினி என்று பலவிதமாகச் சொல்லக் கூடிய சீதையுடன் ஸ்ரீரகுநாதரை சதிதேவி பல தடவைகள் பார்த்தாள். ஆனால் அவள் அவர்களின் மற்ற வேஷங்களைப் பார்க்கவில்லை. நித்ய தம்பதிகளான லக்ஷ்மி நாராயணர் அம்சங்களான ரூபத்தையே சீதாராமனாக அவள் அடிக்கடி பார்த்தாள். (336)

[தியானம்

ஹே ராமா, எந்த மஹாலக்ஷ்மி தேவியான சீதாபிராட்டி உன்னையே பராயணமாகக் கருதி உன் ஸரோஜபாத மகரந்த தூள்களின் வாசனையை சதா அனுபவித்துக்கொண்டிருக்கிறாளோ, அப்பேற்பட்ட குணக்கடலாகிய நீ என்னிடம் கருணையுடன் இருக்கவேண்டும். வஸிஸ்டர் விஸ்வாமித்திரர் காஸ்யபர் மார்க்கண்டேயர் துருவன் பிரஹ்லாதன் அம்பரீஷன் போன்ற பக்தர்கள் உன்னையே தோழனாக்கொண்டு உன் உதவியினால் அல்லவா தங்களுடைய சம்சார சுழல்களைப் போக்கி உன்னைவந்தடைந்தார்கள். மனிதனாகப் பிறக்கும் எவனும் உன்னைத் தள்ளி விட்டு, வேறு லக்ஷ்யங்கள், லக்ஷணங்கள் கொண்டு விளங்குபவனாயின் உன் சேர்க்கையின் வாசனையை நுகராதவரைக்கும் பிரமை பிடித்து காமபூரனாக ஆகி மீண்டும் மீண்டும் கஷ்டத்தையும் தாபத்தையும் அடைகிறான் அன்றோ! ஹே ஜகதீஸா, அதோக்ஷஜா, என் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு உன் பாதங்களே சரணம். உன் பக்தியே என்னுடைய அனுராகங்கள். உன்னைப்பற்றிய நினைவுகளே, ஹே உத்தமஸ்லோகா, உன் புகழ கீர்த்திகளே, என்னுடைய பரமானந்தங்கள். உலகத்தை உஜ்ஜிவிப்பதற்காக உன் குளிர்ந்த பார்வைகள் என்

மீது பட்டால் அதுவே பரமானுகம்பை என்கிற உன் வாத்ஸல்ய மான அனுதாபங்கள் என்று நினைத்துக்கொள்வேன். உன் கடுரமான வார்த்தைகளை ஏதாவது நான் கேட்டால் என்னை பரிக்ஷிப்பதற்காகச் சொல்லப்பட்டவை என்று நினைத்துக் கொள்வேன். அதனால் உன்னிடமுள்ள பக்தியை அதிகமாக நான் வளர்த்திக்கொள்வேன். எவ்வளவு விரகதாபங்களை அனுபவித்து, ருக்மிணி சீதை போன்ற உத்தமிகள், உமையைப் போன்ற ஸ்திரி ரத்னம் உன்னையே வந்து அடைந்தார்களோ அதுபோல நானும் முயற்சி செய்கிறேன். அம்மா, நீ எனக்கு ஒத்தாசை செய்யவேண்டும். உன் மாயையிலிருந்து நான் விடுபடவேண்டும். உன்னுடைய அன்பையும் பக்தியையும் அடைந்து, என்னை நீயும் கிருபையுடன் காக்கவேண்டும்.]

எங்கு பார்த்தாலும் ரகுநாத மயமாக சதிதேவி கண்டாள். லக்ஷ்மணன் சீதையும் அவருடன்கூடவிருந்தார்கள். அவளுக்கு ஒரே பயம் சூழ்ந்து கொண்டது. அவளுடைய ஹ்ருதய நடுக் கத்தினுல் உடம்பும் நடுங்க ஆரம்பித்துவிட்டது. கண்களை மூடிக்கொண்டு பிரமை பிடித்தவள்போல வழியின் நடுவே அமர்ந்தாள். (337)

கொஞ்சநேரம் கழித்து கண்களைத் திறந்து பார்த்தாள். எல்லாம் மறைந்துவிட்டன. தக்ஷகுமாரியான சதிதேவி யானவள் அடிக்கடி பிரபுவான ராமச்சந்திரனுடைய பாத கமலங் களில் தலைவணங்கி ஆனந்த மேலிட்டு கிரீஸனை சிவனிடம் சென்றுள். (338)

சிவன் சிரித்துக்கொண்டு சதிதேவியைப் குசலப்பிரஸ்னம் செய்தார். ''பிரபுவான ராமனை நீ எவ்விதம் பரிக்ஷை செய்தாய்? விபரமாகச் சொல்லக்கடவாய்'' என்று வினவினுர். (339)

## மாஸபாராயணம்—இரண்டாவது அத்யாயம்

[தியானம்

ஸ்வயம் பிரபுவும் தன் மனைவியினிடத்தில் மிக்க அன்புள்ள வரும் தர்மத்தில் மிக்க பற்றுள்ளவரான மஹேஸ்வரரை நான் நமஸ்கரிக்கிறேன். தபோவனத்தில் வசிக்கும் ரிஷிகளுடைய தர்மங்களின் தாரதம்யங்களை அறிந்தவளும், பிரும்மாவின் பத்னியாகிய சாவித்திரி, இந்திராணி, மஹாலக்ஷ்மி, யமனுடைய பார்யையான த்ருதி, மார்க்கண்டேயருடைய பத்னி தூமோர்ணை, குபேரனுடைய பார்யையான ருத்தி, வருண

னுடைய பத்னியாகிய கௌரி, சூர்யனின் பத்னியாகிய ஸ்வர்ச்சலே, சந்திரனுடைய பார்யையான ரோஹிணி, அக்னியின் பத்னியும் குற்றமில்லாதவளுமான ஸ்வாஹாதேவி, காஸ்யபரின் பத்னியாகிற அதிதிதேவி, வஸிஷ்டருடைய பத்னி அருந்ததி, லோபாமுத்ரா இன்னும் அநேக மஹாபதிவிரதைகள் வணங்கும் உமாதேவியை நான் நமஸ்கரிக்கிறேன். கங்கை, யமுனே, சரஸ்வதி, காவேரி, கௌசிகி, வைகை போன்ற நதிகளால் வணங்கப்படும் லோக குருக்களான உமா மஹேஸ்வரர் இருவர்களேயும் நான் நமஸ்கரிக்கிறேன். சங்கரரே, உமா தேவி, உங்களுக்கு நமஸ்காரம். எல்லாவற்றிற்கும் ஈஸ்வரரே, சந்திரகலேயைத் தரித்திருப்பவரே, லோக குருவே, நமஸ்காரம். மூன்று தலேயுள்ள சூலத்தை கையில் தரிப்பவருக்கு நமஸ்காரம். நாகாபரணருக்கு நமஸ்காரம். நாதவித்யையின் ஸ்வரூபமாக விளங்குபவருக்கு நமஸ்காரம். தும்புரு நாரதரால் துதிக்கப் படுபவருக்கும் பிரணவநாதமாகியவருக்கும் நமஸ்காரம். திலோத் தமையின் அழகைக் கண்டு நான்கு முகங்களேத் தோற்றுவித்த தேவருக்கு நமஸ்காரம். விருஷபாரூடரே, கங்கையைத் தலேயில் வைத்திருப்பவருக்கு நமஸ்காரம். தக்ஷயாகத்தை அழித்தவரே நமஸ்காரம். உம்முடைய மகிமையை யாரால் சொல்ல முடியும்? மிக்க ஆச்சர்யம். அதுமாதிரி உமது கிருபையும் ஆச்சர்யம். தர்மத்தை பரத்வமாகக் கொண்டிருக்கும் தேவருக்கு தேவரான ஈஸ்வரரே, உமாதேவி உம்முடன் ஒற்றுமையாகத் தர்மத்தைச் செய்பவள், உம்மிடம் பக்தியுள்ளவள், உலகங்களின் ஹிதத்திற்காக நீங்கள் இருவர்களும் லோக குருக்களாக விளங்குகிறீர்கள் என்று நான் அறிகிறேன். உங்கள் இருவருக்கும் நமஸ்காரம்.]

[தியானம்

ஆஞ்சநேயா, உன் கிருபையால் ராம தர்சனமும் சீதையின் கிருபையும் லக்ஷ்மணன் போன்ற பாக்யமும், நாரதர் வால்மீகி தியாகராஜர் போன்ற மஹான்கள் அனுபவித்த பாக்ய விசேஷங்களும் உன் பக்தி சேவையும் எனக்குக் கிடைக்குமா? ஸ்ரீரங்கேசனுக்கு போகம் அளித்து அதைப் பிரசாதமாக உங்கள் கையின் மூலம் உண்ணும் பாக்யம் எனக்குக் கிடைக்குமா? உன்னுடைய சொகுசுகளும், பலுக்குகளும் அடங்கின மதுரமான வார்த்தைகள் என் காதுகளில் விழும் பாக்யம் கிடைக்குமா? கந்தத்தை வாரி இறைக்கும் வாயு புத்ரா, மிக்கத் தபஸினுல் அஞ்சனேயினுல்

புத்ரனுக வரிக்கப்பட்டவரே, ராமகாரியத்தை குறைவறச் செய்த ஆஞ்சநேயரே நமஸ்காரம்.]

சதிதேவியினுல் ஸ்ரீராமனுடைய பிரபாவம் யாவும் அறியப் பட்டது. ஆனுல் பகவான் சம்புவினிடமுள்ள பயத்தினுல், "ஸ்வாமி, நான் ஒன்றும் பரிக்ஷை செய்யவில்லை. அங்கு ராமனைப் பார்த்து, உங்கள் சார்பிலும் என் சார்பிலும் பிரணுமம் செய்தேன்." (340)

"நான் உங்களையும் உங்கள் வசனங்களையும் பூர்ணமாக விஸ்வாஸம் செய்கிறேன்," என்று சொன்னுன். அதே சமயம் பகவான் சம்பு யோகத்தினுல் எல்லாவற்றையும் கண்டார். சதி தேவியினுல் செய்யப்பட்டது யாவற்றையும் உணர்ந்தார். (341)

[தியானம்

ஹே ராமா, உன் கருணையின் விசேஷத்தை யாரால் எந்த காரணத்தால் உண்டாயிற்று என்று அறியக்கூடும்? உனக்கு பிறப்பு, அறிவு, பலம், தீனத்தன்மை, ஐஸ்வர்யம், உறவு, சக்யம், இவைகள் போன்ற பல ஹேதுக்களால் உன் கருணையும் அனுக் ரஹமும் ஏற்படுகிறதில்லை. நற்கர்மாக்களையும் தர்மத்தையும் பின்பற்றி அஹிம்சை, சமம், தமம், ஸத்யம், சீலம், அனுகம்பை, க்ஷமை, உன் ஆக்ஞைக்கு உட்படுவது, வேதத்திலும், சாரித்திர மான புருஷர்கள், ஸ்திரிகள், பக்தர்கள், ராஜரிஷிகள், மஹ ரிஷிகள் போன்றவர்களால் வாழப்பட்ட நல்வாழ்க்கையும் ஓரளவு பயன்படுகிறது. ஆனுல் உன் கருணையோ எல்லாவற்றையும் மீறி நடக்கிறது. அப்பேற்பட்ட அபார கருணை நிரம்பிய உன் முகத்தை நான் எப்போது காண்பேன்? என் தாயான ஜானகி, பரமபக்தர்களான உன்னை நம்பியிக்கும் மஹான்கள் என்னை எப்போது அனுக்ரஹிப்பார்கள்? என் கஷ்டத்தையும் தாபத்தை யும் எவர்கள் உனக்கு உணர்த்தப் போகிருர்கள்? என் மனத்தில் இருக்கும் நீதான் ஸ்வயமாக உணரவேண்டும். நீர்தானே உபரிசரிஸ் ரிஷிக்குச் சொன்னமாதிரி தயையுடன் இருக்க வேண்டும்.]

பிறகு ஸ்ரீராமச்சந்திரனுடைய மாயைக்கு பகவான் சம்பு தலைவணங்கினுர். "ஹே ராமா, உன் தூண்டுதலின் பேரில், என் பிரியையான சதிதேவியை பொய் சொல்லும்படி கட்டளை இட்டாய். என் ஹ்ருதயம் கலங்குகிறது. ஹரியினுடைய இச்சையை யார்தான் தாண்டமுடியும்?" (342)

"என் தாயான சீதாதேவியின் ரூபத்தை என் மனைவி சதிதேவி தரித்து, ஹே ராமா, உன்னை பரிக்ஷித்தாள்." இதை நினைத்துப்பார்த்து மீண்டும் மனம் கலங்கினார். அவருக்கு பயம் மேலிட்டது. "நான் எனது பிரியையான சதியை மீண்டும் பிரியத்துடன் நடத்தினால், என்னுடைய அசஞ்சலமான ராமபக்தி தோஷமடைகிறது. நான் நல்ல வழியிலிருந்து நழுவிவிடுவேன். எனக்குப் பெரிய அநிஷ்டம் அநியாயமாக ஏற்பட்டிருக்கிறது." (343)

"என் பத்னி சதி பரமபுனிதமான ஸ்திரி ரத்னம். அவளை நான் எவ்விதம் தள்ளிவிடமுடியும்?" இவ்விதமாக மஹேஸ்வருடைய மனதில் ஒரு பெரிய ஸந்தாபம் ஏற்பட்டது. அவர் அதை வெளிப்படுத்தவும் சொல்லவும் முடியாமல் தத்தளித்தார். (344)

"எனக்கு ராமச்சந்திரனே தஞ்சம்" என்று மனம் தெளிந்தார். ராமனை ஹ்ருதயத்தில் தாரணைபண்ணி அவருடைய சரண கமலங்களில் தலைவணங்கி ஸ்மரணை செய்து யோசித்துப் பார்த்தார். இந்த சரீரத்தில், பதிபத்னி ரூபத்தில், இனி சதியுடன் வாழ்தல் கூடாது என்கிற சங்கல்பத்தை நிர்ணயம் செய்தார். (345)

ஸ்திரபுத்தியுடன் இவ்விதமாக யோசித்து ஸ்ரீரகுவீரனை தியாகம் பண்ணிக்கொண்டு தன் பவனமாகிய கைலாஸத்திற்குச் சென்றார். அந்த சமயத்தில் மதுரமான குரலில் "ஹே மஹேசா, உமக்கு ஜயத்துடன் மங்களங்கள் ஏற்படவேண்டும். உம்முடைய ராமபத்தி திருடமானது" என்று ஆகாசவாணி கேட்கப்பட்டது. (346)

"உம்மைத்தவிர யார்தான் இப்பேற்பட்ட கோரமான பிரதிக்ஞை செய்யமுடியும்? நீர்தான் சிறந்த ராமபக்தர். ஸமர்த்தர். பகவானுடைய குணவிசேஷங்களைக் கொண்டவர்." இப்பேற்பட்ட ஆகாசவாணியின் குரலைக்கேட்டு, சதிதேவிக்கு மனதில் விசாரம் ஏற்பட்டது. ஸங்கோசத்துடன் அவரைக் கேட்டாள். (347)

"ஹே கிருபாளு, தீனதயாளா, உம்மால் என்ன பிரதிக்ஞை செய்யப்பட்டது? ஸத்யத்தை நிலைநிறுத்துபவரே." இவ்விதம் பல தடவைகள் வினவப்பட்டும், மீண்டும் கேட்கப்பட்டும், பகவான் சம்பு உத்தரம் கொடுக்கவில்லை. (348)

சதிதேவி உடனே எல்லாவற்றையும் புரிந்துகொண்டாள். "என் நாயகரான பசுபதி எல்லாம் தெரிந்த ஸர்வக்ஞயர். நான்

கபடவேஷத்துடன், ஸ்திரி சுபாவம் மேலிட்டு, மூர்க்கத்தனம் அடைந்து வேஷத்தை அணிந்துகொண்டு என் பதிக்குத் தெய்வமான ஸ்ரீராமனைப் பரிக்ஷித்தது மன்றி, என்பதியினிடமும் பொய் சொல்லிவிட்டேன். அவரையும் நான் மனம் நோகவைத்து விட்டேன்.'' (349)

"உலகத்தில் சேர்க்கையின் விசேஷங்களை யாரால் வர்ணிக்க முடியும்? பாலுடன் சேர்ந்த தண்ணீரும் பாலாக மாறி விற்கப் படுகிறது. ஆனால் கபடமான புளிப்புத்தன்மை பாலுக்கு ஏற்பட்டால், தண்ணீர் தனியாக நின்று, பாலும் ருசியில் நஷ்டமடைகிறது.'' (350)

[தியானம்

ஹே ராமா, என்போன்ற அபலையினிடம் உன் கருணை விளங்குமா? உன்னைக் குணத்தில் ஸ்லாக்கியன் என்றும் தாழ்ந்தவர்களிடம் மிக்கக் கருணை நிரம்பினவரென்றும், ஜிதேந்திரியர் என்றும் அனுராகங்களால் பாதிக்கப்படாதவரென்றும், தர்மாத்மா என்றும், மாதாபிதாக்களிடமும் பந்துக்களிடமும் பிரியமானவர்கள் என்றும் சொல்லுகிறார்கள். அந்த புண்ணியவதியான கௌசல்யா தேவி மனித வர்க்கங்களிலே மிக்க பாக்யம் செய்தவள். உலகத்திலுள்ள தாயார் பிள்ளை ஸ்நேகம் எல்லோருக்கும் இருந்தாலும், தர்மத்திற்கும் மானத்திற்கும் அவள் அஞ்சினவள். ராமா, உலகத்தில் எல்லோரும் ராமன் குணவான், வீரன், ஸத்யசந்தன், சுசியாக உள்ளவன், கபடமில்லாதவன் பெரிய கண்களுடனும், மனதுடனும் காண்பவன், சரணம் என்று நம்பிவந்தவர்களை தன் தீர்க்கமான பாஹுக்களால் ஆதரவு செய்பவன், அரவணைத்துக் கொள்பவன், ஸர்வபூதங்களுக்கும் வித்யாஸமின்றி ஹிதம் செய்பவன், என்று புகழப்படுகிறாயே, ஏன் தெரியுமா? பிராக்ஞயன், கிருதக்ஞர், தயையுடன் கூடியவர், ஸாதுக்களிடம் நாட்டமுடையவன், என்று சொல்லப்படுகிறாயே... ஏன் தெரியுமா? க்ரோதம், விரோதம், காமம் லோபம் மதம் மாத்ஸர்யம் முதலிய குணங்களை வர்ஜித்து, தர்மத்தில் பிரியமாயிருப்பதால்தானே? என்னுடைய பாக்யத்தின் க்ஷயத்தின் காரணத்தால் அல்லவா உன்னை வெகுகாலம் மறந்துவிட்டிருக்கிறேன். உன்னை நான் பரிக்ஷை செய்யவேண்டிய அக்ஞானம் சூழ்ந்துகொண்டிருந்ததே, அது என் துர்பாக்கியம். நான் என்ன செய்யக்கடவேன்?]

சதிதேவியானவள் இவ்விதம் பலவிதமாக யோசித்து, மன வியாகுலமடைந்து எல்லையில்லாத சோகமடைந்தாள். என்னை மேலே தூக்கிவிடும் கிருபாசிந்து, பகவானும் என் பதியுமாகிற சம்புவும் பேசாமலிருக்கிறரே? ஆழமான சமுத்திரத்தை அளக்க முடியாததுபோல கிருபையுடன் கூடிய அவர் என்னைக் கடிந்து பேசவில்லை. மஹாகிருபா ஸமுத்திரமாகவிருக்கும் அவரிடம் நான் பொய்யைச் சொன்னதால் மஹத்தான அபராதத்தைச் செய்துவிட்டேன். (351)

சிவனுடைய முகத்தைப் பார்த்ததும் சதிதேவி எல்லா விஷயங்களையும் புரிந்துகொண்டாள். "ஸ்வாமியான என் பதி என்னைத் தியாகம் செய்துவிட்டார்." இந்த எண்ணம் மேலிட்டதும் அவளுக்கு வருத்தம் தாங்கவில்லை. தன் பாபத்தை நினைத்துப் பச்சாதாபப்பட்டாள். அவள் நெஞ்சு இரும்பு உலை மாதிரி எரிந்துகொண்டிருந்தது. (352)

பகவான் சிவன் சதிதேவியின் வியாகுலங்களைப் புரிந்து கொண்டு அவளுடைய மனதை ஆஸ்வாசப்படுத்த அழகான கதை சொல்லலானுர். இந்தவிதமாக விஸ்வநாதர் பல கதைகளைச் சொல்லிக்கொண்டு கைலாஸமடைந்தார். (353)

பகவான் சம்பு தான் செய்த மனஸ் ஸங்கல்பத்தை நினைத்து, வடவிருக்ஷத்தினடியில் பத்மாஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, மனத்தை அடக்கி, அபாரமானதும் அகண்டமானதுமான பெரிய சமாதியில் மூழ்கினுர். சதிதேவியும் கைலாஸத்தில் இருந்துகொண்டிருந்தாள். அவள் மனதில் வியாகுலம் அதிகமாகிக்கொண்டிருந்தது. இந்த ரஹஸ்யம் யாருக்கும் தெரியாமலிருந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாக மாறியது. (354)

ஒவ்வொரு நாளும் புதியதாயும் பெரிய சுமையுடனும் கூடினதுமான துக்கம் அவள் ஹிருதயத்திலிருந்தது. "நான் ரகுநாதருக்கு அவமானம் செய்துவிட்டேன். என் பதியிடம் பொய் சொன்னேன். அவரிடம் நான் பூர்ணவிஸ்வாசம் வைக்காமல் அவரையும் அலக்ஷ்யம் செய்துவிட்டேன்." (355)

"அந்த மஹத்தான பாபங்களுக்கு பிரம்மாவினுல் தண்டனை எனக்கு அளிக்கப்பட்டது. இந்த தண்டனையை அடைந்தது சரிதான். இனி இந்த வாழ்க்கையை நடத்துவது உசிதமில்லை. என் பதியான சங்கரருக்கு வருத்தம் கொடுத்த பின்பு எனக்கு வாழ்க்கையில் நாட்டமில்லை" (356)

யாரால் சதிதேவியின் வருத்தத்தை வர்ணிக்கமுடியும்? மிக்க புத்திசாலியான சதிதேவியானவள் பகவான் ராமனை

ஸ்மரணை செய்தாள். "ஹே ராமா, உன்னைத் தீனதயாளு என்று சொல்லுகிறார்களே. வேதங்களில் உன்னைத் துக்கங்களைப் போக்கும் மஹானுபாவன், தீனர்களைக் காப்பாற்றுபவர் என்றும், உன் புகழ் பலவிதம் போற்றப்பட்டிருக்கிறதே." (357)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, உன் திருவிளையாடல்களை யாரால் வர்ணிக்கமுடியும்? ஆதியில் ஒன்றாகவிருந்து, உன் சத்ய காமத்தினால் சத்ய ஸங்கல்பத்தினால் பலவானாய். ஒவ்வொரு சமயம் உன் குணங்களான ஸத்வம் ரஜஸ்தமஸ் இவைகளின் விசேஷத்தால் பிரகிருதியாகிய என்னிடமும் புருஷனாகிய ஜீவனிடமும் லீலைகளைச் செய்கிறாய்? உனக்கு உதவியாகவும் நாங்களாகிற பிரகிருதி புருஷர்களிடமும் சதா ஓடுகிற சாக்ஷாத் கால புருஷனும் உன் குணமாறுபாட்டுக்களின் விசேஷமாக உன் லீலைகளைச் செய்கிறான். ஹே புண்யஸ்லோகா, முன்பு மஹாத்மாவான அஜாதசத்ருவாகிய யுதிஷ்டிரர் பண்ணிய யாகத்தில் அரசர்களால் வினவப்பட்ட நாரத பகவான் உன் குண மாறுபாட்டினால் ஏற்பட்ட விசேஷங்களால் தேவர்களும் ராக்ஷஸர்களும் மானிடர்களும் உன் ஸ்ருஷ்டியில் உள்ள சகல சராசரங்களும் யேற்பட்டனர்; அவர்களின் குணத்தூக்குகளை யும், தாழ்வுகளையும் எடுத்துரைத்தார். கடைசியில் எல்லா ஜீவர்களும் உன்னிடமேலயமடைகின்றன என்றும் அத்துடன் சொன்னார். அப்பேற்பட்ட மூல புருஷனான நீர், ஆதி அந்த மில்லாதவரும், பரமதயாளுவுமான மஹாபுருஷர் என்றும் சொன்னார். அப்பேற்பட்ட உன்னை நான் சரணம் அடை கிறேன்.]

இவ்விதம் பலவிதமாக சதிதேவி யோசித்து அஞ்சலி பந்த மாக பகவானைப் பிரார்த்திக்கொண்டு சொல்லலானாள், "நான் என் பதியான சிவனுடைய சரண கமலங்களில் பிரேமையையும், பிரேமையால் ஏற்பட்ட மனம் வாக்கு கர்மங்கள் இவை யாவற்றாலும் அவரையே அந்தரங்கமாகப் பூஜிப்பது சத்ய மானால், (358)

ஹே, ஸர்வ தர்ஸியான பிரபோ, எல்லாவற்றையும் பார்க்க சக்தி உள்ளவரே, சீக்கிரமாக உபாயம் ஏதாவது பண்ண வேண்டும். எனக்குச் சீக்கிரம் மரணம் சம்பவிக்கவேண்டும். ரொம்ப சிரமம் ஏற்படாமல் என் பதியைவிட்டுப் பிரிந்த துக்கம்

என்கிற ஆபத்தை என்னால் சகிக்கமுடியவில்லை சீக்கிரம் இந்த கஷ்டம் விலகவேண்டும்.'' (359)

இவ்விதமாக தக்ஷகுமாரியாகிய சதிதேவி துக்கப்பட்டு விவரிக்க முடியாத தாபத்தை அடைந்தாள். எண்பத்தேழாயிர வர்ஷங்கள் சென்ற பின்பு அவிநாசியான சம்பு சமாதியிலிருந்து திரும்பினார். (360)

ஜகத்பதியான சம்பு ராமநாமத்தை ஸ்மரித்துக்கொண்டு கண்விழித்திருந்த சமயம் சதிதேவியானவள் தன் பதியினிடம் சென்றாள். ஜகத்பதியான சம்புவின் பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரித்தாள். அவளை வாரி எடுத்து தன் எதிரில் அமர்த்திக் கொண்டார். (361)

ஹரிபகவானைப்பற்றிய ரஸமான அநேக கதைகளைச் சொன்னார். அந்த சமயம் தக்ஷபிரஜாபதி இருந்த சமயம். அவருடைய யோக்யதாம்சங்களினால் அவரை பிரம்மா, பிரஜாபதிகளுக்கு நாயகராக நியமித்தார். (362)

[தியானம்

ஹே ஜானகி, தாயே ஜகதாம்பிகே, சர்வபக்திபரா என்று அழகாய் அழைக்கப்படுகிறவளே, பரமாத்மாவின் மனோனுகூல மாய் நடப்பவளே, த்ரயீமயீ என்று ருக்யஜுர் ஸாமவேதங்களால் புகழப்படுகிறவளே, ஸவிது என்று சொல்லப்படும் தேவதையின் அந்தராத்மாக விளங்குபவளே, பிராம்மணபிரியை என்று கானம் செய்யப்படுபவளே, பிருஹத் ரதாந்திரம் வாமம் என்கிற ஸாமங்களால் புகழப்படுகிறவளே, வைஷ்ணவி, ஸாத்விகி, மிக்க தேஜஸ்ஸுகளுடன் பிரகாசிக்கும் கிரணகூட்டங்களை அங்கங்களாக உடையவளே, சம்சாரத்தைப் படைப்பது, காப்பது அழிப்பது, தான் ஸர்வ தந்திர ஸ்வதந்திர சக்தியாக விளங்குபவளே, உனக்குத் தாமஸ குணம் ஏற்பட்டால் உலகத்தையே அழித்து உன்னிடம் லயமாக்கிக்கொள்கிறாய். ரஜோகுணம் ஏற்பட்டால் பிரும்மாமூலம் உலகத்தை படைக் கிறாய். ஸத்வ குணத்தால் சம்பூர்ண ஸம்சாரத்தை ரக்ஷிக்கிறாய். இந்த விதமாக மூன்று விதமாக மகிமைகள் பொருந்திய சக்தி ரூபங்களை நான் எக்காலத்திலும் எல்லா அவஸ்தைகளிலும் வந்தனம் செய்கிறேன். நித்யாதேவி, ஸநாதனி, பிரும்ம ஸ்வரூபா, பராம்பிகே, ஆத்ம ஸ்வரூபமாக விளங்கும் அக்னிக்கும் எரிக்கும் சக்தி எவ்விதம் அனுகூலமாகவிருக்கிறதோ, அது மாதிரி பிரும்மஸ்வரூபத்திற்கு நித்யாசக்தி ஸநாதனமாக

ஆத்யா சக்திக்கு விளங்குகிருள் அன்றோ? அந்தக் காரணத்தால் யோகிஸ்வரர்கள் மஹாமாயையின் பொருட்டு ஸ்திரிபுருஷன் என்று பேதங்கள் பாராட்டுவதில்லை. உன் மாயையிலிருந்து தப்பினவன் யாராவது இருக்கிருர்களா? உன் பரமார்த்தமான ஸ்வரூபம் எனக்கு நன்ருக விளங்கட்டும். உன்னைவிட வேறு வஸ்து இருக்கமுடியாது. என்னுடைய விலாஸங்கள் எல்லா வற்றிலும் சம்பூர்ணமாக நீ விளங்கவேண்டும்.]

தக்ஷன் பிரஜாபதியாகமாறி, பெரிய அதிகாரத்துடன் பரிபாலனம் செய்துவந்தான். அவருக்கு மஹத்தான அபிமானம் ஏற்பட்டது. இந்த உலகத்தில் பிரபுத்வத்தை அடைந்து மதம் ஏற்படாமல் விளங்கும் யாவரும் இருந்ததில்லையே! (363)

தக்ஷன் எல்லா முனிகணங்களையும் வரவழைத்து ஒரு பெரிய யாகம் செய்தார். அதற்கு எந்த எந்த தேவதைகள் யக்ஞத்திற்கு பாகம் உண்டோ அந்த தேவதைகளுக்கு எல்லாம் மரியாதை யுடன் அழைப்பு அனுப்பிவித்தார். (364)

கின்னரர்கள், நாகர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள் இன்னும் அநேக தேவதைக் கூட்டங்கள் தங்கள் ஸ்திரிகளோடு யக்ஞத் திற்கு வந்து சேர்ந்தார்கள். விஷ்ணு, பிரும்மா சிவன் இவர் களைத்தவிர மற்றவர்கள் யாவரும் தங்கள் விமானங்களுடன் வந்து சேர்ந்தார்கள். (365)

சதிதேவியானவள் எல்லா தேவதைகளும் தங்கள் தங்கள் விமானங்களில் ஏறிக்கொண்டு அழகாகச் செல்வதைக் கண்டாள். தேவகன்னிகைகள் அழகான குரலுடன் பாட்டுக்கள் பாடிக் கொண்டு சென்று கொண்டிருந்தார்கள். இந்த நாதங்களைக் கேட்டு முனிவர்களுடைய நிஷ்டைகள் கூட கலைந்தன. (366)

விமானங்களில் செல்லும் தேவதைகளைக் கேட்டு சதிதேவி தன் பிதாவாகிய தக்ஷன் ஒரு யாகம் செய்யப்போவதாக அறிந்தாள். தன் பதியான சிவனிடத்தில் எல்லாவற்றையும் உரைத்தாள். தன் பிதா யாகம் செய்யப்போவதைக் குறித்து சந்தோஷமடைந்து, மஹாதேவரை உத்தரவு கொடுக்கும்படி வேண்டினுள். அவர் உத்தரவு கிடைத்தபின்பு தன் பிதா வீட்டில் சிலநாட்கள் தங்குவதற்காக திட்டம் போட்டிருந்தாள். (367)

அவள் தன்பதி தன்னைப் பரித்யாகம் செய்ய எண்ணுகிறதை யும் அறிந்தாள். அதை நினைத்துப் பார்க்க அவளுக்கு துக்கம் அதிகரித்தது. தான்செய்த மஹத்தான அபராதத்தையும் நினைத்துப் பார்த்தாள். அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல்,

ஸங்கோசத்துடனும் பிரேமை ரஸம் நிரம்பின மனோஹரமான குரலில் மஹேஸ்வரரிடம் சொல்ல ஆரம்பித்தாள். (368)

[தியானம்

அம்மா தாயே, நீ வருத்தப்பட்டால், என் மனம் தாங்குகிற தில்லை. உலகத்தை உஜ்ஜீவிக்கும் சஞ்சீவினியே, முன் காலத்தில் உனது மகிமையால் பரமசிவன் ஆலகால விஷத்தை நாராயணருக்குப் பிரியம் செய்வதற்காக உட்கொண்டு உன் தாடங்க மகிமையினால் நீலகண்டர் என்று பெயர் பெற்றார். பிரும்மா, விஷ்ணு, ருத்ராதிகளுக்குக் காரணம் என்றும், அந்த திரிமூர்த்திகளின் பாலனசக்தி, கர்த்ரு சக்தி, நாசசக்தி என்கிற மூன்றுவித சக்திகளாக நீ தான் விளங்குகிறாய். பரா என்றும் புராண சக்தியென்றும், உன்னைச் சரியாகத் தெரிந்துகொண்டவர்கள் ஸம்சார தாபங்களை விலக்கி, குணகர்மங்கள் ரஹிதராக உன்னை வந்தடைகிறார்கள். அப்பேற்பட்ட மஹாலக்ஷ்மியே நரநாராயணர்களின் ஆத்ம தேவதையே, நீ என்னிடம் மஹா கிருபையுடன் இருக்க வேண்டும்.]

"ஹே பிரபோ, என்னுடைய பிதாவின் வீட்டில் உத்ஸவம் ஏற்படப் போகிறது. அதற்குப் போய்வர மிக்க ஆசையாக விருக்கிறது. கிருபையின் எல்லையே, உங்கள் உத்தரவைப் பெற்றுக்கொண்டு, அவரைப் பார்த்துவிட்டு, கொஞ்ச நாட்கள் தங்கிவிட்டு வருகிறேன்." (369)

சிவன் சொன்னார். "உன் வார்த்தைகள் அழகாகவும் சரியாகவும் இருக்கின்றன. எனக்கும் பிடித்துமிருக்கின்றன. ஆனால் உனக்கு உன்பிதா அழைப்பு ஒன்றும் அனுப்பவில்லையே. அவர் தன் புத்ரிகள் மற்ற எல்லோரையும் அழைத்திருக்கிறார். என்னிடமுள்ள வைரத்தின் காரணமாக உன்னை மாத்திரம் அவர் அழைக்க வில்லை." (370)

"ஒருசமயம் பிரும்மசபையில் அவர் என்னிடம் சந்தோஷக் குறைவை அடைந்தார். அந்தக் காரணத்தால் அவர் இப்போது என்னை அவமானப்படுத்துகிறார். ஹே பவானி, உன்னை அவர் அழைக்காமல், நீயாகத் தனித்துப் போவாயாகில், சீலமான ஸ்நேகம், மானம் மரியாதை இருக்காது." (371)

"மித்ரன், ஸ்வாமி, பிதா, குரு இவர்களின் வீட்டிற்கு அழைப்பில்லாமல் செல்லலாம் என்றாலும், விரோதம் ஒன்றும் இருக்கக்கூடாது. அவ்விதமிருக்கும் பக்ஷத்தில் மங்களங்கள் ஒன்றும் ஏற்படுவதில்லை." (372)

இவ்விதம் பலவிதமாக சம்புபகவான் சொல்லியும் சதிதேவி கேட்கவில்லை. அவர் கடைசியில் சொன்னார் "அழைப்பில்லாமல் நீ செல்வாயாகில், உனக்கு நல்லது இல்லை என்று நினைக்கிறேன்." (373)

பலவிதமாயும் பலதடவைகள் சொல்லப்பட்டும், சதிதேவி பிடிவாதத்துடன் அவர் பேச்சைக்கேட்க விரும்பவில்லை. பிற்பாடு திரிபுராரியான மஹாதேவர் தன் கணங்களைக் கூப்பிட்டு அவர்களுக்கு ஆக்ஞை தந்தார். அவர்களும் சதிதேவியுடன் கூடச் சென்றார்கள். (374)

[தியானம்

"ஹேராமா, கர்மங்களின் முடிவிற்காக ஏற்பட்ட இந்த சரீரத்தில் பற்றுதல் இல்லாமல் ஞானவைராக்யத்துடன் உன்னை அடைதலல்லவா குறிக்கோளாக விருக்கவேண்டும். மஹாதேவனுடைய ஸ்பர்சம்பட்ட இந்த தேகத்தில் ராமா, உன் விஷயத்தில் சஞ்சலமான பக்தியேற்பட்டதல்லவா? இவ்விதமாக நினைத்து, அந்த சரீரத்தைத் தியாகம்பண்ணத் துணிந்தாள் சதிதேவி. அதேமாதிரி மிருதசஞ்சீவினியாயிருக்கிற ஈஸ்வரியை அவள் நாயகனான மஹேஸ்வரர் ராமன்மீதுள்ள பிரியத்தால் அவளைத் தியாகம்செய்ய விரும்பினார். இவ்விருவர்களையும் ஒன்றுசேர்த்து வைத்தாயே, ராமா, உன் திருவிளையாடல்களை யாரால் வர்ணிக்க முடியும்? உன் ராமநாமத்தின் மகத்துவத்தை எவ்விதம் சொல்ல முடியும்? அபார கருணையுடன் என்னை நீதான் காப்பாற்ற வேண்டும்.]

[தியானம்

முன்பு ஒரு காலத்தில் ருக்மிணியுடன் ரதிவிலாஸம் செய்யும் பொழுது நீ அவளையும் கடூரமான வார்த்தைகளைச் சொல்லி அவள் பக்தியையும் பரிக்ஷித்தாய். அவளும் அழுதுகொண்டு தன் தகப்பனையும், சகோதரனையும் விட்டுப் பிரிந்தபின்பும் கூட, கிருஷ்ணனுடைய சரணங்களையே பெரிதாக நினைத்துக் கருதி எல்லாவித பந்தங்களையும் ருக்மிணி அறுத்தாள். உன்மீது ஏற்பட்ட காதலின் விரஹதாபத்தால் வெட்கத்தைத் துறந்து உன்னை ராக்ஷஸ விவாஹத்தின் சின்னமாகிற அபஹரிக்கப்படுதல் என்கிறதை வியாஜமாக வைத்து உன்னிடம் வந்தடைந்தாள். ஐயா, இப்பேற்பட்டவர்களின் மகத்தான விஸ்வாசத்துடன் ஏற்பட்ட நிரந்தரமான பக்தி உன்னிடம் சதா எனக்கு எப்பொழுதும்

இருக்கவேண்டும். அதற்குத் தாயான ஜானகியும், லோக குருக்க ளான உமாமஹேஸ்வரரும் எனக்கு அருள்புரிய வேண்டும்.]

பவானி தன் பிதாவின் கிருஹத்தை அடைந்தாள். தக்ஷனிடமுள்ள பயத்தால் யாரும் அவளைச் சரியாக வரவேற்கவில்லை. அவள் அம்மா மாத்திரம் அவளிடம் பிரியமாகவிருந்தாள். அவளுடைய சகோதரர்களும் சிரித்துக்கொண்டு அவளைக் கேலி செய்வதுபோலக் கண்டாள். (375)

தக்ஷன் அவளை குசலபிரஸ்னம் ஒன்றும் செய்யவில்லை. இதைப் பார்த்ததும் சதிதேவி உத்ஸாகம் அனைத்தையும் இழந்தாள். யாகசாலையை அடைந்து யாகபாகம் பகவான் சிவனுக்கு இல்லாதது பற்றியும் கண்டு வருத்தமடைந்தாள். (376)

பதியான சங்கரர் சொன்னது யாவும் அவள் நினைவுக்கு வந்தது. தன் பிரபுவுக்கு நடப்பது எல்லாம் அவமானமாகவும், திட்டமிட்டு வேண்டுமென்று நடப்பதுபோலத் தோன்றியது. அவள் ஹிருதயம் கோபத்தினால் எரிய ஆரம்பித்தது. முன்பு ஏற்பட்டதும் தன்னால் விளைந்ததுமான பதிபரித்யாகத்தினால் யேற்பட்ட ஹ்ருதயத்தின் துக்கம்கூட, அவ்வளவு கொடுமையாகத் தோன்றவில்லை. அதைவிட மகத்தான துக்கத்தை அடைந்தாள். இப்பொழுது தன் தகப்பன் தனது பதியை அவமானம் செய்வதை அவள் கண்டு மிக்க வருத்தப்பட்டாள். (377)

இந்த சம்சாரத்தில் துக்கங்கள் அநேகவிதங்களாக ஏற்படுகின்றன. இருந்தாலும் ஸ்வஜாதி அவமானத்தைப் பொறுப்பது மிகக் கடினம். அவர்களுக்கு தன் சொந்த ஜனங்கள் அவமரியாதை செய்வதை கொஞ்சம்கூட பொறுக்க முடிகிறதில்லை. சதிதேவிக்கு க்ரோதம் வந்தது. அவளுடைய தாயார் அவளைத் தழுவி பலவிதமாக ஆஸ்வாசப்படுத்தினாள். (378)

ஆனால் தன் பிரபுவான சிவனுக்கு ஏற்பட்ட அவமானத்தை அவளால் பொறுக்க முடியவில்லை. அவள் மனம் சாந்தியை அடையவில்லை. பெரிய ஜனசமூகங்களடங்கின அந்த பெரிய சபைக்குச் சென்று, க்ரோதம் மேலிட்டு, கடூரமான வார்த்தைகளைப் பொழிய ஆரம்பித்தாள். (379)

சபையிலுள்ள முனிகணங்களைப் பார்த்து "ஹே முனீஸ்வரர்களே, கேளுங்கள். எந்தஎந்த ஜனங்கள் இச்சபையில் என் பதியானவரும் நாயகருமான சங்கரபகவானை நிந்தனை செய்து, எதையும் மறுத்துப்பேசாமல் கேட்டு, பார்த்துக்கொண்டிருக்கிறீர்களோ, அந்த எல்லா ஜனங்களும் வெகுசீக்கிரமாக கெட்டபலனை

அடையப்போகிறீர்கள். என் பிதாவான தக்ஷரும் கூட அந்த பலனை அடைந்து மிக்கப் பச்சாதாபப் படப்போகிருர்.'' (380)

[தியானம்

ஹே ஜானகி, ஜகமிக்க தாத்ரி, மஹாலக்ஷ்மி, முன்பு ஒரு காலத்தில் வடபத்ரசாயியான பகவான் நாராயணர், ஆமை தன் அங்கங்களை சுருக்கிக்கொண்டு லயமடைவதுபோல, பாலரூபம் தரித்துகல்பத்தின் முடிவில் வைஷ்ணவி என்கிற சக்தியை அடைவதற்கு முயற்சி பண்ணும் சமயம், சாந்தரூபிணியாகவும் நான்கு கைளுடனும் சங்குசக்ரம் கதை பத்மம் என்கிற நான்குவிதமான ஆயுதங்களை அணிந்தவளாகவும், பரம மங்களங்களைச் செய்கிறவளாகவும், நல்ல வஸ்திரங்களோடும், ஆபரணங்களோடும் சகிகளுடனும் பூதகணங்களால் சேவிக்கப்படுபவளாகவும் ஆவிர்பவித்தாய். உன்னைப் பார்த்ததும், மனோஹரமான தேகத்தை உடைய உன் தேஜஸைப் பார்த்துவிட்டு பகவான் உன்னை ரதி மூர்த்தியாகவும், புத்திமூர்த்தியாகவும், கீர்த்தியாகவும், ஸ்மிருதி, த்ருதி, ச்ரத்தை, மேதை, ஸ்வதா, ஸ்வாஹா, க்ஷீதா, நித்ரா, தயா, துஷ்டி, புஷ்டி க்ஷமா, லஜ்ஜா, ஜ்ரும்பா, தந்திரா என்ற பெயர்பெற்ற சக்தி கூட்டங்கள் அடங்கிய மஹாலக்ஷ்மி என்றும் வைஷ்ணவி என்றும் உன்னைக் கைப்பிடித்து தன்பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். உன் கழுத்தில் மந்தார மாலை, முத்து மாலை முதலியவைகளை அணிந்தவளாகக் கண்டு ஸர்வாத்ம ஸ்வரூபமாகிற தன் ஹ்ருதயமாலையையும் உனக்கு அணிவித்தார். அதன் பிறகுதானே பகவானுக்கு பாலபாவம் நீங்கி, பிரும்ம தேவனை ஸ்ருடித்து, மதுகைடபர்களைக் கொன்று வேதங்களை ரக்ஷித்து, பிரும்மதேவருக்கு ஞானத்தை உபதேசித்து மதுசூதனர் என்ற பெயரைப் பெற்ருர். அந்த பாலஸ்வரூபத்தினுல் அல்லவா, தர்மத்தைப்பற்றி கவலை உள்ளவராகி, பரமதுக்கத்தை அடைந்த என் குருநாதரான வியாஸரை அனுக்ரஹித்து பாகவத கிரந்தத்தை வேதத்தின் சாரமாக எழுதும்படி தூண்டினுய் அல்லவா? பிற்பாடு அதே வியாஸபகவான் பரமபிரீதியுடன் சுகரை அன்புடன் தழுவி உன்னுடைய ஸ்ரேஷ்டமான மந்திரத்தை உபதேசித்து பரம அன்புடன் தானும் கமலபதியை பூஜித்து அவனையும் பூஜிக்கச் செய்தார். அப்பேற்பட்ட ஸர்வேஸ்வரி நீ. நான் ஸர்வதா ஏகபக்தி ஸ்வரூபத்துடனும் மனத்துடனும் உன்னைப் பூஜிப்பேனுக. நீரும் என்னிடம் அத்யந்த கருணையுடன் இருக்கவேண்டும்.]

"எந்த இடத்தில் பகவான் சம்பு, ஸ்ரீயப்பதியான விஷ்ணு பகவான் ஆகியவர்களைப் பற்றின நிந்தை இருக்கிறதோ, அந்த இடத்தில் இருக்கும் சாதுக்கள் நிந்தை செய்பவர்களின் நாக்கை அறுக்கவேண்டும். அவர்களின் காதும் அறுபட வேண்டும். இல்லையேல் அந்த இடத்தைவிட்டு அவர்கள் ஓடிவிட வேண்டும்." (381)

"ஜகத் ஆத்மாவான மஹேசர், திரிபுராரி இந்த சம்சார மனைத்துக்கும் ஹிதம் செய்பவர். தகப்பனுரைப் போல எல்லா ஜீவர்களையும் ரக்ஷிக்கக் கூடியவர். துர்பாக்கியத்தின் விசேஷமாக மந்தபுத்தி அடைந்த என் பிதா தக்ஷர் அந்த திரிபுராரியை நிந்தனை செய்கிறுர். இந்த சரீரம் அவருடைய வீர்யத்திஞல் உண்டாக்கப்பட்டது." (382)

"இந்தக் காரணத்தால் சந்திரகலையை தன் நெற்றியில் தரித்துக்கொண்டிருக்கும் விருஷகேதுவான சம்புவை மனதில் தரித்து இந்த சரீரத்தை நான் தியாகம் செய்கிறேன்." இவ்விதமாகச் சொல்லி சதிதேவியானவள் யோகாக்னியில் தன் சரீரத்தைப் பஸ்மமாகச் செய்தாள். யாகசாலையில் கூடியிருந்த எல்லா ஜனங்களும் எல்லோரும் ஹா, ஹாவென்று கூறி சத்தம் செய்தார்கள். (383)

சதியினுடைய மரணத்தைக் கேட்டு, சம்புவினுடைய கணங்களுக்கு கோபம் மேலிட்டு யாகசாலையை அழிக்க ஆரம்பித்தார்கள். யக்ஞத்தின் வித்வான்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தைப் பார்த்ததும், பிருகு மஹரிஷி முனீஸ்வரர்களுக்கு ரக்ஷை அளித்தார். (384)

இந்த சமாசாரம் பகவான் சிவனுக்குத் தெரிந்தது. க்ரோதம் மேலிட்டவராகி வீரபத்ரரை அனுப்பிவித்தார். அவர் யாகத்தை அழித்து, அங்குவந்த பிரமுகர்களான எல்லா தேவதைகளையும் அவரவர்கள் செய்த குற்றத்திற்குத் தகுந்த தண்டனைகளை அளிவித்தார். (385)

[தியானம்

ஹே ராமகிருஷ்ண கோவிந்தா உன் மகிமையை யாரால் வர்ணிக்கமுடியும்? முன்பு ஒரு காலத்தில் பகவானும் பக்தர்களில் உத்தமரானவரும், துருவன் பிரஹ்லாதன் தியாகராஜர் போன்ற மஹான்களுக்கு குருவானவருமான நாரதர் தக்ஷன் சாபத்தால் ஊர் ஊராகச் சுற்றி நாராயணரின் கதை அமுதுகளைப் பரப்பினுர். அந்த கல்யாணகுணங்களை பரப்புவதற்கும் கேட்பதற்கும் தான் உலகமெல்லாம் சுற்றுகிறேன் என்று நாரதபகவான் தன்னைப்

பற்றிச் சொல்லிக்கொண்டார். அவருடைய உபதேசத்தால் தக்ஷனுடைய புத்ரர்களும், நாராயணரைப் பஜிக்கச் சென்றார்கள். சதிதேவியாக அவதரித்த அம்பிகே, நீயும் அவருடைய உபதேசத்தால், பகவான் நாராயணரை உபாயமாக வரித்து, சம்புவே கதியென்று தன் பிதாவை திரஸ்கரித்து, சிவநிந்தை பொறுக்கமுடியாமல் உன் தேகத்தைவிடத் துணிந்தாய். அந்த தியாகம் உனக்கும் உன் சகோதரர்களான ஹரியஸ்வரர்களுக்கும் சபளாஸ்வரர்களுக்கும் சரியாகும். நாரதருடைய உபதேச மகிமையால் அவர்கள் மருத்துக்கள் என்கிற தேவர்களுடன் சேர்ந்து ஆனந்தமடையும் பாக்யம் பெற்றார்கள். அப்பேற்பட்ட நாரதமுனிவர் நாத பிரம்மத்தில் லயிப்பதின் மூலம் ஸ்ரீபகவானாகிற ஹ்ருஷிகேசருடைய சரணாரவிந்தங்களை தமது சித்தம் அறுபடாமல் நிலைநிறுத்தி உலகங்கள் எல்லாவற்றிலும் சஞ்சரிக்கிறார். இவ்வாறு தக்ஷசாபம் அவருக்கு ஒரு அனுக்ரஹமாகவே ஏற்பட்டது என்பதில் சந்தேகமேயில்லை.]

தக்ஷனுக்கும் சிவநிந்தையால் ஏற்பட்ட துர்கதியானது மிகவும் பிரசித்தம். எவர் எவர் சிவத்ரோஹி என்று சொல்லப்படுகிறானோ அவர்களுக்கும் இதுதான் நேரிடும். இந்த இதிஹாஸம் சகலருக்கும் தெரிந்த விஷயம். (386)

சதிதேவியானவள் மரணத்தின் சமயம் பகவான் நாராயணனிடத்தில் "நான் ஒவ்வொரு ஜன்மத்திலும் பகவான் சிவனிடத்தில் பக்தியும், அவருடைய சரணங்களே எனக்குக் கதியாகவும், நாங்கள் இருவர்களும் நாரயணராகிய ராமனிடத்தில் மகத்தான விஸ்வாசமும் பக்தியும் கொண்டவர்களாகவும், நித்யதம்பதிகளாக ஒருவரைவிட்டு ஒருவர் எப்போதும் எந்தவிதத்திலும் எந்த அவஸ்தையிலும் பிரியாதவர்களாக நாங்கள் இருக்க வேண்டு மென்று" வரங்களைக் கேட்டுப் பெற்றாள். இந்தக் காரணத்தால் அவள் ஹிமவானுக்குப் புத்ரியாகவும், பார்வதி என்கிற பெயருடன் ஜன்மம் எடுத்தாள். (387)

[தியானம்

ஹே உமா, பெண்வர்க்கத்திலே உனக்கு உவமை யார் இருக்கக்கூடும்? ராமனின் பெரும் புகழ்பெற்ற ஜானகி உன் வாழ்க்கையின் அனுபவத்தினால் உண்டான ராமபக்தியையும் உன் தவத்தினால் மீண்டும் கிடைக்கப்பெற்ற சம்புவை அடைந்ததைக் காரணமாக வைத்து, தானும் உன்மாதிரி ராமனை அடையத் தவம் செய்தாள். பிற்பாடு பகவானுக்கு அனுகூலையாகப்

பிறந்த ருக்மிணிதேவியானவள் கௌரி பூஜை செய்து கிருஷ்ணனை நாயகனாக அடைந்தாள். உமா, உன் புகழுக்கு ஏற்ப சீலத்தினாலும், பக்தியினாலும் அல்லவா சங்கரர் உன்னை இணைத்துச் சேர்த்துக்கொண்டு அர்த்தநாரீஸ்வரராக விளங்குகிறார். அம்பிகே, உன் குளிர்ந்த கடாக்ஷம் எனக்கு எல்லா அவஸ்தைகளிலும் வேண்டும். உன் அருளினால், உன் பதியான சங்கரருடைய அனுக்ரஹமும் லக்ஷ்மி நாராயணருடைய பக்தியும் எனக்கு எப்போதும் இருக்கவேண்டும்.]

[ஹே ராமா ஜானகி, உமாசம்போ, விஷ்ணோ, புவனேஸ்வரி, எல்லா ஜீவராசிகளிலும் உள்ளிருக்கும் நாராயணா, கர்மங்களின் சிறப்பை நான் அறிந்திருந்தபோதிலும் தங்களுடைய நாமத்தை நான் வாய்விட்டு மனதார உச்சரிக்கிறேன். அதனால் நான் சிறப்பை அடைகிறேன் என்று வேதங்கள் முறையிடுகின்றன. प्रतत्ते अद्य शिपिविष्टनामार्यः शंसामि वयुनानि विद्वान् किमित्ते विष्णो (யஜுர்வேதம்)].

[தியானம்

அன்றொருநாள் வடபத்ரசாயியாக விளங்கும் ரமாரமணனுக்குப் புவனேஸ்வரியாக விளங்கின உமாலக்ஷ்மி, கல்யாணி, உனக்கு நமஸ்காரம் செய்கிறேன். பாலையாகவும், மனோரமையாகவும், நவயுவதியாகவும் மஹாவிஷ்ணுவை சந்தோஷப்படுத்துகிறவளும், ஸஹஸ்ரகோடி சூர்யபிரகாசம் போன்ற தேஜஸ்ஸுகளாலானவளும், சச்சிதானந்த ரூபமாக உள்ளவளும், பிருக்ருதிதேவியும், விதாத்ரி என்கிற பெயரால் அழைக்கப்படுகிறவளும், பஞ்சகிருத்ய அவிதாத்ரி என்று சொல்லப்பட்ட புவனேஸ்வரிக்கு மீண்டும் நான் நமஸ்கரிக்கிறேன். அர்த்த மாத்திரையில் அர்த்த பூதமாக விளங்கும் புவனேஸ்வரிக்கு நான் நமஸ்கரிக்கிறேன். கதையையும் பாசாங்குசத்தையும் ஆயுதமாக உடையவளே, உன்னை வேதங்கள் பிரதம வேதகலா என்று கீர்த்தனம் செய்கின்றன. உன்னை அடைவதே மோக்ஷார்த்த பலன். அகில பிரபஞ்சத்திற்கு ஜீவபாவமாக விளங்கும் அகிலேஸ்வரி, பகுவிதமாக துக்ககரமாக விளங்கும் காலஸ்வரூபத்தின் தேவதையே, என்னைக் காப்பாற்று. மஹாவித்யை, சரண்யை என்று விஷ்ணுவினால் அழைக்கப்பட்டவளே, எனக்கு ஞானப்பிரகாசத்தை அளித்து ஸர்வமங்களங்களையும் கொடு. உன்னை நான் அநேக தடவைகள் நமஸ்கரிக்கிறேன்.]

எப்போது உமாதேவியானவள் ஹிமாசலத்தை அடைந்து அவதரித்தாளோ, அந்த இடத்தில் ஜகத்தில் உள்ள எல்லா சக்திகளும் சம்பத்தின் ஐஸ்வரியங்களும் முன்சென்று அவ்விடம் பிறந்தன. முனிகணங்கள் அழகான ஆஸ்ரமங்களை நிர்மாணம் செய்தார்கள். இந்தவிதமாக ஹிமவானுக்கு உசிதமான மேலான பதம் கிடைத்தது. (388)

அந்த அழகான பர்வதத்தில் அநேகவிதமான விருக்ஷங்கள் புஷ்பங்களுடனும், பழங்களுடனும்கூடி அழகாய் விளங்கின. இன்னும் விலை உயர்ந்த பலவிதமான ரத்னங்களும் விளையும் ஸ்தலமாக ஹிமவத்பர்வதம் விளங்கியது. (389)

உலகத்திலுள்ள புகழ்பெற்ற நதிகள் மிக பவித்திரமான ஜலங்களை சுமந்துகொண்டு உற்பத்தியாயின. பசுபக்ஷிகள் சந்தோஷத்தால் மதம்கொண்டு சதா சுகத்தை அடைந்தன. எல்லாப் பிராணிகளும் தங்களுடைய வைரத்தை மறந்துவிட்டு அந்த பர்வதத்தில் பரஸ்பரஸ்நேகத்துடனும் அதிக பிரேமை யுடனும் விருந்தன. (390)

கிரிஜா ஹிமவான் வீட்டிற்கு வந்தபின்பு ஹிமய பர்வதமே மிகமிகச் சோபிதமாக விளங்கியது. எவ்விதம் ராமபக்தி அடைந்த ஜனங்கள் மிக்க அழகாய் விளங்குகிறார்களோ, அவ்விதம் ஒவ்வொரு நாளும், புதுப்புது மங்களங்கள் அவர் களின் கிருஹத்தில் உண்டாயின. அப்பேற்பட்ட ஹிமவானின் மங்களங்களையும் சோபைகளின் சிறப்புக்களையும் பிரும்மாதி தேவர்கள் இன்றும் கீர்த்தனம் செய்துகொண்டிருக்கிறார்கள். (அப்பேற்பட்ட மங்கள தேவதையான பார்வதிதேவிக்கு நான் நமஸ்கரிக்கிறேன்.) (391)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, லக்ஷ்மீபதி, ஜனார்த்தனரால் பகுமானிக்கப்பட்ட மஹாலக்ஷ்மி தாயே, முன்பு ஒரு காலத்தில் ஹரியினால் புகழப்பட்ட வசனங்களைக் கேட்டு, சம்புவானவர் உன் கிருபையை நாடி தானும் கிருதார்த்தனாகவேண்டும் என்று நினைத்து, சகல சத்குணஸ்வரூபியும் ஸகலலோகங் களுக்கும் மங்களங்களை உண்டுபண்ணும் உன்னை பல கீர்த்தனங்கள் செய்து, நமஸ்கரித்தார். பஞ்சபூதங்களின் சக்தியாகவிளங்கும் உன்னையே மாயை என்றும், முக்குணங்கள் என்றும், உன்னிஷ்டம்போல வேதங்களையும், விலாஸங்களையும்

லீலைகளைச் செய்கிறவள் என்றும், அம்பிகையாகிய நீயே ஸர்வ பிரபஞ்சம் என்று சொன்னார். உன்னைவிட்டுப் பிரிவதால்தான் ஜடனாகவும், விஷயங்களில் ஈடுபடுவதால் அசிரத்தையாக ஆகி உலகத்தைக் கவனிக்கமுடியாமல் ஆகிவிடுகிறேன் என்று பகவான் சம்புகீர்த்தனம் பண்ணி உன்னை நாட ஆரம்பித்தார். ஜகஜ்ஜனனி, உன் பாதங்களை நாடி ஸேவை செய்து யுவதி பாவமாக உன்னை வந்தடைந்து உன்னிடமிருந்து ஸகலவிதமான சுகங்களையும் மங்களங்களையும் பெறுவேனாக. உன் பாதாரவிந்த சேவைகளை நன்றாக ருசித்து, நரதேஹம் எடுத்து உனக்கு சதா அனுகூலனாக இருப்பேனாக. அழகான பல் வரிசைகளை கொண்டவளே, உன்னிடம் மிக பக்தி உள்ளவனாக, சரியான விதிகளுடன் உன்னைப் பூஜித்து, தபம் தமம், ஸமாதி சீலம் இத்யாதி குணங்களால் உன்னைச் சந்தோஷிக்கவைத்து உன் பதத்தை வந்து அடைவேனாக. என்னிடம் மிக்க தயையுடன் இரு எனக்கு உன்னை வந்து அடைவதற்கு அத்புதமான மந்திரங்களைச் சொல். ஒவ்வொரு நாளும் உத்தமமானதும், புதிய புதியதுமான உன் சேர்க்கையின் விலாஸங்களை எனக்கு அனுக்ரஹி. உன் மனதிலுள்ள ரதி விலாஸங்களையும் சம்சார தாபங்களைப் போக்கும் சிறந்த மார்க்கங்களையும் எனக்குச் சொல். தாரகே என்னைக் காப்பாற்று.]

நாரத பகவான் எல்லாச் சமாசாரங்களையும், கேட்டார். மிக்க சந்தோஷத்துடன் ஹிமாசலத்திற்குச் சென்றார். சைல ராஜனிடம் சென்று உமாதேவியின் தரிசனத்தைக்காண ஆவலுள்ளவராய் சிவபக்தியின் பெருமையை ஹிமவானுக்கு எடுத்துரைப்பதில் ஆவலுள்ளவராகி சென்றார். அந்த ராஜனும் அவரை வரவேற்று வந்தன உபசாரங்களைச் செய்தார். (392)

பிறகு தன் ஸ்திரி பந்துக்களுடன் முனியை நமஸ்கரித்து நாரத பகவானின் சரண தூசிகளை ஹிமவான் தன் சிரஸில் அலங்கரித்துக்கொண்டான். அதன் பிறகு தன்னுடைய சௌபாக்யத்தையும் எடுத்து உரைத்தான். அதன் பிறகு தன் குலவிளக்கான புத்ரியை அழைத்து நாரத பகவானுடைய திவ்ய சரணங்களில் நமஸ்கரிக்கச் செய்து ஆசீர்வாதங்களைப் பெறச்செய்தான். (393)

ஹிமவான் அவரிடம் சொல்லலானான். "ஹே ஸ்வாமி, மூன்று காலங்களையும் லோகங்களையும் அறிந்தவரே, ஸர்வக்ஞ்யர் என்று புகழப்படுகிறவரே, என் கன்னிகையான பார்வதியின் தோஷங்களையும் குணங்களையும் எடுத்துரைப்பீர்." (394)

முனிவரும் சிரித்துக்கொண்டு தேவரஹஸ்யங்கள் அடங்கின வார்த்தைகளை மிக்க மதுரமான குரலில் சொல்ல ஆரம்பித்தார். "உன்னுடைய குமாரி, சகலவிதமான குணசம்பத்துக்கள் உள்ளவளாக ஆவாள். ஸ்வபாவமாக அழகுள்ளவள். சுசீல மானவள். எல்லாம் தெரிந்தவள். இந்த பாலைக்கு உமா, அம்பிகா, பவானி என்கிற பெயர்கள் பிரசித்தமானவை." (395)

"நல்ல லக்ஷணங்கள் உள்ள குமாரியும், அழகுசம்பத்துக்கள் உள்ளவளும் ஆவாள். இவள் தன் பதியிடம் மிக்க அன்புள்ளவள். ஏகாந்தபக்தி உள்ளவள். இவருடைய மணவாழ்க்கை ரொம்ப சுபமானது. பதியைவிட்டுப் பிரியாத நித்ய தம்பதிகளின் சேர்க்கைத்வம் கொண்டது இந்த பெண்ணினால் தாய் தந்தையர்களுக்கு மிக்க புகழ் உண்டாகும்" (396)

"எல்லா ஜனங்களும் சராசரங்களனைத்தும் இவளைப் பூஜை செய்து சேவைபண்ணி தங்கள் மனோரதங்களை பூர்த்திசெய்து கொள்ளுவார்கள். அவர்களுக்குக் கிடைக்காத வஸ்து ஒன்றும் இல்லை. சம்சாரத்தில் இவள் பெயரை நாமஸ்மரணை பண்ணி பதிவிரதையின் ஸ்வபாவத்தை அடைந்து கத்திமுனைபோன்ற மிக்கக்கடினமான பாதையிலும் சிரமமின்றி ஏறுவார்கள்." (397)

"ஹே சைலராஜனே, உன்னுடைய பெண் நல்ல சாமுத்ரிகா லக்ஷணங்களுடன் கூடியவள். இருந்தாலும் அதனுடைய இரண்டு, நான்கு குற்றங்களையும் கேள். இவளுடைய பதி குண ரஹிதர், பற்றுதல் இல்லாதவர். வைராகி, மானம் அவமானம் இவைகளை லக்ஷ்யம் பண்ணாத ஸ்தித பிரக்ஞ்யர். தாயும் தந்தையும் இல்லாதவர். யாவற்றிலும் உதாசீனர். சம்சயம் என்கிற தோஷத்தை முற்றிலும் துறந்தவர்." (398)

"சாங்கியம் யோகம் என்னும் சாஸ்திரங்களில் மிக்க தேர்ச்சி பெற்றவர். ஜடாதாரி, கர்மயோகத்தின் சிறப்பாக விளங்கும் நிஷ்காம புத்தி உள்ளவர். அரைவஸ்திரம் ஒன்று மாத்திரம் அணிந்திருப்பவர். பார்ப்பதற்கு அமங்களமான வஸ்துக்களை அணிந்துகொண்டிருப்பவர். வேஷதாரி, இப்பேற்பட்ட ஸ்வாமியைப் பதியாக இவள் அடைவாள். இவளுடைய கைரேகைகள் இவ்விதம் சொல்லுகின்றன." (399)

நாரதருடைய வசனங்களைக் கேட்டு அவருடைய வசனங்கள் சத்யமானவை என்று நம்பி, அந்த பர்வதராஜன் மேனை என்கிற பத்னியுடன் மிக்கக் கவலைகொண்டார், ஆனால் பார்வதியோ மிக்க பிரசன்னமான மனத்துடன் இருந்தாள். நாரதருக்கு இந்த சந்தோஷ பேதங்கள் தெரியவில்லை. ஆனால் வெளியில்

எல்லோருக்கும் ஒரே வருத்தமாக விருந்தது என்று கண்டு கொண்டார் (400)

சகலசகிகளும், கிரிஜாவும் பர்வதராஜனும் மேனுதேவியும் புளகாங்கிதமடைந்தார்கள். கண்களில் ஜலம் பெருகியது. தேவரிஷியான நாரதருடைய வசனங்கள் பொய்யாகாதவை. பார்வதிதேவியானவள் இந்த வசனங்களை மனத்தில் தாரணை செய்துகொண்டு சிந்தித்தாள். (401)

[தியானம்

ஹே ஜானகிராமா, முன்பு ஒரு காலத்தில் கர்மத்தின் பலன் ஸ்வரூபமாக தக்ஷிணு என்பவள் கோலோகத்திலிருந்து சாபத்தால் யக்ஞலக்ஷ்மியாக அவதரித்தாள். அவள் பிரும்ம விஷ்ணுருத்ர தேவதைகளை அனுக்ரஹித்தாள். பிற்பாடு அவளே ராதையாகவும், நாராயணர் கிருஷ்ணனுகவும் அவதரித்தார்கள். உலகத்தில் அவளுடைய நடத்தையால் குருபூஜை, பிராம்மண பூஜை, தேவபூஜை, ஸ்திரிகளுக்குப் பதிபூஜை முதலிய தர்மங்களை அவள் வியவஸ்தை செய்தாள். அதுமாதிரி யாகங்களைப் போன்ற கர்மாக்களைச் செய்து, பிராம்மணர்களுக்கு தக்ஷிணை கொடுத்து, யாகங்களைப் பூர்த்திசெய்த மானிடர்களுக்கு எல்லா மனோரதங்களையும் பூர்த்திசெய்தாள். அம்மா, தக்ஷிணு தேவி, பெரியோர்களால் வணங்கப்பட்ட மோஹினி, கஸ்தூரிப் பொட்டினால் வாசனை உடையவளே, உன்னையும் யக்ஞதேவதை யையும் உங்கள் புத்திரனையும் நான் நமஸ்காரம் செய்து கிருத கிருத்யனுக ஆகுவேனுக. உன்னைக் கார்த்திகை மாதத்தில் பூர்ணிமையில் பூஜைசெய்து தக்ஷிணைகளை பிராம்மண ருத்விக்களுக்குக் கொடுத்து என் பாபங்களிலிருந்து விடுபட்டு, உன்னை வந்தடைவேனுக. பிரும்மாவானவர் கர்மரூபி, மஹேஸ்வரர் கர்மத்தின் பலன். பகவானுன விஷ்ணு யக்ஞஸ்வரூபி. தக்ஷிணை என்கிற தேவியாகிய நீ எல்லாவற்றிற்கும் ஸாரமாக விளங்குகிருய். நான் செய்யும் எல்லா கர்மங்களுக்கும் சக்தியாக விளங்குகிருய். நான் பலவித ஸ்தோத்ரங்களால் உன்னையும் யக்ஞ தேவதையையும் ஆராதித்து, என் கர்மங்களை உங்கள் பிரீதிக்காகச் செய்து, உங்களை நமஸ்கரிக்கிறேன்.]

பார்வதிதேவிக்கு பகவான் சம்புவினுடைய சரணுரவிந்தங்களை எவ்விதம் அடைவது, அவைகளை அடைவது மிக்க கடினமே, என்ன செய்வது என்று பலவிதமாக மனத்திற்குள் சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்தாள். தாய்தந்தையர்களுடனும் சகி

களுடனும் நாரதருடனும் இருக்கும் சமயம், இது சரியான சமயமில்லை என்று தீர்மானித்து தன் மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். (402)

தேவரிஷியான நாரதரின் வசனங்கள் பொய்யன்று. ஆனால் மேனுவும் அவளுடைய நான்கு சகிமார்களும் மனம்கலங்கினர் கள். பிறகு தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு ஹிமவான் நாரதரைப் பார்த்துச் சொல்ல ஆரம்பித்தான், "ஹே நாத, இதற்கு ஏதாவது உபாயம் சொல்லவேண்டும்" என்று பிரார்த்தித்தான். (403)

முனிவரும் சொல்ல ஆரம்பித்தார் "ஹிமவானே கேளு. பிரும்மாவினல் எழுதப்பட்ட லிபியை யாவராலும் மாற்றமுடி யாது. தேவர்கள், தானவர்கள் மனுஷ்யர்கள் நாகர்கள் முனி ஜனங்கள் ஆகிய யாவராலும் அதை அழிக்கமுடியாது." (404)

"இருந்தாலும் ஒரு உபாயம் எனக்குத் தோன்றுகிறது. தெய்வசகாயத்தின்பேரில் நீ செய்வாயாகில், அதிலும் சித்தி பெறுவாயாகில் உமையினுடைய பதி நான் வர்ணித்தபடி உனக்கு மாப்பிள்ளையாக வருவான்." (405)

"நான் உனக்கு மாப்பிள்ளையாக வரும் புருஷனுக்கு எந்த எந்த தோஷங்களைச் சொன்னேனே, அவைகள் என்னுடைய அனுமானத்தின் பேரில் மங்களகரமாகவே முடியும். பகவான் சிவனுக்கும் உமைக்கும் கல்யாணம் நடந்தால், எல்லாதோஷங் களும் விலகி, எல்லா ஜனங்களும் புகழக்கூடிய குணேத்தமராக மாப்பிள்ளையை நீ அடையலாம்." (406)

"எப்படி விஷ்ணுபகவான் சேஷசயனத்தில் படுத்துத் தோஷத்தை அடையாமல், பண்டிதர்களால் புகழப்படுகிருர்; எவ்விதம் ஸூர்ய தேவன், அக்னிதேவர் நல்லது கெட்ட வஸ்துக் களின் ரஸங்களைப் பருகினாலும், அவர்களுக்கு ஒரு கெடுதலும் தோஷமும் ஏற்படுவதுமில்லை, சொல்லப்படுவதுமில்லை." (407)

"எவ்விதம் கங்கையானவள் சுபமானதும் அசுபமானது மான ஜலங்களின் கூட்டங்களையும் அடைந்தபோதிலும் யாவரும் கங்கை ஜலத்திற்கு தோஷம் கூறுவதில்லை; சூரியதேவன், அக்னி தேவதை, கங்கையின் புனிதமான ஜலத்திற்கு ஸமமான சமர்த்தர் களுக்கு யாவரும் தோஷங்கள் சொல்லுகிறதில்லை." (408)

[தியானம்

ஹே கோதண்டராமா, யுத்தத்தில் நரநாராயணரிஷிகளுக்கு சமமாக தேஜஸ் உள்ளவரே, உன்னுடைய வீர்யத்தால்

சம்பாதிக்கப்பட்ட ஜானகிலக்ஷ்மி எனக்கு எப்பொழுதும் அனு கூலையாக இருப்பாளாக. என்னிடமுள்ள ராஜஸம், தாமஸம் முதலிய குணங்கள் நீங்கி, மோஹம் அஹங்காரம், மதமாத்ஸர் யங்கள் நிங்கி, பரபக்தியுடன் உங்களை நான் ஸதா பூஜிப்பேனுக. நான் எப்பொழுதும் ஷடாக்ஷரம் என்னும் மந்திரத்தை ஜபிப் பேனுக. ஸகல ஜனதாத்ரி, ஸகல ஹோமங்களில் நீ ஸ்வாஹா தேவியாக அவதரிக்கிருய். நான் செய்யும் கர்மாக்களில் நீயே ஆதாரபூதமாக விளங்குகிருய். உன் பாதபங்கஜங்களை என் பயங்களைப் போக்குவதற்கும், முக்தியை அடைவதற்கும், சம்சாரமோஹங்களை ஒழிப்பதற்கும், உன் பக்தியைப் பெருக்கு வதற்கும் என் ஆதாரமாக நம்பியிருக்கிறேன். ஹே சிவே, என் அபராதங்களைப் பொறுத்து, என் ஸ்ரமங்களைப் போக்கி, எனக்கு அருள்புரிவாயாக. நீயே ஒரு புருஷனுகவும் ஸ்திரியாகவும், ஒரே பொருளாயும், சுத்தஸத்வனுன ரூபியாகவும், நாராயணி, என்றும் சொல்லப்படுகிருய். அப்பேற்பட்ட உனக்கு நமஸ் காரங்கள்.]

"எந்த மூர்க்கனுன மனிதன் அக்ஞானத்தினுலும், அபிமானத்துடனும் அந்த மூன்று பேர்களையும் கேலி செய்து துச்சமாகப் பேசுவார்களோ, அவர்கள் கல்பம் வரையிலும் நரகத்தில்தான் இருப்பார்களன்றே. எந்த ஜீவனையாவது ஈஸ்வர ருக்குச் சமமாக ஸர்வஸ்வதந்திரராக சொல்லமுடியுமா ?" (409)

"வாருணி என்கிற மது கங்காஜலத்தினுல் தயாரிக்கப்பட்டா லும் சாதுக்கள் ஒருக்காலும் சாப்பிடுகிறதில்லை. ஆனுல் கங்கை யின் ஜலத்தில் சேர்க்கப்பட்ட வாருணி பவித்திரமாகச் செய்யப் படுகிறது. அதுமாதிரி ஈஸ்வரருக்கும் ஜீவனுக்கும் பேதங்கள் இருக்கின்றன." (ஜீவன் ஈஸ்வரருடன் ஐக்யமடைந்த பின்பும் அந்த பேதங்கள் இருக்கத்தான் இருக்கும். ஜீவன் சுத்த ஆத்மாவாக விளங்கினுலும் பரதந்திரன்தான்). (410)

"சம்பு மிக்க எளிதாய் அடையக்கூடியவர். ஸமர்த்தர். பகவான் என்று புகழப்படுகிறவர். ஆகையால் இந்த விவாஹத் திற்கு எல்லாவிதமாகவும் யோக்யமானவர். கல்யாணங்களை அளிப்பவர். ஆனுல் மஹாதேவரை அன்னயபக்தியுடன் மிக்க சிரமத்துடன் ஆராதனம் பண்ணவேண்டும். ஆசுதோஷி என்று சொல்லப்படுபவர். தேகத்தின் க்லேசங்களாகிற தபஸ் என்ப தைச் செய்வதால் அவர் மிக்க சீக்கிரமாக சந்தோஷமடையக் கூடியவர்." (411)

"உன்னுடைய குமாரி தபஸ் செய்வாளாகில், திரிபுராரியான மஹாதேவர் உன் புத்ரியின் துர்கதியை நாசம் செய்யக்கூடியவர். ஸம்சாரத்தில் எத்தனையோ வரன்கள் இருந்தாலும் இந்த பெண்ணுக்குச் சிவபெருமானைத் தவிர வேறு ஒரு கணவன் தகுதியில்லை." (412)

"சிவபெருமான் வரங்களை அளிப்பவர். சரணம் என்று சொல்லிவந்த ஆர்த்திகளைக் காப்பாற்றுபவர். கிருபையின் கடல் போன்ற தயை உள்ளவர். சேவகர்களின் மனத்தை பிரகாசப் படுத்தி ரஞ்சனம் செய்பவர். இஷ்டப்பட்ட பலன்களைக் கொடுப்பவர். சிவபெருமானை ஆராதியாமல் கோடிக்கணக்கான யோகங்களும் ஜபங்களும் செய்யப்பட்டாலும் இஷ்டப்பட்ட பலன்கள் கிடைப்பதில்லை." (413)

இந்தவிதமாக பகவான் சம்புவை ஸ்துதி செய்து, ஸ்மரணை செய்துவிட்டு நாரதரிஷி பார்வதிதேவியை மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார். "பர்வத ராஜா, உன் சந்தேகங்களை விலக்கி விடு. எல்லாம் உனக்கு மங்களமாகவே முடியும்" என்று நாரதர் மீண்டும் ஹிமவானை அனுக்ரஹித்தார். (414)

[தியானம்

ஹே ராமா லக்ஷ்மணா, சீதா, சம்போ, உமா உங்களை நான் பலவிதமாக அன்புடன் அழைக்கிறேன். என் மனதில் ஆனந்த மடைகிறேன். ஆரம்பத்திலிருந்து பிரளயம் வரை ஒரு மூர்த்தியான நீ சகல ஜங்கம அஜங்கமங்களையும் லயமாக்கி, ஞான மூர்த்தியாக விளங்குகிறாய், அப்போது லீலையாக உலகத்தையும் சூக்ஷ்மமாகவிருந்த சம்ஸாரத்தையும் அவ்யக்த ஸ்திதியிலிருந்து வ்யக்தமாக எடுத்துக்காட்ட விரும்பினீர். அதனால் உமக்கு காரணசக்தி தேவையாகவிருந்தது. அந்த சக்தியின் பலத்தினால் மஹத் என்று சொல்லப்படும் அஹங்காரத்தையும், பிரகிருதி மனஸ், இச்சை, இந்திரியங்கள், இந்திரியங்களின் தேவதைகள், ஹரி, சம்பு இந்திரன், விபாவஸு, சந்திரன், சூர்யன், யமன், த்வஷ்டா, வருணன், வாயு முதலிய தேவதைகளையும் உண்டு பண்ணினீர். எல்லா ஸ்ருஷ்டிகளும் உண்டாயின. பிறகு சேஷன், கூர்மம், திக்கஜங்கள் இன்னும் உங்கள் ஆக்ஞைக்கு உட்பட்ட சமர்த்தர்களான இதர தேவதைகள், பலவகை ஜாதிகள் எல்லாம் உண்டாயின. இவ்வளவு ஸ்ருஷ்டி ஆன பின்பும், உன்னை ஒருவன் என்றும், அத்விதீயம், ஸநாதனம், பிரம்ம நித்யம் என்று சொல்லுகிறார்கள். த்வைத பாவத்துடன்

வந்தவர்களுக்கு எப்படி பெரிய தீபமானது சாயையுடன் விளங்குகிறதோ, காலத்தின் போக்கில் நீ பேதமாக காணப் படுகிருய். அதுமாதிரி உன் பிரும்ம ஸ்வரூபத்தை ஸ்திரி யாகவோ, புருஷஞகவோ, நபும்ஸமாகவோ தோன்றிவித்தும் மறைக்கிருய். உன்னையே புத்தி என்றும், ஸ்ரீ என்று சொல்லப் படும் லக்ஷ்மி, த்ருதி க்ருதி, சிரத்தை, மேதை, தயை, லஜ்ஜை க்ஷீதா, திருஷ்ணி, க்ஷமை என்றும் பலவிதமாகச் சொல்லு கிருர்கள். உன்னையே சக்தி என்றும், அசக்தி என்றும் சொல்லு கிருர்கள். இவ்விதமாக உன்னைத் தெரிந்தும், கர்மாக்களுடன் பூஜித்தும் ஞானத்துடனும் பக்தியுடனும் நீயே பெரும் தனம் என்று உன்னை நான் அறிந்து சரணமடைகிறேன். ராமா, ரமாபதி, உமாபதி, நாராயணு, என்னைக் காப்பாற்று.]

நாரதரும் இவ்விதம் சொல்லிவிட்டு பிரும்மலோகத்திற்கு சென்றுவிட்டார். பின்னுல் நடந்த சமாசாரங்களையும் சொல்லு கிறேன். மேனுதேவி தன் பதியினிடம் வந்து ஏகாந்தத்தில் சொல்ல ஆரம்பித்தாள். "நாரதர் முனிவர் சொல்லிய வசனங் களின் அர்த்தம் எனக்குப் புரியவில்லை. விவரமாகச் சொல்ல வேண்டும்" என்ருள். (415)

"என் கன்னிகைக்கு அனுகூலமான வீடு, வரன், குலம் உத்தமமாக இருக்கும் பக்ஷத்தில் விவாஹம் செய்யுங்கள். இல்லை என்ருல் என் குமாரி கன்னிகையாகவே இருக்கட்டும். ஹே ஸ்வாமி, பார்வதி எனக்கு பிராணனுக்குச் சமமான அன் புடையவள்." (416)

"பார்வதி தேவிக்குத் தகுந்த யோக்யமான வரன் கிடைக் காத பக்ஷத்தில் எல்லா ஜனங்களும் பர்வதத்தின் ஸ்வபாவமான கடினத்தனம் கொண்டவன், கடினமானவன் என்று உம்மைச் சொல்வார்கள். இந்த வார்த்தைகளை ஞாபகம் கொண்டு விவாஹம் செய்ய ஏற்பாடு செய்யுங்கள். பிற்பாடு ஹ்ருதயத்தில் ஸந்தாபம் ஏற்படக்கூடாது." (417)

இவ்விதமாக சொல்லிவிட்டு அவள் பர்வதராஜனின் பாதங் களில் தன்தலையால் நமஸ்கரித்து கீழே உட்கார்ந்தாள். அப் போது பிரேமையினுல் பர்வதராஜன் சொன்னுர். "நாம் விரும்பினுலும் சந்திரனிடம் அக்னிசம்பவிக்குமா? நாரத ருடைய வசனங்கள் ஒருக்காலும் பொய்யாகமாட்டா." (418)

"ஹே பிரியே, எல்லாக் கவலைகளையும் விட்டுவிட்டு ஸ்ரீயின் பகவானுகிற நாராயணரை ஸ்மரணை செய். பார்வதியை எவர்

படைத்தாரோ, அவரே அவளை கல்யாணம் செய்துவைப்பார்.'' (419)

"உன்புத்ரியிடம் அன்பு அதிகமாகவிருப்பதால், நான் சொல்வதைச் செய். உன் பெண்ணுடைய சமீபம் சென்று அவளுக்கு மஹேசர் கணவராக வரும்படி அவளை அப்படிப்பட்ட தபஸ் செய்வதற்கு, உபதேசம் பண்ணு. வேறு ஒரு உபாயத்தாலும் இந்த க்லேசம் தணியாது.'' (420)

[தியானம்

ஹே ராமா ஜானகி, தேவி உமா, சம்போ, உங்கள் கிருபை எனக்கு எயபோது கிடைக்கும்? முன்பு ஒரு காலத்தில் நீ மஹாலக்ஷ்மி, மஹாசரஸ்வதி, மஹாகாளி என்று ரூபங்களாகவும், மஹாவிஷ்ணு, பிரும்மா, ருத்ரர் என்று மூன்று குணங்களின் விளக்கமாகவும் ஆவிர்பவித்து ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்கிற தொழில்களுக்குக் காரிய சக்தியாக விளங்கினாய். ஆதி நாராயணருக்கு வாக்பீஜம் காமபீஜம் மாயாபீஜம் முதலிய மந்திரக்கூட்டங்களாய்த் தோன்றி திரிகுணத்தால் செய்ய வேண்டிய காரிய ஹேதுவாகவிருந்தாய். சைதன்யமாக ஸர்வபூதங்களிலும் விளங்குகிறாய். பரா என்றும் தேஜஸ் என்றும் நித்யம் என்றும் நாலுவிதமான பாவங்களால் விளங்குகிறாய். அப்பேற்பட்ட சர்வ சக்தி ரூபமாகவிருக்கும் உன்னை நான் நமஸ்கரிக்கிறேன்.]

"(நாரதருடைய வசனங்களுக்கு ஏற்ப) காரண வஸ்துவாகவும் குணங்களின் அழகான சேர்க்கை பொக்கிஷமாக சிவன் விளங்குகிறார். விசாரங்களை விட்டுவிட்டு நிஷ்களங்கமான மனத்துடன் பகவான் சிவனிடம் அவளை சரணமடையச் சொல்.'' (421)

பதியினுடைய வசனங்களைக் கேட்டு மனத்தில் சந்தோஷமடைந்து, பார்வதியினிடம் மேனா சென்றாள், "பார்வதி" என்று அழைத்தாள். அவள் கண்களில் நீர் பொங்கிற்று. பிரேமையுடன் கலந்தது அவள் மனம். தன் புத்ரியை மடியில் உட்காரவைத்துக்கொண்டாள். (422)

அடிக்கடி அடிக்கடி ஹ்ருதயத்தில் அவளைத் தழுவிக்கொண்டாள். ஆனந்தத்தால் அவள் தொண்டை தழுதழுத்து, ஒன்றும் பேசமுடியாமல் தவித்தாள். ஜகன்மாதாவான பவானி ஸர்வக்ஞையானபடியால் எல்லாம் புரிந்துகொண்டாள். தன் மாதாவை ஆஸ்வாசப்படுத்தி சுகத்தைத்தர விரும்பும் கோமளமான குரலில் சொல்ல ஆரம்பித்தாள். (423)

"அம்மா, உன் கவலைகளைப் பற்றி எனக்குத் தெரியும். நான் ஒரு ஸ்வப்பனம் கண்டேன். அழகானவரும் சிகப்பு நிறமுள்ளவரும் ஒரு கௌரவமான பிராம்மணன் எனக்கு ஸ்ரேஷ்டமான மந்திரத்தை உபதேசம் செய்தார். ஸ்வப்னத்தில் அவர் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார்." (424)

"ஹே பார்வதி, நாரதரால் சொல்லப்பட்டன யாவும் சத்யம் என்று எண்ணி நீ தபஸ் செய். அதன் பலனாக உன் தாயார் தகப்பனார் யாவருக்கும் நன்மை பயக்கும். தபஸ்ஸானது சுகத்தைத் தரக்கூடிது. துக்கத்தின் தோஷங்களை நாசம் செய்யக்கூடியது." (425)

"தபஸ்ஸின் பலனாய் பிரும்மா சகல சம்சாரத்தைப் படைத்தார். தவத்தின் பலனாக விஷ்ணு சகலசராசரங்களையும் காப்பாற்றி ஹிதம் செய்கிறார். தவத்தின் பலனால் சம்புவானவர் ருத்ர ரூபியாகி சகல ஜகத்தையும் ஸம்ஹாரம் செய்கிறார். தவத்தின் பலனால் சேஷனாகிய அனந்தன் பிருத்வியைத் தூக்குகிறான். (426)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, உன் சக்தியின் ஸ்வரூபங்களை யாரால் வர்ணிக்க முடியும்! உலகத்தில் ஒவ்வொரு ஸ்திரியின் ஸ்வருபத்தால் மேன்மை அடைந்த பத்னிகளான மஹாலக்ஷ்மி மஹாகாளி, மஹாசரஸ்வதி இன்னும் தேவர்கள் நாகர்கள், மானிடர்கள், ரிஷிகள் ரிஷிபத்னிகள், இவர்கள் மூலம் உன் கீர்த்தி புகழ்களை அறிய முடிகின்றது. உன்னை ஸர்வ வித்யையாகவும், ஸர்வ தீர்த்தங்களாகவும், ஸர்வ சித்திகளாகவும், பிரும்மாவின் பிரியையான ஸாவித்திரி காயத்ரி என்றும், ஸநாதனி என்றும், ராஜ்யலக்ஷ்மி என்றும், கோலோகவாஸினி என்றும், மங்கள சண்டிகா என்றும், ஷஷ்டி முதலிய தேவதைகள் என்றும், இனி என்ன என்ன வஸ்துக்கள் உண்டோ அந்த ஸ்வரூபங்களாக உன்னை வர்ணிக்கிறார்கள். நீ புண்ணிய பத்னியை கொடுப்பவள் என்றும், புண்யவான்களால் மாத்திரம் பூஜை செய்யப்படுகிற வளாகவும், ஸ்தூல சூக்ஷ்ம ரூபங்களால் அறியப்படுகிறவளாக மிருக்கிறாய். உன்னை நாராயணரின் பிரியத்தைச் சம்பாதிப்ப தற்கு சதா நான் பூஜை செய்கிறேன். பிருகிருதி ஸ்வரூபமா யுள்ள மஹாலக்ஷ்மி மஹாவிபூதியே, உன்னை நான் நமஸ்கரிக் கிறேன்.]

"ஹே, பவானி, எல்லா ஸ்ருஷ்டியும் தவத்தின் ஆதாரத்தால் விளங்குகிறது. இம்மாதிரி நீ உணர்ந்து தபஸ் பண்ணு." என்று கூறிமுடித்தாள். கிரிஜாவின் வசனங்களைக் கேட்டு மேனுவுக்கு ஒரு பக்கம் சந்தோஷமும் ஆச்சர்யமாகவுமிருந்தது. தன் கணவனுன ஹிமவானைக் கூப்பிட்டு, எல்லா ஸ்வப்ன விருத்தாந்தங்களையும் சொன்னுள். (427)

தன் மாதாபிதாக்களைப் பல விதமாக ஆஸ்வாஸப்படுத்தி விட்டு, மிக்க உத்ஸாஹத்துடன் பார்வதிதேவி தபஸ் செய்வதற்குச் சென்றுள். ரொம்ப அன்பு படைவத்தவர்களான தாய் தந்தையர்கள் வியாகுலம் அடைந்து பயத்திஞல் யாரிடமும் ஒன்றும் பேசவில்லை. (428)

அந்த சமயம் வேத சிரஸ் என்கிற ரிஷி ஒருவர் வந்தார். அவர் பார்வதி தேவியின் பெருமைகளை எடுத்துரைத்தார். இதைக் கேட்டதும் எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். (429)

பிராணபதியான சிவனை மனஸில் தாரணை செய்துகொண்டு உமாதேவியானவள் வனத்திற்குச் சென்று தபஸ் பண்ண ஆரம்பித்தாள். அத்யந்த சுகுமார சரீரத்தை உடைய கிரிஜா தேவியானவள் தவத்திற்கு யோக்கியதை இல்லாத தன் மனோஹரமான தேகத்தைப் பதியின் சரண கமலங்களில் அர்ப்பித்துப் போகங்களைத் தியாகம் செய்துவிட்டு தபஸ் செய்ய ஆரம்பித்தாள். (430)

தினந்தோறும் உமையின் பக்தி வளர்ந்தது. அவள் புது அனுபவங்களைக் கண்டாள். அவள் தன் தபஸில் ஏகாக்ர பக்தியுடன் ஈடுபட்டு, தேகத்தின் நளினங்களை புறக்கணித்து, தபஸ் செய்ய ஆரம்பித்தாள். ஒரு ஆயிர வர்ஷங்கள் கந்த மூலம் பழங்கள் சாப்பிட்டு, பிறகு நூறு வர்ஷங்கள் இலைகளையே சாப்பிட்டு காலத்தைத் தபஸ்ஸில் கழித்தாள். (431)

சில தினங்கள் ஜலம், வாயு பக்ஷணம் பண்ணி தபஸ் செய்தாள். சில தினங்கள் கடோரமான உபவாஸமிருந்தாள். சில தினங்கள் பூமியில் விழுந்த உலர்ந்த இலைகளைச் சாப்பிட்டாள். இவ்விதம் மூவாயிரம் வர்ஷங்கள் தபஸ்ஸில் கழித்தாள். (432)

[தியானம்

ஹே உமா உனக்கும் உன் பதியான ஈஸானருக்கும் நமஸ்காரம். நாராயணு, லக்ஷ்மி உங்களுக்கு நமஸ்காரம். ராமா ஜானகி உங்களுக்கு நமஸ்காரம். முன்பு ஒரு காலத்தில் தண்டியிஞல் உபதேசிக்கப்பட்ட உபமன்யு ரிஷி, பகவான்

கிருஷ்ணருக்குச் சிவமகிமையை எடுத்துச் சொன்னார். அப்போது யுதிஷ்டிரரும் சிவனுடைய மகிமையால் ஆகர்ஷிக்கப்பட்டு வைசம்பாயனிரிடம் பல ரிஷிகளின் வாக்யங்களைக் கேட்டார். ஜைகீஷவ்யர், கர்க்கர், பராசரர், ஆணிமாண்டவ்யர், மார்க்கண்டேயர், காலவர் முதலிய பல மஹரிஷிகள் சிவ ஸ்தவராஜம் என்கிற சிவனுடைய பெருமைகளைச் சொன்னார்கள். அதனால் மயிர்க்கூச்சல் ஏற்பட்ட பகவான் நாராயண அம்சரான கிருஷ்ணரும் சிவனைப் பலவித ஸ்தோத்ரங்களால் ஆராதித்தார். ஆதித்ய சந்திர அக்னியாகிற மூன்று நேத்ரங்கள் உள்ள ஈசானரே, ஆகாயம் பூமி ஜலம், விஸ்வமான பூமண்டலங்கள், ஆகாய மண்டலங்கள் முதலியவைகளை காப்பாற்றுகிறவரே, யமன், சுக்ரர், பிரஹஸ்பதி ஏகாதசருத்ரர்கள், ஸாத்யர்கள், வருணர், கோலோகத்தில் இருப்பவர்கள், பிரம்மா இந்திரன் மருத்துக்கள், ஸத்யமான வேதவாக்கியங்கள், யாகம், தக்ஷிணை, வேத அங்கங்கள், ஸோமம், ஹவ்யம், கவ்யம், ஹவிஸ்தீக்ஷை, இன்னும் அநேக விதமான கணக்கற்ற வஸ்துக்களாகவும் காரியங்களாகவுமிருக்கும் ருத்ரருக்கு நமஸ்காரம். இவ்விதம் இந்திரியங்களை அடக்கி, சுசியாகவிருந்து மஹேஸ்வரருடைய பிரசாதத்தை அடைந்து ஸர்வதோஷங்களைப் போக்குவதற்காக உமாமஹேஸ்வரரை கிருஷ்ணர் பூஜித்தாராமே. அப்பேற்பட்ட அம்பிகை சகிதரான ஈஸானரை நான் சரணமடைகிறேன். எனக்கு லக்ஷ்மி நாராயணன் அருள் செய்வாராக. ஹே, உமா மஹேஸ்வரர்களே, நீங்களே என் தெய்வம்; என் குரு; என் சந்தோஷங்கள் ; என் துக்கங்கள் ; உங்களுக்கே என் வாழ்க்கை அர்ப்பணம். ஸர்வ ஹீனனை என்னை ரஷிக்கவேண்டும். ராமா சீதா, இவர்கள் என் மனதில் எப்பொழுதும் பிரகாசிக்கட்டும்.]

காய்ந்த இலைகளைச் சாப்பிடுவததையும் பார்வதிதேவி விட்டு விட்டாள். அவளுடைய மனது ஏகாந்த பாவனையில் பகவான் சம்புவினிடம் சேர்ந்தது. அன்றிலிருந்து அவள் "அபர்ணா" என்கிற பெயரைப் பெற்றாள். தவத்தினால் வாட்டப் பட்ட சரீரத்தை உடைய உமையைக்கண்டு ஆகாசத்தில் கம்பிர மான பிரம்மவாணி உண்டாயிற்று. (433)

"ஹே பர்வத ராஜகுமாரியே, கேள். உன்னுடைய மனோ ரதம் பூர்த்தி அடையும். கவலைப்படதே. உன் காயச்லேசங் களை விட்டுவிடு. உனக்குத் திரிபுராரி கிடைப்பார்." (434)

"ஹே பவானி, தீரர்களான புருஷர்கள் பரம ஏகாந்திகளான முனிவர்கள், ஞானிகள் பல பேர்கள் இருக்கின்றனர். ஆனால்

இவ்வளவு கடோரமான தபஸ் யாராலும் செய்யப்படவில்லை. இப்போது இந்த சகல ஸ்ரேஷ்டமான பிரும்மாவின் குரலை, ஸதாசத்யம், நிரந்தரமான சுசியுள்ளது என்று அறிந்து, (435)

உன் பிதாவான ஹிமவான் உன்னை அழைக்கவரும்போது அந்தச் சமயம் தபஸ்ஸை விட்டுவிட்டு வீட்டிற்குபோ. எப்போது உன்னிடம் சப்தரிஷிகள் வருவார்களோ, அப்போது பிரும் மாவின் வரம் பலித்ததற்குப் பிரமாணம் என்று அறிந்து கொள்''. (436)

ஆகாயத்திலிருந்து இந்த விதமாக பிரும்மாவின் வசனங் களைக் கேட்டாள் பார்வதி. அவளுடைய மனம் பிரசன்னமாகி விட்டது. மிக்க சந்தோஷத்துடன் இருந்த அவள் சரீரம் புளகாங்கித மடைந்தது. பரம ரிஷியான யாகிஞ்யவல்கியர் பரத்வாஜ முனியைப் பார்த்து ''என்னல் மிக்க அழகான பார்வதிதேவியின் கதை உமக்குச் சொல்லப்பட்டது. இப்போது சுகத்தைரும் சம்புவின் கதையைக் கேளும்'' (437)

[தியானம்

ஹே ராமா, நீ என் குலதெய்வம். உன்னையே நான் நம்பி யிருக்றேன். உமையின் அந்தரங்கமான ஆத்மிக தைவம் நீ அல்லவா? உன் அழகை மன்மதன் கூட வர்ணிக்க முடியாது. கமனீய வதனம் தாமரை இதழ்போன்ற லோசனங்கள். கருணை நிரம்பிய பாவம். ஸாமாதி வேதங்களின் சாரம். உன் ஹிருதய மும் உன் சிரிப்பும், அழகிய கன்னப்பிரதேசமும் என் மனத்தை அபஹரிக்கின்றன. உன்முகம் அப்போது அலர்ந்த தாமரஸப் பூ. உன்னுடைய கனகேயூர பூஷணங்கள் அபாரம். இந்திரனுடைய பூஷணங்களைவிடச் சிறந்தவை. உன் பக்கத்தில் இருக்கும் ஜானகியோ மனேரமை. வீரத்தினல் சம்பாதிக்கப்பட்ட சுக ஜனரஞ்சிதம். உங்களைச் சுற்றியிருக்கும் உன் தம்பிமார்களும், தாய்மார்களும் மகரிஷி சித்தஜனங்களும் வேதத்தின் த்வனிகள். உங்கள் அழகு, கம்பீர்யம், துஷ்டர்களை சிக்ஷிக்கும் தீர்க்க கைகள், மஹரிஷிகளை வலுவில் அனுகிர ஹிக்கச்சென்ற பாதசர ணங்கள் என் பக்தியை வளர்க்கும் சஞ்சீவினிகள். ராஜ ராஜாக்களால் வணங்கப்பட்ட ரகு குலவீரா, உன்னை நினைத்தால் என் தினம் சுகமாக கழிந்தது மாதிரி. உன் செய்கைகளை நினைத்தால் என்னை ஸ்ரீகரனகச் செய்கிறது. உங்களை ஸ்தோத் திரம் செய்தால் என் கோடிக்கணக்கான ஜன்மங்கள் பலிதமடை கின்றன. உங்களுடைய கோமளமான பாதங்களை, ஆஞ்சநேயர்

மிருதுவாக வருடும் பாதபத்மங்களை நாரதர் தியாகராஜர் கீர்த்தனங்களால் பாடிப் புகழ்ந்துள்ளார்கள். உங்கள் பதகமலங்களை என் ஹிருதயத்தில் தாரணை பண்ணுவதால், எனக்கு உமையின் ப்ரீதியும் சம்புவின் காருண்யமும், நாராயணரின் பரம ப்ரீதியும் கிடைக்கிறது. மஹாலக்ஷ்மியும் என் மீது பிரியமடைகிருள். அப்பேற்பட்ட ரகுகுல ராமா, ஜானகி ராமா, என்னை நீதான் ஆட்கொள்ள வேண்டும்.]

[தியானம்

பிரபுவே, அகோசரமானவரே, ரதந்திரம், சதருத்ரீயம், மஹாத்மாவான வேதவியாஸரால் கல்பிக்கப்பட்ட ஜேஷ்ட சாமம் முதலிய வாக்யங்களால் புகழப்பட்டவரும், ஐஸ்வர்யம், காமம், மஹத்தான புண்ய பலம், மூன்று லோகங்களின் சுப அசுபங்கள், ஆகிய பல ரூபங்களால் இந்த விஸ்வத்தில் வியாபிக்கப்பட்டவருமான மஹேஸ்வரரை நான் மஹாபயத்துடன் சரணம் அடைகிறேன். ஏகாக்ஷம் என்றும், ருத்ரர், திரியம்பகர், மஹாதேவர், ஸ்தாணுசிவன் ஆகிற ரூபங்களால் மஹரிஷிகள் மஹாத்மாவான மஹேஸ்வரரைத் துதிக்கிருர்கள். உக்ரமானதும், கோரமானதும் கோடி சூரியர்கள் போன்ற தேஜஸ் உள்ளதும், சமுத்திரத்தின் வடவாமுகம் என்கிற அக்னி போன்ற முகத்தையும் நான் பூஜிக்கிறேன். தன்னை ஆத்மா ராமனுக நினைத்து, ஸோமாஸ்கந்தர் என்கிற சந்திர மௌளியை நான் நமஸ்கரிக்கிறேன். பிரும்மசர்யத்துடனும், ஸம்ஹாரகாலத்தில் ஈஸ்வரராக நினைக்கப்படும் மஹேஸ்வரரை ருத்ரரென்று நான் பூஜிக்கிறேன். தேவகாரியங்களைச் சாதித்து லோகத்திற்கு ஹிதம் செய்யும் மஹாதேவ மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். புகை ரூபத்துடனும், ஜடாதாரியும் ஸகலகர்ம சாக்ஷியும், மனிதர்களுக்கு நன்மை செய்யும் சிவ மூர்த்தியை நான் நமஸ்கரிக்கிறேன். ஊர்த்வரேதஸாக, பிராணன்களைக் காப்பாற்றி நித்யமாக யோக க்ஷேமங்களைச் செய்யும் ஸ்தாணு மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். ஆயிரம் கண்கள் உள்ளவரும் ஆயிரம் கைகள் உள்ளவரும், மனிதர்களால் பார்க்க முடியாதவரும், எப்போதும் பசுக்களுடன் ரமித்துக்கொண்டிருப்பவரும், பசுக்கள் என்கிற ஜீவாத்மாக்களை காப்பாற்றுகிற பசுபதியை நமஸ்கரிக்கிறேன். நித்ய பிரம்ம சர்யத்தால் விளங்கும் தேஜஸ்ஸுடன் ஸ்திரமாயிருக்கும் லிங்க மூர்த்தியை நான் நமஸ்கரிக்கிறேன். பக்தர்களுக்கு ஹிதத்தைத்தரும் ப்ரீத மூர்த்தியை நான் நமஸ்கரிக்கிறேன். அர்ஜுனனுல் தபஸ்

செய்யப்பட்டு யுத்தத்தில் சந்தோஷமடைந்த உமாபதியை நமஸ்கரிக்கிறேன். வீரர்கள் விரும்பும் வீரஸ்தானத்தை அளிக்கும் ஸ்மசான வாசியை நமஸ்கரிக்கிறேன். சச்சிதானந்த மாக விளங்கும் உமாரமணனை வணங்குகிறேன். விநாயகரையும் குமரனையும் பெற்ற தாய்தந்தையர்களை நான் வணங்குகிறேன். மஹத்தான ஈஸ்வரர் உமையுடன் கூடியவர் வாசுதேவபக்தனாகிய என்னை கிருபையுடன் அநுகிரஹிக்க வேண்டும்.]

சதிதேவியினால் சரீரம் தியாகம் செய்யப்பட்ட கதையைக் கேட்டதிலிருந்து பகவான் சம்புவுக்கு மஹத்தான வைராக்யம் மேலிட்டது. அவர் சதா ரகுநாதனின் நாமத்தை ஜபம் பண்ண ஆரம்பித்தார். பகவான் ராமசந்திர மூர்த்தியின் குணங்களை ஆதாரமாகக் கொண்ட கதைகளைக் கேட்க ஆரம்பித்தார். (438)

சித்தத்திற்கு ஆனந்தத்தைத் தருபவரும், சுகத்தை வாரி அளிப்பவரும், மோஹம், மதம், காமம் முதலிய குணங்கள் ரஹிதருமான சிவன் சம்பூர்ண லோகத்திற்கு ஸதா ஆனந்தத்தை அளிக்கும் ஹரியை தன் ஹிருதய புண்டரத்தில் தரித்துக்கொண்டு அபிராமியாக பூமியில் சஞ்சரித்தார். (439)

அவர் சில இடங்களில் முனிவர்களுக்கு ஞான உபதேசங் களைச் செய்தார். இன்னும் சில இடங்களில் அவர் ராமச்சந்திர மூர்த்தியின் குணவர்ணனைகளைப் பாடி ஆனந்தித்தார். அவ் விதம் காம மற்ற சம்பு நிஷ்காமத்துடன் பூமியில் சஞ்சரித்த போதிலும், தன் பக்தையான சதிதேவியின் வியோகத்தால் மிக்க துக்கமடைந்து மனச்சோர்வையும் அடைந்தார். (440)

இந்த விதமாக காலம் வெகு வேகமாகச் சென்றுகொண்டி ருந்தது. நாளுக்கு நாள் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி யினிடமுள்ள பக்தி வளர்ந்தது. அவருடைய கடோரமான நியமம், அனன்ய பிரேமை, அவருடைய ஹிருதயத்தில் உள்ள ஆழ்ந்த சம்பூர்ண மான ராம பக்தி ஆகியவைகளை ஸ்ரீராமன் கவனிக்க ஆரம் பித்தார். (441)

(ஒரு தடவை கை கூப்பினால் பக்தர்களை ''இவன் கிருதிக்ஞன்,'' ''இவனுக்கு நாம் என்ன உபகாரம் செய்தாலும் போதாது,'' என்று மனம்நோகவாடும்) அபாரகிருபாளு, மனோஹரமான ரூபத்துடன் கூடியவர், சீலத்திற்கே பொக்கிஷம், மஹாத்மா, பெரிய தேஜஸ்ஸீகளுடன் விளங்கும் பகவான் ஸ்ரீராமசந்தின் சம்புவின் எதிரே பல தடவைகள் தோன்றினார். அநேக விதமாக சிவனுடைய விரஹதாபங்களை போக்கினார். சிவனைப் பார்த்து ''உம்மைத் தவிர இவ்வளவு விரஹதாபத்

துடன் கோரமான விரதத்தை யார் செய்ய முடியும்?'' என்று தேற்றினர். (442)

[தியானம்

ஜானகிராமா, ஜனர்த்தனரே, நர நாராயணரே, முன்பு ஒரு காலத்தில் கந்தமாதன பர்வதத்தில் பதினயிரவர்ஷங்கள் ஆத்மா ராமனாக நாராயண ரிஷியாகிய நீர் நரருடன் தர்மருக்குப் புத்திர ராக அவதரித்து கடோரமான தபஸ் செய்தீர். பின்பு, அவர் புஷ்கர க்ஷேத்ரத்தில் பதினயிரத்து நூறு வர்ஷங்கள் ஜலத்தை மாத்திரம் சாப்பிட்டுவிட்டு நீர் தபஸ் செய்தார். பிரபோ, பிறகு பதரிகாஸ்ரமத்தில் விசாலே என்று சொல்லப்படும் இடத்தில் ஏகபாதத்துடன் வாயு பக்ஷணம் செய்து மது சூதனராகிய நீர் தபஸ் செய்தீர். பிறகு கிருஷ்ணராக அவதரித்து ஸரஸ்வதி நதி தீரத்தில் பன்னிரண்டு வர்ஷங்களும், பிரபாஸம் என்கிற புண்ணிய தீர்த்தத்தில் ஆயிரம் வர்ஷங்களும் நீர் தபஸ் பண்ணினீர். இவ்விதமாக லோக அபிவிருத்திக்காக தபஸ் செய்து சகல விஸ்வங்களையும் வளரச்செய்தீர் என்று வேத வியாஸர் சொல்லியிருக்கிறர். பிரபோ நீரே க்ஷேத்ரக்ஞர். ஸர்வ பூதங்களுக்கும் ஆதி அந்தமாக விளங்குகிறீர். கேசவா, நீர்தான் ஸனதனர். யக்ஞம் தபஸ் முதலியவைகளுக்கு இருப்பிடம். ஸத்ய லோகங்களையும் ஸ்ருஷ்டித்து தைத்ய தானவர்களை ஜயித்து ஸர்வேஸ்வரபதத்தை சசி பதியான இந்திர னுக்குக் கொடுத்து, கிருஷ்ணராகவும், ராமராகவும் மானிட பூமியில் அவதரித்தீர். நீரே நாராயணர். ஹரி என்னும் பரம தபஸ்ஸின் பொருள் என்றும், பிரும்மா, சோமன், சூரியன், தர்மர், தாதா, யமன், அனலன், வாயு வைஸ்ரவணன், ருத்ரர் காலர், பிருத்வி, திசைகள், சராசரங்களின் குரு, ஸ்ருஷ்டிகர்த்தா, புருஷோத்தமர் என்றும் சொல்லப்படுகிறீர். உம்மை நான் கண்டு ஆராதித்து, நான் செய்யும் தபஸ்ஸுகள், காரிய காரணங்கள் என்றும், புண்டரீகாக்ஷர் என்றும், கைலாஸபதியான சிவனுக்குப் பிரியர், என்றும் பிராம்மண வசனங்களால் துதிக்கிறேன். நரருடனும் மஹாலக்ஷ்மியுடனும்கூட நீர், என்னிடம் கருணையுடன் இருக்கவேண்டும். அனன்ய பாவத்துடனும் என்னுடைய பரமா கதி என்றும், உம்மை விபரமாக அறியா முடியாதவனகவும் சரணம் அடைகிறேன்.]

ஸ்ரீ ராமச்சந்திரன் பல பிரகாரமாக சிவனை ஆஸ்வாசப் படுத்தினர். பார்வதிதேவியின் ஜன்ம விருத்தாந்தங்களைச்

சொன்னுர். கிருபாநிதி ஸ்ரீராமச்சந்திரன் கிரிஜாவின் பவித்திர மான தபஸ்ஸின் பெருமைகளைச் சொன்னுர். (443)

பிறகு சிவனிடம் சொன்னுர் "ஹே சிவபெருமானே, என்னிடம் உமக்கு பூர்ணமான ஸ்நேகம் இருக்கும் பக்ஷத்தில் என்வார்த்தைகளைக் கேளும். எனக்குச் சந்தோஷத்தைச் செய்யக் கருதி, நீர் பார்வதியிடம் சென்று அவளை விவாஹம் செய்து கொள்ளும்." (444)

சிவன் சொன்னுர். "நானுகப் போவது அனுசிதமாக விருந்தாலும், ஸ்வாமியான உம்முடைய வார்த்தையை நான் தட்டமாட்டேன். ஹே நாதா, என்னுடைய தர்மம் என்ன வென்ருல் உம்முடைய ஆக்ஞையை என் தலையின்மேல் வைத்து பரமதர்மமாகச் செய்வேன். என்னுடைய நாதர் நீர் அல்லவா?" (445)

"மாதா, பிதா, குரு, ஸ்வாமியின் வார்த்தைகளை ஒரு யோசனையும் செய்யாமல் சுபம் என்று நினைத்துச் செய்யவேண் டும். இன்றும் என்றும் எல்லா பிரகாரத்திலும் எனக்கு நீர் ஹிதகாரி. உமது கட்டளை என் தலைமேல் இருக்கிறது." (446)

பகவான் சங்கரருடைய பக்திபூர்வமான வசனங்களைக் கேட்டார். பிரபு ராமச்சந்திரன் ஞானத்துடனும், விவேகத் துடனும், தர்மத்துடனும் கூடி விளங்கும் வசனங்களை ஸ்ரீ ராமன் கேட்டார். பிறகு சந்தோஷத்தால் சொல்ல ஆரம்பித்தார் "ஹே ஹரரே, உம்முடைய பிரதிக்ஞை சம்பூர்ணமாகிவிட்டது. நான் உம்மிடம் என்ன சொன்னேனே, அதை உம்முடைய ஹ்ருதயத்தில் பொக்கிஷமாக வைத்துக்கொள்ளவும்." (447)

[தியானம்

பகவான் நாராயணரே, உம்மை மனுஷனுக பிறந்த ஒவ்வொரு வரும் ஆராதிக்கவேண்டும். உம்மை ஆராதித்தால் விரும்புவது யாவும் கிடைக்கும். மோக்ஷபதமும் கிடைத்துவிடும். இன்னும் கிடைக்கக்கூடாத பதங்கள் என்று ஒன்றும் இருக்க முடியாது. ஹே அச்சுதா, உம்மைச் சரணமடைந்து பூஜிக்கிறவன் அவன் செய்யும் கர்மாக்களின் பூர்ண பலனையும் உம்முடைய அன்பையும் அடைகிருன். வர்ணுஸ்ரம தர்மத்தில் பரமபுருஷனுகிய உம்மை ஆராதித்தால் நீர் சீக்கிரமாக சந்தோஷமடைகிறீர். யாகம், தக்ஷிணை இவைகளால் உம்மை ஹரி என்று பூஜித்தால் யக்ஞ புருஷனுக நீர் அனுக்ரஹிக்கிறீர். ஸதாசாரத்துடன் உம்மை ஜனுர்த்தனராக ஆராதித்தால் நீர் சந்தோஷப்படுகிறீர். பிறரை

அபவாதம் செய்யாமலும் ஸதாஉண்மை பேசுகிறதினுலும், பிறர் அடையும் துக்கங்களில் அனுதாபப்படுகிறவர்களாகவும், இன்சொல் சொல்லுகிற உத்தமர்களிடம் கேசவராக நீர் சந்தோஷப்படுகிறீர். பரஸ்திரியை விலக்குபவனும், தனத்தை ஹிம்ஸையில்லாமல் சம்பாதிக்கிறவர்களும், அஹிம்சையைக் கைப்பற்றினவர்களும், தேவர்களேயும் மனிதர்களேயும் பூஜிக்கிற வர்களிடம் கோவிந்தனுக நீர் சந்தோஷமடைகிறீர் ஸர்வ பூதங்களிடமும் கருணையும் தயையுடனும் அனுதாபத்துடனும் ராகத்வேஷங்கள் இல்லாமல் விசுத்த ஆத்மாவாக அன்புடன் நடப்பவர்களிடம் நீர் விஷ்ணுபகவானுக அனுக்ரஹிக்கிறீர். சாஸ்த்ரம், தர்மங்களேப் பரிபாலிப்பது, வர்ணுஸ்ரம தர்மங்களே ஆசரணம் பண்ணுவதால், நீர் ஹரியாக சந்தோஷப்படுகிறீர். இவ்விதம் முன்பு ஒரு காலத்தில் ஔரவரால் உபதேசிக்கப்பட்ட சகரன் உம்மை ஆராதித்து உம்மை சந்தோஷப்படுத்தினுர். ஹே ராமா, அப்பேற்பட்ட மகிமை பொருந்திய விஷ்ணுவின் அம்சமான ராமனே நான் சதா ஆஸ்ரயிக்கிறேன். சதா ஆராதிக்கவேண்டும் ]

இந்தவிதமாக பிரபு ராகவனுல் உபதேசிக்கப்பட்ட சம்பு பகவான் ராமச்சந்திரனே ஹ்ருதயத்தில் தாரணே செய்து கொண்டு ஆராதனம் செய்ய ஆரம்பித்தார் அந்த சமயம் ஸப்த ரிஷிகள் அவர்களாகவே சிவபெருமானிடம் வந்தார்கள். பிரபு வான மஹாதேவர் அத்யந்த பிரீதியுடன் அவர்களேப் பூஜித்து வரவேற்ருர். அவர்களிடம் சொன்னுர். '' நீங்கள் பார்வதியிடம் சென்று அவளுடைய பிரேமையைப் பரிக்ஷை செய்யுங்கள். பிறகு ஹிமவானிடம் சென்று பார்வதியை வீட்டிற்கு அழைப்பித்து, அந்த ராஜனுடைய மனசந்தேகங்களேயும் போக்குங்கள் '' (448)

பரமபூஜ்யர்களான சப்தரிஷிகள் கௌரியிடம் சென்று அவளே ஒரே தபஸ் செய்யும் மூர்த்தி மாதிரியாகப் பார்த்தார்கள், அவளிடம் மிருதுவாகச் சொன்னுர்கள். '' சைல ராஜபுத்ரி, எதற்காக இவ்வளவு கடினமான தபஸ் உன்னுல் செய்யப் படுகிறது ?'' என்று கேட்டார்கள். (449)

'' உன்னுல் ஆராதனே செய்யப்படும் தெய்வம் யார் ? உன்னுல் என்ன பலன் வேண்டப்படுகிறது ? எங்களிடம் உன் அந்தரங்க மான ஸத்யவசனங்களேச் சொல்.'' பார்வதி சொன்னுள். '' நான் மனதைவிட்டு வெளியில் சொல்ல லஜ்ஜைப் படுகிறேன். நீங்கள் என்னுடைய பிடிவாதமான செய்கைகளேக் கேட்டு பரிகசிப்பீர்கள்.'' (450)

ஆனால் என் மனதானது ஒரே தீர்மானமாக விருக்கிறது. பிறர் உபதேசங்களால் என்மனம் மாறுபடாது. ஜலத்தின்மேல் எழும்பின சுவர் மாதிரி உங்களுக்குத் தோன்றும், நாரதபகவான் சொல்லிய வசனங்கள் சத்தியமானவை, என்று நம்பிச் செய்யும் என் செய்கைகளைப் பார்த்தால் இறக்கைகள் இல்லாமல் பறக்க ஆசைப்படுவது போலத் தோன்றும். (451)

"ஹே முனிவர்களே, என்னுடைய அவிவேகத்தையும் அக்ஞானத்தையும் க்ஷமித்தருளவேண்டும். நான் என் வெட்கத்தை மீறிச் சொல்கிறேன். ஸதா சிவபெருமானை நினைத்து, நான் அவரைப் பதியாக வரிக்க விரும்புகிறேன். நீங்கள் அனுக்ரஹம் பண்ணவேண்டும்." என்று சொல்லி முடித்தாள். (452)

[தியானம்

தேவ தேவ, ஜகத்பிரபு, அவ்யயமான பொருளே, நாராயணா, மகத்தான தபஸ், மகத்தான புண்ணியத்தின் பலனே, கிருஷ்ணா, சதிவர்க்கத்திற்கு, பதிஸௌபாக்யத்தை தினம் தினம் கொடுப்பவரே, ஸகல ஜீவர்களுக்கும் சுகம், கீர்த்தி, தர்மத்தில் நாட்டமுள்ள மனஸ், முதலியவைகளைக் கொடுப்பவரே, உம்முடைய ரூபம் பரம ஸம்பதி. உம்முடைய மூர்த்தி போகத்தை அளிப்பது. சாஸ்வதமான பிரீதியைக் கொடுப்பது. ஹே, ஸ்வாமி உம்மை அண்டினால் பந்து சுகத்தையும் விருத்தியையும் அடையலாம். சத்புத்திரர்களைக் கொடுக்கும் சக்தி உள்ளவரே, உம்மை அண்டினால் சர்வதீர்த்தங்களையும், ஸர்வயக்ஞங்களையும் அவபிருத ஸ்நானத்தையும், தக்ஷிணை என்கிற பலன்களையும் அடையலாம். உம்மைப் பிரதக்ஷணம் செய்தால் ஸகல பிருத்வியையும், பிரதக்ஷணம் செய்தது மாதிரி. ஸர்வ தபஸ்ஸுகளுக்கு இருப்பிடமாகிய நீர் மஹத்தான தானத்தின் பலனாகவும் இருக்கிறீர். ஸர்வ வ்ரதங்களுக்கும், குருஸேவை, விப்ரசேவை, தேவசேவை ஆகிய சத்கர்மங்களின் புண்யபலன்கள் தாங்கள் அல்லவா? உம்முடைய பாத சேவை பரம லௌகிகர்களான கோபிகளின் லக்ஷ்யமாக விருந்ததல்லவா? விஸ்வத்திற்கும், அப்பாலுள்ள கோலோகத்திற்கும் தாங்கள் தானே ஈஸ்வரர். மனுஷ்ய ஸ்வபாவம் மேலிட்ட என்னிடம் குற்றம் குறைகள் காணாதீர். ஐயா உமக்கு என்னிடம் கன்றின் வாத்ஸல்யம் இருக்க வேண்டும். தகப்பன், தாய், குரு, பந்து, சிநேகிதன் எல்லாம் நீர்தானே. என் பரம போக்யமான வஸ்து நீர் அல்லவா?

உம்மிடம் ஏகாந்த பக்தியுடன் வந்தடைந்திருக்கும் என்னிடம் அன்பாயிரும், தயை காட்டும்.]

பரம பாகவதர்களான சப்தரிஷிகள் பார்வதியின் பக்தி ரம்ய மான வசனங்களைக் கேட்டார்கள். சிரித்துக்கொண்டு வசனங் களைச் சொன்னார்கள். "உன்னுடைய சரீரம் ஹிமவான் போன்ற பர்வதத்தினின்று உண்டானது. நீ நன்றாக இருக்கவேண்டும், அம்மா, நாரதருடைய உபதேசத்தைக் கேட்டு இன்றுவரை யாராவது ஸ்திரமாகவும் நிம்மதியாகவும் வீட்டில் இருந்திருக் கிறார்களா? (453)

"தக்ஷனுடைய புத்ரர்களுக்கு அவர் உபதேசம் செய்தார். ஆனால் அவர்கள் வீட்டிற்கே திரும்பிவரவில்லை. சித்ரகேது வினுடைய வீட்டிற்கே நாசம் செய்தார். இதுமாதிரி கதி ஹிரண்ய கசிபுவுக்கும் வந்தது." (454)

"எந்த ஸ்திரி புருஷர்கள் நாரதபகவானுடைய வசனங்களைக் கேட்டு நடந்தார்களோ, அந்த மனுஷ்யர்கள் வீட்டைவிட்டு பிச்சை எடுக்கும் புருஷர்களாகி அலைகிறார்கள். அவருடைய மனம் கபடமுள்ளதாக இருக்கிறதன்றோ? மேலே அவர் சரீரத் தைப் பார்த்தால் சாதுக்களின் சின்னமாக இருக்கிறது. ஆனால் அவர் எல்லோரையும் தனக்குச் சமமாக ஆக்கிவிடுவதற்கு ஆசைப்படுகிறார் அல்லவா"? (455)

"அவருடைய வசனங்களில் பூர்ண விஸ்வாசம் வைத்து நீ விரும்பியபடி சம்புவைப் பதியாக அடைய விரும்புவாயாகில், அவர் எப்படிப்பட்டவரென்று நீ சரியாக புரிந்துகொள்ள வேண்டும். அவர் ஸ்வபாவமாகவே உதாஸீனர், குணஹீனர், லஜ்ஜையில்லாதவர், பார்ப்பதற்கு வெறுக்கும்படியான வேஷ தாரி. நர கபாலங்களை மாலையாக அணிந்திருப்பவர். குலம் தெரியாதவர், வீடு வாசல் இல்லாதவர், பாதி வஸ்திரம் அணிந் தவர், சரீரத்தில் நாக பாசங்களை அணிந்துகொண்டிருப்பவர்." (456)

"இப்பேற்பட்ட வரன் உனக்குப் பதியாக கிடைத்தால் உனக்கு என்ன சுகம் ஏற்படும்? யோசித்துப்பார். அப்பேற் பட்ட கபடமான நாரதருடைய வசனங்களால் நீ ஏமாற்றப் பட்டிருக்கிறாய். முன் காலத்தில் ஜனங்கள் சொன்னதின் பேரில் சிவபெருமான் சதியுடன் விவாஹம் செய்துகொண்டார். ஆனால் என்ன நடந்தது தெரியுமா? அவள் அவரால் விடப்பட்டு, தன் சரீரத்தைத் தியாகம் செய்துகொண்டாள்." (457)

"இப்போது சிவனுடைய நாமத்தை சிந்தை பண்ணுதே. அவர் பிச்சை எடுத்துச் சாப்பிடும் புருஷன். சுகமாகத் தூங்கும், கவலையில்லாத புருஷன். இப்பேற்பட்ட ஸ்வபாவத்துடன் விளங்கும் ஏகாந்திகளின் வாழ்க்கையை நடத்தும் சிவனிடம் என்ன நன்மை உனக்கு அல்லது உன்போன்ற மணமான ஸ்திரிகளுக்கு என்ன கிடைக்கும்." (458)

[தியானம்

ஹே ராமா, தேவ தேவா, புராண புருஷரே, அவ்யயமும் அவ்யக்தமாகவும் இருக்கும் பொருளே, அநாமயமாக விருக்கும் ஸ்வரூபமே, உன் கிருபையும் உன் கருணை நிறைந்த பார்வையும், உன்னை ஆராதனம் செய்யும் பாக்கியமும் அபாரம். உன்னுடைய விஸ்வஸ்ருஷ்டியும், காரண காரியங்களையும், உனக்கே பிரத்யேக மாக ஏற்படும் ஹேது இல்லாமல் நடக்கும் குணவிசேஷங்களும் யாரால் அப்பா வர்ணிக்க முடியும்? சகரன் ஸௌதாஸன், கட்வாங்கன், பரிக்ஷித்து, பராசரர் போன்ற மஹான்களுடைய சரித்திரங்களைப்பார்த்து மனம் ஆறுதலடைகிறதில்லை. உன்னை அனுபவித்தும் என்மனம் திருப்தி அடைகிறதில்லை. உன் சேர்க்கை விசேஷங்களை அனுபவித்தும் என்மனம் உன் குண விசேஷங்களை முழுவதும் ஆகர்ஷிக்கவில்லை. என்பக்தியும் மங்கி காலத்தின் தோஷத்தால் ஜீர்ணமாகிவிடுகிறது. மார்க்கண்டேய மகரிஷியின் உபதேசத்தாலும், சப்தரிஷிகளின் வாக்யத்தாலும், மஹான்களாகிற நாரதர், வியாஸர், பீஷ்மர், தர்மபுத்திரர், சுகர் போன்றவர்களும், தியாகராஜர் போன்ற கீர்த்தனசாரியார்களும் நாதபிரும்ம ஸ்வரூபமாக விளங்கும் பராசக்தி சகிதமாக பகவான் சங்கராருடைய வார்த்தைகளால், அபாரமகிமை பொருந்திய வாழ்க்கையின் ஆசாரங்களின் வழியாக, ஐயா, உன்னை ஸ்வாமி என்கிற பாவனையில் வந்தடைகிறேன். மந்திர ஸ்வரூபமாகவும் ஆத்மஸ்வரூபமாகவும் விஸ்வ வீபூதியாக விளங்கி உள்ளும் புறமுமாக காக்ஷி அளிக்கும் மஹானுபாவனே, என்னிடம் அன்பாயிரும்.]

எங்கள் வார்த்தைகளைக் கவனி. எங்களால் உனக்கு நல்ல சிந்தனைகள் ஏற்படட்டும். நாங்கள் நல்ல வரனைப்பார்த்து நிச்சயம் பண்ணுகிறோம். அழகானவனாகவும் பவித்திரமான புருஷனும் சுகத்தைக்கொடுக்கும் புருஷனும் சுசீலமான நடத்தை உள்ளவராயும் பார்த்துக் கொடுக்கிறோம். அவனுடைய

யசஸ் லீலை முதலியவைகளை வேதங்களே கானம் செய்கின்றன.'' (459)

"தோஷங்களே இல்லாதவர். எல்லா சத்குணங்களின் சேர்க்கை கூட்டம். அப்பேற்பட்ட லக்ஷ்மிபதியும், வைகுண்டபதியான நாராயணரின் ஸ்வரூபம். ஸ்ரீபதியை நாங்கள் வரனாக அடைந்து உன்னிடம் சேர்த்து வைக்கிறோம்.'' இந்த வார்த்தைகளைக் கேட்டு பார்வதிதேவியானவள் சிரித்துக்கொண்டு சொன்னாள். (460)

"உங்களால் சத்யமான வார்த்தைகள் சொல்லப்பட்டன. நிஜமாகவே இந்த சரீரம் பர்வதத்திலிருந்து உண்டாயிற்று, இதனால் இந்த சரீரம் நாசமடையாது. அவ்விதம் நாசமடைந்த போதிலும் என்னுடைய சங்கல்பம் மாறாது. தங்கம்கூட கல்லிலிருந்து உண்டாகிறது. ஆனால் பல தடவைகள் அக்னியால் வாட்டப்பட்டாலும் தன் ஸ்வபாவமான தங்க நிறத்தை விடுகிறதில்லை.'' (461)

"ஆகையால் நான் நாரதருடைய வசனங்களைவிடப்போகிறதில்லை. என்னுடைய வீடு இருந்தால் இருக்கட்டும், நாசமடைந்தாலும் நாசமடையட்டும். பரவாயில்லை. நான் பயப்படவில்லை. எவன் குருவினுடைய வார்த்தைகளில் விஸ்வாசம் வைக்காமல் ஆராய்கிறானோ, அவன் சுகத்தையும் சித்தியையும் ஸ்வப்னத்தில்கூட அடைகிறதில்லை.'' (462)

"என் பிரபு மஹாதேவர் குணஹீனராக இருக்கலாம். வீடு வாசல் இல்லாத நாடோடியாகவும் ஸ்மசான வாசியாகவும் இருக்கலாம். நாராயணருடைய அம்சமான விஷ்ணுபகவான் சகல ஸத் குணங்களின் சேர்க்கைகளாகவுமிருக்கலாம். ஆனால் எவருடைய சித்தம் எவருக்கு ரமிக்கும் பொருளாக இருக்கிறதோ, அவரிடம் அது லயிக்கிறது. அதாவது, சந்தேகமில்லாமல் மஹாதேவர் என்மீது பூர்ணமான அன்பு கொண்டவர். என் மனம் அவரையே நாடுகிறது.'' (463)

"ஹே முனீஸ்வரர்களே. நீங்கள் முன்னதாகவே என்னால் காணப்பட்டிருந்தால், உங்களுடைய வசனங்களை நான் கேட்டிருப்பேன். ஆனால் இந்த ஜன்மத்தை நான் சிவனுக்கு அர்ப்பணித்துவிட்டேன். ஆகையால் சிவனுடைய குண தோஷங்கள் என் மனத்தில் இல்லை. நானும் அவைகளைப் பற்றி விசாரம் செய்வதில்லை.'' (464)

[தியானம்

பகவானே, புருஷோத்தமரே, ஆதிபுருஷரே, சாக்ஷியே, உம்மைத் தேவர்கள் பரமார்த்த புத்தியினால் வந்தனம் செய்கிறார்கள். நெய்யின் ஆஹுதியினால் ஜ்வலிக்கும் அக்னிக்குச் சமமாக என்னுடைய ஸமஸ்த பாபக் கூட்டங்களை அறுத்து என்னை விடுவித்துக்கொண்டு உம்முடைய உத்தமமான புருஷ ஸ்வரூபத்தை நினைத்து என்னைத் தூக்கி விடும். நிர்மலமான மதியுடன் சித்தத்தில் கலிகல்மஷங்களை நீக்கி என் ஹ்ருதயத்தை ஜனார்த்தனரிடம் அர்ப்பணம் செய்து பரமபாக்யத்தை அடைவேனாக. ராகத்வேஷங்கள் நீங்கி, ஹிமவான் போன்ற ஸ்படிக சித்தத்துடன் என்னுடைய மனுஷ்ய பாவங்களால் உம்மை வந்தடைகிறேன். ஹே ஹரி, என்னுடைய அனன்ய பாவத்தைப் புரிந்துகொண்டு உம்முடைய ஜ்வலிக்கும் தேஜஸின் கிரணங்களின் மகிமையால், சந்திரனின் கிரணங்கள் தாபங்களை தணிப்பதுபோல, என் தோஷங்களை நீக்கி, நிர்மல ஹ்ருதயத்துடன் பிரியம், ஹிதம், அபிமானம் இது மாதிரி மாயையினால் ஏற்படுத்தப்பட்ட பந்தங்களிடமிருந்து விலகி, ஸதா வாசுதேவ சித்தம் உள்ளவனாக பிரகாசிப்பேனாக. ஹிரண்ய கர்ப்பரே, புருஷரே, பிரதானர் என்று சாங்கியத்தில் அழைக்கப்படுகிறவரே, அவ்யக்த ரூபமாகவும், சுத்த ஞான ஸ்வரூபமாகவும் நாரதரால் உபதேசிக்கப்பட்ட துருவன் வாசுதேவ மந்திரமாகிய த்வாத சாக்ஷரத்தை உச்சரித்தானே, அதுமாதிரி நான் உம்மை ஏகாந்த பக்தியுடன், சாந்தி ஸ்வரூபத்துடன் உன் ஸ்ருஷ்டியில் இருப்பேனாக. புதிய வருஷம் பிறந்தவுடன் இலைகளை விருக்ஷமானது உதிர்த்து புது செளந்தர்யத்துடன் அழகான ரஸங்களுடனும் இலை பூ காய் பழங்கள் இவைகளுடன் விளங்குகின்றனவோ, அதுபோல நான் விளங்குவேனாக. என்னுடைய ஹ்ருதயம் சதா ஸ்ரீ அச்யுத பக்தியுடன் விளங்கட்டும். ஹே கமல நயனா, விஷ்ணோ, சங்குசக்ரகதாபாணே, தரணிதரா எனக்கு உன் சரணங்களைக் கொடு. மஹாபுருஷா, என் கதியை தெரிந்து கொண்டு நீ எனக்கு அடைக்கலம் கொடு.]

"உங்களுக்கு விவாஹம் பண்ணிவைப்பதில் பிடிவாதம் இருக்குமாகில் இந்த சம்சாரத்தில் வரன்கள், கன்னிகைகள் ஏராளமாகவிருக்கின்றனர். விளையாட்டாக கல்யாணம் பண்ணி வைப்பவர்களும், செய்துகொள்ளுபவர்களும் பலபேர்களும் இருக்கின்றனர். அவர்களிடம் நீங்கள் சென்று சொல்லுங்கள் (465)!"

"எனக்குக் கோடி ஜன்மங்கள் ஆனாலும் நான் இந்த தீர்மானத்தை விடமாட்டேன். சம்புவை என் பதியாக வரிப்பேன். இல்லாவிடில் குமரியாகக் காலம் கழிப்பேன். மஹேசரே நூறு தடவைகள் எனக்கு நேரே வந்து உபதேசித்தாலும், நான் நாரதருடைய வசனங்களை ஒருக்காலும் மீற மாட்டேன்." (466)

ஜகஜ் ஜனனியான பார்வதிதேவி மீண்டும் சொன்னாள். "நான் உங்கள் பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறேன். என் மனோரதம் நிறைவேறும்படி ஆசீர்வதியுங்கள். உங்களுக்கும் வந்து நாழிகை ஆகிவிட்டது. என்னை அனுக்ரஹியுங்கள். என் கஷ்டங்கள் விலகி, சம்புவை நான் அடைவதற்கு வழி செய்யுங்கள்" என்று தழுதழுத்த குரலுடன் சொன்னாள். இப்பேற்பட்ட பிரேமையைக் கண்டுகொண்டு ஞானிகளான அந்த முனிவர்கள் "ஹே ஜகதம்பிகே, பவானி, அம்மா, உனக்கு மங்களங்கள் உண்டாகட்டும். உன் காரியம் நிறைவேறட்டும். உனக்கு ஜயம் உண்டாகட்டும். அம்மா, நீ ஜகந்மாதா. உலகத்தை வாழ்விக்கும் தெய்வம் நீ. நீயும் சம்புவும் நித்ய தம்பதிகளாக இருக்க வேண்டும். நீங்கள் நன்றாக இருந்தால்தானே அம்மா, உலகம் ஜீவிக்க முடியும். தாயே, பராசக்தி உன் மனோரதங்கள் சீக்கிரம் நடைபெறட்டும்." (467)

"ஹே, அம்பிகே, நீ மாயை. நீயும் பகவான் சிவனும் லோகமாதா பித்ருக்கள். நீங்கள் எங்களிடம் ஸதா பிரசன்னமாக விருக்கவேண்டும். உங்களுடைய பாத சரணங்களை நாங்கள் அடைந்து சரணமடைகிறோம். எங்கள் மனமும் ஹ்ருதயமும் உங்கள் தயையினாலும் அபார கடாக்ஷத்தாலும் ஆனந்தத்தை அடைந்து அந்த வெள்ளத்தில் நாங்கள் மூழ்குகிறோம். எங்களுக்கு உத்தரவு கொடு, அம்மா." (468)

[தியானம்

ஹே ராமா, நாராயணரே, பரமார்த்தரே, ஸ்தூலமாகவும் சூக்ஷ்மமாகவும், க்ஷர அக்ஷரமாகவும் இருப்பவரே, ஜாக்ரத ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரியா அவஸ்தைகளில் காணப்படுபவரே, காலத்தையும் மீறினவரே, நிரஞ்சன தேவரே, உமக்கு நமஸ்காரம். குணங்களுக்கு அனுசரணையாகவும் குணங்களுக்கு ஆதாரமாகவும், நிர்குண ஆத்மாவாகவும் குணங்கள் ரஹிதராகவும் அமூர்த்தியாகவும் மூர்த்தி ரூபமாகவும் ஸர்வ மூர்த்தியாகவும் விளங்குபவருக்கு நமஸ்காரம். சுந்தர ரூபமுடையவரும் வித்யா அவித்யா ஸ்வரூபமாக விருக்கும் மூர்த்திக்கு நமஸ்காரம்.

கார்ய காரண ரூபமாகவும் ஜகத்திற்கு உற்பத்தி ஸ்தானமாகவும் போஷகராயும் இருக்கும் நரசிம்ம மூர்த்திக்கு நமஸ்காரம். ஹே பிர பஞ்சாத்மான், ஞானிகள் அடையும் ஆஸ்ரய ரூபரே, ஏக அநேக ரூபமாக விளங்கும் வாசுதேவரே, ஆதி காரணரே, ஸர்வ பூதாத் மாகவும், சூரியன், சந்திரன், ஆகாயம், பூமி, இந்திரன், அக்னி முதலிய தேவர்கள் பயப்பட்டு தங்கள் தங்கள் காரியங்களில் ஈடு படச் செய்யும் மஹாபுருஷரே, தண்டத்தை வைத்திருப்பவரே, தர்மத்தை பரிபாலிப்பவரே, விஸ்வேஸ்வரரே, புருஷோத்தமரே, உமக்கு நமஸ்காரம். பிரஹ்லாதன் பண்ணின பக்தி பிரவாஹத் தால் சந்தோஷம் மேலிட்டு அவனை அனுக்ரஹித்து பாகவத உத்தமராக்கியவரே, நாரத பகவானால் உபதேசிக்கப்பட்ட தியாகராஜர் போற்றும் மஹா பிரபாவம் வாய்ந்த பிரஹ்லாத பக்தி எனக்கு உம்மிடம் சதா இருக்க அருள் செய்ய வேண்டும்.]

முனீஸ்வரர்கள் ஹிமவானிடம் சென்று சகலவிருத்தாந்தங் களைச் சொல்லி அவனை பார்வதியை வீட்டிற்கு அழைத்துவரச் செய்தார்கள். அவர்கள் பார்வதி தேவியின் அபாரமான பிரேமையைச் சிவபெருமானிடம் உரைத்தார்கள். அந்த விபரங் களைக்கேட்ட சம்பு அத்யந்த ஆனந்தமடைந்தார். ஸப்தரிஷி களும் பிரசன்னமடைந்து பிரும்மலோகம் சென்று யாவற்றையும் பிரும்மாவிடம் விஸ்தாரமாகச் சொன்னார்கள். "எல்லாம் ராகவ பிரசாதம்" என்று பகவான் சம்பு, ஸ்ரீ ரகுநாதனின் கிருபையை புகழ்ந்து அவரையே தன் கதியாக நினைத்துத் தியானத்தில் அமர்ந்தார். (469)

அந்த சமயம் தாரகாசுரன் ஸமஸ்த லோகத்திற்கும் பயத்தை உண்டு பண்ணிக்கொண்டு தன் புஜபலத்தினால் சகல லோகங் களையும் ஆக்ரமித்துக்கொண்டு லோகபதியாக விளங்கினான். சகலலோக பாலர்களை ஜெயித்து, ஸகல தேவதைகளையும் சுகத்தி லிருந்தும் சம்பத்திலிருந்தும் நழுவச் செய்தான். (470)

அவன் சாகா வரம் பெற்றவனாக விருந்தபடியால் காலத் தினால் ஜீர்ணமடையாத ரூபத்துடனிருந்தான். அவனை யாவராலும் ஜயிக்க முடியவில்லை. சகல தேவதைகளும் அநேக தடவைகள் அவனுடன் சண்டை செய்தும் தோற்றுவிட்டார் கள். அதே சமயம் பிரும்மாவினிடம் எல்லா தேவதைகளும் சென்று அவனுடைய கொடூரச் செய்கைகளைப் பற்றிச் சொன்னார்கள். பிரும்மாவும் சகல தேவதைகளின் கஷ்டங்களைப் பார்த்தார். (471)

பிறகு பிரும்மா எல்லாத் தேவர்களையும் பார்த்துச் சொன்னார். "இந்த தனுவின் குமாரனுக்கு மிருத்யுவையும் நான் ஸ்ருஷ்டித்திருக்கிறேன். சிவனுடைய வீரியத்தால் ஒரு புத்ரன் உற்பத்தி உண்டாகும் சமயம் அவனுக்கு மரணம் யேற்படும். அந்தக் குமாரன் தான் தாரகாசுரனை யுத்தத்தில் ஜயிப்பார்." (472)

"என் வார்த்தைகளைக்கேட்டு உபாயம் செய்யுங்கள். ஈஸ்வரருடைய சகாயத்தால் உங்களுடைய காரியம் கைகூடும். சதிதேவியினால் தக்ஷயாகத்தின் சமயம் சரீரதியாகம் பண்ணப் பட்ட பிறகு, மீண்டும் அந்தப் பெண் ஹிமவானுடைய கிரஹத்தில் குமாரியாக ஜனித்திருக்கிறாள்." (473)

[தியானம்

ஹே உமா, தாயே, பவானியே, அபர்ணா, நீலோத்பலம் போன்ற முகத்தையும் நிறத்தையும் உடைய அம்பிகே, உன்னுடைய வெண்மையான நககிரணங்களிலிருந்து வெளி வரும் ஜோதி என் தோஷங்களைப் போக்கட்டும். உன் பாத சலங்கைகளில் உள்ள இந்திர நீலக் கற்களின் காந்தியால் ஜ்வாலையாக எரிகின்ற என் தாபங்கள் தணியட்டும். உன் பாதங்களின் சிவப்பு வர்ணமாயுள்ள இளம் சூரியனின் வெப்பம் என் குளிர் காலத்தில் கம்பளம் போல சுகத்தைத் தரட்டும். உன்னுடைய கொடூரமான பார்வை சம்ஹார காலத்தில் ஏற்படும் அக்னிபோல என் பாபங்களை எரிக்கட்டும். உன்னுடைய ஸௌம்யமான பார்வை நான் கதியற்று வந்து நிற்கும்போது எனக்கு அடைக்கலம் கொடுக்கட்டும். கோவைப்பழம் போன்ற உதடும் அழகியதும் வளைந்ததும் கருணை நிரம்பினதுமான இமைகளுடன் கூடிய கரிய விழிகள் எனக்கு உன் ஆதரவு கிடைக்கும் என்கிற நம்பிக்கையை ஊட்டட்டும். உன் கேசத்தின் நுனிகள், சுருண்டதும், அழகானதுமான மயிர் தோகைகள் எனக்கு பஞ்சணை போன்ற மெத்தை ஆனந்தம் தருவதுபோல என் மனதில் ஆனந்தத்தை உண்டாக்கட்டும். உன் அழகானதும் வெளுப்பானதுமான பல் வரிசைகள் எனக்கு உன் மீதுள்ள மோஹத்தை உண்டாக்கட்டும். உன் அழகான முகம் ராஹுவி னால் விடப்பட்ட பூர்ண சந்திரனைப்போல என் தோஷங்களையும் பாபங்களையும் விலக்கி ஆனந்தமயமான மனத்துடன் என்னைக் காக்கட்டும். தாயே, அழகு வாய்ந்தவளே, உயர்ந்த மூக்குள்ளவ ளும், ஸுததி என்கிற நற் பல் வரிசைகளை உடையதும், குற்றமற்

றதுமான உன் மந்தஹாஸப் புன்னகையையும், தாமரை இதழ் போன்ற கண்களும், நளினமும் மிடுக்குடன் கூடிய உன் ஒய்யார நடை அழகும், பேச்சு அழகும், உன் லாவண்ய சௌந்திரமும் வெகு ஜோராக அலங்காரம் பண்ணிக்கொண்ட அழகும், மனோகர மான வாசனை திரவியங்களால் பூசப்பட்ட உன் சரீர லாவண்யங் களும் என்னை உனக்கு வசப்பட்டவனாக ஆக்கவேண்டும். என்னுடன் கைங்கர்ய லக்ஷ்மியாக வந்து நீயே என்னை அனுக்ர ஹிக்க வேண்டும். ஹே அம்ருத நிலையே, எனக்கு பிரஹஸ்பதி யாகவும் சுக்ரராகவும் மோக்ஷத்தைக் கொடுக்கும் சந்திரனாகவும், சுபகரமான புதனாகவும், கார்த்திகேயனின் தோழனான செவ்வாயாகவும், அன்ன நடைபோல மெதுவாய்ச் செல்லும் சனைஸ்சரனாகவும் தியானம் செய்பவர்களுக்கு அக்ஞானத்தைப் போக்கும் ராகு கேதுக்களாகவும் எல்லா கிரஹங்களுக்கும் நடு நாயகமாக விளங்கும் ஒளியுள்ள பாதங்கள் உள்ள ஞான திவாகரனாக எனக்கு நீ விளங்க வேண்டும், காமாக்ஷி, எல்லாம் எனக்கு நீயாக விளங்குகிறாய்.]

"சம்புவை தன் பதியாக வரித்த பிறகு பவானி கடூரமான தபஸ் செய்து கொண்டிருக்கிறாள். இங்கே எல்லா ஆசைகளையும் துறந்துவிட்டு சிவன் சமாதியில் புகுந்து ராமனை அடைக்கலம் செய்திருக்கிறார். என்ன நடக்கும் என்று நிச்சயமாக சொல்லக் கூடாததுதான். என்றாலும் நான் சொல்வதைக் கேளுங்கள்." (474)

"நீங்கள் சென்று காமதேவனைச் சிவனிடம் செல்லும்படி செய்யுங்கள். எப்போது அவன் சிவனுடைய சமாதியைக் கலைத்து, மனத்தில் க்ஷோபத்தை உண்டு பண்ணுகிறானோ, அந்த சமயம் நாமெல்லோரும் சிவனுடைய சரண கமலங்களில் தலை வணங்கி அவரை விவாஹம் செய்யும்படி வேண்டுவோம்" (475)

இந்த விதமாகத் தேவதைகளுக்கு நன்மையைப் பயக்கும் வழியை பிரும்மா சொன்னார். அவர்களும் இந்த உபாயம் "சரி" என்று சொல்லி ஆமோதித்தார்கள். பிறகு தேவதைகள் மிகுந்த பிரேமையுடன் ஸ்துதி செய்து பஞ்ச புஷ்ப பாணங்களை கொண்டவனும் மீனைக் கொடியாகக் கொண்ட மன்மதனை அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தார்கள். [பஞ்ச புஷ்பங்களாவன வெள்ளைத் தாமரை, அசோக புஷ்பம், மாம்பூ, மல்லிகை, நீலோத்பலம் ஆகிய புஷ்பங்கள். இவைகளே மன்மதனுக்கு பஞ்சபாணம்.] (476)

மன்மதனிடம் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி அவன் மனதை இளக வைத்து கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். மன்மதனும் சிரித்துக்கொண்டு "நான் சிவனுடன் விரோதம் செய்வேனாகில், எனக்கு க்ஷேமக் குறைவுதான். மரணத்தையும் அடைந்து விடுவேன்." (477)

"இருந்தாலும் உங்களுடைய ஆசைகளை பூர்த்தி செய்து வைக்கிறேன். வேதங்கள் பிறருக்கு உபகாரம் பண்ணுவது ஸ்ரேஷ்டமான தர்மம் என்று சொல்லுகின்றன. பிறருடைய நன்மைகளுக்காக தன் சரீரத்தை எவன் தியாகம் செய்கிறானோ, அவனை சாதுக்கள் ஸதா புகழ்கிறார்கள்." (478)

இவைகளைச் சொல்லி தலை வணங்கி காமதேவன் புஷ்ப பாணங்களை எடுத்துக்கொண்டு வஸந்தன் முதலிய சகாக்களுடன் சிவனிடம் சென்றான். போகும் சமயம் அவனுடைய மனம்மிக்க கலக்கமாகவிருந்தது. நான் சிவனுக்கு அபராதத்தை செய்வேனாகில், எனக்கு மரணம் நிச்சயம் என்று வருத்தப் பட்டுக்கொண்டிருந்தான். (479)

அந்த சமயம் மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு மன்மதன் தன் பிரபாவத்தை பிரகடனம் செய்ய ஆரம்பித்தான். சமஸ்த சராசரங்களையும் தன் வசமாக ஆக்கினான். எந்த சமயம் மீனைக் கொடியாகக் கொண்ட மன்மதன் கோபத்துடன் எல்லாவற்றையும் தன்வசம் ஆக்கினானோ, அச்சமயம் வேதங்களின் ஸேதுவாகிற எல்லா மரியாதைகளும் அழிந்தன. (480)

பிரும்மசரியம், நியமம், எல்லா விதமான, அடக்கங்கள், பொறுமை, தர்மம், ஞானம், விக்ஞானம், ஸதாசார சம்பத்துக்கள் ஜபம், தபம், யோகம், வைராக்யம், விவேகத்தின் சின்னங்கள் யாவும் பயந்து ஓடிவிட்டன. (481)

அறிவு மழுங்கி விட்டது. விவேகம் சகாயமில்லாமல் ரண பூமியில் ஓடும் சேனையைப்போல ஓடி ஒளிந்தது. அதனுடன் எல்லா ஸத் காரியங்களும் ஓடி ஒளிந்தன. ஞானம், வைராக்யம், தன்னடக்கங்கள், நியமம், ஸதாசார சம்பத்துக்கள் எல்லாம் கிரந்தங்களில் ஒளிந்து கொண்டு அனுஷ்டானத்தில் வராமலிருந்தன. எல்லா ஜகத்திலும் குழப்பம் ஏற்பட்டது. எல்லா சராசரங்களும் துக்கத்தினால் பீடிக்கப்பட்டு கதற ஆரம்பித்தார்கள். "ஹேவிதாதா, என்ன நடக்கப்போகிறது என்று தெரியவில்லையே. நமக்கு யார் ரக்ஷை செய்யப்போகிறார்கள்? எதற்காக ரதியினுடைய பதியான மன்மதன் கோபம் கொண்டு கையில் தனுஷ் ஏந்தி புஷ்ப பாணங்களைப் போட்டான்?" (482)

உலகத்திலுள்ள எல்லா ஸ்திரீ புருஷர்கள் தங்கள் தங்கள் மரியாதை வியவஸ்தைகளை விலக்கி, காமதேவனின் வசம் ஆனார்கள். (48ப)

[தியானம்

ஹே பானு, திவாகரா, அந்தராத்மன், காயத்ரி மந்திரத்தின் உள் சூக்ஷ்மமான பொருளே, ஸவிதா, முக்திக்குத் த்வாரமாகச் சொல்லக் கூடியதும், ஸ்வர்க்கத்வாரமாகவும் விளங்குபவரே, மஹாபத்மன் என்கிற நாகன் ஸவிதா என்கிற தேவதையிடம் பார்த்த ஆச்சர்யத்தை கௌசிகன் என்கிற பிராம்மணனுக்குச் சொன்ன பொருளே, த்ரயிமயி என்று சொல்லப்படும் ருக் யஜுர் ஸாம வேத ரூப மயமாக விளங்கும் மஹாபுருஷா, யாக்ஞ்யவல்கியருக்கு அருள் செய்து குரு சாபத்தை நீக்கி, சுக்ல யஜுர் வேதம் தைத்ரியம் யஜுர் சாகைகளையும் சதபத பிராம்மணம் என்கிற கிரந்தங்களையும் உபநிஷத்துக்களையும் வேதவாக்யங்களையும் உண்டுபண்ணின மஹானுபாவா, ஜமதக்னி முனிவருக்குக் குடையையும் பாதரக்ஷைகளையும் கொடுத்த க்ருத கிருத்யனாக ஆன தேவ புருஷா, கலை காஷ்டை நிமிஷம் காலக்ஞானம், காரணம் தாரணம், தியானம் ஆகிய அங்கங்கள் கொண்ட பர பிரும்ம ஸ்வரூபமே, விஷ்ணு மயமான ஸூர்ய ரூபரே, நமஸ்காரம் செய்கிறேன். உம்முடைய கிரணங்களால் சந்திரனைப் போஷித்து தேவதைகளுக்கு ஸ்வாஹாரூபமாயும், ஸ்வதா ரூபமாக பித்ருக்களுக்கும் அம்ருதத்தைக் கொடுத்து திருப்தி பண்ணுகிறீர். அப்பேற்பட்ட சூர்யன் அர்யமா என்கிறவருக்கு நமஸ்காரம் செய்கிறேன். பனி, ஜலம், உஷ்ணம் இவைகளை உண்டுபண்ணும் கர்த்தாவுக்கு நமஸ்காரம். திரிகால மூர்த்தியாகவும் இருளை அபஹரிப்பவராகவும், ஸத் ஜனங்களை அவரவர்கள் காரியங்களில் ஏவுகிறவராகவும் நான் நமஸ்கரிக்கிறேன். கொடூரமான உஷ்ணத்தால் ஜலங்களை இழுத்து பர்ஜன்ய மூலமாக அம்ருதத்தை வர்ஷித்து ஓஷதிகளையும் சகல சராசரங்களையும் போஷிக்கும் சுத்த ஸ்வரூபமான சூர்யனுக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன். குதிரை வடிவம் கொண்டு யாக்ஞ்யவல்கியருக்கும், தேரில் சாரத்யம் செய்து கொண்டு ஆஞ்சநேயருக்கு உபதேசித்த மஹா குருவுக்கு நமஸ்காரம். விவஸ்மான், ஸவிதா, பகவான் பாஸ்கரன், தேவதை முதலிய ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதி பூதமாக விளங்கும் ஆதித்யருக்கு நமஸ்காரம். ஹிரண்மயமாகவும் பிரக்ஞா ரூப

முள்ள கொடியும் சந்தோமயமாக விளங்கும் அமரர்களான அஸ்வ கணங்களுடன் கூடின தங்கத் தேரின்மீது மூன்று புவனங்களேயும் பிரகாசம் பண்ணிக்கொண்டு, நேத்ர ரூபமாக விளங்கும் சூர்யதேவனே வஸிஷ்டர் ஸம்ஹிதையில் சொல்லியபடியும், அகஸ்தியரால் உபதேசிக்கப்பட்ட படி ஆதித்ய ஹ்ருதயத்தின் முடிவில் ராமர் கண்ட காக்ஷியையும், த்ரௌபதி ஸ்மரித்து தன் கஷ்டத்திலிருந்து விடுபட்ட ஸ்திதியையும் நினைத்து, நான் ஞான திவாகரனை சம்புவையும் அம்பாளுடைய ஜோதியையும் இந்திராணிக்கு விரதத்தைப் பூர்த்தி பண்ணின மஹானுபாவைக்கும், வைஷ்ணவ தேஜஸ்ஸையும், அஸ்வினி தேவர்களின் பிதாவையும், கர்மபலன்களேப் பூர்ணமாகக் கொடுக்கும் ஆதித்யரையும் நான் பூஜித்து அர்ச்சித்து வந்தனம் கீர்த்தனம் இவைகளால் திருப்தி செய்து என் ஸ்வாமியாக பாவித்து சரணம் அடைகிறேன். வாலகில்யர்களாலும் அப்சரஸ்ஸுகளாலும் ஸப்த ரிஷிகளாலும் நாகர்களாலும் யக்ஷ கின்னரர்களாலும் பூஜிக்கப்படும் பானுவையும் இந்திரனுடைய பிரியசகாவையும் சந்திரன் பிரஹஸ்பதி செவ்வாய் புதன் போன்ற நவக்ரஹங்களுக்கு நடு நாயகமாக விளங்கும் ஜோதி ஸ்வரூபத்தை வணங்குகிறேன்.]

எல்லோருடைய ஹ்ருதயத்திலும் மதனனுடைய அபிலாக்ஷ ஏற்பட்டது. காமம் மேலிட்டு தர்மவியவஸ்தைகள் கரைகடந்து பங்கமாயின. விருக்ஷங்கள் தங்கள்மேல் படரும் புதுக்கொடிக் கிளேகளே தழுவிக் கீழே குனிந்தன. நதிகள் வெள்ளம் மீறி, கெடுக்கப்பட்ட புத்தியுடன் சமுத்திரத்தைத் தாவி மகிழ்ந்தன. குளம் குட்டைகள் ஒன்றையொன்று மரியாதை யின்றி ஸங்கமம் அடைந்தன. (484)

ஜடமான பொருள்களான மரங்கள், நதிகள், இந்த தசைக்கு வந்தால், சேதன ஜீவர்களேப்பற்றிச் சொல்லவேண்டுமா? ஆகாயம் ஜலம் பூமி இவைகளில் சஞ்சரிக்கும் ஜந்துக்கள், பசு, பக்ஷி ஸமுதாயங்கள் தங்கள் கலவின் கூட்டுறவுக்காக சமயத்தையும் மறந்து காம வசமாகி மரியாதைகளே மீறின. (485)

எல்லா ஜனங்களும் காமாந்தகர்களாக மாறி வியாகுலம் அடைந்தார்கள். ராத்ரி பகலென்று பார்க்கவில்லே. தேவதைத்ய மானுஷ்ய கின்னரர்கள், சர்ப்பங்கள், பிரேதம், பிசாசம், பூதம் வேதாளங்கள், (486)

இன்னும் சதா காமத்தில் மூழ்கிப்போகும் ஜந்துக்கள் எவ்வளவு இருக்கின்றனவோ, அவர்களுடைய தசைகளேயும் விவரிக்க

முடியாதபடியிருந்தது. ஸித்தர்கள், வைராகிகள், முனிகள், நியமம் தவராத மஹாயோகிகள் ஆகிய எல்லோரும் காமத்தினால் ஆக்ரமிக்கப்பட்டவர்களாகி யோகமார்க்கங்களைத் துறந்து, ஸ்திரி விரஹத்தால் தாபமடைந்தார்கள். (487)

எப்போது யோகிஸ்வரர்களும் தபஸ்விகளும் காமத்தினால் கலக்கப்பட்டு அவஸ்தையை அடைந்தார்களோ, அப்போது பாமர ஜனங்களும் தங்களின் நிலைமையை மறந்து, புத்தியை இழந்து கஷ்டப்பட்டார்கள். அவர்களின் ஸ்திதியைப்பற்றி என்ன சொல்லமுடியும்? எவர்கள் சமஸ்த சராசரத்தைப் பிரும்ம மயமாகப் பார்க்கிறார்களோ, அவர்களும் எல்லாவற்றையும் ஸ்திரீ மயமாகப் பார்த்தார்கள். ஸ்திரீகளும் எல்லாவற்றையும் புருஷ மயமாகப்பார்த்தார்கள். காமத்தினால் உள்ளம் வியாபிக்கப்பட்ட புருஷர்களின் ஸ்திதிமிகமோசமாக விருந்தது. அவர்கள் சகலத்தையும் ஸ்திரீ மயமாகப் பார்த்தார்கள். (488)

[தியானம்

ஹே ராமா, ஜானகி வல்லீசா, உமையின் குலதெய்வமே, அன்றொருநாள் உமா மஹேஸ்வரர் ஸம்வாதத்தில் ஸ்ரீராம, ராம என்று ஒரு தடவை சொல்லப்பட்டால், அது விஷ்ணுவின் ஸஹஸ்ர நாமங்களுக்குச் சமம் என்று சொல்லப்பட்டது. ஆதலால் உம்மை நான் சதா நமஸ்கரிக்கின்றேன். அதே சமயத்தில் இந்த ஸம்வாதத்தில் சிவனுடைய பெருமையையும் அம்பிகை அறிந்தாளாமே. சந்திரனை அநியாயமாகத் தக்ஷயக்ஞத்தில் அழித்ததற்காக பச்சாதாபப்பட்டு சிவன் அவனை தன் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டாரே. ஜனங்களை பூதபிசாசங்களிடமிருந்து ஏற்படும் பயங்களைப் போக்க சகல கோரமான ஸ்ருஷ்டிகளுக்கும் ஸ்மசானத்தில் வாசஸ்தானமாக இருக்கச் செய்து அவர்களுடன் ரமித்துக்கொண்டு சகல சராசரங்களையும் அவர்களிடமிருந்து காப்பாற்றுகிறார் பகவான் சங்கரர். அவரே பாசுபதம் என்கிற யோகத்தைச் செய்பவர்களிடம் பசுபதியாகவும், கோக்களின் ப்ரியர் என்றும் சொல்லப்படுகிறார். அன்றொருநாள் சிவனிடம் ஆசையுடன் வந்த உமையினால் விளையாட்டினால் புராரியின் இரு கண்கள் பொத்தப்பட்டு மூடிய போது, உலகமானது அந்தகாரத்தில் மூழ்கப்பட்டது. அப்பொழுது மூன்றாவது கண்ணைத் திறந்து உலகத்தின் அக்ஞானத்தைப் போக்கினாராமே திரிபுராரி? மூவுலகங்களும் திரிபுரத்தின் ஈஸர்களான அரக்கர்களால் பீடிக்கப்பட்ட சமயம் பூமியை

ரதமாகக் கொண்டு, ஆகாயத்தை வில்லாகவும் பிரும்மாவை சாரதியாகவும் விஷ்ணுவை அம்பாகவும் நாண் பூட்டி சகல சரா சரங்களையும் காப்பாற்றின மஹாத்மாவே, சதா ராமத்யானம் பண்ணிக்கொண்டு உமையுடன் ஊர்த்வரேதஸ்ஸாக விளங்கும் விரூபாக்ஷா, பினாகி என்கிற வில்லையும், பாசுபதம் என்கிற சம்ஹார அஸ்திரத்தையும் வைத்துக்கொண்டிருக்கும் ஹே கபர்தின், யுத்தத்தில் அர்ஜுனனுடன் போரிட்டு அதில் அவன் சாமர்த்தியத்தையும் கண்டீரே. பிறகு அவனுடைய பக்தியினால் வெல்லப்பட்டு உம்மையே அவனுக்குப் பரிசாகக் கொடுத்தீரே. ஹே உமாபதி, உன் குழந்தை உள்ளத்தையும், அதிமானுஷ்யமான செய்கைகளையும், தீனர்களிடத்தில் அபாரமான கருணையையும், உமையினிடத்தில் அத்யந்த அன்புடனும், உன் புத்ரர்களான கஜானனிடத்திலும் சுப்ரமண்யரிடத்திலும் அதிக வாத்ஸல்யம் கொண்டு இறுகித் தழுவினதுபோல என்னையும் நீர் தழுவவேண்டும். உன்னை நான் கிருஷ்ணன், அர்ஜுனன், பதஞ்சலி, வ்யாக்ரபாதர், நந்தி, தண்டி உபரிசரிஸ், உமை, கார்த்திகேயன், தௌம்யர், பிரஹஸ்பதி சுக்ரர் போன்ற மஹாத்மாக்கள் பூஜித்தது மாதிரியும், பஞ்சபாண்டவர்கள் மாதிரியும், ராமேஸ்வரத்தில் சீதாலக்ஷ்மணன் கூடவிருந்த பிரபுவான ஸ்ரீராமச்சந்திரன் மாதிரியாகவும், அந்தரங்க பக்தியுடன் உன் லிங்கத்தை பஞ்சாக்ஷர வித்தையாலும், பாசுபத யோகத்தாலும் நாத வித்தையாலும் குபேரனைப்போல நான் சதா பூஜிக்கவேண்டும். திரிபுராரி, மஹேசா, காமாக்ஷியின் ஆத்மதைவமே, உன்னை நினைந்து, யயாதி மஹாராஜாவும் போகங்களின் ஆசையையும் காமத்தையும் துறந்து கீழ்காண்ட காதைகளைப் பாடினான். "நெய்ஆகூதியினால் தணியப்படாத அக்னிபோல போகங்களின் திருஷ்ணை போகங்களை அனுபவிப்பதால் சாந்தி அடையாது. ஸம்பூர்ண பூமியில் எவ்வளவு தனதான்யங்கள், ஸுவர்ண ரத்னங்கள், பசு ஸ்திரீகள் இருக்கின்றனவோ இவைகள் யாவும் ஒரு மனிதனை சந்தோஷப்படுத்த முடியாது. ஆகையால் இவைகளின் ஆசைகளைத் துறந்துவிட்டு, விஷயங்களினின்று காமத்தைத் திருப்பி சித்தத்தை பகவானிடத்தில் ஸ்திரமாக வைத்து, வனத்தில் மிருகம்போல பூமியில் நான் சஞ்சரிப்பேனாக" என்று பராசரர் சொன்னார். அதுபோல நான் உம்மைப் பக்தி பூர்வமாக பூஜித்து அடைவேனாக.]

யாவராலும் தைர்யத்துடன் பூமியில் சஞ்சரிக்க முடியவில்லை. காமதேவனால் மனம் ஆக்ரமிக்கப்பட்டபொழுது,

பிரபுவான ஸ்ரீரகுநாதனால் ரக்ஷை செய்யப்பட்ட ஸ்திரீ புருஷர்கள் மாத்திரமே அந்த சமயம் மஹா மோஹத்திலிருந்து காப்பாற்றப் பட்டார்கள். (489)

சுமார் ஒரு மணி நேரம் இப்பேற்பட்ட தமாஷா நடந்தது. காமதேவனான மன்மதன் சிவனிடம் அருகே சென்றான். ராம தியானத்திலிருந்த மஹாதேவனைப் பார்த்த சமயம் அவனுக்கு பயம் ஏற்பட்டது. அப்பொழுது சராசரங்களும் ஜடம்மாதிரி ஸ்திரமாகவிருந்தன. (490)

வெகுசீக்கிரத்தில் எல்லா ஜீவன்களும் மதம் உண்டானவர்களாகி பிரமை பிடித்தவர்களைப்போலவிருந்தார்கள். எவரை ஜெயிப்பது மிகக் கடினமோ, எவரை எந்தவித சாமர்த்தியத்தாலும் தாண்டுவது மிகக் கடினமோ, அப்பேற்பட்ட சம்பூர்ணரான பகவான் ஈசானர், ருத்ரரூபராக விளங்கும் மஹாபூதரைக் கண்டதும் மதனனுக்கு பயம் மேலிட்டது. மன்மதனுக்கு எவரால் சம்பூர்ண அழகும், யசசும், ஐஸ்வர்யங்களும், ரதியும் கொடுக்கப் பட்டதோ, அப்பேற்பட்ட மஹாத்மாவைக்கண்டு மன்மதனுக்கு வாஞ்சையினாலும் பயத்தாலும் நடுக்கம் ஏற்பட்டது. (491)

திரும்பிப்போக மனம் தூண்டியது. ஆனால் தேவர்களுக்கு வாக்குக் கொடுத்ததை நினைத்து, அதை சத்ய வ்ரதமாக நிறை வேற்றாமல் திரும்பினால் தன் கிர்த்திக்கு பங்கம் வரும் என்று நினைத்தான் மதனன். அவனுக்கு லஜ்ஜையும் ஏற்பட்டது. என்ன செய்வது என்று தோன்றாமல் பிரமை பிடித்தவன் போல ஆனான் மதனன். கிருபாளுவான ஈசானரே தன் சரணம் என்று நம்பினான். அவரே மரணம் கொடுத்தாலும் பரவாயில்லை என்று நினைத்தான். வேறு உபாயம் ஒன்றும் தோன்றாமல் தன் சகாவான ருதுராஜனுகிற வசந்தனை அழைத்துப் பிரகடனப்படுத்தினான். புஷ்பங்களும் புதிய புதியதான மொட்டுக்களும் வாசனையுடன் புஷ்பங்களில் தோன்றி சோபிதமாக விளங்கின. (492)

வனங்கள், உபவனங்கள், பூந்தோட்டங்கள் பரமகந்தத்தையும் ரம்யமான நிறங்களையும் உண்டுபண்ணி மனோஹரமாக விளங்கின. எவ்விடத்திலும் மனமானது பிரேமை ரஞ்சனையுடன் விளங்கியது. சகல திசைகளிலும் சுந்தரமான அழகு நடனமாடியது. சுகந்தமான மாருதங்கள் வீசின. இறந்து போன மனங்களிலும் பிரேமை தாண்டவமாடியது. (493)

[தியானம்

ஹே க்ருஷ்ணு, ராமா, ஜனர்த்தனரே, உன்மீது மகத்தான விஸ்வாசமும் உன் கிருபையும் உன் ஸ்நேகமும், ரக்ஷையும் யேற் படவேண்டும், உனக்கு என் நினைவும் சதா இருக்கவேண்டும். கோவிந்தரே, த்ரயீமயி, த்ரயீநாதரே, நரசிம்மரே, உன்னை நான் சதா அர்ச்சித்து அந்தரங்க பக்தியுடன் நமஸ்கரிக்கிறேன். புருஷோத்தமரே, நரனுடைய பக்தியும், தர்மபுத்ரருடைய வினய மும், பீஷ்மருடைய பரமபக்தியும், பரக்ஞானமும், குந்தியி னுடைய வாத்ஸல்யமும், சங்கரருடைய பிரேமையும் அம்பிகை யினுடைய கருணையையும் நாரதருடைய ஆழ்ந்த ஹ்ருதயத்தி லிருந்துவரும் சிஷ்ட வாக்யங்களும், தியாகராஜருடைய ஆனந்த ஹ்ருதயமும், அர்ஜுனன், பீமன், த்ரௌபதி, நகுல சகாதேவர் களின் சேவைகளும் இவ்வளவுடன் கூடிய மனப்பான்மை களுடன் நான் உன்னை நமஸ்கரிக்கிறேன். உன்னையே என் பெரும் புண்யத்தின் பலனுகவும், வாழ்நாட்களின் குறிக்கோ ளாகவும் காலத்தை நடத்த விரும்புகிறேன். என்னிடம் அபார கருணையுடன் இருக்கவேண்டும்.]

[தியானம்

பகவான் சங்கரருக்கு நமஸ்காரம். ஸர்வேசரே, ஸர்வஜகத் குரோ, தேவாதிதேவரே, சசிகலாதரரே, கோரமான வஸ்துக்கள் யாவற்றையும் அதிகரித்து கோரஸ்வரூபமாக விளங்கும் ருத்ரரே, நமஸ்காரம். சாந்தி உள்ளத்தைக் கொடுக்கும் ஈஸ்வரருக்கு நமஸ் காரம். சந்திரனைக் காப்பாற்றினவருக்கு நமஸ்காரம். சதுர்முகருக் கும் சோமாஸ்கந்தருக்கும் நமஸ்காரம். திரிசூல மூர்த்திக்கு நமஸ் காரம். பன்னகத்தை ஆபரணமாக உடையவருக்கு நமஸ்காரம். பல நேத்ரங்கள் உள்ளவரும் லோகங்களை ரக்ஷணம் செய்கிற வரும் தர்மத்தைப் பரத்வமாகக் கொண்டவரும், தேவதேவருமான சங்கரருக்கு நமஸ்காரம். உமாபதி, உம்முடைய மஹாத்மியத்தை கேட்கக் கேட்க எவ்வளவு ஆனந்தமாகவிருக்கிறது.]

[தியானம்

அம்மா காமாக்ஷி, பகவானை நமஸ்கரிப்பவர்களுக்கு பர மாத்வ ஸ்வரூபத்தின் பிரகாசத்தை பிரிதிபலித்துக் காட்டுவதில் சாமர்த்தியமுள்ளவைகளும், மிக்க அழகுள்ள உன்னுடைய பாதங்கள், ரத்னக்கண்ணுடியின் தன்மையை அடைகிறது. உன்

பாதங்களை வணங்கும் இந்திரன் மனைவி இந்திராணியின் இயல்பாகவே மிருதுவாயும் ஒளியுள்ளதுமான கேசங்கள் அந்தக் கண்ணாடிகளின் அழுக்கைப் போக்கி, பக்தர்களான என்போன்றவர்களுக்கு மார்க்க தரிசிகளாக இருக்கின்றன அல்லவா? அவளும் மிகச் சிறந்த புத்திமானான பிரஹஸ்பதியின் வார்த்தைகளைக் கேட்டு நடந்து, தன் கணவனை மீண்டும் அடைந்தாள். அம்மா, உன்னுடைய கிருபையால் அழகான மந்தஹாஸமுடையவளும் பருத்த ஸ்தனங்களை உடைய பாரத்தால் மந்த நடை உள்ளவளும், மன்மதன் ராஜ்யபாரம் நடத்துவதிலுள்ள கர்வத்திற்குக் காரணமாயிருந்த ரதிதேவியானவள் உன்னுடைய கருணையால் அல்லவோ மீண்டும் தன் கணவனை அடைந்தாள். ஹே லலிதா தேவி, திரிபுரசுந்தரி, இனிப்போடு கூடிய வில்லை இடது கையில் உடையவளும், பர்வத ராஜகுமாரியுமான நீ சப்தம், ஸ்பர்சம் ரூபம், ரஸம், கந்தங்களின் உருவமாகிய புஷ்பங்களை பாணங்களாகக்கொண்டு தாமரை, சிவப்பு ஆம்பல், செங்கழுநீர் நீலோத்பலம், ஸஹகாரம் என்கிற மாம் பூ இவைகளை வலது பக்கத்தில் உள்ள கரத்திலும் தரித்துக்கொண்டு மன்மதன் இறந்துபோன பின்பு அவனை ஓஷதிகள் போன்ற கண்களால் பிழைப்பித்து, எல்லோருக்கும், ஏன் உன் நாயகரான சதாசிவனுக்கும்கூட, காமம் ஸ்ருங்காரம் என்கிற மேலான ரஸங்களைக் கொடுத்தாயே. தாயே லலிதாதேவி, உன் கருணையின் மஹாத்மியத்தை யார்தான் வர்ணிக்க முடியும்? நித்ய தருணியாக உக்ரமாக தபஸ் செய்யும்போது பஞ்சபாண மந்திரத்தினால் உண்டான காமாக்னியினால் பீடிக்கப்பட்ட பரமசிவன் உன் பிரேமையை அறிய விரும்பி, கங்கையை அழைத்து, பிரவாக ரூபமாக உன் பூஜைக்கு இடையூறு செய்ய, நீ நடுங்கியவளாக ஆர்வத்துடன் லிங்க மூர்த்தியை ஆலிங்கனம் செய்து சுகத்தை அனுபவித்தாயே. அப்பேற்பட்ட உங்கள் இருவரையும் நான் நமஸ்கரித்து உங்கள் அனுக்ரஹத்தைப் பெறவேண்டும். நீங்கள் இருவர்களும் என்னிடம் எப்போதும் அன்பாயிருக்க வேண்டும்.]

மரித்துப்போன மனங்களில் காமதேவன் ஆவிர்பவித்த பொழுது, வனங்களின் அழகை யாரால் என்ன சொல்ல முடியும்? காமரூபியான அக்னிக்கு உண்மையான மித்ரனும், சீதளமானதும் மெதுவாக வீசுவதும் சுகந்தமான காற்று அசைய ஆரம்பித்தது. சரோவரில் அநேக கமலங்கள் உண்டாயின. அவைகளில் அழகான வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு உட்கார ஆரம்

பித்தன. ராஜஹம்ஸங்கள், கோகிலங்கள், கிளி முதலிய பக்ஷிகள் சந்தோஷத்துடன் ஆரவாரம் செய்தன. அழகு அவயவங்களுடன் கூடிய மேனகை ஊர்வசி கிருதாசி அலம்புசை என்கிற அப்ஸரஸ்ஸுகள் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டு மிருந்தனர். (494)

இவ்விதம் சகல காம கலைகளில் தேர்ந்த மன்மதன் கோடி கோடிக்கணக்கான உபாயங்களை அனுசரித்தும், தோற்றுப்போய் விட்டான். சிவனுடைய சமாதி கலையவில்லை. அந்த சமயம் க்ரோதத்தினால் காமதேவன் ஆக்ரமிக்கப்பட்டு மாமரத்தின் அழகான பூக்களுடன் கூடின கிளையை எடுத்து (495)

சிவன்பேரில் எறிந்தான். அவனுடைய தனுஸ்ஸில் புஷ்பமான ஐந்து பாணங்களை அமர்த்தி அத்யந்த க்ரோதத்துடன் காதுவரையில் இழுத்து சிவனைப் பீடித்தான். (496)

தீக்ஷ்ணமான காமதேவனின் பாணங்களை சிவன் தன் ஹிருதயத்தின்மீது விழுந்ததைக் கண்டார். அவருடைய சமாதியும் கலைந்தது. கண்கள் முழித்தன. அவருடைய மனத்தில் அமைதி கலைந்தது. சுற்றிப்பார்த்தார். (497)

மாமரத்தின் கொடிகளின் நடுவே மறைந்துகொண்டிருக்கும் காமதேவனைப் பார்த்ததும் சிவனுக்குப் பரமக்ரோதம் உண்டாயிற்று. அதனால் மூன்று லோகங்களும் நடுங்கின. அந்த சமயம் அவருடைய மூன்றாவது நேத்ரம் திறந்தது. அக்னியின் பார்வையால் காமதேவன் சாம்பலாகி பஸ்மம் ஆகிவிட்டான். (498)

ஹா, ஹாகாரம் செய்துகொண்டு சகல சராசரங்களும் கதறின. தேவதைகள் நடுங்கினர். தைத்யர்கள் சுகத்தை அடைந்தார்கள். போகத்தை அனுபவிக்கும் சுகிகள், காமத்தில் மனம் வைத்து ஆனந்திப்பவர்கள் பயமடைந்தார்கள்; காமம் நஷ்டமாகிவிடுமோ என்று பயந்தார்கள். ஆனால் சாந்தமான முனிகள் நிம்மதியை அடைந்தார்கள். (499)

[தியானம்

ஹே லலிதா, மஹா திரிபுரசுந்திரி, லோபாமுத்ரா, இந்திரா, புதன் முதலியவர்களால் அர்ச்சிக்கப்பட்ட திரிபுரேச்சக்ரேஸ்வரி, மன்மதன் மீண்டும் ஜீவனை அடைவதற்கும், கீர்த்தியையும், உன் அருளைப் பெறுவதற்கும் உன்னைப் பூஜித்து சந்தோஷப் படுத்தினனமே. திரிபுரசுந்தரி, உன் பக்தர்களுக்கு கடாக்ஷ வீக்ஷண்யத்தாலும் மனோசங்கல்பத்தாலும், ஸர்வ சௌபாக்யங்

களை இரண்டு கைகளாலும் கொடுக்கும் திரிபுரவாஸினி, உலகத்தில் சகல சக்திகளாகவும் சர்வசித்திகளாவும் விளங்கும் திரிபுராம்பிகே, சகல ஆபத்துக்களிலும் சகலவிதமான தாபங்களிலும் ரக்ஷையாக விளங்கும் திரிபுரமாலினி, பாபங்களாலும் லோபங்களாலும் அசுத்தங்களாலும், பகவானுடைய கிருபை இல்லாமல்போனால் வரக்கூடிய ஆதி ஆத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிக ரோகங்களைப் போக்கும் திரிபுரா, சித்தாம்பிகையே, பக்தர்களுக்கு சகல புருஷார்த்தங்களையும், சர்வசித்திகளையும் மேன்மையாகிற ஸ்ரேயசையும், ஜீவிப்பதின் பலனையும் பெரும் புண்ணியத்தையும் அளிக்கும் திரிபுராம்பா, ஹே லலிதா, மஹா திரிபுரசுந்தரி, காமேஸ்வரரின் ஹிருதயத்தில் ஆனந்த நாடியாக விளங்கும் திரிபுரசுந்தரி, திரிபுராம்பா, உனக்கு நமஸ்காரம். உன் குமாரியான பாலாவுக்கும், மந்திரிணி, தந்திரிணி இன்னும் அநேககோடி ரஹஸ்ய யோகினிகளுக்கும், உன் சகிமார்களுக்கும், நித்யாதேவிக்கும் நமஸ்காரம் செய்கிறேன். பண்டாசுரனையும் அவன் சேனைகளையும் வதம்செய்த லலிதாம்பிகையே, உன்னை நமஸ்கரிக்கிறேன்.]

யோகிகள் மன்மதன் எரிந்த பின்பு நிம்மதியை அடைந்தார்கள். காம தேவனுடைய பத்னியான ரதிதேவியானவள் தன் பதியை நினைத்துப்பார்த்து மூர்ச்சித்து, மனக்கலக்கத்துடன் கீழே விழுந்தாள். அடிக்கடி அழுபவளும், கருணைக்குத் தகுதியானவளும், உலகத்தின் நன்மைக்காகவும், தேவர்களின் காரியத்தில் முயற்சி செய்த மன்மதனின் முடிவைக்கண்டு (லலிதா தேவியின் கருணையை வேண்டுபவளும்) சிவனின் கோபத்தைத் தணித்து அவருடைய அருளை மீண்டும் தன் பதிக்கு அடைவிக்க எண்ணமுடையவளான ரதிதேவி தயையை வேண்டி சம்புவினிடம் வந்தாள். அத்யந்த பிரேமையுடன் கூடினவளும், அடிக்கடி வினயத்துடன் கூடினவளாய் சிவனை ஸ்தோத்திரம் செய்து மன சந்தோஷத்தை அடைந்தவளுமான ரதிதேவி சிவனிடம், கை கூப்பிக்கொண்டு, அவருடைய பாத சரணங்களில் விழுந்து, தன் கணவனுக்காக மன்னிப்பைக் கேட்டாள். ஆசுதோஷியம் கிருபாளுவும் எல்லோருக்கும் வரங்களைக் கொடுப்பவரான பகவான் சம்பு அபலையான ரதியைப் பார்த்து, கருணைமேலிட்டவராக சாந்த முகத்துடன் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (500)

"ஹே ரதி, இன்று முதல் உன் பதி "அனங்கன்" என்ற பெயருடன் விளங்குவான். அவன் சரீரமில்லாமல் சகல சராசரங்

களிலும் சஞ்சரிக்கும் தன்மையை அடைவான். எங்கும் வியாபித்திருப்பான்.'' அவள் தன் பதியை மீண்டும் காண்பதற்கு அநேக வார்த்தைகளையும் அவர் சொன்னார். (501)

''எப்போது பிருத்வியினுடைய பாரத்தைக் குறைப்பதற்கு யது வம்சத்தில் ஹரியானவர் கிருஷ்ணனாக அவதரிப்பாரோ, அந்தச் சமயம் உன்னுடைய பதி அவருக்கு பிரத்யும்னன் என்கிற பெயருடன், உற்பத்தியாவான். இவ்விதமின்றி, என்னுடைய வார்த்தைகள் மாறாத வசனங்கள்.'' (502)

சிவனுடைய வார்த்தைகளைக் கேட்டு ரதி சந்தோஷத்துடன் சென்றாள். நான் இப்போது வேறொரு மகிமைவாய்ந்த கதை சொல்ல ஆரம்பிக்கிறேன். பிரம்மாதி தேவர்கள் இந்த விஷயங்களைக் கேட்டு வைகுண்டத்திற்குச் சென்றார்கள். (503)

[தியானம்

ஹே லலிதா, மன்மதன் எரிந்துபோனான் என்று நாமெல்லோரும் கேள்விப்படுகிறோம். ஆனால் அவன் உன் முகத்தில் புகுந்துகொண்டான் அம்மா. உன் பதியினுடைய அபாரக் கருணையால், ரதியானவள் பல வரங்களைப் பெற்றதைக் கேள்விப்பட்டோமே, அவைகள் எல்லாம் உன் கிருபையால், உன்னிடமிருந்த பக்தியால் அல்லவா கிடைக்கப்பெற்றாள். உன் கணவர் மிக்க ரௌத்ரமாக தன் மூன்றாவது நேத்ரத்தைத் திறந்துதான் காம விரஹிதன் என்றும், அபராஜிதர் என்றும் நிரூபித்தார். ஆனால் உன் லாவண்யத்தையும், செய்கைகளையும், உன் தேஜஸ்ஸுகளையும் தவத்தின் அடக்கங்களையும் சீல குணதிகளையும் கண்டு, சம்பு அவைகளுக்கு வசியப்பட்டு, உன் மோஹத்தால் காமேசனாக ஆகிவிட்டார். அம்மா திரிபுரசுந்தரி, உன் வாழ்க்கையையும் உன் புண்ய கீர்த்திகளையும் நான் பாடி ஆடி மகிழ்ந்து, கிருதகிருத்யனாக ஆகவேண்டும். ஹே சம்புவின் ஒஷதியே, மஹாதேவனின் மனோஹரியே, பரமாம்பிகா, மஹேஸ்வரி, உன் அம்ருதமயமான திருஷ்டிகளால் என்னை நனைய வை. உன் குளிர்ந்த பார்வையால் மீன் குஞ்சுகளைப் போல் உன் திருஷ்டியினால் வளர வை. உன் தயையினால் என்னிடமிருக்கும் தோஷங்களையும் பாபங்களையும் விலக்கு. பகவான் நாராயணரிடம் வாசுதேவ பக்தனான என்னைச் சேர்த்து வை. கருணைக்கடலே, தாயே, என்னை ரக்ஷிப்பாயாக. என் அபராதங்களைப் பொறு.]

சகல தேவர்களும், விஷ்ணுவும், பிரும்மாவும் "கிருபாதாம்" என்று பெயர்பெற்ற சிவனிடம் சென்றார்கள். ஒவ்வொருவரும் அலக் அலக்காகவும், தனித்தனியாகவும், பிறகு ஒன்றுகூடிச் சேர்ந்தும் அந்தத் தாண்டவ மூர்த்தியை ஸ்தோத்திரம் செய்தார்கள். சசியை ஆபரணமாகக்கொண்ட சம்பு மனம் குளிர்ந்து, பிரசன்னமடைந்தார். (504)

விருஷபவாகனன சம்பு சொன்னார். "ஹே தேவர்களே, சொல்லுங்கள். எதற்காக இவ்விடம் வந்திருக்கிறீர்கள்?" பிரும்மா பதில் சொன்னார். "ஹே பிரபோ, தாங்கள் அந்தர்யாமி. எல்லாவற்றையும் அறிவீர். பக்தி பூர்ணமாக நாங்கள் உங்களைச் சரணமடைகிறோம்." (505)

"ஹே சங்கரபகவான், எல்லா தேவதைகளுக்கும் பரம உத்ஸாகம் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் தங்களுடைய திருமண வைபவத்தைப் பார்த்து ஆனந்தப்படுவதற்கு ஆசைப்படுகிறார்கள்." (506)

"மதனனுடைய மதத்தை அடக்கினவரே, தாங்கள் தேவர்களுடைய மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்ய யத்னம் செய்ய வேண்டும். கிருபாசாகரமே, காமதேவனைப் பஸ்மமாக்கி, ரதி தேவிக்கு அபயம் கொடுத்து உலகங்களைக் காப்பாற்றின மஹா புருஷரே, நீர் செய்தது நல்லது, நல்லது." (507)

"ஹே நாத, ஸ்ரேஷ்டமான ஸ்வாமியாகிய தங்களுக்கு சகஜமான ஸ்வபாவம் வரட்டும். ஹே பிரபோ, மன்மதனுக்கு தண்டம் கொடுத்து, அதன் பின்பு அபார கருணையுடன் ததும்பும் மஹாநுபாவா, மஹாத்மாவே, பார்வதி தேவியினால் கடினமான தபஸ் செய்யப்பட்டது. அவள் உம்மை தன் பதியாக வரித்திருக்கிறாள். தாங்கள் அவளை அங்கீகாரம் செய்ய வேண்டும்." (508)

பிரும்மாவின் பிரார்த்தனைகளைக் கேட்டு, பிரபுவான சங்கரர் தன் குலதெய்வமான ஸ்ரீராமச்சந்திரனுடைய சுகத்தைத் தரும் வார்த்தைகளை நினைவில் வைத்துக்கொண்டு, பிரசன்ன மனத்துடனும் மலர்ந்த முகத்துடனும் "அப்படியே ஆகட்டும்," என்று அருளினார். அந்த சமயம் தேவதைகள் துந்துபி வாசித்தார்கள். புஷ்பங்களை வாரி இறைத்தார்கள். ஜயம், சம்புவுக்கு ஜயம், உமைக்கு ஜயம், உமாசங்கரருக்கு ஜயம் என்று கோஷித்தார்கள். தேவதைகளின் ஸ்வாமிக்கு ஜயம் என்று ஆரவாரித்தார்கள். (509)

[தியானம்

ஹே உமா, ஜயஸ்வரூபிணியாக விளங்கும் கருணாநிதே, மனு, சந்திரன் முதலிய உபாஸகர்களால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீவித்யா ஸ்வரூபிணி, தியானம், தியானம் செய்கிறவர், தியானம் செய்யப்படும் பொருள் ஆகிய இம்மூன்றுக்கும் திரிபுடி ரூபமாக இருப்பவளே, யாகம், தானம், ஆசாரம், மனதை, அடக்குவது, அஹிம்சை, வேதம் கற்று ஓதுதல், இன்னும் சத்காரியங்களைச் செய்வது, இவைகளையும்விட தியான யோகத்தால் பரம்பொருளை உள்ளே பார்ப்பது என்கிற மேலான தர்மத்தை யாக்ஞயவல்கியர் சொல்லியிருக்கிறார். இவைகளையே ஸநாதன தர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன. எங்களைப் போன்ற ஜீவாத்மாக்கள் ஸமஷ்டியின் ரூபமான ஹிரண்யகர்ப்பரின் ஸ்வரூபமாக இருப்பவர்கள். உமா, உன்னையும் உன் பதியான சங்கரரையும் நான் நமஸ்கரிக்கிறேன். சுத்தஞான ஸ்வரூபமாகவும் கர்ம ஸ்வரூபமாகவும் இருக்கிற உங்களை நான் நமஸ்கரிக்கிறேன். இவ்விரண்டின் புண்யபலனாகிய நாராயணரின் கிருபையை நான் அடையவேண்டும்.]

[தியானம்

ஹே மஹாதேவா, உம்முடைய வைபவத்தை யாரால் எவ்வாறு வர்ணிக்கமுடியும்? அன்றொருநாள் ஜைகீஷவ்யர் அஷ்ட அணிமாசித்திகளை வாரணாசியில் உம்மிடமிருந்து பெற்றார். கர்க்கர் என்னும் முனிவர் அறுபத்திரண்டு கலைகளில் தேர்ச்சியையும் ஜோதிஷ சாஸ்திரத்தின் எல்லையாகிற நிபுணத்வத்தையும் தீர்க்கமான ஆயுளையும், சத்சந்தானங்களையும், பிரும்மவாதிகளான புத்ரர்களையும் சரஸ்வதிநதி தீரத்தில் சம்புவினிடம் வரங்களாகப் பெற்றார். மஹத்தான தபஸின் பலனாக மஹா தேஜஸ்வியும் மஹாயோகீஸ்வரரும் மஹாயசசுடன் கூடின வேதவியாஸர் என்கிற புத்திரரை பராசரர் வரமாகப் பெற்றார். சூலமாண்டவ்யர் சூலத்தினால் ஏற்படும் பயத்திலிருந்து விடுபட்டு சகலதீர்த்தங்களின் ஸ்நான பலனையும் தீர்க்கமான ஆயுளையும் ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய பலன்களையும், விருக்ஷபவாகனரும், மஹேஸ்வரரான கிருத்திவாஸனுடைய பக்தியின் பலனைப் பெற்றார். வேதவ்யாஸரும், மஹாயசஸ்வியும் வாசுதேவ பக்தரான சுகரை தன் பிரிய புத்ரனாக பகவான் ஸ்தாணுவிடமிருந்து வரமாகப் பெற்றார். கருணாநிதியும் ஆர்த்திகளின் குறைகளைப் போக்குகிறவரும் ஆசுதோஷியான பகவான் சம்பு

சுகரின் பிரிவால் வருத்தமடைந்த வேதவியாஸருக்கு அவருடைய நிழல் போல சதா சுகமஹரிஷியாகக் காக்ஷி அளிக்கும் வரத்தைக்கொடுத்தார். இப்பேற்பட்ட மஹாத்மாவும், திரியம்பகரும், விருஷாகபி என்கிற பெயர் பெற்றவர், அம்சர், பகர், பிநாகி, அஹிர்புதன்யர், அஜைகபாத், ருதர், சம்பு, பித்ருரூபர், மஹேஸ்வரர், ஹவனர், ஈஸ்வரர், ருத்ரர், ஈஸானர் என்று பலவிதமாக சதருத்ரியத்தாலும் ஜேஷ்டசாமம், ரதந்திரம் முதலிய சாகைகளால் ஸ்துதி செய்யப்பட்டவரும் ஸஹஸ்ரசீர்ஷங்கள் உள்ளவரும், மங்களங்களைப் பக்தர்களுக்கு கொடுக்கும் சிவனென்பவரும், பவர் என்கிற மூர்த்தியால் விளங்கும் பகவானை நான் நமஸ்கரிக்கிறேன். ஸ்துதிக்கிறேன், ஜயசப்தத்துடன் அவரைப் புகழ்கிறேன். அவர் கிருபையை வேண்டுகிறேன்.]

நல்ல சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சப்தரிஷிகள் வந்தார்கள். அவர்களை உடனே பிரும்மா ஹிமவானிடம் அனுப்பினார். அவர்கள் முதலில் பவானியைக் கண்டார்கள். அவளிடம் அவளுக்கு ஆனந்தத்தைத் தரும் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார்கள். (510)

"நாரதருடைய வசனங்களின்படி நடக்கிற உமையே, முன்பு நீ எங்களால் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்கவில்லை. இப்பொழுது உனக்கே பெரும் நடுக்கம் தரும் சமாசாரத்தைக் கேட்பாய். மஹேசரால் காமதேவன் பஸ்மமாக்கப்பட்டான்." (511)

## மாஸபாராயணம்—மூன்றுவது நிறுத்தம்

கிரிஜா இந்த வார்த்தைகளைக் கேட்டு சிரித்துக் கொண்டாள். "ஹே விக்ஞானிகளான முனீஸ்வரர்களே, உங்களுக்கு இப்போதுதான் காமதேவனை அவர் எரித்த சமாசாரம் தெரியும். நீங்கள் அவரை இதுவரை ஒரு காமியாக நினைத்ததும் எனக்கு இப்போதுதான் தெரியவருகிறது." (512)

"ஆனால் அவரைப்பற்றி எனக்கு முன்னாலேயே தெரியும். சதாசிவரான அவர் ஒரு பெரிய யோகி. ஜன்மமில்லாத அநாதியான புருஷன். ஒரு தோஷமும் இல்லாதவர். காமத்தை ஜயித்தவர். போகங்களைத் தியாகம் செய்த மஹாபுருஷன். இவ்விதமாக நான் சிவபெருமானை அறிவேன். அதனால் அவரிடம் என் மனம் வசனங்கள் பிரேமையால் தூண்டப்பட்ட கர்மங்கள் யாவற்றையும் அர்ப்பணம் செய்துவிட்டேன். நான் வாழ்வதும்

என்னுவதும், சொல்வதும் சம்புவுக்கே. அவருடைய மனத் திருப்தி சந்தோஷம் ஆகியவைகளே என் லக்ஷணங்கள். அவருடைய சேவையே என் பரமபோக்யம்'' என்று பதில் உரைத்தாள். (513)

''ஹே முனீஸ்வரர்களே, கேளுங்கள். அவர் கிருபாநிதி. சத்யசந்தர். உங்களால் காமனை அவர் பஸ்மமாக்கிவிட்டார் என்று சொல்லப்படும் செய்தி அவிவேகமான சொற்கள் என்று நான் நினைக்கிறேன்.'' (514)

''ஹே தபோதனர்களே, நெருப்பின் உக்ரமான தேஜஸ்ஸை பனியானது ஒருக்காலும் அழிக்கச் செய்யாது. இதை அறியாமல் பனியானது நெருப்பை அணுகுமாகில், அது அழிந்துதானே போய்விடும். இந்த மாதிரி மன்மதன் சிவனுடைய பிரபாவத்தை அறியாமல் அழிந்துபோனான்.'' (515)

பவானியின் வசனங்களைக் கேட்ட சப்தரிஷிகள் அவளுடைய பிரேமை பக்தியைக் கண்டு ஆச்சர்யமடைந்து, அவளுடைய மஹத்தான விஸ்வாசத்தையும் கண்டு சந்தோஷமடைந்தார்கள். அவர்கள் பவானிக்கு நமஸ்காரம் செய்துவிட்டு ஹிமவானிடம் சென்றார்கள். (516)

கிரிகளுக்குப் பதியான ஹிமவானிடம் எல்லா விஷயங்களைச் சொன்னார்கள். மன்மதனின் அழிவைக் கேட்டு ஹிமவான் வருத்தமடைந்தான். பிறகு ரதிக்குக் கொடுத்த வரதானங்களைக் கேட்டு ஹிமவான் மீண்டும் சந்தோஷமடைந்தார். (517)

சிவனுடைய பெருமைகளை மனதில் தீர அறிந்துகொண்டு, மிக்க மரியாதையுடன் அந்த சப்தரிஷிகளை வெகுமானித்து அவர்களின் உதவியினால் சுபமான நாள், சுபமான முகூர்த்தம் இவைகளை வேதங்களில் சொல்லியபடி நிர்ணயித்து சீக்கிரமாக லக்னம் நிச்சயம் செய்து பத்திரிகையை எழுதச் சொன்னார். (518)

பிறகு ஹிமவான் அந்த லக்னபத்ரிகையை சப்தரிஷிகளிடம் கொடுத்து, அவர்களின் பாதகமலங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்தார். அவர்கள் அந்த பத்ரிகையை எடுத்துக்கொண்டு பிரும்மாவினிடம் சேர்ப்பித்தார்கள். அந்த புவனமங்களமான பத்ரிகையைப் படித்துப் பார்த்து, பிரும்மா தன் ஹ்ருதயத்தில் ஆனந்த எல்லையை அடைந்தார். பிரேமையினால் கண்ணீர் பாஷ்பங்கள் மலர்களைப் போல அவருடைய கன்னங்களில் உதிர்ந்தன. (519)

[தியானம்

ஹே சம்போ, பகவன், ஸர்வலோகேசா, லோகநாதரே, விருஷபத்வஜ, கர்மமார்க்கங்களின் சூக்ஷ்மங்களை அறிந்த மஹா பிரபோ, ஜந்துக்களின் பிறப்பு மரணம், கர்மத்தினால் ஏற்படும் சுகதுக்க அனுபவங்கள், பயங்கள், நசிவின்கார்ய காரணங்கள், எல்லாவற்றையும் நீர் நன்கு அறிகிறீர். அதேபோல, லோகங்களின் வளர்ச்சியையும் அழிவையும் சம்சயமில்லால் அறிந்த மஹாத்மாவே, குருபூஜை, ஸ்ரேஷ்டமான தபம், யாகம், தான தர்மங்கள் இவைகளின் சூக்ஷ்மங்களை அறிந்த மஹாஞானியே, தேவ கார்யங்கள், பித்ருகார்யங்களின் விசேஷங்களை அறிந்து அவைகளை உலகங்களின் நன்மைக்காக பலதடவை பல சிஷ்யர்களுக்குப் போதித்த ஞான மஹா ஆசார்யரே, தக்ஷிணாமூர்த்தி ஸத்குருவே, க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞர், சேஷன் சேஷி என்கிற பதங்களின் அர்த்தத்தையும், சாங்கியம், யோகம், பாசுபதம், வைஷ்ணவத்தின் சிறப்பு முதலியவைகளைத் தெரிந்த மஹா பிரபோ, த்ரியக்ஷா, திரயம்பகரே, திரிதசாதிபா, திரிபுரத்தை எரித்த மஹா புருஷா, காமனின் அஹங்காரத்தை அழித்த ஊர்த்வரேதஸ்ஸே, திரிபதகா என்று சொல்லப்படும் கங்கையைத் தலையில் தரித்த மஹானுபாவா, தக்ஷயக்ஞத்தை அழித்த காலாந்தகரே, சூலபாணி, பினாகி, பாசுபத அஸ்த்ரத்தை அர்ஜுனனுக்குக் கொடுத்த உத்தம புருஷரே, தேவகார்யங்களில் சிரத்தை எடுத்தும் அசுரகாரியங்களிலும் சிரத்தையுடன் அவர்களையும் காப்பாற்றி பக்தர்களுக்கு ஹிதம் செய்யும் பவரே, உம்மை பக்தியுடன் ஆசார ஸ்ரேஷ்டங்களுடன் நமஸ்கரிக்கிறேன். ஜலம் புஷ்பம், வில்வம், பலாசம், பால், நெய், தயிர், குங்கலியம், தேன், பஸ்மம், ஞானபக்தி கர்மங்களின் பலன்கள், மூலமாகவும் ஆதாரத்துடனும், மஹாவிஸ்வாசத்துடனும் நான் பூஜிக்கிறேன். ஹே லிங்கமூர்த்தி, தர்ம நிச்சயத்துடனும், ஸ்வர்க்கம், கீர்த்தி, தனம், பார்யை, தான்யம், நரர்களில் ஸ்ரேஷ்டனாக விளங்குவது, சத்புத்ர புத்ரிகள், வம்சவிருத்தி, ஞான ஐஸ்வர்யங்கள் எல்லாவற்றையும் அளிக்கும் மஹாத்மாவே, சம்புவே, உம்மை நான் சரணம் அடைகிறேன்.]

[தியானம்

ஹே சாவித்திரி, பிரும்மபத்னி, வாணி, சதி, வாக்ரூபமாக உலகத்தை சந்தோஷப்படுத்துகிறவளே, அக்ஷரங்களின் ஸ்வரூபங்களாக விளங்குபவளே, வீணையிலும் கானத்திலும்

இஷ்டமுள்ளவளே, வெண்பட்டு, வெண்மையான ஹ்ருதயம், சுத்தமான சொற்கள் உடையவளே, சதா வேதத்தை கோஷம் பண்ணிக் கொண்டிருக்கும் வேதமாதாக்களான காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி தேவியை நான் நமஸ்கரிக்கிறேன். வேத வியாஸருக்கும் யாக்ஞயவல்கியருக்கும் முருகனுக்கும் அருள் பண்ணின தெய்வமே, உம்மைப் பூஜித்து வணங்குகிறேன். சப்தபிரும்மமே, உன்னை நமஸ்கரிக்கிறேன். எனக்கு ஞானத்தைக் கொடுத்து மன இருளை அகற்று. உன் கிருபையால் நான் உமை சம்பு, சீதை ராமன் இவர்களை ஸ்தோத்திரம் செய்வதற்கு அனுக்ரஹிக்கவேண்டும். பகவான் நாராயணருடைய கிருபையையும் நான் அடையவேண்டும்.]

பிரும்மா லக்னபத்ரிகையை எல்லோருக்கும் வாசித்துக் காண்பித்தார். எல்லா முனிஸ்ரேஷ்டர்களும் தேவகூட்டங்களும், சுமனஸ்ஸுடனும், சுஹ்ருதயம் கொண்ட சாதுக்களும் சந்தோஷமடைந்தார்கள். ஆகாயத்தில் புஷ்பங்கள் வர்ஷிக்கப்பட்டன. துந்துபி முழக்கங்கள் கேட்கப்பட்டன. மங்கள த்வனிகள் எங்குபார்த்தாலும் கேட்கப்பட்டன. மங்கள கலசங்கள் தயாரிக்கப்பட்டன. (520)

எல்லா தேவதைகளும் தங்கள் தங்கள் வாகனங்களைத் தயாரித்தார்கள். கல்யாணங்களைக் கொடுக்கும் மங்கள சகுனங்கள் தோன்றின. க்ருதாசி போன்ற அப்சரஸ்ஸுகள் நர்த்தனமாடினர்கள். (521)

பகவான் சிவனுடைய பரிவாரங்கள் தங்கள் ஸ்வாமியின் விவாஹமஹோத்ஸவத்திற்கு அவரை ஸ்ருங்காரம் செய்ய ஆரம்பித்தார்கள். ஸ்வாமியின் ஜடைகளை அலங்கரித்து, அவைகளின் மேல் சர்ப்பங்களின் மகுடத்தை வைத்து அலங்கரித்தார்கள். சர்ப்பங்களைக் குண்டலங்களாகவும் கங்கணங்களாகவும், தேகத்தில் விபூதிபஸ்மத்தையும், சிம்மத்தின் தோல் ஆடையையும் உடுத்தி அவரைச் சிங்காரித்தார்கள். (522)

சிவனுடைய அழகான நெற்றியில் சந்தனம் இட்டு சந்திரனை நெற்றியின் மேலும், கங்கையை தலையின் உச்சியிலும் அலங்காரமாக வைத்து அலங்கரித்தார்கள். மூன்று நேத்திரங்கள் உடைய அவர் சர்ப்பத்தின் யக்ஞோபவீதத்துடனும், கண்டத்தில் விஷமும், கழுத்தில் மனிதர்களுடைய மண்டை ஓடுகள் முதலியவைகளால் தொகுக்கப்பட்ட அநேக மாலைகளுடன் அழகாக பிரகாசித்தார். இந்தப் பிரகாரம் அவருடைய வேஷம் அசுபமான சேர்க்கைகளுடன்கூடவிருந்தாலும், அந்த பவராகிய ஸ்வாமி

கல்யாணங்களின் பொக்கிஷமாக இருக்கிறார். அவர் பக்தர்களுக்கு சகலத்தையும் வாரிக்கொடுக்கும் க்ருபாளுவன்றோ? (523)

ஒரு கையில் திரிசூலம், மற்றொருகையில் மரு அழகாய் விளங்கின. பகவான் சம்பு விருஷபாரூடராக மாப்பிள்ளை கோலத்தில் வீற்றிருந்தார். துந்துபிகளின் முழக்கங்கள் ஏற்பட்டன. மாப்பிள்ளை ஊர்வலம் அழகாகச்சென்றது. சிவனுடைய காக்ஷியைப் பார்த்து தேவர்கள் இப்பேற்பட்ட யோக்யமான மாப்பிள்ளையை உலகத்தில் காணமுடியாது என்று சிரித்துக் கொண்டு சொல்லிக்கொண்டிருந்தார்கள். (524)

விஷ்ணு, பிரும்மா முதலிய தேவர்கள் தங்கள் தங்கள் வாகனங்களில் ஏறிக்கொண்டு அந்த கூட்டங்களின் நடுவே வந்துகொண்டிருந்தார்கள். தேவதைகளின் கூட்டங்களோ பரம சுந்தரமான காக்ஷியாக விளங்கியது. இவ்வாறு அவர்கள் மேன்மையுடன் விளங்கியபோதிலும், மாப்பிள்ளையின் சுந்தரமான யோக்யதைகளுக்கு ஈடு ஆகமாட்டா. (525)

[தியானம்

ஹே ராமா, உமா, உமாபதி எப்படி ஆதித்யனைக் கண்டு பத்மம் மலருகிறதோ அதுபோல என் மனம் உங்கள் தியானத்தால் மலரவேண்டும். எப்படி தாமரைப்பூ தண்ணீருக்கும் மேலே நோக்கி மந்தஸ்மிதமாக ஆதித்யனைக் கண்டு குளிர மகிழ்கிறதோ, அதுபோல உங்கள் ஸ்நேகத்தால் என் ஆத்மா சந்தோஷமடையவேண்டும். தர்மம் விக்னம் அடையாமலும், தைத்யர்களிடமிருந்து பயமில்லாமல் இருத்தலையும், அசுரர்கள், யாதுதானர்கள், க்ரூரகர்மங்கள் செய்யும் ராக்ஷஸர்கள், ஆகியவர்கள், தாமஸ ராஜஸ குணத்தால் ஏற்படும் கெட்ட செய்கைகளைத் தடுப்பதற்காகவும் யாகம் தானம் முதலிய நற்செய்கைகளாற் அடையவேண்டிய மஹேஸ்வரரை நான் துதிக்கிறேன். பிராம்மணர்களையும், பகவான் விஷ்ணுவையும், பிரும்மாவையும், ஸுர ஸ்ரேஷ்டர்களையும் வந்தனம் செய்கிறேன். உமா மஹேஸ்வரா, உங்களுக்கு நித்ய மங்களங்களும் நித்ய ஜயமும் வரவேண்டுமென்று நான் கோஷிக்கிறேன். விக்னராஜனை கணபதியை ஸ்ருஷ்டித்த சங்கரரை நமஸ்கரிக்கிறேன். ஸர்வாத்மன், ஸர்வஞானி, பினாகி, பயத்தைப்போக்கி மன சந்தோஷத்தை கொடுக்கும் ருத்ரரே, தர்மத்தில் மிக்க அன்புள்ளவரே, காலகண்டரே, காலாக்னி ரூபமுள்ளவரே, கபால தண்ட பாசம், அங்குசம், சூலம் முதலிய ஆயுதங்களை தரிப்பவரே,

ஹேமவதியின் நாதரே, தங்க சுக்லருக்கும், மஞ்சள் சுக்லருக்கும் கிருஷ்ண நாதருக்கும் நாகாபரணருக்கும், பஞ்ச யக்ஞங்களின் பலனாகவிருப்பவரும், பஞ்சாக்ஷர வித்யை ரூபமாக உள்ளவரும் மூன்று நேத்திரங்கள் உள்ளவருக்கும், பதினாறு அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்துக்கு ஈஸ்வரரும், சாந்த ஆத்ம ஸ்வரூபமுள்ள வருக்கும், குபேரனுடைய சிநேகிதருக்கும் நமஸ்காரம். தீர்த்த தத்வங்களின் ஸாரமாகவிளங்கும் மூர்த்தியே, ருக், யஜுஸ் ஸாமம், ஓங்காரம் முதலிய ஸ்வரூபமுள்ளவரே, நாதபிரும்ம ஸ்வரூபரே, நமஸ்காரம். மூலபிரக்ருதியாகவும், பிரதான புருஷ ராகவும் விளங்கும் பரமேஸ்வரருக்கு நமஸ்காரம். சாக்ஷாத் சிவஸ்வரூபமாக விளங்கும் லிங்கமூர்த்திக்கு நமஸ்காரம். யம அக்னிஸ்வரூபமாக தக்ஷயக்ஞத்தை நாசம் பண்ணின ருத்ரருக்கு நமஸ்காரம். கிருபாளுவாகிய நீர் என் குற்றங்களை க்ஷமிக்க வேண்டும்.]

(அம்பிகை, சைலபுத்ரி, கிரிஜா, கல்யாணி, ஜாலந்திர பீடத்திலும் ஒட்யாண பீடத்திலும் வீற்றிருப்பவளே, கங்கை யமுனை, நர்மதை, காவேரி, வைகை இவைகளால் போற்றப்பட்ட உமா, காமாக்ஷி, கம்பா நதியில் கருணைக்கடலாக விளங்கும் மூர்த்தியே, என்னை ஆட்கொள்ளவேண்டும். என்னுடைய மமகாரம் என்னும் இருள் நீங்கி, சாதுஜனங்களின் வேத வாக்யங்களின் உண்மையான அர்த்தத்தை உணர்ந்தவனாய், என் புண்யத்தின் பயனாக உனது சரண கமலத்தை என் ஹ்ருதய கமத்திற்குள் திருடமாக நிறுத்திக்கொள்வதற்கு அருள் பண்ணுவாயாக. ஹே சஞ்சீவினி, பரமபாவனி, அந்தர்முகி, பஹிர் முகிஸ்வரூபமாக விளங்கும் பிரும்மாண்டத்தின் பரம தேஜஸே, கவ்யம் ஹவ்யம் இவைகளாக விளங்கி பித்ருக்களையும் தேவர்களையும் ரக்ஷிக்கிற மூர்த்தியே, ஸர்வதேவ மயமாக விளங்கும் சம்புமோஹினி என்னை ரக்ஷி.)

அப்பொழுது பகவான் விஷ்ணு எல்லா தேவதிக்பாலர் களையும் கூப்பிட்டுச் சிரித்துக்கொண்டு சொன்னார். "எல்லா தேவர்களும் தனித்தனியாக தம்பதிகள் சகிதம் பராத் ஊர்வலத் திற்குச் செல்லுங்கள்." (526)

"நாம் இந்த மாப்பிள்ளை ஊர்வலத்திற்கு லாயக்கில்லை. நகரத்தில் நுழையும்போது, நம்மைப்பார்த்து எல்லோரும் சிரிப் பார்கள்." விஷ்ணுபகவானுடைய வார்த்தைகளைக்கேட்டு தேவர் களும் சிரித்தார்கள். அதன்படி அவர்கள் தங்கள் பத்னிக ளோடு தனித்தனியாகச் சென்றார்கள். (527)

மஹாதேவர் தன் மனத்திற்குள் சிரித்துக்கொண்டார். விஷ்ணு பகவானுடைய வசனங்கள் எப்பொழுதும் இப்படிப் பட்டவைகள்தான். மனத்திற்குப் பிடிக்காதவைகளாக விருக்கும். அதிபிரியரான விஷ்ணுபகவானின் வார்த்தைகளைக் கேட்டு பகவான் சிவன் பிருங்கியைக் கூப்பிட்டு தன் கணங்களை ஒன்று சேர்க்கும்படி சொன்னர். (528)

சிவனுடைய ஆக்ஞையைத் தலையில் தரித்து எல்லா பரிஜனங்களும் வந்தார்கள். அவர்கள் ஸ்வாமியின் சரண கமலங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். விதவிதமான சவாரிகளுடன் போய்க்கொண்டிருந்தார்கள். அநேகவிதமான வேஷங்களைத் தரித்துக்கொண்டிருந்தார்கள். தன்னுடைய பரிவாரங்களைப் பார்த்து சிவன் தானே சிரித்துக்கொண்டார். (529)

சிலபேர்களுக்கு வாய் கிடையாது. சிலர்களுக்கு அநேக வாய்கள் இருந்தன. சிலர்களுக்கு கைகள் கிடையாது. இன்னும் சிலபேர்களுக்கு அநேக கைகள் இருந்தன. பலநேத்ரங்கள் கொண்டவர்களும், ஒரு நேத்ரமும் இல்லாதவர்களும், சிலர் குண்டர்களாகவும், சிலர் பலஹீனர்களாகவும் காக்ஷி அளித்தார்கள். (530)

[தியானம்

ஹே நாராயணு, முன்பு ஒரு காலத்தில் ஸர்வலோகங்களின் ஹிதத்திற்காக பிதாமஹரான பிரும்மாவினுல் வஸிஷ்டருக்கு நாராயணரைப் பற்றிய உபதேசம் செய்யப்பட்டது. ஜனர்த்தனருடைய மகிமை சொல்ல முடியாதபடி அனந்தமாகவுள்ளது. தேவதேவரும், ஜன்மமில்லாதவரும், அச்சுதரும், கிருஷ்ணரும், அவ்யயமான பொருளும், ஸர்வபாபங்களைப் போக்குகிறவரும், சுத்தமான தத்வமும், மோக்ஷத்தை பிரும்ம வாதிகளுக்குக் கொடுப்பவரும், மனது, கர்மாக்கள் வாக்குக்கள் முதலியவைகளால் வித்வான்கள் புண்யகர்மங்களைச் செய்து அடைபவர்களான விஷ்ணுவாகிய நாராயணரை நான் ஜபயக்ஞம் செய்து புருஷோத்தமர் என்று நமஸ்கரிக்கிறேன். பூஜை ஆராதனம் முதலியவைகளைச் செய்கிறேன். ஸநாதனமான புருஷரே, பிருகுமுனிவரின் பாதத்தை ஹ்ருதயத்தில் தரித்துக் கொண்டிருப்பவரே, ஓம் நமோ நாராயணுய என்று ஜய கோஷத்துடன் ஸ்துதிக்கிறேன். பத்மயோனியில் உண்டானவளும், கிருஷ்ண வல்லபையும், ஹரிபிரியையுமாகிய லக்ஷ்மி

யையும் நான் நமஸ்கரிக்கிறேன். ஸர்வார்த்த ஸாதகமான ஓம் நமோ நாராயணுய என்கிற மந்திரத்தை மஹாலஷ்மியின் கிருபையால் உச்சரித்து, எந்த விப்ரேந்திரர்கள் பந்துக்களுடன் விஷ்ணு லோகத்தை அடைகிருர்களோ, அந்த வேதாந்த ஸாரமான மந்திரத்தையும் த்வாதசாக்ஷர மந்திரமாகிய ஓம் நமோ பகவதே வாசுதேவாய சுத்த ஞானஸ்வரூபிணே, என்கிற பரம சிலாக்யமான மந்திரத்தையும் ஜபம் செய்து உன் பதத்தை நான் அடையவேண்டும். ஷடாக்ஷரம் என்கிற ஓம் நமோ பகவதே விஷ்ணவே நமஃ என்கிற மந்திரத்தை விஷ்ணு ஸூக்தத்துடன் ஜபம் செய்து தியான யோகத்தில் நான் உன்னை வந்தடைகி றேன். வாசுதேவரே என்கதி. த்வாதச ஆத்மாவான நீர் புராதன ரிஷி. நீரே மஹாபிராக்ஞயர், தபஸ், தபஸ்ஸின் பலன். முன்பு ஒரு காலத்தில் யக்ஞ தடத்தில் வாசுதேவம் என்கிற வாணியைக் கேட்டு, எல்லா பிராம்மணர்களும் ஆச்சரியப்படும்படி, பிரும்மா முதலானவர்கள் சந்தோஷத்துடன் உம்முடைய மகிமையைக் கேட்டார்கள். விஷ்ணுவினுடைய பதத்தைக் கொடுக்கும் வாசுதேவ மந்திரமே, என்னுடைய கோரிக்கையையும் ஆராதனத் தையும், நாராயணரே, நீங்கள் ஏற்றுக்கொண்டு எனக்கு திவ்ய ஸ்தானத்தை அளிக்கவேண்டும். ஸுவ்ரதர்களுக்குக் கிடைக்கும் பாக்யம் எனக்கும் கிடைக்கவேண்டும். நீர் கிருபாளு, மஹாத்மா, உம்மையே நான் நம்பியிருக்கிறேன்.]

[தியானம்

காமாக்ஷி, உன்னைப்போன்ற ஆசார்யனுடைய கிருபா கடாக்ஷம் என்கிற தேஜஸ்ஸால் நான் கவரப்பட்டு, பிரளய காலத்திலும் அழிவில்லாத ஸ்ரீசக்ராகாரமாக அமைந்துள்ள காமகோடி பீடத்திலும், காஞ்சியிலும், என் மனத்திலும் வீற்றிருந்து என்னையும், பக்தர்களையும் அனுக்ரஹித்துக் கொண்டிருக்கிருய். அம்பிகே, உன்பதியான காமேஸ்வரர் காஞ்சியில் ஏகாம்ரநாதர் என்கிற பெயருடனும், என் மனதில் மஹேஸ்வரர், திரியம்பகர் என்றும் ஆட்சி புரிந்துகொண்டிருக் கிருர். உன்னுடைய கிரஹத்தில் ருத்ரராகவும், காஞ்சியில் ஸ்ரீ புண்யகோடியில் வரதராஜராகவும், என்மனதில் நாராயண ராகவும் அவர் விளங்குகிருர். பரப்பிரும்ம ஸ்வரூபிணியான மஹாகாமேஸ்வரி காமாக்ஷியாகவும், காஞ்சியில் ஸ்ரீமஹாவிஷ்ணு ஸ்வரூபிணியாகவும், ஸ்ரீகாமகோடியில் ஸ்ரீகாம ராஜபீடத்தில் பிலாகாசரூபிணியாகவும், நாதபிந்துயுக்தமான பரமாகாச

ஸ்வரூபமாகவும் பிரும்ம சரீரமென்றும் ஜகத்காமகலாகாரம் என்றும் பலவிதங்களாக பல பெயர்களுடன் விளங்குகிறுர்.]

அந்த மாப்பிள்ளையான சம்புவின் ஊர்வலத்தில் சிலபேர்கள் பலஹீனர்களாகவும், முரடர்களாகவும், சுத்தமானவர்களும் சுத்தமில்லாதவர்களும், பல வேஷங்களில் விளங்கினுர்கள். மிக்க பயங்கரமான ஆபரணங்களையும், கைகளில் கபால ஓடுகளையும், புதிதான ரத்தத்தால் நனேக்கப்பட்டவர்களாகவும் சிலபேர்கள் விளங்கினுர்கள். சிலபேர்கள் கழுதைகள், நாய்கள் பன்றிகள், நரிகள் போன்ற முகங்களுடன் விளங்கினுர்கள். யார்தான் கணக்கற்ற கூட்டங்கள் உள்ள அந்த ஊர்வலத்தை எண்ணமுடியும்? இந்தவிதமாக பிரேதபிசாசம், யோகினிகளின் கூட்டங்கள் யாவும் ஒன்றுசேர்ந்து சென்றன. அவர்களை யாரால் பூர்ணமாக வர்ணிக்க முடியும்? (531)

பூதங்களும் பிரேதங்களும் சந்தோஷத்தால் ஆரவாரம் செய்து நடனம் செய்ய ஆரம்பித்தன. சிலர் பாட ஆரம்பித்தனர். அதைப் பார்ப்பதற்கு அதிவிபரீதமாகவிருந்தது. விசித்திரமான வசனங்களும் பேச்சுக்களும் கிளம்பின. (532)

மாப்பிள்ளை எப்படியோ அப்படியேதான் அந்த ஊர்வலமும் சென்றது. வழிகளில் தமாஷாக விளையாட்டுக்கள் விளையாடிக் கொண்டு சென்றுகொண்டிருந்தார்கள். இப்படி இருந்து கொண்டிருக்கும் சமயம் ஹிமவான் ஒரு அழகானதும் விசித்திர மான மண்டபம் ஒன்று கட்டியிருந்தார். அதன் அழகை வர்ணிக்கமுடியாது. (533)

ஜகத்தில் எத்தனை சிறியதும், பெரியதுமான பர்வதங்கள் இருந்தனவோ, அவைகளின் பெயர்களை வர்ணிப்பதற்கே எல்லையற்றதாகவும் இருந்தன. எத்தனை வனங்கள், சமுத்திரங் கள், நதிகள், குளம் குட்டைகள் இருந்தனவோ அவைகள் எல்லாவற்றிற்கும் ஹிமவான் கல்யாணபத்திரிகை அனுப்பி வைத்திருந்தார். (534)

அவர்கள் எல்லோரும் தங்கள் இச்சைபிரகாரம் ரூபங்களை தரித்துக்கொண்டு அழகான சரீரங்களை எடுத்துக்கொண்டு தங்களுடைய சுந்தரிகளான ஸ்திரிகளுடன் சேர்ந்து கூட்டம் கூட்டமாக ஹிமவானுடைய கிரஹத்திற்கு வந்தார்கள். எல்லோரும் ஸ்நேகபூர்வமாக மங்களகிதம் பாடினுர்கள். (535)

ஹிமவான் முதலிலேயே அநேக தங்கும் இடங்களை கட்டியிருந்தார். யதாயோக்யமாக அவர்கள் எல்லோருக்கும் தங்கும் ஸ்தானமும் வசதிகளையும் ஏற்படுத்தி, அவர்களை

வரவேற்று பூஜித்தார். அந்த நகரின் சுந்தரமான சோபையைக் கண்டு பிரும்மாவின் சிருஷ்டிநிபுணத்வம்கூட சற்று வெட்க மடைந்தது. (536)

[தியானம்

ஹே நாராயணா, உன்னுடைய மகாமந்திரங்களாகிய அஷ்டா க்ஷரம், த்வதாசாக்ஷரம், ஷடாக்ஷரம் ஆகிய வேத மந்திரங்கள் சம்புவினுடைய பஞ்சாக்ஷரம், மஹா திரிபுரசுந்தரியின் பஞ்ச தசாக்ஷரம், சதாசிவருடைய ஷோடசாக்ஷரம், ஆகிய மஹாமந்தி ரங்கள் ஸர்வார்த்த ஸாதகமான மந்திரங்கள் என்றும், வேதங் களின் ஸாரமாகவும் கருதப்படுகின்றன. ஸப்தாக்ஷரம் என்னும் மந்திரத்தில் ருத்ரர் பிரதான புருஷராக விளங்குகிறார். முன்பு ஒரு காலத்தில் ஸகல தேவர்களும் பிரும்மாவும் இந்திரனும் ருத்ரரை அணுகி, பஞ்சாக்ஷரம் ஜபித்து அவர் அருள்பெற்று கணபதியை அடைந்து அவரிடமிருந்து அஷ்டாக்ஷரத்தின் மகிமையையும் கோடிக்கணக்கான புண்யங்களைச் செய்யும் பெருமையையும், அநேக குணங்களுடன் கூடியதும், சக்தி பிஜத்துடன் கூடியதும், ஸர்வஉத்தமமான அஷ்டாக்ஷரத்தை ஜபித்து ருத்ரர், பிரும்மா முதலானவர்கள் அடைந்த கதியை அடைந்தார்களாமே. அப்பேறுபட்ட அஷ்டாக்ஷரத்தின் பெருமை என்னை வந்தடையட்டும். நாராயணரின் பக்தனான என்னிடம் எல்லோரும் கருணையுடன் விருக்கவேண்டும்.]

(அம்மா மஹாலக்ஷ்மி, உமைபோன்ற உத்தமி யாராவது இருக்கக்கூடுமோ ? தபத்தின் பிரபாவத்தாலும், ஏகாக்ர மனத் துடன் சிவனைத் தியானம் செய்து, சிவலிங்கத்திற்கு காஞ்சியில் பூஜை செய்யும் சமயம் கங்கையின் பிரவாஹத்தால் ஆபத்து நேரிடுமோ என்று பயந்து, வேறு ஒன்றும் செய்யத் தோன்றாமல் கைவளைகளையுள்ள தன் கைளாலும், பருத்த இரு ஸ்தனங்களின் குழைவினாலும் தன் பதியான லிங்கமூர்த்தியை உமா ஆலிங்கனம் செய்தவுடன், அவர் பரமானந்தமாக ருத்ரராக பிரசன்னமாகி, பிரவாஹத்தைத் தடுத்து அம்பிகையின் அபீஷ்டத்தை பூர்த்தி செய்து சந்தோஷப்படுத்தினார் என்று சொல்லப்படுகிறது. சந்தோஷமடைந்த கருணை ரூபியான அம்பிகை காமாக்ஷி என் கிற அசாதாரணப் பெயருடன் பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக காஞ்சியில் விளங்குகிறாள். மஹாகவிகளின் ஆனந்தமயமான ஸ்தோத்திரங்களின் ஆனந்தத்தால் உன்னிடம் பக்தியைப் பெருக்கச் செய்து உன் கிருபையை நான் அடையவேண்டும்.)

நகரங்களின் சோபைகளைக் கண்டு பிரும்மாவின் நிச்சய மான நிர்மாண சக்தி வெட்கமடைந்தது என்று சொன்னேன் அல்லவா. அது வாஸ்தவம்தான். வனம், தோட்டங்கள், கிணறு, குளம், குட்டை, நதிகள் இவை எல்லாம் அழகானவைகள். அவைகளின் அழகை யார் வர்ணிக்க முடியும்? ஒவ்வொரு வீட்டிலும் மங்களங்களை அறிவிக்கும் மங்களத் தோரணங்கள் கொடிகள் ரொம்ப அழகாய் விளங்கின. அங்கே விளையாடும் ஸ்திரி புருஷர்களின் கதிகளையும், சுந்தரமான பேச்சுக்களையும் கண்டு முனிவர்களுடைய மனங்கள்கூட கலங்கின. (537)

ஜகதம்பா, எந்த இடத்தில் மஹா கருணையுடன் அவதரித் திருக்கிறுளோ, அந்த நகரத்தை யாரால் வர்ணிக்க முடியும். அந்த இடத்தில் ருத்தி என்று சொல்லப்படும் ஜயலஷ்மி, சித்தி என்று சொல்லப்படும் சம்பத்தைப் பெருக்கும் அஷ்ட ஐஸ்வர்யங் கள், பரமானந்த சுகமும் நித்யமாக வாழும் அம்பிகையின் வரபிரசாதத்தை அடைவதற்கு காத்துக்கிடக்குமே. (538)

பராத் என்று சொல்லப்படும் மாப்பிள்ளை ஊர்வலம் நகரத்தின் சமீபம் அடைந்தது என்கிற சுகச்செய்தியைக் கேட்டு ஒரே சந்தோஷ ஆரவாரம் எங்கும் கேட்கப்பட்டது. அதனால் சோபை இன்னும் அதிகரித்தது. பெண் வீட்டுக்காரர்களும் மாப்பிள்ளையை எதிர்கொண்டு அழைக்கும் கூட்டங்களும் அநேக விதங்களாக சிங்காரம் செய்துகொண்டு நானுவிதமான சவாரிகளுடன் ஒன்றுகூடி மரியாதையாக மாப்பிள்ளையை வரவேற்றுர்கள். (539)

தேவதைகளின் கூட்டங்களைக்கண்டு எல்லோருடைய மனங்களிலும் சந்தோஷம் உண்டாயிற்று. அதிலும் பகவான் விஷ்ணுவைப் பார்த்து இன்னும் சந்தோஷம் அதிகரித்தது. ஆனால் சம்புவின் கூட்டங்களைக் கண்டு இந்த கூட்டத்தின் கணங்களாகிய யானை, குதிரை, முதலியன பயந்து ஓடி ஒளிந்தன. (540)

ஆனால் தீரர்களானவர்களும் வயது முதிர்ந்தவர்களும் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அந்த இடத்தில் நின்றுர்கள். ஆனால் சிறுவர்கள், பாலர்கள் பயந்துகொண்டு ஓடினுர்கள். தங்கள் வீடுகளை அடைந்து மாதாபிதாக்களினிடம் பயத்துடனும் நடுக்கத்துடனும் கீழ்க்கண்ட வசனங்களைச் சொன்னுர்கள். (541)

[தியானம்

ஹே உமா, பவழம்போல சரீரத்தை உடையவளே, சிவப்பு ரத்னங்களாலும், குருவிந்த மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட, கண்ட, மகுட பிரதேசங்களை உடைய முத்துமணியே, பட்டு ரவிக்கையைக் கிழிக்கும் ஸ்தனங்களைக் கொண்ட மஹாராஜ குமாரியே, குஸுமாயுதங்கள் கொண்ட மன்மதனுடைய வீர்யத்தின் சாரமாகிய வேகத்தோடு கூடிய குங்குமப்பூவைப் போல விளங்கும் திரிபுரசுந்தரி, பரமசிவனின் சுக்ருதங்களின் சேர்க்கையாகவிருக்கும் ஹே காமாக்ஷி, உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே ஜகன்மாதா, கோவைப்பழம்போல உதடுகளையும், முத்துக்களின் வரிசைகளால் கோக்கப்பட்ட பல்வரிசைகள் கொண்ட சுததி, அம்ருததாரை போன்ற திவ்யமான வாக்குக்களை உடைய சந்திரனே, அன்று மலர்ந்த தாமரைப்பூப் போலவும், பரமசிவன் பார்த்து, அடிக்கடி பார்த்தும் மனதிருப்தி அடையாத முகபாவங்களை உடையவளே, குளிர்ந்த பார்வைகளால் கடாக்ஷ லக்ஷ்மியை எல்லோருக்கும் எங்களுக்கும் அளிப்பவளான உன்னையும், உன் பதியையும் நமஸ்கரித்து "ஜயஜய" என்று கோஷிக்கிறேன். உங்கள் இருவர்களின் சேர்க்கையால் மிகப் பெருமைபட்ட நான் மனதிருப்தி என்னவென்று சொல்ல முடியாமல் தத்தளிக்கிறேன். நீங்கள் என்னை அனுக்ரஹம் செய்யவேண்டும். தயாமூர்த்திகளே, என்கதி நீங்களே.]

[தியானம்

ஹே விஸ்வரூபா, ஸர்வ சாஸ்திரங்களின் அர்த்தத்தின் ஸ்வரூபமே, எல்லாப் பாவங்களைப் போக்கும் வாயு ஆத்மாவான ஈசானரை நான் வணங்குகிறேன். சகல சராசரங்களின் ஸர்வ காமங்களையும் அளிக்கும் சிவமூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். ககனமென்கிற ஆகாயத்தை ஆத்மாவாக உள்ள பீம மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். திசைகளுக்கும், சூரியன் முதலிய தேவர்களுக்கும் ஆத்மாக உள்ள ருத்ர மூர்த்திக்கு நமஸ்காரம். சமஸ்த ஸௌபாக்யங்களை அளிக்கும் ஸோமாத்மாவாக விளங்குபவரும், ஸுரபி, ரோஹிணி, சனைஸ்வரன், ஸீவர்ச்சலா முதலியவர்களால் வணங்கப்படும் மஹாதேவரை நமஸ்கரிக்கிறேன். ஹவ்யம் கவ்யம் முதலியவைகளைப் பூஜித்து யஜமானராக விளங்கும் மஹாதேவரை நமஸ்கரிக்கிறேன். தக்ஷிணையை பத்னியாகக்கொண்டவரும் சகல யக்ஞங்களுக்கும் ஆத்மாவாக விளங்கும் உக்ரர்

என்கிற பெயர் பெற்ற முர்த்தியை நமஸ்கரிக்கிறேன். பூமிக்குச் சரீரமான பவமூர்த்தியை வணங்குகிறேன். அறிகிறவரும், அறியப்படுபவரும் அக்னியை அழைத்துக்கொண்டு போவருமான பசுபதி என்கிற மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். கண்களால் பார்க்க முடியாத தேஜஸ்ஸீகள் உள்ள லிங்க மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். பகவான் சம்புவினுடைய அஷ்ட மூர்த்திகளை மஹரிஷிகள் அறிந்து கொண்டு ஸர்வ பாவத்துடன் பஜித்து ஆராதனம் செய்து திருப்தி பண்ணி, மஹேஸ்வரர் என்று அழைத்த ஏகமூர்த்தியை அர்ச்சனம் பண்ணி, "கிருதக்ருத்யர்களாக" ஆகவேண்டும். மஹேசா, நீ எப்பொழுதும் என்னிடம் கிருபையோடு இருக்க வேண்டும். கிரிஜா, உன்னையும் நான் வணங்கி அருள் பெறவேண்டும் என்று வேண்டுகிறேன்.]

"என்ன சொல்லக் கூடும் கிரிஜாவின் கல்யாணவைபவ சிறப்புக்களைப்பற்றி ! இந்த மாப்பிள்ளையின் ஊர்வலம் யமராஜனின் சேனை மாதிரி பயங்கரமாக இருக்கின்றது. மாப்பிள்ளை ஒரு பயித்தியம், காளைமாடு மீது சவாரி வந்துகொண்டிருக்கிறார். பாம்பு, மண்டை ஓடு, சாம்பல் பூசிய மேனியைக்கொண்டு சவாரிவருகிறார்." (542)

"மாப்பிள்ளையின் சரீரத்தில் சாம்பல் பூசப்பட்டிருக்கிறது. நாகங்களும், கபாலங்களும் தொங்குகின்றன. அதிக வஸ்திரங்கள் இல்லாதவரும், ஜடாதாரியும், பார்ப்பதற்குப் பயங்கரமாகவிருக்கிறார். அவருடன்கூட பயத்தைத்தரும் பூதப்பிரேத பிசாசங்கள், யோகினிகள், ராக்ஷஸர்கள் இருக்கிறார்கள். இப்பேற்பட்ட மாப்பிள்ளை ஊர்வலத்தைப் பார்க்கும் உயிருடன் வாழ்பவர்கள் நிஜமாகப் புண்ணியசாலிகளாகத் தான் இருக்க வேண்டும். பார்வதியின் கல்யாண விமரிசையைப் பார்ப்பதற்கு ரொம்ப புண்ணியசாலிகளாகத்தான் இருக்கவேண்டும்." என்று பாலர்கள் தங்கள் வீடுகளில் வந்து சொன்னார்கள். (543)

மஹேஸ்வரருடைய கூட்டத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு குழந்தைகளின் மாதாபிதாக்கள் சிரித்துக் கொண்டார்கள். அவர்கள் தங்கள் குமாரர்களைப் பார்த்து "பயப்பட வேண்டாம். இது பயப்படுவதற்கு விஷயமில்லை" என்று சொன்னார்கள். (544)

மாப்பிள்ளையை எதிர் கொண்டு அழைக்கும் பெண் வீட்டுக்காரர்கள் எல்லோரையும் வரவேற்று சுந்தரமான ஜானவாசத்தில்

பங்கு எடுத்துக்கொண்டு அவரவர்களுக்குத் தங்கும் இடங்களைக் கொடுத்தார்கள். பார்வதியின் தாயாரான மேனுதேவி மங்கள ஆரத்தியை மாப்பிள்ளைக்கு எடுத்தும், அவளுடன் கூட விருந்த சுந்தரஸ்திரிகள் மங்கள கீதங்களைப்பாடியும் மாப்பிள்ளையை வரவேற்ருர்கள். (545)

அழகான கைகளில் தங்க மயமான பாத்திரத்தில் தீப ஆரத்தியை மேனுதேவி மஹா தேவரின் முன்பு எடுத்தாள். அந்த சமயத்தில் மஹா தேவருடைய பயங்கரமான வேஷத்தைக் கண்டு, பக்கத்திலிருந்த ஸ்திரிகளுக்கு பயமும் நடுக்கமும் ஏற்பட்டது. (546)

[தியானம்

ஹே உமா, மாலினி, ஹிமவானின் புண்ய ராசியே, சந்தியா காலத்தில் பூர்ண சந்திரனைப் போல முகத்தை உடையவளே, உன் தபஸ்ஸின் மகிமையால் பெருமை அடைந்தவளே, தியான யோகத்தால் ஈசானரைப் பலனாக அடைந்த தேஜோ ராசியே, நாரதரின் உபதேசத்தைக் கடைப்பிடித்து சப்தரிஷிகள் கூட ஆச்சர்யப்படும்படி மஹா விஸ்வாசம் என்கிற அனன்யார் ஹசேஷத்வத்தைக் கொண்ட பரதேவதையே, பிராம்மண பிரியே, ஸர்வ லோகங்களுக்கும் புத்தி அஹங்கார தத்துவங்களாகவும் பத்னி ரூபமாகவும், விருப்பவளே பகவானுன சம்புவின் வலக்கையைப் பிடித்தவளே, உனது சகோதரனுன நாராயணரால் பிடிக்கப்பட்ட மஹா பாக்யமுள்ள இடது கையை உடையவளே, பிறகு விவாஹ காலத்தில் மலர்ந்த தாமரை புஷ்பங்களின் இதழ் போன்ற விரிந்த கண்பார்வையாலும், மந்த ஹாஸத்தாலும், தன் இச்சை நிறைவேறி மிக்க களிப்புள்ளவளும், தனது பாக்யமான இரண்டு கைகளிலும் ஸ்வயம்வர மாலையை ஏந்திக்கொண்டிருப்பவளும், பக்தர்களை அனுகிரஹிக்கிறவளுமான பார்வத்யை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.]

[ஹே மஹேஸ்வரா, புலோமா முதலிய சுரஸ்திரிகளால் அர்ச்சிக்கப்பட்ட உன்னுடைய பத்னியின் பெருமையை பிரும்மா முன்பு ஒரு காலத்தில் பெரிய ஸ்தவராஜம் என்கிற புகழ் பெற்ற ஸ்துதிகளைச் செய்து கிருதார்த்தரானுர். அவளுடைய சௌரியத்தையோ அழகையோ, கிர்த்தியையோ பாதிவ்ரயத்தின் மகிமையையோ யாரால் வர்ணிக்க முடியும்? வேதமாதாவான சாவித்திரி இடது புறத்திலும், நாராயணி என்கிற மஹாலக்ஷ்மி வலது பக்கத்திலும், ஸ்வாஹா, ஸ்வதா, கங்கை, காவேரி தாம்ர

பர்ணி, வைகை போன்ற நதிகள், இன்னும் அநேக சித்தர்கள், லோகபாலர்களின் மனைவிகளாலும், கோடி அப்சரஸ்ஸுகளாலும் சூழப்பட்டவளுமான உன் பத்னியான லலிதா தேவியின் அழகை யார் எவ்விதம் சொல்லக்கூடும்? உருக்கி வார்த்த தங்கத்தின் நிறமுள்ளவளும் காதுகளில் மஹாதேஜஸ்ஸுள்ள கர்ண குண்டலங்களால் அழகாக விளங்குபவளும், பஞ்சாக்ஷர மந்திரத்தை ஸதா ஜபிப்பவளும் விருஷபவாகனனாகிய தங்களுடைய பாதி பாகத்தை அலங்கரித்திருப்பவளுமான ஜகதம்பிகையை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே பிரபோ, ம்ருத்யுவின் பயத்தைப் போக்கும் திரியம்பகரே, ஆயிரம் கைகளை உடையவரும், ஜடாமகுடதாரியும், சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டு சூர்ய கோடி தேஜஸ்ஸுகளால் விளங்குபவரே, அநேக தேவ பூத மனுஷ்ய கணங்களுடன் கூடின உம்மை நமஸ்கரிக்கிறேன். அழகாகச் சிரிப்பவளான உமது பத்னியை வேதமந்திரங்களுடன் பூஜித்த நாராயணரும், பிரும்மாவினாலும் செய்யப்பட்ட கல்யாண மஹோத்சவத்தில் ருத்ரருடைய வாம அங்க பாகத்தில் அங்கீகரிக்கப்பட்டு ஸதா வீற்றிருக்கும் உனது மன்மத மூர்த்தியை நான் நமஸ்கரிக்கிறேன். உங்களுடன் சம்பந்தப்பட்ட மாத்திரத்தில், கிரிஜாவைப்பெற்ற ஹிமவான் என்ன ஸ்ரேயசை அடைந்தார். பூமி, அக்னி, சந்திரன், சூர்யன், வாயு இவர்களின் ஆத்மாவாக விளங்கும் மஹேஸ்வரரே, என்னிடம் கருணையுடன் இரும்.]

பயத்தால் நடுங்கிக்கொண்டு ஸ்திரிகள் ஒளிந்துகொண்டார்கள். சிவன் கல்யாண மண்டபத்தில் நுழைந்தார். மிக்க பயத்துடன் நடுங்கும் தன் சகிக்கிளைக் கண்டு மேனாதேவிக்கு வருத்தம் ஏற்பட்டது. பார்வதியை தன் பக்கத்தில் கூப்பிட்டாள். (547)

அத்யந்தஸ்நேகத்தால் கட்டப்பட்டவளாக, மடியில் அவளை வைத்துக்கொண்டு, நீலோத்பலமான நேத்ரங்களிலிருந்து மளமள வென்று கண்ணீர்களை உதிர்த்துக்கொண்டு, குழைந்த குரலில் சொல்ல ஆரம்பித்தாள். "எந்த பிரும்மாவினால் உனக்கு இந்த அழகான ரூபம் கொடுக்கப்பட்டதோ, அதே ஸ்வாபவம் படைத்த பிரும்மா மூர்க்கத்தனமாக இவ்வளவு கோரமான ரூபமுள்ள மாப்பிள்ளையை உனக்குக் கொடுத்திருக்கிறார்." (548)

"எந்த பிரும்மாவினால் உனக்கு புவன சுந்தரமான அழகு கொடுக்கப்பட்டதோ அப்படி அதே விதாதாவினால் உனக்கென்று பயித்தியக்காரனை மாப்பிள்ளையை ஸ்ருஷ்டி செய்திருக்கிறாரே. கல்பக விருக்ஷத்தில் முளைக்கவேண்டிய பழம் ஜபர்தஸ்தியுடன்

முள்ளுகள் நிறைந்த கருவப்பட்டை மரத்தில் வளர்ந்திருக்கிறது. உன்னை நான் எடுத்துக்கொண்டு மலையின் உச்சியிலிருந்து கீழே விழுந்து விடுகிறேன். அக்னியிலோ, சமுத்திரத்திலோ விழுந்து விடுகிறேன். எனக்கு அழிவு வரட்டும். அபகீர்த்தி வரட்டும். நான் உயிரோடு இருக்கும் வரை இந்த மாப்பிள்ளைக்கு உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள சம்மதிக்கமாட்டேன்.'' (549)

ஹிமவானின் ஸ்திரியான மேனுதேவி இவ்விதம் வருத்தமடைந்ததைப் பார்த்து, சகலஸ்திரிகளும் வியாகுலம் அடைந்தார்கள். மேனுதேவி தன் புத்ரியின் மேலுள்ள அத்யந்த அன்பினுல் தழுதழுத்த குரலில் விலலாபம் செய்துகொண்டும் அழுது கொண்டும் மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். (550)

[தியானம்

ஹே மஹேஸ்வரரே, திரிபுர சுந்தரி, உங்களையே பெரும்தனமாகவும் பெரும்பாக்கியமாகவும் கருதுகிறேன். சுபமான லக்ஷணங்கள் உள்ள கிரிஜா பரமேஸ்வரரே, சுர அசுரர்களாலும் மானிடர்களாலும் வணங்கப்பட்ட தேவர்களே, என்னை எல்லா விதத்தாபங்களிலும் பயங்களிலிருந்தும் காப்பாற்றுங்கள். சக்ர ரூபமாக வந்த சம்புவை பக்தியினுலும் மஹா விஸ்வாசத்தாலும் திருப்தி செய்த உபமன்யு ரிஷியைப்போல நான் உங்களுக்குச் சேவை செய்யவேண்டும். என்னுடைய அபராதங்களைப் பொறுத்து எனக்கு மாதா பிதாப்போல இருக்கவேண்டும். நானும் உபமன்யு சரித்திரத்தால் மிக்கப்பயனை அடைந்து அந்த ரிஷியின் அனுகிரஹம் பெறவேண்டும்.]

"நான் நாரத பகவானுக்கு என்ன அபராதம் செய்தேன்? அவருடைய உபதேசத்தைக் கேட்டு என் குமாரியை அதன்படி நடக்கச்செய்து அவளும் மிக்க கடோரமான தபஸ் செய்தது, எல்லாம் இந்த பைத்தியக்கார மாப்பிள்ளையை அடைவதற்காகவா?'' (551)

"வாஸ்தவமாக நாரதருக்கு மோஹமில்லை. மாயைக்கும் அவர் வசப்படாதவர். அவருக்கு தனம் கிடையாது. வீடு வாசல், ஸ்திரீ ஒன்றும் இல்லை. பெரிய உதாசீனராக வாழ்க்கை நடத்துகிறவர். அவருக்கு மானம் அவமானம் இல்லை. பயம் கிடையாது. பிள்ளையைப் பெற்று அனுபவம் இல்லாத மலடிக்கு பிரசவவேதனைகள் எவ்விதம் தெரியும்?'' (552)

1406—19

மாதாவினுடைய விலலாபங்களைக் கேட்டு விவேக யுக்த மானதும் கோமளமான குரலில் பவானி பதில் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே மாதா, வருத்தப்படாதே. விதியை யாவராலும் தாண்டமுடியாது. இந்த விஷயத்தைப் பூர்ணமாக அறிந்து கொண்டு வருத்தப்படாமல் இரு" (553)

"என்னுடை பாக்யம் பைத்தியத்தனமான மாப்பிள்ளையை அடைய வேண்டியதாகவிருந்தால் யாரை தோஷம் சொல்லக் கூடும்? உன்னால் பிரும்மாவின் லிபியை அழிக்க முடியுமா? ஒன்றுக்கும் பயன்தராத வார்த்தைகளைச் சொல்லி வீணாக அபகீர்த்தியை உண்டு பண்ணிக்கொள்ளாதே" (554)

"ஹே மாதா, களங்கம் அடையாதே. இந்த சமயத்தில் நீ அழக்கூடாது. இது விவாதம் செய்யவேண்டிய விஷயம் இல்லை. சமயமும் சரியில்லை. என் பாக்யத்தின்படி எந்த துக்கம், சுகம் ஏற்படுமோ அவைகளை நான் பெறுவேன்." பார்வதியின் வினய முள்ள வார்த்தைகளைக் கேட்டு கோமளமான குரலில் சொல்லப்பட்ட புத்திமதியைக்கேட்டு, எல்லா ஸ்திரி களும் யோசிக்க ஆரம்பித்தார்கள். விதவிதமாக தோஷங்களை யும் குணங்களையும் செய்யும் பிரும்மாவின் விதியை நினைத்து கண்கள் கலங்கி வருத்தமுற்றார்கள். (555)

[தியானம்

ஹே விராட் புருஷரே, ஹ்ருஷீகேசா, உன்னுடைய தேகத் தில் ஸர்வ பூதங்களையும் அவர்களின் சிருஷ்டி கர்த்தாவையும், பிரும்மாவான ஈஸரையும், ரிஷி கணங்களையும், ஸர்வ நாகர் களையும் காண்கிறேன். அநேக பாஹூக்களையும், கண்களையும், வாய்களையும், கால்களையும் உடைய உம்முடைய அனந்தமான திவ்ய ரூபத்தை நான் காண்கிறேன், நீர் அக்ஷரமான பொருள். ஆதிதேவர், சநாதனமான புருஷர். இந்து, சூரியன் உமது நேத்ரங்கள். பூமி, ஆகாயம் இவைகளில் அடங்கின பொருள்கள் உன்னுடைய கால் பாகம். நீர் கால ஸ்வரூபி. உம்முடைய சங்கல்பத்தால் லோகங்கள் க்ஷயமடைகின்றன. மீண்டும் உற்பத்தியாகின்றன. மனிதர்களும், ராக்ஷஸர்களும், தேவர்களும், யக்ஷ அசுரர்களும் உனக்கு நிமித்த மாத்திரம். ஆனால் காரண மில்லாமல் தயாளுவாக இருக்கிறாய். அது உன்னுடைய ஸ்வ பாவத்தால் அன்றோ? அல்லது மாதாவான லக்ஷ்மியினுடைய சேர்க்கையினாலா? அர்ஜுனனுடைய பயங்களைப் போக்கின மாதிரி என் பயங்களையும் போக்கவேண்டும். ஹே ஜகந்

நிவாஸா, அப்ரமேயா, என்பிதா, மாதா, குரு, பந்து, தோழன் பத்னி, பதி, ஸ்வாமி என்கிற முறையில் உன்னை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். என்னுடைய சர்வ ஐஸ்வர்யங்களும் நீ தானே அப்பா. உன்னுடைய கிரீடம், மகர குண்டலங்கள், மந்த ஹாஸமான சிரிப்பு, குளிர்ந்த பார்வை, அனுடக்கலம் தரும் சரணங்கள், ஆஸ்ரயித்தவர்களை அபயம் கொடுக்கும் உன் ஹஸ் தங்கள், நான்கு விதமான ஆயுதங்களையும் தாமரைப் பூவைத் தரித்த உன் கைகள், கௌஸ்துபமாகிய பூஷணம், பார்க்கவ ரிஷியின் பாதம், உன் சிறந்த பொக்கிஷமான மஹாலக்ஷ்மி ஆகிய தேஜஸ் பொருந்திய விராட் ஸ்வ ரூபத்தை நான் பார்க் கிறேன். உதங்கர், அர்ஜுனன், யசோதா, பிரும்மா, பீஷ்மர், திருதராஷ்டிரன், வேதவியாஸரின் சிஷ்யர்கள், அவர்கள் அனுபவித்த சுகத்தை நான் அடைய விரும்புகிறேன். தியாக ராஜர், அர்ஜுனன், நாரதர், ஏகதர், த்விதர், திரிதர், பிருஹஸ் பதி, உமாமஹேஸ்வரர் முதலியவர்கள் அடைந்த பிரும்மானந்த சுகத்தை நான் அடையவிரும்புகிறேன்.]

[தியானம்

ஹே க்ருஷ்ணு, உன்னுடைய பெருமைகளைக் கேட்டு ஆனந்தப்பட்ட பீஷ்மரை நான் வணங்குகிறேன். ஜமதக்னியின் புதல்வரான ராமர், நாரதர், தேவரிஷிகள், வேதவியாசர், அஸிதர், தேவலர், வால்மீகி, மார்க்கண்டேயர் முதலியவர்கள் கோவிந்த ரான உன்பெருமையைப் புகழ நான் அதை அடிக்கடி சொல் வேனு க. கேசவரான நீர் பகவான், ஈஸ்வரர், பிரபு, புருஷர், ஸர்வர் என்று புகழப்படுகிறீர். பிராம்மணர்கள் உம்மை சாரங்க பாணி என்றும், கோவிந்தர் என்றும் அடிக்கடி சொல்லுகிருர்கள். சக்கரபாணி, ஸவிதாவினுல் சூழப்பட்ட தேஜஸ் உள்ள புரு ஷோத்தமரே, ஸர்வ பூதங்களுக்கும் அக்ரகண்யரே, ஸங்கர் ஷணரே, அனந்தசயனரே, புஷ்கரக்ஷேத்திரத்தில் பத்ம யோனியில் உண்டான பிரும்மாவை ஸர்வபூத பிதாமஹராக ஸ்ருஷ்டித்த கமலநயனரே, அசாதாரண விலக்ஷணமாயுள்ள மஹாலக்ஷ்மியின் பதியே, மரிசி, காஸ்யபர் முதலிய ரிஷிக ளால் வணங்கப்படுகிறவரே, விஸ்வேதேவர்கள், ஸாத்யர்கள், மருத்தர்கள், தர்மருடைய புத்ரர்களான வசுக்கள், மிக்க தேஜஸ்வாய்ந்த ருத்ரர் இவர்கள் எல்லோருக்கும் பதியாக விளங்கும் மஹாவிஷ்ணுவே, அஹோராத்ரம், காலம், சிம்சுமாரம் துருவன் முதலியவர்களாக விளங்கும் மதுசூதனரே, வாமன

அவதாரம் எடுத்து திருவிக்ரமனுக வளர்ந்து விப்ரசித்தி முதலானவர்களை அடக்கி தேவர்களுக்கு ஸ்ரீயைப் பெருக்கின கோவிந்தரே, யுதிஷ்டிரர் முதலியவர்களால் சேவிக்கப்பட்ட கிருஷ்ணரே, உமக்கு நமஸ்காரங்கள். நரசிம்மரே, பிரஹ்லாத னின் பிரியரே, எனது துக்கங்களை நசிக்கச் செய்து உம்முடைய பிரசாதத்தைக் கொடும். நீரே என்னுடைய பரமானகதி. ஸத்பாவ பக்தியுடனும், ஸம்யமான ஞானத்துடனும், பூதங்களின் அந்தராத்மாவாகவும் உம்முடைய பதத்தில் மிக்க ஆசைவைத்தவ ஞகவும் இருக்கிறேன். முன்பு ஒரு காலத்தில் ஸ்ரீமானுன நாரதர் பரமார்த்த லாபங்களை அடைய சிந்தனைபண்ணி, ஏங்கி தபஸ் செய்து பல இடங்களில் சஞ்சரித்து, ஹிமவத்பர்வதத்தில் பத்மங் கள் உண்டான ஸரோவரில் ஸ்நானம் செய்து உம்மைக் கண்டு ஸ்தோத்திரங்களால் திருப்திசெய்து, ஜிக்ஞாஸம், இந்திரிய ஜயம் முதலிய வழிகளை கடைப்பிடித்து, விஸ்வாத்மாவாகிய ஜகந் நாதரை அவருடைய கருணையால் கண்டாராம். ஹே ஸ்வாமி, என்னுடைய அகிலார்த்த லாபமே, வைநதேயரை வாகனமாகக் கொண்டவரே, கருடத்வஜரே, விஷ்ணுவே உம்மை நமஸ்கரிக் கிறேன். பீதாம்பரதாரியும், ஸ்ரீவத்ஸம் அணிந்தவரும், அப் போது மலர்ந்த தாமரைமலரின் இதழ்போன்ற லோசனங்கள் உள்ளவரும், மந்தஸ்மித முள்ளவரும், இந்திர நீலக்கல் போல நிறம் உள்ளவரும், தேவர்கள் ரிஷிகணங்களால், ஸ்துதி செய்யப்படும் உம்மை நாரதரை முன்னிட்டு ஜயசப்தங்களால் கோஷித்து என் சிரத்தாலும் அந்தக்கரண சுத்தியாலும் நமஸ் கரிக்கிறேன். உம்மை ஆனந்தத்தால் புகழ்கிறேன். ஹே பரமாத்மாவான சங்குசக்கர கதாபாணி, என்னிடத்தில் திருப்தி அடையும் ஜனுர்த்தனரே, மஹாவிஷ்ணுவே, த்வந்தமற்ற புத்தி யாலும், அஹங்காரமின்றியும், சுத்தியுள்ள மனத்தாலும் இந்திரி யங்களாலும் உம்மை நான் பார்க்கிறேன். ஹே அதோக்ஷஜரே, யோகிகளுக்கும் கிடைக்காத பிரசாதத்தை நான் அடைகிறேன். ஸர்வகாரிய காரணங்களுக்கும் விகர்த்தாவே, தேவரீர் என்னை ஸ்வயமாகச் சேர்த்துக் கொள்ளவும். கேசவரே, புண்டரீகாக்ஷரே, ஸத்யவிக்ரமரே, கேவலமாய் மானிடஜாதியில் இருக்கும் என்னை அனுக்ரஹிப்பீராக. உம்மை நான் சாஸ்வதமான தத்வம், என்று பிஷ்மர், யுதிஷ்டிரர், ஆஞ்சநேயர், வேதவியாஸர், சுகர், நாரதர், தியாகராஜரால் உபதேசிக்கப்பட்டு, பராசரர் வஸிஷ்டர் விஸ்வாமித்ரரையும் சேவித்து, அவர்களைப் புறம் வைத்து உம்மை நான் அடைகிறேன். சித்ரகேது ஞானம் அடைந்தது

போல உம்முடைய பக்தியை வேண்டுகிறேன். என்னிடம் அன்பாயிரும்.]

அந்த சமயம் நாரதருடன் கூட ஸப்தரிஷிகள் வந்தார்கள். ஹிமவான் அவரை உள்ளே அழைத்துவந்தார். (556)

எப்பொழுது நாரதரிஷியினுல் மீண்டும் உமாதேவியின் பூர்வ வ்ருத்தாந்தங்கள் சொல்லப்பட்டதோ, அப்போது எல்லோருடைய மனமும் நிம்மதியை அடைந்தது. நாரதர் மேனுவைப் பார்த்து "மேனுதேவி, என் வசனங்களில் நம்பிக்கை வை. உன்னுடைய குமாரி ஸாக்ஷாத் ஜகஜ்ஜனனி பவானி." (557)

"இந்த மஹா புண்யராசி கர்ப்பவாசம் என்கிற ஜன்மமில்லாமல் ஸ்வசங்கல்பத்தால் பிரகடனப்படுத்திக் கொண்டு பிறந்தவள். அனுதியானதும் என்றும் அழியாததுமான சக்தி ஸ்வரூபம். சதாசிவனுடைய அங்கங்களில் நித்யமாக வாஸம் செய்பவளும், என்றும் பிரியாதவளுமாவள். இந்த உலகத்தின் உற்பத்தி, காப்பாற்றுதல், ஸம்ஹாரம் செய்தல் ஆகிய செய்கைகளில் ஈடுபட்டவள். தன்னுடைய இச்சையினுல் லீலையாகச் சரீரம் எடுத்து பூமியில் அவதரித்திருக்கிருள்." (558)

"பூர்வஜன்மத்தில் இந்த மஹாபுண்யவதி தக்ஷனுடைய குமாரியாக அவதரித்த சமயம், சதி என்கிற பெயருடன் விளங்கினுள். ரொம்ப அழகான சரீரத்துடன் இருந்தாள். அப்பொழுது சங்கரருடன் விவாஹம் செய்துகொண்டாள். அந்த கதைதான் உலகம் முழுவதும் பிரசித்தமான கதை அல்லவா? உனக்கும் தெரிந்திருக்கும்." (559)

"ஒரு சமயம் அந்த சரீரத்தில் சிவனுடன் தண்டகவனம் வரும் சமயம் ரகு குலத்தில் அவதரித்தவரும் சூர்யகுலத்தின் கமலம்போல இருக்கும் ஸ்ரீராமசந்திரனைக் கண்டாள். அப்பொழுது இவளுக்கு மோஹம் ஏற்பட்டு சிவனுடைய வசனங்களில் நம்பிக்கை வைக்காமல் பிரமவசத்தினுல் சீதாதேவியின் வேஷத்தை அணிந்துகொண்டாள்." (560)

"சதிதேவியினுல் சீதாதேவியின் வேஷம் தரிக்கப்பட்டது. அந்த அபராதத்திற்காக பகவான் சம்பு இவளைத் தியாகம்செய்து விட்டார். அதனுல் அவள் விரஹதாபமடைந்து தன்னுடைய பிதாவான தக்ஷ யக்ஞத்தில் யோகாக்னியால் பஸ்பமாக்கப் பட்டாள். இப்பொழுது அவளே உன்வீட்டில் ஜனனம் எடுத்து, தன் பதிக்காக கடும் தபஸ்செய்து, அவரையே தன் பதியாக அடைகிருள். இவ்விதமாக நீ அறிந்துகொண்டு உன் சந்தேகங்களை விட்டுவிடு. பார்வதி தேவியானவள் சதாசிவ

னுடன், அர்த்தாங்கினி என்று சொல்லும்படி இவள் சேர்ந் திருப்பாள். (561)

[தியானம்

ஹே ராமா, முன்பு பராசக்தியான சீதை மானிட ஸ்திரி யாகவும், நீயும் அவளும் பூமியில் அவதரித்து, அவளைத் தேடிக் கொண்டு போனசமயம், பராசக்தியான அவளை நினைத்து நீ புலம்பிக்கொண்டு போனுயே, அப்பொழுது நாரதரால் உபதேசிக் கப்பட்டு நீயும் உன்பிரியையான சீதையின் மஹிமையை அறிந்தாயே. அந்த பராசக்தி அம்பிகைதானே பூமியில் அவ தரித்து உனக்கு அழியாத புகழைக் கொடுத்தாள். அப்பேற் பட்ட நித்ய சக்தியாக விளங்கும் ஸநாதனி, பிரும்ம ருத்ர விஷ்ணு முதலியவர்களுக்கும் காரணசக்தியாகவும், கர்த்ரு சக்தி யாகவும் விளங்குகிருள் அல்லவா? தாயே நீபிரகிருதி, புருஷனுல் பூர்ணமாகிருய். பரமான வஸ்து. நீ வந்துசேர்ந்தால் நிர்குண மானது ஸகுணமாக ஆகிறது. உன்னையே பரவித்யா என்றும் மேலான தத்வம் என்றும், அகரம் முதல் க்ஷகாரம் வரை உள்ள அக்ஷரங்கள் என்றும், நாதபிரும்மத்தின் ஸ்வராக்ஷரங்கள் என்றும், பலவிதமான நாமாக்களால் புகழப்படுகிருய். ஹே சிவ மான அம்பிகையே, உபவாஸம், உத்தமமான ஸ்ரீவித்யையாகிற பூஜை, ஆராதனம், ஹோமம், இன்னும் குருக்ரமமாகவும், விதி பிரகாரமாகவும் உன்னைப் பிரேமையினுல் ஆதரித்து அஷ்டமி, பௌர்ணமி, அமாவாசை முதலிய பர்வகாலங்களில் உன்னை பகவதி என்றழைத்து, உன் அன்பையும், பக்தியையும் பெறுவேனுக. உன்னுல் நான் பூர்ண காமனுகவும், கிருதக்ருத்ய னுகவும், அநேகவிதமான ரக்ஷைகளையும் போகங்களையும் அடைந்தவனுகவும் விளங்குவேனுக. பரமேஸ்வரி உன்னை என் கதியாக நினைத்து வந்திருக்கிறேன்.]

நாரதருடைய வசனங்களைக் கேட்டு எல்லோருடைய சந்தே கங்களும் தீர்ந்துவிட்டன. இந்த சமாசாரம் ஒரு க்ஷணத்தில் நகரம் முழுவதும் பரவியது. (562)

அப்பொழுது மேனுதேவியும் ஹிமவானும் ஆனந்தத்தில் மூழ்கி, அவர்கள் விதம் விதமாய் பார்வதிக்கு அலங்காரம் செய்து அவளுடைய பாதசரணங்களில் வந்தனம் செய்தார்கள். ஸ்திரி, புருஷர், பாலர்கள், யௌவனர்கள், விருத்தர்கள் யாவரும் பிரசன்னமடைந்தனர். (563)

உடனே நகரத்தில் மங்களகீதங்கள் முழங்கின. எல்லோரும் ஆளுக்கு ஒருவராக ஸ்வர்ண கலசங்களை கையில் ஏந்திக் கொண்டு விதவிதமாக புறப்பட்டனர். பாக சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட நீதிபிரகாரம் அநேகவிதமான சாப்பாடுகளின் வகைகள் தயாரிக்கப்பட்டன. (564)

எந்த மஹா புண்யமான வீட்டில் ஜகன்மாதாவான பவானி அவதரித்திருக்கிறளோ, அந்த இடத்தில் போஜன சாமக்ரியை களின் வர்ணனையை யார்தான் செய்யமுடியும்? ஹிமவான் மரியாதைக்குரியதான பராத் என்கிற மாப்பிளை அழைப்பிற்கு வந்த விஷ்ணு, பிரும்மா, தேவகணங்கள், யாவரையும் மரியாதை யுடன் அழைத்து இன்சொற்களால் மகிழ்வித்தார். (565)

விதவிதமான போஜன சாமான்களைச் சாப்பிட அங்கு கூடி யிருக்கும் மரியாதைக்குறிய விருந்தாளிகள் வரிசைவரிசையாக உட்கார்ந்திருந்தார்கள். நல்ல கெட்டிக்கார சமையற்காரர்கள், ருசியுள்ள பதார்த்தங்களைப் பரிமாறினர்கள். ஸ்திரீக் கூட்டங் கள், தேவகணங்கள் போஜனம் செய்ய ஆரம்பித்த சமயம், கேலி விளையாட்டுக்களையும் கோமளமான குரலில் ஒருவர்க்கொருவர் செய்ய ஆரம்பித்தார்கள். (566)

[தியானம்

ஹே துர்க்கே, துஸ்ஸஹே, ரக்தவர்ணு, சுபமான பலன்களைக் கொடுப்பவளே, பத்மராகத்தின் மணிகளால் அலங்கரிக்கப் பட்டவளே, மரீசீ முதலிய முனிவர்களால் வணங்கப்பட்டவளே, சங்கரரின் பிரிய பத்னியே, துர்தசை அடைந்தவர்களுக்கு கைலாகுபோல கொடுத்து தூக்கிவிடுபவளே, பயங்கரமான ரூபத்தை உடையவளே, தமோகுணத்தால் ஆக்ரமிக்கப்பட்ட ஆச்சரியகரமான விஷயத்தைச் செய்பவளே, விஷ்ணுவினுடைய சரீரத்திலிருந்து தேஜஸ்ஸுகளைப் பெற்றவளே, நீல நிறமுடைய சத்வகுணத்தைக் கொண்டவளே, இந்திரனுடைய உடம்பிலிருந் தும், மற்ற லோகபாலர்களிடமிருந்தும், தேஜஸ்ஸுகளைப் பெற்று ஸர்வகுணங்களுடன் பிரகாசிப்பவளே, திரிகுணு, மஹாலக்ஷ்மி, பதினெட்டு கைகளுடன் விளங்கும் கிருஷ்ணு, மஹாதேவி உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். மனோஹரமான சரீரத்தை உடையவளே, கருப்பு, வெள்ளை, சிவப்பு ஆகிய மூன்று வர்ணங் களால் பிரகாசிப்பவளே, ஸ்தோத்ரம் செய்து உன்னை பூஜிப்பவர் களுக்கு ஸெம்யரூபத்துடன் காக்ஷி அளித்து அழகான பல்வரிசை களுடனும், அழகான லோசனங்களாலும் இன்புறச் செய்கிறுய்.

மகிஷாசுரனை வதைத்தாயே, என்னிடம் நீ மஹாகிருபையுடன் இருக்கவேண்டும். துர்கா லக்ஷ்மி சரஸ்வதி, என்னை சகல பயங்களிலிருந்தும் தாபங்களிலிருந்தும் காப்பாற்றவேண்டும்.]

அப்பொழுது அழகான ஸ்திரீகளின் கேளிக்கை விளையாட்டுக்கள் பல நடைபெற்றன. பல அர்த்தங்களடங்கிய கேலி பேச்சுக்களாலும் புருஷர்களைச் சந்தோஷப்படுத்தினார்கள். தேவகணங்கள் விநோதமான சுகங்களை அனுபவித்தார்கள். இதனால் போஜனகாலம் மிக்க நீண்டதாக இருந்தது. பல நாக்குக்கள் படைத்தவர்களின் சந்தோஷங்களைச் சொல்ல முடியாது. கடைசியாக வெற்றிலை பாக்கு எடுத்துக்கொண்டு தங்கள் தங்கும் இடங்களை அடைந்தார்கள். (567)

பிறகு முனிகணங்கள் திரும்பிவந்து ஹிமவானிடம் "லக்னம் வந்துவிட்டது. எல்லா தேவகணங்களையும் கூப்பிட்டு அழைத்து வரவும்" என்று சொன்னார்கள். (568)

எல்லா தேவதைகளையும் மிக்க மரியாதையுடன் அழைப்பித்து, அவர்கள் யோக்யதைக்குத் தக்கபடி ஆஸனம் தந்தார்கள். வேதங்களில் சொல்லியபடி விவாஹவேதி (ஹோமம் செய்யும் இடம்) தயார் செய்தார்கள். ஸ்திரீகள் அழகான மங்களகீதங்கள் பாடினார்கள். (569)

யாகவேதிக்குப் பக்கத்தில் மிக்க அழகான சிம்மாசனம் போடப்பட்டிருந்தது. அதன் அழகை வர்ணிக்கமுடியாது. ஏனென்றால் சாக்ஷாத் பிரும்மாவே அதைத் தயாரித்தார். அங்கு கூடியிருந்த பிராம்மணர்களை வணங்கிவிட்டு, தன்னுடைய ஹிருதயத்தில் தன் ஸ்வாமியான ரகுநாதனை த்யானம் செய்துகொண்டு, பிரபுவான சிவன் அந்த சிம்மாஸனத்தில் ஏறி உட்கார்ந்தார். (570)

பிறகு முனிகணங்கள் உமாதேவியைக் கூப்பிட்டார்கள். சகிகளால் ஸ்ருங்காரம் செய்யப்பட்ட உமாதேவி அழகான நடையுடன் வந்தாள். அவளுடைய அழகைக் கண்டு எல்லா தேவகணங்களும் மோஹித்துவிட்டனர். எல்லா உலகங்களிலும் எப்படிப்பட்ட கவிதான் அவளுடைய ரூபசௌந்தர்யத்தை வர்ணிக்கமுடியும்? (571)

[தியானம்

ஹே பாலே; பவானி, காத்யாயனி, உன்னுடைய அழகான முகத்தைப் பார்த்து, பார்த்து மன்மதனையும் ஜயித்த சம்பு மோஹப்பட்டாராமே. சந்திரனையும் காந்தியால் வென்றதும்,

தாமரை மலர்போல அகன்ற அழகான உன் முகமும் முத்து ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய தேஜஸுள்ள மனோஹர மான உடம்பும், ஆயிரம் பானு என்று சொல்லக்கூடிய சூரிய தேஜஸ்ஸும் போல ஒளியுள்ளதாகவிருந்தன. மானஸரோவரின் அன்னப்பேடைகள் வெட்கும்படி லலிதமான நடையும், கோகிலம் போல மதுரமான குரலுடன் கூடியவளும், ஸதாசிவனின் பத்னியு மான உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். விஷ்ணு, ரமா இவர் களால் கைலாகு கொடுத்து வெகுமானிக்கப்பட்டவளும், பிரும்மா சரஸ்வதிதேவியினுல் ஆசிர்வதிக்கப்பட்டவளுமான ஹே தாயே, என் பரம்பொருளே, உங்களை நாடி ஆஸ்ரயித்து வந்து அடை கிறேன். தேவதேவி, முனிகணங்களுக்கும் பிராம்மணர்களுக்கும் மிக்கப் பிரியமானவளே, பாலாம்பிகையே, தேவசித்த ஜனங் களால் வணங்கப்பட்டவளே, நாரதமுனி உபதேசத்தின்படி சம்புவைத் த்யான யோகத்தாலும் பதிசிஷ்ருஷையினுலும் அன்பி னுலும் வென்ற மஹா கருணைக் கடலே, காமாக்ஷி, மீனுக்ஷி, விசாலாக்ஷி, என்னைக் குளிர்ந்த கிரணங்களால் பார்த்து அனுக்ரஹிக்க வேண்டும்.]

[தியானம்

ஹே கல்யாண சுந்தரேசா, உம்மை பல மன்வந்திரங்களில் மாஹேஸ்வர யோகத்தினுல் ஆராதித்து சித்தியடைந்த வேத வியாஸாதிகள், பராசரர், ஜைகிஷவ்யர் போன்ற முனிவர்களின் ஆராதனத்தைக் கைபிடித்து உன்னை வந்தடைகிறேன். நிரஞ்சனரே, லிங்க பூஜையினுலும், அபிஷேகத்தாலும், ஸ்தோத் திரங்களாலும், அனன்ய பக்தியாலும், வீரத்தாலும், அடக்கத் தாலும், சுசியான வார்த்தைகளாலும், ஊர்த்வரேதஸ், நைஷ்டிக பிரம்மசார்யம் போன்ற விரதங்களாலும், யக்ஞங்களாலும், கர்ம ஞான பக்திகளாலும் பூஜிக்கப்பட்ட மஹாதேவரே, உம்மை என் கதியாக வந்தடைகிறேன். ஸநத்குமாரர் போன்ற யோகி களால் லிங்க அர்ச்சனையாலும், பாசுபத யோகத்தாலும் திருப்தி அடைவிக்கப்பட்ட மாஹேஸ்வரரே, ருத்ரரே, என்னிடம் சதா கிருபையுடன் இரும். சங்கரரே, லோகஹிதரே, பவரே, கபிலரே, பசுபதியே, பானுஸோமாக்னி மண்டல கிரணங்களை உடையவரே, மந்திரங்களான ஜேஷ்டஸாமம், ரதாந்திரம் முதலிய ஸாமங்களால் திருப்தி செய்யப்பட்ட மஹானுபாவரே, திரயம் பகரே, பஞ்சாக்ஷரரே, உம்மைப் பவித்திரமான பூஜையினுல் சந்தோஷப்படுத்தி பிரதக்ஷிணம் செய்து உம்மை நமஸ்கரிக்

கிறேன். கிருபாளு, ஆசுதோஷி என்னிடம் தயை செய்யும். சம்சார தாபங்களைப் போக்குபவரே, உமக்கு சதாமங்களங்கள் உண்டாகட்டும். உமக்கு ஜயங்கள் சதா ஏற்படட்டும்.]

ஜகதாம்பிகையான பார்வதி, சாக்ஷாத் பரமசிவனுடைய நித்ய பத்தினி என்று தேவகணங்கள் அறிந்துகொண்டு மனத்தில் சந்தோஷமடைந்து நமஸ்கரித்தார்கள். பவானியான கௌரி அழகின் எல்லையாகிற திரிபுர சுந்தரியாக விளங்கினாள். கோடிக்கணக்கான முகங்களால் அவள் அழகை வர்ணிக்க முடியாது. (572)

ஜகஜ்ஜனனியான பார்வதியின் மஹத்தான சோபைகளை வர்ணனை செய்யும் பாக்கியம் படைத்த கோடிக்கணக்கான முனி ஜனங்களின் பாக்கியத்தை என்ன சொல்லக்கூடும்? அவர்களாலும் வர்ணிக்கமுடியாத அழகைப்பற்றி யார் என்ன சொல்லக்கூடும்? வேதங்கள், சேஷநாகன், சரஸ்வதி, ஆகியவர்களால் கானம் செய்யப்பட்டு முடிவை அடையாத அழகின் உயர்வு எவ்வளவு மஹத்தானதாக இருக்கும்? மந்தபுத்தியுள்ள துளசிதாஸராலும் (என்னாலும்) வர்ணிக்கத் தயங்கப்பட்ட மஹத்தான பேரழகு. சுந்தரமான சோபை, உருவம் எடுத்து வந்ததுமாதிரி, ஜகன்மாதாவான பவானி மண்டபத்தின் நடுவே, எங்கு சிவன் உட்கார்ந்திருந்தாரோ, அவிடம் மெதுவாக நடந்து வந்தாள். வெட்கத்தால் கவரப்பட்டு பகவான் சிவனுடைய சரணகமலங்களில் பார்வையைச் செலுத்திக்கொண்டு, அவைகளை வெகு நேரம் தியான யோகத்தினால் நமஸ்கரித்து, அவருடைய பாதபங்கஜங்களின் மதுரரஸத்தை பருகும் வண்டுகள்போல அவரை நாடினாள். [அம்மா, உன்னை விழுந்து விழுந்து நமஸ்கரிக்கிறேன்.] (573)

முனிவர்களுடைய ஆக்ஞையால் சிவபார்வதி தம்பதிகள் கணேஸ்வர பூஜையைச் செய்தார்கள். மனத்தில் அனாதியான நித்ய தம்பதிகள் இந்த வார்த்தையைக்கேட்டு சந்தேகத்தை அடையவில்லை. தேவகணங்களும் அடையவில்லை. ஒருவரும் அடைய வேண்டாம். ஏனென்றால் சிவபார்வதியின் சந்தானமே கணேசரல்லவா? அவர் விவாஹத்திற்கு முன்பு எவ்விதம் பிறந்திருக்கக்கூடும்? என்று யாவரும் கலக்கமடையவில்லை. அவர்கள் அனாதியான தெய்வங்கள் அல்லவா? (574)

வேதவிதிப்படி விவாஹம் நடந்தது. மஹாமுனிவர்கள் நிறைவேற்றி வைத்தார்கள். பர்வத ராஜனான ஹிமவானுடைய மனம் சந்தோஷத்தால் நிரம்பியது. தன்னுடைய கன்னிகையை

மடியில் வைத்துக்கொண்டு மந்திரபூர்வமாக சிவபத்னியை சிவனுக்குஸமர்ப்பணம் செய்தார். சிவனும் கிரிஜாவை கை கொடுத்து பாணிக்ரஹணம் செய்துகொண்டார். (575)

[தியானம்

ஹே விக்ன ராஜா, விநாயகரே, ஏகதந்தரே, பிரணவ ஸ்வரூபமே, முன்பு ஒருகாலத்தில் திரிபுரத்தை எரித்த சமயம் பாலராக வந்த உம்முடைய பெருமையை யார் சொல்ல முடியும்? பண்டாசுரனை லலிதாதேவி வதைத்த சமயமும் உம்முடைய பெருமை விளங்கியது. ஹே ஜகத்ஸ்வாமி, உம்முடைய அனுகிரஹத்தால் அல்லவா தேவர்களும் தானவர் களும் சித்தி அடைகிறார்கள். நீர்தான் எங்களுடைய விக்னங் களைப் போக்கி எங்களை கிருதக்ருதயர்களாக ஆக்கவேண்டும். உமா புத்திரரே, உம்மைப் புஷ்பங்களாலும் பக்ஷயங்களாலும் சுகந்தமான போஜ்யங்களாலும் கீர்த்தனங்களாலும் மனதார பூஜை செய்கிறேன். ஹே கணேஸ்வரா, நாகயஞ்ஞோபவீதம் அணிந்தவரே, மஹேஸ்வரபுத்திரரே, நீர் என்முன் சென்று எனக்குவரும் விக்னங்களையும் ஆபத்துக்களையும் போக்கி என்னை ரக்ஷிக்கவேண்டும்.]

எப்பொழுது மஹேஸ்வரர் பார்வதியை பாணிகிரஹணம் செய்து கொண்டாரோ, அப்போது இந்திராதிதேவர்களின் மனத்தில் பெரிய சந்தோஷம் ஏற்பட்டது. ஸ்ரேஷ்டமான முனி கணங்கள் வேதமந்திரங்களை உச்சாரணம் செய்து கொண்டு தேவ கணங்கள் சிவனையும் உமையையும் பார்த்து "ஜயவிஜயி பவ," என்று ஜய கோஷங்களை முழக்கினார்கள். (576)

அநேகவிதமாக தேவதுந்துபியை முழக்கினார்கள். ஆகா சத்தில் நானாவிதமாக புஷ்பங்கள் வர்ஷித்தன. ஹரகிரிஜாவின் விவாஹம் வெகுமேன்மையாக நடைபெற்றது. எல்லாப் பிரும் மாண்டமும் சந்தோஷத்தை அடைந்தது. (577)

[தியானம்

ஹே, மோஹன ராமா, நாதபிரும்மவபுவான சிவ ஸ்வரூபத்தை அறியாதவர்களால் நீ அடைய முடியாதல்லவா? ஸர்வதியாகம் பண்ணின பிரும்மவாதிகளின் மனத்தில் ஆனந்த நடனம் ஆடும் தில்லை ஈசரே, அம்பிகையின் பதியே, ஆலகாலத்தை உண்ட நீலலோஹிதரே, சந்திர பிரபையை ஆபரணமாக அணிந்துகொண்டிருக்கும் கபர்தின், ஈசானரே என்னிடம் கிருபையுடன் இருந்து ரக்ஷிக்கவும். அழகு தெய்வ

மான குஹரே, சூரபத்மன் தாராகாஸுரர்களை வதைத்து உலகிற்கு கருணை காட்டிய குஹரே, மயில் வாஹனரே, தெய்வயானை வள்ளி என்கிற சக்திகளை மணந்த மஹா பூஜ்யரே, விஸ்வாமித்திரப் பிரியரே, என்னிடம் அனுக்கிரஹமாக இரும். சதா ஈஸ்வரரின் மடியில் வீற்றிருப்பவரும் அழகின் வடிவமும் மிருத சஞ்சீவினி போன்ற நிறமும் குணமும் உள்ளவளும், நிரஞ்சனமானவளும், பக்தர்களைக் காப்பதில் மேன்மை வாய்ந்தவளும் ரமா, காயித்திரி, இந்திராணி, கங்கை, அருந்ததியானவர்களுக்குத் தோழியும் ஸர்வதர்ம மந்திரார்த்தங்களை உலகங்களின் நன்மைக்காக ஈஸ்வரனிடத்தில் பயின்று, கேட்டு, கேட்பவித்துவளும், திரிபுரசுந்தரியுமான உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். என்னிடம் அன்பாயிருக்கவேண்டும்.]

[தியானம்

ஹே விருஷப்த்ஜவரே, சர்வரே, பவரே, ருத்ரரே, வரங்களை அளிப்பவரே, நமஸ்காரம். பசுக்கள் என்று சொல்லப்படும் ஜீவராசிகளுக்குப் பதியே, பிராணிகளை அழச்செய்பவரும் ஸம்ஹரிப்பவரும் நீரே. எப்பொழுதும் உக்ரமாயிருப்பவரும் பீமஸ்வரூபராக இருப்பவருக்கு நமஸ்காரம். திரியம்பகரே, சாந்தி ஸ்வரூபமுள்ளவரே, நமஸ்காரம். ஈசானரே, தேவதானவ யக்ஷ கின்னரர்களுக்கு சிக்ஷகரும், பூமிக்கு ஆதியான மூலகாரணரும் யோகிகளுக்கு பரமாதாரமாக விளங்குபவர் நீரே. உம்மைப் பலவிதமான ஸ்துதிகளால் வாக்கினலும் மனத்தாலும் புத்தியினலும் செய்கைகளாலும் நமஸ்காரம் செய்கிறேன். உம்மை எப்படி நான்புகழ்வது? நீரே அந்தச் சொல். அந்தச் சொல்லின் முடிவும் நீர்தானே. சூக்ஷ்மமான அத்யாத்ம ஸ்வரூபத்தை விரும்புகிற ஞானிகள் எவரை அடைகிறார்களோ, காரண ஸ்வரூபியான அந்த சங்கரர் நீர்தானே. முற்காலத்தில் அர்ஜுனன் கிருஷ்ணர் இவர்களால் பல தடவைகள் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவரே, அவர்களால் சந்தோஷம் அடைவிக்கப் பட்டவரே, ஸஹஸ்ரநேத்ரரே, ஸஹஸ்ரசிர்ஷங்களை உடையவரே, ஆயிரம் கைகளைக்கொண்ட மஹாபுருஷரே, விஸ்வாத்மான், பொன்னிறமுடையவரும், ஹிரண்ய கவசத்தை அணிந்தவரும் பக்தர்களுக்கு அனுகம்பை என்கிற தயையைச் செய்கிறவரும், பாசுபத அஸ்திரத்தை உடையவருக்கு நமஸ்காரம். சூலபாணியே, பிரதிக்ஞையைக் காப்பாற்றுகிறவரே, மஞ்சள் நிறமான கண்களை உடையவரே, தவத்தின் பொக்கிஷமும்

பலசாலியும், கருப்பு சிகப்பு இவைகளின் நிறங்களை உள்ளவரும் சதா விருஷபத்ஜவ்ரிடம் வசிக்கும் பிரும்ம சாரியை நான் நமஸ்கரிக்கிறேன். இந்திரன் உபேந்திரன் போலவும், கிருஷ்ணார்ஜுனர்கள் போலவும் உங்களுடைய தர்சனத்தாலும் கிருபையாலும் அனுக்ரஹத்தாலும் நான் மிக்க சந்தோஷமடைகிறேன். சங்கரரே, மஹேஸ்வரரே, என்னிடம் அன்புடன் இரும். ஜயசீலரே, உமாபதி, லக்ஷ்மிபதியின் அனுக்ரஹம் எனக்கு கிடைக்கவேண்டும். அவருடைய ஸ்நேகம் வேண்டும். அர்ஜுனனுடைய வாத்ஸல்யம் எனக்கு வேண்டும். ஐராவதம் போன்ற திக்கஜங்களால் சேவிக்கப்பட்ட ரமாதேவி, என்னிடம் அன்பாயிரு. கருணையுடன் இரு. ரக்ஷி, கிருதகிருத்யனாகச் செய். உங்களுக்கு நான் கைங்கர்யம் செய்யவேண்டும்.]

தாஸி, தாஸர்கள், ரதங்கள், குதிரைகள், யானைகள், பசுக்கள், வஸ்திரங்கள், மணிகள் முதலியவைகள் அடங்கின அநேக பிரகாரமான வஸ்துக்கள், அன்ன வகைகள், தங்கத்தால் செய்யப்பட்ட பாத்திரங்கள், ஆகியவைகளை வண்டியில் வைத்து சைல ராஜரான ஹிமவான் மஹேஸ்வர தம்பதிகளுக்கு ,தானமாகக் கொடுத்தார். அவர் கொடுத்த சீரின் வரிசைகளை யாரால் வர்ணிக்க முடியும்? (578)

அநேக விதமான சீர் வரிசைகளைக் கொண்டு வைத்து கை கூப்பி, மனம் பரமசிவனுடைய பாத கமலங்களில் வண்டுபோல கவ்விக் கொண்டு தழுதழுத்த குரலில் எல்லோர் முன்னிலையிலும் ஹிமவான் சொன்னார். "ஹே கிருபாளு, சங்கரரே, நீர் பூர்ண காமர். உமக்கு நான் என்ன கொடுக்கக் கூடும்?" என்று சொல்லி அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். அப்போது கிருபாசாகரமாகிய சிவர், எல்லோருக்கும் நடுவில், சந்தோஷத்துடன் தன் பாதத்தில் விழுந்திருக்கும் மாமனாரை, அம்பிகையின் திருப்திக்காக சமாதானம் பலவிதமாகச் செய்து இன்சொற்களைச் சொன்னார். பிறகு பிரேமை நிரம்பிய பூர்ண ஹ்ருதயத்துடன் சிவனுடைய பாத கமலங்களில் மேனாதேவியும் சரணம் அடைந்தாள். மிக்க வாத்ஸல்யத்துடன் அம்ருத மயமான சொற்களைச் சொல்ல ஆரம்பித்தாள். (579)

[தியானம்

அப்பா, தேவகி வாசுதேவர், ஹிமவான், மேனா, கார்த்திகேய பெண்கள், ஆஞ்சநேயர், வால்மீகி, வியாஸர், சுகர், பராசரர், கங்கை, திரௌபதி, காயத்ரி, கருடன், சேஷன், க்ஷீராபதி

ராஜன், நாரதர் ஸநந்தனர் ஸனகாதியோகிகள், துருவன், சப்த ரிஷிகள், தர்மர், வசிஷ்டர் விஸ்வாமித்திரர், அகஸ்தியர், சுக்ரர், பிரஹஸ்பதி, ஜமதக்னி, ரேணுகா, குபேரர், கணேசர், சஞ்சயர், இவர்கள் அன்றோ மஹா பாக்கியவான்கள்? பகவானுடைய பெருமைகளையும் சொல்லவும், பார்க்கவும் முடிந்தது. ஹே ரகு சிரேஷ்டரே, தாமரை இதழ் போன்ற கண்களை உள்ள மோஹன ராமரே, சிவனுடைய பரத்வமே, அம்பிகையின் லக்ஷ்ய புருஷரே, நாரதரால் கானம் செய்யப்பட்ட புராதன ரிஷியே, அர்ஜுன னுடைய சகாவே, என்னிடம் அன்பாயிரும். கருணையுடன் தியாகராஜரிடம் அன்பு காட்டின மாதிரி என்னிடமும் அன்பாயிரும். உம்மை நான் ஆனந்தித்து ஸ்பரிசிக்க வேண்டும்.]

[தியானம்

ஹே மாருதி, கருணைக் கடலே, சிவசக்தியின் ஸ்வரூபமே. நாதபிரம்மமே, பிரும்மசாரியே, பகவானுடைய ஆத்ம பௌதிக குணங்களில் ஈடுபட்டு மோஹமடைந்தவரே, பரமேஸ்வரியான சீதையின் சோகத்தைப் போக்கினவரே, ராமனுடைய பரம ஆச்சரியமான குணங்களைப் பிராட்டிக்குச் சொல்லி, ராம சஞ்சீவினி மந்திரத்தை என் போன்ற அக்ஞானிகளுக்கு சொன்ன மஹாத்மா, நீர் அல்லவோ வாயு புத்ரனும் அஞ்சனா தேவிக்குப் பிரியம் உள்ளவரும், சூரியனின் மஹா சிஷ்யரும், பிரும்மாதி தேவர்களால் வரம் கொடுக்கப்பட்டவரும், ராவண னுடைய கர்வத்தை அடக்கினவரும் சமுத்திரத்தைத் தாண்டின வரும் புத்திமானும் நவ வ்யாகரண பண்டிதருமான உம்மை நான் சரண மடைகிறேன். என் பரமார்த்த லாபம் என்று நான் உம்மைக் கருதி ஆஸ்ரயிக்கிறேன். ஐயா, என்னிடம் தயையுட னும் கருணையுடனும் இரும்.]

மேனுதேவி சொல்ல ஆரம்பித்தாள். "ஹே நாத, இந்த உமைக் குட்டி எனக்குப் பிரியமானவள். என் பிராணனுக்குச் சமம். ரொம்ப செல்லம். என் ஆத்மாவை ஜயித்தவள். என் பிராணனுக்கும் மேலான பொருள். ஐயா, தயவு செய்து இந்த பெண்ணை உங்களுடைய வேலைக்காரியாக வைத்துக் கொள்ளும். இவளுடைய அபராதங்களைப் பொறுத்துக் கொள்ளுங்கள். இவளிடம் மிக்க அனுதாபம் காட்டுங்கள். பிரசன்னமாக எப்போதும் இருக்கவேண்டும். உம்மிடம் வரமாக நான் கெஞ்சிக் கேட்கிறேன்." (580)

சிவபெருமானுல் பலவிதமாக மாமியாகிய மேனுதேவி ஆஸ்வாசப்படுத்தப்பட்டாள். அந்த சமயம் சிவனுடைய பாத கமலங்களில் நமஸ்கரித்து மேனுதேவி தன் கிருஹம் வந்து சேர்ந்தாள். பிறகு மாதாவானவள் தன் குமாரியான பார்வதியைக் கூப்பிட்டு தன் மடியில் உட்கார வைத்து வெகு சுந்தரமான பேச்சுக்களை சொன்னுள். (581)

"ஹே பார்வதி, சதா நீ பரமசிவனுடைய பாத கமலங்களை பூஜை செய். பெண்களுக்கு இதுதான், அம்மா, தர்மமான வாழ்க்கை. அவர்களுக்குப் பதி தேவதையைப் போன்றவர். வேறு ஒரு தேவதை அவர்களுக்கு இல்லை." இந்த மாதிரி வசனங்களைச் சொல்லி அவள் கண்களில் வரும் ஆனந்த பாஷ்பத்தைத் தடுத்து, தன் குமாரியான உமாதேவியை, கிரிஜாவை, மார்பில் அணைத்துக் கொண்டாள். [அம்மாவாகிய மேனுதேவியின் வார்த்தைகளைக் கேட்ட அவளுடைய புத்ரி அதன்படி நடந்து கொண்டாள் அல்லவா. நீங்கள் இருவர்களும் அல்லவா பாக்யசாலிகள் ?] (582)

[தியானம்

தர்மாத்மாவும், சாஸ்வதமான வேத மந்திரத்தை உச்சரிப்பதினுல் மிக திருப்தி அடைபவரும், தேஜஸ்ஜுகளுக்கு நிதியாக விருப்பவரும், ஸர்வ ஸ்வரூபியாக விளங்கும் விருஷபத்ஜவரை நான் சரணம் அடைகிறேன். பதி தர்மத்தின் சூக்ஷ்மத்தை அறிவித்து, ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் சகல ஜன்மங்களின் ஆதார ஸ்வரூபத்தை விளக்கினவளும், மஹாதேவரின் பத்னியுமான உமையை நான் நமஸ்கரிக்கிறேன். மஹாகாயன், வக்ரதுண்டன் முதலானவர்களுக்கு கண நாயகனும், பிரணவ ஸ்வரூபியும், வேதவியாஸருக்கு உற்ற துணைவரும், பாரத காவ்யத்தின் மேன்மையைச் சிறப்பித்தவரும், மஹா அறிவாளியும் தயாளுவான மஹா கணபதியை நான் நமஸ்கரிக்கிறேன். சித் ஸ்வரூபத்தின் அழகும், உக்ர ஸ்வரூபத்தில் அழிக்கும் தன்மையையும் ஆனந்த ரஸத்தின் ஸ்ருங்காரமும் ஒருங்கே கொண்டு அவதரித்தவரும் உமையின் செல்வபுத்திரனும் வள்ளி தேவயானையின் பதிச் செல்வமாக விளங்குபவரும் மயிலின் மேல் அழகாக பவனி வருபவருமான கார்த்திகேயனை வணங்குகிறேன். சகல வேத சாரங்களின் ஸ்வரூபமானவரும் பிரும்மசாரியும் கான சாஸ்திரத்தில் நாரதரைப்போல மகிமை அடைந்தவரும், ஸ்ரீராமபதத்தில் மிக்க ஆசை உடையவரான ஆஞ்சநேயரை நான் நமஸ்கரிக்

கிறேன். சூக்ஷ்மங்களுக்கு சூக்ஷ்மரும், வேததத்வார்த்தங்களை யாக்ஞ்ய வல்கியர், விஸ்வாமித்திரர் ஆஞ்சநேயர் போன்றவர்களுக்கு உபதேசிக்கும் ஆசாரியரும், சிவஸ்வரூபியும், ஸ்வர்ச்சலையின் கணவரும், அஸ்வினிதேவர்களின் பிதாவும், அருணனுடைய தோழரும், சப்த ஸ்வரூபங்களை ஏழுபச்சை குதிரைகளின் வடிவமாக உள்ளவரும், ஸ்வர்ண ரதத்தில் செல்பவரும், மஹாத்மாவுமான சூர்யநாராயணரை நமஸ்கரிக்கிறேன். தேவதேவரும் புராதனரிஷியும், சூரியனுக்குப் பின்புறமிருக்கும் இருளுக்கு அப்பால் இருப்பவரும், கருடனை அழைத்துச் சென்றவரும், சாதுக்களிடனிடத்தில் வணக்கம் உள்ளவரும், பிராமணர்களினிடத்தில் ஸத்யம் போன்றவரும், சமர்த்தர்களினிடத்தில் ஐஸ்வர்யம் நிறைந்திருப்பது போலவும், ஸ்ரீமந்நாராயணரிடத்தில் ஜய லக்ஷிமியாகவும் இருக்கும் மஹாலக்ஷிமியுடன் கூடியிருக்கும் மஹாபுருஷரை நமஸ்கரிக்கிறேன். இந்திர குமாரனை அர்ஜுனனிடத்தில் ஆத்ம ஸ்வரூபியாகவுள்ள ஹ்ருஷீகேசரை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே அதோக்ஷஜா, பிருஸ்னிகர்ப்பா, மஹா உபநிஷத்தின் தத்வார்த்தமாக விளங்கும் ஸ்ரீமந்நாராயணா, உம்மையும் உம்முடைய பதத்தை நாடி வந்திருக்கும் என்னை அனுக்ரஹிக்கவேண்டும். பிரபோ, ஹே கிருஷ்ண நாராயணா, அச்யுதா, கோவிந்தா புண்டரிகாக்ஷா, சக்ரபாணே, ரகுகுல வரதா, விருஷ்ணிகுல திலகமே, சூரசேனா, ஸ்ரீ கேசவப்பெருமாளே, கதாதரா, ஸ்ரீ வைகுண்ட பெருமானே உம்மை நான் ஆஸ்ரயிக்கிறேன். மஹானுபாவரும் பகவானும் மஹாவிபூதியின் ஸ்வரூபரும் ஸர்வாந்தர்யாமியான உம்மை நான் ஆலிங்கனம் செய்து உம்மை நமஸ்கரித்து, உன் பாதச் சேவையை அவலம்பித்திருக்கிறேன். நீர் என்னை ரக்ஷிக்க வேண்டும். சங்கு சார்ங்கம் தரித்த மஹபுருஷரே, தர்ம நந்தனருக்காக தூதுபோன உம்முடைய கால்களை நமஸ்கரிக்கிறேன். தயாளு, கருணைக்கடலே, சாஸ்வதமான பிரும்மமே, தாரகமந்திரத்தின் உட்பொருளாக விளங்குபவரே, நமஸ்கரிக்கிறேன். ராஜீவலோசனா, என்னை கடாக்ஷியும்.]

மேனாதேவி, மீண்டும் சொன்னாள் ''விதாதாவினால் இந்த ஸ்திரி ஜாதி இந்த சம்சாரத்தில் ஏன் படைக்கப்பட்டது? பராதீனனுக்கு ஸ்வப்னத்தில்கூட சுகம் கிடையாது.'' அத்யந்த பிரேமையினால் தாயாரான மேனாதேவி கவரப்பட்டபோதிலும், சமயம் அறிந்த விவேகியானபடியால், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு தைரியத்துடன் இருந்தாள். (583)

அடிக்கடி உமையைத் தழுபவளும், பார்வதி தேவியின் சரணங்களில் விழுபவளும், அந்த உமையினிடத்தில் அத்யந்த பிரேமை உள்ள அந்த மேனுதேவியின் மனோபாவங்களை யாரால் தான் வர்ணிக்க முடியும்? [அம்மா, மேனுதேவி, சாக்ஷாத் பரம் பொருளின் முன்னிலையில் உன் பிரேமை பக்தியை காட்ட முடிந்ததல்லவா? மேனுதேவி, நீங்கள் மஹா பாக்யம் உள்ளவள். ஹிமவானும் பாக்யசாலிதான். சந்தேகமே கிடையாது.] பவானியும் மிக்க சிநேகபாவம் மேலிட்டு, தன் தாயாரை தழுவிக் கொண்டாள். பிறகு மற்ற சகிகளையும் தழுவிக்கொண்டு எல்லோரையும் மிருத சஞ்சீவினியின் குணத்தால் புஷ்டி யாக்கினுள், என் தேவி பார்வதி (584)

பார்வதி தேவி தாயாரை மீண்டும் வணங்கி, மற்ற பெரி யோர்களையும் ரிஷிகளையும் தேவர்களையும் மற்ற எல்லோரையும் வணங்கி ஆசிபெற்ருள். அவள் அவர்களிடமிருந்து உசிதமான தும் யோக்யமான தமான ஆசீர்வாதங்களைப் பெற்ருள். மறுபடி யும் தன் மாதாவினிடம் பவானி வந்தாள். அவளுடைய சகிகள் உமையை லஜ்ஜைப்பட்டவளாக அறிந்துகொண்டு அவளை கைலாகு கொடுத்து, சங்கரரிடம் அழைத்துச் சென்ருர்கள். மஹாதேவர் எல்லா யாசகர்களுக்கும் தானங்கள் கொடுத்து திருப்தி செய்து பார்வதி தேவியை தன்னிருப்பிடமாகிய கைலாஸத்திற்கு அழைத்துச் சென்ருர். சகல தேவதைகளும் பிரஸன்னமடைந்து, புஷ்பவர்ஷங்களை வர்ஷித்தார்கள். தேவ துந்துபி முழங்கியது. (585)

அந்த சமயம் ஹிமவான் அத்யந்த பிரேமையினுல் விருஷபகேதுவை பின்தொடர்ந்து சென்ருர். பகவானும் தன் மாமனுகிய ஹிமவானைப் பல மதுரமான வார்த்தைகளால் ஆஸ்வாசப்படுத்தி, சந்தோஷமடையச் செய்து திரும்பிச் செல்லும்படி வேண்டிக்கொண்டார். (586)

பர்வதராஜனுன ஹிமவானும் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தார். பிறகு அழைப்பினர்களாக வந்திருக்கும் சகல பர்வதங் களையும், ஸரோவர்களையும் மரியாதையுடன் கூப்பிட்டு உசிதமான தானங்களைச் செய்து வினயத்துடன் எல்லோருக்கும் சம்மானம் செய்தார். (587)

சிவனும் தன் கிரஹத்திற்கு புறப்பட்டு வந்த சமயம் தேவ கணங்களும் தம்தம் வீடுகளுக்குச் சென்ருர்கள். துளசிதாஸர் சொல்கிருர். "பார்வதியான பவானி, சம்பு ஜகத்தின் மாதா பிதாக்கள். நித்ய தம்பதிகள். சாஸ்வதமான தர்மத்தை

அவலம்பித்தவர்கள். அவர்களுடைய சிறப்பு எல்லோருக்கும் மங்களங்களை வாரி அளிக்கக்கூடியது. ஆகையால் அவர்களுடைய போக ஸிருங்கார லீலைகளை விஸ்தாரமாகவும் ஸிருங்காரமாகவும் வர்ணிக்க இயலாது.'' (588)

சிவனும் பார்வதியும் விதவிதமான போகவிலாஸங்களை அனுபவித்தார்கள். தன்னுடைய கணங்களால் ஸேவிக்கப்பட்டு கைலாஸத்தில் ஹரரும் கிரிஜாவும் புதிப்புதிதான சந்தோஷங்களை அடைந்தார்கள். இவ்விதமாக பல காலம் சென்றது. (589)

பிறகு ஆறுமுகங்களை உடையவரும் உமையின் செல்வப் புதல்வனை கார்த்திகேயர் உண்டானர். அந்த ஷண்முகர் யுத்தத்தில் தாரகாசுரனை வதைத்தார். வேதசாஸ்திரங்களிலும் புராணங்களிலும் அம்பிகையின் புதல்வரான ஸ்கந்தருடைய ஜன்மக் கதை மிகப் பிரஸித்தமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (590)

[தியானம்

சுந்தரமான குமாரரும், பதினெட்டு தாமரை மொக்குகள் சேர்ந்து பூத்தாற்போல லோசனங்களை உடையவரும் ஆர்த்தர்களான என்போன்ற பக்தகோடிகளை திசைகளெங்கும் கடாக்ஷிப்பவரும், குமாரவடிவானவரும், பசுபதியின் மடியில் வீற்றிருப்பவரும், அம்பிகையின் அருளே வடிவானவரும், தேவஸேனாதிபதியும், விஷ்ணுவின் அனுக்ரஹம் பெற்றவரும், விஸ்வாமித்திரர் போன்ற பிராம்மணர்களுக்குப் பிரியமானவருமான ஸ்வாமி கார்த்திகேயரை நான் நமஸ்கரிக்கிறேன். சரஸ்வதியின் தோழரும், பிரம்மவாதியும், ஞானஸ்வரூபியும், வேதமயமாக பிரகாசிப்பவரும், குணக்கடலான ஆறுமுகக் கடவுளை, உமையின் கைகளால் வாரி அணைக்கப்பட்டவரான ஸ்கந்தரை நான் நமஸ்கரிக்கிறேன். சக்திவேல் தரித்தவரும் பாலவடிவரும் கருணையின் எல்லையாக விளங்குபவரை நான் நமஸ்கரிக்கிறேன். என் குலதெய்வமாய் விளங்குபவரே, நீர் என்னை கடாக்ஷித்து ஆட்கொள்ளவேண்டும்.]

[தியானம்

ஹே பிரபோ, உன் ஸ்ருஷ்டியின் மேன்மையை என்னவென்று நான் சொல்வேன்? பிராம்மண ஸ்ருஷ்டி மேலானது என்று சொல்லுகிறீர்களே, அது ஏன் தெரியுமா? பிராம்மண ஹ்ருதயம் நவநீதம் போன்றது. சகல பாபங்களையும் சரணம் அடைந்தோர்களுக்கு பொறுக்கும் சத்தி உள்ளது. ஒரு க்ஷணத்

தில் க்ரோதமானது பஸ்மமாக்கப்படுகிறது. பிரும்மாவின் வம்சத்தில் பிறந்ததால் பிரும்மதேஜஸுடன் இருப்பார்கள். பிராம்மண பத்னிகள் தர்மிஷ்டர்களாகவும், குலஸ்திரிகளாகவும் புத்ரர்களைக் காப்பாற்றுவதிலும் குலத்தைக் காப்பாற்றுவதிலும் ஹரிபக்தி உள்ளவர்களாகவும் பந்து ஜனங்களிடம் மிக்க பிரியமுள்ளவர்களாகவுமிருப்பார்கள். வேதங்களைச் சேவிப்பதிலும் யாகங்களைப் பண்ணுவதிலும் பிறருக்கு உபகாரம் செய்வதிலும் முயற்சி உள்ளவர்களாக இருப்பார்கள். பயந்தவர்களுக்கு ரக்ஷையாகவும், ரக்ஷணமாகவும் இருப்பார்கள்.]

ஷாட்குண்ய பரிபூர்ணரும், ஆறுமுகங்கள் உள்ள ஸ்வாமியான கார்த்திகேயருடைய ஜன்மம், கர்மங்களின் விசேஷங்கள், மஹத்தான புருஷார்த்த சாரங்கள், எல்லாம் உலகத்திற்கு தெரியும். இதனுல் துளசிதாஸர் விருஷகேதுவினுடைய புத்ரரான சுப்பிரமணியரின் சரித்திரத்தை ஸம்க்ஷேபமாகச் சொன்னுர். சிவபார்வதி பரிணயம் என்கிற சரித்திரத்தை எந்த ஸ்திரி புருஷர்கள் சொல்லுகிருர்களோ, சிரவணம், கீர்த்தனம் செய்கிருர்களோ, அவர்கள் கல்யாணங்களையும் மங்களகரமான விவாஹங்களின் சுகத்தையும் அடைவார்கள். (591)

கிரிஜாவின் பதியாகிற மஹாதேவருடைய சரித்திரம் சமுத்திரத்திற்கு சமானமாகவிருக்கிறது. வேதங்களால்கூட அக்கரையை அடைய முடிகிறதில்லை. அப்படியிருக்க மந்தபுத்தியுள்ளவரும் கிராமத்தில் வாழ்ந்து வருபவருமான என்னுல் (துளசிதாஸரால்) எப்படி வர்ணிக்க முடியும்? (592)

சம்புவினுடைய ருசியுள்ள சரித்திரத்தைக் கேட்டு முனியான பரத்வாஜர் அத்யந்த சுகத்தை அடைந்தார். மேலும் கதையின் ருசியை அனுபவிக்கும் அவருக்கு ஆசை அதிகரித்தது. நேத்ரங்களால் ஆனந்த பாஷ்பத்தை கொட்டிக்கொண்டு, ரோமாவளியுடன் புளகாங்கிதமடைந்தார். (593)

பிரேமையினுல் அவர் எவ்விதம் சந்தோஷமடைந்தாரோ, அதை வர்ணிக்க வாணியாலும் முடியாது. அவருடைய ஸ்திதியைக் கண்டு யாக்ஞ்யவல்கியர் மிகப் பிரசன்னமடைந்தார். அவர் பரத்வாஜரைப் பார்த்து "ஹே முனீஸ்வரரே, ஆனந்தம், ஆனந்தம், உம்முடைய ஜன்மம் தன்யமானது. உமக்கு கௌரீபதியான சிவபெருமான் பிராணனுக்குச் சமமான பிரியமுள்ளவர் அன்ரோ"? (594)

"பரமபோக்யமான சிவபதத்தின் கமலமானது எவர்களுக்கு போக்யமான வஸ்துவாக இல்லையோ, அவர்கள் ஸ்ரீராமச்சந்திர

னுக்கு ஸ்வப்னத்தில்கூட பிரியர்களாக ஆகிவிட முடியாது. விஸ்வநாதரான உமா ஸ்ரீசம்புவிடம் கபடமில்லாமல் சுத்தமான பக்தியானது செலுத்தப்படுதல் ஒன்றே ஸ்ரீராமபக்தியின் சுப மான லக்ஷணம் அன்ருே?'' (595)

[தியானம்

ஹே ராஜ ராஜேஸ்வரி, உலகங்கள் எல்லாவற்றிலும் பரம் பொருளாகவும், அணுவாகவும், சூக்ஷ்ம ரூபியாகவும், ஸதூல ரூபி யாகவும் வீற்றிருப்பவளே, சதா ஸத் சித்தத்தில் உட்கார்ந்து கொண்டு ஆனந்த ரூபியாக விளங்குபவளே, பரமஞானமுடைய வளே, பகவானுடைய பரமதஞ்சமாக விளங்குபவளே, அகில புவனங்களும் வியக்தரூபமாகவும் அவ்யக்த ரூபமாகவும் விளங்கு பவளே, மஹாத்மா, உனக்கு நாமரூபமோ, பரஸ்வரூபமோ, தேவதைகளின் இடர்களைப் போக்கும் அவதார ரூபங்களோ, சகலவிதமான ரூபங்களையும் நான் அர்ச்சித்து நமஸ்காரம் செய் கிறேன். நீ சகலவிதமான அந்தக் கரணங்களில் இருந்து கொண்டு மனிதனுடைய சுப அசுப காரியங்களைப் பார்க்கிருய். ஸர்வசாக்ஷி, பரமேஸ்வரி, ராஜ்யலக்ஷ்மி, சம்பு மோஹினி, ஜயலக்ஷ்மி, இந்திராணி, லோபாமுத்ரை இவர்களால் அர்ச்சிக் கப்பட்டவளே, உனக்கு நமஸ்காரம்.]

[தியானம்

ஜகத் ஸர்வேஸ்வரரும் அபின்ன ரூபமாகவிருக்கும் விஷ்ணு பகவானுக்கு நமஸ்காரம். யோகிகளுள் வ்யரூபராகவும் அவ்யய ரூபராகவும் விளங்கி எல்லோருக்கும் ஆதாரபூதராக இருக்கிற ஹரியானவர் என்னிடம் பிரஸன்னராக இருக்கட்டும். நீரே சம்பூர்ண விஸ்வத்திற்கு உற்பத்திஸ்தானம். அக்ஷரமும் அவ்யயமுமாகச் சொல்லப்படுபவருமான ஸ்ரீவிஷ்ணு பகவா னுக்கு நமஸ்காரம். நீரே எங்கும் வ்யாப்ய நாராயணரான படியால், என் ரூபத்திலும் இருந்து, ஸநாதனமான என் ஆத்மா வினிடமும் இருந்து, வீற்றிருந்து, நித்யவாசியாகவும் அக்ஷர மாகவும் பரமாத்மாவாகவுமிருந்து கடாக்ஷித்து, என்னையும் கடைசியில் பிரம்மவாதியாக மாற்றும் பரமபுருஷராகிய உமக்கு நமஸ்காரம்.]

''பகவான் சிவனுக்குச் சமமான ரகுநாத பக்தர் யார் இருக்க முடியும்? அவரைப்போல யார் கடுமையான விரதங்களை அனுஷ் டிக்கமுடியும்? ஒரு பாபமும் இல்லாத சதிதேவியை யார்தான்

அவரைத் தவிர தியாகம் செய்யக்கூடும்? பிரதிக்ஞையைச் செய்து ஸ்ரீரகுநாதனிடமுள்ள அசஞ்சலமான பக்தியை எவர் வெளிப்படுத்தினர்? முனிஸஹோதரரே, ராமச்சந்திரனுக்கும் சிவனைப்போல யார் பிரியமானவர் இருக்கக்கூடும்?'' (596)

"நான் முதலில் சிவபெருமானுடைய சரித்திரத்தைச் சொன்னேன். அதிலிருந்து உமக்குள்ள அந்தரங்கமான ஸ்ரீராம பக்தியை அறிந்து கொண்டேன். மேலும், உம்முடைய ரகசியத்தையும் நான் அறிந்து கொண்டேன். நீரும் ஸமஸ்த தோஷ ரஹிதர்'' (597)

மீண்டும் யாக்ஞ்ய வல்கியர் சொன்னர். "பரத்வாஜரே உம்முடைய குண சீல விலாஸங்களை அறிந்து கொண்டேன். ஹே முனீஸ்வரரே, பரத்வாஜரே, உம்மை நான் சந்தித்ததில் என் மனத்தில் தோன்றும் ஆனந்தத்தையும் சொல்ல முடியாது. யாராலும் என் நிலையை வர்ணிக்க முடியாது.'' (598)

"ராமசரிதமானது ரொம்ப ஆழமுள்ளது. அதை நூற்றுக் கோடிக்கணக்கான சேஷ பகவானுலும் சொல்லி விவரிக்க முடியாது. இருந்தபோதிலும் அந்த ராமசரிதம் எப்படி என்னுல் கேட்கப்பட்டதோ, அப்படி நான் உமக்குச் சொல்ல ஆரம்பிக்கிறேன். முதலில் வாக்குக்கு அதிபதியும், கைகளில் தனுஷ்ஷை தரித்துக்கொண்டிருக்கும் கோதண்டபாணியாகிய ஸ்ரீராமரை நான் நமஸ்கரித்து ஆரம்பிக்கிறேன். நீர் சாவதானமாகக் கேட்க வேண்டும்'' (599)

[தியானம்

ஹே ராமா, நீ மும்மூர்த்தியினிலும் பெரியவர் என்று சொல்லப்படுகிறீர். ஹே ஹ்ருஷிகேசா, எல்லா உலகங்களையும் படைப்பவரும் அழிவற்றவரும் பரமாத்மாவுமான தேவரீரைப் பார்க்கிறவர்கள் ஒருக்காலும் திருப்தி அடையமாட்டார்கள். மதிமயக்கத்தையும் அடையமாட்டார்கள். ஆதிகாலம் முதல் இருப்பவரும், உத்தமமான தேவரும், தேவதேவரும், அழிவில்லாதவரும், ஸுர குருவுமான தேவரீரைச் சரணமடைந்தால் ஒரு பொழுதும் புத்தி மயக்கம் அடையமாட்டார்கள். புராணரும், பரமபுருஷரும் மேலானவர்களுக்கு எல்லாம் மேலானவரும், ஸர்வ உத்தமருமான தேவரீரை நான் சரணமடைகிறேன். நான்கு வேதங்களும் யாரை கானம் செய்கிறதோ, எவர் தேவர்களாலும் கானம் செய்யப்படுகிருரோ, அந்த பரமாத்மாவாகிய தேவரீரை சரணம் அடைகிறேன். பரமேஸ்வரரே,

புருஷோத்தமரே உமக்கு வந்தனம். மாதவரே, தேவரீருடைய சரித்திரத்தை அறிந்தவரும் புராண ரிஷியுமான மார்க்கண்டேயர் முன்பு உமது மஹாத்மியத்தையும் செய்கையையும் சொல்லியிருக்கிறார். மஹத் என்னும் அஹங்காரம், ஸ்ருஷ்டி, பஞ்சதன் மாத்திரைகள் முதலிய ஆதிபொருள்களுக்குப் பீஜமாக நீர் விளங்குகிறீர். ஸர்வ சக்திகளுக்கும் ஈஸ்வரராக விளங்குகிறீர். ஸர்வ சத் ஜனங்களின் ஆஸ்ரயராக விளங்குகிறீர். ஸநாதனரே, சரஸ்வதிதேவி, மஹேஸ்வரர், தர்மாத்மாவான சேஷர், பார்வதி, கமலா ராதா வேதமாதாவான சாவித்திரிதேவி, வேத ஸ்மிருதிகள் உம்மையே விஷயமாக ஸ்துதியும் கானமும் செய்கிறார்கள். ஐயா, எந்த இடத்தில் வேத அத்யயனமும் சத்யமும், ஐம்பொறிகளடக்கம், பரிசுத்தியும், தர்மமும் பொறுமையும் இருக்கின்றனவோ, அந்த இடத்தில் நீர் விளையாடுகிறீர். எவர்கள் தர்மத்தை அழிக்கிறார்களோ, "அவர்கள் என்னால் கொல்லப்படத் தக்கவர்" என்கிற பிரதிக்ஞையை நிலைநாட்டுவதற்காக அவதரிக்கிறீர். கருணாநிதியே, எனக்கு சதா துர்லபமான அனன்னிய பக்தியைக்கொடும். உமது பாதங்களில் ஆசையைக்கொடும். உமக்குத் தாஸ்யனாக இருக்க அனுக்ரஹம் செய்யும். ஸரோஜதளநேத்ரா, உம்மை அடிக்கடி சந்திக்க அனுக்ரஹம் செய்யும்.]

சரஸ்வதி தேவியானவள் நாட்டிய பொம்மைக்குச் சமமாக இருக்கிறாள். பிரபு ராமச்சந்திரன் சூத்ரதாரி தன்னுடைய பக்தர்களை அறிந்து எந்த கவிக்கு அவர் அனுக்ரஹம் செய்ய நினைக்கிறாரோ, அவர்களின் ஹிருதயத்தில் சரஸ்வதிதேவி நர்த்தனம் செய்கிறாள். (600)

ஆகையால் அந்த மஹாதேவியின் அந்தர்யாமியான ஸ்ரீரகுநாதருக்கு பிரணாமம் பண்ணுகிறேன். அவருடைய நிர்மலமான குணங்களை வர்ணிக்கும் கதையைச்சொல்ல ஆரம்பிக்கிறேன். கைலாஸ பர்வதம் மிகஸ்ரேஷ்டமாகவும், ரொம்ப ரமணீயகரமானதுமாக இருக்கிறது. அந்த இடத்தில் சதா உமையும் சதாசிவனும் ஆனந்தத்துடன் நித்யவாசம் செய்கிறார்கள். (601)

சித்தர்கள், தபஸ்விகள் யோகிகணங்கள் தேவதைகள் கின்னரர்கள், முனீஸ்வரர்கள் அந்த பர்வதத்தில் வசிக்கிறார்கள். அவர்கள் மஹத்தான புண்ணியாத்மாக்கள். ஆனந்தத்துடன் ஸ்ரீமஹர தேவருக்குச் சேவை செய்கிறார்கள். (602)

எந்த புருஷர்கள் ஸ்ரீவிஷ்ணு பகவானையும் மஹாதேவரையும் விரோதபாவத்துடனும் கருதுகிறார்களோ, அல்லது அவர்

களிடம் உதாசீனர்களாகவும் இருக்கிறார்களோ, அவர்களுக்கு தர்மத்தில் ப்ரீதியும் ஏற்படாது. அப்பேற்பட்டவர்கள் ஸ்வப்னத்தில் கூட அந்த இடத்தை அடைய முடியாது. அந்த பர்வதத்தின்மேல் ஒரு பெரிய ஆலமரம் இருக்கிறது. அந்த மரம் புதியதாகவும், தினமும் புதியயெளவனம் படைத்ததாகவுமிருக்கிறது. ஆறு ருதுக்களிலும் சுந்தரமாக விளங்குகிறது. (603)

அங்கே மூன்று விதமாக சீதளமும் மந்தமாகவும் சுகந்தமாகவும் வாயு வீசுகிறது. அந்த மரத்தின் நிழல் ரொம்ப குளிமையாகவிருந்தது. அந்த மரம் சிவன். விஸ்ராமம் செய்வதற்காக ஏற்பட்டது. வேதங்களால் கானம் செய்யப்பட்டது. ஒரு சமயம் பிரபு சிவபெருமான் அந்த விருக்ஷத்தின் கீழே போய் உட்கார்ந்தார். அவருடைய ஹ்ருதயத்தில் ரொம்ப சுகம் உண்டாயிற்று. (604)

தன் கைகளால் கிருபாளுவான சிவபெருமான் அந்த இடத்தை சுத்தி பண்ணிவிட்டு புலித்தோலின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்தார். குந்தபுஷ்பத்திற்கும் (குறுக்கத்திப்பூ) சந்திரனுடைய தேஜஸ்ஸுக்கும் சமமானவரும், சங்கு போல வெண்மை நிறமுள்ளவருமான அவருடைய சரீரம் அழகாக இருந்தது. பெரியதும் நீளமுள்ள ஆஜானபாஹுவான கைகளுடன், முனிஜனங்கள் அணிவதான வற்கலையை வஸ்திரமாக அவர் அணிந்து கொண்டிருந்தார். (605)

[தியானம்

ஹே ராமா, நாராயண ஸ்வரூபி, என் ஆசாரியர்களான நாரதர், வால்மீகி, தியாகராஜர் இவர்களால் நன்கு பார்க்கப்பட்டு மிகவும் புகழப்பட்ட உத்தம ஸ்லோகா, மும்மூர்த்திகளும் தேவர்களும் உன்னைப்புகழ்ந்து திருப்தி அடையவில்லை. ராமா, உனக்கு தேவர்கள் தாஸர்களாகவும், சக்ராயுதமும், சங்கமும், ஆதிசேஷனும், உனக்கு பிராதாக்களாகவும், உன் பிரியையான சீதை நாயகியாகவும், ஆஞ்சநேயரைப் போன்ற மஹாபுருஷன் உனக்கு தாஸனாகவும் இருக்க, நான் அல்லவோ உன்னைப் பூஜிக்க பாக்கியம் படைத்தவனாக இருக்கவேண்டும். கௌசல்யா புத்ரா, சுமந்திரர், [அக்ரூரர்] போன்றவர்களும் உன் கிருபையை நினைத்து நினைத்து ஆனந்த மடைந்தார்கள். அதை நான் மறக்க முடியுமா? கூனிக்கு கிருஷ்ணவதாரத்தில் நீ காட்டிய மஹா கிருபையை நான் மறக்கமுடியுமா? பரம புருஷராகிய

உனக்கு, பிரும்ம பத்னியான சரஸ்வதிக்கு ஸகாவும், பார்வதி தேவியினால் அளிக்கப்பட்ட சக்தியைத் தரித்தவரும், மஹாலக்ஷ்மி யின் ஐஸ்வர்யங்களான அழகுச்செல்வம் நிறம்பினவரும், எனக்கு பரதேவதையாகவும் குலதேவதையாகவுமிருக்கும் முருகன் எவ் விதம் உன்னைப் புகழ்ந்த வசனங்களால் துதித்தாரோ, நானும் அது மாதிரி உன்னைப்புகழவேண்டும். பரம கருணாநிதி, உனக்கு சந்தனம் தாம்பூலம், அழகு பண்ணும் பாக்யம், உன்பாதசேவை, உன் ராமராஜ்யத்தில் சேவை, உன்னை, சிவனுருடன் கூடிய அம்பிகையைத் தியானித்துப் பூஜித்து சந்தோஷம் அடைய எனக்கு பாக்யம் கிடைக்குமா? உமாபதி, மஹா உபநிஷத்தின் தத்வார்த்தப்பொருளே, உன்னையே என் ரக்ஷகனாக நம்பியிருக் கிறேன். உனக்கு நான் மங்கள ஹாரத்தி எடுத்து, உன்னை என் பொக்கிஷமாக நான் சதா காப்பாற்றவேண்டும்.]

பகவான் சம்புவினுடைய பாதகமலங்கள் மிகப் புனிதமாக அன்று மலர்ந்த புஷ்பங்கள் மாதிரி இருக்கின்றன. அவருடைய நகங்களின் ஜோதி பக்தர்களின் மன இருளை விலக்குகிறது. அவருடைய நாகாபரணங்கள், மேனியில் பூசப்பட்ட பஸ்மம், அந்த திரிபுராரியின் சுபலக்ஷணங்கள், சரத்காலத்து பூர்ணிமை யையும் வெல்லும் சுந்தரமான அவருடைய வதனமும், (606)

ஜடாமுகுடமும், சோபையுடன் விளங்கும் கங்கையும் அவருடைய சிரத்தின்மேல் அலங்காரங்களாக விருந்தன. தாமரை புஷ்பத்திற்குச் சமமான நேத்ரங்கள். நளினமான புஷ்கரலோசனங்கள். அவருடைய நீலலோஹிதமான கண்டம் (ஹாலகாலவிஷத்தை நாராயணரின் திருப்திக்காகச் சாப்பிட்ட தனால்) அதிசௌந்தர்யமாக விளங்கியது. நாத பிரம்மத்தின் வடிவாக உள்ளவர். அவருடைய நெற்றியில் அதிலாவண்ய பொக்கிஷமாக பாலசந்திரன் சோபையுடன் விளங்கிக்கொண் டிருக்கிறன். (607)

[தியானம்

ஹே ஸ்வாமி, சம்போ மஹாதேவா, உம்மை அர்ஜுனன் தழுவி, தோஷங்கள் நீக்கப்பெற்றனே; உம்மை உமை தழுவி சகல ஆனந்தங்களைப் பெற்றளே; உம்மை ராமன் பார்த்து உமது சௌக்கியத்தை பரமதனமாகக் கொண்டானே; ஹே சம்போ, குமாரரின் பிதாவே, ஓங்காரஸ்வரூபமாக விளங்கும் ஏகதந்தரை உன் மடியில் வைத்து உல்லாஸமாகக் கொஞ்சும் பாக்யத்தைப் பெற்ற மஹானுபாவா, நீரும் பார்வதியின் மடியில் ஐந்து

சிகைகளுடன்கூட அழகான பாலகனுகமாறி இந்திரன் போன்ற வஜ்ரபாணியை ஸ்தம்பித்து, துர்வாஸராகமாறி, அம்பிகையின் பிரதம ஸ்ரீ வித்யா உபாஸகராகத்திகழ்ந்து, பிற்பாடு ஸ்ரீ கிருஷ்ணனையும் ருக்மணியையும் அனுக்ரஹித்த உத்தம பிராம்மணேத்தமரே, நீர் என்னிடம் கருணையுடன் இரும்.]

"ஹே, காமதேவனை எரித்த சம்போ, ஆஸனத்தில் வீற்றிருக்கும் உம்முடைய அழகு எவ்வளவு சுந்தரமானது என்று யாரால் வர்ணிக்க முடியும்?" சாந்தரஸமாகவிருந்தது அவருடைய சரீரம். அவருடைய அழகு இவ்விதம் இருக்கையில், இந்தமாதிரி சந்தர்ப்பம் ஒன்றில்தான் ஜகன்மாதாவான பார்வதிதேவி அவரிடம் வந்தாள். (608)

தன் பிரியையான உமையை அவர் வரவேற்று, தனது இடது பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக்கொண்டார். அந்த மஹா பாக்யவதி அவருடைய பக்கத்தில் மிக்க வினயத்துடன் உட்கார்ந்துகொண்டாள். மனத்தில் பிரஸன்னமாகி, பார்வதி தேவி பூர்வஜன்ம விருத்தாந்தங்களை ஞாபகப்படுத்திக் கொண்டாள். (609)

தன் ஸ்வாமியின் ஹ்ருதயத்தில் பொங்கும் அதிக பிரேமையின் வெள்ளத்தை அனுமானித்து, உமா சிரித்துக்கொண்டு பிரியமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். யாக்ஞ்யவல்கியர் சொல்ல ஆரம்பிக்கிருர். "எந்த ராமகதை உள்ளதோ, அந்தக்கதை சகலலோகங்களுக்கும் ஹிதத்தைத் தரக்கூடியது. அந்தக்கதையை பார்வதிதேவியானவள் தன் பதியினிடம் கேட்க ஆரம்பித்தாள்." (610)

[தியானம்

உமை தன் பூர்வஜன்ம தவறுதலை நினைத்து, பகவான் சம்புவை தழுதழுத்த குரலில் மிக்கப் பரவசமாக, சதருத்ரீயத்தின் மஹா அர்த்தத்துடன் புகழ்ந்து, தண்டனிட்டு வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். "பசுபதி, மஹேஸ்வரா, பஹுரூபரே, ஸ்தாணு நீர் க்ரோதத்தினுல் உலகங்களில் அனுப்ரவேசம் செய்வதால் ஸர்வர் என்று எண்ணப்படுகிறீர். உம்முடைய ரூபமானது தாம்ரவர்ணமாக இருப்பதால் தூர்ஜடி என்று அழைக்கப்படுகிறீர். விஸ்வேதேவர்கள் உம்மிடம் சாநிந்தியம் செய்வதால் விஸ்வரூபர் என்று அழைக்கப்படுகிறீர். ஆகாசம் ஜலம் பூமி, ஆகிய மூன்று தேவிகளை ஈஸ்வரர் அடைவதால் திரியம்பகர் என்றும், மனிதர்களுக்கு மங்களங்களைச் செய்வதால் சிவன்

என்றும், ஆயிரம் கண்கள் கொண்டு பதினுயிரம் கோணங்களில் பார்த்து உலகத்தை ரக்ஷிக்கிறதால் மஹாதேவர் என்று புகழப் படுகிறீர். உம்முடைய கேசங்கள் சூர்யசந்திரர்களின் பிரகாசம் போலிருப்பதால் வ்யோமகேசர் என்றும் சொல்லப்படுகிறீர். ஸநாதனரே, கபர்தின், முக்காலங்களிலும் உலகங்கள் உம் மிடம் லயித்திருக்கிறபடியால் பவரென்றும் சொல்லப்படுகிறீர். தர்மத்தின் ஸ்ரேஷ்டமான பொருள் என்று சொல்லப்படும் வ்ருஷாகபி, பிரும்மா, இந்திரன், வருணன், யமன், குபேரன் இவர்களைத் தண்டித்து பாபங்களை போக்குகிற படியால் ஹரர் என்றும் சொல்லப்படுகிறீர். முக்கண்ணரே, பிராணன் அபானன் என்கிற ரூபத்தில் பிராணிகளினிடத்தில் வசிப்பவரே, பத்து ரூபங்களாயிருந்துகொண்டு சமமாக இருப்பவரே, புண்யபாபங்களைப் போக்குவதால் ஹரர் என்றும் சொல்லப்படுகிறீர். முக்கண்ணரே, ருத்ரரே, உம்முடைய பாதி சரீரம் அக்னிமயமாயும் இன்னொருபாதி சந்திரரூப மென்றும், உம்முடைய மங்களகரமான சரீரத்தால் பிரம்ம சாரியத்தை அனுஷ்டிப்பதாலும், மஹாதேவர் என்றும் ருத்ரர் என்றும் புகழப்படுகிறீர். உமக்குத் திரிபுரதகனத்தின் சமயம் காயத்திரி சாவித்திரி கடிவாளங்களாயும், நான்கு வேதங்கள் குதிரைகளாகவும், பிரும்மா சாரதியாகவும், விஷ்ணு அம்பாகவும், பூமி ஆகாயம் ரதத்தின் சக்கரங்களாயும், வாசுகி ஆதிசேஷன் ரதத்தின் கயிறுகளாகவும்; நீர்கால ரூபியாகவும் சம்ஹரத்தீரே. மஹேஸ்வரா, உக்ரரூபரே, நீலகண்டரே, பினுகி, திரிசூலரே, ஸ்ரீமான், பாலரூபரே, ஈஸானரே, உமக்கு நமஸ்காரம், என்னை ரக்ஷியும். என்னிடம் அன்பாயிரும். உமது அடிமை நான். வேதத்திலும் உம்முடைய விஷயமாக சத்ருத்ரீயம் படிக்கப் படுகிறது. உமக்காக அனந்தருத்ரம் என்கிற உபஸ்தான மந்திரமாக இருக்கிறது. பராசரர்புத்ரரான வியாஸர் பலவிதமாக உம்மைப் புகழ்ந்திருக்கிருர். அஸ்வத்தாமாவுக்கும் அர்ஜுனனுக் கும் உமது மகிமைகள், சரஸ்வதிதேவி நித்யவாசம் செய்யும் வேத வ்யாஸ பகவானுல் பலவிதமாகச் சொல்லப்பட்டு பல மந்திரங் களால் விளங்குகின்றன. என்னிடம் அனுதாபம் காட்டும்.]

பார்வதிதேவி சொல்ல ஆரம்பித்தாள். "விஸ்வநாதரே, திரிபுராரி, ஸ்வாமி, உம்முடைய மகிமை மூன்று லோகங் களிலும் வியாபித்திருக்கிறது. சராசரங்களனைத்தும் நாக மனுஷ்ய தேவகணங்கள் யாவரும் தங்களுடைய சரண கமலங் களில் வந்து பணிகிருர்கள்." (611)

"ஹே பிரபோ, நீர் ஸமர்த்தர். ஸர்வக்ஞர். கல்யாண ஸ்வரூபர். எல்லாக் கலைகளுக்கும் குணங்களுக்கும் பொக்கிஷம். யோகம் ஞானம் வைராக்யம் ஆகிய எல்லாவற்றிற்கும் நித்ய வாசஸ்தலம். உம்முடைய நாமாக்கள் கல்பதரு." (612)

"சுகத்தை எனக்கு கொடுப்பவரே, நீர் என்னிடம் பிரசன்ன மாக இருப்பீராகில், என்னை நிச்சயமாக உம்முடைய அந்தரங்க மான தாஸியாக, பணியாளாக ஏற்றுக்கொள்ளவேண்டும். ஹே பிரபோ, நீங்கள் ஸ்ரீரகுநாதருடைய கதையை நானு பிரகாரமாக எடுத்து உரைத்து என் அக்ஞானத்தைப் போக்கவேண்டும்." (613)

"எவனுடைய வீடு ஸகல மனேபீஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் கற்பகதருவின் சாயையில் இருக்கிறதோ, (எவர் பசு பக்ஷி, மிருகங்கள், மனிதர்கள், பழுத்த மரத்தை அடைவதுபோல ஸநாதனமாக அடைக்கலமாக எல்லோருக்கும் இருக்கிருரோ), அப்பேற்பட்ட தயாளுவாகிய நீர் இருக்கையில், அவனுக்கு மிக்கக் கொடுமையான தரித்திரத்தினுல் ஏற்படும் துக்கங்கள் ஏன் ஏற்படக்கூடும்? ஹே சசிபூஷணு, என்னுடைய ஹ்ருதயத் தில் ஏற்பட்டிருக்கிற துக்கங்களை நீர் தீர விசாரித்து அறிந்து கொண்டு, என்னிடம் அருள்கொண்டு, எனது பிரமை மயக்கத் தையும் மன இருளையும் தூர விலக்கவேண்டும்." (614)

"காருண்யபிரபோ, பரமார்த்தவாதிகளாகிற முனி ஜனங் கள், பிரும்மவாதிகள், ஸ்ரீராமனை அனுதியான பரபிரும்மம், அனுதியான பரதத்வம் என்று சொல்லுகிருர்கள். சேஷன், சரஸ்வதி, வேதசாஸ்திரங்கள், புராணங்கள், கவிகள் ஆகிய எல் லோரும் அவருடைய புண்ணிய கீர்த்திகளை ஸதா கானம் செய் கிருர்கள்." (615)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி, உமாதேவி, காருண்யம் நிறைந்த வளே, ஜயலக்ஷ்மி, தர்மத்தில் மிக்க பற்றுதல் உள்ளவளே, மிருத்யு தேவதையே, பிரும்மாவினுல் படைக்கப்பட்டு அவரா லும் ருத்ரராலும் அனுக்கிரஹிக்கப்பட்டவளே, லோபம், க்ரோதம், அசூயை, பொருமை, துரோகம், மோகம், வெட்க மில்லாமை, ஒருவரையொருவர் க்ரூரமாகச் சொல்லுதல் ஆகிய குணங்கள் என்னை வாட்டாமல் விலகி நிற்கட்டும். தாயே, ஸர்வபூத ஸமத்வம் முதலிய விசேஷமான குணங் களை உள்ளவளே, வியாதிகளாலும் அதர்மங்களாலும் என் தேக பலத்தைப் போக்கும் பாதைகளிலிருந்தும், அஸத்தியத்தி

லிருந்தும், பாபத்திலிருந்தும் என்னைக் காப்பாற்ற வேண்டும். என் மனதில் தோன்றும் காமத்தையும் கோபத்தையும் அகற்றி, சம்சாரத்தில் பயந்த என்னைக் காப்பாற்று. பயங்கரமான நாதமுள்ளதும் எங்கும் செல்லுகின்ற பிராணவாயுவானது என்னிடம் தயை காட்டட்டும். தண்டபாணியான மிருத்யு தேவதை பிரும்மதேவரால் அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறவளாக ஏற்படுத்தப்பட்டது என்று எவ்விதம் விவேகன் நினைப்பானோ, இதைப்போல, நான் உன்னை அறிகிறேன். மஹாகாளி, கருப்பு சிகப்பு மஞ்சள் நிறம் உள்ளவளே, சதுர்வித புருஷார்த்தங்களான கொடை உள்ள செல்வம் என்கிற தர்மம், கர்வமில்லாத ஞானம், பொறுமையுடன்கூடிய சௌரியம், பற்றுதல் இல்லாத ஐஸ்வர்யம் போகங்கள் இந்த நான்கிலும் சிறப்பிக்கப்பட்டதான ராஜரிஷிகளின் மார்க்கத்தை அனுசரித்த என்னை கிருதார்த்தனாகவும், கிருதகிருத்யனாகவும் ஆக்கவேண்டும். அம்மா, ரந்திதேவன், கயன், பகீரதன், சிபி, பிருது போன்ற ராஜரிஷிகள் என்னைத் தர்மத்தில் நாட்டமுள்ளவர்களாக நியமிக்க வேண்டும். ஜமதக்னியின் புத்ரரான பரசுராமர் எனக்கு சதா ரக்ஷை தரட்டும். சோகத்தைவிட்டு கற்றறிந்த வித்வான்கள் சந்தோஷம், பிரீதி, ஆனந்தம், பிரியம், மனோகாம்பீர்யம் ஆகிய சுத்த ஸ்வபாவங்களால் எனக்கு அருள்செய்து, கலக்கமற்ற மனத்துடன் உன்னை வந்து அடையும்படி செய்யவேண்டும். நாரதருடைய வாக்குக்களை நான் நினைப்பவனாகவும், வித்வானான யுதிஷ்டிரரால் நன்கு அறியப்பட்ட உண்மைகளை நினைத்துக் கொள்பவனாகவும், வேதவ்யாஸரால் ஸமாதானப்படுத்தப்பட்டவனாகவும் என் பூர்வாசாரியர்கள், பூர்வ ராஜஸ்ரேஷ்டர்கள், ராஜரிஷிகளால் காண்பிக்கப்பட்ட யாகம் தானதவம் தர்ம வழிகளின் சம்பந்தங்களால் யேற்படும் பராக்ரமம் இருந்தபோதிலும், நியாய வழிகளாலே பொருள் அடையப்பட்டு செலவழிக்கப்பட வேண்டும் என்கிற விதரம் உடையவர்களான அந்த முன்னோர்களை முன்னிட்டு உன்னை தண்டனிடுகிறேன், நீ கிருபையுடன் இரு.]

"ஹே காமதேவனை எரித்த சம்போ, மீண்டும் ரதியின் இன்பத்திற்காக மன்மதனுக்கு உயிர்கொடுத்த மிருத சஞ்சீவினி, தாங்கள் தினம் ராத்திரி என்று பாராமல் மிக்க மரியாதையுடன் சதா ராம, ராம என்று ஜபம் செய்கிறீர்கள். அந்த ராமர் அயோத்யா புரியின் ராஜாவின் புத்ரரா? அல்லது ஜனன மில்லாதவரும், குணங்களுக்கு மேற்பட்டவரும் அகோசரமானதுமான பரதத்வமான ராமன் என்கிற பரம்பொருளா? பரமபுருஷனா?" (616)

"அவர் சக்ரவர்த்தியின் திருமகனுகவிருக்கும்பக்ஷத்தில், பரபிரும்மத்தின் ஸ்வரூபமாக எவ்விதமாக விளங்குவார்? அப்படியே பிரும்மமான பொருளாகவிருந்தால் அவர் தன் ஸ்திரீயை இழந்ததால் ஏற்பட்ட விரஹதாபத்தினுல் வாடும்படி, அவருடைய மதி ஏன் சீர்கேட்டை அடைந்தது? அவருடைய சரித்திரத்தைப் பார்த்தும் கேட்டும், அந்த பிரபுவினுடைய மகிமையை நான் உணர்ந்தும்கூட, என் மனம் அதிகமாக சித்தபிரமை அடைகிறது." (617)

"இச்சைகள் இல்லாதவரும் சர்வ வியாபகரும், சர்வ வைப வங்கள் உள்ள ஷாட்குண்ய பரிபூர்ணமாக உள்ள மஹாபுருஷன் வேறு எவராவது இருக்கிருரா? ஹே நாதா, அவ்விதம் இருந்தால் அவரைப்பற்றி எனக்குச் சொல்லும். என்னை ஒன்றும் அறியாத அக்ஞானியாக அறிந்துகொண்டு மனத்தில் க்ரோதத்தை விலக்கி, எந்தவிதமாக என் மோஹ தாபங்கள்என்னிடமிருந்து விலகுமோ, அவ்விதம் தயையுடன் சொல்லி அருள வேண்டும்." (618)

"நான் வனத்தில் ஶ்ரீராமச்சந்திரனுடைய மகிமை பொருந்திய பிரபாவத்தைக் கண்டேன். ஆனுல் பயத்தின் காரணமாக, உம்மைக்கண்டு மனமாற பேச தைரியம் கொள்ளவில்லை. ஹே கிருபாளு, மலினமான மனத்துடன் அடர்த்தியான உண்மை பொருந்திய அந்த ராமரை நான் சரியாகப் புரிந்துகொள்ள வில்லை. அதற்காக உரிய தண்டனையை நான் பூர்ணமாக அனுபவித்து விட்டேன். (619)

"இப்பொழுது என் மனதில் ஒரு சந்தேகம் இருந்து கொண் டிருக்கிறது. தாங்கள் கிருபை செய்ய வேண்டும். என் கைகளை அஞ்சலி செய்து கொண்டு பயத்துடன், ஹேஸ்வாமி, விநயத் துடன் உம்மை நான் பரிபூர்ணமாக வந்து அடைகிறேன். ஹே பிரபோ, பலதடவைகள், பலவிதமாக அந்த சமயமும், இன்னும் பிற்பாடு பல சமயங்களிலும் தங்களால் எனக்கு உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. மோஹத்தினுலும் க்ரோதத்தினுலும் கவரப்பட்ட எனக்கு சந்தேகங்கள் இன்னும் விலகவில்லை. ஹே நாத, க்ரோதமின்றி எனக்கு மீண்டும் அக்ஞானம் விலகும்படி அருள் பண்ணி, உபதேசம் செய்யவேண்டும்." (620)

[தியானம்

ஹே ராமா, ஶ்ரீகர்ப்பா, பூர்ணரே, லக்ஷ்மிவானே, குஹரே, குப்தரே, ஹிரண்யகர்ப்பரே, காரணப் பொருளே, ஆதிபீஜமே,

பிரமாணப் பொருளே, நக்ஷத்திரங்களை உடம்பாகவும், சந்திர சூர்யர்களைக் கண்களாக உடையவரும், ஆதிதேவரும், மஹா தேவரும், தேவதேவருமான உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். மார்க்கண்டேயருக்கு பால வடிவமாகவும் சூக்ஷ்மமாகவும், அர் ஜுனனுக்கு விராட்ரூபமாகவும் ஸ்தூலராகவும் காக்ஷி அளித்த மஹானுபாவரே, மஹா ஸ்ருங்கரே, திரிபதம் என்கிற முப்பது திசைகளிலும் திருஷ்டியை செலுத்துகிறவருமான உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். சக்ரம் கதை இவைகளை ஆயுதமாக தரித்த வரே, வனமாலி, ஸத்கதிக்கு ஆதாரமாகவுள்ள உம்மை நான் ஆஸ்ரயிக்கிறேன். ஸர்வபூதமயமாக விளங்கும் உம்மை உபா ஸனை, தர்மத்தின் ஆசரணை, வர்ணாஸ்ரம தர்மங்கள் இவைகளின் வழியாக உம்மை ஆராதிக்கிறேன். ஜனார்த்தனரே, பிறரை நிந்தை செய்யாமலும், பொய் பேசாமலும், கேவலமாக நடத்தாமலும், பிறருக்கு மனம் நோக வைக்காமலும், பிறர் இடத்தில் கேசவர் நிச்சயமாக பிரசன்னராக இருக்கிறார் என்று கலக்கமடையாமல் வாழ்கிறேன். பிறருடைய ஸ்திரி, தனம், பிறருக்கு நன்மை செய்வது, ஹிதமாக இருப்பது, அவர்களின் ஹிதத்தில் ருசியுள்ள வனாகவிருப்பது, இதுபோன்ற வழிகளால் கேசவனைச் சந்தோ ஷப் படுத்துகிறேன். ஸர்வ பூதங்களுக்கும் அவைகளைத் தரித்த சரீரங்களுடன் கூடிய ஸ்தாவர ஜங்கமங்களுக்கும் பீடை செய்யா மல் அவர்களுக்கு யாதொரு நஷ்டமும் ஏற்படுத்தாமல் ஸ்ரீமானான கேசவரை நான் ஆராதிக்கிறேன். எந்த தேவ புருஷர்கள் பிராம் மண குருமஹா ராஜர்கள் இதேமாதிரி அவர்களையும் பூஜித்து கோவிந்தரை பிரஸன்னப்படுத்துகிறேன். எல்லோரையும் என் போலவாகவும், என் புத்ரன் போலாகவும் ஸமானமான ப்ரீதி யுடன் ஸகல பிராணிகளின் சுகத்தை நான் போஷிக்கிறேன். ஹே ஸர்வாத்மன், சுகந்த மனஸால் ராகத்வேஷங்கள் இல்லா மல் விசுத்தமான மனதுடன் ஸ்ரீ ஹரியான விஷ்ணு பகவானைப் பூஜிக்கிறேன். சாஸ்திரங்கள், தர்ம சாஸ்திரங்கள், தர்ம அனு சரணைகள் இவைகளால் பூர்ண காமனாக விருக்கும் விஷ்ணுவை ஆராதிக்கிறேன். எனக்கு அவரைத் தவிர வேறு கதி இல்லை. அவர் பராயணனாகவே இருக்கிறேன். அப்பேற்பட்ட பகவா னாகிற தாமோதரர் என்னைக் காப்பாற்றட்டும்.]

பார்வதிதேவி மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே ஸ்வாமி, . எனக்கு இப்பொழுது முன்னிருந்த மோஹம் கிடையாது. இப்போது என் மனம் பரம ருசியைத் தரும் ராமச்சந்திரனுடைய கதையைக் கேட்க ஆசைப்படுகிறது.

தயாளு, சேஷ நாகத்தை அலங்காரமாகக் கொண்ட தேவநாதரே, தேவ ஸ்ரேஷ்டரே, தாங்கள் மனம் உவந்து பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பரம புண்யத்தைக் கொடுக்கும் ராம சரிதத்தைச் சொல்ல வேண்டும்.'' (621)

'' நான் பூமியில் விழுந்து, அஷ்ட அங்கங்களுடன் சுக்ருத பிரணாமம் செய்து, உம்முடைய சரண கமலங்களில் வந்தனை செய்கிறேன். உம்மைக் கை கூப்பி விநயத்துடன் கேட்கிறேன். மனம் புத்தி வாக்கு காயம் அடங்கி, உம்மை சிஷ்ய பாவத்துடன் கேட்கிறேன். ஹே குரு மஹாராஜ், தாங்கள் ஸ்ரீ ரகுகுல சோமனாக விளங்கும் ராமனுடைய நிர்மலமான கீர்த்தியைப் பெருக்கும் கதையை வர்ணனம் செய்ய வேண்டும் அந்தக் கதையில் வேதங்களின் ஸித்தாந்த பூர்வமாகவிருக்கும் ஸாரத்தையும் எனக்கு விளக்க வேண்டும் '' (622)

'' நான் தோஷமுள்ள ஸ்திரி ஜன்மம் எடுத்திருந்த போதிலும் வேதஸாரத்தைக் கேட்க அருகதையில்லாதபோதிலும், என்மனம், வசனங்கள், கர்மங்கள் இவைகளின் ஆதாரமாக, உமக்குத்தாஸியாக இருக்க விரும்புகிறேன். சாது ஜனங்கள் துக்கத்தோடுவரும் ஆர்த்திகளுக்கு ரஹஸ்யம் ஒன்றையும் மறைப்பதில்லை '' (623)

'' ஹே நாத, தேவர்களைக் காப்பாற்றும் மஹானுபாவா, உம்மிடம் நான் பச்சாத்தாபத்துடனும், தீனத் தன்மையுடனும் வந்து கேட்கிறேன். என்னிடம் தயா பரிபூர்ணராக ஸ்ரீரகுபதியினுடைய கதையைச் சொல்ல வேண்டும். முதலில் நிர்குண பிரும்மமாகச் சொல்லப்படும் அந்த பிரபு என்ன காரணத்தால் பூமியில் குணங்களுடன் கூடிய ஸகுண பிரம்மமாக அவதாரம் செய்தார் ? (624)

'' ஹே பிரபோ, ஸ்ரீ ராமச்சந்திரனுடைய அவதாரமாகிய ஜன்மக் கதையை விபரமாகச் சொல்ல வேண்டும். அவருடைய உதாரமான கீர்த்தியுடன் விளங்கும் பால சரித்திரத்தைச் சொல்லும். பிறகு அவருடைய கல்யாண மஹோத்ஸவமான ஜானகியை மணந்து கொண்ட விவரணத்தையும், பிறகு ஏன் அவர் ராஜ்யத்தைத் தியாகம் செய்து விட்டு எந்த தோஷத்தால் வனம் சென்றார் என்பது பற்றிய எல்லா விபரங்கள் அடங்கிய ராம கதையை விஸ்தாரமாகச் சொல்லும்.'' (625)

[தியானம்

ஹே பகவான் ராமச்சந்திர பிரபோ, உன் சகாயமின்றி என்னால் ஒருநாளும் ஜீவித்திருக்கமுடியாது. மாதவரே, நீர்

தர்மவிஷயத்தில் மிக்க ஈடுபாடு உள்ளவர். முன்பு அதர்மமாக ராஜ்யத்தைவிட்டு துரத்தப்பட்ட பாண்டவர்களிடம் அனுதாபம் காட்டி, எவ்வளவு பெரிய சங்கடங்களிலிருந்தும் அவர்களைக் காப்பாற்றினீர். உம்மை ஒவ்வொரு வினாடியும் பெரிய வஸ்து, பெரிய ஆஸ்ரிதம் என்று கருதிய யுதிஷ்டிரரிடம் எவ்வளவு கருணை காட்டினீர். மஹாத்மாவான நாரயணருடைய அஸ்தி ரத்தை எவவளவு சுலபமாக மோக்ஷமடையச் செய்தீர். உமக்கு நமஸ்காரம் ஒன்று விஸ்வாசத்துடன் பண்ணியதால், ஒரு சிறிய உபாயத்தால் பாண்டவர்களுக்கு எவ்வளவு மகத்தான கஷ்டம் விலகியது? கிருதக்ஞரே, உம்மை நான் மனத்தாலும் வாக்குக் களாலும் செய்கைகளாலும் என் தீனத்தன்மையை விளக்கி நமஸ்கரிக்கிறேன். உமது ரக்ஷையை சதா அபேக்ஷித்துக் கொண்டு உமது சாஸ்வதமான பாதாரவிந்தங்களைப்பற்றிக் கொண்டு உம்மை வேண்டிக்கொள்கிறேன். பசுக்கள், பிராம் மணர்கள், நாராயண அஸ்திரம் இவைகளைவிட உம்மை நமஸ்கரிப்பதின் பலனாகிய உம்முடைய ரக்ஷையையும், உமது அன்பையும், சேர்க்கையையும், அனுகிரஹத்தையும் நான் அடைகிறேன். நீர் வாசுதேவர், எல்லாம் அறிந்தவர். நீரே எல்லோருக்கும் எல்லாம் கொடுப்பவர். உலகங்களுடைய பராபர தத்வங்களையும் அறிந்தவர் நீரே. உமக்குத்தெரியாத விஷயம் ஒன்றும் இல்லை. நீரே சிநேகிதனாகவும், சத்ருவாகவும், கஷ்டமாகவும், கஷ்ட நிவ்ருத்தியாகவும், பிறப்பாகவும் மரணமா யும், கீர்த்தியாகவும் அபகீர்த்தியாகவும் விளங்குகிறீர், உமது சங்கல்பம்தான் மனிதனை வெற்றி, அபஜயம் அடையச் செய் கிறது. நீரே வஞ்சகராகி தர்மத்தை அழிக்கிறீர். உம்மிடம் சூரியன், அக்னி, வாயு, கருடன் முதலியவர்களும் பயப்படு கிறார்கள். உம்மை அண்டினவர்களின் பயத்தையும் நீர் நாசம் செய்கிறீர். பரமாத்மாவே, அம்பிகையின் செல்லப் புத்திரரும், பரமேஸ்வரரின் வீர்யத்தினால் ஜனித்தவரும் கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவரும் பதினெட்டு கண்கள் உள்ளவருமான குஹப் பெருமானிடம் எவ்வளவு அன்பு காட்டினீரோ, அதுபோல என்னிடமும் அன்பாயிரும். பிராம்மண பிரியரும், மஹாஸேனாபதியும் வள்ளி தெய்வ யானையின் புருஷரும், சக்தி ஆயுதம் தரித்தவரும், மயில் வாகனருமான குமாரக்கடவுள் என்னைக் காப்பாற்றட்டும். ஸ்கந்தரே, அம்பிகையுடன் இருக்கும் பெருமானே, என்னை கடாக்ஷித்தருளும்.]

பார்வதிதேவி மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே நாதரே அந்த ராமருடைய வனவாசமான அபாரசரித்திரத்தையும், அதன் பின்யேற்பட்ட ராவணனுடைய வதத்தையும், பிறகு அவருடைய லீலைகளையும், அவர் ராஜ்யபாரம் நடத்தும் சமயம் ஏற்பட்ட சகல விசேஷங்களையும், புண்யத்தையும் சுகத்தையும் கொடுக்கக்கூடிய சரித்திரத்தை, சங்கர பகவானே, என்னிடம் அருள் கூர்ந்து, விபரமாகச் சொல்லவேண்டும்." (626)

"கிருபையின் எல்லையே, பிறகு, ரகுகுல சிரோண்மணி யாகிய ஸ்ரீராமச்சந்திரன் கருணை மேலிட்டவராகி, தன் பிரஜை கள் சகிதமாக எந்தவிதமாக தன் ராம பதமாகிய ஸ்ரீவைகுண்டத் திற்கு எழுந்தருளினர்? அந்த அற்புதமான சரித்திரத்தையும் சொல்லக்கடவீர்." (627)

"ஹே பிரபோ, எந்த ஸ்ரீராமனைத் தெரிந்துகொண்டும், விக்ஞான சம்பத்துள்ள முனீஸ்வரர்களும், யோகிகளும் சதா ஆனந்தத்தை அடைகிருர்களோ, அந்த மஹத்தான பிரும்ம தத்வத்தையும் விளக்கிச் சொல்லுங்கள். பிறகு பக்தி, ஞானம் விக்ஞானம் என்று சொல்லப்படும் தத்வங்களின் மர்மங்களை அறிதலைப்பற்றியும், வைராக்யம் முதலியவைகள் அடங்கின விபரங்களையும் பிரபோ, எனக்குச் சொல்லக்கடவீர்." (628)

"இன்னும் எனக்குத் தெரியாத ஸ்ரீராமச்சந்திரனுடைய அநேக ரஹஸ்யங்களையும், கேட்கப்பட்டும், சொல்லப்பட்டும் தங்களுடைய விசேஷமான அனுபவத்தால் அறியப்பட்டதும், விமலமான விவேகத்தால் ஸ்வயானுபாவத்திஞல் தெரிந்து கொள்ளப்பட்டதுமான ஸகல விருத்தாந்தங்களையும், அதோக்ஷஜ ரான ஸ்ரீராமச்சந்திரனுடைய பூர்ண கதையையும் சொல்லக்கட வீர். ஹே தயாளு, என்னிடம் விஷயங்களை ஒன்றையும் மறைக் காமல் எல்லாம் சொல்லக்கடவீர்." (629)

"ஹே சச்சிதானந்த குரோ, வேதங்கள் உம்மை மூன்று லோகங்களிலும் மிகச் சிறந்த உத்தம உத்தமரான லோககுரு என்று புகழ்கின்றன. என்னைப்போன்ற பாமர ஜனங்களுக்கு என்ன உண்மை தெரியப்போகிறது?" பார்வதி தேவியிஞல் ஸஹஜஸ்வபாவத்துடன் பழகுதலாகிய சரளரூபமாகவும் சுந்தர மாகவும், பிரஸ்ன (கேள்வி) ரூபமாகவந்த வார்த்தைகளைக் கேட்டு, சிவபெருமானுடைய கோமளமான மனம் உருகியது. (630)

இவ்விதம் உமையிஞல் கேட்கப்படும்போது ஸ்ரீஹரருடைய மனத்தில் ஸ்ரீராமசரித்திரம் எழுந்தது. பிரேமையிஞல் மலர்ந்த

தாமரைப் புஷ்பங்கள் போன்ற கண்களை உடையவரான ஸ்ரீமஹாதேவர் ராமசரித கீர்த்தனத்தால் புளகாங்கிதமடைந்தார். ரோமாஞ்சலியேற்பட்டு ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். அவருடைய நிர்மலமான மனதில் சுந்தரவடிவமான ஸ்ரீராமச் சந்திரனுடைய திவ்யரூபம் தோன்றியது. தானே ஸ்வயமாக சதா பரமானந்தத்தை அனுபவிக்கும் சிவனார் மீண்டும் அபார சுகத்தை அடைந்தார். (631)

[தியானம்

ஹே விஸ்வேஸ்வரரே, உலகத்தில் பிரதான புருஷராக விளங்குபவரே, ஸர்வ லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரே, சந்திர சேகரரே, பூமியைத் தரிக்கிறவரே, ஜகந்நாதரே, பிறப்பு இறப்பு மூப்புக்களைத் தாண்டியவரும், ஞானஸ்வரூபியும், ஞானத்தினால் அடையத் தக்கவரும், பக்தர்களுக்கு அருளோடு கூடிய வரன் களைக் கொடுப்பவருமான சங்கர பகவானை, நான் நமஸ்கரிக் கிறேன். உம்முடைய பல பரிஜனங்களையும் நான் நமஸ்கரிக் கிறேன். மஹேஸ்வரரே, உமக்குச் சரியானவர் யாரும் இல்லை. மங்களஸ்வரூபியும், உமாபதியும், ருத்ரருமான ஸர்வேஸ்வரரை நான் வேறிடத்தில் மனம் செலுத்தாதவனாக ஏகபாவனையுடன் நமஸ்கரிக்கிறேன். வரதரே, உலக நாதரே, ஜடாதரரே, உக்ர மான ஆயுதங்களைத் தரிப்பவரே, உமக்கு வந்தனம். யக்ஞபதி, பன்னிரண்டு சூரிய மூர்த்திகளில் ஒருவரான பூஷாவின் பல்லை உடைத்த முக்கண்ணரே, என் பாபங்களைப் போக்கின ஹரரே, திரிபுரத்தை எரித்தவரே, சூரியன், சந்திரன், அக்னி ஆகியவர் களை நேத்ரங்களாக உடைய பசுபதியே. உமக்கு நமஸ்காரம்.]

பகவான் சம்பு சுமார் ஒரு மணிநேரம் தியான ஆனந்த ரஸத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். பிறகு தன் மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு, மனதில் பிரஸன்னமடைந்த வராகி, ஸ்ரீ ரகுநாதருடைய சரித்திரத்தை வர்ணிக்க ஆரம்பித் தார். (632)

"எவருடைய உதவியின்றி பொய்கூட சத்யமாக விளங்கு கிறதோ, எவரைச் சரியாக அறிந்து கொள்ளாமல் போனால், பிரமை மேற்பட்டு கயிறு சர்ப்பத்தின் தோற்றம் அளிக்கிறதோ, எவரை அறிந்த பின்பு ஜகத்தை நித்யமாயும், அதே மாதிரி ஸ்வபனத்தில் ஏற்பட்ட பிரமை முதலியவைகள் முழித்துக் கொண்டு இருக்கும் சமயங்கள், எவ்விதம் நாசமடைகின்ற னவோ, (633)

அப்பேற்பட்ட பாலரூபியான ஸ்ரீ ராமச்சந்திரனை நான் வந்தனை செய்கிறேன். எவருடைய ஆனந்தமான கீர்த்தியுடன் விளங்கும் நாம ஜபத்தை ஜப சித்தி பண்ணி, சுலபமாக சகலவித மனோரதங்களை நாம் அடைகிறோமோ, அப்பேற்பட்ட மங்களங்களுக்கு இருப்பிடமானவரும், அமங்களங்களை அபஹரிப்பவரும், ஸ்ரீமானும் தசரதருடைய மடியில் விளையாடுபவருமான பாலரூபியாகிய ஸ்ரீ ராமச்சந்திர பிரபுஎன்னிடம் கிருபையுடன் இருக்கட்டும்.'' (634)

திரிபுராரியான பகவான் சம்பு பகவானுன ஸ்ரீராமசந்திரனுக்கு பிரணாமம் பண்ணி ஆனந்தம் நிறம்பினவராக அம்ருதத்திற்குச் சமானமான குரலில் சொல்ல ஆரம்பித்தார். ''ஹே கிரிராஜ குமாரியான பார்வதி, நீ தன்யமானவள். ரொம்ப பாக்யம் செய்தவள். உனக்குச் சமானமாகச் சொல்லும்படி பரம உபகாரி ஒருவரும் இருக்கமுடியாது.'' (635)

''எந்த ரகுநாதனுடைய கதை உன்னுல் வினவப்பட்டதோ, அந்த அம்ருதமயமான கதை சகல விதமான லோகங்களையும் பரிசுத்தமாக்கக் கூடிய கங்கைப் பிரவாஹம் போலவிருக்கிறது. உன்னுல் உலகங்களின் நன்மைக்காக பிரஸ்னமாக (கேள்வி ரூபமாக) இது கேட்கப்பட்டது. நீ ரகுநாதருடைய சரண களில் ஸதா அன்பை வைத்திருக்கக்கடவாய்.'' (636)

[தியானம்

ஹே ரகுராமா, சாதுக்களின் அடைக்கலமே, உம்முடைய அருளால் சாதுக்கள் கிருத கிருத்யர்களாக ஆகிருர்கள். நர ஸ்ரேஷ்டரே, உம்மால் அல்லவோ தர்மங்களின் சூக்ஷ்மங்கள் அறியப்படுகின்றன. காரிய அகார்யங்களின் சம்பந்தத்தை நீர் நன்ருக அறிகிறீர். தர்மத்திலேயே நிலை பெற்றவர்களுக்கும் மதி மயக்கம் ஏற்பட்டு சில சமயங்களில் தர்மத்தின் நிச்சயத்தை வித்வான்கள் கூட தெரிந்து கொள்ள முடிகிறதில்லை. சாஸ்திர அறிவினுலும், பெரியோர்களுடைய ஆசரணைகளாலும் உமது கிருபையாலும் அல்லவோ மனிதன் தர்மரூபியாகவிருந்தாலும் ஆபத்துக்களைத் தாண்டுகிருன். மனிதனுக்கு ப்ராண அபாயம் நேர்ந்த சமயம் மெய் சொல்லியும், பொய்யின் பலன்களையும், பொய் சொல்லி மெய்யின் பலன்களையும், மனிதன் மூர்க்கத் தன்மையை விட்டு, உமது அன்பினுல் அடைகிருன். ஆதலால் ஸத்யத்தை விட மேலானது ஒன்றும் இல்லை. ஆனுல் அதனை உள்ளபடி அறிவதுதான் கடினம். மனிதன் மெய்யையும்

பொய்யையும் நன்ருக அறிவதால் தான் சத்யத்தின் தர்மத்தை அறிகிருன். பிறருக்குப் பயத்தை விளைவிக்கும் பிராணியைக் கொன்று, கண்ணில்லாதபடியால் இரக்கத்தை வரவழிக்கும் ஸ்வபாவமாக இருந்தும் கூட, அதைக் கொன்ற பலாகன் என்கிற வேடன் மேன்மையை அடைந்தான். அது மாதிரி ஸத்யவாதி என்கிற கௌசிகன் ஸத்யத்தைச் சொல்லி, பிராணனைக் காப்பாற்றும் விஷயத்தில் பயந்தவர்களான சாது ஜனங்களை திருடர்களிடம் காட்டிக் கொடுத்து, கெட்டவாக்கின் தோஷத்தை அடைந்தான். ஆகையால் ஸத்யம் அஹிம்சையோடு கூடிகிறதோ, அது தான் உத்தமமான தர்மம் என்று வியவஸ்தை செய்யப்பட்டு சிலாகிக்கப்படுகிறது. ஹிம்ஸை செய்பவர்களுடைய ஹிம்ஸையை நிவர்த்திப் பதற்காகவல்லவோ, தர்ம சாஸ்திரம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தர்மமானது பிராணிகளின் உற்பத்தி, விருத்தி இவைகளுடன் கூடினுல் போற்றப்படுகிறது. அநீதியினுல் ஜயத்தை விரும்புகிறவர்களின் விஷயத்தில் தர்மம் சொல்லாமலிருத்தலால், காப்பாற்றப்படுகிறது. பிராண அபாய சமயத்திலும், விவாஹத்திலும், எல்லா ஜாதிக்குப் பயம் ஏற்பட்டிருக்கிற சமயத்திலும், எல்லா பொருள்களுக்கும் அழிவு நேரும் காலத்திலும் பொய்யானது சொல்லத்தகும். அதிலும் ஸமர்த்தன் எது பொய்யாகாதோ, அதனை எல்லா விதத்திலும் சொல்லவேண்டும். பாபிகளுக்குப் பொருள் கொடுக்கப்படுமாகில், கொடுத்தவனையும் பீடிக்குமல்லவா? ஆதலால் ஒருவன் தர்ம காரியத்தின் பொருட்டு பொய் சொல்வதால் பொய்யனுகமாட்டான். ஆகையால் ஸத்யத்தின் லக்ஷணத்தைத் தெரிந்த ராமா, உம்மை எனக்கு ஸதா ரக்ஷகனுக வைத்துக்கொள்கிறேன். கிருபை செய்.]

"பார்வதி, என்னுடைய அருளினுலும் ஸ்ரீராமசந்திரனுடைய கிருபையாலும் உன் மனத்தில் ஸ்வப்னத்தில் கூட சோகமோ, மோஹமோ, ஸந்தேகமோ, பிரமையோ யாவும் ஏற்படாது." (637)

"உன்னுல் முன் ஜன்மத்தில் செய்யப்பட்டதும், நினைத்துப் பார்க்கும்போது வெட்கப்படக் கூடிய தோஷமும், (நான் இப்போது உனக்கு ராம கதை செய்யும் பிரசங்கத்தால்) விலகி, உனக்கு சகலமங்களங்களும் ஏற்படட்டும். பார்வதி, பரம பாவனமான ராம கதையானது எவனுல் கேட்கப்படவில்லையோ, அவன் நிஜமாகவே அபாக்யவான். அவனுடைய காதுகளின் பொந்துகள் சர்ப்பத்தின் வாசஸ்தலம் போல இருக்கின்றன என்று சொல்லுவேன்." (638)

  

"அதே மாதிரி எந்த மனிதன் தன்னுடைய நேத்ரங்களால் சாதுக்களை தர்சனம் பண்ணுமலிருப்பானே, அவனுடைய கண்கள் மயிலின் தோகையில் எழுதப்பட்ட கண்களைப்போல அசலான கண்களில்லை என்று சொல்லவேண்டும். ஹரி பகவானை யும், குரு மஹராஜரின் சரண கமலங்களையும் வந்தனம் செய்யா மல் எவர்கள் இருக்கிருர்களோ, அவர்களின் சிரம் மிக்க கசப்பாக வுள்ள பரங்கிக்காய்க்குச் சமமானது என்று சொல்லவேண்டும்." (639)

"எவர்களிடம் ஹரி பக்தியானது ஹ்ருதயத்தில் இல்லையோ, அவர்கள் ஜீவித்திருந்த போதிலும் மரித்தவர்களுக்குச் சமானம். எந்த நாக்கு ஸ்ரீராம குணங்களை கானம் பண்ணவில்லையோ, அந்த நாக்கு தவளையின் நாக்குக்குச் சமானம் என்று சொல்ல வேண்டும்." (640)

"எவர்கள் பகவானுடைய புண்ய கீர்த்திகளைக் கேட்டு மனம் கசிந்து சந்தோஷத்தை அடைகிருர்களில்லையோ, அவர்களுடைய மனமானது வஜ்ரத்துக்கு ஸமானமான கடினத்தனமும் நிஷ்டூரத் தனமும் கொண்டது. ஹே பார்வதி, ஸ்ரீ ராமச்சந்திரனுடைய லீலைகளை நான் விரிவாகச் சொல்கிறேன். நீ கேள். இந்த லீலைகள் தேவகணங்களுக்குக் கல்யாணங்களைச் செய்யும். ஆனல் தைத் யர்களுக்கு விசேஷ ரூபத்தில் மோஹத்தை உண்டு பண்ணும்." (641)

"ராம கதையானது காமதேனுவுக்குச் ஸமானமாக விருக் கிறது. அதைப் பஜிப்பதால் சுகத்தைக் கொடுக்கிறது. ஸாதுஜனங்களின் ஸமாஜம் ஸகல தேவதைகள் வசிக்கும் தேவ லோகத்தைப் போலிருக்கின்றது. ஸகல சுகங்களைக் கொடுக் கிறது. இவ்விதம் அறிந்துகொண்டால், யார்தான் இந்த ராம கதையைக் கேட்காமலிருப்பார்கள்?" (642)

[தியானம்

ஹே பரமேஸ்வரி, அங்குசம், பாசம், கரும்புவில், மோஹம் என்கிற அம்பு இவைகளுடன் கூடிய உன் சிகப்பு நிறமான தேக மும், சந்திரனையும் வெல்லும் களங்கமில்லாத முகமும், உன் மதுர மான பேச்சுக்கள், புதிதான சம்பகப்பூவைப் போல விளங்கும் நாசி, கருணை பொங்கும் விழிகள், சம்புவைத் தழுவும் கைகள், ஸ்தனங்கள், கோவை போல செவ்வாய், அழகாகப் புன்னகை பூத்த முகம், என்னுள்ளத்தில் வீற்று, என் அக்ஞானத்தை விலக்கி, என்னைச் சந்தோஷப்படுத்துகிறது. தாயே, சம்சார துக்

கத்தால் வாடி, இளைத்து, மெலிந்து துன்பத்துடன் இருக்கிறேன். என் சங்கடங்கள் யாவையும் தீர்த்து வைத்து, உன் திவ்ய திருவடிகளில் சேர்த்துக்கொள். காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி, என்னை எப்போது உன்னிடம் சேர்த்துக் கொள்ளப் போகிறாய்?]

[ஐயா, அன்று அஸ்வத்தாமாவும் அர்ஜுனனும் மனம் கசிந்து, வெறுப்புடன், "சாஸ்திர ஞானம் பொய், நான் கற்றுக் கொண்டது எல்லாம் பொய்" யென்று வில்லையும் அம்பையும் உதறிவிட்டு வருத்தத்தால் கவரப்பட்டு அழுத சமயம், சமய சஞ்சீவியான வேதவியாஸர் தோன்றி பகவானுடைய பெருமைகளைச் சொன்னாரே, அதுபோல எனக்கு எப்போது குரு உபதேசம் கிடைக்கும்? குரு கிருபை எவ்விதம் கிடைக்கும்? எப்போது என் மனம், துக்கத்தினால் மெலிந்து வாடியிருக்கும் உள்ளம், சந்தோஷத்துடன் ஆகி, பகவானே, உன்னை சாஸ்திரீய வழிகளால் நான் ஆராதிப்பேன்? நரனுக்குக் கிடைத்த நாராயண ஸ்நேகம், தர்மபுத்ரருக்குக் கிடைத்த பேரான அனுக்ரஹம், லக்ஷ்மிக்குக் கிடைத்த மகத்தான அன்பு, நாரதரிடம் நீகாட்டிய மகத்தான குருவிப்ர பாவம், தியாகராஜரிடம் காட்டிய பக்தி பரவசம், சிவன் பார்வதியிடம் நீ காட்டிய வாத்ஸல்யம், ஐயா நான் எப்போது காண்பேன்? தயாபரா, என்னிடம் எப்போது தயையுடன் இருப்பாய்? புராணரே, பக்த வத்ஸலரே, கருடவாஹனா, பிரணவஸ்வரூபமே, உன் காரியங்களில் நான் எவ்விதம் ஈடுபடுவேன், உனக்கு நான் எவ்விதம் திருப்தி அளிப்பேன்? ஹே நவவனமாலி, என்னை என் குணங்கள் வென்று கொண்டிருக்கின்றன. எனக்கு உன்னைப் பற்றியே நினைவு, வாத்ஸல்யம், சேவை எப்படி கிடைக்கும்? உன்னைவிட்டால், உன் சரணங்களின்றி எனக்கு கதியில்லை. அப்ரமேயா, குரோ, அர்த்தரே, தர்மி, மஹாவராஹரே, தயை செய்யும்.]

"ராம கதையானது இருகைகளால் சப்தம் செய்யப்படும் தாம்பாளத்தைப் போலவிருக்கிறது. சம்சயம் எனப்படும் பக்ஷி ஸமுதாயங்களை சப்தத்தினால் விரட்டப்படுவதற்கு உபயோகப் படுகிறது. மேலும் ராம கதையானது கலியுக ரூபமாகிற விருக்ஷத்தை வெட்டுவதற்கு கோடாரியைப் போலவிருக்கிறது. ஆகையால் என் பிரியமுள்ள கிரிராஜகுமாரி, நீ இதை மிக்கக் கவனத்துடன் கேள்." (643)

"வேதங்களில் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய அழகான குணவிசேஷங்களால் சோபிதமாகவிருக்கும் நாமம், கல்யாண குணங்

கள், ஜீவிய சரித்திரம், அவதாரம் எடுத்து லீலைகளைச் செய்தது, அவருடைய லீலைகளாகிற சேஷ்டிதங்கள் யாவும் விஸ்தாரமாக வும் முடிவு பெருதபடியும் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ராமச்சந்திர பகவான் எந்தப் பிரகாரம் அனந்த மூர்த்தியாக ஸ்வரூபத்திஞலோ, காலத்திஞலோ, குணங்களிலோ பரிமாணத் திலோ, சேஷ்டிதங்களிலோ, முடிவு பெருத அனந்த மூர்த்தியாக விளங்குகிருரோ, அதுபோல அவருடைய சரித்திரமும், கீர்த்தி பிரபாவங்களும் குணவிசேஷங்களும் கால அளவிலோ, பரிணு மத்திலோ, ஸ்வரூபத்திலோ, முடிவு பெருதபடி அனந்தமாக விருக்கின்றன.'' (644)

''அவ்விதமிருந்த போதிலும், உன்னுடைய ஆழ்ந்த விஸ்வாஸத்தையும், பரம ப்ரீதியையும் நான் நேரில் கண்டும் உணர்ந்தும், என்ஞல் முன் காலத்தில் எவ்விதம் கேட்கப் பட்டதோ, எனக்கு எவ்வளவு புத்தியின் ஆழம் இருக்கின்றதோ, அதற்கு அனுசரணையாக என் பிரியமுள்ள உமா, உனது கேள்விகளுக்கு உத்தரம் சொல்லுகிறேன். உன்ஞல் கேட்கப் பட்ட கேள்விகள் மனேஹரமாகவும், அழகாகவும், ஸாது ஜனங் களுக்குப் பரம சுகத்தையும், மங்களத்தையும் அளிப்பதாக விருக்கிறது. அதிலும் எனக்கு அத்யந்த சுகத்தையும் கொடுப்ப தாக விருக்கிறது.'' (645)

''ஆஞல் பார்வதி, உன்ஞல் சொல்லப்பட்ட விஷயங்களில் ஒரே ஒரு விஷயம் என் மனத்திற்குப் பிடித்தமாயில்லை. பிரபு ராமனைப் பார்த்தால், அவர் மோஹத்திற்கு வசப்பட்டவராகத் தோன்றுகிறது என்று சொன்ஞயே; அது சரியாகத் தோன்ற வில்லை. மேலும் இன்னெரு விஷயத்தையும் சொன்ஞயே. இந்த ராமன் வேதங்களாலும், முனி ஜனங்களாலும் கானம் செய்யப்பட்டும், தியானம் செய்யப்பட்டும் மிக்கப் புகழுட னிருக்கிருரே, அவரா அல்லது வேருெரு புருஷஞ? என்று கேட்டாயே. (646)

மோஹத்திற்கு வசப்பட்ட பிசாசம் போன்றவர்களும், பாஷண்டர்கள் போன்ற நாஸ்திகவாதிகளும், பகவானுடைய சரண கமலங்களில் பற்றில்லாமல் பொய் எது, சத்யம் எது என்கிற அறிவு பெருதவர்களான அதம மனுஷ்யர்கள்கூட நீ சொல்வதுபோலச் சொல்லுகிருர்கள்; பிறர் சொல்லியும் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள். என்ன செய்வது?'' (647)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, பிராம்மணர்கள் உன்னை ஏகம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் பல பேர்களுக்கு பல ரூபமாக நீ விளங்குவதால் தியாகராஜருக்கு ராமராகவும்,, சிவனுக்கு ராம நாம ஜபமாகவும், அம்பிகைக்குச் சிவனாகவும், வேதங்களில் சத்யமாகவும், பிரஹஸ்பதியினிடம் வாக்கு சாதுர்யமாகவும், சுக்ரரிடத்தில் தபஸ்ஸின் மேன்மையாகவும், அர்ஜுனனிடம் சகாவாகவும், பிரும்மாவினிடம் ஸ்ருஷ்டித்தனமாகவும், எனக்கு குருவாகவும் ஸ்வாமியாகவும் விளங்குகிறீர். உம்முடைய ரூப குண செளந்தர்யங்களில் ஈடுபட்டு உம்மையே சரணம் அடைந் தேன். ஐயா, உம்மையே வேண்டும் என்று கேட்டுக் கொள் கிறேன். எனக்கு நீயும் மஹாலக்ஷ்மியும் அனுக்ரஹம் புரிய வேண்டும். பரமாத்மாவாகவும், அனாதியாகவும் விளங்கும் புருஷரும், கர்க்கியிடம் யாக்ஞ்யவல்கியரால் சொல்லப்பட்ட புருஷோத்மரல்லவோ நீர். நாரதரிடம் பிரியமாக நடந்து கொண்ட மஹா புருஷரல்லவோ நீர். ஸனகாதிகளிடம் யோகீஸ் வரராக விளங்கும் பரமேஸ்வரர் அல்லவோ நீர்? இந்திரனுக்கு தம்பியாகவும், அத்தி தேவியின் புத்ரனாகவும், கங்கையின் உற் பத்தி ஸ்தானமாகவிருந்த மஹா புருஷரே, விஸ்வாமித்திர கௌசிக குலத்தில் பிறந்த என்னிடம் தயை புரியவேண்டும்.]

"எவர்கள் அக்ஞானிகளாகவும், மூர்க்க ஸ்வபாவத்துடனும் இருக்கிறார்களோ, எவர்கள் மனயிருள் கொண்டு குருடர்கள் போலவும், பாக்யமில்லாதவர்களாக விருக்கிறார்களோ, எவர்க ளுடைய மன ரூபியாகிற கண்ணாடியில் விஷயானுபவங்களாகிற அழுக்குப் படிந்திருக்கிறதோ, எந்த ஸ்திரி தனது சொந்த கண வனை விட்டு வியபசாரியாக வாழ்ந்து வருகிறாளோ, சாகஸத்துட னும், குடில புத்தியுடனும், கபடமாகவும் வாழ்ந்து வருகிறாளோ, அப்பேற்பட்ட நரநாரிகள் ஸ்வப்னத்தில்கூட சாதுக்களின் ஸமா ஜத்தைத் தர்சனம் செய்கிறார்களில்லை; (648)

எவர்களுக்கு எது லாபம், எது நஷ்டம் என்கிற விஷயம் தெரியவில்லையோ, அவ்விதமான புருஷர்கள் இந்தவிதமாக வேதங்களுக்கு விருத்தமாகச் சொற்களைச் சொல்லிக்கொண்டு திரிகிறார்கள். அவர்களைக் குற்றம் சொல்லிப் பிரயோசனமில்லை. ஏனெனில், அவர்களுடைய ஹ்ருதயமாகிற கண்ணாடியில் அமோகமாக அழுக்குப் படிந்திருக்கிறது. மேலும் அவர்களுக்கு நிஜமாகவே நேத்ரங்களில்லை; குருடர்களாகவிருக்கும்போது,

அவர்கள் எவ்விதம் ஸர்வ மங்களகரமான ஸ்ரீராமச்சந்திர னுடைய பரிபூர்ண அழகு ரூபத்தை பார்க்க முடியும்?'' (649)

'' எவர்களுக்கு நிர்குணப் பிரம்மத்தைப் பற்றியோ, ஸகுண பிரும்மத்தைப் பற்றியோ, புரிந்துசொள்ளும் அறிவும், விவேக மும் இல்லையோ, அவர்களுடைய மனதில் அநேகவிதமான விப ரீதப் பேச்சுக்களும், கற்பனைகளும் தோன்றுகின்றன. அப்பேற் பட்டவர்கள் ஸ்ரீஹரி பகவானுடைய மாய வலையில் சிக்கி, ஸம் சார மாகிற ஜன்ம இறப்புச் சுழல்களில் அகப்பட்டுக்கொண்டு மீளாதபடி போகிறார்கள். அப்பேற்பட்டவர்களுக்கு இதுமாதிரி ஸத் விஷயங்களைச் சொல்வது மிக்க அஸம்பாவிதம்.'' (650)

'' எவன் வாயுவின் ரோகங்களாகிற ஸந்நிபாதம் (கபத்தினால் யேற்படும் ஜன்னி முதலியன, பைத்தியம் போன்றவைகளால் பீடிக்கப்பட்டு பூதங்களின் வசத்தை அடைந்து, தவிக்கிறானோ, அவனுக்கும் இந்த மாதிரி விஷயங்கள் வியர்த்தம் என்று லோகத் தார்கள் சிந்தனை பண்ணி ஒரு வசனத்தையும் சொல்லுகிற தில்லை. எவன் இயற்கையாகவே மஹாமோஹம் கொண்டிருக் கிறானோ, அத்துடன் அவன் மமதையாகிற கள்ளையும் குடித்து விட்டு, மதம் கொண்டானாகில், மேலும் அவனால் கேட்கப்பட்டும் நாம் ஒன்றும் சொல்லுவதற்கில்லை; சொல்லவும் கூடாது. அவ னுடைய வசனங்களைக் காது கொடுத்துக் கேட்கவும் கூடாது.'' (651)

'' ஆகவே நீஇவ்விதம் அறிந்து தீர விசாரித்து, உன்னுடைய ஹிருதயத்தில் தோன்றும் சந்தேகத்தையும், விபரீத எண்ணங் களையும் விட்டுவிட்டு, பகவானான ஸ்ரீராமச்சந்திரனுடைய சரண கமலங்களைப் பஜி. ஹே கிரிராஜ குமாரி, பிரமை ரூபியான அந்தகாரத்தை நாசம் பண்ணுவதற்கு பிரகாச மயமான சூர்ய கிரணங்களுக்குச் சமமாகவிருக்கும் என் வார்த்தைகளால் உன் மனத்தை பிரகாசப்படுத்திக் கொண்டு, ஒருமைப்படுத்திக் கொண்டு நன்றாகக் கவனித்துக் கேள்.'' (652)

'' ஸகுணம், நிர்குணம் இவைகளில் பேதங்கள் (வித்யா ஸங்கள்) ஒன்றுமில்லை. முனீஸ்வரர்கள், புராணங்கள், பண்டி தர்கள், வேதங்கள் எல்லோரும் இவ்விதமாகச் சொல்லுகிறார்கள். எது நிர்குணமோ, ரூபமில்லாததோ, அவ்யக்தமாகவிருக் கிறதோ, அனாதியாகவும், ஜன்மமில்லாமலிருக்கிறதோ, அப் பேற்பட்ட அதுதான் பக்தர்களுக்காக பிரேமையின் காரணமாக வசப்பட்டு, ஸகுணமாக மாறுகிறது.'' (653)

[தியானம்

ஹே மதுசூதனு, ராமா, உன்னுடைய அகண்டமான கீர்த்தியை யாரால் வர்ணிக்க முடியும்? நீயே பல ஸ்வரூபங்களாகவும் பல குண விசேஷங்களாகவும் பலவஸ்துக்களில் உள்ளும் புறமும் விளங்குகிருய். எவர்கள் உன்னுடைய மங்கள ஸ்வரூபங்களை நினைத்து ஸதா ஸ்தோத்திரம் செய்கிருர்களோ அவர்களின் பாபங்களுடைய பாரத்தை இறக்கி புண்ணியக்கூட்டங்களை அடைவித்து, சேற்றில் அகப்பட்ட பலஹீனமான பசுவைப்போல அவர்களைக் கரை ஏற்றுவிக்கிருய். உன்னுடைய கால ஸ்வரூபியான துர்க்கா தேவியை ஸ்தோத்திரம் செய்வதால் பலவிதமான ஆபத்துக்களிலிருந்து விடுபட்டு, சத்ருக்களிடமிருந்து ஜயத்தைப் பெறுகிருர்கள். அம்மா, துர்க்காதேவி, ஸ்ரீமந் நாராயணருக்கு பத்னியாகவிருக்கின்ற ஸ்ரீமஹா லக்ஷ்மியைப்போல விளங்குகிருய். குண்டலங்களால் அலங்கரிக்கப்பெற்ற காதுகளை உடையவளாகவும், சந்திரனுக்கு ஒப்பான முகமுள்ளவளாகவும், கருத்த நிறமுடையவளாகவும், விசித்திரமான கூந்தலோடு விளங்குகிருய். பிரகாசிக்கிற கடிஸூத்திரத்தோடு கூடிய நீ வாஸுகியினுல் கட்டப்பட்ட மந்தர பர்வதம்போல விளங்குகிருய். தாமரை இதழ்போன்ற கண்களை உடைய ஸத்ய ஸ்வரூபிணி, பக்தர்களைக் காப்பாற்றுபவளே, பக்தர்களிடத்தில் அன்புள்ளவளே, நீ என்னை ரக்ஷிப்பாயாக.]

(ஹே மஹாலக்ஷ்மி, அழகிய அங்கங்களை உடையவளே, நாராயணன் அன்றோ உன்னைப் பார்யையாக அடைந்து பாக்யச் சொல்லாகிய லக்ஷ்மீவான் என்கிற பெருமையையும் பெயரையும் பெற்றுர். நீண்ட கண்களை உடையவளே, உன்னுடைய சரீரம் மங்களகரமானதும், தர்மபுஷ்டியுள்ளதாயும், உன் முகம் தாமரை மலர் போன்றும், நடை, அன்னப் பறவையையும், சிரிப்பு குருக்கத்தி பூவைப் போன்றும், உள்ளங்கை சங்கம், பத்மம், குடை, சக்ரம், சுருள் போன்ற ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. உன்னுடைய உடம்பில் நான்குவிதமான சுபமான ரோமா வர்த்தங்களாகிற மயிர் சுழிகள் அலங்கரிக்கின்றன. உன்னுடைய சரீரம் குறுகியும், உயர்ந்ததுமில்லாமல் சமமாகவிருக்கின்றது. பளபளப்பாகவுமிருக்கின்றது. கருத்த நிறமுள்ள கிருஷ்ணையே, இடைவெளி இல்லாத கைகால்களையும், பற்களையும் உடையவளே, தாமரை இதழ் போன்ற அகன்ற விரிந்த கண்களை உடையவளே, நீ என் மனத்தை ஹரிக்கிருய். உன்னுடைய சுபமான லக்ஷணங்கள் கொண்ட பசுமை என்

துக்கத்தையும், பசியையும், பிணியையும், அபாக்யத்தையும் போக்குகின்றன. ரூபத்துக்கு ஒப்பான அழகான குணங்களா லும் என்னை வெல்கிறாய். அப்சரஸ்கள் போன்ற தெய்வீக அழகனால் ஜொலிக்கிறாய். உன் மனோரதம் எவ்விதமாகிலும் நிறைவேறுகிறது. உத்தம ஞானத்தை அடைந்து, உத்தம ஆசரணைகளாலும் என்னை ஜயிக்கிறாய். மஹாலக்ஷ்மி, நீதானே ஸர்வோத்தமமான பொறுமை என்கிற மகத்தான தபத்தைச் செய்தாய். பொறுமையே தர்மம்; பொறுமையே தவம்; பொறுமை உள்ளவர்களுக்கு இவ்வுலகம் உண்டு, பரலோகமும் உண்டு என்று நிரூபித்திருக்கிறாய். காலஸ்வரூபிணி, இரண்டு பாகங்களான உத்திராயணம், தக்ஷிணாயனம், பன்னிரண்டு மாதங்கள் ஆகிற அங்கங்களை உடையவளாகவும், முந்நூற்றரு பத்தாறு ஆரக் கால்களை உடைத்ததான ஸம்வத்ஸரம் என்கிற சக்ரமாக விளங்குகிறாய். கல்யாணி, உன்னை நான் சரணமடை கிறேன். நீ ரக்ஷிப்பாயாக.)

பகவான் சம்பு சொல்லுகிறார், "பார்வதி, எது நிர்குணம் என்று சொல்லப்படுகிறதோ, அதுவே ஸகுணப்பிரும்மம் என்று அறியப்படுகிறது. அது எவ்விதமெனில், ஜலத்திற்கும், பனிக் கட்டிக்கும் எவ்விதம் இரண்டிலும் ஜலத்தைத் தவிர வேறு ஒன்று மில்லையோ, அதுபோல பிரும்மமானது நிர்குணமாகவும், ஸகுண மாகவும் விளங்குகிறது. வாஸ்தவத்தில் இவை இரண்டும் ஒன்றேதான். நாமத்தின் வித்யாஸத்தினால் இரண்டும் மாறு பாடாகத் தோன்றுகின்றன. அப்பேற்பட்ட பிரமையாகிற அக் ஞானத்தை, அந்தகார யிருளைப் போக்குவதற்கு சூர்யன் எவ் விதம் தேவைப்படுகிறதோ, அதுபோல, மோஹமாகிற அக் ஞான யிருட்டைப் போக்குவதற்கு ராம நாமம் சூரிய வெளிச்சம் போலிருக்கிறது. அதனால் மஹா மகிமைகளை உடைய நாமத்தின் ரூபமாகிற ஸ்ரீராமச்சந்திர மூர்த்திக்கு எவ்விதம் மோஹத்தின் பிரஸங்கம் யேற்படும்? அவருடைய நாம உச்சாரணையே நம் மனைவருடைய மோஹத்தை அழிக்கச் சக்திபெற்றிருக்கும்போது, அந்த நாமத்தைத் தாங்கிய பிரபுவுக்கு எவ்விதம் மோஹம் யேற் படும்? நீயே சொல்." (654)

"ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி சச்சிதானந்த ஸ்வரூபியான சூர் யன். அவர் ஸதா பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு அஸ்தமனம் கிடையாது. அவரிடத்தில் மோஹ ரூபியான ராத்திரி யாகிற இருட்டு லவலேசமும் கிடையாது. ஸ்வயம்பிரகாசர். அவ ரிடம் ஆறுவித ஐஸ்வர்யங்களாகிற சக்தி, வீர்யம், பலம், தேஜஸ்,

பொறுமை, ஐஸ்வர்யம் இருக்கிறபடியால், அவரே பகவான் என்று சொல்லப்படுகிருர். ஆகவே அவர் விஷயத்தில் அக்ஞானமாகிற இருட்டுக்குப் பின்பு வரும் பிராதக் காலமாகிற விக்ஞானம் தனியாக யேற்படுகிறதில்லே. ஏனெனில் அவர் நித்யமாகவே ஞானஸ்வரூபியாக விளங்குகிருரன்ருே?'' (655)

''சந்தோஷம், துக்கம், ஞானம், அக்ஞானம், அஹங்காரம், அபிமானம் ஆகியவைகள் ஜீவர்களுடைய இயற்கையான ஸ்வ பாவங்கள். ஸ்ரீராமச்சந்திரன் ஸர்வ வ்யாபகரானபடியால் பர ப்ரும்மமாக யாவராலும் அறியப்படுகிருர். அவரே வாஸுதேவ ஸ்வரூபம்: பரமானந்த ஸ்வரூபர்; பராத்பரமான பிரபு; புரு ஷோத்தமர்; புராண ரிஷியென்று சொல்லப்படும் நாராயணர். எல்லாப் பொருள்களுக்கும், ஜீவர்களுக்கும் மேலான பரம புருஷர். இவருடைய மகிமைகளைப் பற்றி ஸகல உலகத்தினர் களும் அறிவார்கள். ஆகவே இதில் உனக்கு யாதொரு கலக்க மும் வேண்டாம்.'' (656)

''ஸர்வ புராணங்களும் எவரைப் ''புருஷர்'' என்றும், பர மாத்மாவென்றும், ஸர்வ ஞானப் பிரகாசத்திற்கும் நிதியென்றும், பராபரமென்றும், தேஜோ மயமாக விருப்பவரென்றும், ஸர்வ ஜீவர்களிடமும் ஸர்வ ரூபங்களிலும் அந்தர்யாமியாகவும், நாத ராகவும், வசிப்பவரென்றும், ஜீவர்கள், மாயை, ஸம்சாரமாகிற இந்த பிரகிருதி உலகம் ஆகியவைகளுக்கு ஸ்வாமியென்றும் அறி கிருர்களோ, அவரே ரகுகுலமணியாகிற ஸ்ரீராமச்சந்திரன். அவரே எனக்கும் பிரபுவாகவும், ஈஸ்வரராகவுமிருக்கிருர்,'' என்று பகவான் சிவன் சொல்லிக்கொண்டு தன் தலேயினுலும், அஞ்சலி பந்தத்தினுலும், ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை மனத்தினுல் வணங் கினுர். (657)

''அக்ஞானிகளாகிற மனிதர்களுக்கும், விஷயங்களில் ஈடு படும் மனிதர்களுக்கும் ஸ்ரீராமச்சந்திரனுடைய நிஜபிரும்மஸ்வ ரூபம் அவர்களின் பிரமையின் காரணமாக விளங்குகிறதில்லே. அவருடைய நிஜ பரத்வஸ்வரூபத்தை உண்மையாக அறிந்து கொள்ள முடிகிறதில்லே. பிரியமுள்ள உமா, அதேபோல மூர்க் கர்களாலும் அறிய முடிகிறதில்லே. அவர்களும் பிரபு ஸ்ரீராமச் சந்திரனிடமும் தோஷங்களேக் கற்பிக்கிருர்கள்; அவரை ஒரு சாதாரண வ்யக்தி (மனிதன்) என்று நிணேக்கிருர்கள். புத்தியில் லாத மூடர்கள் ஆகாயத்தில் சூரியனே மேகங்களால் மறைக்கப் பட்டிருக்கிற சமயம், சூரியன் அஸ்தமனமாகிவிட்டார் என்று வாதிப்பதுபோல, அவர்கள் சொல்லுகிருர்கள்.'' (658)

[தியானம்

ஹே ராமா, உன்னைப்பற்றிய ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் காயத்ரி மந்திரத்தினால் ஏற்பட்டது. அந்த தேவி, சந்தியா, சாவித்திரி, காயத்ரி, ஸரஸ்வதி, என்று சொல்லப்படுகிறாள். இரு பத்தி நான்கு அக்ஷரங்கள் கொண்ட ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்கிற சக்திகளை விடவும், பிரும்மா, விஷ்ணு, ருத்ரர் இவர்களை யும் விடவும், பெரியதான துரிய சக்தியாம் ஸந்தியை என்பது. மூன்று மூர்த்திகளாகவும், மூன்று தேகமாகவும், மூன்று சக்தி களாகவும் ஸூர்ய மண்டலத்தில் தியானிக்கப்படுகிறது; நிஷ்கல மானது; ஈஸ்வரியானது; மும்மூர்த்திகளிடமும் உண்டானது; என்று போதாயன ரிஷி கூறுகிறார். அந்த பராசக்தி காலை, பகல், சாயந்திரம் ஆகிய மூன்று வேளைகளிலும் மூன்று தனி ரூபத் துடன் விளங்குகிறாள். தனித்தனி வர்ணம், தனி வாஹனம், தனிப்பெயர் இவைகளால் வேறுபட்டவளாகக் காணப்படுகிறாள். காயத்ரி தேவி, பிரும்மஸ்வரூபிணியாக, காலையிலும், மாத்யான் ஹிக சமயத்தில் ருத்ர பத்னியாகவும், சாயந்திரம் லக்ஷ்மியாக வும் விளங்குகிறாள். வெண்மை, கருப்பு, சிகப்பு ஆகிய வர்ணங் களாலும், மூன்று முகங்களாலும், திரிமூர்த்தி வடிவினாலும், உஷைக் காலத்தில் பிறந்தவளாகவும், இருபத்து நான்கு அக்ஷ ரங்கள் கூடிய மாலையால் விளங்குகிறாள். அக்னி, சூர்யன், சந்திரன் ஆகியவர்களுடைய தேஜஸ்ஸாகவும், வேத மாதாவாக வும், ஓங்கார வடிவமான தத்வபீடத்தில் லிங்கரூபமாகவும் வீற்றி ருப்பவளுமான தேவியை நான் பஜிக்கிறேன். ஸ்தூலம், ஸூக்ஷ் மம், தனித்தனியாக விருப்பதான வ்யஷ்டி எல்லாம் சேர்ந்து விளங்குவதால் ஸமஷ்டி என்கிற பரபிரும்மத்தை வணங்கு கிறேன். முத்து, பவழம், ஸ்வர்ணம், கருப்பு, வெளுப்பு வர்ணங் களுடனும், ஐந்து முகங்களுடனும், ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்களுடனும், வரதம், அபயம், அங்குசம், பாசம், வெளுப்பான கபாலம், கதை, சங்கம், சக்ரம், இரு தாமரை இவைகளை ஏந்தின காயத்ரியை பஜிக்கிறேன். தவத்திலும், ஜபத்தினாலும் திருப்தி பண்ணப்படும் தேவியை நான் நமஸ் கரிக்கிறேன். அவள் என்னை சதா ரக்ஷிக்க வேண்டும்.]

"எந்த மனிதர்கள் கண்களைத் தங்கள் விரல்களினால் மூடிக் கொண்டு சந்திரனை இரு சந்திரர்கள் இருப்பதாகப் பார்க்கிறார் களோ, அதேபோல, பிரியமுள்ள பார்வதி, ஸ்ரீராமச்சந்திர னுடைய விஷயத்திலும் மதிப்ரமை அடைந்த காரணமாக மோஹத்தைக் கற்பனை செய்கிறார்கள். வாஸ்தவத்தில் ஆகாயம்

நிர்மலமாக விருக்கிறது. ஆனால் புகையினாலோ, தூசிகளாலோ நிறம்பப்பட்டால், ஆகாயம் கும்பிருட்டாகத் தோன்றுகிற தல்லவா? அதேபோல ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும் நிர்மலமாகவும். தோஷங்களால் நணைக்கப்படாதவராக விருக்கிறார். மூடர்கள் தான் அவரிடம் தோஷத்தைக் கற்பனை செய்கிறார்கள்.'' (659)

''விஷயங்கள், இந்திரியங்கள், இந்திரியங்களின் அத்யாத்ம தைவங்கள், ஜீவாத்மா ஆகிய எல்லாம் ஒன்றை ஒன்று பற்றிக் கொண்டு ஆதாரத்துடன் விளங்குகின்றன. இவைகள் எல்லாம் சேர்ந்து ஒரு சேதனன் என்று சொல்லப்படுகிறது. விஷயங்களின் பிரகாசம் இந்திரியங்களால் ஏற்படுகிறது. இந்திரியங்களுக்கு பிரகாசம் அவைகளின் தேவதைகளால் மேன்மை படுத்தப்படு கிறது. இந்திரிய தேவதைகளை சேதனனாகிற ஜீவாத்மா பிரகாசப்படுத்துகிறான். இந்த எல்லா பொருள்களுக்கும் பரமபிரகாசமாக விளங்கும் அனாதியான பொருள் ஒன்று யிருக் கிறதே அந்த பரம்பொருளே அயோத்யாபதியான ஸ்ரீராமச்சந் திரனாகவிருக்கிறார்.'' (660)

''இந்த ஜகத்திற்கு (உலகிற்கு) பிரகாசம் யேற்படுகிறதே, அந்தப் பிரகாசம் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியினால் யேற்படுகிறது. அவரே மாயையின் ஸ்வாமி. அவரே ஞானம் ஆகிற ஸகலகல் யாண குணங்களின் இருப்பிடம். அவரேதான் ஜடமான மோஹத் திற்கும் உயிர் அளிக்கிறார். அவருடைய உதவியினால்தான் மோஹமும் அழிகிறது; மாயையும் விலகுகிறது. ஆகவே அவரே ஜகத்தில் ஸத்யரூபியாக விளங்குகிறார். அவருடைய ஸத்யரூபத் தினால் பொய்யானதும் ஜடமானதுமான மாயை நித்யமாகப் பிர காசிக்கிறது.'' (அநித்யமான மாயை ஜகத்தில் விகாரமற்ற பொருளாகத் தோன்றுகிறது. மோஹம் அழிந்தால், மாயையின் நிஜ ஸ்வரூபம் வெளிப்படுகிறது. மோஹம் அழிவதற்கு பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய கிருபைதான் அவசியம். அவரே மாயைக் கும் ஸ்வாமியாக விருந்து, அதை ஆட்டிவைக்கிறார்.) (661)

''எப்படி முத்துச்சிப்பி வெள்ளியாகவும், கானல் நீர் நிஜமான தண்ணீரைப் போலவும் சூரியகிரணங்களால் ஏற்படுகின்றதோ; இந்தத் தோற்றங்கள் மூன்று காலங்களிலும் பொய்யாக விருக் கின்றனவோ, அதுபோல மாயா மோஹத்தினால் யேற்படும் பிரமை எவராலும் எளிதில் போக்கக்கூடியதல்ல'' (பிரபு ஸ்ரீராமச் சந்திரனுடைய கிருபை ஒன்றினால் மாத்திரம் விலக்க முடிகிறது.) (662)

[தியானம்

ஹே ராமா, உன்மனம் தர்மத்தில் பற்றுள்ளது. பிராம்மணர் களிடமும், பசுக்களிடமும் ரிஷிகளிடமும் வாத்ஸல்யமுள்ளது. அதனாலேதான் பசுக்களிடம் நீ கிருஷ்ணனுகப் பிறந்து அவை களிடம் உன் செளலப்யத்தைக் காண்பித்தாய். பிரும்மதேவர் முதல் உன் செய்கைகளைக் கண்டு மயக்கமுற்று ஞானத்தை உன் கிருபையால் அடைந்தார். பிறகு கிருஷ்ணுவதாரத்தில் அர்ஜுனன் உனது கிருபையாலும், உன்னைப் பூஜித்து ஆரா தித்து வந்ததாலும், கௌரவர்கள் பீஷ்மர், துரோணர், கிருபர், துரியோதனன், கர்ணன், அஸ்வத்தாமா முதலியவர்கள் அடங் கின ஸேனையை உத்திரனை சாரதியாகக் கொண்ட ஒருவனுக அர்ஜுனன் எல்லோரையும் வென்று கோக்களை மீட்டான். நீயும் கோகுலத்தில் பிறந்தவளும், கோலோகத்திலிருந்து வந்தவளுமான ராதையை மிக்க வாத்ஸல்யத்துடன் நேசித்தீர். ஐயா, உன்மனது என்னிடமும் அவ்விதமே இருக்கட்டும். கார்த்திகேயன் கோக்களின் சிறப்பை அறிந்தவன். கபிலையின் உயர்வைச் சொன்ன மஹாவித்வான். கோமாதாக்களை நான் சரணமடைகிறேன். அவைகள் என்னிடம் அன்பாக இருக்க வேண்டும். பேனபரைக் காப்பாற்றி ரக்ஷித்ததுமாதிரி என்னை யும் அவைகள் ரக்ஷிகவேண்டும். ராமா, நீயும் தயை புரிய வேண்டும். ராஜகோபாலா, என்னை ரக்ஷி.]

பகவான் சம்பு சொன்னர். "இந்தமாதிரி ஸம்சாரமானது ஹரிபகவானை ஆதாரமாகப் பற்றிக்கொண்டிருக்கிறது. இவ்வித மாக உலகம் அசத்யமாகத் (பொய்யாகத்) தோன்றினும் நிஜமாகவே, ஸம்சாரிகளுக்குத் துக்கத்தையும் சோகத்தையும் தருவதாக விருக்கிறது. அந்த துக்கமோ ஸ்வப்னத்தில் ஒருவனுக்கு தலையை வெட்டினுல் என்ன துக்கம் சம்பவிக்குமோ, அந்த துக்கமும் அவன் முழித்து எழுந்தவுடன் எவ்விதம் நசித்துவிடுகிறதோ;" (அதுமாதிரி இந்த ஸம்சாரத்தில் யேற் படும் துக்கமானது ஞானத்தினுலும், ஜாக்ரதையாக முழித்துக் கொண்டிருப்பதாலும், நாசமடைகிறது. அந்த ஞானமும் பக வான் ராமச்சந்திரனைப் பஜித்து அவரை ஆஸ்ரயம் செய்வதால் அடையப்படுகிறது.) (663)

"ஹே பார்வதி, எவருடைய கிருபையினுல், பிரமையாகிற துக்கம் விலகுகிறதோ, அப்பேற்பட்ட கிருபாளு வல்லவோ என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன்! அவருடைய ஆதி அந்தம் யாவராலும் பூர்ணமாக அறியப்படுகிறதில்லை. ஆகையால் வேதங்களும்

புராணங்களும் அவரை அடையாளங்களால் அனுமானித்து இந்தவிதமாக புகழ்ந்து பாடுகின்றன :—(கீழே சொல்லப்பட்ட பிரகாரம் பாடுகின்றன.)'' (664)

''ஹே கிரிஜா, பாதங்கள் இல்லாமல் அந்த ராமபிரும்மம் நடக்கிறார். காதுகளில்லாமல் அவர் எல்லாவற்றையும் கேட்கிறார் ; கைகளில்லாமல் எல்லாக் காரியங்களையும் செய்கிறார். வாய்கள் இல்லாமல் எல்லாவிதமான ரஸங்களை அனுபவித்து ஆனந்தமடைகிறார். குரல் இல்லாமல் அழகாகப் பேசுகிறார்.'' (665)

''சரீரமின்றி அவர் ஸ்பர்ச்சிக்கிறார் ; கண்களில்லாமல் பார்க்கிறார். மூக்கில்லாமல் சகல கந்தங்களையும் முகருகிறார். அவருடைய செய்கைகள் மிக்க ஆச்சர்யமானவை. அவருடைய மகிமைகள் யாவராலும் வர்ணிக்க முடியாதபடி அனந்தமாக விருக்கின்றன.'' (666)

''எவரை இந்த மாதிரி வேதங்களும் புத்திமான்களும் வர்ணனைசெய்தும் முனீஸ்வரர்களும் தியானம் செய்தும், புகழ்ந்து பாடியும் இருக்கிறார்களோ, அப்பேற்பட்ட ஸ்ரேஷ்ட புருஷர் கோஸலாதிபதி, தசரத மஹாராஜருடைய குமாரர் ஸ்ரீராமச்சந்திரன்தான். அவர்தான் பக்தர்களுக்கு ஹிதம் செய்பவர்.'' (667)

''ஹே பார்வதி, எவருடைய நாம பலத்தினால் காசி க்ஷேத்தில் மரிக்கும் பிராணிகளை நான் கண்டு தாரக ராமமந்திரத்தை வலது காதில் உபதேசித்து, (நீயும் மரித்த பிராணியின் ஹ்ருதய கிரந்திகளிலிருந்து ஆசா பாசங்களை நீக்கி,) சோகமில்லாத ஆகும் முக்தி நிலையை நாமிருவரும் அளிக்கிறோமோ, அப்பேர்ப்பட்ட என் பிரபு ரகுகுல ஸ்ரேஷ்டர், ஸ்ரீராமச்சந்திரன், உயிருள்ளதும், உயிரில்லாத சகல சேதனங்களுக்கும் ஸ்வாமி, எல்லோருடைய ஹ்ருதயத்திலும் உள்ளிருந்து கொண்டு, ஸகலத்தையும் அவரே ஸர்வ அந்தர்யாமி, ஸர்வ சாக்ஷியாக அறிகிறார்.'' (668)

[தியானம்

ஐயா ராமய்யா, ஞானவான்களுள் சிறந்தவரான பிரஹஸ்பதி ''பொறுமையானது'' எப்பொழுதுமே கைக்கொள்ளத் தக்கது என்று சொல்லுகிறார். பொறுமையுள்ளவன் விஷ வீர்யமில்லாத சர்ப்பத்தைப்போல இவ்வுலகில் எல்லோராலும் அவமதிக்கப்படுகிறான். அவ்விதமிருந்த போதிலும், நான் பொறுமை

என்கிற தர்மத்தில் பற்றுதல் உள்ளவனுகவும் களிப்புற்றவனுகவும் உன்னிடம் ஸதா பக்தியுள்ளவனுகவு மிருக்கவேண்டும்.]

"சாதாரண சமயங்களில்கூட, உதாரணமாக மனிதன் கொட்டாவி விடும் சமயத்திலும், ஒருவிதமான இச்சை யொன்றும் இல்லாத சமயத்திலும், "ராம்", "சீதாபதே", என்று மனிதன் சொல்வானுகில், அவனுக்கு அநேக ஜன்மங்களில் செய்யப்பட்ட பாவக் கொத்துக்கள் அதே நிமிஷத்தில் ஜலத்தைப் போல உருகி, நீராகிவிடுகின்றன. அவ்விதமிருக்கும்போது எந்த புருஷர்கள் மிக்க மரியாதையுடன் பகவான் ஸ்ரீராமச்சந்திரனை அனுஸ்மரணை செய்கிருர்களோ, அவர்களுக்கு ஸம்சார ரூபியாகிற பவஸாகரம் பசுமாட்டின் குளம்பில் தேங்கிய ஜலம் போல ஆகிவிடுகிறது." (அவர்கள் சுலபமாக ஸம்சார சமுத்திரத்தைத் தாண்டி விடுகிருர்கள். அவர்களுக்கு ஸ்ரீராம கிருபை எளிதில் கிடைத்துவிடுகிறது.) (669)

"ஹே பவானி, அப்பேற்பட்ட பரமாத்மா ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி. அவருடைய ராமநாம பிரபாவம் அத்தகையது. (புராதனரும், ஸர்வ அந்தர்யாமியாக விருப்பவரும், தேவர்களுக்கும் தேவராகவும், அழிவற்றவரும்,) பிரபுவுமான பரமாத்மாவிடம் பிரமையின் காரணமாகத் தோஷம் நீ கற்பித்தது மிகவும் அனுசிதமாக விருக்கிறது. ஆகையால் இந்தப் பிரகாரம் தோன்றும் ஸம்சயங்களை அறவே நீக்கவேண்டும். எந்த மனிதன் இவ்விதமில்லாமல் சம்சயங்களுக்கு மனதில் இடம் கொடுக்கிருனே, அவனுடைய ஞானம், வைராக்யம், இன்னும் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்படும் ஸத்வ குணங்கள் ஆகிய எல்லாம் நாசமடைகின்றன." (670)

சிவபெருமானுடைய வசனங்கள் ஸம்சாரத்தில் ஏற்படும் பிரமையையும் மதிமயக்கத்தையும் நாசம் செய்பவைகள். அவைகளைக் கேட்ட பார்வதியினுடைய குதர்க்க புத்தியில் தோன்றிய சம்சயங்கள் யாவும் நாசமடைந்தன. அவள் மஹா விஸ்வாசத்துடன் விளங்கினுள். ரகுபதியினுடைய பாத கமலங்களில் அவளுக்குப் பிரேமை மஹா விஸ்வாசம் ஏற்பட்டு அதிகரித்தது. அவளுடைய பழைய மாயையும் கற்பனையும் அழிந்தது. (671)

அடிக்கடி அடிக்கடி சிவபெருமானுடைய பாத கமலங்களைப் பிடித்து, கமல புஷ்பத்திற்கு சமமான தன் இரு கைகளையும் குவித்துக்கொண்டு, பிரேமை ரஸம் பூர்ணமாகி, அன்பு உள்ளத்

துடன் என்தாய் பார்வதிதேவி வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள் :—(672)

"தங்களுடைய வசனங்கள் சந்திரனுடைய குளிர்ச்சியான கிரணங்களைப் போல விருக்கின்றன. கிருபாளு, அந்த வசனங்களைக் கேட்டு ,என்னுடைய அக்ஞான ரூபியாகிற சரத் காலத்தின் வெப்பம், அதனுல் யேற்படும் தாபங்கள் சந்திரனுடைய குளிர்ச்சியினுல் சமன மடைவது போல, அடக்கப்பட்டு, எனது தாபங்களும் அழிந்துவிட்டன. ஹே கிருபாளு, இப்பொழுது, எனது சந்தேகங்களும் அறவே அழிந்துவிட்டன. பிரபோ, இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரனுடைய யதார்த்தமான ஸ்வரூபத்தை அடையப்பெற்றேன்." (673)

"நாதரே, தங்களுடைய கிருபையினுல் என்னுடைய விபரீதமான எண்ணங்களும் நாசமடைந்துவிட்டன. தங்களுடைய பாத சரணங்களின் அனுக்ரஹ பிரஸாதத்தினுல், நான் பரம சுகத்தையடைந்தேன். நான் ஸ்திரி ஜாதியைச் சேர்ந்த போதிலும், இயற்கையாகவே மூர்க்கத் தனத்தையும் ஞான சூன்யத்தையும் அடைந்திருந்த போதிலும், என்னைத் தங்களுடைய மனைவி என்று ஸ்வீகரித்துக்கொண்டு, (674)

[தியானம்

ஹே ராமா, நாராயணரைப் போலவே நீ உலகம் முழுவதும் ஈஸ்வர மயமாக விருக்கிருய். சத்ருக்களின் கர்வத்தைப் போக்குபவரே, உம்மை மஹா புருஷ ஸ்வரூபமாக நினைத்து ஜப ஹோமாதிகளையும், யாகமாகிற கர்மாக்களினுலும், நான் ஆராதிக்கிறேன். பூர்வ தேவரான நீர் மிக்க சந்தோஷமடைந்து என் மனதில் இருக்கும் ஸர்வ அபீஷடங்களையும் பூர்த்தி ஆக்க வேண்டும். ருத்ரர் லிங்கத்தில் அர்ச்சிக்கப்பட்டால், அவர் சந்தோஷமடைகிருர். ருத்ரர் போன்ற தேவதைகளுக்கு எல்லாம் தேவரும், நினைத்தற்கரிய உருவம் உள்ளவரும், ஒருவராலும் ஜயிக்க முடியாதவரும், விக்ரஹ ரூபமுள்ளவருமான உம்மை நான் ஆராதிக்கிறேன். உம்மையும் ருத்ரரையும் பூஜித்து ஆராதித்து வந்தால் சாஸ்வதமான சாஸ்திர யோகங்களும் நிலைபெற்று நிற்கின்றன. தேவர்களும், சித்தர்களும், பரம ரிஷிகளும் உம்மையும் ஸ்தாணுவையும் பூஜிக்கிருர்கள், சாஸ்வதமான ஸ்ரீவாசுதேவர் யக்ஞங்களாலும் பூஜிக்கப்படத் தக்கவர். எவன் நாராயணரை எல்லாப் பிராணிகளுக்கும் உற்பத்தி ஸ்தானம் என்று எண்ணி, பிரபுவான ருத்ரரை லிங்கத்திலும்

பகவான் விஷ்ணுவை விக்ரஹத்திலும் அர்ச்சிக்கிருனே, அந்த பக்தன் அவர்களுடைய ப்ரீதியை சீக்கிரத்தில் அடைகிருன். புராதன ஆசார்யரும், பளபளப்பான மேகம் போன்ற காந்தியை உடையவரும், வேதங்களுக்கு இருப்பிடமானவரும், கல்மஷ மற்றவரும், வேதங்களைப் பிரித்தவரும், வித்தைகளுக்கு இருப் பிடமான வியாஸரே, இப்படித்தான் சொல்லியிருக்கிருர். அவரை நான் தண்டனிட்டு உம்மைச் சரணம் அடைகிறேன்.]

"ஹே பிரபோ, என்னிடம் தாங்கள் பிரசன்னமடைந்து முன்னுல் என்னுல் கேட்கப்பட்ட விஷயங்களைத் தயவு செய்து சொல்லக் கடவீர். ஸ்ரீராமச்சந்திரனை பிரும்மம், சின்மயரான ஞான ஸ்வரூபியானவர், அவினுசி, என்றும் அழியாதவராகவும், (சோகம், மதம், மோஹம் போன்ற தோஷங்கள் இல்லாத) ஆனந்த மயமாகவு மிருப்பவராகவும் நான் இப்போது அறி கிறேன். அவரே ஸர்வ பொருள்களிலும், அந்தர்யாமியாக விருப்பவராகவும், ஸர்வ சாக்ஷியாகவும் அறிகிறேன்." (அப் படிப்பட்ட பரதத்வமான பொருளான அவரால் ஏன் ஸ்வாமி, மனுஷ்ய ரூபம் எடுக்கப்பட்டது?) (675)

"பிரியமான நாதரே, அவரால் ஏன் பூமியில் அவதரிக்கப் பட்டது? விருஷகேதுவே, விருஷபத்தைக் கொடியாகக் கொண்ட வரே, தர்மத்தைப் பரிபாலிப்பவரே, இந்த விஷய்த்தில் என் மோஹத்தை விலக்கும். என் மனத்தைத் தெளிவுபடுத்தும்." என்று வினயத்துடன் கேட்டாள். பார்வதியினுடைய அத்யந்த வணக்கத்தால் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்ட, பகவான் சம்பு உமையை அணைத்துக்கொண்டு, ஆஸ்வாசப்படுத்தி, ஸ்ரீராமச்சந்திரனுடைய விசுத்தமான கதையில் அவளுக்கு இருந்த பிரேமையைக் கண்டுகொண்டார். (676)

காமதேவனுடைய சத்ருவும், ஸ்வபாவமாகவே நல்ல அறிவுள்ளவரும், கிருபா நிதான் என்று சொல்லப்படுபவருமான பகவான் சங்கரர் மனத்தில் மிக்க சந்தோஷ மடைந்து, பார்வதிக்குப் பரமப் பிரீதியுடன் புகழ்ந்துகொண்டு மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். (677)

[தியானம்

ஹே ராமா, குருவாயூரப்பா, கிருஷ்ணு, சிறந்த யோகிகளுக்கு தங்களுடைய அங்கங்கள் மனேஹரமாக விளங்குகின்றன. மோக்ஷத்தை அடைந்தவர்களுக்கு வாசஸ்தலமாகவும், பக்தர் களுக்கு வேண்டிய பொருளை வர்ஷிப்பதாகவும், கல்பக விருக்ஷத்

தின் தளிர் போன்று இருக்கிற உன் பாதங்கள் என் மனதில் சதா சஞ்சரிக்கட்டும். "உன் பாதங்கள் சதா என் தாபங்களைப் போக்கி, உன்னைப் பற்றிய என்னுடைய ஸ்துதிகளைக் கேட்பவர்களுக்கு ஆரோக்யத்தையும், ஆயுளையும், சுகத்தையும் கொடு," என்று உன் பக்தர்களில் மிக முக்கியமான சம்பு சொன்னாராமே. அப்பேற்பட்ட நீயும், சம்புவும், பார்வதியும் என்னைக் காப்பாற்ற வேண்டும்.]

## நவாஹ பாராயணம்—முதல் நிறுத்தம்
## மாஸ பாராயணம்—நான்காவது நிறுத்தம்

"ஹே பவானி, சுத்தமானதும், சுபமான மங்களங்களைக் கொடுக்கக் கூடிய ராம கதையை, ராமசரிதமானஸைக் கேளு. காகபுசுண்டி, பக்ஷிராஜனாகிய கருடனுக்கு இந்த விமலமான கதையை விஸ்தரித்துச் சொன்னார்." (678)

"அப்பேற்பட்ட மகிமை பொருந்திய மஹான்களின் சம்வாதம் எந்தப் பிரகாரம் ஏற்பட்டதோ, அதை நான் முதலில் விவரித்துச் சொல்கிறேன். இப்பொழுது ஸ்ரீராமச்சந்திரனுடைய அவதாரிகையையும், பரம சுந்தரமானதும், பவித்திரமானதும், பாபக் கூட்டங்களை நாசம் செய்யும் சரித்திரத்தையும் கேளு." (679)

"ஸ்ரீஹரியினுடைய கல்யாண குண விசேஷங்கள், நாம விசேஷங்கள், ரூப சௌந்தர்யங்கள் எண்ணிக்கையில் அடங்காதவை. மிக்க அழகானவை. எல்லையில்லாத விஸ்தீர்ணம் உள்ளவை. மீண்டும் சொல்லுகிறேன். பார்வதி, என் புத்திக்குத் தோன்றினதைத் தான் நான் உனக்குச் சொல்லுகிறேன். நீ மரியாதையுடன் கேளு" (680)

"ஹே பார்வதி, கேளு, வேத சாஸ்திரங்கள், நிகம ஆகமங்களில் பிரதிபாத்யமாக விருக்கும் ஸ்ரீஹரி பகவானுடைய சுந்தரமானதும் விமலமானதும், பல விஷயங்கள் அடங்கியதுமான சரித்திரங்கள் பலவிதமாக கானம் செய்யப்பட்டிருக்கின்றன. ஹரி பகவான் பூமியில் பல அவதாரங்கள் செய்தார். அந்த அவதாரம் எந்தக் காரணத்தால் ஏற்பட்டது, "அது இதுதான்" என்று நாம் நிர்ணயமாகச் சொல்லமுடியாது. அவருடைய அவதார ரஹஸ்யத்திற்கு அநேக காரணங்கள் இருக்கிறபடியால் நிர்ணயமாக ஒன்றையும் காரணமாகச் சொல்ல முடிகிறதில்லை." (681)

"ஹே பிரியமான பார்யையே, பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய எல்லையற்ற பிரபாவங்கள் மனம், புத்தி, குரல் ஆகிய மூன்றுக்கும் மேற்பட்டவை என்று என்னுடைய நிச்சயமான சித்தாந்தம். ஆகிலும், பொது ஜனங்கள், முனி ஸ்ரேஷ்டர்கள், வேத புராணங்கள் தங்கள் தங்கள் புத்திக்கு யேற்ப, கொஞ்சம் கொஞ்சம் சொல்லுகிறார்கள். (அதன்படி நானும் என் மனதில் எவ்விதம் தோன்றுகிறதோ, எப்படி அதை புத்தியினால் நான் அறிந்து கொள்ள முடிந்ததோ, என் குரலில் எவ்வளவு தூரம் சக்தி இருந்து அதைச் சொல்ல முடிகிறதோ, அவைகளை அனுசரித்து நானும் உனக்குச் சொல்லுகிறேன்.") (682)

"சுமுகி, அழகுள்ளவளே, மீண்டும், என்னுடைய அறிவுக்கு எட்டின தூரம் சொல்கிறேன். அந்த ராம அவதாரத்தின் காரணத்தையும் நான் முதலில் சொல்லிவிடுகிறேன். எப்போது தர்மத்திற்கு ஹானி ஏற்படுமோ, நீசர்களான ராக்ஷஸர்கள் சொல்ல முடியாதபடி விருத்தி அடைந்து, கஷ்டங்களைப் பிறர்களுக்கு உண்டு பண்ணுகிறார்களோ, அப்பொழுது அதர்மம் விருத்தி அடைகிறது." (683)

[தியானம்

ஹே ராமா, மோஹன சுந்தரா, சதா உன்னை சிவன் தன் உள்ளத்தில் வைத்து ஜபம் செய்கிறார். உன் மனைவியான ஜானகி உன் அழகையும் குண விசேஷங்களையும் நினைத்து நினைத்து தன்னையே உனக்குக் கொடுத்தாள். பார்வதிதேவியோ சிவனை அடைவதற்குச் சரீரத்தையே தியாகம் செய்தாள். உன் உதவியினால் அவள் பரமசிவனையே மீண்டும் பதியாக அடைந்தாள். உன் கருணைக் கடாக்ஷம் பெற்ற யோகி முனீந்தரர்கள், தியாகராஜர் போன்றவர்கள் நாத வித்தையில் தேர்ச்சி பெற்று, உன்னை ஸ்துதி செய்து பாடும் பாக்கியம் எவ்வளவு பெரிதாகப் பெற்றார்கள் தெரியுமா? நீயே வலிந்து துருவனுக்கும் பிரஹ்லாதனுக்கும் சபரிக்கும் வந்து கடாக்ஷிக்க வில்லையா? சதா உன் பக்கத்தை ஆஸ்ரயித்து உன்னைப் பெரும் தனமாக்க கருதும் விஷ்வக்ஸேனரின் பாக்யத்தை யாரால் வர்ணிக்க முடியும்? விஜயன், பிரும்மா, இந்திரன், சூரியன், சந்திரன் போன்ற மஹானுபாவர்கள் உன்னை, சுத்தமான ஹ்ருதயத்தால் பூஜை பண்ணும் பாக்யமாகிற பெரும் பாக்யத்தை அல்லவா அடைந்தார்கள். சுக்ரர், பிரஹஸ்பதி, சனீஸ்வரர் போன்றவர்களின்

தபஸ்ஸின் பொருளாக நீ யல்லவோ விளங்கிறாய். நாரதர் வாத்ஸல்யத்துடன் உன்னைத் தாமோதரன் என்றும், கருடன் உன்னை வாகனமாகச் சுமப்பதிலும், மார்க்கண்டேயர் நீடூழி காலமாக உன் பெருமையை உணர்ந்து அர்ச்சித்த ரஹஸ்யம் தான் என்னவோ? எல்லாம் ராஜலக்ஷ்மியான பதிவிரதை என்னிடம் செய்யும் பதிசேவையைத் தானே நான் உனக்குச் செய்கிறேன். ஐயா, தயாநிதி, உனக்கு என்று பிரத்யேகமாக ஏற்பட்ட கருணை கடாக்ஷம், உன் பாதசேவை, ஆஞ்சநேயரின் பக்தியாலும் நவ வியாகரண பாண்டித்யத்தாலும், வினயத்தாலும் கண்டுபிடித்த உண்மையைத் தானே நானும் பின்பற்றுகிறேன். ஸநகர் முதலிய யோகீஸ்வரர்களால் புகழப்படும் புராதன ரிஷியே, இவை எல்லாவற்றிற்கும் உன் ஸங்கல்பம் தான் விசேஷமானது. அதற்கு நீ தானே எஜமானன். உன் சங்கல்பத்தினால் அல்லவோ தேவர்களுக்கு அமிர்தம் கிடைத்தது? மஹாபலிக்கு உன் பாதம் கிடைத்தது. சுக்ரீவனுக்கு ஸ்நேகமும் (வாலிக்கு வதமும்) கிடைத்தது. வஸிஷ்டர் போன்ற மஹானுபாவர்கள் திட்டமிட்ட பட்டாபிஷேகமும் நீ நினைத்த மாதிரி தானே நடந்தது. எனக்கு ஆஞ்சநேயர் போன்ற குரு எப்போது எப்படி கிடைக்கும்? தாபத்தினால் தவிக்கும் என் மன தேக நோய்களைப் போக்கும் குரு கடாக்ஷம் எப்போது கிடைக்கும்? சிவனுடைய தத்வத்தையும் தியாகராஜர் அப்யஸித்த வழியையும் நான் கடைப்பிடித்தும் என் மனம் கலங்கி மயக்கம் அடைகிறது. உன்னுடைய செவ்விதழையும், செந்தாமரை போன்ற பாதங்களையும் அகஸ்தியர் விஸ்வாமித்திரர் கண்டதுபோல நான் எப்படி அப்பா காணப்போகிறேன்? அனுசூயை அத்ரிமஹரிஷி கண்ட மாதிரி எப்போது உன் திவ்ய, தாம்பத்ய சேவை கிடைக்கும்? சக்ரவர்த்தியின் குமாரா, மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட நாராயணா, நீ கடாக்ஷிக்க வேண்டும் என்று சதா உன்னை நான் வேண்டுகிறேன். உனக்கு வெறுப்பு விருப்பு கிடையாது. வஞ்சனை இல்லை. தகுதி உள்ளவன், தகுதி இல்லாதவன் என்று நீ பார்க்கிறதில்லை. அதுவாகத்தானே ஏற்படுகிறது. என்னை என் குற்றங்களுக்காக தண்டிக்க நினைத்தால் என்னை தண்டி. அனுக்ரஹமாவது செய். ஆனால் ஆதிசேஷன் தழுவுகிற பாக்யத்தைக் கொடு. சங்கத்தை ஒலி செய்யும் உன் வாய் அம்ருதத்தையாவது கொடு. சக்ரம், கோதண்டம் செய்யும் சேவைகளுக்காவது என்னை இலக்காக ஆக்கு. உன் கடாக்ஷம் தான் வேண்டும். நீ தான் எனக்கு தனம்.]

சிவன் மீண்டும் சொன்னர். "இந்த ராக்ஷஸர்கள் பண்ணுகிற அநியாயத்தை வர்ணிக்க முடியாது. எப்பொழுது பிராம்மணர்கள், பசுக்கள், தேவதைகள், பிருத்வி, எல்லோரும் கஷ்டத்தை அனுபவிக்கிருர்களோ, அந்த சமயம் கிருபாநிதியான பிரபு விதவிதமாக சரீரம் எடுத்து சாதுக்களைக் காப்பாற்றுகிருர்." (684)

"அவர் அசுரர்களைக் கொன்று தேவதைகளை தர்ம மார்க்கங்களில் ஸ்தாபித்து, ஸ்வாஸரூபியாகிற வேதங்களை ரக்ஷித்து உலக மரியாதை, தர்ம மரியாதை என்கிற வியவஸ்தையையும் உண்டு பண்ணி, ரக்ஷை செய்கிருர். ஜகத்தில் தன்னுடைய நிர்மலமான கீர்த்தியை விருத்தி பண்ணுகிருர். ஸ்ரீ ராமச்சந்திரனுடைய அவதார ரஹஸ்யம் இதுதான்." (685)

"அப்பேர்ப்பட்ட மஹானுபாவரான ஸ்ரீ ராமச்சந்திரனுடைய புண்ய கீர்த்திகளை அவருடைய பக்தர்கள் கானம் பண்ணி, பவ சாகரமாகிற சம்சார தாபங்களிலிருந்து விடுபட்டு அக்கரையை அடைகிருர்கள். கிருபாசிந்துவாகிய அவர் சிலசமயம் ஜனங்களின் ஹிதத்திற்காக சரீரத்தை எடுத்துக்கொண்டு அவதரிக்கிருர். இதைப்போல இன்னும் அவருடைய ஜன்ம ரஹஸ்யங்கள் அநேகம் இருக்கின்றன. ஒவ்வொன்றும் பரம விசித்திரமானது." (686)

"அழகான புத்தியுள்ள பவானி, நான் அவருடைய ஒன்று இரண்டு ஜன்மங்களை வர்ணிக்கிறேன். ஸாவதானமாகக் கேளு. ஸ்ரீ ஹரியினுடைய த்வாரபாலர்களான ஜயன், விஜயன் என்பவர்களைப் பற்றி எல்லோருக்கும் தெரியும்." (687)

"அவர்கள் இருவரும் பிராம்மண சாபம் பெற்று, தாமஸ குணம் பெற்றவர்களாக அசூர யோனியில் பிறந்தார்கள். ஒருவனுடைய நாமம் ஹிரண்யகசிபு. மற்ெருருவனுடைய நாமம் ஹிரண்யாக்ஷன். அவர்கள் தேவராஜனை இந்திரனை அடக்கி, எல்லா உலகங்களிலும் தங்கள் ராஜ்யத்தைப் பரப்பினர்கள்." (688)

[தியானம்

ஹே காமாக்ஷி, கருணுகடாக்ஷி, வரங்களைக் கொடுப்பவளே, கறுத்த நிறமுள்ளவளே, பத்மனுபசகோதரி, மூவுலகங்களுக்கும் ஈஸ்வரியே, நந்தகோபர், யசோதை கிருஹத்தில் உதித்தவளே, மங்களகரி, கம்ஸனை ஒட்டியவளே, துர்க்காதேவி, எவர்கள் சுத்தமானவர்களாகவும், மங்கள ஸ்வரூபத்துடன் துர்க்கா

தேவியை பாபங்களுடைய பாரத்தை இறக்குவதற்காகவும் புண்ணியத்தின் பொருட்டும் நினைக்கிறார்களோ, அவர்களை அவள் சேற்றில் அகப்பட்டுத் தவிக்கும் பலஹீனமான பசுவைக் கரையேற்றுவதுபோல பாவத்தினின்று கரையேற்றுவிக்கிறாள். ஸங்கர்ஷணருடைய முகம் போலவும், இந்திர த்வஜம் போன்ற பருத்த இரண்டு கைகளை உடையவளும், பாத்ரத்தையும் தாமரையையும், மணியையும், பாசத்தையும் வில்லையும், மஹாசக்ரத்தையும் இன்னும் பலவிதமான ஆயுதங்களைத் தரித்தவளும், புவியில் பரிசுத்தையாகவும் இருக்கிற துர்க்காதேவியை நான் சரணமடைகிறேன். யுத்தத்தில் ஜயமாகவும், விஜயமாகவும், இருக்கிற மஹாலக்ஷ்மியை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே துர்க்கத்திலிருந்து பிராணிகளை அவள் காப்பாற்றுகிறாள். அரண்யங்களிலும் மஹாசமுத்திரத்தில் மூழ்குகின்றவர்களையும், திருடர்களால் வழிமறிக்கப்பட்டவர்களையுமான மனிதர்களுக்கு அவள் உத்தம கதியாக விருக்கிறாள். ஹே துர்க்கே, நீயே கீர்த்தி, நீயே ஸ்ரீ தேவி, தைரியலக்ஷ்மி, காரியஸித்தி, ஹரி, கல்வி, ஸந்ததி பொறுமை, புத்தி, ஸந்தியை, ராத்ரி, ஒளி, உறக்கம், நிலவு, காந்தி, தயை; மனிதர்களுடைய பந்தத்தையும், மோஹத்தையும், மக்கள் அழிவையும், பொருள் அழிவையும், வியாதியையும், மரணத்தையும் மஹாபாபங்களையும் விலக்குவாய். ஹே ஸத்ய ஸ்வரூபிணி, என்னிடத்தில் ஸத்யமாக இருப்பாய். என்னை ரக்ஷிப்பாயாக. என் மனைவி புத்ரன் புத்ரி கிரஹ விஷயத்தில் கருணையுடன் எங்களைக் காப்பாற்றுவாயாக.]

சிவன் சொன்னார். ''அவர்கள் யுத்தத்தில் ஜயத்தை அடையும் சமர்த்தர்கள். இவர்களில் ஹிரண்யாக்ஷனை பகவான் வராஹரூபம் எடுத்துக் கொன்றார். வேறொருவனாகிய ஹிரண்ய கசிபுவை பகவான் நரசிம்ம ரூபம் எடுத்துக் கொன்று, பக்தனான பிரஹ்லாதனைக் காப்பாற்றினார்.'' (689)

அந்த இரு மஹாவீரர்களும் தேவர்களையும் ஜயிக்கும் திறமை உள்ளவர்களாகவிருந்தார்கள். அவர்களே ராவணன், கும்பகர்ணன் என்கிற நாமங்களைக் கொண்டு பிறந்து, யுத்தத்தில் பலவான்களாகவும் மஹாவீரர்களாகவும் மகிமை பொருந்திய ராக்ஷஸர்களாகவும் அவதரித்து உலகம் முழுவதும் தங்களைத் தெரிந்து கொள்ளும்படி நடந்துகொண்டார்கள்.'' (690)

''முந்திய ஜன்மத்தில் பகவானால் ஸம்ஹரிக்கப்பட்டவர்களாயிருந்தபோதிலும் அவர்களுக்கு முக்தி கிடைக்கவில்லை. ஸநகாதிகளின் சாபத்தின்படி அவர்கள் மூன்று ஜன்மங்கள்

எடுக்கும்படி சபிக்கப்பட்டார்கள். ஆகையால் உலகத்தின் கல்யாணத்தின் பொருட்டு பக்தி பிரேமைக்கு வசமான பகவான் அவர்களை ஸம்ஹரிப்பதற்காக ராமனாக அவதரித்தார்.'' (691)

''அந்த அவதாரத்தில் காஸ்யபர், அதிதிதேவி அவருக்கு மாதாப் பிதாக்களாகவிருந்தார்கள். அவர்களே தசரதர் கௌசல்யா என்று அறியப்பட்டார்கள். அவர்களே அவருக்கு மாதாப் பிதாக்களாக ஆனார்கள். ஸ்ருஷ்டியின் ஒரு கல்பத்தில் இந்த விதமாக அவதாரம் எடுத்து சம்சாரத்தைப் பவித்திர மான லீலைகளால் பிரபு சுத்தமாக்கினார்.'' (692)

''மற்றொரு கல்பத்தில் எல்லாத் தேவதைகளும் ஜலந்தரன் என்கிற தைத்யனால் யுத்தத்தால் தோற்கடிக்கப்பட்டார்கள். அதனால் துக்கமடைந்த தேவர்களை சந்தோஷிப்பதற்காக என்னால் (சிவனால்) ஒரு பெரிய யுத்தம் செய்யப்பட்டது. ஜலந்திரன் மிக்க பலவானானபடியால் கொல்லப்பட முடிய வில்லை.'' (693)

''அந்த தைத்ய ராஜனுடைய மனைவி பரமஸதி மஹா பதிவிரதையாகவிருந்தாள். அவளுடைய வைபவத்தால் திரிபுரா ஸுரனை வதைத்த என்னால் அந்த தைத்யனை ஜயிக்க முடிய வில்லை.'' (694)

''அதனால் பிரபு அந்த ஸ்திரியினுடைய பாதிவிரத்ய வ்ரதத்தை பங்கப்படுத்தி, தேவதைகளின் காரியத்தை ஸித்தி செய்தார். எப்போது அந்த ஸ்திரி அந்த ரஹஸ்யத்தை அறிந்தாளோ, அவள் க்ரோதவசமடைந்து பகவானுக்கு சாபம் தந்தாள்.'' (695)

சாபங்களைப் பொக்கிஷமாகக் ஏற்றுக் கொள்பவரும் கிருபாளுவுமான ஸ்ரீ ஹரி பகவான் அந்த ஸ்திரியின் சாபத்தை பிரமாணப் படுத்துவதற்காக பூமியில் அவதரித்தார். அந்த ஜலந்தரன் அந்த கல்பத்தின் முடிவில் ராவணனாகப் பிறந்தான். அவனைக் கொல்வதற்கு ஸ்ரீ ராமன் மனுஷ்ய அவதாரம் எடுத்தார். அவனைக் கொன்று அவனுக்கு பரமபதத்தை அளித்தார்.'' (696)

''பரத்வாஜரே, பகவானுடைய ஒரு அவதாரத்திற்கு இது காரணமாகவிருந்தது. அதனால் பிரபு மனுஷ்ய ரூபத்தை எடுத்துக்கொண்டு பூமியில் அவதரித்தார். முனீஸ்வரரே, மீண்டும் கேளும். பிரபுவினுடைய ஒவ்வொரு அவதாரத்தின் ரஹஸ்யமும் லீலைகளும் பல கவிகளால் நானாவிதமாகப் புகழப் பட்டிருக்கின்றன.'' (697)

"ஒரு சமயம் பகவானுக்கு நாரதரால் சாபம் அளிக்கப் பட்டது. ஆதலால் ஒரு கல்பத்தில் அந்தச் சாபத்தை நிறைவேற்றுவதற்கு பிரபு பூமியில் அவதரித்தார்." இந்த வசனங்களைக் கேட்ட பார்வதி தேவி ஆச்சர்யப்பட்டு விட்டாள்; பகவான் சம்புவைப் பார்த்துக் கேட்கலானாள். "பிரபோ, நாரதர் சிறந்த விஷ்ணு பக்தரல்லவா? அத்துடன் அவர் பரமார்த்தப் பொருளைத் தெரிந்து கொண்ட பெரும் ஞானி யல்லவா?" (698)

"முனியினால் பகவானுக்கு ஏன் அப்பேற்பட்ட சாபம் அளிக்கப்பட்டது? ரமாபதியான பகவான் அவருக்கு என்ன அபராதம் செய்தார்? அந்தக் கதையைச் சொல்லும். நாரத பகவானுக்குக்கூட மோஹம் இருப்பது மிக்க ஆச்சர்யமாகவிருக் கிறது" (699)

மஹா தேவர் சிரித்துக்கொண்டு, சொன்னார் :— "பார்வதி, ஒருவரும் ஞானியுமில்லை. ஒருவரும் முட்டாளுமில்லை. ரகுபதி என்ன நினைக்கிறாரோ, அந்த க்ஷணத்தில் மனிதன் அவ்விதம் மாறிவிடுகிறான்." (700)

[தியானம்

ஹே ராமா, ரகுகுல ஸ்ரேஷ்டா, உனக்கு அஸ்வினி தேவர்கள் இரு கண்கள் போல இருக்கிறார்கள். எனக்கு அவர்கள் கிருபை யால் உன் தரிசனமும் உன் திருஷ்டியும் கிடைக்கும்படி அருள் செய்ய வேண்டும். அஸ்வினி தேவர்களே, நீங்கள் முன் செல்லு பவர்களாகவும், முன் பிறந்தவர்களாகவும் பல வர்ணங்கள் உள்ள கிரணங்களை உடையவர்களாகவும், தவத்தால் அழிவில்லாதவர் களாகவும், தேவலோகத்தில் உண்டானவர்களாகவும், ரஜோ குணமில்லாதவர்களாகவும், எல்லா உலகங்களுக்கும் மேல் விமா னங்களில் செல்லுபவர்களாகவும், கருடனைப் போல அழகான சிறகுகள் உள்ளவர்களாகவும் யிருக்கிறீர்கள் சூரியனுடைய தேஜஸினால் ஏற்படும் கருப்பு வெளுப்பு ஆகிய இரவு பகல்களை நெய்கிற தறிகாரர்களுமான தேவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். பொய்யில்லாதவர்களும், கருடனைப் போல பலமுள்ளவர்களும், ஆபத்தில் உதவுகிறவர்களும், கால சக்ரத்தின் எழுநூற்றிருபது பசுக்களினிடமிருந்து கர்ம பலனாகிய தர்மத்தை அவர்கள் கறக் கிறார்கள். மாயையானது புருஷ ரூபர்களான அஸ்வினி தேவர் களை ஆஸ்ரயித்திருக்கிறது. ஸம்வத்ஸர சக்ரமானது பிராணி களின் உணவுக்குக் காரணமாக நடக்கிறது. எல்லா தேவர்களும்

யக்ஞத்தைப் பற்றி அதை ஆஸ்ரயித்திருக்கிறார்கள். அஸ்வினி தேவர்கள் அம்ருத மயமாகிய சந்திரனை வட்டமாக வியாபிக்கின்றனர். அவர்கள் மழையை பத்து திசைகளிலும் உண்டாக்குகிறார்கள். ஸத்தியத்தில் இருப்பதால் நாஸதியர் என்று சொல்லப்படுகிறார்கள். மோக்ஷத்தை கொடுப்பவர்களும், கர்ம பலன்களை விருத்தி செய்பவர்களாக விருக்கும் அவர்களின் உதவியின்றி மற்ற தேவர்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து பலனைக் கொடுப்பதில்லை. அவர்கள் எல்லா பிராணிகளும் ஜீவிக்கும்படி ஸூர்ய கிரணங்களை வியாபிக்கச் செய்கிறார்கள். அப்பேற்பட்ட மகிமைகள் பொருந்திய அஸ்வினி தேவர்களே, உங்கள் பெருமையை நான் துதிக்கச் சக்தி உள்ளவனல்லேன். ரக்ஷிக்கத் திறமையுள்ள உங்களை நான் சரணம் அடைந்திருக்கிறேன்.]

யாக்ஞவல்கியர் சொல்ல ஆரம்பித்தார். "பரத்வாஜரே, நான் பகவான் ஸ்ரீராமச்சந்திரனுடைய குணக் கீர்த்திகளைச் சொல்லுகிறேன். நீர் சிரத்தையுடனும் மரியாதையுடனும் கேளும்." துளசிதாஸர் சொல்லுகிறார்: "ஸாதுக்களே, மானம், மதம் முதலியவற்றைத் தியாகம் செய்துவிட்டு, சம்சாரக் குழியில் மீண்டும் விழுவதை நாசம் செய்யக்கூடிய ஸ்ரீரகுநாதனுடைய கதையைப் பஜியுங்கள்." (701)

"ஹிமவத் பர்வதத்தில் ஒரு பெரிய குகை இருந்தது. அது பவித்திரமானது. அழகான கங்கை அதன் பக்கத்தில் சென்று கொண்டிருந்தது. அதன் கரையில் அழகான ஒரு ஆஸ்ரமத்தைக் கண்டு தேவரிஷியான நாரதருக்கு மனத்தில் இன்பம் வந்தது." (702)

"பர்வதம், நதி, வனங்கள் இவைகளின் அழகுகளைக் கண்டு நாரதருக்கு ரமாபதியான பகவானிடம் பிரேமை அதிகரித்தது. பகவானைத் தியானம் பண்ணி, அவருக்கு தக்ஷனால் கொடுக்கப்பட்ட (எப்பொழுதும் அலைந்து திரிந்துகொண்டிருத்தல் என்கிற) சாபத்தைப் போக்கி, தன் மனத்தில் ஸ்வாபாவிகமாக ஏற்பட்ட நிர்மல பக்தியுடன் ஸமாதியில் புகுந்தார்." (703)

"அவருடைய தபோமயமான ஸ்திதியைக் கண்டு தேவ ராஜன் பயமடைந்து காமதேவனைக் கூப்பிட்டு, "என் நன்மைக்காக உன் சகாக்களுடன் நீ போய், நாரதருடைய சமாதியைப் பங்கப்படுத்தி, தபஸ்ஸைக் கலைத்துவிடு," என்று, உத்தரவிட்டான். மன்மதனும் சந்தோஷத்துடன் சென்றான்." (704)

தேவராஜனுக்கு நாரதர் தன் ஸ்தானத்தை விரும்புகிருர் என்கிற பயம்யேற்பட்டது. இந்த உலகத்தில் எவன் கர்வியாக வும், லோபியாகவும் இருக்கிருனே, அவன் குடில புத்தியுடனும் எல்லோரிடமும் பயந்தவனுகவுமிருக்கிருன். (705)

[தியானம்

ஹே ராமா, உன் ரகுகுல பெருமையை யார்தான் வர்ணிக்க முடியும்? உன் குலத்தில் பிறந்தவர்கள்தானே சமுத்திரத்தை உண்டுபண்ணினுர்கள். அந்த ஸகரனின் பெயர் கொண்ட ஸாகரம் எவ்வளவு ஜலங்களுக்கு ஆதாரமாகவும், ஆழமாகவும், கலங்கிக்கொண்டு பேரிரைச்சலுடன் பயங்கரமாகவும் விகார மான ரூபமுள்ள கோர ஜந்துக்கள், ராக்ஷஸர்கள், பர்வதங்கள், முதலைகள், மீன்களைக் கொண்ட ஜந்துக்களுக்கு வாசஸ்தலமாக வும், அடைக்கலமாக கொடுக்கப்பட்ட பொருள்களாகவும் விளங்கு கிறதல்லவா? திக்பாலர்களில் ஸ்ரேஷ்டமானவரும், தைத்ரிய உப நிஷத்தை பிருகு மஹரிஷிக்கு உபதேசித்தவருமான வருண பகவானுக்கு இருப்பிட ஸ்தானமாக விளங்குகிறதல்லவா? நதி களுக்குப் பர்த்தாவும், வடவாக்கினிக்கு இருப்பிடமும், அசுரர் களுக்கு ஆதாரமாகவும், தேவர்களுடைய அம்ருதத்திற்கு முக்கிய மான இடமாகவும், பாபங்களைப் போக்குவதும், கம்பீரமும் எந்த பிராணிகளுக்கும் பயத்தை உண்டுபண்ணக்கூடியதும், சந்திர னுடைய உதைய அஸ்தமனங்களை அனுசரித்து அலைகளுடன் கூடினதாகவும், பாஞ்சஜன்யம் என்னும் பகவானின் சங்கத் திற்கு உற்பத்தி ஸ்தானமாயும், உயர்ந்த ரத்னங்களுக்கு இருப் பிடமான ஸ்தானமாகவும், வராஹ அவதாரத்தின் சமயம் விஷ்ணுவினுல் பூமியைத் தூக் னபொழுது அவரால் உள்ளே புகரப்பட்ட ஜலமுள்ளதும், அத்ரி என்கிற பிரும்மரிஷி நூறு வர்ஷகாலம் தவம் செய்தும் ஆழம் அறியப்படாதவரும், பாதா ளத்தின் இருப்பிடமும், கரைகடந்த தேஜஸ்ஸுள்ள பத்மனுபன் என்று சொல்லப்பட்ட விஷ்ணு, ஸ்ருஷ்டிக்கு முந்தினகாலத்தில் ஆத்ம சாக்ஷாத்காரமாகிய யோகநித்திரை செய்த சமயம் அவருக்கு சயனமாகவும், யுத்தத்தில் பயந்த அசுரர்களுக்கு அபயம் கொடுக்கிற இடமாகவும், தர்மத்திற்குப் பயந்த ஸ்வபாவ முள்ளதும், ஆயிரக்கணக்கான நதிகள் மிக்க ஆவலோடு சேரு கின்ற மஹாசமுத்திரங்களை நான் நமஸ்கரிக்கிறேன். நீங்கள் தயைகூர்ந்து என்னிடம் மிக்க அன்பாயிருக்கவேண்டும். ராம தூதனுகிய ஆஞ்சநேயர் லங்கைக்குப் போகுமுன்

தாண்டும் சமயம் மிக்கக் கருணையுடனும் அனுகூலமாக அந்த ஸமுத்திரராஜன் இருந்தாரல்லவா? அதை நான் எவ்விதம் மறக்க முடியும்?]

"எப்படி மூர்க்க ஸ்வபாவமுள்ள நாய் சிம்மத்தைக் கண்டு பொருமையினுல் ஒரு உலர்ந்த எலும்பை கவ்விக்கொண்டு ஓடுகிறதோ, எங்கே அந்த எலும்பை சிம்மம் பரித்துவிடுமோ என்கிற பயத்தால் நடுங்குகிறதோ, அதுபோல இந்திரன் லஜ்ஜையில்லாமல் நாரதரிடமும் மிக்க பயந்தான்." (706)

"காமதேவன் நாரதருடைய ஆஸ்ரமத்தை அடைந்து அவனுடைய பிரபாவத்தினுல் நிஜமான மாயையை உண்டுபண்ணினுன். விதவிதமான புஷ்பங்கள் மரங்களில் அநேக வர்ணங்களுடனும் வாசனைகளுடனும் தோன்றின. கோகிலங்கள் மதுரமான குரல்களில் கூவின." (707)

"மந்தமானதும் சுகந்தமானதுமான காற்று வீச ஆரம்பித்தது. ரம்பை முதலிய அழகிய அங்கங்களுடைய தேவஸ்திரீகள் நல்ல யௌவனத்துடன் நர்த்தனம் செய்தார்கள். அவர்கள் எல்லோரும் காமகலையில் தேர்ச்சி பெற்றவர்கள்." (708)

"பலவித ராகங்களுடன் கீதம் பாடினுர்கள். நர்த்தனம் செய்தார்கள். பல விளையாட்டுக்கள் செய்தனர். பந்து, பட்டம் முதலிய கேளிக்கைகளைச் செய்தனர். மதனன் தன் சகாக்களின் செய்கைகளைக் கண்டு, மிக்க பிரசன்னமடைந்து, நானுவிதமான மாயாஜாலங்களைச் செய்தான்." (709)

"காமகலையின் சேஷ்டைகள் முனீஸ்வரரைப் பாதிக்கவில்லை. அந்த சமயம் தனக்கு விநாசம் ஏற்படுமோவென்று காமதேவன் பயப்பட்டான். லக்ஷ்மீபதியான நாராயணனுடைய ரக்ஷையை அடைந்த நாரதரை யாரால் என்ன செய்ய முடியும்?" (710)

"பீதி அடைந்தவர்களும், சகாக்களுடன் கூடிய மன்மதன் தனது தோல்வியை ஒப்புக்கொண்டான். அவன் நாரதரின் பாதங்களில் விழுந்து மன்னிப்பை வேண்டிக்கொண்டான்." (711)

[தியானம்

ஹே ராமா, நீ பிராம்மண ஆசீர்வாதத்தினுலும், ரிஷிகளுடைய மங்கள வசனங்களாலும், உன் தாயாரான கௌஸல்யா தேவியின் ஆசீர்வாதங்களாலும் பெரிதான யுத்தத்தில் ராவணனைக் கொன்று, சீதையை மீட்டாயாமே. உனக்கு மிக்க பலசாலி

யும், வினதையின் புத்ரனும், அம்ருதத்தைக் கொணர்ந்து, தாயை அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தவரும், சர்ப்பங்களுக்கு விரோதியும், பிராமணர்களிடமும், வாலகில்யர்களிடமும், தயை காட்டினவரும், காஸ்யபரின் புத்ரரும், அருணனுடைய தம்பி யானவரும், பக்ஷிகளுக்கு இந்திரனும், விஷ்ணுவின் பூர்ணமான அன்பைப் பெற்று, அவருக்கு வாகனமாயும் கொடியாகவும் விளங்கி, ஸுபர்ணர் என்று பெயர் பெற்று, இந்திரனுக்குத் தோழனான கருடனை நான் நமஸ்கரிக்கிறேன். அவர் வாயு வேகத்தினால் வந்து உன்னையும், உன் தம்பியான லக்ஷ்மணனை யும் நாகபாசத்திலிருந்து விடுவித்தான். கருடரே, நீரே அக்னி யின் தேஜஸும், வாயுவின் பராக்ரமத்துடனும், வாலகில்யர் களின் தவத்தினால் அதன் பலனாகவும் பிறந்தீர். உம்முடைய சிறகுகள் வேதங்களின் தொனிகளை பரப்பிக்கொண்டு அழகாக இருக்கின்றன. உம்முடைய அங்கங்கள் வேதங்களின் சந்தஸ் என்றும், பாகங்கள் என்றும் வர்ணிக்கப்படுகின்றன. உம் முடைய உதவியினால் விஷ்ணு பகவான் நினைத்த இடங்களுக்குச் செல்கிறார். காஸ்யபரின் புத்ரரே, எனக்கு பரமாசார்யரே, மஹாலக்ஷ்மியின் பிரியத்துக்குப் பாத்திரமானவரே, விஷ்ணுவி னுடைய பக்தர்கள் உம்முடைய வரவினால் ஏற்படும் பெரும் காற்றுக்கு ஒப்பான வேகத்தால், பகவான் விஷ்ணு தோன்று கிறார் என்று நிர்ணயம் செய்கிறார்கள். நீரும் ஆதிசேஷரும் பகவானுடைய அந்தரங்க சேவகர்கள். உம்முடைய திருவரு ளால் எனக்கு பகவானுடைய ரக்ஷையும், தர்சனமும், கிருபையும் கிடைக்கவேண்டும். பிராம்மண பிரியரே, என்னிடம் தயை நீர் காட்டவேண்டும். ஸுபர்ணரே, ரிஷியே, வைநதேயரே, நீர் என்னை சதா அன்புடன் நோக்கவேண்டும்.]

"பகவானாகிற நாரத ரிஷிக்கு க்ரோதம் கொஞ்சம்கூட ஏற்பட வில்லை. பிரியமான வசனங்களோடு மன்மதனைச் சமாதானம் செய்தார். மதனனும் முனீஸ்வரருடைய பாதங்களில் விழுந்து, அவருடைய மன்னிப்பைப் பெற்றுக்கொண்டு தன் சகாக்க ளுடன் திரும்பினான்." (712)

"தேவராஜனுடைய சபைக்குச் சென்று நாரத பகவானு டைய சுசிலமான நடையை மன்மதன் பகுமானித்துச் சொன் னான். அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு எல்லோரும் ஆச்சர்ய மடைந்தார்கள். முனியினுடைய கீர்த்திகளை பலவிதமாகச் சொல்லி, ஸ்ரீ ஹரியினுடைய மேன்மைகளை உணர்ந்து, அவருக்கு வந்தனம் செலுத்தினார்கள்." (713)

"அப்பொழுது நாரதர் சிவனிடம் சென்றார். அவருடைய மனத்தில் காமதேவனை ஜயித்துவிட்டதனால் சிறிது அஹங்காரம் தோன்றியது. சிவனிடம் எல்லா விவரங்களையும் சொன்னார். மஹாதேவரும் அத்யந்த பிரியத்தினால் நாரதருக்குச் சிக்ஷையாக உபதேசம் செய்தார்." (714)

"ஹே முனீஸ்வரரே, நான் அடிக்கடி வினயத்துடன் சொல்லுகிறேன். என்னிடம் எந்த விதமாக உமது விருத்தாந் தங்களைச் சொன்னீரோ அதுமாதிரி ஸ்ரீபகவானாகிய ஸ்ரீஹரியி னிடம் உமது பெருமைகளைப்பற்றிச் சொல்லாதீர். ஏதாவது சமயம் ஏற்பட்டாலும், இதைப்பற்றி பேசாமல் இருந்துவிடவும்" என்று எச்சரித்தார். (715)

"இவ்விகம் பலதடவைகள் பகவான் சம்புவினால் நாரதரின் நன்மைக்காக சிக்ஷை செய்யப்பட்டபோதிலும், அவருடைய உபதேசம் நாரதருக்குச் சரியாகப்படவில்லை. ஹே பரத்வாஜரே, இப்போது நடந்த தமாஷைக் கேளும். பகவான் ஹரியினுடைய சங்கல்பம் மிக்கப் பலமானது. அது யாவராலும் அதிக்கிரமிக்க முடியாதது." (716)

"ஸ்ரீராமச்சந்திரன் எதை சங்கல்பிக்கிறாரோ, அது சத்ய சங்கல்பம். நடந்தேதீரும். அதற்கு விரோதமாக ஒன்றும் நடப்பதில்லை. ஸ்ரீசிவபெருமானுடைய அர்த்தம் நிறைந்த பெரும் வசனங்கள் நாரதருடைய மனத்திற்கு சரியாகப் படவில்லை. அவர் பிரும்மலோகத்திற்குச் சென்றார்." (717)

"ஒரு சமயம், கானவாத்யமான வீணையை மஹாநிபுணரான நாரதர் கையில் எடுத்துக்கொண்டு, ஹரியினுடைய குண விலாஸங்களைப்பாடி ஆனந்தித்துக்கொண்டு க்ஷீரசாகரத்திற்குச் சென்றார். வேதங்களை உண்டுபண்ணினவரும், வேதங்களின் தத்வமாக விளங்குபவரும் நித்யமான லக்ஷ்மி வாசம் பண்ணுகிற வக்ஷஸ்தலத்தை உடைய பரம புருஷரான நாராயணரைக் கண்டார்." (718)

"ரமையுடன் விளங்கும் நாராயணர் முனியை வரவேற்று, ஆனந்தத்துடன் தழுவிக்கொண்டு, ஆஸனம் கொடுத்து, அவ ரைப் பலவிதமாக பூஜித்தார். சகல சராசரங்களையும் ஆட்டிவைக் கும் சூத்ரதாரியான பகவான் சிரித்துக்கொண்டு, சொல்ல ஆரம் பித்தார். "ஹே முனி, இன்று தாங்கள் என்னிடம் மிக்க கிருபை காட்டினீர்கள். பரம கிருபையாக உமது தர்சனம் எனக்குக் கிடைத்தது." (719)

"பலதடவைகள் பகவான் சம்பு சொல்லியிருந்தும், ஸ்ரீ நாரதர் அவைகளை மறந்து, காமதேவனின் சகல விருத்தாந்தங்களையும் பகவானுக்குச் சொன்னார். ஸ்ரீரகுபதியினுடைய மாயை மிக்க பிரபலம் வாய்ந்தது. அது மிகப் பெரியது. உமா, ஜகத்தில் அந்த மாயையினால் மோஹிக்கப்பட்டு, ஏமாறாத ஜனம் யார் உளர்?" (720)

"பகவான் கடிந்த நோக்குடன், கோமளமான வசனங்களால் சொல்ல ஆரம்பித்தார். "ஹே முனிராஜரே, உம்மை ஸ்மரணை பண்ணினால், மோஹமும் காமங்களும், தன்மீது கொண்ட ஆத்ம கர்வமும், அபிமானமும் நாசமடையும்." (721)

"ஹே முனி பகவானே, கேளும். மோஹமானது ஞான வைராக்யம் இல்லாத புருஷனிடத்தில் உண்டாகிறது. நீங்களோ பிரும்மசர்யவ்ரதத்தில் ஆழ்ந்து தீரனாக, சுத்த மனோபாவத்துடன் விளங்குகிறீர். உம்மை காமதேவனால்கூட ஜெயிக்க முடியுமா?" (722)

[தியானம்

ஹே ராமா, உன் குலத்தின் பெருமையையும், உன் முன்னோர்களின் பெருமையையும், பரத வம்சத்தின் பெருமையையும் யாரால் வர்ணிக்கமுடியும்? குலத்தின் பெருமையைக் காப்பாற்றுவதும், கருணையையே மேலான தர்மமாகக் கொண்டதும், தானங்களின் சிறப்பைச் செய்வதுமான யாகங்களின் மேன்மைகளைச் சரியாக நடத்தின எத்தனையோ ராஜரிஷிகள் இருந்திருக்கின்றனர். ஜனமேஜய மஹாராஜாவின் ஸர்ப்ப ஸத்ரத்தில் நடந்த பெருமையையும், ஸர்ப்பங்களின் வம்சத்தைக் காத்தவருமான ஜரத்காரு என்னும் மஹரிஷி ஜரத்காரு என்னும் நாககன்னிகையினிடத்தில் ஜனித்தவருமான ஆஸ்திக ரிஷியைப்பற்றிச் சொல்ல வேண்டுமா? தன் மாமனை தக்ஷகனைக் காப்பாற்றி, மாதுல வம்சமான ஸர்ப்பங்களை கோரகதியினினிறு திரும்பி வைத்து, தர்மத்தில் பற்றுதல் உள்ளவைகளாக மாற்றி, பகவானுடைய ஸ்ருஷ்டியை மேன்மைப் படுத்தின மஹாபுண்யவான் அவர். எதற்காக பரம தார்மிகரான ஆதிசேஷன் பாடுபட்டாரோ, அந்தப் பெரிய காரியத்தை இந்த மஹரிஷி சாதித்து, ஜனமேஜய ராஜாவையும் அனுக்ரஹித்து, அஸிதன், ஆர்த்திமான், ஸுநீதன், என்பவர்களை நாகர்களின் தர்மத்தைப் பரிபாலிப்பதற்காக ஏற்படுத்தி, குலத்தின் புத்ரோத்பத்தி தர்மத்தை விருத்தி செய்து வெகுவாக நிருபணம் செய்த

மஹத்தான புண்ய கர்மாவைச் செய்தஆஸ்திகருக்கும், தர்ம வியவஸ்தை ஏற்படுத்தினவரும், அவ்யக்த்திலிருந்து உண்டானவருமான பிரும்மாவையும் நான் நமஸ்கரிக்கிறேன். கயன், ரதந்திதேவன், கட்வாங்கள், பரதன், யுதிஷ்டிரர் போன்ற ராஜரிஷிகள் செய்த யாகங்களுக்குச் சமமாக யாகம் செய்து மஹத்தான பிராம்மண சேவையைச் செய்த அஜமீடவம்சத்தவரான ஜனமேஜயருக்கு நமஸ்காரம். தசரத புத்ரனுன ராமா, நீ ராஜீவாக்ஷியான சீதைக்காக பெரிய சமுத்திரத்தைத் தாண்டி தர்மத்தை நிலைநாட்டிய ரகுகுல திலகா, தியாகராஜரின் பக்தி வெள்ளத்தில் மிதந்துவரும் என் உள்ளக் கோயிலில் ஏற்பட்ட தீபம் போன்று விளங்கும் மஹா பாக்யசாலியான சீதாராமா, உங்களை நான் நமஸ்கரிக்கிறேன்.]

"நாரதரும் தன்னபிமானத்துடன் சொல்ல ஆரம்பித்தார். "ஹே பகவான், உமது கிருபையாலும் கருணையாலும் இது ஏற்பட்டது." பகவான் ஸர்வ அந்தர்யாமி அல்லவா? அவருடைய மனத்தில் ஏற்பட்ட கர்வமானது ஒரு விருக்ஷம் மாதிரி வளர்ந்திருக்கின்றது என்று கண்டுகொண்டார். "நான் என் பக்தரான முனிக்கு ஹிதம் செய்யவேண்டும். ஏதாவது விளையாட்டு லீலை செய்யவேண்டும்" என்று யோசித்தார்." (723)

"அந்த சமயம் ஹரியின் பாதத்தில் நாரதர் தன் சிரஸை வைத்து நமஸ்கரித்தார். அவருடைய ஹ்ருதயம் தன் மத அபிமானத்தினுல் விருத்தி அடைந்திருந்தது என்று பகவான் கண்டுகொண்டார். லக்ஷ்மீபதி தன் நிஜமான மாயையைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்தார். துளசிதாஸர் சொல்லுகிறுர், "அவளுடைய சேஷ்டைகளைக் கேளுங்கள்." (724)

"ஹரியினுடைய மாயையினுல் அவர் போகும் வழியில் நூறு யோசனைகள் விஸ்தீரணமுள்ள ஒரு நகரம் தோன்றியது. அது விதவிதமான அழகுகளுடன் கட்டப்பட்டிருந்தது. லக்ஷ்மீ வானுகிய ஸ்ரீவிஷ்ணுவின் நகரமாகிய ஸ்ரீவைகுண்டத்தைவிட அது மிகச் சிறந்ததாக விளங்கியது." (725)

"அப்பேற்பட்ட நகரத்தில் அழகான ஸ்திரீ, புருஷர்கள் வசித்துவந்தார்கள். அநேக காமதேவர்கள் ஸ்திரிகள் மனுஷ்ய சரீரங்களை எடுத்துக்கொண்டு வசித்துவந்தார்கள். அந்த பட்டிணத்தில் சீலத்திற்குப் பெயர்போன ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு நிறையக் குதிரைகள், யானைகள், சேனைகள் இன்னும் பலவிதமான கணக்கற்ற வைபவங்களுமிருந்தன." (726)

[தியானம்

ஹே ராமா, முன்பு நீ நாராயணனாக இருந்த சமயம் பிரும்மாவும், இந்திரனும், "நீதான் பரமாத்மா, ஸர்வந்தர்யாமி; எல்லோரும் உன்னைக் குறித்து தபஸ் செய்யவேண்டியது, நீர்தானே அந்த தபஸ்ஸின் பலன்" என்று பிரகடனப்படுத்தினார்கள். பரசுராமரும் அநேக தடவைகள் பூமியை ஜயித்து, க்ஷத்திரியர்களை வென்று, பலவான்களில் பெயர்பெற்ற தம்மையும் உமக்கு அளித்து, மஹாதியாகம் பண்ணி உலகத்திற்கு உம்மை பிரகடனப்படுத்தினார். மஹாபலம் பொருந்திய கருடனும், மாதலியின் பெண் கல்யாண விஷயமாக ஏற்பட்ட ஸுமுகன் என்கிற நாகனும், மாதலியினால் தேர்ந்தெடுக்கப்பட்ட வரனும், ஆரியமான் வம்சத்தைச் சேர்ந்தவனுமான ஸுமுகன் என்கிற நாகனிடம் காட்டிய அபார கருணையினால் தன் பலத்தைவிட மேலான சக்திவாய்ந்து விஷ்ணுவானவர் இருக்கிறார் என்று உணர்ந்து அடங்கினார். கண்வமகரிஷியினால் பலதடவைகள் போதிக்கப்பட்டும் கர்வத்தினால் மதிமயக்கம் அடைந்த துரியோதனன் பீஷ்மத்ரோணகர்ணாதிகளுடன் கிருஷ்ணார்ஜுனர்களான நர நாராயணர்கள் முன்பு அழிந்துபோனான். தசரதர் சபையில் என் பரம குருவான விஸ்வாமித்திரர் "ராமனை நான் அறிவேன், மஹாதேஜஸ்வியான வசிஷ்டரும், தபஸ்ஸில் மனம் செலுத்தின மஹரிஷிகளும் அறிவார்கள்" என்று பலவிதமாக உன் மஹத்வத்தை வெளியிட்டிருக்கிறார். ஐயா, உம்மை நான் பலவிதமாக அறிந்து, தியாகராஜர் போலவும் பக்தியால் உன்னை ஆராதித்து, நாரதரிஷியைப்போலே உன் அந்தரங்க விஸ்வாசத்தை அடைவேனாக. அவர்கள் எனக்கும் பிராம்மண ஸத்குருக்கள், அவர்களுடைய ஆசீர்வாதமும் கிருபையும் ரக்ஷையும் எனக்கு சதா வேண்டும், என்று ராமா, உன்னை வேண்டி நமஸ்கரிக்கிறேன்.]

"அந்த ராஜாவினுடைய வைபவங்களும், விலாஸங்களும், இந்திரனுக்குச் சமமாகவிருந்தன. ரூபத்திலோ, தேஜஸ்ஸிலோ, பலத்திலோ, நீதியிலோ அனைத்திலும் அவன் மிகச் சிறந்து விளங்கினான். அந்த அரசனுக்கு விஸ்வமோகினியான ஒரு அழகான சுந்தரி கன்னிகையாக அவதரித்து இருந்தாள். அவளுடைய ரூபத்தைக்கண்டு லக்ஷ்மிதேவியும் மோஹம் அடைந்தாள்." (727)

"அந்தப் பெண் ஸகல குண சமூகங்களுடனும் விளங்கும் பகவானுடைய மாயையின் பொக்கிஷமாகவிருந்தாள். அவ

ளுடைய சோபையை யார் வர்ணிக்க முடியும்? அந்த ராஜ குமாரிக்கு அரசன் ஒரு ஸ்வயம்வரம் ஏற்படுத்தினர். அதற்கு பல ராஜாக்கள் வந்தார்கள்.'' (728)

''ரொம்ப சாதுர்யமுள்ள நாரத ரிஷியும் அந்த நகரத்திற்குச் சென்றார். நகரவாசிகளும் அவரை வெகுவாக சம்மானித்தார்கள். குசல பிரஸ்னம் செய்தார்கள். எல்லா சமாசாரங்களேயும் கேட்டு அரசனுடைய கிருஹத்திற்கு நாரதர் வந்து சேர்ந்தார். ராஜாவும் அவரை வரவேற்று பூஜை முதலியவைகளேச் செய்து சிரமபரிகாரம் செய்துகொள்ளும்படி ஆஸனம் கொடுத்தார்.'' (729)

''பிறகு ராஜா தன் குமாரியை அழைத்து நமஸ்கரிக்கச் சொன்னர். ''ஹேமஹரிஷியே, தங்களுடைய ஹ்ருதயத்தில் எல்லா விஷயங்களும் தெரியும். இந்த பெண்ணின் குண தோஷங்களே எடுத்துச் சொல்லும்,'' என்று வேண்டினன் அரசன்.'' (730)

''அந்தப் பெண்ணின் அழகைக் கண்டு முனிக்கு வைராக்கியம் மறந்துவிட்டது. அடிக்கடி அந்தப் பெண்ணின் சோபையைத் தரும் அழகைப் பார்த்தார். அவளுடைய சுபமான லக்ஷணங்களேக் கண்டு சந்தோஷமடைந்தார். தன்னே மறந்து அனுபவித்து சந்தோஷமடைந்தார். ஆனல் அவர் தனது உணர்ச்சிகளே மறைத்துக்கொண்டு வெளிப்படுத்தாமல் சிறிது நேரம் மனத்திற்குள் வைத்துக்கொண்டு, அவர் ஒன்றும் பதில் பேசாமலிருந்தார்.'' (731)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, ஆஞ்சநேயா, உங்கள் நாமங்களேச் சொல்வதால் என் மனம் எவ்வளவு சந்தோஷமடைகிறது. ராமா, உன் கதையைக் கேட்டு சம்பாதிக்கு இறக்கைகள் முளேத்தன. உன் பாதுகைகளே தலேயில் வைத்துக்கொண்ட பரதன் தர்மத்தினின்று நழுவாமல் இருந்தான். ராமா, உன்னேத் தியானம் செய்வதால் சீதை தன் உயிரை தரித்திருந்தாள். இந்திரனும் அம்ருதத்தைக் கொடுத்து அவளே ஆஸ்வாசம் செய்தார். ஆஞ்சநேயர் உன் கதையையும், உன் ரூபகுண லக்ஷணங்களேயும் சொல்லி சீதையைத் தேற்றினர். ராமா, உன் பிராட்டியான சீதையின் கண் அழகும், கருணைவிலாஸமுமான திருஷ்டிகளும் என்னேக் காக்கட்டும். அம்பிகையின் குளிர்ந்த பார்வைகளினல் தேவதேவனும் மஹாத்மாவும்

ஹரியின் திருப்திக்காக ஆலகால விஷம் உண்டவர் நித்ய கீர்த்தியையும் நீலகண்டன் என்கிற பெயரையும் அடைந்தார். அதே க்ஷீராப்தியில் பத்மயோனியில் பகவானை நம்பினவளும் உலகங்களை ரமிக்கச் செய்பவளுமான லக்ஷ்மியும் ஆவிர்பவித்தாள். நான்கு திக்குக்களைப் பிரகாசிக்கச் செய்கிறவளும், மின்னலைப்போன்ற ஒளியை உடையவளும், சுதாமா என்ற பர்வதத்தில் ஒளி அடிக்கும் மின்னல் போலவும், தேவ அசுர கணங்களால் மதிமயக்கம் ஏற்படக் காரணமானவளும், நடை, காருண்யம், யௌவனம், நிறம், இவைகளால் சிறப்பிக்கப்பட்டவளும், பங்கஜத்தைத் தரித்தவளுமான லக்ஷ்மியை நான் நமஸ்கரிக்கிறேன். இந்திரன் அவளுக்கு சிறந்த சிம்மாஸனத்தைக் கொடுத்தான். மகரிஷிகள் ஸ்ரீஸூக்தங்களாலும் கங்கை ஜலத்தாலும் அபிஷேகம் செய்தார்கள். பூமிப் பிராட்டி சகலவிதமான ஸ்ரேஷ்டமான கந்தங்களைக் கொடுத்தாள். பசுக்கள் தங்கள் பொருள்களைக் கொடுத்தன. வசந்தருது மிக்க ருசியான பழங்களையும் புஷ்பங்களையும் கொடுத்தான். கந்தர்வர்கள் பாடி, அப்சரஸ்கள் நாட்டியம் செய்து ரமாவை சந்தோஷப்படுத்தினார்கள். மற்ற கணங்கள் மிருதங்க வாத்யங்களால் ஒலிபரப்பி, மங்கள கீதங்களைப் பாடினார்கள். திக்கஜங்கள் ஸ்ரீதேவியை சமுத்திர ஜலங்களால் ஸ்நானம் செய்வித்தார்கள். சமுத்திர ராஜன் அவளுக்கு அழகான இரண்டு வஸ்திரங்கள் கொடுத்தான். வைஜயந்தி என்கிற மாலையையும் கொடுத்தான். விஸ்வகர்மா நல்ல ஆபரணங்களை அளித்தான். சரஸ்வதி தேவி முத்துமாலையைக் கொடுத்தாள். பிரும்மா தாமரை புஷ்பம் கொடுத்தார். நாகங்கள் இரண்டு காது குண்டலங்களைக் கொடுத்தார்கள். தாமரை மலர்களை மாலையாக உடைய அந்த லக்ஷ்மி தேவி மிகுந்த சோபையுடன் நாராயணர் பக்கம் வந்து அவருடைய வக்ஷஸ்தலத்தில் நித்யவாஸமாக அமர்ந்தாள். அழகான ஸ்தனங்களை உடையவளும், சந்தனத்தால் பூசப்பட்டவளும், குங்குமப்பூ போன்ற நிறம் உள்ளவளும், நுண்ணிய இடை உள்ளவளும், பொன் சலங்கைகள் ஒலிக்கும்படி நடப்பவளும் தங்கரேகை போன்றவளும், பாரிஜாத கோடிபோல விளங்குபவளுமான மஹாலக்ஷ்மியை நான் வணங்குகிறேன். பரத்திற்கு பரமான பொருளும், காலத்தினால் அழிக்கப்படாதவரும், தனது என்கிற பற்றுதலை ஒழித்தவரும் நல்ல குணங்களால் சோபையுடன் விளங்குபவரும், தர்மத்தின்படி நடப்பவரும், ஸத்குணங்களின் சேர்க்கையுமான நாராயணரைத் தனக்குத் தகுந்த கண

வன் என்று தேர்ந்து எடுத்தாள். நாராயணப்ரியே, உன் அம்ருத மயமான திருஷ்டியையும் நாராயணருடைய கிருபையையும் எனக்கு அளி, உங்களை நான் நமஸ்கரித்து வேண்டுகிறேன்.]

நாரதர் அந்த சுபமான லக்ஷணங்களை தன் மனதில் ஆராய்ந்து இவளை மணந்து கொள்ளுபவன் அமரனுகவும், ரணபூமியில் ஜயிக்கப்படாதவனுகவுமிருப்பான். சீலநிதியாக விருக்கும் கன்னியையாகிற இவளுக்கு வரப்போகிற கணவன் சகல சராசரங்களுக்கும் அதிபதியாகவிருப்பான். (732)

ஸகலவிதமான சுபலக்ஷணங்கள் உள்ள அவளை தன் மனதில் வைத்துக்கொண்டு, பூபதியினிடம் செரன்னுர். "உன் குழந்தை அழகாகவிருக்கிருள். பாக்யமுள்ளவள்," என்று சொல்லிவிட்டுச் சென்ருர். ஆனுல் அவர் மனதில் வேறுவிதமான எண்ணம் ஓடியது. (733)

ஏதாவது உபாயம் செய்து இந்தப் பெண்ணை நாம் அடைய வேண்டும். இந்த சமயம் ஜபம், தவம் செய்து காலத்தைக் கடத்தக்கூடாது. "ஹே பிரும்மா, இந்த கன்யை எனக்கு எப்படி கிடைக்கும்?" (734)

"இந்த சமயம் மிக்க அழகான சரீரமும் பரம சோபையுடன் விளங்கும் ரூபமும் எனக்கு வேண்டும். இந்த ராஜகுமாரி என்னைப் பார்த்ததும் ஜயமாலையை என் கழுத்தில் போட வேண்டும்." (735)

"ஹரியினிடமிருந்து அழகான தேகத்தை நான் வாங்குகிறேன். அவரிடம் சென்றுவருவது மிக்க நேரத்தை ஆக்குமே, கால தாமதம் ஏற்படுமே. ஆனுல் ஹரியைவிட என்மீது அன்புள்ளவர் வேறு யாரும் இல்லை. ஆகையால் அவருடைய உதவியை நான் நாடுகிறேன்." (736)

அந்த சமயம் நாரதர் பகவானைப் பல விதங்களால் ஸ்தோத்திரம் செய்து அவருடைய கிருபையை வேண்டினுர். லீலைகளைச் செய்வதில் பிரியமுள்ள பகவான் நாரதர் முன்பு தோன்றினுர். ஸ்வாமியைப் பார்த்ததும், நாரதர் சந்தோஷத்தால் பூரித்துப் போய் தன் காரியம் நிறைவேறினதாகவே நினைத்தார். (737)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, உனக்கும் பிராம்மணர்களுக்கும் எவ்வளவு பெரிய ஸ்நேகம்? பிருகுவை உன் மனதில் தரித்தாய். வஸிஷ்டரை புரோகிதராக உன் பட்டாபிஷேக காரியத்திற்கு

நியமித்தாய். விஸ்வாமித்திரர் உனக்குக் கல்யாணம் சீதையுடன் பண்ணி வைத்தார். அத்ரிபகவான் அனுஸூயை இருவரும் உனக்கும் சீதைக்கும் அழகுபண்ணி, அதிதிகளாக உபசரித்து சந்தோஷித்தார்கள். யாக்ஞ்ய வல்கியர், சதானந்தர் உன் கல்யாணத்திற்கு பிரஹஸ்பதிகளாகவிருந்தார்கள். அகஸ்தியர் உனக்கு ஆதித்ய மந்திரோபதேசம் செய்தார். ஸப்தரிஷிகளும், நாரதரும் உன் சபைக்கு அடிக்கடி வந்தார்கள். ஜாபாலி நாஸ்திக வாதத்தை விட்டு, க்ஷத்திரிய ஜாதியில் பிறந்து தர்மத்தில் பற்றுதல் உள்ளவனாக உன்னை அறிந்தார். நீ ரிஷிகளுடைய ஆசீர்வாதங்களைப் பெறுவதற்கு தண்டகம் சென்றாய். பிராமண ஆசீர்வாதத்தின் பலத்தினாலும் எல்லா அரக்கர்களையும் ராவணனையும் கொல்லமுடிந்தது. தவத்தையும் மோக்ஷத்தையும் நம்பின மஹரிஷிகள் சாவித்திரி மந்திரம் மூலம் உன்னையே பெரும் தனமாகக் கருதி உன் பாத கமலங்களைப் பற்றினார்கள். ஹே, பிராம்மணபிரியா, தர்மங்களும் அஹிம்சையும் சீலம், தமம், தன்னடக்கம், கருணை, தயை, பிறர் கஷ்டங்களில் அநுதாபம், ஆபத்துக்களில் உதவி, சதா பிரும்ம ஸ்வரூப தியானம், பிறர்க்கு ஹிதம் செய்வது ஒன்றே பெரும் நோக்கமாக இருந்த பிராம்மணர்களிடம் ஏன் உனது மனமானது கவர்ச்சி அடையாது? நீ அவர்களின் தியானமாக விருப்பதால்தான் உன் அவதார ரஹஸ்யங்கள் வெளிப்படுகின்றன. உனது மகிமையும் தெரிய வருகிறது. அப்பேற்பட்ட சீல தர்மமுள்ள பிராம்மணர்களும் நீயும் உன் பிராட்டியான சீதையும் எனக்கு மங்கள ஆசிர்வாதங்கள் செய்யவேண்டும். உங்களை நான் மனப்பூர்வமாக நமஸ்கரிக்கிறேன்.]

நாரதரிஷி பகவானிடம் தன் விருப்பதைத் தெரிவித்து, அவருடைய கிருபையை வேண்டினார். அவருடைய சகாயத்தையும் வேண்டினார். "ஸ்வாமி, தாங்கள் கிருபை கூர்ந்து, உங்களுடைய உத்தமமான ரூபத்தைக் கொடும். எந்த விதமாக அந்த ராஜகன்னிகையை அடைவேனோ அதற்கு உமது உதவி வேண்டும்." (738)

"ஹே நாதா, எனக்கு அனுகூலமாக இரும். நான் உம்முடைய தாஸன். உம்முடைய அனுக்ரஹம் எனக்கு சீக்கிரம் வேண்டும். தம்முடைய மாயையின் பலம் மிக்க விசாலமானதும், பலமுள்ளதாகவும் கண்ட பகவான், தீனதயாளு, எல்லாவற்றையும் கேட்டும் நேரில் கண்டும் மனத்திற்குள் சிரித்துக் கொண்டு சொன்னார்." (739)

"ஹே நாரதரே, கேளும், எந்தப்பிரகாரம் உமக்கு ஹிதம் ஏற்படுமோ அதை நான் செய்வேன். என் வார்த்தைகள் அசத்தியமாக இருக்காது." (740)

"யோகீஸ்வரரான முனியே, ரோகத்தினுல் வியாகுலம் அடைந்த ரோகிக்கு எப்படி அபத்தியமானது விருத்தமாக இருக்குமோ, அந்தப் பிரகாரம் உம்முடைய ஹிதத்தை என் மனதில் தரித்துக்கொண்டு, உமக்கு நான் அருள் பண்ணுவேன்." என்று சொல்லிவிட்டு, பகவான் அந்தர்தியானம் அடைந்தார். (741)

பகவானுடைய மாயையில் வசப்பட்டு, நாரதர் மதிமயக்கம் அடைந்தார். பகவானுடைய வார்த்தைகளின் ரஹஸ்யத்தை அவர் அறியவில்லை. ரிஷிஸ்ரேஷ்டரான நாரதர் ஸ்வயம்வர மண்டபத்தை அடைந்தார். (742)

[தியானம்

ஹே ராமா, உனக்கும் பிராட்டிக்கும் காயத்திரிமந்திரமும் அதை சித்தி செய்த மஹாபுருஷர்களிடமும் எவ்வளவு அன்பு தெரியுமா? பிராம்மணர்கள் காயத்திரி மந்திரத்தின் மூலம் பிரும்ம நாட்டமுடையவர்களாக இருக்கிறபடியால் தேவர்களும் நீயும் பிராட்டியும் அவர்கள் வசமாகிறுர்கள். உன்னையே காயத்ரி ரூபமாகவும், மும்மூர்த்திகளாகவும் சொல்லுகிறுர்கள். உன்னையே ஆத்மா ராமனுகவும், தர்மத்தில் பற்றுதல் உள்ளவனுகவும், ஷாட்குண்ய பரிபூர்ணராகவும் சொல்லுகிறுர்கள். உன்னையே தயை உள்ளவனுகவும், சத்ய சங்கல்பனுகவும் சத்ய பராக்ரமனுகவும், ஸாவித்திரி தேவியாகவும் சொல்லுகிறுர்கள். ஆதித்ய குலத்தில் உதித்த ராகவா, உன் பாதமும் என் அம்மாவாகிய சீதையின் திருஷ்டியும் என் பாபவிமோசனமும் எப்போது ஏற்படும்? வாமதேவரிஷி பூர்வ ஞானமடைந்து பூமியில் அவதரிக்க மறுத்து, கர்ப்பத்திலேயே இந்திரனுடன் ஞான ஸம்வாதம் செய்து காயத்திரி மந்திரத்தின் பலத்தால் உன்னை வந்து அடைந்தார். விஸ்வாமித்திரர் ஸவிதா தேவதையை உபாஸித்துத்தான் பிரும்ம தேஜஸ் உள்ளவராய் வஸிஷ்டருடைய சாபத்திலிருந்து மீண்டு வந்தார். உஷக்காலத்திலும், மாத்யான்னிக வேளையிலும் சாயங்காலத்திலும் சந்தியா தேவியை உபாஸிப்பதாலும் காயத்ரி ஜபம் பூர்த்தி ஆகிறதல்லவா? பரமேஸ்வரியான காயத்ரி தேவி என்னை சதா காப்பாற்றட்டும். சித்த புருஷர்களும் ரக்ஷிக்கவேண்டும்.]

ராஜாக்கள் பலவிதமாக அலங்காரம் செய்து கொண்டு தங்கள் பரிவாரங்களுடன் ஆஸனங்களின்மீது உட்கார்ந்து கொண்டு இருந்தார்கள். நாரத முனிவரும் மனத்தில் சந்தோஷத்துடன் "என் ரூபம் ரொம்ப அழகாக விருக்கிறது. ஆதலால், அந்த ராஜாவினுடைய கன்னிகை மறந்தும்கூட இன்னொருவருக்கு மாலை இடமாட்டாள்" என்று எண்ணிய வண்ணமிருந்தார். (743)

பகவானுடைய கிருபைக்கு பாத்திரமான நாரதருக்கு, முனியினுடைய நன்மையை உத்தேசித்து பகவானால் குரூபமான (அழகில்லாத) உருவம் அந்த சமயத்தில் கொடுக்கப்பட்டது. அப்பேற்பட்ட கோரரூபத்தை யாவராலும் விவரித்துச் சொல்ல முடியாது. இந்த சரித்திரத்தை யாவராலும் அறியக்கூட முடியாது. எல்லோரும் நாரதரை நாரதராகவே தெரிந்து கொண்டு நமஸ்காரம் செய்தார்கள். (744)

அந்த இடத்தில் ருத்ரருடைய கணங்களைச் சேர்ந்த இருவர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு எல்லோருடைய தாரதம்யங்களும் தெரியும். அவர்கள் பிராம்மண வேஷம் தரித்துக்கொண்டு பகவானுடைய லீலைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் குதூகலமாகவிருந்தார்கள். (745)

நாரதர் தன் ரூபத்தை அபிமானத்துடன் தனக்குள் சிலாகித்துக்கொண்டு அந்த கூட்டத்தின் நடுவே உட்கார்ந்து கொண்டிருந்தார். அவருடைய சமீபத்தில் சிவனுடைய கணங்களைச் சேர்ந்த இருவர்கள் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். பிராம்மண வேஷத்தில் இருந்தபடியால் அவர்களை யாவரும் தெரிந்துகொள்ளவில்லை. (746)

நாரதருடைய காதுகளில் விழும்படி அவர்கள் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். "பகவான் இவருக்கு நல்ல அழகைக் கொடுத்திருக்கிறார். இவருடைய சோபையைக்கண்டு இந்த ராஜகுமாரி கட்டாயம் கவரப்படுவாள். ஹரியே சாக்ஷாத்தாக வந்தாற்போல இவரைப் பார்த்ததும் அந்த கன்னிகை தெரிந்து கொள்வாள்." (747)

நாரதருக்கு மோஹம் அதிகரித்தது. அவருடைய மதி மயக்கம் அடைந்தது. சிவனுடைய கணங்கள் பிரசன்னமடைந்து தங்களுக்குள் சந்தோஷமடைந்தார்கள். அவர்களுடைய கேலிப் பேச்சுகளைக் கேட்டும் நாரதருடைய புத்தி பிரமை அடைந்திருந்தபடியால் அவர்களுடைய பேச்சுக்களின் அர்த்தம் அவருக்கு விளங்கவில்லை. (748)

இப்பேற்பட்ட விசேஷமான சரித்திரத்தை யாரும் சரியாகத் தெரிந்துகொள்வதற்கு நியாயமில்லை. ராஜகுமாரி ஒருவள் மாத்திரம் அப்பேற்பட்ட நாரதருடைய ரூபத்தைக் கண்டாள்; அவரிடம் ஒரு குரங்கின் முகத்திற்கும் ரூபத்திற்கும் சமமான பயங்கரமான சரீரத்தையும் கண்டாள். அந்த கன்னிகைக்கு உடனே க்ரோதம் உண்டாயிற்று. (749)

ராஜகுமாரி தன் சகிகளுடன் ராஜஹம்ஸம் ஊர்ந்து செல்வது போல நடந்து சென்றுகொண்டிருந்தாள். தாமரைப் புஷ்பங்களின் ஜயமாலையைத் தன் கைகளில் தாங்கிக்கொண்டு, நடந்துபோய்க்கொண்டிருந்தாள். (750)

எந்த இடத்தில் நாரதர் கர்வத்துடன் தன் ரூப சௌந்தர்யத்தை தியானித்துக் கொண்டிருந்தாரோ, அந்த இடத்திற்கு மறந்தும்கூட அவள் செல்லவில்லை. நாரத முனியோ அடிக்கடி எழுந்துகொண்டு, கலவரப்பட்டவர் போலத் தோன்றினர். அவருடைய ஸ்திதியைக் கண்டு சிவகணங்கள் சிரித்துக் கொண்டார்கள். (751)

கிருபாளுவான பகவான் ஹரி ஒரு ராஜாவைப் போல வேஷத்தைத் தரித்துக்கொண்டு, அவ்விடத்திற்கு வந்திருந்தார். அரச குமாரி வெகு சந்தோஷத்துடன் அவருடைய கழுத்தில் ஜய மாலையைப் போட்டாள். லக்ஷ்மியின் நித்ய வாசஸ்தலமான ஸ்ரீ ஹரி பகவான் அந்தப் பெண்ணைக் கூட்டி அழைத்துக்கொண்டு போனர். ராஜாக்களின் கூட்டங்கள் பயத்தினால் நிராசையுடன் சென்றார்கள். (752)

மோஹத்தின் வசமடைந்த நாரதர் ராஜகுமாரி சென்று விட்டதை அறிந்து, மனம் தளர்ந்து, ஒரு பெரிய ரத்னம் கீழே விழுந்து தொலைந்து போனால் எவ்விதம் சங்கடப்படுவாரோ, அதுமாதிரி க்லேசமடைந்தார். அந்த சமயத்தில் சிவகணங்கள் அவரைப் பார்த்து "ஸ்வாமி, தங்கள் ரூபத்தை கண்ணாடியில் போய்ப் பாருங்கள்" என்று சொன்னார்கள். (753)

[தியானம்

ஹே ராமா, உன்னை எப்படி நான் புகழ்வது என்பது தெரிய வில்லை. உன்னால் நியமிக்கப்பட்ட தேவதைகளையும், நீ ஏற்படுத்திய தர்மங்களையும், உனக்கு என்றே பிரத்யேகமான ரூபங்களும், அவைகளின் கர்மாக்களும், அவைகள் ஒவ்வொரு கல்பத்திலும் உன் சங்கல்பத்தினால் நிர்ணயம் செய்யப்பட்ட சூக்ஷ்மங்களும், அனாதிகாலமாக வந்த ஆசாரங்களினால் பிரகா

சிக்கின்ற ரிஷிகளும், ரிஷிவாக்யங்களும், என் மனதை அபகரிக்கின்றன. என் பாபக்கூட்டங்கள் விலகி, காயத்ரி தேவியின் பிரசாதத்தால் நான் மனத் தேர்ச்சி அடைந்து, என் புத்தியைக் கடைந்து பார்த்தால், ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு தர்மத்தை சிலாகித்திருக்கிறுய். சுக்ராசார்யாரை நான் வணங்கி, வித்யை இல்லாதவனுக்கு வித்யை என்னும் அமிர்தம் போன்றதை எந்த ஆசார்யர் காதுகளில் பிழிகின்றனரோ அவரை தன் பிதாவாகவும் மாதாவாகவும் நாம் நினைக்கவேண்டும். அவருடைய உபகாரத்தை அறிந்திருப்பவன் அவருக்குத் தீங்கு செய்யான். எல்லாவற்றிலும் ஸத்யமான வித்யையைக் கொடுத்தவரும், நிதிகளைப் போன்ற வித்யைகளுக்கு நிதியுமானவரும் பூஜிக்கத்தகுந்த குருவை வித்யைகள், அடைந்த பின்பு பூஜிக்காமல் எவர்கள் இருக்கிறுர்களோ, அவர்கள் புகழ் அழிந்து பாபலோகங்களுக்குச் செல்லுவார்கள் என்று பிரஹஸ்பதியின் புத்ரனும், மிருத சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக் கொண்டவனுவான கச்சன் சொல்லியிருக்கிறுன். அது மாதிரி யயாதி என்ற ராஜ ரிஷி இந்திரனிடம் சம்பாஷித்த சமயம் அவனுல் பலதர்மங்கள் சொல்லப்பட்டன. அவைகளுள் தவம், தானம், இந்திரிய அடக்கம், மனத்தை ஜயித்தல், நாணம், (அகார்யத்தில் லஜ்ஜை, பிறர் புகழை தன் வலிமையினுல் அழிக்காமலிருத்தல்,) உள்ளும் புறமும் ஒத்திருத்தல், எல்லாப் பிராணிகளிடமும் தயை ஆகிய இந்த ஏழு குணங்களையே ஸ்வர்க்கலோகத்தின் பெரிய வாசல்கள் என்று பெரியோர்கள் சொல்லுவதாகச் சொன்னுன். தமோகுணம் விலகியும், ரஜோகுணத்தையும் அகற்றிய சாதுக்கள் ஸதா பிரும்மத்தையே நினைத்துக்கொண்டிருப்பார்கள். அந்த பரபிரும்மமும் பண்டிதன் என்று தன்னைப் பற்றி நினைத்திருப்பவனுக்கு பலனைத் தருவதில்லை. அக்னிஹோத்ரம், மௌனம் என்கிற இந்திரிய நிக்ரஹம், வேதமோதுதல், யாகம் ஆகிய கர்மங்கள் பாபபயத்தைப் போக்குகின்றன. இரட்டைகளான துக்கம், சந்தோஷங்களால் பாதிக்கப்படாதவனும், கௌரவம் அவமானம் இரண்டிலும் சமமாக விருப்பவனும், தர்மத்தில் ஸாதுக்களின் புத்தியை அனுசரிப்பவர்களும், மனத்தை வசப்படுத்தினவர்களும், மனம் செல்வதினுல் அடையப்பட்ட புராதன ஆதாரமான பிரும்மத்தை எவர்கள் அறிகின்றுர்களோ, அவர்கள் இந்த உலகத்தில் மேலான சாந்தியையும் சரீரத்தை விட்ட பின்பு அந்த பிரும்மத்துடன் சேர்ந்து மோக்ஷ சுகத்தையும் அடைகிறுர்கள் என்று

யயாதி அஷ்டகன் என்கிற ராஜரிஷியிடம் சொன்னுராமே. அப்பேற்பட்ட தர்மங்கள் என்னைக் காப்பாற்றட்டும்.]

இவ்வாறு நாரத பகவானிடம் சொல்லிவிட்டு பயத்தினுல் சிவகணங்கள் ஓடிவிட்டார்கள். முனியும் ஜலத்தில் தன் முகத்தைப் பார்த்தார். தன்னுடைய கோரமான ரூபத்தைக் கண்டு, க்ரோதத்தினுல் ஆக்ரமிக்கப்பட்டு அந்த சிவகணங் களுக்குக் கொடுமையான சாபத்தை அளித்தார். (754)

"நீங்கள் இருவர்களும் கபடசித்தம் படைத்தவர்கள். பாபாத்மாக்கள். ராக்ஷஸர்களாக ஸம்பவியுங்கள். என்னைப் பார்த்து ஏளனம் செய்ததின் பலனை நன்ருக அனுபவியுங்கள். இதன் பிறகு எந்த முனியையும் ஏளனம் செய்யமாட்டீர்கள்." (755)

பிறகு முனிவர் தன் ரூபத்தை மீண்டும் ஜலத்தில் பார்த்தார். இப்போது அவருடைய நிஜரூபமானது மீண்டும் அடையப் பட்டது. அவ்விதமிருந்தபோதிலும் அவருடைய மனம் சந் தோஷத்தை அடையவில்லை. அதிகோபத்தினுல் வெப்பமடைந்த மனத்துடன் அவர் சீக்கிரமாக கமலாபதியான நாராயணரிடம் சென்ருர். (756)

அவர் மனத்திற்குள் சிந்தித்துக் கொண்டு சென்ருர், "பகவானுக்கு நான் சாபம் கொடுப்பேன், அல்லது பிராணனை விடுவேன். என்னை இந்த ஜகத்தில் எல்லோரும் ஏளனம் செய்யும்படி பண்ணிவிட்டார்." இவ்விதம் எண்ணிக் கொண்டு போகும்போது தைத்ய சத்ருவான ஹரிபகவான் நாரதரை வழியில் சந்தித்தார். அவருடன்கூட லக்ஷ்மி தேவியும் அந்த ராஜகுமாரியும் இருந்தார்கள். (757)

தேவதைகளின் ஸ்வாமியான பகவான் மதுரமான வசனங் களைச் சொல்ல ஆரம்பித்தார். "ஹே, முனீஸ்வரரே, வியாகுலத் துடன் எங்கு செல்கிறீர்?" இந்த சப்தங்களைக் கேட்டு நாரத ருக்கு கோபம் இன்னும் அதிகரித்தது. மாயையின் வசமடைந்த ரிஷி தன் மனத்தை கட்டுப்படுத்தவில்லை. (758)

[தியானம்

ஹே ராமா, உன் நினைவுதான் எனக்கு சதா யேற்படுகிறது. உன்னை ஸர்வ அந்தர்யாமி என்றும், குணங்களுக்கு அப்பால் இருப்பவன் என்றும் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், நீளம், அகலம், பரி மாணம், உயரம், என்று பலவிதவாக சொல்லப்பட்டும் உன்னைப் புரிந்து கொள்வது கடினம் என்று சொல்லுகிருர்கள். அப்படிப்

பட்ட உன்னை நான் எவ்விதம் சரியாக தெரிந்து கொள்ள முடியும் ? என் குருநாதரான பராசரர் தண்ணீர் மேலான இடத்தி லிருந்து தாழ்வான இடத்திற்கு வருவதுபோல ஸகல ஸம்பத்துக் களும் நல்ல பாத்திரத்திற்கு வரும் என்று சொல்லியிருக்கிறுர். அவ்வளவு குணரஹிதனுகயிருக்கும் எனக்கு உன்னைப்போன்ற குணமுள்ள சத் பாத்திரத்திற்கும் தான் எவ்வளவு சிநேகிதம் ? அதுவும் உன் கிருபையால்தான் அந்த ஸ்நேகம் அடையமுடியும். யத்ருச்சையாக நடக்கும் உன் லீலை விநோதங்களை யாரால்தான் விவரிக்கமுடியும் ? அதுவும் உன் சங்கல்பம்தானே. உன் மகத்வம் எவ்வளவு பெரியது. உன்னை நம்பினவர்களுக்கு எவ்வளவு சுலப மாக உன் கிருபை கிடைக்கிறது என்று துருவன் போன்ற மஹாத்மாக்களின் சரித்திரத்தால் தெரிய வருகிறது. மஹத்தான புண்யமும் ஒரு காரணமாக விருந்தால், அதுவும் உன்னைப் புரிந்துகொண்டு ஆராதனை செய்வதாலும் சுலபமாக கிடைக் கிறது. ஆஞ்சநேயர் உன்னை நினைத்துத்தானே உன் காரியத்தை யும் செய்து மஹத்தான கீர்த்தியைப் பெற்றுர். அர்ஜுனனும் அவ்விதமாகவே உனக்கு உடந்தையாக விருந்தான். ஸநாதன மான தர்மமே, உன்னையும் உன் கிருபையையும் நான் எப்படி அடைவேன் ? பரமாத்மா, சகலருக்கும் நீர் பெரிய வஸ்து என்று நம்பி உன்னையே சரணம் புகுந்தேன். பராசரர், வேதவியாஸர், வஸிஷ்டர், விஸ்வாமித்ரர் காஸ்யபர், அகஸ்தியர், வால்மீகி, நாரதர், தியாகராஜர் அவர்களே எனக்கு சாக்ஷிகள். சூரியனும், சந்திரனும், இந்திரனும், யமனும், குபேரனும், ஆஞ்சநேயரின் பிதாவான வாயு பகவானும் சொல்லுவார்கள். இந்திராணி, லோபாமுத்ரை, அதிதி, ஸ்வாஹா, ஸ்வதா, தாம்ரணை, ருத்தி, கௌரி, அஞ்சனு தேவி என்ற புகழ்பெற்ற அப்சரஸ், அருந்ததி, சபரி இவர்களும் எனக்காகச் சொல்லுவார்கள். உங்களால் நான் பூர்ணமாக ஆசீர்வதிக்கப்படவேண்டும்]

முனியான நாரதர் பகவானைப் பார்த்து சொல்ல ஆரம் பித்தார். ''ஐயா, நீர் பிறருடைய அபிவிருத்தியையும் சம்பத்தை யும் காண சகிக்கமாட்டீர். உம்முடைய இச்சை ரொம்ப குடில மாகவும், கபடு வாய்ந்ததாகவுமிருக்கிறது. சமுத்ரமதனம் செய்யும்போது நீர் சங்கரரை விஷம் சாப்பிடும்படி நியமித்து அவரை ஏமாற்றினீர். அவர் வைராக்யமடையக் காரணமாக இருந்தீர். தேவதைகளை தூண்டிவிட்டு அவரை விஷத்தைப் பானம் செய்யச் சொன்னீர். அதை நான் எப்படி மறப்பேன் ?'' (759)

"அசுரர்களைக் கள்ளைச் சாப்பிடும்படியும், சங்கரருக்கு விஷத்தைக் கொடுத்தும், அழகான தேவியையும், கௌஸ்துப மணியையும் தாங்கள் எடுத்துக் கொண்டீர். நீர் ஸ்வார்த்த எண்ணமுள்ளவராக உமது சங்கல்பத்தை நிறைவேற்றுகிறீர். உம்முடைய நடத்தை, வியவஹாராம் குடிலமாகவும் கபடமாகவு மிருக்கிறது. (நீர் ஸர்வஸ்வதந்திரரானபடியால், நீர் ரொம்பவும் மதம் பிடித்தவர்; தனது அபிப்ராயத்தை நிறைவேற்றும் பிடிவா தத்தை உடையவர். உமக்கு மேலானவர் யாருமில்லை.) நீர்தான் ஸர்வஸ்வாமி. பலமானவர்களை பலஹீனர்களாகவும் பலஹீனர் களை பலவான்களாகவும், நல்லதைக் கெட்ட பொருளாகவும், கெட்டதை நல்ல வஸ்துவாகவும் மாற்றும் சாமர்த்தியம் உமக்கு யிருக்கிறது. இதனால் யேற்படும் தாபங்கள், உணர்ச்சிகள் உம் மிடம் இல்லை. உமக்கு ஹ்ருதயத்தில் வருத்தமோ, துக்கமோ, கொஞ்சம்கூட கிடையாது." (760)

"நீர் ஒவ்வொருவரையும் ஏமாற்றி அவரவர்களின் குண தோஷங்களைப் புரிந்து கொண்டிருக்கின்றீர். உமக்கு யாரிடமும் பயம் கிடையாது. வெட்கமும் இல்லை. இது உமக்கே வேடிக்கை யாக விருக்கிறது. அந்த விவகாரங்களிலும் உத்ஸாஹமும் அதிகம் உண்டு. சுபம் அசுபமான கார்யங்களில் உமக்கு வருத்தம் இல்லை. உம்மைத் தண்டிப்பவர் யாரும் இல்லை." (761)

"நீரோ அழகான வீடு ஏற்படுத்திக் கொண்டீர். உமக்கு வேண்டியவரான ஒருவரை அவமானப்படுத்தியதற்கு, அதற்கு தகுந்த பலனை நீர் அடைந்து தீரவேண்டும். எந்த சரீரத்தை என்னைத் தாரணம் செய்யப் பண்ணி அவமானப்படுத்தினீரோ, நீர் அந்த மானிட சரீரத்தை எடுத்துக்கொண்டு நான் அவஸ் தைப்பட்ட மாதிரி சங்கடப்படவேண்டும். இது என்னுடைய சாபம்." (762)

"நீர் என்னைக் குரங்கின் சரீரத்தை எடுத்துக் கொள்ளச் செய்து அவமானப்படுத்தினீர் அல்லவா? அதே குரங்குகள் உமக்கு சகாயம் செய்யட்டும். மீண்டும் எனக்கு அபகாரம் செய்பவராக, நான் எந்த ஸ்திரியை விரும்பினேனோ அவளை என்னிடமிருந்து நீர் பிரித்தீர். அது மாதிரி நீரும் உம்முடைய ஸ்திரியினிடமிருந்து பிரிந்து, அந்த விரஹதாபத்தினால் சகிக்க வொண்ணாத துக்கத்தை அடையக் கடவீர்." (763)

[தியானம்

ஹே ராமா, தயாளு, தர்மத்திற்காகவும், அஹிம்சையை நடத்துவதற்காகவும், பரதார கமனத்தின் கெடுதல்களைக் காண்

ப்பிப்பதற்காகவும், சத்ய வசனங்களை சொல்வதும் செயல் முறையில் நடத்திக் காண்பிப்பதற்காகவும், சக்ரவர்த்தி திருக்குமாரனாக நீர் அவதரித்து, ரிஷிகளைக் காப்பாற்றினீர். க்ஷத்திரியகுல அரசனாக இருந்தபடியால் க்ஷத்திரியகுல தர்மங்களையும் அனுஷ்டித்து, அபராதம் செய்தவர்களிடமும் கருணையைக் காட்டி, தன்னையும் தான் செய்யும் கர்மங்களை தர்மங்களின் அனுசரணையாகச் செய்தும், அப்பேற்பட்ட தர்மங்களால் ஏற்படும் சுகங்களையும் துக்கங்களையும் நீர் அனுபவித்தீர். நீர் செய்த தர்ம அனுஷ்டானத்திற்காக மிக்கப் பிரியையான சீதையையும் பரித்யாகம் செய்தீர். உமது தர்மசங்கல்பத்தின் காரணமாக ராக்ஷஸர்களிடமிருந்து ரிஷிகளைக் காப்பாற்றுவது என்கிற தர்ம பரிபாலனத்திற்காக உமது பிராணனையும் விடுவேன் என்று சீதையின் முன்பு பிரமாணம் செய்தீர். அப்பேற்பட்ட முன்னே வில்லும் அம்பு சகிதமாகச் செல்லும் ராமா, சீதை மத்தியிலும் தனுஷ்பாணியான லக்ஷ்மணன் பின்னேயும் போன ராம சீதா லக்ஷ்மணர்களை நான் நமஸ்கரிக்கிறேன், சுதீக்ஷ்ணர், சரபங்கர் ஆகிய முனிவர்களை அனுக்ரஹித்த ராம சீதாலக்ஷ்மண மஹாத்மாக்களை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே ராமா, சீதா, லக்ஷ்மணா, உங்கள் ரக்ஷணையில் இருக்கும் நானும் தர்ம சீலனாகவும் சத்ய சங்கல்பனாகவும் அஹிம்சையுடனும் இருப்பேனாக.]

நாரத ரிஷியினால் கொடுக்கப்பட்ட சாபத்தை பகவான் தன் தலைமீது ஏற்றுக்கொண்டார். பிரபுவான ஹரிபகவான்-நாரதரை வெகுவாக நமஸ்கரித்துவிட்டு, கிருபாளுவான ஹரி தன் பிரபலமான மாயையைத் திருப்பி அழைத்துக் கொண்டார். (764)

எந்த சமயம் மாயை விலகினதோ, அந்த சமயம் லக்ஷ்மியும் இல்லை. ராஜகுமாரியுமில்லை. முனீஸ்வரர் அத்யந்த பயத்துடன் ஸ்ரீ ஹரியினுடைய பாத கமலங்களைப் பிடித்துக் கொண்டார். அவர் பூர்ணமான மனத்துடன் "சரணமடைந்தவர்களின் துக்கங்களைப் போக்கும் சஞ்சீவினி, பிரணதார்த்தி ஹரரே, என்னை ரக்ஷியும்." (765)

"ஹே கிருபாளு, என்னுடைய சாபம் பொய்யாக இருக்கட்டும்," என்றும் மீண்டும் மீண்டும் பிரமாணம் செய்தார். தீனர்களிடம் தயை காட்டுபவரான பகவான் "ஸ்வாமி, இது என்னுடைய சங்கல்பம்" என்று சொன்னார். முனீஸ்வரர் மீண்டும் சொன்னார். "ஸ்வாமி, நான் தங்களை தகாதபடி கடூரமான வசனங்கள் அநேகம் சொல்லிவிட்டேன். என் பாபங்கள் எவ்விதம் நாசமடையும்?" (766)

  

பகவான் சொன்னர்—"சங்கரருடைய சத (நூறு) நாமாக்களை ஜபம் செய்து ஹ்ருதயத்தில் சாந்தியை அடைவித்துக் கொள்ளும். சிவனுக்குச் சமமான பிரிய புருஷன் எனக்கு உலகத்தில் யாரும் இல்லை. இந்த நம்பிக்கையை மறந்து அவரை ஒருக்காலும் மறந்துவிடாதீர்." (767)

"ஹே முனி, திரிபுராரியான சிவன் எவனுக்கு அனுக்ரஹம் செய்யவில்லையோ, அவனுக்கு என்மீது பக்தி உண்டாகாது. உம்முடைய ஹ்ருதயத்தில் இப்பேற்பட்ட நிச்சயத்தை உண்டு பண்ணிக்கொண்டு பூமியில் சஞ்சரியும். இப்போது என் மாயை உம்மிடமிருந்து விலகிப்போய், நீர் சாந்தியுடன் இருப்பீர்." (768)

[தியானம்

ஹே ராமா, நாரத பகவானுக்கு உன்னுடைய குணங்களின் விசேஷ பெருமைகள் எல்லாம் பூர்ணமாகத் தெரிந்திருந்தும், அவரையும் உன் மாயையில் சிக்க வைத்து வேடிக்கை பார்த்தீர். அதுவும் உன் சங்கல்பத்தின் காரணமாகவேதான். நீர் பூமியில் அவதரித்து, மஹரிஷிகளையும் சாதுக்களையும் ரக்ஷித்து, தர்மத்தை அனுஷ்டானம் செய்யும் வியாஜத்தால் மரியாதை புருஷனாக விளங்கினீர். அந்த காரியங்களுக்கு ஒரு முனீஸ்வரருடைய தவ வலிமையும் வேண்டும் என்பதற்காக நாரத பகவானை வியாஜமாக வைத்து, அவருக்கு மட்டற்ற கீர்த்தியையும் சாதுக்களின் நன்றியையும் பகுமானமாகக் கொடுத்தீர். ஐயா, உன் திருவிளையாடல்களுக்கு சிவனும், உன்பட்ட மஹிஷியான சீதையும் காரணமானர்கள். அடே அப்பா, உன் மாயையின் விசேஷமும் ஒரு பெரிய சங்கல்பத்திற்கு உதவுகிறதல்லவா? அப்பேற்பட்ட மிகப் புகழ் வாய்ந்த நாரதபகவான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.]

அநேகவிதமாக பகவான் நாரத முனியை ஆஸ்வாசப் படுத்தினர். பிறகு அவர் அந்தர் தியான மடைந்தார். நாரத மஹரிஷி மிக்க சாந்த மடைந்து ராமச்சந்திரனுடைய குணங்களை கானம் பண்ணினர். சத்ய லோகத்திற்குச் சென்ருர். (769)

சிவனுடைய கணங்கள் முனியினுடைய மோஹ ரஹிதமான மனத்தையும் அவருடைய சந்தோஷத்தையும் பார்த்துவிட்டு, வழியில் அவரையும் சந்தித்து, மிக்க பயத்துடன் தீனமான வசனங்களால் அவரை ஸ்துதி செய்து அவருடைய சரண கமலங்களைப் பிடித்துக் கொண்டார்கள். (770)

"ஹே முனி ராஜரே, நாங்கள் பிராம்மணர்கள் இல்லை. சிவபெருமானுடைய கணங்களைச் சேர்ந்தவர்கள். எங்களால் உமக்கு பெருத்த அபகாரம் செய்யப்பட்டு விட்டது. அதனுடைய பலனை நாங்கள் அனுபவித்து விட்டோம். ஹே க்ருபாளு, நீங்கள் மிக்க அனுக்ரஹத்துடன் எங்கள் மீது இட்ட சாபங்களை போக்கவேண்டும்.'' தீனர்களிடம் மிக்க தயை காட்டும் நாரத பகவான் சொன்னார். (771)

"நீங்கள் இருவர்களும் ராக்ஷஸர்களாக மாறுங்கள். உங்களுக்கு மிக்கச் சிறந்த ஐஸ்வர்யங்கள், தேஜஸ், பலம் எல்லாம் நேரிடட்டும். நீங்கள் இருவரும் உங்கள் பலத்தினால் எல்லா உலகங்களையும் ஜயிப்பீர்கள். அந்த சமயம் பகவான் விஷ்ணு மனுஷ்ய அவதாரம் எடுத்து உலகத்திற்கு வருவார்.'' (772)

"யுத்தத்தில் ஸ்ரீ ஹரியினுடைய அழகான புஜங்களால் உங்களுக்கு மரணம் ஏற்படும். நீங்கள் இருவர்களும் முக்தர் களாக மாறுவீர்கள். அப்புறம் உங்களுக்கு சம்சாரத்தில் பிறப்பே கிடையாது.'' அவர்கள் இருவர்களும் முனிவருடைய பாத கமலங்களில் நமஸ்காரம் செய்து, நல்ல சமயத்தில் ராக்ஷஸர் களாக மாறினார்கள். (773)

தேவதைகளைச் சந்தோஷிக்கச் செய்பவரும், ஸாது ஜனங் களுக்கு சுகத்தை அளிப்பவருமான பகவான் ஒரு கல்பத்தில் இந்தக் காரண வியாஜத்தால் மனுஷ்ய சரீரம் எடுத்து அவதாரம் செய்தார். (774)

[தியானம்

ஹே ராமா, உன் பிரியமான மஹிஷி சீதையுடனும் உன் தம்பி லக்ஷ்மி வர்த்தனனாகிய லக்ஷ்மணனுடனும் நீ காட்டுக்குச் சென்றாயே. அதில் எவ்வளவு தர்மங்கள் அடங்கி யிருக்கின்றன. பிதா முக்கியம், தாயும் மாற்றாந் தாயாக விருந்தாலும், அவளும் முக்கியம் என்று நினைத்து அவர்களின் வசனங்களை சத்யமாக ஆக்குவதற்கு வனம் சென்றாய். மாதா பித்ருக்களே தெய்வம். ஸுநீதி வசனத்தைக் கேட்டு துருவன் மேன்மை அடைந்தான். பரசுராமர் தன் தகப்பனாரான ஜமதக்னி யின் பேச்சைக் கேட்டு மகிமை அடைந்தார். பீஷ்மர் தன் பிதாவுக்காக ஊர்த்தவரேதஸானார். பகவானால் கொடுக்கப்பட்ட அழியாத புகழை அடைந்தார். எவ்வளவு விக்னங்கள் வந்த போதிலும் அவர்கள் மாதா பித்ரு வார்த்தைகளுக்கு அடங்கின

வர்களானபடியால் சகல விதமான க்ஷேமங்களை எல்லோரும் அடைந்தார்கள். கிருஷ்ணர் சம்புவினிடம் வரம் கேட்டபோது மாதா பித்ருக்களுடைய அனுக்ரஹம் வேண்டும் என்று வரமாகக் கேட்டார். கிருஷ்ணர், வசுதேவர், தேவகியைக் கம்சனிட மிருந்து விடுவித்தார். ஆகையால்தான் சுக்ராசாரியார் அசுர சிஷ்யர்களைப் பார்த்து "சிஷ்யர்களே, மாதாபித்ரு சிஶ்ரூஷை யைச் செய்யுங்கள். அதனால் உன்னதமான கீர்த்தியையும் ஆயுளையும் ஸ்தான பிரம்சம் இல்லாத உயர்ந்த பதவிகளையும் அடைவீர்கள்" என்று சொன்னார். தர்மவியாதன் கௌசிக ருக்குப் போதித்தது மாதிரி, தாய் தந்தையர்களே பரம தெய்வங் கள். அவர்களின் வசனங்களில் அடங்கவேண்டும் என்கிற உண்மையைக் காட்டின ஸ்ரீ ராமச்சந்திரா, எனக்கும் தாய் தந்தையர்களின் அனுக்ரஹம் பண்ணவேண்டும்.]

"இந்த பிரகாரம் ஹரிபகவானுடைய சுந்தரமானதும் அழகானதும் மேன்மையான அவதாரமானது பூமியில் எடுக்கப் பட்டது. ஒவ்வொரு கல்பத்திலும் பிரபு ஏதாவது காரணத்தைக் கொண்டு அவதாரம் செய்கிறார். ஒவ்வொரு விதத்திலும் அந்த அவதாரங்கள் மேன்மையுடன் விளங்கும்." (775)

"பரம பாகவதர்களான முனீஸ்வரர்கள் பவித்திரமான காவ்ய ரஸங்களுடன் பரம புனிதமான பகவானுடைய பிரதாபங்களைக் கீர்த்தனம் பண்ணுகிறார்கள். ஒவ்வொரு தடவையிலும் ருசிகர மான விசேஷ அனுபவங்களை அனுபவிக்கிறார்கள். அவை களைக் கேட்டு ஆசாரஸ்ரேஷ்டர்கள் ஆச்சர்யமடைகிறார் களில்லை." (776)

"ஸ்ரீ ஹரியினுடைய கதைகள் அனந்தமானவை. அவை களின் மகிமைகளும் அனந்தமானவை. சாதுஜனங்கள் கேட் டும், சொல்லியும், சொல்லவைத்தும் மகிழ்கிறார்கள். ஸ்ரீ ராமச் சந்திரனுடைய சுந்தரமான கீர்த்திகளடங்கிய சரித்திரங்கள் கணக்கில்லாத கோடி கோடியான கல்பங்களில் கீர்த்தனம் பண்ணப்படுகின்றன. அவ்விதம் பாடியும், ஒருவரும் முடிவு பெறுகிறார் இல்லை." (777)

பகவானாகிய சம்பு பவானியிடம் சொன்னார். "ஹே பவானி, ஞானிகளும் முனீஸ்வரர்களும் ஸ்ரீ ஹரியினுடைய மாயைகளால் மோஹித்துப் போகிறார்கள். லீலைகளைச் செய்பவ ரான பகவான் சரணாகதர்களை கட்டாயம் ரக்ஷிப்பார். அவரைச் சேவை செய்வது மிக்க சுலபம். அவர் சகல துக்கங்களையும் போக்கும் கருணைக்கடல்." (778)

"சுரர்கள், மனிதர்கள், முனீஸ்வரர்கள், இவர்களில் பகவானுடைய மோஹத்தால் தாக்கப்படாதவர்கள் யாரும் இல்லை. இதை மனதில் தரித்துக்கொண்டு பகவானுடைய சகாயத்தைக் கோறி ஸ்ரீ பகவானை சதா பஜிக்கவேண்டும். மஹாமாயையிலிருந்து மனத்தைக் காப்பாற்ற வேண்டும். அவரையே வேண்ட வேண்டும். (அவருடைய செல்வத்தை வேண்டக் கூடாது. தன்னையே பகவானிடம் அர்ப்பித்துக்கொள்ள வேண்டும்.) [தன் காரியங்களை அவருக்காகவும், அவர் பிரீதிக்காகவும் செய்யவேண்டும். நாராயணரின் திருப்தியே மனத்தின் குறிக்கோளாக விருக்க வேண்டும். அந்த யக்ஞபதியை நினைத்து, தன்னையே ஸமர்பித்துக்கொள்ள வேண்டும்.] (779)

[தியானம்

ஹே ராமா, உன்னை தர்மாத்மா என்று எல்லோரும் புகழ்கிறார்கள். ஏன் தெரியுமா? உன்னுடைய கோதண்டத்தினால் ஏற்படும் பயமும் அஸ்திரபலமும பாஹுபலமும் மூன்று லோகங்களையும் வெல்லக் கூடியது. ராஜ்யத்திலிருந்து விலக்கப்பட்டவனாகி, வனத்தில் நீ உன் பிரியையான சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் சஞ்சரிக்கும்போது, உனக்குத் தர்மத்தை போதித்த மஹாலக்ஷ்மியின் அவதாரமான சீதையைக் காணுமல் மூன்று உலகங்களையும், ஸர்வபூதங்களையும், கோபத்திற்கும் க்ரோதத்திற்கும் மோஹத்திற்கும் வசப்பட்டு, நீ சபிக்க நினைத்து மஹா அஸ்திரங்களைப் பூட்டி பிரளய காலத்தில் தோன்றும் ருத்ரர் விளங்குவதுபோல இருந்தாய். அந்த சமயம் ஆதிசேஷ அவதாரமாகிய லக்ஷ்மணனால் நீ தடுக்கப்பட்டாய். நஹுஷ புத்திரனை யயாதியைப் போலவும், வஸிஷ்டர் தன் நூறு புத்ரர்கள் நாசமடைந்த சமயம் தன் கோபத்தை அடக்கினது போலவும், ஒருவன் தப்பு செய்ததற்கு ஸர்வ பூதங்களையும் நாசம் செய்வது அதர்மம் என்று சொன்னதின் பேரில், நீ உன் க்ரோதத்தை அடக்கி தர்மத்தை நிலை நாட்டினாய். சந்திரனிடம் லக்ஷ்மியும், சூரியனிடம் ஒளியும் (பிரபையும்) வாயுவினிடத்தில் கதியும், பூமியினிடத்தில் பொறுமையும் இருப்பது போல, மஹாபலவானாகிற உம்மிடத்தில் கருணையும் பொறுமையும் சேர்ந்து, ஆஸ்திகர்களுக்கு உன்னால் அனுஷ்டிக்கப்பட்ட அஹிம்சா பரமதர்மம், உன்னை ஆஸ்ரயித்தவர்களுக்கு உன் பாதங்களை அளித்து சரணம் செய்வதற்கு உபகாரமாயிருந்த உன் தர்மம் ஸர்வ பூதங்களுக்கும் எவ்விதம் பயன்படுகிறது? அதனால்தானே

சரணுகதவத்ஸலன் என்ற அழியாத புகழை சீதையினிட மிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் நீ பெற்ருய். ஹே கோதண்ட ராமா, உன் கோபம் என்மீது நீங்கி, நீ என் அபசாரங்களைப் பொறுத்து, சதா என்னை ரக்ஷிக்க வேண்டும்.]

"ஹே கிரிராஜ குமாரி, பகவானுன ராமச்சந்திரனுக்கு இந்த பூமியில் அவதாரம் செய்ய இன்னெரு காரணமும் கேள். அதுவும் விசித்திரமானபடியால் விஸ்தாரமாகச் சொல்கிறேன். எந்தக் காரணத்தால் ஜன்மரஹிதரான மஹாபிரபு நிர்குணர் என்று சொல்லப்படுபவரும், ஸச்சிதானந்த மயமானவரும், அரூபராக இருக்கும் பரபிரும்மம் அயோத்யாபுரியில் ராஜாவாக அவதரித்தார் என்பதையும் சொல்லுகிறேன். கேளு." (780)

"தன் பிரிய நாயகியாகிற சீதையைத் தேடுவதில் மிக்க துக்கத்தை அடைந்தவரும், லக்ஷ்மணனுடன் கூடத்தாபத்தை அடைந்து வனங்களில் கரிமேனிவாட அலைந்து திரிந்தவரும், முனிவேஷத்தைத் தரித்தவருமான எந்த ஸ்ரீ ராமனை, ஹே பவானி, உனது முன்பிறப்பில் நீ வழியில் கண்டாயோ, அந்த ஸதியின் தேகத்தைப் பிற்பாடு விநியோகம் பண்ணி, வைராக்கியத்தை அடைந்தாயோ," (781)

"இன்னமும் கூட அந்த அவிவேகத்தின் சாயை கொஞ்சம் உன்மீது படர்ந்திருக்கிறது என்று நினைக்கிறேன். பிரமை என்கிற நோயைப் போக்கும் சரித்திரத்தைச் சொல்லுகிறேன், கேளு. அந்த அவதாரத்தில் பிரபு என்ன என்ன லீலைகள் செய்தாரோ, அவைகள் எல்லாவற்றையும் என் புத்திக்கு எட்டின வரை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன், கேளு." (782)

## யாக்ஞவல்கியர் பரத்வாஜர் ஸம்வாதம்

யாக்ஞயவல்கியர் பரத்வாஜரைப் பார்த்துச் சொல்லுகிருர். "ஹே பரத்வாஜ், சங்கரருடைய வசனங்களைக் கேட்டு மஹா பாக்கியவதியான பார்வதி சிரித்துக்கொண்டு, பிரேமை ஸஹிதமாக ஆர்வத்துடன் கேட்க ஆரம்பித்தாள். விருஷபம் என்கிற தர்மத்தை தனது கொடியாகக்கொண்ட சங்கரர், உமைக்குச் சொன்னுரே, எந்தக் காரணத்தால் ராமர் அவதரித்தாரோ, அந்தக் காரணத்தையும் சொல்லுகிறேன்." (783)

"முனீஸ்வரரான பரத்வாஜரே, எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுகிறேன், கேளும். மனத்தை ஒருமைப்படுத்திக்கொண்டு [பவானி கேட்ட மாதிரி] கேளும். ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கதை கலியுகத்தின் பாபங்களைப் போக்கக்கூடிய ஸஞ்சீவினி,

கல்யாணங்களைச் செய்யும் கல்பதரு. பாரிஜாதம் போல மிக்க அழகானது.'' (784)

[தியானம்

ஹே ராமா, உன்னை ரணபண்டிதன் என்றும், சத்யவிக்ரமன் என்றும் பெரிய ராஜசிம்மத்தின் பலம் போன்றவன் என்றும், சொல்லுகிறார்கள். உனக்கு யேற்பட்டிருக்கும் சத்யபராக்ரமன் என்கிற பட்டப் பெயர் உன்னுடைய வீரத்தை மாத்திரம் சொல்லுகிற அடைமொழி இல்லை. உன் வீரத்தை உன் சத்ருக்கள் கூட புகழ்கிறார்கள். வாஸ்தவம் தான். ஆனால் உன் கருணை உன் வீரத்தையும் அதிக்ரமித்திருக்கிறபடியால் தான் உனக்கு அந்த பெயர் வந்தது என்று நினைக்கவேண்டியிருக்கிறது. வாலி வதத்திற்கு பிறகு நீ அங்கதனிடம் காட்டிய அன்பும், சுக்ரீவனிடம் காட்டிய கோபமும், பிராம்மண தேவசத்ருக்களான ராவண கும்பகர்ணனை வதம்செய்த பிறகு கடுமையாக விபீஷணனிடம் சொல்லிய வார்த்தைகளும் என் ஞாபகத்திற்கு வருகின்றன. தாரையும் மந்தோதரியும் உன்னை மிகப் புகழ் பெற்ற வசனங்களால் துதித்தார்கள். இவைகளை எதற்காக சொல்லுகிறேன் என்றால், நாரதர் உன்னை சபித்து விட்டு வெல்லப் பாகாகவும், வெண்ணெய் போலவும் உருகியிருப்பார். பரம பாகவதரான பிரஹ்லாதன் உன்னை வரம்கேட்ட சமயம் தனக்கு தீங்கு நினைத்துச் செய்த ஹிரண்யனுக்கு முக்திவேண்டும் என்றும், தான் விஷ்ணுவினுடைய நிச்சயமான பக்தனாகவும், கிருதகிருத்யனாகவும் ஆகவேண்டும் என்று உன்னிடம் வரங்கள் கேட்டான். அதனால் ஹே ஸ்வாமி, உம்முடைய நிக்ரஹம் அனுக்ரஹமாக முடிகிறதல்லவா? குகப் பெருமாள் தாரகாசுரனை கொடியாகவும் மயிலாகவும் வைத்துக்கொண்டு, அவனை அனுக்ரஹித்த மாதிரி உன்னுடைய கிருபை கருடனுக்குக் கொடியாகவும், வாகனமாகவும் சேவை செய்யும் பாக்கியமாக இருக்கிறதல்லவா? ஆகையால் ஹே ஸ்வாமி, உன் குளிர்ந்த திருஷ்டிதான் அதற்கு காரணம். உம்மை நான் எவ்விதம் அடைவேன்? அதற்கும் நீதானே கிருபை செய்யவேண்டும்.]

''ஸ்வாயம்பு முனி, அவருடைய பத்னி சதரூபை, ஆகிய மஹானுபாவர்களால் இந்த உத்தமமான மனித ஸ்ருஷ்டி நடத்தப்பட்டது. இவர்கள் மிக்க பரிசுத்தமான பத்தினி வாழ்க்கையை நடத்தினார்கள். தர்மத்தில் பற்றுதலும், அனுஷ்

டானமும் உள்ளவர்கள். இன்றுகூட வேதங்கள் அவர்களுடைய கீர்த்தியை கானம் செய்கின்றன. (785)

"ராஜா உத்தானபாதர் அவருடைய புத்ரன். உத்தான பாதருடைய புத்ரன் துருவன். மஹா ஹரிபக்தன். அந்த உத்தான பாதருடைய இளைய புத்ரன் பிரியவ்ரதன். வேதங்களும் புராணங்களும் இவர்களுடைய கீர்த்தியையும் கானம் செய்கின்றன. (786)

"தேவஹூதி அவருடைய புத்ரி. அவருடைய பர்த்தா கர்த்தம பிரஜாபதி. ஆதிதேவரும், பிரபுவுமான பகவான் தீனர்களிடம் சதா கருணை காட்டுபவர், கிருபாளு கபிலராக தேவஹூதிக்குப் புத்ரராக அவதரித்தார்." (787)

"எந்த மஹானுபாவரால்ஸ்ரீ வித்யை போன்றதும், சாங்கிய சாஸ்திரம் முதலிய வித்யைகளையும் உலகத்தின் நன்மைக்காக பிரகடனப்படுத்தப்பட்டதோ, அந்த கபில பகவான் அவ்வித ஸ்ரேஷ்டராக விளங்குகிறார். இப்பேற்பட்ட ஸ்வயம்புவர் என்கிற மனு ரொம்ப நீதியாகவும், தர்மமாகவும் பகவானுடைய ஆக்ஞைக்கு உட்பட்டு ரொம்பகாலம் ராஜ்யத்தை பரிபாலித்துக் கொண்டிருந்தார்." (788)

"கிருஹஸ்த ஆஸ்ரமத்தில் (வீட்டிற்குள்) வசித்து வந்த ஸ்வாயம்புவ மனு ராஜ்யபாரம் செய்து, விருத்ததிசையை அடைந்தார். ஆனால் அவருக்கு விஷயங்களில் வைராக்கியம் ஏற்படவில்லை. இதை நினைத்துக்கொண்டு. மனத்தில் துக்கமடைந்து ஸ்ரீஹரியினுடைய பக்தி அருள் இன்றி, இந்த ஜன்மம் மிக்க நஷ்டமடைந்துவிட்டதே என்று மிக்க தாபப்பட்டார்." (789)

"அதனால் அவர் தன் பிள்ளையை அழைத்து ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டு தன் மனைவிமார்களுடன் வனத்திற்குச் சென்றார். மிக்க பிரசித்திபெற்றதும், பவித்திரமானதும், சாதகர்களுக்கு சித்தியை அளிக்கக் கூடியதுமான வனதீர்த்தமாகிற நைமிசாரண்யத்திற்குச் சென்றார்." (790)

[தியானம்

ஹே ராமா, ஜயலக்ஷ்மியான சீதையே, கிருஷ்ணா, அஷ்ட புஜங்களுடனும், நீலோத்பலம் போன்றவளும், சியாமை நிறமானவளுமான யோக மாயையே, உன்னையும் நமஸ்கரிக்கிறேன். பரமேஸ்வரி, பரமேஸ்வரா, உங்களையும் நமஸ்கரிக்கிறேன். தேவ தேவா, ஒவ்வொரு அவதாரத்திலும் ஒவ்வொரு

பிறப்பை எடுத்து சாது ஜனங்களையும் தர்மங்களையும் பரிபாலிக்கிறாய். ராம அவதாரத்தில் தசரதருக்கு மகனாகப் பிறந்து அவர் பேச்சைக் கேட்பது என்கிற வியாஜத்தால் அவர் இறக்கும் சமயம் உன் நினைவாக சாகும்படி சங்கல்பம் செய்தாய். சீதா பிராட்டி உன்னையே வரித்து, சகல செல்வங்களையும் துறந்து, தவம்பண்ணி, அசோகவனத்தில் ஆஞ்சநேயரைக் கண்டு அவர் மூலம் திரும்ப உன்னை அடைந்தாள். உன் பக்தனான விபீஷணருக்கு உன் அனுக்ரஹத்தையும் சிரஞ்சீவித்தனத்தையும் கொடுத்தாய். உன் தம்பி லக்ஷ்மணின் சகாயத்துடனும், குரங்குகள், கரடிகள் இவைகளின் ஸ்நேகத்துடனும் ராவணாதி ராக்ஷஸர்களைக் கொன்றாய். தானே வலியநடந்து, முனி ஜனங்களின் க்ஷேமத்தைக் கோறி அவர்களின் ஆசியைப் பெற்று உன்னை கிருதகிருத்யனாக ஆக்கிக் கொண்டாய். கௌசலையின் அழகான புத்ரனே, உன்னை எல்லா தேவர்களும் புகழ்ந்து கொண்டாடி சாக்ஷாத் நாராயணரென்று சொன்னபோதும் கூட, நீ உன் மனுஷ்ய தன்மையை அதிகிரமிக்கவில்லை. ஆனால் சில சமயங்களில் நீயே சாக்ஷாத் பகவான் என்று காண்பித்து விட்டாய். இல்லாதபோனால் பரசுராமர் எவ்விதம் உன்னிடம் அடங்குவார்? இதுமாதிரி கிருஷ்ணாவதாரத்திலும் நடித்துக் காண்பித்தாய். தர்மங்களைப் பரிபாலிக்கும் பொருட்டும், பிராம்மணர்கள், பசுக்கள் இவைகளைக் காப்பதற்காக கோபாலர்களுடன் நீ கூடி வளர்ந்தாய். அர்ஜுனனை அனுக்ரஹித்து, அவனைக் கொண்டு தேவ சத்ருக்களான துர்யோதனாதிகளைக் கொன்றாய். ருக்மிணியை பாணிகிரஹணம் செய்து, சத்யபாமை போன்ற ஸ்திரிகளையும் வசப்படுத்தி, கோபிகைகளுடன் ரமித்தாய். தர்மிஷ்டிரரான யுதிஷ்டிரரோடு சேர்ந்து அரசர்களைக் கொன்று தர்மத்தை நிலைநாட்டினாய். வசுதேவர் தேவகிக்குப் புத்ரனாகப் பிறந்து உன் கிருபையை நந்தகோபர் யசோதைக்கு அளித்தாய். தர்மத்தையும் உன் இஷ்டபிரகாரம் சங்கல்பித்தாய். யத: க்ருண: ததோ தர்ம: ஆகையால் உன்னை அடைவது கடினம். இருந்தாலும் ஒரு அளவு மனத்தூய்மையினாலும் அன்பாலும் அடையலாம் என்பதற்கு ரிஷிபத்னிகள், ராதை, அக்ரூரர், அர்ஜுனன் இவர்களின் செய்கைகளிலிருந்து காண்பித்தாய். இவ்விதமிருப்பதற்கு நீயே சங்கல்பிக்கிறாய். திருதராஷ்டிரனுக்கு எவ்வளவு தடவைகள் உன் புண்ய தரிசனத்தைக் காண்பித்தாய். உத்தவரைக் கொண்டு கோபிகைகளின் அன்பைக் கண்டு மோஹிக்கும்

  

படி செய்தாய். யுதிஷ்டிரரைப் பொய் சொல்லச் சொல்லி, அவரும் உன் பேச்சுக்கு இணங்கி, அதனால் யேற்பட்ட பாபத்திலிருந்து விடுபட்டார். பீஷ்மரை தானாக கொல்லச்சென்றும், அபிமன்யு வின் வதத்தாலும், நாகபாசத்தை வீணாக்கியதாலும், கர்ணனைத் தகாத சமயத்தில் அர்ஜுனனைவிட்டு கொல்லச் செய்தது, ஆகிய காரியங்களால் நீ மஹா சிறந்த புருஷர்களின் மனோரதங்களை வீணாக்கினாய். பரமபுருஷரே, உன் கிருபையைத் தவிர நான் யாசிப்பது ஒன்றும் இல்லை. எனக்கு அதைத்தவிர எவ்வித மார்க்கம் இருக்கிறது? நீயேதான் அதைக் கொடுக்கவேணும். என்னால் ஆவது ஒன்றுமில்லை. நீதான் எனக்கு மார்க்கதரிசி.]

"நைமிசாரண்யத்தை அடைந்து, ராஜாமனு முனிஜனங்கள் சித்தபுருஷர்களின் சேர்க்கையை அடைந்தார். அங்கே சென்றதும் மனத்தில் சந்தோஷமடைந்தார். ரொம்ப மனோபலத்துடன் அவர்களுடன் தவமார்க்கத்தில் அந்த ராஜ தம்பதிகள் ஈடுபட்டார்கள். ஞானமும், பக்தியும் சரீரம் எடுத்து வந்தாற்போல, அந்த தம்பதிகள் வாழ்க்கையை நடத்தினார்கள். (791)

"பிறகு அவர்கள் கோமதி தீரத்திற்குச் சென்றார்கள். மிக்க சந்தோஷத்துடனும் நிர்மலமான புத்தியுடனும் ஸ்நானம் செய்தார்கள். அவர்களை தர்மாத்மாவான ராஜரிஷிகள் என்று தெரிந்துகொண்டு ஸகல முனிஜனங்களும் அவர்களைக் காண வந்தார்கள்." (792)

"எந்த எந்த இடங்களில் அழகான ஸ்நானக் கட்டங்கள் இருந்தனவோ, ஸ்வாயம்பு முனிவர் அந்த இடங்களுக்குச் சென்றார். ஸகல முனிஜனங்களும் மரியாதைக்குரிய அவருக்கு சகல ஏற்பாடுகளைச் செய்தார்கள். இவ்விதமாக காலம் கடத்திய பிறகு, அவருக்கு வயோதிகம் ஏற்பட்டு, சரீரம் மெலிந்து துர்பலம் வந்தது. முனிவர்களுடைய மரவுரியைத் தரித்து சாதுக்களின் சமாஜத்தை அடைந்து அவர்கள் தினம் புராணக் கதைகளைக் கேட்டார்கள்." (793)

"பிறகு ஸ்வாயம்புமுனிவர் பகவானுடைய த்வாதசாக்ஷர மந்திரவித்தையை பிரேமையுடன் கற்று சித்திபெற்றார். (ஹிரண்ய கர்ப்ப புருஷா வ்யக்த ரூபிணே, ஓம் நமோ பகவதே வாஸு தேவாய) சுத்த ஞான ஸ்வரூபிணே, என்று அனுஸந்தித்து பகவான் வாஸுதேவருடைய சரண கமலங்களில் ராஜாராணி இருவரும் மனத்தை அர்ப்பணம் செய்தார்கள்." (794)

"அவர்கள் இருவரும் காய்கிழங்குகளைச் சாப்பிட்டுக் கொண்டு சச்சிதானந்தமாகிய பிரும்மஸ்வரூபத்தை சதா தியா

னம் செய்தார்கள். பிறகு அவர்கள் ஸ்ரீஹரியின் திருப்திக்காக தபஸ் செய்ய ஆரம்பித்தார்கள். காய் கிழங்குகளேயும் தியாகம் செய்து விட்டு ஜலத்தை மாத்திரம் சாப்பிட்டுவிட்டு அதனுடைய பலத்தினுல் காலத்தை ஓட்டினுர்கள்.'' (795)

'' அவர்களுடைய மனத்தில் ஒரேஒரு ஆசைதான் இருந்தது. பரமபிரபுவான ஸ்ரீஹரியை எவ்விதம் காண்பது; நிர்குண ஸ்வரூபியும் அகண்டமான பொருளும், பொருளுக்குப் பொரு ளாக இருப்பவரும், முடிவு இல்லாதவரும், ஆதிகால முதல் ஒருவரே இருந்தவரும், அவரையே பெரும் பொக்கிஷமாக நினைக்கக்கூடிய பரமார்த்தவாதிகளான பிரும்ம ஞானிகளால் சதா தியானம் செய்யப்படுகிறவருமான பிரபுவை நாங்கள் எவ் விதம் காண்போம்? என்று ஆசை மேலிட்டவர்களாகி காலத் தைக் கழித்துவந்தார்கள்.'' (796)

[தியானம்

ஹே ராமா, உன் காரியத்துக்கும் விக்னம் ஏற்பட்டதே? அது எல்லாம் உன் விளேயாட்டுத்தானே? உலகத்திற்கு நடித்துக் காட்டுவதுபோல உன்னேப் பட்டாபிஷேகத்திற்குச் சிங்காரித்துக் கொண்டு விரதம் எடுக்கும்படி தசரதர் நியமித்தார். அதன்படி நீயும் அவைகளேச் சாதாரண மனிதனேப்போல செய்தாய். ஆனுல் என்ன நடந்தது? காமமோஹிதரும், உன்னேப் பார்ப்ப தில், ஸகல உலகங்களுக்கு சூரியன் எவ்விதமோ, எவ்விதம் தான் யங்களின் விருத்திக்கு தண்ணீர் அவசியமோ, அதுமாதிரி உன்னேப் பார்த்து திருப்தி அடைபவருமான தசரதர், கைகேயி ஸத்தியத்தின் பேரிலும், இஷ்வாகு வம்சத்தின் அரசர்களின் விரதத்தை பாலிப்பதின் பூர்வகீர்த்தியை வைத்து, உன்மேலிருக் கும் அன்புவெள்ளத்தை அணேக் கட்டிவிட்டாள். ஹே லோகங் களுக்கு பிரியதரிசனரே, அவ்விதமாகப் புலம்பும் தசரதருக்கு உன்னேவிட்டுப் பிரிந்ததால் ஏற்பட்ட துக்கத்தினுல் கண்களேயு மிழந்து, பிறகு தன் ஜீவனேயுமிழந்தார். அதுவும் நீ வனம் சென்றபின்பு நடந்தது. உன் பிரிய தகப்பனுருக்கு இந்தமாதிரி நேர்ந்தது. இதை நாம் எப்படி ஆராயமுடியும்? ராம காரியத்துக்குப் பங்கம் நேர்ந்ததென்ருல் அது பெரிய பாபமாகத் தானே இருக்கும். கைகேயி செய்த பாபகாரியங்களுக்கு அவள் பிள்ளே பரதன் பிராயசித்தம் செய்தான். குலத்தின் பெருமை யையும் தூக்கினுன். அதுவும் உன் திருவிளேயாடல்தானே. நீ என்னே எவ்விதமாவது ரக்ஷி. உன்னேத்தவிர எனக்கு என்ன

கதியிருக்கிறது? நானும் மிக்கப் பாபங்களைச் செய்து உன்னை பரிபூர்ணமாக அடைய எவ்விதமான பிராயசித்தம் செய்ய வேண்டுமோ, ஹே கிருபாநிதி, உன் அதிமானுஷ்யமான கிருபைதானே என்னைக் காப்பாற்ற வேண்டும்.]

"இதுவுமில்லை, பிறகும் இதுவுமில்லை என்று வேதங்களாலும் நிரூபணம் செய்யமுடியாத பரமாத்மா, நிஜமாக ஆஸ்ரயிப்பவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் தயாளு; உத்தம தேவதைகளுள் மிக்க உத்தமரான ஸர்வேஸ்வரர், காரணமில்லாமல் 'அநேகவிதமான சிவஸ்வரூபங்கள், பிரும்மாவின் ஸ்வரூபங்கள், விஷ்ணுவின் ஸ்வரூபங்கள், ஆகிய பலவற்றைத் தரித்துக்கொண்டு பலவிதமாக தன்னைப் பிரகடனப்படுத்துகிறார்." (797)

"அப்பேற்பட்ட மஹாத்மாவான பிரபு அவருடைய பக்தர்களின் வசத்தை சுலபமாக அடைகிறார். பலவிதமாக லீலைகளைச் செய்கிறார். எந்த வேதஸ்ருதிகளால் சத்யமாக அவர் சொல்லப்படுகிறாரோ, அப்பேற்பட்ட பகவான் நம்முடைய அபிலாஷைகளையும் பூர்த்தி செய்வார்." (798)

"இவ்விதமாக பூர்ணமாக நம்பிக்கை வைத்து, அவர்கள் தபஸ்செய்து, ஆறுஆயிர வருஷங்கள் சென்றன. பிறகு மறுபடியும் அந்த மனுதம்பதிகள் ஏழாயிரம் வருஷங்கள் காற்று ஒன்றையே புஜித்து தபஸ் செய்தார்கள்." (799)

"மீண்டும் பத்தாயிர வர்ஷங்கள் காற்றையும் கூட விட்டு விட்டு, ஒரே காலினால் நின்று அபாரமான தபஸ் செய்தார்கள். அவர்களுடைய கடினமான நிஷ்டையும் தபஸ்ஸையும் கண்டு பிரும்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் பலதடவைகள் அந்த மனு தம்பதியிடம் வந்தார்கள்." (800)

"அவர்கள் மனுதம்பதிகளுக்கு பலவிதமான வரங்கள் கொடுப்பதாகச் சொன்னார்கள். ஆனால் அவர்கள் ஒன்றையுமே வரங்களாகக் கேட்கவில்லை. பரமதைர்ய புருஷர்களான அந்த ராஜாராணி தபஸ்ஸிலிருந்து நிவிருத்தி அடையவில்லை- அவர்களுடைய சரீரம் தபஸ்ஸினால் மெலிவடைந்து, எலும்புகள் கூட வெளியில் தோன்ற ஆரம்பித்துவிட்டன. இருந்தாலும் அவர்களுடைய மனத்தில் ஒருவிதமான விகாரமும் தோன்றவில்லை." (801)

"பிரபு ஸர்வக்ஞர். தன்னையே கேவலமாக ஆஸ்ரயித்த தபஸ்விகளான ராஜாராணியை ஸத்யமான தாஸர்களாகக் கருதினார். பரமகம்பீரமான குரலுடனும், அப்பொழுது மஹா கிருபை

யுடனும் கூடிய ஒரு அம்ருதமயமான குரல் ஒன்று கேட்டது. ''வரம் பெற்றுக்கொள்ளுங்கள்,'' என்று கேட்கப்பட்டது.'' (802)

[தியானம்

ஹேராமா, ஏதோ பூர்வகர்ம விசேஷத்தாலும், பித்ருக்களின் ஆசீர்வாதத்தாலும் இன்னும் அநேக ஸ்லாக்கியமான தர்ம அனுஷ்டானங்களாலும் கிடைத்த அறிவு, பாஹுபலம், காரியத்தைச் சாதிக்கும் திறமைச் செல்வங்கள், பந்துக்களில் பிராதான்யம் போன்ற விசேஷத் தன்மை இவைகள் கிட்டினாலும் கூட, உன் காரியத்துக்கு அவைகள் உபயோகப்படமாட்டாது போனும், எல்லாம் அழிந்துபோயிடும். அதற்கும் உன் கிருபைதானே அவஸ்யம். ராவணன், மாரீசன் இவர்களைவிட காரியத்தைச் சாதிக்கும் திறமை பெற்றவர்கள் யாராவது இருக்கக் கூடுமா? மாரீசன் உனக்கு ஒரு அபசாரம் செய்து, பிறகு உன்கிருபையால் கம்சனைப் போல பயம் அடைந்து, மரத்துக்கு மரம் உன்னைக் கோதண்டத்தை வைத்துக் கொண்டிருப்பவனாக தரிசித்தனன். அவன் உன்னைப்பற்றி பூர்ணமான நினைவு வந்ததும், ராவணனிடம் உன் சரிதையைப் பற்றியும் பெருமையையும் உரைத்தான். ராமா, நீ ரண பண்டிதன் என்றும், உனக்கு அபசாரம் செய்தால், குலத்தோடு நாசமடைவாய் என்று ராவணனுக்கு மாரீசன் பலதடவைகள் போதித்தும், காலத்தின் வன்மையால் ராவணன் அவன் சொல்லிய நீதிகளை ஒத்துக்கொள்ளவில்லை. ஆகையால் குலத்தோடும் பந்துக்களோடும் நாசமடைந்தான். அவனுடைய பலம், செல்வங்கள், தபஸ்ஸுகள், அவன் பிறந்த புலஸ்தியவம்ச கீர்த்திகள் எல்லாம் ராம அபஹாரம் செய்ததினால் அழிவடைந்தன. ஹேராமா, என்னை அப்படி ஆக்கிவிடாதே. அர்ஜுனன் மாதிரி என்னை உன் சிஷ்யனாக மாற்றிக்கொள். தர்மர், பீமன் மாதிரி உன் சிநேகத்தை எனக்கு கொடு. நாரதர், வால்மீகிமாதிரி உன் காரியங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள். ஐயா, உன்னை நான் பூர்ணமாக நம்பியிருக்கிறேன்.]

'' இறந்தவனைக்கூட பிழைக்கவைத்து, புது ஜீவனை அளிக்கும் சஞ்சீவினி போன்ற இந்த மதுரமான குரலைக் கேட்டு, அந்த மனுசத ரூபை ஆகிய ராஜ தம்பதிகள் மிக்க சந்தோஷத்தினால் புளகாங்கிதமடைந்தார்கள். அவர்களுடைய சரீரங்கள் தேஜஸ்ஸுடனும் அப்போதுதான் வீட்டைவிட்டு வெளியேறியது மாதிரி அமித பலத்துடனும் விளங்கின.'' (803)

"அவர்களின் காதுகளில் அம்ருதமயமான வசனங்கள் விழுந்ததும் அவர்கள் அதிகச் சந்தோஷப்பட்டு பூமியில் எட்டு அங்கங்கள் படிய சுக்ருத தண்டனிட்டு பிரேமை கலந்த ஹிருதயத்துடன் மதுரமான குரலில் சொன்னார்கள்." (804)

"ஹே பிரபோ, தாஸ்யர்களான எங்களைக் கேளுங்கள். கல்பகத் தருவே, காமதேனுவே, உங்களுடைய சரண கமலங்களை பிரும்மா, விஷ்ணு, ருத்ரர் ஆகிய எல்லா தேவர்களும் வணங்குகிறார்கள். உங்களுடைய சேவையே எங்களுக்கு ஜீவனம். உம்மை நாங்கள் சேவை செய்து மிக்கச் சுலபமாக எல்லா பலன்களையும் நன்மைகளையும் அடைகிறோம். ஹே சுக நாயகரே, தாங்கள் சரணாகத வத்ஸலன். சகல ஜீவராசிகளுக்கும் நாயகர்." (805)

"பிரபோ, நீர் தீனர்களுக்கு ஆதாரமாகவும், ஹிதத்தைச் செய்பவராகவும் யிருக்கிறீர். எம்மைப் போன்றவர்களுக்கு உமது திருப்தியே மிக அவசியம். நீங்கள் சந்தோஷமடைந்து எங்களிடம் அனுக்ரஹ புத்தியுடன் வரம் கொடுக்க வேண்டும். ஹே ஸ்வாமி, எந்த ரூபத்தைக் கண்டு பகவான் சம்பு மனத்தில் தியானித்து ஆராதனம் செய்கிறாரோ, எந்த பர பிரும்மத்தை அடைவதற்கு யோகிகளும் முனிவர்களும் முயற்சியுடனும் பரம நிஷ்டையுடன் தியானிக்கிறார்களோ, (806)

எப்பேற்பட்ட மஹா வித்வானாகிய காகபூசண்டியின் மானஸ ஸரோவராகிய மனத்தில் நீர் ஹம்ஸ பக்ஷியைப் போல சந்தோஷத்துடன் சஞ்சரிக்கிறாரோ, எந்த உருவத்தை வேதங்கள் பலவிதமாகப் புகழ்கின்றதோ, ஹே பிரபோ, அப்பேர்ப்பட்ட ஸகுண, நிர்குண, தோஷமற்ற ஸ்வரூபங்களாக நீர் எவ்விதம் வேதங்களால் புகழப்பட்டு பிரகாசிக்கிறீரோ ; ஹே, பிரபு, சரணமடைந்தவர்களின் துக்கங்களை போக்குபவரே, தாங்கள் மிக்க கிருபை செய்யவேண்டும், தங்களுடைய மிக்க உன்னதமான ரூபத்தை எங்களுக்குக் காண்பித்து, எங்களுடைய நேத்ரங்களைப் பரிபூர்ண சுக ஆனந்தங்களை மடையும்படி செய்யவேண்டும். ஹே தயாநிதி, எங்களுக்கு உங்களுடைய திவ்ய சௌந்தர்ய விலாஸங்களைக் காண்பிக்கவேண்டும்." (807)

[தியானம்

ஹே ராமா, சீதா, உங்கள் காரியத்திற்காகச் சென்ற ஹனுமான், அங்கதன் இதர வானரக் கூட்டங்கள் அகஸ்திய லோபா முத்ரை இவர்கள் இருக்கும் தெற்கு மார்க்கத்தில் சஞ்சரிப்பவர்க

ளாக, சுக்ரீவனுடைய ஒரு பாதமாகிற ஆணையை மீறி, ஒரு பெரிய பிலத்தில் வந்து சேர்ந்து, பசி தாகம் முதலியவைகளால் பீடிக்கப் பட்டு, வழி தவறிப்போய் இருண்ட வனத்தில் வந்த சமயம் மய னுடைய தபஸ்ஸுக்காகவும், பிறகு காம போகத்திற்காகவும் ஏற் பட்ட வீடுகளும், பழங்களும் நிறைந்த தோட்டங்களும், ருசிகர மான ஜலங்களும் அடங்கின ரம்யமான இடத்திற்கு வந்து சேர்ந் தார்கள். அங்கே ஸ்வயம் பிரபை என்கிற மிக்க அழகான தபஸ்வி அவர்களுக்கு மிக்க ஒத்தாசையாக விருந்து பசி களைப்பைப் போக்கி பரம உபகாரம் ராம காரியத்திற்குச் செய்து தன் கீர்த்தியையும் மயனுடைய செல்வங்களையும் உபயோகப் படுத்தி கிருத கிருத்ய முள்ளவளாக ஆனாள். ஐயா, தர்ம மார்க் கத்தில் இருப்பவர்களுக்கு ராம கார்யம் செய்வதற்கு உதவி செய்ய மிக்க பாக்யம் கிடைக்குமல்லவா ? உன் வழியிலாவது, தாயார் வீதி வலம் செய்யும் போதாவது, உத்ஸவ ஸமயங்களில் உன் பக்தர்கள் உன் ஹிதத்திற்காகச் செய்யும் பரம கைங்கர்ய பாக்யங் களுக்கு நானும் உபயோகப்பட வேண்டும். ஐயா, நீரும், என் தாயான சீதையும் எனக்குப் பரம பொக்கிஷம். ஆஞ்சநேயர் எனக்கு குரு. அவருடைய கருணையினால் உங்களுடைய அருள் கிடைக்கவேண்டும். ஹே பரம புருஷார்த்தமன ஐஸ்வர் யமே, ஐயா, தயவு செய்யவேண்டும். குளிர்ந்த மனத்துடனும் அன்பான பார்வையாலும் மதுரமான குரலினாலும் என் மனதை அபஹரிக்கிற தேஜஸ்களாலும், என்னைக் கடாக்ஷிக்க வேண்டும். வரண்ட பூமி அம்ருத தாரையை எதிர்பார்த்திருப்பது போல உன் கருணை பொங்கிய அழகான விழிகளை நான் சதா ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.]

"மஹானுபாவர்ககளும் ராஜ தம்பதிகளுமான மனுசத ரூபை இவர்களின் கோமளமானதும், வினய முள்ளதும் பிரேமை ரஸம் பொங்குவதுமான வசனங்களைக் கேட்டு, பகவா னுடைய மனம் குளிர்ந்தது. பக்தவத்ஸலன், பரம கிருபாநிதி, பிரபு சம்பூர்ண சராசரங்களுக்கும் வாசஸ்தானமாகக் கொண்ட வரும், ஸர்வ சமர்த்தருமான பகவான் ஸ்வயமாக, கிருபை கூர்ந்து தோன்றினார்." (808)

(நீலவர்ணம், ஜலமுள்ள மேகம்போல நிறம்,) அப்போது மலர்ந்த நீலோத்பலம் போல நிறமுள்ளவரும் நீல மணிபோல ஒளியுள்ளவரும், கருணை பொங்கும் விழிகளை விசாலமாக உடையவரும், கருத்த மேகத்தைப் போன்ற ச்யாமை நிறம், மேக கம்பீரம் போன்ற ஆழ்ந்த குரலுமுடையவரும், கருணையாகிற

அமிர்தத்தைப் பொழியும் குரலுடன், சரீரத்தின் தேஜஸ்ஸுகளால் கோடிக் கணக்கான மன்மதர்களை வெட்கும்படி லாவண்ய விலாஸங்களைக் கொண்ட பிரபு தோன்றினார். (809)

"அவருடைய முகம் சரத் காலத்து பூர்ணிமை சந்திரனைப் போல் பூர்ணமாக விருந்தது. எல்லையில்லாத அழகுடன் விளங்கிய கன்னங்கள் பளபளப்பாகவும், தவடையும், கழுத்தும் அழகான சங்கம்போல நடுவில் பருத்து நுனிகள் சிறியதாகவுமிருந்தது. மூன்று ரேகைகள் கொண்டதாக விருந்தது. சிவப்பு நிறமான புன்னகை நிறைந்த உதடுகள், அழகான பல் வரிசை, தீர்க்கமானதும் சம்பக புஷ்பம்போல மூக்கு. அவருடைய மோஹன சிரிப்பு இருக்கிறதே, சந்திரனுடைய மிக்க குளிர்ச்சியான கிரணக்களையும் விட மிக்க அத்யந்த தாபத்தைப் போக்கும் குளிர்ந்ததாக விருந்தது." (810)

"ஐயா, அவருடைய நேத்ரங்கள் அப்போது மலர்ந்த பெரிய தாமரை மலர்போல விசாலமாகவும் அழகாகவுமிருந்தன. அவருடைய கண் திருஷ்டிகள் எல்லோருடைய மனங்களையும் சுலபமாக அபஹரிக்கக் கூடியதாகவும், மனத்திற்குப் பிடித்தவையாகவும் இருந்தன. அவருடைய புருவங்கள் மன்மதனுடைய வில்லைக்கூட பழிக்கும்படி அழகாக வளைவுடன் விளங்கின. அவருடைய விசாலமான நெற்றியில் பிரகாசமயமான திலகம் இருந்தது." (811)

"அவருடைய காதுகளின் குண்டலங்கள் மீன் வடிவமாக விளங்கின. சிரத்தின்மேல் அழகான கிரீடம் சோபையுடன் விளங்கிக் கொண்டிருந்தது. அவருடைய மயிர் கோசங்கள் கரு வண்டுக் கூட்டங்கள் போல அடர்த்தியாக விருந்தன. அவருடைய ஹ்ருதயத்தில் ஸ்ரீ வத்ஸம், சுந்தரமான வனமாலை, முத்து ரத்ன மணிமாலைகள், அவ்வளவும் சிறந்த பூஷணங்களாக விளங்கின." (812)

[தியானம்

ஹே ராமா சீதா, ஹனுமாரே, உங்களுடைய ஸ்நேகம் எவ்விதம் கிடைக்கும் என்று தினமும் நான் வேண்டிக்கொள்கிறேன். உன் கிருபையால் எனக்கு ராமர் கிட்டவேண்டும். ஸ்நேகம் சரிக்கு சரியாக விருந்தால்தான் நீடித்து நிற்கும் என்று சொல்லுவார்கள். அர்ஜுனனும் கிருஷ்ணனும் பெயர் பெற்ற சிநேகிதர்கள். துரியோதனன், கர்ணன் இவர்களின் ஸ்நேகம் கார்யத்தையும் உபகாரத்தையும் அடியாகக் கொண்டது. துரோணர் துரு

பதன் சிநேகம் மிக்க கீழ்த்தனமானது. எனக்கு உன்னோடு ஒட்டிக்கொள்ள என்ன பெருமையான குணம் இருக்கிறது? ஆனால் உனக்குச் சாதாரணமான குணம் ஒன்று உண்டு என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதாவது எளியவர்களிடம் வெறுப்பு விருப்பு இல்லாமல் வலிய வந்து, உன் கிருபையால் நீ அவர்களுடன் சிநேகிதம் செய்துகொள்ளுகிறாய். உன்னை ஒரு விதத்தாலும் வசப்படுத்த முடியாது. அதுவும் மிக்க தாழ்மையான குணங்கள் படைத்த என்னிடம் எவ்விதம் அப்பா, உனக்கு அனுதாபம் இருக்கும்? பெரிய மஹான்களுடைய ஆசீர்வாதம் தான் எனக்கு ஒத்தாசை செய்யவேண்டும்.]

"சிம்மம் போன்ற தோள்கள், அழகான யக்ஞோபவீதம், புஜங்களில் அழகான ஆபரணங்கள், கைகளோ யானையின் துதிக்கைகள் போல நீண்டும், அடி பருத்தும், நுனி சிறுத்தும் தாழ்ந்தவர்களைத் தூக்கிவிடும் கருணை நிரம்பிய பாஹுக்கள். இடுப்பில் அம்புராத் துணியும், கைகளில் கோதண்டமும், பாணமும் மிக்க சோபையுடன் விளங்கினார்." (813)

"தங்க நிறமான பட்டு பீதாம்பரம். மின்னலைக்கூட வெட்கப்படும்படி செய்யும் சோபையுள்ளதாக விருந்தது. அவர் வயிற்றில் மூன்று அழகான மடிப்புகள். அவர் தொப்புள் மிக்க மனோஹரமான யமுனா நதியின் வெள்ளப் பெருக்கால் ஏற்படும் மடுக்களைவிட ஆழமாகவும் அழகாகவுமிருந்தது." (814)

"எந்த பகவானின் சரண கமலங்களை அவருடைய பக்த ஜனங்கள் மிக்கப் பிரேமையுடனும் பக்தியுடனும் மனத்தில் ஈடுபட்டு வண்டுபோல சுழன்று கொண்டிருக்கிறார்களோ, அந்த பாத கமலங்களின் அழகுகள் வர்ணிக்க முடியாதபடி யிருந்தன. பகவானுடைய இடது பக்கத்தில் சதா அனுகூலமான மனதுள்ளவளும், சோபையின் ராசிக் கூட்டங்களின் சேர்க்கையும், ஜகத்திற்கு மூலகாரணமான ஆதி சக்தியாகிற ஸ்ரீ ஜானகி தேவி இருந்தாள்." (815)

[தியானம்

ஹே ராமா, ராம கவசம் பூண்டு சதா ராமனை சதா நினைத்து தபஸ் செய்து கொண்டிருக்கும் லோக மாதாவான ஜானகி, உங்கள் இருவர்களுடைய மஹா பிரஸாதத்தை எப்படி அப்பா அடைய முடியும்? நீங்கள்தான் உங்கள் தாஸ்யரான ஆஞ்சநேயர் மூலம் மனம் உவந்து என்னிடம் கிருபை செய்ய வேண்டும். என் மஹா குருவாகிய ஆஞ்சநேயர் உங்கள் ரூப

குண சௌந்தர்யங்களை பல தடவைகள் மிக்க ஈடுபாடுடன் கூறியிருக்கிறார். ராமா, பிரியதர்சனரே, விசாலமானதும், நல்லதாகவும், மங்களகரமான கண்களை உடைய சீதாதேவி, லக்ஷ்மியை வ்ருத்தி செய்யும் லக்ஷ்மணரே, சுக்ரீவரே, ஆஞ்சநேயா, ராம கார்யத்தில் மிக்கப் பெரியதான சீதையைத் தேடுவது, சமுத்திரத்தைத் தாண்டுதல், ராவணனுடைய லங்கையை நாசம் செய்தல், சேனாதிபதிகளை வதைத்தல் ஆகிய காரியங்களைச் செய்து, ராமனும் சீதையும் பரஸ்பரம் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த சமயம் அவர்களுக்கு அனுகூலமாகவும் ஆதாரமாகவுமிருந்த ஆஞ்சநேயா, பிரும்மசாரி, தாஸ்ய பக்தியில் சிறந்து விளங்கும் சூடரே, ராமதாஸர் என்று தன்னைப் பற்றிச் சொல்லிக்கொண்டும், ராம தூதன் என்று ராவணனிடம் பறைசாற்றிய சிவ சக்தியின் ஐக்ய ஸ்வரூபமாக விளங்கும் மஹாத்மாவே, கிருபை செய்ய வேண்டும்.]

(ராமனுடைய அழகு, சக்தி குண விசேஷங்கள் கணக்கில்லாதவை.) " அதுமாதிரி அவனுடைய பத்னியான ஜானகியின் ஒரு அம்சம் கணக்கற்ற லக்ஷ்மி, பார்வதி, ஸரஸ்வதிகளை தோன்றுவிக்கும் உத்பன்ன சக்தியாக விளங்கிவருகிறது. அவருடைய சங்கல்பத்தை தெரிவிக்கும் வில்போன்ற புருவத்தின் தோற்றங்களாலே ஜகத்தை வாழ்விக்கிறவளாகவும், பகவானுடைய ஸ்வரூப சக்தியாக விளங்குபவளாகவும், ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரிய பார்யையான சிதாதேவி அவருடைய இடது புறத்தில் இருந்தாள்." (816)

"சோபையின் சமுத்திரமாக விளங்கும் ஸ்ரீ ஹரியினுடைய ரூபத்தைக் கண்டு, மனு சதரூபை தம்பதிகள் விரிந்த கண்களோடு ஆச்சரியத்துடன் பார்த்து ஸ்தம்பித்துப் போனார்கள். அப்பேற்பட்ட உவமை இல்லாத ரூபத்தைக் கண்டு மிக்க மரியாதையுடனும் பார்த்துப் பார்த்து அவர்கள் திருப்தி அடையவில்லை." (817)

" அதிகமான ஆனந்தத்தினால் தங்களுடைய தேகஸ்திதியை மறந்தார்கள். தங்கள் கைகளால் பகவானுடைய பாத கமலங்களைப் பிடித்துக்கொண்டு தண்டனிட்டு, அடிக்கடி தண்டனிட்டு மறுபடியும் மறுபடியும் நமஸ்கரித்து, பூமியில் சுக்ருத பிரணாமம் செய்தார்கள். கிருபையின் எல்லையற்ற சமுத்திரம். பிரபு தானே ஸ்வயமாக தன்னுடைய திருக்கர கமலங்களால் அந்த தம்பதிகளை ஆசிர்வதித்து, அவர்களுடைய மஸ்தகத்தில் தடவிக் கொடுத்து, அவர்களைக் கைதூக்கி எழுப்பினார்." (818)

[தியானம்

ஹே ராமா, உன்னுடைய ஆத்ம குணங்களையும், ராவண னுடைய ஐஸ்வர்ய விலாஸங்களையும் ஒப்பிட்டுப் பார்த்த ஜானகி உன்னையே பெரும் பதமாகவல்லவோ நினைத்தாள். ராக்ஷஸி களின் மத்தியில் வீற்றிருக்கும் தேவியை பல விதமாகவும் பல தடவைகளாலும் சொல்லிப் பயமுறுத்திப் பார்த்தார்கள். புலஸ்திய வம்சம், விஸ்ரவஸ்ஸின் பிள்ளை, குபேரனுடைய தம்பி, புஷ்பக விமானம் போன்ற ஐஸ்வர்ய விபூதிகள், யுத்தத்தில் இந்திரன் யமன், வருணன், போன்றவர்களை ஜெயித்தவன். எல்லாமிருந் தும், ஜானகிக்கு இழைத்த மஹா துன்பத்தினுல் ராவணன் பிள்ளை பந்துக்களுடன் நாசமடைந்தான். ஹே, பரமாத்மா, ஆஞ்சநேயர் உன்னைப்பற்றி ஜானகியிடம் சொல்லியபோது என்ன சொன்னுர்? தெரியுமா? ராமன் கமலதளபத்ராக்ஷன். தாமரை புஷ்பத்தின் இதழ் போன்ற கண்களை உடையவன், பிரிய தர்சனன், பிருஹஸ்பதிக்குச் சமமான புத்தி உள்ளவன், யசசில் இந்திரனுக்கு ஒப்பானவன், ஜீவலோகத்தை ரக்ஷிப்பவன். தன் பந்து ஜனங்களைக் காப்பவன், தன் ஐஸ்வர்யத்தைக் காக்கும் திறமை உள்ளவன், பரம தபஸ் உள்ளவன், ஸ்வதர்மத்தையும் பிறருடைய தர்மங்களையும் ரக்ஷிக்கிறவன், லோகத்தின் மரியாதையின் வியவஸ்தைகளைக் காப்பாற்றுகிறவன், செய்கி றவன், செய்கிறவர்களை செய்யச் சொல்லுகிறவன். பிரும்ம சர்ய வ்ரதத்தில் ஈடுபட்டவன். ஸாதுக்களுக்கு உபகாரம் செய்பவன். தானே தர்மத்தை அனுஷ்டித்து, சீலபுருஷனுக விளங்குபவன். பிரும்மத்தை உபாஸிப்பவன். தனுர்வேதத்தில் சிறந்தவன். ராஜநீதியில் தேர்ந்தவனுன படியால் பிறருக்கு அபகாரம் செய்யாதவன். இவைகளால் ஜானகிதேவி ஆகர் ஷிக்கப்பட்டு, ராவணனுடைய ஐஸ்வரியங்களை நிராஹரித்து உன்னை அடைவது துர்லபம் என்று தெரிந்து மன ப்ரீதியுடன் தன் உயிரைப் போக்க நினைத்தாள் அல்லவா? அப்பேற்பட்ட உன் பெருமைகளை நினைக்க, நினைக்க, உன் ஜானகியின் பெருமைகளையும் நினைக்க நினைக்க, அதுவும் ஆஞ்சநேயர் விவரிக்க, என் மனம் எவ்வளவு புளகாங்கித மடைகிறது. ஐயா, உம்முடைய அபாரமான க்ருபைதான் எனக்கு வேண்டும்.]

கிருபா சமுத்திரமான பகவான் சொல்ல ஆரம்பித்தார். "நான் உன்னிடமும் உன் மனைவியான சதரூபை யிடமும் அத்யந்த சந்தோஷ மடைந்தேன். எல்லோருக்கும் வரம் அளிக்கும் உதாரனுக என்னை நினைத்து உங்கள் மனதில் என்ன

ஆசைகள் தோன்றுகிறதோ, அவைகளை வரங்களாகக் கேளுங்கள்,'' (819)

பிரபுவினுடைய வசனங்களைக் கேட்டு, அந்த ராஜ தம்பதிகள் அஞ்சலி பந்தத்துடன் தைர்யமடைந்து, மிருதுவான வாணியினால் சொல்ல ஆரம்பித்தார்கள் ''ஹே நாத, உம்முடைய சரண கமலங்களைக் கண்ட பின்பு, எங்களுக்கு எல்லா ஆசைகளும் பூர்த்தியாகிவிட்டன.'' (820)

''இருந்தாலும் ஒரு பெரிய ஆசையிருக்கிறது. அது நிறைவேறுவதற்கு நீர் வரத்தை சுலபமாகக் கொடுத்துவிடுவீர். ஆனால் என்னுடைய தீனத்தன்மையையின் காரணமாக அது கடினமாகத் தோன்றுகிறது.'' (821)

''ஒரு பெரிய தரித்திரன் கல்பக விருக்ஷத்தை அடைந்த பிறகும் அதிக திரவியம் கேட்பதற்கு சங்கோசப்படுகிறான். ஏனென்றால் அந்த மரத்தின் ஐஸ்வர்ய பிரபாவத்தை அவன் அறிந்திருக்கிறவனாகவில்லை. அப்பேற்பட்ட சம்சயம் என் மனத்திலுமிருக்கிறது.'' (822)

''ஹே ஸ்வாமி, நீர்ஸர்வாத்மகன், அந்தர்யாமி, என் மனத்தில் உள்ளதை நன்கு அறிவீர். கிருபை கூர்ந்து என் மனோரதத்தைப் பூர்த்தி பண்ண வேண்டும்.'' பகவான் சொல்ல ஆரம்பித்தார். ''ஹே ராஜன், சங்கோசத்தை விட்டுவிடவும். என்னிடம் வேணும்கிறதைக் கேளும். உங்களுக்குக் கொடுக்கக் கூடாதது என்னிடம் ஒன்றும் இல்லை.'' (823)

ராஜா சொன்னார்—''வரதானம் கொடுப்பவர்களில் சிரோமணியாக விளங்கும் மஹா கிருபாளு, ஹே நாத, என் மனத்தில் சித்தத்தை உண்டு பண்ணிக்கொண்டு, உம்மை நான் வேண்டிக் கொள்கிறேன். உமக்குச் சமானமான புத்ரன் எங்களுக்கு வேண்டும். பிரபுவான உம்மிடமிருந்து நான் எதை மறைக்க முடியும்?'' (824)

ராஜாவினுடைய ப்ரீதியைக் கண்டும், விலை மதிக்கப்பட முடியாத உத்தம வார்த்தைகளைக் கேட்டும் கருணாநிதியான பகவான் சொன்னார். ''அப்படியே ஆகட்டும் ஹே ராஜாவே, நான் என்னைப்போல ஒருவனைத் தேடி எங்ஙனம் அலைவது? அதனால் நானே ஸ்வயமாக அவதரித்து, உம்முடைய புத்ரனாகவே வருகிறேன்.'' (825)

சதரூபை தன் கைகளை அஞ்சலி பந்தத்துடன் இருப்பதைக் கண்டு பகவான் சொல்ல ஆரம்பித்தார். ''ஹே தேவி, உம்முடைய இச்சை என்ன என்று சொல். அதை வரமாகப்

பெற்றுக்கொள்.'' சதரூபை சொல்ல ஆரம்பித்தாள். ''ஹே நாத, மிக்க நல்ல வரமாக என் புருஷர் கேட்டுவிட்டார். ஹே கிருபாளு, நீர் என்னிடம் கிருபை கூர்ந்து, அனுக்ரஹிகிக்க வேண்டும்.'' (826)

''ஆனால், பிரபு, நீர் மிக்க சந்தோஷப்பட்டு அனுகிரஹத்தாலும் அந்த கோரிக்கை எங்களுக்கு ரொம்பப் பெரியதாகத் தோன்றுகிறது. நீர் பக்தப் பிரியன். பிரும்மா முதலியவர்களையும் உண்டு பண்ணுகிறவர், ஜகத்துக்கே ஸ்வாமி. எல்லோருடைய ஹ்ருதயத்திலும் உட்புகுந்து அறியும் பரபிரும்மம்.'' (827)

''இதைத் தெரிந்துகொண்ட பின்பு கூட என் மனத்தில் சந்தேகம் வருகிறது. இருந்தாலும், ஹே பிரபோ, தாங்கள் எது சொன்னாலும் அது நடந்தே தீரும். நீர் சத்ய விரதன், சத்ய சங்கல்பன். ஹே நாத, உமது நிஜபக்தன் இகலோகத்தில் அகண்டமான சுகத்தை அடைகிறான்; அதன் பிறகு பரம உத்தமமான கதியையும் அடைகிறான்.'' (828)

[தியானம்

ஹே ராமா லக்ஷ்மணா, ராம கைங்கர்யமே பெரும் பாக்யம் என்று நினைத்த ஹனுமார் எவ்வளவு லோக உபகாரமாயும், தர்ம சிந்தனை உள்ளவராகவும், ஸ்வாமி பக்தியுடனும் இருந்தார் என்பதற்கு, விசல்ய கரணி என்று புகழப்படும் மிருத சஞ்சீவினியைக் கொண்டு வந்து, அதை மீண்டும் பழைய இடத்தில் கார்யம் முடிந்த பின்பு வைத்தார். என்று கேட்க எவ்வளவு ஆனந்தமாக விருக்கிறது. சந்திரன் போல நிற முடையவரும், ஆதித்யன் போல தேஜஸ் உள்ளவரும், வாயு பகவானின் ஔரஸபுத்ரனும், அஞ்சனாதேவியின் சிறந்த பாக்யமான மஹாத்மாவான ஆஞ்சநேயரை நான் நமஸ்கரிக்கிறேன். கருடன் நாக பாசத்தின் கட்டிலிருந்து ராம லக்ஷ்மணர்களை விடுவித்ததுபோல ஹனுமாரின் செய்கை முகூர்த்த நேரத்தில் சஞ்சீவினியைக் கொண்டு வந்து லக்ஷ்மணனைக் காப்பாற்றி, அதே இடத்தில் அந்த ஒஷதி மலையைத் திருப்பிவைத்த மஹானுபாவன். பகவானுடைய பரம பக்தர்களும் கைங்கர்ய நாதர்களுமான கருடன், விஷ்வக்ஸேனர், அனந்தன், ஆஞ்சநேயர், பாஞ்சஜன்யம், ஆயிரம் ஜ்வாலைகளுடன் எரியும் சுதர்சன சக்ரம், சார்ங்கம் என்கிற புகழ்பெற்ற வில், நாராயணாஸ்திரம், நந்தகம் என்கிற கத்தி,

கேடகம், கௌமோதகம் என்கிற கதை, கொடூரமான பார்வை, உக்ரமான சங்கல்பம், பகவானுடைய கிங்கரர்கள், பகவானுடைய கோரமான ஐஸ்வர்ய விபூதிகள் ஆகிய எல்லாவற்றையும் நான் வணங்குகிறேன். அவர்களுடைய கிருபையும் தயையும் எனக்குப் பரிபூர்ணமாக வேண்டும். பகவானே எனக்கு யோக க்ஷேமம் செய்யவேண்டும்.]

"ஹே பிரபோ, உம்முடைய நினைவினாலும் சேர்க்கையினாலும் ஏற்படும் ஆனந்தம், அந்த சுபமான மேல் நோக்கிப்போகும் ஜீவாத்மாவின் பரகதி, உம்மிடம் நிரந்தரமான தாஸ்ய, கைங்கர்ய பக்தி, மிருத சஞ்சீவினி போன்ற உமதுபாத கமலங்களில் ஏற்படும் ப்ரேமை, உம்மையே பெரும் தனமாகவும் உம்முடைய த்ருப்தியே எங்களுக்குக் குறிக்கோளாகவும் அவைகளின் ஆனந்தமே எங்களுக்கு ஸதா இருக்கக்கூடிய விவேகமும், அதுவே எங்கள் ஜீவன வாழ்க்கையின் தத்வமாகவும் இருக்கும்படி உம்முடைய கிருபையாக ஹே ஸ்வாமி, தயவு செய்து எங்களுக்கு அருள்புரிய வேண்டும்." (829)

ராணியினுடைய கோமளமான வார்த்தைகளையும், மிக்க அர்த்த புஷ்டியுள்ளதும், மனோஹரமான வசனங்களையும் கேட்டு, கிருபாசிந்துவான பிரபு கோமளமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார்—"உன்னுடைய மனதில், என்ன ஆசைகள் இருக்கின்றனவோ, எல்லாம் உனக்கு என்னால் கொடுக்கப்பட்டது. இதில் யாதொரு சந்தேகமும் வேண்டாம்." (830)

"ஹே மாதா, என்னுடைய கிருபையினால் உனக்கு இந்த விவேகமான ஞானம் ஒருக்காலும் அழியாது." அந்த சமயம் மனு, பகவானுடைய பாதகமலங்களில் வந்தனை பண்ணி, மீண்டும் சொன்னார். "ஹே பிரபோ, எனக்கு இன்னொரு ஆசையும் இருக்கிறது." (831)

"ஐயா, உம்முடைய பாதகமலங்களில் என்னுடைய ப்ரீதி இருக்கிறதே, அது புத்ரனிடம் தகப்பனுக்கு உள்ள ஸஹஜ விஸ்வாசம் மாதிரியும் இருக்கவேண்டும். என்னைத் தாங்கள் கேலி பண்ணவேண்டாம். எவ்விதம் நாகமணி இல்லாமல் சர்ப்பம் உயிர் வாழாதோ, ஜலமில்லாமல் மீன் உயிர் வாழ்வதில்லையோ, அதுமாதிரி என் ஜீவன் உம்மையே நம்பி யிருக்கவேண்டும். அதாவது உம்மைப்பற்றிய ஸ்வரூப ஞானமும், பக்தியும், அன்பும், இந்த ஜீவனின் அதீனமும், பாரதந்திரிய வாழ்வும், உம்மிடத்தில் இருக்க வேண்டும்." (832)

இந்த விதமாக ராஜ தம்பதிகள் பகவானிடம் வரங்களைப் பெற்று அவருடைய பாத கமலங்களை வணங்கினார்கள். அந்த சமயம் கருணாநிதியான பகவான் சொன்னார், "அவ்விதமே ஆகட்டும். என்னுடைய ஆக்ஞையை ஒப்புக்கொண்டு, தேவராஜனான இந்திரனுடைய ராஜதானியாகிய அமராவதிக்குச் சென்று சில காலம் வசித்து வாருங்கள்." (833)

"பிள்ளாய், ஸ்வர்க்கத்திலுள்ள பெரிய போகங்களை அனுபவித்து விட்டு கொஞ்சகாலம் ஆனபின்பு நீங்கள் அயோத்தியில் ராஜாவாகவும் ராணியாகவும் அவதரிப்பீர்கள். அந்த சமயம் நான் உங்களுக்குப் புத்ரராக அவதரிப்பேன்." (834)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, உன் மனதை நான் எவ்விதம் அறிவேன்? நான் உன்னை என் தெய்வமாக நினைத்து, நான் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் உனக்கே அர்ப்பணம் செய்து, உன் திருப்தியையே என் பாக்யமாக நினைக்கிறேன். உன் சரணாகத தர்மத்தை நினைத்து, என் மனம் சந்தோஷமடைகிறது. உனக்கு உபகாரம் செய்வதால் லோகோபஹாரம் செய்வதாக ஆகிறது. உனக்கு நான் ஹிதம் நினைத்தால், ஜகத்திற்கு ஹிதம் செய்கிறேன். காரணம் என்ன தெரியுமா? தர்மத்திற்கு நீதானே மூலம். விபீஷணன், சுக்ரீவன் முதலியவர்களை எவ்வளவு மஹத்தான பயங்களிலிருந்து காப்பாற்றினாய்? ஆபத்தில் உயிரைக் காப்பவன் தானே சிறந்த தர்மவான். தர்மப்படி நடந்து தர்மத்திலிருப்பவர்களான சுக்ரீவன் விபீஷணனுக்கு ஏற்பட்ட ஆபத்துக்கள் தர்மத்திற்கே அபாயமென்று சொல்லப் படுகின்றதே? த்ரௌபதியின் சரணாகதத்வமும் அவ்விதம் தானே. புண்யத்தினால்தான் மனிதன் ஒருவன் மற்றொருவனுடைய உயிரைக் காக்கிறான். உயிரைக் காப்பதும் புண்யம் தானே. ஸாதுக்கள் தர்மார்த்த காமமோக்ஷங்களாகிய நான்கு புருஷார்த்தங்களுக்குமே தயை செய்வார்கள். தர்மத்தினிடம் அன்புள்ள ரிஷிகள் அப்படிச் செய்வதை தர்மமென்று சொல்லுகிறார்கள். இவ்விதமாகவே பரதனையும், உன்னாலும், உன் பிதாவாலும் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை ஆளும்படி சொன்னாய். லோக அபவாதத்திற்குப் பயந்து, இக்ஷ்வாகு குலத்தின் தர்மத்தின் சிறப்பினால் பரதன் உனக்கு ராஜ்யத்தைத் திரும்பிக் கொடுக்க உன்னிடம் வந்தான். சத்ய விரதன் என்கிற நியமத்

தால் உன்னிடம்மிக்க பிரியமுள்ள பரதனை எவ்வளவு தூரம் ராஜ்யத்தை அரசாளுவதற்கு பிரயத்தனப் பட்டாய்? ஐயா, உன் பெருமைகளை நான் எவ்விதம் வர்ணிப்பேன் ?]

"இச்சாமாத்திரத்தில் மனுஷ்ய ரூபத்தினுல் என்னை அலங்கரித்துக் கொண்டு உங்களுடைய கிரஹத்திற்கு என்னை வெளிப்படுத்திக்கொள்வேன். பிரியமானவனே, என்னுடைய அம்சத்தினுல் தேஹத்தை எடுத்துக் கொண்டு பக்தர்களுக்கு சுகத்தைத் தரும் சரித்திரத்தை உண்டு பண்ணுவேன்." (835)

அந்த பவித்திரமான சரித்திரமாகிற ராம கதையைப் பெரும் பாக்கியசாலிகள் மிக்க நம்பிக்கையுடனும், விஸ்வாசத்துடனும் கேட்டு, மமதை, மதம், இவைகளைத் துறந்து இந்த சம்சார சாகரத்தை தாண்டுவார்கள். (பரா என்கிற சப்தத்தால் அறியப் படுபவளும்) ஆதி சக்தியுமான என்னுடைய ஸ்வரூப சக்தியாகிய ஜகந்மாயை, எந்த மஹானுபாவையின் உதவியால் ஜகம் எல்லாம் உற்பத்தி செய்யப்பட்டதோ, அவளும் என்னுடன் கூட அவதரிப்பாள்." (836)

"இந்தப் பிரகாரம் உங்களுடைய அபிலாஷையைப் பூர்த்தி செய்வேன். என்னுடைய வார்த்தைகள் சத்யமானது, சத்யமானது." இவ்விதம் கிருபாநிதியாகிய பகவான் அடிக்கடி அடிக்கடி சொல்லிக் கொண்டு, அந்தர்த்யானமடைந்தார். (837)

"அந்த ராஜதம்பதிகள் பகவானுடைய ரூபத்தையும் மதுரமான பேச்சுக்களையும் ஹ்ருதயத்தில் தாரணை பண்ணிக் கொண்டு கொஞ்ச காலம் ஆஸ்ரமத்திலிருந்தார்கள். பிறகு சமயத்தை அறிந்து, சரீரத்தைச் சுலபமாகத் தியாகம் செய்து, இந்திரபுரி யாகிற அமராவதியில் வசித்து வந்தார்கள்." (838)

பெரிய ஞானியாகிய யாக்ஞ்யவல்கியர் சொல்ல ஆரம்பித்தார். "பரத்வாஜரே, இந்த சுபமானதும் பவித்திரமானதுமான இதிஹாஸத்தை விருஷகேதுவான சம்பு பகவான் பார்வதியிடம் சொன்னுர். இப்பொழுது ராமஜன்மம் பூமியில் ஏற்பட்டதற்கு இன்னொரு காரணத்தையும் கேளும்." (839)

## மாஸ பாராயணம்—ஐந்தாவது நிறுத்தம்

[தியானம்

ஹே, ராமா உன் கவசத்தை அணிந்து கொண்டு, உன் நாமஜபத்தின் பலத்தினுலும், உன் தியான மஹிமைகளாலும் நான் உன் பதத்தைஅடைவேனுக. முற்காலத்தில் விருத்ராசுரன்

இந்திரனுக்குச் சொன்ன பொழுது, அவனுடைய பலத்திற்கு மூல காரணம் நாராயண கவசம் என்று சொன்னான். சிறந்த நாராயண பக்தனாய் விளங்கிய விருத்ராசுரன் தன் ஆத்மக் குறைவுகளைக் கண்டு தவத்தின் மகிமையினாலும், ஷடாக்ஷரம், த்வாதசாக்ஷரம், அஷ்டாக்ஷரம் ஆகிய மந்திரங்களின் பலன்களாகவும், பகவானுடைய ஒவ்வொரு அவதாரத்தின் மூர்த்திகளைக் கொண்டு அவனுடைய குணதோஷங்களைப் போக்கி, பகவானுடைய பக்தர்களின் அனுக்ரஹத்தால் அவனுடைய தேகமனோ மலங்களை நீக்கி, பகவானுடைய கிருபையை அடைந்து, தேவராஜனையும் மலைக்கவைக்கும்படி செய்துவிட்டான். அப்பேற்பட்ட நாராயண கவசம் சுகரால் சொல்லப்பட்டது. வாலகில்யர்களால் போற்றப் பட்ட கவசமும், சித்திரஸேனனால் ஸ்வயஅனுபவத்தால் அறியப் பட்டதுமான மகிமை பொருந்திய கவசம், கௌசிகனைக் ரக்ஷித்தது மாதிரி, என்னையும் காப்பற்றட்டும். என்னுடைய தோஷங்களை விலக்கட்டும். என் ஆத்ம குணங்களை விருத்தி செய்யட்டும். ராமஸ்மரணை என்னை விட்டு விலகக்கூடாது. அதுவே என் பரம தியானமாக இருக்கட்டும்.]

"ஹே பரத்வாஜ முனிவரே, கேளும். அந்த புண்யமானதும் பவித்திரமானதுமான புராணக் கதையைக் கேளும். எந்த கதை பார்வதிக்கு சிவபெருமான் உதாரஹ்ருதயத்துடன் சொல்லப் பட்டதோ, அழகானதும் சுந்தரமானதும் சிவமானதுமான புராதீனமான கதையைக் கேளும். இந்த உலகத்தில் கைகய தேசம் என்று பிரசித்தி பெற்ற தேசம் இருந்தது. அங்கே ஸத்ய கேது என்ற ஒரு அரசன் ஆண்டு கொண்டிருந்தார்." (840)

"அவன் தர்மத்தில் மிக்கப் பெரிய பற்றுதல் உள்ளவன்; நீதிமான்; மிக்கதேஜஸ்வி; மிகுந்த பிரதாபமுள்ளவன். நல்ல ஆசார சீலங்கள் உள்ளவன். பெரிய பலசாலி. அவனுக்கு இரண்டு புத்ரர்கள் இருந்தார்கள். அவர்களும் சகல ஸ்ரேஷ்டமான குணங்களுக்கு இருப்பிடமாகவும், யுத்தத்தில் பண்டிதர்களாகவும் இருந்தார்கள்." (841)

"மூத்தவனின் பெயர் பிரதாப பானு. இரண்டாவது பையனின் பெயர் அரிமர்த்தனன். இவர்களுடைய பாஹு பலம் ரொம்ப பிரசித்தமானது. யுத்தத்தில் பர்வதம் போல அசைக்க முடியாத பலம் பெற்றவர்கள்." (842)

"சகோதரர்கள் ஒருவருக்கொருவர் மிக்க அன்புள்ளவர்கள், எல்லா தோஷங்களையும் போக்கினவர்கள். அரசர் தன் மூத்த

குமாரனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்து விட்டு, ஸ்ரீஹரியினுடைய பாதங்களைப் பஜனை செய்வதற்காக வனம் சென்றார்.'' (843)

"பிரதாப பானு அரசனாக வந்த பின்பு, அவனுடைய புகழ் பரவியது. வேதங்களில் சொல்லிய பிரகாரம் அவன் தன் பிரஜைகளைக் காப்பாற்றினான். அவனுடைய ராஜ்யத்தில் பாபச் செயல்கள் கொஞ்சம் கூட கிடையாது.'' (844)

"அரசருக்கு ஹிதம் சொல்வதற்கு சுக்ராசாரியருக்குச் சமமான புத்தியுள்ள தர்மருசி என்கிற பெயருடைய மந்திரி இருந்தான். இவ்விதமாக புத்திமானான மந்திரி, பலவானான ராஜா, மிக்க பலமுள்ள தம்பி; மிகச் சிறப்புடன் பிரதாபபானு ராஜ்யம் ஆண்டு கொண்டு வந்தான்.'' (845)

[தியானம்

ஹே ராமா, காலத்தை ருசியாக்குபவர் மஹா கணபதி என்று புகழப்படும் விஷ்வக்சேனராமே. அவருடைய பரம கிருபையால் உன்னுடைய பரம ஆனந்தத்தை நான் அனுபவிக்கவேண்டும். அந்த மஹா கணபதியை சித்த யக்ஷ கணங்களுக்கும், மஹா காயன், நந்தீஸ்வரன், கிராமணி, விருஷபத்ஜவன், என்கிற கண நாயகர்களுக்கும், விநாயகர்களுக்கும், அதிபனாகவும், அக்ரகண்யராகவும் நினைக்கிறார்கள். அவர் உலகத்திற்கு ஈஸ்வரர். சௌம்ய ரூபமாகவும், கோரரூபராகவும், இருக்கிறார். மஹேஸ்வரருக்கு மிக்கப் பிரியர். அம்பிகையின் புதல்வர். மஹேஸ்வரருக்கு மிக்க பிரியமான புத்ரர். குஹனுக்கு அக்ரஜர். மூஷிகவாகனர். சரஸ்வதியின் தோழர். விக்னங்களைப் போக்குபவர். வேத வியாஸருக்கு மஹா பாரதத்தை எழுதி உதவியவர். சதுர்த்தியில் பூஜை செய்பவருக்கு அமோகமான ஐஸ்வரியங்களைக் கொடுப்பவர். வயிற்று வியாதிகளைப் போக்குபவர். மோதக ஹஸ்தர். பாசாங்குசம் போன்ற சதுர்வித ஆயுதங்களைத் தரித்தவர். ஸ்ரீரங்க க்ஷேத்ரம் நிலவுவதற்கு உதவியவர். பலாப்பழம், நாகப்பழம், அருகம்புல், வில்வதளம், ஆகியவைகளின் அர்ச்சனைகளில் திருப்தி அடைபவர். சகல சித்திகளையும் சகல வித்தைகளையும் கொடுப்பவர். நாராயணருக்கு அந்தரங்க மந்திரி. நாகராஜனை யக்ஞோபவீதமாக அணிந்து கொண்டிருப்பவர். பிராம்மணர்களிடம் மிக்கப் பிரியமுள்ளவர். கணபதி பண்டாசுர யுத்தத்தில் அம்பிகைக்கு உதவியவர். இப்பேற்பட்ட மஹா கணபதி சித்தலக்ஷ்மி சமேதராக என்னை அனுக்ரஹம் பண்ணி, ராம காரியத்தில் ஈடுபடச் செய்யவேண்டும். திருடமாக என் புத்தி ராமன்

சீதையிடம் செல்லவேண்டும். சியாமை போன்றவளும், தாமரை போன்ற இதழ்கள் உள்ள கருணை நிறைந்த கண்களை உடைய வளும், மிருதுபாஷியும், ராமனுக்குப் பிரியையானவளும், ராம னுக்கு சுகத்தை தருபவளுமான சீதை என்னை அன்புடன் ஆசி அளிக்கவேண்டும்.]

" அந்த பிரதாப பானுவுக்கு நான்கு விதமான சைனியங்கள் இருந்தன. யுத்தத்தில் கணக்கற்ற வெற்றிகளை அவர்கள் அடைந்தவர்கள். புகழில் ஆசையுள்ளவர்கள். அவர்களுடைய யுத்த கோஷங்கள் சதா கேட்ட வண்ணமாகயிருந்தன." (846)

" திக்விஜயத்திற்காக சேனையைத் தயாரித்து அந்த ராஜா சுபமான தினத்தில் யுத்த முழக்கம் செய்து கொண்டு புறப் பட்டான். அநேக யுத்தங்கள் செய்தான். தனது பலத்தினுல் அநேக அரசர்களை ஜயித்தான்." (847)

" அவனுடைய புஜபலத்தால் அ ண்டமான பூமி ஏழு தீவு களுடன் அவன் வசமடங்கியது. ஏக மாத்திரமாக சம்பூர்ண மண்டலத்திற்கு அதிபதியாக, சக்கிரவர்த்தியாக பிரதாபபானு விளங்கினுன்." (848)

" சம்சார முழுவதும் தன் தோள் வலிமையினுல் சம்பாதிக்கப் பட்ட புகழுடன் தன் சொந்த ராஜ்யத்துதிற்கு விஜய மூர்த்தியாக திரும்பி வந்தான். தர்மார்த்த காமாதிகளான புருஷார்த்தங்களை சமயப்படி அனுபவித்து வந்தான்." (849)

" அவனுடைய பிரதாபத்தினுல் இந்த பூமி காமதேனுவாக எல்லோருடைய அபீஷ்டங்களையும் பூர்த்தி பண்ணியது ஸகல பிரஜைகளும் துக்கங்கள் நீங்கினவர்களாக சுகத்துடன் ஸகல ஸ்திரி புருஷர்களும் தர்மாத்மாக்களாக விளங்கினுர்கள்." (850)

மந்திரி தர்மருசி ஹரியினுடைய பதத்தில் மிக்கப் பிரிய முள்ளவன், ராஜாவுக்கு ஹிதம் செய்வதில் நிபுணன். அப்பேற் பட்ட மந்திரி, ராஜகுரு, சாதுக்கள், பித்ருக்கள், பிராம்மணர்கள், ஆகியவர்களைப் பூஜித்து, சேவை பண்ணிக் கொண்டிருந்தான்." (851)

[தியானம்

ஹே ராமா, நான் உன்னிடம் தோழத் தன்மையை வேண்டு கிறேனே, அதுபோல நான் தப்பு செய்வதிலும் மனப்பூர்வமாக உன் தண்டனையையும் வேண்டுகிறேன். இல்லாவிடில் எப்படி யப்பா உன் பெருமை எனக்கு விளங்கும்? ஆகாயமும் பூமியும் அதன் இஷ்ட பிரகாரம் நடந்து கொண்டால் இரண்டும் ஒன்றுகி

விடும். அது மாதிரி நக்ஷத்திரங்களும், சமுத்திரமும், திசைகளும், சூரியன், அக்னி, சந்திரன், வாயு, எல்லோரும் தர்மமாகவும் தங்கள் கடமைகளை ஒழுங்காகச் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் உன்னிடம் பயத்தினாலும், உன் தண்டனைக்குப் பயந்தும், உன் வீர்யத்தினாலும் தங்கள் ஸ்தானங்களின் நழுவுதலை அடைகிறதில்லை. அர்ஜுனன் உன்னை எவ்விதம் ஸ்வாமி பக்தியுடன் வேண்டிக் கொண்டானோ, எவ்விதம் ஆஞ்சநேயர் ஸதா ஸ்வாமி பக்தியுடன் விளங்குகிறானோ, அதே விஸ்வாசத்துடன் உன்னை நான் கைங்கர்யம் செய்யவேண்டும்.]

''வேதத்தில் சொல்லியபடி ராஜாவுக்குள்ள தர்மத்தில் ஈடுபட்டு, ராஜா சர்வ மரியாதையுடனும், தர்ம வியவஸ்தையுடனும், ஜனங்களைப் பரிபாலித்து வந்தான். ஒவ்வொரு தினமும் அநேக விதமான தான தர்மங்களை செய்து வந்தான். வேத சாஸ்திர புராணங்கள் எல்லாவற்றையும் விதிப்பூர்வமாகக் கேட்டான்.'' (852)

''அநேக விதமான குளம், குட்டைகள், தண்ணீர் தேக்கங்கள், பூந்தோட்டங்கள், பிராம்மணர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்தல் ஆகிய நற்காரியங்களைச் செய்தான். கோயில்கள் பல கட்டினான். நிறைய ஸ்நான கட்டங்களையும் ஏற்படுத்தினான்.'' (853)

''வேத புராணங்களில் எந்தப் பிரகாரம் யாகங்கள் சொல்லப் பட்டிருக்கின்றனவோ, அவை ஒவ்வொன்றையும் வரிசை கிரமமாகச் செய்து, பிறகு ஒவ்வொன்றையும் மிகுந்த பிரேமையுடன் ஆயிரம் தடவைகள் செய்தான்.'' (854)

''ராஜாவுக்கு மனத்தில் அபிலாஷைகள் ஒன்றும் இல்லை. பரம வித்வானாகிய ராஜா வாக்கு மனம் செய்கை இவைகளால் செய்யப்படும் தர்மங்களை பகவான் வாசுதேவருக்கு அர்ப்பணம் செய்தான்.'' (855)

''ஒரு சமயம் அரசன் குதிரையின்மீது ஏறி சவாரி செய்து கொண்டு வேட்டைக்குக் கிளம்பினான். விந்திய பர்வதத்தில் அடர்த்தியான காட்டில் அநேக விதமான மிருகங்களை வேட்டையாடினான். (856)

[தியானம்

ஹே ராமா, என் குரு நாதர்களான விஸ்வாமித்திரர், பராசரர், வஸிஷ்டர், இவர்களுடைய மஹா சரித்திரங்களைப் படிக்க, கேட்க என் மனம் மிக்க சந்தோஷமடைகிறது. அடியார்க்

கடியார் என்கிற மனோபாவத்தையும், உள்பெரும் திருவிளையாடல் களில் அப்பேற்பட்ட மஹானுபாவர்களின் அடக்கமும்விளங்குகிற தல்லவா ? முன்னொரு காலத்தில் பார்க்கவர்கள் தீர்க்க ஆயுளினால் வெறுப்பை அடைந்து, க்ஷத்திரியர்களிடமிருந்து மரணத்தை விரும்பி, வேறுதேகம் எடுத்தார்கள். ஆனால் அவர்கள் வமிசத்தில் உதித்த ஔரவர் தனக்கு சக்தியிருந்தும் பாபச் செயல்களை அடக்காமல் ஒதுங்கி நின்றால், பாவம் தனக்கு வரும் என்கிற தர்மத்தால் க்ஷத்திரியர்களிடம் கோபத்தினால் கொந்தளிக்க, பித்ருக்கள் சொன்னபடி, கோபத்தை சமுத் திரத்தில் விட்டு, எல்லோருக்கும் தயை செய்தார். அது மாதிரி வஸிஷ்டர், விஸ்வாமித்ரர் ஒருவரையொருவர் பரிசோ தித்து, காமக்ரோதங்களை அடக்கினார்கள். வஸிஷ்டர் எல்லோ ரிலும் வரிஷ்டர் (மிக்க மேன்மையானவன்) என்றும், விஸ்வா மித்திரர் எல்லோருக்கும் பிரியன், ஹிதகாம்யன் என்கிற பெயர் களை இருவர்களும் பெற்றார்கள். ஆனால் பராசரரோ, தன் பிதா வாகிய சக்திக்கு ஏற்பட்ட கதியையும், கோபத்தினால் வந்த சாபத்தின் பலனையும் அனுபவித்தபடியால், புலஸ்தியர், வஸிஷ் டர், குஹன் இவர்களின் அனுக்ரஹத்தால் பரம் பொருளான பகவானின் பெரும் குணங்களைக் கண்டார். கோபம் பொல்லா தது; ஆனால் பொறுக்கத் தக்கது. எல்லோரிடமும் தயை காட்டுதல் மிகச் சிறந்தது. பகவானுடைய பெரும் லீலைகளுக்கு உடந்தையாக விருந்து, ஞான ஸ்வரூபத்தை அடைந்து, அவ னுடைய அடியார்களுக்கும், பகவானுடைய லீலைகளுக்கும் கைங்கர்யம் செய்வது என்கிற பெருமைவாய்ந்த தத்துவங்களை லக்ஷ்மணன், சீதை இவர்களின் வார்த்தைகளாலும், ஆசார சீலங்களாலும் தெரிந்து உனக்கும், உன் அடியார்களுக்கும், அவர்களின் அடியார்களுக்கும் நான் தொண்டு புரிவேனாக. ராம கைங்கர்யமே பெரிது என்று நான் நினைக்கும் பாக்யம் என்று வருமோ என காலதேவரை நான் சதா நமஸ்கரிக்கிறேன்.]

"அந்த ராஜா வேட்டையாடி வரும்போது ஒரு பெரிய முள்ளம்பன்றியைக் கண்டான். அந்த பெரிய பன்றி ராஹு வினால் பீடிக்கப்பட்ட சந்திரனைப்போல, அந்த காட்டை பீடித்துக்கொண்டு ஓட ஆரம்பித்தது. எவ்விதம் சந்திரன் ராஹுவின் வாயில் அகப்பட்டு வெளியில் பெரியதாக தொங்கிக் கொண்டு தோன்றுமோ, அதுமாதிரி அதனுடைய பற்கள் விளங்கின. அந்த முள்ளம்பன்றி அதனால் கர்வமடைந்து க்ரோதத்தினால் பெரிதாக வளர்ந்து இருந்தது." (857)

"அப்பேற்பட்ட பயங்கரமான பற்களினால் அதனுடைய சோபையும் அதிகரித்திருந்தது. சரீரமும் பயங்கரமாகவும் பெரியதாகவுமிருந்தது. குதிரையின் குளம்புகளின் சப்தத்தைக் கேட்டு, அது தன் காதுகளைத் தீட்டிக்கொண்டு கவனத்துடன் இருந்தது." (858)

"நீலபர்வதம்போல விசாலமான சரீரத்தையுடைய அந்த முள்ளம்பன்றியைக் கண்டு "நீ என்னிடம் தப்ப முடியாது", என்கிற பிடிவாதத்துடன் ராஜா தனது குதிரையை வேகமாக ஓட்டினான். முள்ளம்பன்றியை தொடர்ந்து விரட்டினான்." (859)

"அதிவேகமாக தன்னை நோக்கிவரும் குதிரையைக் கண்டு, வாயுவேகத்துடன் முள்ளம்பன்றி ஓடியது. ராஜாவும் அம்புகளைப் பூட்டி வெகுசீக்கிரமாக அடித்தான். ஆனால் அந்த முள்ளம்பன்றியோ ஓடி தப்பித்துக்கொண்டது." (860)

"பலதடவைகள் ராஜா அம்பு எய்தபோதிலும், அந்தப் பன்றி தப்பி ஓடி தன்னை விடுவித்துக்கொண்டது. சில சமயங்களில் தன்னைக் காண்பித்துக்கொண்டது. ராஜா க்ரோதத்தினால் அதைத் தொடர்ந்து ஓடிக்கொண்டிருந்தான்." (861)

"பிறகு அந்தப் பன்றி ஒரு அடர்ந்த காட்டில் நுழைந்தது. அந்த காடு யானையோ, குதிரையோ அதில் சுலபமாக நுழைய முடியாதபடி அடர்த்தியாகவிருந்தது. ராஜா தனியாகத்தான் இருந்தான். அதில் நுழைவதில் நிறைய க்லேசங்கள் இருந்தன. இருந்தாலும் அரசன் பொருட்படுத்தாமல் அதைத் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தான்." (862)

"அரசனுடைய தைரியத்தைக் கண்டு, அந்தப் பன்றி ஒரு பெரிய மலைக்குகையில் ஒளிந்துகொண்டது. அதைப் பிடிப்பது கடினம் என்று தெரிந்துகொண்ட அரசன் மனவருத்தத்துடன் திரும்பினான். ஆனால் அவன் அந்த கோரமான வனத்தின் பாதையை மறந்துவிட்டிருந்தான்." (863)

"பெரிய சிரமம் எடுத்துக்கொண்டதால் அவன் களைப்புற்றிருந்தான். குதிரையும் தாகத்துடன் தவித்தது. அரசன் ஏதாவது தண்ணீர் கிடைக்குமா என்று சுற்றி அலைந்தான்." (864)

"வெகுநேரம் கழிந்த பின்பு அவன் ஒரு ஆஸ்ரமத்தைக் கண்டான். அந்த இடத்தில் முனிவேஷத்தைக் கபடமாக அணிந்துகொண்டிருந்த ஒரு ராஜா இருந்தான். எந்த அரசனுடைய ராஜ்யத்தை பிரதாபபானு ஆக்ரமித்துக்கொண்டானோ, அந்த அரசன்தான் அவன். யுத்தத்திற்குப் பயந்து ஒளிந்து

கொண்டிருந்து, முனிவேஷத்தைத் தரித்துக்கொண்டிருந்தான் அவன்.'' (865)

"பிரதாபபானுவால் உண்டாக்கப்பட்ட கஷ்டத்தை நினைத்துக் கொண்டு அவன் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தான். அதனால் அவன் தன் வீட்டிற்குத் திரும்பாமல் அந்தக் காட்டில் வாழ்ந்துகொண்டு வந்தான். யதிருச்சையாக அவன் பிரதாப பானுவைப் பார்த்தான்.'' (866)

"தரித்திரனுடைய மனத்தில் எழும் க்ரோத பாவங்களுடன் தபஸ்வி வேஷத்திலிருந்த அந்த அரசன் பிரதாபபானு தன்னிடம் வருவதைக் கண்டான். உடனே அவனை நன்றாக அடையாளம் புரிந்து கொண்டான்.'' (867)

[தியானம்

ஹே ராமா, உன்னிடமிருந்து பிரிந்து போனால் நான் மிகவும் துக்கப்படுவேன். உன் ஸ்ருஷ்டியின் பெருமையையும் தெரிந்து, உன் அவதாரத்தின் பெருமைகளையும் நான் அறிந்துகொண்டு, உன் லீலைகளின் அனுபவங்களையும் நான் தீர்க்க ஆயுளினாலும், மன அடக்கத்தாலும் உன்மீதுள்ள அபார பிரேமையினாலும், அனுபவிக்க வேண்டும். ராதையின் அன்பு மிக்கப் பிரஸித்தமானது என்று சொல்லுகிறார்கள். பார்வதிகூட வியக்கும்படி சில சமயங்களில் அது இருந்தது. கோலோகத்தில் கணேசரைப் பூஜை பண்ணி, ஸர்வ விக்னங்களையும் போக்கி உன்னைப் பிரிந்தும் அவள் திரும்ப அடைந்தாள். அவளுடன்கூட நந்தகோபர் யசோதை, வசுதேவர், கோபிகள், கோகுலத்தில் வசித்தவர்கள், எல்லோரும் கணேசரை ஆராதித்து உன்னை அடைந்து, கோலோகத்தில் ஆனந்தமயமாக விருக்கிறார்கள். அயோத்தியில் வசிக்கும் ஜனங்களுக்கும் இந்த பாக்யம் ஏற்பட்டது. கலிகாலத்தில் விக்னேஸ்வரருடைய பூஜையும், ராதையின் ஸ்மரணமும், உன்னுடைய சாஸ்வதமான மோக்ஷ பதத்தைக் கொடுக்கும். நான் அப்பேற்பட்ட பூஜையைச் செய்து, உன் பாதத்தை அடையவேண்டும். அதற்கு உன்னுடைய அபாரமான கருணை வேண்டும்.]

"ராஜா தாகத்தில் புத்தியுள்ளவனாகவும், மனச்சோர்வுடனும் வியாகுலமடைந்திருந்தபடியால், அந்த முனியை அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை! நன்றாக வேஷம் அணிந்து கொண்டிருந்தபடியால், அவனை மஹாமுனி என்று ராஜா நினைத்து குதிரையிலிருந்து, அவரை தண்டனிட்டான். ஆனால்

அவன் மஹா கெட்டிக்காரன் ஆனபடியால், தன் நிஜப்பெயரைச் சொல்லவில்லை.'' (868)

''ராஜாவின் நிலைமையை அறிந்து, முனி ஒரு குளத்தைக் காட்டினர். ரொம்ப சந்தோஷத்துடன் ராஜா தண்ணீர் அருந்தி தன் குதிரைக்கும் ஜலத்தை அருந்தச்செய்து இருவர்களும் தாக சமனம் செய்தார்கள்.'' (869)

''சகல சிரமங்களும் தீர்ந்துவிட்ட பிறகு, அரசர் மீண்டும் சுகம் பெற்றான். அந்த முனியும் சூரியாஸ்தமனம் ஆனபடியால் அந்த அரசனை தன் ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்றான். நல்ல ஆசனம் கொடுத்து தபஸ்வி வேஷத்திலிருந்தவன் மிருதுவான பாஷையினால் சொல்ல ஆரம்பித்தான்.'' (870)

''நீர் யார்? அழகான யுவாவாக விருக்கிறீர்? உமது ஜீவனையும் கருதாமல் ஆபத்துக்கள் நிறைந்த இந்த காட்டிற்கு தனியாக ஏன் வந்தீர்? உம்மிடம் ராஜ லக்ஷணங்கள் நிறைய இருக்கின்றன. அதனால் நான் உம்மிடம் மிக்கக் கருணையுடன் இருக்கிறேன்'' (871)

ராஜா சொன்னார்: ''முனீஸ்வரரே கேளும். பிரதாபபானு என்று ஒரு ராஜா இருக்கிறான். நான் அவனுடைய மந்திரி. வேட்டைக்கு வந்தபோது வழிமறந்துவிட்டது. மிக்க பாக்ய வசத்தால் உம்மைக் கண்டு உமது சரணாரவிந்தங்களை அடி பணிந்தேன்.'' (872)

''உம்முடைய தர்சனம் துர்லபமானது. அதனால் நான் இனி நன்மையை அடைந்துவிடுவேன்.'' முனிவர் பதில் சொன்னார்: ''ஐயா, ராத்திரி வந்துவிட்டது. உம்முடைய நகரம் இருபத்துஏழு யோசனைகள் தூரம் இருக்கிறது'' (873)

''அரசனே! கேளு. இதுவோ கோரமான ராத்திரி; வழியோ அடர்த்தியான காடு. ஆகவே வழி கண்டுபிடிக்கிறது மகா கஷ்டம். இதை அறிந்துகொண்டு இந்த ராத்ரி இவிடம் தங்கி விட்டு, காலையில் புறப்பட்டுபோ.'' (874)

துளசிதாஸர் சொல்லுகிறார்: ''நடக்கவேண்டியது நடந்தே தீரும். அதை ஒட்டித்தான் மித்ர சகாயமும் நேரிடும். சகாயம் தானாக வரும், அல்லது அது அவனை அழிவிற்கு மூலகாரணத் திற்கும் இழுத்துக்கொண்டு போகும்'' (875)

அரசர் சொன்னார்: ''ஐயா, சரி, அப்படியானால் உமது இஷ்டப்படி நான் தங்குகிறேன்.'' குதிரையை மரத்தில் கட்டினான். பிறகு ராஜா ஆஸ்ரமத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். அரசர் அந்த முனியைப் பலவிதமாகப் புகழ்ந்து அவ

ருடைய சரணங்களில் நமஸ்கரித்துவிட்டு தன் பாக்யத்தைப் புகழ்ந்தான். (876)

பிறகு அரசன் அழகான கோமளமான குரலில் சொல்ல ஆரம்பித்தான். "ஹே ஸ்வாமி, உம்மை என் பிதாவைப் போல நினைத்து வந்தனம் செய்கிறேன். முனீஸ்வரரே, நீர் என்னை உமது புத்ரனாக நினைத்து, நான் உமக்கு சேவகன் என்று பாவித்து, உம்முடைய பெயர், இதர விருத்தாந்தங்களைச் சொல்லவேண்டும்." (877)

"ராஜாவுக்கு அந்த முனீஸ்வரரை அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ராஜாவை முனிக்கு அடையாளம் தெரிந்துவிட்டது. ராஜா ஸுஹ்ருதயமுள்ளவன். முனியோ கபட நெஞ்சுள்ளவன். அதிலும் பரம சத்ரு. ஜாதியில் க்ஷத்திரியனானபடியாலும், ஒரு காலத்தில் அரசனாக இருந்தபடியாலும், முனி தன் கருத்தை நிறைவேற்றத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தான்." (878)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மணா, சீதா உங்கள் கிருபை எனக்கு வேண்டும். வனத்தில் சியாமையும் ஸ்பரிசிப்பதில் சுகத்தை தருபவளும், பதிதர்மமே பெரிதென்று நினைத்து ராஜ்ய போகங்களை திரஸ்கரித்தவளும், பிரியதர்சனையும், மனோரமையுமான சீதையை நினைத்து புலம்பும் சமயம், ராமனுக்கு ஆறுதல் அளித்த மிக்க பாக்யமுள்ள லக்ஷ்மணனுக்கு நமஸ்காரம். நமஸ்காரம். அதுமாதிரி இருவர்களுக்கும் யத்ருச்சையாக ஆறுதல் அளித்து, சுக்ரீவனுக்கும் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும், பிற்பாடு சீதைக்கும் ஆறுதல் அளித்த ஆஞ்சநேயருக்கும் நமஸ்காரம். ருக்யஜுர் ஸாம வேதங்களிலும் வியாகரணத்திலும் இன்சொல்லால் மனத்தை அபஹரிக்கிறவருமான என் குருநாதருக்கு நமஸ்காரம். அறிவுடன் இருந்தும் வினய சம்பன்னனாகவிருந்த ராமதூதனுக்கும் நமஸ்காரம். ராமகவசம் அணிந்து, பிறர்களை மஹாபயங்களிலிருந்து காப்பாற்றும் மஹாவீரருக்கு நமஸ்காரம். அஞ்சனாதேவியின் செல்வமும், வாயுவின் புத்ரரும், சிவசக்தியின் ஐக்கிய ரூபமாக விளங்கும் மாருதிக்கு நமஸ்காரம். தியாகராஜர் போற்றும் ராமபக்தனுக்கு நமஸ்காரம். ஐயா, உன் ஸ்ருஷ்டியின் விநோதமும், உனக்கே ஏற்பட்ட நடத்தும் திறமையையும், மனித, தேவ, பக்ஷி, மிருக, ரிஷி, சித்தயக்ஷகணங்கள், எல்லா வகை ஜாதிகளுக்கும் மிகப் பிரியமுள்ள பகவானே, உன் பெரு

மையையும் நிர்வாகத்திறமையையும் நாரதரும் ஆழ்வாராதிகளும் ஆஞ்சநேயர்போன்ற மஹா பக்தர்களும் அல்லவா அதை அறிந்திருக்கிறார்கள். அப்பேற்பட்ட தயாளுவான நீர் என்னை காப்பாற்ற வேண்டும்.]

"அந்த சத்ருவான தபஸ்வி ராஜ்ய போகங்களை நினைத்து, துக்கப்பட்டுக் கொண்டுயிருந்தான். அவனுடைய மனது கொழுந்துவிட்டு எரியும் இரும்பு உருக்காலை மாதிரியாகத் தவித்தது. ராஜாவின் சரளமான வசனங்களைக் கேட்டு தன் வைரத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு, "இப்போது சரியான சமயம்" என்று முனிவேஷதாரி நினைத்து, ஹ்ருதயத்தில் சந்தோஷப்பட்டுக் கொண்டான்." (879)

"அவன் தனது கபடமான மனத்தை மறைத்துக்கொண்டு, பக்தியுடன் கோமளமான வசனங்களைச் சொன்னான். "என்னுடைய பெயர் பிகாரி (பிச்சை வாங்குபவன்.) எனக்கு தனமுமில்லை. வசிக்கிறதற்குக்கூட வீடு கிடையாது." (880)

ராஜா பதில் சொன்னான்: "ஐயா, உமக்கு ஈடாக அறிவாளி ஒருவரும் இல்லை. நீர் சகலவிதமான அபிமானங்களை விட்டவர். உம்முடைய நிஜஸ்வரூபத்தை நீர் முயற்சியுடன் மறைத்துக்கொண்டிருக்கிறீர். உங்களைப் போன்ற ஞானிகள் தன் அடக்கம் கொண்டு, எல்லாவிதத்திலும் சௌக்கியமாக இருக்கிறார்கள்." (881)

"இந்தக் காரணத்தால் அல்லவா ஸாதுக்களும் வேதங்களும், அஹங்காரமற்றவர்களும் தீனர்களுமான சாதுக்களைப் புகழ்ந்து, அவர்களே பகவானுகவும் ஹரிக்கு மிக்கப் பிரியமுள்ளவர்களாக இருக்கிறார்கள் என்று பறைசாற்றுகிறார்கள். அகிஞ்சனத்வமும், மமதையும் மானமும் மில்லாமையும் பகவானுக்குப் பிரியமானதன்றோ என்று அவர்கள கோஷிக்கிறார்கள். உம்மைப் போன்ற பிகாரிகள் பிரும்மா, சிவனுக்கும் சந்தேகத்தை உண்டு பண்ணுகிறார்கள். வாஸ்தவமாக இவர்கள் பிச்சை எடுப்பவர்களா அல்லது ஸாதுக்களா என்று அவர்கள் நினைக்கும்படி செய்துகொள்ளுகிறார்கள். (882)

"நீர் எவ்விதம் இருந்தாலும் உம்முடைய பாதகமலங்களில் நான் சரணம் அடைந்து நமஸ்கரிக்கிறேன். ஹே ஸ்வாமி, தாங்கள் தயவுசெய்து என்மீது கிருபை செய்யவேண்டும்." அந்த முனி வேஷம் தரித்த சத்ரு தன்மீது ராஜாவின் அபாரமான பிரீதியையும் விஸ்வாசத்தையும் கண்டு. (883)

[தியானம்

ஹே ராமா, சீதா நீங்கள் இருவர்களும் புருஷசக்தி ரூபங்கள். நீங்கள் இருவரும் ஸத்வம்தமஸ். உங்கள் இருவருக்கும் ஏற்பட்டது ரஜஸ். ஆக மூன்று குணங்களும் சேர்ந்து உலகவியவ காரங்களை நடத்துகின்றன. தமஸ் என்னும் குணத்தை யோக மாயை என்றும், ஸத்வத்துடன் கூடி யோகநித்திரை என்று சொல்லுகிறார்கள். ஸத்வத்தைத்தான் ஆனந்த மயம் என்றும், ஆனந்த ஸ்வரூபம் என்றும் சொல்லுகிறார்கள். பராசக்தியே, மஹா சரஸ்வதி, மஹாலக்ஷ்மி, மஹாகாளி என்று சொல்லப் படுகிறாள். இம்மூன்று தத்வங்களும் ஒன்று சேர்ந்து சண்டி, சாமுண்டா என்று சொல்லுகிறார்கள். மனித ரூபத்தை எடுத்து மனித ஸ்வபாவத்தால் மேலிட்ட ராமனுக்கு மஹா மோகம் ஏற்பட்டபோது, சீதையைத் தேடும் சமயத்தில் சீதையின் அழகையும் குணங்களையும், பிறப்பின் மகிமைகளையும் நினைத்து அவளுடன் சேர்ந்து வாழ்வதில் மனச் சந்தோஷமும், அவளை விட்டுப் பிரிவதால் விரஹதாபமும், அவளுடைய சேர்க்கையின்மையினால் ஏற்படும் பாக்கிய ஹீனத்தையும் கண்டு, அவளையே ஸ்துதி பண்ணினால், அவளும் அவருடைய நன்மைக்காக லக்ஷ்மணரையும், ஆஞ்சநேயரையும் சுக்ரீவ விபீஷணசக்யத்தையும், தேவ அம்சங்களான வானரங்களின் உதவியையும் கொடுத்தாள். அவளுடைய காருண்யம் மிகப் பெரியது. தன்னையும் தவத்தினால் காப்பாற்றிக்கொண்டு, ராமனிடம் திடநம்பிக்கையுடன் வாழ்ந்து, ராமனுக்கும் உதவி பண்ணினாள் சீதை. அவளுடைய குண விசேஷங்களை யாரால் சொல்லமுடியும்? அவளே ஸம்சாரக் கட்டுதல்களுக்கும், முக்திக்கும் காரணமான சாஸ்வதமான ஞான வித்யை. "எவனை நான் விரும்பினேனோ, அவனை நான் மிகப் பெரியவனாக்குவேன், அவனை படித்தவனாக்குவேன், ரிஷியாயும் ஸுமேதனாகவும் செய்வேன்" என்று தேவியே வேதத்தில் தேவி ஸூக்தத்தில் சொல்லுகிறாள். ஸுமேதஸ், மேதஸ் என்கிற பெயர்கள் வசிஷ்டருக்கு மற்ற ஒரு பெயர் என்று லக்ஷ்மி தந்திரத்தின் வசனங்களால் தெரியவருகிறது. சாகம்பரி என்றும், ஜயலக்ஷ்மி என்றும் துர்க்காதேவி என்றும் பீமா தேவி என்றும், மஹாலக்ஷ்மி என்றும் அவளே சொல்லப்படுகிறாள். நாராயணி என்றும் அழைக்கப்படுகிறாள். அவளால் நான் ராமபக்தனாக விளங்கவேண்டும்.]

எல்லாவிதத்திலும் ராஜாவை தன் வசம் பண்ணி அதிக ஸ்நேகத்துடன் கபட வேஷம் தரித்த முனி சொன்னான். "ஹே

ராஜன், கேளு, எனக்கு இவ்விடத்தில் வசித்து ரொம்ப நாளாகி விட்டது.'' (884)

'' இதுவரை என்னிடம் ஒருவரும் வரவில்லை. நானும் என்னை ஒருவனிடமும் வெளிப்படுத்திக் கொண்டதில்லை. ஏனென்றால் லோகத்தால் அக்னிக்கு ஸமமாக ஸம்மானிக்கப்படுவது தபஸ்வியின் சாந்தமான வாழ்க்கைதான். அது வனத்தைக் கூட எரிக்கும் சக்தி உள்ளது என்று கருதப்படுகிறது.'' (885)

துளசிதாஸர் சொல்லுகிறார். '' ஸுந்தரமான வேஷத்தைக் கண்டு மூடர்கள் மாத்திரமல்ல, கெட்டிக்கார மனிதர்கள் கூட ஏமாந்துபோகிறார்கள். அழகான மயிலைக் கண்டு, அதனுடைய குரலை அம்ருதத்திற்கு சமம் என்று எண்ணக் கூடியதாகவிருக்கிறது. ஆனால் அப்பேற்பட்ட மயிலின் ஆகாரமோ சர்ப்பமாகவிருக்கிறது.'' (886)

கபடமான தபஸ்வி சொல்ல ஆரம்பித்தான். '' நான் உலகத்திலிருந்து என்னை மறைத்துக்கொண்டு தனியாக வாழ்ந்து வருகிறேன். ஶ்ரீ ஹரியை விட்டு விட்டு, யாவராலும் எனக்கு நன்மை இல்லை. அந்த பிரபுவை அனன்ய பிரயோஜனமாக நான் பூஜித்து வருகிறேன். அந்த பிரபுவுக்கு எல்லாம் தெரியும். நானாக ஒருவருக்கும் என்னைப்பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம். நீரே சொல்லும். ஸம்சாரத்தின் வாழ்க்கையில் திருப்தி அடைவதால் எவ்விதமான ஸித்தி அடையக்கூடும்?'' (887)

'' நீர் அழகான புத்தியுள்ளவர். கள்ளம் கபடு இல்லாதவர். எனக்குப் பிரியமாகவுமிருக்கிறீர். உம்மிடத்தில் எனக்கு பரம ப்ரீதி உண்டாகியிருக்கிறது, நான் நல்ல விஷயங்களை உம்மிடமிருந்து மறைத்தால், பெரிய பயங்கரமான தோஷங்கள் எனக்கு ஏற்படும்.'' (888)

'' எவ்வளவுக்கெவ்வளவு உதாஸீனமான வசனங்களை தபஸ்வியானவன் அரசனிடம் சொல்ல ஆரம்பித்தானோ, அவ்வளவுக்கவ்வளவு ராஜாவுக்கு தபஸ்வியினிடம் பிரியம் அதிகரித்தது. அரசன் மோஹப்பட்டு விட்டான். அரசன் பூர்ணமாக கர்ம, மன, வசனங்களால் தன் வசமானதைக் கண்டு, தபஸ்வி மீண்டும் சொல்ல ஆரம்பித்தான்.'' (889)

[தியானம்

ஹே ராமா, சீதா உங்கள் இருவர் லீலைகளையும் கண்டு கேட்டு பூமியில் அவதரித்த காரணங்களையும் அறிந்த தேவர்கள்

உங்களைப் புகழ்ந்தார்கள். அதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் உங்களுக்கு விருப்பு வெறுப்பு இல்லாமலும் கல்யாண குணங்களு டன் விருந்தும், குண தோஷங்கள் இல்லாதவர்களாகவும், அபார காருண்யத்துடனும், ஸத்யத்திலும், தர்மத்திலும், பற்றுதல் இல்லாமலும், ஸ்வயமாக ஆனந்தித்து, ஆஸ்ரிதர்களை ஆனந்தப் படுத்துகிறவர் களாகவுமிருக்கிறீர்கள். உதாரணமாக மதுகைட பர்களை வதைத்த சமயம் யோகநித்ரையால் தூண்டப்பட்டவராக, ஹே நாராயணா, நீர், அவர்களுக்கும் அவர்கள் பீடித்த பிரம்மாவுக் கும் நிக்ரஹ அனுக்ரஹம் செய்து, கீர்த்தியையும் நீர் அடைந்தீர். அதுமாதிரி மஹிஷாசுரவதத்தின் சமயம், தேவியானவள் தேவர் களின் ஒவ்வொரு அம்சத்தின் சிறந்த தேஜஸால் சேர்க்கப்பட்ட குவியல் போலவும், ஒவ்வொரு தேவர்களின் ஆயுதங்களால் அலங்கரிக்கப்பட்டவளாகவும் ஆவிர்பவித்து மஹிஷனுடைய சேனையையும், பிற்பாடு மஹிஷனையும் கொன்று அவனை தேவ லோகத்திற்கு அனுப்பினாள். தேவ சத்ருவான அவனை அழித்துவிட்டு மஹாத்மாவான இந்திரனால் துதிக்கப்படும் சமயம், "அம்மா, உன் பராக்ரமத்தை எத்துடன் ஒப்பிடுவது? இவ்வளவு அழகானதும், சத்ருக்களுக்குப் பயத்தை அளிப்பது மான தேஜோ மயமான ரூபம் எங்கே? மனதில் கிருபையும் சண்டையில் கடுமையும், பக்தர்கள் கேட்டதை அளிக்கும் இந்தச் சிறந்த குணங்கள் உன்னிடத்தில் தான் இம்மூவுலகங்களிலும் காணப்பட்டன. நீ சத்ருக்களை அழித்து, மூவுலகங்களையும் காப்பாற்றி பிற்பாடு அவர்களுக்கும் ஸ்வர்க்க கதியைக் கொடுத்தாய். சண்டிகே, உன்னுடைய மிருதுவான தோற்றங் களும் உன்னுடைய கடுமையான தோற்றங்களும் எவை உலகங் களில் சஞ்சரிக்கின்றதோ, அவைகள் எல்லாவற்றையும் நான் நமஸ்கரிக்கிறேன். எம்மையும் இவ்வுலகையும் காப்பாற்று. நான்கு திசைகளிலும் உன்சூலத்தை வீசி எங்களை ரக்ஷி. நாங்கள் நினைக்கும்போதெல்லாம் எங்கள் இன்னல்களை அழிப் பாயாக. எந்த மானிடன் இந்த ஸ்தோத்திரத்தால் உன்னைத் துதிக்கிறானோ அவனுக்கும் நீ பிரஸன்னமான மனத்துடன் செல்வம், செழிப்பு, வளம், மக்கள் மனைவி முதலிய ஸம்பத்துக் களின் வளர்ச்சியைக் கொடு." என்று கேட்கப்பட்ட சதக் ருதுவை, (இந்திரனை) பத்ரகாளியாகிய நீ "அப்படியே ஆகட்டும்" என்று சொன்னாயே. அதே வாக்கால், அம்மா, உன்னை நான் இந்திரஸ்துதியினால் ஆராதிக்கிறேன். தாயே, சதாகிருபையுடன் என்னிடமும் உலகங்களினிடமும் இரு.]

  

"ஹே ராஜாவே, என்னுடைய பெயர் ஏகதனு." இதைக் கேட்டதும் ராஜா தன் குனிந்த சிரத்துடன் அவரை வணங்கினன். அதன் பிறகு சொல்ல ஆரம்பித்தான். "ஐயா, என்னை உம்முடைய அத்யந்ததாஸனுகப் பாவித்து, உம்முடைய பெயரின் அர்த்தத்தை நீர் விளக்கம் செய்ய வேண்டும்" என்று அரசன் வினயமாகக் கேட்டுக் கொண்டான். (890)

கபடமுனி சொல்ல ஆரம்பித்தான். "ஐயா முதன் முதலில் ஸ்ருஷ்டி ஏற்பட்டதே, அந்த சமயம் முதல் என்னுடைய ஸ்ருஷ்டியாகிற பிறவியும் ஏற்பட்டது. பிறகு என் தவத்தின் மகிமையால் இன்னொரு தேகத்தை நான் எடுத்துக்கொண்டேன். இந்தக் காரணத்தால் "ஏகதனு" என்கிற பெயரை அடைந்தேன். (891)

"ஹே புத்ர, உன் மனத்தில் ஏற்படும் ஆச்சரியத்தைவிட்டு விடு. தவத்தின் பிரபாவத்தால் அடைய முடியாதது ஒன்றும் இல்லை. தவத்தின் பலத்தால் பிரும்மா முதற்கொண்டு சகல ஜகத்தை ரக்ஷிக்கிருர். தவத்தின் பலத்தால் விஷ்ணுவானவர் சம்சாரத்தை ரக்ஷிக்கிருர்." (892)

தவத்தின் பலத்தால் சம்பு சம்ஹாரத்தைச் செய்கிருர். இந்த சம்சாரத்தில் தவத்தின் பிரபாவத்தால் அடைய முடியாதது ஒன்றுமில்லை." இதைக் கேட்டதும் ராஜாவுக்கு அதிகமான விஸ்வாசம் ஏற்பட்டது. இதைக் கண்டதும் ராஜாவுக்கு தபஸ்வியானவன் முன்னுல் நடந்த தன் கதையைச் சொல்ல ஆரம்பித்தான். (893)

கர்மாக்கள், தர்மங்கள் அநேகவிதமாக இதிஹாஸங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஞானம், வைராக்யம் இவைகளை நிரூபணம் செய்வதாக விளங்குகின்றன. சம்சாரத்தின் ஸ்ருஷ்டி, காப்பாற்றுதல், பிரளய காலத்தில் சம்ஹரித்தல் ஆகிய இவைகளை எல்லாம் ஆச்சர்யமாகவும், விஸ்தாரமாகவும் கபட முனியினுல் அரசனுக்குச் சொல்லப்பட்டன." (894)

ராஜா இந்த வார்த்தைகளைக் கேட்டு தபஸ்வியின் வசம் பூர்ணமாக அடைந்தான். பிறகு தன்னுடைய நிஜமான முழுப் பெயரையும் சொல்ல ஆரம்பித்தான். அதற்கு தபஸ்வி கடைசியாக பதில் சொல்ல ஆரம்பித்தான். "அரசனே, இது எனக்கு முன்பே தெரியும். உன்னுல் கபடமாக உன் பெயர் என்னிடம் மறைக்கப்பட்டது" (895)

[தியானம்

ஹே ராமா, சீதா, நீங்கள் உங்களையே மனிதர்களாக நினைத்துக் கொண்டாலும் சாக்ஷாத் நாராயணனும், லக்ஷ்மியுமே. ஆதி சக்திகளான நீங்கள் இருவர்களும் முதலில் இருந்தவர்களும், காப்பாற்றுகிறவர்களாகவும் விளங்குகிறீர்கள். நீங்கள் தான் ஒருவராக எல்லாவற்றையும் ஆட்டிவைப்பவர்கள் என்று பலதடவைகள் சதக்ரது வெளிப்படுத்தியிருக்கிறான். மஹாத்மாவும், விருத்ரனைக் கொன்றவனும், வஜ்ரபாணியுமான இந்திரன் உன்னைப் பலதடவைகளில் தன் இன்னல்களைப் போக்குவதற்காகவும், தேவர்களின் கஷ்ட நிவ்ருத்திக்காகவும் என்னைப் போன்ற அக்ஞானிகளின் நன்மைக்காகவும் உன் பெருமைகளை பிரகடனப்படுத்தியிருக்கிறான். முதலில் ஸ்வயம்புவினால் அறியப் பட்டவராகவுமிருக்கிறீர். சும்ப, நிசும்ப, ரக்தபீஜன் வதங்களின் சமயம் சாமுண்டிதேவியாகவும் அவளுக்கு உதவின பிராம்மி, மாஹேஸ்வரி, வைஷ்ணவி, வாராஹி, கௌமாரி, நாரசிம்மி, இந்திராணி ஆகிய மாத்ரு கணங்களுடன் சாமுண்டி தேவியாகவும், பத்ரகாளியாகவும், மஹா காளியாகவும் ஆவிர்பவித்தாய். ஹே கௌரி, சிவதூதி என்றும் புகழப்பட்டாய். இந்த அவதாரங்கள் எல்லாம் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காகவும், நல்லோர்களைக் காப்பதற்காகவும் எல்லா தேவகணங்களையும் களிப்பித்து, அவரவர்களின் வேலைகளில் ஈடுபடச் செய்வதற்காகத் தானே. நல்ல காற்றுகளை வீசி, சூரியன் அவனுடைய பதத்திலிருந்து நல்லொளி பெற்றால், மற்றவர்களுக்கும் தர்மத்தில் புத்தி போகுமல்லவா? கிரஹங்களின் சாரமும் சாந்தமாகவும், சந்திரன் சாந்தமாகவும் அக்னியும் சாந்தமாகவும் எரியுமல்லவா? திக்கஜங்களும் சாந்தமாக தங்கள் வேலைகளைச் செய்து கொண்டிருக்குமல்லவா? ஐயா, தர்மபுத்தியுடன் இருக்கும் என்னை சதா ரக்ஷிக்க வேண்டும். அஹிம்சை, சத்யம், பிறருக்கு ஹிதகாம்யனாகவும், சம்சார வளர்ச்சியில் அன்புள்ளவனாகவும், எல்லாவற்றிற்கும் உன் கைங்கர்யனாகவும் இருக்கும் என்னைக் கிருத கிருத்யனாக ஆக்குவாய்.]

"ஹே ராஜாவே, கேளு, இப்பேற்பட்ட மாற்றுதலாக தன் பெயரை உரைத்தல், ராஜாக்களுக்கு ஏற்பட்ட நீதிதான். உன்னுடைய சாதுர்யத்தை நன்றாக அறிந்துகொண்டு, நான் உன்மீது அபாரமான பிரேமையுடன் இருக்கிறேன்." (896)

"உன்னுடைய பெயர் பிரதாப்பானு. உன் பிதா ஸத்யகேது. எனக்குக் குரு கிருபையினால் எல்லாம் தெரியும்.

ஆனால் உனக்கு வரும் தீமையை உத்தேசித்து நீ ஒன்றும் சொல்லவில்லை.'' (897)

'' ஹே ராஜா, உன்னுடைய எளிய சுபாவத்தையும், பிரீதி, விஸ்வாசம், நீதியில் நிபுணத்வம் ஆகியவைகளைக் கண்டு, என் மனதில் உனக்காக மிகப் பெரிய அன்பு வளர்ந்திருக்கிறது. இதனால்தான் உன்னால் வினவப்பட்ட சமயம் நான் என் கதையைச் சொன்னேன்.'' (898)

'' இப்போது நான் உன்னிடம் பிரசன்னமாகவிருக்கிறேன். சந்தேகம் வேண்டாம். உன் மனத்திலிருக்கிற அபிலாஷைகளைப் பூர்த்தி செய்து கொள். ஏதாவது வரம் வேண்டுமானால் என்னிட மிருந்து பெற்றுக்கொள்.'' தபஸ்வியின் அழகான வார்த்தை களைக்கேட்டு, ராஜா மனம் சந்தோஷமடைந்தான். முனியி னுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டு, மிகுந்த வினயத் துடன் சொல்ல ஆரம்பித்தான்.'' (899)

'' ஹே தயாசாகரமே, உம்முடைய சுபமான தர்சனத்தால் கிருதார்த்தனானேன். நான்கு விதமான புருஷார்த்தங்களையும் அடைந்தேன். உம்முடைய அருளினால் நான் சோக ரஹிதனாக வும் சந்தோஷமுள்ளவனாகவும் இருப்பேனாக'' (900)

'' என் சரீரம் விருத்தாப்யம், மரணத்வம், துக்கத்தினால் பீடிக்கப்படும் தன்மை ஆகிய தோஷங்கள் விலகியதாகவும், யுத்தத்தில் ஒருவராலும் ஜயிக்கப்படாமல் இருக்கும் தன்மையை யும், இந்த உலகத்தில் ஏகமாத்ரமாய் சக்ரவர்த்தியாகப் பல கல்பங்கள் அரசாளும்படி எனக்கு அனுக்ரஹிக்க வேண்டும்'' (901)

[தியானம்

ஹே ராமா, 'சீதா, உன்சேர்க்கை உன்னையே நம்பி யிருக்கும் எனக்கு எப்போதும், எந்த மஹானுபாவனால் கிடைக்கும்? ஐயா, உன்னை சரதல்பத்தில் படுத்து, சதா தியானித்துக் கொண்டிருக்கும் பீஷ்மர் உபதேசித்தபடி தியா னித்து, அர்ச்சித்து, நமஸ்கரித்து '' யஜமானன் நீரே,'' என்று தாஸ்யபாவத்துடனும், உன் பக்தர்களின் கைங்கர்ய மனத்துடன் வாழ்ந்து வரும் எனக்கு, எப்போது விமோசனம் கிடைக்கும்? சதா என்னையே அடக்கி, உன் புண்ய கீர்த்தியான கதைகளை ஸ்மரணம் செய்தும் என் தோஷங்கள் என்னைவிட்டு விலகாமல் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. எப்போது உன் க்ருபா திருஷ்டி யினால் என் தோஷங்கள் விலகும்? எப்போது உன்னை வந்து

நான் அடைவேன்? என் தாயாகிய சீதை அனுக்ரஹம் செய்ய மாட்டாளா? பத்மலோசனே, சந்திரசஹோதரி, இந்திரா, காகாசுரனுக்கும், ராக்ஷஸிகளுக்கும் அடைக்கலம் கொடுத்த மஹானுபாவையே, என்னிடமும் உன் தயை இருக்கட்டும்.]

தபஸ்வி மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே ராஜன், உன் இஷ்டப்படியே இருக்கும். ஆனால் ஒரு விஷயமானது கடினமாக இருக்கிறது. அதையும் கேளு. ஹே சக்ரவர்த்தி, பிராம்மண குலத்தைத் தவிர, காலபுருஷன்கூட உன்னை மரியாதை செய்து அண்டி வாழ்வான்." (902)

"தபோ பலத்தின் காரணமாக பிராம்மணர்கள் ஸதா பலவான்களாக இருக்கிறார்கள். அது உனக்குத் தெரியும். அவர்களுடைய க்ரோதத்திலிருந்து யாரும் மனிதர்களைக் காப்பாற்ற முடியாது. ராஜாவே, பிராம்மணர்களை உன்வசம் இழுத்துக் கொண்டாயானால், பிரும்மா விஷ்ணு மஹேசரும் உன் ஆதீனத்துக்கு உட்படுவார்கள்." (903)

"இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு நான் உன்னிடம் விண்ணப்பித்துக்கொள்கிறேன். அவர்களை உன் பாகுபலத்தினால் ஒன்றும் செய்துவிடமுடியாது. ஹே ராஜா, பிராம்மண சாபம் மிகப் பொல்லாதது. அது ஒன்றைத் தவிர, உனக்கு நாசம் வேறு ஒருவகையிலும் கிடையாது." (904)

ராஜா அந்த வார்த்தைகளைக் கேட்டு, சந்தோஷமடைந்து சொன்னான். "ஸ்வாமி, இனி என்னுடைய நாசம் எப்போதும் யேற்படக் கூடாது. கிருபா நிதி, உம்முடைய அனுக்கிரஹத்தினால் எனக்கு சர்வ மங்களம் உண்டாகவேண்டும்." (905)

"அப்படியே ஆகட்டும்" என்று கபட முனியானவன் ராஜாவினிடம் சொன்னான். "ஆனால் நீ வழி தவறி காட்டிற்கு வந்ததும், என்னைச் சந்தித்துப் பேசியதைப் பற்றியும் நீ யாரிடமும் சொல்லக்கூடாது." (906)

"என்ன காரணத்தினால் உன்னை அவ்விதம் சொல்கிறேன், என்று கேள். அவ்விதம் சொல்வாயாகில் உனக்குப் பெரிய ஹானிதான் ஏற்படும். மூன்றாவது மனிதன் இந்த சங்கத்தையும் ஸ்நேதத்தையும் கேட்பானாகில், உனக்கு நாசம் ஏற்படக்கூடும். என் வார்த்தைகள் பொய்யாகாது. ஸத்யமாக நேரிடும்." (907)

[தியானம்

ஹே ராமா, சீதா, மாரீசன் தான் சாகும் சமயம் ஹா, ராமா, சீதா, லக்ஷ்மணா என்று கூவி, பிரணவத்தைச் சொல்லி உங்களை

நினைத்தான். மிகபாக்யமுள்ளவன். மார்க்கண்டேய ரிஷி உன்னையே சதா நினைத்துக்கொண்டிருக்கிறார். அந்த மஹரிஷியின் உபதேசத்தால் ஸுமேதஸுக்குச் சொல்லப்பட்ட தேவி மஹாத்மியத்தில் தேவியைப் பற்றி எத்தனை புகழ் உரைகள் சொன்னார். ஆபத்துக் காலத்தில் தேவி தோன்றி தேவர்களை நூறு கண்களால் பார்க்கிறாள். அதனால் சதாக்ஷி என்ற புகழ் பெற்றாள். ஹே தேவி, பஞ்சம் அதிகரித்த சமயம் உன் உடம்பில் தோன்றும் காய்கறிகளை உற்பத்தி செய்து ஜனங்களை ரக்ஷிப்பதால் சாகம்பரி என்று பெயர் பெற்றிருக்கிறாய். தேவசத்ருக்களைக் கொன்றும், வைப்ரசித்தர் என்ற புகழ் பெற்ற சத்ருவைக் கொன்றும், உன் பற்கள் மாதுளம்பூப்போல சிவந்து போனதால் ரக்த தந்திகை என்று பெயர் பெற்றாய். துர்க்கன் என்ற அசுரனைக் கொன்றதால் துர்க்கா தேவி என்கிற பெயரால் விளங்குகிறாய். பயங்கரமான ரூபத்துடன் விந்திய மலையில் முனிவர்களைக் காப்பதற்காக இருப்பதால் பீமாதேவி என்று புகழப்படுகிறாய். வண்டு ரூபமெடுத்து ஆருணன் என்ற அரக்கனைக் கொல்வதால் ப்ராமரி என்று புகழப்படுகிறாய். அம்மா உன்னையே மஹாமாரி என்று சொல்லுகிறார்கள். மானிடர்களின் வீட்டில் விருத்தியைக் கொடுக்கும் லக்ஷ்மியும் நீயே. நீயே அலக்ஷ்மியாக விநாசத்துக்காக தோன்றுகிறாய். நீ புஷ்பம் கந்தம், தூபம் முதலியவைகளால் நன்கு துதிக்கப்பட்டால் செல்வத்தையும் மகிமைகளையும் தர்மபுத்தியையும் நல்ல கதியையும் கொடுக்கிறாய். அப்பேற்பட்ட நீ என்னை காக்க வேண்டும்.]

முனிவர் சொல்ல ஆரம்பித்தார். "ஹே பிரதாப பானு, இந்த ரகசிய விஷயத்தை நீ வெளிப்படுத்தினாலும் சரி அல்லது பிராம்மண சாபம் நேரிட்டாலோ சரி, இரு வகையிலும் உனக்கு நாசம் ஏற்படும். இதைத் தவிர உனக்கு மரணம் கிடையாது. விஷ்ணு சங்கரர் பிரும்மா யாவராலும்கூட மிருத்யு ஏற்படாது. (908)

அரசன் முனிவருடைய பாதகமலங்களைப் பிடித்துக் கொண்டு, சொல்ல ஆரம்பித்தான். "ஹே ஸ்வாமீ, இது சத்யம். பிராம்மண கோபத்திலிருந்தும், குருவினுடைய கோபத்திலிருந்தும் யார்தான் ரக்ஷிக்க முடியும்? பிரும்மாகூட க்ரோதத்தினால் ஏதாவது செய்தாலும், குருவினுடைய வசனங்களால் அது அடங்கிப்போய்விடும். ஆனால் குருவை விரோதித்துக்கொண்டால் இந்த ஜகத்தில் யாவராலும் ஒன்றும் பண்ணிக்கொள்ள முடியாது." (909)

"நான் உம்முடைய வசனங்களை மீறுவேனாகில் எனக்கு நிச்சயமாக நாசமேற்படட்டும். எனக்கு இதைப்பற்றி கவலை இல்லை. ஆனால் என்னுடைய மனமானது, ஹே பிரபோ, ஒரே ஒரு பயத்தினால் பிடிக்கப்பட்டதாகவிருக்கிறது. பிராம்மண சாபம் மிக்க பயங்கரமாயுள்ளது." (910)

பிராம்மணர்களை எவ்விதம் நான் என் வசம் அடைவிப்பேன்? தாங்கள் தான் க்ருபையுடன் சொல்லவேண்டும். தீனதயாளு, உம்மை விட்டுவிட்டு நான் யாரிடம் என் நன்மையைக் கோறுவேன்? வேறு ஒருவரும் இந்த விஷயத்தில் எனக்குச் சகாயமாகக் காணப்படவில்லை." (911)

தபஸ்வி மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "ஹே ராஜா, கேளும். ஸம்சாரத்தில் உபாயங்கள் பல இருக்கின்றன. ஆனால் அவை மிக்கக் கடினமானவை. இதில் சித்தி அடைய வேண்டுமானால் ஒரே ஒரு உபாயம் சஹஜமாக விருக்கிறது. ஆனால் அதை அனுஷ்டிப்பதிலும்கூட ஒரு கஷ்டம் இருக்கிறது" (912)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி உன் பரம அனுக்ரஹம் வேண்டும். பூர்வகாலத்தில் தர்மபுத்திரர் யுத்தம் முடிந்த பின்பு தன் பந்து நாசத்தினால் மிக்க தாபமடைந்து ஸந்யாஸம் வகிக்க நிச்சயம் அடைந்த சமயம், பரம பாகவதனும் மஹாத்மாவுமான அர்ஜுனனால் முதலில் கர்மத்தின் சிறப்புக்களைப் பற்றி உபதேசிக்கப்பட்டார். பிற்பாடு பீமன், நகுலன், சஹாதேவன் திரௌபதி ஆகியவர்களால் கிரஹஸ்த ஆஸ்ரமத்தின் சிறப்பும், கர்மமார்க்கத்தின் பெருமைகளையும், பொருள் ஈட்டுவதிலும், தர்மம், காமம், மோக்ஷம் ஆகிய புருஷார்த்தங்கள் அடங்கிய தத்துவங்களும் உபதேசிக்கப்பட்டன. அதன் பிறகு விகஸத்தைப் புஜிப்பதின் பெருமையையும் மஹாத்மாவான இந்திரனால் பக்ஷிரூபம் கொண்டு கர்மத்தை ஸ்லாகித்து நாஸ்திக புத்தியினால் ஆக்ரமிக்கப்பட்டவர்களை நியாயமாகவும், தர்மத்திலும், கர்மத்திலும் புத்தியைவைக்கும்படி உபதேசம் செய்யப்பட்ட பிறகு, ராஜதர்மத்தின் சூக்ஷ்மங்களும் தர்மபுத்திரருக்கு உபதேசிக்கப்பட்டன. இவை யாவையும் நான் அறிந்துகொண்டு பரமாத்மபதமாகிய நாராயணரையும் மஹாலக்ஷ்மியையும் சரணமடைகிறேன். தயாளுவான பகவான் எனக்குத் தண்ட நீதியை

உபதேசித்து, பக்திவசத்துடன் என்னையும் அங்கீகரிக்க வேண்டும்.']

"ஹே ராஜன், அந்த யுக்தி என்னிடம் இருக்கிறது. ஆனால் நான் உன்னுடன் நகரத்துக்குச் செல்ல ஆசைப்படவில்லை. நான் பிறந்தது முதல் ஒருவனுடைய வீட்டிற்கும் செல்லவில்லை. ஒரு நகரத்துக்கும் சென்றதில்லை." (913)

"நான் அவ்விதம் போகாமல் இருந்தால், உன் காரியமும் நடக்காது. இதுதான் தர்மசங்கடம்." இதைக் கண்டு ராஜா சொல்ல ஆரம்பித்தான். "ஹே நாதா, வேதங்களில் இந்த நீதி யிருக்கிறது." (914)

"பெரிய மனிதர்கள் கீழானவர்களுடனும் ஸ்நேகம் செய்து கொள்ளுகிறார்கள். மஹாபர்வதங்கள் தங்கள் சிரசுகளில் புல்லைக் கூட தரித்துக்கொண்டிருக்கின்றன. அகண்டாமான சமுத்திரம் தன் தலையில் நுரையைத் தரிக்கிறது. பூமிதேவி தன் தலையில் தூசிகளை தாங்குகிறாள்." (915)

இவ்விதமாகச் சொல்லிவிட்டு, ராஜா முனியினுடைய பாத கமலங்களைப் பிடித்து "ஹே ஸ்வாமி, கிருபை செய்யவேண்டும். தாங்கள் சாதுக்கள். தீனதயாளு. எனக்காக நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டும். அவசியம் செய்ய வேண்டும்." (916)

ராஜாவானவன் பூர்ணமாக தன் ஆதீனம் வந்து சேர்ந்து விட்டான் என்பதைத் தெரிந்து கொண்டு, கபடத்தில் தேர்ந்த தபஸ்வி சொல்ல ஆரம்பித்தான். "ஹே ராஜா, கேளு, உன்னிடம் சத்யமாகச் சொல்லுகிறேன். ஜகத்தில் எனக்கு ஒன்றும் செய்ய முடியாதது ஒன்றும் இல்லை" (917)

"உன்னுடைய கார்யத்தை நான் அவஸ்யம் பூர்த்தி செய்து முடிக்கிறேன். நீ என்னுடைய பூர்ணமான பக்தன். மனம், சரீரம் வசனங்களை எனக்கு அர்ப்பணம் செய்தவன். ஆனால் யோகம் யுக்தி, தபஸ், மந்திரத்தின் பிரபாவங்கள் யாவும் சிசுகர்ப்பம் போல ரஹஸ்யமாக ரக்ஷை செய்யப்படுவதினால், அவைகள் சித்திகளை அளிக்கின்றன. (918)

[தியானம்

ஹே ராமா, சீதா ஆஞ்சநேயரே, உங்கள் கிருபை எனக்கு வேண்டும். இவ்வுலகில் ஆசையும் அப்படியே. கர்மாவும் போகத்திற்கு உரியதென்று சொல்லப்படுகின்றன. இவை இரண்டும் பாபங்கள் என்று சொல்லப்படுகின்றன. இந்த பாபங்களி

லிருந்து விடுபட்டவன் பெரிய பதவியை அடைகிறுன். த்வந்தவம் என்கிற இரட்டைகள் அற்றவரும், சோகப்படத்தகாதவர்களைக் குறித்து சோகப்படுகிறவரும் ஞானமென்னும் உப்பரிகையில் ஏறி மலையிலிருப்பவர் கீழே இருப்பவர்களைக் காண்பது போல, எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டவரும் மோக்ஷத்தைக் கண்டவருமான ஜனகமஹாராஜரால் முன்பு ஒரு காலத்தில் சொல்லப்பட்ட "என்னுடைய செல்வம் அளவற்றது; ஆனல் எனக்கு ஒன்றுமில்லை; மிதிலை எரிக்கப்பட்டால் எனக்கு ஒன்றும் தஹிக்கப்படவில்லை" என்னும் வசனத்தைச் சொல்லுகிருர்களோ, அது மாதிரி நான் சோகம் அடையாமலிருக்கவேண்டும். தெரிந்துகொள்ள வேண்டியதைத் தெரிந்து கொள்ளுகிறவன்தான் கண்ணுள்ளவனும், புத்தி உள்ளவனுமாக ஆவான். அறியாதவைகளை அறிவிப்பதும். ஸந்தேகங்களை தெளிவிப்பதினுலும் புத்தி என்று சொல்லப்படுகிறது. தியான நிஷ்டையிலும், ஞானம் அடைந்தவர்களும், ப்ரும்மத் தன்மை பெற்றவர்களுமான பெரியோர்களுடைய உண்மையை எவன் அறிகிருனே, அவனே பெருமையை அடைவான். ஒன்றிலிருந்து பல உண்டானவென்றும், பலவித வேற்றுமை ஒரு வஸ்துவிலிருப்பது (அதாவது பிரபஞ்சம் யாவும் பிரளய காலத்தில் ஒரே வஸ்துவில் லயமாகிறபடி என்றும் அதுபோலவே அந்த ஒரு வஸ்துவிலிருந்தே பலவித வேற்றுமையுடன் ஸகல வஸ்துக்களும் உண்டாவதென்றும்) தெரிந்து எவன் எல்லாவற்றையும் ஒன்ருக அனுபவிக்கிருனே, அப்பொழுது அவன் பிரும்மாகிருன். அந்த புத்தியுள்ள ஜனங்கள் உத்தம கதியை அடைகிருர்கள். தவம் இல்லாதவர்களும், புத்தி இல்லாதவர்களும், ஞானமில்லாதவர்களும் அந்த பிரும்மத்தை அடைகிருர்கள் இல்லை. எல்லாம் சிறந்த புத்தியில் நிலைத்திருக்கின்றன. இப்பேற்பட்ட பெரிய தத்துவத்தைச் சொன்ன தர்மபுத்திரருக்கு நான் வந்தனம் செய்கிறேன். அவருடைய பரமகிருபை வேண்டும். அந்த புத்தியினுல் உன்னையும் உன் ஸ்ருஷ்டிகளையும் நான் ஏக பாவமாகவும் பலவிதமான வேற்றுமைகளும் ஒன்றிலே லயமடைவது என்கிற தெளிந்த ஞானத்தினுலும், ஜனகருடைய கர்மத் தேர்ச்சியினுலும், சம்பாதிக்கப்பட்ட பற்றுதல் அற்ற வாழ்க்கையினுல், நாராயணு, உன்னை நான் வந்து அடையவேண்டும். அதற்கு நீ மஹா க்ருபை செய்யவேண்டும்.]

"ஹே நரபதி, நான் ஒரு சமையல் அறை உண்டுபண்ணுகிறேன். ஆனல் அதில் நான் ஒருவனே சமையல் செய்கிறேன்.

அதை யாரும் உன்னைத்தவிர அறியக்கூடாது. அந்த அன்னத்தை யார் யார் உண்ணுகிருர்களோ, அவர்கள் உன் ஆக்ஞைக்கு உட்படுவார்கள். நான் மகிமை பொறுந்திய அந்த அன்னத்தைத் தயாரிக்கிறேன். நீ அதைச் செலவிடு.'' (919)

''மேலும் எவர்கள் உன்வீட்டில் போஜனம் செய்கிருர்களோ அவர்கள் உன் ஆக்ஞைக்கு உட்படுவார்கள். ஹே ராஜன், இந்த உபாயத்திஞல் ஒரு வருஷம் சாப்பாடு போடுவது என்கிற சங்கல்பத்தைச் செய்துகொள்.'' (920)

''நித்யம் ஒரு லக்ஷம் பிராம்மணர்களுக்குப் போஜனம் அளி. நீ மந்திரம் செய். அந்த சங்கல்பத்தின்படி உனக்கு ஒரு வர்ஷ காலமாக நான் ஆகாரம் தயார் செய்துவருகிறேன்.'' (921)

''இந்த வழியாக வெகு பிரயாசை இல்லாமல் அநேகம் பிராம்மணர்கள் உன் வசத்திற்கு வருவார்கள். பிராம்மணர்கள் ஹவனம் செய்வார்கள். விப்ர போஜனம், யாகம், பிராம்மண சேவை இவைகளின் பிரபாவத்தால் தேவதைகள் உன் வசத்தை அடைவார்கள்.'' (922)

''உனக்கு ஒரு அடையாளம் சொல்லுகிறேன். நான் இந்த ரூபத்தில் இருக்கமாட்டேன். நான் என்னுடைய மாயையிஞல் உன்னுடைய புரோஹிதரை அபஹரிப்பேன்.'' (923)

''தவத்தின் பலத்திஞல் அவரை எனக்குச் சமமாக ஒரு வருஷம் இங்கு வைத்துக்கொண்டு நான் அவருடைய ரூபத்தை தரித்துக்கொண்டு எல்லாவிதமாயும் உன் அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வேன்.'' (924)

[தியானம்

ஹே ராமாசீதா, உன் பரிபூர்ணமான கிருபையும் உன் குண ஸ்ருஷ்டிகளின் சிறந்த அம்சங்களும் உன் கிருபையால் உன் காரியத்திற்காகவும், என் ஞானத்திற்காகவும் என்னுடைய ஆத்மாவின் சிறந்த கதிக்காகவும் வேண்டும். ஐயா, கிருபாநிதி, முன்னொருசமயம் அர்ஜுனஞல் மீண்டும் ராஜதர்மத்தை அடைவதற்கு வற்புறுத்தப்பட்ட தர்மபுத்ரர், சாஸ்திர ஞானத்தைத் தவிர பெரியோர்களை ஆஸ்ரயித்து, அவர்களை உபாஸித்து, அவர்களின் அனுக்கிரஹம் பெறுவதும், ஆசையை அடக்குதலும், தவம், தியாகம், அவிதி என்ற மூவகையான வழிகள் புத்திமான்களால் கைக்கொள்ளப்படுகின்றன என்று சொன்ஞர். அந்த மூன்று மார்க்கங்களிலும் அவிதி என்கிற மார்க்கம்தான் சிறந்தது, என்றும் அவர் உரைத்தார். சராசரங்களைக் காண விரும்

பிய சாதுக்கள் "இங்கு இருக்கிறதோ, இங்கு இருக்கிறதோ" என்று பலதடவைகள் தேடியும், பல சாஸ்திரங்களில் தேடியும், வாழைமரத்தைப் பிளந்து ஸாரத்தைக் காணுததுபோல, தியாக வாழ்க்கையைக் கைக்கொண்டிருக்கிருர்கள். ஏகாந்தமாகவிருப்ப தென்னும் தியாக மார்க்கத்தைத் தள்ளிவிட்டு, பஞ்சபூதத்தால் உண்டான இந்த சரீரத்தில் இருக்கும் ஆத்மாவைப் பல அடையாளங்களால் ஆசை, த்வேஷம் இவைகளோடு கூடினதாகச் சொல்லுகிருர்கள். அவற்றையும் தர்மபுத்திரர் இல்லை என்று சாதித்துவிட்டு, கடைசியாக இந்திரியங்களுக்குப் புலப்படாததும், வாக்குக்களால் சொல்ல முடியாததும், ஆத்மாவானது கர்மத்திற்குக் காரணமான அக்ஞானத்தை முன்னிட்டு சரீரங்களில் சுற்றி வருகிறது என்று சொன்னுர். ஹே அதோக்ஷஜா, மனிதன் ஆசையை அடக்கி, இந்த கர்ம பிரவாஹத்தை விட்டு, அஹங்காரம் அற்றவனுகி, மோக்ஷ மார்க்கத்தில் ஸுகமுள்ளவனுக இருக்கவேண்டும். இப்பேற்பட்ட மோக்ஷ வழி இருக்கும் போது, பல துன்பங்கள் நிறைந்த பொருளை எவ்விதம் நான் கொண்டாட முடியும்? கர்ம சாஸ்திரங்களில் தேர்ந்தவர்கள் தானம், யாகம் இவைகளுக்குப் பொருள் தேடுதல் துன்பமாக இருக்கிறபடியால், பிறர்களுக்கு ஹிம்சையை விளைவிப்பதால் மோக்ஷ வழிதான் உயர்ந்தது என்று சொல்லுகிருர்கள். ஆகையால் தர்மம் தெரிந்தவன் தவத்தால் ஆசையை அடக்கி, வைராக்யம் அடைந்து அதன் மூலமாக ஞானத்திஞல் பிரும்மத்தை அடைகிருன். தியாகத்தால் எப்போதும் சுகத்தை அடைகிருன் என்று சொன்னுராமே, அப்பேற்பட்ட தியாகம்தான் எனக்கு வேண்டும். அதற்கு உன்னையே நான் நம்பியிருக்கிறேன்.]

"ஹே ராஜன், ராத்திரி அதிகம் கழிந்துவிட்டது. இப்போது நீ உறக்கம் கொள். இன்றிலிருந்து உனக்கு மூன்ருவது நாளில் நாம் சந்திப்போம். நான் என்னுடைய தபோ பலத்தால் உன்னையும், உன் குதிரையையும் உன் கிரஹத்தில் சேர்த்துவிடுகிறேன்." (925)

"நான் ஒரு வருஷ காலம் அந்த புரோஹிதரின் வேஷத்தைத் தரித்து வருவேன். அதனுல் அடையாளம் புரிந்துகொள். நான் எந்த சமயம் உன்னை ஏகாந்தத்தில் அழைத்து மீண்டும் இவைகளைச் சொல்வேனே, அதனுல் என்னைத் தெரிந்துகொள்" என்று அடையாளங்களை தபஸ்வி சொன்னுன். (926)

"அரசன் இந்த ஆக்ஞையை ஒப்புக்கொண்டு சயனமடைந்தான். ஆனுல் அந்த கபட ஸந்யாஸியோ முழித்துக்கொண்டு

உட்கார்ந்து கொண்டிருந்தான். ராஜா ரொம்ப ஸ்ரமம் அடைந் திருந்தான். அதனுல் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தான். ஆனுல் கபட சந்யாஸிக்குத் தூக்கம் வரவில்லை.'' (927)

அந்த சமயம் காலகேது என்கிற ராக்ஷஸன் அவ்விடம் வந் தான். முள்ளம்பன்றி உருவாக வந்து அந்த அரசனை வழிதப் பிக் கூட்டிக்கொண்டு போனவன் அந்த ராக்ஷஸன் தான். அவன் தபஸ்விக்கும் மிக்க வேண்டியவன்; பிரியமித்ரன்; கபடத்தில் தேர்ந்தவன்; உலகம் நன்ருகத் தெரிந்தவன்.'' (928)

அவனுக்கு நூறு பிள்ளைகளும், பத்துத் தம்பிகளும் இருந் தார்கள். யாவராலும் ஜயிக்க முடியாதவர்களாகவும், தேவர் களுக்கும் துன்பம் விளைவிப்பவர்களுமான அவ்வளவு பலமுள்ள வர்கள் அவர்கள். பிராம்மணர்கள், சாதுக்கள், தேவதைகள் ஆகிய எல்லோர்களுக்கும் துன்பம் விளைவித்தபடியால் அந்த அரசன் அவர்களை யுத்தத்தில் கொன்று போட்டுவிட்டான்.'' (929)

முன் நடந்துபோன அபகாரத்தை நினைத்துக்கொண்டு அந்த ராக்ஷஸன் தன் மித்ரனை தபஸ்வியைக் கண்டு, அவ னேடு பேசி ஒரு உபாயம் கண்டுகொண்டான். அதனுல் அந்த அரசனை ஒழித்துவிட இருவர்களும் திட்டமிட்டார்கள். விதியின் வசம் அடைந்த அந்த அரசனுக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரி யாது. (930)

[தியானம்

ஹேராமா, சீதா, நீயே காலஸ்வரூபமாக விருந்து எல்லாம் நடத்தி வைக்கிருய். உன்னுடைய மாயையும் ரொம்ப பல மானது. எல்லாவற்றையும் நான் தெரிந்துகொண்டு நான் மீண்டும் மீண்டும் உம்மிடம் மோஹமடைகிறேன். உன் கிருபை யினுல்தான் நான் இந்த அக்ஞானக் கிணற்றிலிருந்து விடுபட வேண்டும். எவ்விதம் கிருஷ்ணன் நிருகன் என்கிற ஒருனை 'கிணற்றி'லிருந்து தூக்கிவிட்டாரோ, அதுபோல நானும் உன் திருஷ்டியினுல் விடுபட வேண்டும். ஹயக்ரீவன் என்ற அரசன், ஜனகர் என்ற மஹாராஜர், சங்கர்லிகிதர் என்கிற மஹரிஷிகள், ஸுத்யும்ன ராஜர் ஆகியவர்கள் சரியான காலத்தில் சரியான ஆசார்யர்களால் உபதேசம் செய்யப்பட்டு, பிரசேதஸின் புத்ர ராகிய தக்ஷரைப்போல உத்தமமான ஸித்தியை அடைந்தார்கள். எப்பொழுது மனிதனுக்கு மனம், வாக்கு, தொழில் இந்த மூன்று களிலும் தீங்குச் செயல் இல்லையோ, அப்பொழுது அவன் பிரும்ம மாகிருன். அபிமானத்தையும், மோஹத்தையும் விட்டு பலவித

ஆசைகளையும் தள்ளி உண்மையான ஆத்மாவைக் கண்ட ஸாது மோக்ஷமடைவான். பொருள் என்பது தேவர்களின் சொத்து. அதனை அடைபவன் சுகமாயிருக்கமாட்டான். ஆகையால் முன்னோர்கள் "பிரும்மதேவர் பொருள்களை யாகத்திற்காகப் படைத்தார். ஆகையால் பொருள் யாவும் யாகத்திற்காகவே உபயோகிக்கத்தக்கன. அப்பொருளைச் காக்கும் மனிதனையும் யாகத்திற்காகவே உண்டுபண்ணினன். பொருளைத் தன் இஷ்டத்திற்காக உபயோகப்படுத்துவது நீதியும் ஹிதமுமன்று," என்று யாகத்தை உறுதிப்படுத்திச் செய்யும் யக்ஞரூபியான பகவான் கூறின வேதத்தில் உள்ள வசனத்தைக் கூறுகிருர்கள். ஹே மனமே, பிரும்மா தனத்தை தம்தம் காரியத்தையும், யாகத்தையும் உத்தேசித்து மனிதர்களுக்குக் கொடுக்கிருர் என்று தெரிந்துகொள். ஆகையால் அப்பொருள் ஒரு மனிதனுக்கும் சொந்தமில்லை. ஆகையால் கிடைத்த பொருளை மனிதன் சிரத்தை உள்ளவனுகி, தானத்திலும், யாகத்திலும் உபயோகிக்க வேண்டும். பொருளைச் சேர்த்து வைப்பது பயனற்றது. பொருளை ஒழுக்கம் குறைந்தவரிடத்தில் கொடுப்பது மிக்க பாபம். அதுமாதிரி அயோக்யனிடம் தானம் வாங்குவதும் மிக்க பாபம். அதுமாதிரி யோக்யனிடம் கொடாமையும் மிக்க பாபம். இவ்வளவு தோஷங்கள் உள்ளது பொருள். யோக்யனிடம் தானம் செய்வதும், விதிப்படியும் இருக்கவேண்டும். இவை எல்லாவற்றிற்கும் உன் அருள் வேண்டும்.]

"எதிரியானவன் தேஜஸ்வியாகவிருந்தால், அவன் தனிப்பட்டவன், தகுதியான உதவியில்லாதவன் என்று ஒருவரும் லகுவாய் நினைக்கக்கூடாது. எவனுடைய சிரம் ஒன்றுதான் அழியாமல் காப்பாற்றப்பட்டதோ, அந்த சிரத்தோடு கூடிய ராஹுவானவன் இன்றுகூட சூர்ய சந்திரர்களைப் பீடிக்கிருன் அன்ருே?" (931)

தபஸ்வியான ராஜா, தன்மித்ரனுகிற காலகேதுவைக் கண்டு வரவேற்று, பிரசன்னமடைந்து அவனிடம் தன் திட்டத்தை எல்லாம் சொன்னுன். அதனுல் சந்தோஷமடைந்த ராக்ஷஸன் சொல்ல ஆரம்பித்தான். (932)

"ஹே ராஜா, கேளு, நீ என் சொற்படி நடப்பாயானுல் இந்த சத்ருவை வேருேடு நான் கிள்ளி எரிந்துவிடுகிறேன். நீ கவலை இல்லாமல் இருக்கலாம். உனக்கு பிரும்மாவினுல், மருந்து இல்லாமல் வியாதி குணமடைவதுபோல, இவன் தன் அழிவிற்காகவே உன்னிடம் அனுப்பப்பட்டான்." (933)

"இந்த சத்ருவை நிர்மூலமாக ஆக்கிவிடுகிறேன். இன்றியிலிருந்து நான்காவது நாள் நான் உன்னிடம் வருகிறேன்." தபஸ்விக்கு ரொம்ப சந்தோஷம் ஏற்பட்டது. மஹா மாயாவி, கபடி, ரோஷமுள்ளவன் ராக்ஷஸன். அவ்விதம் சொல்லிவிட்டுச் சென்றான். (934)

அந்த ராக்ஷஸன் அந்த பிரதாப பானுவை குதிரையில் ஏற்றி, அரண்மனையில் ராணியிடம் சேர்ப்பித்தான். குதிரையை குதிரைச் சாலையில் கட்டினான். (935)

ராஜாவினுடைய புரோஹிதரை அபஹரித்து, ஒரு மலைக் குகையில் சிறை வைத்தான். அவரை மாயையினால் புத்திகலங்க வைத்தான். (936)

[தியானம்

ஹே ராமா, சீதா, உன் திருவடிகளின் அன்பையும், பக்தி ரஸத்தையும் நான் சதா என் குருநாதன்மாதிரி ஆஸ்ரயித்திருக்க வேண்டும். முன்பு தர்ம புத்ரரிடம் தேவஸ்தானர் பிராணிகளுக்கு துரோகம் செய்யாமலிருத்தலே ஸாதுக்களுக்குச் சம்மதம் என்றார். துரோஹமில்லாமை, உண்மை உரைத்தல், கொடை, தயை, அடக்கம், தன் மனைவியிடம் புத்ரோத்பத்தி, மென்மை, லஜ்ஜை, பொறுமை, ஆசை இல்லாமை ஆகிய இவைகளே முக்கியமான தர்மம் என்று ஸ்வாயம்புவமனு சொன்னார். ஆகையால் தர்மத்திலிருப்பவன், எப்போதும் அடக்கமாகவும், விருப்பு வெறுப்புக்களை விட்டு சமமாக நினைப்பவனும், யாகம் செய்து மீதத்தை உண்பவனும், நீதி தவராமல் சகல பிராணிகளை தர்ம வழியில் நிறுத்துகிறவனும், ஸாதுக்களை ரக்ஷித்து துஷ்டர்களை சிக்ஷிப்பவனும், கடைசியில் புத்ரனிடம் கொடுத்து விட்டு தர்மத்தில் அறிவுள்ளவனாக சோம்பலின்றி தம் ஆஸ்ரமத்துக்குரிய தர்மங்களையும், கர்மங்களையும், செய்பவனுக்கு இவ்வுலகமும் பரலோகமும் சித்திக்குமாம். மோக்ஷம் என்பது பல இடையூறுகள் உள்ளதும், அடைய முடியாதது என்று கருத்து. மேற்சொன்ன ஸத்யம், தானம், தவம், ஆசை, கோபம் முதலிய தோஷங்கள் நீங்குதல், பொறுமை, பசுக்களிடமும் பிராணிகளிடமும் கருணை, இவைகளைச் செய்து வசுக்களும், ருத்ரர்களும், ஆதித்யர்களும், ஸாத்யர்களும், பல ராஜ ரிஷிகளும் பரிசுத்தமடைந்து ஸ்வர்க்கலோகம் அடைந்திருக்கிறார்கள். இப்பேற்பட்ட கர்ம ஞானத்தால் உன்னை உபாஸிக்கிறேன். நீங்கள் இருவரும் என்னிடம் தயையுடன் இருக்கவேண்டும்.]

அவன் புரோஹிதரின் ரூபத்தைத் தரித்து அவருடைய இடத்தைக் கைப்பற்றினான். ராஜா விழித்த பின்பு எழுந்து முழித்துப்பார்த்தான். அவனுக்கு சீக்கிரம் தன் வீட்டிலிருப்பது ஆச்சரியமாகவிருந்தது. (937)

மனத்தில் முனியினுடைய பிரபாவத்தால் இது நடந்தது என்று அனுமானித்தான். ஆனால் இது ராணிக்குக்கூடத் தெரியக்கூடாது என்கிற நினைவுடன் அவன் ஒருவரிடமும் சொல்லவில்லை. அதே குதிரையின்மேல் ஏறி வனத்திற்குச் சென்றான். நகரத்திலிருக்கும் ஸ்திரி புருஷர்கள் யாவருக்கும் இது தெரியாது. (938)

மத்தியானம் கழிந்ததும் திரும்பிவந்தான். ஒவ்வொரு வீட்டிலும் அவன் திரும்பி வந்ததற்கு சந்தோஷத்துடன் ஜனங்கள் உத்ஸவம் கொண்டாடினார்கள். எப்போது ராஜா தன் புரோஹிதரைக் கண்டானோ, அவரை தன் காரியத்திற்காக வந்ததாக அவன் அடையாளங்களால் புரிந்துகொண்டு, ஆச்சர்யத்துடன் பார்க்க ஆரம்பித்தான். (939)

ராஜாவுக்கு மூன்று நாட்கள் மூன்று யுகங்கள் போல விருந்தன. அவனுடைய மனம் கபட முனிவரின் பாத கமலங்களில் லயித்திருந்தது. ஸமயம் வந்ததும் அந்த ராக்ஷஸன் புரோஹித ரூபமாக வந்தான். ராஜாவிடம் வந்து, ரஹஸ்யமாக எல்லா ஏற்பாடுகளையும் எடுத்துச் சொன்னான். (940)

அந்த அடையாளங்களின்படி குருவை அடையாளம் தெரிந்துகொண்டு அரசன் சந்தோஷமடைந்தான். பிரமை அடைந்த அரசன் தன் சுயமான மதியை இழந்திருந்தான். அவன் உடனே ஒரு லக்ஷம் பிராம்மணர்களை குடும்ப சஹிதம் நிமந்தரணத்துக்கு அழைத்தான். (941)

[தியானம்

ஹே ராமா, சீதா ஆஞ்சநேயரே, ராஜ்யாபிஷேகம் ஆன பின்பு யுதிஷ்டிரர் எப்படி கிருஷ்ணரைத் துதித்தாரோ, அந்த பூர்ணமான வசனங்களால் சுத்தமான புத்தியுடன் களங்கம் இல்லாததும் அடக்கமானதும் சந்தோஷத்துடன் கூடியதுமான ஸ்துதிகளால் உன்னை நான் அர்ச்சனம் பண்ணவேண்டும். உம்மைப் பலபேர்கள் பலவிதமாகத் துதித்திருக்கிறார்கள். ஹே, விஸ்வகர்மா, விஸ்வாத்மாவே, விஸ்வ சம்பவ, விஷ்ணுவே, ஜிஷ்ணுவே, ஹரியே, கிருஷ்ணரே, வைகுண்டரே, புருஷோத்தமரே, உமக்கு நமஸ்காரம். நீர் அதிதியினிடத்தில் ஏழுதடவை

கள் கர்ப்பத்தில் இருந்தவர். நீர் ஒருவரே ப்ருஸ்னிகர்ப்பரா யிருந்தவர். உம்மை திரியுகரென்றும் சுசிஸ்ரவஸ், ஹ்ருஷீகேசர், கிருதார்ச்சிஸ், ஹம்ஸர், திரிசக்ஷுஸ், சம்பு, விபு தாமோதரர் என்றும் சொல்லுகிறார்கள். வராஹர், அக்னி, பிருஹத்பானு, விருஷபர், தார்க்ஷ்யலக்ஷனர் அநீகஸாஹர், புருஷர், சிபிவிஷ்டர்' உருக்ரமர், வரிஷ்டர், உக்ரஸேநாநி, ஸத்யர், வாஜஸநி, குஹர், அச்சுதர், சத்ருக்களை நழுவச் செய்பவர், ஸம்ஸ்கிருதர், விக்ருதி வ்ருஷர் என்று பலவிதமான பெயர்களால் உன்னை நான் அர்ச்சனை பண்ணவேண்டும்.]

புரோஹிதரால் ஆறு ரஸங்களுடன் நான்குவிதமான போஜனங்கள் வேதத்தில் சொல்லியபடி தயாரிக்கப்பட்டன. அவனால் மாயாமயமான சமையல்களும் தயார்செய்யப்பட்டன. இன்னும் கணக்கற்ற வியஞ்சனங்களும் தயராரிக்கப்பட்டன. (942)

அநேகவிதமாக பசுக்களின் மாம்ஸங்களும், அந்த துஷ்ட ராக்ஷஸனால் பிராம்மணர்களின் மாம்ஸங்களும் தயாரிக்கப் பட்டன. சகல பிராம்மணர்களையும் அழைத்து, அவர்களின் பாதங்களைக் கழுவி, மிக்க மரியாதையுடன் அரசன் உட்கார வைத்தான். (943)

ராஜா பரிமாறும் சமயம் ஒரு ஆகாசவாணி கேட்கப்பட்டது. "ஹே, பிராம்மணர்களே, சீக்கிரம் எழுந்திருங்கள். வீட்டிற்குச் செல்லுங்கள். அன்னத்தைப் புசிக்காதீர்கள். உங்களுக்கு பெரிய ஹானி ஏற்படும்." (944)

"சமையலில் பிராம்மணர்களுடைய நரமாம்ஸம் சேர்க்கப் பட்டிருக்கிறது." இதைக் கேட்டதும் ஸகல பிராம்மணர்களும் எழுந்துவிட்டார்கள். ராஜா வியாகுலமடைந்தான். அவ னுடைய முகம் வெளிறிப்போய், புத்தி மோகத்தால் கவரப்பட்டு, மதிகலங்கினான். அவன் வாயிலிருந்து ஒரு வாக்யமும் வெளி வரவில்லை. (945)

பிராம்மணர்களுக்கு கோபம் வந்தது. க்ரோத சஹித மாக அவர்கள் சொன்னார்கள். க்ஷணநேரமும் ஆராய்ந்து பார்க்காமல், "ஹே மூடனே, நீ உன் பரிவாரம் சஹிதம் ராக்ஷஸர்களாக மாறிவிடுங்கள்" (946)

"நீசமான க்ஷத்திரியா, நீ பிராம்மணர்களை நிமந்தரணத் துக்கு அழைத்து, அவர்களை வீணுக்கிவிட நினைத்தாய். அவர்களுடைய தூய்மையை நாசம் செய்ய விரும்பினாய். ஆனால் ஈஸ்வரரால் எங்களுடைய ஸ்வதர்மம் ரக்ஷிக்கப்பட்டது. இப்போது நீயும் உன் பரிவாரங்களும் நஷ்டமடையட்டும்." (947)

[தியானம்

ஹே ராமா, கிருஷ்ணு, கோவிந்தா, அச்சுதா, நாராயணு, என் குருநாதரான பீஷ்மர் சரதல்பத்தில் படுத்து தியான யோகத்தால் உன்னை ஸ்துதி என்கிற யக்ஞும் செய்தாரே அந்த ஸ்துதியினுல் உன்னை நான் ஆராதிக்கிறேன். அப்பேற்பட்ட மஹாத்மா, கிருஷ்ணு, கோவிந்தா, நாராயணு என்று உன்னை ஒரு தடவை அழைத்து, ஒரு தடவை பக்தியுடன் நமஸ் கரித்தாலோ, நூறு அஸ்வமேதத்தின் முடிவான அவபிருத ஸ்நானத்துக்குச் சமம் என்று சொன்னுரே. மேலும் அஸ்வ மேதத்தின் பலனுக மீண்டும் பூமியில் பிறக்கலாம். ஆனுல் கிருஷ்ணனை நமஸ்கரித்தவருக்கு மறு பிறப்பே இல்லை என்று சொன்னுரே. ஐயா, அவ்வளவு பெருமைகள்வாய்ந்த உன்னை நான் ஒரு தடவை இல்லை, பலதடவைகள் நமஸ்கரிக்கிறேன். என் பாபங்கள் நசிக்கட்டும். என் புத்தி உன்னிடம் அடங்கட்டும். நாராயணரே பெரும் தவம், நாராயணரே பெரும் சத்யம், நாராயணரே பெரும் பயன். எந்த மஹானுபாவரை நினைத்து பீஷ்மர் ஸ்துதி என்கிற யக்ஞுத்தால் ஆராதித்தாரோ, அந்த கிருஷ்ணர் அவர் முன் நின்று அவரால் ஸ்தோத்திரம் செய்யப் பட்டதை ஸ்வயமாக அங்கீகரித்து, அவரைக் கிருதார்த்தனுக ஆக்கினுர். அப்பேற்பட்ட கருணையுள்ள நாராயணர் எனக்கும் என் மனைவி மக்களுக்கும் க்ஷேமத்தை நினைக்கவேண்டும். ஆயிரம் கால்கள், கைகள், கண்கள், ஆயிரம் வாய்கள் உள்ள பரம புருஷனுன நாராயணரை நான் நமஸ்கரித்து ஸ்துதிக் கிறேன். என்னை எப்போது கிருதார்த்தனுக ஆக்குவார்? எப்போது என்னிடம் அவருக்கு தயை பிறக்கும்? ராமா, சீதா, கிருஷ்ணு கோவிந்தா, முராரே, யக்ஞவராஹா.]

"ஒரு வர்ஷத்திற்குள் உன்னுடைய நாசம் வரட்டும். உன் குலத்தில் உனக்கு தர்ப்பணம் செய்வதற்குகூட (ஜலதாதா) ஒருவரும் உயிருடன் இருக்கமாட்டார்" என்று சபித்தார்கள். அந்த ராஜா மனுேவியாகுலத்துடன் இந்த சாபங்கள் அனைத்தை யும் கேட்டான். அந்த சமயத்தில் ஆகாசவாணி ஒன்று மீண்டும் கேட்கப்பட்டது. (948)

"ஹே பிராம்மணர்களே, நீங்கள் தீர விசாரிக்காமல் இந்த சாபங்களைக் கொடுத்திருக்கிறீர்கள். இந்த அரசனுல் ஒருவித மான அபராதமும் செய்யப்படவில்லை." அந்த ஆகாசவாணி யைக் கேட்ட பிராம்மணர்கள் ஆச்சரியப்பட்டார்கள். அந்த

சமயம் அந்த ராஜா போஜன சாலைக்குள் நுழைந்து பார்த்தான்.'' (949)

''அங்கே ஒருவிதமான போஜனமும் இல்லை. பிராம்மண சமையற்காரர்களையும் காணவில்லை. மனத்தில் சிந்தையுடன் அரசன் வெளிவந்தான். அவர்களுக்கு எல்லா விருத்தாந்தங்களையும் சொன்னான். மிக்க பயத்துடன் வியாகுலம் அடைந்து பூமியில் விழுந்து நமஸ்கரித்து, மன்னிப்பு கேட்டுக்கொண்டான்.'' (950)

''ஹே ராஜனே, எவ்வளவுதான் உனக்குத் தோஷமில்லாத போதிலும், நடந்தது நடந்துவிட்டது. பிராம்மணர்களுடைய சாபம் ரொம்ப பயங்கரமானது. அதை ஒருவராலும் அழிக்க முடியாது'' (951)

இவ்விதம் சொல்லிவிட்டு எல்லா பிராம்மணர்களும் சென்று விட்டார்கள். நகரத்து ஜனங்கள் இதைக் கேட்டதும் மிக்க வியாகுலம் அடைந்து ''பிராம்மணதோஷம்'' என்று சொல்லி விட்டார்கள். ''விதி ஒரு ஹம்ஸத்தைப் படைப்பதற்குப் பதிலாக ஒரு காக்கையைப் படைத்துவிட்டது'' என்று சொல்லிக் கொண்டார்கள். (952)

ராஜாவின் புரோஹிதன் பழையபடி வீட்டிற்கு அனுப்பப் பட்டான். காலகேது என்கிற அந்த ராக்ஷஸன் கபடியான தபஸ்விக்கு எல்லா சமாசாரத்தையும் சொன்னான். அந்த துஷ்டன் பலபேர்களுக்கு பத்திரம் எழுதி அனுப்பினான். அதன் பயனாக எல்லாச் சத்ருக்களும் ஒன்று சேர்ந்து சேனையைத் தயாரித்து அந்த ராஜதானிக்கு வந்தார்கள். (953)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, முன்பு ஒரு காலத்தில் தர்மத்தின் வழிநின்றும் பொறுமையுடன் காலத்தை எதிர்பார்ப்பவரும் சதா கிருஷ்ணனை ஆஸ்ரயித்து, அவர் உபதேசத்தின்படி, நடப்பவரும், சக்தியிருந்தும் தர்மத்தினால் கவரப்பட்டு ஸ்வதர்மமான க்ஷத்திரிய தர்மத்தால் எதிரிகளை வென்று ராஜ்யத்தை அடைந்த யுதிஷ்டிரர் ஞாதிகளுடைய வதத்தினாலும் பிராதாவின் கொலையாலும் சோகத்தாலும் கவரப்பட்டார். அந்த சமயம் பிராதாக்களாலும், கிருஷ்ணை என்கிற திரௌபதியினாலும், பழைய கஷ்டங்களை ஞாபகப்படுத்தப்பட்டபோதிலும், அவர் வருத்தத்தினால் மோஹப்பட்டு ராஜ்யத்தை வெறுத்து, வைராக்கிய புத்தியில் ஈடுபட்டவராகவிருந்தார். கிருஷ்ணா, நீரே இந்த காக்ஷியையும்

பார்த்தீர். பகவானுன வியாஸர், நாரதர் தேவஸ்தானர் போன்ற மஹரிஷிகள் எவ்வளவு சொல்லியும் அவர் மனம் தேறவில்லை. பிற்பாடு கிருஷ்ணு, நீரே அவரைப் பீஷ்ம பிதாமஹரிடம் அழைத்துச் சென்றீர். அந்த பீஷ்மர் எப்படிப்பட்டவர் என்று நீரே அவரிடம் சொன்னீர். கிருஷ்ணனிடம் அபார பக்தியுள்ளவரும், நேர்மை, அடக்கம், தவம், ஸத்யம், தயை, தானம் இவைகளில் சிறந்தவரும், தவத்தால் திரும்பவும் ஸம்சாரத்துக்குத் திரும்பிவராமல் அநேக உத்தம லோகங்கள் அடைந்த மஹானுபாவரும், சிறந்த ஊர்த்வரேதஸரும், தந்தையாலும் தாயான கங்கையாலும் அனுக்ரஹிக்கப்பட்டவரும், பெரியோர்களை அண்டி ஞானம் முதலியவைகளைக் கற்றவரும், பரசுராமரின் சிஷ்யரும், கௌரவர்களில் சிறந்தவரும், ஸ்தவராஜம் என்கிற கிருஷ்ண ஸ்துதியை கிருஷ்ணர் முன்பாகவே ஸ்துதியக்ஞம் செய்து, அவரை ஸ்துதியாலும், க்ஷத்திரிய தர்மமான பராக்கிரமத்தாலும் சந்தோஷப்படுத்தியவருமான பீஷ்மர் அந்த கௌரவகுடும்பத்தில் சிறந்த தர்மாத்மாவாகவிருந்தார். அப்பேற்பட்ட பீஷ்மர் யுதிஷ்டிரரை எப்படி புகழ்ந்தாரோ அதைக்கேட்க என் மனம் சந்தோஷிக்கிறது. தர்மத்தில் பிரியமுள்ளவரும், மஹாத்மாவுமான அரசனும், தைரியம், பொறுமை, அடக்கம், பிரும்மசரியம், பராக்ரமம் இவைகளுடன் கூடினவரும், அதிதிகள், வேலைக்காரர்கள் ஸம்பந்திகள் இவர்களை மிக்கப் பெருமையுடன் ஆதரித்தவரும் சௌரியம், பொறுமை, சுறுசுறுப்பு, பரப்பில்லாமையாகிய யாவும் கூடிய குணக்கடலும், ஆசையாலும், அவசரத்தாலும், பயத்தாலும், பொருள் கிடைக்கும் காரணத்தாலும், அதர்மத்தினிடம் அணுகாதவராகவிருந்தார். ஸாதுக்களிடம் நித்யம் தானம் செய்பவரும் பெரியோர்களிடமிருந்து ரஹஸ்யமான தத்துவங்களை கேட்டவரும், யாகம் அத்யயனம் போன்ற தர்மங்கள் உள்ளவரும், கிருஷ்ணனுக்கு அன்புள்ள சக்யத்தால் மேன்மைப்பட்டவரும், ராஜ்ய லக்ஷ்மியான திரௌபதியுடன் கூடினவரும், பீமார்ஜுன நகுல ஸஹதேவர்களைப் போன்ற தேவ அம்சங்களான பிராதாக்களால் சேவிக்கப்பட்டவருமான யுதிஷ்டிரரை அந்த தர்மாத்மாவான பீஷ்மர் ஆஸ்வாசப்படுத்தினுர். க்ஷத்திரிய தர்மத்தின்படி யுத்தம் செய்து வென்றுவருவது நற்கதிக்குக் காரணம் என்று மனு கூறினதாக சொன்னதின் பேரில் சாபத்திற்குப் பயந்த யுதிஷ்டிரர் பீஷ்மரைப் பாதங்களில் தொட்டு வந்தனம் செய்தார். உச்சிமோந்தார். "சந்தோஷத்துடனும் விஸ்வாசத்துடனும் உன் சந்தேகங்களைக் கேள்"

என்று சொன்னர். அப்பேற்பட்ட யுதிஷ்டிரருடைய மனப் பான்மையும், பீஷ்மருடைய அனுக்ரஹமும், ஞாதிகளுக்கு நல்லது செய்யவேண்டும் என்கிற தர்மமான புத்தியும், கிருஷ்ணு, உன்னுடைய பக்தியையும், நான் வேண்டுகிறேன். ராமா, கிருஷ்ணு, வ்ருஷதரிப்பரே, விதூர்மி, த்ரிகருப், கிருஷ்ண வர்த்மா, கபஸ்திநேமி புஷ்கரர், சூஷ்மதாரணர், ருபு, ஸர்வஸூக்ஷமர் த்ரிதர், சாரங்கத்தையும் சக்ரத்தையும் கத்தியை யும் கையில் தரித்தவரே, நீர் எனக்கு அனுகூலமாக இருக்க வேண்டும்.]

அந்த எதிரிகள் எல்லோரும் பேரிகைகளைக் கொட்டி, நகரத்தின்மீது படை எடுத்தார்கள். அநேக விதமான சண்டை கள் நடந்தன. பிரதாப பானுவின் வீரர்களும் சகோதரர்களும் யுத்தத்தில் மடிந்தார்கள், ராஜாவும் கொல்லப்பட்டான். (954)

ஸத்ய கேதுவின் குலத்தில் யாரும் மீதம் இருக்கவில்லை. பிராம்மண சாபம் வீணுகாது. சத்ருக்களை ஜயித்து, ஸகல ராஜாக்களும் விஜயத்துடன் தங்கள் ஊர்களுக்குத் திரும்பி ஞர்கள். (955)

யாக்ஞ்யவல்கிய மஹரிஷி சொல்ல ஆரம்பித்தார். "ஹே, பரத்வாஜரே, கேளும், விதாதாவான பரமாத்மா ஒருவனுக்குக் கேடு நினைப்பானுகில் ஒரு தூசியானது மேரு மலைக்குச் சமமாக்கிவிடும்; ஒருவனுடைய பிதாவானவர் யமனைப் போல விருப்பார். ஒரு கயிறு சர்ப்பத்திற்கு சமமாகிவிடும்." (956)

"முனீஸ்வரரே காலத்தின் தர்மத்தால் அந்த பிரதாபானு தன் பந்துக்கள் சகிதமாக ராவணன் என்கிற ராக்ஷஸனுய் பிறப்பை அடைந்தான். அவனுக்கு பத்து தலைகள்; இருபது கைகள்; "ராவணன்", எல்லோருக்கும் பயத்தை உண்ணு பண்ணுகிறவன் என்றும், பிரசண்டமான சூரன், வீரன் என்றும் புகழை அடைந்தான்." (957)

"அவனுடைய தம்பியான அரிமர்த்தனன் ராவணனுக்குத் தம்பியான கும்பகர்ணன் என்கிற பலவானுகப் பிறந்திருந்தான். அந்த பிரதாப பானுவின் மந்திரி தர்மருசி ராவணனுடைய ஒன்றுவிட்டு தம்பியாகப் பிறந்தான்." (958)

"அவனுடைய பெயர் விபீஷணன். உலகம் போற்றும் விஷ்ணு பக்தனுகவும் ஆத்ம ஞானத்தின் பொக்கிஷமாகவும் விளங்கினன். அந்த ராஜாவின் புத்ரன், சேவகன் யாவரும் கோரமான ராக்ஷஸர்களாக அவதரித்தார்கள்." (959)

"அப்பேற்பட்ட ஜனங்கள் மனத்தில் தோன்றும் ரூபங்களை எடுப்பவர்கள். துஷ்டர்கள், குடிலபுத்தியுடன் கூடினவர்கள்' பார்ப்பதற்குப் பயங்கரமானவர்கள். அறிவில்லாதவர்கள். அவர்களிடம் தயை கிடையாது. பாபாத்மாக்கள், ஸம்சாரம் முழுவதற்கும் ஹிம்சை செய்வதிலும், துக்கம் கொடுப்பதிலும் சமர்த்தர்கள். அவர்களை முழுவதும் வர்ணனை செய்வது முடியாது. அவ்வளவு ஹிம்ஸை செய்யும் ஸ்வபாவம் உள்ளவர்களாகவிருந்தார்கள்." (960)

அவ்விதம் இருந்தபோதிலும், பவித்திரமானதும் குற்றங்கள் இல்லாத புலஸ்திய வம்சத்தில் உதித்தவர்கள். அவ்விதம் உத்தம பிறப்பை அடைந்தும், பிராம்மண சாபத்தால் எல்லோரும் பாபிகளாக விளங்கினுர்கள். (961)

மூன்று சகோதரர்களும் அநேக விதமாக கடுமையான தபஸ் செய்தார்கள். அவைகள் வர்ணிக்க முடியாதவை. அவர்களுடைய உக்ரமான தபஸ்ஸைப் பார்த்து, பிரும்மா மிக்க பிரசன்னமடைந்து அவர்களிடம் வந்தார். அவர்களைப் பார்த்து, "நான் உங்கள் தவத்தால் சந்தோஷமடைந்தேன். வரம் கேளுங்கள்." என்று சொன்னுர். (962)

ராவணன் பிரும்மாவின் சரணங்களைப் பிடித்து சொல்ல ஆரம்பித்தான். "ஹே ஜகதீஸ்வரரே, வானரம், மனுஷ்ய ஆகிய இந்த இரண்டு ஜாதிகளைத் தவிர, வேறு ஜாதியினர்களால் மரணம் எனக்கு சம்பவிக்கக் கூடாது. இந்த வரத்தைக் கொடும் என்று கேட்டான்." (963)

சிவன் உமைக்குச் சொன்னுர். "அவ்விதமான வரத்தை நானும் பிரும்ம தேவரும் சேர்ந்து ஆலோசித்துத்தான் அவனுக்கு கொடுத்தோம். அவனும் கடுமையான தபஸ் செய்திருந்தான்." பிறகு பிரும்மாவும் கும்பகர்ணனிடம் வந்தார். அவனுடைய பூதாகாரமான உடலைக் கண்டதும், அவருடைய மனம் ஆச்சரியப்பட்டுவிட்டது. (964)

"இந்த துஷ்டன் நித்ய ஆஹாரம் செய்வானுகில் இந்த ஸம்சாரம் எல்லாம் வெகு சீக்கிரமாகவே நாசமடைந்துவிடும் என்று யோசித்து, பிரும்மாவானவர். ஸரஸ்வதியை அனுப்பி, அவனுடைய புத்தியில் புகரச் செய்தார். அவளுடைய பிரபாவத்தால் "ஆறு மாதங்கள் நித்ரை வேண்டு மென்று" வரத்தைக் கும்பகர்ணன் கேட்டான். (965)

[தியானம்

ஹே ராமா, இந்திரா, முன்னுளில் ராஜ தர்மம் பீஷ்மரால் தர்ம புத்ரருக்கு உபதேசிக்கப்பட்டது. எல்லா தர்மங்களிலும் ராஜ தர்மமே மிக்க உயர்ந்ததென்று அவர் எடுத்துச் சொன்னுர். அதற்கு காரணம் ராஜாவானவன் கர்ப்பிணி மாதிரி இருந்து, ஜனங்களை வளர்ச்சி அடையச் செய்தும், காப்பாற்றியும், போஷித்தும், ஆபத்துக்களிலிருந்து விடுவித்தும், எல்லோரையும் அவர் அவர்களின் ஸ்வதர்மத்தில் ஈடுபடையச் செய்கிருன் என்று சொன்னுர். பரசுராமரும் அதே மாதிரி இரண்டு ஸ்லோகங்களைச் செய்தார். "உத்தமனுன அரசனை முந்தி அடைந்த பிறகு, பொருளையும் பெண்டிர்களையும் அடைய வேண்டும். அரசன் அஸக்தனுக இருந்தால், அவ்வுலகில் பெண்டிரும் பொருளும் எவ்விதம் இருக்கக்கூடும்? ஆகையால் ராஜ்யத்தை விரும்பும் அரசர்களுக்கு உலகம் நிலைபெறக் கூடிய பிராணிகளைக் காப்பாற்றுவதைவிட வேறு சாஸ்வதமான தர்மம் ஒன்றும் இல்லை." அதே மாதிரி பிராசேதஸ்மனு என்பவர் "ஓதுவியாத ஆசிரியன், ஓதாதரிக்விக், பாதுகாவாத அரசன், அப்பிரியத்தைச் சொல்லும் மனைவி, கிராமத்தில் இருக்க விரும்பும் இடையன், வனத்தில் இருக்க விரும்பும் நாவிதன் ஆகிய இந்த ஆறு பேர்களும் கடலில் உடைந்த கப்பலைப் போல தள்ளிவிட வேண்டும்," என்று சொன்னுர். அப்பேற்பட்ட சிறந்த ராஜ தர்மத்தை சிறப்பாக அனுஷ்டிக்கும் மாதலியுடன் கூடிய இந்திரனுக்கும், இந்த ராணிக்கும் நான் நமஸ்கரிக்கிறேன், மஹாத்மாவான சதக்ருது த்ரைலோக்ய லக்ஷ்மியின் பிரசாதத்தைப் பெற்றவர். தர்மங்களில் பிரவர்த்திப்பவர். மற்றவர்களையும் ஸ்வதர்மத்தில் ஈடுபடையச் செய்பவர். நாரதருக்கும் அர்ஜுனனுக்கும் மிக்க வேண்டியவர். கருடனிடம் மிக்க அன்பு கொண்டவர். தேவயானையின் பிதா. சுப்ரமண்யர் என்று புகழப்படும் தேவசேனுபதிக்கு கௌரவம் கொடுத்தவர். நிருத்ய, கானம், திரிவர்க்கம், மோக்ஷம் ஆகிற சாஸ்திரங்களை அறிந்தவர். சப்த ரிஷிகளிடமும் ராஜதர்மத்தில் ஈடுபடும் அரசர்களிடமும், திக்பாலகர்களிடமும் மிக்க பிரியமானவர். மாந்தாதாவை வளர்த்தவர். மருத்தனுக்கு அனுக்ரஹித்தவர். தக்ஷகனுக்கு அபயம் கொடுத்துக் காப்பாற்றினுர். பொருளின் சூக்ஷ்மங்களை அறிந்தவர். ஆயிரம் கண்களால் பகவானைத் தரிசித்து ஆனந்தமடையும்போது சஹஸ்ரநயனங்களால் புளகாங்கித மடைபவர். பதிவிரதையான இந்திராணியை மனைவியாக உடையவர். நகுஷனை சிக்ஷித்து விருத்ரனைக்

கொன்று, நமுசியின் எலும்பினுல் செய்யப்பட்ட வஜ்ரத்தை ஆயுதமாக உடையவர். மருத்துக்களை வளர்த்து அவர்களை சகாயர்களாகக் கொண்டவர். ஐராவதம், உச்சைஸ்ரவம், கல்பகம், நந்தனம், காமதேனு, இவைகளால் சிறப்பிக்கப்படுகிறவர். பாஹுபலத்திலும் தண்டநீதியிலும் மிக்கச் சிறந்தவர். பாகசாஸனுன அவரை இந்திராணியுடன் கூடவிருப்பவரை நான் நமஸ்கரித்து, பகவானை அடைய விரும்புகிறேன்.]

பிறகு பிரும்மாவானவர் விபீஷணனிடம் வந்து சேர்ந்தார். "ஹே, புத்ர, உனக்கு என்னவரம் வேண்டும்?" "ஹே ஸ்வாமி, உம்முடைய அனுக்ரஹத்தால் அமலரான பகவானுடைய பாத கமலங்களை நிஷ்காம்யமாகவும் வேறு ஒன்றும் பிரயோசனம் இல்லாத அனன்ய சரணத்வமும் கொண்ட பிரேமை பக்தியை எனக்குக் கொடும்" என்று அவனுல் வரமாகக்கேட்கப்பட்டது. (966)

"அவனுக்கு இந்த வரத்தைக் கொடுத்த பின்பு பிரும்மா சென்று விட்டார். அந்த மூன்று பிராதாக்களும் மிக்க சந்தோஷத்துடன் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினுர்கள். மயனுடைய பெண்ணுகிய மந்தோதரி என்கிற பரமசுந்தரி ஸ்திரிகளுள் ரத்னமாக விருந்தாள். (967)

"மயன் அவளை ராவணனிடம் கூட்டிக் கொண்டு வந்தான். அவனுக்கு ராவணன் ராக்ஷஸர்களுக்கு ராஜாவாக ஆவான் என்று முன்பே தெரியும். அந்த அழகான ஸ்திரியைக் கண்டு ராவணன் பிரசன்னமடைந்து அவளை கல்யாணம் செய்துகொண்டான். பிறகு அவன் தனது இரு தம்பிமார்களுக்கும் விவாஹம் செய்து வைத்தான்." (968)

"சமுத்திரத்திற்கு நடுவே திரிகூடம் என்கிற பர்வதம் பிரும்மாவினுல் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அதில் மிக்க பலமுள்ள கோட்டைகள் இருந்தன. மஹத்தான மாயாவியான மயனுல் அழகான நகர் ஒன்று நிர்மாணிக்கப்பட்டது. தங்கமயமானதும் சிறந்த ரத்னங்களால் அலங்காரம் செய்யப்பட்டும் அந்த நகர் வெகு அழகுடன் நிர்மாணிக்கப்பட்டது." (969)

"எவ்விதம் நாக குலத்திற்குப் போகவதி சிறந்ததோ, இந்திரன் வசிக்கும் அமராவதி சிறப்புக்களில் எவ்விதம் மேன்மைப்பட்டதோ, அதுமாதிரி, அதிக அழகுள்ளதும் அநேக கோட்டைகள் உள்ளதும் ஜகத்திலே மிகப் பிரசித்திபெற்ற லங்கை என்னும் நகரம் சிறந்து விளங்கியது." (970)

[தியானம்

ஹே ஜானகி, ராமா, மாசில்லாத ஜனகனின் புத்ரி, உன் பெருமையை யாரால் வர்ணிக்க முடியும்? என் குருநாதனான வால்மீகியும் தியாகராஜரும் உன்னை எவ்வளவு புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். பரமேஸ்வரி, உன்னால் அல்லவோ, ராமன் புகழை அடைந்தான். ராவணனைக் கொன்றால் மட்டும் போதுமா? உன் தவமும் குலமும் உன் வனவாச வாழ்க்கையும், உன் ஸ்ருங்கார லீலைகளும், உன் அழகும், உன் அடக்கமும், லக்ஷ்மணனிடம் கூறிய கொடிய சொற்களும் அதனால் ஏற்பட்ட பச்சதாபமும், அனுசூயையிடம் நீ சொல்லிய ஸ்திரி தர்மங்களும் கடைசியாக அக்னியில் செல்லுமுன் அம்மா; உன்னால் சொல்லப்பட்ட சொற்களும், நீ காட்டிய தீரமும், மஹா விஸ்வாசமும், பிறகு உன் தாயாகிய பூமிதேவி உன்னை உதரத்தில் வைத்துக் கொண்ட பெருமையும், ராமாயணத்தை முதலில் கானம் செய்த உன் புத்ரர்களான லவகுசர்களையும், அவர்களை நீயே வால்மீகி ஆஸ்ரமத்தில் வளர்த்த பெருமையையும் ஆஞ்சநேயர் போன்ற பிரும்மசாரி வியக்கும்படி உன் பேச்சுக்களும் யாரால் வர்ணிக்க முடியும்? உன் தயை எனக்குப் பரிபூர்ணமாக கிடைக்க வேண்டும். ராமனுடைய தயையும் உன்னால் பரிபூர்ணமாக கிடைக்க வேண்டும். மஹாலக்ஷ்மி சகிதமான நாராயணரின் தர்சனமும் கிடைக்க வேண்டும். அவருடைய பாதங்களை நம்பியிருக்கும் என்னை அம்மா, நீதான் கிருதார்த்தனாக ஆக்கவேண்டும்.]

"அந்த லங்காபுரிக்கு நான்கு புறங்களிலும் ஸமுத்திரம் மிக்க ஆழமான அகழிகள் போல இருந்தன. பிரும்மாவினால் ஏற்கனவே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருந்தன. அந்தக் கோட்டைகளை மயன் தங்கத்தாலும் மணிகளாலும் அழகாகவும் கெட்டியாகவும் கட்டினான். அவனுடைய வேலைத் திறத்தை யாவராலும் வர்ணிக்க முடியாது. அவ்வளவு நேர்த்தியாக விருந்தது." (971)

"பகவானான ஹரியினுடைய ஆக்ஞையின்படி எந்த கல்பத்தில் ராக்ஷஸர்களுக்குப் பதியாக இருக்கப்போகிறானோ, அந்த விடத்தில் அவன் வசிக்க ஆரம்பித்தான். அவனுக்குச் சகாயமாக சூரர்களும் பிரதாபம் கொண்ட வீரர்களும் தங்கள் சேனைகளுடன் அந்த லங்காபுரியில் வசித்து வந்தார்கள்." (972)

"அந்தவிடத்தில் முன்பே பெரிய பெரிய ராக்ஷஸர்கள் வசித்து வந்தார்கள். அவர்கள் தேவதைகளைப் பீடித்த காரணத்தால் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். இப்போது இந்திரனுடைய

கட்டளையால் அங்கே குபேரனுடைய ஆக்ஞைக்கு உட்பட்டு ஒரு கோடி யக்ஷர்கள் வசித்து வந்தார்கள்.'' (973)

"பத்து தலைகளுள்ள ராவணன் இதை அறிந்ததும் அவர்களை அழிப்பதற்கு பெரிய சேனையுடன் கிளம்பினான். அவர்களைக் கண்டதும் யக்ஷர்கள் பயந்து ஓடி ஒளிந்து கொண்டார்கள்.'' (974)

"அப்பொழுது ராவணன் நகரத்தில் புகுந்து எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்தான். ஒரு சத்ருவும் இல்லாதபடியால் மிக்க சந்தோஷமடைந்தான். இயற்கையாகவே வெகு அழகானதாயும், உள்ளே அன்னியர்களால் புகர முடியாதபடி பலமுள்ள கோட்டைகளால் சூழப்பட்டிருந்ததாலும் ராவணன் அதை தன்னுடைய ராஜதானியாக ஏற்படுத்திக்கொண்டான்.'' (975)

"அவரவர்கள் யோக்யதைக்கு அனுகூலமாக ராக்ஷஸர்களால் ஒவ்வொருவருக்கும் தனித்தனி வீடுகள் கொடுத்தான். அவர்களை சுகப்படுத்தினான். ஒரு சமயம் குபேரனை சண்டையில் ஜயித்து அவனுடைய புஷ்பக விமானத்தையும் கைப்பற்றிக் கொண்டான்.'' (976)

[தியானம்

ஹே ராமா, ஹே சீதா, ஹே நடேசா, சிவகாமவல்லி, பக்தியினால் உள்ளம் வாடி நொந்து போகும் ஜனங்களிடம் கருணை கொண்டவராக நந்தியிடம், "என் பக்தன் நொந்தால் என் செல்வம் குறைந்துவிடும்'' என்று சொல்லிய நடராஜா, நீர் எவ்வளவு கருணை உள்ளம் கொண்டவர் என்று தெரிய வருகிறது. தில்லை சிதம்பரம், கனக சபாபதி, குஞ்சிதபாதம், இடதுகாலைத் தூக்கி வேதசபையில் மாதவன், பிரும்மன் ஆகியவர்கள் களித்திட நர்த்தனம் பண்ணியவன், பதஞ்சலி வியாக்ர பாதர் ஆகியவர்களின் பெருமுயற்சியால் கங்கையுடன் கூடிய விரிசடையுடனும், மழுவுடனும், டமருவுடனும், பித்தனைப் போல கூத்தாடிய என் அப்பன் எனக்கு எப்போது அக்காக்ஷி தருவானோ? தொந்திப் பிள்ளையார் நர்த்தனமாட, சிவகாமி சகிதன் ஆடும் ஆனந்த கூத்தை யான் பார்க்கும் தருணம் எதுவோ? வேதியர் குலத்தைப் போற்றும் மிக்க சிவபக்தனான நந்தனுக்கும், பாடும் கவியான கோபால கிருஷ்ணனுக்கும் அருளிய என் சித்சபேசன், இடது காலைத் தூக்கி ஆடிய அம்பலவாணன், எனக்கு எப்போது அருள் பண்ணுவார்?]

"ராவணனால் இன்னொரு சமயத்தில் மிக்க பர்வதங்களுடன் கூடிய கைலாஸ மலை அவனுடைய கைகளால் பெயர்த்து எடுக்கப் பட்டது. விளையாட்டுக்காகவும், தன் பாகுபலத்தை சோதிப் பதற்காகவும் அந்த பர்வதம் அவனால் பெயர்த்து எடுக்கப் பட்டது. அதன் பிறகு அவன் மிக்க சந்தோஷத்துடன் சென்றான்." (977)

"சுகம், சகலவிதமான சம்பத்துக்கள், புத்ரர்கள் சேனை, சஹாயகர்கள், ஜயம், பிரதாபம், பாஹுபலம், புத்தி இவைகளின் வளர்ச்சி, இப்பேற்பட்ட மஹத்தான ஐஸ்வர்யங்கள், தினந் தோறும் புதியன புதியனவாகத் தோன்றுபவையாகவும், லாபங் களையும் போகங்களையும் உண்டு பண்ணுவதாகவும், பலவகை களாக இருந்தன. இவைகள் விருத்தியாக விருத்தியாக அவ னுக்கு லோபமும் பெரிதாக வளர்ந்து கொண்டிருந்தது." (978)

"அத்யந்த பலவானான கும்பகர்ணன் அவனுடைய தம்பி யாக விருந்தான். அவனுடன் யுத்தத்தில் சண்டைசெய்ய ஒரு வரும் பிறக்கவில்லை. அவன் கள்குடித்து விட்டு, ஆறுமாதங்கள் தூங்குவான். அவன் நித்திரையிலிருந்து கண்கள் முழித்ததும், மூன்று லோகங்களும் அவனிடமுள்ள பயத்தால் நடுங்கின" (979)

"அவன் ஒவ்வொரு நாளும் ஆகாரம் செய்வானாகில் இந்த உலகங்கள் எல்லாம் சீக்ரமாகவே நஷ்டமாகிவிடும். அவன் யுத்தத்தில் மஹா தீரனாக விளங்கினான். அவனைத்தவிர, யுத்தத் தில் தீரர்களான இன்னும் கணக்கற்ற வீரர்கள் அந்த லங்காபுரி யில் அவனைப்போல இருந்தார்கள்." (980)

"ராவணனுடைய ஜேஷ்டபுத்ரன் மேகநாதன், அவனும் யுத்தத்தில் முதல் நம்பர் வீரன். நிகரற்ற வீரம்படைத்தவன். அவனுடன் யுத்தம் செய்வது மிக்க கடினம். அவனுடைய பயத்தால் ஸ்வர்க்கத்தில் வசிக்கும் தேவர்கள் கூட தினமும் நடு நடுங்கினார்கள்." (981)

"இதோடு மாத்திரமல்ல. குமுகன், அகம்பனன், வஜ்ர தந்தன், தூமகேது, அதிகாயன் ஆகிய வீரர்களும் இருந் தார்கள். ஒவ்வொருவனும் தனியாகவே இந்த உலகம் எல்லா வற்றையும் ஜயிக்கக் கூடிய பலமுள்ளவன். இதுபோல பலம் படைத்த வீரர்கள் பலபேர்கள் லங்கையில் இருந்தார்கள்." (982)

[தியானம்

ஹே ராம, சீதா, புருஷோத்தமா, உனக்கும் நாரதரால் பிராம்மண சாபம் ஏற்பட்டு, நீயும் அதை சந்தோஷத்துடன்

ஏற்றுக்கொண்டு பூமியில் சாதுக்களை அனுகிரஹம் செய்ய அவதாரம் செய்தாயே. ஆனால் ஒரு காலத்தில் உன் தேஜஸால் பூர்த்தி அடைந்த தேவர்கள், துர்வாஸர் போன்ற சிறந்த பிரும்ம ரிஷியின் சாபத்தை அடைந்து அதன் பலனாக தங்களுடைய லக்ஷ்மி ஹீனத்தையும் அடைந்தார்கள். அதைப்போக்க நாராயணராகிய உம்மை, பிரும்மா சங்கரர் ஆகிய இவர்களை, உபாயமாக வைத்து, ஸ்துதி செய்து, உன் இஷ்டப்படி பிராம்மண சாபத்திற்குப் பிராயசித்தமாக அம்ருத மதனம் என்கிற பெரிய காரியத்தை செய்யச் சொன்னீர். அவர்கள் அதைச் செய்து ஸித்தி அடைந்தார்கள். ஐயா, அம்மா ஜானகி, உன்னிஷ்டம் போலதான் எல்லாம் நடக்கும். ஐஸ்வர்யங்கள் சேர மதமும் லோபமும் விருத்தி அடையும். அவைகளின் தோஷத்தால் ஸத்வம் குறையும். லக்ஷ்மியானவள் ஸத்துவத்தின் பிரியை அல்லவா? நாராயணர் சுத்த ஸத்வமான பொருளானபடியால் அவரை விட்டுப் பிரியாமல் தேகத்தாலும் மனத்தாலும் அவரிடம் சேர்க்கை அடைந்து "அனபாயினி" என்கிற பெயரைப் பெற்றாள். சுத்த ஸத்வத்தின் சின்னம் ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதகாமனாகவும், அடக்கமும், சமமும், தமமும், சிலமும் தானே. அதனால் நித்ய ஶ்ரீ வாசியான லக்ஷ்மிபதி இவைகளுடனும், சிறந்த வைபவங்களுடனும், ஶ்ரீயப் பதியாக விளங்குகிறான். ராவணன் போன்ற ராக்ஷஸர்கள் ஞானமிருந்தும், சகல சராசரங்களையும் விரோதித்த படியால் குலத்தோடு நாசமடைந்தார்கள். ஆகையால் துர்வாசர், போன்ற மன்னிக்காத சுபாவம் கொண்ட பிராம்மணர்களிடமும், கௌதமர், வஸிஷ்டரைப் போல சுஹ்ருதயமுள்ள பிரும்மரிஷிகளிடமும், பராசரர், புலஸ்தியர், விசுவாமித்திரர், அதரி போன்ற பிரும்ம ரிஷிகளையும் நான் திருப்தி பண்ணுவேனாக. அதனால் க்ஷீராப்தி போன்ற மஹாராஜன் விஷ்ணுவின் பதத்தை சாஸ்வதமாக அடைந்தவனாக ஆனான். அதே பிரகாரம், ராமா சீதா, உங்கள் தயவால், அந்த மஹானுபாவனான க்ஷீராப்தி ராஜனின் தயவால் நான் அவ்விதம் விளங்குவேனாக.]

"எல்லா ராக்ஷஸர்களும் நினைத்ததைச் செய்யும் ஆற்றல் படைத்தவர்கள். மாயையின் ஜாலங்கள் எல்லாம் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் அவர்களுக்கு ஸ்வப்னத்தில் கூட தயை, தர்மம் கிடையாது. ஒரு சமயம் தசமுகன் சபையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். தன்னுடைய கணக்கற்ற பரிவாரங்களைக்கண்டான்." (983)

"புத்ரர்கள், பௌத்ரர்கள், மித்ரர்கள், பரிஜனங்கள், ஞாதிகள் ஸகல ராக்ஷஸ வர்க்கங்கள் கணக்கில்லாதவர்களாக இருந்தார்கள். தன்னுடைய பரிவாரங்களைப் பார்த்து கர்வத்துடனும், அபிமானத்துடனும் ஸ்வபாவமாகக் கெட்ட குணங்களைக் கொண்ட ராவணன் அவர்களைக் க்ரோதத்துடன் சொல்ல ஆரம்பித்தான்" (984)

"ஹே ராக்ஷஸ வீரர்களே, கேளுங்கள் தேவகணங்கள் நம் சத்ருக்கள். அவர்கள் நேரில் வந்து யுத்தம் செய்வதில்லை. பலவான்களான சத்ருக்களைக் கண்டு அவர்கள் யுத்தம் செய்வதில்லை." (985)

"அவர்களுடைய தேஜஸின் நாசம் ஒரு உபாயத்தால்தான் ஏற்படும். அதை நன்ருக அறியுங்கள். பிராம்மண போஜனம், யக்ஞம், ஹவனம், சிராத்தம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் அழித்துவிடுங்கள்." (986)

"பசியினுல் துர்பலம் அடைந்தவர்களாகவும், பலஹீனர்களுமாய் எல்லாத் தேவதைகளும் ஆகிவிடுவார்கள். அச்சமயம் அவர்களை நாம் அழித்துவிடலாம். பிறகு அவர்களைப் பரிபூர்ணமாக அழிப்பதற்கோ அல்லது அவர்களை நம்மிடம் பராதீனமாக வைத்துக் கொள்வதற்கோ நான் தீர்மானம் செய்கிறேன்." (987)

பிறகு தன் குமாரனுன மேகநாதனை அழைத்து, அவன் சிரஸைத் தடவி, ஆசீர்வாதம் செய்து அபிமானத்துடன் "ஹே புத்ர, எந்த தேவதைகள் யுத்தத்தில் கர்வத்தினுல் சண்டை செய்ய விரும்புகிருர்களோ, அவர்களுடன் நீ சண்டை செய்." (988)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயணு, அக்ஷயமானவரும்; நித்யரும் சரணுகத வத்ஸலருமாகிய உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். என் குரு நாதரான சுக்ரரின் சிஷ்யரான பிரஹ்லாதன் தைத்யதானவர்களைப் பார்த்து விஷய சுகங்களிலிருந்து விடுபட்டு மோக்ஷ தர்மத்தைப் பற்றியும், அதன் சிறந்த மார்க்கமான ஹரிபகவானுடைய பாதங்களைப்பற்றியும் விளக்கிச் சொன்னுன். அது மாதிரி அனுகீதையில் பகவான் கிருஷ்ணன் மீண்டும் அர்ஜுனனுக்கு மோக்ஷபதத்தைப் பற்றியும், கர்மஸ்நேகம் ஆகியவைகளிலிருந்து விடுதலையைப் பற்றியும் சொன்னுர். மோக்ஷ தர்மத்திலிருப்பவர் ஸமதிருஷ்டியுடனும் அச்யுதனை ஆராதனம் செய்பவராகவும், தர்மம், அதர்மம், காமம் இவைகளை விட்டவராகவும்,

மஹா விருக்ஷமான பிரும்ம ஸ்வரூபத்தை அடைந்து, அதன் பழமான மோக்ஷத்தை அடைவார்கள். ஏகாந்திகளும் பிரும் மத்தைத் தியானம் செய்யும் யோகிகளும் அந்த பதத்தை அடை கிருர்கள். சந்திரன், சூரியன் ஆகிய கிரகங்களின் லோகங்களை அடைந்தவர்கள்கூட மீண்டும் சம்சாரத்திற்கு திரும்பி வரு கிருர்கள். ஆனுல் த்வாதசாக்ஷரமாகிய "ஓம் நமோ பகவதே வாசுதேவாய," என்கிற மந்திரத்தைத் தியானிப்பவர்கள் இது வரையிலும் மோக்ஷ பதத்திலிருந்து திரும்பி வருகிறதில்லை. வேதங்களை நிந்தனை பண்ணுகிறவர்கள் பலவித நரகங்களுக்குச் செல்லுகிருர்கள். பகவானே, உன்னையே நம்பியிருக்கும் எனக்கு த்வாதசாக்ஷரத்தின் பலனுகிய மோக்ஷபதத்தைத் தாரும். நாரதர், துருவன், சுக்ரர், பிரஹ்லாதர், பலி இவர் களுடய அனுக்ரஹமும், சப்தரிஷிகளின் அனுக்ரஹமும் பராசரரும் என்னை கிருதார்த்தனுக ஆக்கவேண்டும். ஸ்ரீ ஹரி னுடைய சரணமே எனக்கு மிகப் பிடித்தது. ஆஞ்சநேயர் எனக்கு மார்க்கதரிசியாக விருக்கிருர்.]

அந்த ராவணன் தன் புத்திரனுகிய இந்திரஜித்தைப் பார்த்து "யுத்தம் செய்யும் விருப்பமுள்ள தேவர்களை ஜயித்து, கட்டிக் கொண்டு வா" என்று கட்டளை யிட்டான். புத்ரன் பிதாவின் ஆக்ஞையை ஒப்புக்கொண்டு தன் பரிவாரங்களுக்கு அவ்விதம் சொல்லிவிட்டு தானும் கதையை எடுத்துக்கொண்டு சென்ருன்." (989)

"தசானன் செல்லும் சமயம், பிருத்வி நடுங்கினுள். அவ ளுடைய வருத்தம் தாங்கமுடியாமலிருந்தது. ராவணனுடைய கர்ஜனைகளைக் கேட்டு, தேவ வனிதைகளின் கர்ப்ப சிசுக்கள் நழு வின. ராவணன் கிரோதத்துடன் வருவதைக் கண்டு, தேவர்கள் மேரு பர்வதத்திலிருக்கும் குகைகளில் ஒளிந்துகொண்டார்கள்." (990)

"அந்த ராவணன் தேவர்களின் எல்லா அரண்மனைகளும் காலியாக இருந்ததைக் கண்டான். சிம்ம கர்ஜனை அடிக்கடி செய்து தேவர்களை இழிவாகப் பேசி, அவர்களை சண்டைக்கு அழைத்தான்." (991)

"யுத்த வெறியை அடைந்து, தனக்கு யுத்தம் செய்வதற்கு சமம் யாரென்று ராவணன் தேடி அலைந்தான். ஆனுல் ஒருவனை யும் காணவில்லை. சூரியன், சந்திரன், வாயு, வருணன், குபே ரன், அக்னி, காலன், யமன் இன்னும் மற்ற தேவ அதிகாரிகள். (992)

கின்னரர்கள், சித்தர்கள், மனுஷ்யர்கள், தேவர்கள், நாகர்கள் ஆகிய எல்லோரையும் துரத்தினன். பிரும்ம ஸ்ருஷ்டியில் எங்கு எங்கு சரீரம் எடுத்து ஸ்திரி புருஷர்களாக யார் யார் விளங்கினர்களோ, அவர்கள் எல்லோரும் ராவணனுடைய ஆதீனத்துக்கு உட்பட்டார்கள்.'' (993)

[தியானம்

ஹே ராமா, சர்ப்பத்தை அணிந்த சிவனுர்க்கும், நாத உருவமெடுத்த அம்பிகைக்கும், இருவர்களின் ஐக்ய பாவத்தை அடைந்த தியாகராஜருக்கும் மிக்க வேண்டியவனே, நீர் அபார கிருபையுடன், வஞ்சனை இல்லாமலும், உதாஸீனனுகவும் என்னிடம் இருக்கக்கூடாது. லோபத்தினுலும் மோஹத்தின் வசம் அடைந்த என்னையும் காப்பாற்றவேண்டும். ஊர்த்வரேதஸ்களானவர்களில் மஹா சித்தி அடைந்த தபஸ்விகளின் த்யானத்தையும், துருவன் போன்ற மஹாத்மாக்களின் சேவையையும், ஜானகியின் பிரேமையையும், ஆஞ்சநேயருடைய திடமான பக்தியையும், ஹிமவானுடைய அடக்கத்தையும், வருணனுடைய ஞான விலாஸத்தையும், இந்திரனுடைய தர்ம உள்ளத்தையும் அனந்தனுடைய தவத்தையும், கருடனுடைய ஆத்ம உணர்வையும், வாலகில்யர்களின் வீர்யத்தையும் எனக்கு அளிக்கவேண்டும். பீஷ்மருடைய ஹித வசனங்களும், நாரதரை குருவாக வரித்த எனக்கு உன்னிடமுள்ள பக்தியை வளரச் செய்ய வேண்டும். பரமேஸ்வரா, என்னை ஏமாற்றி விடாதே. யத்ருச்சையாக வரும் சுகத்தை அனுபவிக்கும் என்னை உன் பராயணனுக ஏற்றுக்கொள். ஜயலக்ஷ்மியான சீதை உனக்கு வெண்ணெய், பால் பழம், பக்ஷணங்கள், தாம்பூலம் கொடுக்கிற சமயம், அவளுடைய பார்வையில் நீ சுகித்து இருக்கும்போது எனக்காக அந்த ஜனகன் பெண் பரிந்து பேச மாட்டாளா? உன் உடம்பில் ஒரு மயிர் காம்பாக விளங்கும் பாக்யம் பெற்றவனுவேனு? எனக்கு அந்த கால புருஷன் அனுகிரஹம் பண்ணுவானு?]

'' சகல விதமான ஸ்ருஷ்டியில் உள்ளவர்களும் மிக்க பயத்தினுல் ராவணனுடைய ஆக்ஞைகளை ஏற்றுக்கொண்டு மிக்க வணக்கத்துடன் அவனுக்கு உட்பட்டிருந்தார்கள்.'' (994)

'' அவனுடைய புஜ பலத்தினுல் சகல விஸ்வமும் அவன் ஆக்ஞைக்கு உட்பட்டிருந்தது. ஒருவனும் ஸ்வதந்தரம் அடையவில்லை. இந்த விதமாக இந்த பூமண்டலத்தின் ராஜாக்களுக்கு

சிரோமணியாக ராவணன் விளங்கினன். சார்வ பௌமனுக தன் இஷ்டம்போல அவன் அரசாண்டு வந்தான்.'' (995)

''தேவயக்ஷ கந்தர்வ மனுஷ்ய கின்னர நாகர்களின் கன்னிகைகள் இன்னும் அநேக சுந்தரிகள், உத்தமமான ஸ்திரி வர்க்கங்களில் சிறந்தவர்கள், அநேகம் பேர்களை தன் புஜ பலத்தினுல் ஜயித்து விவாஹம் செய்துகொண்டான்.'' (996)

''ராவணன் சொன்ன கட்டளைகளை அவன் புத்ரனுன இந்திரஜித் அவகாசமில்லாமல் பூர்ணமாகப் பூர்த்தி செய்து முடித்தான்.'' எந்த கட்டளைகளை இந்திரஜித் முதன் முதலாகச் செய்தானே, அந்த விபரங்களை துளசிதாஸர் சொல்லி நானும் விவரிக்கிறேன்.'' (997)

பார்ப்பதற்கு ராக்ஷஸர்கள் பீம ஸ்வரூபமுள்ளவர்கள். எல்லோரும் பாப சித்த முடையவர்கள். இரவில் சஞ்சரிப்பவர்களாகவும், தேவர்களைப் பீடித்தும் அவர்கள் உபத்ரவம் செய்தார்கள். மாயைகளினுல் பல ரூபங்களைத் தரித்து கொள்வார்கள். இவ்விதமாக ராக்ஷஸக் கூட்டங்கள் எல்லோருக்கும் அவர்கள் துக்கத்தை கொடுத்து வந்தனர். (998)

எந்த விதமாக வேத விருத்தமான கார்யங்களைச் செய்தால் தர்மத்தின் வேர் அறுபடுமோ, அதை எல்லாம் அவர்கள் செய்தார்கள். எந்த எந்த ஸ்தானங்களில் பசுக்கள், பிராம்மணர்கள் வசித்தார்களோ, அந்த இடங்களில் நகரங்கள், கிராமங்கள், புரங்கள் எல்லாவற்றிலும் நெருப்பை வைத்தார்கள். (999)

[தியானம்

ஹே ராமா சீதா, உன் நினைவு எனக்கு எப்போதும் வேண்டும். உன் கிரியையாகிற கர்மாக்கள் எப்போதும் வேண்டும். உன் ஹிருதயம் எனக்கு எப்போதும் வேண்டும். உன் கிருபா திருஷ்டி எனக்கு எப்போதும் வேண்டும். உனக்கு நான் வேண்டியவனுக சதா இருக்கவேண்டும். உன் கிருபையால் என் அஹங்காரம் ஒழிந்து, இந்திரியங்கள் எனக்கு வசப்பட்டு என் ஜீவனத்தை உனக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். என் புத்தி எனக்கு குரு. என் மனம் சிஷ்யன். நீ பரம்பொருள். அம்மாவான ஜானகி பரத்துக்குப் பரம். நான் உங்கள் இருவருக்கும் அடிமை. பக்தியினுலும், வினயத்தாலும், பிரேமையாலும் உங்களை நான் சதா அடைய வேண்டும்.]

அவர்களின் செய்கைகளால் எங்கும் சுபமான ஆசாரங்கள் (பிராம்மண போஜனம், யக்ஞம் ஆகியவை) நடைபெறவில்லை.

தேவர்கள், பிராம்மணர்கள், குரு மஹாராஜாக்கள் யாவரும் வெகு மானிக்கப்பட வில்லை. ஹரி பக்தியும் யக்ஞமும் தபஸ்ஸும் ஹரியின் தியானமும் எங்கும் நடைபெறவில்லை. ஸ்வப்னத்தில் கூட வேதங்கள், புராணங்கள் ஆகியவைகளைக் கேட்பதற்கு வாய்ப்பு வரவில்லை. (1000)

ஜபம், யோகம், வைராக்யம், தபஸ், தேவதைகளுக்கு பாகம் கொடுத்தல், ஆகிய இந்த சப்தங்கள் ராவணனுடைய காதில் எங்கேயும் நடைபெற்றதாக விழவில்லை. அவ்விதம் ஏதாவது விழுந்தால் ஸ்வயமாகவே ராவணன் அவ்விடம் சென்று அழித்து விடுவான். ஸம்சாரத்தில் இவ்விதமான பிரஷ்டமுள்ள ஆசாரங்கள் ஏற்பட, தர்மங்களின் சப்தங்கள் காதுகளில் விழவில்லை. எங்கும் வேதங்களையும், புராணங்களையும் சொல்லுபவர்கள் காதுகளில் கேட்கப்படவில்லை. அவ்விதம் யாராவது சொல்லுவார்களாகில், அவர்களை அவன் நாடு கடத்திவிடுவான். (1001)

ராக்ஷஸ ஸமூகங்கள் இவ்விதமாகக் கோரமான அனுசாரங்களுடன், அநீதியான நடத்தைகள் செய்யச் செய்ய, அவைகளையும் வர்ணிக்கவும் முடிகிறதில்லை. எவர்களுக்கு மற்றவர்களை ஹிம்சை செய்வதில் பிரியம் இருக்கும்? அவர்களின் பாபச் செயல்களை வர்ணிப்பதில் என்ன லாபம் இருக்கும்? (1002)

## மாஸ பாராயணம்—ஆருவது நிறுத்தம்

பிறருடைய தனம், பரஸ்திரி மீது மனம் வைத்தவர்கள், துஷ்டர்கள், திருட்டு புத்தி உள்ளவர்கள், சூதாடிகள் அதிகமாக விளங்கினுர்கள். தாய் தத்தையர்களை மரியாதை செய்வதும் இல்லை. தேவதைகளைப் பூஜை செய்வதுமில்லை. ஸாதுக்களை பூஜிக்கிறவர்களுமில்லை. அப்பேற்பட்ட பாபிகளை மற்றவர்கள் சேவை செய்யும் பழக்கங்களும் அதிகரித்தன. (1003)

சிவன் பவானியிடம் சொன்னுர் "ஹே பவானி, இந்த மாதிரி துராசாரங்கள் எப்போது வளர்ச்சி அடைகின்றனவோ, அப்பேற்பட்ட துரா ஆசரணை செய்பவர்களைப் பிராணிகளுக்கு ராக்ஷஸர்க்ளாக அறிந்துகொள். இவ்விதமாய் அதிசயமான தர்மத்திற்கு கேடு ஏற்படும் சமயங்களில், இந்த பூமிதேவியானவள் வியாகுலம் அடைந்து பயப்பட்டுப் போகிருள்." (1004)

பூதேவி தனக்குள் சிந்தனை செய்ய ஆரம்பித்தாள். "இப்பொழுது பர்வதங்கள், நதிகள், சமுத்திரங்களின் பாரங்கள்கூட இவ்வளவு சுமக்க முடியாதபடி கனமாகவும் ஸந்தாபத்தையும்

செய்கிறதாகவுமில்லை. ஆனால் ஒரு பரத்ரோஹி (பிறருக்குக் கேடு விளைவிப்பவன்) என்றால் சுமக்க முடியாதபடி கனத்து விடுகிறான். என் மனத்தின் சாந்தியைக் கெடுத்து விடுகிறான்.'' "இவ்வித மாக யோசனை செய்யும் பிருத்வி தேவி எல்லாத் தர்மங்களும் விபரீதமாக அனுசரணை செய்யப்படுவதைப் பார்த்தாள். ஆனால் அவளுக்கு ராவணனிடம் உள்ள பயத்தினால் யாரிடமும் சொல்லத் தைரியமில்லை.'' (1005)

"பிறகு அவள் தேனு ரூபம் எடுத்துக்கொண்டு மீண்டும் தனக்குள் யோசித்தாள். பிறகு அவள் தேனு ரூபத்துடன் தேவர் களும், முனி ஜனங்களும் இருக்கும் இடத்திற்குச் சென்று தனக்கு ஏற்பட்ட ஸந்தாபங்களை அவர்களிடம் சொன்னாள். ஆனால் ஒருவரும் அவளுக்கு உதவி செய்ய முன்வரவில்லை.'' (1006)

அந்த சமயம் தேவதைகள், முனி ஜனங்கள், கந்தர்வர்கள், எல்லோரும் ஒன்றுகூடி பிரும்மலோகம் சென்றார்கள். தேனு ரூபத்துடன் பூமிதேவியும் அவர்களுடன் சென்றாள். ரொம்ப பயமடைந்து கஷ்ட திசையில் இருக்கும் அவளைப் பார்த்தார் பிரும்மா. அவளுடைய மனதில் எல்லாவற்றையும் அவர் ஆராய்ந்து பார்த்தார். இந்த விஷயத்தில் நம்மால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை என்று தீர்மானித்த பிறகு, அவர் வசுந்தரா விடம் சொன்னார்: "நீ யாருக்கு சேவகம் செய்கிறாயோ, அந்த அவினாசியான கடவுள் உனக்கும், எனக்கும், நம் எல்லோருக்கும் உதவி செய்வார்.'' (1007)

பிரும்மா சொன்னார் "ஹே தரணி, மனத்தில் தைரிய மடை. ஸ்ரீ ஹரியினுடைய பாதங்களை ஸ்மரணை செய். பிரபு தன் அடி யார்களை ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றி, நம் எல்லோருக்கும் இந்த கடினமான ஆபத்துக்களையும் நாசம் செய்வார்.'' (1008)

[தியானம்

ஹே ராமா, ரகுகுல வீரனே, புருஷ ஸ்ரேஷ்டனே, அகஸ்திய ரிஷியினால் ஆதித்ய மந்திரம் உபதேசிக்கப்பட்டவனே, அ என்கிற அக்ஷரம் சங்கர்ஷணருடைய பிஜாக்ஷர மந்திரம். முன் ஜன் மத்தில் அதிதியின் குமாரராக விருந்ததால் ஆதித்யர் என்றும், அச்சமயம் தாங்கள் உபேந்திரன் என்றும் அழைக்கப்பட்டீர். ஆதித்யனாக அவதரித்த சமயம் ஜானகியானவள் பத்மா என்று அழைக்கப்பட்டாள். நீர் தர்மத்தை பரிபாலிப்பவர். கர்ம சாக்ஷி ஸர்வ சக்ஷி. தேவர்களின் காரியங்களைச் செய்பவர். விவஸ்மான்

என்று வஸிஷ்டரால் துதிக்கப்பட்டீர். ஸவிதா என்று விஸ்வாமித்திரராலும், சூரியன் என்று ஜமதக்னியாலும் துதிக்கப்பட்டீர். தர்மபுத்ரரால் பானு என்று ஸம்போதனம் செய்யப்பட்டீர். பிரும்மாவினுலும், தௌமியராலும், மஹாத்மாவான சங்கரராலும் கந்தர்வ யக்ஷ ராக்ஷஸர்களாலும் பலவிதமாகப் புகழப்படுகிறீர். தர்மத்தைப் பரிபாலிப்பதின் பொருட்டு, விருப்பு வெறுப்பு இல்லாமல் சராசரங்களைத் தபிக்கச் செய்தும், கர்ஜனையுடன் மேகங்களைப் பொழியச் செய்து, ஒஷதிகளால் பூமியை நிறப்புகிறீர். க்ருதாசி, ரம்பை, ஊர்வசி, மஹா பாகையான திலோத்தமை, அலம்புஷை, விஸ்வாசி, முதலிய அப்ஸரஸ்திரிகளால் கானம், நாட்டியம் முதலிய சேவைகளால் திருப்தி செய்யப் படுகிறீர். பத்மகன் என்கிற நாகனும், அவன் மனைவியும், அவர்களை அடைந்த கௌசிகனும் உன் பெருமையை நன்கு அறிந்தவர்கள். அர்யமா என்கிற பித்ரு தேவதையாகவும், காலன், தர்மராஜாவாகிய யமன், தீனதயாளுவான சனைஸ்சரன், யமி இவர்களுக்குப் பிதாவாக விளங்குகிறீர். ஸப்தஸ்வரங்களாகிற குதிரைகளை வாஹனமாக உடையவரே, ஸ்வர்ச்சலை பெண்குதிரை ரூபம் எடுத்து உம்மை அடைந்த சமயம் நாஸத்யன், தஸ்ரன் என்கிற பெயர்பெற்ற அஸ்வினி தேவர்களை சிருஷ்டித்தீர். ஹே ஞான திவாகரனே, ஆஞ்சநேயர், யாக்ஞவல்கியர் போன்ற மஹாத்மாக்களின் பரமகுருவே, உம்மை கர்மத்தினுலும், பக்தியினுலும் ஞானத்தினுலும் ஆராதனை செய்து, உம்முடைய திருவருளையும், மார்த்தண்டன், மாடன், அருணன் முதலியவர்களுடைய அன்பும், ஸுரபியினுடைய அனுக்ரஹமும், மாத்ருதேவதைகளின் அன்பும், கிருஷ்ணனுடைய பேரருளும் கிடைக்கப் பெறுவேனுக. ராமா, உன் தயவும் எனக்குக் கிடைக்கவேண்டும். எனக்கும் பூமிக்கும் ஏற்படும் ஆபத்துக்கள் நீங்கும். விஷ்ணுவின் ரக்ஷையும் எனக்குக் கிடைக்கும்.]

"ஸகல தேவர்களும் உட்கார்ந்து யோசனை பண்ணினுர்கள். பிரபுவினுடைய கிருபையை எவ்விதம் அடைவது? எவ்விதம் அவரை அணுகுவது? எவ்விதம் அவரைக் காணுவது? அவரிடம் எவ்விதம் நம் குறைகளைச் சொல்லுவது? அவர்களில் ஒருவர் "நாம் வைகுண்டபுரிக்குச் செல்வோம்" என்று சொன்னுர். மற்றொருவர் "பிரபுவானவர் க்ஷீர சமுத்திரத்தில் யோகநித்திரை செய்கிருர்" என்று சொன்னுர்." (1009)

"எவருடைய ஹ்ருதயத்தில் பக்தி, ப்ரீதி பிரவாகமாக வருகிறதோ, அந்த இடத்தில் அதே ரீதியில் பிரபுவானவர் ஸதா

தன்னை பிரகடனப்படுத்திக் கொள்கிறார். சிவன் பார்வதிக்குச் சொன்னார் :—" பார்வதி, கேளு. நானும் அந்தக் கூட்டத்தில் இருந்தேன், சமயத்தை அறிந்து நானும் ஒரு வார்த்தை சொன்னேன்." (1010)

"தேவர்களே, எனக்கு ஒரு விஷயம் நன்றாகத் தெரியும். ஹரிபகவான் ஸர்வ வியாபகர். ஸமமாக எல்லோரிடமும் பாரபக்ஷமின்றி விளங்குகிறார். பிரேமையினால் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறார். தேசம், காலம், திசைகள், இதரதிக்குக்கள், இவைகளில் எந்தவிடத்தில் பிரபுவானவர் இருப்பதில்லை ? அவர் எங்குமிருக்கிறார்." (1011)

"அந்த பிரபுவானவர் சராசரமயமாக விளங்குகிறார். ஸகல ஜீவராசிகளிலும் பரமாத்மாவாக விளங்குகிறார். எந்த இடத்திலும் அவர் நுழையாத இடம் இல்லை. ஒன்றிலும் பற்றுதலில்லாத விரக்தி உள்ளவராகவும் உதாஸீனராகவும் காணப்படுகிறார். அவர் பிரேமையினால் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறார். எவ்விதம் மறைந்திருக்கும் அக்னியானது அரணிக் கட்டையினால் வெளிப்படுத்தப்படுகிறதோ, அவ்விதமே பகவான் பிரேமையினால் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொள்கிறார். என்னுடைய வார்த்தைகள் எல்லோருக்கும் பிரியத்தை உண்டுபண்ணுவதாகவும் ஸர்வ சம்மதமாகவும் இருந்தன." அதைக் கேட்ட பிரும்மா சந்தோஷத்தால் "ஸாது, ஸாது" (உண்மை, முற்றிலும் உண்மை) என்று கோஷித்தார். (1012)

"என்னுடைய வார்த்தைகளைக் கேட்டு, விரிஞ்சி என்று அழைக்கப்படும் பிரும்மா மனத்தில் சந்தோஷமடைந்தார். அவருடைய சரீரம் புளகாங்கிதமடைந்தது ; நேத்ரங்களிலிருந்து ஆனந்த பாஷ்பங்கள் சொரிந்தன. பிறகு அபாரமதி உள்ளவரும், தீரருமான அவர் ஸாவதானமடைந்து, பிரேமாஞ்சலியுடன் ஸ்துதியகளும் செய்ய ஆரம்பித்தார்." (1013)

"ஜயஜய, ஸுரநாயக, தேவர்களை ரக்ஷிப்பவரே, உன் பக்த ஜனங்களுக்கு சுகத்தை வாரி, வாரி அளிப்பவரே, நீர் பிரணதார்த்தி ஹரன் என்று பக்தர்களால் கூறப்படுகிறீர் ; ஹே பகவன், பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் ஹிதகாரி, ஜய, ஜய ; உமக்கு வெற்றிகள் ஏற்படட்டும். அசுரர்களுக்கு விநாசம் உண்டாக்கும் மஹாவீரரே, க்ஷீரசமுத்திர கன்னிகையாகிய லக்ஷ்மிக்குப் பிரியமான ஸ்வாமியாகிற நாராயணரே, ஸ்வாமி, உமக்கு மங்களங்கள் ஏற்படட்டும்." (1014)

"தேவர்களேயும் தரணி என்று அழைக்கப்படும் பூமிதேவியையும் காப்பாற்றும் விஷ்ணு பகவானே, உம்முடைய லீலேகள் அற்புதம். உம்முடைய சங்கல்பங்களே யாரால் அப்பா அறிய முடியும்? நீர் ஸ்வாமியாகவிருந்தும், உமக்கே ஸ்வபாவமான ஸௌலப்யத்தினுலும், அபார கருணேயினுலும், தீனர்களிடமும் துர்பலம் உள்ள எளியவர்களிடமும், சஹஜமாகப் பழகுகிறீர். உம்முடைய குளிர்ந்த அம்ருதமயமான திருஷ்டிகள் எங்கள்மேல் நோக்கட்டும். எங்கள்மீது கிருபையை வர்ஷிக்கவேண்டும்." (1015)

"ஹே அஜரே, அவிநாசி, உமக்கு ஜயம் ஏற்படட்டும். எல்லோருடைய ஹ்ருதயங்களிலும் அந்தர்மியாகவிருந்து (ஆதித்யன் ஒருவன் தண்ணீருள்ள பல பாத்திரங்களில் பல ரூபங்களாகத் தெரியப்படுவது போல) விளங்குபவரே, ஸர்வ வ்யாபகரே, பரமானந்த ரூபரே, யாவராலும் பூர்ணமாக அறியப் படாதவரே, இந்திரியங்களுக்குப் புலப்படாத அதோக்ஷஜரே, புண்யகீர்த்திகள் உள்ளவரே, உம்முடைய புண்ணிய கீர்த்திகளே கானம் செய்பவர்களேப் புனிதமாக்கும் தேஜஸ் உள்ளவரே, மாயைக்கு அப்பால் உள்ளவரே, முகுந்தரே, மோக்ஷபதத்தை அளிக்கும் வள்ளலே, உமக்கு ஸதா மங்களங்கள் உண்டாகட்டும். விராகியான புருஷர்கள், மோஹத்தினுல் கவரப்படாமல் விளங்கும் தீரர்களான ஞானிகள், முனிஜனங்கள், சதா உம்மிடம் அத்யந்த நேசத்தினுல் ஏற்பட்ட பிரேமையினுல் இடைவிடாமல் இரவுபகல் பாராமல் சதா தியானம்செய்யும் மஹாத்மாக்கள், உம்முடைய மங்களகரமான குண சமூஹங்களே கானம்செய்து பரம சுபங்களே அடைகிருர்கள். அப்பேற்பட்ட சச்சிதானந்த ஸ்வாமியே, உமக்கு ஜயங்கள் ஸதா ஏற்படட்டும்." (1016)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, எல்லாப் பிராணிகளுடைய முக்கியமான தர்மத்தை நீங்கள் அறிவீர்கள். நாட்டிலும், காட்டிலும், வீடுகளிலும் வீட்டிற்கு வெளிப்புறத்திலும், வேற்றுமை யில்லாதது ராஜதர்மம். தண்டநீதியுடன் அந்த தர்மம் செலுத்தப்பட்டால் சகல தர்மங்களும் நடத்தப்பட்டனவாகும். அறம், பொருள் இன்பங்களில் அறம் ஒன்றே மேலானதாகும். தர்மபுத்தியுள்ளவன் இகத்திலும், பரத்திலும் செழித்து வாழ்வான். தர்மத்திற்குக் கேடுவந்தால் பிள்ளேகளும், பெண்டிர்களும் நாசமடைவார்கள். பிராணிகளே அணேத்துக்கொள்வதிலும், தானமும் இன்

சொல்லும், அஜாக்ரதையின்மையும், சுத்தியும், ராஜதர்மத்துக்கு ஸம்பத்தைக் கொடுக்கும். அரசனானவன் தன் இடைவெளிகளை மறைத்துக் கொண்டு, பிறர்களுடைய இடைவெளிகளை தொடர்ந்து செல்லவேண்டும். இது இந்திரன், யமன், வருணன் இவர்களுடைய நடக்கையாகும். எல்லா ராஜரிஷிகளின் உண்மையைத் தொடர்ந்துகொண்டு தன்னை ரக்ஷித்துக் கொள்ளவேண்டும். ஆகையால் ராஜரிஷிகளால் அனுஷ்டிக்கப்பட்டுள்ள சிறந்த வழிகளை அரசர்கள் ஒத்துக் கொள்ளவேண்டும். தர்மநடையிலுள்ள அரசனை இங்கும், இறந்தபின்பும், பெரிய பராக்ரமமுள்ள தேவர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் கந்தர்வர்களும் புகழ்கிறார்கள். ஆனால் தர்மார்த்த காமமோக்ஷங்களில் சாம தான பேத தண்டம் அரசர்களுக்கு உகந்ததாயினும், ராஜ்யமும், போகமும் அவித்தையை உள்ளவர்களுக்கு கிடைத்துவிடுகிறது. அறிவுள்ளவன் இவைகளை அடைவானாகில் ராஜரிஷிகள் அனுஷ்டித்த தர்மங்கள் மோக்ஷத்துடன் கூடியவை. அவர்கள் மோக்ஷபதத்தில் இஷ்டமுள்ளவர்களாக, தேவமனுஷ்ய, பசுபக்ஷி, விருக்ஷம், சகல ஸ்ருஷ்டிகள் எல்லாம் பகவான் விஷ்ணுமயமாகவும் பின்ன பின்னமாகவிருந்தாலும் வாஸ்தவத்தில் ஸ்ரீ அனந்தனுடைய திவ்ய ரூபமாகப் பார்க்கிறார்கள். இந்த உண்மையைப் பார்த்து, ஜகத்தை ஆத்மாவாகப் பார்த்து, விஷ்ணுபகவானை சர்வ விஸ்வரூபிதாரியாக நினைத்து, அநாதிகாலமாக இருக்கும் பரமேஸ்வரராகிய அச்யுதரை தங்கள் கிலேசங்கள் தீரவும், அவருடைய மங்களகரமான திருப்திக்காகவும், பாடுபடுகிறார்கள். இவ்விதம் சிறந்த ராஜரிஷிகளின் தர்மங்களை உசத்தியர் மாந்தாதாவுக்கும், பக்த சிரோண்மணியான பிரஹ்லாதர் தன் பிதாவான ஹிரண்யகசிபுக்கும் விளக்கிச் சொன்னார்கள். இப்பேற்பட்ட சிறந்த ரிஷிதர்மங்களும், ராஜதர்மங்களும் கொண்ட முன்னோர்களை நான் சேவித்து, பகவானாகிய வாசுதேவரை, ஹிரண்யகர்ப்பரும், பிரதான வ்யக்தி ஸ்வரூபமாகி விளங்குபவராக நான் நமஸ்கரிக்கிறேன். இதையே சிறந்த ராஜரிஷியான ஸ்வாயம்பு மனுவும் செய்தார். அவரைப்போல கோவிந்தரை நானும் சந்தோஷிக்கச் செய்கிறேன்.]

“ஹே, பகவானே, ஒருவருடைய உதவியுமின்றி ஸ்வதந்தரமாகவே தன்னந்தனியாக மூன்றுவிதமாக பிரும்மா, விஷ்ணு, மஹேஸ்வரர் ஆகிய மூர்த்திகளை ஸ்ருஷ்டித்து, மீண்டும் ஒரு உபாதான காரணமுமில்லாதபடி லயமடையும் ஒரே தத்வ ஸ்வரூபமாக சங்கமடைந்து விளங்கும் நாராயணரே, பாபியாகிற

அகன் என்னும் அசுரனை ஸம்ஹாரம் செய்தவரே, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று மூன்றுவிதமான குணஸ்ருஷ்டிகளுக்கும் மூல புருஷரே, ஸகலவித பாபங்களையும் போக்கும் நீர் எங்களிடம் சந்தோஷமடையவேண்டும். எங்களுக்கு உமக்கு வேண்டிய சுத்தபக்தியும் பெயருக்காகக்கூட இல்லை. ஹே ஸ்வாமி, எங்களுக்கு சிறந்த ஆத்மபூஜைகளோ அல்லது உம்முடைய சந்தோஷத்திற்காக ஆராதனமாகச் செய்யப்படும் ஜகத்பூஜைகளையோ செய்யத் தெரியாது. இந்த மிக்க பயங்கரமான மிருத்யு ஜன்மதாபங்களைக் கொண்ட சம்சாரத்தை நாசம்பண்ணி, முனீஸ்வரர்களுக்கு ஆனந்தங்களைக் கொடுக்கும் (மோக்ஷத்தைக் கொடுக்கும்) தயாளுவே, ஸகல ஆபத்துக்களிலிருந்து உன் பக்த ஜனங்களை மீண்டும், மீண்டும் தாண்டவைப்பவரே, நாங்களாகிய ஸகல தேவக் கூட்டங்களும் மனம் வாக்கு காயம் கர்மம் ஆகிய நான்கு விதமான வழிகளில் சாமர்த்திய மில்லாதவர்களாக எல்லாவற்றையும் விட்டு, பகவனாகிய உம்மை அனன்ய சரணமாக அடைந்திருக்கிறோம்.'' (1017)

[தியானம்

ஹே நாராயணா, ராமா சீதா, உங்கள் இருவர்களையும் நான் ஆதிபொருளாகிய விஷ்ணுவென்றும்: யோகநித்திரை என்றும் நினைத்திருக்கிறேன். மஹாமாயை என்றும் யோகமாயை என்றும் தபஸினால் சூழப்பட்டவள் என்றும் சக்திதேவதை யென்றும் மதுகைடபவதற்திற்காக பிரும்மாவினால் ஸ்துதி செய்யப்பட்டு பகவானுடைய இந்திரியங்களிலிருந்து ஸ்வயமாக வெளிவந்தவள் என்றும், அதன் பிறகு தான் பகவானாகிய விஷ்ணு யோக நித்ரையைவிட்டு எழுந்து, பிறகு மதுகைடபர்களை அவர்கள் இஷ்டப்படி தன் தொடைகளில் வைத்துக் கொன்றார். அதே மாதிரி, பூமிதேவியானவள் வாராஹ கல்பத்தில் பாதாளத்தில் மூழ்கும் சமயம் புருஷனும், புருஷோத்தமனும் ஜலத்தில் (நாரத்தில்) நித்ய வாஸனுமாகிய நாராயணரும், யக்ஞமயமாகத் தோன்றினர். அச்சமயம் பிரும்மா, பூமிதேவி, ஸனகர் முதலிய சித்தேஸ்வரர்கள் பக்தியுடன் உங்களைப் பூஜை செய்தார்கள். ஐயா, உமக்கு எது பரதத்வமோ, அது எங்களுக்குத் தெரியாது. எந்த ரூபமோ, அதுவும் ஒருவராலும் காணமுடியாது. நீர் எந்த ஸங்கல்பத்தால் எந்த விதமாக அவதாரம் செய்வீரோ, எந்த சமயம் செய்வீரோ, அதையும் தெரிய முடியாது. ஆனால் நீர் ஏற்கனவே அவதரித்த அவதார ஸ்வரூபத்தை தேவர்கள்

எல்லோரும் ஆராதனம் செய்து பரபிரும்மாகிய நாராயணரை ஆராதனம் செய்வதைப்போல செய்து, முமுக்ஷுக்களாக ஆகியிருக்கிருர்கள். வாசுதேவ ஸ்வரூபமாகிய உம்மை ஆராதித்து, மோக்ஷத்தை அடைகிருர்கள். பூமிதேவியானவள் உம்மால் கடாக்ஷிக்கப்பட்டு மாதவி என்கிற பெயரை அடைந்தாள். நீர் அவ்யயமான ஞானமன்ருே; ஆனுலும் அவ்யக்தமாகவும் வியக்தமாகவும் விளங்குகிறீர். நீரே யக்ஞம், அக்னி, ஆஹவனீயம் என்று மூன்று பிரிவுகளாக காணப்படுகிறீர். வஷட்காரமும் ஓங்காரமும் வேதங்களும் வேதாங்கங்களும் யக்ஞபுருஷராகவும் சூர்யனைப்போல கிரஹங்களாகவுமிருக்கிறீர். ஐயா, உமக்கு சதா ஜயங்கள் ஏற்படட்டும். மங்கள மூர்த்தியான யக்ஞ வராஹரை நான் விழுந்து விழுந்து அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹே பரமேஸ்வரா, ஏகதம்ஷ்டிரரே, மூர்த்தியாகவும் அமூர்த்தியாகவும், காணப்பட்டும் காணப்படாமலும் நான் சொல்லும் வார்த்தைகளிலும், என்னுல் சொல்லமுடியாத வசனங்களிலும் நித்யமாக நீர் வாஸம் செய்வதால் எல்லாம் நீரே என்று நமஸ்கரிக்கிறேன். பூயோ பூயோ நம: என்று சொல்லுகிறேன். உமது அபார கிருபையும், கருணை பொங்கும் புஷ்கர கடாக்ஷங்கள், என்மீது விழட்டும். சாஸ்வதமாக நான் உங்களுக்குத் தாஸன். நீங்களே எனக்கு பரமான வஸ்து, தவம், தவத்தின் பயன், எல்லாம் நீங்களே. நீங்களே ஸாவித்திரி.'' இவ்விதம் மைத்ரேயருக்கு பராசரர் சொல்லி, அதையும் நான் தெரிந்துகொண்டேன். வியாஸருடைய தோழரும், மைத்ரேயர் என்று புகழப்பட்ட பரம ரிஷி கார்ஹஸ்பதியான என்னை ஆசீர்வாதம் செய்யட்டும். வியாஸருடைய அருளால் எனக்கு மோக்ஷம் கிடைக்கட்டும். ஆஞ்சநேயா, நீர்தான் எனக்கு தஞ்சம். தியாகராஜா, நிர்தான் எனக்கு மார்க்கதர்சி. பிரஹ்லாதன், துருவன், நாரதர், யாக்ஞ்யவல்கியர், சம்புவாகிற சதாசிவன், அம்பிகை, ஸ்கந்தன், விஷ்வக்ஸேனர், எனக்கு பரமாசாரியார்கள். அனந்தன் கருடன் எனக்கு ஆப்த பந்துக்கள். வஸிஷ்டர், விஸ்வாமித்திரர், ஜமதக்னி, வாமதேவர், எனக்கு மஹத்தான உபகாரிகள். சுகர், பீஷ்மர், எனக்கு நித்ய சுகத்தைக் கொடுத்த மஹானுபாவர்கள். அர்ஜுனன் திரௌபதி, தர்மர், பீமன், நகுலன், சஹாதேவன், எனக்கு அன்பு ஊட்டியவர்கள். விஷ்வக்ஸேனர் எனக்கு விக்னங்களைப் போக்கினவர். நான் எல்லோரையும் நமஸ்கரிக்கிறேன்.]

'' ஸாரதா தேவி, வேதங்கள், அனந்தனுகிய சேஷன், ஸனகர் போன்ற சம்பூர்ண ரிஷிகள் இன்னும் அநேகர்களும் பகவானுகிய

உம்முடைய பெருமைகளை அறியமுடியாது. ஹேஸ்வாமி, தீனர் களிடம் மிக்க வாத்ஸல்யம் உள்ளவரே, உம்மை இம்மாதிரி யாகவும், ஸ்ரீயப்பதியாகிற பகவான் என்றும், (பகவான் என்கிற சொல்லுக்கு விமர்சனமாக ஐஸ்வர்யங்கள் நிறம்பியவர். தர்மம் கீர்த்தி, லக்ஷ்மி, ஞானம் வைராக்யம், கல்வி, தயை போன்ற ஐஸ்வர்யங்களை உள்ளவர்) அழைக்கிருர்கள்.'' (1018)

'' ஸம்சார ரூபமாகிய சமுத்திரத்தைக் கடைவதற்கு மந்திர மலைரூபியாகவும் விருந்தீர். அவதாரத்தின் சமயம் அந்த மந்திர மலை யின் மேலும் கீழுமாக நின்று பகவான் அந்த மலை அமிழ்ந்து போய் விடாமல் காத்த கூர்மரூபியான உத்தமன் அன்ரோ நீர். என்ன என்ன வகைகளில் அழகுள்ள கல்யாண குணச் சேர்க்கை கள் இருக்குமோ, அந்த குணக்குவியலுக்குப் பரமஸ்தானத்தை நித்யமாக உடையவரே, சுகங்களின் ராசிக்கூடத்தை ஒருங்கே உடையவரே, ஹே நாதரே, உம்முடைய திவ்ய சரண கமலங் களில் தாழ்படிந்து, மனமுருகி, மெய்மறந்து, பாஷ்பங்கள் உதிர, வெட்கமின்றி, முனி, ஸித்த ஜனங்கள், தேவதைகள் தங்கள் பயங்களைப் போக்குவதற்கும், உம்முடைய அபார கிருபையை அடைவதற்கும் சதா நமஸ்காரம் செய்கிருர்கள்.'' (1019)

'' ஹே ஸ்வாமி, தேவதைகளும் பூமிதேவியும் பயமடைந்து உங்களை ஸ்நேகபூர்வமாக ஸ்துதியக்ளும் செய்கிரோம். எங்க ளுடைய தீனமான வசனங்களை தயவுசெய்து கேளும். எங்க ளுடைய சோகங்களைப் போக்கி சந்தேகங்களையும் நீக்கி, மீண்டும் எங்களை உம்முடைய கிருபைக்கும் தயைக்கும் பாத்திரங் களாகச் செய்துகொள்ள வேண்டும்.'' அந்த சமயம் பயங்களைப் போக்குவதும், சோகங்கள், ஸந்தேகங்கள், யாவையும் அழிந்து போகும்படி கம்பிரமான மேக கர்ஜனைபோன்ற ஆகாசவாணி ஒன்று கேட்கப்பட்டது.'' (1020)

'' ஹே முனி, ஸித்தர்களே, தேவதைகளே, பயப்பட வேண் டாம். உங்களுக்காக நான் மனுஷ்ய ரூபம் எடுத்து, பவித்திர மான சூர்யகுலத்தில் என்னுடைய அம்சங்களுடனும் சேர்ந்து அவதரிக்கிறேன்.'' (1021)

'' காஸ்யபர், அதிதி ஆதிய இருவர்களும் ஒருக்காலத்தில் மிகச் சிறந்த தவங்கள் செய்தார்கள். அவர்களுக்கு முன்பே நான் வரங்களைக் கொடுத்திருக்கிறேன். அவர்கள் கோஸல தேசத்து அரசனுக தசரதர் கௌஸல்யை என்கிற நாம ரூபங் களில் மனுஷ்ய அவதாரங்கள் எடுத்து ஸ்ரீ அயோத்யாபுரியில் பிரகாசிப்பார்கள்.'' (1022)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, உங்களுடைய திருவிளையாடல்களை நினைத்துப் பார்த்தால் உங்கள் சங்கல்பங்கள் லீலைகளாக மாறுகின்றன. ஒரே சமயத்தில் நாராயணராகிய நீர் அவதரித்தீர் என்று சொல்வேன். வாமனாவதாரத்திலும் திருவிக்ரமாவதாரத்திலும் உன் ஸ்ருஷ்டியை ஆட்கொள்ளுவதற்கு அவதரித்தாய். மற்றொரு சமயத்தில் தேவியை அவதரிக்கச் செய்கிறாய். மஹிஷனை வதைக்க நேரிடும் சமயம் சகல தேவர்களுடைய தேஜஸ்ஸிலிருந்து வெளிக்கிளம்பிய இந்திரன், யமன், வருணன், குபேரன், சந்திர சூர்யர்கள், அக்னி, வாயு எல்லோர்களும் தங்கள் தேஜஸ்ஸுகளையும் ஆயுதங்களையும் கொடுத்தார்கள். சிவன், பிரும்மா, விஷ்ணுவும் அவ்விதமே செய்தனர். உன் காருணிகம், ஸத்துக்களைக் காப்பாற்ற தண்டத்தைப் பிரயோகிப்பது எல்லாம் உனக்கே ஏற்பட்ட பொருள்கள். சிக்ஷை, ரக்ஷை என்கிற அடிப்படைகளைக் கொண்ட தண்டம் என்பது வியவஹாரம் என்று சொல்லப்படுகிறது. உலகங்களில் அஜாக்ரதையின்றியும், புத்தியுள்ளதாயும் தர்மத்திற்கு லோபம் வராதபடி செய்யும் முறை எதுவோ, அதுவேதான் வ்யவஹாரம் என்று சொல்லப்படுகிறது. பிரியன், அப்ரியன் இவர்களிடத்திலும் ஸமமான உருவமுள்ளதாகவிருக்கிறது. நன்கு செலுத்தப்பட்ட தண்டத்தால் பிரஜைகளை எவன் நன்கு பாதுகாக்கிறானோ, அவன் கேவலம் தர்மஸ்வரூபியாகவிருக்கிறான் என்று மனு சொல்லியிருக்கிறார். அஸி, விசனம், தர்மம், தீஷ்ணவர்மா, துராஸதம், ஸ்ரீகர்ப்பம், விஜயம், சாஸ்தா, வ்யவஹாரம், பிரஜாகரம், சாஸ்திரம், பிராம்மண மந்திரம், பிரவசனம், பரம், தர்மபாலம், அக்ஷரம், கோபம், ஸத்யகம், நித்யகம், கிருஹம், அஸங்கம், ருத்ரதனயம், மனு, ஜ்யேஷ்டம், சிவஸ்கரம் என்கிற பெயர்கள் தண்டத்துக்கு உண்டு. தண்டமென்பது வியாபகரும், யக்ஞரூபியும், அடிக்கடி பெரிய உருவத்தைத் தரிப்பவரும், மஹாபுருஷருமான நாராயணர் என்றும், பிரபுவாகவும் சொல்லப்படுகிறார். அவ்விதமே தண்டம் பிரும்மதேவன் புத்ரி என்றும், லக்ஷ்மியென்றும், நீதி என்றும், ஸரஸ்வதியென்றும், சொல்லப்படுகிறது. தண்டமில்லாவிடில் வியவஸ்தை இருக்காது. தண்டத்தின் பயத்தால் ஜனங்கள் ரக்ஷிக்கப்படுகிறார்கள். உலகத்தை ஸத்யத்தில் நிலைப்பெறச் செய்வதும், ஸம்பத்தை விருத்தி செய்வதாகவுமிருக்கிறது. தேவர்கள், ராக்ஷஸர்கள், அசுரர்கள், மனுஷ்யர்கள், உரகர்கள், எல்லோரையும் தண்டமென்று சொல்லப்படும்

வியவஹாரமானது (கெட்ட மார்க்கத்தில் பிறர் பொருளைத் தேடுவது இல்லை) ஸ்வதர்மங்களில் நிலைத்து இருக்கும்படி செய்கிறது. ஸ்வதர்மத்தை அனுசரிக்கும் அரசன் தாயானாலும், தகப்பனானாலும், உடன் பிறந்த சஹோதரன், புத்ரன், பார்யை, புரோஹிதன் ஆனாலும் தண்டிக்கத் தக்கவன். அந்தச் சிறந்த ராஜதண்டத்தை ராஜ தர்மத்தை வஹித்த ராமா, உனக்குச் சரணம். சீதையாகிய தாய் மிக்க க்லேசங்களை அனுபவித்து, உன்னோடு உன் தர்மத்தை பரிபாலித்ததற்காக அவதரித்தாள். அவளுக்கும் நமஸ்காரம் செய்கிறேன். உங்கள் அவதார ரஹஸ்யங்களை அறிவதும், சொல்வதும் மிகக் கடினம்.]

"அந்த தசரத கௌஸல்யா ராஜதம்பதிகளின் வீட்டை அடைந்து ஸ்ரேஷ்டமான ரகுகுலத்தில் ரகுகுல திலகனாக நான்கு சகோதரர்களுடன் நான் அவதரிக்கப்போகிறேன். ஏற்கனவே என்னால் நாரதரிஷியிடம் சொல்லப்பட்ட வசனங்களை சத்யமாக்குவேன். என்னுடைய பரம சக்திரூபமாகிய லக்ஷ்மிதேவியுடனும் நான் அவதரிப்பேன்." (1023)

"இந்த பூமிக்கு ஏற்பட்ட பாரங்களையும் வேதனைகளையும் அபஹரித்துவிடுவேன். ஆகவே தேவக்கூட்டங்களே, நீங்கள் நிர்பயமாக இருக்கலாம்." இப்பேற்பட்ட ஆகாசத்தில் பிரும்ம வாணியைக் கேட்டு, தேவதைகள் வெகுசீக்கிரம் சந்தோஷத்துடனும் திரும்பிச் சென்றார்கள். அவர்களுடைய ஹ்ருதயம் குளிர்ந்தது. (1024)

அந்த சமயம் பிரும்மாவும் தரணிதேவியாகிய பூமிக்கு ஆறுதல் எல்லாம் சொன்னார். "நிர்பயத்துடனும், பகவான் அவதரித்து தன் கஷ்டங்களை விலக்குவார்," என்கிற நம்பிக்கையுடன் அவளும் திரும்பினாள். (1025)

பிரும்மா எல்லாத் தேவதைகளையும், "வானர ரூபம் எடுத்து பூமிக்குச் சென்று பகவானுடைய சரணங்களுக்கு சேவை செய்யுங்கள்," என்று ஆக்ஞை செய்துவிட்டு தன் லோகத்திற்குச் சென்றார். (1026)

"சகல தேவர்களும் தங்கள் ஸ்தானங்களுக்குச் சென்று விட்டார்கள். பிருத்வி சஹிதம் எல்லோருக்கும் மனதில் சாந்தி வந்தது. பிரும்மாவின் ஆக்ஞைகளையும் தேவர்கள் மிக்கச் சந்தோஷத்துடன் சீக்கிரமாகவே செய்துமுடித்தார்கள்." (1027)

"இந்த பூமியில் இவ்விதமாக வானர தேஹங்களுடன் தேவர்கள் அவதரித்தார்கள். அந்த வானரர்களுக்கு அதுளித (ஒப்பில்லாத) பலம் பிரதாபங்களிருந்தன. எல்லோரும் சூரர்கள்.

பர்வதங்கள், விருக்ஷங்கள், நகங்கள் ஆகியவை இவர்களுக்கு ஆயுதங்கள். அவர்கள் தீர்க்கமான புத்தியுள்ளவர்கள். அவர்கள் தங்கள் கவனங்களை ஹரியினுடைய அவதாரத்தில் வைத்திருந் தார்கள். மலைகள், காடுகள், எங்கு எங்கு உண்டோ, அங் கெல்லாம் அவர்கள் அவதரித்து நிறம்பினார்கள். ஒவ்வொரு இடத்திலும் அவர்களுடைய பரிவாரங்களை அமைத்து, சேனை களாக விளங்கினார்கள். இந்த அழகான ருசியுள்ள சரித் திரத்தை (சிவன் பார்வதியிடம்) சொன்னார். "ஹே பார்வதி மீண்டும் நடுவில் விட்டுப்போன கதையையும் கேள்." (1028)

[தியானம்

ஹே ராமசீதா, உங்கள் திருவிளையாடல்களை நினைக்க, தியானம் பண்ண, என்மனம் குளிர்கிறது. ராம அவதாரத்தில் பார்ப்பவர்களின் பாவங்களைப் போக்கும் ஸேதுவையும், கிருஷ்ணாவதாரத்தில் கோபிகைகளிடமும் காட்டப்பட்ட சௌலப் யமும், அர்ஜுனனுக்குக் கீதையையும் சொல்லிக் காண்பித்தீர். இந்த இரண்டு அவதாரங்களிலும் ராமகிருஷ்ண மூர்த்திகளாக அவதரித்து, தயையே பெரிதாக நிரூபணம் செய்தீர்கள். ராம அவதாரத்தில் சக்ரவர்த்தி குமாரியாகப் பிறந்த சீதை அத்ரி, அனுசூயை வியக்கும்படி தர்மங்களையும், அதிலும் ஸ்திரி தர்மங் களை தேவர்களுக்கு முன்பும் பிரகடனம் செய்தாள். இந்த கிருஷ்ண அவதாரத்தில் அர்ஜுனன் மூலமாக தாங்கள் பரம உபகாரமாகவிருந்தீர். அப்பேற்பட்ட கருணைக் கடலான நீங்கள் இருவர்களும் எனக்கு அருள்பண்ண வேண்டும்.]

"அயோத்யாபுரியில் ரகுகுல சிரோண்மணியாக தசரதர் என்ற ஒரு ராஜா பிறந்தார். அவருடைய புகழ் வேதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் மஹா தர்மக்ஞர். நல்ல ஸத்வ குணங்களின் நிதி, பெரிய ஞானி. அவருடைய ஹ்ருதயத்தில் சார்ங்க தனுஸ்ஸைத் தரித்த பகவானாகிய ஹரியினிடம் பக்தி இருந்தது. அவருடைய புத்தி அந்த ஹரி பகவானுடைய பக்தியிலேயே லயத்திருந்தது." (1029)

"அவருடைய ராஜ பத்னிகளாகிய கௌசல்யை முதலியவர் கள் நல்ல சீலமுள்ளவர்களாக விருந்தார்கள். தங்கள் பதிக்கு ஹிதமாகவும் ஸ்ரீஹரியினுடைய பாதங்களில் பிரேமையுடனும் அடக்கத்துடனும் இருந்தார்கள்." (1030)

"ஒரு சமயம் ராஜாவுக்குப் பெரும் துக்கம் ஏற்பட்டது. தனக்கு புத்ரர்கள் ஒருவரும் இல்லையென்று வருத்தப்பட்டுக்

  

கொண்டு, ராஜாவானவர் தன் குல குருவான வஸிஷ்டரின் கிருஹத்துக்குச் சென்று, அவருடைய பாத கமலங்களில் வினயத்துடன் விண்ணப்பம் செய்தார்.'' (1031)

"ராஜாவும் தன் மனக்குறைகளைச் சொன்னதும், அந்த வஸிஷ்ட பகவான் அநேக விதங்களால் ஆறுதல் எடுத்து உரைத்தார். "ராஜனே, தைரியமாக விரு. உமக்கு நான்கு புத்ரர்கள் உண்டு. மூன்று உலகங்களிலும் அவர்களுடைய புகழ்கள் பரவும். அவர்கள் பக்தர்களின் பயங்களைப் போக்கும் பிரபாவம் உள்ளவர்கள்'' என்று சொன்னார்.'' (1032)

"மேலும் வஸிஷ்டர் ரிஷியஸ்ருங்க ரிஷியைக் அழைத்துவர யேற்பாடு செய்தார். புத்ர காமேஷ்டி என்கிற சுபத்தைத் தரும் யக்ஞத்தைச் செய்யச் சொன்னார். அதன்படி அந்த ரிஷி அந்த யாகத்தில் பக்தியுடன் ஆஹுதி செய்தபின்பு அக்னிதேவர் தன்னுடைய திருக்கரங்களால் பாயஸத்துடன் அக்னிகுண்டலத்திலிருந்து வெளிப்படுத்திக் கொண்டார்.'' (1033)

அக்னி தேவன் சொன்னார். "அரசனே, உனக்கு வஸிஷ்டர் தன் மனத்தில் எதைப்பற்றி யோசனை செய்தாரோ, அதன்படி அவைகள் கட்டாயம் நடந்தே தீரும். உன் கவலைகளை விடு. ஹே ராஜனே, இப்பொழுது இந்த பாயஸான்னத்தை எவ்விதம் உசிதமோ, அவ்விதம் பாகம் பகர்ந்து உன் ராணிமார்களுக்கு கொடு.'' (1034)

அதன் பிறகு அக்னிதேவர் அந்த யாக சாலையில் கூடியிருந்த அனைவருக்கும் இவ்விதம் சொல்லிவிட்டு மறைந்தார். மஹா ராஜாவும் பரமானந்தமடைந்தார். தன்மனக்லேசங்கள் தீர்ந்தன என்று மிக்க சந்தோஷமடைந்தார். (1035)

[தியானம்

ஹே ராமா, சீதா, எனக்கு உன் நினைவு அடிக்கடி வேண்டும். முன் காலத்தில் மஹிஷாசூரனை வதைத்து, அவனுடைய சேனைகளை அழித்து இன்னும் அநேக கஷ்டங்களிலிருந்து விடுவித்த அந்த பத்ரகாளி என்கிற தேவதையை தேவர்கள் நந்தனவனத்தில் உள்ள நல்ல பூக்களாலும் வாசனை திரவியங்களாலும் ஸ்துதி செய்தார்கள். அந்த தேவியின் பிரதாபங்கள், சக்திகள், மனசங்கல்பங்கள், தயை முதலிய குணங்கள், ரூப சௌந்தர்யங்கள் மூன்று வித குணங்களின் சேர்க்கைகளின் பெருமைகள், புத்தி, சிரத்தை, நற்குடி பிறப்பிலுள்ளவர்களிடம் காணப்படும் லஜ்ஜை, பயங்களைப் போக்கும் வலிமை, கம்பீர

மான செய்கைகளின் விரதங்கள், திறமைகள், முக்திக்கு சாதன மான மோக்ஷவித்யை, ஐஸ்வர்யங்கள், அனந்தமாக விருந்தன. அப்பேற்பட்ட தேவி பிரணவாகாரம், பாபங்களைப் போக்கும் ருக்யஜுஸ் ஸாமம் முதலிய கானங்கள், எல்லா சிரமத்தைப் போக்கும் வார்த்தா என்கிற வித்யை, தண்ட நீதி இன்னும் அநேக துதிகளால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டாள். ஹே துர்க்கா தேவி நிறைமதி போல முகம் படைத்தவளே, உன்னை எல்லோரும் பிரசன்னமாகும்படி செய்தார்கள். உன் அருளை பாக்யமாக வேண்டினார்கள். உன் அஸ்திரங்களால், ரக்ஷையை வேண்டி னார்கள். ஹே சண்டிகா, உன்னை ஸ்தோத்ரம் செய்த யாவருக்கும் உன் திருப்தியின் காரணமாக பயம் நீங்கி, சுகத்தை அடைந் தார்கள். இவ்விதமே ராமா,குலத்துடன் நாசமடைந்த ராவண னைக் கொன்ற பின்பு "நாராயணா" என்று ராமச்சந்திர பிரபு வாகிய உம்மை அடிக்கடி எல்லோரும் புகழ்ந்தார்கள். கோதண்ட பாணி, நீயும் ஜானகியும் என்னிடம் அருளோடு இருக்கவேண் டும். பரத்துக்குப் பரமாகிய பொருள்கள் அல்லவா நீங்கள்? உங் களை நான் சரணமடைகிறேன்.]

அந்த சமயத்தில் ராஜாவானவன் தன்னுடைய பிரியமான பார்யைகளைக் கூப்பிட்டு அவர்களுக்கு அந்த பாயஸான் னத்தைப் பகிர்ந்து கொடுத்தார். அரசர் பாயஸத்தைப் பாதி யாகப் பிரித்து அதை கௌஸல்யைக்குக் கொடுத்தார். மீதியை இரண்டு பாகங்களாகப் பிரித்தார். (1036)

அதில் ஒரு பாகத்தை கைகேயிக்குக் கொடுத்தார். மீதியை இரண்டு பாகங்களாகப் பிரித்து அவைகளை கௌஸல்யை கைகேயி இவர்களின் கைகளில் கொடுத்து, அவர்களின் அனுமதி பெற்று, சுமித்திரைக்குக் கொடுத்தார். (1037)

இந்த விதிப்படி சகல ராஜஸ்திரிகளும் கர்ப்பமடைந்தார்கள். அவர்களுடைய ஹ்ருதயங்கள் சந்தோஷமடைந்தன. எந்த தினத்திலிருந்து ஹரி கர்ப்பத்தில் சேர்ந்தாரோ, அந்த தினத்தி லிருந்து லோகத்திற்கு சுகமும் ஸம்பத்துக்களும் விருத்தி யடைந்தன. (1038)

மூன்று ராணிகளும் சோபைகளுடனும் சீலத்துடனும் தேஜஸ்களுடனும் அந்த அரண்மனையில் விளங்கினார்கள். இந்த விதமாக கொஞ்ச காலம் கழிந்தது. பிரபுவான ஸ்ரீராமச்சந்திரன் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் அவதார காலமும் வந்தது. (1039)

[தியானம்

ராமேஸ்வரா, ராமா ஜானகி, உங்கள் குணங்களையும் செய்கைகளையும் ஸங்கல்பங்களையும், நீங்கள் பூமியில் செய்த அவதார மஹாத்மியங்களையும் தர்ம அனுஷ்டானங்களையும் வேதங்களைப் பார்க்கும் ரிஷிகளிடமும் பிராம்மணர்களிடமும் காட்டிய உங்கள் தயையையும்பற்றி நான் எவ்வளவு விவரித்துச் சொல்ல முடியும்? ராவணன், சும்பன், நிசும்பன் முதலியவர்கள் எல்லா சம்பத்துகளிலிருந்தும் லோபத்தாலும் மோஹத்தாலும் ஆழ்ந்து போனார்கள். காமம் அல்லவா இவர்களின் லோபத்திற்கும் மோஹத்திற்கும் காரணம். விண்ணுலகில் தெய்வத் தன்மை பெறுவதும், சிறந்த பொருள்களை அடைவதும் தர்மத்தினால் ஏற்படுகிறது. ஆனால் இந்த உலகில் புத்ரன், அறம், பொருள், மனைவி, இன்பம் என்கிற சேர்க்கையினால் ஏற்படுகிறது. போகம் என்பது இந்திரியங்களைத் திருப்தி செய்வதற்காக காமத்தினால் ஏற்படுகிறது. காமம் ஸங்கல்பத்தை நாடியிருக்கிறது. இந்த சங்கல்பம் மூவகையான பயன்களுக்குக் காரணமாகிறது. இவைகளிலிருந்து விலகுவது மோக்ஷம் என்று சொல்லப்படுகிறது. சரீரரக்ஷைக்காகச் செய்யும் காம்ய தர்மமும், அதனால் ஏற்படும் பொருளும், போகங்களைப் பயனாகக் கொண்ட காமமாகிய ரஜோ குணங்கள் தீர்ந்து மனிதன் மோக்ஷபதத்தை ஆஸ்ரயிக்க வேண்டும். ஆத்ம ஞானத்தை வழியாக வைத்து சிறந்த புத்தியினாலும், விசேஷ அறிவினாலும் .பெரியோர்களின் ஆசரணைகளாலும், உபவாஸம் முதலிய காரணங்களாலும் மோக்ஷத்தை அடைய உபாயங்களாக வரிக்கவேண்டும். பொருளை, தர்மம் செய்தல், ஸேவை, வியாபாரம், கிருஷி முதலிய மார்க்கங்களில் அடைவதாக விருக்கிறது. பொருளை அடைந்த பின்பு உலகம் ஹிம்ஸையைச் செய்கிறது. பொருளாலேயே தர்மம், தர்மத்தாலேயே பொருள் என்று புத்தியுள்ளவன் தாழ்ந்த புத்தியுள்ளவனாகிறான். ஏனெனில் தர்மத்திற்கு அதன் பயனில் ஆசை வைப்பது தோஷம் என்றும் கருதப்படுகிறது. பொருளுக்கு தானமில்லாதது, போகத்தை செய்யாததது, மறைத்து வைப்பது ஆகியவை தோஷங்களேயாகும். காமத்திற்கு இந்திரியங்களின் சந்தோஷம் என்பது தோஷம். இவ்விதம் தோஷங்கள் நிறைந்த தர்மம், பொருள், காமம் இவைகளை விலக்கி, நற்குணங்களால் சித்த சுத்தியை ஏற்படுத்தி மோக்ஷம் என்னும் பெரும் பயனை அடையவேண்டும். காமத்தினால் பாபம் செய்து பச்சாதாபப்பட்டு, ஒரு சமயம் பாபத்தை விலக்கலாம். அவிவேகத்தினால் அதர்மத்தை தர்மம்

என்று நினைத்து, விலக்க சக்தி இல்லாதவனாகயிருக்கலாம். அறம், பொருள் இவைகளை விட்ட மனிதனின் அறிவும் நாசமடைந்து, மோகம் காமத்தினால் ஏற்பட்டு அதிலிருந்து நாஸ்திகத் தன்மை, கெட்ட நடை உண்டாகி அரசனானாலும் தோஷமடைகிறான். ஆகையால் ஸாதுக்களையும் பிராம்மணர்களையும் ஆஸ்ரயித்து அவன் குறைகளை விலக்கவேண்டும். பூர்வாசார்யார்கள் பாபத்தை விலக்கத் தக்க வழிகளில் சிறந்த வேத வித்யைகளைக் கற்கவேண்டும், பிராம்மணர்களைப் பூஜிக்க வேண்டும், தர்மத்தில் நம்பிக்கை உள்ளவனாக இருக்கவேண்டும், உயர்ந்த குலத்தில் மணம் செய்து கொள்ளவேண்டும், பொறுமையுடனும் பெரிய மனதுடனும் பிராம்மணர்களுக்கு பணிவிடை செய்து தீர்த்த ஸ்வரூபியாக வருக்கவேண்டும். ஜபம், தமம், சீலம், நாஸ்திகத் தன்மையில்லாதது, கெட்ட நடவடிக்கையில்லாதது, இன் சொல், இன் செய்கை இவைகளால் பெரியோர்களை சந்தோஷிக்கச் செய்து அவர்கள் அருளைப் பெறவேண்டும். எப்பொழுதும் பிறர் குணங்களைச் சொல்லி நான் உன்னைச் சேர்ந்தவன் என்று சொல்லி கடுமையான பாபங்களைப் போக்கி, சீக்கிரத்தில் வெகுமானம் அடைந்து, ஸந்தோஷமில்லாமல் எந்த தர்மத்தை குருக்கள் உபதேசிக்கிறார்களோ, அந்த தர்மங்களை ஆசரணை செய்து குருக்களின் கிருபையால் பெரும் புகழை அடையவேண்டும், என்று காமாந்தக ரிஷியானவர் ஆங்கரிஷ்டன் என்னும் அரசனுக்குச் சொல்லி அதன் பிறகு பீஷ்மர் தர்மபுத்ரருக்கும் சொன்னார். இவ்வித மனப்பான்மையுடன் நான், ராமா ஜானகி, உங்களை பூஜிக்கவேண்டும். உங்கள் தர்மானுஷ்டானங்களை ஆசரணை செய்யவேண்டும். இவ்விதமாக உங்களுக்குப் பிரியனாகி உன் கீர்த்திகளை தியாகராஜர் பாடினது போல பாடவேண்டும். நாரதர், சம்பு, அம்பிகை, அர்ஜுனன், வால்மீகி இவர்களின் பக்தர்கள், சேவகர்கள் அனைவர்களுடைய அனுக்ரஹமும் வேண்டும்.]

"யோகம், லக்னம், கிரஹங்களின் சேர்க்கை, வாரம், திதி நக்ஷத்திரம் ஆகியவைகள் அனுகூலமாக விருந்தன. சராசரங்களில் அடங்கின சேதன அசேதன வஸ்துக்கள் யாவற்றிலும் சந்தோஷம் பொங்கி வழிந்தது. பூமியில் ஸ்ரீராமச்சந்திரனுடைய ஜனனம் எடுப்பது எல்லா தாபங்களையும் போக்கி எல்லோருக்கும் சுகத்தைத் தருவதல்லவா?" (1040)

"பவித்திரமான சித்திரை மாதம், நவமி திதி, சுக்லபக்ஷம், அபிஜித் என்கிற பகவானுக்குப் பிரியமான முகூர்த்தம். நடுப்

பகல், நிறையக் குளிர் இல்லை. வெப்பத்தினுல் தாபமும் இல்லை. அந்த நல்லவேளை லோகங்களுக்குச் சாந்தியைத் தரக்கூடிய தாகவிருந்தது.'' (1041)

"சீதளம், மந்தம் (மெதுவாகச் செல்வது) அழகான கந்தங்களை வகித்துக் கொண்டு வாயு வீசிற்று. தேவர்களும் ஸாதுக்களும் மிக்க சந்தோஷப்பட்டார்கள். வனங்களில் புஷ்பங்கள் நிறைந்திருந்தன. பர்வதங்களில் ரத்னமணிகள் நிறைய விளைந்தன. எல்லாத் திக்குகளிலும் அம்ருதத்தை வஹித்துக் கொண்டு ஜல பிரவாஹங்கள் ஓடின.'' (1042)

"எந்த சமயம் பிரும்மாவினுல் பகவான் நாராயணர் உலகத்திற்கு வெளிப்படும் சமயம் என்று நிர்ணயிக்கப்பட்டதோ, அந்த சமயத்தில் அவரும், இதர தேவதைகளும் தங்கள் தங்கள் விமானங்களில் கூட்டம் கூட்டமாக அயோத்திக்கு வந்தார்கள். நிர்மலமான ஆகாசத்தில் தேவதைகளின் சமூஹங்கள் கூடியி யிருந்தன. கந்தர்வ குழாங்கள் பகவானுடைய புண்ய கீர்த்திகளைப் பாடிக்கொண்டிருந்தனர்.'' (1043)

"சுந்தரமான மனத்துடனும் அஞ்சலிகளுடனும் அவர்கள் புஷ்பங்களை வாரி இறைத்தார்கள். ஆகாசத்தில் வாத்ய துந்துபிகள் முழங்கின. நாகர்கள், முனிதேவகணங்கள் ஸ்துதி செய்ய ஆரம்பித்தார்கள். அநேக விதமாக தங்களுடைய காணிக்கையான சேவைகளை பகவானுடைய திருப்திக்காகச் செய்தார்கள்.'' (1044)

"தேவர்களின் சமூஹங்கள் பிரபுவை நமஸ்கரித்துவிட்டு, தங்கள் உலகங்களுக்குத் திரும்பிச்சென்றுர்கள். ஜகந்நிவாஸரான பிரபு அகில லோகங்களின் நன்மைக்காகவும், சாந்தியை அளிப்பவராகவும் தன்னை வெளிப்படுத்திக்கொண்டார்.'' (1045)

[தியானம்

ஹே ராமா ஜானகி, மிதபாஷணு, பூர்வபாஷணு, ஜிதக்ரோதாய, ஜிதமித்ராய நமோ நமঃ, முன்காலத்தில் எந்த ஒரு விஷயத்தையும் நன்ருக நடத்தினவரும், எந்த புருஷன் எல்லாப் பிராணிகளுடைய ஸம்மதத்தையும், பெரும் கீர்த்தியையும் பெறுவான் என்கிற விஷயத்தில், இந்திரனுல் வினவப்பட்ட பிரஹஸ்பதி பதில் சொன்னுர்—உண்மையான பிரிய வசனம் என்கிற ஒரு விஷயத்தினுல் அவ்விதம் மேன்மையை அடையலாம் என்று சொன்னுர். எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியனுகவும், புன்சிரிப்புடன் கண்டதும், முந்தியே பேசுகிற

வனாகவும் இருக்கும் ஸ்வபாவமுள்ள மனிதனை உலகம் மதிக்கும். பிரிய வசனங்களின்றி கொடுக்கப்படும், தானம், வியஞ்சன மின்றி போஜனம் போல, எவ்விடத்திலும் பிராணிகளுக்கு சந்தோஷத்தை உண்டுபண்ணுது. இனிய வார்த்தைகளோடு பேசுகிறவன் பிராணிகளின் திரவியத்தை எடுத்தபோதிலும் உலகத்தை தன் வசப்படுத்துகிறான். ஆகையால் தண்டம் வகிக்கும் அரசன் பிரிய வசனம் பேசவேண்டும். அதனால் உலகம் இவனிடம் பயம் அடையாது. நன்ருக உபயோகிக்கப் பட்ட மென்மையும், இனிமையான பிரிய சொல்லும், முந்தியே பேசுவதும், நன்ருக செலுத்தப்படுவதற்கு சமமானது எப் பொழுதுமில்லை என்று பிரஹஸ்பதி இந்திரனிடம் சொன்னார். இவ்விதம் சொல்லப்பட்ட இந்திரன் முழுமையாகச் செய்து எல்லோருக்கும் பிரியனானான். அப்பேற்பட்ட பரம கௌது கலமான மார்க்கத்தை நடத்திக் காண்பித்த ஶ்ரீராமா, உனக்கும் ஜானகிக்கும் மங்களம். ஜயவிஜயிபவ, ஸார்வ பௌமனான சக்ரவர்த்தி திருக்குமாரனுக்கு மங்களம். நமஸ்காரம். உங்கள் சரணங்களே எனக்கு அடைக்கலம். உங்கள் பராயணனாக விருக்கிறேன்.]

தீனர்களுக்கு தயை செய்யும் வள்ளல் கிருபாளுவான ஶ்ரீராமச்சந்திர பிரபு, கௌஸல்யையின் ஹிதகாரி, உலக நன்மைக்காக இவ்விதம் அவதரித்தார். முனி ஜனங்களின் மனம் மிகவும் சந்தோஷித்தது. பகவானுடைய அத்புதமான ரூபத்தைத் தியானம் செய்து, புளகாங்கிதமடைந்தார்கள். அவருடைய அத்புதமான ரூபத்தைக் கண்டு மாதாவான கௌசல்யா தேவி மிக்க ஆனந்தமடைந்தாள். நேத்ரங்களுக்கு பார்ப்பதினால் ஆனந்தம் கொடுக்கும் திவ்ய ரூபம் உள்ளதும், அடர்த்தியான காளமேகம் போன்ற சியாமை நிறமுள்ள சரீரமும், நான்கு புஜங்களும், நந்தகி, சார்ங்கம், கதை, சங்கு, சக்ரம், தாமரை புஷ்பம் ஒவ்வொரு புஜத்திலும் வெவ்வேறு ஆயுதங்களுடன் பிரபு ஆவிர்பவித்தார். அநேகவிதமான ஆபரணங்களுடனும், வனமாலையுடன் இருந்தார். புஷ்கர க்ஷேத்திரத்திலுள்ள பெரிய தாமரைப்பூவின் இதழ்கள் போன்ற விசாலமான நேத்ரங்களுடன், பிரபு கராரி (கரனை வதைத்தவர்) சோபை மயமாக விளங்கினார். (1046)

மாதாவான கௌஸல்யை இரண்டு கைகளை அஞ்சலி பந்தத்துடன் வேண்டிக்கொண்டாள். "ஹே அனந்தா, உன்னை நான் எந்தப் பிரகாரம் ஸ்துதி செய்வேன்? வேதங்கள்,



கௌசல்யா தேவி ராமனின் அற்புதமான விராட் ரூபத்தைத் தரிசித்து, ஆனந்த மடைதல்.

புராணங்கள் உன்னை மாயைக்கும், குணங்களுக்கும், ஞானத்திற்கும்மேலாக விளங்கும் உமது ஸ்வரூபத்தை எல்லையற்றதாகவும் அளவு மீறி இருப்பதைப்பற்றி பலவிதமாக கானம் செய்கின்றன. ஸ்ருதிகளும், சாது ஜனங்களும், உன் கருணையையும், ஸாகரம் போன்ற எல்லையில்லாத சுகத்தை அளிக்கும் வள்ளல் வதனத்தையும், குணக்குன்றுபோல விளங்கும் உன் பிரதாபங்களையும் கானம் செய்கிறார்கள். அப்பேற்பட்ட லக்ஷ்மிபதியான நாராயணன், பக்தர்களின் மேல் காட்டும் பிரேமையின் காரணமாக, என்னிடம் கருணைகாட்டி, எனக்கு ஹிதமாக பிரகடனம் செய்து கொண்டார். ஆச்சர்யம், ஆச்சர்யம். (1047)

வேதங்களும் கோஷிக்கின்றன. "ஹே ஸ்வாமி, உம்முடைய ஒவ்வொரு ரோமக்கால்களினின்றும் மாயையினால் படைக்கப்பட்ட அநேக பிரும்மாண்டங்கள் ஸமூக ஸமுதாயங்களாக நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாம் உம்முடைய ஸ்வரூபத்திலிருப்பதினால், என்னுடைய கர்ப்பத்திலும் அவைகளும் வாஸம் செய்தன என்று சொல்வதும் ஆச்சர்யமும், பரிஹஸிக்கக்கூடிய விஷயம்தான். இப்பேற்பட்ட பரிஹஸிக்கும் வார்த்தையைக் கேட்டு, தீர (விவேகியான) புருஷர்களின் புத்தி கூட கலக்கமடைகிறது." எப்போது மாதாவின் ஞானத்தைக் கண்டாரோ, அப்போது பகவான் புன்சிரிப்பு செய்தார். பல விதமான சரித்திரங்களையும், கதைகளையும் மாதாவுக்குச் சொன்னார். பூர்வஜன்மங்களின் விருத்தாந்தங்களையும் சொல்லி எவ்விதமாகத் தாயாருக்கு புத்ரவாத்ஸல்யம் ஏற்படுமோ, அவ்விதம் எல்லாம் உரைத்தார் பிரபு. (1048)

மாதாவான கௌஸல்யையின் மதி சுழன்றது. அதனால் அவள் சொல்ல ஆரம்பித்தாள் :—"ஹே ஸ்வாமி, இந்த அபார தேஜஸ் உள்ள ஸ்வரூபத்தை விடுத்து, அழகான பால ரூபம் எடுத்துக்கொண்டு லீலைகளைச் செய்யும். எனக்கு இதனால் யேற்படும் சுகத்தின் அனுபவம் ரொம்பப் பெரியதாக விருக்கும்." என்று சொன்னாள். மாதாவின் வசனங்களைக் கேட்டு தேவதைகளுக்கு ஈஸ்வரரான ஸ்வாமி பால ரூபத்தை எடுத்துக்கொண்டு அழ ஆரம்பித்தார். துளசிதாஸர் சொல்லுகிறார். "எவர்கள் இந்த சுபமான சரித்திரத்தை கானம் செய்கிறார்களோ, அவர்கள் ஸ்ரீஹரியான பதத்தை அடைவார்கள். சம்சாரமயமாகிற கிணற்றையும் தாண்டி, மீண்டும் திரும்பி அதில் விழவும் மாட்டார்கள்." (1049)

[தியானம்

ஹே ராமா, நமஸ்காரம். ஜயலக்ஷ்மியான சீதா, உன்னிடம் ராமன் ஸ்நேகம் வைத்துப் போற்றியதால் அல்லவா ராமனுடைய புகழ் எக்காலத்திலும் நிலைக்கிறது. மங்களச் செல்வியும், ஜனக ராஜாவின் புத்ரியும், மஹா லக்ஷ்மியும், கருணைக்கோயிலும் ராமனுடைய மஹேஸ்வரியுமான உன்னை நான் நமஸ்கரிக்கிறேன். கலைச்செல்வி நீயே; ஸாதுக்களின் கதியும் பராயணமும் நீயே. உன்னைப் பரவாசுதேவ ரூபத்தில் சப்தங்களாலும் வேத வசனங்களாலும் அறியமுடியும். அனுமானம் போன்ற சாதனங்களால் முடியவே முடியாது. ரிஷிகளின் மஹா வாக்யங்களாலும், பூமியில் நீ செய்த மஹா செய்கைகளாலும், பெரியோர்களை அடுத்து அவர்களின் உபதேசங்களாலும், உன்னால் செய்யப்பட்ட கர்மாக்களாலும் உன் ரஹஸ்யத்தை ஒரு அளவு அறிய முடியும். அதுவும் உனக்கேயேற்பட்ட பிரத்யேகமான கிருபையினால் நிர்ஹேதுவின்றி, நீ பிரகடனப் படுத்திக்கொள்கிறாய். இருந்தாலும் சில பேர்கள் செய்யும் பிரபத்தி என்னும் முறையினாலும் நான் உன் கோயிலைச் சொன்னேன்; உன் திருநாமங்களைச் சொன்னேன்; என்கிற வியாஜத்தால் என் பாபங்களைப் போக்கி, நீயாக வந்து என்னை கடாக்ஷிக்க மாட்டாயா? எவ்வளவு நாட்கள் என்னைத் தவிக்கவைக்கப்போகிறாய்? பரமாத்மா, நீ என்னிடம் மிக்க கருணையுடன் இரு. அம்மா, நீதான் தயை பண்ணவேண்டும். உனக்குக் கேடு நினைத்த ராக்ஷஸிகளிடமும் நீ கருணை காட்டவில்லையா? உன்னையே நம்பியிருக்கும் என்னையும் உன் கிருபைக்கு பாத்திரமாக்கிக் கொள் ]

துளசிதாஸர் சொல்லுகிறார். "பிராம்மணர்கள், பசுக்கள், தேவதைகள், ஸாது ஜனங்கள் ஆகியவர்களின் நன்மைக்காகவும், ஹிதத்திற்காகவும் பகவான் ஸ்வய இச்சையினால் அவதாரம் எடுத்தார். தர்மத்தைக் காப்பது, தேவர்களைக் காப்பது, லோகத்தையும் லோகமரியாதையையும் காப்பது, சகல ஜீவராசிகளையும் காப்பது ஆகியவைகளையே முக்கியமாகக்கொண்ட மனுஷ்ய அவதாரம் ராம அவதாரம்." (அப்பேற்பட்ட பகவானுடைய திவ்யமான சரீரம் சாதாரண மனுஷ்ய சரீரத்தைப் போல் இல்லை. அது அக்ஞான மயத்துடனும், மாயையின் பலத்தினால் ஞான ஹீனர்களாக விளங்கும் சாதாரண ஸம்சாரியினுடைய சரீரத்தைப் போலவுமில்லை. ஸத்வம் ரஜஸ் தமஸ்ஸாகிற முக்குணங்கால் உள்ளும் வெளியிலும் வியாபிக்கப்பட்ட கர்ம ஞான இந்திரியங்களுக்கும் அப்பால் உள்ள சுத்த ஸத்வமான

சரீரம். ஆகவே நம்மைப்போல கர்மங்களினுல் பந்தமடைந்து, நிஜ ஆனந்தத்தை அடையாமல் பரவசமடைந்து தீனஞக விருக்கும் ஜீவனுடைய சரீரத்தைப்போலவும் இல்லை. திரி குணங்களின் ஆத்மாவாகவுள்ள பௌதிக பதார்த்தங்களின் சேர்க்கையினுல் ஏற்படும் சாதாரண மனுஷ்யனுடைய சரீரமோ தேவனுடைய சரீரத்தைப் போலவும் இல்லை. அப்ராகிருதமான தேஜஸ்ஸுடனும், பகவானுல் ஸ்வய இச்சையினுல் உலக நன்மைக்காக தானே நிர்மிதம் செய்யப்பட்ட மங்கள விக்ரஹம். அமிர்தம் போல ருசியுள்ள சரீரம். மிருதத்வம், அதிகோமளத்வம் கொண்ட அப்ராகிருதமான சரீரம். அவரிடம் வசப்பட்ட மாயையினுலும், குணங்களாலும் பாதிக்கப்படாத அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹம். குணரஹிதமான சரீரம். நமக்கு ஏற்படுவது போல பசிதாகம், களைப்பு, ரோகம், கிழத்தன்மை, வருத்தம் ஆகியவைகளால் வாட்டப்படாத அழகிய திருமேனி. எப்போதும் ஆனந்தமாயும், யௌவனமாயும். அப்போது அலர்ந்த கமலபுஷ்பத்தைப் போல திவ்ய கந்தத்துடன், பீத வாடையுடன், கம்பீரமாயும், பார்ப்பவர்களின் சித்தத்தையும் பாபங்களையும் அபஹரிக்கும் ஸ்வபாவத்தை உடைய திருமேனியும், கருணை பொங்கும் கடைக் கண்களும், ஆஸ்ரயித்தவர்களை வாரி அணைக்கும் நீண்ட தீர்க்கமான திருக்கைகளும், அச்யுதன் என்கிற திருநாமத்தினுல் புகழப்பட்ட சரண கமலங்களை உடைய அழகிய திருமேனி அந்த ராம விக்ரஹம்.) (1050)

"அந்தக் குழந்தையின் ரொம்ப வசீகரமுள்ளதும், பிரியமானதுமான அழுகைக் குரலைக்கேட்டு மற்ற ராணிகள் மிக்க ஆவலுடன் ஓடி வந்தார்கள். மற்ற தாசிகளான வேலைக்காரர்கள் மிக்க சந்தோஷத்துடன் அவ்விடம் ஓடி வந்தார்கள். அயோத்தியில்உள்ள ஜனங்கள் யாவரும் அந்தக் குழந்தையைப் பார்த்து ஆனந்தக் கடலில் மூழ்கினுர்கள்." (1051)

"ராஜா தசரதன் தனக்குப் புத்ரன் ஏற்பட்டதைக் காதினுல் கேட்டு, சந்தோஷமடைந்தார். அவருடைய சந்தோஷம் பிரும்மானந்தத்திற்கு ஈடாகவிருந்தது. மனதில் பிரேமையுடனும் சரீரத்தில், புளகாங்கிதத்துடன் இந்த அரசர் அதிக சிரமத்தினுல் உடனே எழுந்த ஆவலுடன் போய்ப்பார்க்கும் ஆசையை அடக்கி, சிறந்த ஆஸனத்திலிருந்து எழுந்திருக்க முயற்சி செய்து கொண்டிருந்தார்." (1052)

"எவருடைய பரமமங்களமான (ராம) நாம சப்தத்தைக் காதினால் கேட்டமாத்திரம் சகல அபீஷ்டங்களும் நிறைவேறுமோ, அப்பேற்பட்ட மஹாபிரபு மிக்கக் கருணையுடன் என் வீட்டிற்கு வந்திருக்கிறார்." இதை நினைத்துப் பார்த்ததும், ராஜாவினுடைய மனதானது பூர்ணமான சந்தோஷத்தை அடைந்தது. தன் வேலைக்காரர்களை கூப்பிட்டு, "மங்கள வாத்தியங்கள் வாசிக்கப்படட்டும்" என்று கட்டளையிட்டார். (1053)

"குருவான வஸிஷ்டரை அழைத்தார். அவர் பிராம்மணர்கள் சஹிதம் ராஜ கிருஹத்திற்கு வந்தார். அவர் அந்த குழந்தையின் உத்தமமானதும், அசாதாரணமான சௌந்தர்ய லாவண்யத்தைக் கண்டார். ஒரே தேஜோமயமான குவியலாக அவர் காணப்பட்டார். அந்த குழந்தையின் அழகின் வர்ணனைகளும், குணோத்தமமான அந்த ரூபமும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாதபடி யிருந்தன." (1054)

[தியானம்

ஹே ராமா, சீதா, நாராயணா, லக்ஷ்மி, ஸ்ரீகர்ப்பா, ஸ்ரீகரரே, லக்ஷ்மியைத் தரிக்கும் ஸ்ரீதரா, உம்மை ஹிரண்யகர்ப்பர் என்றும் குற்றமற்ற பொன்னாகிய அக்னியில் வசிப்பவர் என்றும் சொல்லுகிறார்கள். பிராம்மணர், அக்னி, சுப்ரமண்யர் என்றும், தங்க மயமான ஸ்வரூபமுடைய தேஜஸ் உள்ளவர் என்றும், நீர் சொல்லப்படுகிறீர். நீரே புருஷோத்தமர். உம்முடைய அழகான நாபியில் அஷ்டாக்ஷரமாகிய அஷ்ட தளங்கள் உள்ள கமலத்தில் பொன் மயமான மேரு (தங்கமலை) தாமரைக் காயாக விளங்கும்படியிருக்கிறீர். தியானிப்பவர்களின் ஹ்ருதயங்களில் அமுது உண்பதுபோல நீர் அனுபவிக்கப்படுகிறீர். சுத்த ஸத்வமாக கருதப்படுகிறீர். நீரே அமிர்தமாக பரிமளிக்கும் ஹோமத் திரவியங்களைப் புசிப்பவராய் சந்திரனை வளரச் செய்கிறீர். சுக்லபக்ஷம், வாயு மார்க்கம் முதலியவைகளான மோக்ஷப்படிகளாக விளங்குகிறீர். நீரே எனக்கு தத்வம், ஹிதம் புருஷார்த்தம்; தத்வம் என்று ஞானத்தால் அறிந்து, ஹிதம் என்கிற கர்ம மார்க்கத்தில் நின்று, புருஷார்த்தம் என்கிற ஹவிஸ்ஸை நான் பெறும்படி அனுக்ரஹிக்கவேண்டும். லக்ஷ்மிவானாகிய உம்மை நான் ஆராதித்து, அச்யுதர் என்று சொல்லப்பட்ட உம்முடைய பதத்தை விரும்பி, உம்மால் உமது கருணையினால் கடாக்ஷிக்கப் பட்டவனாவேன். ஹே ஸ்வாமி, வஸிஷ்டர், வாமதேவர், வியாஸர்,

விஸ்வாமித்ரர், அஹமர்ஷணர், கௌசிகர், பராசரர், சுகர், என்னை அனுகிரஹிக்க வேண்டும். ஜமதக்னி, பரசுராமர் பீஷ்மர் துரோணர், தர்மர், அர்ஜுனன், ஆஞ்சநேயர், சூரியன், இந்திரன், நாரதர், வால்மீகி பகவானுகிய தியாகராஜர், எங்களை அனுக்ரஹிக்க வேண்டும்.]

"பிறகு தசரத மஹாராஜர் நாந்தி முதலிய ஸ்ரார்த்தம் செய்தார். குழந்தைக்கு ஜாதகரணம், நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்து, பிராம்மணர்களுக்குப் பொன், பசுக்கள், வஸ்திரங்கள், நவரத்ன மணிகள் முதலிய தானங்களைச் செய்தார்." (1055)

"த்வஜங்கள், கொடிகள், தோரணங்கள் முதலியவைகளை ஜனங்கள் அயோத்யா நகரத்தில் நட்டு, அலங்கரித்திருந்தார்கள். எந்தவிதமான வகைகளில் அவர் அயோத்யாபுரியை அலங்கரித்தார்கள், எந்தவிதமான சந்தோஷங்களை அவர்கள் அடைந்தார்கள், என்று யாவராலும் வர்ணிக்க முடியாது. ஆகாசத்திலிருந்து புஷ்ப தாரைகள் கொட்டிய வண்ணமாகவிருந்தன. எல்லோரும் பிரும்மானந்தம் கூட வெட்கப்படும்படி சந்தோஷமடைந்தார்கள்." (1056)

"ஸ்திரிகள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். ஸ்வபாவமாகவே கேலி செய்யும் ஜனங்கள் "இதுதான் நல்ல சமயம்" என்று நினைத்து உத்ஸாஹப் பெருக்கினுல் அதிகமாகச் செய்கிறவர்களாக ஆசையுடன் ஓடி வந்தார்கள். தங்கக் கலசங்களை எடுத்துக்கொண்டும், தட்டுக்களில் மங்கள ஆரத்திகளையும் எடுத்துக்கொண்டு, அவர்கள் ராஜகிருஹத்தை அடைந்தார்கள்." (1057)

"மங்கள ஆரத்திகளை எடுத்து, அடிக்கடி, அடிக்கடி அவர்கள் அந்த பாலகனின் பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். மாகதர்கள், வந்திகள், சூதர்கள், கானம் செய்பவர்கள் பகவான் ரகுநாயகனுடைய புண்ய கீர்த்திகளை பாவனமான கீர்த்தனங்களால் பாடித் துதித்தார்கள்." (1058)

"மஹாராஜா எல்லோருக்கும் அவர்களின் இஷ்டப்படி தானம் செய்தார். அவருக்கு என்ன என்ன காணிக்கையாக வெகுமதிகள் வந்தனவோ, அவைகள் எல்லாவற்றையும் தானம் செய்தார். நகரத்தில் எல்லா இடங்களிலும் வாசனையுள்ள கஸ்தூரி, குங்குமம், குங்குமப்பூ போன்ற வாஸனை திரவியங்கள் மண் மாதிரி பூமியில் இறைக்கப்பட்டிருந்தன." (1059)

"ஒவ்வொரு கிரஹத்திலும் மங்களகரமான த்வனிகளுள்ள கீர்த்தனங்கள் கேட்கப்பட்டன. ஏனென்றால் சோபைக்கு மூலகாரணமாகிற பகவான் நாராயணன் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு பூமியில் அவதரித்தார். நகரத்தில் ஸ்திரி புருஷர்களின் கூட்டங்கள் ஆனந்தமயமாக விளங்கினார்கள்." (1060)

"கைகேயி, சுமத்திரை ஆகியவர்களும் அழகான புத்ரர் களைப் பெற்றார்கள். அவர்களுடைய சுகத்தையும், சம்பத்தையும், அந்த சந்தோஷகரமான சமயங்களில் ஏற்பட்ட ஆனந்தத்தை யும், அந்த ஜனக் கூட்டங்களின் ஆனந்தங்களையும் வர்ணனை செய்வதற்கு ஸரஸ்வதி, சேஷநாகன் போன்றவர்களால் கூட முடியாது." (1061)

"அந்த அயோத்யாபுரி இவ்விதமாக மிக்க சோபையுடன் விளங்கியது. பிரபுவைக் காண்பதற்கு ராத்திரி வந்தது போலவும், அந்த இளம் சூரியனைக்கண்டு, மனத்தில் வெட்கப் பட்டு, அந்த ராத்திரி சந்தியா காலமாக விளங்கிற்று." (1062)

"அகர்பத்தியின் தூபங்களின் அதிகமானபுகையினால் சந்தியா காலமும் அந்தகாரமாகி விட்டது. அந்த வாசனை தூசிகளினால் சிவப்பு நிறமானது இன்னும் அதிகரித்தது. அந்த ராஜகிருஹத்தில் ஒரே ரத்ன குவியல்களாக இருந்தன. அவைகள் தாராகணங்கள் மாதிரி பிரகாசித்தன. ராஜகிருஹத் தின் மேலே உள்ள பளிங்கு கலசங்கள் ஸ்ரேஷ்டமான சந்திரனைப் போல பிரகாசித்தன." (1063)

[தியானம்

ஹே ராமா சீதா, லக்ஷ்மி, அம்பிகா, நாராயணா, உன்னு டைய சீலமானது ரொம்ப பிரசித்தமானது. தர்மத்திற்காக பித்ருவாக்ய பரிபாலனம் செய்வதற்காக நீயும் நளினமான லக்ஷ்மி தேவியான சீதையும் காட்டில் கஷ்டப்பட்டது, உன்னைத் தவிரவும், சீதையைத் தவிரவும் மானிடர்களால் யாரால் செய்ய முடியும்? ஆஞ்சநேயர்போல தாஸ்ய பக்தியில் சிறப்புள்ளவர் யார் இருக்க முடியும்? ஊர்த்வரேதஸும், நவவியாகரண பண்டிதருமாகிய அவர் தன் மஹாராஜாவான சுக்ரீவனை பெரும் பயத்திலிருந்து காப்பாற்றிய மஹானுபாவர். ஜானகிக்கும் ராமனுக்கும் சோகத்தைப் போக்கின மஹானுபாவர். பராக்ரம சாலி. பலத்தையும் புத்தியினால் உபயோகிக்கும் தீர்க்கதரிசி. பரம கிருபாளு. சிவசக்தியின் ஐக்ய ஸ்வரூபம். இவை எல்லாம் உன்னுடைய விபூதிகள். பரமபுருஷரும், பராபர

வஸ்துவும், பூர்ணருமான ராமா, சாது ஜனங்கள் உன்னுடைய சீலத்தை வர்ணித்து, தர்மத்தையும் புண்ணியத்தையும் வர்ணித்து மஹா கிருபையையும், தாஸ்யத்தையும், அம்ருதத்தை அடைந்தவர்கள் சந்தோஷிப்பதுபோல சந்தோஷிப்பார்கள். பக்தர்களிடம் அனுகம்பை காட்டி அவர்களை ஸம்சார பயங்களிலிருந்தும் துக்கங்களிலிருந்தும் நீ காப்பாற்றுகிறாய். உன்னை அடைந்தவர்களுக்கு மோக்ஷம் உள்பட எதுதான் கிடைக்காது? வியாஸர் வால்மீகி போன்ற மஹான்கள், வேதத்தின் பெருமைகளைச் சொல்லும்போது உன்னைத் தானே சொல்லுகிறார்கள். அப்பேற்பட்ட கருணா மூர்த்தியான நீர், என் குருநாதரான வேதாந்த தேசிகர் காட்டிய வழியில், என்னை நிற்கச் செய்யும். பிரபத்தி மந்திரத்துடன் உன்னை நான் சரணம் புகுந்தேன். நீரே எனக்கு எல்லாம். என்னை மிக்க கிருபையுடன் ஆட்கொள்ளும்.]

"ராஜாவின் கிருஹத்தில் வேத சப்தங்கள் கேட்கப்பட்டன. கோமளமான குரலில் கோஷிக்கப்பட்டன. அந்த நல்ல சமயத்திற்கு ஏற்ப பக்ஷிகளின் ஹலாஹலா சப்தங்கள் மதுரமாகக் கேட்கப்பட்டன. இந்த சந்தோஷகரமான கௌதுகலங்களைக் கண்டு, சூரியனும் ஒரு நிமிஷம் தன் ககன மார்க்கத்தில் தன் வேலையை மறந்து நின்றார். ஒரு நிமிஷம் ஒரு நாளாகி விட்டது." (1064)

"ஒருநாள் ஒரு மாத அளவாக மாறி விட்டது. இந்த ரஹஸ்யத்தை யாரும் அறியவில்லை. சூர்ய பகவான் தன் ரதத்தில் தன் பாதையில் நின்றுவிட்டான். அப்படியிருக்கும் சமயம் இரவு எவ்விதம் வரும்?" (1065)

"இந்த ரஹஸ்யத்தை யாரும் அறியவில்லை. தினமணியான சூர்யபகவான் தன் குருநாதரான மஹாவிஷ்ணுவின் குணக் கீர்த்திகளைப் பாடிக்கொண்டு சென்றான். இப்பேற்பட்ட மஹோத்சவத்தைக் கண்டு, முனிகணங்கள் நாககணங்கள் தங்கள் பாக்கியங்களை நினைத்து, சந்தோஷமடைந்து தங்கள் வீட்டிற்குச் சென்றார்கள்." (1066)

சம்பு பார்வதியிடம் சொன்னார்:—"ஹே பார்வதி, கிரிஜா, உன்னுடைய புத்தி திருடமாக ஸ்ரீ ராம சரணங்களில் யிருப்பதினால் நான் சொல்லுகிறேன் கேள். என்னைச் சம்பந்தப் படுத்திய, இன்னொரு ரஹஸ்யத்தையும் நான் உனக்குச் சொல்கிறேன். கேளு. காகபுஸுண்டியும், நானும் மனுஷ்ய

ரூபத்தில் அந்த இடத்தில் இருந்தோம். எங்களை யாரும் தெரிந்து கொள்ளவில்லை.'' (1067)

''பரமானந்த சுகத்தையும் ப்ரேமையையும் அடைந்த எங்கள் அனுபவத்தைச் சொல்ல முடியாது. எங்கள் மனம் ஒரே ஆனந்தத்தில் ஈடுபட்டு நாங்கள் அயோத்தியின் தெருக்களில் இங்குமங்கும் அலைந்து திரிந்து கொண்டிருந்தோம். நாங்கள் இவ்விதம் மெய்மறந்து ஆனந்தத்தினால் அலைந்து திரிந்து கொண்டிருந்த இந்த சுப சரித்திரத்தை ராமகிருபை அடைந்த ஒருவனால் அல்லவோ முழுவதும் அறியக்கூடும்.'' (1068)

''அந்த உத்தமமான வேளையில் தசரத மஹாராஜர் விதிப்படி யாசகர்களுக்கும் தீனர்களுக்கும் அவர்களிஷ்டப்படி தான வெகுமதிகளை அளித்தார். யார் யாரால் எது வேண்டப்பட்டதோ, அதை மன்னர் மனமுவந்து அளித்தார். இவ்விதமாக அரசர் கஜங்கள், ரதங்கள், குதிரைகள், பொன், பசுக்கள், ரத்ன வைரங்கள், இன்னும் அநேகவிதமான வஸ்திராபரணங்கள் ஆகியவைகளைத் தானம் செய்தார்.'' (1069)

''இந்தவிதமாக எல்லோருடைய மனத்தை மன்னர் பூர்த்தி செய்து வைத்தார். எல்லா மஹாஜனங்களும் அந்த அரசருக்கும் அவர் மனைவிமார்களுக்கும் குழந்தைகளுக்கும் சுபமான ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். (என் ஸ்வாமியாகவிருக்கும்) ''துளசிதாஸருடைய ஸ்வாமிகளாக விருப்பவர்களும், தசரத மஹாராஜருடைய புத்ரர்களாக விருப்பவர்களும், சிரஞ்சீவிகளாக விளங்கட்டும்'' என்று அவர்கள் மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தனர்.'' (1070)

[தியானம்

ஹே ராமா, சீதா, கிருஷ்ணாவதாரத்தில் உத்தவருக்கும் அதற்கு முந்தி பிரும்மா, சனகர் முதலிய யோகேஸ்வரர்களுக்கும் ஹம்ஸ ரூபியாக இந்த வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளாகிய உன் தியானத்தையும் உன் பக்தியையும் பற்றிச்சொன்னாய். ஆத்ம ஞான மடைந்த யோகிகள், உன்னையே பெரும் தனமாக நினைத்து, எல்லா தேவதைகளையும் விட்டு, சதா உன் பாதங்களையும், கருணை நிரம்பிய முகத்தையும் ஆதரவுள்ள பாஹுக்களையும் அபயஹஸ்தங்களையும் நினைத்து, நினைத்து, உன்னை வந்தடைகிறார்கள் என்று சொன்னாய். அப்பேற்பட்டவர்களுக்கு பிறப்பு இறப்பு கிடையாது. அவர்கள் சார்வ பௌமத்தையோ, இந்திர பிரும்ம பதவிகளையோ, இன்னும் மற்ற உத்தம பதங்களையோ

வேண்டாமல், உன்னை நினைப்பதே பெரும் பாக்கியம் என்கிற நினைப்பினுல், உன்னை வந்து அடைகிருர்கள் என்று சொன்னுயாமே? எல்லா இந்திரியங்களையும் அடக்கி, மனத்தை உன்மீது நிறுத்தி எல்லா த்வந்தங்களையும் விட்டு, சிறந்த ஞானத்துடன் வாசுதேவ ஸ்வரூபத்தை எல்லா திக்குகளிலும் எல்லா சேதன அசேதன ஜந்துக்களிலும் பார்ப்பவர்களாக உன்னை அடைகிருர்கள் என்று சொன்னுயாமே. அப்பேற்பட்ட ஏகாக்ரமனத்துடனும், ஏகாந்தியின் மனேபாவத்துடனும் நீயே பெரும் தனம் என்கிற மனப்பான்மையாலும், உன்னை நான் வந்து அடைகிறேன். சர்வ சக்திமானுன நீ என்னை ரக்ஷிக்க வேண்டும். கருணை காட்ட வேண்டும். வாசுதேவ பராயணனுன என்னை ரக்ஷி.]

"இந்தவிதமாகச் சில தினங்கள் சென்றன. பகல் கழிந்து இரவு வந்து, இரவு கழிந்து பகல் வந்துகொண்டுல், பகலும் இரவும் இரண்டும் சேர்ந்து தினங்கள் பலவும் கழிந்தன என்று யாருக்கும் உணர்வு ஏற்படவில்லை. எப்போது நாமகரணம் என்கிற ஸம்ஸ்காரம் செய்யப்படவேண்டிய காலம் வந்ததோ, அந்த சமயம் அரசர் பெரும் ஞானியானவரும் மஹரிஷியுமான வஸிஷ்டரை அழைத்துவரச் சொன்னுர்." (1071)

"பகவானுன முனிஸ்ரேஷ்டரைப் பூஜை செய்து தசரதர் சொல்ல ஆரம்பித்தார். "முனியே, உம்முடைய மனத்தில் எந்தவிதமான ஆலோசனையிருக்கிறதோ, அவ்விதம் இந்தக் குழந்தைக்குப் பெயரிடவும்." வஸிஷ்டரும் பதில் சொன்னுர். "அரசனே, இந்த முதல் குழந்தையான கௌஸல்யையின் புத்ர னுக்குக் கணக்கற்ற நாமாக்களிருக்கின்றன. அவ்விதம் இருந்த போதிலும் என் புத்திக்குத் தகுந்தபடி நான் யோசித்துச் சொல்கிறேன்." (1072)

"எது ஆனந்த ஸமுத்திரமோ, எது பார்ப்பதற்கும், ஸ்மரிப்பதற்கும் சுகத்தைத் தரும் ராசிக் குவியலோ, எதன் ஒரு திவிலையினுல் மூன்று உலகங்களும் சுகத்தை அடைகின்றதோ, அப்பேற்பட்ட உன் மூத்த குமாரனுக்கு "ராம" என்கிற பெயரிடுகிறேன். "ராம" என்கிற நாமம் அகில லோகக்திற்கும் சுகத்தைக் கொடுக்கும் பொக்கிஷமாகவும் இருப்பிடமாகவுமிருக்கிறது. அகிலதாரக போஷகமாக விருக்கிறது. சகல உலகங்களுக்கும் சுகத்தையும் சாந்தியையும் அளிக்கக்கூடியதாக விருக்கிறது." (1073)

"விஸ்வம் என்கிற சகல லோகங்களையும் தாங்கி, போஷித்து வருகிறானே, அப்பேர்பட்ட பொருளுள்ள பரதன் என்கிற நாமதேயத்தை கைகேயியின் புத்ரனும் உனக்கு இரண்டாவது குழந்தையாகவிருப்பவனுக்கு வைக்கிறேன். எவனுடைய நாமஸ்மரணை செய்தமாத்திரத்தில் சத்ருவின் நாசம் யேற்படுமோ, அந்த நாமத்தை பொருள்படுத்தக்கூடிய சத்ருக்னன் என்கிற பெயரை, வேதங்களில் மிக்கப் பிரசித்தமாயிருக்கும் நாமதேயத்தை சுமித்திரையின் குமாரனுக்கு வைக்கிறேன்." (1074)

"சுமித்திரையின் இன்னொரு குழந்தை யிருக்கிறதே, அந்த குழந்தை சுபமான லக்ஷணங்கள் உள்ளவன். ராமனுக்கு மிக்கப் பிரியமானவன். ஸகல ஜகத்திற்கும் ஆதாரமானவன். அதனால் வஸிஷ்டர் அந்த குழந்தைக்கு லக்ஷ்மணன் என்கிற ஸ்ரேஷ்டமான பெயரை வைத்தார்." (1075)

[தியானம்

ஹே ராமா, சீதா, சரணாகதி தர்மத்தை நீங்கள் இருவரும் பூமியில் நிலைக்கவைத்து, ஆசரணை செய்தீர்கள். தத்வஸ்வரூபமான அஷ்டாக்ஷரமாகிய மந்திரத்தில் பிறந்து, சரணாகதிமந்திரம் அடங்கிய சர்மஸ்லோகத்தை ஹிதமாகவும், உபாயமாகவும் வைத்து, த்வயம் என்கிற இருபத்தைந்து எழுத்துக்கள் உள்ள மந்திரத்தில் உபாய உபேயமாக உங்களை வந்து நாங்கள் அடைகிறோம். பரம போக்யமான வஸ்துவும், பரம உபாயமான வஸ்துவுமாகிய நாராயணா, உன்னைப் பிராட்டியின் மூலம் புருஷகாரம் செய்து அடையவேண்டும். நமஃ என்கிற சொல்லின் அர்த்தமாக பிரபத்தி செய்து, அதன் வியாஜமாக உன்னை வந்து சரணம் அடையவேண்டும். உன் கிருபையைப் பெறவேண்டும். ஆதிகாலத்தில் ஒரு பெண்புறா வேடனிடம் சிக்கி, அது தன் பதியிடம் அறம், பொருள், இன்பம் இவைகளுக்குரிய சிறந்த பாக்யமான பார்யையாகவிருந்தது. அந்த சமயம் குளிரினால் வாடினவனாகவும், பசியினால் களைத்தவனாகவும் அந்த வேடன் இருக்கக் கண்ட அந்த ஆண்புறா சிறந்த தர்மத்தைச் செய்யக்கருதி தன்னை அக்னியில் வாட்டி அவனுக்கு உணவாக அளித்தது. அந்த பெண் புறாவானது சொல்லியது "பிராம்மணனைக் கொல்கிறவனுக்கும், உலகத்திற்கு மாதாவான பசுவைக் கொல்கிறவனுக்கும், சரணம் என்று வந்தவனை கொல்லுகிறவனுக்கும் பாதகம் சமமாக சொல்லப்படுகிறது. கிரஹஸ்தன் தன் சக்திக்கு ஏற்ப அதிதியைப் பூஜிக்கவேண்டும்," என்று சொல்லியது.

"கானகத்தில் உள்ள ரிஷியைப்போல எங்களுக்குச் சேர்த்து வைத்த பொருள் இல்லை" என்று ஆண்புரு சொல்லித் தன்னைத் தானே அக்னியில் வாட்டிக்கொண்டு அந்த வேடனுக்கு உணவு அளித்தது. அந்த வேடன் இதைக் கண்டு தன் கர்மங்களை நிந்தித்துக்கொண்டு, தன்னைத் தவத்தினால் வாட்டி தீயினில் விழுந்து இந்த சரணாகதி தர்மத்தின் தியானத்தின் பலனாக நல்ல கதியை அடைந்தான். பெண் புருவும் முதலில் வேடனால் விடு பட்டு, பிற்பாடு தீயில் குளித்து, அதன் பதியை அடைந்தது. இவ்விதமான மஹாத்மாவான வேடனுக்கும், ஆண் பெண் புருக் களுக்கும், புண்ய கர்மத்தால் தர்மத்திற்குரிய நற்கதி உண்டா யிற்று. பீஷ்மர் யுதிஷ்டிரரிடம் சொல்லியது என்னவென்றால் "பசுவைக் கொன்றவனுக்கு பிராயசித்தம் உண்டு. எவன் சரணம் என்று வந்தவனைக் கொல்கிறானோ, அவனுக்குப் பிராயச் சித்தமில்லை," என்று சொன்னார். இப்பேர்ப்பட்ட சிறந்த சரணா கதித் தர்மத்தைப் பூலோகத்தில் காட்டிய சீதாராமா, என்னையும் நீங்கள் காப்பாற்ற வேண்டும். என் பாபங்களை விலகச்செய்யும். புண்ணியமுள்ள இந்த இதிஹாஸத்தை நான் சொல்லி, உன்னை என் தாயாரான லக்ஷ்மியின் புருஷகார மார்க்கமாக சரணம் அடைந்தேன். எங்களை ரக்ஷி.]

"வஸிஷ்ட குருவினால் நன்றாக ஆலோசிக்கப்பட்டு இந்தவித மான பெயர்கள் வைக்கப்பட்டன. அதன் பின்பு அவர் தசரத ரிடம் சொன்னார். "ஹே ராஜா, உன்னுடைய நான்கு புத்ரர்கள் வேதங்களில் சொல்லப்பட்ட பராபரமான தத்வங்கள்; அதிலும் ராமன் என்கிற பெயருடைய குமாரன், எந்த பரம்பொருள் யோகீஸ்வரர்களுக்குப் பரமார்த்த லாபமாகவிருக்குமோ, பக்தர்க ளாகிற ஜனங்களுக்கு எது ஸர்வமாக விளங்குமோ, எவர் சம்பு வான சிவனுக்குப் பிராணனோ, அந்த காருண்ய ரூபமான பக வான் அதி அனுக்ரஹ புத்தி கொண்டு பிரேமையினால் கட்டப் பட்டு, பாலரூபிகளாக உன் கிரஹத்துக்கு வந்திருக்கிறார்கள். தசரதனே, உனக்குப் பால லீலைகளினால் சுகத்தை உண்டு பண்ணுவதற்கு அவர் மனமிசைந்து ராமனாக அவதரித் திருக்கிறார்." (1076)

"சிறு வயதிலிருந்து, ஸ்ரீராமச்சந்திரன் தனக்குச் சதா ஹிதத் தைத் தரும் பிரபு, என்று நம்பியிருந்த லக்ஷ்மணன், அந்த ராம னுடைய பாத கமலங்களையே அண்டியிருந்தார். அவரிடம் மிக்க அன்பாகவிருந்தார். பரத சத்ருக்னர் ஆகிய இரு இளைய சகோ தரர்கள் பிரபுவினுடைய சேவகத்தை நாடி, ராமனுக்குச் சந்தோ

ஷத்தைத் தரும் காரியங்களில் ஈடுபட்டு அவரிடம் அதிக அன்புடன் இருந்தார்கள்.'' (1077)

''சியாமை நிறம் கொண்டதும், நல்ல சிகப்பு நிறம் கொண்டதும் ஆகிய இரண்டு அழகான ஜோடிகள். அந்த இரண்டு ஜோடிக் குழந்தைகளைக் கண்டு அவர்களின் தாய்மார்கள் குழந்தைகளின் சோபைகளுக்குக் கண் எச்சில், (கெட்ட திருஷ்டிகள்) விழக்கூடாது என்று புல்லைக் கிள்ளி, குழந்தைகளுக்குச் சுற்றிப் போட்டார்கள். அந்த நான்குபுத்ரர்களும், சீலம், ரூபம், என்கிற சிறந்த குணங்களின் சேர்க்கைகளாக விளங்கினர்கள். எல்லோருக்கும் மூத்தவரான ஸ்ரீராமன் அதி சுகத்தைத்தரும் சமுத்திரமாக விளங்கினர்.'' (1078)

''அந்த ஸ்ரீராமனுடைய ஹிருதயம் அனுக்கிரஹ சந்திரனைப் போல பிரகாசித்தது. அந்தக் கிருபா ரூபியான சந்திரன் தன் சீதளமான கிரணங்களால் எல்லோருடைய மனத்தையும் அபஹரிப்பதாக விருந்தது. சில சமயங்களில் மடியில் வைத்துக் கொண்டும், சில சமயங்களில் தொட்டிலிலும், மாதாவான கௌசல்யா தேவி அந்தக் குழந்தையைச் சீராட்டி, அன்புடன் ''என் அன்புச் செல்வமே'' என்று கொஞ்சி வந்தாள்.'' (1079)

''ஸர்வலோக வியாபகரான பரப்பிரும்மம் மாயைபோன்ற குணச் சேர்க்கையின்றி, யாதொரு தோஷங்களின்றி, நிரஞ்சனர், நிர்குணர், குண ரஹிதராக ஆச்சரிய அத்புத ஸ்வபாவங்கள் ஏதுமின்றி, பிறப்பில்லாத அஜரான ஸ்ரீவைகுண்டநாதன், சாதாரண பாலகனுக அந்தக் கௌஸல்யையின் மடியில் ஓடிவந்து அமர்ந்து விளையாடுவார்.'' (அப்பேற்பட்ட நித்யஸ்ரீநிவாஸரான நாராயணர் பிரேமை பக்தியினுல் கட்டப்பட்டு கௌஸல்யா தேவியின் மடியில் ஓடிவந்து உட்காருவார்.) (1080)

''அந்தக் குழந்தையினுடைய நீலக்கமலம் போன்ற நிறம், கம்பீரமானத் தோற்றம், அடர்ந்த கருமையான மேகத்தைப் போல் காயாம்பு நிறம். கோடிக் கோடிகளான காமதேவர்களின் சோபைகளின், ஏகமாத்திரமானக் குவியலாகவிருந்தது. மிக்கச் சிவப்பான பாத கமலங்களிலுள்ள நகங்களின் ஜோதிகள் சிவப்பு நிறமானதும் அப்போது அலர்ந்தத் தாமரைப்பூவின் தளத்தில் வீற்றிருக்கும் முத்துக்கள் போலவும் விளங்கின.'' (1081)

[தியானம்

ஹே ராமா ஜானகி, கிருஷ்ணு, நீதானே ஸநாதனமான தர்மம். நீதானே எல்லாத் தர்மங்களுக்கும் அப்பால் உள்ளவன்.

கீதையில் மோஹித்து, மலைத்துப்போன அர்ஜுனனுக்கும் மீண்டும் ராஜ்யாபிஷேகம் செய்துகொள்ள வந்த யுதிஷ்டிரருக்கும், காங்கேயரான பீஷ்மாச்சாரியார் கிருஷ்ணன் ஸநாதன தர்மம், அவரே உபாயம், அவரே பலன், அவரே புராண புருஷர், அவரே சர்ம ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட வாத்ஸல்யர், ஸ்வாமித்வம், சர்வ ஆதாரத்வம், அவரே அர்ச்சாவதாரத்தில் ஏற்பட்ட ஸௌலப்யம், ஸர்வாத்மா; அவரே அந்தர்யாமி, ஸகல விபூதிகளையும் உடைத்ததான ஸ்ரீயைத் தரிப்பவர், மஹா குரு என்று பலவிதமாகப் புகழ்ந்து சொன்னார். ஹே பிரபோ, லக்ஷ்மிநாதா, ஆஞ்சநேயர் வருடிய சரணகமலங்கள் உங்களுடையதுதானே, மஹா யோகிகள் ஆஸ்ரயிக்கும் புகழ்பெற்ற அச்யுதனுடைய திருவடித் தாமரைகள் உன்னுடையது தானே, சைலபுத்ரியான உமையும், மஹேஸ்வரரும் சதா தியானிக்கும் ஸ்வரூபகுண ஆத்ம விபூதியும் நீங்கள் தானே. நாரதர், கணேசர், தியாகராஜர், ஸனகர், ஆஞ்சநேயர் போன்ற மஹான்கள் தங்கள் மனதுகளில் தரிக்கும் பொற்பாதங்கள் உங்களுடையதின்றி வேறல்ல. சதா கொக்கு போல உன் தியானமும், மரம்போல அசைவின்றி உன் நாம ஜபமும், மீன்போல உன் அம்ருதமயமான குணகீர்த்தி சாகரத்தில் நீஞ்சுவதும், ஹம்ஸம்போல மாசற்றக் கீர்த்தியுள்ள உன் தாமரைக்காட்டில் நீந்தும் ஆனந்தத்தை அடைவேனாக. ஐயா, தயாபரா, நீயே எனக்குத் தாயும் தகப்பன். ஹே மாதவா, பாண்டவர்கள் திரௌபதியுடன் கிருஷ்ணனே ஸநாதனமான தர்மம் என்று உபாயமாக எண்ணி சரணம் அடைந்து ரக்ஷை பெற்றார்கள். மாசுச: என்கிற சொல்லின் பலத்தினால் தீரனான நான் மஹா விஸ்வாசத்தை அடைந்து கார்ப்பண்யனாக, புண்ணிய பாபங்கள் விலகி, அதனுடைய பலன்களிலும் ஒட்டிக்கொள்ளாமல் பிறந்தவண்ணமும் இறக்கும்தருவாயிலும் பிரணதார்த்திஹரா என்று சொல்ல சரணம் அடைந்தேன். லோபம், மோஹம், அவித்யை, அக்ஞானம், அவிவேகம், ஆசைகள், தாபங்கள், கிலேசங்கள் எல்லாவற்றையும் துறந்தும், சுத்த ஸத்வம், சுத்த ஞானம், சுத்த சேஷித்வம் என்கிற பாவனைகளையும் விட்டு, கர்மபக்தி, ஞானயோகம் ஆகியவைகளையும் விட்டு, இன்னும் அநேக யோக முறைகளையும் தியாகம் செய்து விட்டுவிட்டு உன் சரணே சரண் புகுந்தேன். அப்போதைக்கு இப்போதே ஸ்வாமி சொன்னேன். ஹே ஆஸ்ரித வாத்ஸல்ய ஜலதே, உன் பூர்ணமான கிருபை எனக்கு இருக்கட்டும். ஸத்ய ஸங்கல்பா, ஆபத்ஸகா, ஸ்ரீராமா, ஜானகிராமா,

கிருஷ்ண ராமா, ராமகிருஷ்ணு, லக்ஷ்மி நாராயணு, சரணம் சரணம்.]

"ஹே ராமா, உன் பாதங்களில் வஜ்ரம், த்வஜம் (கொடி), அங்குசம் இவைகளடங்கிய ரேகைகள் சோபையுடன் இருந்தன. அந்த நூபுரங்களின் சலங்கை த்வனியை மஹாமுனி கணங்கள் கேட்டு தங்கள் மனங்களை இழந்து, உன்னிடம் மோஹித்துப் போனுர்கள். இடுப்பில் கிங்கிணி என்கிற அரிணுள், உதரத்தில் அழகிய மூன்று மடிப்புக்கள்; நாபி ஆழமானதாயும் அதைப் பார்க்கும் பாக்கியமுள்ளவர்களுக்கு மாத்திரம் (பகவான் என்று சொல்லும்படி) நம்பக் கூடியதாகவுமிருந்தது." (அப்பேர்ப்பட்ட பகவான் எனக்கும் கிருபை செய்வாரா ?) (1082)

"ஆஜானபாஹுவான தீர்க்க புஜங்கள், (சரணமடைபவர்களைக் காக்கும் விசாலமான நீண்ட புஜங்கள்), அநேகவிதமாகப் பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டு பூர்ணமாகவிருந்தன. அவருடைய ஹ்ருதயத்தில் புலி நகங்கள் அடங்கிய மாலை ஒன்று சோபையைத் தந்தது. அவருடைய மார்பில் ரத்னங்களடங்கிய மணிப் பதக்கம், ஹாரங்கள் அதிக சோபையைத் தந்தன. அந்த மார்பில் பதிந்திருந்த விப்ரசரணமாகிய பிருகு மஹரிஷியின் பாதத்தைப் பார்க்கும் பாக்யம் படைத்தவர்களின் மனத்தை (பார்க்கப் பார்க்க திகட்டாத பேருருவம்) லோபம் அபஹரிப்பது போலிருந்தது." (1083)

"கழுத்துப் பிரதேசமாகிற அந்த கண்டமானது சங்கம் மாதிரி பருத்தும், நுனி சிறியதாகவும் மூன்று மடிப்புக்கள் உள்ளதாகவுமிருந்தது. அந்தத் தாடை ரொம்ப அழகாகவிருந்தது. அந்த வதனம் கணக்கற்ற மதன சுந்தரர்கள் குடிகொண்டது மாதிரி மிக்க வசீகரமாக விருந்தது. அவருடைய அழகான பல் வரிசைகளும் சிகப்பு நிறமான இரு உதடுகளும், அந்த மூக்கின் அழகையும், நெற்றியிலிருக்கும் அழகான திலகத்தின் சோபையையும், யார்தான் வர்ணிக்க முடியும் ?" (1084)

"அழகான காதுகள், மிக்க அழகான கன்னங்கள், மதுர மதுரமான, கிளி கொஞ்சுவதுபோல வார்த்தைகள்; பிறந்த உடனே வளர்ந்திருக்கும் குஞ்சிதமான மயிர் சுருள்கள். அவைகளைத் தாயாரான கௌஸல்யை அழகாக அலங்காரம் செய்திருந்தாள்." (1085)

"மஞ்சள் நிறமான பட்டுப் பீதாம்பரம் மேனியில் அலங்கரித்திருக்கிறது. அந்த அழகான பால ராமனுடைய கைகளாலும், கால்களாலும் செய்யப்பட்ட தவிழ்தல் என்கிற பால விளையாட்டு

என்னை மோஹிக்கும்படி யிருந்தது. அப்பப்பா, அந்த லாவண்ய சுந்தரத்தையும், அந்த ரூபத்தையும் வர்ணனை செய்வதற்கு வேதங்களால்தான் முடியுமா? ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷனால்தான் முடியுமா? எந்த மஹானுபாவன் எந்த அபார கிருபையினால் துர்யாவஸ்தையில் ஸ்வப்னத்திலே கண்டிருக்கிறானோ, அவனால் ஒருக்கால் முடியும். (அதிப்ரேமை வசத்தினால் யத்ருச்சையாக ஏற்பட்ட மஹானுபாவத்தை யாரால் வர்ணிக்க முடியும்? அதுவும் ஒரு தடவை பல கோடி பலகோடி ஜனங்களில் சேர்த்துவைத்த புண்ணியங்களின் ஏகமாத்திரப் பலனாக ஏற்பட்ட மஹானந்தத்தை யாரால்தான் சொல்ல முடியும்?)" (1086)

"அந்த பரபிரும்மத்தின் ஸ்வரூபம் சுகத்தின் குவியல். ஸந்தோஹ லக்ஷ்மியுடன் கூடிய பின்பு மோஹம் விலகிய ஞானம், அழகான வாணியாகிய சப்தபிரம்மத்திற்கும் இந்திரியங்களுக்கும் அப்பாற்பட்ட பாராபார வஸ்து. (அனுபவத்திற்கும் அனுமானத்திற்கும் மேற்பட்ட பொருள்.) அப்பேற்பட்ட கிருபாளுவாகிய பூர்ணரும் பரமாராதனத்தைப் பெறும் பகவான் அதிக பிரேமையின் வசம் அடைந்த அந்த ராஜ தம்பதிகளான தசரத கௌசல்யா தேவிக்கு ஒரு சாதரண குழந்தையைப்போல பாலலீலைகளைச் செய்துகொண்டு அவர்களுக்கு மட்டற்ற ஆனந்தத்தை உண்டுபண்ணினார். (1087)

[தியானம்

ஹே ராமா சீதா, சீதாமனோஹரா, ஸ்ரீகாந்தா, பூகாந்தா, உன்னை நமஸ்கரிக்கிறேன். ஸ்துதி செய்கிறேன். மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கிறேன். பராசரர், வியாஸர், நாரதர், பீஷ்மர், தர்மர் ஆகிய எல்லோரும் உன்னை புராணரிஷி யென்றும் ஸநாதன தர்மம் என்றும், யதঃ கிருஷ்ணঃ ததோ தர்மঃ யதঃ தர்மঃ ததோ ஜயঃ என்றும், ஜயலக்ஷ்மியை மார்பில் தரித்திருக்கும் தயா சாகரரான உம்மையும் பெரிய பிராட்டியையும் சதா புகழ்கிறார்கள். பூமிதேவியானவள் உன்னைச் சரணமடைந்து பல தடவைகள் காப்பாற்றப்பட்டாள். "மாதவி" என்கிற புகழ் பெயரையும் பெற்றாள். நாரதர் நாராயணருக்கு வேண்டியவர் என்று புராணங்களிலும், ஏகதர், த்விதர் திரிதர் ஆகியவர்களின் வசனங்களாலும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆஞ்சநேயர் மாதிரி தாஸ்ய பக்தி யாருக்கு இருக்கும்? தியாகராஜர் மாதிரி சிறந்த நாதயோகி ராம பக்தனாக யார் இருக்கமுடியும்? ஜனகரின் புத்ரியான தேவியே

"என்னிடம் என்ன குணம் இருக்கிறது, ராமன் வந்து மீட்டுக் கொள்வாரா" என்று சந்தேகப்பட்டு கலங்கியபோது, ஆஞ்சநேயர் பல வழிகளால் சொல்லி அவளைத் தேற்றினர், "அம்மா, நீ உன்னை சிறைப்படுத்திக்கொண்டு, தேவர்களையும், தேவர்களின் ஸ்திரீகளையும், அதன் பின் ராக்ஷஸர்களையும், திரிஜடை விபீஷணாதிகளையும், ராமதாஸரைகளையும், காப்பாற்றினுய். ராவணனுக்கு எவ்வளவு தடவைகள் நம: சப்தத்தின் அர்த்தத்தைச் சொன்னுய்?" அம்மா, எனக்கு இந்திரியம், மனம், வாக்கு, புத்தியினுல் கிரஹிக்கும் தன்மை, பெரியோர்களின் வார்த்தைகளில் நம்பிக்கை, அடங்குதல், ஆசரணை, சேர்க்கை, விஸ்வாசம், அதிருஷ்டவசமாகப் பெறுவது யாவும் ஒன்றும் இல்லை. பாபங்களை நிறையப் பெற்று லோபம், கோபம், ஹிம்ஸை, காமம், அவிவேகம், மாயை, பராதீனமான பிழைப்பு, பொருமை, வெட்கத்தை விடுவது, பொருள் நாசம், தர்ம நாசம் இவைகளால் யேற்படும் அடர்த்தியான க்லேசங்கள், ஈயாமை, குதர்க்கம், கெட்டவழிகளில் செல்லுதல், குலமதம், கல்விமதம், அழகின்மதம், தனமதம், த்ரோஹம், எல்லா பிராணிகளிடத்திலும் அவமதிப்பு, எல்லா பிராணிகளிடத்திலும் நம்பிக்கை இல்லாமை, கபடமாக இருப்பது, பிறர் பொருள்களை அவமதிப்பது, பிறர் தாரங்களை நினைப்பது, வாக்கின்வேகம், மனத்தின் வேகம், நிந்திப்பதின் வேகம், ரஹஸ்ய இந்திரியங்களின் வேகம், வயிற்றின் வேகம், அஸூயையின் வேகம், சொல்லத் தகாத பொய்யில் உள்ள வேகம், நாவின் வேகம், பொறுக்கமுடியாத செவியின் வேகம், ஆத்மஸ்துதி, பரநிந்தை, மத்ஸரம், எல்லாவிதமான ஸாஹஸங்களையும் செய்வது, செய்யத்தகாதவைகளைச் சொல்வது, செய்வது, நினைப்பது, தனக்குரிய காரியங்களைச் செய்யாமல் இருப்பது, சந்தோஷமடையாமல் சதா துக்கிப்பது இவைகளுக்குக் காரணமான லோபத்தை நான் எவ்விதம் ஜயிப்பேன்? ஸாதுக்களின் சங்கம் நல்லவழியில் திருத்தும் என்கிருர்கள். ஆசையும் அபிமானமும் விட்டவர்களும் நல்ல நியமங்கள் உள்ளவர்களும் பரலோகம் சென்று மீண்டும் இவ்வுலகிற்கு வந்துவிடுவோமோ என்கிற பயம் உள்ளவர்களும், பிரிய அப்ரிய வஸ்துக்களிலும் போக்கியத்திலும் ஆசையில்லாதவர்களும், அடக்கம் உள்ளவர்களும், பிறருக்குக் கொடுப்பவர்களும், பிரதி கிருஹம் இல்லாதவர்களும், தயைஸ்வரூபிகளும், பித்ருக்களிடமும் தேவதைகளிடமும், அதிதிகளிடமும், பக்தி உள்ளவர்களும், எப்போதும் முயற்சி செய்கிறவர்களும், பிறருக்கு உபகாரம் செய்கிறவர்

களும், யாவருக்கும் ரக்ஷகரும், வீரரும், எல்லாத் தர்மங்களுக்கும், பிராணிகளுக்கும் ஹிதராகவும், யாவற்றையும் வரையாமல் கொடுக்கும் தன்மை உள்ளவர்களும், தர்மத்தை லக்ஷணமாகக் கொண்டவர்களும், தர்மத்திற்கு வியவஸ்தை, வியவஹாரத்தைச் செய்யும் அசைக்க முடியாத திருடமான ஆசரணை, நம்பிக்கை, வீர்யம், சதா ஹரியைத் தியானம் பண்ணுகிறவர்களுமான பெரியோர்களை நான் ஆராதிக்கவில்லை. அப்பேற்பட்ட ஸாதுக் கள் செய்யும் தர்மமானது செய்யவேண்டியது, கடமை என்று எண்ணியே அவர்களால் செய்யப்படுகிறது. அதுமாதிரியே சரீரத்திற்குரிய காரியங்களும் செய்யப்படுகின்றன. அப்பேற் பட்ட தீரர்களான மஹாத்மாக்களை நான் ஆராதனம் செய்யும் பாக்யம் படைத்தவனில்லை. அவர்களின் சொற்கள் யாவும் தெய்வத்தின் அனுக்கிரஹத்தால் குணமுள்ளவைகளாக விருக் கும். மற்ற மூடர்களின் பேச்சுக்கள் அமங்களங்களைக் கொடுக்கும் என்கிற விஸ்வாசமும் வரமாட்டேன்கிறது. இப்படிப்பட்ட தோஷங்கள் நிறைந்த என்னை "ஹே ஸ்வாமி, எவ்விதம் உன் கருணையின்றி காப்பாற்ற முடியும்? य यमवैष वृणुते तेन लभ्य: என்கிற உபநிஷத் வாக்யம் ஒன்று இருக் கிறது. பரமபுருஷன் எந்த ஜீவனைத் தேர்ந்தெடுக்கிருனோ, அந்த ஜீவனால்தான் பரமபுருஷன் அடையத்தக்கவன் என்கிற பொருள் உள்ளது. அப்படி பரமபுருஷனாகிய நீ என்னை தேர்ந் தெடுப்பதற்கு என்னிடம் ஒரு விசேஷமான குணம் இல்லாத போனாலும், உன்னைப் போன்ற தயாளுவும் பிராட்டியைப் போன்ற மஹா அனுக்ரஹம் படைத்த மனத்தை உடையவளு மான இவ்வித இரண்டு பேர்களும் சேர்ந்து, ஏதாவது கால விசேஷத்தால் செய்யப்பட்ட வியாஜத்தால், என்னைப் பரிபூர்ண காமனாகச் செய்யமாட்டீர்களா? உன்னை அடைந்த ஆஞ்சநே யர், தியாகராஜர், சுகர், துளசிதாஸர் செய்த வழிகளில் என்னை நியமிக்கமாட்டாயா? நரன் என்ற பெயர் பெற்ற புராண ரிஷியின் அனுக்ரஹம் கிடைக்குமா? நாரதர் மஹா கிருபை செய்யமாட்டாரா? இந்திரன் அகஸ்தியர், சப்தரிஷிகள் துருவன், மனு, தர்மர், கஜேந்திரன், கோமாதா, மஹாஉரகன், கருடன் விஷ்வக்ஸேனர், உமா, சிவன் சரஸ்வதி கிருபை செய்யமாட்டார் களா? குஹன் உதவுவானா? ஒன்றுமே தெரியவில்லை. ராமா, நீதான் தயைபுரிய வேணும்.]

இந்த மாதிரி ஸம்பூர்ண ஜகத்திற்கு மாதாபிதாவாக விளங்கும் ஸ்ரீ ராமச்சந்திர பிரபு அந்த அயோத்தி நகரத்தில்

வசிக்கும் ஜனத்திரள்களுக்குச் சுகத்தை வாரி அளித்தார். சிவன் உமையிடம் சொன்னார் :— "எந்த அதிருஷ்ட ஜீவர்களுக்கு ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பாதகமலங்கள் சுகம் என்று நினைப்பிருக்கிறதோ, ஹே, பவானி, அந்த மஹாத்மாக்களுக்கு அப்பேற்பட்ட சிறந்த கதி கிடைக்கிறது. அம்மா, அந்த பரம்பொருள் பெரும் பாக்யத்தினால் தசரதகௌசல்யை ஆகிய இவர்களின் பிரேமைக்கு வசம் அடைந்து, பாலலீலைகள் செய்து, அவர்களுக்கு ஆனந்தம் கொடுத்தார்." (1088)

சிவன் பார்வதியிடம் மீண்டும் சொன்னார், "ஹே, பவானி, எந்த மூர்க்கன் ஸ்ரீ ராமச்சந்திரனை அலக்ஷ்யம் செய்து, விமுகனாக விருக்கிறானோ, அவன் கோடிக் கணக்கான உபாயங்கள் செய்துபார்க்கட்டுமே, இந்த சம்சார பந்தங்களை அவனால் விலக்க முடியுமா? அந்தப் பரம்பொருளான பரமாத்மாவிடம், சகல சராசரங்கள் அடங்கிய எல்லா ஜீவர்களையும் தன் வசத்தில் இழுத்து வைத்து சூத்திரப்பாவைப்போல நடத்திவரும் அந்த மாயைகூட (என் பிரபுவினிடத்தில்) மிக்கப் பயப்படுகிறது." (1089)

"அந்த பிரபு தன் புருவ விலாஸங்களால் மாயையை ஆட்டி நடத்திவைக்கிறான். இப்படிப்பட்ட மிக்க பிரதாபமுள்ள பிரபுவை விட்டுவிட்டு எவரைப் பஜிக்கவேண்டும்? நீயே சொல். ஹே, பவானி, மனம், கர்மம், வசனம் ஆகிய இவைகளில் ஒத்திருந்து, சதா ஹரி பஜனம் செய்து, ரகுராமனின் கீர்த்திகளைப் புகழ்ந்து, காலத்தை நடத்தும் மஹாத்மாக்களுக்கு அல்லவா அந்த ரகுகுல ஸ்ரேஷ்டன் கிருபைபுரிவான்?" (1090)

இந்தப் பிரகாரம் விநோதமாக பிரபுவான ஸ்ரீ ராமச்சந்திரன் பாலகிரீடைகளைச் செய்தார். அயோத்யாபுரியில் வசிக்கும் சகல ஜீவர்களும் சுகத்தை அடைந்தார்கள். மிக்க பாக்யமுள்ள கௌஸல்யை அந்த குழந்தையை மடியில் உட்கார வைத்துக் கொண்டு கொஞ்சுவாள். படுக்கையில் தூங்கவைப்பாள். ஊஞ்சலில் வைத்து ஆடிப்பாடி இன்புறுவாள். (1091)

[தியானம்

ஹே ராமா, சீதா, மஹேஸ்வர பிரியா, உன் ரூபம், மங்கள விக்ரஹம், உன் பாதங்கள், சகல ஸ்ரேஷ்டங்களைக் கொண்டன. ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தில் கண்ணபிரானுடைய திருவாக்கினால் உபாயமாக (நீயே தர்மம், நீயே ஸித்தோபாயம், நீயே ஸாத்யோபாயம்) (நம்மால் செய்யப்படுவதற்கு உரிய உபாயம்), நீயே பக்தி யோகம், நீயே பிரபக்தி யோகம் என்று விதிக்கப்பட்டிருக்கிறாய்,

என்று ஸ்வயமாக அருள் செய்தீர். இப்பேற்பட்ட ஸித்தோபாய மான எம்பெருமானுகிய நீர், அழுக்கடைந்து, ஒளி மங்கின ரத் னம் அழுக்கு நீங்கின பின்பு மீண்டும் சுடர்விட்டு எரிவது போல, என்னையும் உன் கருணையாகிற சங்கல்பத்திஞல் ஆட்கொள்ள வேண்டும். பிராட்டியிடம் ஆஞ்சநேயர் விண்ணப்பம் செய்தது போல, மஹாத்மாவான நரசிம்மஞன உன்னிடம், அதிக பாப முள்ள என்போன்ற தீன ஜந்துவையும் (சுக்ரீவனை வானரம் என்று தள்ளாமல், அவனுடன் ஸஹஜமான ஸ்நேக ஐக்யம் செய் தது போலவும், ஆஞ்சநேயரைக் குரங்கு என்று நினைக்காமல் சீதாப்பிராட்டி அவரிடம் அந்தரங்க விஷயங்களை தன் பதிக்குச் சொல்லி அவரை ஆஸ்வாசப்படுத்தவும்) காப்பாற்றவேண்டும். நீ ஸர்வ ரக்ஷணம் என்கிறதை யாகமாகக்கொண்டு தீக்ஷையாகப் பெற்றிருக்கிருய். யக்ஞபதி யென்றும் ஜகத்பதி என்றும் சொல்லப்படுகிருய். இந்த வேள்வியில் பெரிய பிராட்டி யக்ஞ பத்னியாகவும், தக்ஷிணையாகவும் தீக்ஷையாகவும், ஸங்கல்ப மாகவுமிருக்கிருள். புருஷகாரம் செய்த என் ஆத்மாவை நீங்கள் இருவரும் அங்கீகரிக்கவேண்டும். உமா, பெரிய பிராட்டியிட மும், மஹேஸ்வரரே, நீர் ராமரிடமும் சொல்லமாட்டீர்களா? ஆதித்யா, உன் குலத்தில் தோன்றின ரகுராமனிடம் நீயாவது சொல்லமாட்டாயா? பத்மா, நீயும் சிபார்சு பண்ணமாட்டாயா? அப்பேற்பட்ட ஸ்ரீ ராமனிடம் அச்யுத பக்தியை எக்காலத்திலும் எனக்குக் கொடுக்கவேண்டும்.]

"ஆனந்தப் பிரேமையினுல் மக்னப்பட்ட கௌஸல்யா தேவியானவள் நாட்கள் போனதை அறியவில்லை. புத்ரனிடம் ஸ்நேகபாசம்பூண்டு அந்த மஹாபாக்கியவதி பாலராமனின் லீலைகளை கவனமாகக் கானம் செய்தாள்." (1092)

"ஒரு நாள் தாயாரான கௌஸல்யாதேவி குழந்தைக்கு ஸ்நானம் செய்வித்தாள். பிறகு ஸ்ருங்காரம் செய்தாள். பிறகு தொட்டிலில் (ஜூலாவில்) வைத்துத் தாலாட்டித் தூங்க வைத் தாள். பிறகு தன் குலதெய்வமான நாராயணனுக்குப் பூஜை செய்வதற்கு ஸ்நானம் செய்தாள்." (1093)

"ரங்கநாதனை ஆராதனை செய்தபின், நைவேத்யம் அர்ப்ப ணம் செய்வதற்கு சமையல் அறைக்குச் சென்றுள். அதன் பிறகு மாதாவான கௌஸல்யை பூஜாபீடத்திற்கு வந்து, தன் இஷ்ட தேவதையை நமஸ்கரித்து, நைவேத்யம் காண்பித்த சமயம் தன் குழந்தை அதை சாப்பிடுவதைக் கண்டாள்." (1094)

"மாதாவான கௌஸல்யை பயமடைந்து, கலக்கம் அடைந்தாள். ஊஞ்சலில் தூங்கும் குழந்தை இங்கே எவ்விதம் வந்தது? ஆகவே சந்தேகம்கொண்டு, புத்ரனிடம் சென்று பார்த்தாள். புத்ரன் நன்ருகத் தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டாள். பூஜாஸ்தானத்தில் அந்த பாலகன் நன்ருகச் சாப்பிடுவதை மீண்டும் பார்த்தாள். ஹ்ருதயத்தில் ஒரே நடுக்கம்யேற்பட்டது. மனத்தில் தைரியமில்லை." (1095)

"அவள் தனக்குள் யோசனை செய்ய ஆரம்பித்தாள். இங்கே, அங்கே ஆகிய இரு இடங்களில் எவ்விதம் இரு பாலகர்கள் தோன்ற முடியும்? என் மதி பிரமம் அடைந்த காரணமாகவா அல்லது ஏதாவது விசேஷமாக ஒரு காரணம் இதற்கு இருக்கக் கூடுமா? பிரபுவான ஸ்ரீராமச்சந்திரன் தன் தாயாரின் வியர்வை நிரம்பின வதனத்தையும், பெருமூச்சையும், ஆனந்த கலவரத்தையும் பயத்தையும் கொண்ட தாயாரின் முகத்தைப் பார்த்து, பிரபு தன் சிறிய வாயினுல் மந்தஹாஸம் செய்தார்." (1096)

"பார்த்தாள், பார்த்தாள், அந்தச் சிறிய வாயில் அகண்ட அத்புத ரூபத்தை, புருஷ ஸூக்த பிரபாவமான மங்களரூபத்தை, கோடிக் கோடிக்களான பிரும்மாண்டங்கள் ஒவ்வொரு ரோமக் காலிலும் வீற்றிருப்பதைப் பார்த்தாள், கௌஸல்யா தேவி, மஹாபாக்யவதி." (1097)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, நாராயணு மஹாலக்ஷ்மி, உன் கிருபையும் பாதசேவையும் உன் மனதிருப்தியும் உன் பக்தியும் சதா வேண்டும். அப்பா, உன் பாதகமலங்கள் எவ்வளவு பரிசுத்தமானவை? உன் பாத ரஜஸ்ஸினுல் அஹல்யை போன்ற ஸ்திரிக்குப் பாபம் விலகி, அவளுக்குக் கணவனிடம் மீண்டும் சேர்க்கையை அளித்தது. பரிக்ஷித் மஹாராஜன் உயிர்பெற்ருன். கிருஷ்ணுவதாரத்தில் குழந்தையாகவிருக்கும்போது சகடாசூரனை உதைத்து உன் பாதம் உன் திருமேனியைக் காப்பாற்றியது. திருவிக்ரம அவதாரத்தில் கங்கையை உற்பத்தி பண்ணிய புண்ணிய ஸ்தலமாக விளங்கியது. பாண்டவர்களுக்காக தூது சென்ற திருக்கால்களும், அர்ஜுனனுக்குச் சாரத்யம் செய்து தேர் தட்டில் நின்ற கால்களும், பாகவதர்களின் மனங்களைப் பரிசுத்தம் செய்யும் திவ்யசரணங்களை நான் எப்போதும் அண்டியிருப்பேனுக. ஆஞ்சநேயரும், பரதனும் நாடிய உன் பாதகமலங்களை நான் சதா ஆஸ்ரயிக்கவேண்டும். நீயே பர

  

மார்த்திகமான வஸ்து. என் பொருளும், தபஸ்ஸும் என் ஆத்ம பலமும் நீயே. துளசிதாஸர் போற்றும் திவ்ய பரமான வஸ்துவும் நீயே.]

"அகணிதமான சூரியர்கள், சந்திரர்கள், சிவபெருமான்கள், பிரும்மாக்கள், இன்னும் அநேக பெரிய பர்வதங்கள் நதிகள், ஸமுத்திரங்கள், பூமியில் காடுகள், காலபுருஷர்கள், சத் அசத் கர்மங்கள், ஞான ஐஸ்வரியங்கள், மேன்மையான ஸ்வபாவிகமான குணங்கள், இன்னும் கணக்கில்லாத பதார்த்தங்களைக் கண்டாள், புண்யவதியான கௌஸல்யாதேவி. எவைகளைக் கேட்டிருக்கிறுளோ, எவைகளைப் பார்த்திருக்கிறுளோ அவைகளையும், இதுவரை கேட்கப்படாததும், பார்க்கப்படாததுமான அநேக நூதன பதார்த்தங்களையும் கண்டாள்." (1098)

"எல்லாவிதங்களிலும் மிக்கப் பலமாகவுள்ள மாயையும் பார்த்தாள். எப்படிப்பார்த்தாள் தெரியுமா? அந்த மாயையானவள் கை கால்களை கட்டிக்கொண்டு, அஞ்சலி செய்து கொண்டு, பகவானிடம் அத்யந்த பயத்துடனும் அவருடைய ஆக்ஞையை எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள். மாயையினுல் ஆட்டிவைக்கப்படும் ஜீவனையும் கண்டாள். பரபக்தி ஸ்வபாவத்தையும், எந்த பக்தியினுல் ஜீவன் சுத்தமடைந்துபோவதுமான பிரேமா பக்தியையும் கண்டார்." (1099)

"அவளுடைய உடம்பு புல்லரித்தது. முகத்திலிருந்து வார்த்தைகள் ஒன்றும் வெளிவரவில்லை. அவளுடைய கண்களிலிருந்து ஆனந்தப் பெருக்கால் உண்டான கண்ணீர் துளிகள் ஸ்ரீராமச்சந்திரனுடைய சரண கமலங்களில் விழுந்தன. தன்னை நமஸ்கரித்த மாதாவின் கலவரத்தையும், ஆனந்தத்தையும் கண்டு, கரனைக் கொன்ற கராரி மீண்டும் பால ரூபத்தை அடைந்தார்." (1100)

"மிக்கப் பயத்தை அடைந்த அந்த கௌஸல்யா தேவியினுல் ஸ்துதி ஒன்றும் செய்ய முடியவில்லை. ரொம்ப பயமடைந்து போய்விட்டாள். பாவம், "நான் ஜகத் பிதாவான பரமபுருஷனை என் குழந்தை என்று நினைத்துவிட்டேன்," என்கிற காரணத்தினுல் மிக்கக் கலவரம் அபிமானத்தால் அடைந்துவிட்டிருந்தாள். அந்த ஸ்ரீஹரியானவர் பலவிதமாக தன்னை அறிமுகப்படுத்தினர், அவளிடம் சொன்னர் "ஹே, மாதா, கேளு, இந்த விஷயத்தை நீ யாரிடமும் சொல்லவேண்டாம்" (1101)

அடிக்கடி அடிக்கடி கௌஸல்யா தேவி வினயத்துடன் சொன்னுள், "ஹே, பிரபோ, என்னிடம் உம்முடைய மாயை

யைப் பிரயோகித்து, என்னை மோஹமடையச் செய்யாதீர்.'' (1102)

[தியானம்

ஹே ராமா, சீதா ஜனகரின் செல்வப் புத்ரியே, விஸ்வ பிரபு, ஈசரே, மஹேஸ்வரரே, சகல சித் அசித் அடங்கிய ஜகத்திற்கு அந்தர்யாமியாக விளங்கும் ஈசரே, உம்மை ஈசாவாஸ்ய உபநிஷத்துக்கள் போன்ற வேதங்கள் வியாப்ய நாராயணன் என்றும், பிரும்மா, ருத்ரர், இந்திரன், ரிஷிகள் முதலிய தேவர்கள் ஸர்வ விபூதிகளுமடங்கிய மஹாலக்ஷ்மிக்கு அதிபரென்றும், நாராயணர் என்றும், ஆதிபுருஷர் என்றும், அஸகாய சூரன் என்றும் சுலபமாகப் பிரபத்தி யோகத்தால் அடையக்கூடியவ ரென்றும், மஹாகாலர் என்றும், அர்ச்சாவதாரங்களாகிற ராமகிருஷ்ண விக்ரஹங்களில் தேவர்கள் முதல் பூஜை செய் கிறார்கள் என்றும் ஸத்ய சங்கல்பராகவும், சொல்லுகிறார்கள். அப்பேற்பட்ட மஹாபுருஷனாகிய நீர், மஹா விரதத்துடன் தசரதர் சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்ற வனம் சென்ற சமயம், உன் அந்தரங்க சேகவனான லக்ஷ்மணன் இரவிலும் முழித்துக்கொண்டு, உனக்கு முன் சென்று, உன் சுகத்திற் காகவும் ஜானகியினுடைய சுகத்திற்காகவும் கைங்கரியம் செய்வதாகச் சொல்லி உம்மோடு காட்டிற்கு வந்தார். இன்னொரு அம்சமாகிய பரதாழ்வார் பகவத் கைங்கர்யம், என்று சொல்லக் கூடிய உன் பாதரக்ஷைகளை தன் தலையில் வைத்துக்கொண்டு அயோத்திக்கு வந்து அதற்கு ராஜ்யாபிஷேகம் செய்து, சத்ருக்ன னுடன் பதினான்கு வருஷங்கள் உமக்காக ராஜ்யபாரம் செய் தான். மஹாலக்ஷ்மியின் வந்தனத்தைப் பெற்ற அந்த பாதுகைகள் அயோத்தியில் நடைபெற்ற அபிஷேக தீர்த்தங் களின் பிரபாவத்தால், ராமனால் அஸ்திரம் போடப்பட்ட சமுத்திரராஜன் முதல் அதில் வசிக்கும் பிராணிகள் உள்பட யாவரும் ஒருவிதமான தீங்கும் பெறவில்லை. இவ்விதமாக உன் சங்கல்பத்தால் நான்கு அம்சங்களாக மஹாபாக்யவானான நாரா யணர், பகவத் கைங்கரியம், பாகவத கைங்கர்யம், ஸகலலோக ஹிதம் என்று நடத்திக்காட்டிய ராம நாடகத்தில் எவ்வளவு அவதார ரஹஸ்யங்கள் ரத்னங்கள்போல பதிந்திருக்கின்றன. அப்பேற்பட்ட ரஹஸ்யங்களை அறிய என்னுடைய வைஷ்ணவ ஆசாரியர்கள் லோகத்தின் பரம உபகாரத்திற்காக எவ்வளவு பாடுபட்டிருக்கின்றனர். ராமானுஜர் முதல் இன்றும் எவ்வளவு

பாகவத பிரியர்கள் இருக்கிறார்களோ, அவர்கள் அனைவருக்கும் நான் பரமபிரீதியுடனும் தியாகராஜர், துளசிதாஸர் சுகர், பராசரர், வியாஸர், மார்க்கண்டேயர், மஹேஸ்வரர், உமா, பிரும்மா, ஸரஸ்வதி, நாரதர், எல்லோரையும் முன்கூட்டி நான் நமஸ்கரிக்கிறேன். அவர்கள்தான் என்மீது தயை செய்ய வேண்டும். பரமபிரீதியுடன் என்னிடம் இருக்கவேண்டும்.]

"இவ்விதமாக ஸ்ரீஹரி பகவான் பலவிதமாக பால லீலைகளைச் செய்தார். தன்னுடைய சேவகர்களுக்கு அதிக ஆனந்தத்தைக் கொடுத்தார். இவ்விதமாக பல நாட்கள் கழிந்தன. நான்கு குமாரர்களும் பெரியவர்களாக வளர்ந்து, தங்களுடைய பரிஜனங்களுக்கு ஆனந்தத்தை அளித்தார்கள்." (1103)

"ஒரு நாள் குருவினுடைய ஆக்ஞைப்படி குழந்தைகளுக்கு பல ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டன. முடி வெட்டுதல், அன்னபிராசனம் முதலியவைகள் நடந்தன. பிராம்மணர்கள் நிறைய தக்ஷிணைகளைப் பெற்றார்கள். அந்த சுகுமாரர்களான குழந்தைகள் பரமமனோகரமாக அபாரமான சரித்திர விசேஷங்கள் நிறைந்த லீலைகளைச் செய்தார்கள்." (1104)

"மஹத்தான விசால அறிவு, பக்தி, ஞானம், பகவத் அம்சங்கள் நிறைந்த மனம், வாக்கு, கர்மங்களுக்கும் அப்பால் நிற்கும் அகோசரமான பிரபு மஹாபுண்யவானான தசரத மஹாராஜரின் வீட்டின் உட்புறத்தில் விளையாடி, ஆனந்தம் அடைந்தார். போஜனம் அருந்தும் சமயம் ராஜாவின் கூப்பிடுதலுக்கு ஓடி வராமல், தன் பால சகாக்களுடன் விளையாடி வந்தார்." (1105)

"மாதாவான கௌஸல்யை கூப்பிடும் சமயம் ஓடி ஒளிந்து கொண்டு அவளுக்கும் ஏமாற்றம் செய்தார். எந்த விராட் புருஷனை வேதங்கள், நாதபிரும்ம சப்தங்கள், அகோசரமாகச் சொல்லியும் முடிவு அடையாதபடி (நேதி, நேதி) என்று நிரூபணம் செய்யமுடியாதோ, எந்த ஸர்வக்ஞான பரமேஸ்வரர், உமையின் அந்தரங்கக் கணவரான மஹாதேவரால் மட்டும் பூராவும் நன்கு அறியப்பட்டும் பிறருக்குச் சொல்ல முடியாதபடி தனியாகத் தனித்து விளங்கும் பரமாத்மாவாக விளங்குகிறாரோ, அந்த பிரபு கௌஸல்யையின் ஓடுதலுக்கும் பிடித்துக்கொள்வதற்கும் அடங்காமல் பிடிவாதமாக ஓடிவிடுவார்." (1106)

"இன்னொரு சமயம் அந்த ராமபிரபு ஒரே தூசியாக அழுக்கடைந்து விளங்கும் திருமேனியுடன் சிரித்துக்கொண்டு பூபதியான தசரதரின் மடியில் வந்து உட்காருவார்." (1107)

"போஜனம் செய்யும் சமயம் ஏதாவது வியாஜமாக சபல சித்தத்துடன் ஓடிவிடுவார். அவருடைய வாயெல்லாம் தயிர் சாதம் எல்லாம் அலம்பாமல் அப்படியே ஒட்டிக்கொண்டு இருக்கும்." (1108)

[தியானம்

ஹே ராமா, சீதாஜானகி, அம்புஜாக்ஷி, புஷ்கராக்ஷா, ஸுலோசனா, உன்னைத் தத்வத்திற்கு தத்வமாகவும், போகத்திற்கு போகமாயும், மோக்ஷமாகவும் சொல்லப்படுகிறது. முற்காலத்தில் பொருளை அடையத்தக்கதான வழியானது, மித்ரனும், கல்வியும், பொருளும், அறிஞர்கள் விரும்பத்தக்கும் புத்தியும், என நான்கு வகைப்படும், என்று பிரஹஸ்பதி கூறியிருக்கிறார். அதில் மித்ரத்தன்மை ரொம்ப சிலாகிக்கத்தக்கது. மித்ரனுக்குத் துரோஹம் செய்பவர்களின் மாம்ஸங்களை எந்த பிராணியும் புஜிக்கிறதில்லை. நன்றிக் கொன்றவனுக்கு பிரும்மஹத்தி தோஷமும், பிராயசித்தமும் கிடையாது என்று ஸாதுக்கள் சொல்கிறார்கள். ஆகையால் நன்றி அறிவுள்ளவன் மித்ரதன்மையுடன் இருக்கவேண்டும். மித்ரன் சிறந்த பாக்யம் என்றும், தனலாபத்தைவிட சிறந்தவனாகிறான் என்று சொல்லப்படுகிறான். ஸாதுக்களின் சேர்க்கையைப்பற்றியும் மித்ரர்களைப் பற்றிய நல்ல அறிவும் மஹாத்மாக்களின் வசனங்களையும் கருணைக்கடலாகிய நீர் எனக்கு அளிக்கவேண்டும். அவர்களுடைய முயற்சியினால் உன் பெரும் பதத்தை நான் அடையவேண்டும். உனக்குச் சதா மித்ரனாகவும், துரோஹம் செய்யும் ஸ்வபாவம் இல்லாமலும், உன் கைங்கரியங்களுக்கு ஹித புருஷனாக என்னை நீயும் ஜானகியும், நாராயணா, லக்ஷ்மிபதி, கருணையுடன் ஆட்கொள்ள வேண்டும். காமதேனு, இந்திரன், ஹம்ஸம், பிரும்மா, பரமபாகவதனான அர்ஜுனன், துருவர், பீஷ்மர் திரௌபதி, அனுகிரஹிக்க வேண்டும்.]

பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனுடைய அத்புதமான பால லீலைகளை மிக்க சரளமாக துளசிதாஸர் சொன்னார். இந்த லீலைகளை சாரதாதேவி, சேஷபகவான், சம்பு, வேதங்கள் ரொம்ப மதுரமாக கீர்த்தனம் செய்திருக்கிறார்கள். எந்த அபாக்யவானான மனிதர்கள் இப்பேற்பட்ட லீலாவிலாஸங்களில் மனம் ஈடுபாடு உள்ளவர்களாகவில்லையோ, அந்த மனுஷ்யர்கள் தங்களை பிரும்மாவினால் வஞ்சிக்கப்பட்டவர்கள் என்று நினைத்துக்கொள்ள வேண்டும். (1109)

எந்த சமயத்தில் அந்த பாலர்கள் குமாரப் பருவம் அடைந்தார்களோ, அப்போது அவர்களுடைய குருவும், மாதாபிதாவும் அவர்களுக்கு யக்ஞோபவீததாரணம் செய்து வைத்தார்கள். பிறகு அவர்கள் குருவின் கிரஹத்திற்குச் சென்று வித்யைகளைக் கற்றார்கள். ஸ்ரீ ரகுநாதன், அவருடைய பிராதாக்கள் ஆகிய அனைவரும் சிறிய காலத்தில் எல்லா வித்யைகளையும் சரிவரப் பயின்றார்கள். (1110)

எந்த பிரபுவுக்கு நான்கு வேதங்களும் மூச்சுக் காற்றுக்களோ, அப்பேற்பட்ட ஸ்ரீ ஹரிபகவான் ஸஹஜமாகவும், ஆனந்தத்துடனும் சுலபமாகவும் எல்லா வேதங்களையும் கற்றார். அந்த ராஜ குமாரர்கள் வித்யைகளைக் கற்றுக் கொண்டு மிக்க வினயத்துடன் நடந்துகொண்டு, நிபுணர்களாக மாறி, சத்ய, தம சீலகுண சீலர்களாகி ஆகி, அதன் பிறகு அரசர்களுக்குத் தேவையான இதர விதமான வித்யைகளிலும் தேர்ச்சியை அடைந்தார்கள். (1111)

பகவான் கோதண்டராமனாக, தன் மிருதுவான கைகளில் வில்லைப் பிடித்துக் கொண்டு அம்பு பயிலும் சோபையில் சகல சராசரங்களும் மோஹமடைந்தன. அந்த நான்கு ராஜ குமாரர்கள் எந்த எந்த தெருக்களில் ஓடி விளையாடினார்களோ, அந்த வீதிகளில் சகல விதமான ஸ்திரி புருஷர்கள் அவர்களைக் கண்டு ஸ்நேகத்தினால் கட்டுப்பட்டு, அவர்களின் விளையாட்டுக்களை மிக்க களிப்புடன் ரசித்து ஆனந்தித்தார்கள். (1112)

அந்த கோசலபுரி வாசிகளான நரநாரிகள், விருத்தர்கள், பாலகர்கள், சகலவிதமான பிராணிகளும் கிருபாளுவான ஸ்ரீராமனை தங்கள் பிராணன்களை விட நேசித்தார்கள். (1113)

ஸ்ரீ ராமன் தன் பிராதாக்களையும் இஷ்டமித்ரர்களையும் கூப்பிட்டு அவர்களுடன் நித்யம் வனத்திற்குச் சென்று மிருக வேட்டை ஆடினார். அந்த மிருகங்கள் ராமனால் கொல்லப்பட்டு பவித்திரமாக மாறின. கொல்லப்பட்ட மிருகங்களை ராஜாவான தசரதருக்கு தினமும் காண்பிப்பதற்கு ராமர் எடுத்துக் கொண்டு வருவார். (1114)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, லக்ஷ்மி நாராயணா, என் பாபங்கள், என் ஆசைகள், என் இதர தாபங்கள், உன்னிடம் வரமுடியாமல் என்னுடைய அனன்ய கதியைக் கெடுத்து விட்டன. நீ பரம புருஷார்த்தம் என்று தெரிந்தும், என் கர்ம வினைகள் உன்னை

அடையவிடாமல் விக்னங்களாக விருக்கின்றன. என் பக்திக்கும் கண் எச்சில் வந்துவிட்டதப்பா. உன் கருணை எனக்கு இருக்கக் கூடாதா? முன்பு தர்ம அர்த்த காமமோக்ஷம் இவைகளில் விவாதம் நடந்த சமயம், யுதிஷ்டிரர் மோக்ஷமே சிறந்தது என்று சொன்னார். எந்த மனிதன் பாபத்திலும், புண்யத்திலும், பொருளிலும், தர்மத்திலும், காமத்திலும், பற்றுதல் இல்லாத வனாகவும், தோஷங்கள் விடுபட்டவனாகவும், ஸாராஸாரங்களை ஸமமாகக் கொண்டவனும், ஸித்தியுள்ளவனுமாகவிருக்கிறானோ, அந்த மனிதன் சுகதுக்கங்களிலிருந்து விடுபடுகிறான். பிறப்பு, இறப்பு கிழத்தனம் போன்ற விகாரங்கள் நீங்கினவனாகி பெரியோர்களால் சிலாகிக்கப்பட்ட மோக்ஷபதத்தை அடைகிறான். பூஜ்யரான பிரும்மதேவர், ஸ்நேகத்தினால் கட்டுப்பட்ட வனுக்கு மோக்ஷமில்லை என்று சொன்னார். ஆகையால் ஆசைப் படாமல், பிரியத்தையும் அபிரியத்தையும் செய்து கொள்ளாமல், விதியால் நான் ஏவப்பட்டவன், என்னைவிட விதி பலமானது, எது வரக்கூடியதோ, அது கட்டாயம் வருவது என்று நினைத்து, அறம் பொருள் காமங்களை விட்டு, மோக்ஷமாகிய உன் பதத்தை அப்பேற்பட்டவன் அடைகிறான். ஆகையால் மோக்ஷமானது உலகங்களின் நன்மைக்காகவும் காரணமான ரஹஸ்யமாகும் என்று சொன்னார். அப்பேற்பட்ட மோக்ஷபதத்தை உன் கருணை யினால் நான் அடையவேண்டும்.]

எந்த மிருகங்கள் ஸ்ரீ ராமனுடைய பாணங்களால் கொல்லப் பட்டனவோ, அவைகள் தங்கள் பௌதிக தேகங்களை நீக்கி, தேவலோகத்திற்குச் சென்றன. அந்த பிரபு தன் இளைய சகோதரர்களுக்கும் சகாக்களுக்கும் போஜனம் செய்வித்து, தன் தந்தையர்களின் ஆக்ஞைகளையும் நிறைவேற்றினார். (1115)

எந்த விதம் நகரத்து ஜனங்கள் சுகமடைவார்களோ, அவ் விதம் கிருபாநிதியாகிய பகவான் லீலைகளைச் செய்தார். பிரபு தன் மனத்தை வேத புராணங்களில் ஈடுபடச் செய்து, அதன் ரஹஸ்யங்களை தானே ஸ்வயமாக தன் பிராதாக்களுக்குச் சொல்வார். (1116)

அதிகாலையில் எழுந்திருந்து, மாதா, பிதா, குரு, இவர்களை வந்தனம் செய்துவிட்டு அவர்களின் ஆக்ஞைகளையும் நகரத்தின் வேலைகளையும் செய்து வந்தார். அவருடைய புண்யமான வாழ்க்கையின் நடவடிக்கைகளைக் கண்டு அரசர் மிக்க சந்தோஷ மடைந்தார். (1117)

எந்த பரமாத்மா ஸகல வியாபகரோ, பூர்ணமான பொருளோ, ஸர்வ ஸ்வதந்திரரோ, ரூபம் நாமம் இவைகளால் பூர்ணமாக நிர்ணயிக்கப்படாமல் அப்பால் இருக்கும் ஸ்வாமி யானவர், பக்தர்களின் பிரியத்திற்காக அநேக அபூர்வமான காரியங்களைச் செய்தார். (1118)

இப்பேற்பட்ட ருசிகரமான சரித்திரத்தை நான் (துளசி தாஸர் சொல்லியபடி) பாடினேன். சம்பு உமையிடம் சொல் கிறார். "இப்போது மேலே நடந்த கதையை மனப்பூர்வமாகக் கேளு. மஹா முனிவராகிய விஸ்வாமித்திரர் காட்டில் அழகா னதும் சுபமானதுமான ஆஸ்ரமம் ஒன்று கட்டி வாழ்ந்து வந்தார்." (1119)

"அந்த விடத்தில் அந்த பரமயோகியான ரிஷி ஜபம், யக்ஞம், தபஸ், யோகம் எல்லாம் செய்து வந்தார். ஆனால் மாரீசன் ஸுபாஹு ஆகிய ராக்ஷஸர்களிடமிருந்து அவருடைய யாகத்திற்கு இன்னல்கள் ஏற்பட்டன. அதனால் அவர் பயமடைந் திருந்தார். அவர்கள் யாகத்தைக் கெடுத்து, அவருக்கு உபத்ரவம் செய்து அவரை துக்கத்தில் ஆழ்த்தினார்கள்." (1120)

[தியானம்

அம்மா ஜானகி நாராயணப்ரியே, ஹரிலக்ஷ்மி, மோக்ஷ, ஸந்தான காருண்ய, தனதான்ய, ஆரோக்ய, கீர்த்தி, த்ருதி, ஞானலக்ஷ்மி, உன் பதியான ஸ்ரீராமசந்திரன் உனக்கும் ஸர்வ பிரபஞ்சத்திற்கும் ஒரே சேஷி. பகவானுக்கு தாஸ்யமாக விருத்தல் என்கிற ஸ்வரூபம் உள்ளவனாகை விருக்கும் என்னை, பரமதயாளுவான நீ பகவானிடம் புருஷகாரம் செய்து "என் குற்றங்களை மன்னிக்கும் படி செய்து, என் பாபங்களையும், தோஷங்களையும் விலக்கி என் போன்ற சேதனர்களுக்கும், பகவானுடைய ஸ்வாபாவிகமான கருணையைத் திருப்பி ஆத்ம ஸமர்ப்பணம் என்கிற ஹவிஸ்ஸைச் செய்யச்செய்து காரணந்திர மின்றி உத்தேசிக்கப்படும் தன்மையை அடையும்படி உங்கள் இருவர்களுடைய பாதசரணங்களை, வஸிஷ்டர், விஸ்வாமித்ரர், பராசரர், வேதவ்யாஸர், சுகர், யாக்ஞ்யவல்கியர், சம்பு, கருடன், அனந்தன், இந்திரன், நாரதர், விஷ்வக்ஸேனர், கண்டாவதார மான பெருமாள் மணி, உமை, ஆஞ்சநேயர், தியாகராஜர், குமாரக் கடவுள், வால்மீகி போன்ற மஹாத்மாக்களால் செய்யப் படும் ஸ்தோத்திரங்களாலும், வேதங்களால் தேடப்படும் உங்கள் இருவர்களுடைய மகிமைகள், கீர்த்தி ஆனந்த விலாஸங்கள்,

கருணை ரஸம் பொங்கும் உத்ஸாஹம் ஆகியவற்றைக் கொடுக்கும் புண்ய ஸ்ரவணங்கள் என் மனத்தில் சதாநர்த்தனம் செய்ய வேண்டும் என்று மீண்டும் மீண்டும் நமஸ்கரித்துப் பிரார்த்திக்கிறேன். என் குலநாதரான விஸ்வாமித்ரர் என்கிற கௌசிகர் பரம கிருபை செய்யவேண்டும். சாவித்திரிதேவி அருள் புரிய வேண்டும். மஹாத்மாக்களான ஆசார்யர்கள் எனக்கு அருள் புரிய வேண்டும்.]

"காதிராஜனின் தனயரான (விஸ்வபந்து என்று போற்றப் படும்) விஸ்வாமித்ரர் மனதில் எண்ணமிட்டார். இந்த பாபி ராக்ஷஸர்கள் பகவானுல்தான் கொல்லப்படத் தக்கவர்கள். இந்தவிதமாக பூமிக்கு ஏற்பட்டிருக்கிற பாரத்தை ஒழிப்பதற்குத் தான் பிரபுவான ஹரிபகவான் அவதாரம் செய்திருக்கிறுர் என்று ஸ்ரேஷ்டமான முனிவர் ஆலோசித்தார்." (1121)

"இந்தக் காரணத்தைக் கொண்டு நான் அந்த திவ்யமான புருஷனின் சரண கமலங்களை தரிசனம் செய்து, வினயத்துடன் என் குறைகளை நிவேதனம் செய்து, அந்த இரு சஹோதரர் களையும் இங்கு அழைத்து வருவேன்." "அடே அப்பா, எது பரம ஞானமோ, எவர் வைராக்யம், சகலவித ஸ்ரேஷ்ட குணங் களின் சிறந்த ரத்ன குவியலோ, அந்த சியாமசுந்தர அங்கங்கள் படைத்த அந்த திவ்யமங்கள ரூபத்தை, திவ்யமங்களஸ்வரூப விக்ரஹத்தை நான் என் விசாலமான நேத்ரங்கள் நிறம்பும்படி பார்த்து ஆனந்தமடைவேனு?" (1122)

"பலவிதமாக தீர ஆலோசித்து பிறகு, "எவ்விதமாக என் மனோரதத்தை எவ்வளவு சீக்கிரம் பூர்த்தி செய்வேன்" என்கிற கவலையை அடைந்தவராக அவர் விளங்கினுர். அதன் பிறகு பரமபாவனமானசரயு நதியில் ஸ்நானம் செய்து ராஜா தசரத னிடம் வந்து சேர்ந்தார்." (1123)

[தியானம்

ஹே ராமா, விஸ்வாமித்ரபிரியா, ஜானகி பரிணய காரணரும் காதி வம்சத்தில் உதித்தவருப், பெரும் தவம் உள்ளவரும், மிக்க தர்மிஷ்டரும், புத்தியில் பிருஹஸ்பதி போன்றவரும், பிராம்மண செய்கை உள்ளவரும், க்ஷத்திரிய குலத்தில் தோன்றி ஒரே தேகத்தில் பிராம்மண்யத்தை அடைந்தவருமானவரும் என் ஆதிபிதாவான விஸ்வாமித்திரரை, கௌசிகரை, நான் நமஸ்கரிக் கிறேன். ஸ்துதி செய்கிறேன். அர்ச்சனை பண்ணுகிறேன். தியானம் செய்கிறேன். ஆசாரியர்களிடம் மஹத்தான விஸ்

வாஸம் கொண்ட சிஷ்யன், புத்ரன் இவர்களுடைய ஸ்நேகத்தைப் பெற்று நான் கிருதார்த்தனாக ஆக விரும்புகிறேன். அவர் பிறப்புக்குக் காரணமான ஸத்யவதி, ரிசிகரால் செய்யப்பட்ட ஹவிஸ்ஸுகள், பாயஸங்கள், சியவன ரிஷியினால் குசிக தம்பதி களிடம் காட்டிய மஹா அனுக்ரஹம், பரமப்ரீதி, ஔரவர் தனது கோபத்தை அடக்குதல், விஸ்வாமித்திரரின் சொந்த அனுபவத் தால் உணர்ந்த சித்தாந்தமாகிற பிரும்மதேஜஸ் ஸர்வ பலத்தின் காரணம்'', பிரும்மாவின் கட்டளை, வஸிஷ்டரிஷியின் "அப் படியே ஆகக்கடவது'' என்கிற ஸத்யவசனங்கள், பார்க்கவர் களின் சம்பந்திஸ்நேகம், குசிக ராஜனின் மிகுந்த தவம், சிஸ்ருஷைகள், தர்மத்தில் மிக்கப் பற்றுதலுடன் இருத்தல், ராஜா வாயிருப்பதையும் தேவேந்திரனாவதையும் அனுதரவு செய்து, பிராம்மணனாவதையும், தவத்தையும் விரும்புகிற ஞானமும் முக்கியமான காரணங்களாக விருந்தன. பிராம்மணயமிருந் தாலும் ரிஷியாவதும், ரிஷியாகவிருந்தாலும் தவச் சிறப்புடைமை யும், பெறக்கூடாதவை. பிருகு வம்சத்தவர்களின் தவச் சிறப் பினால் குசிகராஜனின் மூன்றாவது தலைமுறையில் பிராம்மணத் வத்தை அடைந்தவரும், பசுக்களுககும் தேவர்களுக்கும் மிக்கப் பிரியமானவரும், சாவித்திரி மந்திரத்தை அனுஷ்டித்து மேன்மை பெற்றவரும், ராமனுடைய பாரங்கதருமானவரும், ராமனை பல விதமாக அனுபவித்து, "கௌஸல்யாஸுப்ரஜாராமா'' என்று ஆனந்தத்துடன் அழைத்து அவருக்கு பலா, அதிபலா, இன்னும் அஸ்திரவித்தைகள் யாவும் கற்பித்து, ஜானகியை மணம் செய் வித்த மஹாத்மாவான விஸ்வாமித்திரரை நான் நமஸ்கரிக்கிறேன். அந்த குசிகரின் பேரனான அவர் சிறந்த தவமுள்ளவரும், அக்னி போன்ற தேஜஸ் உள்ளவரும், தேவர்களுக்கும், மனிதர்களுக்கும், மூவுலகத்திற்கும், பயத்தை உண்டுபண்ணக்கூடியவரும், அவ ருடன்கூட பரசுராமரின் ஜனனமும் ஏற்பட்ட காரணத்தைக் கொண்ட மஹானுபாவரை நான் நமஸ்கரிக்கிறேன். அவருடைய புத்ரர்களும், மஹாத்மாக்களும், பிராம்மண வம்சத்தை விருத்தி செய்கிறவர்களும், தவத்தில் சிறந்தவர்களும், பிரும்ம ஞானத்தில் தேர்ந்தவர்களும், கோத்ரங்களுக்கு மூலமுதற் புருஷர்களுமான விஸ்வாமித்திர மைந்தர்களனைவரையும் நான் நமஸ்கரிக்கிறேன். வேதங்களை வெளியிட்ட மஹரிஷிகளானபடியால், க்ஷத்திரியரான விஸ்வாமித்திரர் சிறந்த தவமுள்ள பிரும்மரிஷியானார். சந்திரன் ஸூரியன் அக்னி இவர்களுக்கு ஒப்பான மஹிமையுள்ள விஸ்வா மித்திரருடைய புண்யமான ஜனனம் புகழத்தகுந்தது. ஸ்ரேயசை

உண்டுபண்ணக் கூடியது. பாவத்தைப் போக்குவது, பரமாத் மாவை அடையச் செய்விப்பது, வேதங்களை வெளியிட்டவரும், பிரும்ம ரிஷியான விஸ்வாமித்திரரை நான் மஹா விஸ்வாசத் துடன் நமஸ்கரிக்கிறேன். அவரை தண்டனிட்டு, ராமா சீதா, உங்களை அடைகிறேன்.]

"அந்த முனிவரின் ஆகமனத்தை ராஜா தசரதர் கேட்டார். பிராம்மணர்களை முன்னிட்டு அவரைப் பூர்ண கும்பம் முதலிய மரியாதைகளைச் செய்து, அந்த பரம பிராம்மண ஸ்ரேஷ்டரை வரவேற்றார். மனம், வாக்கு, காயம், ஞானம், பக்தி, பிரபத்தி என்கிற உபாயங்களால் பூர்ணமாக தண்டனிட்டு, அவரையும் ஸம்மானித்து அவருக்குப் பரம ஸ்ரேஷ்டமான ஆசனம் கொடுத்து உபசரித்தார்." (1124)

"தசரதர் அவருடைய பாதகமலங்களை ஸ்நானம் செய்வித்து, பூஜை செய்து, அந்த உத்தமபாத ரேணுக்களை தனது தலையில் அலங்கரித்துக்கொண்டு, பிறகு வாத்ஸல்யத்துட னும் பூர்ண விஸ்வாசத்துடனும் சொல்ல ஆரம்பித்தார்:—"ஹே ஸ்வாமி, எனக்குச் சமமானதன்யனும் பாக்யவானும் இன்று ஒருவரும் இருக்கமுடியாது." அந்த பரம முனியை தசரதர் பலவிதமாக உபசரித்து, போஜனங்கள் செய்வித்து, அவரைப் பரம சந்தோஷப்படுத்தினார்." (1125)

"பிறகு அந்த தசரத மஹாராஜா தன்னுடைய நான்கு புத்திரர்களையும் அழைத்து அந்த பாகவத ஸ்ரேஷ்டரான முனியி னுடைய பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரிக்கச் சொன்னார். அந்த விஸ்வாமித்திரர் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய சோபையைக் கண்டு தன் தேகத்தின் ஸ்திதியை மறந்து பிரேமையினால் மூழ்கப்பட்டு, எல்லாப் பயங்களையுமிழந்து, சகோர பக்ஷிகள் பூர்ண சந்திரனைக் கண்டால் எவ்விதம் சந்தோஷமடையுமோ, அவ்விதம் பூர்ண சந்தோஷத்தில் தத்தளித்தார்." (1126)

"அந்த சமயம் அரசர் மிக்க சந்தோஷமடைந்து, வார்த்தை களைச் சொல்ல ஆரம்பித்தார், "ஹே முனீஸ்வரரே, இவ்விதமான உம்முடைய கிருபை என்னிடம் இதற்கு முன்பு காட்டப்பட வில்லை. இன்று எந்தக் காரணத்தால் தங்களுடைய சுபமான வரவு என் கிருஹத்திற்கு ஏற்பட்டது? தயவு செய்து சொல்லுங் கள். நான் அவைகளைக் காலதாமதமின்றி பூர்ணமாக நிறை வேற்றி வைக்கிறேன்." (1127)

  

[தியானம்

ஹே ராமா, நாராயணா, ஆஞ்சநேயர், உமை, சீதை, நாரதர், தியாகராஜர் ஆகியவர்கள் ரொம்ப பாக்யம் படைத்தவர்கள். எல்லோருடைய பாக்யத்தை விட என் குல பாக்கியமான விஸ்வா மித்ரர் சாவித்திரி மந்திரத்தின் தீர்க்க பலனான தபஸ்ஸுகளின் மகிமைகள் எல்லாவற்றிற்கும் பயனாக யாக சம்ரக்ஷணை என்கிற வியாஜத்தினால் பெருமுயற்சி செய்து பரமபோக்யமான வஸ்துக் களாகிற ஜானகி ரமணனாக உங்கள் இருவர்களையும் சேர்த்து வைத்தார். எந்த அருந்ததி, உமை, சரஸ்வதி, சதாத் தியானம் அனுஷ்டானம் முதலிய சிறந்த தர்மங்களால் ஸ்திரி, பதிதர்மத் தைப் பூலோகத்தில் பரவச்செய்தார்களோ, அதே மாதிரி அபார கருணைவசம் அடைந்த மஹாலக்ஷிமி தன்னை சிறையிட்டுக் கொண்டு, பிறர்களை வாழச் செய்தாள். அந்த மாஹாத்மியத்தை சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமாக விளங்கும் ஆஞ்சநேயர், சீதையின் சீலம், ரூப சௌந்தர்யம் இவைகளை மனத்தால் புகழ்ந்து, கதற ஆரம்பித்தாரோ, அந்த பரமஸ்ரேஷ்டமான காரியத்தை காதி குலத்தின் ஸ்ரேஷ்ட ரத்னமான விஸ்வாமித்திர பகவான் ஆரம்பம் செய்துவைத்தார். அளவற்ற மகிமை பொருந்திய மஹாத்மா வான விஸ்வாமித்திரர் "நடப்பது நடந்தே தீரும்" என்கிற பெரும் உண்மையை வஸிஷ்டருக்கு நிரூபித்துக் காண்பித்தார். கோபமடைந்த விஸ்வாமித்திரர் கால புருஷனுக்கும் யமனுக்கும் ஒப்பான ராக்ஷஸர்களைப் படைத்தார். வசிஷ்டபுத்ரர்கள் இறப் பதற்கு ஹேதுவானார். அநேக பிரும்ம ரிஷிகள், வித்வான்கள் நிறம்பின சிறந்த குசிக வம்சம் இம்மானிட லோகத்தில் அவரால் நிலைநிறுத்தப் பெற்றது. ரிசிகருடைய புத்ரனானவனும் சிறந்த தவமுள்ள வருமான சுனச்சேபன் யாக பசுவிலிருந்து விடுவிக்கப்பட்டான். அவன் ஹரிச்சந்திரனுக்கு யாகம் செய்வித்து விஸ்வாமித்திரருக்கும் புத்திரன் ஆனான். அவனை நமஸ்கரிக்காம லிருந்த காரணத்திற்காக தன் புத்ரர்களை சண்டாளர்களாக போகும்படி சபித்தார். திரிசங்கு தலைகிழாகவே ஸ்வர்கத்தி லிருந்து விஸ்வாமித்திரரால் அன்புடன் காப்பாற்றப்பட்டு இன்றும் தென்திசையைச் சார்ந்திருக்கிறான். விஸ்வாமித்திரரின் சஹோதரி தேவரிஷிகளாலும் பிரும்ம ரிஷிகளாலும் கொண் டாடப்பட்ட கௌசிகி என்னும் புண்ணிய நதியாக விருக்கிறாள். கர்மத்தின் வசம் அடைந்து, சகுந்தலையை உண்டுபண்ணி, பின்பு அவருடைய கோபத்தால், ரம்பை என்னும் அபசரஸ் கல்லானாள். விபாசை என்று புகழ்பெற்ற புண்யமான மஹாநதி

விஸ்வாமித்திரருடைய பயத்தினுல் வஸிஷ்டரை கட்டவிழ்த்து வைத்தது. இதனுல் அவர் வஸிஷ்டரின் மேன்மையையும் விளக்கிக் காட்டினுர். இந்திரனும் விஸ்வாமித்திரரால் துதிக்கப் பட்டு சண்டாள சாபத்திலிருந்தும் பஞ்ச காலத்தில் நாய் மாமிசம் சாப்பிட்ட அவக்கேட்டிலிருந்து அவர் விடுவிக்கப் பட்டார். அவர் வடதிசை அடைந்து உத்தான பாதன் புத்ரனுன துருவனுக்கும், ஸப்தரிஷிகளுக்கும் நடுவில் எனக்குப் பலம் அளிப்பவராக எப்போதும் பிரகாசிக்கிருர். வேறு தேகம் புகராமல் பிராம்மணத்வத்தை அடைந்து, தவங்களின் பலன்களை பிறருக்கு உபயோகித்து ஞானயோகத்தை அடைந்து, ஸர்வபூதஹிதைஷி யாகி, பிருகிருதிக்கும் மேற்பட்டதும் புருஷ சப்தத்தால் அறியப் படுவனுமான நாரயணரை எவ்விதம் நாரதர், புண்டரீகர் என்கிற பிராம்மணருக்கு உபதேசித்தாரோ, அவ்விதம் பலமுறை ஆராய்ந்து நாராயணரை எப்போதும் தியானம் செய்து, அந்த ஒன்றுதான் தியானம் செய்யப்படவேண்டிய வஸ்து, அவரே சாஸ் திரங்களில் விரிவாகச் சொல்லப்பட்ட பொருளும், அவரே அஜர் என்று சொல்லப்படுவரும் கேசவர் என்று ஆராதனம் செய்யப்படு வரும், நமோ நாராயணுய என்கிற சப்தத்தினுல் அலங்கரிக்கப் படுவரும், சாஸ்வதமான வேத புருஷரும், ஸத்கதியையும், தத்விஷ்ணோ: பரமம்பதம் என்று சொல்லப்படும் அந்த உத்தம கதிக்கு அந்திம காலத்தில் அடைவிக்கச் செய்பவரும், பாபங்கள் எல்லாம் உதிர்ந்து, நாராயண பராயணராகச் செய்பவரும், பீஷ்மர், அர்ஜுனன், யுதிஷ்டிரர் முதலியவர்கள் குறித்துக் காட்டின, ஏகசப்தத்தை உடையவரும் அதோக்ஷஜரான நாராயணரை, என் தகப்பன், பாட்டன், மாதாபந்து, புத்ரன், பௌத்ரன், ஆசார்யர், கிருபாளு, விஸ்வபந்து, பசுக்களின் மித்ரன், ராமனுக்கு அத்யந்த சேவை செய்தவர், குஹனுக்கும் பிரியன், ஆகிய எல்லாவற்றையும் குறைவாகத் தெரிந்தபோதிலும் என் மார்க்கதரிசி என்று நினைத்து விஸ்வாமித்ரரை ஆயிரம் தடவைகள் நமஸ்கரித்து லக்ஷ்மிபதியான நாராயணரை சரணம் அடைகிறேன். பக்த பராயணனுகிய நாராயணர் தன் மார்பில் வைத்திருக்கும் லக்ஷ்மி பிராட்டியுடன் என் ஆசார்யரின் மஹானுக்ரகத்தால் என் நமஸ்காரத்தை அங்கீகாரம் செய்ய வேண்டும். அஜர், அமரர், ஏகம், தியானப் பொருள், ஆதி அந்தமில்லாத பால ஸ்வரூபம், ஸகுண அகுண முதல்வர், ஸ்தூலம், அத்யந்த ஸூக்ஷமம், நிரூபம், அநிரூபம், யோகிஹ் ருத்யான மங்களப் பொருள், திரிபுவனகுரும், ஈஸம் என்று

சொல்லப்படுபவரும் பரமேஷ்டி ஆசார்யரான பகவான் விஷ்ணுவை நான் சரணம் அடைகிறேன்.]

விஸ்வாமித்திரர் சொல்ல ஆரம்பித்தார். "ஹே ராஜன், ராக்ஷஸர்கள் எனக்குப் பல இடையூறுகளை விளைவிக்கிறார்கள். இதனால் உன்னிடமிருந்து கொஞ்சம் உபகாரம் பெற விரும்பி நான் வந்திருக்கிறேன். உன் புத்ரனாகிய ரகுநாதனை அவனுடைய தம்பி சகிதம் எனக்கு அளி. அவர்களால் சில ராக்ஷஸர்கள் கொல்லப்பட்ட பின்பு, நான் நன்கு காப்பாற்றப் பட்டவனாக ஆவேன்." (1128)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, நாராயணா, பக்தவத்ஸலா, ஸர்வபூதங்களுக்கும் அவ்யயமான பிதாவே, உன்னிடம் வரும் பக்தியானது அநேக ஆயிரம் ஜன்மங்கள் எடுத்து அடைவதற்கு அரியது. ஸகல ஆஸ்ரம வாஸிகளும் உன்னை ஆராதிக்காமல் பரகதியை அடைகிறதில்லை. தாமரைக்கண்ணா, லக்ஷ்மிபதி, சங்கசக்ர கதையை ஏந்தினவரும், கிரீடத்தையும், குண்டலங்களையும் தரிப்பவரும், ஸ்ரீ வத்ஸமும் கௌஸ்துபமும் மார்பில் அணிந்தவரும், தேவஸ்ரேஷ்டருக்கும் தேவஸ்ரேஷ்டரும், நினைப்பிலும், கனவிலும் பரபரப்புடன் நமஸ்கரித்து ஆராதனை செய்ய வேண்டும். வேதபுருஷர்களாலும், தேவ யக்ஷ, கந்தர்வ, அப்ஸரஸ்ஸுகளால் துதிக்கப்படும் ஸ்ரீ விஷ்ணு பகவான் என்றால் திருப்தியாக பூஜிக்கப்பட்டு, என்னிடம் அன்பு காட்டவேண்டும். அவரையே தஞ்சமாக்கிக்கொண்டு, ஆராதித்து, தியானித்து, அந்த புருஷோத்தமரை அடையவேண்டும். தன் நன்மையைக் கருதும் மனிதன் கேட்பது, சிந்திப்பது, பாடுவது, துதிப்பது பூஜிப்பது முதலிய எல்லா கர்மங்களிலும் அந்த பரப்பிரும்மத்தை ஸேவை செய்வதுபோல நான் ஆராதிக்க விரும்புகிறேன். அந்த நாராயணரே என்னை ஆதரிக்கவேண்டும். தியாகராஜர், விஸ்வாமித்திரர், நாரதர், வியாஸர், புண்டரிகர் காட்டிய வழியை நான் பின்பற்றுகிறேன். அவரையே அனன்ய கதியாக வந்தடைகிறேன். இப்பேற்பட்ட மஹத்தான உபகாரங்களை செய்த பெரும் ஆசார்யர்களை நான் நமஸ்கரித்து கிருதார்த்தனாகிறேன்.]

விஸ்வாமித்திரர் சொல்லுகிறார், "ஹே ராஜன், நீ மனத்தில் சந்தோஷப்பட்டவனாக இந்த இரண்டு குமாரர்களையும் எனக்குக் கொடு. உன்னுடைய மோஹம் அக்ஞானத்தை விலக்கி, அவர்களை என்னிடம் ஒப்பிவை. உனக்கு பரமஸ்ரேஷ்டமான தர்மமும்,

சுபமான யசசும் கிடைக்கும். மேலும் உங்களுக்கு மங்களாகர மான கல்யாணங்களும் நடைபெறும்.'' (1129)

ராஜாவான தசரதர் இந்த அப்ரியமான வசனங்களைக் கேட்டு, ஹ்ருதயத்தில் நடுங்கி, முகத்தில் சாந்தியை இழந்து, ஒரே பயத்தினால் வெளுத்துப்போனார்; அந்த விஸ்வாமித்திரரைப் பார்த்துச் சொன்னார். "ஹே, பிராம்மணரே, நான் இந்த நான்கு குழந்தைகளையும் என் வயது காலத்தில் அடைந்திருக்கிறேன். உம்மால் இது சரியாக புரிந்து கொள்ளப்படாமல் இவ்விதமான வரம் என்னிடம் கேட்கப்பட்டது.'' (1130)

"ஹே முனீஸ்வரரே, உம்மால் பூமி, பசு, தனம், பொக்கிஷம் இவற்றில் எதை வேண்டுமானாலும் கேட்டு, அதை நீர் பெற்றுக் கொள்ளவும். நான் இன்று உமக்கு மிக்க பிரியத்துடன் எல்லா வற்றையும் கொடுக்க சித்தமாயிருக்கிறேன். வேண்டுமானால் உமக்கு என் பிராணனையும் தேஹத்தையும் கொடுக்க சித்தமா யிருக்கிறேன். ஒரு நிமிஷமும் தாமதிக்க மாட்டேன். ஹே ஸ்வாமி, தேஹம், பிராணன் இவைகளைவிட மிக்க பிரியமான வஸ்து ஒன்றும் இருக்க முடியாதே?'' (1131)

"ஆனால் இந்த நான்கு புத்ரர்களும் என் பிராணனுக்குச் சமமான பிரியமுள்ளவர்கள். அதிலும் அந்த ராமனை, ஹே பிரபோ, எந்த விதத்திலும் நான் கொடுக்க மாட்டேன். அதி கோரமான ராக்ஷஸர்கள் எங்கே, ரொம்ப ரொம்ப சுகுமாரர் களான என் புத்ரர்கள் எங்கே? இவர்கள் அந்த கொடூரமானவர் களிடம் எவ்விதம் யுத்தம் செய்ய முடியும்?'' (1132)

அந்த முனிவர் இவ்விதமாகச் சொல்லப்படும் பிரேமை ரஸத்துடன் பொருந்திய ராஜாவின் வார்த்தைகளைக் கேட்டார். பெரும் ஞானியான அந்த மஹா புருஷன் ("அஹம்வேத்தி, வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம்'' என்கிற புருஷனை அறிந்த மஹா வித்வான்) தன் ஹ்ருதயத்திற்குள் சிரித்துக் கொண்டார். அந்த சமயம் வஸிஷ்ட பகவான் பலவித நியாயங்களால் அரசரின் அக்ஞானத்தை விலக்கி, அரசனுடைய சந்தேகங்களை விலக்கி, அரசருடைய வசனங்களை சத்யமாக்கி, கீர்த்தியுள்ளதாகவும் நிலைக்கச் செய்தார். (1133)

பிறகு அந்த அரசர் மிக்க மரியாதையுடன் தன் குழந்தை களை அழைத்து, பிரேமையுடன் அணைத்து, அநேகவிதமாக சிக்ஷைகள் கொடுத்தார். பிறகு முனிவரிடம் சொன்னார். "ஹே முனீஸ்வரரே, இந்த இரு குமாரர்களும் என் பிராணனைப்

  

போன்றவர்கள். இப்போது நீர்தான் இந்த இரண்டு குமாரர்களுக்கும் பிதா. வேறு ஒருவரும் இல்லை.'' (1134)

பிறகு ராஜா தன் புத்ரர்களை நன்கு ஆசீர்வாதம் செய்து, அந்த ரிஷியிடம் ஒப்புவித்தார். அந்த பிரபுவான ராமன் லக்ஷ்மணனுடன் தன் தாயாரின் பவனத்திற்குச் சென்று, அவள் பாத சரணங்களையும் நமஸ்கரித்து, அவளுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு, முனிவருடன் சென்றார். (1135)

புருஷஸ்ரேஷ்டர்களான அந்த இரண்டு சகோதரர்கள் அந்த முனிவரின் பயத்தை நீக்குவதற்காக அவருடன் சென்றார்கள். அந்த மஹா புருஷர்கள் கிருபையின் சமுத்திரம்; தீரபுத்தியுள்ளவர்கள். அகில விஸ்வத்திற்கும் காரிய காரண புருஷர்கள். (1136)

[தியானம்

ஹே நாராயணா, லக்ஷ்மிபதே, லக்ஷ்மிப்ரியே, சிவப்ரியே, ஹரிலக்ஷ்மியே, ராமா ஜானகி, ரகுநந்தனா, ஐயா, பகவானே, தேவதேவேசா, ஸுரஅசுர நமஸ்க்ருதா, ராமா, தாமரைக் கண்ணரே, புஷ்கராக்ஷா, த்ரிவிக்ரமா, பொன்னுருவ முள்ளவரும், தேகங்களில் இருப்பவரும், உலகத்தைப் படைப்பவரும், விராடபுருஷரும், தமக்குத்தாமே ஒப்பானவரும், எக்காலத்திலும் ஸநாதனமானவரும், பரமாத்மாவும், புருஷோத்தமரும், நித்ய யசஸ், நித்ய ஸ்ரீ, நித்யமங்களரும், பீஷ்மர் பாண்டவர்களின் பராயணரும், நாரதர், வால்மீகி, விஸ்வாமித்திரர், வஸிஷ்டர், பராசரர், வேதவியாஸர், சுகர், தியாகராஜர், நாராயண நம்பூத்ரி, துளசிதாஸர், ஆஞ்சநேயர், திரௌபதி, உமை, சம்பு, மனு, சதரூபா, யாக்ஞ்யவல்கியர், பரத்வாஜர், காகபுசண்டி, கருடன், அனந்தன், விஷ்வக்ஸேனர், குஹர் போன்ற மஹாத்மாக்களால் வணங்கப்படுவரும், எக்காலமும் அழியாத பரமாத்மாவும், விஷ்ணு பகவானுமான, நீர் ராமகிருஷ்ண அவதாரங்களாகிய மனிதராக பிறந்திருக்கிறீர். எக்காலமும் உம்மிடத்தில், ஹே, வைகுண்டநாதரே, பக்தி உள்ளவனும், நீரே கதியாக நினைப்பவனும், ஆசை பற்றுக்களை விட்டுவிட்டு உயர்ந்திருக்கும் முகத்தையும், ஹ்ருதயத்தையும், நினைவையும், மனத்தையும், இந்திரியங்களையும் உடைய என்னை ரக்ஷிக்கவேண்டும். ஆதி தேவதையான உம்மால் அனுப்பப்பட்டு, நான் உயர்ந்த கதியை அடையக் கடவேனாக. நரநாராயண ரிஷிகள் என்று போற்றப்படும் நாராயண ரிஷியே, பத்ரிகாஸ்ரமத்தில் வியாஸராலும்,

நாரதராலும், போற்றப்படும் மங்கள மூர்த்தியே, குருவாயூரப்பா, ராமா, கிருஷ்ணு, மிக்க நெருக்கமான கலாய (காயாம்பூ) புஷ்பக் கொத்துப்போல அழகான தேஜஸ்கள் நிறம்பின ஒளியை நான் எதிரில் பார்க்கிறேன். அம்ருதத்தால் நனைக்கப்பட்டவனுக ஆனந்தப்படுகிறேன். அந்த ஒளியின் நடுவில் ஸாத்வீகமான பதினறு வயதுள்ள சிவக்காந்தியாக நிற்கும் ஒரு பாலகனின் வேஷம் கொண்ட யௌவன பிராயமுள்ளவரும், மிக்க அழகாக விருக்கிறதாகப் பார்க்கிறேன். பிரும்மானந்தத்தின் அனுபவத்தால் ரோமாஞ்சலிகள், புஷ்பித்த கண்கள், அம்ருதமயமான மனத்தில் சந்தோஷம், நாரதர், வியாஸர், விஸ்வாமித்திரர், வஸிஷ்டர், பராசரர், இவர்கள் உருவாகக்கொண்டு நிற்கும் உபநிஷத்துக்களாகிற ஸ்திரீகளால் சூழப்பட்டு, வரப்போகும் ஜானகி தேவியையும் நினைத்து, புகழ்ந்து பாடும் தேஜோமயமான ஆண் பெண் இரு உத்தம வடிவுகளை நான் காண்கிறேன்! ஆனந்தம், ஆனந்தம், என் பாக்யம், விஸ்வாமித்ரர், ஆஞ்சநேயர், துளசிதாஸர், தியாகராஜர் போன்ற மஹான்களின் கருணை, பரம குருக்களான இவர்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.]

அருண (சிவப்பு நிறமான) நயனங்கள், விசாலமான மார்பு, கைகள், நீலோத்பலத்தின் நிறம், தமால மரத்தின் நிறம்போன்ற ஸ்யாமள நிறமான சரீரம், இடுப்பில் பீதாம்பர வஸ்திரங்கள், தோளின் ஒரு புரத்தில் அம்புகள் வைக்கப்படும் அம்புராத்துணி, இரண்டு கைகளிலும் தனுஷ், பாணங்கள். (1137)

சியாம, சிகப்பு ஆகிய இரு வர்ணங்கள்கூடிய இரு சகோதரர்கள் அதிசுந்தரமான புருஷர்கள். அந்த விஸ்வாமித்திர மஹரிஷிக்கு பெரிய மகத்தான அழியாத நிதி பொக்கிஷங்கள் கிடைத்தன. அந்த மஹா புருஷன் தனக்குள் யோசனை செய்தார். "எனக்குத் தெரியும் இந்த பிரபு பிராம்மணப்பிரியர். எனக்காக இவர் தன் பிதாவையும் விட்டுவிட்டு வந்திருக்கிருர்." (1138)

மார்க்கத்தில் போகும்போது அவர் தாடகையைக் காண்பித்தார். இந்த சப்தங்களைக் கேட்ட மாத்திரம் அவள் க்ரோதத்துடன் ஓடிவந்தாள். அவள் ஸ்ரீராமரால் ஒரே பாணத்தால் கொல்லப்பட்டாள். பிரபு அவளுடைய பாபத்தைப் போக்கி பகவானுடைய நிஜபதத்தை அடையவித்தார். (1139)

அந்த ரிஷிக்கு அந்த பிரபு சகல வித்யைகளின் நிதியைப் போன்றவர் என்று தெரியும். இருந்தாலும், மானிட உலகத்தில்

லீலைகளைப் பூர்த்தி செய்வதுபோல அந்த பரமரிஷி அவர்களுக்கு பசி, தாகம், சரீரத்திற்கு களைப்பில்லாமல் அதுளிதமான பலம், பிரகாசமான தேஜஸ் இவைகளைத்தரும் வித்யைகளை (பலா, அதி பலா போன்ற வித்யைகளைக்) கற்றுக் கொடுத்தார். (1140)

தனக்குத் தெரிந்த சசலவிதமான அஸ்திரங்கள், சஸ்திரங்கள் எல்லாவற்றையும் பிரபுவுக்கு ஸமர்ப்பணம் செய்தார். பிறகு அவர் அந்த ஸ்ரீராமச்சந்திரனையும் லக்ஷ்மணனையும் தன் ஆஸ்ரமத்திற்கு கூட்டிவந்தார். கந்தமூலங்கள், பழங்கள், போஜனத்திற்குக் கொடுத்தார். அவரைத் தனக்கு ஹிதம் செய்பவராக நினைத்து, அந்த ரிஷி இரு ராஜ குமாரர்களை சகலவிதமாக உபசரித்தார். (1141)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, உன்னைக் கோடிக்கணக்கான மஹானுபாவர்கள் கோடிக்கணக்கான தடவைகளில் அநேக வர்ஷ காலமாக ஆனந்த கீர்த்தனம் செய்து, அநேக விதமாக உபசரித்து, தானும் உஜ்ஜீவிக்கவேண்டும், தானும் உன் நாம பிரபாவங்களில் ஈடுபடவேண்டும் என்று பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் முடிவை அடைந்து விட்டார்களா? முடிவைத்தான் காண்கிறார்களா? நாரதர், பிரஹ்லாதர், சுக்ராசாரியார், தியாகராஜர், ஆஞ்சநேயர் கானமார்க்கமாகப் பாடி தங்கள் உள்ளங்களை சுத்தப்படுத்தி "உன் சரணே சரணம்" என்று உன்னை அடைந்தார்கள். ஆனந்த நடேச மூர்த்தி, சரஸ்வதி, விஷ்ணுபகவான், நந்தி, அம்பிகை, முனி ஸ்ரேஷ்டர்கள், ஆகியவர்கள் திருப்தி அடைவதற்காக ஆனந்த நடனம் தில்லையில் தன் குமாரரான விக்னேஸ்வரருடன் கூட ஆடி எல்லோரையும் களிப்பித்தார். பிரும்மா ஸாமகானம்பாடி ஆனந்தம் எய்தினார். கங்கையைப் போல பரிசுத்தமான ஆனந்த வசனங்களால் புண்யத்தைத்தரும் உன் மங்கள கீர்த்திகளை எல்லாத் தேவர்களும் பாடினார்கள். அப்பேற்பட்ட மிருது மதுர பூர்வ பாஷியாக விளங்கும் உன்னைப் பாடித் தீர்ந்து களைப்படைந்து திருப்தி பெறாமல், உன்னையே பார்த்து ஆனந்தம் அடைய அவர்கள் வைகுண்டலோகத்திற்கு வந்தார்கள். அவர்களுடன் வந்த நாரதர், சுக்ராசாரியார், எவ்விதம் அம்பிகையை கீர்த்தனம் செய்தாரோ, அவ்விதம் இன்றும் ஓயாமல் உன்னையே ஹ்ருதய கானமாக பண்ணிக்கொண்டிருக்கிறார். யாகசம்ரக்ஷணை என்கிற வியாஜமாக வந்த என் குலநாதரும் தர்மாத்மாவுமான

விஸ்வாமித்திரர் என்கிற குசிகவம்சரத்னம், பரமயோகி, பரம ப்ரீதியுடன் ராமனைத் தன் ஆஸ்ரமத்திற்கு கூட்டி வந்து "கௌஸல்யா ஸுப்ரஜா ராமா", ராமா, "கோவிந்தா" என்று உன் பரம சௌந்தர்யத்தைப் பார்த்து மனம் களிப்புற்றவராக உன்னை அழைத்தார். அந்த பரம ஸ்துதிகளை வால்மீகி எழுதி, திருவேங்கடமுடையான் ஏற்றுக்கொண்டு நானும் உன்னைப் பாடினேன் என்கிற வியாஜத்தால் என்னை கடாக்ஷிக்க மாட்டாயா? ப்ரேமையுள்ள எனது ஆசாரியர்கள் எனக்கு அருள் சுரந்து, அம்பிகை சிவனிடம் சொல்வதுபோல, வாக்கும் அர்த்தம் சேர்ந்திருக்கும் ஸ்வபாவம்போல, பிரும்மா சரஸ்வதியும், தியாகராஜர், ஆஞ்சநேயர், போன்ற பக்தகோடிகள் எனக்குப் பரிந்து உன்னிடம் சொல்ல மாட்டார்களா? ஹே கோதண்ட ராமா, என்னுடைய பாபங்களையும், பயங்களையும், உன் ராம பாணத்தால் ஒழித்து என்னையும் உன்னைச் சேர்ந்தவன் என்று அனுக்ரஹிக்க மாட்டாயா? விஸ்வாமித்ரரிடம் காட்டிய அபார கருணையை என்னிடமும் வேண்டுகிறேன். அவரும் எனக்கு பரிந்து பேசட்டும்.]

விடியற்காலம் வந்ததும், ரகுநந்தனன் விஸ்வாமித்திரரைக் கூப்பிட்டு மதுரமாகச் சொன்னார். "ஸ்வாமி, தாங்கள் பயமின்றி யாகங்கள் நடத்தலாம்." இந்த வார்த்தைகளைக் கேட்டு எல்லா முனிவர்களும் யாகம், யக்ஞம், ஹவனம், எல்லாம் செய்து முடித்தார்கள். இவ்விதமாக "ஹே ராமா, முனிவர்களின் யாகத்தை ரக்ஷித்ததினால், நீர் யக்ஞ ரக்ஷகராக ஆகிவிட்டீர் அல்லவா?" (1142)

இந்த சமாசாரத்தை கேட்டு முனிவர்களின் சத்ருவான மாரீசன் என்கிற ராக்ஷஸன் தன் சகாக்களான ராக்ஷஸர்களுடன் வெகு க்ரோதத்துடன் ஓடிவந்தான். அந்த ராமச்சந்திரன் மரணத்தை கொடுக்காத ஒரு பாணத்தினால் நூறுயோசனை களுக்கு அப்பால் உள்ள ஸாகரத்தில் மாரீசனை சுழற்றித் தள்ளினார். (1143)

சுபாகு என்கிற ராக்ஷஸனை பிரபு ஓர் அக்னி பாணத் தினால் கொன்றார். இன்னொரு இடத்தில் ராமன் லக்ஷ்மணன் சகிதம் ராக்ஷஸர்களின் ஸேனைகளை நாசம் செய்தார். இந்த விதமாக ஸ்ரீராமன் ராக்ஷஸர்களைக் கொன்று பிராம்மணர்களை நிர்பயமாக்கினார். இதைக்கண்ட சகல தேவர்களும் முனிகணங் களும் அவரை ஸ்துதி செய்ய ஆரம்பித்தார்கள். (1144)

ஸ்ரீரகுநாதன் அவ்விடத்தில் கொஞ்ச நாட்கள் தங்கி, பிராம்மணர்களிடம் தயை காட்டினார். பக்தியின் வசமடைந்த அந்த புண்யசாலிகளான பிராம்மணர்கள் பிரபுவுக்கு பல புராணங்கள், கதைகள் சொல்லி சந்தோஷத்தை உண்டு பண்ணினார்கள். (1145)

அதற்குபிறகு விஸ்வாமித்திரர் ரகுராமனிடம் மிக மரியாதை யுடன் சொன்னார் "பிரபோ, நீங்கள் ஒரு அழகான இடத்திற்கு விஜயம் செய்யவேண்டும். அந்த இடத்தில் தனுஷ் யக்ஞம் ஒன்று நடக்கப்போகிறது. அதை நீங்கள் கட்டாயம் பார்க்க வேண்டும்." இதைக் கேட்ட ரகுகுல நாதரான ஸ்ரீராமன் முனிஸ்ரேஷ்டரான விஸ்வாமித்திரருடன் சந்தோஷத்துடன் அந்த யாகம் நடக்கும் இடத்திற்குச் சென்றார். (1146)

மார்க்கத்தில் ஒரு ஆசிரமம் தென்பட்டது. அந்த இடத்தில் பசு, பக்ஷி, மிருகம், ஜீவஜந்துக்கள் ஒன்றுமில்லை. ஒரு கற்சிலை யைக் கண்டு, பிரபு "அது என்ன?" என்று விஸ்வாமித்திரரைக் கேட்டார். அப்புறம் அந்த முனிஸ்ரேஷ்டர் ஸ்ரீராமனுக்கு விஸ்தாரமாக ஒரு கதை சொல்ல ஆரம்பித்தார். (1147)

[தியானம்

ஹே சீதாராமா, சரணாகத பாரிஜாதா, அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர் முதலியவர்களால் சதாவிடாமல் பூஜிக்கப்படும் தயாசிந்தோ, ஆதிபுருஷா, முன்காலத்தில் பிரும்மாவினால் "நீரே எனக்கு முன் இருப்பவர்; நீர் இதை முன் செய்யும்," என்கிற வாக்கியங்களாலும்; வாமதேவரிடமிருந்து பரம புருஷ ஞானத்தை சிறப்பாக பெற்ற இந்திரனும் எவரை முதற் காரண மாக கூறினாரோ, அவ்வாறே பத்ரையான கிழக்கு முதலிய திசை களும் எவரைக் கூறினார்களோ, அப்பேற்பட்ட மஹாத்மா, ஸத்ய பராக்ரமமுள்ள ஸ்ரீராமரை அந்த நாராயணராகவும் "மந்திர த்ருஷ்டா ஸ்வகீயம் த்யானானுபவம் ப்ரகடயதி, ஏதம் புருஷம் விராஜம் மஹாந்தம் ஸர்வகுணை ரதிகமாதித்ய வர்ணமாதித் யவத் ப்ரகாஸமானம் வேதாஹம் ஜானாமி ஸாவதானு பவாமீத் யர்த்த: ஸசபுருஷம் தமஸ: பாரே அஜ்ஞானாத் பரஸ்தாத் வர்த்ததே, அதோகுரு சாஸ்திர உபதேச ரஹிதைர் மூடை ரனுபவிது மசக்ய இத்யர்த்த: என்று ஸாமவேதத்தில் சொல்லிய மஹாபுருஷரை பரம பாக்யவானான விஸ்வாமித்திரர் அறிந்து உபசரித்து சரணம் அடைந்தாரோ அப்பேற்பட்ட நாராயணனை நான் அனன்யகதியாக நினைத்து, கோப்த்ருவத்துடன் சரணம்

அடைகிறேன். கருத்த காந்தியுள்ளதும், சுருண்ட அடர்த்தியான அக்ரபாகத்தை உடையதும், என் பாபங்களை அபஹரிக்கும் சக்தியுள்ளதாயும், என் மனத்திலுள்ள பயங்களையும், குற்றங்களையும், தன் பிரகாசத்தினுல் அபஹரிக்கும் கேச ரத்ன அலங்காரங்களையும், அழகான திருமணி காப்புக்களோடும், சந்திர கலைக்கு ஒப்பான விசாலமான நெற்றியை நான் காண்கிறேன். பக்தியோகம் முதலிய உபாயங்களை அனுஷ்டிக்க சக்தியற்ற என்னிடம், ஹே வேங்கடவரதா, அருள்புரிந்து, அவ்வுபாயங்களின் ஸ்தானங்களில் நின்று, பலனுகிய உன் திவ்ய சரணரவிந்தங்களை, ஜானகியும் ஆஞ்சநேயரும் மனம் ஒப்பி என்னிடம் கொடுக்குமாறு வேண்டுகிறேன். கருணை மழை பொழியும் உன் கடைக்கண் பார்வையும், அஹல்யை, கங்கை, பிரும்மா, இந்திரன், பூமி, திக்குக்கள், பதினுன்கு உலகங்கள், காஞ்சி, வேங்கடம், ஸ்ரீரங்கம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களில் பாகவதர்களின் நன்மைக்காக எழுந்தருளியிருக்கும் உன் திவ்ய மங்கள பாதங்களை, ஸ்ரீ வித்யா ராஜகோபாலன் எனக்கு காண்பித்தபடி, எனக்கு மீண்டும் கொடுப்பாயாக. காமதேனுவும் சுரபியும் நந்தினியும் எனக்கு அருள்புரிவார்களாக.]

விஸ்வாமித்திரர் சொல்ல ஆரம்பித்தார் "ஹே ராமா, கௌதம மகரிஷியின் பதிவிரதையான அஹல்யா சாப வசமடைந்து, கல்லின் சரீரத்தை அடைந்தவளாக, அதனுல் தபிக்கப்பட்டு, வாயுவை ஆகாரமாகக் கொண்டு, தபஸ் செய்து கொண்டு, (அதனுல் "தப்யந்தி பஸ்மசாயினி"யாக விளங்கும் அந்த புண்யவதி,) உன்னுடைய புண்யமான சரணகமலங்களின் பாதரேணுவை, தைர்யத்துடனும் மஹா விஸ்வாசத்துடனும் வேண்டுகிருள். ஹே ரகுவீரா, அவளிடம் கிருபை செய். இந்த உத்தமிக்கு உன் அருளைக் கொடு." (1148)

துளசிதாஸர் சொல்லுகிருர்: "ஸ்ரீ ராமசந்திரனுடைய சரண கமலங்கள் ரொம்ப பாவனமானவை. சோகத்தை நாசம் செய்யக்கூடியவை." அவைகளை ஸ்பரிசித்த மாத்திரம் அதே க்ஷணத்தில் அஹல்யை தன் பதியான கௌதமரின் வசனங்களை நினைக்கிறவளாக, ராமனுக்குத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டாள். ரகுநாயகர் பக்த ஜனங்களுக்குச் சுகத்தை அளிக்கக்கூடியவர், என்று அறிந்து தபோமூர்த்தியான அஹல்யை இரு கைகளையும் குவித்துக்கொண்டு, அவர் முன் தோன்றினுள். அதிபிரேமையினுல் தன்வசம் இழந்தவளாக, புளகாங்கித சரீரத்துடன், முகத்திலிருந்து வார்த்தைகள்



பரம பவித்திரமானதும், சோகங்களை நாசம் செய்யக்கூடிய ஸ்ரீராமனுடைய பாதங்களை ஸ்பர்சித்த உடனே, தபோ மூர்த்தியான அஹல்யை வெளிக்கிளம்பி, கைகளை அஞ்சலி செய்துகொண்டு பிரார்த்தித்துக் கொள்ளுதல்.

எழும்பாமல், தத்தளிக்கும் கிருதக்ஞையுடன் அந்த அஹல்யா தேவி ராமன் முன்பு தோன்றினுள். பூர்ண சந்திரபிரபையை உடையவளும், நல்ல அழகுள்ளவளும், மஹா பாக்யசாலியுமான அஹல்யை பிரபுவினுடைய பாதங்களை நமஸ்கரித்து, தழுவிக் கொண்டு, தன் அகலமான விழிகளிலிருந்து பிரேமை, ஆனந்தம், கிருதக்ஞை, பதியின் நினைவு, பச்சாத்தாபம், இவைகளால் நிறம்பப்பட்டவளாக கண்ணீர்தாரைகளைச் சொறிந்தாள். (1149)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மணு, ராமலக்ஷ்மணு, லக்ஷ்மணனுக்கு அனன்ய கதித்வமும், மஹா விஸ்வாசமும், பாதசேவையும் கிடைத்தமாதிரி எந்த மனிதனுக்கும் கிடைத்திருக்க முடியாது. உத்தம ஸ்லோகனுன லக்ஷ்மணன் மஹத்தான தபஸ்ஸால் பெரும் பாக்யத்தை அடைந்தான். இரு அஸ்வினி குமரர்கள் போல மஹத்தான அழகும், குணங்களும் பெற்ற அந்த இரு சகோதரர்களையும் நான் நமஸ்கரிக்கிறேன். கண்இமை, இரு உதடுகள், இருகைகள், இருகால்கள், இருகாதுகள், இருநாசிகள் போல ஒத்துமையாக மனம், அடக்கத்துடன் தீர்க்கமான புத்தியை ஆஸ்ரயித்திருப்பதுபோல், அந்த பரமாத்ம அம்சங்களான ராம லக்ஷ்மணர்களை நான் வணங்குகிறேன். பாகவதர்கள் பகவா னுக்கு ஆராதனம் செய்து அந்த பிரஸாதத்தை ஸ்வீகரிப்பது போல, அந்த பரம கைங்கர்யம் செய்த மஹாபாகவத சிரோண் மணியான லக்ஷமணரை ராமனுடன் நான் சேவித்து, அர்ச்சித்து, என் பரமகுருவாய் நினைத்து, அவனுடைய மூச்சுக் காற்றுல் என் குணங்களாகிற பாபங்கள் நசித்து, பரம போக்யமான ராமனை நான் வந்தடைகிறேன். பகவானே பிரதானம், பகவத் சேவையே வாழ்வின் லக்ஷ்யம், பாகவத கைங்கர்யமே பரம ஆனந்தத்தை உண்டுபண்ணுவது, பகவான் பாகவத கைங்கர்யம் ஆகிற இரண்டு பாதங்களையும் நான் அர்ச்சித்து நமஸ்கரித்து என்னை அந்த யக்ஞத்தில் ஆஹுதியாக சமர்ப்பித்துக்கொள்கிறேன். எனக்கு பெரும் தேவிபிராட்டி அருள்பண்ணவேண்டும்.]

அந்த அஹல்யாதேவி தன் மனத்தை கட்டுப்படுத்தி, தைர்யத்துடன் பிரபு ரகுநாதனிடம் பக்திசெய்து கிருபையை வேண்டினுள். பிறகு களங்கமற்றதும் மதுரமான குரலுடன் ஸ்துதி செய்தாள். "ஹே, ரகுராமா, மஹத்தான ஞானத்தால் பெரியது என்று நிச்சயிக்கப்பட்டு பரம ஸ்துதிகளுக்கு போக்ய மான ஸ்ரீ ரகுநாதரே, ஐயா, உமக்கு ஜயம் ஏற்படட்டும். நான்

பரிசுத்தமில்லாத நாரி. ஹே பிரபோ, நீரோ இந்த பதினன்கு லோகங்களேயும் பவித்திரமாக்குபவர். பக்தர்களுக்குச் சுகத்தைத் தருபவர். ராவணனுடைய சத்ரு. அப்போது மலர்ந்த தாமரைப் பூவின் இதழ்போன்ற கண்களே உள்ளவர். ஜன்மமிருத்யு பாபங்கள் நிறைந்த இந்த சம்சார பயத்திலிருந்து மாந்தர்களே விடுவிப்பவர். உம்முடைய பாதகமலங்களே நான் சரணமடைகிறேன். என்னே கிருபைகூர்ந்து ரக்ஷிக்கவேண்டும்.'' (1150)

''என் பதியான கௌதமரால் சபிக்கப்பட்டு தீன ஸ்திதியை அடைந்தேன். அந்த சாபமும் என் நன்மைக்காக பரம அனுக்ரஹமாக ஏற்பட்டது. ஹே ஹரிபகவானே, இந்த நேத்ரங்களால் பவமோசனம் (சம்சாரத்தை தாண்டவைக்கும்) செய்யக்கூடிய எந்த உத்தம ஸ்வரூபத்தை, சங்கர பகவான் பரம லாபம் என்று சதா தியானம் செய்து ஆனந்தமடைகிருரோ, அந்த புண்ய மூர்த்தியாகிய உம்மை நான் இன்று ஆனந்தத்துடன்; ஆசை நிறையும்படி பார்க்கும் பாக்யம் பெற்றேன். ஹே நாதரே, ஜகந்நாதரே, உம்மை நமஸ்கரித்து வேண்டுகிறேன்.'' (1151)

''நான் ஸ்திரபுத்தியில்லாத ஸ்திரி. உம்மை நமஸ்கரித்து வேண்டுகிறேன். எனக்கு வரம் வேறு ஒன்றும் வேண்டாம். ஆனல் என் மனதில் ஒரே ஒரு ஆசை மாத்திரம் இருக்கிறது. ஹே பிரபோ, என் மனம் வண்டு ரூபமாக உங்களுடைய பாத கமலங்களின் ரேணுக்களே, (மகரந்தப் பொடிகளே), பிரேமை ரூபியான ரஸத்தை, ஸதா பானம் செய்ய நான் விரும்புகிறேன்.'' (1152)

''எந்த திவ்யமான பாதங்களிலிருந்து பரம பவித்திரமான தேவ நதியாகிய கங்கை அவதரித்தாளோ; எந்த கங்கையை சிவபெருமான் சதா தன் தலேயில் தரித்துக்கொண்டிருக்கிருரோ; எந்த திவ்யமான பாதங்களே, பங்கஜத்திலிருந்து அவதரித்த பிரும்மா சதா பூஜை செய்கிருரோ, அப்பேற்பட்ட கிருபாளுவாகிய ஹரிபகவானுன நீர், மிக்கக் கருணேயால் உம்முடைய பாதங்களே என் தலேயின் மேல் வைத்தீர். என்னே பாவனமாக்கினீர்.'' இந்த விதமாக ஸ்துதி செய்து அடிக்கடி அடிக்கடி பகவானுடைய பாத கமலங்களில் நமஸ்கரித்து விட்டு கௌதமரின் பத்னியான அஹல்யை மனம் குளிர்ந்து ஆனந்தத்துடன் பதிலோகத்திற்குச் சென்ருள். (1153)

என் பிரபு ராமச்சந்திரன் ஒரு காரணமுமின்றி நிர்ஹேதுவாக தீனஸ்திதி அடைந்தவர்களிடம் தயாளுவாக விருப்பார். துளசிதாஸர் சொல்லுகிருர் ''ஹே மனமே, கபடங்கள் நிறைந்த

கர்மங்களிலிருந்து விலகி, அந்த பிரபுவை பஜிப்பாயாக." (1154)

## மாஸபாராயணம் ஏழாவது நிறுத்தம்

[தியானம்

ஹே உமே, பரமேஸ்வரி, ராஜராஜேஸ்வரி, காமாக்ஷி புவனேஸ்வரி, திருஷ்டா திருஷ்ட பலத்தைக் கொடுக்கும் ஸ்ரீரங்க நாயகி, தர்மக்ஞே, தர்மசாரிணி, கங்கை, யமுனை, வைகை, காவேரி, நர்மதா, கௌசிகி போன்ற அநேக நதிகளால் சேவிக்கப்படும் பாக்யமுள்ளவளே, பாலே, இளம் சூரியன் போல சிவப்பு நிறம் கலந்த பொன்மேனியை உடையவளே, ஸ்யாமையே, சந்திரன், சூரியன், அக்னி, ஆகிய மூன்று நேத்ரங்களை உடையவளே, நாராயணனுடைய தங்கையே, உன் மந்த ஸ்மித முகத்தைப் பார்க்கும் பாக்யத்தைப் பெற்ற நான் ராஜசந்திரனை தலையில் சூடியிருப்பவனும், பக்தர்களின் தாபத்ரயங்களை அழிக்கும் அம்ருத தாரைகளை எவ்விதம் நான் வர்ணிக்க முடியும்? பரமசிவனுக்குச் சுகத்தை அளிக்கும் புண்ணிய மூர்த்தி, நல்ல மணம் தரும் உன் கேச பாரமும், அருள் சுரக்கும் தாமரைக் கண்களும், கஸ்தூரி திலகமும், கோதண்டம் போன்ற விழிப் புருவங்களும், பாசாங்குசம் போன்ற ஆயுதத்தினால் என் பாபங்களையும் பயங்களையும் அறுக்கிறவளும், அபய ஹஸ்தத்தை உடையவளும், மதுரமான ஸரஸ்வதி தேவியின் வீணை நாதத்தைப் போன்ற குரல் உடையவளும், விரிஞ்சி, ஹரி, இந்திரன், போன்றவர்களால் புகழப்படுகிறவளும், நித்யஸ்ரீ நித்ய மங்களமாக விளங்குபவளும், என்னால் "அம்மா" என்று பக்தி பூர்வமாக ஸம்போதனம் செய்யப்படுபவளுமான உன்னை நமஸ்கரிக்கிறேன். கருணை நிறைந்த அலை போல புருவங்களால், அம்மா, என் மனஸை அபஹரிக்கிறாய். நீண்ட சிவந்த தாமரை மலரின் இதழ்போன்ற கண்களின் கரும் விழிகளால் என்னை அனுக்ரஹி. நான் தீனன், மஹா பாபங்களைச் செய்து, உன்னை வந்து அடைய முடியாமல் தவிக்கிறேன். ஹே லக்ஷ்மி, நாராயண ப்ரியே, ஆதிசக்தி, பராசரர் உன்னை இந்திரன் முகமாக, "அம்மா, உன் கருணையையும் உன் சேர்க்கையில்லாமல் சகல சராசரங்களும் உயிரில்லாத வஸ்துக்களாக விருக்கும்; உன் தயவின்றி, கதாதரரான பகவான் விஷ்ணு, ஸர்வ யக்ஞமயமாக விளங்கும் இந்த பிரபஞ்சத்தை, எவ்வாறு நடத்த முடியும்? உன் தயவால் அம்மா, பராசக்தி, சகல ஜீவர்களுக்கும் ஜீவன் தானம்

செய்யப்பட்டிருக்கிறது'' என்று பல விதமாக புகழ்ந்தார். அப்பேற்பட்ட புவனேஸ்வரியை நான் வணங்குகிறேன். ஹே பார்வதி, நீ என்னிடம் பிரஸன்னமடைய வேண்டும். என்னை எந்த காரணம் பற்றியும், எக்காலத்திலும் தள்ளிவிடக் கூடாது. உன் கருணை நிரம்பிய விழிகளை, மீனாக்ஷி, என்மீது போட வேண்டும்.]

ராம லக்ஷ்மணர்கள் விஸ்வாமித்திர முனியுடன் மேலும் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் போகும் வழியில் அகில புவனங்களையும் பாவனமாக்கும் தேவ நதியும் எல்லாப் புண்ய தீர்த்தங்களையும் வகிப்பவளுமான கங்கையைப் பார்த்தார்கள். மஹா ராஜாவான காதியின் புத்ரனான விஸ்வாமித்திரர் எவ்விதம் கங்கை அவதரித்தாள், எவ்விதம் ஸ்வர்க்க மத்ய பாதாளம், என்று சொல்லக்கூடிய மூன்று உலகங்களிலும், கங்கை சஞ்ச ரித்து எல்லோருக்கும் நன்மை செய்கிறாள்; எவ்விதம் பிருத்வி என்று சொல்லும்படி இந்த பூமியில் அவள் அவதரித்தாள் என்கிற சகல விபரங்கள் அடங்கின புண்ய சரித்திரத்தைச் சொன்னார். (1155)

அவ்விதம் சொல்லப்பட்ட பிரபு ராமச்சந்திரன் தன் தம்பியா கிய லக்ஷ்மணனுடனும் ரிஷியோடும் கூடச்சேர்ந்து கங்கையில் ஸ்நானம் பண்ணினார். நதியின் கரையில் வசிக்கும் பிராம்மணர் களுக்கு விதவிதமான தானங்களைச் செய்தார். பிறகு மிக்க சந்தோஷத்துடன் முனியுடன் கூடச் சென்றார். சீக்கிரமாகவே விதேக ராஜ்யத்துக்கு வந்தடைந்தார். (1156)

ராமர் மிக்க அழகான ஜனக மஹாராஜரின் தலைநகருக்கு வந்து, மிக்க சோபையுடன் விளங்கும் அந்த நகரத்தை தன் தம்பி யுடன் பார்த்து மிக்க சந்தோஷமடைந்தார். அநேக கிணறுகள், குளம் குட்டைகள், விசாலமான ஏரிகள், நதிகள், ஒவ்வொன்றி லும் அம்ருதத்திற்குச் சமானமாக விளங்கும் ஜலமும், ரத்னங் களால் அலங்கரிக்கப்பட்டபடி வரிசைகளையும், ஸ்நானக் கட்டங் களையும் பார்த்தார். (1157)

மகரந்த ரஸத்தைக் குடித்ததினால் மதம் ஏறி தன் நிலைமையை இழந்த வண்டுக் கூட்டங்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அநேக நிறங்கள் உடைய பக்ஷிகள், மதுர சப்தங்களுடன் கூவும் பக்ஷிகள் பலவற்றைக் கண்டார். அடேயப்பா, எவ்வளவு விதவிதமான நிறங்கள், சோலைகள், மணங்கள், இவைகளோடு கூடின விலாஸமான தாமரைக் காட்டுக்களையும் பிரபு பார்த்தார்.

சகல ருதுக்களிலும் சுகத்தைத்தரும் சீதள, மந்த, சுகந்தமான காற்றையும் இருக்கக்கண்டார். (1158)

ஸுமனஸ் என்று போற்றப்படும் புஷ்பத் தோட்டங்களும் நந்தவனங்கள் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் காரணத்தால் புஷ்பக் காடுகள்போல விளங்குபவையுமான அநேக இடங்களையும் அவர் தன் தம்பியுடன் பார்த்தார். மிக்க ரமணீயகரமாக விளங்குபவைகளும், பக்ஷிகளுக்கு நிவாஸமும், பூத்துக்காய்த்து, அழகிய இலைகளினாலும் கொடிகளினாலும் அந்த ஜனக மஹா ராஜரின் மிதிலா நகருக்கு அத்யந்த சோபையைத் தருவதுமான பல இடங்களைக் கண்டார். (1159)

அப்பேற்பட்ட மிதிலா நகரின் அழகை யாரால் பூர்ணமாக வர்ணிக்கமுடியும்? எந்த எந்த இடத்தில் மனம் செல்லுகிறதோ, அந்த இடத்திலேயே சோபையினால் அது கவரப்படுகிறது. அழகான கடை வீதிகளும் விசித்திரமான ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட பால்கனிகளை உடையதும், பிரும்மாவினால் தன் சொந்தக் கைகளால் பிரத்யேகமாக நிர்மாணிக்கப்பட்டதோ என்று சொல்லும்படி அவ்வளவு சோபை தரும் நகரத்தை ராமர் லக்ஷ்மணனுடன் பார்த்தார். (1160)

[தியானம்

ஹே ராமா, உன் மனைவியான சீதை அயோநிஜை என்றும், ஜனகரின் புத்ரி என்றும், உன்னைக்காட்டிலும் பிறப்பில் உயர்ந்தவள் என்றும், பிற்காலத்தில் எல்லா தேவர்களும், மானிடர்களும் சகல ஜீவராசிகள் முன்பு புகழ்ந்து சொன்னார்களோ, அந்த ஜனகரின் புத்ரியின் பெருமையை அநேக மகரிஷிகளும், யாக்ஞ்ய வல்கியரும் புகழ்ந்திருக்கிறார்கள். அந்த மஹாத்மாவான ஜனக ராஜ ரிஷி கர்மத்தினால் உன்னை ஆராதித்து பற்றற்ற மனத்துடனும் வெகு சிரமமாக தவத்தினால் சம்பாதிக்கப்பட்ட மன அடக்கத்தினாலும், சத்யத்தினாலும், பக்தியினாலும் விஷ்ணு பகவானாகிய உம்மை ஆராதித்தார். யாக கர்மமும் விஷ்ணு. யாகத்தினால் ஆராதிக்கப்படுகிறவரும் விஷ்ணு. எல்லாவற்றிற்கும் ஈஸ்வரர் விஷ்ணு. வேத வாக்யங்களும் வேதங்களும் விஷ்ணு. யாகத்தைச் சேர்ந்த அங்கங்களும் அனைத்தும் விஷ்ணுவைச் சார்ந்தவை. நான்கு ரித்விக்களால் செய்யப்படும் சாதுர் ஹோத்ரம் என்கிற கர்மமும் விஷ்ணுவினுடையது. அவற்றில் முழுபக்தியுடன் எல்லா உபசாரங்களாலும் பரமாத்மாவே ஆராதிக்கப்படுகிறான். விஷ்ணுவே கிருஷ்ணன், கிருஷ்ணனே ராமன் என்கிற தத்துவ ஞானத்தை

அடைந்து, சிறந்த கர்மத்தைச் செய்து இவ்விதமாக ஈஸ்வரரைப் பற்றற்ற மனத்துடன் ஆராதித்து வந்தவர் மஹா ஞானவான் ஜனக மஹாராஜர். வியாஸரால் ஏவப்பட்ட சுகப் பிரும்மத்திற்கு தத்வ ஞானத்தை உபதேசித்த மஹாராஜ ரிஷி. அப்பேற்பட்ட மஹானை நமஸ்கரித்து நான் விஷ்ணு பகவானை ஆராதிக்கிறேன்.]

அந்த மிதிலையில் குபேரனுக்குச் சமமான அநேக தனிகர்கள் இருந்தார்கள். அநேக வஸ்துக்கள் கொண்ட கடைகளில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அழகான சதுரக்கட்டடங்கள், விசாலமான தெருக்கள், நன்கு நிர்மாணிக்கப்பட்டவைகளாக விளங்கின. அவை மிக்க சுகந்தமான பரிமள வஸ்துக்களினால் தெளிக்கப்பட்டிருந்ததால் எங்கு பார்த்தாலும் நல்ல மணம் வீசியது. (1161)

எல்லோருடைய வீடுகளும் மங்களமயமாக விளங்கின. அநேக சித்ரங்கள் எழுதப்பட்டிருந்தன. காமதேவனே அவ்விதம் சித்ரம் எழுதியிருப்பானோ என்று தோன்றியது. அந்த ஊரில் வசிக்கும் ஸ்திரி புருஷர்கள் சுந்தரமாகவும் பவித்திரமாகவும், ஸாதுக்களின் ஸ்வபாவமுள்ளவர்களாகவும், தர்மாத்மாக்களாகவும், ஞானிகளாகவும், குணசீலர்களாகவும் விளங்கினார்கள். (1162)

எந்த இடத்தில் ஜனக மஹாராஜர் நிவாஸம் செய்தாரோ, அவருடைய உத்தமமான வாசஸ்தலம் (அரண்மனை) பெரிய ஐஸ்வர்யங்கள் நிறைந்த விலாஸங்களுடன் தேவர்களே அவைகளைக்கண்டு ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து போகும்படி, விளங்கின. அவ்விதம் இருக்குமாயின் மனுஷ்யர்களைப்பற்றி சொல்வானேன்? அந்த அரண்மனையைச் சுற்றியிருந்த பெரிய மதில்களும் மனம் ஆச்சரியப்படும்படி விளங்கின. எல்லாவற்றையும் பார்க்குங்கால் ஸமஸ்த புவனசோபைகளும் அவ்விடத்தில் நித்யவாசம் செய்பவனபோல் விளங்கின. (1163)

பெரிய அரண்மனையில் ரத்னங்களாலும் தங்கத்தாலும் வெகு அழகாய் அலங்கரிக்கப்பட்ட கதவுகள் இருந்தன. மஹாலக்ஷ்மியான சீதையின் அந்தப்புரத்தின் சோபையை யாரால்தான் வர்ணிக்கமுடியும்? அவ்வளவு வெகுநேர்த்தியாக விருந்தது. (1164)

ராஜா ஜனகருடைய அரண்மனை வாசல் கதவுகள் ரொம்ப அழகாகவும் வஜ்ர வைடூர்யங்களால் இழைக்கப்பட்டனவாகவும், ரொம்ப பலமுள்ளதாகவும் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் ஸ்துதி செய்யும் வந்திகள், மாகதர்கள், நடனத்தில் தேர்ந்தவர்கள், கான வாத்தியங்களில் தேர்ந்தவர்கள், மல்யுத்தக்காரர்கள் இன்னும்

அநேக விதமான ஜனத்திரள்களும் இருந்தனர். யானைகள் வசிக்கும் கஜ சாலைகள், குதிரைகள் வைத்திருக்கும் குதிராலயங்கள், ரொம்ப பெரியவைகளாகவும் விசாலமாகவும் விளங்கின. ஒவ்வொன்றிலும் அநேக குதிரைகள், யானைகள், ரதங்கள் முதலியவைகளால் நிரம்பப்பட்டு கூட்டங்களாக விளங்கின. (1165)

அநேக சூரர்கள், வீரர்கள், மந்திரிகள், சேனாதிபதிகள் இருந்தார்கள். அவர்களின் வீடுகளும் ராஜாவின் அரண்மனையைப்போல அழகாக விளங்கின. நகரத்தின் வெளியே இருக்கும் குளம், நதிகள் இவைகளின் கரைகளில் அநேக ராஜகுமாரர்கள் கூடாரங்களை அமைத்துக்கொண்டு இருந்தார்கள். (1166)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி, நாராயணரே, கமலாம்பிகே, உமாதேவி, ஈஸ்வரி ஈஸ்வரரே, ராமா, ஜானகிராமா, பொன்மயமான நிறமும் அங்கங்களையும் உடையவளே, பகவானுடைய நித்ய விபூதியே, சாந்தமாகவும் ஒரு மாறுதலை அடையாதவளும், கருணை நிரம்பினவளும், ஸர்வ பூதங்களுக்கும் அபயம் கொடுப்பவளும், மஹாவிஷ்ணுவின் திவ்யமான ரூபத்தை அலங்கரிக்கிறவளும், வீரலக்ஷ்மியும் தனக்கு ஹிதமான வகையில் திருவிளையாடல்கள் புரிந்துவருபவளும், பகவானின் அவதார ரூபங்களுக்கு ஏற்ப அவதரிக்கும் அம்மா, மஹாலக்ஷ்மி, நீ சதா ஹரியுடன் பிரகாசிக்கிறாய். எப்போதும் பிரிவின்றி மஹாவிஷ்ணுவால் அணைத்துக் கொள்ளப்பெற்றுள்ள மகாபாக்யவதியே, காடோபகூடாதி என்று சொல்லும்படி ரூபம், ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலியவற்றின் உறவுகளால் திருமாலுடன்கூட விளங்கும் நீ என்னை சதா கடாக்ஷித்து அருளவேண்டும்.]

விஸ்வாமித்திரர் ஒரு அழகான மாந்தோட்டத்தைப் பார்த்தார். எங்கு பார்த்தாலும் நிழல் உள்ளதும், சுகந்தமான மாருதம் வீசுவதும் பலவிதமான பழங்கள் நிறைந்ததுமான அந்த தோட்டத்தைக் கண்டு, கௌசிக ரிஷி ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து, "ஹே ராஜகுமாரர்களே, இந்த இடம் வெகு நேர்த்தியாக விருக்கிறது" என்று சொன்னார். (1167)

கிருபையின் சமுத்திரமான ஸ்ரீராமச்சந்திரர் "ஹே ஸ்வாமி, அவ்விதமே ஆகட்டும்," என்று சொல்லி முனியுடன்கூட அவ்விடம் தங்கினார். மிதிலாபதியான ஜனக மஹாராஜர் விஸ்வாமித்திர மஹாமுனிவர் வந்திருக்கிறார் என்கிற சமாசாரத்தைக் கேட்டார். (1168)

உடனே பவித்திரமான ஹ்ருதயத்துடன், மிக்க மரியாதையுடனும் ஸ்வாமி பக்தியுள்ள மந்திரிகளுடனும், அநேக படர்களுடனும் (அரசாங்க வேலைக்காரர்களுடனும்) ஸ்ரேஷ்டமான பிராம்மணர்களுடனும், தன் குல குருவான சதானந்தருடனும், தன் குலத்தில் உதித்த ஸ்ரேஷ்டமான பந்துக்களுடனும் இன்னும் அநேக மரியாதைகளுடனும் ஜனக மஹாராஜர் விஸ்வாமித்ர முனிஸ்ரேஷ்டரைப் பார்க்க ஓடிவந்தார். (1169)

மஹாராஜர் அந்த பிரும்ம ரிஷியின் பாதகமலங்களில் நமஸ்கரித்து அவர் பிரசாதத்தை வேண்டினார். முனி ஸ்ரேஷ்டரான விஸ்வாமித்திரர் ரிஷி மிக்க சந்தோஷ மடைந்து ஆசீர்வாதம் பண்ணினார். பிறகு ராஜாவுடன் கூட வந்த பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் அவரை நமஸ்கரித்தார்கள். ராஜா அவர் மிதிலைக்கு வந்தது மஹாபாக்யம் என்று சொல்லி ஆனந்தப்பட்டார். (1170)

அடிக்கடி குசல பிரஸ்னம் செய்து விஸ்வாமித்திரர் அந்த அரசனை உட்காரச் சொல்லி க்ஷேம விலாசங்களைக் கேட்டுக் கொண்டிருந்த சமயம், நகரைச் சுற்றிப்பார்க்கச் சென்றிருந்த ராம லக்ஷ்மணர்கள் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். (1171)

[தியானம்

ஜமதக்னி மஹாரிஷியினால் விசேஷமாக ஆராதிக்கப்பட்ட ஸ்ரீமந் நாராயணா, பரம கிருபாளு, விஸ்வாமித்ர முனிவர், பீஷ்மர், ஜனக மஹாராஜர், துரோணர், திருதராஷ்டிரர், இந்திரன், சுகர் போன்ற இன்னும் அநேகம் அறிவும் ஞானமும் பரபக்தியும் அடைந்த சித்த புருஷர்கள் எந்த கர்மங்களைக் கொண்டு நற் பயன்களை அளிக்கும் தர்மங்களை விருத்தி செய்யும்படி செய்கிறார்களோ, எந்த எந்த கர்மங்களை அவர்கள் செய்தாலும் உன்னால் பிரகாசிக்கப்பட்டு யோகஸித்தி பெற்று எப்பொழுதும் பரமபதமான வைகுண்டத்தைப் பார்க்கிறார்களோ, அப்பேற்பட்ட சிறந்த மஹாபுருஷர்கள் மிக்க ஜாக்ரதையாக விருந்துகொண்டு, உன்னை எதிர்பார்த்துக்கொண்டு பலவிதமாக ஸ்தோத்ரம் செய்வதின் மூலம் பரமாத்மாவை அடைகிறார்கள். அந்த பரமாத்மாவே தன்னுடைய பரம ஸௌலப்யத்தினால் அப்பேற்பட்ட கர்மங்களை அனுஷ்டிக்கும் மஹாபுருஷர்களைத்தானே வந்தடைகிறார். அது மாத்திரமா, ஹே, ஹரிவல்லபே, விஸ்வாதீதனும், சர்வதோமுகனும், ஸர்வேஸ்வரனுமான ஸ்ரீராமனை, கிருஷ்ணனை, நாராயணனை சதா விட்டுப் பிரியாமல் நீ இருக்கிறாய். ஹே மஹாலக்ஷ்மி, ஸர்வ பூதங்களுக்கும் ஹிதத்தை நினைப்பவளே, கமலா, தர்மநிலையில்

இருப்பவளே, வஸுதே, பிரகிருதி என்று சொல்லப்பட்ட பூமியில் அயோநிஜையாகத் தோன்றி ஜனக மஹாராஜர் வீட்டில் தோன்றி, அவர் மகளாக வளர்ந்தாயே. உங்கள் இருவருடைய சௌலப்யாதி குணங்கள் பெரிய அர்த்தம் நிறைந்துள்ள திருவிளையாடல்களாக விளங்குகின்றன. அப்பேற்பட்ட உங்கள் இருவரையும் கர்மத்தினால் ஆராதித்த ஜனக மஹாராஜர் பிரியமான பக்தனாகவும், ஸ்நேகிதன் போலவும், பந்து போலவும் ராஜகாரியங்களைச் செய்துகொண்டு முனி ஸ்ரேஷ்டர்களை அடுத்து, ஸத்துபதேசம் பெற்று, அநேக க்ஷேமங்களை அடைந்தார். அப்பேற்பட்ட கருணை நிறைந்த உன் உள்ளத்தையும் தான் நினைத்து, எதிர்பார்க்காமல் திடீரென்று ஆவிர்பவத்த ஆஞ்சநேயர், உம்முடைய திவ்ய ஸ்வரூபத்தில், முதன் முதலில் உம்மைக்கண்டு பக்திபரவசராக ஆனதுபோல், ஈடுபட்டார். கருத்த மேகம்போல் பொழியும் உன் கருணைக்கண்களையும், என் மனதை அபஹரிக்கிறதான சஞ்சலமான புருவங்களின் அழகான விலாஸங்களையும், சம்பகம் போன்ற நாசியையும், அழகான மயிர்த் தோகைகளையும், மிக்க சாந்தியுள்ள இரு நேத்ரங்கள், கருணை நிரம்பிய விளையாட்டுப் பார்வை உலகம் முழுவதும் வாழச் செய்கின்ற அமுதமான குளிர்ந்த பார்வை எல்லாவற்றையும் பார்த்து, ஜனக மஹாராஜர் ஜனக மஹரிஷி, பெரிய ராஜரிஷியாகவிருக்கும் அந்த மஹாத்மா, ஆனந்த சாகரத்தில் மூழ்கினாரே. அவர் எனக்கும் தயை செய்வாரா? அநாதனான என்னையும், என் பேரிலும் பார்வையைச் செலுத்தமாட்டாரா ?]

ஸுகுமாரர்களும், நல்ல யௌவன வயதுள்ளவர்களும் சியாமள நிறம், நல்ல சிகப்பு நிறங்கள் உள்ளவர்களுமான அந்த இரு அஸ்வினி குமாரர்கள் போலவிருக்கும் இரு ராஜகுமாரர்களையும் விதேக மூர்த்தியான ஜனகர் கண்டார். ஆஹா! எப்பேற்பட்ட அழகு! நேத்திரங்களுக்கு பரம சுகத்தை அளிப்பவர்களும், பார்ப்பவர்களின் எல்லோருடைய சித்தத்தை அபஹரிக்கும் பரம சௌந்தர்யமுள்ள ஸ்ரீராமரைக் கண்டு, ஜனகமஹாராஜர் தன்னையும் அறியாமல், அவருடைய தேஜஸின் பிரபாவத்தால், கட்டுப்பட்டு உடனே ஆஸனத்திலிருந்து எழுந்தார். விஸ்வாமித்திர முனிவர் அந்த ராமலக்ஷ்மணர்களைத் தன் பக்கம் உட்கார வைத்துக்கொண்டார். (1172)

அந்த இரு குமாரர்களையும் மற்ற யாவரும் கண்டு களித்தார்கள். தங்கள் பெரிய விசாலமான நேத்திரங்களால் ராம

னுடைய திவ்ய சௌந்தர்ய அழகை அனுபவித்தார்கள். அவர் களுடைய சரீரம் புளகாங்கிதமடைந்தது. எப்பேற்பட்ட திவ்ய மங்கள மூர்த்தி ஸ்வரூபம். மனோகரமான திவ்ய விக்ரஹம். விதேகராஜர் தன் வசம் இழந்தார். (1173)

அவருடைய மனம் பிரேமையினால் கவரப்பட்டு, தன்னை ராமனிடம் அர்ப்பித்துக்கொண்டார். சிறந்த விவேகம் படைத்த மஹாராஜர் சீக்கிரம் தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு முனி ஸ்ரேஷ்டரான விஸ்வாமித்திரரின் பாதகமலங்களில் நமஸ்கரித்து, பிரேமை நிரம்பினதும் மதுரமான வசனங்களைச் சொன்னார். (1174)

" ஹே நாத, தயவு செய்து சொல்லுங்கள். இந்த இரண்டு சுந்தர பாலகர்கள் முனி குலத்திற்கே சிறந்த திலக பூஷணங்க ளாக விளங்குபவர்களா, அல்லது எந்த ராஜ வம்சத்தில் உதித்த வர்களாகவிருக்கிறார்கள்? அல்லது வேதங்கள் எந்த மஹா புருஷரை ஓயாமல் சொல்லியும், புகழ்ந்தும், கானம் செய்தும், முடிவை அடையாமல் திணறுகின்றனவோ, அப்பேற்பட்ட பரம புருஷன் இரு வேஷங்களைத் தரித்துக்கொண்டு, இரு ராஜ குமாரர்களாக இவ்விடம் வந்திருக்கிறார்களா?" (1175)

"என் மனமானது ஸ்வபாவமாகவே வைராக்யத்தை அடைந்துள்ளது. ஆனால் இவர்களைக் கண்டதும், என்னையுமறி யாமல் நான் இவர்கள்பால் ஆகர்ஷிக்கப்பட்டு, மஹா பற்று தலை அடைந்து, பிரேமையினால் சந்தோஷமடைகிறேன். சகோரபக்ஷி பூர்ண சந்திரனைக் கண்டு ஆனந்தம் அடைவது போல, ஸ்வாமி, நான் சந்தோஷிக்கிறேன். ஹே கிருபாளு, உம்மிடம் ஸத்யமாகவே பேசுகிறேன். என்னிடமிருந்து ஒன்றும் மறைக்க வேண்டாம். இவர்கள் யாரென்று தயவுசெய்து கூறுங்கள்." (1176)

" இப்பேற்பட்ட இரு சுந்தர புருஷர்களைக் கண்டு அத்யந்த பிரேமை அடைந்து, என்னுடைய மனம் மஹத்தான பிரும்ம சுகத்தைக்கூட தியாகம் செய்வதுபோலிருக்கிறது" என்று ஜனகர் சொல்லியதும், விஸ்வாமித்திரர் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார். "ஹே ராஜன், நீர் யதார்த்தத்தைச் சொன்னீர். உம்முடைய வசனங்கள் ஒருக்காலும் பொய்யாகாதவை." (1177)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, லக்ஷ்மிநாராயணா, க்ஷீரஸமுத்ரபுத்ரி, மூன்று லோகங்களுக்கும் எஜமானி, பத்மா, கமலம் போன்ற

வளே, உன் பெருமைகளையும் நாராயணருடைய கீர்த்திகளையும் முடிவாக அறிந்தவனும் கானம் செய்பவனும் இருந்ததில்லை, இருக்கப்போகிறதில்லை. நாராயணு, ராமா, சீதாராமா, கிருஷ்ணு, ருக்மிணி சத்யபாமா சகித ராஜகோபாலா, கோவிந்தா, அச்சுதா, கேசவா, விஷ்ணோ, வாசுதேவா, தங்களுடைய பல நாமங்களே சிரேயஸை அளிக்கவல்லது என்று அறிந்த பீஷ்மர், ஜனகர், வால்மீகி, நாரதர், தர்மபுத்ரர், ஆஞ்சநேயர், தியாகராஜர் ஆகிய மகான்கள் காட்டிய வழிகளை பின்பற்றித்தான் நான் அடிக்கடி உங்கள் திருநாமங்களைச் சொல்லுகிறேன். எல்லோருக்கும் மேம்பட்ட உங்களுடைய வாத்ஸல்யம், பரிபூர்ண அன்பு, நிர்ஹேதுவினுல் காட்டும் தயை, உங்கள் பரந்த மனஸ் இவைகளடங்கிய கல்யாண குணவிசேஷங்களை அடிக்கடி கானம் செய்வதால், ஹே ஸ்வாமி, அதுவும் உன் ஆத்ம திருப்திக்காகச் செய்து, நான் சந்தோஷமடைகிறேன். என் முயற்சிகளில் எவ்வளவு தோஷமிருந்த போதிலும், அபார கருணைக்கடலாகிய தாங்கள் என்னை அங்கீகரிக்க வேண்டும். என் பூஜை ஆராதனம் தியானம், கர்மங்கள், ஞானத்தினுல் செய்யப்படுவன எல்லாம் அங்கீகரித்து ஸ்வாமி, தங்கள் சரணங்களையே நம்பியிருக்கும் என்னைக் கஷ்டப்படுத்தாமல் என் பயங்களை நீக்கி, என்னை சதா காக்கவேண்டும். அளவு கடந்த மகிமை பெற்ற உங்கள் திவ்ய செளந்தர்யமான ரூபம் ஸங்கங்கள் தீர்ந்த முனிவர்களின் மனத்தில் நிச்சயமாகத் தோன்றுவது போல என் மனத்திலும் சிறந்ததாக விளங்க வேண்டும்.]

''இந்த ஜகத்தில் எந்த இடத்தில் எத்தனையோ பிராணிகள் இருக்கின்றனவோ, அப்பேற்பட்ட எல்லா ஜந்துக்களுக்கும் இவர் மிக்கப் பிரியர்.'' அந்த பரம பக்தரான விஸ்வாமித்திரரின் அர்த்தங்கள் நிறைந்ததும், ரஹஸ்யங்கள் நிறைந்ததுமான வசனங்களைக் கேட்டு ஸ்ரீராமர் மனத்திற்குள் சிரித்துக் கொண்டார். (ஏன் சிரித்தார் தெரியுமா, ரஹஸ்யத்தை சங்கேதத்தினுல் சொல்லுகிருரே, வெட்டவெளிச்சமாகச் சொல்லவில்லையே என்று தான் அவர் நினைத்தார்.) '' ரகுகுல மணி மஹாராஜரான தசரத மன்னரின் குமாரர்கள் இவர்கள். என்னுடைய ஹிதத்திற்காக தயாளுவான தசரத மஹாராஜர் இவர்களை என்னுடன் கூட அனுப்பியிருக்கிருர்.'' (1178)

'' இந்த ராமலக்ஷ்மண சகோதரர்கள் ஸ்ரேஷ்டமான ரூபத்திற்கும் சீலத்திற்கும் பலத்திற்கும் பொக்கிஷம். நான் சொல்லுகிற வசனங்களுக்கு இந்த சகல ஜகம் முழுவதும்

சாக்ஷி. இவர்கள் கடும்யுத்தத்தில் அசுரர்களை ஜயித்து, என்னுடைய யக்ஞத்தை ரக்ஷித்தார்கள்,'' என்று விஸ்வாமித்திரர் சொன்னார். (1179)

ராஜா சொல்ல ஆரம்பித்தார். ''ஹே முனிஸ்ரேஷ்டரே உங்களுடைய மங்களகரமான சரணங்களைக் கண்டேன். அவைகளைக் காண்பதற்கு என்னுடைய புண்ணிய பிரபாவம் சொல்லமுடியாதபடி அளவு கடந்தது. இப்பேற்பட்ட சுந்தரமான ஸ்யாம, சிகப்பு நிறங்கள் கொண்ட இந்த இரு ராஜபுத்திரர்களையும் கண்டு மிக்க ஆனந்தமடைகிறேன். இவர்கள் என் மனத்தை அதிகமாக குளிரப்படுத்துகிறார்கள்.'' (1180)

''இவர்களுடைய பரஸ்பர ப்ரீதி பரம பவித்ரமானது. உள்ளிருந்து பொங்கும் ஆத்ம ப்ரீதி உள்ளவர்கள். இவர்களுடைய விஸ்வாசத்தை வார்த்தைகளால் விவரிக்கமுடியாது.'' இவ்விதமாக விதேகராஜர் ஆனந்தம் மேலிட்டு மீண்டும் சொன்னார். ''நாத, தயவுசெய்து கேளுங்கள். பிரும்மம் ஜீவன் இவர்களைப் போல பரஸ்பர ஸ்வாபாவிகமான சிநேகம் இவர்களிடம் இருக்கிறது.'' (1181)

[தியானம்

ஹே நாராயணா, லக்ஷ்மிபதி, ஜானகிராமா, ஐயா, நீ சர்வலோகபிரபு. எல்லாவற்றிற்கும் முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட நாரங்கள் என்கிற ஜலங்களை உமது கர்ப்பத்தில் தரித்து, ஜலத்தில் பள்ளிக்கொண்டீர். ஹே கிருஷ்ணா, ராமா, எந்த ஜலத்தில் படுத்திருந்து தங்களிடத்தில் எல்லா ஜீவர்களும் வந்து லயத்தை அடைந்ததுகளோ, அப்பேற்பட்ட லக்ஷ்மி ஆஸ்ரிதரான நாராயணரே, தங்களுடைய நாபியில் முதலில் ஒரு பத்மம் மாத்திரம் காணப்பட்டது. அந்த புஷ்பத்தைத்தான் முனி ஸ்ரேஷ்டர்கள் உலகமாகவும், திக்குக்களை அந்த புஷ்பத்தின் இதழ்களாகவும், மேரு மலையை மொட்டாகவும் சொல்லுகின்றனர். அப்பேற்பட்ட மகிமையுள்ள ஸ்ரீராமா, உன்னுடைய ஆதி புருஷ ஸ்வரூபத்தை நான் நமஸ்கரிக்கிறேன்.]

அந்த மஹாராஜர் அடிக்கடி பிரபுவின் சௌந்தர்யத்தைக் கண்டு தன் பார்வையை ஆசை நிரம்பாமல் வேறிடத்தில் செலுத்த மனமில்லாதவராக, சரீரம் புளங்காகித மடைந்தார். ஹ்ருதயத்தில் பிரேமை வெள்ளம் பொங்கியது. விஸ்வாமித்திரரை அடிக்கடி புகழ்கிறவராகி, அவருடைய பாத சரணங்களை நமஸ்கரித்து அவரை தன் ஊருக்கு அழைத்துச்சென்றார். (1182)

சகல ருதுக்களிலும், எல்லாக்காலங்களிலும் சுகத்தை அளிக்கக்கூடியதுமான ஒரு அழகான அரண்மனைக்குச் ஜனக மஹாராஜர் அவர்களைக் கூட்டிச்சென்று, அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்துகொடுத்தார். பிறகு எல்லாவிதத்திலும் அவர்களுக்குப் பூஜைசெய்து, அவர்களுடைய சௌகர்யங்களை கவனிக்க வேலைக்காரர்களை நியமித்து, அந்த அரசர் அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். (1183)

ரகு குலமணி ஸ்ரேஷ்டரான அந்த ஸ்ரீராமச்சந்திரன் விஸ்வாமித்திரருடன் போஜனம் செய்து, கொஞ்சம் சிரமபரிஹாரம் செய்துகொண்டு, தன் தம்பி லக்ஷ்மணனுடன் உட்கார்ந்துகொண்டிருந்தார். இவ்விதமாக முன்பகல் கழிந்தது. (1184)

லக்ஷ்மணரின் மனத்தில் ஒரு ஆசை ஏற்பட்டது. ஜனகபுரியைச் சுற்றிப்பார்க்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனைக் கேட்க பயமாக விருந்தது. முனியிடம் கேட்க சங்கோஜமாகவு மிருந்தது. தன் மனத்திற்குள் சிரித்துக்கொண்டு பேசாமலிருந்தான். (1185)

ஸர்வ அந்தர்யாமியான பகவானான ராமன் தன் சகோதரனுடைய அபிலாஷையைப் புரிந்துகொண்டார். பக்தவத்ஸலரான அவர் தம்பியின் கோரிக்கையை நிறைவேற்ற எண்ணங்கொண்டார். அவருடைய ஹ்ருதயம் பக்தனின்பால் அதிக ஸ்நேகத்துடன் சென்றது. உடனே குருவின் உத்தரவைப்பெற எண்ணங்கொண்டு அதிக வினயத்துடன் பிரபு சிரித்துக்கொண்டு பேசினார். (1186)

"ஸ்வாமி, லக்ஷ்மணன் ஊரைச்சுற்றிப் பார்க்க ஆசைப்படுகிறான். ஆனால் உம்மிடமிருக்கும் பயத்தினாலும், சங்கோசத்தாலும் ஸ்பஷ்டமாக கேட்கவிரும்பவில்லை. உங்களுடைய உத்தரவு எங்களுக்குக் கிடைக்கும் பக்ஷத்தில் இவனுக்கு நான் இந்தநகரை சுற்றிக் காண்பித்துவிட்டு சீக்கிரமாக கூட்டி வந்து விடுகிறேன்." (1187)

முனீஸ்வரர் இந்த வார்த்தைகளைக் கேட்டபின்பு பிரேமை ஸஹிதமாக பதில்சொன்னார். "ஹே ராமா, நீதியை ரக்ஷிப்பதில் எப்படி நீ தவறுவாய்! குழந்தை, நீதர்மத்தின் வியவஸ்தையை (மரியாதையை) காப்பாற்றுகிறவன். பிரேமையின் வசமடைந்து, உன் சேவகர்களுக்கு சுகத்தை நீ அளிக்கிறவன். தர்மத்தின் வியவஸ்தையைக் காப்பாற்றுவதிலும், பிரேமை வசம் அடைந்த பக்தர்களுக்கு சுகத்தை வாரி அளிப்பதிலும், உன்னைப்போல யார் இருப்பார்கள்?" (1188)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி, நாராயணா, உயர்ந்த தூக்கிய நவ சம்ப கப்பூ போன்ற மூக்கையுடையவனும், பச்சை மணியால் செய்யப் பட்ட கண்ணாடிபோல விளங்கும் பளபளப்பான கன்னப் பிரதே சங்களும், வளைந்த சுருண்ட மயிர் சுழல்களும், ஆச்சரியகரமான ரவிலோசனங்களும், காதுகளில் அலங்கரிக்கப்பட்ட மகராகிருதி யான இருகுண்டலங்களும், கோவைப் பழம்போன்ற இரு உதடு களும், உள்ளூர சந்தோஷத்தால் ஏற்படும் மந்தஹாஸமும், பூர்ண சந்திரன்போன்ற முகமும், ஊர்த்வபுண்டரம் தரித்த விசாலமான நெற்றியும், மதுரமான வார்த்தைகளால் என் புண்பட்ட மனத் தையும் தேகத்தையும், சந்தோஷமடையச் செய்தவரும் ஆஞ்ச நேயர் ஜானகியிடம் வர்ணித்த ராமனை, நான் எப்போது பார்ப் பேன்? கருணைக்கடல்போல விளங்கும் என் பரமாசாரியார்கள் எவ்வளவு காலம் என்னை கஷ்டப்படுத்தி அனுகிரஹிப்பார்கள்? எவ்விதம் அம்மா, உன் கருணை என்மீது ஏற்படும்? கதியற்ற என்னை எவ்விதம் எப்போது ராமா, நீ கடாக்ஷிக்கப்போகிறாய்?]

சுகத்திற்கு இருப்பிடமாக விளங்கும் இரு சகோதரர்களையும் பார்த்து, விஸ்வாமித்திரர் சொன்னார். "இங்குமங்கும் சென்று, நகரத்தைச் சுற்றிப்பார்த்து வாருங்கள். உங்களுடைய திவ்ய வதனங்களைக் காட்டி, நகர நிவாஸிகளின் நேத்ரங்களுக்கு பெரும்பயனை அளியுங்கள்" என்று சொன்னார். (1189)

சகல லோகத்தின் ஜனங்களின் கண்களுக்கு சுகத்தைத் தரக்கூடிய அந்த இரு சகோதரர்களும் முனியினுடைய சரண கமலங்களை வந்தனம்செய்து புறப்பட்டார்கள். பாலகர்களின் கூட்டம் ஒன்று, அந்த சுந்தர புருஷர்களின் வடிவத்தைக்கண்டு அவர்களுடன் கூடச்சென்றது. (1190)

மஞ்சள் நிறமான வஸ்திரங்கள், இடுப்பிலும் பட்டு மஞ்சள் பீதாம்பரங்கள் அணிந்து கொண்டிருந்தார்கள். இருகைகளிலும் அழகான தனுஷ்பாணம், சியாம, சிகப்பு வர்ணமுள்ள இரு சகோதரர்கள். அந்த நிறங்களின்மேல் அனுகூலமானதும் அதி சோபையைத்தரும் சந்தனபூச்சுகள். அந்த திவ்ய மங்கள ரூபங் கள் ரொம்ப மனோஹரமாக விளங்கின. (1191)

சிம்மத்திற்கு சமமான பிடரிகள் போன்ற கழுத்துக்கள். தீர்க்கமானதும், விசாலமான கைகள். மார்பு பிரதேசத்தில் அத்யந்த சுந்தரமாக விளங்கும் யானை முத்துக்களுடன் ரத்னங் கள் பதித்த மாலைகள். அழகான பூத்த தாமரைப்பூவைப் போன்ற லோசனங்கள். ஆதி ஆத்மிக, ஆதிதைவிக ஆதிபௌதிக

ஆகிய தாபதிரயங்களைப் போக்கும் குளிர்ச்சியான பூர்ண சந்திரனைப் போன்ற அழகான முகம். (1192)

இரு காதுகளிலும் தங்கத்தால் செய்யப்பட்ட குண்டலங்கள் அதிசோபைகளுடனும், பார்ப்பவர்களின் சித்தத்தை அபஹரிக்கும் தன்மையைப் பெற்று விளங்கின. அந்த அணிகள் அம்ருதமயமாகவும், மனோஹரமாகவும் திருஷ்டிகளை வீசிக்கொண்டு, வளைந்ததும் அழகானதுமான இரு புருவங்களுடன் விளங்கின. நெற்றியில் திலகத்தின் ரேகைகள் அழகு மூர்த்திகளின் பிம்பங்களில் முஹர் வைத்தாற்போல அழகாய் விளங்கின. (1193)

தலையில் நான்கு மூலைகளுடன் சதுரமுள்ள அழகான தொப்பிகள். அந்த தலைமயிர்களின் குஞ்சித சுழல்கள் கருமை நிறமாகவும், அடர்த்தியாகவும் சுருண்டு அலைபோல தொங்கின. கீழே நகத்திலிருந்து தலைவரை ரொம்ப அழகாக, ரொம்ப சோபையாக எந்த இடத்தில் எவ்விதம் அழகு விளங்க வேண்டுமோ, அவ்விதம் ஒவ்வொரு அங்கமும் பரம சௌந்தரியத்துடன் விளங்கியது. (1194)

அந்த ஜனக மஹாராஜரின் தலைநகரில் வசிக்கும் ஜனங்களும் அப்பேற்பட்ட ராஜகுமாரர்கள் நகரத்தைச் சுற்றிப் பார்க்க வருகிறார்கள் என்கிற சமாசாரத்தைக் கேட்டதும் தங்கள் வீடுகளையும் வேலைகளையும், விட்டு அவர்களைக் காண்பதற்கு, எப்படிதரித்திரர்கள் பெரிய பொக்கிஷத்தை சின்னபின்னமாக ஆக்க ஓடிவருவார்களோ, அவ்விதம் ஓடிவந்தார்கள். (1195)

ஸ்வாபாவிகமாகவே அந்த அழகான இரு சகோதரர்களைக் கண்டு அந்த ஜனங்கள் தங்கள் நேத்ரங்கள் கிருதார்த்தமடைந்தன என்கிற சுகத்துடனும் மனசந்தோஷத்துடனும் வீடு திரும்பினார்கள். அந்த ஊரிலிருக்கும் யுவதிகள் ஜன்னல்களின் ஓரத்தில் நின்றுகொண்டு, பிரேமையுடன் அந்த ராம ரூபத்தை அனுராகத்துடனும், அதிக ஆவலுடனும் கண்டுகளித்தார்கள். (1196)

அவர்கள் தங்கள் சகிகளுடன் அதிக பிரேமையினால் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். "ஹே, தோழி, இந்த மஹாபுருஷர்கள் கோடிக்கணக்கான காமதேவர்களை ஜயிக்கும் பரம சௌந்தர்யத்துடன் விளங்குகிறார்கள். தேவ, மனுஷ்ய, அசுர, நாக, முனிகணங்களில் இவ்வளவு அதி சௌந்தர்யத்துடன் விளங்கும் சோபையைக் கேட்டதில்லை." (1197)

"பகவான் விஷ்ணுவுக்கு நான்கு கைகள்; பிரும்மாவுக்கு நான்கு முகங்கள்; பரமசிவனுக்கு பரம பயங்கரமான வேஷத்துடன் கூடிய ஐந்து முகங்கள் இருக்கின்றன. ஹே சகி, வேறொரு தேவதை கூட இவ்வளவு அழகாய் இருந்ததில்லை. இவர்களுடைய அழகுக்கு உபமானமாகச் சொல்லும்படி வேறொரு தெய்வமும் சொல்லுவதிற்கில்லை." (1198)

[தியானம்

ஹே பகவான், மஹாலக்ஷ்மி, ஜனகரின் பிரியையான புத்ரியே, உங்களுடைய தயை எப்போது கிடைக்கும்? முன் காலத்தில் மஹாலக்ஷ்மியே, உன்னிடம் ஒருவன்மேல் குற்றம் சொன்னாலும், "என் அடியார் குற்றம் செய்யார், அப்படி குற்றம் செய்தாலும் அது குற்றமாக இராது" என்று பக்தர்களைக் காப்பாற்றும் எண்ணத்துடன் கருணாமூர்த்தியான நீ சொல்லுவாய். சீதையாகிய உன்னை காகாசூரன் சரணமடைந்தான். இந்திரனுடைய புத்ரனாகவிருந்தபோதிலும் அவன் செய்த அபராதத்திற்கு ராமன் மன்னித்தார். மஹாலக்ஷ்மியான சீதையிடம் ஏகாந்தத்தில் இருக்கும்போது, "தங்களுக்குப் பிரியமான தர்மம் எது?" என்று சீதை வினவ, "பிறர் துக்கப்படுவதைப் பார்த்தால் ஸஹிக்காமல் இருப்பதே உத்தமமான தர்மம், அதே எனக்கும் பிரியம், அதுவே எனக்கு ஸ்வபாவம்," என்று தாங்களே சொல்லக் கேட்டதாக சீதை ஆஞ்சநேயரிடம் சொன்னாள். அப்படிப்பட்ட மஹாதயாளுவான சீதாராமனை நான் நமஸ்கரித்து என் பாபங்களையும், தோஷங்களையும் போக்க வேண்டுகிறேன். கௌஸல்யையின் புத்ரனாகிய நீ லோகரக்ஷணத்திற்காகவும் லோகோபகாரத்திற்காகவும் பிறந்தாய். அந்த மஹாபுண்யவதியின் உத்தேசம் வீணாகுமா? நீ ரக்ஷிக்கவேண்டிய லோகத்தில், ஐயா, நானும் சேர்ந்தவனாக எண்ணி, என்னை நீ ரக்ஷிக்கவேண்டும். "காலதாமதத்தை ஸஹிக்கமுடியாமல் நான் துரிதப்படுத்துகிறேன்," என்று நினைத்துக்கொள். உன் ரக்ஷிக்கும் சக்தியை நான் வேண்டினால் போதாதா? "ஆகையால் அவர் கருணையும் அன்பும் என்மீது குறையாமல், அவர் ரக்ஷணசக்தி குறையாமல் இருப்பதற்கும் பிரார்த்திக்கிறேன்," என்று சீதை சொன்னாள் ஆஞ்சநேயரிடம். அந்த ரகுவீரனுக்கு நான் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கிறேன். மஹாலக்ஷ்மியான ஜானகியே, அவரிடத்தில் அவ்விதம் பிரார்த்திக்க வேண்டியதிருந்தால், இந்த நமஸ்காரத்தைத் தவிர

  

நான் செய்யவேண்டியது என்ன? வேறு ஒன்றுமில்லை தாயே. பிரும்மஹத்தி பிடித்த இந்திரனை அஸ்வமேதம் என்கிற வைஷ்ணவ யாகம் எவ்விதம் காப்பாற்றியதோ, எந்த ராமனை தியானம் பண்ணின சீதையின் சூடாமணி ராம சீதையை எவ்விதம் சேர்த்துவைத்ததோ, அவ்விதம் ராமநாமம், நாம ஜபம், ராமத்யானம் என்னை அவரிடம் சேர்க்கவேண்டும். சீதாபிராட்டி, வாத்ஸல்யமுள்ள லோகமாதா, நீ சதா என்னை கடாக்ஷிக்கவேண்டும். தயாபரி, கருணைக்கடலே, விஸ்வதாத்ரே, ஸர்வஹிதப்ரியே, தஞ்சம், நீ எனக்கு தஞ்சம்.]

"இந்த ராஜகுமாரர்கள் இளம் வயதினர்கள். அழகின் இருப்பிடம். கருத்த நீலநிறம் ஒருவர், நல்ல சிகப்பு வர்ணம் மற்றொருவர், இருவர்களும் சுகத்திற்கு இருப்பிடம். ஒவ்வொரு அங்கம், அங்கமாக கோடிக்கணக்கான காமதேவர்கள் சௌந்தர்யத்தை வாரி இறைத்துக்கொண்டிருக்கிறார்கள்." (1199)

"ஹே பிரியே, இவர்களைப் பார்த்து, சரீரம் எடுத்துள்ள ஜீவன் எவனும், இப்பேற்பட்ட மதன சுந்தரர்களைப் பார்த்து மோஹம் அடையாமல் எங்கு இருக்கக்கூடும்? ஜடசேதனர்கள் சகிதம், ஸகல சராசரராசிகளும் இந்த ஆச்சர்யமான அழகுரூபத்தைக் கண்டு மோஹித்துவிடுமே?" இவ்விதமாக ஒரு தோழி மற்றொரு தோழியிடம் பிரேமை நிறைந்த மதுரமான வாணியில் சொன்னாள். "நான் எதைக் கேட்டேனோ அதையும் சொல்லுகிறேன் கேளு, தோழி" என்று வேறிடத்தில் மற்றொருத்தி சொல்லிக்கொண்டிருந்தாள். "இந்த சுந்தர இரு ராஜகுமாரர்கள் மஹாராஜா தசரதரின் புத்ரர்கள். பால ராஜ ஹம்ஸங்களின் ஜோடிபோல சுந்தரமாக விளங்குகிறார்கள். இவர்கள் இந்த பரம முனிஸ்ரேஷ்டரான விஸ்வாமித்திரரின் யாகத்தை ரக்ஷித்த யக்ஞ ரக்ஷகர்கள். இவர்கள் யுத்த மேடையில் ராக்ஷஸர்களைக் கொன்றவர்கள்." (1200)

"எந்த ராஜகுமாரனுடைய நிறம் ஸ்யாம (இந்திர நீலக் கல் போன்ற நிறம்) நிறமாகவும், எந்த மஹா புருஷனுடைய நேத்ரங்கள் கமல புஷ்பத்தைப் போல இருக்கின்றனவோ, அவர் மாரீசன், சுபாகு என்கிற ராக்ஷஸர்களின் கர்வத்தைப் போக்கினவர். சுகத்திற்கு பொக்கிஷம். எந்த ராஜகுமாரனிடம் தனுஷ்பாணம் கையிலிருக்கிறதோ, அந்த ராஜகுமாரன் கௌஸல்யா தேவியின் புத்ரன். இந்த ராஜகுமாரன் பெயர் ராமன்." (1201)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயண லக்ஷ்மி, உங்களுடைய திவ்ய மான பாதங்கள் எவ்வளவு புனிதமானவை. அகல்யை கல்லி லிருந்து பெண் ஆனாள். கங்கை உங்கள் பாதத்திலிருந்து உண் டானாள். உன் நாமம் கஜேந்திரனை மஹத்தான ஆபத்திலிருந்து காப்பாற்றியது. மஹாலக்ஷ்மியின் அம்சமான திரௌபதியை மானத்திலிருந்து காப்பாற்றியது. பிரஹ்லாதனை பெரிய பயங் களிலிருந்து உன் நாமதேயம் காப்பாற்றியது. அஜாமிளன் உன் பெயரைச் சொல்லி கூவி அழைத்து, யம படர்களிடமிருந்து விடு பட்டான். வால்மீகி, "ராமா," என்கிற பதத்தை "மரா", "மரா" என்று தப்பி மாறுதலாக கூவி அழைத்தும், உன் அரு ளைப் பெற்றார். துருவன் சிறு வயதில் உன் நாமத்தை ஜபித்து, வாசுதேவரின் அருளைப் பெற்றான். ஆகையால் உன் நாம ஜபத்தை கைப்பிடித்து, உன்னையே நான் நம்பியிருக்கிறேன். நீதான் தயை செய்யவேண்டும். என்னை எந்த தோஷத்தினாலும் பாபத்தினாலும், கைவிட்டுவிடாதே.]

"எந்த ராஜகுமாரன் சிகப்பாகவும் ராமனுக்கு சிறியவனாக வும் இருக்கிறானோ, ரொம்ப அழகாகவும் கைகளில் தனுஷும் பாணத்துடன் ஸ்ரீராமனுக்குப் பின்னால் செல்கிறவனாக இருக்கி றானோ, அவன் ராமனுடைய தம்பி. அவன் பெயர் லக்ஷ்மணன். ஹே ஸகி, கேளு, அவனுடைய தாயார்தான் ஸுமித்திரை." (1202)

"இந்த இரு ராஜகுமாரர்களும் பிராம்மணரான விஸ்வா மித்ரர் ரிஷியினுடைய கார்யத்தைப் பூர்த்தி பண்ணி, வழியில் கௌதம முனிவருடைய பத்னியான அஹல்யையை சாபத்தி லிருந்து உத்தாரணம் பண்ணி, இங்கு நடக்கப்போகும் தனுஷ் யக்ஞம் பார்ப்பதற்கு வந்திருக்கிறார்கள்." இதைக் கேட்டதும் அங்கிருந்த ஸ்திரிகள் யாவரும் சந்தோஷப்பட்டார்கள். (1203)

ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பரம ஸௌந்தர்யத்தைக் கண்டு ஒரு பெண் மற்றொருவளிடம் சொன்னாள். "இந்த ராமன் நம் ஜானகிக்கு தகுந்த யோக்யமான வரன். ஹே சகி, இந்த ராமனை நம் ராஜா பார்ப்பாராகில் தன்னுடைய பிரதிக்ஞையை விட்டு விட்டு, ஹ்ருதய பூர்வத்துடன் ராமனுக்கு ஜானகியை விவாஹம் செய்து வைப்பார்." (1204)

இன்னொரு பெண் சொல்ல ஆரம்பித்தாள், "நம் ராஜா இவரை ஏற்கனவே பார்த்து, விஸ்வாமித்திரர் சகிதமாக, மிக்க மரியாதையுடன் சம்மானம் செய்தார். ஆனால் நம் ராஜா தன்

விரதத்தை மாத்திரம் விட்டுவிட மாட்டார். அவர் பிடிவாதமாக அவிவேகத்தினால் விதியின் வசப்பட்டவராக ஆகியிருக்கிறார்.'' (1205)

இன்னொரு பெண் சொன்னாள், ''கடவுள் ரொம்ப நல்லவர் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அவர் நிச்சயமாக நல்லவ ரானால், என் பிரிய ஸகி, அவரவர்களுக்கு உசிதமான பலன் கொடுப்பார் என்கிற நம்பிக்கை நிஜமாகுமானால், நம் ஜானகிக்கு ஏன் இந்த வரன் கிடைக்கக்கூடாது? ஹே சகி, இதில் சந்தேகமே கிடையாது'' (1206)

''விதி பிரகாரமும், தைவ யோகத்தினாலும், இந்த ராமனை நம் ஜானகி மணம் செய்து கொள்வாளாகில், நாமெல்லோரும் கிருதார்த்தர்களாக ஆவோம். ஹே சகி, இந்த ராமனிடத்திலும் இந்த விவாஹத்திலும் அவ்வளவு அனுராகம் (பற்றுதலுடைய மனம்) நமக்கு இருக்கிறது. என்றாவது ஒருநாள் நம் மன இஷ் டப்படி நடக்காதா?'' (1207)

''இந்த விஷயம் ஒருவேளை நடக்காது போனால், ஹே சகி, நமக்கு இப்பேற்பட்ட சுபமான ராமதர்சனம் கிடைத்திருக்காது. இந்த பரம அத்புதமான காக்ஷி நம்முடைய பூர்வ ஜன்மாக்களின் அத்யந்த புண்யத்தின் பலன்தான்.'' (1208)

இன்னொரு பெண் சொல்ல ஆரம்பித்தாள், ''என் பிரியே, உன்னால் நன்றாக சொல்லப்பட்டது. இந்த விவாஹத்தினால் எல் லோருக்கும் பரம லாபம் ஏற்படும்.'' மற்றொரு பெண் சொன் னாள். ''சங்கர பகவானுடைய வில் ரொம்ப கடினமான வில். அப்பேற்பட்ட தனுஷ்ஷை (வில்லை) கோமளமான சரீரத்தை உடைய இந்த இளம் ராஜகுமாரன் எவ்விதம் சமாளிப்பான்?'' (1209)

[தியானம்

ஹே ராமா, ஹே. சீதா, உங்கள் இருவர்களையும் மிக்க கடுமை யான தபஸ் செய்து, உங்கள் தியானத்தால் அடையப்படும் பரம பாவனமான பலன் உங்கள் தர்சனம்தானே. ஹே ஸர்வக்ஞரே, ஸர்வ சக்தீஸ்வரரே, ஸநாதனரே, ஸர்வேஸ்வரரே, வாசுதேவரே, விஷ்ணு, லக்ஷ்மிபதே; நாராயணா, மஹாலக்ஷ்மி, ஆஸ்ரிதரே, ஸ்ரீயப்பதியே, உங்களை நான் சரணமடைந்தேன். நீங்கள்தான் எங்களுடைய ரக்ஷகர்கள்.]

''ஹே தோழி, இந்த பூரா பிரஸ்னையும் பெரிய சந்தேகத்தில் இருக்கிறது.'' இதைக் கேட்டு இன்னொரு தோழி மிருதுவான

வாணியில் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே சகி, இந்த ராஜ குமாரன் விஷயத்தில், பார்ப்பதற்கு சுகுமாரனுகவும், சிறியவனுக விருந்தாலும், அவனுடைய பிரபாவம் ரொம்பப் பெரியது," என்று நினைக்கிறேன் என்று சொன்னுள். (1210)

"எந்த பரம புருஷனின் சரண கமலங்களின் பாத துளிகளின் ஸ்பர்சம்பெற்று அஹல்யாதேவி மஹத்தான பாபம் செய்திருந்த போதிலும் உக்தம கதியை அடைந்து கிருத கிருத்யையாக ஆனுளோ, அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த இந்த ராமனுல் சிவனுடைய வில்லை முறிக்கப்படாமல் சும்மா எவ்விதம் இருக்க முடியும்? இதில் பூர்ணமாக விஸ்வாஸம் அடைந்து, நாம் சந்தேகப்படாமலிருக்கவேண்டும். நாம் மஹா விஸ்வாஸத்தை அடைந்து, ஒரு நிமிஷம்கூட சந்தேகமற இருக்கலாம்." [அதாவது இந்த வில் ராமனுல் முறிக்கப்பட்டு, சீதையை இவர் மணந்துகொள்வார்.] (1211)

[தியானம்

ஹே ராமா, சீதா, மஹாவீரா, தயாமூர்த்தி, மஹாலக்ஷ்மி, உன்பெருமையை ராமன் தெரிந்துகொண்டான் அம்மா. உன்னை மணம் புரிவதற்காக விஸ்வாமித்திரருடன் மிதிலைக்கு வந்தான். ஆனுல் அதே ராமன் நீ காகாசூரனிடம் ஹிம்சைப்படும்போது முதலில் பேசாமல் இருந்துவிட்டு பின்பு உன்கலங்கின கண்களைப் பார்த்த காக்கையைக்கொல்வதற்கு பிரும்மாஸ்திரத்தை ஏவினுன். இந்திரனுடைய பிள்ளை, "ராமன் காகுத்ஸவம்ஸத்தில் உதித்த வன்; தாய் தந்தையர்களால் விடப்பட்டவன். மஹாலக்ஷ்மிக்கு அபராதம் செய்தவன். அப்பேற்பட்ட அவனுக்கும் புருஷகாரம் செய்து வைத்து கண்ணைப்பிடுங்கி, அவனுக்குப் பிராணனைத் தானம் கொடுத்தவள்," என்கிற உங்கள் லீலைகளை எல்லாம் ஆராய்ந்து பார்க்கும்சமயம், அப்பா, அம்மா, ராமா, சீதா, உன் பெருமையையும் உன் தர்மபத்தினியான சீதையின் மஹத்துவமும் அறிய யாரால் முடியும்; வெட்கத்தை அடைந்த சீதை மானம் போகும் தருவாயிலும் அழுதுகொண்டே உன் சரணத்தை, நீ எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போதே, அடைந்தாளே, அந்த அனன்ய சரணத்தை, நானும் ராஜலக்ஷ்மியும் உங்கள் இருவர் களுடைய சரண கமலங்களை ஆஞ்சநேயர் அடைந்ததுபோல அடைகிறேம். ரக்ஷிப்பது நீங்கள்தானே, என்று தீர்க்கமான புத்தியினுல் தீர்மானித்த எங்களுக்கு குருநாதர்களான இந்திரன், இந்திராணி, தேவர்கள், மஹரிஷி கணங்கள், மூன்று லோகங்

களில் உள்ள மஹானுபாவர்கள், சகல சராசரங்களில் வசிக்கும் பசு, பக்ஷி, புழு மனுஷ்ய, யக்ஷ, கந்தர்வ, உரகர்கள் ஆகிய எல்லோரும் எங்களுக்கு பரம அனுக்ரஹம் செய்யவேண்டும். சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமாகிற ஆஞ்சநேயா, உன் தயை வேண்டும்.]

"எந்த பிரும்மா வெகு சாமர்த்தியமாக சீதையைப் படைத்தாரோ, அதே பிரும்மா ஒரு தகுந்தவழியை சீதைக்கும் ஏற்படுத்தியிருப்பார். அதே பிரும்மா, அந்த அழகு சுந்தரியான சீதைக்கு இந்த ஸ்யாமள நிறமுள்ள கணவனை மிக்க தீர்க்கமாக ஆலோசித்துத்தான் படைத்திருக்கிறுர் என்று எண்ணுகிறேன்," என்ருள் அவள். அப்பேற்பட்ட வசனத்தைக்கேட்டு, சகல தோழிமார்களும் சந்தோஷப்பட்டுக்கொண்டு கோமளவாணியில் சொன்னுர்கள். "அவ்விதமே ஆகட்டும்," "உன் வாய்க்கும் நாங்கள் கற்கண்டு, சர்க்கரை கொடுக்கிறோம்." (1212)

அந்த இரு ராஜகுமாரர்கள் முதலில் கிழக்கு திக்குக்குச் சென்ருர்கள். அந்த விடத்தில் தனுஷ்யக்ஞம் செய்வதற்கு மேடை ஒன்று மிக்க அலங்காரங்களுடன் போடப்பட்டிருந்தது. அதிக நீளமும் அகலமுமுள்ள அழகான மைதானம். அதில் நன்ருகச் செய்யப்பட்ட மேடை; அந்த மேடையில் மிக்க அழகானதும் நிர்மலமானதுமான யாக மேடை ஒன்று நிர்மாணிக்கப்பட்டிருந்தது. (1213)

[தியானம்

ஹே ராமா, ஹே சீதா, சீதாராமா, ரமாரமணு, ஓங்காரதாமா, பரமாத்மா, பரமேஸ்வரா, என் குருநாதரான தியாகராஜர் சொன்னது மாதிரி, "உன்னைவிட சிறந்த பொருள் என் தஞ்சத்திற்கு உண்டா? என் சந்தோஷத்திற்கும் நான் வேறு ஏதாவது பொருளையோ, மனுஷ்யனையோ, தெய்வத்தையோ நம்பினேனு, எனக்குத் தெரியவில்லை. ராமா, "நீதான் ஸர்வக்ஞர்" என்று பட்டம் பெற்றிருக்கிருயே, என் எண்ணங்கள் உனக்குத் தெரியாதா? உன் திருவருளை நான் பெற்ருல் அதனுல் ஏற்படும் சந்தோஷம் உன்னுடையதுதானே. நான் எதைச்செய்தாலும், சொன்னுலும், அப்பா, சாப்பிட்டாலும், எதை வைத்திருந்தாலும் உன்னுடையதுதானே, உன் நினைவைவிட்டு ஒரு நிமிஷம்கூட எனது மனம் பிரிகிறதில்லையே. அப்பா, ஏன் அப்பா என்மீது இந்த பாரா முகம், என் கர்மவினைகளின் பயன் இதுதானே? உன்னை நான் நிந்தித்தோ, உன்னிடம் குறைவு கண்டோ, உன்னுடைய

தோஷத்தை நான் பார்த்ததாலோ, இந்த பராமுகம்? உமை, சங்கரரை விட்டு எவ்வளவு நாள் துடித்து கஷ்டப்பட்டிருப்பாளோ, அந்தமாதிரி நான் செய்யவில்லை என்கிற எண்ணமா உனக்கு? அவள் பரமேஸ்வரி, சங்கரனின் பெரிய மகத்தான சேர்க்கைச் சொத்து. அம்மா, எப்போது பார்த்தாலும் பக்ஷிகள் ஒரே ஒரு மரத்தை சுற்றி வருவதுபோல உங்களைத்தவிர நான் யாரிடம் எதை வெளியிட்டிருக்கேன்? என்னைக் குற்றம் கண்டுபிடிக்காதே, பக்தவத்ஸலா, தயாமூர்த்தி, உன் அருளைத் தாமதிக்காதே. மிக்க பலவானை கருடனுக்கும் அம்ருதம் கொண்டுவர நீ உதவி பண்ணவில்லையா, தயைசெய்.]

நான்கு ஓரங்களிலும் தங்கத்தால் செய்யப்பட்ட ஆபரணங்கள் மஞ்சங்கள் (கட்டில்கள்) விசாலமான சோபாக்கள் அரசகுமாரர்கள் உட்காருவதற்காகப் போடப்பட்டிருந்தன. அந்த ஆசனங்களுக்குப் பின்புறம் வட்டவடிவமாக ஒரு மண்டபம் பெரியதாகவும், அழகாய் அலங்காரம் செய்யப்பட்டதாயும், விசாலமாகவும், ஜனங்கள் உட்காருவதற்கு தகுந்தாற்போல் செய்யப்பட்டிருந்தது. (1214)

அந்த ஆசனங்கள் சிலவற்றை உயரத்தில் கட்டியிருந்தார்கள். அவைகளும் ரொம்ப அழகாக விளங்கின. நகரத்து ஜனங்கள் எந்த எந்த இடங்களில் உட்கார விரும்பினார்களோ, அவ்விதம் மேடைகள் கட்டப்பட்டிருந்தன. அவைகளுக்குப் பக்கத்தில் பலவர்ணங்களுடன் வெகுசுந்தரமாக பிரகாசிக்கும் வெள்ளை நிறமானதும் மிக்க விசாலமானதுமான காலரி மேடைகள்போல ஒன்றுகட்டப்பட்டிருந்தது. (1215)

அந்த இடத்தில் குலத்தின் சிறப்புக்களுக்குத் தகுந்தபடி அவரவர்களுக்கு யோக்யமான இடங்களில் ஸ்திரிகள் உட்காருவதற்கு இடங்கள் கட்டப்பட்டனவாக அந்த ராஜகுமாரர்கள் கண்டனர். அந்த நகரத்திலுள்ள பாலகர்கள் கோமளமான வசனங்களால் மிக்க மரியாதையுடன் ஸ்ரீராமச்சந்திரனுக்கு அந்த யாகசாலையினுடைய பெருமைகளைக் காண்பித்தார்கள். (1216)

அந்த பாலகர்கள் இந்த காரணத்தை வியாஜமாகக்கொண்டு ராமலக்ஷ்மணர்களிடம் மிக்க பிரேமையுடன், மனோஹரமான அந்த ஸ்ரீராமனுடைய பரம சௌந்தர்யமான அங்கங்களைத் தொட்டு, புளகாங்கித மடைந்தார்கள். அந்த இரு ராஜகுமாரர்களைப் பார்த்து, பார்த்து அவர்களுடைய ஹ்ருதயம் அத்யந்த சந்தோஷமடைந்தது. (1217)

அந்த பிரபுவான ஸ்ரீராமச்சந்திரன் அந்த பாலகர்கள் தன்னிடம் அபார பிரேமை காட்டுவதை உணர்ந்து, அந்த யாக மேடைகளின் அழகுகளை விவரித்துச் சொன்னார். இதனால் மிக்க உத்ஸாஹ மடைந்த அந்த பாலர்கள் அவரவர்கள் இஷ்டத்திற்கு தகுந்தாற்போல அந்த இரு ராஜமாரர்களை பிரேமையினால் கவரப்பட்டவர்களாக அழைத்துக்கொண்டு, பல இடங்களைக் காட்டினார்கள். அந்த இரு சகோதரர்களும் அவர்களுடன் சென்று அவர்கள் காட்டிய இடங்களுக்கு மஹா சௌலப்யத்துடன் சென்றார்கள். (1218)

மிருதுவானதும், மதுரமானதும் மனோஹரமான வசனங்களால் அந்த ஸ்ரீராமன் தன் தம்பியாகிய லக்ஷ்மணனுக்கு அந்த வேலைப்பாடுகளின் சிறப்புக்களை எடுத்துக் காட்டினார். எந்த பரமாத்மாவினுடைய ஆக்ஞையைப் பரிபாலிப்பவளும், எவருடைய முக இங்கிதங்களால் ஒரு நிமிஷத்தில் இந்த பிரும்மாண்டத்தின் சகலசராசரங்களின் முகங்களைப் படைத்துக் காட்டும் சாமர்த்தியம் படைத்த மாயையை உடைய அந்த பரமாத்மா, (1219)

அந்த இடத்தில், தீனர்களிடம் தயை காட்டும் தயாளுவான ஸ்ரீராமச்சந்திரன், பக்தியின் காரணத்தால், பரம சௌலப்யத்துடன் அந்த பாலகர்களுடன் அந்த தனுஷ்யக்ஞசாலையை ஆச்சர்யப்பட்டுக்கொண்டு, பார்த்துக்கொண்டு சென்றுகொண்டிருந்தார். இந்த விதமாக எல்லா விசித்திரமான இடங்களைக் கண்ட பிறகு அந்த இரு ராஜகுமாரர்கள் குருவாகிய விஸ்வாமித்திரரிடம் திரும்பி வந்தார்கள். நாழிகை ஆகிவிட்டபடியால் அவர்களுடைய மனத்தில் பயம் இருந்தது. (1220)

[தியானம்

ஹே சீதா, ஹே ராமா, ஹே லக்ஷ்மணா, உங்கள் கிருபைக்கு நான் பரிபூர்ண பாத்ரமாக இருக்க வேண்டும். ஹே ராமா, தங்க நிறமாயுள்ளதும் தாமரைப் பூவின் வாசனை உடையதுமான உன்னுடைய திருமுக மண்டலத்தை நான் என்று காண்பேனோ? வெயிலால் ஜலம் வற்றின ஓடையில் வாழும் தாமரைப் பூப்போல ராமனைப் பிரிந்து துக்கத்தால் வாடிய சீதை எவ்விதம் உலர்ந்து காணப்பட்டாளோ, அது மாதிரி என் மனம் உன்னை விட்டுப் பிரிந்த துக்கத்தால் கஷ்டப்படுகிறது. அன்றில் பக்ஷி எவ்விதம் சகாவை விட்டுப்பிரிந்து துக்கத்தால் ராத்திரி பூராவும் கதறுகிறது போல என் மனம் கொந்தளிக்கிறது. ராமா,

தர்மத்தின் காரணமாகவும் சகல சுகங்களைத் துறந்து மிகவும் மென்மையான சீதையையும் காட்டில் நடத்திக் கூட்டி வந்து வருத்தமும், சோகமும், பயமும், ராஜ்யத்தை இழந்ததால் கொஞ்சம் கூட இல்லாமல் சீதையின் சேர்க்கையால் எல்லாம் மறந்திருந்தாய். அதே சீதை உம்மை விட்டுப் பிரிந்து போன சமயம் அதே சீதையைக் காரணமாகக் கொண்டு, சோகத்திலும் மோஹத்தாலும் கவரப்பட்டு, மஹா வீரனாகிய நீர் லோகங்களை எரிக்க எண்ணம் கொண்டீர். ஸர்வ லோக சரண்யனான நீரே அவ்விதம் எண்ணம் கொண்டீராகில், இக்ஷ்வாகு வம்சத்தில் தைர்யத்தையும், தர்மத்தையும் கைக்கொண்ட மஹாவம்சத்தில் உதித்த நீரே, ஹே ஸ்வாமி, பூலோகத்தில் பிராம்மணர்களும், பிரும்ம ரிஷிகளும் இருக்கிறபடியால் அது அழிக்கத்தக்கதல்ல என்று என் ஆசார்யரான லக்ஷ்மணர் சொன்ன சமயம், கருணையின் காரணமாகவும் நீர் பேசாமலிருந்தீர். ஜனங்களுக்கு மஹாகஷ்டங்கள் நேருவது சர்வ சஹஜம். பொறுமையுடனும் பெருமுயற்சியுடனும் "ஒருவன் அபராதம் செய்தால், லோகங்கள் யாவற்றையும் நாசம் செய்வதால் லாபமென்ன?" என்று வணக்கமாக தெரிவிக்கப்பட்ட போது நீர் அடங்கினீர். துக்கங்கள், பூர்வ கர்மங்களைப் பற்றினது, பயனாக உள்ளன என்கிற ஞானமயமான வார்த்தைகளால் கட்டப்பட்டு, ஸாத்விக ஸ்ருஷ்டிகளாகிற கந்தர்வ, யக்ஷ, கின்னரர் முதலிய தேவகணங்கள் நிரம்பின சராசரங்களை அழிக்க முயல்வதை விட்டீர். அப்பேற்பட்ட கருணை நிரம்பின காகுத்ஸ உள்ளத்துடன் என் பாபங்களையும், தோஷங்களையும், கர்மங்களையும் மறந்து, உன்னையே சரணம் அடைந்திருக்கிற என்னை ரக்ஷிக்க மாட்டாயா? தயாநிதே, தர்மத்தின் ஸ்வரூபமே, லோகாத்யக்ஷரே, தர்மாத்யக்ஷரே, ஸுராத்யக்ஷரே, என்னை தயவு செய்து ரக்ஷிக்க மாட்டாயா?.]

பயக்ருத் பயநாஸனः என்று சொல்லப்படும் எந்த பரம புருஷனுக்கு பயம் என்கிறதே பயப்படுகிறதோ, அந்த பிரபு தன் பக்தர்களிடம் பயப்படுவதாகக்காட்டி, பக்தர்களின் பிரபாவத்தை வெளிப்படுத்தினர். அவர் கோமளமானதும், மிருதுவானதும், மதுரமானதுமான இன் சொற்களால் அந்த பாலகர்களிடம் பேசி, அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டார். (1221)

பிறகு பயத்துடனும், பிரேமையுடனும், அதிகமான வினயத்துடனும், அதிசங்கோஜத்துடனும் அந்த இரு ராஜகுமாரர்கள் தங்கள் குருவான விஸ்வாமித்திரரின் பாதபங்கஜங்களை

நமஸ்கரித்து, அவருடைய உத்தரவு பெற்று உட்கார்ந்தார்கள். (1222)

ராத்ரி வந்துகொண்டிருந்தது, சந்தியா காலமும் ஆகிக் கொண்டிருந்தது. முனியினுடைய ஆக்ஞையின் பேரில் இருவர் களும் சந்தியா வந்தனம் செய்தார்கள். பிறகு விஸ்வாமித்திர முனிவர் புராணக்கதைகளையும் இதிஹாஸங்களையும் அவர் களுக்குச் சொல்லி அந்த அழகானதும், இன்பகரமானதும், என்றும் மறக்க முடியாததுமான ராத்ரியைக் கழித்தார்கள். (1223)

அப்பொழுது அந்த முனிஸ்ரேஷ்டர் நித்ரைக்கு எழுந்தார். அந்த இரு ராஜகுமார்களும் அந்த முனிவருடைய பாத சரணங்களைப் பிடித்து, அவருக்கு சுகத்தை உண்டு பண்ணினுர் கள். எந்த பரம புருஷனுடைய சரண கமலங்களையும், பாதஸ்பர்சங்களையும் ஆசைப்பட்டு, ஆசைப்பட்டு, வைராக்ய மடைந்த மஹாயோகிகள் சதா ஹ்ருதய தாமரையில் தியானம், தபஸ், ஜபம், யோகம் முதலியவைகளைக் களைப்பில்லாமல் செய்கிருர்களோ, செய்து கொண்டு சதா பிரும்மானுபவத்தில் தங்களை அர்ப்பித்துக் கொண்டிருக்கிருர்களோ, (1224)

அப்பேற்பட்ட அந்த மஹானுபாவர்களாகிற இரு ராஜ குமாரர்கள் அதி பிரேமையினுல் ஜயிக்கப்பட்டவர்களாகி, கமல புஷ்பத்திற்குச் சமமாக உள்ள கைகளால் அந்த குருவின் பொற்பாதங்களைப் பிடித்து, அவருக்கு மிக்க சுகத்தை உண்டு பண்ணினுர்கள். அடிக்கடி அடிக்கடி ஆக்ஞை செய்யப்பட்டும், விடாமல் செய்து கொண்டும், பிறகு குருவினுல் தடுக்கப்பட்டு, ஸ்ரீராமச்சந்திரன் தன் சயனத்திற்குச் சென்ருர். (1225)

[தியானம்

ஹே வைதேஹி, ஹே ராமா, ராஜீவலோசனு, ராஜாதி ராஜ குமாரா, மிருதுபாஷணு, சமத்காரா, ஏகாக்ரசித்தத்துடன் உன் நினைவுடன், உங்கள் தபஸ்ஸில் வாழ்ந்துவரும் எனக்கு, எவ் விதம் ராமன் சீதையைவிட்டு புலம்பினுரோ, எவ்விதம் சீதை ராமனையே தன்கதி என்று நம்பி வாழ்ந்து வந்தாளோ, அவ் விதம் என் போன்ற தீனர்களுக்கு, ராமா, உன் கிருபை எப்படி, எப்போது அப்பா கிடைக்கும்? நான் தியாகராஜர், நாரதர்போல பக்திசெய்து பூஜித்தேனு? ஜடாயுவைப்போல சீதாராமன் லக்ஷ் மணர் இவர்களுக்கு மகத்தான சேவை, உபகாரம் செய்தேனு? மானிடரூபம் அடைந்தபோதிலும் ஜடாயுவைப் பார்த்து "யாக யக்ஞங்களை எப்பொழுதும் செய்யும் கிருஹஸ்தர்களும்,

பஞ்சாக்னி நடுவில் தபஸ் செய்யும் வான பிரஸ்தர்களும், நிவி ருத்தி மார்க்கத்திலிருந்து திரும்பாத சந்யாசிகளும், ஸம்சார போகங்களை விட்ட நைஷ்டிக பிரும்மசாரிகளும் அடையும் லோகங்களை, என்னுல் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட மகிமையால் அடைவீர். என் அனுமதியால் ஸர்வஸ்ரேஷ்டமான விஷ்ணு லோகங்களையும் அடைவீர்'' என்று ஜடாயுவைப் பார்த்துச் சொன்னீர். ராமனுடைய ஸத்யம் என்கிற விரதத்தால், இந்த வசனங்கள் பூர்த்தி அடைந்தன. அதேமாதிரி அந்த ஜடாயுவும் ''சீதையை அடைவாய்'' என்று சொல்லிய வார்த்தையில் மஹாவிஸ்வாசம் வைத்து, ராமனும் சீதையைக் கண்டுபிடித்து, மீட்டுக்கொண்டார். ஹே மஹா வீரனே, சூரனே, எனக்கு ஒரு சாமர்த்தியமும் இல்லே. என் குறைகள் பல இருக்கின்றன. நான் உன் கிருபையை உன்னுல்தான் அடையமுடியும். பரமேஸ்வரி, பரமாத்மா என் குருநாதரான ஆஞ்சநேயர் தியாக ராஜகுருஸ்வாமி, நாரத மஹாமுனியே, விஸ்வாமித்திர, வஸிஷ்ட வாமதேவ, அகஸ்திய, பிரஹஸ்பதி, சுக்ராசாரியார், அனந்தன், விஷ்வக்ஸேனர், கருடன் ஆகிய எல்லோரும் சேர்ந்து கிருபை செய்ய மாட்டார்களா? அவர்களால் உங்கள் கிருபைக் கிடைக்காதா? எவ்வளவு காலம் பொறுக்க வேண்டும்?]

ஸ்ரீராமச்சந்திரனுடைய சரணங்களை தன் ஹ்ருதயத்தில் கோவிலாக அமைத்து வைத்து, பிரேமை கலந்த பயத்துடன், ஸ்ரீராமனுடைய சேர்க்கையின் பரம சுகத்தை அனுபவிப்பதற்கு, லக்ஷ்மணர் அந்த ராமனுடைய பாதங்களைப் பிடித்து, அவர் ஸ்ரமத்தைப் போக்கினர். பிரபு ஸ்ரீராமச்சந்திரன் அடிக்கடி சொல்ல ஆரம்பித்தார். ''ஹரேதாதா, என் தம்பி, போய் படுத்துக்கொள்.'' கொஞ்ச நேரம் சென்ற பின்பு அந்த லக்ஷ்மணர் ராமனுடைய சரணங்களை தன் ஹ்ருதயத்தில் தரித்துக் கொண்டு படுக்கச் சென்றான். (1226)

ராத்ரியும் இவ்விதமாகச் சென்றது. கோழியின் சப்தத்தைக் கேட்டு, லக்ஷ்மணர் படுக்கையை விட்டு எழுந்தார். ஜகத்திற்கே ஸ்வாமியான ஸ்ரீராமன் குரு எழுந்திருப்பதற்கு முன்பே, படுக்கையைவிட்டு எழுந்தார். (1227)

பிறகு கைகால்களை சுத்தம் செய்துகொண்டு ஸ்நானம் செய்து நித்ய கர்மங்களையும் முடித்துவிட்டு, பிறகு முனிவருடைய பாத கமலங்களில் அவர்கள் இருவர்களும் நமஸ்கரித்தார்கள். பிறகு சமயத்திற்குத் தகுந்தபடி குருபூஜைக்கு புஷ்பங்களைப் பறிக்கச் சென்றார்கள். (1228)

அவர்கள் வெளியில் சென்று ராஜாவினுடைய அழகான பூந்தோட்டங்களைக் கண்டார்கள். எங்கு பார்த்தாலும் வசந்த ருதுவின் மகிமைகளைக் கண்டார்கள். மனத்தை அபஹரிக்கின்ற அழகுடன் அநேக விருக்ஷங்கள் இருந்தன. ரங்கவிரங்கமாக அநேக விதமான உத்தம புஷ்ப மண்டபங்கள் கொடிகளால் சூழப்பட்டு அநேகமிருந்தன. (1229)

அப்போது முளைத்த சிறிய இளம் துளிர்கள், பழுத்த பழங்கள். ஸுமனஸ் (நல்ல ஹ்ருதயமுள்ள) சுந்தர புஷ்பங்கள் அதிக அழகுடன் விளங்கும் கற்பக விருக்ஷங்களின் சோபைகளையும் மங்கவைத்து நாணப்படும்படி செய்யும் அவ்வளவு அழகு சம்பத்துக்களுடன் விளங்கின. சாதக பக்ஷிகள், கோகிலங்கள் (குயில்கள்) பல நிறங்களுள்ள கிளிகள், சகோர பக்ஷிகள் முதலிய அழகான பக்ஷிகள் மதுரமானதும் இனிப்புடன் கூடிய கூவுதல்களாலும், ரொம்ப அழகான தோகைகளுடன் மயில்கள் ஆனந்தமாக நர்த்தனம் ஆடுவதைக் கண்டார்கள். (1230)

அந்த அழகான பூந்தோட்டத்தின் நடுவில் ஒரு பெரிய தடாகம் ரொம்ப சோபையுடன் விளங்கியது. அந்த தடாகத்தின் வரிசைப் படிகள் பலவிதமான ரத்னங்கள்ால் அலங்கரிக்கப்பட்டு ரொம்ப சோபையுடன் விளங்கியன. அந்த தடாகத்தின் ஜலமோ நிர்மலமானதாக விருந்தது. அதில் அநேக வர்ணங்களுடன், விதவிதமான தோற்றங்களுடன் கமல புஷ்பங்கள் மலர்ந்து மிக்க அழகுடன் விளங்கின. நீர்ப் பறவைகள் விளையாடிக்கொண்டிருந்தன. வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு மதத்துடன் சுற்றிக்கொண்டிருந்தன. (1231)

அந்த தோட்டத்தின் அழகையும் தடாகத்தின் சோபையையும் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் தன் தம்பி லக்ஷ்மணருடன் சந்தோஷத்துடன் ரமித்துக்கொண்டு சென்று பார்த்தார். "இந்த தோட்டம் வாஸ்தவமாக பரமரமணீயமாக விளங்குகிறது. சகல ஜகத்திற்கும் சுகத்தைத் தருவதாக விருக்கிறது," என்று பிரபு ஸ்ரீராமச்சந்திரன் நினைத்தார். அவரே வியக்கும்படி அந்த அழகு பரம சோபிதமாக விருந்தது. (1232)

நான்கு பக்கங்களிலும் தன் பார்வையைச் செலுத்தி அந்த தோட்டக் காவற்காரர்களின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு சந்தோஷத்துடன் வேணும்கிறவரை பத்ரம், புஷ்பம் பறித்துக் கொண்டார்கள். அந்த நல்ல வேளையில் ஜனகரின் பெண் சீதை அவ்விடம் வந்தாள். அவளுடைய தாயார், தன் பெண்ணாகிய

சீதையை கிரிஜா தேவியின் பூஜைக்காக அவ்விடம் அனுப்பி யிருந்தாள். (1233)

[ தியானம்

ஹே ஜானகி, க்ஷிராப்த்தனயே, மஹாலக்ஷ்மி, ஸ்யாமள நிறமும் இந்திரநீலம் போன்ற தேஜஸ் வாய்ந்த காந்தியுள்ள நிறமும், காளமேகம் போன்ற கருப்பு மேகத்தின் கருணையைப் பொழிவிக்கும் கண்களும், இந்திரதனுஸ் போன்ற புருவங்களும், பவழச் செவ்வாயும், முத்துமணி போன்ற தந்தங்களும், சரணு கதர்களை அபயம் கொடுத்துக் காக்கும் கைகளை உடையவரும், பூர்வபாஷியும் பக்தவத்ஸலரும், தோஷங்களை மறக்கிறவரும், அபார கருணைக்கடலான ஸ்ரீராமனைக் கண்டாள். நல்ல நேரத் தில் கண்டாள். நல்ல தினத்தில் கண்டாள். பூர்ண சந்திரன் போன்ற முகமுள்ளவளும் அழகிய புருவங்கள் உள்ளவளும், அழகுடன் வட்டமாக இருக்கின்ற வில்வ பழங்களைப் போல ஸ்தனங்களை உடையவளும், பத்து திக்குகளையும் தனது காந்தி யால் இருட்டு இல்லாமல் பிரகாசிக்கச் செய்கிறவளும், காந்திமதி யும், விகஸித்த தாமரையை இரு கைகளிலும் அணிந்திருப்பவ ளும், புண்யமான மூர்த்தியும், பத்மவாஸனையுடன் கூடியவளும், மந்தஹாஸத்துடன் சிரித்து விளையாடுபவளும், தேன் போல இனிப்பாக பேச்சுக்கள் உள்ளவளும், தேவஸ்திரி போன்றவளும், இத்திரா என்று அழைக்கப்படுகிறவளும், சந்திரவதனத்துடன் சந்திர சகோதரி என்று சொல்லக்கூடிய பக்தர்களின் தாபமுள்ள மனத்தைக் குளிரச் செய்கிறவளும், அயோநிஜையும், செந்தா மரை இதழ் போன்ற கண்கள் உள்ளவளும், எங்கள்மீது கருணையை வாரி வீசுகிறவளுமான சீதையை சுபமான வேளை யில் சுபமான முகூர்த்தத்தில் பிரபு ராமர் கண்டார். நானும் கண்டேன். ஹே ராமா, மஹாலக்ஷ்மி, நாராயணு, சீதா உங்க ளுடைய தாஸ்யனுக என்னை ஏற்றுக்கொள்ளுங்கள். எங்களுக்கு உங்கள்மீது திடமான பக்தியைக் கொடு. கருணை என்கிற கவசத்தை எங்களுக்காக அணிந்துகொள்ளுங்கள். உங்கள் கீர்த்திகளை கானம் செய்து உங்களை திருப்தி செய்விக்கும்படி அனுக்ரஹி. கௌரி, ஸதி, பார்வதி, சிவசங்கரி, பாஹி, பாஹி, ரக்ஷ, ரக்ஷ, பாலய, பாலய.]

சீதையினுடைய சகிகள் தோழிமார்கள் அழகான சுந்தரிகள் எல்லோரும் அவளைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். மனோஹர மான பாணியினுல் அவர்கள் கீதங்கள் பாடி ஆடி விளையாடிக்

கொண்டிருந்தார்கள். அந்த தாமரை ஓடையின் சமீபம் கிரிஜா வின் கோவில் இருந்தது. அந்த கோவில் மிக்க மனோஹரமாகவும் பார்க்கப் பார்க்க மோஹிக்கும் சோபைகளுடன் விவரிக்க முடியாத அழகுகளுடன் விளங்கின. (1234)

சகிகளுடன் அந்த சீதாதேவியானவள் தாமரைக் குளத்தில் ஸ்நானம் செய்துவிட்டு, மனத்தில் மிக்க பிரசன்னமடைந்து, கிரிஜாவின் நிகேதனம் என்கிற கோவிலில் புகுந்தாள். அதிக பிரேமையுடன் பூஜை செய்தாள். நிஜதத்வமான யோக்யதை களுக்கு தகுந்தபடி வரம் வேண்டினுள். (1235)

அவளுடைய சகிகளுள் ஒருத்தி சீதையுடன் கூடவந்தாள். அந்த கும்பலிலிருந்து வெளிவந்து தோட்டத்தைப் பார்க்கச் சென்ருள். அந்த மஹாபாக்யவதி ராமலக்ஷ்மணர் சஹோதரர் களைப் பார்த்தாள். பிரேமையினுல் வசீகரிக்கப்பட்டு, சீதையி னிடம் ஓடிவந்தாள். (1236)

அந்த சகியினுடைய புளகாங்கிதமான சரீரத்தைக் கண்டு ஆனந்தத்தால் தத்தளிக்கும் மனத்தை உடையவளாகக் கண்டு, அவளுடைய நேத்ரங்கள் ஆனந்த பாஷ்பங்களால் நிறைந்திருப் பதைக் கண்டு, மற்ற தோழிகள் மிக்க கோமளமான குரலில் அவளுடைய சந்தோஷத்திற்கு காரணம் என்ன? என்று கேட்டார்கள். (1237)

அந்தப் பெண் சொன்னுள். "என் தோழிகளே, இரு ராஜ குமாரர்கள் இந்த தோட்டத்தைப் பார்ப்பதற்கு வந்திருக்கிருர்கள். நல்ல யௌவன வயதுள்ளவர்கள். எல்லா பிரகாரங்களாலும் மிக்க லாவண்யமாக விளங்குகிருர்கள். அவர்களில் ஒருவர் சியாமள நிறம், மற்ருெருவர் மிக்க சிகப்பு நிறம். அப்பேற்பட்ட அழகு குவியல்களான அந்த இரு ராஜகுமாரர்களை நான் எவ்விதம் வர்ணிப்பேன்.? கண்கள் பார்த்துக்கொண்டே இருக் கின்றன. அவைகளால் பேசமுடியவில்லை. வாய் பார்க்கிற தில்லை, கண்கள் குரலோடு பேசமுடிகிறவில்லை. அதற்கு நயனங் கள் இல்லையே என்று வருத்தப்படுகின்றன. என்ன சௌந்தர் யம்! அவ்விதம் என் இந்திரியங்கள் அவர்களுடைய ஸ்வரூபத்துடன் ஒட்டிக்கொள்கின்றன." (1238)

இந்த வார்த்தைகளைக் கேட்டு மற்ற சகிகள் சிரித்துக் கொண்டு சீதையினுடைய அந்தரங்க ஆர்வத்தைப் புரிந்து கொண்டவர்களாக, பரஸ்பரம் ஒருவருக்கொருவராக சீதையின் காதில் விழும்படி பேசிக்கொண்டார்கள். அவர்களுள் ஒருத்தி மற்ருெருவளிடம் சொன்னுள். "ஹே தோழி, இந்த ராஜகுமா

ரர்கள் விஸ்வாமித்திர முனிவருடன்கூட வந்த ராஜகுமாரர்களாகத்தான் இருக்கவேண்டும்.'' (1239)

''அவர்களுடைய நிஜரூபத்தை மோஹினி தரித்து இந்த விதேக ராஜதானியிலுள்ள ஸ்திரிபுருஷர்கள் யாவரையும் தன் வசத்தில் ஆகர்ஷணம் செய்திருக்கவேண்டும். எங்கு எங்கு போனாலும் அவர்களுடைய உருவத்தையும், அழகையும் பற்றித்தான் எல்லோரும் பேசுகிறார்கள். கட்டாயம் அவர்களை நாம் பார்க்கவேண்டும். நாம் பார்த்து அனுபவிப்பதற்கு ரொம்ப யோக்யமான புருஷர்கள் அவர்களன்றோ?'' (1240)

அவர்களுடைய வசனங்கள் சீதைக்கு ஆனந்தம் உண்டு பண்ணின. அவளுடைய நேத்ரங்கள் அந்த மஹாபுருஷரைக் காணத் தூண்டின. அந்த சீதைக்கு மிக்க பிரியமுள்ள அந்த ரங்கத் தோழி ஒருவள் அவளைப் பிடித்துக்கொண்டு சென்றாள். ''ஸநாதனமான ப்ரியே, அனபாயினி, என்று சொல்லக்கூடிய சீதே, ஆதிதம்பதிகளின் திவ்ய ப்ரீதியையும், அதன் வாஸனையால் ஏற்பட்ட உனது ஆர்வங்களையும் யாரால் அறிந்துகொள்ள முடியும்?'' (1241)

சகல மங்களங்களையும் விளைவிக்கக்கூடிய நாரதருடைய வசனங்களை ஸ்மரணைசெய்துகொண்டு, சீதாதேவியானவள் பவித்ரமான மனத்துடன் அதி ப்ரேமையினால் துள்ளுகிற மனத்துடன் ஓடிவந்தாள். லஜ்ஜையினால் அங்கும் இங்கும் பயந்துபோன ஒரு பெண்மானைப்போல தன் திருஷ்டிகளைச் செலுத்தினாள். (1242)

[தியானம்

ஹே ராமா, ஹே மைதிலி, ஜனகபுத்ரியே, மாதவி, கமலா, கோமளமான கரங்களை உடையவளே, நவபல்லவ கொடிபோல விளங்கும் கற்பகக் கொடியே, அழகிய சரீரத்தை உடையவளே, சாந்தா, லக்ஷ்மி, கமலநயனின் பிரிவால் வாடும் ஹ்ருதயத்தை உடையவளே, மஹா ரோஷக்காரியே, ஜகத்ஜனனி, உன் பிராணேஸ்வரனாகிய நாராயணரிடம் அகலகில்லேன் அலர்மேல் மங்கை மார்புடையவனே, உன்னைக் கண்டதால் நான் மிக்க சந்தோஷிக்கிறேன். உன் பிரிய நாயகனான பகவான் ராதையின் வீட்டிற்குப் போய், அவ்விடம் இரவு தூங்கிவிட்டு, காலையில் கஸ்தூரி திலகத்துடனும், ராதையின் ஆலிங்கத்தினால் ஏற்பட்ட சந்தன குழம்புகளின் அடையாளங்களுடனும், வாயில் மணக்கும்படி தாம்பூலம் முதலிய சுகந்த வஸ்துக்களின் பரிமளம்,

பட்டு பீதாம்பரம் இவைகளுடன்கூடிய அழகிய மணவாள மாப்பிள்ளை அலங்காரங்களுடன் வந்த உன் மணாளனை, நீ அவருடன் இரவு விட்டுப் பிரிந்ததால் ஏற்பட்ட ரோஷமும், அதனால் உண்டாகிய விரகதாபத்தினால் பிரணய கலகத்தின் ஸம்வாதத்தை நான் கேட்டேன். ரெங்கநாயகியாகிய அம்மா நீ, உன் கோபத்தின் அழகினால் மனத்தை உன்னிடம் பறிகொடுத்து, பிரபு உன்னால் வசீகரிக்கப்பட்டவனாய், "கோவிந்தா," "முகுந்தா," "மாதவா," என்று நீ சொல்லியபோது, அதற்கு அவர் பிரதி உத்தரமாக "தேவி, உன் பக்தர்களுக்காக என்னிடம் கருணை காட்டு. அவர்களுக்காக நான் கைகூப்பி உன்னை நமஸ்கரிக்கிறேன்" என்று சொன்னதும், அம்மா, பரம மிருது வான சரீரம், அதனுள் வீற்றிருக்கும் வெண்ணெய் போல விருக்கும் உன் ஹ்ருதயம், பகவானுடைய வஞ்சகத்தையும் மறந்து, அவனை ஆலிங்கனம் பண்ணி, ரோஷம் தணிந்தவளாக, உன் அழகிய வதனத்தையும், சிரித்தால் குழிவிழும் பளபளப்பான கன்னப் பிரதேசங்களையும், "சுததி" என்று வால்மீகி முனிவரால் உனக்குக் கொடுக்கப்பட்டப் பெயருக்கு ஏற்ப, உன் அம்ருதமயமான திருப்பவளவாயையும், அழகான வில்வ பழங்களைப்போலவிருக்கும் உன் ஸ்தன்யத்தையும் அரவிந்த நேத்ரங்கள் உள்ள பகவானிடம் உதார ஹ்ருதயத்துடனும் அர்ப்பணம் செய்தாயே. அம்மா, உன் கருணைகடாக்ஷம் எனக் காகவும் ஏற்படாதா? நாரதர், ஸநத்குமாரர், ஆஞ்சநேயர், வால்மீகி, தியாகராஜர், ராமதாஸர்களான துளசிதாஸர் போன்ற மஹான்கள் உன் பிரேமையை எவ்விதம் போற்றுகிறார்கள், தெரியுமா? உமை, அவள் பதியான சங்கரர் உங்களை எவ்விதம் பூஜிக்கிறார்கள் தெரியுமா? இந்திரன், பிரும்மா உங்களை எவ்விதம் பூஜிக்கிறார்கள் என்று பராசரர் முதலிய மஹரிஷிகளின் மிக்க குஹ்யமான வசனங்களிலிருந்து தெரிகிறதம்மா. சந்தனம் போல குளிர்ச்சியுள்ள உங்கள் திருஷ்டிகள் பட்டமாத்திரம் பக்தர்களின் தாபம் அடங்கி, பகவானுடைய பெருமை விளங்கு கிறது. அவ்விதம் உன்னிடம் புருஷகாரம் வேண்டும். எங்களை, அம்மா அப்பா, உன் பக்தர்களை, உங்களிடம் மஹாவிஸ்வாசம் காட்டிய அன்பர்களிடம், தயை செய்யமாட்டாயா? கருடன் விஷ்வக்ஸேனர், உரகராஜன், மார்க்கண்டேயர் எங்களுக்கு, அனுக்ரஹிக்கமாட்டாரா?]

கைகளில் தங்க கங்கணங்கள், இடுப்பிலும் கால்களிலும் தங்க சலங்கைகளின் கிங்கிணி சப்தங்கள், ஹம்ஸ நடையோடு

வரும் சீதையின் அழகான அடிச்சுவடுகளின் மாறி மாறி வரும் சலங்கைகளின் சப்தங்கள் ராம லக்ஷ்மணர்களின் காதுகளுக்குக் கேட்டன. ஸ்ரீராமன் தன் ஹ்ருதயத்தில் எழுந்த பழைய ஞாபகங்களுடன் தீர்க்கமான பெருமூச்சுவிட்டுக்கொண்டு லக்ஷ்மணனிடம் "ஹே லக்ஷ்மணு, இந்த சலங்கைத்வனிகள் என் உள்ளத்தை வசீகரிக்கின்றன. காமதேவனுகிய மன்மதன் சகல ஜகத்தையும் தன் ஆதீனம் செய்துகொள்ள சங்கல்பம் செய்து, பலத்த சப்தமுள்ள துந்துபி, மிருதங்க முதலிய வாத்யங்களை முழக்குகிருன்." (1243)

இவ்விதம் சொல்லிவிட்டு ஸ்ரீராமன் மீண்டும் சுற்றி முற்றும் பார்த்தார். சீதையினுடைய மிக்க சாந்தியுள்ள முகத்தைக் கண்டார். சகோரபக்ஷி பரிபூர்ண சந்திரனைக் காண ஆசைப் படுவதுபோல அவர் ஆசையுடன் பார்த்துக்கொண்டே யிருந்தார். அவருடைய அழகான நேத்ரங்கள் இமை கொட்டு வதற்குக்கூட அவகாசமின்றி திறந்தபடி கரிய வாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டிவப் பெரியவாய் கண்கள் சீதையைப் பார்த்துக் கொண்டிருந்தன. நிமி ராஜன் ஏதோ கலவரம் வந்தவன் போல, ராமனுடைய கண்களிலிருந்து விலகி விட்டான். (ஜனகவம்சத்தில் முன்பு உண்டான நிமி ராஜன் பகவானிடம் வரம்பெற்று மானிடர்களின் இமையில் இமை கொட்டுவதின் காரணமாக இருப்பவன். இவ்வித சஞ்சலமான பரிபூர்ண லோசனங்களோடு விளங்கும் ஸ்ரீராமனை நிமி ராஜன், தன் வம்சத்தில் உதித்த ஜானகி தனது அந்தரங்க காதலனைக் காணும் சமயத்தில் இருப்பது உசிதமில்லை, என்று மனேபாவத்துடன் ஸ்ரீராமனை விட்டு விலகினுள் என்கிற கருத்து.) (1244)

பகவான் ஸ்ரீராமர் சீதையின் அழகின் சோபைகளைக் கண்டார். அத்யந்த சுகத்தை அடைந்தார். ஹ்ருதயத்தி லிருந்து ப்ரேமை வெள்ளம் பொங்கியது. அவளுடைய லாவண் யத்தை அவர்மனம் புகழ்ந்தது. வார்த்தைகள் வெளிவர மறுத்தன. அந்த சேவைக்கு எப்படிப்பட்ட உபமானம் கொடுக்கக்கூடும்? விரிஞ்சி என்று சொல்லப்படுகிற பிரும்ம தேவனுல் தன்னுடைய படைப்புத்தொழிலின் நிஜமான நிபுணத் வத்தை சகல சராசரங்களுக்குப் பிரகடனம் செய்வதற்காகவே ஏற்படுத்தப்பட்டது அந்த அழகு பிம்பமூர்த்தியின் ஸ்வரூபம் என்று சொல்லலாம். இவ்விதம் பிரபு தனக்குள் எண்ண மிட்டார். (1245)

ஆஹா, இவளுடைய அழகு, அழகு தெய்வத்திற்கே அழகு செய்வது போலிருக்கிறது. இவள் அழகு தெய்வத்தின் வீட்டில் பிரகாசமாக எரியும் ஒரு பெரிய ரத்னதீபம் போல அல்லவா விளங்குகிருள். இதுவரை அழகு தெய்வம் என்கிற வீட்டில் ஒரே இருட்டாகவிருந்தது. அந்த பவனம் சீதையின் சுந்தரமான ரூபத்திஞல் அந்த வீட்டிற்கே வெளிச்சத்தை கொடுக்கிறதுமன்றி, அந்த வீட்டினுடைய அழகின் சிகரத்தையும் அல்லவா வெளிப்படுத்துகிருள். எத்தனை எத்தனையோ உபமானங்களால் கவிகள் சீதையின் சௌந்தர்யக் குவியலைப் பற்றிப் பாடியிருக்கிருர்கள். அவ்வித மிருக்கும்போது, நான் விதேக குமாரி ஜனக நந்தினியின் அழகை எந்தவித உப மானத்தால் வர்ணிப்பேன்? (1246)

[தியானம்

ஹே சீதா, கமலா, பத்மவாஸினி, தரணிசுதா, ஜனக நந்தினி, உன் ரகுகுலராமன் எவ்வளவு உத்தமான குணங்கள் படைத்தவன் தெரியுமா? அஸூயையை விலக்கினவர். மஹாவீரன். தர்மாத்மா, கோபத்தை ஜயித்தவர், கர்வமில்லாதவர், குஹன் வானரர்கள், அஹல்யை போன்றவர்களிடம் அன்புடன் பழகி, தன்பெருமையை அவர்களுக்கு அள்ளிக்கொடுத்தவர். பிறருக்கு கிடைக்கும் லாபத்தைப்பற்றி பொருமை இல்லாதவர். பிராணிகளை அவமதிக்கும் ஸ்வபாவமில்லாதவர். பூமிதேவியைப்போல பொறுமையுள்ளவர். மூவுலகத்திற்கும் பிரியமானவர். புத்தியில் பிரஹஸ்பதிக்கும், பராக்ரமத்தில் மஹேந்திரனுக்கும், தேஜஸில் ஆதித்யனுக்கும், எல்லா ஜனங்களுக்கும், தம் பிதாவான தசரதருக்கும் ஸந்தோஷத்தைக் கொடுக்கும் உத்தம குணங்கள் உள்ளவர். அண்டினவர்களைக் காப்பாற்றும் சிறந்த குணங்கள் படைத்த மஹாலக்ஷ்மியே, உனக்குத் தகுந்தவன் ராமனே, யோக்யத்திலும், சீலத்திலும், அழகிலும், பணிவிலும், புத்தியிலும் அவரே உனக்கே தகுந்த கணவர். நீயே அவருக்கு உகந்தவள். நீங்கள் இருவர்களும் நித்ய தம்பதிகளாக இருந்து சகல ஜகத்தையும் உய்விக்கச்செய்கிறீர்கள். நீங்களே என் தவம், தனம், தனத்தின் பயன், உங்களையே நாங்கள் சரணமடைந்தோம். தாயே, உன்பிரிவிஞல் வாடிப்போகும் தாமரை போல முகத்தை உடைய ஸ்ரீராமனிடம் என் தோஷங்களைப் போக்கி, என்னை ஆட்கொள்ளச் செய்யச்சொல். கருணைக்கடலே உன் திருஷ்டியில் நானும் குளிர்ந்து போகவேண்டும். என் வார்த்தை

களை அசத்தியமாக்காதே. ஆஞ்சநேயா, சிவசக்தி ஸ்வரூபமே, நாரதரே எனக்கு அருள் செய்யும்.]

இந்த பிரகாரம் சீதையின் சோபையை தனக்குள் எண்ணி, வர்ணனை செய்து, பிறகு தன் நிலைமையையும், காலம், இடம், முதலியவற்றையும் உத்தேசித்த பிரபு ஸ்ரீராமசந்திரன் சமயத்திற்கு தகுந்தாற்போல தன் தம்பியான ஸ்ரீ லக்ஷ்மணனிடம் பவித்திரமான மனத்துடன் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (1247)

"லக்ஷ்மணா, இந்தப் பெண் ஜனகருடைய பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். இவள் காரண நிமித்தமாக இந்தப் பெரிய தனுஷ்யக்ஞம் என்கிற உத்ஸவம் நடக்கப்போகிறது. இவள் தன் சகிகளுடன் கௌரி பூஜைக்காக வந்திருக்கிறாள். இந்த பெண் இந்த நந்தவனத்தையே தன் அழகினால் பிரகாசப் படுத்துகிறாள்." (1248)

(ராமன் தனக்குள்) அமானுஷ்யமான அழகைக் கொண்ட இந்த சீதையைக் கண்டு, ஸ்வாபாவிகமாக பரிசுத்தமாக உள்ள என் மனது கலங்குகிறது. இந்தக் காரணத்தை கடவுள்தான் அறிவான். "அடே தம்பி, கேளு, எனது வலது அங்கங்கள் துடிக்கின்றன. மங்களத்தைத்தரும் பாக்யத்தை சூசிப்பிக்கின்றன." (1249)

"ரகுவம்சத்தில் சகஜமான ஒரு குணம் உலகம் பூராவும் போற்றப்படுகிறது. அதாவது, ஒருக்காலும் கெட்டவழியில் அவர்கள் மனம் செல்லாது. இது ஸ்வபாவமாகவே அவர்களுக்கு ஏற்பட்ட உத்தமமான குணம். என்னுடைய மனத்தின் மீது எனக்கு அபாரமான விஸ்வாஸம் உண்டு. ஸ்வப்னத்தில்கூட பரஸ்திரியைப்பற்றி நான் கண்டதில்லை. யுத்தத்தில் சத்ருவுக்கு தன் முதுகைக் காட்டி ஓடி பின்வாங்காதவனும், பரஸ்திரியை காம விஹாரத்துடன் தன் மனத்திலோ அல்லது பார்ப்பதிலோ ஆசையில்லாதவனும், ஒருவன் வேண்டும் என்று யாசித்துக் கேட்ட பொருளை "இல்லை" யென்று சொல்லி வெறும் கைகளுடன் அனுப்பி வைக்காதவனுமாகிற ஸ்ரேஷ்டமான குணங்கள் உள்ள புருஷோத்தமர்கள் இந்த உலகில் ரொம்ப, ரொம்ப குறைவு." (1250)

இவ்விதம் ஸ்ரீராமன் தன் தம்பியுடன் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீராமனுடைய மனமானது சீதையின் அத்யந்த ரூபலாவண்யத்தில் மெய்மறந்து, அவளுடைய முக

ரூபியான தாமரை புஷ்பத்தின் மகரந்த ரஸங்களை ஒரு வண்டு குடிப்பது போல குடிக்துக் கொண்டிருந்தது. (1251)

[தியானம்

ஹே ராமா, ஹே ரமா காந்தா, ஹே ஜயஸ்ரீ, ஹே ராஜ்யஸ்ரீ, ஹே பலஸ்ரீ, ஸ்ரீ வித்யாஸ்ரீ, மோக்ஷலக்ஷ்மி, ஸ்ரீ புண்யஸ்ரீ, வர வரதே, உங்கள் தயைதான் எனக்கு வேண்டும். எப்படி மஹானுபாவனுன ஸ்ரீ லக்ஷ்மணன் உங்கள் இருவர்களிடமும் விஸ்வாசம் காட்டி, சொந்த தாய்தகப்பன்மார்களைத் துறந்து, ஸ்நேகத்தாலும் பக்தியாலும் உங்களுக்கு முன் மரவுரி கட்டிக் கொண்டு, உங்களோடு வனவாசம் செய்து, ரக்ஷித்தாரோ, அவ்வளவு மகத்தான கைங்கர்யம் செய்த மஹாபாக்யவான் என் ஆசார்யரான மஹாஉரகரின் அம்சமான லக்ஷ்மணனை நான் நமஸ்கரித்து உங்களை வேண்டுகிறேன். மிக்கப் பெருந்தன்மை குணம் படைத்தவனும், பார்க்கப் பிரியமானவனும், ஸ்ரீவர்த்த னன் ஸ்ரீகரனுமாகிய லக்ஷ்மணர் அதிகமாகப் பேசாமல் அநேக கார்யங்களை நிர்வஹித்த கட்டளையிட்ட பிரகாரம் செய்யும் சாமர்த்தியம் உள்ளவன். மிருதுவான ஸ்வபாவமுள்ளவன். ராகவனுக்குப் பிரியன். அப்பேற்பட்ட லக்ஷ்மணன் ராவணனுல் சக்தி ஆயுதத்தினுல் அடிக்கப் பெற்று மூர்ச்சித்து இருந்த சமயம், ராவணனும் அவன் பரிவாரங்களும் முயற்சி செய்தும் தூக்கமுடியாமல் களைத்துவிட்டார்கள். ஆனுல் பக்தி உள்ளவ னும், அபார கருணை உள்ளவனும், அனுகூலமான ஹ்ருதய முள்ளவனுமான ஆஞ்சநேயருக்கு உட்பட்டு அதே லக்ஷ்மணர் லேசானுர். அவர் தொட்ட மாத்திரம் சக்தி ஆயுதமும் லக்ஷ்மண ரிடமிருந்து விலகியது. சகல விரோதிகளையும் நாசம் செய்யும் ஸ்வபாவமுள்ள விஷ்ணுவின் மனத்திற்கு எட்டாத அம்சமான தன் ஸ்வரூபத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு லக்ஷ்மணர் பிரக்ஞை தெளிந்து, காயம் ஆறி முன்போல ஆனுர். ஐயா, இப்படிப்பட்ட நிர்மலமான பக்தியினுல் மஹாலக்ஷ்மி நாராயணு, உங்களை நான் சதா பஜிக்க வேண்டும். லக்ஷ்மணரும் ஆஞ்சநேயரும் நாரதரும் விஸ்வாமித்திரரும் எங்களை அனுக்ர ஹிக்கவேண்டும்.]

சீதாதேவியானவள் ஆச்சர்யப்பட்டுக்கொண்டு நான்கு திக்குக்களிலும் பார்த்தாள். அவளுடைய மனது அந்த சுந்தர மான ராஜகுமாரர்கள் எங்கு சென்றுர்கள், எங்கு மறைந்தார்கள் என்று தவித்தது. ஒரு யௌவனப் பெண்மானின் கண்களைப்

போல அங்குமிங்கும் அவள் கண்கள் துடித்தன. எந்த எந்த திசைகளில் அந்த மஹாபாக்யவதி பார்த்தாளோ, அந்த அந்த இடங்களில் வெள்ளைத் தாமரையின் இதழ்களாகிற கண்களிலிருந்து பொழியும் கருணை மழை விழுந்தது. அந்த அந்த இடங்களில் அந்த உத்தம சீதையினுடைய பார்வையால் ஸம்பத்துக்களின் பிரவாஹங்கள் நான் முன்பு போகிறேன், நான் முன்பு போகிறேன் என்று சூசிப்பதைப்போல புஷ்ப தாரைகள் விழுந்தன. (1252)

அந்த சமயத்தில் அவளுடைய பிரியமான சகிகள் கொடிகளின் மறைவில் ஸ்யாமள வர்ணத்துடன் ஒருவரும், சிகப்பு நிறத்துடன் மற்றொருவரும் இரு சுகுமாரர்களான ராஜபுத்திரர்களைக் காட்டினார்கள். சீதை அவர்களின் பரிபூர்ண ரூபத்தைத் தன்னுடைய விசாலமான புஷ்கரக் கண்களால் மிக்க ஆர்வத்துடன் பார்த்தாள். எப்படி சந்தோஷித்தாள் தெரியுமா ? அவள் அந்த ரூபங்களைப் பார்த்து, எவ்விதம் அவள் மனம் பிரசன்னமடைந்தது தெரியுமா—இழக்கப்பட்ட சிறந்த பொக்கிஷத்தை, உத்கிருஷ்டமான சிறந்த அடையாளங்களால் எவ்விதம் கண்கள் தெரிந்து கொள்ளுமோ, அதுபோல அவள் ஸ்ரீராமனைக் கண்டு சந்தோஷமடைந்தாள். (1253)

ஸ்ரீரகுநாதனின் அழகைக் கண்டு அவளுடைய புண்யமான நேத்ரங்கள் பலகணங்கள் திறந்தபடியே விரிந்திருந்தன. ஆச்சரியத்தால் தாக்கப்பட்ட அவளுடைய கண் இதழ்கள் மூடமறந்தன. அந்த பரமாத்மாவினுடைய அதிக ஸ்நேக காரணத்தால் அவளுடைய உத்தமமான சரீரம் தன்நிலையை மறந்து, சரத்காலத்து பூர்ணசந்திரனைக் கண்டு சகோரபக்ஷிகள் அடையாளம் தெரிந்துகொண்டு, சந்தோஷத்தால் தத்தளிக்குமோ, அதுபோல அவளுடைய மனதேகநிலை இருந்தது. (1254)

நேத்ரங்களின் பார்வை வழியினால் ஸ்ரீராமச்சந்திரனை தன் ஹ்ருதயத்தில் அவள் ஆகர்ஷித்துக் கொண்டாள். (ஆகர்ஷண சக்தி அல்லவா அவள்) ரொம்ப கெட்டிக்காரியான ஜானகி அவரை தன்வசம் இழுத்தபின்பு தன் இமைகளாகிய கதவுகளை மூடி அவரை ஹ்ருதயத்தில் அடைத்துத் தாழ்ப்பாள் போடுவது போல பூட்டிவைத்துக் கொண்டாள். அந்த சகிமார்கள் ஜானகியினுடைய ஆனந்த பிரேமை அன்பைப் பார்த்து, மனம் கலங்கினவர்களாகி ஒன்றும் பேசமுடியாமல் கஷ்டப்பட்டார்கள். (1255)

அந்த சமயத்தில் அந்த இரு சுகுமாரர்களும் புஷ்பக் கொடிகளால் விளங்கும் மண்டபத்திலிருந்து வெளிவந்தார்கள். அவர்கள் எவ்விதம் தோன்றினார்கள் தெரியுமா? அடர்ந்த கருப்பு நிறமுள்ள மேகத்தைக் கிழித்துக்கொண்டு பூர்ணசந்திரன் வெளிவருவது போல அவர்கள் தோன்றினார்கள். (1256)

அந்த சுந்தரமான இரு ராஜகுமாரர்களின் அழகு சௌந்தர்யங்கள் நிகரற்று எல்லையின்றி பிரகாசித்தன. அவர்களுடைய திருமேனியின் அழகு நீலோத்பலம் போலவும் இந்திர நீலநிறமுள்ள தாமரையைப் போலவும், தங்க நிறமான கமலபுஷ்பம் போலவும் விளங்கின. அவர்களுடைய தலையில் அழகான மயில் கொண்டை மாதிரி சுருள்கொண்ட சிகைமுடிகள் அலங்கரித்தன. அந்த அடர்த்தியான மயிர்கட்டுக்களில் பூங்கொத்துக்கள் வைக்கப்பட்டிருந்தன. (1257)

[தியானம்

அம்மா, மஹாலக்ஷ்மி, நாராயணா, சீதாராமா, திருமேனி கண்டேன், பொன்மேனி கண்டேன் என்று ஆனந்தத்தால் பாடிய பேயாழ்வார் உன்னுடைய ஹிரண்ய வர்ணத்தாலும், காடோபகூடமான மஹாலக்ஷ்மியின் சேர்க்கையாலும் நீலமேக ஸ்யாமள நிறமுள்ள பகவான் பொன்மேனியாக உன் பிரகாசத்தால் விளங்கினார் என்று ஸாதித்தார். ஹே தயாபரி, ஹரிணீ, சந்திரனுடைய பொன்போன்ற குளிர்ச்சியுள்ள நிறமுள்ளவளே, சந்தோஷத்தை அளிப்பவளே, தாபத்ரயங்களைப் போக்குபவளே லக்ஷ்மியே, அக்னிபோல தேஜஸ்வரூபமுள்ளவளே, பில்வ நிலையே, உன் அனுக்ரஹத்தால் ஸஹஸ்ரசீர்ஷங்கள் உள்ளவனும் தேவதேவனும், ஆயிரமங்கள நாமங்களை உடையவனும், முகுந்தனும் ஜனார்த்தனனும் நாராயணன் என்கிற சர்வசப்தத்தினால் அறியப்படுவனுமாகிய உன் விபூதிநாயகனை சரணமடைந்து, பிரபத்திபண்ணி உங்கள் இருவர்களின் மங்கள கிருபையை வேண்டுகிறேன். ராமபத்னி, ஜனகநந்தினி, உன் அழகையும் குணஸ்ரேஷ்டங்களையும் தயையும் நினைத்து, ஸர்வஸ்ரேஷ்ட குணக்கடலாகிய பகவானை நமஸ்கரித்து, அவருடைய கருணையையும், பக்தியையும் சேவையையும், பரமானுக்ரஹத்தையும், வாத்ஸல்யத்தையும் வேண்டுகிறேன். சம்பு, திரிபுரசுந்தரி, சுப்ரமண்யர், அக்னி, இந்திரன், சூர்யன், ஸோமன், திதி, நக்ஷத்திரம், முகூர்த்தம், காலபுருஷன், கருடன், விஷ்வக்ஸேனன், அனந்தன்

சதாசிவன், மார்த்தாண்ட பைரவன், கணபதி, ஸித்தலக்ஷ்மி எல்லோரும் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

நெற்றியில் திலகமும் வெயிலின் பரிஸ்ரமத்தினால் வியர்வைத் துளிகளும், ரொம்ப சோபனகரமாக விளங்கின. காதுகளில் அழகான குண்டலங்களின் நிற ஒளிகளும் அவர்களுடைய காதுகளில் அழகான நிழல்களைப் பரப்பின. வளைந்த புருவங்கள், சுருள்சுருளான மயிர்கொத்துக்கள், அப்போது அலர்ந்த ஸரோஜம் என்கிற தாமரை புஷ்பத்தின் இதழ்களைப் போல விரிந்து சிகப்பு ரத்னநிறமுள்ள சுபமான நேத்ரங்கள். (1258)

முகதவடைகள், மூக்கு, கன்னப்பிரதேசங்கள் ரொம்ப அழகாகவிருந்தன. என் மனதை அபஹரிக்கும் புன்சிரிப்பு, அதன் சோபை விலாஸங்கள் ரொம்ப சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறதாக விருந்தன. அவர்களுடைய முகத்தின் பரம சௌந்தர்யத்தை என்னால் எப்படி சொல்லக்கூட முடியும்? அவைகளைப் பார்த்து, அநேக காமதேவர்கள் கூட வெட்கப்பட்டிருப்பார்கள். (1259)

வக்ஷஸ்தலத்தில் முத்து, மணிமாலைகள். வலம்புரி சங்கு போல அழகான கழுத்துக்கள். காமவேனுடைய குட்டியானையின் துதிக்கைப்போல நீண்ட அழகான புஜங்கள். அவைகளின் புஜபலங்கள் எல்லையில்லாதவை. அந்த சகிக் கூட்டத்தில் ஒருத்தி சொன்னாள். "தோழிகளே, இடதுகையில் புஷ்பக் கொத்துக்களை வைத்திருக்கிறவனும் நீலமேக ஸ்யாமளனாக விருப்பவன் இந்த இரண்டு ராஜகுமாரர்களில் ரொம்ப நேர்த்தியான அழகுடன் பிரகாசிக்கிறான்." (1260)

ஸிம்மத்தின் இடுப்புப்போல ஒல்லியாகவும், அழகாயும் பல முள்ளதாகவும்) அந்த இடுப்பில் பட்டுபீதாம்பரமும், அழகு, சிலம் இவைகளுக்கு இருப்பிடமானவனும், சூர்யகுலத்திற்கு ரத்னதீபமாக விளங்கும் ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டு, அந்த சீதையின் தோழிமார்கள் மதிமயங்கி ஆச்சரியத்தினால் தங்கள் நிலையை மறந்தார்கள். (1261)

அந்த ஸ்திரிகளின் கூட்டத்தில் ஒருத்தி கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, சீதையிடம் சென்று, அவள் கைகளைப் பிடித்துக்கொண்டு, சொன்னாள், "கிரிஜாதேவியின் தியானத்தையும், பூஜையையும்பிற்பாடுசெய்துகொள். இப்போது ஏன் இந்த ராஜகுமாரனைப் பார்க்கமாட்டேன்கிறாய்?" (1262)

அந்த சமயத்தில் சீதை வெட்கத்துடன் தன் நேத்ரங்களைத் திறந்தாள். தன் முன்பே நிற்கும் இரு ராஜகுமாரர்களைக் கண்

டாள். ரகுகுலத்தின் சிம்மங்கள் போலவிருந்தார்கள். கீழே கால்நகத்திலிருந்து முடிவரை அந்தபிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய சோபையைக் கண்டாள். நல்ல எண்ணமுள்ள தன் பிதாவினுடைய விரதத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு, சீதை மனத்தில் ரொம்ப சங்கடப்பட்டாள். (1263)

[தியானம்

ஹே தாயே, மஹாலக்ஷ்மி, பகவதி, ஜகதம்பா, பகவானுகிய ஸ்வரூபத்திற்கு ஏற்ப, அனுருபம் (அழகின் அமைப்பிலும், குணங்களின் விசேஷங்களாலும் உமக்கு ஸமமானவள் என்கிற தால்) கொண்ட மஹா உத்தமியே, பகவானுடைய லீலாவிபூதி, நித்யவிபூதிகள் அடங்கிய மஹாவிபூதியும், பகவானுடைய லீலைக்கு ஏற்ப திவ்ய ரூபங்களுடனும், மனோ அனுகூலத்துடன் பிரிவில்லாத சேர்க்கையுள்ள உன்னை, பகவானைப் போலவே, பிரதானமாக அடைக்கலத்துடன் அடையத்தக்கவள் என்று என் பூர்வ ஆசாரியர்கள் கோஷித்ததுபோல, அம்மா நானும் பல தடவைகள் கோஷித்து உன்னால் புருஷகாரம் செய்யப்பட்டு, பகவான் நாராயணருடைய பக்தியையும், கைங்கர்ய சேவையையும், கருணையையும் சதாவேண்டுகிறேன். தாயே, நாராயணருடைய சிறந்த பொக்கிஷமே, பொன்னும் மணியும், சந்திரனும் அவனுடைய ஒளியும், பூவும் மணமும், தேகமும் பிராணனும், சோபையும் சோபையின் காரணமாகவும் விளங்குகிற உங்களை ஸதா காடோபகூடமாக என் ஆத்மா உங்கள் சேர்க்கையை நாடி உங்களுடைய அபாரமான கிருபையை வேண்டுகிறது. உங்கள் இருவர்களின் சரித்திரங்களையும், புண்யமான கீர்த்திகளையும், பலஸ்ரீயான திவ்யமங்கள ஸ்வரூபத்தை எப்போது சதா காண்பேன், கேட்பேன், சொல்வேன் என்று என் மனம் தவிக்கிறது. நாரதரே, வால்மீகியே, ஆஞ்சநேயரே, விஷ்வக்ஸேனரே, தியாகராஜரே, அனுகிரஹம் செய்யமாட்டீர்களா? எவ்வளவு நாட்கள் நான் தாமதிக்கவேண்டும்.]

பிரியசகிகளால் சீதை பிரேமையின் பரவசமடைந்ததைக் கண்டு, அவர்களும் பயமடைந்து, பிரியமான வசனங்களைச் சொன்னார்கள். "ரொம்ப நாழியாகிவிட்டது. நாம் போக வேண்டும். நாளைக்கும் இதே நேரத்தில் நாம் வருவோம்" என்று சொல்லிவிட்டு அவர்கள் மனத்திற்குள் சிரித்தார்கள். (1264)

சீதை இந்த ரஹஸ்யங்கள் அடங்கின வார்த்தைகளைக் கேட்டதும் மிக்க வெட்கப்பட்டாள். நாழியும் ஆகிவிட்டது. மாதாவிற்கு பயப்பட்டவளான சீதை, நாழி ஆகிவிட்டதனால், அவளும் ரொம்ப பயப்பட்டுப்போனாள். தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு, அவள் ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்ய மங்கள ரூபத்தை தன் ஹ்ருதயத்தில் நிறுத்தினாள். பிறகு அவரையே தியானித்துக்கொண்டு, தான் பிதாவுக்கு கட்டுப் பட்டவள், என்கிற பராதீனத்தையும் ஞாபகப்படுத்திக்கொண்டு திரும்பச் செல்ல யத்தனித்தாள். (1265)

மானைப் பார்ப்பது போலவும், பக்ஷியைப் பார்ப்பது போலவும், விருக்ஷத்தைப் பார்ப்பது போலவும் வியாஜமாகப் கொண்டு என் தாய் சீதை திரும்பி திரும்பி ஸ்ரீராமச்சந்திரனைக் பார்த்துக்கொண்டு போனாள். அவருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பார்க்க பார்க்க பிரேமை வெள்ளம் அவள் மனதில் பொங்கியது. (1266)

பரமசிவனுடைய வில் மிக்க கடினம்; அதை ஒடிப்பது இன்னும் மிகக் கடினம், என்கிற எண்ணங்கள் ஹிருதயத்தில் தோன்றினதும் அவள் மனத்தில் அழுகை ஏற்பட்டது. மனத் தில் வருத்தத்துடனும் ஹிருதயத்தில் ஸ்யாமள நிறமான ரகுராமனுடைய திவ்ய ஸ்வரூபத்தை தரித்துக்கொண்டு வழி நடந்தாள். சிவபெருமானுடைய கடினமான வில்லை எவ்விதம் சுகுமாரனான ஸ்ரீராமச்சந்திரன் ஒடிப்பார்? சீதையின் தகப்பனாரோ பிரதிக்ஞை தவறாதவர். இதனால் மனவருத்தம் தாளாமல் மனம் விட்டு அழ ஆரம்பித்தாள். பகவானுடைய ப்ரேமை என்கிற ஐஸ்வர்யத்தின் காரணமாக ஏற்பட்ட பலத்தினால் மனதைக் கட்டுப்படுத்தி, அவருடைய திவ்யமான விக்ரஹத்தை ஹிருதயத்தில் தரித்துக்கொண்டு, மனத்தை ஒரு விதமாக சந்தோஷப்படுத்திக் கொண்டு நடந்தாள். சீதை, சுகத்தை வாரிக் கொடுப்பவளும், நிகரற்ற ஸ்நேகத்தை எல்லா சமயங்களிலும் காண்பிப்பவளும், சோபையின் எல்லையற்ற அழகை உடையவளும், சீலம், குணங்கள், ஆசாரங்களாகிற பரிசுத்தமான நடத்தை உள்ளவளுமான அந்த சீதை நகருவதைப் பார்த்த ஸ்ரீராமன், (1267)

பரம பிரேமையின் கோமளமான மையினால் (இங்கினால்) அவளுடைய திவ்ய ஸ்வரூபத்தை தன்னுடைய சுந்தரமான சித்தத்தில் சித்திரம் வரைவது போல தீட்டினார். சீதாதேவி யானவள் மீண்டும் பவானியினுடைய புண்யமான கோவிலுக்

குள் சென்று, அவளுடைய வரமளிக்கும் பாவனமான சரணங்களில் வணங்கி, பிரேமை அஞ்சலியுடன் கை கூப்பிக்கொண்டு வெட்கத்தை விட்டுச் சொன்னாள். (1268)

[தியானம்

ஹே கமல வாஸினி, ஸ்ரீ என்கிற ஸம்போதனத்தால் மகிமையைத் தெரிவிக்கப்படும் நாராயணா, அம்மாவாகிற மஹாலக்ஷ்மியின் சேர்க்கையால் ஜகம் எல்லாம் அம்ருதமயமாகி துளிர்க்கிறது. அந்த அம்ருதகடாக்ஷம் குறைந்து வற்றிப் போனால் உலகங்கள் எல்லாம் உன்னிடம் லயமடைகின்றன. உங்கள் இருவர்களுடைய மகிமைகளை இன்னும் சப்தபிரும்மம் அடங்கிய வேதங்கள் தேடி அலைந்தும், கஷ்டப்பட்டும் அளவிட முடியாததாகபடி யிருக்கின்றன. ஆத்ம ஸமர்ப்பணமாகிற ஹவிசை யக்ஞவபுः என்று பெயர் கொண்ட உங்களுடைய பாதசரணார விந்தங்களில் அர்ப்பித்து என் மனஸில் நீங்கள் இருவர்களும் சதா நர்த்தனம் செய்யவேண்டும் என்று வேண்டுகிறேன். இகலோகத்தையோ, பரலோகத்தையோ நாடி லோபமாக இல்லாமல், உங்கள் ப்ரீதிக்காகவே செய்கிறேன். தோஷங்கள் நிறைந்ததும், பாபங்கள் மலிந்ததுமான என்னுடைய ஆராதனக் குறைவுகளை லக்ஷ்யம் செய்யாமல் உங்கள் அபாரமான கருணை அம்ருதத்தால் என்னை நனைக்கச் செய்யவேண்டும். ஹே ஜயலக்ஷ்மி, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுகிரஹம் என்னும் ஐந்து காரியங்களைச் செய்யும் ஈஸ்வரனின் மனத்தால் தியானிக்கப் படுவளே, தாமரையை ஜயிக்கும் பாதங்களை உடையவளே, சிவந்த நிறமான ஸர்வ ஸம்ஷோபண சக்கரம் முதலிய வடிவங்கள் உடையவளே, ஜகந்மாதா உன்னை அடைந்து நான் பகவானை அடைகிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்.]

"ஹே ஜய ஜய கௌரி, கிரிராஜகுமாரி பார்வதி, அம்மா, உனக்கு சதா மங்களங்கள் உண்டாகட்டும். கோடி கோடிக் களான அண்டங்களுக்கு நாயகனாகிற மஹேசருடைய முகமாகிய சந்திரனை மிக்க ஆவலோடு பார்க்கும் சகோரபக்ஷியே, அம்மா, உங்களுக்கு மங்களமான ஜயங்கள் உண்டாகட்டும். கஜவதனன், ஆறுமுகன் இவர்களுடைய மாதாவே, ஜகத்ஜனனி, மின்னலைப்போல ஒளியுள்ள சரீரத்தை உடையவளே, அம்மா, உன்னை நான் ஸ்துதி செய்கிறேன்." (1269)

"ஆதிமத்யம் அந்தம் இவைகளால் அளக்க முடியாத எல்லையற்ற மகிமைகளை உடையவளே, உன்னுடைய எல்லையற்ற பிரபாவங்களை வேதங்களால் இன்னும் அறியமுடியவில்லை. அம்மா, ஹேமவதி, சர்வசக்தியே, தாயே, உன்னால் இந்த உலகம் ஜடத்திலிருந்து துளிக்கிறது. துளிர்ச்சி அடைந்து வளருகிறது. அம்மா, உன்னிடம்தான் லயமடைகிறது. ஹே விஸ்வமோஹினி, உன்னுடைய லீலைகளினால் இந்த சராசரங்கள் அனைத்தும், எஜமானியாகிய உன் ஸ்வதந்த்ரமான சங்கல்பங்களினால் உஜ்ஜிவிக்கின்றன" (1270)

"பதியையே தெய்வமாகக் கொண்டாடும் சதி பத்னிகளுக்குள், அம்மா, கௌரி, ஸ்ரேஷ்டமான முதல் ஸ்தானத்தை நீதானே வகிக்கிறாய். தாயே, உன்னுடைய அபாரமான, எல்லை யற்ற மகிமைகளை ஆயிரக்கணக்கான சாரதாதேவிகளும் ஆதிசேஷர்களும் சொல்லிக் கணக்கிடமுடியாதே" (1271)

"தயாபரி, பக்தர்களின் குறைகளை சுலபமாகப் போக்கி, அவர்கள் கேட்டதைக் கொடுத்து, அவர்களின் மனங்களை குளிர வைக்கும் ஈஸ்வரி, திரிபுரத்தை எரித்த திரிபுராரிக்கு அன்புள்ள பத்னியே, அம்மா, உனக்கு நித்ய பூஜை முதலிய சேவைகளைச் செய்து மனிதர்கள் தங்களுக்கு வேண்டிய தர்ம, அர்த்த காம மோக்ஷ பலங்களை சுலபமாகப் பெறுகிறார்கள். ஹே தேவி, உங்களுடைய கமலபதங்களில் அத்யந்த பிரேமை யுடன் பூஜை செய்து, தேவ, மனுஷ்ய முனிகணங்கள் சுகத்தை அடைகிறார்கள்" (1272)

"ஸர்வ அந்தர்யாமி யாகிய உனக்கு என் மனோரதங்கள் பூராவும் தெரியும், நன்றாகத் தெரியும். அம்மா தாயே, நீ ஒவ்வொருவருடைய ஹ்ருதயாகசத்தில் வாஸம் செய்கிறாய். இந்தக் காரணத்தால் என் விருப்பங்களை உனக்கு வெட்கத்தினால் மாத்திரமின்றி, இந்த சகிகளுக்கு முன்பே, வெளியில் பிரகடனப்படுத்த விரும்பவில்லை" என்று இவ்விதம் சொல்லி விட்டு, ஜானகி தேவியானவள் அந்த கிரிஜாவின் பாத கமலங் களில் விழுந்து நமஸ்கரித்தாள். (1273)

பவானிதேவி சீதையின் வினயத்திற்கும், பிரேமைக்கும் பாத்திரமானாள். அவள் வசத்தில் அனுக்கிரஹமான மனத்துடன் இருந்தாள். அவளுடைய மூர்த்தி உருவத்திலிருந்து அழகான ஒரு மாலை நழுவியது. அவளும் மந்தஹாஸம் செய்தாள். சீதை மிக்க மரியாதையுடன் அந்த மாலைப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு, தன் தலையின்மேல் சூட்டிக்கொண்டாள். கௌரியி

னுடைய ஹ்ருதயம் சந்தோஷத்தால் நிரம்பப்பட்டதாகத் தோன்றியது. அவள் சொல்ல ஆரம்பித்தாள். (1274)

"சீதா, என்னுடைய உண்மையானதும், மங்களகரமான ஆசிர்வாதங்கள் அடங்கின வசனங்களைக்கேளு. நீ நினைக்கிறபடி உன் ஆசைகள் பூர்த்தி ஆகும். சுத்தமான ஹ்ருதயமுள்ள நாரத ரிஷியினுடைய வார்த்தைகள் சந்தேகம், பிரமை ஆகிய தோஷங்கள் அற்றவை. சத்யமான வசனங்கள். ஒருக்காலும் பொய்யாகமாட்டாது. எந்த புருஷனிடம் உன் மனது ஈடுபட்டிருக்கிறதோ, அந்த புருஷன் உனக்கு கிடைப்பான்." (1275)

"சீதே, எந்த மஹாபுருஷனிடம் உன் மனம் அன்புடன் லயித்திருக்கிறதோ, அந்த அழகான சியாமள நிறத்துடன் இருக்கும் ஸ்ரீராமச்சந்திரனை உன் புருஷனுக நீ அடைவாய், கவலைப்படாதே. அந்த பரமபுருஷன் கருணைக்கு பொக்கிஷம். ஸர்வக்ஞன் (எல்லாம் அறிந்தவன்). அவனுக்கு உன்னுடைய சீலமான நடத்தையும் அபாரமான ஸ்நேகமும் தெரியும்." இவ்விதம் ஸ்ரீ கௌரி தேவியினுடைய ஆசீர்வாதங்கள் அடங்கின மங்கள வசனங்களைக் கேட்டு, ஜானகிதேவி தன் சகிகளுடன் மனத்தில் சந்தோஷப்பட்டாள். பக்தசிரோண்மணியாகிய துளசிதாஸர் சொல்லுகிறுர். "பவானியினுடைய பாத சரணங்களில் அடிக்கடி விழுந்து நமஸ்கரித்து, மனத்தில் பிரசன்னமடைந்து சீதாதேவியானவள் ராஜமஹல்லுக்குச் சென்றுள்." (1276)

கௌரி தேவியின் அனுகூலமான வரப்பிரசாதத்தைப் பெற்று, சீதை எந்தவிதமாக சந்தோஷத்தை அடைந்தாளோ, அந்த விதத்தை யாரால்தான் வர்ணிக்கமுடியும்? அவளுடைய அழகான இடது பாகங்கள் துடிக்க ஆரம்பித்தன. இனி வரப் போகும் சர்வ ஸ்ரேஷ்டமான மங்களங்களை முன்கூட்டியே அறிவிப்பதாகவிருந்தன. (1277)

ஹ்ருதயத்தில் சீதையினுடைய அமானுஷ்யமான சௌந்தர்ய குவியல்களைப் புகழ்ந்துகொண்டு அந்த இரு ராஜகுமாரர்கள் தங்கள் குருவான விஸ்வாமித்திரரிடம் சென்றுர்கள். கௌசிக முனிவருக்கு ராமன் நடந்தது எல்லாவற்றையும் சொன்னுர். ஏனென்றுல் அந்த முனிவர் ஸரள சுபாவம் உள்ளவரும், மனத்தில் ஒன்றையும் ஒளிக்காத சுத்தமான ஹ்ருதயத்தை உடையவரன்றே? (1278)

[தியானம்

ஹே காமாக்ஷி, உன் அனுக்ரஹத்தால் சதா ஸ்ரீராம சீதா மந்திரங்களையும் நாராயண லக்ஷ்மி ஜபங்களையும் நாமஸ்மரணை பண்ணி, பரமபோக்யமான என் அப்பன் திருவடிகளை அடைய மாட்டேனா? சஞ்சரிக்கிற சுபாவமுள்ள என் மனது தியாகராஜர் அனுபவித்ததுமாதிரி ஸ்ரீசீதாராமனின் அருமை பெருமைகளை உணராதா? ரமா என்கிற பெயர் லக்ஷ்மியின் பெயராச்சுதே. அவளாவது நான் பரமாத்மாவை சதா தியானிக்கிறேன், அவனுக்காக வாழ்கிறேன் என்று எனக்காகச் சொல்ல மாட்டாளா? அர்க்கர், அஜர் என்கிற நாமாக்கள் பகவானை யும் வேறு அர்த்தங்களையும் கொடுக்கும். பகவான் நிறைய கருணை நிரம்பப்பெற்றவராகையால் என் மனது வேறு வஸ்துவை நினைத்திருந்தபோதிலும், அவனையே சொல்லுகிறேன், தியானிக்கிறேன் என்று அவர் நினைக்கக்கூடாதா? ஹே ராமா, உன் நாமத்தைச் சொல்லி வாழும் ஜீவர்கள்தான் சுகியான புருஷர்கள். அழகான ஸுஸ்வரங்களுடன் நாரதர் தியாகராஜர் கீர்த்தனம் செய்து, உன்னை அடைந்தார்களே, அதுபோல என் ஹ்ருதயத்தின் நாடி ஒவ்வொரு நிமிஷமும் உன்னையே நினைத்து வாடுகிறது. எப்போது உன் கருணை எனக்கு கிடைக்கும்? பஞ்சபாண்டவர்களுக்கும் திரௌபதிக்கும் நீ சதா அனுக்ரஹ காமனாகவிருந்து அவர்கள் படும் துயரங்களிலிருந்து அவர்களை நீ காப்பாற்றவில்லையா? சுரபிதேவி, மங்களமான தெய்வமே, நீயாவது எனக்கு அனுக்ரஹம் செய்யமாட்டாயா?]

விஸ்வாமித்திர முனிவர் அந்த புஷ்பங்களை பெற்றுக் கொண்டு நாராயணனுக்குப் பூஜை செய்தார். பிறகு அந்த இரு ராஜகுமாரர்களுக்கும் "உங்கள் மனோரதங்கள் பூர்த்தி ஆகட்டும்" என்று ஆசீர்வாதம் செய்தார். இதைக்கேட்டு ராம லக்ஷ்மணர்கள் சுகமடைந்தார்கள். (1279)

திரிகாலத்தை அறிந்த மஹானுபாவரான அந்த விஸ்வா மித்திரர் போஜனம் செய்துவிட்டு அவர்களுக்கு புராணக்கதை களைச் சொன்னார். இந்தவிதமாக தினம் கழிந்தது. குருவி னுடைய ஆக்ஞையைப் பெற்று, அவர்கள் இருவர்களும் சந்தியா வந்தனம் செய்தார்கள். (1280)

பத்ரையான கிழக்கு திக்கில் அழகான சந்திரன் உதய மாயிருந்தது. அந்த பூர்ண சந்திரனைக் கண்டு, ராமர் அதை சீதையின் அழகான முகத்திற்கு சமமானதாக எண்ணி, உள்ளம்

பரவசமடைந்தார். பிறகு மனத்தில் கவலை அடைந்து, தனக்குள் நினைத்துக்கொண்டார். "இந்த சந்திரன் சீதையின் முகத்திற்கு ஸமமாக இருக்கமுடியாது. (1281)

இந்த சந்திரன் க்ஷீராப்தியில் தோன்றியவன். அதே க்ஷீராப்தியில் அம்ருதமும் விஷமும் தோன்றின. அதனால் விஷமும் இந்த சந்திரனுக்கு சகோதரன். மேலும் பகலில் சூர்யனுடைய ஒளிப்பிரகாசத்தினால் சந்திரன் சோபை ஹீனனாகத் தோன்றுகிறான். அதுமாத்திரமல்ல. பூர்ணசந்திரன் களங்கத்துடன் இருக்கிறான். இப்பேற்பட்ட குணதோஷங்கள் நிரம்பின சந்திரன் என் சீதைக்கு ஸமமாக எவ்விதம் இருக்கக்கூடும்? (1282)

அதுமாத்திரமல்ல, இந்தச் சந்திரன் சுக்லபக்ஷத்தில் வளர்கிறான்; கிருஷ்ணபக்ஷத்தில் தேய்கிறான். காதலன் பிரிவினால் மிகத்தவிக்கும் விரஹிணி ஸ்திரிகளுக்கும் துக்கம் உண்டுபண்ணுகிறான். கிரஹணத்தின் போது ராஹு அவனைப் பீடிக்கிறான். சகோரபக்ஷிகளும் இவனுடைய பிரிவினால் மிக்கதுக்கத்தை அடைகின்றன. தாமரை புஷ்பம் சந்திரனைக் கண்டதும் மூடிவிடுகிறது. இவ்வளவு அவகுணங்கள் (தோஷங்கள்) நிரம்பின சந்திரன் என் சீதாதேவிக்கு எவ்விதம் சமமானவன் ஆவான்?"
(1283)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி, நாராயணா, உங்கள் அம்சமான சிம்சுமார சக்ரம், அதன் நடுவில் துருவனும், அவனைச் சுற்றித் தலையில் தர்மனும், அஸ்வினி குமாரர்கள் நாராயணருடைய பாத சரணங்களிலும், இருபக்கங்களில் வருணனும் ஆர்யமாவும், ஸம்வத்ஸரம் சிசுனமாகவும், மித்ரன் அபானக்ஷேத்திரத்தாலும், அக்னி மஹேந்திரன், கஸ்யபர், துருவனின் வால் பக்கத்திலும் யிருந்து கொண்டு அவனைச் சுற்றிக்கொண்டு சகல தாராகணங்களும், இந்தவிததாக நாராயணரை ஹ்ருத்யமாக சகலலோகங்களும் சுழல்கின்றன. இவ்விதம் பகவான் விஷ்ணுவினால் வாயு, பர்வதங்கள், ஸமுத்திரங்கள் சகிதமான கமலபுஷ்பத்துக்குச் சமமான ப்ருத்வி முதலில் உண்டு பண்ணப்பட்டாள். பிறகு ஒவ்வொரு வஸ்துவிலும் பகவான் விஷ்ணு ஸர்வாத்மனாக அந்தர்யாமியாகவிருக்கிறார். அதே பகவான் விஷ்ணு ஞானரூபியாகி ஸர்வமயமாக பதார்த்தங்களிலிருந்தும் தனிப்பட்டவராகிறார். எவ்விதம் ஸகலகர்மங்களிலிருந்து நிவிருத்தி அடைந்து,

சகலகர்மங்களும் க்ஷயமடைந்து சுத்தமான ரூபத்தால் ஜீவன் ஆத்மஞானத்தால் ஸ்திதமடைந்து, ஆத்ம வஸ்துக் களில் சங்கல்பம் என்கிறதால் ஏற்படும் பலங்களை தியாகம் செய்துவிட்டு அந்த தியாகத்தினால் பதார்த்த பேதங்களின் ப்ரீதியை அடைகிறுர்கள் இல்லை. இவ்விதமாக ஏகமாத் திரமாக வியாபித்திருக்கும் பகவானை ஏகாக்ரசித்தத்துடன், பக்திபாவத்துடன் ஸர்வ விக்ஞான விசுத்த நிர்மலமான சோகமின்றி லோபத்தை ஜயித்து, ஸமஸ்த தோஷங்களையும் விலக்கி நாசமடையச் செய்து, ஸத்வஸ்வரூபத்துடன் பரமேஸ்வரரான வாஸுதேவரை துருவன் அடைந்தது மாதிரி நான் சரணமடைகிறேன். பரமாத்மாதான் கேவலமான ஞானம். அவரால்தான் பின்னமாகவும் எல்லாம் அசத்யமாகவு மிருக்கின்றன. ஞான வைராக்கியத்துடன் கர்மசம்பந்தங்களான யக்ஞம், பசுபக்ஷி ஸமஸ்தருத்விக், ஸோமம், தேவகணங்கள், ஸ்வர்க்கமயமான போகங்கள் இன்னும் அநேக கர்மயக்ஞத்தினால் ஏற்படுவதாகவும் அழிந்து போகிறதாகவும் நினைத்து, அவை களிலிருந்து நான் விமுக்தனாகி, எவ்விதம் துருவன் பகவான் வாசுதேவரை சந்தோஷப்படுத்தி, அவர் மயமாக ஆனானோ, அது மாதிரி உன்னை அடைய விரும்புகிறேன். ஸதாசார்யர்கள் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

"சந்திரனை வைதேஹியின் முகத்திற்கு, உபமானம் சொல்லுவது ரொம்ப அனுசிதமான வேலை. தோஷங்கள் நிரம் பினவன் சந்திரன்." இவ்விதம் ஸ்ரீராமச்சந்திரன் தனக்குள் யோசனை செய்துவிட்டு, சந்திரனைக் காரணவியாஜமாக சீதை யின் சௌந்தர்யலாவண்யங்களைப் புகழ்ந்தார். பிறகு நாழிகை ஆகிவிட்டபடியால் ராத்திரியும் வந்துவிட்டது. குருவினிடம் திரும்பிவந்தார். (1284)

விஸ்வாமித்திரரின் குருபாத சரணங்களை நமஸ்கரித்து, அவர் உத்திரவு பெற்றுக்கொண்டு இருவர்களும் ராத்திரி தூங்க ஆரம்பித்தார்கள். பிறகு விடியற்காலையில் ரகுநாயகர் படுக்கையை விட்டு எழுந்திருந்து தன் பிரியமான தம்பியிடம் சொல்ல ஆரம்பித்தார். (1285)

"என் பிரியமான லக்ஷ்மணா, பார், கமலபுஷ்பம், சக்ரவாக பக்ஷிகள், இன்னும் ஸகலலோகங்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி சுகத்தை அளிக்கும் அருணோதயம் ஏற்பட்டு விட்டது." பிரபுவான ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரபாவங்களை இங்கிதமாக அறிந்த மஹானுபாவனான லக்ஷ்மணன் தன்

கைகளைக் கூப்பி மிருதுவான வாணியினால் சொல்ல ஆரம்பித்தார். (1286)

"அண்ணா, அருணோதயம் ஏற்பட்டதினால் அல்லிப் புஷ்பங்களான குமுதங்கள் தன் இதழ்களை மூடிக்கொள்ளுகின்றன. தாராகணங்களின் பிரகாசம் குறைய ஆரம்பிக்கிறது. அதுமாதிரி உங்களுடைய ஆகமனத்தைக் (வருதலை) கேட்டு ராஜகுமாரர்கள் நம்பிக்கையை இழந்து பலஹீனர்களாக ஆகிவிட்டார்கள்." (1287)

"சகல ராஜாக்களின் ரூபங்களாகவிருக்கும் நக்ஷத்திரங்கள் மந்தமான பிரகாசத்தை உடைய நக்ஷத்திரகணங்களாக விளங்குகிறார்கள். இப்பேற்பட்ட அவர்களால் தனுஷ்ரூபமாகவுள்ள மஹத்தான அந்தகாரம் கொண்ட இருட்டை அப்புறப்படுத்த முடியாது. அவ்விதமான ராத்திரி முடிவடைந்தபடியால் கமல புஷ்பம், கோகிலங்கள், சக்ரவாகங்கள், வண்டுகள், இன்னும் நானாவிதமான பக்ஷிகள் மிக்க சந்தோஷமடைகின்றன." (1288)

"எவ்விதம் எல்லாரும் அருணோதயத்தால் சந்தோஷப்படுவார்களோ, அதுபோல ஹே பிரபு, உங்களுடைய ஸமஸ்தமான பக்தர்களும், தங்களால் தனுஷ்முறிக்கப்படும் சமயம் சந்தோஷமடைவார்கள். பானுவும் கிழக்கு ,திக்கில் உதித்துவிட்டான். ஒரு விதமான பரிஸ்ரமமுமின்றி அந்தகாரமான இருட்டும் அகன்றது. தாராகணங்கள் தங்கள் முகங்களை மறைத்துக் கொள்ளுகின்றன. எல்லா உலகிலும் எங்குபார்த்தாலும் பிரகாசிக்கின்ற தேஜோமயமான வெளிச்சம் தோன்றியிருக்கிறது." (1289)

[தியானம்

ஹே ராமா, சீதா, மஹாலக்ஷ்மி, ஹயக்ரீவா, மதுஸூதனா, ஸர்வவாகீஸ்வரா, வாக்பதி, ஞானிகளுக்கும் யோகிகளுக்கும் கவிகளுக்கும் பூர்ண சந்திரன் போன்றவரே, அகஸ்தியர், நாரதர், பராசரர் ஆகிய மஹான்களால் சேவிக்கப்படுகிறவரே, வேத வேதாந்த சாஸ்திரங்களுக்கும் புராணங்களுக்கும் காரணபூதரே அக்ஞானமாகிய இருட்டைப் போக்கும் ஞான திவாகரா, அக்ஷய மாலை, ஞானமுத்ரை, சங்கம், சக்ரம் இவைகளால் அலங்கரித்திருப்பவரே, லக்ஷ்மி ஹயக்ரீவரே, தேவதேவ, உமது பாதங்களையே மாபெரும் ஐஸ்வர்யங்களாக நமஸ்கரிக்கிறேன். எனக்கு நீங்களே தஞ்சம். சரணம் அடைந்திருக்கும் என்னை வேதாந்த தேசிகன் அனுக்ரஹத்தால் என் பரமாசாரிய அனுக்ரஹத்தினால் நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். ஹம்ஸரே, பரம ஹம்ஸரே,

ஜடாமண்டல ஸம்யுதரே, சுத்த ஸ்படிக ஹ்ருதயமுள்ளவரே, தயை புரியவேண்டும்.]

"ஹே ரகுராயா, நிஜசூரியன் உதையமான வியாஜத்தால் இங்கு கூடியிருக்கும் ராஜாக்களுக்கு, என்பிரபோ, தங்களுடைய பிரபாவங்கள் நன்ருக வெளியிடப்படட்டும். ஸ்வாமி, தங்களுடைய புஜபலத்தால் தங்கள் மகிமையும் பிரகடனப்படுத்தப்படட்டும். இந்த தனுஷை தாங்கள் ஒடிப்பது என்கிறது ஏற்கனவே விதிக்கப்பட்டிருக்கிறது." (1290)

தன் பிரியமான தம்பி சொல்லிய ஹிதமான வார்த்தைகளைக் கேட்டு பிரபு சிரித்துக்கொண்டார். ஸ்வபாவிகமான புனிதமான ஸ்ரீராமன் ஸ்நானம் செய்து, மேலும் தன்னை சுத்தம் செய்துகொண்டு நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்துவிட்டுத் தன் குருவினிடம் வந்தார். மங்களத்தைத் தரும் புண்ணியமான அவருடைய பாத கமலங்களில் விழுந்து நமஸ்கரித்தார். (1291)

அதே சமயத்தில் ஜனக மஹாராஜா தன் குருவான ஸதானந்தரைக் கூப்பிட்டு அனுப்பி, அவரை விஸ்வாமித்திரரிடம் சீக்கிரம் சென்று வரும்படி சொன்னுர். "சதாநந்தரும் விஸ்வாமித்திரரைக் கண்டு, ஜனக மஹாராஜரின் நமஸ்காரத்தையும், க்ஷேம வினயதிகளையும் சமர்ப்பித்தார். கௌசிக மாமுனிவரும் மன சந்தோஷமடைந்து, அந்த இரு ராஜ குமாரர்களை அழைத்து, தன் பக்கத்தில் வரும்படி சொன்னுர். (1292)

அவர்கள் சதாநந்தரின் பாதங்களில் நமஸ்கரித்தார்கள். பிறகு பிரபு ஸ்ரீராமச்சந்திரன் குருஜியிடம் வந்து உட்கார்ந்தார்கள். அந்த சமயம் விஸ்வாமித்திர முனிவர், ஸ்ரீராமனிடம் சொன்னுர். "என் பிரியமான ஸ்ரீராமா, ஜனக மஹாராஜர் உங்களைப் பார்க்க விரும்புகிருர்." (1293)

## மாஸ பாராயணம், எட்டாவது நிறுத்தம்
## நவாஹ பாராயணம், இரண்டாவது நிறுத்தம்

"நாம் போய் சீதையின் ஸ்வயம்வர வைபவங்களைப் பார்த்துவிட்டு வருவோம். ஈஸ்வரர் யாரை அனுக்ரஹம் பண்ணி, பெருமைப்படுத்த விரும்புகிருர் என்பதைப்போய் பார்த்துவிட்டு வரலாம்" என்று விஸ்வாமித்திரர் சொன்னுர். லக்ஷ்மணன் சொன்னுன், "ஹே நாதா, எந்த புண்ய புருஷன் பேரில் தங்கள் க்ருபா கடாக்ஷம் ஏற்படுகிறதோ, அந்த ஸத்புருஷன்

தான் பெருமை அடைவான். தனுஷ்ஷை ஒடிப்பதால் அவன் மிகுந்த ஸ்ரேயசை அடைவான்.'' (1294)

[தியானம்

ஹே ராமா, ஜானகி வல்லபா, தசரத புத்ரா, கட்வாங்கன், இக்ஷ்வாகுகுல வம்சத்தில் தோன்றி, ஒரு முகூர்த்த காலத்தில் உன்னுடைய பரம கிருபையை அடைந்தான். அதற்கு அவன் பிராம்மணப் பிரியனுகவும், ஆத்ம ஞானத்தை உடையவனுகவும் பசு, பக்ஷி, தேவ, மனுஷ்ய, யக்ஷ கணங்களுக்குப் பிரியனுகவும், கடைசி காலத்தில் உன் நினைவையே பரமதனமாக நினைத்தபடி யாலும் அடைந்தான். அதைவிட, ஸப்தரிஷிகள் காதைகள் சொல்லியபடி, உன் அபாரமான கிருபையையும் சொல்லவேண் டும். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் இவைகளைச் செய்யும் பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களுக்கும் பகவானுகிய ஒரு (ஏகம்) ஜனுர்த் தனர்தான் என்று நான் விக்ஞானத்துடன் என்னை அவருடைய கருணைக்கு அர்ப்பித்துவிட்டேன். ஸப்தரிஷிகள் சொல்லியபடி யும், பராசரர் மைத்ரேயருக்குச் சொல்லியபடியும் பகவான் ஜனுர்த்தனர் அருள்புரிய வேண்டும். அம்மா லக்ஷ்மி, அயோ நிஜையாகவிருக்கும் உன்னை அடைந்துதான் ராமன் கிருதக்ருத் யனுக ஆனுர். அது மாதிரி உன்னிடம் தஞ்சம் புகுந்து என்னை யும் நீ கருணை மழையினுல் நனைக்க வேண்டும். ஆஞ்சநேயர் தியாகராஜர் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

லக்ஷ்மணனுடைய ஸ்ரேஷ்டமான வசனங்களை விஸ்வாமித் திரர் முனிவரும் ஸதானந்தரும் சிரித்துக்கொண்டு கேட்டார்கள். அவர்கள் லக்ஷ்மணன் சொல்லிய வார்த்தைகளை ஆமோதித்து, ராமனுக்கு மங்கள ஆசீர்வாதங்களைச் செய்து, நித்ய தம்பதிகளை மனத்தில் நினைத்துக்கொண்டு மீண்டும் அதிக சந்தோஷத்தை அடைந்தார்கள். பிறகு அங்கு கூடியிருந்த ரிஷிகளின் ஸமூகத் தின் கூட மஹா கிருபாளுவாகிய பகவான் ஸ்ரீராமச்சந்திரன் தனுஷ்யக்ஞம் நடக்கும் யக்ஞசாலையை நோக்கிச் சென்றுர்.(1295)

அந்த இரண்டு ராஜகுமாரர்கள் அந்த தனுஷ்யக்ஞ மைதா னத்தை அடைந்துவிட்டார்கள் என்கிற செய்தியைக் கேட்ட ஜனகபுரியின் மிதிலாவாஸிகள், பாலர்கள், யௌவன வயதுள்ள யுவ யுவதிகள், வயோதிகர்கள் சகலரும் தங்கள் வேலைகளை மறந்து, ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு சென் றுர்கள். (1296)

ஜனக மஹாராஜர் ஒரு பெரிய கூட்டம் கூடியதைக் கண்டு, தன் சேவகர்களைக் கூப்பிட்டு, "சீக்கிரமாக அங்கு கூடியிருக்கும் ஜனங்களுக்கு அவர்களுக்கு தகுந்த பிரகாரம் ஆசனம் கொடுத்து, அவர்களை உபசரியுங்கள்" என்று கட்டளையிட்டார். (1297)

அந்த சேவகர்கள் அந்த ஜனத்திரளை மிருதுவானதும் கோமளமானதுமான வசனங்களால் சொல்லிக்கொண்டும், விலக்கிக்கொண்டும், மிக்க வினயத்துடன் அந்த நர நாரிகளுக்கு யதாயோகியமான ஆஸனங்களைக் கொடுதது உபசரித்தார்கள். (1298)

அந்த சமயத்தில் ராம லக்ஷ்மணர்கள் அவ்விடம் வந்தார்கள். "அடே அப்பா, என்ன மனோஹரமான சௌந்தர்ய அழகு. என்ன லாவண்யமான தேகம். ஸாக்ஷாத் அழகு தேவதையே உருவெடுத்து அந்த இரு ராஜகுமாரர்களாக வந்திருப்பது போலத் தோன்றியது." சுந்தரமான ஸ்யாமள, சிகப்பு நிறம் படைத்த சரீரங்கள். அது மட்டுமா, அவர்கள் நற்குணங்கள் கொண்ட பெரிய ஸமுத்திரம். அவர்கள் தேர்ச்சி பெற்ற மஹா வீரர்கள். (1299)

அந்த இரு ராஜகுமாரர்கள் அங்கு கூடியிருந்த ராஜாக்களின் மத்தியில் இரண்டு அழகான உதயமான பூர்ண சந்திரர்கள். அழகாகப் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களின் கூட்டத்தின் நடுவே பிரகாசிப்பதுபோல ரொம்ப சோபையுடன் பிரகாசித்தார்கள். அங்கே கூடியிருந்த ஒவ்வொரு மனிதனும் ஸ்திரியும் என்ன என்ன மனோபாவனையுடன் அந்த ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பார்த்தார்களோ, அதே விதமாக பகவான் அவர்களுக்குக் காக்ஷி அளித்தார். (1300)

[தியானம்

ஹே காமாக்ஷி, ஹயக்ரீவர், அகஸ்தியர், லோபாமுத்ரை இவர்களால் உபாஸிக்கப்பட்ட ஸ்ரீதேவியான லலிதாம்பிகே, குங்கும நிறம் போன்றவளே, ஸ்வர்ணம்போல பிரகாசிப்பவளே, தாமரை மலர் போல இதழ்களான கண்கள் படைத்தவளே, அபார கருணை என்கிற மழையைப் பொழிபவளே, குஹனுடைய தாயாரே, பரமசிவனால் சதா தியானிக்கப்படுபவளும், விநாயகருக்கு பிரியமானவளும், ரத்ன கும்பங்கள் போல பருத்த ஸ்தனங்களை காமேசனுக்குக் கொடுத்தவளே, மிக்க பிரகாசமான மகுடம் உள்ளவளே, கருஸ்யாமை நிறமுள்ள கருணை

ஸ்வபாவமுள்ளவளே, ரத்னங்கள் நிரம்பிய குடங்களில் பொற்பாதங்களை வைத்திருப்பவளும், மஹா விஷ்ணுவுக்கும் பிரியமானவளும், இந்திராதி தேவர்களால் வணங்கப்படுகிற வளும், சுக்ராசாரியார் போன்ற மஹாகவிகளால் துதிக்கப்படுகிற வளும், வசினி போன்ற வாக்தேவதைகளால் ஆயிரமங்கள நாமாக்களால் உபாஸிக்கப்படுகிறவளும், என்னிடமும் ஸ்ரீவித்யா ராஜத்தை உடையவர்களிடம் அபாரமான கருணையைப் பொழிகின்றவளுமான காமாக்ஷிதேவி, அஷ்டமி சந்திரனை அலங்காரமாக தலையில் வைத்துக்கொண்டிருப்பவளே, உனக்கு சதா ஜயங்கள் ஏற்படட்டும். உன் தயையினுல் தேவ காரியங்கள் நடக்கட்டும். என்னிடம் சதா அனுக்கிரஹ புத்தி யுடனும் கடாக்ஷத்துடனும் நீ இருக்க வேண்டும். என் தாயே, பராசக்தி, அம்பிகே, பரமேஸ்வரி, பொற்கவசம் உள்ளவளே, என்னை ரக்ஷி. மந்திரிணி, தந்திரிணி தேவிகளால் உபாஸிக்கப் படுகிறவளே, என்னிடம் அனுக்ரஹ புத்தியுடன் இரு அம்மா ]

அந்த மஹாரண வீரர்கள் கூடிய பெரிய ராஜாக்கள் அடங்கிய கூட்டத்தில் ஸ்ரீராமச்சந்திரனுடைய மூர்த்தி ஸ்வரூபம் ஸ்வயமான வீரரஸம் பொருந்திய சரீரத்தை பகவான் தரித்துக் கொண்டிருந்தது மாதிரி இருந்தது. அப்பேற்பட்ட ஜய வீர னுடைய தோற்றமாகக் காணப்பட்டது. அங்கே வந்திருக்கிற குடிலபுத்தியுள்ள (கபடு, சூது, நேர்புத்தியில்லாமல் வக்ரமாக சஞ்சரிக்கும் புத்தியுள்ள) ராஜாக்கள் பிரபுவின் தேஜோமயமான மூர்த்தி பிம்பத்தைக் கண்டு பயத்தால் நடுங்கிக் கொண்டிருந் தார்கள். (1301)

அசுரர்கள் ராஜாக்களின் வேஷம் தரித்து, அங்கு உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு பிரபு காலாந்தகன் மாதிரி தோன்றினர். அந்த ஊர்வாசிகளான ஸ்திரிபுருஷர்களுக்கு அந்த இரு ராஜகுமாரர்கள் மனுஷ்ய ரூப மெடுத்து, அழகாக அலங்கரித்துக் கொண்டு, பார்க்கிறவர்களின் கண்களுக்கு ஆனந்தத்தைத் தருபவர்களாகத் தோன்றினர்கள். (1302)

ஸ்திரி ஜனங்கள் ஹ்ருதயத்தில் சந்தோஷமுள்ளவர்களாக தங்கள் தங்கள் ருசிக்குத்தக்கவாறு அவர்களைப் பார்த்துப் பார்த்து, அழகின் இன்பங்களை அனுபவித்தார்கள். அவர் களுடைய கண்களின் முன்பு பிரபு ஸ்ருங்காரரஸம் நிரம்பிய உத்தமமான மூர்த்தி ரூபத்தை எடுத்துக்கொண்டு பிரபு பரம சோபிதமாக விளங்கினர். (1303)

வித்வான்களுக்குப் பிரபு விராட் ரூபத்தில் வ்யாப்ய நாராயணனாகக் காக்ஷி அளித்தார். அநேக முகங்களுடனும், அநேக கைகளுடனும் அநேக கால்களுடனும், அநேக லோசனங்களுடனும், அநேக தலைகளுடனும் தோற்றமளித்தார். ஜனக மஹாராஜாவுக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் பிரபு எவ்விதம் தோன்றினர் தெரியுமா? ப்ரியரூபமுள்ள பந்து போலவும், சம்பந்தம் செய்யப்போகும் மித்ரன் போலவும் தோற்றமளித்தார். (1304)

ஜனக ராஜரின் ராணிகளின் உள்ளத்தில் அவரவர்களின் குழந்தையைப் போல பிரபு தோற்றமளித்தார். அவர்களுடைய ப்ரேமை அவரைப்பார்த்து, பார்த்து விருத்தி அடைந்ததை யாவராலும் வர்ணிக்க முடியாது. அங்கே கூடியிருந்த யோகிகளுக்கு பிரபு பரமதத்வ புருஷார்த்தமாகவும், சாந்த ஸ்வரூபமாகவும், சமதமாதி குணங்களால் பிரகாசிக்கிறவராகவும் சுத்த ஹ்ருதயமுள்ளவராயும், சௌலப்யம், வாத்ஸல்யம் முதலிய மாபெரும் குணங்களால் பிரகாசிக்கிற மூர்த்தியாகத் தோன்றினர். (1305)

சதா ஹரியைப் பஜித்துக் கொண்டு வாழும் பக்தர்களுக்கு சகல விதமான சுகங்களை வாரி அளிக்கும் இஷ்ட தேவதைகளாக அந்த இரு குமாரர்களும் தோன்றினர்கள். என் தாயான சீதாதேவி எந்த எந்த மனோபாவத்தால் ஸ்ரீராமனைப் பார்த்தாளோ, அப்பேற்பட்ட சிறந்த பிரேமை கலந்த ஸ்நேக, சுகபாவங்களால் பிரபு தோற்றம் அளித்தார். அவைகளைச் சொல்லவும் முடியுமா, விவரிக்கத்தான் முடியுமா? (1306)

அந்த மாபெரும் இன்ப அனுபவங்களை அவளால்தான் சொல்லவும் முடியுமா? அப்பேற்பட்ட ஜானகியினால் சொல்ல முடியாத விலாஸங்களை கவிகள் எவராலுமாவது சொல்ல முடியுமா? இந்த விதமாக எந்த எந்த ஜீவர்கள் எந்த எந்த விதங்களாக அவரவர்களுடைய சித்த பாவத்திற்கு ஏற்ப, அனுபவங்கள் இருந்தனவோ, அந்த விதமாக கோஸல ராஜபுத்ரனாகிய ஸ்ரீராமச்சந்திரன் அவர்களுக்கு தோற்றமளித்தார். (1307)

[தியானம்

ஹே சீதாராமா, ராமா, என் ஞானச் செல்வமான உமா மஹேஸ்வரர் சம்வாதத்தில் ஞானம் பரம் பொருள் என்றும், முக்தியும் மோக்ஷ ஞானமும் அம்ருதம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பரமாத்மாவின் பாதங்களே அவைகளை அளிக்கும்

என்று தியாகராஜர் சொல்லியதாலும், ஸ்வாமி, எனக்கு விஷயங்களில் பற்றுதல் அற்று, உன் நினைவுதான், உன் தியானம்தான், பெரும் சுகத்தை அளிக்கிறது. ஹே காமதேனு, தயாசாகரா, உன்னை இருக அணைத்து, முத்தமிட்டு, உனக்கு அலங்காரங்கள் செய்து, மங்கள வாசனை திரவியங்களால் உன்னை பரிமளமாக்கி, உனக்கு சபரி, விதுரர் அளித்ததுமாதிரி நிறைய சுவையுள்ள ஆகாராதிகளைக் கொடுத்து, சீதை உன்னை ஒய்யாரமாய் உபசரிக்கிறதுமாதிரி உபசரித்து, நாரதர், வால்மிகி, ஆஞ்சநேயர், உமா மஹேஸ்வரர், துளசிதாஸர், தியாகராஜர், சுகர் சுகமடைந்தது மாதிரி நானும் செய்ய ஆசைப்படுகிறேன். ஹே ராமா, சீதா ராமா, சத்யம், ஞானம், ஆனந்தம் என்கிற ஸ்வரூபமுள்ள விஷ்ணுமயமான ராமா, ஹே சத்ய நாராயணா என்னிடம் கருணைகாட்ட மாட்டாயா? கோவிந்தா, கோபாலா, கன்றுகளிடமும், கோபிகைகளிடமும், அர்ஜுனனிடமும், திரௌபதி, தர்ம புத்திராதிகளாகிய பாண்டவர்களிடமும், கர்ணன் பீஷ்மரிடமும் காட்டிய உன் கருணையை என்னிடம் காட்டமாட்டாயா?]

சோபிதமான ஸ்யாமள நிறத்துடனும், இளம் சூரியன் போன்ற சிகப்பு நிறத்துடனும், இந்த விஷ்ணுமயமாக விருக்கும் அகில லோகங்களை தங்களுடைய மாபெரும் விஸ்வலோசனங்களால் (நேத்ரங்களால்) அபஹரிக்கும் அந்த கோஸல தேசத்து ராஜகுமாரர்கள் அந்த ராஜ ஸமூகத்தில் கம்பீரமாகவும் மிக்க அழகாகவும் வீற்றிருந்தார்கள். (1308)

அந்த ராமலக்ஷ்மண மூர்த்தி ரூபங்கள் ஸ்வபாவத்திலேயே ஒரு காரணமுமின்றி சகல சராசரங்களின் மனத்தை அபஹரிக்கும் தேஜோமயமானதும், அதிதெய்வீக அழகு வாய்ந்தவைகளாயிருந்தன. கோடி கோடிக்கணக்கான மன்மத ஸ்வரூபங்களை உபமானங்களாகப் பழிக்கும் அழகுபெற்றவர்கள். அவர்களுடைய திவ்யமுக மண்டலம் சரத்காலத்தின் சந்திரனின் அழகைக்கூட நிந்தை செய்யும்படி அதிஅழகு பெற்றவை. அது மாத்திரமல்ல, அழகாய் பூத்த தாமரை புஷ்பம்போல இதழ்களை உள்ள கருணை பொங்கும் கடாக்ஷ வீக்ஷண்யங்கள். அங்கு கூடியிருக்கும் அனைவர்களின் மனத்தையும் அபஹரிக்கும் அழகுகள் பெற்றிருந்தன. (1309)

பிரும்மா முதல் தாவரம் வரை சகல சராசரங்களின் சித்தத்தை வசீகரிக்கக்கூடியதும், காமதேவனின் அழகிய மனத்தைக்கூட வசீகரிக்கும் கோமளமானதும், நளினமான நேத்ரங்கள். அவருடைய மனத்தின் அனுபவங்களை யாவரால் வர்ணிக்க

முடியும்? அவருடைய ஹ்ருதயத்தில் சீதையினிடம் கொண்ட பிரேம ரஸங்களை நிரப்பும் கண்கள். அழகான பளபளப்பான கன்ன பிரதேசங்கள். அழகிய (பயத்தினால் நடுங்குவதுபோல) சஞ்சல ஸ்வபாவமாக ஆடும் ஆசையும் குண்டலங்கள் காதுகளில் அலங்கரித்தன. அந்த தவடை பிரதேசங்கள், இரு மிருதுவான உதடுகள், கோமளமான குரல், (1310)

அழகிய மந்தஹாஸமான புன்சிரிப்புக்கள், சிரித்து விளையாடும் சந்திரனுடைய (குமுத புஷ்பத்தின் ஸ்நேகிதனாகிய சந்திரன்) கிரணங்களைக்கூட அலக்ஷ்யம் பண்ணும் ஸ்வபாவம் படைத்தவைகளாக விளங்கின. அந்த வளைந்த புருவங்கள், தீர்க்கமானதும் அழகானதுமான மூக்கும் மனோஹரமாக விளங்கின. அகலமான நெற்றியில் ஊர்த்தவ புண்டரங்கள் (திலகங்கள்) நேர்த்தியாக விருந்தன. அழகானதும், கருமையானதும், கரும் வண்டுகளின் லாவண்யத்தையும் வெல்லக்கூடிய அழகிய மயிர் சுருள்கள் நெற்றியின் மேல் அலைபோல படிந்து விளங்கின. (1311)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, ஸர்வாத்மன், மஹாவிபூதிகளின் ஈஸ்வரரே, சுரபதி, வனமாலி, அரவிந்தலோசனரே, கோபிகள் பசுக்கள், வானரங்கள் முதலிய தாழ்ந்த ஜாதிகளுக்கும் தேவ அசுர, மானுஷ்ய பக்தர்களுக்கும் தங்களுடைய சேர்க்கையாகிற ஐஸ்வர்யத்தை வாரிக் கொடுக்கும் தயாளுவே, பரமாத்மா, லக்ஷ்மியையும் வஞ்சித்து, ராதை போன்ற பக்தர்களிடம் சதா அனுக்ரஹப் புத்தியுடன் இருக்கும் மஹானுபாவரே, அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர், பிரும்மா, ருத்ரன், இந்திரன் இதர திக்பாலர்களால் சேவிக்கப்படும் மஹா மூர்த்தியே, பக்த ஹ்ருதயத்தாலும் துளசி பில்வ மல்லிகை போன்ற இதர புஷ்பங்களாலும் கீர்த்தனைகளாலும் வெகு பவித்திரமாக அர்ச்சிக்கப்படும் புண்ய ஸ்லோகரே, நாரதர், தியாகராஜர், உத்தவர், வால்மீகி போன்றமஹானுபாவர்களால் சதா தியானிக்கப்படும் பரம்பொருளே, இரு கஜங்களாலும் காமதேனுவினாலும் அம்ருத மயமான ரஸங்களை வர்ஷிக்கப்பட்ட மஹாவிஷ்ணுவின் பத்னியும் மனோ அனுகூலையாகவுள்ள மஹாலக்ஷ்மியை வக்ஷஸ்தலத்தில் தரித்தவரே, தயையுடன் என் பாபங்களைப் போக்கி கிருபையுடன் பார்த்து ரக்ஷித்தருளும். அக்னி, சந்திரன், சூரியன் போன்ற கண்களை உடைய சம்புவின் நேத்ரங்களைக் குளிரச்செய்யும்

உமாதேவியைப் போல என்னைக் குளிரச்செய்யும். மிருது பாஷிணியாகவும், பூர்வபாஷணியாகவும், மதுரபாஷணியாக வும் வேதத்தின் ஸாரமாகிய சப்த பிருஹ்மத்தின் நாத வடிவாக விருக்கும் வாணிதேவியைப் போல அன்பானதும் இன்பமானது மான சொற்களால் என்னை ஆனந்தப்படுத்து. ஐயா, உன்னு டைய மிருதுவான அங்கங்களை நன்ருக ரத்னங்களாலும், முத்துக்களாலும், அலங்கரித்து, பட்டுப் பீதாம்பரம் உடுத்தி, வெண்மையான சாமரங்களால் உனக்கு ஸ்ரமம் தீர்த்து, உன் அரவணையில் ஆனந்தமயமாக ரத்ன ஊஞ்சலில் பத்தர்களும் அப்சரஸ்களும் கீதங்கள் பாட, கின்னரர்கள் நர்த்தனம் செய்ய ஆஞ்சநேயர் போன்ற உத்தம ஆசாரியர்கள் உன்னைப் பார்த்து ரமிக்கும் பாக்யத்தை எனக்கு அளிப்பாயாக. உன் தம்பிமார் கள், ராமா, என்னையும் அந்த இன்பம் பெறுவதற்கு இடம் அளிப்பாராக. விஸ்வாமித்திர மஹரிஷியும், என் குல நாதரும் எனக்கு அருள் புரிவாராக.]

மஞ்சள் நிறமுள்ளதும், சதுர வடிவமுள்ளதுமான தொப்பிகள் அந்த ராமலக்ஷ்மணர்களின் சிரங்களை அலங்கரித் தன. அவைகளின் நடுவிலே புஷ்பங்களின் கொத்துக்கள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. சங்குபோல கழுத்துக் களும், அவைகளின் மனோஹரமான சௌபாக்ய அடையாளங் கள் உள்ள மூன்று ரேகைகள் மூன்று உலகங்களிலும் இவை களுக்குச் சமமான அழகுள்ள புருஷர்கள் இருக்க முடியாது என்று விளம்பரம் செய்வதுபோல விளங்கின. (1312)

அவர்களுடைய வக்ஷஸ்தலத்தில் யானை முத்துக்களால் செய்யப்பட்ட சுந்தரமான முத்து மாலைகளும், கழுத்திலிருந்து தொங்கும் துளசி ஹாரங்களும் ரொம்ப சோபிதமாக விருந்தன. அவர்களுடைய தோள்பட்டைகள் நல்ல யௌவன வயதுள்ள காளைகளின் திமிழ்போல உயர்ந்து கம்பீரமாக விருந்தன. அவர்கள் நிற்கும் தோற்றங்கள் சிம்மங்களைப்போல ரொம்ப கம்பீரமாக விருந்தன. அவர்களுடைய புஜங்கள் தீர்க்கமாகவும் விசாலமாகவும் பலத்தின் பொக்கிஷமாகவுமிருந்தன். (1313)

முதுகின் புறத்திலிருந்து இரு பக்கங்களிலும் தொங்கும் அம்புராத் தூணிகள் அவர்கள் கட்டியிருக்கும் பட்டு பீதாம்பரத் தின் இரு பக்கங்களிலும் மேல் தொங்கிக்கொண்டிருந்தன. வலது கையில் பாணமும், இடது கையிலும் தோள் பட்டை யிலும் சாற்றின அழகான விற்களும், மஞ்சள் நிறமான யக்ஞோப வீதங்களும் பார்க்கப் பார்க்க ரொம்ப சோபிதமாக

விருந்தன. அடே அப்பா, நகத்திலிருந்து முடிவரை என்ன அழகு குவியல்கள், என்ன லாவண்ய சௌந்தர்யங்கள் மனோஹரமான திவ்ய மங்கள ஸ்வரூபங்கள், ஒவ்வொரு அங்கத்திலும் அது அதற்கு தகுந்தாற்போல அழகும் மகிமையும் பொருந்தியதாக விருந்தன. (1314)

எல்லோரும் அவர்களையும், அவர்களின் திருமேனிகளையும் சௌந்தர்ய லாவண்யங்களையும் கண்டார்கள். அவர்களின் நேத்ரங்கள் ஒரு நிமிஷம்கூட சிமிட்டாமல், நக்ஷத்திரங்கள், கிரஹங்கள் மாதிரி அசைவற்றனவாக விருந்தன. ஜனக மஹாராஜர் அந்த ராஜகுமாரர்களையும் பார்த்தார். மஹா சந்தோஷம் பெற்றூர். அந்த சமயம் அவர் விஸ்வாமித்திர முனிவரின் பாத கமலங்களை வந்தனம் செய்து விக்ஞாபித்துக் கொண்டார். (1315)

மிக்க வினயத்துடனும் பூர்வகதையை அந்த ரிஹிஸ்ரேஷ்ட ருக்கு ஜனகர் எடுத்துச் சொன்னர். (அதாவது சிவதனுஸ்ஸை சீதை விளையாடும்போது கைகளால் தூக்கி எடுத்து வைத்தது, இந்த வில்லை எடுத்து வளைத்துவிடும் சக்தியுள்ள வீரனுக்கே தன் புத்ரியான சீதையை மணம் செய்து வைப்பேன் என்று வீரசுல்கமாகிற சங்கல்பத்தை செய்தது ஆகிய விவரங்களைச் சொன்னர்.) பிறகு அந்த முனிஸ்ரேஷ்டருக்கு அந்த அரங்கத்தைப் பூராவும் சுற்றிக் காண்பித்தார். எந்த எந்த இடங்களை ஜனகமஹாராஜர் விஸ்வாமித்திரரை கூட்டிக்கொண்டு காண்பித்தாரோ, அந்த இடங்களுக்கும் அவர்களுடன் கூட ஸ்ரேஷ்டமான ராமலக்ஷ்மணர்களும் சென்றூர்கள். அவர்கள் எங்கு எங்கு சென்றூர்களோ, அங்கே எல்லோரும் அந்த இரு ராஜகுமாரர்களையும் ஆச்சரியத்துடனும் அன்புடனும் பார்த்தார்கள். (1316)

அங்கு கூடியிருந்த மாபெருங் கூட்டத்தில் ஒவ்வொருவரும் தன்னையே ராமன் பார்ப்பதாகக் கண்டார்கள். ஆனல் ஒருவருக்காவது அந்த மர்மத்தின் விசேஷம் தெரியாது. இந்த விசேஷ ரஹஸ்யம் யாருக்குத்தான் தெரியக்கூடும்? அந்த முனிவர் ஜனகரிடம் சொன்னர், "ரங்கபூமியின் அழகு வெகு நேர்த்தியாகவிருக்கிறது. நல்ல ஏற்பாடுகளுடன் வெகு நேர்த்தி யாக அமைக்கப்பட்டிருக்கிறது." இவ்விதம் களங்கமில்லாத மனத்துடன் விஸ்வாமித்திரரால் சொல்லப்பட்டதும், மஹாராஜர் ஜனகர் மிக்க பிரஸன்னமடைந்து அதிக சுகத்தை அனுபவித் தார். (1317)

[தியானம்

ஹே ராமா, நாராயணரே, சீதையைப்போல விருக்கும் மஹாலக்ஷ்மியின் பக்தியினால், அனன்ய அன்பினால் கட்டுப் பட்டவரே, ஸ்ருஷ்டிக்கு முன் இந்த விபூதி ஐஸ்வர்யங்கள் தங்க ளிடம்தான் நிலைத்திருந்தன. தர்ம அர்த்த காம மோக்ஷங்கள், மனத்தூய்மை, ஜபம், மூன்று குணங்கள், அவரவர்களின் கர்மங்களில் உண்டாகும் ஜனன மரணம் முதலியவைகள் எல்லாம், ஸ்வாமி, உங்களிடமிருந்து தானே உண்டாகியன. முயற்சிகளும், நமஸ்காரங்களும், பிரார்த்தனைகளும், ஸம்சார பந்தங்களிலிருந்து உம்மை நினைத்துத் தானே மஹாத்மாவான யோகிகள் விடுதலை அடைகிறார்கள். உமது ஸ்வரூபத்தை அறிந்தவர்கள் திடமான புத்தியுடன் பற்றற்ற மனத்துடன் சாஸ்வதமான பரபிரும்மமாகிய நாராயணராகிய உம்மை அடைகிறார்கள். தமக்குத் தாமே ஆதாரமாகிய அந்த மாபெரும் யோகி அறிவுக்கு எட்டாதவராகவும், தேவர்களுக்கும் எட்டாதவ ராயும், ஞானிகளால் மாத்திரம் அறியப்படுகிறவராகவும் இருக் கிறார். பாவங்களைப் போக்குகிறதுமான அவருடைய பதமானது கருடனுடைய கிருபையால் எனக்கு கிட்டட்டும். அனந்தன், ஆஞ்சநேயர், நாரதர், வால்மீகி, பீஷ்மர் எனக்கு அனுக்ரஹம் செய்யட்டும்.]

அங்கே போடப்பட்டிருக்கும் ஆஸனங்களில் ஒரு ஆஸனம் ரொம்ப அழகாகவும் விசாலமாகவும் உயர்ந்த இடத்தில் வைக்கப் பட்டிருந்தது. மஹாராஜாவான ஜனகர் அதில் அந்த இரு ராஜகுமாரர்களை விஸ்வாமித்திரர் சகிதம் உட்கார வைத்தார். (1318)

பிரபு ராமச்சந்திரனை அங்கு கூடியிருந்த ராஜகுமாரர்கள் அனைவரும் கண்டு, எவ்விதம் பூர்ணசந்திரன் உதையமான பின்பு சகல நக்ஷத்திரங்களும் சோபையையிழந்து, அதனுடைய தேஜஸ்ஸினால் கவரப்பட்டு விளங்குமோ, அதுபோல் அவர்கள் உத்ஸாகமிழந்து நிராசையாகப் போனார்கள். அவர்களின் மனத்தில் இந்த ஸ்ரீராமச்சந்திரன் நிச்சயமாக சிவதனுஷ்ஷை ஒடித்துவிடுவான் என்கிற நம்பிக்கை எழுந்தது. (1319)

அந்த பிரபு ஸ்ரீராமச்சந்திரனின் கம்பீரமான தோற்றத்தைக் கண்டு அவர்களின் மனம், ஸ்ரீராமபிரான் சிவபெருமானுடைய விசாலமான வில்லை ஒடிக்கக்கூடும், சிரமமின்றி ஒடிக்கக்கூடும், கட்டாயம் ஸ்ரீசீதை ஸ்ரீராமபிரானுடைய கழுத்தில் ஜயமாலையைச் சூட்டுவாள் என்கிற எண்ணத்தை எழுப்பியது. (அழகாகவும்,

பிரதாபத்துடனும் விளங்கும் ஸ்ரீராமச்சந்திரன் சீதைக்கு தகுந்த மாப்பிள்ளை; நிச்சயமாக சீதை விஜயமாலையை ராமனுக்குச் சூட்டுவாள், நமக்கு அபஜயம் கட்டாயம் ஏற்படும் என்று அவர்கள் நினைத்தார்கள்). (1320)

அதனால் அவர்கள் யோசனை பண்ணி, மற்றவர்களிடம் சொன்னார்கள். "ராஜகுமாரர்களே, உங்கள் ஜயத்தைப்பற்றிய நம்பிக்கையை விட்டுவிடுங்கள். கீர்த்தியிலோ, பிரதாபத்திலோ, பலத்திலோ அல்லது தேஜோமயமான அழகிலோ உங்களுக்கு ஜயம் இருக்குமென்று எங்களுக்கு நம்பிக்கை இல்லை. அதனால் நீங்கள் எல்லோரும் வீட்டிற்குப் போகலாம்." (1321)

மற்றும் சில ராஜாக்கள் அவிவேகத்தினால் குருடர்களாகி தங்கள் வெற்றியில் அபிமானம் வைத்தவர்களாக, இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்துக் கொண்டு சொன்னார்கள். "அவன் வில்லை ஒடித்த போதிலும், விவாஹம் நடப்பது கடினம். நாங்கள் ஜானகி ராமனை மணப்பதை அனுமதிக்கமாட்டோம். எங்களை ஜயித்த பிறகு தானே, ராமன் அவளைப் பாணிகிரஹணம் செய்து கொள்ளலாம். அதனால் வில்லை முறித்தால் மாத்திரம் எப்படி ஸ்ரீராமன் சீதையை விவாஹம் செய்து கொள்ளலாம்.? (1322)

காலனே எங்களை எதிர்த்து சண்டை போட்டாலும், சீதைக்காக நாங்கள் அவனுடன் சண்டை போடுவோம். அவனையும் ஜயிப்போம்," என்று கர்வத்துடன் சிலர் பேசினார்கள். இப்பேற்பட்ட அதிகர்வமான பேச்சுக்களைக் கேட்டு, தர்மாத்மாக்களும் ஹரிபக்தர்களும் இதர மஹா ராஜர்களின் குமாரர்களும் சிரித்துக் கொண்டு சொன்னார்கள். (1323)

[தியானம்

ஹே ராமா, அன்னபூர்னே, சிவமஞ்சத்தில் சிவாகாரமாக விளங்கும் பரமசிவ புஷ்பப்படுக்கையில் அன்புடனும் வீற்றிருக்கும் ஸிருங்கார நாயகியான காமாக்ஷியே, காமபீடத்தில் உட்கார்ந்து வேதமுடி யெனும் ஜயமாலையைத் தரித்து தான் இன்பம் அடைவதின்றி பிறரையும் இன்பம் செய்விக்கும் காருண்யசாகரமே, கன கும்பலாய் விளங்கும் கருணையையே வடிவாக உள்ள மலைமகளே, சதாசிவன் சதா ஸ்ரீராம நாமத்தை ஜபித்து அந்த மந்திரத்தின் அம்ருத ரஸத்தை பிரியமான காமாக்ஷிக்கு ரஹஸ்ய பிந்துவின் மத்தியில் காருண்யத்துடன் உபதேசம் செய்தார். அப்பேற்பட்ட அதிரஹஸ்யத்தை

உணர்ந்து, அதையே வேதவாக்காகக் கொண்டு, ஸ்ரீமதாதிநாரத தியாகராஜ, வால்மீகி, ஆஞ்சநேயர் போன்ற மஹாத்மாக்கள் சதா ஸ்ரீராம மந்திரத்தை ஜபித்து, கோமாதாக்கள் பேனபரையும் நந்தி தேவனேயும், கபிலே போன்ற பசுக்களேயும் காப்பாற்றினது போல, சூரியன் ஜமதக்னியிடம் அன்பு பெற்று பிராம்மணர்களின் மனத் தூய்மையின் பெருமைகளேயும், சரணுகத தர்மத்தின் விசேஷ பெருமைகளேயும் எவ்விதம் அறிந்தானே, அதுபோல நான் சரணுகத தர்மத்தை ஆஸ்ரயித்து வந்தவனுக நினைத்து, என்னேயும் உன் கருணேயில் காப்பாற்று. சீதாராமா, நீங்களே தஞ்சம். கோக்களுக்கு கோமாதாக்களே தஞ்சமாகிறபடி, நீங்களே என் தஞ்சம். பரமேஸ்வரா, நாராயணு, லக்ஷ்மி நாராயணு கருணே செய்.]

அவர்கள் சொன்னுர்கள், "இந்த ஸ்ரீராமன் ராஜாக்களின் கர்வத்தை அடக்கி, அவர்களால் வளேக்க முடியாத இந்த சிவதனுஷ்ஷையும் ஒடித்து, சீதையை மணந்துகொள்வார். மஹாராஜர் தசரதரின் புத்ரர்களும், யுத்தத்தில் வீரர்களு மான அந்த ராம லக்ஷ்மணர்களேயார் தான் ஜயிக்க முடியும்?" (1324)

"தங்கள் பிரபாவத்தை தாங்களே சொல்லிக் கொண்டு, வீணுக மரிக்காதீர்கள். மனத்திலே மோதகத்தை நினேத்துக் கொண்டு ஒருவன் பசியை அடக்கமுடியுமா? நாங்கள் சொல்லு கிற வார்த்தைகளேயும் புத்திமதிகளேயும் கவனமாகக் கேளுங்கள். நம் எல்லோருக்கும் பரம பவித்திரமானதும், வெளிவேஷமில்லா ததும், மனத் தூய்மையுடன் கூடினதுமான வார்த்தைகளேக் கேளுங்கள். ஸ்ரீசீதாதேவியை உங்கள் வாக்குக்களால் சாக்ஷாத் ஜகஜ்ஜனனி, லோகலோகேஸ்வரியாக நினேயுங்கள். அவளே பத்னியாக அடையவேண்டும் என்கிற ஆசையை விடுங்கள்." (1325)

"ஜகத்பதியான நாராயணர் என்று ஸ்ரீராமச்சந்திரனே நினேயுங்கள். பக்தியினுலும் அன்பினுலும் நிரம்பப்பட்ட பூர்ண லோசனங்களால் உங்கள் நேத்ரங்களே நிரப்பிக்கொண்டு அந்த ஜகத்பிதா லோகமாதவாகிய சீதாராமனே தர்சியுங்கள். இப்பேற்பட்ட நல்ல முகூர்த்தம் வரவே வராது. ரொம்ப அழகானதும் ஆராவமுதம் போல அதிசுகத்தைத் தருவதும் சகல கல்யாண குணங்களின் இன்பச் சேர்க்கை குவியல்களாக விளங்கும் இந்த ராஜகுமாரர்கள் சதாசம்புவின் ஹ்ருதயத்தில் தியானம் செய்யப்பட்டவர்களாக விருக்கிருர்கள். அது மாதிரி

மஹா மகிமைகள் பொருந்திய அவர்களை பக்தியுடன் நேத்ரங்களால் நீங்கள் தர்சனம் செய்யுங்கள்.'' (1326)

'' ஹே ராஜகுமாரர்களே, அந்த மஹாபுருஷர்கள் அம்ருதம் உண்டாக்கிய பாற்கடலை விட்டுவிட்டு, ஸ்வயமாக அபார கருணையால் உங்கள் சமீபம் வந்திருக்கிறார்கள். இப்பேற்பட்ட அம்ருதமயமான அன்னசாகரத்தை விட்டுவிட்டு, ஜகஜ்ஜனனியாகிய பரமேஸ்வரியை பத்னிரூபத்தில் நீங்கள் அடைய வேண்டும் என்கிற துராசை என்னும் கண்களால் கானல்நீரைப் போல பார்த்து ஓடிப்போய், ஏன் அதில் மரிக்கவிரும்புகிறீர்கள் ? ஹே சகோதரர்களே, சரி, எவர் எவர்களுக்கு எது உசிதமாகத் தோன்றுகிறதோ, அதை அறிந்து செய்யுங்கள். நாங்கள் எல்லோரும் ஸ்ரீராமச்சந்திரனுடைய தரிசனத்தைக் கண்டு இந்த சுபதினத்தில் இந்த மானிட ஜன்மத்தை அடைந்ததற்குப் பலனைப் பெற்றோம். எங்கள் ஜீவாத்மாவுக்கும், இந்த உலகத்தில் எங்களுக்கு ஏற்பட்ட ஜன்மத்திற்கும், நல்ல உத்தமமான கதியை அடையப்பெற்றோம்.'' (1327)

இவ்விதமாக ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு, சத்புருஷர்களான ராஜாக்களில் சிலர் ப்ரேமையினால் கவரப்பட்டு, ராமச்சந்திரனுடைய உவமை இல்லாத நேர்த்தியான ரூப சௌந்தர்யங்களை பார்த்துப்பார்த்து விடாய் தீராமல் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். இந்த மானிடர்களின் பேச்சுக்கள் மாத்திரமா, அங்கே கேட்கப்பட்டன. மேலும் தேவலோகத்து ஜனங்கள்கூட ஆகாசத்தில் தங்கள்தங்கள் விமானங்களில் ஓடிவந்து ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டு, அழகான கீர்த்தனங்களாலும், புகழ்மாலைகளாலும் பாடி அவரை நல்ல புஷ்பங்களால் அர்ச்சித்து, அவர்கள் சந்தோஷத்தைப் பெற்றுக்கொண்டார்கள். (1328)

[தியானம்

ஹே ராமா, சீதா, லக்ஷ்மணா, எந்த ஸ்ரீ சம்பு, ஸ்ரீகரனாகிய மஹாதேவர், உமையின்பதி எப்போதும் உன் நாமத்தை பஜித்துக் கொண்டு சதா பக்தியுடன் உன்னைப் பூஜித்துக்கொண்டு, ஆத்மாவை உன்னிடம் ஸமர்ப்பித்திருக்கிறாரோ, அந்தமாதிரி நானும் நாராயணராகிய லக்ஷ்மிபதியை சதா தியானம் செய்ய விரும்புகிறேன். எந்த உபரிசரஸ் மஹாமுனிவர் ஸர்வ ஸ்ரேஷ்டரான சம்புவை ஏகபக்தியுடன் ஆராதித்து மஹாதேவனின் அருளைப் பெற்றாரோ, அதுபோல் ஹே ஸ்வாமி, உம்மைப் பூஜிக்க

நான் விரும்புகிறேன். என் மங்களத்தாயான உமை எவ்விதம் அனன்ய பக்தியுடன் சங்கரரை ஆஸ்ரயித்திருக்கிருளோ, அதுபோல சீதாராமனை நான் ஆஸ்ரயிக்க விரும்புகிறேன். வியாஸர், தர்மபுத்திரர், அர்ஜுனனைப் போன்ற பாண்டவர்கள், திரௌபதி ஸ்நேகத்தாலும் வாத்ஸல்யத்தாலும் பகவானுகிய கிருஷ்ணரை பூஜித்தார்களோ, அதுபோல லக்ஷ்மிநாராயணரை ஆஸ்ரயிக்க விரும்புகிறேன். பராசரர் மைத்ரேயருக்கும், சுகர்பரிக்ஷித்துக்கும் சொன்னபடி, எந்தவிதமான மகிமையினுலும், ஞானத்தாலும், அபார கருணையாலும், சிறந்த பக்தி விசேஷத்தாலும், சரணுகதி வாத்ஸல்யமாக விளங்கும், பிரகாசிக்கும் கிருபா மூர்த்தியாகிய உம்மை நான் சரணம் அடைகிறேன். தியாகராஜர் வால்மீகி துளசிதாஸரைப்போல உன் அபார குணங்களின் பெருமைகளைச் சொல்லி எழுதி, வாயாரப்பாடி, கீர்த்தனங்கள் செய்து பிறருக்குச் சொல்லி திருப்தி அடையாமல் உன் கிருபையினுல் மனம்சாந்தி அடைந்தவனுக வாழ விரும்புகிறேன். ஸ்ரீ நாரதர், இந்திரன் போன்ற மஹாத்மாக்கள் எந்த பரபிரும்மத்தையும், தர்மத்தின் நுட்பங்களையும் அறிந்து, சதா த்யான யோகத்தினுல் உம்மை பரவசப்படுத்துகிருர்களோ, அது போல உம்மை ஆனந்திக்க விரும்புகிறேன். சகல செல்வங்களை அளிக்கவல்ல வாணி, பிரும்மா முதலியவர்கள் சதா பாதசேவைகளால் பிரஹ்லாதன், லக்ஷ்மி நரசிம்மரை சேவித்ததுமாதிரி உம்மை அடைய விரும்புகிறேன். என் கிருபாசமுத்திரமான மஹாலக்ஷ்மி எவ்விதம் அனன்ய பக்தியுடனும் விஸ்வாசத்துடனும் பிரேமையுடனும் உம்மை நாடுகிருளோ, அதுமாதிரி லக்ஷ்மி நாராயணராகிய சீதாராமனை அடைய நான் விரும்புகிறேன். தயை புரியுங்கள். உங்களுக்குத் தெரியாதா. சதா சகலமும் நீயே என்று நினைத்து வாழும் எனக்கு கிருபை செய்யமாட்டீர்களா?]

அந்த மஹா சுபமான வேளையை ஜனக மஹாராஜர் புரிந்து கொண்டு தன் குமாரியாகிய சீதையை அழைத்துவரச் சொன்னுர். அவருடைய உத்தரவைப் பணிந்து, சீதையினுடைய அழகான, கெட்டிக்கார சாமர்த்தியமுள்ள தோழிமார்கள் அவளை அழைப்பதற்குச் சென்றுர்கள். (1329)

ரூப, யௌவன, சௌந்தர்ய சத்குணசில சோபைகளுக்கு பொக்கிஷமாக விளங்கும் ஜகஜ்ஜனனியாகிய ஜானகியை எவ்விதம் வர்ணிக்கமுடியும்? அந்த மஹாதேவிக்கு இந்த காவியத்தில் உபமானமாக சொல்லப்படும் சகலவிதமான சிறப்புக்களும் ரொம்ப, ரொம்ப துச்சமானவை. அதாவது மிகமிக

மட்டமானவை. ஜகதம்பிகா ரூபம் எடுத்து அழகாக பூமிக்கு வந்திருக்கிருள். இந்த உலகத்திலிருக்கும் சாதாரண ஸ்திரி களுக்கு சமமாக நான் மோஹவசப்பட்டு சொல்லமுடியுமா? வர்ணிக்கக்கூடுமா? அவள் அப்ராக்ருதமான பகவானுடைய ஸ்வரூபசக்தி அல்லவா? அவளுடைய ஒவ்வொரு அங்கத்தின் அழகை சாதாரண ஸ்திரிகளின் அழகைப்போல நான் இந்த காவியத்தில் வர்ணித்தால், அந்த பேரின்பப் பொருளின் சின்மய ஆனந்தத்தை எவ்விதம் சொல்லக்கூடும்? காவியங்களில் உபமானமாகச் சொல்லப்படும் மூன்று குணங்களின் சேர்க்கை யாகிய சக்தி, இந்த மாயையாக விளங்கும் ஜகத்திற்கு ஆத்மா வாக விளங்குகின்றது. இந்த ஜானகிதேவியோ அப்பேற்பட்ட மூன்று குணங்களுக்கு மேற்பட்டவளும், ஸ்வயமாக ஸ்வதந்தர ஸ்வரூபமுள்ளவளும், பகவானுடைய சங்கல்பங்களுக்கு அனு கூலையாக விருப்பவளும், பிரபுவினுடைய லீலைகளை ஸஹதர்ம சாரிணியாக நடத்துகிறவளும், விஷ்ணு பத்னியுமான மஹா லக்ஷ்மிக்கு என்னுடைய குறைவுள்ளதும், முற்றுப்பெருததுமான வசனங்களால் உபமானங்கள் சொல்லமுடியுமா, சொல்லித்தான் தீர்க்க முடியுமா? (1330)

அவ்விதம் உயர்ந்த ஸ்திரிரத்னமாகிய சீதையை உபமானங் களால் வர்ணித்து, எந்த மூடனுன கவி சாகஸமான காரியத்தைச் செய்து என்றும் அழியாத அசுபமான கீர்த்தியை அடைய விரும்புவான்? புத்தியுள்ள வித்வான் அந்த வழிக்கே போக மாட்டான். அதனுல் நான் சீதையின் அழகை வர்ணிப்பது என்ன வென்ருல், எந்த ஸ்திரிக்கு உபமானமாக சீதையைச் சொல்வதற்குப் பதிலாக, இந்த லோகத்தில் எந்த ஸ்திரியாவது சீதையைப்போல சுந்தரயுவதியாக இருக்கிருளா என்று ஒருவித மாகச் சொல்லலாம்? (1331)

ஏன், இந்த ப்ருத்வியில் வாழும் ஸ்திரிகள் மட்டுமா? தேவ லோக ஸ்திரிகளையும் தான் சொல்லுகிறேன். அவர்கள் எல்லோரும் ரொம்ப அழகு, திவ்ய சௌந்தர்யம் படைத்தவர்கள்தான். இருந்தாலும் ஸரஸ்வதி தேவி ரொம்ப படித்தவளானபடியால், அதிகமாகப் பேசுகிறவள். பார்வதியோ சிவனுடன் சதா சேர்ந்திருப்பதால், அவளுடைய பாதி அங்கம் ஸ்திரி ரூபமாகவும், மீதிப் பாதி புருஷ ரூபமாக விருக்கிறது. காமதேவனுடைய பத்னியான ரதிதேவியோ, சரீரமில்லாமல் இருக்கும் மன்மதனைக் குறித்து சதா துக்கப்படுகிருள். அந்த மஹாலக்ஷ்மி யிருக்கிருளே, அம்ருதத்திற்காகப் பாற்கடலில்

கடைந்து எடுக்கும் சமயம் தோன்றினபடியால், அவளுடன் கூடப் பிறந்த ஆலகாலம் என்கிற விஷம், வாருணி என்கிற மத்யபானம் ஆகியவைகளுக்குப் பிரியமான சகோதரியாக விளங்குகிருள். இப்பேற்பட்ட மஹாலக்ஷ்மியை நான் சீதைக்கு சமமான உபமானம் என்று எப்படி சொல்லமுடியும்? (1332)

[தியானம்

ஹே சீதாராமா, நாராயணு, மோஹன ராமர், காமனை எரித்த காமேசன், மன்மதன் ஆஸ்ரயித்த பஞ்சதசாக்ஷர வித்யையின் ஸ்வரூபமாக விங்கும் காமாக்ஷியைப் பார்த்து ஆனந்த மடைந் தார். அதுபோல மோஹன ராமன் சீதையைப் பார்த்து, தன் மேன்மைக்காக முதன் முதலில் அம்ருதத்தைக் கண்ட தேவேந் திரன் போல, ஆனந்தப்பட்டார். அது மாத்திரமா அம்மா ஜானகி, உன் அம்ருதமயமான கருணுக்கடாக்ஷத்திற்கு ஆசைப் பட்டாரே, அது மாத்திரமா, உன் அம்ருதமயமான தேகத்தை ஸ்ருங்காரமாக ரஸித்து பானம் பண்ணவிரும்பினுரே. தாயே, ஜகஜ்ஜனனி, நாராயணனுக்கு ப்ரியே, அண்டினவர்களுக்கு தஞ்ச மாக விளங்கும் உன் பொற்ருமரை போன்று விளங்கும் பாதங் கள் எவ்விதம் சிறந்ததோ, அதுபோல மஹாலக்ஷ்மி, உனக்கு கனஸ்யாம மேகம் போல அடர்த்தியாக விருக்கும் கருணை மழை பொழியும் ராமனுடைய நேத்ரங்கள் சிறந்தனவாகவிருக்கின்றன. நாரதரும், பூமிதேவியும் போற்றும் மஹாத்மாக்களே, பிராம்மண ஸ்ரேஷ்டர்கள், அதனுல்தான் ராஜஸ குணம் முற்றும் ஒழிந்தவர் களாக, ஹேஸ்வாமி, தேவி தங்கள் இருவர்களையும் சிறந்த ஐஸ்வர்யம், புகழ், புத்தி என்று நினைத்து விரும்புகிருர்கள். ஹே சரணுகதவத்ஸலருக்குப் பிரியமான நாயகியே, சீதே நீயும் அவருக்குப்பிரியமாக பிராம்மண பாதம் பதிந்துள்ள வக்ஷஸ் தலத்தில் வீற்றிருக்கிருய். உங்களைப் புகழ்வதாலும், உங்களை ஆஸ்ரயிப்பதாலும், உங்களைத் தஞ்சம் என்று அடைவதாலும் உங்களுடைய ஸ்நேகத்தையும் கருணையைப் பெறுவதாலும் மனிதன் தேவர்கள், இன்னும் சகல சராசரங்கள் எல்லாவற்றிற் கும் மேன்மையான ஸத்கதியை அடைகிருர்கள். உங்களை அடைவதே பெரும் பாக்யம். உங்களுடைய திவ்ய மங்கள ஸ்வரூபத்தையும் குணவிலாஸங்களையும் மேன்மைகளையும் உங்களுக்குப் பணிவிடை செய்வதிலும் ஆனந்தத்தையும் இன் னும் உங்களுடைய அபார கிருபையால் வரும் அனுக்ரஹங்களை யும் அடைகிருர்கள். அப்பேற்பட்ட உங்கள் பாதாரவிந்தத்

தையும் கருணைகடாக்ஷ விழிகளையும் கிருபையையும் தியாகராஜர், துளசிதாஸர் போன்ற மஹாத்மாக்கள், சுகர், நாரதர், வால்மீகி, ஆஞ்சநேயர் அனுபவித்ததுமாதிரி நான் அனுபவிக்க விரும்புகிறேன்.]

மஹாலக்ஷ்மியை உபமானமாகச் சொல்லியாய்விட்டது. அதற்குமேல் ஒன்றும் பொருளில்லை. ஒன்றுமிருக்க முடியாது. அப்பேற்பட்ட மகிமை பொருந்திய மஹாலக்ஷ்மி எவ்விதம் அவதரித்தாள் தெரியுமா? எல்லா சமுத்திரங்களிலும் மேலான தான பாற்கடலில் உண்டானாள். அப்பேற்பட்ட பாற்கடலை கடைவதற்கு பகவானாகிய நாராயணரால் மந்திரமலையாகிற மத்துக்கு ஆமை வடிவம் கொண்டு பீடமாக அமைக்கப்பட்டது. அந்த மந்திரமலையைக் கட்டுவதற்கு வாசுகி என்கிற சர்ப்ப ராஜன் கயிறு ஆனான். அப்பேற்பட்ட சமுத்திரமதனத்திற்கு சகலவிதமான தேவர்களும், அசுரர்களும் கூடி வேலை செய்தார்கள். லக்ஷ்மி தேவியின் சோபைகள் நித்யவாசம் செய்யும் நவ யௌவன சௌந்தர்ய மங்கள மூர்த்தி இருக்கிறதே, அப்பேற்பட்ட அந்த பொன் வடிவு பெற்ற அழகு பிம்பம் தோன்றுவதற்கு அவர்கள் அனைவரும் ஹேதுவாக விளங்கினர். இவ்விதம் பல உபகரணங்கள் தேவைப் பட்டும், அவைகளும் ஸ்வபாவிகமாக கடினமான உபகரணங்களாக இருந்தன. அந்த கடினமான வஸ்துக்களின் காரணத்தால் உண்டாக்கப்பட்ட மஹாலக்ஷ்மியை, ஜனகரின் மகளாகிய ஜானகிக்கு எவ்விதமாக உபமானமாகச் சொல்லக்கூடும்? சீதையோ அயோநிஜை, பூமியிலிருந்து ஆவிர்பவித்தவள். க்ஷீராப்தி ஸமுத்திரமே அம்ருதமயமாக விருக்கட்டும்; பகவானே ஆமை (கச்ச) ரூபமாக எடுத்து ஆதாரமாய் விளங்கட்டும்; வாசுகி என்கிற சர்ப்பராஜன் சோபாமயமாகவிருக்கட்டுமே; மந்திரமலை ஸ்ருங்கார ரஸமாக இருக்கட்டும்; ஸகல விதமான அழகுகள் படைத்த காமதேவனே தன் மிருதுவான தாமரைக் கைகளால் சமுத்திரத்தைக் கடைந்து எடுத்திருக்கட்டும். (1333)

இவ்விதமான சேர்க்கைகளின் விளைவாகவும், மிக்க பரிஸ்ரமத்தினாலும் பிரகடனப்படுத்தப்பட்ட மாபெரும் அழகு; சுகங்கள், இவைகளுக்கு மூலகாரணமாக விளங்கும் மஹாலக்ஷ்மியின் அவதாரம், என்போன்ற கவிகள் கையாளுவதற்கும், சீதையுடன் ஒப்பிடுவதற்கும் சங்கோஜமாகவிருக்கிறது. (1334)

[கருத்து: அதாவது எந்த மஹாலக்ஷ்மியின் அழகுக்கு பாற்கடலை காமதேவனும் சேர்ந்து கடைந்தெடுத்து உண்டாக்கி

யிருந்தாலும், அந்த அழகு பொக்கிஷம் ரொம்ப பிராக்ருதமான (பழைய) விஷயமாகிவிட்டது. நவயௌவன சீதையின் அழகைப்போல இல்லை. அதுவும் அது சீதையின் அழகின் முன்பு சாதாரணமாகத்தான் தோன்றும். ஏனெனில் காமதேவனும் தானே ஸ்வயமாக மூன்று குணங்கள் நிறைந்த பிருகிருதியின் விகாரங்கள் உள்ளவன்தானே. அந்த அழகைக் கடைந்து தானே லக்ஷ்மி ஆவிர்பவித்தாள். அவள் எப்படி அழகுடன் விளங்கினாலும், பழமையான அழகின் ஸ்வரூபம்தானே. அதன் காரணத்தால் அந்த லக்ஷ்மியை ஜானகியுடன் ஒப்பிடுவதற்கு கவிகளுக்கு கொஞ்சம் சங்கோஜமாகத்தானேவிருக்கும். எந்த பரம அழகினால் ஜனகரின் மகளாகிற சீதை திவ்யத்திற்கும் அதிதிவ்யமான பரம மங்கள திவ்யவிக்ரஹமாகப் படைக்கப் பட்டிருந்தாளோ, அந்த அதிசௌந்தரியம் மேலே சொன்ன பிராக்ருத அழகின் பின்னமாக (ஒரு பாகமாகவே) தோன்றும். வாஸ்தவத்தில் லக்ஷ்மியின் அப்ராகிருதமான யௌவன ஸௌந்தரிய ரூபம் இந்த சீதையின் வடிவில் அடங்கியிருக்கிறது. அவள் காமதேவனின் பாற்கடலை கடைந்ததால் வரவில்லை. என்றாலும், ஜானகியின் ரூபத்தில் வந்திருக்கிறபடியால் அதனால் பின்னமடையாமல் பூர்ணமாகவிருக்கிறாள். அதனாலேதான் உபமானம் பின்னமான வஸ்துவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பேற்பட்டதற்கு மிக்க மேலான ஜானகி தேவியானவள் தன்னுடைய மகிமையினால் ஸ்வயமாகத் தோன்றினாள். ஸ்ரீராமனைப்போல அவளுக்கு கர்ப்பவாஸமில்லை. அவள் அயோநிஜை. பூமியிலிருந்து ஆவிர்பவித்தாள். அவள் தோன்றுவதற்கு வேறு பின்னமான உபகரணங்கள் தேவைப்பட வில்லை. மொத்தமாக என்ன அர்த்தமென்றால், சக்தியானது சக்திமானிடமிருந்துப் பிரிக்க முடியாதபடி அபின்னமான அத்வைததத்வம். அதனாலே உபமான உபமேயங்கள் கிடை யாது. இந்த மிக்க ரஹஸ்யமான சக்தியின் தத்வம் மஹா பக்த சிரோண்மணியான துளசிதாஸகவியினால், இந்த "அபூதோப மலங்காரம் (अभूतोपमालङ्कार) மூலம் வெகு நேர்த்தியாகச் சொல்லப்பட்டது.]

[தியானம்

ஹே ஜானகிரமணா, ராஜீவலோசனா, ஸாதுஜனஜீவனா, ஸரஸிருஹநயனா, புஷ்கராக்ஷ, அச்யுதபதா, நளின ஹ்ருதய ராஜா, தசரதராமா, ஜானகி வல்லபா, புருஷோத்தமா,

லோகாபிராமா, சதாலாவண்ய பிரபோ, உன் கிருபையன்றியும் ஜானகியின் மன அன்புடன் பிரகாசிக்கும் கருணை கடாக்ஷங்கள் இல்லாமல் நான் வாழ்வது பிரயோசனமில்லை அப்பா? தியாகராஜர், 'மார்க்கண்டேயர் போன்ற மஹாத்மாக்கள் பூஜை, ஜபம் செய்யும் சமயம், நீயும் ஜானகியும் நேராக உன் பரிவாரங் களுடன், சங்கரரும் உமையும் உபரிசரிஸ் மஹரிஷிக்குத் தோன்றினதுபோல, வந்தீர்கள். அதுபோல நீங்கள் இருவர் களும் பரிவாரங்களுடன் என்னிடம் வந்தால்தானே அப்பா, என் ஜன்மம் உங்கள் கருணையை அடைந்ததாக இருக்கமுடியும். ஹே ஸ்வாமி, எங்கேயாவது வயலின் நெற்கதிர்கள் மழையைத் தேடி போகின்றனவா? எங்கேயாவது தாய்பசு தன் கன்றைத் தேடிப்போவது இல்லாமல் குட்டி இளம் கன்று போகிறதா? ஹே ஸ்வாமி, உங்கள் கிருபையான நோக்குகளே என் பரம பொக்கிஷம், என் தனம், என் தவம், என் எல்லாம் நீங்களே என்று நான் உங்களை நினைத்து வாழும்போது என்மீது தயை காட்டமாட்டீர்களா? பூர்ணசந்திரனைக்கண்ட காதலர்களின் உள்ளமும், பனிக்காலத்தில் சூரியனைக் கண்டு தேகசுகங்களைப் பெறும் பாக்கியமுள்ளவர்கள் போலவும், வரண்ட பூமி புதிதாக வரும் மழைத் தாரைகளைக்கண்டு வரவேற்பது போலவும், குளிரில் நடுங்கும் சராசரங்கள் அக்னியின் அணைப்பை விரும்புவது போலவும், உமை தன் பதியான சதாசிவனைக் கண்டதுபோலவும், பரமசிவன் ஸ்ரீராமனைத் தியானிப்பது போலவும், கருணாகடாக்ஷியான காமாக்ஷி லோபா முத்ரையை வரவேற்பதுபோலவும், அகஸ்தியர் ஹயக்ரீவரைத் துதிப்பது போலவும், பிரஹஸ்பதி இந்திரனால் வெகுமானிக்கப்படுகிறது போலவும், சுக்ராசாரியார் உமைசங்கரரை ஸ்தோத்திரங்கள் செய்வது போலவும், ரங்கராஜனின் திவ்யபாதங்களை ராஜராஜேஸ்வரி எனக்கு ரங்கநாயகியின் அருளினால் காண்பிப்பதுபோலவும், நான் ஆனந்தப்படமாட்டேனா? காமாக்ஷி, கருணாகடாக்ஷி, ஆஞ்சநேயரை சீதைபார்த்ததுபோல என்னையும், என் தோஷங்களை மறந்து பாருங்கள். மற்றது செய்யவேண்டிய சுக்ருதமான காரியங்களைச் செய்யாமல் காலத்தை கழித்ததற்கு பிராயசித்தம் என்னிடம் வேண்டாமல், என் குணங்களின் பாபச் செய்கைகளையும் மறந்து, என்னை அனுக்ரஹிக்கமாட்டாயா? எவ்வளவு காலம் பொறுப்பேன்? ஹே விஷ்ணுவினுடைய திவ்ய ஆத்மஸ்வரூபமே, சாந்த அனந்த மஹாவிபூதே, நாராயணா மஹாலெக்ஷ்மி, தயை செய்யுங்கள்.]

தன் பிரியமான தோழிகளுடன் சீதை என் அன்னை ஜானகி வந்தாள். ராஜாதிராஜரான ஜனக மஹாராஜரின் புத்திரியாகிற சீதை வந்தாள். அவளுடைய தோழிகள் மனோஹரமான குரலில் கீதங்கள் பாட சீதை அன்ன நடையுடன் நடந்துவந்தாள். புதிதாக துளிர்ந்த மேனியில் வெகு நேர்த்தியாக பட்டுப்புடவை அலங்காரங்களுடன் சீதை வந்தாள். ஜகஜ்ஜனனியாகிய ஜானகி, மஹத்தான திரிபுரசுந்தரியாக அதி அற்புதத்துடன் அழகுடன் பிரகாசித்தாள். அவள் அழகுக்கு ஈடே மூன்று உலகங்களிலும் எக்காலத்திலும் இருக்கவேமுடியாது. (1335)

சீதையினுடைய சரீரத்தை சகிமார்கள் எந்த எந்த அங்கத்திற்கு எந்த எந்த ஆபரணங்கள் அழகைத் தூக்கி எடுத்துக் காட்டுமோ, அந்தவிதமாக வெகு நேர்த்தியான ஆபரணங்களைப் பூட்டி அவளை அலங்கரித்திருந்தார்கள். எந்த வேளையில் அந்தரங்க பூமியில் சீதை தன்னுடைய பொற்பாதங்களை பதியவைத்தாளோ, அந்த சமயம் அங்கு கூடியிருந்த ராஜ குமாரர்கள், ஸ்திரி புருஷர்கள் எல்லோரும் அவளுடைய திவ்ய மனோஹரமான ரூபலாவண்யங்களைப் பார்த்து, மோஹித்து ஸ்தம்பித்துவிட்டார்கள். (1336)

தேவதைகள் தங்கள் சந்தோஷத்தைக் காட்டி துந்துபி வாசித்தார்கள். புஷ்பதாரைகள் வானத்திலிருந்து சீதைமீது விழுந்தன. அப்சரஸ்ஸுகள் கீதங்கள் பாடி நாட்டியம் ஆடினார்கள். தேவமுனீந்திர கணங்களால் வணங்கப்படும் ஜகன் மோஹினியான சீதை இளம் சூரியன் போன்ற பிரபை உள்ளவளாக தன்னுடைய இருபொற் கரகமலங்களால் ஆடி அசைகின்ற ஜயமாலையைத் தாங்கி, மனோஹரமாக, மந்தஸ்மிதமாக மெள்ள மெள்ள நடந்துவந்தாள். "ஹே ஜகன்மாயா, உன்னைப் பார்த்து அங்கு கூடியிருந்த ராஜகுமாரர்கள் ஆச்சரியத்தால் ஸ்தம்பிக்கப் பட்டவர்களாக கண்கொட்டாது பார்த்துக்கொண்டு நின்றுவிட்டனர். அவர்களே உன்னை மீண்டும் மீண்டும் பார்ப்பதற்கு உன் பக்கமே பார்த்தார்களாமே." (உன் புத்ரனான என்னை நீ அன்புடன் கடாக்ஷிக்கமாட்டாயா.) (1337)

"தாயே, ஹே சீதாதேவி; நீயும் மிக்க ஆவலுடனும், துடித்துக் கொண்டிருக்கும் மனத்துடனும் [உத்யன் முகீம் உன்னித்ர பத்மாக்ஷியாகிய நீ உன் முகத்தை நிமிர்ந்து விரிந்த கண்களுடன்] ராமனைக் கண்டு காண உன்னுடைய குளிர்ந்த அமிர்த மயமான பார்வைகளை இங்கும் அங்கும் செலுத்தினாயாமே. அந்த அருமையான வேளையில் அங்கு கூடியிருந்த

ராஜகுமாரர்கள் பயம் மோஹம்பிடித்தவர்களாக விளங்கினர்களாமே. ஹே, சீதா, அவ்விதம் நீ பார்க்கும் சமயம், விஸ்வாமித்திர மஹரிஷியின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் இரு சகோதரர்களான ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் கண்டு, உன்னுடைய தாமரைப்பூவின் சம்பூர்ணமான விகஸத்தைப் போல விரிந்து அகலமான கண்களால் தன்னுடைய சிறந்த பொக்கிஷத்தைப் பார்ப்பதுபோல, அந்த ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்ய மங்கள ரூபத்தை, அந்த ராமசௌந்தர்யத்தைப் பார்த்து, அம்மா, ஒரு கணம் ஆனந்தத்தால் கண்களை மூடமுடியாமல் லயித்திருந்தாயாமே? "(தேவி, அந்த மனப்பூர்ணமான சந்தோஷத்தால் என்னை ரக்ஷிக்கமாட்டாயா?) (1338)

"குரு ஜனங்களால் சூழப்பட்டிருந்ததால், வெட்கம் மேலிட்டு, அந்த பெரிய கூட்டத்தையும் கண்டு, நீ சங்கோஜமடைந்தாயாமே. ஆனால் அம்மா ஜானகி, ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்யமான தனு (சரீர) ரூபத்தை மாத்திரம் உன் ஹிருதயத்தில் நீ இறுக்கிப் பூட்டி, அதை தரித்துக்கொண்டு, தன் சகிக்களின் பக்கம் திரும்பினாயாமே, ஆச்சர்யம்!!" (1339)

[தியானம்

ஹே ரங்கநாயகி சமேத ரங்கநாயகா, பிரணவாகார சப்த பிரும்ம ஸ்வரூபமுடைய தயாநிதே, ஜனார்த்தன, ஜகந்நாதரே, பரபிரும்மமே, உன் கருணை வேணும் அப்பா. உன் பக்தனுக்கு நீ கொடுத்த விமானம் என் நன்மைக்காக ஸ்ரீரங்கத்தில் வைத்திருந்தாயே. ரங்கராஜா, தேவதேவா, மஹானுபாவா, காவேரி நதியின் கரையிலிருக்கும் மஹாலக்ஷ்மி, நீதானே என்னிடம் கர்வத்தைவிட்டு, என் பாபங்களை மறந்து, என் தோஷங்களை நினைக்காமல், காருண்யமழையினால் நனைக்கவேண்டும். அகமரிஷணஸூத்ரத்தை மூன்றுதடவைகள் சொன்னால் அஸ்வமேத யாகத்தின் அவபிருத ஸ்நானத்திற்குச் சமம் என்று சொல்லப்படும். அகமரிஷண ரிஷியின் குலத்தில் உதித்தவனும் விஸ்வாமித்திர குலநாதனாகவும் கொண்ட கௌசிகனாகிய என்னை கடாக்ஷிக்கமாட்டாயா? ஸ்ரீரெங்க பிரபு, உரகராஜனின் மேல் நளினமாக வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மியின் நாயகரே, ஹரி வல்லபே, ஸ்ரீதேவி சகிதமாக வீற்றிருக்கும் நாராயணரே, விபீஷணனையும் என்போன்ற பக்தர்களையும் கடாக்ஷிக்க மாட்டாயா? பரத்துக்கு பரம் என்று சொல்லப்படும் ஞானச் செல்வமே, உமை துதிக்கும் பரம ஞானமே, சங்கரன் இன்புரும்

மனச்செல்வமே, திருத்தக்க செல்வமும் யாம்பாடி வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் என்று பூமாலை சூட்டிய சூடிக்கொடுத்த சுடர் கொடியாகிற ஆண்டாள் பாடிய எம் பெருமானே, கருடனைக் கௌரவித்த பரம்பொருளே, நித்ய உத்ஸவம் நித்ய மங்களபோகங்கள், நித்ய பக்தி குழாங்கள், சேவிக்கும் வைபவமுள்ள பிரபோ, சூர்யகுல திலகா, என்னையும் எங்களையும் ரக்ஷி.]

அந்த ராம சௌந்தர்யங்களையும், மோஹன ராம விக்ரஹத்தையும் அந்த ஜகதாம்பிகையான சீதாதேவியின் அதி அத்புத ரூபயௌவன லாவண்ய சீலகுண விலாஸங்களை ஐக்யமாகக் கண்டு, ஆனந்தித்து, ஸ்திரி புருஷர்கள் எல்லோரும் பரவசமடைந்தார்கள். தங்கள் இமைகளை ஒரு விநாடிகூட மூட மன விருப்பமில்லாமல் இருந்தார்கள். அதுமாத்திரமன்றி, தங்களுக்குள் யோசித்தார்கள். ஆனால் அவர்களால் வெளியில் சொல்ல முடியவில்லை. சங்கோசப்பட்டார்கள். இருந்தாலும் அவர்களுடைய மனத்திற்குள் தங்கள் தங்கள் குலதெய்வத்திற்கு வேண்டி வினயத்துடன் பிரார்த்தித்துக் கொண்டார்கள். (1340)

"ஹே தெய்வமே, பிரும்மாவே, இந்த பிடிவாத மனமுள்ள ஜனக மஹாராஜரின் குணத்தைப் போக்கும். சீக்ரமாகவே அவருக்கு நல்ல புத்தியைக் கொடும். எங்களுக்குத் தோன்றின எண்ணம் மாதிரி அவருக்கும் தன்னுடைய விரதத்தை (வில்லை ஒடிப்பவருக்கே தன் புத்ரியான ஜானகியை மணம் செய்து கொடுப்பேன் என்கிற விரதத்தை) தூர விலக்கி, இந்த மஹா உத்தமியான சீதையை பிரபு ஶ்ரீராமச்சந்திரனுக்கு விவாஹம் செய்து கொடுக்கும்படி அருள்செய்யும்." (1341)

"இந்த சராசரங்களனைத்தும் இப்பேற்பட்ட மாபெரும் காரியத்தை கட்டாயம் ஆமோதிப்பார்கள். ஏனென்றால், இங்கு கூடியிருக்கும் அனைவர்களின் மனோபாவம் அவ்விதம் செய்வது ரொம்ப நல்லது," என்று ஆமோதிப்பதுபோலத் தோன்றுகிறது. எல்லோருடைய சுந்தரமான ஹ்ருதயத்தில் அவ்விதமேபடுகிறது. இங்கு கூடியிருக்கும் மஹா ஜனங்கள் இந்த நியாயமான ஆசையால் பிரேமையால் கவரப்பட்டு ஒரே மனத்துடன் ஏகமான "இந்த ஜானகிதேவிக்கு யோக்யமான வரன் இந்த நீலமேக வர்ணமுள்ள ராஜகுமாரனாகிய ஶ்ரீராமன் தான்" என்கிற எண்ணத்துடன் இருக்கிறார்கள்." (1342)

அந்த சமயம் ஜனக மஹாராஜர் புகழ்பாடும் வந்திகளைக் கூப்பிட்டார். அவர்கள் ஒவ்வொரு ராஜகுமாரர்களின் விருதாவளி

களையும் அவர் அவர்களின் வம்சங்களையும் கீர்த்தி புகழ்ரூப அலங்காரங்களை விவரிக்கிறவர்களாக பாடிக் கொண்டு சென்றார்கள். ராஜா மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "ஹே வந்திகளே, என்னுடைய ஜானகியின் விவாஹம் சம்பந்தமுள்ள விரத பிரதிக்ஞையைச் சொல்லுங்கள்," என்று கட்டளையிட்டார். அந்த வந்திகளும் மனத்தில் சந்தோஷமடைந்தவர்களாக ஆனந்தத்துடன் சொல்ல ஆரம்பித்தார்கள். (1343)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, ராஜகோபாலா, ஸ்ரீராஜராஜேஸ்வரி, அம்பா மாதவா, சுக ஸனக ஜனக மஹாயோகிகளால் வந்திக்கப் பட்ட தயாநிதே, விஸ்வாத்மன், ஸர்வாத்மன், அம்புஜநேத்ரா, அம்புஜ ஜனனி, நீலவர்ண ஸ்யாமளா, கருணை கொண்ட கரும் விழிகள் படைத்த ஜகஜ்ஜனனி, ஸார்வபௌமா, அகில, பக்த பாலித கருணாம்புதே, ஸ்ரீபதே, உங்கள் சரண பாதங்களை நம்பி யிருக்கும் எனக்கு எப்போது உங்கள் கிருபை கிடைக்கும்.? தியாகராஜர் போல நான் வேத சாஸ்திர ஞானத்தை பெறவில்லை. அர்ஜுனனைப் போல நீதான் பெரியது, என்று நான் நினைக்க வில்லை. ஹே அக்ரகண்ய, உன்பதாப்ஜங்கள் தான் வேண்டும் என்று நினைத்த ருக்மிணி சதியபாமையைப் போல நான் நடக்க வில்லை. சுரபி, காமதேனு, நந்தினி போன்ற மகிமைகள் பொருந் திய பசுக்களாகவும் பிறக்க பாக்யம் படைத்தவனில்லை. சங்கரர் சதா தியானிக்கும் ஸ்ரீராமனே நான் உன்னை ஸதா தியானம் செய்யவில்லை. ஹே, பரமாத்மா, உன்னிடமும் தேவியிடமும் வருவதற்கு உமை எனக்கு சிபார்சு பண்ணமாட்டாளா? நாரதர் வேதவியாஸர், பீஷ்மர், தர்மர் போன்ற மஹாத்மாக்கள் என்னைப் பற்றி சொல்லமாட்டார்களா? சதா ராமனையும் சீதையையும் ஆஸ்ரயித்திருக்கும் என் பரம ஆசாரியரான ஆஞ்சநேயர் எனக்கு கிருபை பண்ணமாட்டாரா? ஆனந்த நடனம் செய்யும் நடேசன் என் மனதில் நடனம் பண்ணி என் தோஷங்களை விலக்கி உன்னிடம் சேர்ப்பாரா? இந்திரன் போன்ற மஹாத்மாக் களும், அஸ்வினி தேவர்கள் போன்ற கருணை உள்ளம் படைத்த வர்களும், கருடன், அனந்தன் போன்ற விபூதிகளும், விஷ்வக் ஸேனரும், குஹப் பெருமானும், வாணியும் எனக்கு நல்லது செய்யமாட்டார்களா? ஹே விஸ்வாமித்திரரே, நீராவது சுனஸ் சேபனுக்குச் செய்தது போல கௌசிகனுகிய எனக்கு அருள் செய்யமாட்டீரா ?]

அந்தவந்திகள் ஜனகரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு அங்கு கூடியிருக்கும் மஹீபாலர்களான அரசகுமாரர்களின் வைபவங்களை ஒன்று விடாமல் அழகிய வசனங்களால் சொன்னார்கள். "ஹே ராஜாக்களே, தயை செய்து கவனமாய் கேளுங்கள். நாங்கள் எங்களுடைய விசாலமான கைகளைக் கூப்பி, ஜனக மஹாராஜருக்கு பிரணமம் செய்கிறோம்." (1344)

"ந்ருபர்களாகிய உங்களுடைய புஜபல பராக்ரமம் சந்திரனைப் போல பிரகாசிக்கிறது. இந்த சிவதனுஷ் ராகுகிரஹம் போல விருக்கிறது. அதனால் அது ரொம்ப கனமாகவும், வளைக்க முடியாமலும் கடினமாகவுமிருக்கிறது, என்று இங்கு கூடியிருக்கும் உங்களுக்கு நன்ருகத் தெரியும். இந்தப் பெரிய உக்ரமான வில்லைக் கண்டு ராவணேஸ்வரன், பாணசுரன் முதலிய வீரர்கள் சப்தம் செய்யாமல் கர்வம் இழந்தவர்களாக மெதுவாக நழுவினார்கள். இந்த வில்லை எடுத்து, நாண் பூட்டுவதற்கு அவர்களுக்கு நம்பிக்கையே இல்லை." (1345)

"அப்பேற்பட்ட மகிமை பொருந்திய இந்த திரிபுராரியின் தனுஷ் இன்று இந்த ராஜ சமூகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. இதை எவர்களாவது நாண் பூட்டினால் அதன் பிறகு மூன்று லோகங்களிலும் சிறந்த ஜானகியை விஜய ஸமேதனாக மணம் புரிய அடையலாம், என்கிற ஜனகருடைய விரதத்தைத் தவிர வேறு ஒரு உபாயத்தை நாங்கள் திடபுத்தியுடன் வர்ணனை செய்யப் போகிறதில்லை." (1346)

இந்த ஜனக பூபதியின் விரதத்தை எல்லா அரசர்களும் கேட்டார்கள். மிக்க ஆசையுடன் அந்த அதிசயமான வில்லை எடுத்துப் பூட்டுவதற்கு முயற்சி செய்ய விரும்பினார்கள். வீரத்தை பூஷணமாகக் கொண்ட அரசர்கள் மிக்க கலங்கினார்கள். தங்கள் வஸ்திரங்களை இறுகக் கட்டி, தங்கள் இஷ்ட தேவதைகளைத் தியானித்துக்கொண்டு முன் சென்றார்கள். (1347)

வெகு உன்னிப்பாக சிவ தனுஷ்ஷை கவனித்தார்கள். ஜாக்கிரதையுடன் அந்த வில்லை கைகளால் பற்றினார்கள். தங்கள் பலம் முழுவதையும் உபயோகப்படுத்தியும், பல யோசனைகளாலும் அந்த வில்லைத் தூக்குவதற்கு முயற்சித்தும், அவர்களால் அதை மேலே எழுப்ப முடியவில்லை. இதைக் கண்ட ராஜாக்களின் மனம் வாடினவர்களாக ஆனார்கள். அவர்களில் விவேகம் படைத்த சில அரசர்கள் அந்த வில்லின் பக்கமே போக விரும்பவில்லை. (1348)

சில மூர்க்க பிடிவாதமுள்ள அரசர்கள் பரம முயற்சியுடன் வில்லை வளைப்பதற்கு முயன்றும் அவர்களால் அதை உயரத் தூக்குவதற்கும் கூட முடியவில்லை. வெட்கப்பட்டுத் தங்கள் இருப்பிடங்களுக்குத் திரும்பினார்கள். வீரர்களின் கைகள் படப் பட, அந்த வில் மிக்க தேஜஸ்ஸுகளை அடைந்து ரொம்ப கன மாகத் தோன்றியது. (1349)

அந்த ராஜ புருஷர்கள் பதினாயிரக் கணக்கில் இருந்தும், அவர்களில் ஒருவராவது அந்த உத்தமமான வில்லை எழுப்புவ தற்கு முடியவில்லை. நாண் பூட்ட சக்தி படைத்தவர்களாகவு மில்லை. சம்புவினுடைய மகிமை பொருந்திய வில் அவர்களுக்கு எப்படி வசப்படவில்லை தெரியுமா, ஒருபெரிய காமாந்தகனுடைய இனிய வசனங்களால் ஒரு நல்ல சதியான பதிவிரதையின் திட மான மனமானது அசையாதோ அதுபோல அது விளங்கிற்று. (1350)

அந்த ராஜாக்கள் பரிஹாஸத்திற்கு யோக்யமாக ஆகிவிட் டார்கள். எவ்விதம் வைராக்யமின்றி ஒரு சந்யாஸி பரிகாசத் திற்கு உட்படுவானோ, அதுமாதிரி ஜனங்கள் பரிகசிக்கும்படி அவர்கள் இலக்கானார்கள். அந்த சிறந்த வில் ஒவ்வொருவ னுடைய கீர்த்தி, விஜய பிரபாவங்கள், மஹத்தான வீரச் செய் கைகள் எல்லாவற்றையும் அழித்தது. ஒவ்வொருவரும் தோற்று வந்தவழி திரும்பினார்கள். (1351)

ராஜாலோகம் தங்கள் ஹ்ருதயத்தில் தோல்வியை ஒப்புக் கொண்டு, நம்பிக்கையை இழந்தவர்களாகி, தங்கள் மகிமைகள் குன்றியவர்களாக, மீண்டும் தங்கள் ஸ்தானங்களுக்குத் திரும்பி வந்து, ஆஸனங்களில் அமர்ந்தார்கள். அந்த ராஜாக்கள் தோல்வி அடைந்ததைக் கண்டு ஜனக மஹாராஜர் கோபத்துட னும் ஆக்ரோஷத்துடனும் கூர்மையான வசனங்களைப் பேசினார். (1352)

"என்னுடைய பிரகடனத்தைக் கேட்டு வெகு தூரத்திலிருக் கும் தீவுகளிலிருந்து அநேக ராஜாக்கள் வந்திருக்கின்றனர். தேவதைகள் தைத்யர்கள்கூட மானிட வேஷம் பூண்டு வந்திருக் கிறார்கள். இன்னும் அநேக யுத்தங்கள் செய்து சிறந்த வீரர் களின் சாமர்த்தியத்தைப் பெற்ற ரண தீரர்களும் வந்திருக் கிறார்கள்." (1353)

"ஆனால், இந்த வில்லை முறித்து, என்னுடைய மனோஹர மான குமாரியையும் அவளுடன்கூட பெரிய வெற்றியையும், அத்

யந்த விசாலமான கீர்த்தியையும் அடைவதற்கு பிரும்மாவினுல் ஒருவரும் படைக்கப்படவில்லை போலிருக்கிறது.'' (1354)

''சொல்லுங்கள், ராஜாக்களே. இந்த ஜானகி என்கிற மஹத்தான பரம லாபத்தை அடைவதற்கு யார்தான் விரும்ப மாட்டார்கள்? ஆனுல் இப்போது ஒருவராலும் சங்கரருடைய வில்லை ஒடிப்பதற்கு சாமர்த்தியம் இல்லையே. ஹே சகோதரர்களே, உங்களால் இந்த வில்லை எழுப்புவதற்கும், முறிப்பதற்கும் எவ்வளவோ தடவைகள் பல பேர்கள் முயற்சித்தும் இந்த வில்லை ஒரு எள்ளின் தூரம்கூட நகர்த்த முடியவில்லையே.'' (1355)

[தியானம்

ஹே கிரிஜா ரமணு, சம்போ, மஹாதேவா, சுந்தரேஸ்வரா, சரணுகத ரக்ஷகா, கருணுகரா, தேவதேவா, பரமதயாகரா, உமையும், என் தாயான கிரிஜாவும், சதா தியானிக்கப்படும் ஸ்ரீ தேவியினுடைய மஹாத்மியத்தை உன்னிடம், ஹே சம்போ, கேட்டாளாம். அந்த சமயம் பகவானுகிய திரிபுராரி தாமரை மலரில் உண்டானவளும், தாமரை மலரின் சுகந்தமுள்ளவளும், தாமரையைக் கையில் வைத்திருப்பவளும், தாமரையால் திக்கஜங்களால் அர்ச்சிக்கப்படுகிறவளும், விகஸித்த தாமரை இதழ்கள்போன்ற திருக்கண்களை உடையவளும், பத்மா என்று செல்லமாக அழைக்கப்படுகிறவளும், மஹாலக்ஷ்மி என்று இந்திரன் போன்றவர்களால் பூஜிக்கப்படுகிறவளும், ராஜலக்ஷ்மி என்று அழைக்கப்படுகிறவளும், நாராயண ப்ரியையாகிற ஹரிவல்லபையைப்பற்றிச் சொன்னுர். அப்பேற்பட்ட மகிமைகள் பொருந்திய த்ரைலோக்ய லக்ஷ்மியை ஆஸ்ரயித்துத்தானே பகவானுக்கு ஸ்ரீதரன் என்றும், ஸ்ரீகரன் என்றும், லோகத்ரயாஸ்ரயஃ என்றும், கருணுமூர்த்தி என்றும் பெயர் வந்தது. ஹே விஸ்வேஸ்வரா, அஜரே, தேவா, அவ்யயமான நாராயண பிரபோ, மனிதனே, தேவனே, ரிஷிகளோ, இன்னும் எந்த பிறப்பிலும் ஸ்ரேயஸ், சுகம் இவைகளை அடைவதற்கு உன் பாதங்களே முடிவு என்றும், அந்த பொற் பாதங்களுக்கு திருமா மகளே புருஷகாரம் என்றும், நீங்கள் இருவர்களும் சராசரங்களையும் அம்ருதமயமான திருஷ்டிகளாலும் வசனங்களாலும் அணைப்பு ஆதரவு அளிப்பதாலும் எங்களைப் போன்ற தீனர்களுக்கு ஆதரவு செய்கிறீர்கள். எப்படி தாழ்ந்த பூமிக்கு மேலிருந்து ஆகாயத்தின் மழை வருவதுபோல, சுசிலனுகவும் தர்மாத்மாவும் எல்லோரிடமும் பிரேமையுடன் கூடியவனுகவும், ஸர்வ பிராணிகளுக்கும் ஹிதகாமியாகவிருக்கும் ஸத்

பாத்திரத்திற்கு, துருவனுக்குக் கிடைத்ததுபோல உங்கள் கிருபை கிடைக்கிறது. புலஸ்திய, மஹரிஷி சொன்னதுபோல சிறந்த மகிமைகளால் சிறப்பிக்கப்பட்ட பகவானுகிய ஹரியான வர் தன் வக்ஷஸ்தலத்தில் வீற்றிருக்கும் லக்ஷ்மியுடன் அனுக்ரஹ புத்தி ஏற்பட்டு ஆராதத்தினுல் சந்தோஷிக்கப்பட்டவராகி இருந் தால், கிடைக்கப்பெருத மோக்ஷ பதமானதுகூட ஏன் கிடைக் காது? ஹே பக்த ப்ரியா, ப்ரஹலாத ப்ரியா, எங்களிடம் தயை காட்டி உங்கள் கிருபையைக் கொடும். ஹே சீதாராமா, க்ஷத்தி ரியராகப் பிறந்து பிரும்மபலம் பெற்று, இந்திரனுல் போற்றப் பட்ட விஸ்வாமித்திரர் எவ்விதம் உங்கள் இருவர்களேயும் சேர்த்து வைத்து ஆனந்தம் அனுபவித்தாரோ, ஆஞ்சநேயர், தியாகராஜர் போன்ற மஹாத்மாக்கள் பார்த்த உங்களுடைய தரிசனம், கிருபை எப்போது கிடைக்குமோ? வால்மீகி பக வானே, நாரதரே, வஸிஷ்டரே, பிரும்மாவே எனக்கு அனுக்கிர ஹிக்க வேண்டும்.]

"இங்கு கூடியிருக்கும், விரத்தை ஆஸ்ரயித்திருக்கும் ராஜாக் களே, நீங்கள் என்மீது கோபம் கொள்ளவேண்டாம். எனக்கு நன்ருகத் தெரியும். இந்த பூமி வீரர்களின்றி காலி செய்யப்பட்ட தாகவிருக்கிறது. நீங்கள் எல்லோரும் உங்கள் ஆசைகளே விட்டுவிட்டு உங்கள் வீட்டிற்கு திரும்பிச் செல்லுங்கள். பிரும்ம தேவர் என் புத்ரியான சீதைக்கு விவாஹம் செய்ய விதிக்க வில்லை." (1356)

"நான் என் விரதத்தை விட்டேனுகில் என்னுடைய சுக்ரு தங்கள் நாசமாய் போய்விடும். இதனுல் நான் ஏன் அதைவிட வேண்டும்? என்பெண் குமாரியாக இருந்துவிட்டுப் போகட்டும். எனக்கு இப்போது புரிந்துவிட்டது. இந்த பூமி வீரன் ஒருவ னும் இல்லாமல் சூன்யமாகிவிட்டது. நான் உங்களே நமஸ் கரித்து வேண்டிக் கொள்கிறேன். எனக்கு இந்தமாதிரி பூமி வீர சூன்யமாகிவிடும் என்று தெரிந்தால் நான் இவ்விதம் பரிகாசத் திற்கு இடம் கொடுத்திருக்கமாட்டேன்." (1357)

ஜனகருடைய வசனங்களே அங்கு கூடியிருந்த ஸ்திரி புருஷர்கள் யாவரும் கேட்டார்கள். எல்லோரும் ஜானகியைப் பார்த்து துக்கித்தார்கள். ஆனுல் பரம வீரரான லக்ஷ்மணன் ரொம்ப ரோஷத்தினுல் எழுந்திருந்தான். அவனுடைய உதடுகள் கோபத்தினுல் துடித்தன. அவனுடைய நேத்ரங்கள் மிக்க சிவந்து, கோபத்தினுல் ஜ்வலித்தன. (1358)

  

ஸ்ரீ ரகுவீரனுடைய பயத்தினால் அவன் மேலே ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் ஜனகருடைய அம்பு போன்ற வசனங்களால் மர்மங்கள் பிளக்கப்பட்டவனாக இருந்தான். பிறகு அவன், கொஞ்ச நேரம் சென்றதும், ஸ்ரீராம பாதங்களாகிற சரண கமலங்களில் தலையால் வணங்கி, யதார்த்தமான வசனங்களைச் சொன்னான். (1359)

"ரகு வம்சத்தில் யாராவது இருப்பானாயின் இப்பேற்பட்ட ராஜ ஸமாஜத்தில் ஒருவரும் இப்போது கேட்கப்பட்ட வசனங்களைச் சொல்லியிருக்கமாட்டார்கள். ரகுகுல சிரோண்மணியாகிய ஸ்ரீராமச்சந்திரன் இங்கு வந்திருப்பதைத் தெரிந்தும், மஹா மேதையானவரும் மஹா வித்வானுமாகிற ஜனக மஹாராஜா இவ்விதமான அனுசிதமான வார்த்தைகளைச் சொல்லியிருக்கக் கூடாது." (1360)

"ஹே சூர்யகுல பங்கஜா, தயவு செய்து கேளுங்கள். நான் மன உண்மையுடன் தங்களிடம் பேசுகிறேன். ஒரு விதமான அபிமானமின்றியும் தற்புகழ்ச்சியுமின்றியும் நான் விக்ஞாபித்துக் கொள்கிறேன். உங்கள் உத்தரவைக் கொடுங்கள். நான் அந்த கட்டளையை நிறைவேற்றுபவனாக இந்த பிரும்மாண்டம் அனைத்தையும் ஒரு பந்துபோல தூக்கி விடுகிறேன்." (1361)

[தியானம்

ஹே ரங்கநாயகா, ரெங்கநாயகி சமேதா, ராமா சீதாராமா, புருஷோத்தமா, பணிபதியான ஆதிசேஷனாலும், வேதாத்மா வான கருடனாலும், விஷ்வக்ஸேனராலும் சேவிக்கப்பட்ட பகவதி, "ஸ்ரீ" என்று சொல்லப்படும் ஜகந்மோகினி, மாயா என்று சொல்லப்படுகிறவளே, பிரும்மன், ஈஸன் முதலியவர்களால் ஸ்துதி செய்யப்பட்ட ஸ்ரீதேவியே, உன்னை காந்தையாக அடைய விரும்பும் ஸ்ரீராமனுக்கு ஜயமங்களம். உங்களிரு வருக்கும் ஜயம் பெருகவேண்டும். ஹே ராமா, தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஜீவநாடியாக இருப்பவனே, ஜகதாதாரா, உங்களுடைய பதங்களையே நம்பியிருக்கும் எனக்கு ஆதரவு கொடுங்கள். இந்த ராஜசபையில் சிவனுடைய வில்லை ஒடித்து, அந்த அரசர்களின் கர்வத்தைப் போக்கினவனே. துன்பப்பட்டு சாபத்தின் வசமடைந்து அதனால் தபிக்கப்பட்டுக்கொண்டு உன்னை எதிர்பார்த்த அஹல்யைக்கு நீதானே அவளை அந்த துர்கதியிலிருந்து விடுவித்தாய்? சுக்ரீவன் வாலியின் பயத்

திஞல் துக்கம் தாங்காதவனுக இருந்தான். அவன் பயத்தை தெளிவிப்பதற்கு நீ துந்துபியினுடைய உடலே உன் இடது காலின் கட்டைவிரலால் தூக்கி எறிந்தாயே. அதுபோல என் துக்கத்தையும் போக்கி உனது கிருபையையும் கொடுப்பாயா? நான் உன்னுடைய உதவி இருக்கிறபோது, அனுதையாக இல்லை என்று பெரிய மஹாத்மாக்கள் சொல்வதைக் கேட்டிருக் கிறேன். நீதான் ஸநாதனன். நாரதர், ஏகதர் சொல்லிய பரப்பிரும்மம். என் மனது உன்னையே நாடி, புராண புருஷன் என்றும், ரமாகாந்தன் என்றும், புரரிபுவான சம்புவின் ஆஸ்ரித தெய்வமென்றும், உரகசயனன் என்றும், கருடவாஹனன் என் றும், கருடக்கொடியோன், சார்ங்கதரன், கதாதரன், நாகராஜசய னன் என்றும், சங்கு சக்ரதாரி என்றும், தீனர்களைக் காப்பவன் என்றும், தியாகராஜர் துளசிதாஸர் ஆஞ்சநேயர் வால்மீகி போன்ற மஹான்கள் சொல்லி நான் அறிந்திருக்கிறேன். உன்னை நம்பின எனக்கு உன் திவ்ய தரிசனமும், சீதைக்குக் காட்டினது மாதிரி அன்பான நோக்கும் உன்பதமாகிய மோக்ஷமும் எப்போது கிடைக்கும்?]

"அப்படியே அந்த பந்து போன்ற பிரும்மாண்டத்தை கச்சாவான (நன்ருக வேகாததும்) மண்பானையை உடைக்கிறது போல உடைக்கிறேன். உத்தரவு கொடுங்கள் ஸ்வாமி, இந்த மேரு பர்வதத்தை முள்ளங்கி போல ஒடித்துவிடுகிறேன். ஹே பகவன், தங்களுடைய பிரதாபத்திற்கு முன்பு இந்த புராணமான பிஞகியின் வில்லானது ஸர்வ ஸாதாரண வஸ்துவல்லவா?" (1362)

"இவ்விதமாக அறிந்துகொண்டு ஹே நாதா, உத்தரவு கொடுங்கள். நான் விளையாடுகிறேன். அதையும் பார்த்து ரமியுங்கள். ஒரு கமல புஷ்பத்தின் காம்பு மாதிரி இந்த வில்லை தூக்கிக்கொண்டு, நூறு யோசனைகள் ஒடுகிறேன்." (1363)

"ஹே நாதா, தங்களுடைய பிரதாபத்தின் பலத்திஞல் இந்த வில்லை மழையில் விளைந்த ஒரு சாதாரணமான நாய்க்குடை பூண்டைப்போல ஒழித்து விடுகிறேன். நான் சொல்லுகிறதுபோல செய்யாமற் போனுல், ஹே பிரபு உமது சரணுரவிந்தங்களில் சபதம் செய்கிறேன். "நான் மீண்டும் இந்த வில்லையும் பாணத்தையும் கைகளில் தரிக்கிறதில்லை."

(1364)

கோபமான லக்ஷ்மணன் இவ்வித வசனங்களைச் சொல்லும் போது பிருத்திவியானது "கிடுகிடு" என்று நடுங்கியது.

திக்கஜங்கள் பயத்தினுல் எழுந்தன. திசைகளும் நடுங்கின. ஸகல லோகங்களும் சகல பூபதிகளும் பயத்தினுல் நடுங்கினுர்கள். சீதோதேவி இந்த வசனங்களைக் கேட்டு தன் ஹிருதயத்தில் சந்தோஷப்பட்டவளாக ஆனுள். ஆனுல் ஜனக மஹாராஜர் சங்கோசத்தினுல் ஒன்றும் பேசவில்லை. (1365)

பரமகுருவாகிய விஸ்வாமித்திரர், ஶ்ரீரகுநாதர், ஸகல முனி கணங்கள் மனத்தில் சந்தோஷமடைந்தார்கள். அடிக்கடி புளகாங்கித மடைந்து பிரசன்னம் அடைந்தார்கள். ரகுபதி லக்ஷ்மணனை இங்கிதங்களால் அடக்கி, அதிவாத்ஸல்யத்துடனும் பிரேமையுடனும் தன் பக்கம் அமர்த்திக் கொண்டார். (1366)

விஸ்வாமித்திர ரிஷி சுபமான வேளையை அறிந்து, அத்யந்த பிரேமையுடன் ஸ்நேகமான வசனங்களைச் சொன்னுர். "ஹே ராமா, எழுந்திரு, பவருடைய வில்லை எடுத்து வளைத்து, ஒடித்து விடு. ஜனகருடைய பரிதாபமான ஸந்தாபங்களை ஒழித்துக் கட்டு" (1367)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, விஸ்வாமித்ரபிரியா, உன்னுடைய மனஎண்ணங்களை யாரால் அப்பா தெரிந்துகொள்ளமுடியும்? ஹே பிரஹ்லாதபிரியா, உன் மனேனுகூலையான லக்ஷ்மி ஒருவளுக்குத்தான் முடியும். ஹே லக்ஷ்மிநிருசிம்மா, தர்மத்தின் பலன்களைக் கொடுப்பதில் நீங்கள் இருவர்களும் ஒரே கருத்துள்ளவர்கள் என்று என் குருநாதரான ஆளவந்தார் சொல்லியிருக்கிறுர். சதியும் சம்புவும் எவ்விதம் சேர்க்கை பெற்றவர்களோ அவ்விதம் நீங்கள் இருவர்களும் திவ்ய தம்பதிகளாக சேர்க்கை பெற்றிருக்கிறீர்கள். பரமஞானத்தால் உணர்ந்த என் குலநாதர் விஸ்வாமித்திரர் உங்கள் இருவர்களையும் சேர்த்துவைத்து என்றும் அழியாத புகழைப்பெற்றுர். அதோடு மாத்திரமல்ல, என்னையும் உன்னிடம் சேர்த்தார். ஹே ராமா, உன் தபோமோக்ஷ பராயணனுக விருக்கும் என்னையும் ஸீதா என்கிற சீதை தன் சிறந்த காருண்ய திருஷ்டியால் கடாக்ஷிக்கமாட்டாளா? ஹே பகவன், அவளுக்காக நீ சிரமப்பட்டு வில்லை ஒடிப்பது என்கிற வியாஜமாகச் செய்யப்படும் காரியம் உனக்கு பரமஸ்ரேயஸ்ஸாக விளங்கிற்று. அதற்காகவும் அந்த மஹாபாக்கியவதி தன்னைச் சிறையில் அடைத்துக் கொண்டு அடிமையாக விருந்த தேவதேவர்கள் அவர்களுடைய பத்னிகள் அவர்களுடைய புகழ் எல்லாவற்றையும் ராவணன் போன்று சத்ருக்களிடமிருந்து காப்பாற்றினுள். தான் பரம

துக்கத்தை அடைந்தும், பிறர் கருத்தாக வாழ்ந்த மஹாபதி விரதைக்காக நீயும் பரிஸ்ரமம் எடுத்துக்கொண்டது ரொம்ப நல்லது. மிகவும் பொருத்தமானதுதான். காமேசனை காம விலாஸங்களால் காமப்படுத்தும் காமேஸ்வரியாகிய சீதை ஸ்ருங்கார கருணை பார்வைகளாக உன்னையும் அனுக்ர ஹித்தாள். ஸஜ்ஜீவர்களுக்கு கடாக்ஷமாகவரும் உங்கள் இரு வர்களுடைய ஸரஸிருஹ நயனங்களுக்கு என் ஜயகோஷங்கள். என்னைப்போன்றவர்கள் தியாகராஜர் போன்ற மஹாத்மாக்களி டம் சந்தோஷமடைவதுபோல உங்களுடைய கிருபா கடாக்ஷங் கள் எனக்கு பரம ஆனந்தத்தை உண்டு பண்ணுகின்றன. ஹே பரமபாவனு, என்மனதில் இருக்கும் துராசைகளை நீக்கி, சீதை போன்ற உத்தமிகள் வேண்டப்படும் உன் திவ்ய பிருந்தாவன பாதங்களை என் பக்திக்காக அளி. சம்புவும் உமையும் ஆஞ்ச நேயரும் நாரதபகவானும் எனக்கு க்ருபை செய்யவேண்டும். அகில உலகங்களும் உன்னையும் சீதையையும், ஸர்வாச்ரயா, பரமா பரிக்ருதிஸ்தவமாத்யா, என்கிற பெயர்களால் பக்தியோடு அழைக்கப்படும் நாதச்சொற்களுக்கு அர்த்த பூஷணங்களாக விளங்கும் திவ்ய தம்பதிகளே, சரணம் சரணம்.]

குருவான விஸ்வாமித்திரரின் வசனங்களைக்கேட்டு, ஸ்ரீராமச் சந்திரன் அவருடைய சரண கமலங்களில் சிரம்பணிந்து, அவரு டைய திவ்யமான தேஜஸ் பொருந்திய மங்கள ஆசீர்வாதங்களை பெற்றுக்கொண்டார். அவருடைய ஹிருதயத்தில் சந்தோஷமோ வருத்தமோ ஒன்றும் இல்லை. சிம்மக்குட்டி வெட்கப்படும்படி, அதிகம்பீரமாக எழுந்திருந்து ஸஹஜஸ்வாபாவிக மிடுக்குடன் ஒரு இளம் வாலிபன் நிமிர்ந்து நிற்பதுபோல நின்றுர். (1368)

அந்த திவ்யமான மேடையில் அரசர்களின் நடுவில் ரகுகுலத் தில் தோன்றியவரும் ரொம்பகியாதி பெற்ற ஸ்ரீராமன் உதயகிரி யில் உதயமாகும் பாலஸூர்யனைப்போல விளங்கினுர். பொதுஜனங் களின் மனம் அவரைக்கண்டதும் அந்த பால ஸூரியனுடைய கிர ணங்களால் விகஸிக்கும் ஸரோஜ புஷ்பங்கள் சந்தோஷிப்பது போலவும், தங்கள் நேத்ரங்களாகிய மொய்க்கும் வண்டுகள் அந்த தாமரை புஷ்பங்களை நோக்கிச் செல்வதுபோலவும் அவரிடம் லயித்தன. (1369)

அங்கு கூடியிருந்த அரசர்களின் ஆசைகள், விடியும்சமயம் ராத்திரி முற்றுவதுபோல நிராசையாகிவிட்டன. அவர்களுடைய தற்புகழ்ச்சிகள் அடங்கிய வசனங்கள், நக்ஷத்திரக் கூட்டங்கள் ஸூரிய உதயமாக இருக்கும்போது அவைகளின் சோபைகள்

நஷ்டமாகுவதுபோல முடியப்பட்டு எங்கும் ஒரே நிசப்தத்தை அடைந்ததுபோல விருந்தன. துராசையுள்ள சில அரசர்களுக்கு மாத்திரம் குமுத புஷ்பங்கள்போல அவர்களின் மனங்கள் குவிந்தன. (மூடிக்கொண்டன). கபட ஸ்வபாமுள்ள அவர்கள் ஆந்தைகளைப்போல தங்களை தாங்களே ஒளித்துக்கொண்டார்கள். (1370)

ரிஷி ஸ்ரேஷ்டர்களும் தேவதைகளும் சந்திரனைக்கண்ட சகோர பக்ஷிகள்போல பயமும் சோகமும் இல்லாதவர்களாக, தங்கள் நிலைமைகளை மறந்து, சுகந்தமான புஷ்ப மழைகளையும் மங்கள ஜயசப்தங்களையும், ஆசீர்வாதங்களையும் தங்கள் சேவைகளான விஸ்வாசத்தையும், பக்தியையும் காண்பிப்பவர்களாகத் தோன்றினார்கள். பிரேமை நிறந்த உள்ளத்துடன் விஸ்வாமித்திருடைய குருபதத்தை (குரு கிருபையை) ஸ்ரீராமன் வேண்டி, அவரை மீண்டும் நமஸ்கரித்து, அவருடைய சுபமான ஆசீர்வாதங்களையும் மற்றவர்களுடைய நல்ல வசனங்களையும் பெற்றார். (1371)

ஜகத்துக்கு ஸ்வாமியான பிரபு ராமச்சந்திரன் அழகாக, யௌவனத்தின் திமிரால் நடந்துவரும் மத்தகஜம்போல ஸ்வாபாவிகமான கம்பீர நடையுடன் நடந்துசென்றார். அவருடைய திவ்யமான நடை அழகைப் பார்த்து, பார்த்து, ஸ்திரி புருஷர்கள் எல்லோரும் மிக்க சரீரசுகமும், புளகாங்கிதமும் ரோமாஞ்சலியும் பெற்றார்கள். (1372)

அந்த மஹாபுண்யவான்கள் தங்களுடைய பித்ரு, தேவ கணங்கள், இஷ்டதேவதைகள் தங்களுடைய புண்யபிரபாவங்கள் எல்லாவற்றையும் நினைவுகொண்டு "எங்களுடைய புண்ய பிரபாவங்களுக்கு ஏதாவதுபலன் இருக்குமாயின், ஹே கணேசா, ஹே கணேசகோஸாயி, ஸ்ரீராமன் இந்தப் பெரிய சிவதனுஷ்ஷை நளினமான தாமரைத் தண்டைப்போல ஒடிக்கட்டும்." என்று வேண்டிக்கொண்டார்கள். (1373)

[தியானம்

ஹே ராமா, பிராம்மணப்பிரிய, புண்யஸ்ரவண கீர்த்தனு, தவமும் கர்மானுஷ்டானமும், யாகமும் ஞானமும், வேதத் தியானத்தையும் கருவியாகக்கொண்ட எந்த மஹாபிராம்மணர்களுக்கு பரப்பிரும்மம் எவ்விதம் உயர்ந்த பொருளோ, இவைகளை அனுஷ்டித்த பீஷ்மருக்கு பிராம்மணர்கள் எவ்விதம் சிறந்தபடி பூஜிக்கத்தக்கவர்களோ, எந்த தியாகராஜருக்கு ராமன் சிறந்த

பரபிரும்மமோ, எந்த உமைக்கு சம்பு உயர்ந்த பொருளோ, அது மாதிரி எனக்கு நாராயணராகியவரும், மஹாலக்ஷ்மி உருவெடுத்தவளுமான ராம சீதா எனக்கு ரொம்ப வேண்டியவர்கள். பரிபூர்ணு, பூர்ணுகாரா, ஜகத்பிரபு, தேவதேவா, புருஷோத்தமா, ஸரஸிஜநேத்ரா, நிரூபமசூரா, நிகிலாதாரா, என்னுடைய ஹ்ருதய ஜலத்தினுல் மழைபொழிவதுபோல உங்கள் இருவர்களிடமும் தஞ்சம் கொண்டிருக்கிறேன். ஜகத்ஸ்வாமின், என் தோஷங்களை கவனிக்காதீர்கள். ஒரு பாம்பை உன் படுக்கையாக நீ வைத்துக்கொள்ளவில்லையா? உமது வீரியத்தால் ஆகாசம் பூமி இவைகள் ஒன்றும் சேராமல் இருக்கின்றனவே. வாயு சூர்யன், சந்திரன், அக்னி, நக்ஷத்திரங்கள் யாவும் உன் பயத்தினுல் அவரவர்களின் வேலைகளைச் செய்துகொண்டு வருகிறுர்களே. ஹே பரமாத்மா, நீங்கள்தான் தயைபுரிய வேண்டும்.]

ஸ்ரீராமச்சந்திரனிடம் அதிபிரேமை கொண்டவர்களான சீதையின் தாயார் அங்கு கூடியிருக்கும் ஜனங்களைக் கொண்டு ஸ்ரீராமனையும் பிரியமாகப் பார்த்து விட்டு சீதையின் தோழிகளை தன் சமீபம் அழைத்து, சீதையின் தாயார் அதி ஸ்நேகத்துடன் பிரியமானதும் வருத்தங்கள் கூடினதுமான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். (1374)

"ஹே சகிகளே, எனக்கு நன்மையை நினைக்கும் என் சிநேகிதர்களே, எல்லோரும் இந்த தமாஷாவை (வேடிக்கையை) பார்த்துக்கொண்டிருக்கிறுர்கள். வாஸ்தவம், அவர்கள் தமாஷாவைப் பார்க்க வந்திருப்பவர்கள்தான். ஆனுல் அவர்களில் ஒருவராவது இந்த குரு விஸ்வாமித்திரரைப் பார்த்து, "இந்த ராமன் சிறிய பாலகன். இந்த மாதிரி சாகஸமான காரியத்தைச் செய்வதற்கு காரணம் ரொம்ப பிடிவாதம்தான் இருக்கத்தான் வேண்டும். சரி, இந்த பிடிவாதத்தினுல் எப்படி இந்த வில்லை ஒடிக்க முடியும்? (—அதாவது பிடிவாதம் மாத்திரம் இருந்தால் காரிய கௌரவம், காரிய சாமர்த்தியம் ஆகிவிடுமா? மஹா சூரர்களான ராவணன், பாணன் முதலியவர்கள் இந்த வில்லைப் பார்த்து, தூரத்திலேயே நமஸ்காரம் செய்துவிட்டு போய் விட்டார்கள். அப்பேற்பட்ட வில்லை இந்த முனிஸ்ரேஷ்டரான விஸ்வாமித்ரர் சிறிய பாலகனுகிற ராமனை ஆக்ஞை செய்து, ஒடிப்பதற்கு ஆசீர்வாதம் செய்கிறுரே. அவருக்கு எவராவது புத்திமதி சொல்லி, இந்தக் காரியம் ரொம்ப கடினமானது என்று அறிவுறுத்துபவன் இங்கு யாரும் இல்லையா,? என்று நினைத்தாள்.) (1375)

"எப்பேற்பட்ட ஜகத் விஜயர்களான ராவணேஸ்வரன், பாணன் போன்றவர்கள் இந்த வில்லை நமஸ்காரம் செய்து ஒன்றும் செய்ய முடியாமல் சென்றுவிட்டார்கள். இங்கு கூடி யிருக்கும் ஸகல பூபதிகளும், தங்கள் கர்வத்தை இழந்து அவமானத்தை ஒத்துக்கொண்டு, சகித்துக் கொண்டிருக் கிறார்கள். அப்பேற்பட்ட மஹத்வம் படைத்த வில்லை இந்த சுகுமாரனான ஸ்ரீராமனுக்கு எவ்விதம் அவர் கொடுக்கலாம்? பால ஹம்ஸமானது மந்தரமலையை எங்கேயாவது தாங்கக்கூடிய சக்தி யுள்ளதா?" (1376)

"சரி, இங்கு கூடியவர்களில் அந்த விஸ்வாமித்திரமுனிக்கு ஞானம் உண்டாக்குவதற்கு முடியாமற் போனாலும், பரவாயில்லை. நம் ஜனக மஹாராஜர் மிக்க அறிவாளியாச்சுதே, அவரைவிட்டு விஸ்வாமித்திரருக்கு இங்கிதங்கள் மூலம் சொல்லச் சொல்லலாம். ஆனால் எனக்கு ஒன்று தோன்றுகிறது. "இந்த ராஜாவுக்குக் கூட விவேகம் மழுங்கிவிட்டது. என் சகிகளே, விதியினுடைய கதியை யாரால் அறியமுடியும்? பிரும்மா என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாரோ," என்ற வருத்தத்துடன் சொல்லிவிட்டு பேசாமல் இருந்தாள். அந்த சமயம் சகிகளுள் ரொம்ப கெட்டிக்காரி ஒருத்தி ஸ்ரீராமனுடைய மஹத்துவங்களைத் தெரிந்த மஹாபாக்யவதி, அழகானதும் கோமளமான குரலில் சொல்ல ஆரம்பித்தாள். "ஹே ராணி, பெரிய தேஜஸ் வாய்ந்த மஹா வீரனைப்பார்த்து, சிறிய மூர்த்தியாக இருப்பதால், தாங்கள் "ராமன் ஒரு சாதாரண மனுஷன்" என்று நினைத்துக் கொண்டு, சொல்லாதீர்கள். (1377)

[தியானம்

ஹே, தயாநிதே, நாராயணா, மஹாவிஷ்ணு, ஹரிவல்லபே, நாராயணப்ரியே, மஹாவிபூதே, உனது வீர்யத்தினால் சந்திரன் சூர்யன், தாராக் கணங்கள், சமுத்திரம், பூமி, ஆகாசம் யாவும் அவரவர்களின் ஸ்தானங்களில் நிறுத்தப்பட்டிருக்கிறார்கள். ஹே ஸ்வாமி, "பீஷணும் பீஷணும்" என்று சொல்லப்படும் ரௌத்ர மூர்த்தியே, திரியம்பகரே, ஜகதாதாரா, ஹே மாதவ, உன்னதமான சீதையைக் குறித்து வில் ஒடிப்பவரே, யக்ஞ புருஷா, யக்ஞேசா, லக்ஷ்மணன் முதலிய சகோதரர்களுடன் கூடிய ஸ்ரீராமா, என்னைப் போன்ற தியாகராஜ யோக ஹ்ருதயத் தைப் படைத்த ஸாது ஜனங்களின் பரமாகதியே, பரமாத்புத

மான காரியங்களைச் சாதித்தவரே, காதியாக ஸம்ரக்ஷண, ஜகத்
வ்யாப்தா, ஹரவிரிஞ்சாதிகளால் சேவிக்கப்படும் மஹாத்மா,
ஆஞ்சநேயர், சுகர், ஸனகர், நாரதர் போன்ற ஸஜ்ஜனங்களால்
சேவிக்கப்படும் ஆதிபுருஷா, மாதுர்யமானதும் ஸுஸ்வரங்க
ளோடும் கூடின கீர்த்தனங்களால் தியாகராஜர் போன்ற
மஹாத்மாக்களால் பாடப்படும் வைபவங்களைக் கொண்டவரே,
இந்திரன், அக்னி, சூரியன், இந்திராணி, ஆகியவர்கள் எவ்விதம்
காமக்ரோதங்கள் அற்றவர்களாயும் பிராம்மண போஜனவிரதங்
களையும், பிராம்மணர்கள், பசுக்கள், ஆகியவர்களைக் காப்பாற்று
வதைப்போல வ்ரதம் கொண்டவரே, வாக்குக்களாலும், மனோ
அனுகூலங்களாலும், செய்கைகளாலும், இந்திரன் உமையை
உபாஸிப்பது என்பதாகிய தர்மங்களின் சிறந்தவைகளால்
எப்போதும் உன்னையே நினைத்து ஆராதிக்கிறார்கள். ஹே
ராகவ, ஸர்வோத்தமா, ஸ்வபிரகாசா, ரமணீயமான சீதையுடன்
கூட விருக்கும் மாப்பிள்ளை ராமா, என் அக்ஞானத்தைப்போக்கி,
நீ என் மீதுள்ள கோபத்தை விட்டு, என் பாபங்களைப் போக்கி,
உன்னையே நம்பியிருக்கும் அனாதரவான என்னை உங்கள்
கடாக்ஷத்தினால் அருள் செய்யமாட்டாயா? நீங்கள்தான் எனக்கு
தஞ்சம். நீ இல்லாமல் எனக்கு வாழ்வு எப்படி அப்பா? என்
குலதனம் ஜீவனம் எல்லாம் நீதானே. சண்ட சூர்யன்
பனிக்கூட்டங்களுக்கு இருப்பது போல என் துக்கங்களைப்
போக்கு.]

"கும்பத்திலிருந்து (குடத்திலிருந்து) ஸம்பவித்தவரும்
லோபாமுத்ரையின் கணவருமான அகஸ்திய மாமுனி உருவத்
தில் சிறியவர்தான். அபாரமான மஹோததிகளின் வீர்யங்கள்
எங்கே? அப்பேற்பட்ட மஹாத்மாவாகிய அகஸ்தியரால் தேவர்
களின் நன்மைக்காக சகல சமுத்திர ஜலங்களும் அவருடைய
வீர்யத்தினால் வற்றி அழிக்கப்பட்டன. அதனால் ஏற்பட்ட
சுயசஸ் (மங்காத புகழ்) இந்த உலகங்களில் இன்றும் விளங்கு
கிறது. ரவிமண்டலமானது பார்ப்பதற்கு சிறியதாகத்தான்
இருக்கிறது. ஆனால் ஆயிரம் கிரணங்களுடன் கூடிய சூரியன்
உதையமாகிற பொழுது மூன்று புவனங்களிலும் இருக்கும்
அடர்ந்த இருட்டானது ஓடிப்போய் விடுகிறது அல்லவா?"
(1378)

"பிரும்மா, விஷ்ணு, சிவன் ஸகல தேவதைகளும் மந்திரங்
களினால் வசப்படுகிறார்கள். அப்பேற்பட்ட மந்திரமானது
அத்யந்த சிறிய ரூபத்துடன் விளங்குகிறது. அதுமாதிரி மஹா

மதம் படைத்த ஒரு பெரிய கஜராஜன் மிக்கச் சிறியதான அங்குசத்தினால் வசப்படுத்தப்படுகிறான்" (1379)

"மன்மதன் மிருதுவான புஷ்ப பாணங்களால் ஸமஸ்த புவனங்களையும் தன் வசமாக்கிக் கொள்கிறான். இவ்விதமாக நீங்கள் புரிந்துகொண்டு, உங்கள் சந்தேகங்களை தூர விலக்கி விடுங்கள். ஹே ராணி, என்னைக் கேளுங்கள். இந்த வில்லை ஸ்ரீராமன் கட்டாயம் ஒடித்து விடுவார்" (1380)

தன்னுடைய பிரியமான தோழிகளின் வசனங்களைக் கேட்டு, ஜானகியின் தாயார் பரமப்ரீதியுடன் ஸ்ரீராமனுடைய காரிய சாமர்த்தியத்தில் நம்பிக்கை வைத்தவளாக, ப்ரீதியை அடைந்தாள். தன்னுடைய அக்ஞானமாகிய சந்தேகங்களையும் அழித்து, ஸ்ரீராமனிடம் தன் ப்ரீதியையும் அன்பையும் அதிகரித்துக் கொண்டாள். அப்பேற்பட்ட அத்புதமான வேளையில் வைதேஹி ஸ்ரீராமனைப் பார்த்து கடாக்ஷித்தாள். தன்னுடைய ஸ்வபாவமான பயந்த கண்களுடன், புஷ்கராக்ஷ கண்களுடன், ஹ்ருதய தாபத்தினால் ராமனை நினைத்து வாடும் ஸ்வபாவங்களோடு, மானிடப் பெண்போல தன் நல்ல காலத்தை எதிர்பார்க்கும் அவள் ஒவ்வொரு நிமிஷமும் ஸகல தேவதைகளின் ஸ்வரூபமான நாராயணரை வேண்டினாள். (1381)

தன் மனத்தில் வியாகுலத்துடனும் சஞ்சலத்துடனும் தனக்குள் சொல்லுகிறவளாகவும், ஆதி தம்பதிகளும், கருணை உள்ளம் படைத்தவர்களும், [நரசிம்மனைத் தொழும் பக்தர்களான] மஹேச பவானி இவர்களை நினைத்து, "ஹே, மஹேசா, பவானி என்னிடம் பிரஸன்னமடையுங்கள். நான் உங்களைப் பற்றி இருப்பவள். என் மனோரதங்களைப் பூர்த்தி செய்யுங்கள். என்னிடம் கருணைகூர்ந்து, ஸ்நேக பாவத்துடன் கூடியவர்களாக இந்த வில்லை ராமனுக்கு மிக்க பாரமின்றி லேசாக செய்து விடுங்கள்." (1382)

"ஹே கணேசா, கணநாயகா, பக்தர்களின் இஷ்டங்களைப் பூர்த்திபண்ணும் வரதாயகா, நான் உனக்கு செய்திருக்கிற ஆராதனங்கள் எல்லாம் இன்றைக்காகத்தான், (இந்த நாளுக்குத்தான்). இவ்விதம் அடிக்கடி, விதவிதமாக, வினயத்துடன் வேண்டிக்கொள்ளும் எனக்காக இந்த தனுஷ்ஷுனுடைய பாரத்தைப் போக்கி, அதிலேசாகப் பண்ணிவிடு," என்று வேண்டிக் கொண்டாள். (1383)

[தியானம்

ஹே ராமா, சீதா, நாராயணு, பாரப்ருத், பூதப்ருத், விஸ்வப்ருத், சரீரப்ருத், ப்ராணப்ருத், மஹிதரா, விஸ்வபுக், விஸ்வத்ருத் ஆகிய அடைச்சொற்களைக்கொண்ட மஹேஸ்வரா, அன்ருெருநாள் தவம் செய்துகொண்டிருந்த உபரிசரிஸ் மஹரிஷி இந்திரனுக வேஷம் கொண்ட பரமசிவனிடம், பரமசிவனுடைய காரணத்வத்தை விளக்கிச் சொன்ன ஞானமும், அவருடைய திடமான புத்தியுடனும் மனத்துடனும் செய்யப்படும் பக்தியுடனும் உன்னைப் பூஜிக்கிறேன். மஹாதேவா, தர்மஸம்வர்த்தினி, சர்மதாயகி, என்னுடைய அம்பா, கீரவாணி, ஶர்வரி, அகண்ட முத்ராகாரி, பர்வத ராஜகுமாரி, விருஷபத்வஜரே, ஸ்ரீகர்ப்பரே, கௌரி, துஷ்கர்மங்களைப் போக்கிடும் சண்டசூர்யனே, நிர்மலமான ஹ்ருதயத்துடன் தியாகராஜரால் பூஜிக்கப்படும் மஹாத்மாவே, ஓம்காரி, தரித்திர துக்க பயங்களைப் போக்கிடும் துர்க்காதேவி, எனது தோஷங்களையும் பயங்களையும் பீதிகளையும் ஆபத்துக்களைப் போக்கிடும் ஆஸ்ரிதவாத்ஸல்யரே, தேக மனோ ரோகங்களைப் போக்கிடும் அஸ்வினி குமாரர்களின் ஆத்மாவே, பந்தங்களைப் போக்கிடும் விருஷபத்வஜரே, ஸ்ரீராமா, ஜானகி ஸமதே ராமா, ஆஞ்சநேயர் உபாஸிக்கும் ஸ்ரீராமா, என்னை நீதான் காப்பாற்றவேண்டும். அதில் ஏதாவது சந்தேகம் இருக்கிறதாப்பா? ருத்ரப்ரியா, உமை பிரியரே, நாரதப் பிரியரே, ஆஞ்சநேயப் பிரியரே, தியாகராஜ ஹ்ருதயவாரியினுல் பொழியப்படும் கருணை உள்ளமுள்ள ஸ்ரீராமா, தசரத ராமா, ஜானகி ராமா, சீதாராமா, அயோத்யா ராமா, ரகுகுல ராமா, ரக்ஷி, ரக்ஷி.]

ஸ்ரீரகுநாதனுடைய ஸ்வரூபத்தைப் பார்த்தாள். சீதை மீண்டும் அவரையே பார்ப்பவளாகி, மனத்தில் தைர்யமடைந்து, தன் இஷ்ட தேவதைகளை மீண்டும் நினைத்து, அவரையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய அழகு லக்ஷணங்கள் பொருந்திய லோசனங்களில் பிரேமை நிரம்பினவளாக அம்ருதமயமான அன்பு ஜலங்களை தன் உடம்பு பூராகவும் நனைத்துக் கொண்டவளாக புளகாங்கிதமடைந்தாள். (1384)

அந்த தாமரை இதழ்கள் போன்ற சீதையின் நயனங்களால் அம்ருதமயமான அன்புக் கண்ணீருடன் சீதை மீண்டும் மீண்டும் அதேசமயம் தர்மஸ்வரூபமான பிதாவின் விரதத்தையும் நினைத்தவளாகவும், சீதை மனத்தில் சங்கடப்பட்டுக்கொண்டு தனக்குள் சொல்லிக் கொண்டாள். "என்ன கஷ்டம். என் பிதாவினுல் மிக்க கடினமான விரதம் செய்யப்பட்டிருக்கிறது." ஸ்ரீராம

னுடைய ஸ்வரூபலாவண்யங்களைப் பார்த்துப் பார்த்து திகட்டாமல் மீண்டும் மீண்டும் பார்ப்பவளாகவுமிருந்தாள். "அவருக்கு லாபத்தை ஹானி செய்யும் இந்த விரதமானது ஏன் அவருடைய மனத்தை மாற்றவில்லை?" (ஒரு லாபமும் இல்லாத விரதத்தை ஏன் முன்யோசனையால் என் பிதாவானவர் விடமாட்டேன்கிறார்" என்று அவள் யோசனை செய்தாள்.) (1385)

"மந்திரிகளோ ரொம்ப பயப்படுகிறார்கள். அதனால் அவர்கள் யாவரும் அவருக்கு புத்திமதி சொல்லுகிறார்களில்லை. பண்டிதர்களின் கூட்டத்தில் இந்தமாதிரி பயத்தினால் புத்திமதிகள் சொல்லாமலிருப்பது ரொம்ப அனுசிதமானது. இங்கே கூடியிருக்கும் வித்வான்களின் கூட்டங்களுக்கு அழகில்லை. ஒரு பக்கம் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கும் மேற்பட்ட கடோரமான சிவதனுஷ். மற்றொரு பக்கம் இந்த ராமனைப் பார்த்தால் ஸ்யாமள, கோமளசரீரம் படைத்த அழகிய வாலிப ராஜகுமாரன்." (1386)

"ஹே பிரும்மாவே, என்னுடைய ஹ்ருதயம் எந்தவழியில் தைர்யத்தை அடையும்? ஸிரஸ்புஷ்பமானது (வெள்ளையாகவும் வாஸனையாகவுள்ள மல்லிகைப்பூ) ஒரு பெரிய வயிரத்தை துளைக்கமுடியுமா? வித்வான்கள் அடங்கிய இந்த சபைக்கு புத்தி மழுங்கிவிட்டதா? ஹே மஹேஸ்வரருடைய வில்லே, நீதான் எனக்கு கதி." (1387)

"உன்னுடைய நிஜமான பாரத்தை இங்கு கூடியிருக்கும் ஜனங்களின்மேல் வை. என் பிரியமான ரகுபதியைக் கண்டு, நீ லேசாக அவரிடம் அன்புடன் தாவிச் செல்." இவ்விதமாக மனத்திற்குள் புலம்பிக்கொண்டிருக்கும் சீதை அதிபரிதாபமான ஸந்தாபங்களைச் சொல்லிக்கொண்டும், நினைத்துக்கொண்டும் துக்கப்பட்டுக்கொண்டுமிருந்தாள். ஒவ்வொரு நிமிஷத்தையும் ஒரு யுகம் மாதிரி அவள் சமயத்தைப் போக்கிக்கொண்டிருந்தாள். (1388)

பிரபு ஸ்ரீராமச்சந்திரனை மீண்டும் மீண்டும் பார்க்கிறவளாகவும் பிறகு பூமியைப் பார்ப்பவளாகவும், சீதாதேவியானவள், தன் தாமரைப் பூப்போல விரிந்து அழகாயிருக்கும் கண்களில், கண்ணீர்களால் நிரம்ப, சஞ்சல மனத்துடன் இருந்தாள். அவளுடைய சுந்தர வதனத்தில் இரு அழகான லோசனங்கள் மன்மதனுடைய மீன்குஞ்சுகள் சந்திரமண்டலம் என்கிற அம்ருத வட்டத்தில் உல்லாஸமாக மனோ இச்சையுடன் ஊஞ்சல் ஆடுவது போல விருந்தன. (1389)

தியானம்]

அம்மா, பிரும்மாணி, வாக்குக்குநாயகி, எவ்விதம் குரலும் வாக்கும், வாக்கும் மனமும், வாக்கும் அர்த்தமும், வாக்கும் பிராணனும், வாக்கும் இனிமையும் சேர்ந்து இருக்கிறதோ, அது போல திவ்ய தம்பதிகளாக நாராயணரும் மஹாலக்ஷ்மியும், உமையும் சங்கரரும், பிரும்மாவும் நீயும் இருக்கிருய். தேவி, ஜபமாலையை உடையவளே, வீணு புஸ்தகதாரிணியாகவும், கமண்டலத்துடனும் சதா நீ பரபிரும்மத்தை நினைத்து, வேதங் களை சப்த பிரும்மமாக்கி, எல்லா சாது ஜனங்களையும், பகவானை யும் ஆனந்திக்கிருய். சங்கரரும், உமையும் ராமனைப் பற்றிப் பாடும் சமயத்தில் நாத பிரும்மமாக உருவெடுக்கிருய். பகவானும் சீதையும் சேர்ந்திருக்கிற சமயத்தில் நீ எல்லோரையும் சந்தோ ஷித்து, பாடவைத்து, நாட்டியம் ஆடி, ரிஷிகளையும் உன் ஸ்வரூபமான ஸ்துதிகளால் கிருதக்ருத்யர்களாக ஆக்குகிருய். தாயே, பரதேவதை, கோதண்டபாணியான ராமனுடைய ஸ்வரூபத்தைப் பார்த்து, மோஹத்தாலும், வெட்கத்தாலும் விகஸித்த சீதை கவிதைகளின் எல்லையில்லாத உன் ஆனந்த ஸ்வரூபத்தை பரிமளித்து வீசுகிருள். எல்லோரையும் போக மோக்ஷ அம்ருதமயமான உலகங்களுக்கு அழைத்துப்போய் எல்லையில்லாத `கேவலமான பரமசுகத்தை அளிக்கிருள். நீயும் குஹப் பெருமானும் சேர்ந்து அகஸ்தியர் மூலமாக இனிமையான தமிழையும் முனிவர்களுடனும் தேவர்களுடனும் சேர்ந்து சிந்த னைக் கடலுக்கு ஆழம்போன்ற விசாலமான தமிழ் ஸம்ஸ்கிருத பாஷைகளை உண்டுபண்ணுகிருய். அம்மா, கவிகளும் மனிதர்களும் உன் அருளைப்பெற்று, சிறந்த வாக்குக்களால் பகவானைத் துதிக் கிருர்கள். ஹே காயத்ரி, சாவித்திரி, சரஸ்வதி, உன்னுடைய விசாலமான கீர்த்தி விலாஸங்களை யாரால் வர்ணிக்கமுடியும்? காலவரையின்றி ஆதி அந்தமில்லாத உன் வாக் ஸ்வரூபத்தை நான் பஜித்து என் ஆத்மாவை சீதாராமனிடம் அர்ப்பணம் பண்ணுகிறேன். காடோபகூடமான நீயும் உன் ஸ்வாமியாகிற பிரும்மாவும் அம்புஜோத்பவனும், சதுரானனும், எனக்கு சதா கிருபையுடன் அனுக்ரஹிக்க வேண்டும்.]

சீதையினுடைய வாக்கு ரூபமான வண்டு அவளுடைய சுந்தரவதனமாகிய தாமரை புஷ்பத்தில் சிறைப்பட்டு அடைபடு வது போல உள் ஆனந்தம் மேலிட்டு, கண்டத்திலிருந்து வெளி வராமல் தவித்தது. லஜ்ஜையினுல் வெளிவர மறுத்து, ஒரு வண்டு ராத்திரியைக் கண்டு தடைபடுவதுபோல அவளுடைய

வாக்குக்கள் வெளிவரவில்லை. அவளுடைய கண்களின் ஓரங்களிலிருந்து நீர்த்துளிகள் ததும்பிக்கொண்டு, உள் ஆனந்தத்தையும், வாக்குக்களில் தடைபட்டதான வருத்தத்தையும் விவரித்துச் சொல்லும்படி விளங்கின. ஒரு மஹா கிருபணனுடைய கையில் பரம பொக்கிஷமான தங்கக் கட்டிகள் எவ்விதம் சிறைபட்டு கிடக்குமோ, அதுபோல தேக்குண்டு இருந்தன. (1390)

தன்னுடைய வியாகுலத்தை மஹா விவேகியான ஜானகி அறிந்துகொண்டாள். மிக்க தைர்யத்துடன் தன் ஹ்ருதயத்தை மஹா விஸ்வாசம் என்கிற ஸ்ரீராம பக்தியில் ஒருமைப்படுத்தி, ஏகாக்ர சித்தத்துடன் என் தேகம், மனம், வசனங்கள் இவைகளால் தரிக்கப்படும் என் பிராணனை நிச்சயமாக ஸ்ரீரகுபதியினுடைய ஸரோஜ பதங்களில் என்னுடைய அனுகூலமான சித்தத்தை அர்ப்பித்துவிடுவேன். (1391)

ஸர்வ சாக்ஷியான பகவான் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் அந்தர்யாமி யாகவிருந்துகொண்டு, எல்லோரையும் உள்ளும் வெளியிலும் ஆட்சி செய்பவன். அப்பேற்பட்ட பகவான் எனக்கு ஸ்ரீரகுகுலத்தில் மிக்க ஸ்ரேஷ்டமான ஸ்ரீராமச்சந்திரனுக்கு தாஸ்யம் செய்வதற்கு (அவருக்கு பதிசேவை செய்வதற்கு) அவஸ்யம் அனுக்ரஹம் பண்ணுவார். அவருக்குத் தெரியும். என்னுடைய ஸ்நேகமானது பழமையானதும் பரம பிரேமையுள்ளதும், காடோபகூடமான ஸ்நேகம். உலகில் சொல்லுவார்கள்; எதற்கு எந்த ஸ்நேகமானது ஸத்யமான ஸ்நேகமாகவிருக்குமோ அந்த ஸ்நேகம் அதற்கு கிடைத்துவிடுகிறது. இதிலே ஒருவிதமான ஸந்தேகமும் இல்லை. (1392)

இவ்விதமான ராமஸங்கீர்த்தனம் என்கிற ஸ்நேகத்தால் கட்டப்பட்டு, சீதையானவள் மீண்டும் பிரபு ஸ்ரீராமச்சந்திரனைப் பார்த்து, அதிவாத்ஸல்யத்தினுலும் பூர்வ சேர்க்கையான திவ்ய தம்பதிகளின் வாசனையினுலும், "(பகவானைவிட்டுப் பிரியகில்லேன், அலர்மேல் மங்கை உறை மார்பா என்கிற சொல்லுக்கு அர்த்த பிரதிபாத்யமாகவும், ஹரி என்கிற பகவானுக்கு நித்யமாக வக்ஷஸ்தலத்தில் காடோபகூடமாக நித்ய வாசம் பண்ணுகிற மஹாலக்ஷ்மியின் அவதாரிகையான) சீதாதேவி, வைதேஹி, ஒரு சிறு பெண்ணுகிய பாலை ரூபத்தில் தன் சரீரத்தையும் மனத்தையும் பிரேமை ஸ்வரூபமாகிய ஸ்ரீராமனுக்கு அர்ப்பித்துவிட்டாள். (प्रेमजनटाना தன் சரீரம் அவனுக்கே சொந்தம். அவனன்றி இது நாசமடைந்தாலும் பரவாயில்லை என்கிற தீர்மானத்துடன்,

தன்னையே சமர்ப்பித்துக்கொண்டாள்.) பரம க்ருபாநிதியான ஸ்ரீராமனுக்கு அவள் ஸ்நேக உள்ளத்தைப்பற்றி நன்ருகத் தெரியும். ஸர்வக்ஞனை பகவான் ஸ்ரீராமச்சந்திரன் சீதை படும் அவஸ்தைகளையும், பரம பிரேமையுடன் நிறைந்து வழியும் சுந்தரவதனத்தையும் அவள் கண்களையும் கண்டு, மீண்டும் தன் பார்வையை அந்த வில்லின் பக்கம் திருப்பினர். அந்த பார்வை எவ்விதம் இருந்தது தெரியுமா? மஹா கருடன் ஒரு சிறிய பாம்பைப் பார்ப்பதுபோலவிருந்தது! (1393)

இங்கே லக்ஷ்மணன் ரகுவம்ச சிகாமணியான ஸ்ரீராமன் பரமசிவனுடைய கோதண்டத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் சமயம், அவனுடைய சரீரம் ஆனந்தத்தால் புளகாங்கித மடைந்து சகல பிரும்மாண்டங்களையும் தன்னுடைய சிறந்த பாதங்களால் உதைத்தபடியாக, ஆனந்தத்தால் பொங்கிவரும் வார்த்தைகளை அந்த சபை கிடுகிடுக்கும்படி உரக்கப்பேசினன். (1394)

[தியானம்

ஹே பத்மாக்ஷி, பத்மஸம்பவை, நீ ஸர்வலோகத்திற்கு மாதா, தேவ தேவனுகிய நாராயணர், ஸர்வ பூதங்களும் நமஸ்காரம் செய்யும் பிரபிதாமஹரும் ஜகந்நாதரும், எனக்கு பிதாவும் ஆவீர்கள். பத்மகந்தை பிதவாஸனை உள்ள நீங்கள் இருவர்களும் ஆயிரமங்கள நாமங்களை உடையவர்கள். ஹே நீலாயதாக்ஷி, மோஹனராமா, வேதத்தில் முதல் ஒருவன் எவனே, அவர்களே நீங்கள். அன்றொரு நாள் நாரதரும், ஏகதர், த்விதர், திரிதரும் கண்ட ஏகாத்ம ஸ்வரூபமும், அயோநிஜரும், விஷ்ணுவினுடைய அனபாயினி என்றும், தேவதேவரு மாகிய உங்களைத்தானே கண்டார்கள். உங்களை பரமாத்மா வென்று முதலில் திசைகளும் கண்டு எல்லோருக்கும் அறிவித்து, இந்திரனும் அதை உடனே கண்டுகொண்டான். ஹே ஸர்வாத்மன், ஸர்வ அந்தர்யாமி, ஸர்வ விபூதே, த்ரைலோக்ய ஆஸ்ரித வத்ஸலா, உங்களுடைய திருவிளையாடல்களும் அவைகளுக்கு ஏற்க உங்கள் அவதார விசேஷங்களையும் யாரால் சொல்லித் தீர்க்கமுடியும்? அப்பேற்பட்ட ஒவ்வொரு திவ்ய அவதாரங் களுக்கு ஏற்ப மஹாலக்ஷ்மியாகிய நீயும், அனபாயினி என்கிற குறிக்கோளால் உன் பிரியரான நாராயணரின் கருத்துக்கு ஏற்ப அவதாரங்களை எடுக்கிருய். ஹே சங்குசக்ரகதாதரா, ஸ்ரீவத்ஸ சின்ன, ப்ருகு மஹரிஷியின் பாதத்தை உடைய மஹா கிருபாளு,

ஹரிவக்ஷஸ்தலத்தில் தங்கரேகைபோல வீற்றிருக்கும் லக்ஷ்மி தேவியே, வேத மண்டலத்தில் நடுநாயகமாக வீற்றிருக்கும் காயத்ரியே, உங்களையே ஸ்ருதிகள் கானம் செய்கின்றன. எல்லோருடைய பாபங்களைப் போக்கி, மஹானுக்ரஹம் செய்யும் பரம தயாளா, உங்களுடைய விஸ்வவிலாஸங்களையும், காம விலாஸங்களையும் ஹ்ருதி வேத்யனுன உன்னை என்னுலோ, என் நாயகியான வாணி லக்ஷ்மியினுலோ, என் ஞானம், விக்ஞான மாகிற வேதங்கள், சப்தபிரும்மங்கள் அனுமானங்களுடன் கூடிய அறிவினுல்கூட அறியமுடிகிறதில்லை. நித்ய ஆனந்த முள்ளவரும், பரிபூர்ணரும் ஸர்வஸஹாயரும் பரமாராத்யம் என்றும், மஹா ஆராதனைகளால் அன்புடன் தனஞ்ஜயர் என்று ஆஞ்சநேயர் போன்ற மஹாத்மாக்களால் ஆராதிக்கப்படுகிற வரும், யக்ஞபதியும், ஜகத்பதியுமாகிற உங்களை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். காரணம், காரியம் இவைகளுக்கு எட்டாத எந்த மூலப்பொருளோ, மஹத் முதலிய விகாரங்களுக்கு மேற்பட்ட பரத்துக்கும் பரமான ஹரிபகவானே, மஹாலக்ஷ்மி, தாயே, ஆதிசக்தியே, பரதேவதையே, தத்விஷ்ணோః பரம் என்று யோகிகள் அறிகிறுர்களோ, அப்பேற்பட்ட பிரபுவான உங்களை ஸாக்ருத பிரணமம் செய்து, உங்கள் கருணையை வேண்டுகிறேன். நீங்கள் ஆதி தம்பதிகள். ஒவ்வொரு அவதாரத்திலும் ஒரே கருத்தோடு வாழும் உங்களுடைய மனம் இரண்டில்லாமல் ஒன்றேயாகி, நீங்கள் இருவர்களும் ஒன்றரக் கலந்து சகலலோகங்களையும் தரிக்கிறீர்கள். தயாநிதே, வீரம் ஸ்ருங்காரம் கருணை போன்ற ரஸங்களுடன் எங்களையும் அனுக்ரஹிக்கவேண்டும்.]

"ஹே திக்கஜங்களே, ஆமை வடிவம்கொண்டு சகல லோகங்களையும் மந்திரமலையையும் தாங்கும் ஸர்வ ஆதாரமே, சேஷ பகவானே, மாதவி என்கிற பூமிதேவியை தன்னுடைய ஏகஸ்ருங்கத்தினுல் தாங்கின வராஹமூர்த்தியே, மிக்க தீரத் துடன் இந்த பூமியை இறுக்கிப்பிடித்துக்கொள்ளுங்கள். அவ் விதம் உடனே செய்யாதபோனுல் பூமி அதிர்ந்து, தன் இடத்தை விட்டு பெயர்ந்துவிடும. என் பிரபுவான ஸ்ரீராமன், பகவான் சங்கரருடைய தனுஷ்ஷை ஒடிக்க விரும்புகிறுர். என்னுடைய கட்டளையைக் கேட்டு, நீங்கள் எல்லோரும் ஜாக்ரதையாக விருங்கள்." (1395)

ஜயசீலரான ஸ்ரீராமச்சந்திரன் எந்த சமயம் அந்த மஹா வில்லின் சமீபம் வந்து அடைந்தாரோ, அந்த மஹா உத்தம

மான வேளையில் ஸகல ஸ்திரிபுருஷர்கள் யாவரும் தங்கள் இஷ்ட தேவதைகளை வேண்டி தங்களுடைய சுக்ருதங்களை நினைத்துக் கொண்டார்கள். அவர்களுடைய ஸந்தேகங்கள் அக்ஞானங்கள் யாவும், மந்த புத்தியுள்ள ராஜகுமாரர்களின் அபிமானங்கள் யாவும், (1396)

"கண்ட பரசு என்கிற கோடாலியைத் தரித்து க்ஷத்திரிய வம்சத்தை தன் பிதாவுக்காக அழித்த மஹாவீரமுள்ள பிருகு குலபதியான பரசுராமரின் கர்வத்தை ஒழித்துக்கட்டுவதும், அவருடைய தேஜஸ்ஸுகளையும் பங்கப்படுத்துவதுமான அதி தேஜஸ்வாய்ந்ததும், தேவதைகள், ஸர்வ ஸ்ரேஷ்டமான முனிக ளுடைய பயங்களைப் போக்குவதாகவும், லோகமாதாவான சீதையின் துக்கங்களை நாசப்படுத்துவதும் தர்மாத்மாவான ஜனகருக்கு பச்சாத்தாபங்களை அகற்றி மஹா ஆனந்தத்தைத் தருவதும், அவருடைய ராணிகளுக்கு பொறுக்க முடியாத துக்கங்களைப் போக்குவதும், (1397)

ஆகிய இவையெல்லாம் பரமேஸ்வரனுடைய வில்ரூபமாக விருந்தது. ஒரு பெரிய ஓடத்தில் எல்லோரும் கும்பலாக உட்கார்ந்துகொண்டு ஸம்சாரம் என்கிற சமுத்திரத்தில் சென்று கொண்டிருந்தார்கள். அப்பேற்பட்டவர்கள் ஸ்ரீராமனுடைய பாஹுபலத்தினால், விசாலமானதும் அபாரமான ஆழங்கள் உள்ளதும், அதிக ஆபத்துக்கள் கொண்டதுமான மஹோததி களைக் கடக்கவிரும்பினார்கள். ஆனால் அவர்களை அக்கரை சேர்ப்பதற்கு ஒரு ஓடக்காரன்கூட அகப்படவில்லை. (1398)

பகவான் ஸ்ரீராமச்சந்திரன் அந்த இடத்தில் அவர்களைக் கண்டு அவர்களை மீண்டும் மீண்டும் பார்த்து, சித்திரத்தில் எழுதப்பட்ட ஒரு ஓவியம்போல அவர்கள் நிசப்தமாக விளங்கு வதைக் கண்டார். "கிருபாதாம்" என்று சொல்லப்படும் அந்த ஸ்ரீராமர் மறுபடியும் மஹாலக்ஷ்மி அம்சமான சீதையையும் அவளுடைய விசேஷமான ஆவலையும் விரஹதாபங்களையும் கருத்துக்களையும் அறிந்துகொண்டு, (1399)

நிர்மலமான ஹ்ருதயமுள்ள அந்த வைதேஹியை அடிக்கடி பார்த்து, அவளுடைய ஒவ்வொரு க்ஷணமும் ஒரு யுகமாக அவள் கழிக்கும் ஸ்திதியையும் கண்டு, மீண்டும் தனக்குள் எப்படி தாக வரட்சியினால் மரணம் அடைந்த ஒரு மனிதனுக்கு, அவன் இறந்த பிறகு அம்ருதமயமான குளம் என்ன செய்யமுடியும், செய்யக்கூடும்? என்கிற சிந்தனையால் கவரப்பட்டவராகி, (1400)

[தியானம்

ஹே சிவே, மஹாதேவா, திரிகாலஞரே, மஹேஸ்வரரே, தேவி உமா, சாது, மஹாபாகே, மஹாபாக்யத்தை பக்தர்களுக்கு அளிக்கும் தயாபரி, மார்த்தாண்டபைரவ பரிகாகசக்தி ஸமேதரே, நித்யமங்களமான உங்களை நமஸ்கரித்து சீதாராமனை நான் நமஸ்கரிக்கிறேன். அர்ஜுனன் என்கிற ஜிஷ்ணுவினுலும், அம்பிகை ஸமேத ஸ்கந்தராலும் வணங்கப்பட்ட மூர்த்தியே, வஸுதேவர் தேவகி, ப்ருஸ்னி ஸுதபஸ், காஸ்யபர், அதிதி, தசரதர் கௌஸல்யை, இவர்களுக்குப் பிறந்த பகவானே, நீயோ அனுதி. ஹே கிருஷ்ணரே, உலகங்களை ஸ்ருஷ்டித்த ஈஸ்வரரே, ஆயிர மங்கள நாமங்களை உடையவரே, ஜனுர்த்தனரே, ஜகந்நாதரே, முராரி, கோதண்டபாணியாகிய ராமா, உன்னை சதா பூஜித்து, உன் சரணங்களில் தாஸ்யம் செய்து, சுத்த ஸ்வரூபமாகி, பக்தி வைத்து என் பாவங்களைப் போக்கி, உம்மிடம் என்னை அர்ப்பித்துவிடுகிறேன். யமபயமற்ற உம்முடைய ஸ்தானத்தை அடைய விரும்பும் எனக்கு ஸர்வஸஹேயாக நீங்கள் விருக்கிறீர்கள். அப்பேற்பட்ட உங்களுக்கு நமஸ்காரம். நீங்களே இந்த உலகத்திற்கு காரணமான பிரதானம், புருஷன் ஆகிய நித்ய தம்பதிகளாகவும், சிவசக்தியின் ஐக்யஸ்வரூபமாகவும் விளங்குகிறீர்கள். நாராயண மஹாலக்ஷ்மி அம்சங்களான ஸ்ரீராம சீதை ஆகிய உங்களை எங்களுக்கு ஈஸ்வரராக அறிகிறோம். பாதராயணரான சுகரால் சொல்லப்பட்ட உங்கள் மகிமைகள் பிரதான புருஷஸ்வரூபங்களாகிய உங்களுடையதுதான். யக்ஞவராஹரே, முன்பு மாதவி என்கிற பூமியை உம்முடைய ஏகதந்தத்தால் சமுத்திரத்திலிருந்து தூக்கும்போது, ஒரு கஜராஜன் சேரும் சக்தியும் நிறைந்த ஒரு தாமரைத்தண்டை தூக்குவதுபோல, நீர் அந்த பூமியைத் தூக்கினீர். பின்பு த்ருவிக்ரம அவதாரத்தில் உங்கள் பாதங்களை கழுவின பிரும்ம ஜலத்தினுல் திரிபதகா என்கிற தேவகங்கையை ஸ்ருஷ்டித்து, சிவன் முடியில் வைத்து, அவளை உமைக்குப் பிரியமான சகோதரியாக நிர்ணயித்தாய். உம்மிடம் உள்ள பக்தியினுல் சிவாக்னியில் சுரபியினுடைய நெய்யான அம்ருத தாரையில் எவ்விதம் உமை தன் பக்திப்ரேமையைச் செலுத்தினளோ, அப்பேற்பட்ட ஏகமனபாவத்துடன் முகுந்தனுகிய உங்கள் பாதங்களை நான் வணங்கி, உங்களையே என்னுடைய சிறந்த தனமாக அடைகிறேன். நாரதர், கவி, ஹர்ஷர் ஆகியவர்கள் எவ்விதம் மஹாத்மாவான விதேக ராஜனுகிய நிமிக்கு நாராயண

பதாம்புஜத்தின் பெருமைகளைச் சொன்னரோ, எவ்விதம் ஸமதிருஷ்டியுள்ள பாகவத உத்தமர்கள் அவைகளை மோக்ஷமாகக்கருதி வாழுகின்றனரோ, எவ்விதம் சீதை, ஆஞ்சநேயரால் பார்க்கப்பட்ட சமயம் ராம ஹ்ருதயமாக விளங்கினளோ, அது மாதிரி சீதை ஆஞ்சநேயருடைய அம்ருதமயமான விருத்தாந்தத்தில் ஈடுபட்டவளாய் ராம பராயணமாக விருந்தாளோ, அவ்விதம் நாராயண பராயணனுகவிருக்கும் என்னை தியாகராஜர், வியாஸர், சுகர் அர்ஜுனன், பீஷ்மர், ஆஞ்சநேயர், ஜனகர், வசுதேவர், தேவகி, நந்தன், யசோதை அனுக்ரஹிக்கவேண்டும் ]

எல்லா வயல்களும் உஷ்ணத்தால் மிக்க வரட்சி அடைந்த பின்பு மழை வர்ஷங்களால் யாது லாபம்? சரியான சமயத்தை அறிந்தும், உதவி செய்யாமல் பிற்பாடு பச்சாதாபம் செய்வதால் யாது லாபம் இருக்கக்கூடும்? இவ்விதம் ஜானகி தேவியைக் கண்டு, ராமனுடைய எண்ண அலைகள் வீசின. பிரபு, சுகத்திற்கு இருப்பிடமானவளும் யோக நித்ரையில் துரியாவஸ்தையில் ஆதிசக்தி ஸ்வரூபமாக லயமடைகிறவளுமான தன் தேவியை நினைத்துக்கொண்டு, அந்த மனேபாவத்துடன் சீதையையும் நோக்கி, விசேஷமான பிரேமையினுல் கவரப்பட்டு, புளகாங்கித மடைந்தார். (1401)

மனத்திற்குள் தன்னுடைய குருஸ்ரேஷ்டர்களை நினைத்துக் கொண்டு, அதிலாகவத்தினுல் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் பரமகனமான சிவதனுஷ்ஷை எடுத்தார். எப்போது அவருடைய கைகளில் அந்த தனுஷ் வந்ததோ, அந்த உத்தமமான தனுஷ் தேஜோ மயமான அக்னி, சூரியன், சந்திரன் இவர்களின் அம்சமான மின்னல் மாதிரி பிரகாசித்தது. பிறகு ஆகாச மண்டலாகாரத்தில் அகண்டமான வளைந்த மண்டலாகாரம் போல அந்த வில் தோன்றியது. (1402)

பிரபு அந்த உத்தமமான சிவதனுஷ்ஷை எடுத்தார், கையில் பிடித்துக்கொண்டார், வெகு பலமாக இழுத்தார். அப்புறம் என்ன பண்ணினுர் என்று யாருக்குத் தெரியும்? வில்லை எடுப்பது, நாண் பூட்டுவது, அதை விடுவது ஆகிற மூன்று வேலைகளையும் ஒரு க்ஷணத்தில் அதிலாகவமாக செய்ததைப்பற்றி பூர்ணமாக யாருக்குத் தெரியும்? எல்லோரும் அந்த ஸ்ரீராமனை கோதண்டராமனுக வில்லை இழுப்பதைப் பார்த்தார்கள். எல்லோரும் அதே க்ஷணத்திலே ராமனை தனுஷ்ஷின் மத்தியில் பார்ப்பவர்களாகவும், அதே சமயத்தில் அந்த கோதண்டராமனுல் உத்தமமான வில்லானது இரு

பாகங்களாக ஒடிக்கப்பட்டதாகவும் கண்டார்கள். மிக்க பயங்கர மானதும் கடோரமானதும், மூன்று லோகங்களும் நடுங்கும்படி ஒரு பெரிய த்வனியை உண்டுபண்ணும்படி ஒரு சப்தம் யாவராலும் கேட்கப்பட்டது. (1403)

அந்தசமயம் கோரகடுரமான சப்தம் மூன்று லோகங்களையும் பிளப்பதாயிருந்தது. அந்த சப்தத்தைக் கேட்டதும் சூரிய னுடைய குதிரைகள் அவைகளுடைய மார்க்கங்களிலிருந்து நழு வின. அஷ்டதிக்கஜங்கள் பயத்தினால் பிளிறின. பூமியும் தன் இருப்பிடத்தைவிட்டு சிறிது நகர்ந்தாள். ஆதிசேஷன், வரா ஹம், ஆமை வடிவம் கொண்ட மந்தரமலையின் ஆதாரம் எல்லாம் பீதியினால் அவர்களுடைய இடங்களிலிருந்து எழுப்பப்பட்டார் கள். தேவதைகள், ராக்ஷஸர்கள், முனிஜனங்கள் தங்கள் காது களை கைகளால் பொத்தி வியாகுலமடைந்து இதற்குக் காரணம் யாது? என்று விசாரப்பட்டார்கள். மஹாபாகவத சிரோண்மணி யான துளசிதாஸர் சொல்லுகிறார். "எப்பொழுது எல்லோருக்கும் ஸ்ரீராமச்சந்திரனால் தனுஷ் ஒடிக்கப்பட்டுவிட்டது என்று தெரிந் ததோ, அப்பொழுது, அந்த நல்ல சுபமங்கள வேளையில், "ஸ்ரீசீதாராமனுக்கு ஜயமங்களம்" என்று எல்லா ஜனங்களும் ஜயசப்தங்களால் பகவானையும் சீதாலக்ஷ்மியையும் வாழ்த்தி னார்கள். (1404)

[தியானம்

ஹே தாயே, ஸர்வமங்கள காரிணி, ஜனார்த்தனரே, பில்வ நிலயே, வனமாலி, மஹாபாகவத ஸ்ரேஷ்டரான உத்தவரும் நந்தரும் கோபிகைகளின் பக்தியைக்கண்டு ஆச்சரியப்பட்டு எந்த லக்ஷ்மிதேவி, பிரும்மதேவர், ஆத்மா காமர்களாகிய யோகீஸ்வரர்கள் தங்கள் ஆத்மாவுக்குள் பூஜைசெய்துவரும் நாராயணர் மஹாலக்ஷ்மி, ஆகிய இருவர்களுடைய பாத சரணார விந்தங்களை, ராஸக்ரீடையில் கோபிகைகள் தங்கள் குசங்களில் வைத்துத் தழுவிக்கொண்டார்கள் என்று கண்டார்களோ அப் பேற்பட்ட நந்தர் உத்தவர் ஆகியவர்களை முன்னிட்டு, எங்கள் மனோபாவங்கள் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பாதாம்புஜத்தை நாடிநிற்கட்டும். தேகம் அவரைப்பணிந்து நிற்கட்டும். கர்ம பந்தத்தில் உழலும் எங்களுடைய மங்களகரமான நடக்கைகள் தானங்கள் யாவுமாகிய இவைகளுக்கு ஈஸ்வரனது செயலால் நாராயணருடைய அந்தரங்கமான பூர்ணமய பக்தியே பலனாக ஏற்படட்டும் என்று அமரநாதரும் உமையும் வேண்டினதுமாதிரி

நானும் வேண்டுகிறேன். ஹே காலாதீதா, அப்ஜலோசனு, பத்ம நாபா, ஹிரண்ய வர்ணமுள்ள சீதை, தங்கரேகை போன்ற பரா சக்தி, விஸ்வாத்மன், பின்ன புத்தியாலும் அபின்ன புத்தியாலும் யோகிகளாலும் பார்க்கப்படும் ஸர்வவியாபி, மஹாவிபூதே, விலக்கமுடியாத ஸ்நேகத்தை உடைய முகுந்தராகிய உங்க ளுடைய பதாப்ஜங்களில் நடமாடும் பாகவத உத்தமர்களின் சரண தூள்கள் படிந்த பிருந்தாவனப் புதரின் கொடிகளுள் ஒன் ருயிருப்பாயோ, என்று ஆனந்தத்துடன் வேண்டிய பாகவத ஸ்ரேஷ்டர்களோடு என்னையும் சேர்த்துக்கொள். துருவன், பிரஹ்லாதன், தியாகராஜர், ஆஞ்சநேயர், நாரதர், விஷ்வக் ஸேனர், குபேரன் போன்ற மஹாத்மாக்களும் நரர் போன்ற ரிஷி களும், உத்தவர் போன்ற பக்தர்களும் நாடும் உங்களுடைய சரணுரவிந்தங்களுக்கு நான் செய்யும் ஸகலகாரியங்களும், எண் ணங்களும், இந்திரியங்களின் செய்கைகளும், ஸ்வாபாவிகமான சேஷ்டிதங்களும், கவி, ஹர்ஷர், பிப்லானர் முதலிய மஹாபக்தர் கள் நிமி ராஜாவுக்கு சொல்லியதையும், சுகர் பரிக்ஷித்திற்குச் சொன்னபடியும், நாராயணராகிய உமக்கே அர்ப்பணம். வசுந்தரா, தனதான்யகரி, சீதே எனக்கு அருள் பண்ண வேண்டும்.]

பரமசிவனுடைய தனுஷ் ஒரு பெரிய கப்பல். ஸ்ரீராமச்சந்திர னுடைய புஜங்கள் மஹாசமுத்திரங்கள். இந்த மஹாதனுஷ் ஒடிக்கப்பட்டதினுல், எந்த மஹாராஜாக்கள் மோஹவசத்தினுல் முதலில் பிரயத்னப்பட்டு, தோல்வி அடைந்தார்களோ, அவர் களின் சமூகங்கள் அந்த மஹாசமுத்திரங்களில் மூழ்கிவிட்டார் கள். (1405)

பிரபு ஸ்ரீராமன் அந்தவில்லை இருபாதிகளாக ஒடித்து பூமி யில் போட்டார். அந்த துண்டுகளைக்கண்டு ஸகல ஜனங்களும் பயம்நீங்கி சுகம் அடைந்தார்கள். என் குலநாதராகிய விஸ்வா மித்திரர் எழுந்திருந்தார். அவருடைய பாவனமான ரூபமாகிய பயோநிதியிலிருந்து மிக்க ஆழமான பிரேமை வெள்ளங்கள் பொங்கி எழுந்து தெளிந்து அம்ருதமயமான ஜலங்களாக பிரகா சித்துக்கொண்டு வெளிவந்தன. (1406)

ராமரூபமாகிய பூர்ண சந்திரனைக்கண்டு புளகாங்கிதமான ஆனந்தங்களுடன் அந்த பயோஜல அலைகள் பிரேமையுடன் ஸ்ரீராமச்சந்திரனை தாவி அணைத்து, பெரிய அலைகள் சந்திரனைக் கண்டு வீசி தாவி அணைப்பதுபோல விளங்கின. ஆகாசத்தில் தங்கியிருந்த அப்சரஸ் கூட்டங்கள் கீதங்கள் பாடினுர்கள். தேவ

நாரிகைகள் நாட்டியம் ஆடினர்கள். துந்துபி போன்ற மங்கள வாத்தியங்களை வாசித்தார்கள். (1407)

பிரும்மா முதலிய தேவதைகள், ஸித்தர்கள், முனிஸ்வரர்கள் எல்லையற்ற மகிமைகளைக்கொண்ட பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய புகழ் கீர்த்திகளைப் பாடத்தொடங்கினர்கள். ஜய சப்தங்களுடன் மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். அவர்கள் அநேக வர்ணங்கள் உள்ளதும் மனோஹரமான வாசனையுள்ளதுமான புஷ்பமழைகளை, புஷ்ப வனமாலைகளை, பகவான் பேரிலும் மஹாலக்ஷ்மியான சீதையின் பேரிலும் பொழிந்தார்கள். கின்னரர்கள் அதி மாதுர்யமான ரஸங்கள் நிறைந்த கீதங்களைப் பாடினர்கள். (1408)

சகல பிரும்மாண்டங்களிலும் ஜயஜய ஸ்ரீராமச்சந்திரன், ஜயஜய ஸ்ரீசீதா என்கிற ஜய சப்தங்களின் த்வனிகளால் நிறம்பப்பட்டன. அவைகளுடைய சப்த கோஷங்களினல் முன்பு ஏற்பட்ட தனுஷ் பங்கத்தினல் உண்டான த்வனிகூட மறந்து போய்விட்டது. எங்குபார்த்தாலும் ஸ்திரி புருஷர்களின் ஜனக்கூட்டங்கள் பிரசன்ன மனத்துடன் பெரும் கோலாகல சப்தத்துடன் சந்தோஷத்துடன் ஆரவாரித்தார்கள். "ஸ்ரீராமச்சந்திரன் மிக்க பாரமான சிவதனுஷ்ஷை ஒடித்துவிட்டார்" என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். (1409)

வந்தி, மாகதர்கள், புகழ் விருதாவளிகள் பாடும் ஸூதர்கள் வெகுசாமர்த்தியமாக புகழ்பாட்டுக்களைப் பாடினர்கள். இன்னும் அநேகர்கள் குதிரைகள், யானைகள், பணக்குவியல்கள், ரத்னக்குவியல்கள், வஸ்திரக் குவியல்கள் ஆகிய வெகுமதி காணிக்கைகளை பகவானுக்கு அர்ப்பணம் செய்தார்கள். (1410)

[தியானம்

ஹே மாதவா, கோவர்த்தனகிரிதாரி, நீ கிருஷ்ண அவதாரத்தில் கோபர்களையும் தீனர்களான பசுக்களையும் காப்பாற்ற கோவர்தனமலையை ஏழுநாட்கள் உன் திருக்கரங்களால் கஜராஜன் தாமரைப் பூவை வைத்திருப்பது போலவும், மழையில் உண்டான காளாங்களைப் போலவும் பிடித்து, எரிந்தது போலவும் அசகாயச் சூரத்தனமான காரியத்தைச் செய்து தேவேந்திரனை மயக்கினய். ஆனல் சங்கரனுடைய உண்மையான அனுகரஹத்தினலும் உமையினுடைய பார்வையினலும் சீதையினுடைய கடாக்ஷக் கண்களாலும், விஸ்வாமித்திரருடைய ஆசிர்வாதங்களாலும் நீ வில்லை ஒடித்தாய்.

முன்பு கர்கர், நந்தர், வசுதேவர் கோபாலர்களிடம் சொல்லிய மாதிரி, ராமா, உன்னையும் கிருஷ்ணனைப் போல நாராயணரின் அம்சம் என்று நினைக்கிறேன். ஸாமஜவரகமனு, அண்ட கோதண்டத்தினுல் தண்டபாணியாகிற யமனையும் ஜயிக்கக்கூடிய கோதண்டபாணி, சீதாராம, கந்தர்ப்ப சுந்தர ஆனந்த கந்தா, ஸுப்ரஸன்ன ஸத்வஸ்வரூபா, சுகுண, ஸ்ரீதேவியாகிய சீதை யுடன் சேர்ந்து பகவானுகிய நீர் பெரும் குணம், கீர்த்திகள், மகிமைகள் பெற்றவராக விளங்கப்போகிறீர். என் குருநாதர் களான பராசரர் மைத்ரேயருக்குச் சொன்னபடி. ஸம்க்ஷேபத்தில் தேவ, திர்யக் மனுஷ்ய ஆதி ஸ்ருஷ்டிகளில் புருஷ ஸ்வரூபமாக ஹரிபகவானுகிய நீரும், ஸ்ரீலக்ஷ்மி தேவியான சீதை ஸ்திரி ரூபமாகவும் விளங்குகிறீர்கள். ஹே கோவிந்தா, நீர் ஸாம ஸவரூபம்; சீதை உத்கீதம்; நீர் சூரியன், அவள் பிரபை; நீர் அக்னி அவள் ஸ்வாஹாதேவி; நீர் பித்ருகணம்; அவள் ஸ்வதா; நீர் சமுத்திரம் அவள் அதன் அலைகள்; நீர் சந்தோஷம் அவள் நித்ய துஷ்டி; நீர் சங்கரர் சீதை கௌரி; எவ்விதமாக உபரிசரிஸ் மஹாரிஷி சங்கரனையும் உமையையும் நினைத்தாரோ, அதுபோல பராசரர் மைத்ரேயர், என் ஆசாரியர் கள் எவ்விதம் ஜகத் மங்களகாரண காமியங்களாக உங்களை அனுபாயினி என்றும் அயோநிஜர் என்றும் நினைத்தார்களோ, அவ்விதம் உங்களை நான் நினைத்து, பக்தி பண்ணி, பிரபன்னனுக வந்து அடைந்து, என் பாவங்கள் ஒழிந்து, என் கர்வங்கள் போய் ராஜராஜேஸ்வரி, ராஜகோபாலனிடம் பசுக்கள் வந்து அடைகிறது போல, உங்கள் சரணத்தை வேண்டி வந்திருக்கிறேன். நீங்கள்தான் ஆஞ்சநேயர் அனுக்ரஹத்தால் கிருபை செய்யவேண்டும். சிவகரி, ஸதி, விஷ்ணுவே, நாராயணு, நவதுர்க்கே, மஹாகாளி, பிரும்மா ஹரர்களால் சேவிக்கப்படும் ராமா, புவனேஸ்வரராமா, ஸ்ரீராமா.]

ஜய ஜால்ராக்கள், மிருதங்கள், சங்கத்வனிகள், ஸஹ நாயிகளாகிற ஷனுய் ஊதுகுழல்கள், பேரிகைகள், டோலாக்கு கள், துந்துபிகள் ஆகிய மங்கள வாத்யங்கள் அநேக பிரகாரங் களாக அழகான ரீதியாலும் வழியிலும் வாசிக்கப்பட்டன. எங்கு பார்த்தாலும் காதுக்கினிமையான சப்தங்கள் கேட்கப் பட்டன. இங்கேயும் அங்கேயும் யுவதிகளான ஸ்திரிகள் மங்கள கீதங்களைப் பாடினுர்கள். (1411)

ஸகிகளினுல் சூழப்பட்ட ஜனகரின் ராணி அத்யந்த சந்தோஷமடைந்தாள். தண்ணீர் வரட்சியினுல் தானியங்

கள் விளையும் பூமியில் மழை ஜலங்கள் அம்ருத மயமாக விழுந்தன. ஜனக மஹாராஜர் தன் கிலேசங்கள் வருத்தங்களை விட்டு விட்டு, சுகத்தை அடைந்தார். தண்ணீரில் வெகு நேரம் நீஞ்சி, களைத்துப்போன மனிதன் தன் கால்களினால் பூமியைத் தொடுவதினால் சந்தோஷமடைவதுபோல ஜனகர் சந்தோஷத்தினால் பூரித்தார். (1412)

அந்த வில் இருபாகங்களாக ஒடிக்கப்பட்ட. பிறகு அந்த ராஜாலோகத்தினர்கள் ஸ்ரீஹீனர்களாக, தேஜஸ் இழந்தவர்களாக ஆனார்கள். எவ்விதம் நல்ல சூரிய வெளிச்சத்தில் ஒரு தீபம் நன்றாக பிரகாசிக்காதோ, அதுபோல ஒளியிழந்து விளங்கினார்கள். சீதையின் சுக ஆனந்தத்தை நான் எவ்விதம் வர்ணிக்க முடியும்? எவ்விதம் சாதக பக்ஷிகள் ஸ்வாதி நக்ஷத்திரத்தில் பெய்த மழை ஜலத்தைச் சாப்பிட்டுவிட்டு ஆனந்தமடைகின்றனவோ, அதுபோல சீதை ஆனந்தமடைந்தாள். (1413)

ஸ்ரீராமனைப் பார்த்து லக்ஷ்மணன் எவ்விதம் சகோர குயிலானது சந்திரனைக் கண்டால் ஆனந்திக்குமோ, அதுபோல ஆனந்த மடைந்தான். அந்த சமயம் சதானந்தர் ஆக்ஞை யிட்டார். அதன் பிறகு சீதையானவள் ஸ்ரீராமனின் பக்கம் செல்ல ஆரம்பித்தாள். (1414)

அவள் கூட அழகானவர்களும் மிக்க கெட்டிக்காரர்களுமாகிய தோழிகள் மங்கள கீதங்களுடன் பாடிக்கொண்டு வந்தார்கள். அவளுடைய நடை பால ஹம்ஸத்தின் நடையைப்போல விருந்தது. அன்னை ஜானகி அழகாக நடந்துவந்தாள். அவளுடைய அங்கங்கள் ரொம்ப சோபிதமாக விளங்கின. (1415)

[தியானம்

ஹே ராமா, தசரத நந்தனா, ரகுகுல சிரோண்மணி, தின மணி குலோத்பவா, ராகவா, ஸ்ரீசச்சிதானந்த விக்ரஹாய நமஃ நமஃ, ஜனகஜா சுதா சமேதா, சீதே உன்னையும் தேவதேவரான ஹரியையும் நினைத்துப்பார்க்கும் சமயம் முன்பு என் பிரியமான இஷ்டதேவதை உமை பால சூர்யனின் பிரபை உள்ளவளாயும், மந்தஸ்மித முகத்துடனும், மனோஹரமான தனுவுடனும் மதுர மான கீதத்துடனும் கைகளில் ஜயமாலையை தாங்குபவளுமான பார்வதியின் நினைவு வருகிறது. அவள் ஏகாக்ர பக்தியாகிற ஸத் கீதத்தினால் சம்புவின் நீலலோஹிதமான கண்டத்தில் அந்த மாலையைப் போட்டாள். அம்ருத மதன சமயம் அதே சம்புவும்

உமையும் பார்த்துக் கொண்டிருக்கும் சமயம், க்ஷீராப்தி ராஜன் கமலமாலையை எடுத்துக்கொடுத்து விஸ்வ காமாவாகிற அந்த ஸ்ரீதேவியை சகல அங்கங்களில் அலங்கரித்து ஆபரணங்கள் சகிதமாக கூட்டி வந்து, முனி கணங்கள், தேவகணங்கள் ஸ்ரீ ஸ்தோத்தங்கள் பாட, கங்கையின் அம்ருதமயமான ஜலத்தை பொற்குடங்களில் திக்கஜங்கள் ஸ்நானம் பண்ணி வைக்க, கிருதாசி முதலிய அப்சரஸ் ஸ்ரேஷ்டர்கள் கந்தமுள்ள மலர்களை அர்ச்சிக்கும் போது, என் தாயாகிய ஜானகியே அந்த லக்ஷ்மி தேவியானவள் ஹரிவக்ஷஸ்தலத்தை அடைந்ததுபோல நீயும் ராமனின் வக்ஷஸ்தலத்தை அடைந்தாய். அந்த சீதையாகிற மஹாலக்ஷ்மி எவ்விதம் சாக்ஷாத்கார பகவானாகிய நாராயண ரிடம் சதா லயித்திருக்கிருளோ, அதுபோல நீயும் சதா ராமபராயணராக விருக்கிருய். ஹே தர்மசாரிணி, ஸ்ரீராமா, ஹே ரங்கநாதா, ரங்கநாயகி சமேதா, சுந்தர, ரமாபதி உங்களுடைய பொற்தாமரைகளை அடைந்து ஆராதனம் செய்து, ஸதா உன் பதபங்கஜங்களை, உன் சம்மதம் கொண்டு, பஜிக்கும் பாக்யம்தானே பரமார்த்தமாக கருதுகிறேன். கோதண்ட ராமனும் அவன் உள்ளடங்கிய கனஸ்தனங்களைக் கொண்ட சீதையின் ஆர்வ அணைப்புக்களாகிய வெள்ளங்களில் பொங்கி வரும் உங்கள் இருவர்களுடைய கடாக்ஷ அலைகளில் நான் நீஞ்சுவேனுக. ஹே மீனுக்ஷி, காமாக்ஷி, விசாலாக்ஷி, என் சித்தம் அனுதினமும் இடைவிடாமல் உங்களைத் தியானித்து உங்களை வந்து அடைவேனுக. மிருணுள புல்லலோசனி, கோதண்டராமா, என்னை சதா நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்.]

சகிகளின் மத்தியில் சீதாதேவியானவள் எவ்விதம் சோபித்தாள் தெரியுமா? அநேக கோடிக்கணக்கான லாவண்யங்கள் நிறைந்த அழகு சௌந்தர்யங்களின் குவியல்களின் மத்தியில் எல்லாவற்றையும்விட மிக்க உயர்ந்த அழகு அருள்பாயும் மஹா திரிபுரசுந்தரியைப் போல விளங்கினுள். அவளுடைய கரகமலங் களில் சுந்தரமான ஜயமாலையாகிற தாமரை மலர்கள் இருந்தன. அந்த ஜயமாலை விஸ்வமாகிற பதினுன்கு லோகங்களையும் ஜயிப்பதாகிய சோபைகளுடன் விளங்கியது. (1416)

சீதையினுடைய சரீரம் ஸங்கோசத்தால் நிரம்பப் பட்டிருந்தும் அவளுடைய மனமானது பரம உத்ஸாகத்துடன் இருந்தது. அவளுடைய அந்தரங்கமான ஸ்ரீராம பிரேமை யாருக்கும் தெரியாமலிருந்தது. அழகாய் ஹம்ஸம் போல



சீதை லஜ்ஜையுடன் பேசாம லிருக்க, கெட்டிக்கார சகி ஒருவள் சீதையைத் தூண்ட, சீதை மீண்டும் வெட்கத்துடன் ஜய மாலையை இரு கைகளில் தாங்கிக்கொண்டு, ஸ்ரீராமனை ப்ரேமையுடன் பார்த்தல்.

நடந்து, ஸ்ரீராமனின் சமீபம் வந்து, ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்யமங்கள ஸ்வரூபத்தைக் கண்டு, அதன் சோபைகளை மனம் குளிரப்பார்த்து, ராஜகுமாரியான சீதாதேவியானவள் சித்திரத்தில் எழுதப்பட்டவள் போல அசைவற்று நின்ருள். (1417)

மிக்கக் கெட்டிக்காரிகளான அவளுடைய தோழிகள் இவளுடைய அவஸ்தையைக் கண்டார்கள். அப்போது சமய புத்தியுடன் ஒரு தோழி சீதையை அழைத்து, ''இந்த மிக சுகத்தைத்தரும் ஜயமாலையை ஸ்ரீராமன் கழுத்தில் போடு'' என்று சொன்னாள். இந்த சுபமான வார்த்தைகளைக் கேட்டு ஜானகி தன் பொன்னிரு கரங்களால் ஆசை நிறம்பினவளாக, பரமபிரேமையினல் மீண்டும் கவரப்பட்டு தன் கைகளைத் தூக்கியும், மிக்க வெட்கத்துடன் பேசாமல் நின்ருள். அந்த மாலையைக் கையில் தரித்துக்கொண்டிருந்தாள். (1418)

அவளுடைய பத்ம கரங்கள் மஹா சோபையுடன் விளங்கின. எவ்விதம் சந்திரனுடைய சோபையினல் வெட்கப் படும் இரு தாமரை புஷ்பங்கள் தண்டுகளுடன் பிரகாசிப்பது போல அவள் மலர்கரங்கள் விளங்கின. இந்த அவஸ்தையைக் கண்டு சகிகள் மீண்டும் கீதங்கள் பாட ஆரம்பித்தனர். அந்த சுபமங்கள ஜயமங்கள கீதங்களைப் பாடும் சமயம் அன்னை ஜானகி ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்யமான கழுத்தில் தன் பொற் கரங்களால் ஜயமாலையைச் சூட்டினுள்: அந்த மாலையும் ஸ்ரீஜயராமனுடைய விசாலமான வக்ஷஸ்தலத்தில் மஹா சோபிதத்துடன் சுந்தரமாக அமர்ந்தது. (1419)

ஸ்ரீ ரகுகுல சிரோண்மணியான ஸ்ரீராமனின் வக்ஷஸ்தலத்தில் ஜயமாலை விழுந்ததும், பிரபு வனமாலியாக பிரகாசித்தார். தேவதைகள் லக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீமந்நாராயணனை எவ்விதம் பூஜிப்பார்களோ, அவ்விதம் சீதா ராமனை அவர்கள் பூஜித்து புஷ்பங்களை வர்ஷித்தார்கள். மதம் பிடித்த ராஜ கணங்கள் இந்தவிதமாக அவமானப்பட்டு, சூர்யனைக் காணும் குமுத புஷ்பங்கள் வெட்கத்தினல் தேஜஸ்யிழந்தவைகளாக எவ்விதம் தோன்றுமோ, அவ்விதம் அவர்கள் அடங்கி விட்டிருந்தார்கள். (1420)

விதேக நகர் முழுவதிலும் ஆகாசத்திலும் துந்துபிகள் முழங்கின. துஷ்டமனமுள்ள அரசர்கள் மிக்க வருத்தமடைந்தார்கள். ஸாது ஜனங்கள் ஆனந்தத்தால் பிரஸன்னமானுர்கள். தேவர்கள், கின்னரர்கள், மனுஷ்யர்கள், நாகர்கள், முனி

கணங்கள், ஜய ஜய ஜய சப்தங்களுடன் பிரபு ஸ்ரீராமச்சந்திரனை யும் சீதையையும் மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார்கள். (1421)

தேவதைகளின் ஸ்திரிகள் நாட்டியம் ஆடினார்கள். அடிக்கடி அடிக்கடி தங்கள் கரங்களால் பகவானையும் தேவியையும் புஷ்பங் களால் அர்ச்சித்தார்கள். மங்கள கீதங்கள் பாடினார்கள். பிராம் மணர்கள் எங்கே பார்த்தாலும் வேதத்வனிகளை முழக்கி, பகவானைச் சந்தோஷித்தார்கள். விருதாவளிபாடும் கவிகள் பகவானுடையதும் ஜானகியினுடையதுமான குலகீர்த்திகளைப் பாடிக்கொண்டிருந்தார்கள். (1422)

[தியானம்

ஹே ராமா, புருஷோத்தமா, சிவஹ்ருதயா, சங்கரப்ரியா, ஸித்தலக்ஷ்மி, வைஷ்ணவி ஆஸ்ரிதவாத்ஸல்யா, அம்புஜ லோசனா, சீதாராமா, மாயாமிருகத்தைத் தேடிச்சென்ற உன் பாதங்களை என் பூஜைக்காகவும் ஆராதனத்திற்காகவும் கொடு. ஆதிபராசக்தி, காமாக்ஷி, மீனாக்ஷி, தென்னிலங்கை சென்று ராவணனையும் அவனைச் சேர்ந்த பாபங்களையும் நாசம் செய்த ஹே, மனத்துக்கினியானே, வேதாத்மாவாகிய கருடனால் சேவிக்கப்படும் ஸ்ரீராமா, நாகபர்யங்கஸயனா, ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் விபீஷணனுக்காக நின்று காஷிகொடுக்கும் மஹானுபாவா, பூதேவியின் மகளும் அயோநிஜையும் விஷ்ணு சித்தரின் மகளுமாகிய சூடிக்கொடுத்த ஆண்டாளை கன்னியாக உகந்து எடுத்துக்கொண்ட தயாபரா, அறிவில்லாத மானிட குலத்தில் பிறந்த என்னை ஆட்கொள்ளவேண்டும். என்குல நாயகமே, குலவிலக்கே, வேங்கடவெற்பா, சேஷாசலநாயகா, மஹாபுண்யமான காவேரி நதியில் பள்ளிக்கொண்ட ரங்கசாமி, வேங்கடவரதா, வரதநாயகா, என் பாவங்கள் என்னைத் தொடராது காக்கும் தர்மஸேது, சங்குசக்ரகதாதர சாரங்கபாணி, என்பாவங்களையும் தோஷங்களையும் கர்மபந்தங்களாகிற புண்ய குவியல்களையும் நாசம் செய்த சண்ட சூர்யா, சங்கர உமை தாஸனாகிய என்னை சீதா ராமா, உங்களுடைய தாஸதாஸனாக்கி கொள்வாயாக. கடாக்ஷ கண்ணின் கிருபையால் என்னை நினைப்பாயாக. ஜகந்நிவாஸா, ஆதாரநிலையா.]

பிருத்வி பாதாளம் ஸ்வர்க்கம் ஆகிய மூன்று லோகங் களிலும் பகவானுடைய புண்ணியமான யசஸ்ஸாகிற கீர்த்திகள் பரவின. ஸ்ரீராமன் தனுஷ்ஷை ஒடித்துவிட்டார். ஜனகரின் பெண்ணாகிய சீதையை ஸ்வீகரணம் செய்துவிட்டார் என்கிற

செய்தி எங்கும் பரவிற்று. அவளுடைய தோழிகள் சீதையைக் கூப்பிட்டு "ஹே சீதே, பிரபுவினுடைய திவ்யமான சரணங்களைப் பற்று. அந்த பிரபுவினுடைய பதம், அந்த திவ்ய சரணங்கள்தான்" என்று சொன்னார்கள். ஆனால் சீதை அத்யந்த பயபீதியினால் பகவானுடைய சரணங்களைத் தொடாமல் வெட்கத்துடன் நின்றுகொண்டு இருந்தாள். (1423)

கௌதம மகரிஷியினுடைய உத்தமமான சதியாகிய அஹல்யையை ஸ்மரணம் செய்துகொண்டு, ஸ்ரீராமனுடைய பாத சரணங்களைத் தன் திருக்கரங்களால் சீதை ஸ்பர்சிக்கவில்லை. ரகுவம்ச சிரோண்மணியாகிற ஸ்ரீராமன் சீதையினுடைய அப்ராகிருதமான பிரேமையை நினைத்து (ஹரியினுடைய வக்ஷஸ்தலத்தில் இருப்பவளாகிய மஹாலக்ஷ்மியின் அவதாரமென்றும், என்றும் பிரியாத மலர் மங்கையின் மார்பன், அனவரதமும் அவளுடன் சேர்க்கையால் ஒளிபெற்றவனும் திருக்கல்யாண குணங்களும் நிரம்பின திவ்ய கீர்த்திகள் பெற்ற குணாகரன் என்கிற காரணப் பெயர் பெற்ற ஸ்ரீமானாகிய ஸ்ரீரகுராமன்) தன் மனத்திற்குள் சிரித்துக் கொண்டார். (1424)

அந்த சமயம் சீதையின் அழகைக்கண்டு ஜகன்மோஹினியாகிய அவளை துராசையால் கவர எண்ணின சில அரசர்கள் ஆக்ரோஷத்துடன் கிளம்பினார்கள். க்ரூரமானவர்களும், மிக்க ஏமாற்றத்தினால் க்ரோதமடைந்தவர்களும் மூடர்களுமான அந்த அரசர்களின் மனத்தில் தமோகுணங்களாகிற இருள்கள் சூழ்ந்திருந்தன. அவர்கள் எல்லா திக்குகளிலிருந்தும் எழுந்திருந்து, கவசங்களைத் தரித்துக்கொண்டு எங்குபார்த்தாலும் வசவுகளைச் சொல்லவும் திட்டவும் ஆரம்பித்தார்கள். (1425)

சில பேர்கள் "சீதையைத் தூக்கிக்கொண்டு போகலாம்" என்று சொன்னார்கள். "அந்த இரண்டு பாலகர்களான ராமலக்ஷ்மணர்களைக் கட்டிப் போடுங்கள்." "வெறும் வில்லை ஒடித்ததினால் மட்டும் அந்த ராமன் சீதையை அடையமுடியாது. ராஜகுமாரர்களான எங்களை ஜயிக்காமலும், நாங்கள் உயிருடன் இருக்கும் வரையிலும் ராமன் சீதையை விவாஹம் செய்து கொள்ள முடியாது" (1426)

"இந்த ஜனகர் உதவி செய்வாராகில் அவரையும் நாங்கள் யுத்தத்தில் ஜயித்துவிடுவோம். அவருடன் இந்த இரு சகோதரர்களையும் ஜயித்துவிடுவோம்." இந்த துர்வசனங்களைக் கேட்டு சில சாதுக்களாகிய மஹாராஜர்கள் அழகான வாணியில்

சொன்னார்கள். "வெட்கமில்லாமல் சொல்லப்படும் இந்த வார்த்தைகளைக் கேட்டு, வெட்கமே நாணும்." (1427)

"அடே மூர்க்கர்களே, உங்களுடைய பாஹுபலம், பிரதாபங்களான கீர்த்திகள், வீரச் செயல்கள் உங்களுடைய பெருமைகள் எல்லாம் தனுஷ்போன மாதிரி ஒடிந்துபோய்விட்டன. உங்களுடைய வீரத்தனம் இப்பொழுது எங்கிருந்து வந்தது? கெட்ட புத்திபடைத்த உங்களுடைய வசனங்கள் சரியல்ல. இதனால்தான் என்னவோ விதாதாவாகிய பிரும்மா உங்கள் முகத்தில் மையைத் தடவி கருப்பாக்கி, அவமானத்திற்கு உள்ளாக்கிவிட்டார்." (1428)

"ஹே மூடர்களான ஆத்மாக்களே, துஷ்ட மனம் கொண்டவர்களே, துராசை, கர்வம், காமத்தின் நஷ்டத்தினால் ஏற்படும் க்ரோதம் இவைகளைத் தூரத்தள்ளி பிரபுவும் வள்ளலுமாகிய ஸ்ரீராமச்சந்திரனுடைய அருள் மழை பொழியும் திவ்ய ஸ்வரூபத்தை உள்கள் விசாலமான நேத்ரங்களில் நிரப்பிக் கொண்டு அனுபவியுங்கள். ஆதிசேஷனின் அவதாரமாகிய லக்ஷ்மணனுடைய அனல்கொண்ட க்ரோதாக்கினிகள் மிக்க பிரபலம் வாய்ந்தவை யென்று அறிந்து, அதன் முன்பு விட்டில் பூச்சிகளைப்போல மடிந்துபோகாதீர்கள்." (1429)

"ஒரு காக்கை வைனதேயனாகிற கருடனுடைய ஸ்தானத்தை எப்படி எடுத்துக்கொள்ள முடியும்? சிம்மத்தினுடைய பாகத்தை ஒரு முயல் எடுத்துக்கொள்ள முடியுமா? ஒரு காரணமுமின்றி க்ரோத புத்தி படைத்த ஒருவனுக்கு எவ்விதம் குசலம் (மனச்சாந்தி, சௌபாக்யங்கள், க்ஷேம விலாஸங்கள்) எவ்விதம் ஏற்படும்? ஆசுதோஷியான பரமசிவனை விரோதம் பண்ணும் எந்த சிவத்ரோஹியாவது அனுத்தமமான சம்பத்துக்களை அடையமுடியுமா? அடைந்தாலும், நீண்டு அனுபவிக்க முடியுமா?" (1430)

"மஹா லோபம் படைத்த பேராசைக்காரனுக்கு மிக்க அழகான கீர்த்திகள் கிடைக்குமா? காமமனுஷ்யர்களுக்கு நிஷ்களங்கங்களாகிய மாசற்ற புண்ய கீர்த்திகள் எப்படி கிடைக்கும்? ஹரிபதம் என்கிற ஹரி சரணங்கள் என்னும் சாதனத்தை விட்டுவிட்டு, விமுகர்களான மனிதர்களுக்கு, ஐயா, எப்படி பரமாம்கதியாகிய மோக்ஷபதம் கிடைக்கும்? ஹே ராஜாக்களே, சீதைக்காக நீங்கள் படும் பேராசைகள் இவைகளைப்போல வியர்த்தமாகத்தான் போகும்." (1431)

  

இந்த கோலாகலத்வனிகளைக் கேட்டு சீதை பயந்து போனாள். அந்த சமயம் அவளுடைய தோழிகள் சீதையை ராணியிடம் அழைத்துச் சென்றார்கள். சீதையினுடைய அம்ருத மயமான பிரேமை வெள்ளத்தினால் மனத்தின் தாகத்தை நிசப்த மாக சாந்திபண்ணிக்கொண்டு பகவான் ஸ்ரீராமச்சந்திரன் ஸ்வாபாவிகமான கம்பீரத்துடன் கூடிய மன அமைதியுடன் தன் குருவாகிய ஸ்ரீவிஸ்வாமித்திரரிடம் சென்றார். (1432)

[தியானம்

ஸ்ரீராமா, ரகுஸ்ரேஷ்டா, ஸர்வ மங்களங்களைக் கொடுப்ப தாகிய உன் மந்திரம் மந்திரங்களுள் மிக்க உயர்ந்த மந்திரமாக வும் ஸர்வ பாவங்களைப் போக்குவதாயும், ரோகம் மனக்கவலை ஆகியவைகளைப் போக்கக் கூடியதாகவும், ஆயுளை வளர்க்கச் செய்வதுமாகவும் இருக்கின்றது. அப்பேற்பட்ட மகத்வம் வாய்ந்த உன்னுடைய மங்கள கீர்த்திகளையும், சூரிய குலத்தின் பெருமைகளையும் சதா நான் பாடவேண்டும். பாவிகளுக்குக் க்ரூரமானவரும், என் ஹ்ருதயமாகிய தாமரைப் பூவை மலரச் செய்கிறவரும், என்னுடைய அவ்யயமான பிதாவும், சகாவும். மாதாவான மஹாலக்ஷ்மிக்கும் அநேக நமஸ்காரங்கள் செய்கி றேன். அகஸ்தியர், லோபா முத்ரை, துர்வாஸர், சம்பு, பிரும்மா இவர்களால் பூஜிக்கப்படும் மஹாதிரிபுரசுந்தரி, காமேஸ்வரி, காமேஸ்வரருடைய அங்கங்களில் வீற்றிருக்கும் லலிதாதேவி, ஸ்ரீசீதாராமர், என் ஹ்ருதயநாயகர், லோகநாயகியான ஸ்ரீதேவி யின் லோலா, உன்னுடைய சிறப்பான போகங்களில் என்னையும் கருணையாகிய அம்ருதமயமான கடாக்ஷ பார்வைகளால் நனைத்து, குளிரவை. ஹே அரவிந்த லோசனை ஸ்ரீராமனுடைய மனக்காந்திமதி, சீதே, ராமா, உங்களுடைய கோதண்டமான பார்வையால் என் தோஷங்கள் யாவையும் விலக்கி, ஸாது ஜனங்களின் கதியாகிய அந்த அச்சுதனுடைய திருவடிகளை எனக்குப் பஜிக்கத்தாரும். குஞ்சர பாதனே, ஆஞ்சநேயர் பக்தியுடன் வருடும் திவ்ய பாதங்களை என் ஹ்ருதயத்தில் பதிய வைத்து, உங்கள் சேர்க்கையையும், பாகவத உத்தமர்களின் அனுக்ரஹத்தையும் பெறுவானா ? தயை செய்யமாட்டாயா ?]

ராணியினுடைய வசமடைந்த சீதாதேவியானவள் அந்த துஷ்ட அரசர்களின் வசனங்களைக் கேட்டு, அவர்களின் துர்நடத்தையையும் கண்டு, தன் மனத்திற்குள் எண்ண ஆரம்பித்தாள். "விதாதாவாகிய பிரும்மா தன் மனதில் என்ன

நினைத்துக்கொண்டிருக்கிறரோ, தெரியவில்லையே.'' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். அந்த பூபதிகளின் வசனங்களைக் கேட்டு லக்ஷ்மணன் இங்குமங்கும் கோபத்தினல் பார்த்துக்கொண்டும் ஸ்ரீராமனுடைய பயத்தினல் ஒன்றும் பேச மாட்டாமல் அடக்கப்பட்டவனுகத் தோன்றினன். (1433)

அவனுடைய அழகிய நேத்ரங்கள் அருண உதையத்தின் போதிலுள்ள இளம் சூரியன் போன்ற சிகப்பு நிறமுள்ளவையாயும் புருவங்கள் கோபத்தால் வளைக்கப்பட்டவையாயும், அவைகள் க்ரோதத்தினல் ராஜாக்களின் கூட்டங்களைப் பார்த்துக் கொண்டிருந்தன. அந்தக் காக்ஷி எதுபோல இருந்தது தெரியுமா ஒரு சிம்மகுட்டி மதம்பிடித்த யானைக் கூட்டங்களைக் கண்டு துள்ளுகின்றது போலவிருந்தது. (1434)

அந்த கல்லோல ஆரவாரங்களைக் கேட்டு ஜனகாபுரியாகிய மிதிலையில் உள்ள ஸ்திரிகள் யாவரும் வியாகுலம் அடைந்து, எல்லோரும் ஒருமிக்க அந்த அரசர்களை வையத்தொடங்கினர்கள். அந்த சுபமான வேளையில் சிவதனுஷ் ஒடிந்ததினல் ஏற்பட்ட பெரும் த்வனியையும் செய்தியையும் கேட்டு, பிருகு குலத்தில் பிறந்தவரும் ஆதித்யனுக்கு பத்மமாகிய தாமரைப் பூ எவ்விதம் உவந்ததோ, அதுமாதிரி ஸ்நேக உள்ளம் படைத்த பரசுராமர் அவ்விடம் வந்தார். (1435)

அந்த மஹாபுருஷனைக் கண்டு ஸகல ராஜாக்களும் பின் வாங்கினர்கள். அவர்கள் தைர்யமிழந்து, ஒரு பெரிய கழுகு தன் இறையை வெகு வேகத்தினல் கவர்ந்துபோகும் சமயம் அந்த இறையான பறவை பயத்தினல் தைர்யமற்றதாக விளங்குமோ, அதுபோல அந்த மன்னர்கள் பயத்தினல் நடுநடுங்கினர்கள். பரசுராமருடைய சிகப்பான சரீரத்தின்மேல் பூசப்பட்ட விபூதியாகிற பஸ்மம், விசாலமான நெற்றியில் விசேஷமான சோபைகளுடன் விளங்கிய திரிபுண்டரங்கள் (விபூதியின் அலங்காரங்களாகிய மூன்று கோடுகள்) எல்லாம் சோபிதமாக விளங்கின. (1436)

அவருடைய சிரத்தில் மகுடமாக ஜடாமண்டலம் இருந்தது. அழகான பூர்ண சந்திரன்போன்ற சுந்தரமான வதனம். க்ரோதத்தின் காரணமாக சிவந்ததாகக் காணப்பட்டது. கோபத்தினல் வளைந்த நெற்றிபுருவங்கள். கண்கள் ரத்தசிகப்பு. சாதாரணமான பார்வையுடன்தான் அவர் அந்த ராஜாக்களைப் பார்த்தார். அந்த பார்வையே அந்த அரசர்களுக்கு ரொம்ப கோபப்பட்ட பார்வையாகத் தோன்றியது. (1437)

ஒரு விருஷபத்தினுடைய தோள்கள் போல ரொம்ப கம்பீர மானதும் உயர்ந்ததும் ஸ்ரேஷ்டமான தோள்கள். மார்பும் விசாலமானது. நீண்ட பருத்த புஜங்கள். அழகான யக்ஞோப வீதம். ஒரு ருத்ராக்ஷ மாலையை அவர் கழுத்தில் அணிந் திருந்தார். இடுப்பில் முனிவர்களின் வஸ்திரமாகிய வல்கலம் (மரப்பட்டை), அவருடைய இரு தோள்களிலும் அம்புகள் நிறைந்த அம்பராத்தூணிகள் இருந்தன. ஒரு கையில் தனுஷும் மற்றென்றில் பாணமும், அழகான தோள்பட்டையில் பரசுவை யும் (கோடாலி) தாரணம் பண்ணிக்கொண்டிருந்தார். (1438)

வேஷத்தைப் பார்த்தால் சாந்தமான வேஷம். ஆனல் செய்கைகளோ மிக்க உக்ரமானவை. அந்த ஸ்வரூபத்தின் உக்ரத்தை யாரால் வர்ணிக்கமுடியும்? வீரரஸம் ஒரு முனியி னுடைய சரீரத்தை எடுத்து அந்த அரசர்களுடைய மத்தியில் வந்ததுபோல அந்த உக்ர தேஜஸ்வானகிய பரசுராமர் அவ்விடம் வந்து பிரகாசித்தார். (1439)

பயத்தை உண்டுபண்ணக் கூடிய அந்த பரசுராமனைக் கண்டு ஸகல ராஜாக்களும் சோபையை யிழந்து வியாகுலம் கொண்டார்கள். எல்லோரும் ஒரே பயத்துடன் தங்கள் ஆசனங் களிலிருந்து எழுந்தார்கள். ஒவ்வொருவரும் தங்கள் பெயரையும் தன் தகப்பன் பெயரையும் சொல்லிக்கொண்டு அவருடைய சரணங்களில் தண்டனிட்டார்கள். (1440)

அந்த "கண்ட" பரசுராமரால் ஸுஹ்ருதயமாக நன்மை தரக்கூடிய ஸ்வாபாவிகமான பார்வைகளால் பார்க்கப்பட்ட போதிலும் எந்த அரசனும், அவனுடைய மனத்தில் தன் ஆயுள் இன்றோடு முடிவடைந்துவிட்டது என்ற நினைவோடு பயத்தோடு தான் போவான். அவர்கள் எல்லோரும் ஒவ்வொருவராக நமஸ்காரம் செய்தபின்பு, ஜனக மஹாராஜர் அவருடைய திவ்ய மான பாதசரணங்களில் நமஸ்கரித்தார். தன் புத்ரியாகிய சீதையை அழைத்து, அவளையும் அவர் நமஸ்கரிக்கச் செய்தார். (1441)

க்ஷத்திரியர்களை மூவேழு முறை வதம் செய்து, பிறகு காஸ்யபர் வேண்டின மாத்திரத்தில் அந்த க்ரோதத்தை சமனம் செய்துவிட்ட மஹீதரரான பரசுராமர் சீதாதேவிக்கு சுத்தமான ஹ்ருதயத்துடன் பரம மங்களமானதும் ஸ்ரேஷ்டமானதுமான ஆசிர்வாதங்களைச் செய்தார். அதனல் சீதையினுடைய தோழிகள் ரொம்ப சந்தோஷமடைந்தார்கள். அதன் பிறகு அவர்கள் சீதையை தங்கள் கூட்டத்திற்கு அழைத்துச் சென்றார்

கள். அதன் பிறகு சகல ஜீவர்களுக்கும் மித்ரனுகிய ஸ்ரீ விஸ்வாமித்திரமுனி ஸ்ரேஷ்டர் பிரபு ராமரை குசல பிரஸ்னம் செய்தார். அவர்கள் பரஸ்பர க்ஷேமவிலாஸங்களை விசாரித்துக் கொண்டார்கள். அவருடைய உத்தரவின் பேரில் ராம லக்ஷ்மணர்கள் அந்த ப்ரீததரான (புகழ்பெற்ற) பரசுராமருடைய ஸரோஜ பதங்களில் நமஸ்கரித்தார்கள். (1442)

விஸ்வாமித்திர முனிவர் சொன்னுர் "இந்த ராம லக்ஷ்மணர் கள் ராஜா தசரதருடைய மைந்தர்கள்." அந்த அழகான ஜோடி ராமலக்ஷ்மணர்களை பரசுராமர் மங்கள ஆசீர்வாதங்கள் செய் தார். காமதேவனின் அழகு மதத்தை ஒழிக்கும் ஸ்ரீராமச்சந்திர னுடைய அபாரமான திவ்யரூப செளந்தர்ய லாவண்யங்களைக் கண்டு, எல்லா ஜீவர்களுக்கும் உயிரான ராமருடைய தேஜஸ் ஸைக்கண்டு பரசுராமருடைய நேத்ரங்கள் ஆச்சர்யத்தால் ஸ்தம்பித்துவிட்டன. (1443)

[தியானம்

ஹே ராமா, பரசுராமா, ப்ருகுகுல ஸ்ரேஷ்டரே, ஜமதக்னி யின் புதல்வரே, ரிசீகரின் புதல்வருக்குப் புதல்வரே, விஸ்வா மித்திரருக்கு மிக்கப் பிரியமானவரே, தன் தாயாகிய ரேணுகா வைக் கொன்று பிதாவின் அனுக்ரஹத்தால் மீண்டும் தாயாரை யும், சகோதரர்களையும் பிழைப்பித்தவரே, சாவித்திரி மந்திரத் தின் அனுக்ரஹம் பெற்றவரே, தேவர்களும் பித்ருக்களும் உம் முடைய சிறந்த காரியங்களால் சந்தோஷிக்கப்பட்டு, உமக்கு என்றும் அனுக்ரஹம் செய்பவர்களாக ஆனுர்கள். தர்மத்துக் காக என் குருநாதரானவரும் உமக்கு சிஷ்யரானவரும், பித்ரு பக்தி உள்ளவரும், ஸனுதனமான கிருஷ்ணனிடம் உள்ளத்தைக் கொடுத்தவரும், தன் தகப்பன் சுகத்திற்கு பயங்கரமாக சபதம் செய்து ஊர்த்வரேதஸாகி, அதனுல் விரதத்தைக் காப்பாற்றும் பீஷ்மரால் அவமதிக்கப்பட்டும் பீஷ்மரிடம் அனுக்ரஹ சித்தமும் பரமப்ரீதியுள்ள மனமும் கொண்ட பார்கவரே, கர்ணனிடம் அனுக்ரஹமும் சாபமும் கொடுத்த வள்ளலே, யுத்த சாஸ்திரத் தில் நிபுணராகி, பிராம்மணராகப் பிறந்து, ருத்ரராக அம்சம் எடுத்து, ஆததாயியாக க்ஷத்ரியர்களை இருபத்தேழு தலைமுறை கள் கொன்று பூமிக்குப் பாரத்தை யிறக்கி, கஸ்யபருக்கு பூமி யைத் தானம் செய்து மஹேந்திர பர்வதத்திற்கு தபம் செய்யச் சென்ற உத்தமரே, பரசு ஆயுதத்தை தரித்தவரே, தர்மத்தில் மிக்க பற்றுதல் உள்ளவரே, விஷ்ணுவின் அம்சமாகப் பிறந்த

வரே, சிரஞ்சீவி, பிற்காலத்தில் ஸப்தரிஷிகளில் ஒருவராக இருப்ப வரே, ராமனிடம் மிக்க அன்புள்ளவராக ஜாமதக்கினிய மஹா தர்ப்பதலனுய என்று ராமனுக்கு பட்டப் பெயர் வாங்கிக் கொடுத்த உமக்கும் ஸ்ரீராமனுக்கும் சீதாராமனுக்கும் நமஸ்காரம். கருடன் நைமிசாரண்யத்தில் ரிஷிகளுக்கு பகவான் நாராயணரே பிராம்மணர்களின் பிரும்ம தேஜஸ் என்று சொன்னுன். அது மாதிரி என் குருநாதரான விஸ்வாமித்திரர் பிராம்மண தேஜஸ்ஸை நேரில் வஸிஷ்டரிடம் பார்த்து அதன் பலத்தை உணர்ந்து, பிற்பாடு பிராம்மணராக அதே ஜன்மத்தில் மாறி, தவத்திஞல் பகவானை ஆராதித்தார். அதேமாதிரி பரசுராமரால் கொல்லப்பட்ட கார்த்தியவீர்யார்ஜுனன் வாயு பகவாஞல் பிராம்மண மகிமையைப்பற்றி உபதேசிக்கப்பட்டு, அதன்படி நடந்து, பிற்பாடு அதர்மத்தை தானே விரும்பிச் செய்து, பிராம்மணரான பரசுராமரே, உம்மிடம் வதத்தையும் அனுக்ரஹத் தையும் பெற்று உமது சாந்நித்யத்தை, தத்தாத்ரேயருடைய அனுக்ரஹத்திஞல் பெற்ருன். அப்பேற்பட்ட பிரும்ம தேஜஸ் ஸுக்கு நான் நமஸ்கரிக்கிறேன். பிராம்மணர்கள்தான் ஒளியும் சக்தியும் எனக்குக் கொடுத்து, பரமகுஹ்யமான பகவானிடம் என்னைச் சேர்க்க வேண்டும். நாரதர் தேவர்களைக் காப்பாற்றி அமரத்தன்மையை அடைவித்தது மாதிரி, என்னையும் அவர் கள் மாதவனிடம் சேர்க்க வேண்டும். இந்திரியங்களை அடக்கி, பிராம்மணர்களின் அனுக்ரஹத்தால், ஆஞ்சநேயரின் தயையால், நான் சீதாராமனை அடையவேண்டும். தயாபரி ஸ்ரீராமா.]

பிறகு பரசுராமர் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு, தான் பூராக அறிந்திருந்தும், ஒன்றும் தெரியாதவர்போலத் தோன்றி, விதேக ராஜனைக் கேட்க ஆரம்பித்தார். "ஜனகனே, என்னப்பா இந்தப் பெரிய கூட்டம்? இது எதற்காக?" அவருடைய சரீரம் மஹத்தான கோபத்தால் நடுங்கி ஜ்வலித்துக் கொண்டிருந்தது. (1444)

"எந்தக் காரணத்திஞல் இந்த ராஜக் கூட்டங்கள் வந் தார்கள், என்ன நடந்தது? சொல்." எல்லா சமாசாரங்களையும் ஜனகமஹாராஜர் விபரமாக பரசுராமருக்குச் சொன்ஞர். ஜனக ருடைய பூரா வசனங்களையும் கேட்டு, பரசுராமர் ருத்ரருடைய பெருமைகளை நன்ருக உணர்ந்தவராகையால் அந்த மஹாத்மாவி னுடைய தனுஷ் இரு பாகங்களாக ஒடிக்கப்பட்டு, அந்தப் பாதிகள் தரையில் சிதறிக் கிடந்து யிருப்பதைப் பார்த்து, அதி உக்கிரமான கோபத்தை அவர் அடைந்தார். (1445)

அத்யந்த க்ரோதத்துடன் அதிக கடோரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். "அடே மூர்க்கனான ஜனகனே, உடனே சொல். இந்த தனுஷ் யாரால் ஒடிக்கப்பட்டது? அந்த மூடனை சீக்கிரம் எனக்குக் காண்பி. இன்று இப்போதே அவனை அப்புறப்படுத்தி, இத்த தர்மத்திலிருந்து திரும்பிப்போன பிருத்வியை சரிப்படுத்தி விடுகிறேன். இன்றே எவ்வளவு தூரம் உன் ராஜ்யம் பரவியிருக்கிறதோ, அதுவரை உல்டாவான (மாறி திரும்பிப்போன) பூமியை சரிப்படுத்தி விடுகிறேன். அவனை இப்போதே அப்புறப்படுத்தி, பூமியை சரியான நிலைக்கு கொண்டுவந்து வைக்கிறேன்." (1446)

ஜனகராஜாவுக்கு அதிக பயம் பிறந்தது. அதனால் உத்தரம் (பதில்) ஒன்றும் சொல்லவில்லை. இந்த ஸ்திதியைப் பார்த்து, கெட்ட எண்ணமுள்ள அரசர்கள் மனத்தில் மிக்க சந்தோஷமடைந்தார்கள். தேவதைகள், முனிகணங்கள், நாகர்கள், ஸ்திரிபுருஷர்கள், எல்லோரும் யோசிக்க ஆரம்பித்தார்கள். எல்லோருடைய ஹ்ருதயத்திலும் வியாகுலத்தினால் பயம் ஏற்பட்டது. (1447)

சீதையினுடைய தாயாரின் மனத்தில் மிக்க பச்சாதாபம் யேற்பட்டது. "ஹே விதாதா, இப்பொழுது உன்னால், செய்யப்பட்ட எல்லா சுபகாரியங்களும் வீணாகிவிடும் போலிருக்கிறதே" என்று வியாகுலமடைந்தாள். குலநந்தனரான பரசுராமரின் ஸ்வபாவிகமான குணங்கள் எல்லாம் சீதைக்குத் தெரியும். அவள் அதைப்பற்றி மிக்கக் கேட்டிருந்தாள். அதனால் அவளுக்கும் ஒரு அரை நிமிஷம் ஒரு கல்பத்திற்கு சமானமாகத் தோன்றியது. அவள் காலத்தை பயத்துடன் கழித்தாள். (1448)

அந்த சமயத்தில் ஸ்ரீராமன் அங்கு கூடியிருந்த எல்லா ஜனங்களும் பயத்துடன் நடுங்கினவர்களாகக் கண்டு, ஜானகியினுடைய உள் மனவருத்தங்களையும் பயங்களையும் அறிந்து, மதுரபாஷியாகிற அவன், தன் ஹ்ருதயத்தில் சந்தோஷமோ வருத்தமோ ஒன்றும் இல்லாதவராகப் பதில் சொன்னார். (1449)

## மாஸ பாராயணம்—(ஒன்பதாவது) நிறுத்தம்

[தியானம்

ஹேராமா, தசரதராமா, தனுர்வேதரே, தண்டரே, தண்டோதமயிதரே, தமயிதரே, க்ஷேமக்ருதரே, பரசுராமரே, நாராயணரே,

ரிசீகரின் புதல்வரே, மாறுபட்ட ஹவிஸ்ஸை உண்டதாலும், ரிசீக ருடைய சாவித்திரி மந்திரத்தின் சிறப்பாலும், ரிசீகரின் மஹா அனுக்ரஹத்தாலும், அவருடைய பத்னியாகிய ஸத்யவதியின் வேண்டுகோளாலும், ஜமதக்னியின் பரம அனுக்ரஹத்தாலும் தனுர்வேதமே உருவெடுத்து, தரணி என்கிற பூமியை மணந்து நாராயணர் மஹாலக்ஷ்மி மாதிரி தர்மத்தை நிலைநாட்டினவரே, மிக்க பெரிய தர்மமான பூமியின் ஹிதத்திற்காக க்ஷத்திரியர் களாகிய தானவர்களைக் கொன்று பூபாரத்தைப் போக்கி, பூமியை காஸ்யபருக்கு தானம் செய்துவித்து மன ஒழிவடைந்து, தபஸ் ஸிற்குச் சென்ற பார்கவரே, புண்யக்ஷேத்ரமும் ஸலிலமான தடாகங்களையும் தீர்த்தங்களையும் கொண்ட குருக்ஷேத்ரத்தில் க்ஷத்திரியர்களுடைய இரத்தத்தினுல் ஏற்பட்ட மடுக்களில் பித்ரு தர்ப்பணம் செய்து தன் குலத்திற்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்கி, அன்புடன் நிவிருத்தி மார்க்கத்தில் திரும்பி சகல சரா சரங்களுக்கும் க்ஷேமக்ருதாக விளங்கிய பார்க்கவரே, ருத்ரரை ஆராதித்து அவருடைய பரசுவை அடைந்த பரசுராமரே, பிராம்மணப் பிரியரே, பிராம்மணகுல ஸ்திரிகளுக்கு ஏற்பட்ட க்ஷத்திரிய பயங்களைப் போக்கின தண்டரே, உம்முடைய அவதாரத்தின் ரஹஸ்யங்களையும் பெருமைகளையும் மகிமை களையும் எவன் மனம் கொண்டு பக்தியுடன் பாடுகிருனே, அவனுக்கு உம்முடைய ரக்ஷையும் அனுக்ரஹமும் பகவானிடம் பக்தியும் பிராம்மணப் பிறப்பும் சாஸ்வதமாகக் கிடைக்கின்றன. அதுமாத்திரமல்ல, குலப்பெருமையையும் பித்ருக்களின் சிறந்த ஆசிர்வாதங்களும், தவமும், மனஅடக்கமும், கோபம், க்ரோதம் முதலியவைகளை சமனம் செய்யும் அடக்கங்களும், பாபங்களும் தோஷங்களும் விலகி பகவானுக்கும் லக்ஷ்மிக்கும் மிக்கப் பிரிய ஞகிவிடுகிருன். விஸ்வாமித்திரரின் கோத்ரத்தில் பிறந்த எனக்கு உமது ரக்ஷை, அனுக்ரஹம் வேண்டும் என்று நமஸ்கரிக்கிறேன். சிறந்த பிரும்ம ஞானியே, சிறந்த பிராம்மணராகவிருந்தும், க்ஷத்திரிய சக்தியுடன் தன் குலநன்மைக்காகவும், சகல சராசரங் களின் நன்மைக்காகவும், தரணியின் நன்மைக்காகவும் அவதரித்த மஹாத்மாவான பரசுராமர் பூமியின் குமாரியான சீதையிடமும் ராமனிடமும் அன்புவைத்தது தர்மத்திற்காகவே. அப்பேற்பட்ட பார்கவரிஷிக்கும், அவருடைய வம்சத்தின் முன்னேரான பிருகு மஹரிஷியின் பத்னியான க்யாதிக்கும், மஹாவிஷ்ணுவின் வக்ஷஸ்தலத்தில் பதிந்த, அவருடைய பாதத்திற்கும் நான் நமஸ் காரம் செய்கிறேன்.]

 

"ஹே நாதா, சம்புவின் வில்லை ஒடித்தவன் உம்முடைய தாஸர்களான பக்தர்களில் ஒருவனாக இருக்கவேண்டும். தங்களுடைய ஆக்ஞை என்ன? என்னிடம் தாங்கள் ஏன் ஒன்றும் கூறமாட்டேன் என்கிறீர்?" என்று மிக்க இன்சொல்லால் ஸ்ரீராமன் சொல்லுவதைக் கேட்ட ஸ்ரீபரசுராமர் கோபமடங்காமல் வெகு உக்ரமாகப் பேசினார். (1450)

"சுத்தமான சேவகன் ஒரு தாஸனுடைய வேலையைச் செய்பவன். சத்ருவின் காரியத்தைச் செய்துவிட்டிருப்பவனோடு கட்டாயம் சண்டை போடவேண்டும். ஹே ராமா, கேளு, எவன் இந்த உத்தமமான சிவனுடைய தனுஷ்ஷை ஒடித்தவனோ, அவன் எனக்கு சஹஸ்ரபாஹுவான கார்த்திய வீர்யார்ஜுனனுக்குச் சமமான சத்ரு போன்றவன்." (1451)

"அவன் இந்த சமாஜத்தை விட்டுவிட்டு தனியாக நிற்கட்டும். அவன் இவ்விதம் வராவிடில் இந்த ராஜக் கூட்டங்களை பூராவையும் நான் அழித்துவிடுவேன்" என்று அதட்டினார். இந்த வசனங்களைக் கேட்ட லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு பரசு தரித்துக்கொண்டிருக்கும் பரசுராமரை அவமானப்படும்படி வார்த்தைகளைச் சொன்னான். (1452)

"ஹே, குருநாதரே, நன் சிறுபையனாக விருந்த சமயம் பல தனுஷ்களை ஒடித்திருக்கிறேன். ஆனால் இந்த விதமான க்ரோதத்தை நான் உங்களிடம் பார்த்ததில்லையே. இந்த தனுஷ்ஷை ஒடித்தது பற்றி மாத்திரம் உங்களுக்கு இந்த மமதை ஏற்படுவதற்கு என்ன காரணம்?" இந்த வார்த்தைகளை பிருகுகுலத்வஜரான பரசுராமர் கேட்டு மிக்க கோபத்துடன் வார்த்தை சொல்ல ஆரம்பித்தார். (1453)

"அடே ராஜபுத்ரா, நீ காலத்தின் வசம் அடைந்துவிட்டபடியால் உன் வார்த்தைகளை ஆராய்ந்து அறியாமல் சொல்லுகிறாய். இந்த பூராசம்சாரத்தில், மிக்க கியாதிபெற்ற திரிபுராரியின் இந்த வில் சாதாரண வில்லைப்போலவா?" (1454)

லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு பதில் சொன்னான். "தேவரே, தயவு செய்து கேளும், என்னுடைய அறிவில் எல்லா விற்களும் ஒன்றேதான். ஹே ஸ்வாமி, இந்த புராணமயமான வில்லை ஒடித்ததினால் என்ன நஷ்டம், யாருக்கு என்ன லாபம் ஏற்படக்கூடும்? ஸ்ரீராமன் இந்த வில்லை ஒரு நவீனமான வில் என்று மாறுபட்ட எண்ணத்தினால் இதைத் தொட்டான்." (1455)

"ரகுபதி தொட்ட மாத்திரத்தில் அது ஒடிந்துவிட்டது. இதில் ரகுநாதனுக்கு என்ன தோஷமிருக்கிறது? ஹே முனியே, தாங்கள் ஒரு காரணமுமின்றி, ஏன் க்ரோதமாக விளங்குகிறீர்?" பரசுராமர் தன்னுடைய பரசுவைப் (கோடாலியை) பார்த்துக் கொண்டு பேசினர். "அடே துஷ்டா, என்னுடைய ஸ்வ பாவத்தை நீ கேட்டதில்லையா?" (1456)

"நான் உன்னை ஒரு பாலகனக நினைத்து, வதம் பண்ண வில்லை. அடே மூர்க்கா, என்னை கேவலமான ஜடமான முனியாக எண்ணிக்கொண்டிருக்கிருயா? நான் பால பிரும்ம சாரியாகவிருந்த சமயத்திலிருந்து அத்யந்த க்ரோதம் உள்ளவன்; க்ஷத்திரிய குலத்திற்கு சத்ருவென்று விஸ்வமாகிற மூன்று உலகங்களிலும் பிரசித்தி பெற்றவன்." (1457)

[தியானம்

ஹே தசரதராமா, ரகுகுலஸோமா, ஸாமஜவரகமனு, கோதண்டபாணி, தனுர்தரரே, தர்மவிதோத்தமா, என்னையும் தியாகராஜரையும் விரஜா மார்க்கத்தில் அழைத்துப்போகும் ராமா, வேத சிரோண்மணி, நாதா சலதீபமே, மோஹனகர, காலாதீதா, தியாகராஜ ஹ்ருதயவாரியினுல் வர்ஷிக்கப்பட்ட ஸஹஸ்ரநாமா, ஸாது ஹ்ருதயமான என் ஹ்ருதயத்தை மலரச் செய்யும் ஆதித்யா, ஜடாமண்டலதாரி, பீமஸ்வரூபமும் அக்னி ஸ்வரூபமும் சேர்ந்து காலாக்னிபோல் கொதிப்பவரும், உக்ரரும், மிக்க தபோபலம் உள்ளவரும் ஆததாயியும், தர்மபரிபாலனத்தில் கடூரமான செய்கையுள்ளவரும் வைஷ்ணவரூபமான பகவான் பரசுராமரை தண்டனிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். பிராம்மணர் களின் ஹிதத்தை நாடுபவரும், கஸ்யபருக்கு பூமியை மிகுந்த தக்ஷிணையுடன் தானம் கொடுத்து, மஹேந்திர மலைக்கு தபஸ் செய்தவருமான பரசுராமரை நமஸ்கரிக்கிறேன். சீதாராம னுடன் சம்பாஷித்தவரும் க்ஷத்திரிய தர்மத்தை விட்டவரும் பித்ருக்களால் அனுக்ரஹிக்கப் பட்டவரும் பார்க்கவரும் ரிசீக ஜமதக்னியின் புதல்வருமான ராமனை நான் நமஸ்கரிக்கிறேன். அதோக்ஷஜரே, வெளி உலகில் விராட்ரூபத்துடனும் உன், இந்திரியங்களுக்கும் பிரத்யக்ஷமாக விளங்குபவரே, தயை ஸ்வரூபமுள்ளவரே தசரதரால் வேண்டப்பட்ட பார்க்கவரே, சீதையைக் கடாக்ஷித்த விஷ்ணோ, சீதையின் மாங்கல்ய பலத்தினுல் காக்கப்பட்ட ஸ்ரீராமா, நீலலோஹிதரே, என்னை நீங்கள்தான் மிகப்பெரிய பயங்களிலிருந்தும் ஆபத்துக்களி

லிருந்தும் காப்பாற்றி உங்களிடம் சேர்த்துக்கொள்ள வேண்டும் அப்பனே.]

"என்னுடைய புஜபலத்தினால், சமுத்திரங்கள், மலைகள் கொண்ட விசாலமான பூமியை துஷ்ட அரசர்களிடமிருந்து காப்பாற்றி பிராம்மணர்களுக்கு தக்ஷிணையாக பல தடவைகள் கொடுத்திருக்கிறேன். ஹே ராஜகுமாரா, ஸஹஸ்ர புஜங்கள் கொண்ட கார்த்தியவீர்யார்ஜுனனின் கரங்களை வெட்டின இந்த பரசுவைப்பார்." (1458)

"அடே தசரத ராஜகுமாரா, உன் தாய் தகப்பனை வருத்தத் திற்கு உள்ளாக்காதே. என்னுடைய இந்த பரசு ரொம்ப பயங்கரமானது. கர்ப்பத்திலுள்ள சிசுக்களைக்கூட பயத்தினால் நழுவச் செய்யும் சக்தியைக் கொண்டது." (1459)

சுமித்திரையின் ஆனந்தத்தைக் கொடுக்கும் புதல்வனான லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு கோமளமான வாணியால் இன் சொல்லாகச் சொன்னான். "அஹோ, முனீஸ்வரரே, தன்னுடைய பெரும் புகழ் தரும் யுத்தங்களையும் வீரத்தையும் நீரே தற் பெருமையுடன் எனக்குச் சொல்லுகிறீர். அடிக்கடி எனக்கு உம்முடைய கோடாலியைக் காண்பித்து பயமுறுத்துகிறீர். மிருதுவாக வாயினால் வீசும் காற்று வாக்காலே இந்த கோடாலி யால் ஒரு மலையைத் தூக்க முடியுமா.?" (1460)

"இங்கே வெள்ளரிக்காய், புடலங்காய், சுரக்காய் போல சிறிய நளினமான, பழுக்காத பழம் ஒன்றும் இல்லை. அதுவும் விரல்களைப் பார்த்தவுடனே, விரல்கள் தொட்டவுடனே அழுகிப் போகும் பூசணிக் காய்கள் இல்லை. நான் உம்முடைய கடூர மான பரசுவையும் தனுஷ் பாணங்களையும் கண்டுதான் பயப் படாமல் வசனங்களைச் சொல்லுகிறேன். எனக்கு என்மீது ஒருவித அபிமானமும் இல்லை." (1461)

"என் முன் நிற்பவர் பிருகு வம்சத்தில் பிறந்த பார்க்கவ ராமர் என்று எனக்குத் தெரியும். அவருடைய பவித்திரமான யக்ஞோப வீதத்தையும் நான் காண்கிறேன். இவைகளின் காரணமாக ஸ்வாமி, நான் க்ரோதம் இல்லாதவனாக தாங்கள் சொல்லும் எல்லா வசனங்களையும் கேட்டுப் பொறுத்துக்கொள் கிறேன். தேவதைகள் பிராம்மணர்கள், பாகவத உத்தமர்கள், பசுக்கள் இவர்களின் பேரில் என்னுடைய புகழ் பெற்ற சூர்ய குலத்தில், வீரத் தனத்தை யாவரும் இதுவரை காட்டினதில்லை." (1462)

"இவர்களை வதம் செய்வதால் பாபம் ஏற்படுகிறது. ஹே, ஸ்வாமி, அவர்களால் தோற்கடிக்கப்பட்டால் அப கீர்த்திதான் உண்டாகிறது. ஆகையால் தாங்கள் என்னைக் கொன்றாலும், நான் உங்கள் பாதங்களை வணங்கி, வந்தனம் செய்கிறேன். ஐயா, உம்முடைய ஒவ்வொரு வசனமும் கோடிக் கணக்கான வஜ்ர ஆயுதத்திற்கு சமம். ஆகையினால் என்னை அடிப்பதற்கு நீங்கள் தனுஷ்ஷையோ, பாணமோ, பரசுவையோ வீணாக, வ்யர்த்தமாகச் சுமக்கவேண்டாம்." (1463)

"உம்முடைய தனுஷ், பாணம், பரசு ஆகியவைகளைக்கண்டு நான் தவறுதலாக, அனுசிதமாகச் சொல்லியிருந்தால், ஹே ஸ்வாமி, மஹா முனியே, சாந்தி ஸ்வரூபமாயுள்ள தீரராகிய மஹா முனிவரே, க்ஷமை செய்யவேண்டும். எங்களிடம் அனுக்ரஹ புத்தியுடன் இருக்கவேண்டும்." இந்த வசனங்களைக் கேட்டு, பிருகு வம்ச மணியாகிய பரசுராமர் மிக்க ஆக்ரோஷத்துடன் கம்பீரமான வார்த்தைகளைச் சொன்னார். (1464)

"ஹே கௌசிகனே, நான் சொல்வதைக் கேளும். இந்த மந்த புத்திபடைத்த பாலகனுடைய வசனங்களைக் கேட்டீரா? குடில புத்திபடைத்தவன், காலவசமடைந்தவன். பிடிவாதமாகத் தன்னைதானே காலனுக்குக் காட்டிக்கொடுக்கிறான். பானு வம்சத்தின் பூர்ணசந்திரனுக்கு களங்கம் செய்கிறான். இந்தப் பையன் உத்தண்டன், கட்டுக்கு அடங்காதவன். மூர்க்கன். பயமில்லாதவன்." (1465)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மிராமா, சுசிர்வஸ்யः ஸமாதிமான், உன் தாஸ்யர்களை "ஜனே அயம் ஸ்வஜனோமம" என்று உன்னை அடைந்தவர்களை நீ எப்போதும் குஸலம் செய்வாயாமே, என் குருநாதர்களான வால்மீகியும் தியாகராஜரும் உங்களுடைய திவ்ய ஸௌலப்யத்தைப் புகழ்கிறார்களே. கைங்கர்ய லக்ஷ்மி தான் சிறந்த போக்யம் என்று நினைத்த லக்ஷ்மணனும் பலதேவனும் உன்னுடன் பூமியில் அவதரித்தார்கள். உன் பாதங்கள்தான் உயர்ந்தது என்று ஆஞ்சநேயரும் தியாகராஜரும் துளசிதாஸரும் நானும் நினைத்தேன். வேதாந்த தேசிகர் சொன்னபடி உன் பாதங்களின் திவ்யபெருமைகளை யாரால் சொல்லமுடியும்? ஐயா, உன் ஒரு காலால் சகடம் ஒடிந்ததும், மற்றொரு காலால் அகல்யை சாபத்தினின்று நீங்கி உயிர் பிழைத்ததும், சதி என்று அவளை பக்தர்கள் புகழ்வதும் எல்லோருக்கும் தெரியும். உன்

இரு பாதங்களும் அர்ஜுனனுக்கு தேர்தட்டிலிருந்து உதவி, நீ அம்ருதமயமான கீதையைப் பொழிந்து என்போன்ற வைஷ்ணவர்களுக்கு "மாம் ஏகம்" என்கிற பதத்தால் சௌலப்யத்தை காட்டிக்கொடுத்தாய். ஹே ஸாதுஜனப்பிரியா, ஆஸ்ரித வாத்ஸல்யா, தரும நெறியில் நடந்த தருமனுக்கும் திரௌபதிக்கும் வலுவில் ஆரண்யம் வந்ததும், துஷ்டர்களான கௌரவர்களிடமும் கால் நடந்து தூதுபோனாயே—அந்தப் பாதங்களை மகளாகிய பிராட்டி தன் கைகளினால் வருடும்போது, அந்த மலர் பாதங்கள் பூவினும் மெல்லிய மெல்லிளுளின் கரங்களால் மலர்ந்த செந்தாமரை புஷ்பத்தைக் காட்டிலும் சிவந்தன என்று என் குருநாதரான வேதாந்த தேசிகர் சொன்ன பொற்பாதங்களை எனக்குத்தாரும் ஐயா. ஆரண்ய காண்டத்தில் உயர்ந்த பொருளான உன் தரிசனமும், உன் சௌலப்ய வார்த்தைகளும் ஆச்சரியமாக வலுவில் உன் ஸ்வதந்திரமாகச் செய்யப்பட்ட செய்கைகளும் ஐயா, பிரஹ்லாதனுக்காகச் செய்த சபதத்தை நினைத்து, மறுபிறவி அறும் முனிவர்களின் பக்திக்குத் தந்த உன் திவ்யமலர் பதங்களை எனக்கு சதா தரவேண்டும். என் உள்ளத்தில் திருமால் புகுந்தான், என் நாவுக்கு உன் நாமம் அமைந்தன என்று அமுதமயமாய் பாடும் திருக்குருகூர்பிரானுன நம்மாழ்வார் பாடும் பெருமையைப் பெற்ற பகவானே, சித்ரா நக்ஷத்திரத்துடன் கூடிச் சேர்ந்து விளங்கும் சந்திரன்போல விளங்கும் சீதாராமா, சுமந்திரருக்கும் அக்ரூரருக்கும் அளித்த உன் திவ்ய தரிசனம் "யதாஸுநயனம் வல்கு பிம்போஷ்டம் சாருகுண்டலம் முகம் த்ரக்ஷ்யஸி ராமஸ்ய பூர்ணசந்திரரிவோதிதம், சாருதத்வதனம் என்று புகழப்படும் உங்கள் திவ்ய தரிசனங்களும், பரதன், ஆஞ்சநேயர், தியாகராஜர் கேட்ட மதுரமான அந்தரங்கமான சொற்களும், மதுரமான குரலில் மிருதுவான பாஷையினுல் சொல்லப்பட்டதும், யசோதை, கௌஸல்யை, லக்ஷ்மணன் இவர்களால் கேட்கப்பட்டதும், பிருகு குலபதியும், சுக்ராசாரியருடைய வம்சத்தில் பிறந்த பார்க்கவரான பரசுராமரால் சதா தியானிக்கப்படும் ஸ்ரீராமனுடைய உயர்ந்த மனத்தையும் பாதங்களையும் நான் வேண்டுகிறேன். தர்மமே சிறந்தது, அதிலும் ஸ்வதர்மமே சிறந்தது, என்று நீயும் ஜமதக்னியரான பரசுராமரும் காண்பித்தீர்கள். உங்கள் இரண்டுபேர்களிடமும் உள்ள இரண்டு தர்மங்களும் ஒரே ஸனுதனமான தர்மமாகவும், பரமாத்மாவாகவும் இருக்கக் காண்கிறேன். ஆகையால் உங்கள் இருவர்களுக்கும், சீதாராம

னுக்கும் ஜயங்கள் ஏற்படட்டும். ஜயலக்ஷ்மியுடன் கூடின ராமா, நீர் பரசுராமனிடம் அன்பு காட்டினதற்கு வேறு என்ன சிறந்த காரணமிருக்கக்கூடும்? ஒருவேளை நாகராஜனுன லக்ஷ்மணன் அறிவான். ஹே கிஷ்பதி, உனக்குத் தெரியும். நீங்கள் என்னை ரக்ஷிக்கவேண்டும்.]

"இந்த க்ஷணத்திலே இவனைக் காலனிடம் சேர்க்கிறேன். நான் பகிரங்கமாக முழங்கிக்கொண்டு உறுதியாகச் சொல்கிறேன், எனக்கு பிற்பாடு தோஷமிருக்காது. ஹே விஸ்வாமித்திரா, இந்தக் குழந்தையைக் காப்பாற்ற விரும்புவாயாகில், என்னுடைய பிரதாபத்தையும் பலத்தையும் என்னுடைய ரோஷத்தையும் இவனுக்குச் சொல்லி இவனை அடக்கும்." (1466)

லக்ஷ்மணன் திரும்பச் சொன்னன். "ஹே முனி, உம்முடைய சுபமான கீர்த்திகளும் உம்மிடம் வீற்றிருக்கின்றபோது, எதற்காக பிறரால் வர்ணிக்கப்படவேண்டும்? தாங்களே நேரில் வந்திருந்து அவைகளைச் சொல்லும்போது பிறர் உதவி எதற்கு? உங்களுடைய திருவாயால் அநேக தடவைகள் உங்கள் பிரதாபங்களைச் சொல்லியிருக்கிறீர்கள். அநேகவிதங்களாகவும் வர்ணித்திருக்கிறீர்கள்." (1467)

"இவ்வளவு சொல்லியும் உமக்கு திருப்தி ஏற்படாவிடில் இன்னொரு தடவையும் சொல்லும். உம்முடைய க்ரோதத்தை அடக்கி, அஸஹ்யமான துக்கத்தைப் பொறுக்க வேண்டாம். ஐயா, தாங்கள் வீரவ்ரதத்தை ஆபரணமாக அணிந்திருக்கிறீர். மஹாதைரியவான். ஆனல் வசவுகளாலும் வாய்திட்டுகளாலும் நீங்கள் சொல்வதால் அவைகள் உங்களுடைய கீர்த்திகளுக்கு சோபைகள் தரக்கூடியதல்லவே." (1468)

"சுத்தமான வீரன் யுத்தத்தில் தன் வீரத்தைக் காண்பிப்பான். வெறும் வாய்வீச்சினுல் சொற்களைச் சொல்லி காண்பிக்க மாட்டான். யுத்தத்தில் பயமடைந்த கோழைகள் சத்ருக்களால் ஆக்ரமிக்கப்பட்டபொழுது தங்களுடைய பிரதாபங்களை வீண் பெருமைப்படுத்திக்கொண்டு ஆரவாரம் செய்வார்கள். தாங்களோ, ஸ்வாமி, காலனுகிய யமனை அடிக்கடி அதட்டிக் கூவி அவனையும் எனக்காக கூப்பிடுகிறீர்கள்." லக்ஷ்மணனுடைய கடூரமான வசனங்களைக் கேட்டு பரசுராமர் இன்னும் அதிக கோபம் ஜ்வலிக்க தன்னுடைய பயம்தரும் பரசுவை கையில் எடுத்து, தயார் செய்துகொண்டார். (1469)

அப்போது அவர் சொன்னர். "இப்போது லோகம் என்னைப் பழிக்காது. எனக்கு தோஷம் ஒன்றும் கற்பிக்கமாட்

டார்கள். மிக்கக் கசப்பான வார்த்தைகளைப் பேசும் இந்த பாலகன் நான் வதம் செய்வதற்கு யோக்யமானவன். இவன் பாலகன் என்கிற காரணத்தால் இதுவரை நான் ஒன்றும் செய்யாமல் காப்பாற்றினேன். ஆனால் இப்பொழுது நிச்சயமாக இவன் என் கையால் மரணத்திற்கு ஆளாகிவிட்டான்.'' (1470)

அந்த சமயம் கௌசிக முனிவரான ஸ்ரீவிஸ்வாமித்திரர் சொன்னார். ''இந்த பையனுடைய அபராதத்தை பொருத்தருள்வீர். பாலகர்களுடைய குணதோஷங்களை ஸாதுஜனங்கள் லக்ஷயம் பண்ணமாட்டார்கள்.'' ஆனால் பரசுராமர் மேலும் சொன்னார். ''என்னுடைய பரசு ரொம்ப தீவ்ரமான கூர்மையுள்ளது. நான் தயையில்லாதவன். மிக்க கோபமுடையவன். இவனோ பெரும் குருத்ரோஹி. அதனால் பலத்த அபராதியாகிறான்.'' (1471)

''நான் சொல்லும் வார்த்தைகளுக்கு உத்தரம் கொடுக்கிறான். இவனுக்கு பயமில்லை. அவ்விதம் இருந்தாலும், இவனை உம் வார்த்தைக்காகவும், உமக்கு என் மீதுள்ள பிரேமை சீலத்தின் காரணத்தாலும், ஹே விஸ்வாமித்ரா, கொல்லாமல் விட்டு விடுகிறேன். நீர் சொல்லியிருக்காவிடில், இவனை இந்த க்ஷணமே இந்த கடூரமான பரசுவினால் வெட்டி வெகு பரிஸ்ரமத்துடன் குருவாகிய என்னை மரியாதை செய்யாமலிருந்த பாவத்திற்குத் தக்க தண்டனையை விதித்திருப்பேன்.'' (1472)

[தியானம்

ஹே சீதாராமா, சம்போ மஹாதேவா, கிரிஜாரமணா, பரம தயாகரா, வ்ருஷாகபி, விஷ்வக்ஸேனரே, விஸ்வதக்ஷிணரே, யோகி ஜனங்களின் சித்ஸ்வரூபமே, சீதையை ஆனந்திக்கிறவரே, ஸ்ரீராமா, ஜமதக்னியின் குமாரரே, ஸத்தியவதியின் பேரரே, இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த ரேணுகாவின் குமாரரே, ரிசீகரால் ஸகல சம்பத்துக்களும் ஐஸ்வர்யங்களும், பராக்ரமும் வீரமும், பிரும்மதேஜஸ்ஸும், சக்தியும் உம்மை வந்து அடைந்தன. சாவித்திரி மந்திரத்தால் ஸ்வீகரிக்கப்பட்ட நாராயண அம்சரே, பரசுராமரே, அநிருத்தரூபியே, சங்கர்ஷண மூர்த்தியால் பார்க்கப்பட்டவரே, நாராயணரே, ஆர்த்திகளின் துக்கங்களைப் போக்கும் தயாளுவே, என் குருநாதரான பீஷ்மரின் குருவே, பார்க்கவரே, தரணியின் புருஷரே, பிராம்மணரே, க்யாதியின் வம்சத்தில் பிறந்தவரே, பித்ருக்களின் திருப்திக்காக நிவிருத்திமார்க்கம் அடைந்தவரே

ஸ்திரரே, ஸாஸ்வதரே, சுரர்களாலும் நரர்களாலும் பூஜிக்கப்பட்டவரே, பூமியைக் காப்பாற்றினவரே, விஸ்வாமித்திரரின் பிரியரே, ஜடாமண்டலதரரே, உம்முடைய தபஸ்ஸுக்கும் ராமனுடைய கண்ணுக்குகளுக்கும், லக்ஷ்மியின் பாதங்களுக்கும் நான் நமஸ்காரம் செய்கிறேன். நீங்கள் என்னை ரக்ஷிக்கவேண்டும். பவஹரரே, தியாகராஜ உள்ளத்தால் மனம் கசிந்து வரும் பக்தி ஸ்வபாவத்தால் நான் உங்களை வந்தடைகிறேன். நீங்கள்தான் என் தஞ்சம். சரணாகத பிரியா.]

கௌசிக ஸ்ரேஷ்டரானவரும், சாந்தி, ஞானம், திதிக்ஷை, ஸம்பூர்ண பிராம்மணனுடைய திவ்ய கல்யாண குணங்கள் கொண்ட விஸ்வாமித்திரர், காதி வம்சத்தின் சிரோண்மணி, தன் ஹ்ருதயத்தில் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார். "முனிக்கு எல்லாம் ஒரே பசுமையாகத் தோன்றுகிறது. (எல்லா க்ஷத்திரியர்களையும் ஹரியினுடைய விரோதிகள் என்றும், அவர்களை இவர் விஜயம் செய்ததால், இந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்களும் க்ஷத்திரியர்களானபடியால் இவர்களையும் அவ்விதமே நினைத்திருக்கிறார் போலும்) ஆனால் இங்கேயோ இந்த ராம லக்ஷ்மணர்களோ இரும்பு ரூபமான முள்கத்திபோல தீவிரமுள்ளவர்கள். இந்த முள்ளின் ரஸம் கரும்பின் ரஸத்தினால் பண்ணப்பட்டதல்ல. சுத்தமான வீரரஸம் கொண்டவர்கள். இந்த முனிக்கு விவேகமில்லை. விஷம் கொண்டு இவர்களைப் பார்ப்பதால் இவர்களின் பிரபாவங்களைச் சரியாக அறிகிறாரில்லை." (1473)

லக்ஷ்மணன் மேலும் சொன்னான். "ஹே பார்க்கவரே, உம்முடைய சீலத்தைப்பற்றி யாருக்குத்தான் தெரியாது? அதைப்பற்றி இந்த ஸம்சாரம் முழுவதும் தெரிந்திருக்கிறதே. தாங்கள் உம்முடைய மாதா பிதாக்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைப் பூர்த்தியாகச் செய்து அநிருணமாக போய்விட்டீர்கள். இப்போது குருவினுடைய கடன்தான் பாக்கியிருக்கிறது. அதைப்பற்றித்தான் நீங்கள் மிக்க கவலைப்படுகிறீர்கள்." (1474)

"இப்பொழுது என்மீது அந்த பாரத்தை (பொறுப்பை) சுமத்தியிருக்கிறீர். அநேக தினங்கள் சென்றுவிட்டன. இதனால் வட்டியும் முதலுமாக ரொம்ப வளர்ந்துவிட்டது. இப்போது கணக்கு தீர்த்து முடிப்பதற்கு ஆளை அனுப்பி கூப்பிடும். நான் உடனே என் கத்தி வைத்திருக்கும் பையை உருவி, பதில் ஜவாப் கொடுக்கிறேன்." (1475)

லக்ஷ்மணனுடைய மிக்க கடோரமான வசனங்களைக் கேட்டு பரசுராமர் தன் கோடாலியைத் தயார் பண்ணிக்கொண்டார்.

அந்த ராஜ அரங்கத்தில் "ஹா, ஹா" என்று சப்தங்கள் கேட்டன. லக்ஷ்மணன் மேலும் சொன்னான். "ஹே பிருகு ஸ்ரேஷ்டரே, தாங்கள் என்னிடம் பரசுவைக் காண்பிக்கிறீரா? நான் மோஹமடையமாட்டேன். ஹே ராஜாக்களின் த்ரோஹியே, பிராம்மணரே, நீர் விப்ரராகவிருப்பதால் உம்மை நான் ஸம்ரக்ஷிக்கிறேன்" (1476)

"ஐயா, உம்மை ரண வீரனை பலவான் யுத்தத்தில் இதுவரை சந்தித்ததில்லை. ஹே பிராம்மண தேவதையே, உம்முடைய வீட்டிற்குள்தான் நீர் பெரியவர்." இந்த வார்த்தை களைக் கேட்டு, இது அனுசிதம், நல்ல வார்த்தைகள் இல்லை. அவமானம் மிகுந்த வார்த்தைகள் என்று எல்லோரும் ஏகோபித்து ஒரே கருத்தினர்களாக சொல்லி எழுந்தார்கள். உடனே ஸ்ரீரகுபதி லக்ஷ்மணனை இங்கிதங்களால் அடக்கினார். (1477)

லக்ஷ்மணனுடைய பதில் வசனங்களாகிற ஆஹுதிகளால் பிருகுஸ்ரேஷ்டரான பரசுராமருடைய கோபாக்னி மிக்க தீவ்ரமாக ஜ்வலித்தது. அதைக்கண்டு ரகுகுல பானு ஸ்ரீராமன் அந்த அக்னியை சமனம் பண்ணுவதுதான் சரி என்று நினைத்து ஆழி மழைக்கு ஸமானமான வார்த்தைகளைப் பொழிந்தார். (1478)

"ஹே நாதா, (ஸகல லோக குருவானவரும், பகவானுமாகிய நாராயணரே,) இந்த அறியாத பாலகனாகிற என் தம்பியின் பேரில் கிருபை செய்யும். தாய்ப்பால் மறக்காத இந்த சிசுவினிடம் க்ரோதம் செய்யாதீர். பிரபு, உம்முடைய ஸநாதனமான பிர பாவங்களை இந்தப்பையன் அறிந்திருப்பானாகில் இவன் உமக்கு சரிசமமாக, புத்தியில்லாதவனாய், தன்னைக் கருதிக்கொண்டு, இவ்விதம் தவறுதல் செய்வானா?" (1479)

"இந்த பாலகன் விஷமத்தனமுள்ளவனாய் ஏதோ தவறு தலாக நடந்து வரம்புமீறி பேசியிருந்தாலும், குரு, பிதா, மாதா இவர்களுக்கு நிச்சயமாக மனத்தில் சந்தோஷத்தை உண்டு பண்ணுகிறான். அவர்களுடைய க்ஷமையை அடைவதற்கு பாலகனாகிறபடியால் பாத்திரனாகிறான். ஆகையால் லக்ஷ்மணனை பாலகனாக மதித்து கிருபை செய்யவேண்டும். நீரோ ஸ்வாமி, ஸம தர்சி, எல்லாவற்றையும் பாரபக்ஷமின்றி பார்க்கும் விஸ்வஸ்ருக் என்று பெயர் பெற்றவர். குணத்தையும் குற்றத்தையும் பாராமல் உயிர்கள் உய்வதையே கருதி உலகத்தை வாழ்விப்பவர். பலவா னாகிய நீர் துர்பலர்கள் தமக்கு அநிஷ்டம் செய்தாலும் உபேக்ஷ செய்யும் விஸ்வமூர்த்தியான நாராயணர். மஹாதீரர். யுத்தத்தில்

பின் வாங்காதவர். பெரும் ஞானி.'' (விஸ்வாத்மா என்று சொல்லும்படி ஞான சக்திகளினுல் உலகமெல்லாம் வியாபித்திருப்பவர்.) (1480)

[தியானம்

ராமா ஜானகிராமா, மஹாலக்ஷ்மி, நாராயணு, பரசுராமா, த்ரிககுத்தாமா, இவ்வுலகமனைத்தும் அணுமாத்ரமாக தோன்றி விக்கும்படி இதற்கு மூன்றுபங்கு விரிவுள்ள திரிபாதவிபூதி எனப் படும் பரமபதத்தை உடைய நாராயணரே, திர்யுகர் (மூன்று இரட்டை உள்ளவர்) அதாவது மூன்று கூறுக்களால் பிரிக்கப் பட்ட ஞானம் சக்தி, பலம் ஐஸ்வர்யம், வீரியம் தேஜஸ் ஆகிற ஆறு குணங்களுக்கு இருப்பிடமான பரிபூர்ணருமான நாரா யணரே, ஹரிபிரியே, தேவாதிதேவா, உம்முடைய நான்குவ் யூகங் களாகிற வாஸுதேவ சங்கர்ஷண அநிருத்த பிரத்யும்ன மூர்த்தி களுக்கு நான் நமஸ்கரிக்கிறேன். பிரதர்த்தனரே, ப்ரபூதரே, பரசுராமரே, ஸ்ரீராமரே, உங்களை நான் நமஸ்கரிக்கிறேன். மஹா லக்ஷ்மி அம்மா, உன் கிருபையால் கிடைத்த பாக்யமே பாக்யம். பகவான் கிருஷ்ணன் உத்தவருக்குச் சொல்லியபடி விபூதி அவ தாரங்களாகிற ராமகிருஷ்ண பரசுராம அவதாரங்கள் போன்ற பகவானுடைய திவ்ய லீலைகளும் புண்ய ஸ்லோகனுடைய கீர்த்தி களையும் பாடிப்போய், இன்று நமக்குள் உறவு ஒழிக்க ஒழியாது என்னும்படி, ஐயா, உங்களுடைய பதபங்கஜங்களின் அம் ருதத்தை ஸதா, ஸந்ததமும் பூஜித்து, ஆசாபாசங்களை ஒழித்து, அக்னியின் தேஜஸ் போன்ற கர்மங்களை கர்மங்களால் அழித்து உன்னுடைய கருணையின் ராசிக்குவியல்களை அடைந்து, உங்க ளுடைய ஆராதனத்தையையே பெரும்பாக்யமாக அடைய வேண்டும். ஹே சுந்தரா, தசரத நந்தனு, உங்களுடைய பிரும் மானந்தத்தை அனுபவித்து, நாரதர், சுகர், வால்மீகி, தியாகராஜர், துளசிதாஸர் போன்ற மஹான்களுடைய ஸத்ஸங்கத்தினுல் இந்த மந்தபுத்தி படைத்துள்ள எனக்கு மோஹம் நீங்கி, சுரர்கள் பூஜிக்கும் உன்பாதங்களை ஆஞ்சநேயர், சிவசக்தி ஐக்ய ஸ்வரூப மாகவிருக்கும் உமை சங்கரர், ஆத்மாராமர்களாக விருப்பது போல நானும் சதா உன் ஹ்ருதயமாக விருக்கவேண்டும். ஹே பகமாலினி, ஸ்ரீவித்யா ராஜகோபாலா, நீங்களே என்கதி. என் ராக த்வேஷங்கள் விலகி, விசுத்த ஆத்மாவினுல் கணபதி ஹரி சரணங்களை தன் ஹ்ருதய தாமரையில் பதியவைத்து நாராயண ஸாந்நித்யம் அடைந்து ஆனந்த மூர்த்தியாக எவ்விதம் விளங்கு

கிருரோ, அதுபோல என்மனமும் சாகரம்போல் விசால விலாசங்களை உடைய உன் கீர்த்திகளை ஆராய்ந்து, வேதங்கள், ஆகமங்கள் முதலிய ஞான ஐஸ்வர்யம் கொண்டதும், சுகரால் அனுபவிக்கப்பட்டதுமாதிரி உன் ஆனந்த கீர்த்தி வைபவங்களை அனுபவிப்பேனே? யாகபாலனு, விஸ்வாமித்ரர், மஹாஉரகர், பதகேஸ்வரன், விஷ்வக்ஸேனர், குஹன் எனக்கு அருள் பண்ணுவார்களா ?]

ஸ்ரீராமனுடைய மதுரமானதும் மஹார்த்தங்கள் கொண்டதுமான வசனங்களை ப்ருகு புங்கவரான பரசுராமர் கேட்டதும், மழையினால் நனைக்கப்பட்ட அக்னி தணிவதுபோல கொஞ்சம் சமனமடைந்தார். ஆனால் லக்ஷ்மணனே ஏதோ வாயினால் முணகிக்கொண்டு தன் பல்லைக் காட்டிச்சிரித்தான். அவன் சிரித்ததைக்கண்டு கால் நகங்களிலிருந்து சிகைவரை ஒவ்வொரு அணுவிலிருந்தும் க்ரோதத்தினால் வியாபிக்கப்பட்டு ஸ்ரீபரசுராமர் கோபமூண்டவராய் ஆக்ரோஷத்துடன் கதறினர். "ஹே ராமா, உன்னுடைய தம்பி பெரும்பாபி" (1481)

"அவனுடைய சரீரம் சிகப்பு நிறம். ஆனால் அவன் உள்ளமோ ஸ்யாமநிறம் (கருப்பு நிறம் கருணையை காட்டும் என்று சொல்லுவார்கள்) இவன் வாயோ காலகூட விஷம் கொண்டது. பாலகனுகிற இவன் சாப்பிடுவது பால் அல்ல. இவன் ஸ்வபாவத்தில் வளைந்து நெளிகிறவன். உன்னை இவன் அனுசரிக்கிறதில்லை. (உன்னைப்போல சீலவானுகவும், பரிபூர்ணனுமாகவும் இல்லை. ப்ரதிஷ்டிதர் என்கிற பெயருக்கு ஏற்ப மற்ரெரு ஆதாரத்தை வேண்டாதபடி மகிமைகள் பொருந்திய ஆறு குணங்கள் நிறைந்த நாராயணராகிய ஆதிப்ரம்மம் என்று இவனை சொல்லுவதற்கில்லை.) இவன் நீசன். (பிறப்பில் உனக்கு அடுத்தவன்.) என்னை காலனுக்கு சமமாக (ப்ரதரித்தகர் என்று பகவானுக்கு ஒரு நாமம்) நினைக்கிருனில்லை." (1482)

மீண்டும் லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு பதில் சொன்னன். "ஹே முனியே, க்ரோதம் பாபத்திற்கு மூலகாரணம். அதன் வசமடைந்த மனுஷ்யன் அதனுல் தூண்டப்பட்டு அனுசிதமான கர்மங்களைச் செய்து, இந்த விஸ்வமனைத்துக்கும் பிரதிகூலமான எதிரியாகவும் ஆகிவிடுகிருன். எல்லா சராசரங்களுக்கும் அஹிதம் (கெடுதல்) செய்கிருன்." (1483)

"முனிராஜரே, ஐயா, நான் உம்முடைய தாஸன். ராமனைப் பஜிக்கும் என்னிடம் க்ரோதத்தை அறவே ஒழித்து, பாகவத உத்தமனுன எனக்கு தயைபண்ணும் ஸ்வாமி. என் ஸ்வாமியே, ஒடிந்த துண்டுகளாக விழுந்த இந்த வில்லானது க்ரோதம்

செய்வதினால் மீண்டும் ஒன்றாகிவிடுமா? தாங்கள் நின்று கொண்டே இருப்பதினால் உங்கள் கால்களுக்குத்தான் நோவு ஏற்படும். தயவுசெய்து உட்காருங்கள்.'' (1484)

''உமக்கு இந்த வில்லானது அதிபிரியமாகவிருக்கும் பக்ஷத்தில் ஏதாவது உபாயம் செய்யும். அதனால் நல்ல, தேர்ந்த கார்யஸ்தனின் உதவியால் இந்த வில்லை ஒன்றாக செய்துவிடச் சொல்லவும்.'' இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஜனகருக்கு பயம் வந்தது. அதனால் அவர் லக்ஷ்மணனைப் பார்த்து ''போதும் பேசாமலிரு. சபையின் நடுவில் அனுசிதமான வார்த்தைகளைப் பேசுவது அழகல்ல. நன்மையைப் பயக்காது'' (1485)

ஜனகபுரியிலுள்ள நர நாரிகள் பயத்தினால் நடுநடுங்கினார்கள். தங்கள் மனத்திற்குள் சொல்லிக்கொண்டார்கள். ''இந்த ''சோட்டா'' பையன் (சிறியவன்) பெரிய திமிர்பிடித்த முரடனாகவிருக்கிறான். சொல்லுக்கு அடங்காதவன்.'' லக்ஷ்மணனுடைய நிர்பயமான குரலின் வசனங்களைக் கேட்டு பிருகுபதியான பரசுராமர் வெகு க்ரோதத்தால் தீவிரமாக ஜ்வலித்தார். ஆனால் அவருடைய ஸநாதனமான பலம் தணிய ஆரம்பித்தது. அத்துடன் தேஜஸ்ஸும் குறைய ஆரம்பித்தது. (1486)

அந்த சமயம் பரிபூர்ண குணங்கள் உள்ள ஸ்ரீராமன்தான் தனக்கு உதவுவான் என்று அறிந்து, பரசுராமர் ராமனைப் பார்த்துச் சொன்னார். ''ராமா, உன் இளைய தம்பி என்று நினைத்து இவனைக் கொல்லாமல் விட்டுவிடுகிறேன். இவனுடைய மனமானது கல்மஷங்கள் கொண்டது. ஆனால் இவனுடைய சரீரமோ சுந்தரமாகவிருக்கிறது. விஷரஸம் நிரம்பின கனக (தங்கக்) குடம் போல விளங்குகிறான்.'' (1487)

இந்த வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் மீண்டும் சிரித்தான். ஆனால் ஸ்ரீராமன் லக்ஷ்மணனிடம் சீறிவெகுண்டு அவனை அடக்கினார். இதனால் லக்ஷ்மணன் வெட்கப்பட்டு இறைவனாகிய ஸ்ரீராமனுடைய அருளைப் பெற எண்ணங் கொண்டவனாகி, விபரீதமான வார்த்தைகளைச் சொல்லுவதை விட்டுவிட்டு (உலக மரியாதைகளை சிறிதும் அறியாத இளம் தம்பியான நான் உன்மீது கொண்ட அன்பினால் பெயர்களைச் சொல்லி நாராயண அம்சரான பரசுராமரை அவமதித்ததைக் குறித்து வருந்தி, ஸ்ரீராமனை கோபித்தருளாதே என்று வேண்டுகிறவராக, அதே மனோபாவனையுடன்) குருவான விஸ்வாமித்திரரிடம் வந்துசேர்ந்தான். (1488)

மிருதுபாஷணுகிற ஸ்ரீராமன் அதிவினயத்துடன் குளிர்ந்த பார்வைகளுடன் அம்ருதமயமான ஹ்ருதயத்துடனும் தன் கரக் கமலங்களை (ஸநாதனமான ஆதிபுருஷரான நாராயண அம்சத் துடன் விளங்குபவரும் பெரும் ஞானத்துடன் விருக்கும் பரசு ராமரை அநிருத்த மூர்த்தியாக பாவித்து) குவித்து, அஞ்சலி செய்து கொண்டு கோமள அம்ருத வசன வர்ஷங்களை (கபஸ்தி நேமி என்கிற பெயரை உடைய விஷ்ணுவைப்போல) பரசுராம ரிடம் பொழிய ஆரம்பித்தார். "ஹே, பிரபோ, தயவுசெய்து கேளும். ஐயா, தாங்கள் ஸ்வபாவமாகவே விக்ஞானம் படைத்த வர். (விஸ்வாத்மா, விஸ்வபுக் என்கிற பகவானுடைய நாமங்களை நினைத்துப்பார்க்கவும்) இந்த பாலகனுடைய வார்த்தைகளைக் காதில் போட்டுக்கொள்ள வேண்டாம். வலிக்கும்படி கொட்டும் குழவிகள், குழந்தைகள் ஒரே ஸ்வபாவமுள்ளவர்கள். ஸாது ஜனங்கள் இவர்களுக்கு தோஷங்கள் கற்பிக்கிறதில்லை. மேலும் ஸ்வாமி, இந்த வில்லை ஒடித்த காரியத்தில் இந்த லக்ஷ்மணனுக்கு ஒரு காரியமும் (ஒரு பாகமும், பங்கும் பொறுப்பும்) ஒன்றுமில்லை. ஹே நாத, இதில் அபராதி நான்தான்." (1489)

[தியானம்

ஹே ராமா, ஸர்வாதாரா, சீதாராமா, ஜானகிவல்லபா, ராஜீ வாக்ஷா, ஸ்ரீ நாயகா, பவரே, சர்வரே, மஹாதேவரே, லோபா முத்ரை அகஸ்தியரால் ஆராதிரிக்கப்பட்ட லலிதாதேவியே, உமையே, துர்க்கே, மஹாகாளி, மஹாசக்தி, நாராயணி, கிருஷ்ணரே, தாமஸகுணமுள்ள காளிங்கனிடம் கருணை காட்டிய வள்ளலே, சிருஷ்டிகர்த்தாவே, உம்மால் ஸ்ருஷ்டிக்கப் பட்ட முக்குணங்களின் காரியமானது பலவிதமான சுபாவம், வீர்யம், பிரதாபம் முதலியவைகளுக்கு காரண பீஜமாக விளங்கு கிறது. ஸ்வாமி ஆதிமூலமே, கஜரக்ஷக, எல்லா சராசரங்களையும் ரக்ஷிக்கிறீர், மயக்குகிறீர், உம்முடைய மாயையை யாரால் விலக்க முடியும்? சராசரங்களனைத்துக்கும் குருவானவரும் புராண புருஷருமாகிய நாராயணரே, சர்வக்ஞரே, சர்வசக்திமானே, மாயைக்கும் காரணபூதமா யிருப்பதால் நீர் நிக்ரஹமோ அனுக்ரஹமோ எது செய்தாலும் எங்களுக்கு சம்மதம். அனந்த ராயும் சூக்ஷ்மராயும் கூடஸ்தராயும் சொற் பொருள்களின் சக்தி ரூபமாயிருக்கும் உமக்கு நமஸ்காரம். பிரமாணங்களுக்கு மூல காரணமாயும், காவிய சாஸ்திரங்களுக்கு ஆதி காரணமாகவும், உலகத்தில் பிரவிருத்திக்கிறவராகவும், அதைவிட்டு நீங்கி

நிவிருத்தியிலிருப்பவராயும், வேதஸ்வரூபமா யிருக்கிற உமக்கு நமஸ்காரம். மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் இவைகளில் தாண்டவமாடி பிரகாசிப்பவரும், இவைகளால் அறியப்படுகிற வராகவும், அர்ஜுனன், தேவகி, ஆஞ்சநேயர், திரிதர், நாரதர் பிருஹஸ்பதி, சுக்ரர், தியாகராஜர், துளசிதாஸர் இவர்கள் போன்ற மஹாத்மாக்கள் அறிந்த சாத்வதாம்பதிக்கு நமஸ்காரம். நாம ரூபங்கள் அற்ற அரூபருக்கும், அவைகளுக்கு ஆதாரமான வரும் ஸர்வ சாக்ஷியுமாக விளங்கும் உமக்கு நமஸ்காரம். தேவ, தேவி, உங்களுடைய பார்வையால் பிறப்பு, இருப்பு, இறப்பு, இவைகளை நடத்துகிறவரும், பிராணிகளின் கர்மவாஸனையை அனுசரித்து அவரவர்களின் வழியில் கர்மாக்களை செய்யும்படி நிய மிக்கும் நியந்தாவே, விளையாட்டானது உன்னுடையதே. கர்மங் களின் பலனும், அந்தப்பலனையே அனுபவிக்கிற போக்தாவும் நீங்களே. ஹே விபோ, சாதுக்களுடைய தர்ம காரியங்களை இரட் சிப்பதற்காக அவதாரம் செய்த உமக்கு சாந்தர்களான சாதுக் கள் தான் பிரியமானவர்கள். உம்மைச் சரியாகத் தெரியாமல் உம் முடைய பிரஜைகளில் ஒருவனாகிய என்னை குற்றங்கள் நிறைந்த போதிலும், ஸ்வாமி, எங்களை மிக்க பயங்கரங்களிலிருந்து விடுபடக்கூடிய உன்னுடைய அரவிந்த லோசனமான பார்வை யாலும் மிருதுவான வாணியாலும், கோதண்டபாணியாலும், ஆதரவு தரும் லக்ஷ்மியாகிற அம்மாவினுடைய மேலே தூக்கும் கர கமலங்களாலும், ஆஞ்சநேயர் போன்ற மஹாத்மாக்கள் உபாஸிக்கும் ராமகிருஷ்ண, அனந்த, பிரத்யும்னர், அநிருத்த, பரசுராம, லக்ஷ்மண மூர்த்திகளுக்கு நமஸ்கரிக்கிறேன். நீங்கள் தான் எனக்கு கதி.]

"ஹே கோஸாயி, பிராம்மணஸ்ரேஷ்டரே, உங்களுடைய பரிபூர்ணமான க்ருபை, கிரோதம், வதம், பந்தனம் (கட்டுதல்) போன்ற தண்டங்களோ, எதை வேணுமானாலும் என்னிடம் செய்யும். நான் உம்முடைய தாஸன். நீர் எதைச் செய்தாலும் எனக்கு பரிபூர்ண சம்மதம். உம்முடைய க்ரோதம் தணியும்படி உமது தண்டம்செய்யும் இச்சை எவ்விதம் பூர்த்தி அடையப் படுமோ, ஹே முனிநாயகரே, அதை எனக்குச் சொல்லும். நான் அதன்படி உமது கட்டளையை சிரத்தையுடன் நிறைவேற்று கிறேன்." (1490)

முனி சொன்னார். "ஹே ராமா, க்ரோதம் எவ்விதம் போகும்? இப்போதுகூட உன் தம்பி கோணலான பார்வையுடன் என்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். இவனுடைய கழுத்தில்

நான் இன்னும் என் பரசுவை பாய்ச்சவில்லை. ஆகையால் நான் க்ரோதத்துடன் என்ன செய்துவிட்டேன்?'' (1491)

''என்னுடைய கோரமான கோடாலியின் செய்கைகளைக் கேட்கும்போதே ராஜாக்களின் பத்தினிகளின் கர்ப்ப சிசுக்கள் நழுவிவிடுகின்றன. அப்பேற்பட்ட பயங்கரமான பரசுவை நான் வைத்திருந்தும்கூட இந்தசத்ருவான ராஜபுத்ரன் இன்னும் ஜீவித்திருப்பதை நான் இன்னும் பார்த்துக்கொண்டிருக் கிறேன்.'' (1492)

''என்னுடைய கைகள் இந்தக் காரியத்தில் செல்ல மறுக் கின்றன. என்னுடைய ஹ்ருதயம் க்ரோதத்தினுல் எரிகிறதா? நீயே சொல். ஹே நாத, ராஜாக்களின் தலைகளை வெட்டிச்சாய்த்த இந்த பரசு இப்போது மழுங்கிப் போய்விட்டது. தேவதேவரான நாராயணர் விபரீதமாக என்னை மாற்றிவிட்டார். அதனுல் என்னுடைய ஸ்வபாவங்கள் பதில் அடைந்து, மாறிப்போய் கிருபா ஸமுத்திரம் பொங்குவது போல என்மனம் உங்களிடம் பொங்குகிறது. இல்லாவிடில் எப்போதும் தயைவரண்ட என் மனத்தில் இப்போது ஏன் கிருபை வெள்ளமாக பொங்க வேண்டும்?'' (1493)

''ஹே ராமா, உன்னைக் கண்டு இந்த புது உணர்ச்சியால் ஏற்பட்ட என் மனம், என் உடம்பு, என் செய்கைகள் ஆகிய எல்லாம் துக்கம் மேலிட்டு, தயையுடன் நான் அடக்கமுடியாத வருத்தத்தையும் பச்சாதாபத்தையும் அடைந்து, தயையால் பிரகாசித்துக் கொண்டும், அனுபவித்துக் கொண்டுமிருக் கிறேன்.'' (1494)

இந்த வார்த்தைகளைக் கேட்டு சுமித்திரையின் பிள்ளையான லக்ஷ்மணன், விகஸித்த முகத்துடன் தலைவணங்கியவனுகப் பதில் சொன்னுன். ''ஹே ஸ்வாமி, தங்களுடைய கிருபாமூர்த்தி யின் மூச்சுக்காற்றுகள் தங்களுடைய மூர்த்தி ஸ்வரூபத்திற்கு ஏற்றவைகளே. தாங்களோ ஸ்வாமி, வசனங்களை அழகாகச் சொல்லுகிறீர்கள். ஆனுல் தங்கள் வார்த்தைகளோ புஷ்பங்கள் கடும் வேகத்தால் மரங்களிலிருந்து உதிர்வது போல உதிர்கின்றன.'' (1495)

''ஹே முனிபுங்கவா, தாங்கள் கிருபைசெய்யும் பக்ஷத்தில் தங்கள் சரீரமானது இவ்வளவு உக்ரமாக அக்னியைப் போல ஏன் ஜ்வலிக்கவேண்டும்? நீர் கிருபையுடன் யிருக்கும்போதே இவ் விதமானுல், தாங்கள் நிச்சயமாக க்ரோதம் அடைந்தீராகில், எவ்விதம் தங்கள் சரீரம் விளங்குமோ, அப்போது கடவுள்தான்

எங்களைக் காப்பாற்றவேண்டும்.'' இந்த வார்த்தைகளைக் கேட்டு பரசுராமர் உறுமினார். ''ஜனகனே, இதைப் பார். இந்த மூர்க்கனான பாலகன் தன் பிடிவாதத்தினால் யமபுரிக்குச் சென்று போய் வாழவிரும்புகிறான்.'' (1496)

''இவனை என் பார்வைகளிலிருந்து ஏன் இழுத்துச் செல்ல மாட்டேன்கிறாய்? இந்த ராஜபுத்ரன் பார்ப்பதற்கு சிறிய உருவம் படைத்திருக்கிறான். ஆனால் இவன் பெரிய மூர்க்க பிடிவாத முள்ளவன்.'' லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு தன் மனத்திற்குள் முணுமுணுத்துக்கொண்டிருந்தான். ''நீங்கள் கண்களை மூடிக் கொண்டால் ஒருவருமே உமக்கு தென்படமாட்டார்கள்.'' (1497)

அச்சமயம் பரசுராமர் தன் ஹ்ருதயத்தில் அத்யந்தக்ரோதத்தை வரவழைத்துக்கொண்டு ஸ்ரீராமனிடம் சொன்னார். ''ஹே மூடனே, நீ சிவனுடைய வில்லை முறித்துவிட்டு, எனக்கு ஞானம் புகட்ட வருகிறாயா?'' (1498)

''உன்னுடைய தம்பி உன் சம்மதத்தின்பேரில் இந்த கடுமையான வசனங்களைச் சொல்கிறான். ஆனால் நீயோ கபடத்தினால் கைகளைக் கூப்பிக்கொண்டு வினயத்துடன் என்னிடம் சம்பாஷிக்கிறாய்: என்னுடன் யுத்தம் செய்து என்னை சந்தோஷப்படுத்து. இல்லாவிடில் உன் பெயரான ராமன் என்கிற நாமத்தை விட்டுவிடு.'' (1499)

''ஹே சிவத்ரோஹி, உன்னுடைய கபடத்தை விட்டுவிட்டு என்னுடன் யுத்தம் செய். இல்லாவிடில் உன் தம்பி உள்பட உன்னையும் வதம் செய்து விடுவேன்-'' இவ்விதம் சொல்லிய பிருகுபதி தன்னுடைய பரசுவை எடுத்து தயார் செய்துகொள்ளும்போது பகவானாகிய ராமச்சந்திரன் தனக்குள் சிரித்துக் கொண்டு தன் தலையை வணங்கினார். (1500)

பிறகு ரகுநந்தனன் தனக்குள் சொல்லிக் கொண்டார். ''தோஷமோ (குற்றமோ) லக்ஷ்மணன் செய்தது. ஆனால் இவருடைய க்ரோதமோ என்மீது இருக்கிறது. உலகத்தில் சில சமயங்களில் நேர்மையாக நடந்தால்கூட பெரிய தோஷம் ஏற்படுகிறது என்று சொல்லுவார்கள். எண்சாண் உடம்பை குறைத்துக்கொண்டு வணங்கிய மனிதர்களை எல்லோரும் வந்தனம் செய்கிறதில்லை. வக்ரக்ருஹமாகிய ராகு பூர்ண சந்திரனை விழுங்குகின்றதே ஒழிய, அது தேய்பிறை சந்திரனை விழுங்குகிறதில்லை.'' (1501)

பிறகு ஸ்ரீராமச்சந்திரன் மனம்விட்டு பின்வருமாறு பதில் சொன்னார். ''ஹே முனீஸ்வரரே, தயவுசெய்து என்மீதுள்ள

க்ரோதத்தை விட்டுவிடுங்கள். தங்களுடைய கைகளில் பரசு இருக்கிறது. என்னுடைய சிரசும் உமக்கு முன்பு தலைவணங்கி யிருக்கிறது தாங்கள் எந்த பிரகாரம் உம்முடைய க்ரோதத்தை சமனம் செய்ய விரும்புகிறீர்களோ, ஹே ஸ்வாமி, அவ்விதம் செய்யுங்கள். என்னை உங்கள் தாஸனாகப் பூர்ணமாக நினை யுங்கள். தாங்கள் எது செய்தாலும் எனக்கு பூர்ண சம்மதம் தான்.'' (1502)

[தியானம்

ஹே ராமா சீதாபதி பரசுராமரே, தரணியின் புருஷரே முன்பு நடந்த தனுர் யக்ஞயத்தில் கிருஷ்ணன் ராமன் இருவர் களும் சேர்ந்து வந்த சமயம், அந்தக் கூட்டத்தில் இருந்த பாக்ய வான்களான சாணூரன், முஷ்டிகன் சண்டை போடும்போது அந்த சபையோர்கள் எவ்விதம் துடித்தார்களோ, அவ்விதம் என் மனம் பரசுராமரிடமும் ராமரிடமும் துடிக்கிறது. மானிட வேஷம் பூண்ட விசித்திரமான இந்த இரு மூர்த்திகளின் ரஹஸ் யம் சீதை லக்ஷ்மணன் விஸ்வாமித்திரர் போன்ற மஹாத்மாக் களுக்குத் தெரியும். தயையினால் வாடும் பரசுராமரின் மனதை அபகரித்த ராமா, லக்ஷ்மணா, தாமரை ரேகைகள் போல சிவந்து கருணையை பொழியவிக்கும் ஆழிமுகில் கண்ணா, உம்முடைய திருவிளையாடல்கள் புராண புருஷராகிய நாராயணரும் தமக்குள் மகிழும்படி, என்போன்ற பக்தர்களுக்கும் துளசிதாஸர், தியாக ராஜர், நாரதர் போன்ற நெஞ்சு நெகழும் வெண்ணை போன்ற மனத்தினர்க்கும் உங்களுடைய லாவண்ய சிறப்புக்களும் ஒப்பு உயர்வற்ற இயற்கை அமைப்பாயும், யசஸ்ஸுக்கும் மஹாலக்ஷ் மிக்கும் முக்கிய இருப்பிடமாகவிருக்கும் இந்த ராமனாகிய நாரா யணருடைய திவ்ய ரூபத்தை அனுதினமும் ஹ்ருதயம் விகஸித்து கண்கள் ஆனந்த பாஷ்பத்துடன் அருந்தி, தியாகராஜர் அனுப வித்தது போல, கோபஸ்திரிகளுக்குக் கிடைத்த பாக்யம் போல எனக்கு எப்போது கிடைக்கும்? த்ரிவிக்ரமா, மாதவா வைகுந்தா, பங்கயக் கண்ணா, கார்முகில் வண்ணா, ராஜீவாக்ஷா, அர்ஜுன னின் அத்யந்த தோழனான கேசவா, எப்போது நீ அன்புடன் என்னை நோக்கும் முகதரிசனமும், மிருதுபாஷணனாகிய உன் தேன் போன்ற தித்திக்கும் வார்த்தைகளையும் எப்போது கேட் பேன்? உமா, சங்கரா, உங்களுடைய பாதங்களில் தினமும் பக்தியுடனும் பெருமையுடனும் நமஸ்கரிக்கும் எனக்கு உங்கள் அருள் மழையைப் பொழிந்து, என் வருத்தத்தைத் தீர்த்து,



ஸ்ரீராமன் பரசுராமரைப் பார்த்து பிரார்த்தித்துக்கொள்ளுதல். "பிரபோ, கோபத்தைத் த்யாஜ்யம் செய்துவிட்டு, கிருபை செய்யவேண்டும். தங்களிடம் கோடாரி இருக்கிறது. எனது தலை தங்களை வணங்கி நிற்கிறது. நான் தங்கள் தாஸன். எந்த விதம் தங்கள் க்ரோதம் தணியுமோ அதன்படி செய்து கொள்ளவும்."

திருத்தக்க செல்வமும் சேவகமும், இங்கு ஒழிக்க ஒழியாத உறவும் எப்போது அப்பா கிடைக்கும்? சபையோர்க்கு பலவித மாகத் தோன்றிய ராமா—ஸர்வதோ முகரே—எனக்கும் இந்த பாக்யத்தையை செய்யமாட்டாயா? யதுஸ்ரேஷ்டா, ரகுஸ்ரேஷ்டா.]

"ஹே ஸ்வாமி, நான் தங்களுக்கு ஊழியன். தங்களுடன் எவ்விதம் யுத்தம் செய்வேன்? ஐயா, பிராம்மண ஸ்ரேஷ்டரே' என்னிடம் தயை செய்து க்ரோதத்தை தியாகம்செய்ய வேண்டும் படி பிரார்த்திக்கிறேன். உம்முடைய வேஷத்தைப் பார்த்து விளையாட்டுப் பிள்ளையான லக்ஷ்மணன் ஏதோ அறிவீனத்தால் சொல்லிவிட்டான். அவ்விதம் சொல்லிய பாலகனிடம் ஒருவித மான தோஷமும் இல்லை." (1503)

"ஹே பிரபோ, பரசு, தனுஷ்பாணம் இவைகளைத் தரித்திருக்கும் தங்கள் திரு உருவத்தைப்பார்த்து, தங்களை மஹா வீரன் என்று நினைத்து ஒன்றையும் தீரவிசாரிக்காமல், க்ரோதமாகச் சொல்லிவிட்டான். அவன் தங்களுடைய நாமத்தை கேள்விப்பட்டிருக்கிறன். ஆனல் அவன் தங்களை இதற்கு முன்பு பார்த்ததில்லையாதலால், அடையாளம் தெரிந்துகொள்ள வில்லை. யுத்தத்தில் எப்பொழுதும் ஜயிக்கும் ரகுவம்சத்தில் பிறந்த ஸ்வபாவத்திற்கு ஏற்ப அந்த லக்ஷ்மணன் அவ்விதம் பதில் (உத்தரம்) சொல்லிவிட்டான்" (1504)

"ஹே பகவன், தாங்கள் முனி மாதிரி வந்திருந்தால், ரகுகுல அரசர்களுக்கு ஏற்றபடி பிராம்மணராகிய தங்களுடைய சரண கமலங்களில் பணிந்திருப்பான். தங்களுடைய பாத ரேணுக்களை, ஸ்வாமி, தலையில் தரித்துக்கொண்டிருப்பான். ஆகவே ஹே கோஸாயி, அக்ஞானத்தினல் ஏற்பட்ட தவறை தாங்கள் கிருபையுடன் க்ஷமை செய்யவேண்டும். பிராம்மணர்களின் ஹ்ருதயம் வெண்ணையைவிட அதிகோமளமானதும், தயையுடன் கூடியதல்லவா?" (1505)

"ஹே நாதரே, தங்களுக்கும் எனக்கும் எவ்விதம் சரிசமம் ஏற்படும்? சொல்லத்தான் கூடுமா? ஐயா, தங்களுடைய சரணங்கள் எங்கே, உம்முடைய மஸ்தகம் (சிரஸ்) எங்கே? நானே கேவலம் ராமன் என்கிற பெயர் கொண்டவன். ஹே பகவான், தங்களுடைய திருநாமமோ பரசு ராமர் என்கிற அகண்டமான பெயருள்ளது". (1506)

"தேவரே, எனக்கு ஒரே நாணுள்ள கோதண்டம் என்கிற தனுஷ். ஆனல் தங்களுடைய வில்லோ பரம பவித்திர மான (சமம் தமம், தபஸ், சௌசம், க்ஷமை, சௌலப்யம்,

ஞானம், ஆத்மஞானம் என்கிற விக்ஞானம், ஆஸ்திகத்வம் ஆகிய) ஒன்பது அபாரமான பிராம்மண குணங்கள் கொண்டன. நான் எல்லா விதத்தாலும் தங்களை விடக் கீழானவன். வீர ஸ்ரேஷ்டரே, என்னுடைய அபராதத்தை மன்னித்தருள வேண்டும்.'' (1507)

அடிக்கடி அடிக்கடி ஸ்ரீராமன் ஸ்ரீபரசு ராமரைக் குறித்து, ''முனியே, பிராம்மணஸ்ரேஷ்டரே,'' என்கிற பிரிய பதங்களால் அன்புடன் அழைத்தான். ஆனால் பிருகுபதியான பரசுராமர் அதிக கோபமடைந்து, க்ரோதத்தினால் கவரப்பட்டு அடிக்கடி சிரித்துக்கொண்டு, சொன்னார். ''ராமா, நீயும் உன் தம்பிக்கு சமமான கோணல் புத்தியுடன் இருக்கிறாய்''. (1508)

''நீ என்னை சாதாரணமான பிராம்மணனாகவா நினைக்கிறாய்! நான் எப்பேற்பட்ட பிராம்மணன் என்று உனக்கு தெரியுமா? தனுஷ் என்கிற ஆகுதி செய்யும் கரண்டி, பாணம் என்கிற ஹவிஸ் ஆகுதி, க்ரோதம் என்கிற பயங்கரமான தேஜஸ்ஸுள்ள அக்னி.'' (1509)

''சதுரங்க ஸேனைகள் ஆகிய அழகான சமித்துக்கள், மகீபதிகள், அரசர்கள் அந்த யக்ஞத்தின் பலிபசுக்கள். அவர்களை இந்த பரசுவினால் வெட்டி யக்ஞ ஆஹுதியாக ஹோமம் செய்தேன், ராமா. தெரிந்துகொள். இந்த மாதிரி கோடிக் கணக்கான ஜபதபங்களுடன் முறையானபடி ரண யக்ஞங்கள் செய்திருக்கேன். (மந்திரபூர்வமாக ஸ்வாஹா சப்தங்களுடன் ராஜாக்களை பலியாகக்கொண்ட அநேக யாகங்களைச் செய்திருக்கிறேன். இருபத்தேழு தடவைகள் க்ஷத்திரியர்களை அழித்து, அவர்களின் ரத்தாத்தால் குருக்ஷேத்திரத்தில் பித்ரு தர்ப்பணம் செய்திருக்கிறேன் என்றும், அந்த தீர்த்தம் பித்ருக்களின் அனுகிரஹத்தால் புண்ய தீர்த்தமாயும்; பரசுராமர் இப்போது கோபத்திலிருந்து விலகி நிருவித்தி அடைந்து, ராமனுடைய கிருபைக்காக தபஸ் செய்யப் போகிறார் என்று சூசிப்பிக்கப் படுகிறது.) (1510)

''ராமா என்னுடைய பிரபாவங்கள் உனக்கு சம்பூர்ணமாக தெரிந்திருக்க முடியாது. அதனால் என்னை சாதாரண பிராம்மணனாக நினைத்து மரியாதை யில்லாமல் கர்வத்துடன் நீ பேசுகிறாய். தனுஷ் உன்னால் ஒடிக்கப்பட்டது என்கிற கர்வத்தினால் நீ பெரியவன் என்று நினைக்கிறாய். இந்த அஹங்காரத்தினால் இந்த சம்சாரம் முழுவதும் ஜயிக்கப்பட்டதாக நீ நினைக்கிறாய்.'' (1511)

ஸ்ரீராமன் சொன்னார். "ஹே முனியே, தீவிரமாக ஆலோசித்து வார்த்தைகளைச் சொல்லும். ஐயா, உங்களுடைய க்ரோதம் ரொம்ப அகண்டமானது. ஆனால் என்னுடைய தவறோ மிகச் சிறியது. இது புராணமான வில். தொட்ட மாத்திரத்தில் ஒடிந்து விட்டது. நான் என்ன காரணத்தினால் அபிமானத்துடன் கர்வப்படவேண்டும்?" (1512)

"ஹே பிருகு நாதரே, நான் தங்களை வாஸ்தவமாக "பிராம்மணரே", என்று அழைத்து மரியாதை செய்திருப் பேனாகில் இப்போது ஸத்யமான வசனங்களைச் சொல்லுகிறேன். கேளும் ஐயா, இந்த ஜகத்தில் எவன், எந்த வீரன், எனக்குச் சரி சமமாக இதுவரை யுத்தத்தில் போராடி, என்னை ஜயித்து அவனுக்கு என் தலையை வணங்கும்படி செய்ய சாமர்த்தியம் உள்ளவன் எங்கிருக்கிறான்?" (1513)

[தியானம்

ஹே சதாசிவனை மனதில் தாரணம் செய்து தவம் பண்ணிக் கொண்டிருக்கும் ஸ்ரீராமா, ஜகதாதாரா, காமதேனுவாகிய, சுரபி யாகவும், அர்ஜுனன் போன்ற பக்தனை கன்றான நந்தினியாகவும், அம்ருதம் போன்ற கீதையை உலகங்களுக்கு நன்மைக்காகவும் பொழிந்த கோவிந்தா, என் விஷயப்பற்றுக்களாகிய பாம்பிற்கு மயிலாகவும், சக்தியுடன் எனக்கு அடைக்கலம் தந்த குஹப் பெருமானே, தீன ரக்ஷகனே, சம்சார தாபங்களைப் போக்கும் வைத்திய நாத, ஜயலக்ஷ்மி, கருமுகில் போன்ற நீல வர்ணம் உடைய பொற் கொடியே, ராஜீவாக்ஷா பானு சந்திரர் களை விழியாக உடையவளே, கர்மம் ஞானம் ஆகிய மார்க்கங் களில் உழலடைந்த பிற்பாடு பக்தியோகத்தினால் ஏற்பட்ட உன் மீது ஏற்பட்ட காதலாகிய பக்தியால் வந்து அடைந்த என்னை, வேதார்த்தங்களின் உச்சியுள் கொண்டாடிக் கூறப்பட்டிருக்கின்ற அரும் பிரம்மமாகிய நீ திருமகளோடு வரும் திருமால் என்றும், உமை எனச் சொல்லப்படும் துர்க்காலக்ஷ்மியின் அந்தரங்கப் பிரியனான ஸ்ரீமந்நாராயணன் என்றும், சேதனம் அசேதனம் இவைகளின் சேர்க்கையாகிய பிரபஞ்சம் என்று சொல்லப் படுவதும் இவைகளின் ஸ்வரூபஸ்வபாவங்களும் அதன் பால் நின்று இன்றியமையாத சிறப்புடன் விளங்கும் ஸர்வேஸ்வர னாகிய உன்னுடைய உண்மையான நிலையை யாரால் எடுத்துச் சொல்லமுடியும்? தர்மத்தில் விருப்பமுள்ள அர்ஜுனனுக்கு

சாரதியாக நின்ற ஹே கிருஷ்ணு, உன்னுல் உவந்து அவனுக்குத் தன்னைக் காட்டிக்கொடுத்த பரம தயாளுவான மஹாத்மா, குஹனுக்கு உவந்து, கிரிஜா ரமணன் அடியார்களான என் போன்ற பக்தர்கள் பணியும் அந்த சுந்தர திருவடிகளில் பணிந்து, தாழ்பணிந்து, பிரணவஸப்தத்தால் மஹார்த்தத்தைக் கேட்ட பிரபு, ஸாது ஜனங்களின் ஹ்ருதயத்தில் வசிக்கும் தயாளு, அம்பிகையின் பதியானவரும் ஸ்வாமிநாதனுக்கு ஸ்வாமியாகிய ஹே சம்போ, உன் சௌலப்ய திருவுள்ளத்தை என்னுல் எப்படி அப்பா சொல்லமுடியும்? பீமா, சாகம்பரி, ஸ்கந்தமாதா, இவர்களுடன் சேர்க்கைபெற்ற சீதாதேவி நீயாவது, உன் பக்தர்களாகிய ஆஞ்சநேயர் தியாகராஜர், அவருடைய ஹருதயத்தில் வசிக்கும் ராமனுவது, கோக்களின் ரக்ஷையாகவும், நாரதர், வால்மிகி, விஸ்வாமித்திரர் போன்ற மஹரிஷிகளின் சொற்களாலும், செயல்களாலும் விளங்கின உத்தம புருஷராகிய நீரே மனம் உவந்து உன்னையே நம்பி யிருக்கும் எனக்காக, நீயாக வலுவில் காட்டிக்கொள்ள மாட்டாயா? ஐயா, உன் தயையின்றி என்னுல் ஒரு க்ஷணம் கூட வாழமுடியாது, தபோமோக்ஷ பராயணமாகவிருக்கும் எனக்கு எப்போது உன் விழி கிடைக்கும்? தியாகராஜராலும் துளசிதாஸராலும் சித்ர கூடத்தில் காணப்பட்ட ராமா, சீதா லக்ஷ்மணு, பரசுராமர் கண்ட உத்தண்டராமனே, என் மனம் உன்மீது பாகாக காதலோடு உருகுகிறது அப்பா.]

"தேவதைகள், தைத்யர்கள், பூபதிகளான ராஜாக்கள் இன்னும் கடும் யுத்தத்தில் பிரியமுள்ள எந்த வர்க்கமானுலும் சரி, எனக்கு சமமாக பலத்திலோ, அல்லது அதி பலத்திலோ சரி அப்பேற்பட்ட ஒருவன் என்னிடம், "உன்னோடு யுத்தம் செய்வேன்" என்று வருவானேயாகில் அவனிடம் சுகமாகத்தான் நான் யுத்தம் புரிவேன். அவன் காலனே இருக்கட்டும், எனக்கு பரவாயில்லை." (1514)

"க்ஷத்திரிய ஜாதியில் பிறந்துவிட்டு எவன் ஒருவன் சமருக்குப் பயப்படுவானே, அவன் அவ்வித நீச நடத்தையினுல் தன்னுடைய குலத்திற்கு களங்கம் செய்கிருன். அவ்விதம் நான் விளைவிப்பேனு? ஹே ஸ்வாமி, நான் என்னுடன் பிறந்த ஸ்வபாவத்துடன் ஸத்யமாகச் சொல்லுகிறேன். பிறந்த குலத்தின் பெருமையைச் சொல்லுகிறேன் என்று தப்பாக நீங்கள் நினைத்துக்கொள்ளக்கூடாது. ரகுவம்சத்தில் பிறந்த எவனும் காலனுக்குக்கூட பயப்படமாட்டான்." (1515)

" அப்பேற்பட்ட நிர்பய ஸ்பாவமுள்ள ரகுவம்சத்தினர்கள் பிரும்மதேஜஸ், தபோமோக்ஷ பராயணம் கொண்ட பிரும்ம ரிஷிகளான விப்ரர்களுக்கு மாத்திரம் தாஸராக விளங்குகிருர்கள். ஐயா, பிராம்மணவம்சத்தில் இப்பேற்பட்ட மகிமைபொருந்திய பிரபுத்வம் சிறந்ததாக இன்றும் விளங்குகிறதல்லவா? அதனுல் தான் ஸ்வாமி, நான் தங்களிடம் பயப்படுகிறேன்." இவ்வித மாக மிருதுவானதும், கூடஸ்த ரஹஸ்யங்கள் அடங்கினதுமான ரகுதிபதியின் வார்த்தைகளைக் கேட்ட பரசுராமரின் புத்தியில் படர்ந்து விளங்கும் மாயைத் திரை நீங்கி, அவர் அதோக்ஷஜ ரான ராமனைக் கண்டார். அவருடைய கண்கள் அம்ருத மயமான அப் பரபிரும்மத்தைக் கண்டன. (1516)

" ஹே ராமா, ரமாபதி, இந்தா என் கையிலிருக்கும் வைஷ்ணவ தனுஷ்ஷாகிய இதை எடுத்துக்கொள். இதை வளைத்துக் காட்டு. என் மாயைச் சந்தேகங்களாகிய அக்ஞானம் அழிந்துபோகட்டும்" என்று பரசுராமர் கதறினர். பரசுராமரிட மிருந்து அந்த வில்லானது அந்த சமயம் தானுகவே ஸ்ரீராமனிடம் தாவியது. அதைக்கண்டு பரசுராமரின் மனம் ஆச்சரியத்தால் மலர்ந்தது. (ராமனுடைய உடலில் ஆதித்யர் களும், வசுக்களும், ருத்ரர்களும், அஸ்வினி தேவர்களும், சகல சராசரங்களும் இருப்பதைக் கண்டார் பரசுராமர்.) (1517)

மஹாத்மாவான பரசுராமர் அந்த சமயம் ஸ்ரீராமனுடைய உண்மையான பிரபாவங்களைக் கண்டார். அதன் காரணமாக அவருடைய சரீரம் புளகாங்கிதத்தினுல் மயிர் கூச்சல் அடைந்தது. அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர்கள் தாரை தாரையாக உதிர்ந்தன. தன் திருக் கரங்களைக் குவித்து, நமஸ்காரம் ஆராதனம் முதலியவைகளைச் செய்துகொண்டு, பரசுராமர் தன் ஹ்ருதயத்தை திறந்து பிரபுவான ஸ்ரீராமனின் மகிமைகளை, க்ஷத்திரிய ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கும் ராமனை, பிரேமை ஆனந்தத்துடன் வர்ணிக்க ஆரம்பித்தார். (1518)

" ஜயஜய ரகுவம்ச ராமா, ஜயஜய, ரகுவம்ச கமலவனத்திற்கு ஆதித்ய ரூபியான ராமா, ஹே ராக்ஷஸக் கூட்டங்களாகிய அடர்ந்த காடுகளுக்கு அக்னியைப்போல விளங்கும் ராமா, உமக்கு ஜயஹோ, ஜயங்கள், மஹாமங்கள ஜயங்கள் ஏற்படட் டும். தேவதைகள், பிராம்மண சமூகங்கள் பசுக்கள் ஆகிய வர்களுக்கு சதா ஹிதத்தைத்தேடும் ஜயராமா, உனக்கு என் ஆசிர்வாதங்களும் ஜயங்களும் ஏற்படட்டும். மதம், மோஹம்,

கோபம், பிரமை ஆகிய என் அக்ஞானங்களைப் போக்கிய பரம தயாளுவான ஸ்ரீராமா, உனக்கு நித்ய மங்களங்கள் ஏற்படட்டும். உனக்கு ஜயங்கள் ஏற்படட்டும்'' (1519)

''வினயம், சீலம், கருணை ஆகிய குணங்கள்கொண்ட சமுத்திரம்போல விளங்கும் ஸ்ரீராமா, உமது வாணி ஸத்ய வாக்குக்கள். ஆஸ்ரிதர்களுக்கு ஹிதமானதும், ஸ்மிதவக்த்ரத்தி லிருந்து வெளிவருபவையும், மிதமாகப் பேசுகிற வசனங்களும், (பூர்வமாகப் பேசுகிறவரும் மதுரமான வசனங்களால் சாமர்த்திய மாயும் அதிநாகரீகமாகவும்) பேசுகிற ஸ்ரீராமனுக்கு ஜயமங்களங் கள் ஏற்படட்டும். உன்னை அடைந்த சேவகர்களுக்கு சுகத்தை அளிக்கும் பரமதயாளு, ஒவ்வொரு அங்கத்திலும் மிக்க அழகாக விளங்குகிறவரும், சரீர சௌந்தர்ய லாவண்யத்தில் கோடிக் கணக்கான காமதேவர்களின் அழகு லாவண்யங்களைத் தரித்துக் கொண்டிருக்கும் காமேஸ்வரரே, உமக்கு ஜயமங்களங்களும், ஜயங்களும் நித்யமாக ஏற்படட்டும்.'' (1520)

[தியானம்

ஹே அதோக்ஷஜா, கிரீடி, முத்துமாலை, வனமாலை, ரத்ன கிரீ டத்தில் பதிந்த நவரத்னங்கள், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் ஆகிய ஆபரணங்களைக்கொண்ட ராமா, என் போன்ற பக்தர்களை ரத்ன மாகவும் கந்தமாகவும் அணிந்துள்ள ஸ்ரீராமா, சீதாராமா, சியாம சுந்தரா உங்களுக்கு நமஸ்கரிக்கிறேன். பூஸுதாவாகிற ஜானகியை ரத்ன சிம்மாசனத்தில் உட்காரவைத்து ஸர்வாலங் கிருதையாகவும், ஸர்வ ஆபரண பூஷிதையாகவும், ஸர்வ தேவ, முனி ஜனங்கள் வந்தனம் செய்யும்படி இருக்கும் சீதா, ராமா, நான் உங்களை எப்போது பார்ப்பேன்? ஸதா ஹனுமாரால் தேடப் பட்ட பாதங்களை நான் எவ்விதம் அச்யுத பக்தியினால் பிரபத்தி அடையப்போகிறேன்? உமை சங்கரர் ஹ்ருதயத்தில் ஸ்திரமாக வீற்றிருக்கும் என் மனத்துக்கினியானை எப்போது பார்ப்பேன்? துளசிதாஸர், தியாகராஜர் தங்கள் ஹிமயம் போன்ற ஹ்ருதயத் தினால், பாற்கடலைப்போல ஆழமான ஸ்ரீராமனின் குணசாகரங் களில் பதியவைத்து ஆனந்தித்ததுபோல நான் எப்போது நீஞ்சி விளையாடப்போகிறேன்? மீனாக்ஷி, காமாக்ஷி, விசாலாக்ஷி, ஆகிய திரிநேத்ரையே, உங்கள் கனிவுகொண்ட பார்வையையும் அம்ருதமயமான பேச்சுக்களும் பரதன் லக்ஷ்மணர் போன்ற மஹானுபாவர்கள் கேட்ட உல்லாஸ ரஹஸ்யங்களும் கௌசல்யை தசரதர் ஆனந்தித்த உன் உருவத்தையும் நான் எப்போது பார்ப்

பேன்? ஸ்கந்தர், கணபதி, விஸ்வாமித்ரர் நாரதர் எனக்கு அருள் பண்ணமாட்டார்களா? நான் என்னப்பா பாபம் செய்தேன்? உன்னை சத்யவாக்கு என்று அர்ஜுனன் சொல்லியிருக்கிறான். நித்ய பிரும்மாசாரியாகிய நீ பரிக்ஷித்துக்கு உதவவில்லையா? மஹான்களாகிய யார் என்னைப்பற்றி உன்னிடம் சொல்லப் போகிறார்கள்? ஸப்தரிஷிகள் துருவனிடமும், கட்வாங்கனிடமும் மஹேந்திரனிடமும் சொன்னவார்த்தைகள் பொய்யாகாதே. எப் போது என் பாவங்களைப் போக்கி ஆஸ்ரிதம் கொடுக்கப்போகி றாய்? பரசுராமர் கண்ட கேசவன் எப்போது எனக்கு வச மாவான்.?]

"ராமா, மனத்துக்கினியானே, உன்னுடைய புண்ய கீர்த்தி களையும் பிரதாபங்களையும் என்னுடைய ஒருமுகத்தால் சொல்லக் கூடுமா? ஜய ஜய மஹேசரின் மனமானது உன்னுடைய புண்ய பிரபாவங்கள்கொண்ட மானஸரோவரில் சதா ஹம்ஸப் பேடாக விளையாடுகிறதல்லவா? ஜய ஹோ! ஐயா, என் ஸ்வாமியே, தங்களுக்கு சதா மங்களங்கள், ஜயங்கள் ஏற்படட்டும். ஸர்வாந் தர்யாமியாகிய தாங்கள் என் அக்ஞானத்தைத் தெரிந்து கொண்டு, நான் தங்களைப்பற்றிய ஏதோ அனுசிதமான வார்த்தைகளைச் சொன்னேன் என்று நினைக்கக்கூடாது. க்ஷமையின் பொற்கோயில் போல விளங்கும் இரு சகோதரர் களான லக்ஷ்மண ராமா, என்னிடம் பரிவு காட்டி, என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்." (1521)

"ரகு குலத்தின் கொடியை மிக்கஉயரமாக பறக்கவைக்கும் ஸ்ரீரகுநந்தனா, ஸ்ரீராமா, உமக்கு ஜயங்கள் சதா ஏற்படட்டும். ஜயம் வரட்டும். நீர் ஜயம் அடையவேண்டும். ஜயசீலராக நீர் சதா விளங்கவேண்டும்." என்று பலவிதமாக ஜயமங்கள ஆசீர் வாதங்கள் செய்துவிட்டு பிருகு குலபதியான பரசுராமர் தவத்திற் காக வனத்திற்கு திரும்பிச் சென்றுவிட்டார். இந்த மஹத்தான சம்பவத்தைக்கண்டு துஷ்ட ராஜாக்கள் ஒரு காரணமுமின்றி பரசுராமரே தோல்வியை ஒப்புக்கொண்டு வாபஸ் சென்றுவிட் டாரே, நாமும் இந்த ராமனிடம் போட்டி போடலாகாது என்று நினைத்து, ராமனிடம் மிக்கபயந்து, கோழைகளாகி, சத்தம் போடாமல் ஒவ்வொரு திக்கை நோக்கி ஓடிவிட்டார்கள். (1522)

தேவதைகள் துந்துபி போன்ற மங்கள வாத்யங்களை முழக்கி ஜயகோஷம் பிரபுவுக்கு செய்தார்கள். பிரபுவான ஸ்ரீராமனின் மீது தேவ புஷ்பங்களை வர்ஷித்தார்கள். ஜனகபுரியில் வசித்த மஹாபாக்யவான்களான ஸ்திரி புருஷர்கள் யாவரும் மனத்தில்

மிக்க சந்தோஷமடைந்தார்கள். அவர்களுடைய மோஹங்கள் யாவும் தீர்ந்து அக்ஞானம் என்கிற சூலநோய் அழிந்தது. (1523)

அதிஜோராக ஜால்ராக்கள் முழங்கின. எல்லோரும் மங்கள கீதங்கள் பாடினார்கள். அழகான வதனங்கள் உள்ளவர்களும் ஜயசிலர்களான ராமசீதையைக் கண்ட அழகான லோசனங்கள் உள்ள ஸ்திரிபுருஷர்கள் யாவரும் மதுரமான குரலுடன் கோகில த்வனியாகத் தித்திக்கும் குரலில் கூட்டம் கூட்டமாக கூடி, கும்பல் கும்பலாக மதுரகீதங்களைப் பாட ஆரம்பித்தார்கள். (1524)

ஜனக மஹாராஜரின் சுகானந்தங்களை யாரால் வர்ணிக்க முடியும்? கோடிக்கணக்கான ஜன்மங்களில் தரித்திரனாகப் பிறந்த ஒருவன் தன்மீது ஏற்பட்ட பகவத்கடாக்ஷத்தின் பலனாக திடீரென்று என்றும் அழியமுடியாத நிதிபொக்கிஷத்தை அடைந்தால் எவ்விதம் அவனுடைய மனம் சந்தோஷத்தால் தத்தளிக்குமோ, அவன் எவ்விதம் ஆனந்தத்தால் குதிப்பானோ, அதுபோல ஜனகமஹாராஜர் பகவத் கருணாம்ருதத்தின் பயனாக எல்லையற்ற ஆனந்தத்தை அடைந்தார். மஹாபாக்யவான். ராமனின் பிரியையான சீதையைப் பெண்ணாகப்பெற்ற, உத்தம மான பொக்கிஷத்தின் அதிபதியான மஹாராஜாவான ஜனகன் நினைத்து நினைத்து மட்டற்ற ஆனந்தத்தை அடைந்தார். எல்லாப் பயங்களையும் போக்கக்கூடிய ஸ்ரீராமன் சீதையின் பயங் களையும் கவலைகளையும் போக்கினான். அந்தப்பெண் பூர்ணசந்திர னின் உதயத்தின் சமயம் சகோரபக்ஷியின் கன்னிகை எவ்விதம் சுகத்தை அடைகிறதோ, அதுபோல ராமனின் பூர்ணசந்திரனைப் போல அழகாகவிருக்கும் முகத்தைப் பார்த்து, மட்டற்ற ஆனந்த சுகத்தை அடைந்தாள். (1525)

ஜனக மகாராஜர் விஸ்வாமித்திரரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். நன்றிகலந்த ஆனந்தக் குரலுடன் தழுதழுத்த வார்த்தைகளால் அந்த மஹாத்மாவை குளிரப்படுத்தினார். "பிரபுவாகிய தங்களுடைய கிருபையினால், அனுக்ரஹ ஆசீர் வாத பிரசாதத்தினால் ஸ்ரீராமன் வில்லை ஒடித்துவிட்டான். ராம லக்ஷ்மணர்களாகிய இரு சகோதரர்களும் என்னை கிருதக்ருத்ய னாக ஆக்கிவிட்டார்கள். [கிருதாக்ருதர் என்கிற திருநாமத்தினால் பகவான் போகம் ஐஸ்வர்யம் முதலிய அநித்ய பலன்களை தரும் பிரவ்ருத்தி தர்மமாகவும், நித்யபலனாகிற மோக்ஷத்தைத் தரும் பரம தர்மமாகவும் இருப்பவர், சகல காரிய காரணமாகவுமிருப்பவ ராகிய] பகவான் என்னை கிருதார்த்தனாக ஆக்கினார். ஹேஸ்வாமி, தங்கள் கட்டளையில் நிற்கும் எனக்கு என்ன உசிதமாக மேலே

செய்யக்கூடுமோ, அதை தயவுசெய்து சொல்லவேண்டும்.'' (1526)

விஸ்வாமித்திரர் சொன்னார். ''மஹா கெட்டிக்காரனும், பாக்யசாலியுமான மஹாராஜனே, சீதையினுடைய விவாஹம் இந்த வில்லையும் உன் விரதத்தையும் நம்பியிருந்தது. இந்த வில் ராமனால் ஒடிக்கப்பட்டு போய்விட்டபடியால், ஸ்ரீராமனுக்கு சீதையை சீக்கிரமாக விவாஹம் செய்துவை. இந்த விரதம் பூர்த்தியானதுபற்றி தேவதைகள், மனுஷ்யர்கள், நாகர்கள் யாவருக்கும் தெரிந்த விஷயம்'' (1527)

''இப்போது உன்னுடைய குலஆசாரத்திற்குத் தகுந்தபடி, பிராம்மணர்களையும், உன் குலத்தில் வயது முதிர்ந்தவர்களையும், குருஸ்ரேஷ்டர்களையும் கலந்து ஆலோசித்து, வேதங்களில் விதித்தபடி சுத்தமான ஆசாரங்களுடன் விவாக ஏற்பாடுகள் செய்.'' (1528)

''தூதர்களை அயோத்யாபுரிக்கு அனுப்பி ராஜா தசரதரை இங்கு அழைத்துவர ஏற்பாடு செய்.'' இந்த மங்கள வார்த்தைகளைக் கேட்ட விதேக மஹாராஜர் மன ஆனந்தமடைந்து, பிரசன்னவதனத்துடன் கைகளைக் கூப்பிக்கொண்டு சொன்னார். ''ஹே கிருபாளு, ஸர்வசம்மதமாக இருக்கக்கூடிய உங்களுடைய வார்த்தைகள் எல்லோருக்கும் ஹிதம் செய்யக்கூடிய அழகான வார்த்தைகள். அவைகளை இப்போதே நான் நிறைவேற்றி வைக்கிறேன்,'' என்று சொல்லி அதே வேளையில் சிறந்த தூதர்களை அழைத்து, தசரதரிடம் அனுப்பி வைத்தார். (1529)

[தியானம்

ஹே பிருகு பாதம் மார்பில் தரித்துக்கொண்ட நாராயணா, லக்ஷ்மீவானே, கப்யாஸம் புண்டரீகாக்ஷரே, போதரிக்கண்ணினாய், தாமரை மலரில் படிந்திருக்கும் வண்டுபோன்ற கண்களுள்ளவளே, காமாக்ஷி, சிவனுடைய வாம பாகத்தில் அன்புடன் வீற்றிருக்கும் காமேஸ்வரி, கோதண்டம் போன்ற புருவங்களுடன் விளங்குபவளே, பங்கயக் கண்ணனைப் பார்க்கும் கடைக்கண் விழிகளை உடையவளே, சீதாமங்கையே, கந்தம் கமழும் குழலி, ஸுமத்யமாம் என்று புகழப்பட்ட இடுப்பு பாகத்தை உடையவளே, கனஸ்தனங்களிலிருந்து காமதேனுவைப்போல தன் குழந்தைகளை நினைத்து நின்று பால் சொரியும் கருணைசாகரமே, நீ அவனையும் லக்ஷ்மிவானாகவும் ஸ்ரீவிபவராகவும் ஆக்கிவிட்டாய். பிராட்டியினாலேயே தமக்குப் புகழும் கீர்த்திகளும் மகிமைகளும்

உண்டாக்கப்பட்டவரே, ஸ்ரீதரரே, ஸ்ரீதர் என்று எப்பொழுதும் நிஷ்காரணமாகித் தோன்றும் நவயௌவன பிரேமைரஸமான சிறப்பை என் தாயான சீதைக்கு அளிப்பவரே, சீதையின் குரலுக்கு வாக்ஸ்வரூபமாகவிருப்பவரே, புவனமங்கள பாஸ்கரரே, நிரஞ்சனரான பிரஹஸ்பதியே, உம்மை அடைந்தல்லவோ என் சீதைக்கும் "ஸ்ரீ" என்கிற பெயர் வந்திருப்பதனால் அந்த திருமா மகளுக்கும் ஆதாரமாக விருப்பவரே, பிராட்டிக்குப் பெருமை வந்ததற்குக் காரணமாகவிருக்கும் ஸ்ரீசரே, எல்லா நிலைமைகளுக்கும் சர்வசக்தி என்றும், ஸர்வபிரஹரணாயுதம் என்றும் சொல்லப்படும் பிரராட்டியை தமக்கு ஈஸ்வரியாக வைத்திருக்கும் ஸ்ரீவெங்கடேசரே உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். ராமனும் சீதையும் கடைக்கண்களால் பார்த்து ஒருவரை யொருவர் விரும்பும் மனோநோக்குடன் இருக்கும் சமயம் அந்த திவ்ய சிவசக்திகளைப்பார்த்த மஹாபாக்கியவான்களுக்கு நமஸ்காரம். ஆஞ்சநேயரே, உமக்கு நமஸ்காரம். விஸ்வாமித்திரரே, நீரே வஸிஷ்டரிலும் மிக பாக்யவான். நாரதரே, உம்முடைய கிருபையையும் வேண்டுகிறேன். தியாகராஜரும் என்று எந்த சுதினத்தில் எனக்கு அருள் செய்ய நினைக்கிறாரோ? தெரியவில்லையே. புலஸ்தியர் பராசரருக்கு அருள் செய்தபடியும், வஸிஷ்டர் விஸ்வாமித்திரருக்கு அருள் செய்தபடியும், சுகர் பரிக்ஷித்துக்கு அன்பாயிருந்து உபதேசித்தபடியும் என் மோஹங்கள், பாபங்கள் தீர்ந்து, அஷ்டாவக்ரர் உண்மையை வடதிசையில் அறிந்தபடி நான் எவ்விதம் உங்கள் பதத்தை அறிவேன்? யாக்ஞ்யவல்கியர் மைத்ரேயிக்கும் கர்க்கிக்கும் உபதேசித்தபடி நான் லக்ஷ்மிநாராயணன் ஆகிய இருவர்களின் சிநேக சௌலப்யங்களைப் போல, ராமசீதா உங்கள் அன்பையும் ஸ்நேகத்தையும் பெறுவேனா? உங்களை சதா நமஸ்கரித்து, அர்ச்சித்து, கர்மங்களினால் ஆராதித்து, உனக்கு நாமாட்சி செய்வோம் என்று பிரபத்தி செய்கிறேன். துர்லபமானதும் பரம்தாம் என்று சொல்லக்கூடியதுமான உன்பதம் எனக்கு கிடைக்குமா? ராமா, சீதா.]

[சீதா விவாஹ ஏற்பாடுகள்]

பிறகு ஜனகமஹாராஜர் சகல மஹா ஜனங்களையும் அழைத்து, அவர்களையும் கலந்து மேற்கொண்டு, நடக்க வேண்டியதை ஆலோசித்தார். அவர்களும் அரசனை நமஸ்கரித்து, ராஜாவினிடம் தங்கள் யோசனைகளையும் சொன்னார்கள்.

கடைத்தெருக்கள், ரஸ்தாக்கள், வீடுகள், தேவாலயங்கள், இன்னும் சகல வீதிகளிலும் நகரத்தின் வெளி, உள்புறங்களையும் வித விதமாக அலங்கரியுங்கள்'' என்று ராஜா அவர்களுக்கு உத்தரவு போட்டார். (1530)

ஊரில் உள்ள மஹா ஜனங்கள் மிக்க பிரசன்னமடைந்து தங்கள் வீடுகளுக்குச் சென்றுர்கள். பிறகு அரசர் தன்னுடைய வேலைக்காரர்களை அழைத்து, அவர்களுக்கு, ''விசித்திரமானதும் அழகானதுமான மண்டபங்களை ஏற்படுத்தி அலங்கரியுங்கள்,'' என்று ஆக்ஞையிட்டார். அவர்களும் அந்த ஆக்ஞையை ஏற்று, மிக்க ஆனந்தத்துடன் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினுர்கள். (1531)

அவர்கள் அநேக தேர்ந்த வேலையாட்களையும் சிற்பிகளையும் அழைத்து அவர்களிடம், ''நல்லதாகவும், அழகானதாயும், விதிப்படி உள்ளதாயும் உள்ள ஒரு பெரிய மண்டபத்தை ஏற்படுத்துங்கள்,'' என்று உத்தரவிட்டனர். அந்த காரியங்களை பிரும்மாவை நமஸ்கரித்து, ஆரம்பம் செய்தார்கள். அவர்கள் தங்கத்தூண்கள் வாழைத் தண்டுகளைப்போல ஸ்தாபித்தார்கள். (1532)

பச்சை, பசுமை நிறம்கொண்ட மணிகளால் இலைகளாகவும் பழங்களுக்கு ஏற்ப பத்மராகம், மணிகள், மாணிக்கங்கள் கொண்ட பூக்கள் ஆகியவைகளை நிர்மாணித்தார்கள். அந்த மண்டபத்தின் விசித்திரமான கற்பனையும் அழகையும் கண்டு பிரும்மாகூட தன் ஸ்ருஷ்டியை மறந்தார். (1533)

மூங்கில் குழல்கள் நல்ல பசுமையான மணிகளால் அமைக்கப்பட்டு, நீளமாகவும் முட்களுடன் ரொம்பநேர்த்தியாக அமைக்கப்பட்டன. அவைகளை ஸரளமாக அடையாளம் தெரிந்துகொள்ள முடியாமல் மிக்க இயற்கை அழகுடன் விளங்குவதும், அவைகளுக்கு மேல்படரும் தங்க வேலியைப்போல, வெற்றிலைக் கொடிகள் வளர்ந்தனபோல, ரொம்ப அழகாகவும் வளைந்து வளைந்து செல்வதாயும் பல கொடிகள் நிர்மாணிக்கப் பட்டன. (1534)

அந்த நேர்த்தியான இலைகளை வளைந்து செல்லும் கொடிகளில் படர்ந்திருப்பதைக் கண்டால், வளைந்துசெல்லும் நாக வேலியோ என்று சொல்லும்படி தோன்றியது. அந்த கொடி வேலியை தங்கத்தாலும் முத்துக்கள் கொண்ட கயிறுகளால் பந்தனம் செய்தார்கள். அந்த முத்துக்கயிறுகளில் மாணிக்கம், மரகதம், வைரங்கள், இந்திர நீலக்கற்கள் ஆகிய

விதவிதமான ரத்னங்களை அழகாக இணைத்து, புதைத்து, மனோஹரமான வேலைப்பாடுகளால் கவர்ச்சிகரமாகவும் பண்ணினார்கள். அவைகளைப் பார்த்தால் நல்ல சிகப்பு, பச்சை, வெண்மை, நீலம் ஆகிய வர்ணங்களுடன் பூத்து விளங்கும் தாமரைப் புஷ்பங்கள் போலத் தோன்றின. (1535)

பலவர்ணங்கள்கொண்ட வண்டுகள், கரும் வண்டுகள், அநேக நிறம்கொண்ட பக்ஷிகள் பண்ணப்பட்டன. மெதுவாக வீசும் சுந்தரமான மாருதத்தால் அவைகள் ரீங்காரம் செய்வது போலவும், இனியகுரலுடன் பாடுவது போலவும் அமைக்கப்பட்டு விளங்கின. ஒவ்வொரு தூணிலும் தேவதைகளின் பிரதிமைகள் குங்குமம், மந்திராக்ஷதை, வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு, வாசனை திரவியங்களை கைகளில் ஏந்திக்கொண்டு நின்று கொண்டிருந்தன. (1536)

கஜங்களின் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட அழகான சதுரக்கட்டங்கள் அநேகவிதமான அலங்காரங்களுடன் அங்கங்கே காணப்பட்டன. (1537)

நீலமணிகளால் கோற்கப்பட்டு அத்யந்த அழகுடன் மாமரங்களின் தளிர்கள், மாம்பூக்கள் பண்ணப்பட்டன. தங்கக் கொடிகள் பட்டுக் கயிறுகளால் கட்டப்பட்டு, மரகதங்களால் பண்ணப்பட்ட மாம்பழக் கொத்துக்கள் ரொம்ப அழகாகவும் சோபிதமாகவுமிருந்தன. (1538)

இவ்வளவு அழகாகவும் மிக்க வேலைப்பாடுகளுடன் கூடினதாக பூமாலைகளும், தோரணங்களும் அநேகம் தொங்கின. அவைகளைக் கண்டால் காமதேவனே நிர்மாணம் செய்தானோ என்று தோன்றும்படியிருந்தன. அநேக மங்கள கலசங்கள், த்வஜங்கள் கொடிகள், காகிதம், துணிகளால் செய்யப்பட்ட பட்டகங்கள், படுதாக்கள், சாமரங்கள் எல்லாம் ரெம்ப நேர்த்தியாக வைக்கப்பட்டிருந்தன. (1539)

[தியானம்

ஹே திரிபுராம்பா, காமேஸ்வராங்கங்களில் அமர்ந்து பிரஸாதிக்கும் லலிதா, சாம்ப பரமேஸ்வரரே, தம்புராவையும் விகஸித்த மணம் தரும் தாமரைப் புஷ்பங்களையும் கைகளில் தாங்கி, தரித்துக்கொண்டு ராம கீர்த்திகளைப் பாடும் கங்காதரனே, சந்திர கலாமௌளி, நாகபூஷணு, நாராயணருக்காக விஷம் உண்ட நீலகண்டரே, விக்ன ராஜனின் மாதாவே பிதாவே, குஹனின் ஹ்ருதயானந்தா உங்களை நான் நமஸ்கரிக்கிறேன்.

ஹே விசாலாக்ஷி, கைங்கர்ய லக்ஷ்மி, பத்மகர்ப்பரே, தமக்குத் தகுதியாக சிறந்த மணமுள்ளதும் கோமளமான பத்மாஸனத்தி லிருக்கும் நாராயணரே, யோகிகளின் ஆதாரசக்தி முதலிய பீடகர்ப்பத்தில் அஷ்டாக்ஷரமாகிய அஷ்டதள பத்மத்தில் வீற்றிருக்கும் பகவனுயிருப்பவரே, என் மாதவரே, அரவிந்த லோசனு, மனக்காந்தா, தம்மை விட்டு என்றும் க்ஷண பரியந்தமும் திருமகளாகிய அவர்மேல் மங்கை அகலகில்லேன் என்று இருக்கும் விசாலமான வக்ஷஸ்தலத்தை உடைய வேங்கடபிரபோ, என் நாதரே, கோதை காட்டும் பரமனடியைப் பாடும் எனக்கு உங்கள் பக்தி சேவகத்தையும் உங்களின் ஈடுபாடுகளான கைங்கர்யத்தையும், சிவனுடைய சிநேகிதனுன குபேரனுடைய பிரியத்தையும் ஐயா, தரவேண்டும். பார்க்கவர் களால் பூஜிக்கப்படும் நாராயணரே, பகவானைப்போல சகல சராசரங்கள் அனைத்திற்கும் மகாலக்ஷ்மியாகிய நீ வியாபித் திருப்பதினுல் அனந்தை என்று சொல்லப்படுகிற தயாமூர்த்தியே என்னிடம் கிருபையுடன் இரு. "மா" என்று சொல்லப்படும் பரமாத்ம ஞானத்தைக் கொடுக்கும் மாதவரே, கமலபத்ராக்ஷரே, தீர்க்கபாஹு மஹாபலம் கொண்டவரே, தசரதபுத்ரரே, ஸ்ரீராமரே, சூரரே, கோதண்டம், இன்சொல், கருணைக் கடாக்ஷம், உதார மனஸ், யோகிகளையும் சாதுக்களையும் வலுவில் நடந்துபோய் அவர்கள் இருக்கும் இடங்களுக்குச் சென்று அனுகிரஹித்த பாதங்கள், எல்லாம் உமக்கே பொருந்தும். ஆஞ்சநேயரால் ஒத்திக்கொள்ளப்படும் பாதகமலங்கள், அயோத்யாபுரி, ஸரயுநதி, மிதிலாபுரி வாசிகளுக்கு மோக்ஷம் அளித்த ஸத்ய பராக்ரமரே, எல்லா சராசரங்களுக்கும் ப்ரியகாமினரே, சீதையின் பிரேமைக் குக் கட்டுப்பட்ட மோஹனராமா, தியாகராஜர், வால்மீகி, துளசிதாஸர் ஆகிய பக்திமான்களின் ஹ்ருதயத்தில் நடமாடும் அம்பல கூத்தரசே, என் மனத்திலும் அமர்ந்து, ஸதா நீர் நடனம் ஆடவேண்டும். க்ஷமை, ஜிதக்கிரோதம், ஸத்ய வாக்குக்கள், கைகேயிடமுள்ள மாத்ரு பக்தி, கௌஸல்யையிடம் உள்ள ப்ரேமை, சுமித்திரையை ஆனந்தம் உண்டுபண்ணும் அயோத்யாபுரி ராமா, இவைகளுடன் சீதாராமா, ஜனகரின் மாப்பிள்ளையே, என்னை நீதான் ரக்ஷிக்கவேண்டும். உன் பிரஸாதத்தை வேண்டியிருக்கும் என்னை அன்புடன் ஏற்க வேண்டும். ரகுகுலத்தின் தீபமே, விஸ்வாமித்திரரின் ஹ்ருதய ஒளியே, "அஹம் வேத்தி," என்று விஸ்வாமித்திரரால் சொல்லப் பட்ட சொல்லுக்கு மஹார்த்தமே, என்னைக் காப்பாற்று.]

அந்த மண்டபத்தில் மனோஹரமானதும் மணிமயமான அநேக தீபங்கள் இருந்தன. அப்பேற்பட்ட விசித்திரமான மண்டபத்தை வர்ணித்துச் சொல்ல முடியாது. எந்த மண்டபம் பராசக்தியும், (அனந்தை என்று சொல்லப்படுகிறவளும்) கல்யாணப் பெண்ணுமாகிய சீதைக்கு ஏற்படுத்தப்பட்டதோ, அந்த மண்டபத்தின் சோபைகள், மாபெரும் கவிகள் என்று சொல்லப்படுகிறவர்களின் மதிக்கும் அப்பால் உள்ளன என்று சொல்லும்படி, வர்ணிக்க முடியாதபடி செளந்தர்யங்களின் குவியல்களாக விளங்கின. (1540)

ரூபத்தில் சுந்தரேசராயும், குணத்தில் குணசாகரம் என்று போற்றப்படும் ஜனகரின் மாப்பிள்ளையாகிய ஸ்ரீராமச்சந்திரனுக்காக ஏற்படுத்தப்பட்ட மண்டபம் மூன்று உலகத்திலும் பிரசித்தி பெற்ற மண்டபமாகவல்லவோ பிரகாசிக்க வேண்டும். ஜனகருடைய பவனம், அவருடைய நகரத்தில் உள்ள பிரத்யேக வீட்டிலும் எவ்வளவு சோபைகளுடன் விளங்கினதோ, அவைகளைவிட உன்னத சோபையுடன் அந்த மண்டபம் தனிப்பட்ட முறையில் பிரகாசித்தது. (1541)

அந்த சமயத்தில் யாவரும் மிதிலையைக் (Tirahut) கண்டால் அதை நிச்சயமாக பதினன்கு (பூமியின் மேலுள்ளதும் பூமியின் கீழுள்ளதுமான ஏழு லோகங்கள் ஆகிய பதினன்கு) லோகங்களிலும் மேம்பட்டதாகச் சொல்லுவார்கள். ஜனகபுரியில் மிக்க ஏழ்மையான குடும்பத்தில் உள்ளவர்களுக்குக்கூட அந்த மஹா புண்ய வேளையில் திரிலோக லக்ஷ்மீவானகிய மஹேந்திரன்கூட கண்டு மோஹிக்கத்தகும் ஸம்பத்துக்களை அடைந்தவர்களாகவும் அதிசோபிதமாகவும் விளங்கினர்கள். (1542)

எந்த மாநகரில் ஸகல ஸம்பத்துக்களுக்கும் அதிதேவதையான ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியானவள் கபடத்துடன் ஸ்திரி வேஷம் தரித்துக்கொண்டு அழகாக வசிக்கிருளோ, அந்த பாக்யமுள்ள நகரின் செளந்தர்ய ஸம்பத்துக்களை வர்ணனை செய்வதற்கு ஸரஸ்வதி தேவியும், ஆதிசேஷனும்கூட வெட்கப்படுவார்கள். (1543)

ஜனக மஹாராஜருடைய தூதர்கள் ஸ்ரீராமச்சந்திரனுடைய பவித்திரமான வாசஸ்தலமாகிய அயோத்யாபுரிக்குச் சென்றூர்கள். அதிசெளந்தர்யம் படைத்த அந்த ஊரைக்கண்டு மிக்கவும் மனம் களித்தார்கள். ராஜாவினுடைய அரண்மனையை அடைந்து தாங்கள் கொண்டுவந்த சமாசாரத்தைத் தெரியப்

படுத்தினார்கள். தசரத மஹாராஜர் அவர்களைக் கூட்டி அழைப்பி வித்தார். (1544)

தூதர்கள் அரசனைப் பிரணமம் செய்துவிட்டு, ஜனகரின் மங்கள ஓலையைக் கொடுத்தார்கள். மிக்க பிரஸன்ன மனத்துடன் ராஜா தானாகவே நேரில் போய், அவர்களிடமிருந்து பத்திரிகையைப் பெற்றுக்கொண்டார். (1545)

அந்த ஓலையைப் படிக்கும்போது மஹாராஜரின் விசாலமான நேத்ரங்களிலிருந்து சுமை பொறுக்கமுடியாமல் ததும்பி வெளி வரும் பிரேமை கலந்த ஆனந்த பாஷ்பங்கள் அவருடைய புளகாங்கிதமான சரீரத்தில் உதிர்ந்தன. ராமனுடைய மஹா க்ருபையை அடைந்த அவருடைய மனம், சரீரம், செய்கைகள், புத்தி, வாக்கு எல்லாம் பரிபூர்ண ஆனந்தத்தை அடைந்தது. (1546)

[தியானம்

ஹே லக்ஷ்மி நாராயணா, அலர்மேல் மங்கை மார்பா, தர்ம வத்ஸலரே, ஸத்யவந்தரே, கமலபத்ராக்ஷ, ஸாமகானப் ப்ரியா, மஹாதிரிபுராம்பா, பிரியதர்சன ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மி பிரியா, ஸ்வர்க்கத்திலும் சரி உயிருடன் இருந்தாலும் சரி ஸ்ரீராமனைவிட மஹா சிறந்த பொக்கிஷம் இல்லை என்று கருதின ஸத்ய வ்ரதரான தசரதர், அயோத்யாபுரி மன்னன். ராமா, உன்னை தன் மடியில் கொஞ்சும் பாக்யத்தைப் பெற்ற மஹாத்மா, நீ இல்லாமல் உலகத்தை சூன்யமாக கருதியவர், அவ்விதம் ஸஹ்ருதயம் கொண்ட நிருபர்; தர்மவத்ஸலை சீதை மாதிரி கான கத்திலோ ராஜ்யத்திலோ உன்னைவிட்டுப் பிரியேன், அனன்ய கதி இல்லை என்று சொன்னபடி நானும் சொல்கிறேன். ஸ்ரீதரரே, ஸ்ரீ நிகேதனா, ஸ்ரீவத்ஸம், பிருகுவின் பாதம், பிராம்மண வாத்ஸல் யம் கொண்ட நாராயணரே, மகரகுண்டலங்களுடனும் சுருள் மயிர் சுழல்களுடனும் விளங்கும் ரத்னகிரீடி, வனமாலி, கம்புக் ரீவரே, பரமதயாளோ, என்னை, ஸ்வாமி, உன்னை நம்பியிருக்கும் பராயணனாக நினைத்து ஆட்கொள்ள வேண்டும். சுநீதியின் புத்ரனை துருவனைக் கடாக்ஷித்தது மாதிரி சந்திர சூரியர்களாகிய இரு நேத்ரங்களால் எங்களைக் கடாக்ஷித்து, பாபம் சாபம் இவை களைப் போக்கி உங்கள் திருவடிகளில் சேர்த்துக்கொள்ள வேண்டும். கௌசல்யா நந்தனரே, பித்ரு வாத்ஸல்யத்தினால் பித்ரு வாக்ய பரிபாலன நிமித்தம் பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து வனம் சென்ற ராமா, ராகவா, ஸுமித்திரையை

ஆனந்திக்கும் ஸ்ரீராமா, சங்கம், சக்ரம் கதாதரராகிய நீங்கள் தாமரையை தன் வலக்கையில் வைத்திருக்கும் சீதையுடன் என்னை ரக்ஷித்தருள வேண்டும். சங்கரரே, உமையே, விஸ்வா மித்ரரே, ஜனகரே, தசரதரே, நீங்கள்தான் காப்பாற்றவேண்டும். கௌசல்யா ஸுப்ரஜா, லோகத்தின் நன்மைக்காகவந்த ராகவா, உன்னைச் சரணமடைந்தேன்.]

ஹ்ருதயத்தில் ராமலக்ஷ்மணர்கள், கையில் அழகான நல்ல செய்தியுள்ள கடிதம். தசரதருக்கு படிக்கப்படிக்க ஆனந்த வெள்ளம். வார்த்தைகள் வெளிவரவில்லை. சொற்கள் ஒன்றும் வரமுடியாமல் பிரேமை உள்ளத்தை மிக்கத் தீரமான மனத்துடன் கட்டுப்படுத்தி, அரசர் அந்த சுபச்செய்தியைக் கொண்ட லிகிதத்தை அந்த சபை முழுவதும் கேட்கும்படி உரக்கப்படித் தார். அந்த பத்திரிகையின் விஷயங்களை அறிந்த சபையிலுள்ள ஜனங்கள் ரொம்ப சந்தோஷமடைந்தார்கள். (1547)

பரதன் தன் மித்ரனோடும், சகோதரனை சத்ருக்கனனுட னும் விளையாடிக்கொண்டிருந்தான். அந்த சமாசாரத்தைக் கேட்டு பரதன் சந்தோஷத்துடனும் அதி வாத்ஸல்யத்துடனும் தன் தகப்பனாரான தசரதரிடம் ஓடிவந்து, "பிதாவே, இந்த லட்டர் எங்கிருந்து வந்திருக்கிறது?" என்று கேட்டான். (1548)

"என்னுடைய பிராணப்ரியர்களாகிய ராமன், லக்ஷ்மணன் க்ஷேமமாகவிருக்கிறார்களா? எந்த தேசத்தில் இருக்கிறார்கள்?" என்று கேட்டான். ராஜா மறுபடியும் அந்த ஓலையைப் படித்துக் காட்டினார். (1549)

அந்த சமாசாரங்களைக் கேட்டு, பரதனும், சத்ருக்னனும் புளகாங்கித மடைந்தார்கள். அவர்களுடைய சரீரங்கள் அதி ஸ்நேகத்தினால் எல்லையில்லாத ஆனந்தம் அடைந்தன. பரத னுடைய புனிதமான பிரேமையைக் கண்டு அந்த சபை ஜனங்கள் விசேஷமான சுகத்தை அடைந்தார்கள். (1550)

அப்பொழுது அந்த அரசர் மிதிலையிலிருந்து வந்த ராஜ தூதர்களை தன் பக்கத்தில் அழைத்து, உட்காரவைத்து, மதுர மனோகரமான வசனங்களைச் சொன்னார். "தூதர்களே, எனக்கு விபரமாகச் சொல்லுங்கள். என் இரு குழந்தைகளும் சௌக்கியமாக இருக்கிறார்களா? நீங்கள் உங்களுடைய கண்க ளால் நன்றாக என் குழந்தைகளைக் கண்டீர்களா" (1551)

"ஸ்யாமள நிறமுள்ளவன் ஒருவன்; மற்றொருவன் அருணோதயம் போல சிகப்பு நிறமுள்ளவன். கைகளில் தனுஷ் ஷும் பாணமும் வைத்திருக்கும் என் இரு குமாரர்களாகிய

ராமனேயும் லக்ஷ்மணனேயும் கண்டீர்களா? சிறிய யௌவன வயதுள்ளவர்கள். விஸ்வாமித்திர முனிவருடன் இருக்கிறவர்கள். நீங்கள் நன்ருக அடையாளம் தெரிந்துகொண்டீர்களா? சரியாக சொல்லுங்கள்? நீங்கள் பார்த்த அந்த குமாரர்களின் ஸ்வபாவ ஸ்வரூபங்களைச் சொல்லுங்கள்.'' ராஜா விசேஷமான பிரேமை யின் காரணமாக அடிக்கடி அடிக்கடி அவர்களை மீண்டும் மீண்டும் கேட்டார். (1552)

'' தூதர்களே, எந்த தினத்திலிருந்து அந்த விஸ்வாமித்திர முனிவர் என்னிடமிருந்து அந்த இருவர்களையும் அழைத்துச் சென்ருரோ, அதிலிருந்து இன்றுவரை அவர்களைப் பற்றி ஒரு தகவலும் எனக்கு வரவில்லை. இப்போதுதான் நீங்கள் செய்தி கொண்டு வந்திருக்கிறீர்கள். சொல்லுங்கள், மஹாராஜரான ஜனகர் அவர்களை எவ்விதம் அடையாளம் தெரிந்துகொண்டார்?'' இப்பேற்பட்ட பிரேமைரஸம் நிரம்பிய இன்சொற்களைக் கேட்ட அந்த தூதர்கள் சிரித்துக்கொண்டார்கள். (1553)

'' மஹீபதிகளுக்கு முகுடமணி போன்று சிறந்து விளங்கும் ராஜாவே, கேளுங்கள். ஐயா, உங்களுக்குச் சமமாக தன்ய புருஷர் இந்த சம்சாரத்தில் யாராவது இருக்கிருர்களா? ராம லக்ஷ்மணர்களை தனயர்களாக அடைந்த மஹா பாக்யவானே, அந்த இரு ராஜகுமாரர்கள் விஸ்வத்திற்கு இரு பூஷணங்களாக வல்லவோ விளங்குகிருர்கள்.'' (1554)

'' ஐயா, தங்கள் புத்ரர்களைப்பற்றி அடையாளம் சொல்லி, தெரிந்து கொள்ளவும் வேண்டுமா? அவர்கள் மூன்று உலகங் களிலும் பிரகாசிக்கும் இரு புருஷ சிம்மங்கள். அவர்களின் கீர்த்தி முன்பு சந்திரன் மலினம் அடைந்து, ஒளியற்றவனுகிருன்; அவர்களுடைய பிரதாபங்களின் முன்பு ரவி ஆகிய சூர்யன் குளிர்ந்து போகிருன்.'' (1555)

'' அரசரே, அப்பேற்பட்ட மஹா புருஷர்களை எவ்விதம் அடையாளம் தெரிந்து கொண்டீர்கள் என்று கேட்கிறீர்கள்? சூர்யனை தீபத்தைக் கையில் வைத்துக்கொண்டுதானு பார்க்க வேண்டும்? ஜனகரின் புத்ரியாகிய சீதையினுடைய ஸ்வயம் வரத்தில் அநேக பூபதிகள் வந்திருந்தார்கள். ஒவ்வொருவரும் ஒருவரை யொருவர் வெல்லக்கூடிய பிரசித்திபெற்ற வீரர்களாக விருந்தார்கள். அப்பேற்பட்ட ஏக மாத்திர வீரர்கள் அடங்கிய சபையில், (1556)

'' சிவனுடை வில்லை ஒருவராலும் எடுப்பதற்கும், நகற்று வதற்கும்கூட முடியவில்லை. ஸகலபலவான்களும் தோற்றுப்

போய்விட்டார்கள். மூன்று லோகங்களிலும் தங்கள் வீர பிர தாபத்தை பெருமை அடித்துக்கொண்ட அவர்களின் வீரத்தை தையும் பலத்தையும் சம்புவினுடைய வில் ஒடிந்துவிட்டது.'' (1557)

''பாணுசுரன் ஸுமேருபர்வதத்தையே தூக்கும் சக்தி வாய்ந்தவன். அவன்கூட தன் ஹ்ருதயத்தில் தோல்வியை ஒப்புக்கொண்டு, அந்த வில்லை பிரதக்ஷிணம் செய்து போய் விட்டான். மேலும் ஸ்வாமி, கைலாஸ மலையை விளையாட் டாகவே தூக்கிய பத்துத்தலை, இருபது கைகள் கொண்ட ராவணன் அந்த சபையில் அவமானம் அடைந்து வெட்கப்பட்டு ஓடிவிட்டான்.'' (1558)

ஹே மஹா ராஜா, கேளும். பெரிய வீரர்கள் அவ்விதம் தோற்று ஓடின பொழுது, ரகுவம்சமணி ஸ்ரீராமன் ஒருவித பிரயாசை யின்றி, சிவனுடைய வில்லை ஒரு மத்தகஜமானது கமல புஷ்பத்தை தண்டுடன் ஒடிப்பது போல ஒடித்து விட்டான்.'' (1559)

[தியானம்

ஹே ராமா, ஜானகி, மாயம்மா, ஜனக குலத்தின் லக்ஷ்மி, ராமதூதா, ஆஞ்சநேயா, தியாகராஜரே, நாரதரே, குற்றமற்ற கண்களையுடைய தாயே, அரவிந்த லோசனரே, ரெங்கநாதனை ஆராதித்து ராமனுக்கும் சீதைக்கும் காட்டில் கைங்கர்யம் செய் வதற்காகப் பூஜைசெய்து, பிள்ளையைப் பெற்ற சுமத்திரையே, சூரனே, தர்மத்தில் மிக்க பற்றுதல் உடைய தாசரதி, ரவி லோசனரே, ஸுர்யனையும் சந்திரனையும் மின்னலையும் வருணனையும் பிரகாசிக்கச் செய்பவரே, அர்ச்சராதி மார்க்கத்தில் எட்டு, ஒன்பது, பத்தாவது படிகளில் இருப்பவர்களை தூண்டு விப்பவரே, ரதாங்கபாணி, ஹனுமத் வாஹனரே, கருடத்வஜரே, எப்போதும் சக்ராயுதத்தையும் அபய ஹஸ்தத்தையும் வைத் திருப்பவரே உமக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரியா அப்ரியங்களில், துகிகம், பயம் ஏற்படுவதாலும், விவேக ஞானம் இல்லாதபடியாலும், நான் பிரியா அப்ரியங்கள் அற்றவர்களான மஹான்கள், தியான சீலர்கள், பாபத்தை விலக்கிக்கொண்ட மஹாவ்ரதர்கள், பாபச்செயலைத் தூண்டும் புத்தி மனம் இந்திரி யம் ஆகியவைகளை ஜயித்தவர்கள், ஜன்மாந்திரீகமாக புண்ய ரூபத்தை அடைந்தவர்கள். ஆகிய யாதொரு பெரியோர்களுக்கு ராகத்வேஷங்களுக்கு நிமித்தமான ப்ரிய அப்ரிய துக்க பயங்கள்

இல்லையோ, அவர்களை ஆஸ்ரயித்தேன். அப்பேற்பட்ட மஹாத்மாக்களை ஆஸ்ரயித்த காரணத்தால், என் பாபங்களின் சுமை குறைந்து மாதவா, ஜனார்த்தனரே, உம்மைச் சரணம் அடைகிறேன், ஆஞ்சநேயரே, துளசிதாஸரே, தியாகராஜரே, வால்மீகி, மார்க்கண்டேயர், பீஷ்மர், துரோணர், அர்ஜுனன் தர்மர் முதலிய பாண்டவர்கள், திரௌபதி இவர்கள் காட்டிய வழிகளிலும், வியாஸர் சுகர் காட்டிய வசனங்களில் நான் சரண் புகுந்து, அம்ருதரே, உன்னை சரணம் அடைகிறேன். அபிப்ராயரே, ஸாத்விக தர்மத்தை அனுஷ்டித்து, நிர்மலராயிருக்கும் அடியார்களினால் வேறு பலனை விரும்பாமல் உம்மைத்தானே பரம உத்தேஸ்யமாக நான் நினைத்து, உமக்காக வாழும் பாக்யமடைந்த பாவத்துடனும், பக்தி பிரபன்னனாக வந்த என்னை நீதான் காப்பாற்றவேண்டும். என்னை யாகிற ஹவிஸ்ஸைக் குடிக்கும் அம்ருதபரே, அயோ நிஜையாகிய லக்ஷ்மிக்கு நாயகரே, கௌரவத்தைக் கொடுப்பவரே, நீர்தான் காப்பாற்ற வேண்டும்.]

"அப்பேற்பட்ட தனுஷ் ஒடிந்த சமாசாரத்தைக் கேட்டு பிருகுகுல பதியான பாசு ராமர் க்ரோதத்துடன் வந்து பல விதமாகக் கோபத்துடன் ராமனிடம் பல வசனங்களைச் சொன்னார். கடைசியில் ராமனுடைய புஜபல பராக்ரமத்தைக்கண்டு தன்னுடைய வைஷ்ணவ தனுஷ்ஷை ராமனுக்கு பரிசாகக் கொடுத்துவிட்டு, தபஸ் செய்வதற்காக வனம் சென்றார்." (1560)

"ஹே ராஜாவே, உம்முடைய ஸ்ரீராமன் அதுளித பராக்ரமம் வாய்ந்தவன். அவனுக்கு ஈடு யாரும் கிடையாது. அதே மாதிரி தேஜஸ்ஸுகளுக்கு நிதி போன்றவன். அவன் மாதிரியே அவன் தம்பியான லக்ஷ்மணனும் இருக்கிறான். அந்த இரு ராஜகுமாரர்களைக் கண்டு ராஜலோகம் அனைத்தும் பயத்தினால் நடுங்கி, யானை சிம்மக்குட்டியைக் கண்ட உடனே பயந்து நடுங்குவது போல நடுங்கினார்கள்." (1561)

"ஹே தேவ, உம்முடைய மேன்மை பொருந்திய இரு ராஜகுமாரர்களைக் கண்ட பின்பு அதே கண்களால், அதே நன்மதிப்பு கௌரவம் ஆகியவைகளுடன் வேறு ஒரு ராஜகுமாரரைப் பார்ப்பார்களா? எங்களுடைய திருஷ்டியின் முன்பு வெறுமனே நிற்பதற்குகூட யாவரும் லாயக்கில்லை." பிரேமை, பிரதாபங்கள் வீரரஸம் பொருந்திய தூதர்களின் வசனங்களை தசரதர் கேட்டார். அவை இன்னும் அந்த தர்பாரில் கூடியிருந்த எல்லோருக்கும் ரொம்ப பிரியமான வசனங்களாக விருந்தன. (1562)

சபாசகிதம் ராஜா தசரதர் பிரேமை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார். வெகு தூரத்திலிருந்து வந்த தூதர்களுக்கு ராஜா சம்மானம் செய்ய ஆரம்பித்தார். ஆனால் அந்த தூதர்கள் அந்த அரசனின் செயலைக் கண்டு "இது நீதிக்கும் தர்மத்திற்கும் உகந்தது இல்லை," என்று சொல்லி தங்கள் கைகளால் காதுகளைப் பொத்திக் கொண்டார்கள். அவர்களுடைய தர்ம சிந்தனைகளையும், தர்மயுக்த அனுஷ்டானங்களையும் எல்லோரும் மிகப் புகழ்ந்தார்கள். (1563)

அப்பொழுது அரசர் எழுந்திருந்து வஸிஷ்டரிடம் சென்று அந்த பத்திரிக்கையை அவரிடம் ஸமர்ப்பித்தார். மிக்க மரியாதையுடன் அந்த தூதர்களை அழைத்து அவர்களைப் பூரா கதையையும் வஸிஷ்டரிடம் சொல்லும்படி செய்தார். (1564)

சகல சமாசாரங்களையும் கேட்டு, அத்யந்த சுகமடைந்த குரு மஹாராஜர் வஸிஷ்ட பகவான் சொன்னார், "புண்யாத்மா புருஷர்களுக்காக இந்த பூமி தானும் மிக்க சுகத்தை அடைந்து அவர்களுக்கும் சுகத்தை அளிக்கிறது. எவ்விதம் நதிகள் பிரவாஹம் எடுத்து ஸமுத்திரத்தில் லயமடைகின்றனவோ, அதே சமுத்திரம் தனது பூர்த்திக்கு அந்த நதிகளின் பிரவாஹத்தை விரும்புகிறதில்லை." (1565)

"அதுமாதிரி ஸகல ஸம்பத்துக்களும் ஸம்ருத்திகளும் சுகங்களும் விரும்பாமலே ஸ்வாபாவிகமாகவே தர்மாத்மாக்களாகிய புருஷர்களிடம் ஸ்வயமாகவேபோய் சேருகின்றன. ஹே ராஜன், உன்னால் குரு மஹராஜர்கள், பிராம்மணர்கள், தெய்வங்கள், பசுக்கள், தேவதைகள் ஆகியவர்களுக்கு மஹத்தான சேவை செய்யப்பட்டிருக்கின்றது. அதுமாதிரி உன்னுடைய பத்னியும் மிக்க பவித்திரமானவளுமான கௌஸல்யையும் உன்னைப் போலவே இருக்கிறாள்." (1566)

"உங்களிருவருக்கும் சமானமாக புண்யாத்மாக்கள் யாராவது இந்த ஜகத்தில் இருக்கிறார்களா? இருந்ததுமில்லை. இனியும் இருக்கப் போவதுமில்லை. உன்னைவிட யாராவது அதிக புண்ய சாலி இருக்க முடியுமா? எல்லாவித பாபங்களைப் போக்குபவரும், மங்களங்களைச் செய்கிறவரும், குறைகளைக் கேட்பவரும், நாம சங்கீதங்களால் உரைக்கப்படுகிறவரும், புண்ய கீர்த்திகளை ஸ்ருதி, ஸ்மிருதிகளாலும் புகழப்படுகிறவரும் எல்லோருக்கும் பிரியரும், ஸ்வரூபகுண விபவங்களில் ஈடுபாடு படுபவர்களுக்கு புண்ணியத்தையும் பேரானந்தத்தை மிகுதியாக கொடுக்கக்கூடிய புருஷரான ஸ்ரீராமன் நேராக உங்கள் பிள்ளையாக அவதரித்

திருக்கிறுர்; உங்களுக்கு வந்திருக்கும் பாக்யத்தைவிட வேறு எவனுக்காகவாவது இந்த பாக்யம் கிடைத்திருக்கிறதா? ஆகவே உங்களைவிடச் சிறந்த பாக்யவான் யார் இருக்கக்கூடும்?'' (1567)

'' அந்த உத்தமமான ஸ்ரீராமனுக்கு வீரத்திலோ, வினயங்களாகிற மரியாதைகளிலோ, தர்மத்தின் மீதுள்ள பற்றுதலிலோ, குணஸாகரம் என்று சொல்லப்படும் அமானுஷ்யமான கல்யாண குண விசேஷங்களிலோ (தர்மம், அஹிம்சை, தயை, கார்ப்பண்யம், சமம், தமம், சீலம், பிராம்மணர்கள், பசுக்கள் மீதுள்ள அபாரவாத்ஸல்யம், பந்துஜன பிரியம், சக்திதேஜஸ், சௌலப்யம், ரூபம், இதுபோல வீரம், தைர்யம், சௌர்யம், சூரத்தனம், தர்ம யுத்தத்திலும் நியாய வழிகளிலும் மனம் ஈடுபாடுதல், ஆகியவைகள் எல்லாம்) ஒருங்கே கொண்ட பெரும் சமுத்திரமாகிய நான்கு சகோதரர்கள் பிறந்திருக்கிறுர்கள். ஹே ராஜன், உனக்கு சகல காலங்களிலும் மங்களங்கள் ஏற்படட்டும். ஆகையால் வாத்தியங்கள் மங்கள கீதங்கள் நடக்கட்டும். ராம கல்யாணத்திற்கு எல்லாவித ஏற்பாடுகளையும் உடனே செய்யக் கடவாயாக.'' (1568)

'' சீக்கிரம் புறப்படு'' என்று குருவினுடைய கட்டளையைக் கேட்ட அரசன் '' ஹே ஸத்குரு மஹாராஜ், என் நாதரே, ரொம்ப நல்லதாகிவிட்டது,'' என்று சொல்லி தன் சிரத்தால் அவரை நமஸ்கரித்து, பிறகு மிதிலையிலிருந்துவந்த தூதர்களுக்கு தங்கும் இடத்தை ஏற்பாடு செய்துவிட்டு அரசன் தன் அந்தப்புரத்திற்குச் சென்றுர். (1569)

அரசர் தன் ராணிமார்களுக்கு அந்த சுபசமாசாரங்களைத் தெரிவித்தார். ஜனக மஹாராஜரின் பவித்திரமான லிகிதத்தை வாசித்துக் காண்பித்தார். அந்த விஷயங்களைக் கேட்டு ராணிமார்கள் மிகுந்த ஆச்சர்யமும் சுகத்தையும் அனுபவித்தார்கள். தூதர்களின் வழியாகக் கேட்ட சகல சமாசாரங்களையும் அரசர் தன் பத்னிகளுக்கு விபரமாகச் சொன்னுர். (1570)

[தியானம்

ஹே தேவாதிதேவா, ராஜீவாக்ஷா, ஸ்ரீரூபிணியாகிய சீதையை மனைவியாகக் கொண்ட ஸ்ரீராமா, ஸ்ரீநிதி, குட்டி மானுக்கு ஒப்பான கண்களை உடைய வைதேஹி, மாந்துளியே, இந்திராவே, இந்து சீதளத்திஞல் என் தாபங்களையும் சிரமங்களையும் போக்கும் கடைக்கண் கடாக்ஷ விலாஸங்களையுள்ள ஜானகி, க்ஷமா தேவி, ராமனுக்கு தன் திருஷ்டியினுல் மதத்தை உண்டுபண்ணு

கிறவளே, ஆஞ்சநேயர், லக்ஷ்மணர் ஆகியவர்களை சந்தோஷப் படுத்துகிறவளே, ஸிம்சுபா விருக்ஷத்தின் கீழே ஒரு வருஷம் ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தால் சேற்றினால் பூசப்பட்ட தாமரைக் கொடியைப்போல தோன்றுபவளும், என் தாயுமான சீதாபிராட்டியை நான் நமஸ்கரிக்கிறேன். கிரீடம் ஸூர்யனைப் போல ஒளியை வீசவும், திருமுகம் சந்திரனைப்போல குளிர்ந்து நிற்கவும், காதுகளில் மகரகுண்டலமும், வாயில் அழகான பற்களை உடைய வாசஸ்பதியும், மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவும், பெரியபிராட்டி லக்ஷ்மியை ஸாந்நித்யம் செய்து கொண்டு, தன்னையும் லக்ஷ்மியையும் மேன்மைப்படுத்துகிறவரும், பிரளய காலத்தில் சகல சேதன அசேதனங்களை வைத்துக்கொண்டு, காப்பாற்றி, பிற்பாடு மார்க்கண்டேயருக்காகவும், ஸத்யவிரதன் என்கிற பாண்டியனுக்காகவும், ஸப்த ரிஷிகளுக்கும், தன் மாயையையும் பிரஸாதத்தையும் அருளின பேரருளாளனை நான் நமஸ்கரிக்கிறேன். கௌஸல்யை, தசரதர், சுமித்திரை, கைகேயி யசோதை நந்தர் போன்ற மஹாபுண்யவான்களும் விஸ்வாமித்திரரும் சுப்ரபாதம் செய்து எழுப்பினவனும், வேதங்கள் எல்லாம் புகழும் அந்த திவ்ய திருவடிகளை சரணாகதனான நான் சம்சார மாகிற பாலைவனத்தில் ஒரு நீர்நிலை என்றும், கருத்தமுகில்போல தேஜஸ் உள்ள கனஸ்யாமர் என்கிற ஸ்ரீராமனை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே அந்தர்யாமியே, பாகவதர்களால் விரும்பப்படும் அம்ருதமே, பிரும்மா முதலானவர்கள் காயித்திரி முதலிய தவங்களின் மகிமைகளினால் அடைந்த பெரும்பயனே, வியாஸர் சாவித்திரி மந்திரத்தினால் அனுபவித்த பரம்பொருளே, வெங்கடேசவரதா, வனமாலி, அனன்ய பக்தியுடன் சரணமடையும் என்னைக்காப்பாற்று. "ப்ரியார்ஹர்" என்று கீர்த்தியைபெரும். ஜனக புத்திரியுடன் சமேதராக உமை, கிரிஜாரமணன் ஆஞ்சநேயர், தியாகராஜர் துளசிதாஸர் போன்ற மஹான்கள் காட்டிய வழிகளில் தூரத்தில் இருக்கும் எனக்கு எப்போது தரிசனம்தந்து கடாக்ஷித்து அருளப்போகிறீர். நாரதரே, வால்மீகியே, வியாஸரே, எனக்கு நீங்கள்தான் சிபார்சு பண்ணவேண்டும்.]

பிரேமையினால் பிரபுல்லிதமாகி, புளகாங்கிதமடைந்து சரீரத்தில் ஆனந்த வெள்ளம் ஓடிப்பொங்க மஹாபாக்யவானாகிய தசரதரும் அவருடைய பத்னிகளான கௌசல்யை, சுமித்திரை, கைகேயி, இன்னும் இதர ஸ்திரிகளும் எவ்விதம் கருமுகிலைக் கண்ட பெரிய மயிலானது ஆனந்தத்தால் கூத்தாடுமோ, அது போல அவர்கள் ஆனந்தத்தால் கூத்தாடினார்கள். அவர்களுடைய

உண்மையான பக்தியையும் பேரானந்தத்தையும் பார்க்கப் பார்க்க, ரொம்ப சோபிதமாகவிருந்தது. வயதில் முதிர்ந்த ஸ்திரிகள் அவர்களை ஆசிர்வாதம் செய்தார்கள். தாயார்கள் அத்யந்த ஆனந்தத்தினால் சுகத்தை அடைந்தார்கள். (1571)

ஒவ்வொருவரும் பரஸ்பர அத்யந்த பிரியர்களாகி, அந்த பத்திரிகையை தங்கள் கையில் எடுத்துக்கொண்டு, ஹ்ருதயத்தை அதில் செலுத்தி, அந்த சமாசாரத்தைப் படித்து, ராம சீதை கிருபையாகிய சீதளமான மனச்சாந்தியைப் பெற்றார்கள். மஹாராஜர் தசரதர் லக்ஷ்மண ராமனுடைய புண்ய கீர்த்திகளையும் அவர்களுடைய வீரச்செயல்களையும் அடிக்கடி அடிக்கடி வர்ணனை செய்தார். (1572)

"எல்லாம் விஸ்வாமித்திரருடைய பிரஸாதம். அவருடைய கிருபை," என்று எல்லோரும் அவருக்கு கிருதக்ஞை செய்து, வாழ்த்தி, சந்தோஷமடைந்தார்கள். பிறகு அரசன் அந்தப்புறத்தினின்று வெளிவந்தார். அப்பொழுது ராணிமார்கள் பிராம்மணர்களை அழைத்து, ஆனந்தஸகிதமாக தானங்கள் செய்தார்கள். விப்ரஸ்ரேஷ்டர்கள் அந்த ராஜகுடும்பத்தை ஆசீர்வதித்துச் சென்றார்கள். (1573)

பிறகு பிக்ஷுக்களைக் கூப்பிட்டு கோடி பிரகாரம் வெகுமதிகளைக் கொடுத்து, அவர்களின் ஆசைகளை நிறைவேற்றினார்கள். அவர்கள் "சக்ரவர்த்தி மஹாராஜ் தசரதருடைய நான்கு புத்ரர்களும் சிரஞ்சீவிகளாகவும் அழியாத கீர்த்திகளுடனும் இருக்க வேண்டும்" என்று மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். (1574)

யார் யார் எவ்வித மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார்களோ, அவர்கள் ஒவ்வொருவரும் அநேக பிரகாரங்களாக அழகான வஸ்திரங்களை அணிந்து கொண்டு சென்றார்கள். ஆனந்தம் கொண்டு பாடகர்கள், பேரிகைகளை முழங்குகிறவர்கள், வெகு நேர்த்தியாகவும், வெகுபலமாகவும், சங்கீதத்தையும், பேரிகை ஒலிகளையும் கிளப்பி தங்கள் சந்தோஷத்தை பகிரங்கப் படுத்தினார்கள். இந்த பேரொலியைக் கேட்டு சகல ஜனங்களும் சமாசாரத்தை அறிந்துகொண்டு, ஒவ்வொருவரும் அயோத்தியில் வாழும் ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி ராம லக்ஷ்மணருடைய கீர்த்திகளை பரப்பினார்கள். ஒவ்வொரு வீட்டிலும் இந்த பேச்சுக்களே கேட்கப்பட்டன. (1575)

பதினான்கு புவனங்களும் உத்ஸாகத்தினால் நிரம்பப்பட்டன. ஜனகருடைய பெண்ணாகிய சீதைக்கு ரகுவீரனுடன் விவாஹம்.

இந்த சுபமான செய்தியைக் கேட்டு அதிபிரேமையினுலும், வாத் ஸல்யத்தினுலும் சந்தோஷமடைந்த அந்த அயோத்யாபுரி வாசி கள் தங்கள் விடுகளையும் தெருக்களையும் சந்துக்களையும் அலங் கரித்தார்கள். (1576)

சர்வமங்களமயமான ஸ்ரீராமன் நித்யவாசம் செய்யும் பட்டினமானபடியால், ஏற்கனவே அயோத்தி அழகான பட்டின மாக விருந்தபோதிலும், இப்பொழுது ப்ரீதி பிரீதியினுல் மேலும் மேலும் வளர்க்கப்பட்டு வளர்ந்துவருவதுபோல, அந்த பட்டின ஜனங்களுடைய அலங்காரங்களால் அதிசோபையாக விளங்கியது. (1577)

எங்கே பார்த்தாலும் த்வஜங்கள், கொடிகள், படுதாக்கள், அழகான சாமரங்கள் இவைகளால் அலங்கரிகப்பட்ட கடைத் தெருக்கள் அநேகம் இருந்தன. ஒவ்வொன்றும் விசித்திரமாகவும் பலவிதமாகவும் விளங்கியது. தங்கக்கலசங்கள், தோரணங்கள் மணிகளால் அலங்கரிக்கப்பட்ட வளைந்த ஆர்ச்சுகள், மஞ்சள், குங்குமம், வாசனைதரும் தூபங்கள், தயிர், அக்ஷதைகள், புஷ்ப மாலைகள் போன்ற மங்கள வஸ்துக்களால் (1578)

அந்த அயோத்யாபுரியில் வாழும் புண்ய புருஷர்கள் தங்கள் வீடுகளை மங்களமயமாக அலங்கரித்து, ஆனந்தத்தை அடைந் தார்கள். ஒவ்வொரு தெருவிலும் வாசனை திரவியங்களாகிற சந்தனம், கேஸரி என்று சொல்லப்படும் குங்குமப்பூ, கஸ்தூரி, பச்சை கற்பூரம் இவைகளால் பண்ணப்பட்ட சுகந்த பரிமளம் கொண்ட ரஸங்கள் அழகாக தெளிக்கப்பட்டிருந்தன. விதவித மாக இவைகளால் கோலங்கள் தெருக்களிலும் போடப்பட்டன. அந்த ஊரில் உள்ள சதுரங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டு வெகு நேர்த்தியாக விளங்கின. (1579)

மின்னலைப்போல காந்தியுள்ளவர்களும், சந்திரனைப்போன்ற அழகான முக மண்டலங்களை உடையவர்களும், இளம் மான் குட்டிபோல கண் விழிகள் உள்ளவர்களும், தங்களுடைய திவ்ய சௌந்தர்ய லாவண்யங்களால் காமதேனின் பத்னியாகிற ரதி தேவியைக்கூட தாழ்மைப்படுத்துகிறவர்களும், இனிமை யான குரல் உடையவர்களும், நல்ல மணம் உள்ளவர்களுமான உத்தமமான ஸ்திரி ரத்னங்கள் கூட்டம் கூட்டமாக வெளி வந்து, வெகு நேர்த்தியான சிங்காரங்களுடன் கூடி ஆடிப்பாடி சந்தோஷத்துடன் கூடியிருந்து எல்லோரையும் குளிமைப் படுத்தினுர்கள். (1580)

அவர்களுடைய மனோஹரமான குரலிலிருந்து வெளிவந்த மங்கள கீதங்கள், ஸுஸ்வரங்களுடனும் தாளங்களுடனும் பாடப் பட்ட அந்த கீதங்களைக் கேட்ட குயில்கள் மிகவும் லஜ்ஜையை அடைந்தன. அந்த தசரத மஹாராஜருடைய அரண்மனையை எவ்விதம் வர்ணிக்க முடியும்? அந்த இடத்தில் இந்த உலகத் தையே மோஹிக்கும்படி ஒரு அழகான மண்டபம் நிர்மாணிக்கப் பட்டிருந்தது. (1581)

[தியானம்

ஹே ராமாசீதா, தர்ம வத்ஸலா, தர்மத்திற்கு விரோதமாக ஒரு காரியக்தையும் செய்யாதவனே, தசரதரால் ராஜ்யம் கொடுக்கப்பட்டும், தர்ம விருத்தமான காரணத்தால் மஹா பக்தனுகிய பரதனுக்காகவும், மாத்ரு பக்தியின் விஸ்வாசத்தாலும் ராஜ்யம், தனம், சீதையுடன் அரண்மனை சுகம், பித்ருஸ்நேகம் பொது ஜனங்களின் கோபம், இவைகளைத் துறந்து தன்னுடைய ஸத்பதத்தில் இருந்து நடத்திக் காட்டிய ஆசாரம், குலஸ்ரேஷ்டம் ஆகியவைகளால் ராமா பெரும் புகழ் பெறப்போகிறுய். இந்த சம்சாரமாகிய பெரும் கடலை உள்ளும் புறமும் அறிய முடியாதது போலவும், வேதாந்தங்களின் பொருள்களையும் உட்கருத்துக் களையும் அறிய முடியாது. அதற்கு வேண்டிய காலமும் நுண்ணிய அறிவுமில்லை. ஆனுல் நம் ஆசாரியர்கள் காட்டிக் கொடுத்த மோக்ஷ மார்க்கத்தை அவலம்பித்து, எம்பெருமானே, திரிபுரசுந்தரியாகிய தாயே, மஹாலக்ஷ்மியே, நீங்கள்தான் இந்த ஆனந்தக் கடலின் துறையாகவும், ஸம்சாரக் கடலின் அக்கரையாகவும் கலங்காத அமுதாகவும், உள்ளத்தில் உங்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை தரித்துக்கொண்டு மஹாகிருபாளுவாகிய ஆசார்ய பலத்தின் உதவியினுல் ராமா, நாராயணு, ஸ்ரீவித்யா, காய்த்திரி, சாவித்திரி, வித்யைகளால் நான் படகின் உதவியினுல் தாண்டுகிறேன். அம்மா திரிபுரசுந்தரி, தயாபரி, உன் சரணங் களைப் பற்றின எனக்கு நீதானே கதி. உன் காலின் சலங்கைகளின் ஒளியும் சப்தமே எனக்கு வழிகாட்டிகள். ஹே ராஜித மணிகண பூஷணி, மத்த கஜராஜன்போலச் செல்லும் கமனி, லோக சங்கரி, உன் ஜபமே என் முக்திமார்க்கம். ராஜசேகரனுகிய சீதாராமனே, என் மனோஹரமான தவத்தின் பயன். கௌரி, பராத்பரி, காமேசரின் உள்ளத்தில் நடமாடும் மீன்குஞ்சு போன்றவளே, மீனுக்ஷி, காமாக்ஷி, உன் அபார தயை கருணையால் தியாகராஜர், நாரதர், பாஸ்கர ராயர், துர்வாஸர்

அகஸ்த்தியர், லோபாமுத்ரை, இந்திராணி, தமயந்தி, சாவித்திரி இன்னும் அநேக பேர்கள் அம்மா, அநேக யோகிகள், மன்மதன் ரதி, விக்னேஸ்வரர், குஹன், கங்கை போன்ற புண்ணிய நதிகள், ருக்மிணி, சீதை ஆகியவர்கள் உன் மகிமையால் அல்லவா நித்ய ஆனந்தத்தை அடைந்திருக்கிருர்கள். இந்த கூட்டமாகிய சம்சாரத்தில் என்னை தயையுடன் பார்த்து, கடாக்ஷிக்க மாட்டாயா? ஹே அம்மா, திரி ஜகதீஸ்வரி, கருணையுடன் விளங்கும் மஹாலக்ஷ்மியே, தஞ்சம் நீதான். தர்மஸம்வர்த்தினி, என் குலதீபமே, நப்பின்னையே, கந்தம் கமழும் குழலி, உன் செந்தாமரைக் கையால் எனக்கு உன்னைக் காட்டிக்கொடு. என் மோஹத்திரையை அகற்றி, உன் கை வளைகள் குலுங்க, எனக்காக அம்மா, உன் மனக்கதவுகளை திறவாய். உன் மஞ்ஞளையும் காட்டிக்கொடு. ஆஞ்சநேயா, நீதான் கிருபை பண்ணவேண்டும்.]

அநேக விதமான மங்கள திரவியங்கள் அங்கே வைக்கப் பட்டிருந்தன. அநேக விதமான சப்தங்களை ஒலிக்கும் நகாடா, (பேரிகை, மத்தளம்; ஜால்ரா, துந்துபி ஆகிய வாத்தியங்கள்) காணப்பட்டன. சில இடங்களில் குலத்தின் பெருமைகளைப் பாடும் விருதா வளிகள் தீர்க்கமான உச்சஸ்வரங்களுடன், நேர்த்தியாக ரகுகுலத்தின் பெருமைகளைப் பாடிக்கொண்டிருந் தார்கள். இன்னும் சில இடங்களில் பிராம்மணர்களின் வேத த்வனிகள் கேட்டன. (1582)

அழகான ஸ்திரிகள் ஸ்ரீராமன் சீதை இவர்களுடைய பெயர் களைக் கொண்ட மங்கள கீதங்களைப் பாடிக்கொண்டிருந்தனர். அவர்களுடைய உத்ஸாஹங்கள் ரொம்ப ரொம்ப உச்ச நிலைகளை அடைந்திருந்தன. அதனுல் அந்த ராஜ அரண்மனை அவைகளின் உயரத்திற்கு குறைந்து, குறைவு பெற்றதாக விளங்கியது. அவர்களுடைய உத்ஸாக பிரவாகங்கள் நான்கு திக்குகளிலும் ஓடி நிரம்பின. அந்த மஹால் அந்த பிரவாகங்களைத் தடுப் பதற்கு முடியாமல் சிறியதாக விளங்கியது. (1583)

இப்பேர்பட்ட சிறந்த சோபைகளை உடைய அந்த தசரதரின் அரண்மனைச் சிறப்புக்களை யாரால் வர்ணிக்க முடியும்? எந்த கவி இருக்கிருன்? ஸமஸ்த தேவதைகளுக்கும் அக்ரகண்யர், முதல் நாயகர், சிரோண்மணியாக விளங்கும் ஸ்ரீராமன் அவதாரம் எடுத்த ஜன்ம பூமியன்றோ? (1584)

பூபதி தசரதர் பரதனை அழைத்துச் சொன்னுர். "நீ சீக்கிரம் குதிரை யானை ரதம் ஆகியவைகளைக்கொண்ட சேனை

களைத் தயார்படுத்து. ஜல்தியாக நாம் ஸ்ரீராமச்சந்திரனுடைய பராத்திற்கு (கல்யாண ஊர்வலத்திற்கு) போகவேண்டும்.'' அந்த வார்த்தைகளைக் கேட்டு அந்த பரதன் சத்ருக்னனுகிய இரு சகோதரர்களும் ஆனந்தவசமடைந்து புளகாங்கிதமானுர்கள். (1585)

பரதன் எல்லா குதிரைலாயங்களின் எஜமானர்களையும் அழைத்து கட்டளையிட்டான். அவர்கள் மிக்க சந்தோஷமடைந்து எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்கள். அழகானதும் விதவிதமான சேணங்கள், பூட்டுக்கள், அலங்காரமான பொருள்கள், இவைகளுடன் யதாயோக்யமாக அலங்கரித்து புறப்பட்டார்கள். அந்த குதிரைகளின் நிறங்களும் வர்ணங்களும் அழகுகளும் ரொம்ப சோபிதமாக விளங்கின. (1586)

அந்த குதிரைகள் ரொம்ப உயரமாகும் நேர்த்தியாகவும் அழகான நடையுடன் செல்லுபவைகளாயிருந்தன. அவைகள் இந்த பூமியின் மீது கால்களை வைத்துப் போவது கொதிக்கிற இரும்பின் மேலே வைப்பது போல துரிதமாகச் செல்வது போலிருந்தது. அநேக ஜாதிக் குதிரைகள். அவைகள் வர்ணிக்க முடியாத விஷயம். அவைகளின் தேஜஸ்ஸுகளும், காலும் (செல்லும் ஓடும் கதி, பாய்ந்து ஓடும் நடை அழகுகள்) வெகு நேர்த்தியாக விருந்தன. காற்றைவிட வேகமாக ஓடக்கூடும் ஆற்றல் படைத்தவையாக விருந்தன. (1587)

அந்த நேர்த்தியான குதிரைகளின் மீது பரதனுக்குச் சமமான வயதுள்ளவர்களும் மிக்க அழகானவர்களும் விதவிதமாக அலங்கரிக்கப்பட்டவர்களாய் விளங்கும் ராஜகுமாரர்கள் சவாரி பண்ணினுர்கள். அவர்கள் கையில் தனுஷ்பாணம், தோள் பட்டையில் அம்புகள் நிறைந்த அம்புராத் தூணிகளிருந்தன. (1588)

அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும், மெல்லிய இடை உள்ளவர்களாகவும், உத்ஸாகம் படைத்த சூரவீரர்களாகவும் நல்ல வம்சத்தில் பிறந்து கெட்டிக்காரர்களாகவும், சிறிய யௌவன பருவத்திலிருப்பவர்களாகவும் விளங்கினுர்கள். அந்த ராஜகுமாரர்கள் ஒவ்வொருவருக்கும் இருபக்கத்தில் கால் நடையுடனும் கைகளில் கத்தியுடனும், கத்தியுத்தத்தில் நிபுணர்களான இரண்டு சிப்பாய்கள் சென்றுர்கள். (1589)

சூரத்தனத்தை சின்னமாகக் கொண்ட ரணதீரர்களான வீரர்கள் எல்லோரும் நகருக்கு வெளியில் வந்து அழகான வரிசைகளாக அணிவகுத்து நின்றுர்கள். மிக்க சாமர்த்திய

முள்ள அவர்கள் தங்கள் குதிரைகளை நேர்த்தியாக நடத்தி, விதவிதமாக பேரிகைகளின் முழக்கங்களினால் யேற்படும் சத்தத்தைக் கேட்டு மிக்க சந்தோஷமடைந்தார்கள். (1590)

அந்த ரத சாரத்யம் பண்ணுகிறவர்கள் விதவிதமான த்வஜங்கள், கொடிகள், ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ரதங்களை அநேக விதமாக தோரணம் முதலியவைகளால் அலங் கரித்து, சாமரங்கள், காதுக்கு இனிமையான மணிகளின் ஓசை களுடன் கூடினதாக அங்கே நிறுத்தினார்கள். அந்த ரதங்கள் சூர்யனுடைய சோபையான ரதத்தைப் போல சோபையுடன் விளங்கின. (1591)

கணக்கற்ற கருமை நிறமுள்ள காதுகள் கொண்ட குதிரைகள். அவைகளின் சாரதிகள் அந்த குதிரைகளை அழகான ரதங்களில் பூட்டி எல்லா ஜனங்களும் பார்த்து வியக்கும்படி நடத்தினார்கள். அந்த குதிரைகளைக் கண்ட முனிவர்களுடைய மனம்கூட மோஹிக்கும்படி இருந்தது. (1592)

[தியானம்

ஹே ராமா சீதா, நப்பின்னை பிராட்டியே, உன் அருளின்றி பகவானுடைய திருவடிகளும், முகதர்சனமும் பரமகிருபையும் கிடைக்குமா? ஸ்ரீநிவாஸரே, நப்பின்னை கொங்கைமேல் படுத்துக் கிடக்கும் மலர்மார்பா, நந்தவனத்திலுள்ள பொற்கொடிக்கு கற்பகவிருக்ஷம் போல பிராட்டியுடன் என்றும் சேர்ந்திருக்கும் கொழு கொம்பாக இருப்பவரே, ஸ்ரீமானே, ஜனார்த்தனரே, என்ரக்ஷணத்திற்கு விரோதம் செய்யும் சத்ருஜனங்களை உதவி யின்றி அழிப்பவரே, அநிருத்தரே, பலம் தேஜஸ் இவைகளால் கூடிய ஞானத்தையும் ஐஸ்வர்யங்களையும் உடையவரே, விஷ்வக்ஸேனரே, அந்ருத்த வ்யூகத்தில் சக்தியாகிய மஹாலக்ஷ்மி யுடன் கூடிய தேஜஸ் வாய்ந்த பெருமாளே, ஆர்த்தர்களை ரக்ஷிப் பவரே, ஸர்வகரே, அழிக்கப்பட்ட எல்லாவற்றையும் பொருத்து, ஞானத்தினால் தம்மிடம் தாங்கி மீண்டும் படைத்து கார்யங் களான பிரபஞ்சங்களனைத்தும் அடைவிக்கிற பிரத்யும்னரே, ஐஸ்வர்யம் வீர்யம் இவைகளால் ரக்ஷிப்பவரே, எல்லாவற்றையும் படைத்து, தான் ஒருவித விகாரமில்லாமல் வீர்யத்துடன் பானு வாக பிரகாசிப்பவரே, கவிகளால் ஆஸ்ரயிக்கப்படுபவரே, தெய்வ நாயகரே, பரம ஏகாந்திகளின் மனத்தைக் கவர்ந்ததும், எப்போதும் தியானிக்கக்கூடிய பரப்ருஹ்மம் நீர் அல்லவோ. கௌஸல்யை, சுமித்திரை, தாரா, சபரி, மந்தோதரி, அத்ரி,

  

அகஸ்தியர், அனுசூயா, லோபாமுத்ரை, இவர்களால் தினமும் வணங்கப்படும் திருவடித்தாமரைகளை என் குருநாதராகிய வேதாந்த தேசிகர், ராமானுஜர், மணவாளமாமுனிகள் இவர்கள் காட்டிய உபாயங்களால் வேறு பலனையும் யாசியாது பிரபன்னனாகவந்து அடையும் என்னை, மஹாலக்ஷ்மியே, உன் புருஷகாரத்தினால் காப்பாற்றவேண்டும். திருத்துழாய் மணம்வீசப் பெற்ற அந்த கமலபதங்கள், பெரிய பிராட்டி தன் திருக்கைகளால் அவற்றோடு இணைந்த நின்ற பாதங்கள் எனக்கு உறுதுணையாக இருக்கவேண்டும். அடியார்கள் தொழும் இந்த புண்ணிய திருவடிகள் என் அனுபவத்திற்கு உய்யுமாறு எக்காலத்திலும் என்மனத்தில் அவதரிக்கவேண்டும்.]

அந்த குதிரைகள் ஜலத்தின் மீது நடக்கும் போதுகூட தரையில் நடப்பது போல ஒருவித சிரமமின்றி நடந்தன. வேகத்தின் அதிகத்தினால் அதனுடைய குளம்புகள் தண்ணீரில் அழுங்காமல் துரிதமாகச் சென்றன. அஸ்திரம் சஸ்திரம் இவைகளால் ரதங்களை நிரப்பிவிட்டு சாரதிகள் ரதம் ஓட்டுபவர்களை அழைத்தார்கள். (1593)

ரதங்களில் ஏறி உட்கார்ந்த பின்பு பராத் (கல்யாண ஊர்வலம்) நகரத்தின் வெளியேகூட ஆரம்பித்தது. ஒவ்வொருவருக்கும் நல்ல சகுனங்கள் ஏற்பட்டன. அவர்களின் இஷ்டங்கள் ஒருவித தடங்கலுமின்றி அப்பொழுதே நிறைவேறின. (1594)

ஸ்ரேஷ்டமான யானைகளின்மீது அழகான அம்பாரிகள் அலங்கரித்தன. அவைகள் எப்படி அலங்கரிக்கப்பட்டிருந்தனவோ அந்த அழகுகள் விவரிக்கமுடியாதபடிவிருந்தன. மதம் கொண்ட யானைகள் மணிகளால் அலங்கரிக்கப்பட்டு சோபிதமாக விளங்கின. அந்த யானைகள் நடக்கும் சமயம் ஏற்பட்ட மணிகளின் ஓசைகள் சுகம்தரும் சிராவண (ஆவணி) மாதத்தில் மேகங்கள் கூட்டம் கூட்டமாக சஞ்சரித்து, கர்ஜிக்கும் சப்தத்தைப் போல கேட்கப்பட்டன. (1595)

அநேகவிதமான பல்லக்குகள், வாகனங்கள், உட்காருவதற்கு யோக்யமான வண்டிகள், ரதங்கள் இன்னும் அநேக பிரகாரமாக விளங்கும் சவாரி சாதனங்கள் அந்த ஊர்வலத்தை அலங்கரித்தன. அந்த சவாரிகளில் ஸ்ரேஷ்டமான பிராம்மணர்களின் கூட்டங்கள் ஏறிக்கொண்டு சென்றார்கள். ஸகல வேதங்களின் சந்தஸ்ஸுகளே சரீரதாரணம் பண்ணி வந்ததுபோல அந்த பிராம்மணர்கள் விளங்கினார்கள். (1596)

மாகதர்கள், ஸூதர்கள், பாடகர்கள் குணங்களையும், கீர்த்திகளையும் கானம் செய்யும் சேவகர்களை எல்லோரும் அவரவர்கள் யோக்யதைக்குத் தகுந்தபடி அந்த சவாரிகளில் ஏற்றிச் சென்றார்கள். அநேக நல்ல ஜாதிகளில் பிறந்த கோவேறு கழுதைகள் ஒட்டகங்கள், விருஷபங்கள் கணக்கற்றதாக தங்கள் முதுகுகளில் அநேகவிதமான சாமான்களை ஏற்றிக்கொண்டு சென்றன. (1597)

அங்கே செல்லும் வஸ்துக்களை விவரிக்கக்கூடியவர்களான அநேகம் மூட்டை தூக்குபவர்கள் அந்த ஊர்வலத்தில் சென்றார்கள். இன்னும் அநேக சேவக சமூஹங்கள் தங்கள் வேலைக்கு ஏற்ப உடை அணிந்துகொண்டு ஊர்வலத்தில் சென்றார்கள். (1598)

ஒவ்வொருவருடைய ஹ்ருதயத்திலும் அபாரமான சந்தோஷமும் அவர்களின் சரீரத்தில் அதிக புளகாங்கிதமான ஆனந்தமும் இருந்தது. இவர்கள் அனைவருக்கும் ஒரே ஒரு ஆசைதான் இருந்தது. அதாவது, நாம் எல்லோரும் எப்போது ஸ்ரீராம லக்ஷ்மணன் ஆகிய இரு சகோதரர்களைக்கண்டு, நேத்ரானந்தத்தை அடைவோம்? (1599)

யானைகள் பிளிறின. அவைகளின் இருபக்கங்களிலும் மணிகளின் ஓசைகள் பலமாகக் கேட்கப்பட்டன. நான்கு பக்கங்களிலும் ரதங்களின் சலசலப்பு சப்தங்களும், குதிரைகளின் கனைப்புக்களும் கேட்கப்பட்டன. அந்த கும்பல்களிலிருந்து வரும் சங்கீதத்தின் த்வனிகளும், பாட்டின் ஓசைகளும் மேகங்கள் கர்ஜிப்பதுபோல பலமாகக் கேட்கப்பட்டன. அந்த சப்தத்தில் ஒருவர் மற்றொருவரிடம் பேசுவதுகூட சரியாகக் கேட்கப்படாமல் ஒரே சப்த ஒலிகளாக எங்கும் கேட்கப்பட்டன. (1600)

அந்த பூபதி தசரதரின் அரண்மனையின் வாயிலில் ஒரே கும்பலான ஜனத்திரள் கூடியிருந்தது. அந்த ஜனநெருக்கடி ஒரு கல்லைக்கூட பொடியாக்கிவிடும்படி அத்தனை திரள்திரளாக கூடியிருந்தது. பெண்கள் மாடி உப்பரிகைகளின்மீது ஏறி அந்த மஹத்தான ஊர்வலத்தைப் பார்ப்பதற்கு கூடினார்கள். அவர்களின் கைகளில் மங்கள ஆரத்திகளும், மஞ்சள் நீரும் இருந்தன. (1601)

அவர்கள் நானாபிரகாரமாக மனோஹரமான மங்கள கீதங்கள் பாடினார்கள். அவர்களுடைய ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. அந்த சமயம் ராஜாவின் பிரிய மந்திரி சுமித்திரர் இரு ரதங்களை தயார் செய்து அவைகளில் ரவியினுடைய குதிரைகளை அழகின

லும் வேகத்திலும் தேஜஸ்ஸுகளாலும் பழிக்கக்கூடிய குதிரைகளைப் பூட்டினர். (1602)

அந்த இரண்டு அழகான ரதங்களை சுமந்திரர் ராஜா தசரதர் இருக்கும் இடத்திற்குக் கொண்டுவந்தார். அந்த ரதங்களின் அழகு சிறப்புக்கள் ஸாரதாதேவியான சரஸ்வதிகூட வர்ணிக்கமுடியாதபடியிருந்தன. அவைகளில் ஒன்று அந்த ராஜ குடும்பத்திற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மற்றொன்று தேஜஸ்ஸின் குவியலாக மிக்க சோபையுடன் விளங்கியது. (1603)

[தியானம்

ஹே பிருஹஸ்பதியே, தாராபதியே, மஹேந்திரரின் ஆசார்யரே, முப்பத்துமூவர் தேவர்களுக்கு குருவே, புவன மங்களத்தைச் செய்பவரே, மஹாவிரதங்கள் உள்ளவரே, வேத நிதியென்று புகழப்படுகிறவரே, இந்திராணியை ஆபத்திலிருந்து மீட்டு உலகுக்கு ஸ்ரீவித்யையின் பெருமையையும் அவளுடைய பதிவிரதத் தர்மத்தையும் காண்பித்த மகா வள்ளலே, சுத்தமமான வாக்குக்களையும் மதுரமான நீதிகளையும் அன்பான சொற்களையும் உடைய மதுரபாஷி உம்மை ஆயிரம் நமஸ் காரங்கள் செய்கிறேன். தேவர்களிடம் தேவத்தன்மையுடன் விளங்கும்படி நிறைந்த சைதன்ய பிரும்மமாக எவர் விளங்குகிறரோ, அந்த நாராயணனே தேவர்களுக்கு புரோஹிதரான பிருஹஸ்பதியாகவிருக்கிறர் என்று புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எவர் தேவர்களுக்கெல்லாம் முன்னராய் ஹிரண்யகர்ப்பராகத் தோன்றினரோ, அந்த ஸ்வயம் பிரகாசமாயுள்ள பிராம்மண்யத்திற்கு நமஸ்காரம். பிரஜாபதிக்கு நமஸ்காரம். அரசர்களுக்கு வேண்டிய சாந்திகம், பௌஷ்டிகம், அபிசாரம் இவைகளைச் செய்பவராகவும், நான்கு வேதங்களில் கரைகண்டவர்களாகவும், ஆறு வேதாந்தங்களைக் கரைகண்டவரும், யாக கர்மங்களின் விதியையும், பதினெட்டு பிரிவுகள் அடங்கிய சாந்தி கர்மங்களை நன்கு அறிந்தவரும், எவ்வித நோய் இல்லாதவரும், இந்திரியங்களை அடக்கி காமம், க்ரோதம், மதம், மாத்ஸர்யங்கள் இல்லாதவரும், சமம், தமம், சீலம், ஆசாரம் இவைகளில் பிரபுவும், பிராம்மணரும், அகஸ்தியருடைய சகோதரரும், வருணனுடைய பிள்ளையும், அங்கிரஸின் புத்ரரும், இந்திரனையும், தேவர்களையும், பலியென்னும் அசுரர்களால் உபத்ரவம் ஏற்பட்ட சமயம் அவர்களைக் காப்பாற்றி, தன் தவ மகிமையினுல் கங்கையை பிரம்மதேவரால் வரம்

கொடுக்கப்பட்ட வைகானஸம் என்கிற தடாகத்தை உடைத்து, அந்த தடாகத்திலிருந்து பெருகின ஸரயு நதியை உண்டாக்கின பிரும்மரிஷியும், விஸ்வாமித்திரரை அனுக்ரஹித்தவரும், ராமன் க்ருபைக்கு முக்கிய காரணமானவரும், என் ஆசார்யரும், வரிஷ்டன் என்று எல்லோராலும் புகழும்படி மேன்மை யானவரும், அருந்ததியின் கணவருமான பகவான் வஸிஷ்டரை நான் ஆராதித்து நமஸ்கரிக்கிறேன். மதுர கவிகள், பகவானைவிட ஆசார்யரே முக்யம் என்று கருதி நம்மாழ்வாரை அடைந்தது போலவும், ஆசாரியனை அடையாமல் சேதனன் உஜ்ஜீவிக்க முடியாது என்கிற பெரும் ஞானத்துடன் ஈடுபட்டு, மஹாலக்ஷ்மி அடையாளமுள்ள க்ருத லக்ஷணரை, பகவானை ஸர்வ சப்தத்தால் தீங்குகளைப் போக்கிற வரும், தமது சரீரங்களாகிற சராசரங்கள் அனைத்துக்கும் ஆத்மாவாக வியாபித்து அவற்றை எல்லாம் நடத்துகிறவரும், எல்லாத் தோற்றங்களும் லயமாகிற காரணகாரியரும் ஸர்வக்ஞரும், சிருஷ்டி முதலியவைகளைச் செய்தும், வேண்டின பலன்களைக் கொடுப்பவரும், பயனற்றுப் போனவர்களையும் திரும்பவும் வசப்படுத்த பெருமுயற்சி செய்பவருமான அநிர்விண்ணரை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். அடுத்தவனுகிய என்னையும் கரை ஏற்றி, ஸம்சார பந்தங்களிலிருந்து விடுவித்து தன்னுடன் சேர்த்துக்கொண்ட க்ருதக்ஞரை நான் நமஸ்கரிக்கிறேன்.]

அந்த சுந்தரமான ரதத்தில் அரசரான தசரதர் புரோஹிதரான வஷிஷ்டரை மனசந்தோஷத்துடன் ஏற்றிவைத்த பிறகு தான் மற்றொரு ரதத்தில் ஏறினுர். தனக்குப் பரம மங்களங்களைக் கொடுப்பவரும் பாபங்களைப் போக்குகிறவரான உமாபதியான ஹரரையும், குருவையும், கௌரியையும், விக்னங்களைப் போக்கும் கணேசரையும் ஸ்மரணம் செய்துகொண்டு, அரசர் ரதத்தில் ஏறினுர். (1604)

அந்த வஸிஷ்டருடன்கூட ராஜா தசரதர் எவ்விதம் சோபிதமாக விளங்கினுர் தெரியுமா? எவ்விதம் சுரர்களுக்கு ஆசார்யரான பிருஹஸ்பதியுடன் கூட மஹேந்திரன் விளங்கினுரோ அது போல தசரதர் விளங்கினுர். வேதங்களின் விதிப்படிக்கும், ரகுகுல நீதிக்கும் தக்கபடி எல்லாக் காரியங்களையும் செய்து, பிறகு எல்லா ஏற்பாடுகளையும் தீரவிசாரித்து அறிந்து, அதன் பிறகு (1605)

ஸ்ரீராமனை ஸ்மரணம் செய்து, குருவான வஸிஷ்டரின் ஆக்ஞையைப் பெற்று, பிருத்விபதியான தசரதர் வெற்றி சங்க

ஒலிகள் எங்கும் ஒலிக்கும்படி புறப்பட்டார். அந்த கல்யாண ஊர்வலத்தைக் கண்ட தேவர்கள் மிக்க சந்தோஷித்து சுந்தர மானவைகளும் கந்தமுள்ளவைகளும், மங்களங்களைக் கொடுக் கும் ஸுமனஸ் என்கிற புஷ்பங்களை வர்ஷித்தார்கள். (1606)

எங்கு பார்த்தாலும் ஆனந்தத்தால் உண்டாகிய பெரும் சத்தம் ஏற்பட்டது. குதிரைகள், யானைகள், இவைகளின் சப்தங் கள் ஒரு பக்கம்; ஆகாசத்திலும் அந்த ஊர்வலத்திலும் எங்கு பார்த்தாலும் மங்களகீதங்கள், வாத்திய ஓசைகள் கேட்கப் பட்டன. ஆகாயத்தில் தேவநங்கைகள், கீழே மனுஷ்ய ஸ்திரிகள் மங்கள கானங்களை ஸுஸ்வரத்துடனும் பாடினார்கள். சிலர் மதுரமான ராகங்களுடனும், புல்லாங்குழல் போன்றவைகளையும் வாசித்தார்கள். (1607)

அந்த புண்ணிய ஊர்வலத்தில் கேட்கப்பட்ட மணி ஒலிகளை யும் சொல்லமுடியாது. காலாட்படைகள் கஸரத்து செய்வது போல செய்துகொண்டு "பல்டி" (துள்ளும் விளையாட்டு) முதலிய கேளிக்கைகளைச் செய்துகொண்டு அங்குள்ள ஜனங்கள் யாவரையும் ஆனந்தித்தார்கள். இன்னும் பலவிதமான சிரிப்பை உண்டுபண்ணும் விதூஷகர்கள் மிக்க நிபுணத்வம் வாய்ந்ததும் அழகான வேடிக்கைப் பாட்டுக்களால் தேர்ந்தவர்களும் விதவித மாக தமாஷுப் பேச்சுக்களையும் செய்கைகளையும் செய்து கொண்டு எல்லோரையும் ஆனந்தித்தார்கள். (1608)

அழகான ராஜகுமாரர்கள் மிருதங்க பேரிகைகளின் சப்தங் களுக்குத் தக்கபடி குதிரைகளை அனுசரணையாக துள்ளி நடத்தினார்கள். அந்தக் குதிரைகளின் கதிகளும் தாளத்தில் ஒட்டிய நாட்டியம் போல இருப்பதைக் கண்டு மிக்க சாமர்த்திய முள்ள நடனக் கலையாளர்கள் மிக்க ஆச்சர்யபட்டார்கள். (1609)

இப்பேற்பட்ட சிறப்புக்களை உடைய பராத் (கல்யாண ஊர் வலம்). அதை வர்ணிக்க யாரால் முடியும்? சுந்தரமானவை களும், சுபத்தை சூசிப்பவைகளுமான மங்கள சகுனங்கள் ஏற் பட்டன. நீலக்கழுத்துள்ள பக்ஷி இடதுபுறத்தில் தானியங்களை எடுத்துக் கொண்டுபோவதைக் கண்டார்கள். பரம மங்கள கரமான ஸம்பூர்ண ஆனந்தத்தைத் தெரிவித்தது போலிருந்தது. (1610)

வலது பக்கத்தில் காக்கை அழகான வயலில் உட்கார்ந்திருப் பதைக் கண்டார்கள். கீரிப்பிள்ளை ஒன்று ஓடுவதை யாவரும் கண்டார்கள். மூன்றுவிதங்களாகிற சீதளமானதும், மந்தமாகச் செல்வதும், சுகந்த பரிமளங்களை வாரி வீசுபவைகளுமான அழ

கான காற்று அனுகூலமாக நான்கு திசைகளிலும் வீசின. ஸ்ரேஷ்டமான கல்யாண மங்களங்களைக் கொண்ட ஒரு ஸ்திரி நிறைந்த தண்ணீர் குடத்துடனும் இடுப்பில் குழந்தையுடனும் காட்சி அளித்தாள். (1611)

ஒரு நரி அடிக்கடி அங்குமிங்குமாகக் காணப்பட்டது. பசு மாடு தன் கன்றுக்கு பால்கொடுப்பதாக எதிரில் தோன்றியது. மான்கூட்டம் ஒன்று வலதுபக்க பிரதக்ஷிணமாக சுற்றிவந்து இனி வரப்போகும் சகல மங்களங்களையும் முன் கூட்டியே அறிவிப்பது போலத் தோன்றியது. (1612)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி, லலிதாதேவி நந்தினி, எல்லாவிடத்திலும் எல்லாக் காலங்களிலும் எல்லா வகைகளிலும் லக்ஷ்மியினுல் நிறைந்திருப்பவரே, மகத்தான கைங்கர்ய ஸ்ரீயை அடைந்த பலராமரே, ஹலாயுதரே. வேதங்களில் பிரதிபாதிக்கப்படும் பெரியபொருளே, ஸ்தாணுவே, பக்தர்களுக்கு அழியாத பலன்களை அளித்தும் திருப்தி அடையாதவரே, எவ்வளவு மேன்மை அடைந்தாலும் கீழான ஸ்திதியில் இருப்பவர்களையும் பாரபக்ஷமின்றி காப்பாற்றும் ஸ்வபாவமுடையவரே, மஹாலக்ஷ்மியின் சாந்நித்யம் பெற்ற மஹாவிஷ்ணுவே, சுக்ரர் போன்ற யோகிகளால் "ஸர்வேஸ்வரன் நம்மைக் காப்பான்" என்கிற மஹா விஸ்வாசத்தால் என் ஸ்வாமி என் குற்றங்களைப் பொறுத்தருள்வார் என்கிற மெய்ஞ்ஞானத்தால் பிரபன்னனுக வந்து அடைந்த என்னை, தியாகராஜரை ஸம்ரக்ஷித்ததுபோல, என்னையும் காப்பாற்ற வேண்டும். பன்னகசயனு, ஹலாயுதரே, ஸாது ஜனங்களின் சேர்க்கையின்றியும் சம்சாரதாபங்களினுல் ஏற்படும் ஆசைகளுடனும் பகவத் அனுக்ரஹம் படைத்த உள்ளமுள்ளவர்களின் கிருபையின்றி, எனக்காக பொய் வாழ்க்கை வாழ்ந்து, தேன் சுவைபோன்ற உன் பாதங்களை மறந்து, துன்புற்று அடைக்கலமாக வந்த என்னை, ரக்ஷி. என்றும் பிரியாத திருமகளே, அருள்சுரக்கும் பெருமாட்டி, ஸ்ரீ சப்தத்தினுல் பல பொருள்களைக் கொண்டிருப்பவளே, என்போன்ற நலிவுடையவர்களைக் காப்பதற்காக பரமாத்மாவிடம் என்றும் பிரியாத இணைப்புடனும், மனோனுகூலையாகவும், உள்ளம் அசையாத அம்ருதக் கடலாக விருக்கிருய். நீ இரக்கம்வைத்து பகவான்மீது காதல்கொண்ட என்னை ஆட்கொள்ள வேண்டும். அகிலமெல்லாம் உறைந்து நிற்கும் நாராயணு, என் தோஷங்களைக் கவனி

யாமல் எனக்கு உங்களைவிட்டுப் பிரியாத பாக்யத்தை சதாசிவ னின் கிருபையால் எனக்கு அருளவேண்டும்.]

க்ஷேமங்களைத் தெரிவிக்கும் வெள்ளைக் கழுத்துள்ள கருடன் விசேஷ ரூபத்துடன் வரப்போகும் க்ஷேமங்களை அறிவிப்பதாக விருந்தது. ஸ்யாமாபக்ஷி (கரும் தோகை கொண்ட வால்குருவி) அழகான மரத்தின்மீது உட்கார்ந்துகொண்டு இடது பக்கத்தி லிருந்து கத்திற்று. மங்கள வஸ்துவான தயிர், மீன்குஞ்சுகள் இரு வித்வான்களாகிய பிராம்மண ஸ்ரேஷ்டர்கள் கைகளில் புஸ்தகங்களை வைத்துக்கொண்டு எதிரில் தோன்றினார்கள். (1613)

எல்லா சகுனங்களும் மங்களமயமாகவும், கல்யாணமய மாகவும் தனக்குப் பெருமை வரவேண்டுமென்கிற ஆசையினால் தூண்டப்பட்டு மனோ வாஞ்சிதமாகவும் இஷ்டப்பயன்களைக் கொடுப்பதாகவும் ஏக காலத்தில் ஒன்றன்பின் ஒன்றாக, நம்மைப் போன்றவர்களுக்கு ஸகுண ஸ்வரூபியான பகவான் நம் ஹிதத் திற்காகவே இருப்பதாகவும், அவன் ஹிதத்திற்காக அந்த மங்கள சகுனங்கள் இருப்பது போலவும் தோன்றின. (1614)

அப்பேற்பட்ட உத்தமமானவைகளும், நிரந்தரமான மங்களங்களை செய்விப்பவைகளான சகுனங்கள் கட்டாயம் ஏற்படத்தானே செய்யும்? ஏனென்றால் ஸகல ஸ்ருஷ்டிகளையும் படைக்கும் பிரும்மா பரப்ரும்மமாகிய ஸ்ரீராமச்சந்திரனுக்கு (நாராயண அம்சராகிய ராமனுக்கு) அழகான புத்ரனன்றோ? அவனுக்கு ஏற்படாத சகுனங்கள் பின் எப்போது தோன்றும்? பாமாத்மாவாகிய ஸ்ரீராமன் கல்யாண வரதனாகவும், மஹாலக்ஷ்மி யின் அவதாரமான சீதை கல்யாணப் பெண்ணாகவும், தசரத சக்ரவர்த்தி, ஜனகமஹாராஜர் ஆகியவர்கள் புனிதமான சம்பந்தி களாக ஆகும் மஹோத்ஸவத்தில் ஏற்படத்தானே செய்யும். அதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லையே. (1615)

அப்பேற்பட்ட விவாஹ மஹோத்ஸவத்தைக் கேட்டு, அந்த மங்கள சகுனங்கள் ஆனந்தத்தால் துள்ளிக்கொண்டு ஸ்வய மாகவே தங்களுக்கு அழியாப் புகழையும் கைங்கர்யங்களையும் செய்விக்க எண்ணம் கொண்டவைகளாக பரஸ்பரம் மிக்க களிப் புடன் சொல்லிக் கொண்டன, "இப்போதுதான் பிரும்மா நம்மை பாக்யவான்களாகப் படைத்தார். இப்பேற்பட்ட கல்யாண உத்ஸவத்தை நமக்காகவும், நாம் பயன் பெறுவதற்காகவும் ஏற் பாடு பண்ணியிருக்கிறார்." குதிரைகள், யானைகள் மங்களமாக

சத்தம் போட்டன. பேரிகைகள் முழக்கங்களுடன் பராத் என்கிற கல்யாண ஊர்வலம் புறப்பட்டது. (1616)

சூர்யகுலத்தின் கொடிபோல விளங்கும் தசரதர் புறப்பட்டு வரும் செய்தியை அறிந்து நல்லமனதுள்ள ஜனகர் பாலங்களை நிர்மாணித்து, வழிகளைச் செப்பனிட்டு, தங்கும் இடங்களையும் தண்ணீர், உணவு முதலிய வசதிகளையும் ஏற்படுத்தினுர். நடு நடுவே தங்கும் இடங்களையும் அந்த இடங்களில் ஸம்பத்தின் சின்னங்களான போகவசதிகளையும் ஏற்படுத்தினுர். அந்த இடங்கள் தேவலோகங்களுக்குச் சமானமான சம்பத்துக்களுடன் விளங்கின. (1617)

படா ஜோராக ஒலிக்கும் பேரிகைகளின் சப்தங்களைக் கேட்டு, அந்த ஸ்ரேஷ்டமான கல்யாண பராத் ஊர்வலம் சமீபத்தில் நெருங்குவதை உணர்ந்த ஜனகர் அவர்களை எதிர்கொண்டு அழைப்பதற்காக யானைகள், குதிரைகள் ரதங்கள், காலாட் படைகள் இவைகளடங்கிய கும்பலை எதிர்கொண்டு அழைக்கும் பொருட்டு, கல்யாண ஊர்வலத்தைப் போல அனுப்பினுர். (1618)

## மாஸபாராயணம் பத்தாவது நிறுத்தம்

[தியானம்

சீதா, ஸுமத்யமா, என்றும் சிறுத்த இடையுள்ளவளும் விசாலமான கண்களை உடையவளும், சதா ராமனை ஸ்மரணம் செய்பவளுமான உன்னை சரணமடைகிறேன். நமக்குள் உறவேல் ஒழிக்க ஒழியாது என்கிற அனன்யார்ஹசேஷத்வம் அதாவது நீயும் பகவானுமின்றி எவனுக்கும் நான் அடிமையாகாதிருக்கை, அனன்ய பக்தி, ஆரித்திகல்ப: ஆஸ்ரிதவாத்ஸல்யர், ஸுலபர், ஸுலபமாக பத்ரம் புஷ்பம், ஜலம் இவைகளால் ஆராதிக்கப்பட்டு பரமப்ரீதியை அடைபவர், ஸம்பவர், தன் ஸ்வபாவத்திணுலே எளியவனுக ஆகி, பக்தர்களுக்குத் தன்னை சுட்டிக் காட்டுபவர், சலங்கை மணி போல முத்து முத்தாகப் பேசும் ஸ்வபாவ முடையவர். கதிர்மதியத்தோன் என்று புகழப்படும் சீதம் உஷ்ண மாயுள்ள அருள், பாபம் என்று சொல்லப்படும் மன இருளைப் போக்கி ஆதித்ய தேஜஸ் ஞானம் இவைகளைக் கொடுக்கும் அண்ணல் என்று போற்றப்படும் பெரியவரே, மஹா விஸ்வாசத்துடன் உங்களை வந்து அடைந்த என் பிரார்த்தனைகளைச் செவி சாய்த்து, என்னை ஆட்கொள்ளவேண்டும். தேவ தேவரே, ருத்ரரே, ஆக்னேயம் ஸௌம்யம் என்கிற ரூபங்களால் லோக

ஹிதராக விருப்பவரே, எப்போதும் ருதுக்கள் உண்டாவது போல புதியவையும், மேன்மேலும் மனமகிழ்ச்சியைத் தரும் திருக்கல்யாண குண செய்கைகளின் அழகுகளால் ஆர்த்தர் களின் உள்ளத்தை ஒன்றுக்கு மேல் ஒன்று விசேஷமாக விருத்தி யாகும்படி சந்தோஷிப்பவரே, சுதர்சன சக்ர கால ரூபியாக உள்ளவரே, ஈஸானரே சுத்தஸத்வ ஸ்வரூபத்தின் பிரதிபாத்யதை யாக உள்ள உமையின் பக்திக்கு கட்டுப்பட்டவரே, ஈஸ்வரரே, சீதையை அணைத்துக் கொண்ட கையினால் என்னையும் அணைத்துக் கொள்ளவேண்டும். ஆஞ்சநேயா, சம்போ மஹா தேவா, நாரதரே, வால்மீகி, சுகர், தியாகராஜரே, நீங்கள் தான் கிருபை பண்ணவேண்டும். அர்ஜுனா, நரனே ஜிஷ்ணுவே, க்ரீடி, ஸஹிஷ்ணுவே, அறிந்தும் அறியாமலும் நான் செய்த தோஷங்களையும் பாபங்களையும் அனாதி காலமாக வரும் கர்ம பிரவாஹத்தாலும், தோஷ விபரீதங்களால் யேற்படும் மனமொழி மெய்களால் ஏற்படும் அபராதங்களையும் பொறுத்து, க்ஷமை பாராட்டி, என்னை ஆட்கொள்ளவேண்டும்.]

பால், ஷர்பத், குளிர்ந்த பானங்கள், நிர்மலமான தண்ணீர், அம்ருதம் போன்ற இனிப்பு பண்டங்கள் கொண்ட நானாவித தங்க கலசங்கள், அதுமாதிரி வர்ணனை செய்யமுடியாத அநேக விதமான தட்டு தாம்பாளங்கள் பாத்திரங்கள், பல உருவமுள்ள தாயும் விசேஷமானதாயும் அழகானதுமான பாத்திரங்களில் வைக்கப்பட்டிருந்தன. (1619)

உத்தமமானதும், ருசியுள்ளதுமான பழங்கள், அவைகள் மாதிரி இன்னும் அநேகம் போக வஸ்துக்கள், சாப்பிடும் வஸ்துக்கள் கண்ணுக்கு இனிமையாகவும், மணம்பொருந்தியவை களாகவும் வைக்கப்பட்டிருந்தன. இவைகளைக் அரசரான ஜனகர் தசரதரை எதிர்கொண்டு அழைத்து அவர்களை திருப்திபடுத்து வதற்காக அனுப்பிவைத்தார். உயர்ந்த ஆபரணங்கள், வஸ்திரங்கள், நானா பிரகாரமான விலை மதிக்க முடியாத ரத்ன மணிகள், அழகான பக்ஷிகள், பசு போன்ற மிருகங்கள், யானைகள், குதிரைகள் இன்னும் அநேகவிதமான சவாரிகள். (1620)

அது மாதிரி அநேக விதமான சுகந்தம், பரிமளம் கொண்ட வஸ்துக்கள், மங்கள திரவியங்கள், மனத்தை இனியதாக்கும் பதார்த்தங்கள் அநேகம் ஜனகர் தசரதருக்காக அனுப்பி வைத்தார். தயிர், மங்கள அக்ஷதை, பொறி, அவல், இன்னும்

கணக்கற்ற உபயோகமுள்ள சாமான்களை கூலியாட்கள் அநேகம் பேர்கள் சுமந்து கொண்டு வந்தார்கள். (1621)

எதிர்கொண்டு அழைக்கும் ஊர்வலம் தசரதருடன் வரும் ஊர்வலத்தை நேரில் கண்டதும், அந்த இரு பக்கங்களிலுள்ள மனிதர்களின் ஆனந்தத்தைச் சொல்லமுடியாது. ஆனந்த தன்மய மடைந்தவர்களாக புளகாங்கித சரீரத்துடன், ரோமாஞ் சலியுடன் கண்களில் நீர் ததும்ப, ஒருவரையொருவர் தழுவிக் கொண்டார்கள். அப்பேற்பட்ட ஆனந்தமயமாக இருப்பதைக் கண்டதும், பராத்தின் (தசரதருடன் கூட வந்த) ஜனங்கள் மனம் பிரசன்னமடைந்து ஜயபேரிகைகள், மங்கள வாத்யங்களை வாசிக்க ஆரம்பித்தார்கள். (1622)

பராத், அவர்களை எதிர்கொண்டு அழைத்து வரும் பெண் வீட்டுக்காரர்கள் ஒருவரைக் கொருவர் கைகுலுக்கி, நெருங்கிப் பழகி, குளிர்ந்ததும் மென்மையான வார்த்தைகளைப் பேசி மேன் மேலும் வந்த ஜனங்களை துள்ளித்தாவி. அணைத்துக் கொண்டு, எவ்விதம் ஆனந்தமுள்ள இரு சமுத்திரங்கள் மரியாதையாகிய கரையை புறக்கணித்து விட்டு ஒன்றை ஒன்று எவ்விதம் தாவித் தழுவுமோ, அதுபோல இருபக்கத்தினரும் ஆனந்தமடைந்து ஒன்ருனர்கள். (1623)

தேவ சுந்தரிகள் சுகந்தமான புஷ்பங்களை வர்ஷித்தார்கள். ஆனந்த மங்களம்யமான கீர்த்தனங்களைப்பாடி, துந்துபிகளை முழக்கி, பேரிகைகளை வாசித்தார்கள். ஜனகரின் ஆட்கள் தாங்கள் கொண்டு வந்த சாமான்களை தசரத மஹாராஜரின் முன்பு மிக்க வினயத்துடன் வைத்து பிரேமையுடன் சமர்பித்து, அதி ஸ்நேகத்தினுல் கட்டுப்பட்டவர்களாக விளங்கினுர்கள். (1624)

பிரேமை கலந்த உணர்ச்சிகளுடன் மஹா ராஜர் தசரதர் அவைகளை ஸ்வீகரித்தார். அந்த ராஜர் ஏழைகளுக்கும், யாசகர் களுக்கும் தானம் அளித்தார். அதன் பிறகு பூஜை, அர்க்யம் முதலிய மரியாதைகளுடன் அதிதி ஸத்காரம் செய்து மிக்கப் பெரியவர்களும், ஜனகரைச் சேர்ந்த கௌரவமுள்ள மனிதர் களும் அந்த சம்பந்தி ஊர்வலத்தை தங்களுடன் அழைத்துச் சென்ருர்கள். (1625)

விலக்ஷணமுள்ள வஸ்திரங்களும், கம்பளங்களும் நடை பாவாடையாக அவர்கள் வரும் மார்க்கங்களில் விரிக்கப்பட்டிருந் தன. அவைகளைக் கண்டு மஹாசம்பத்துக்களைப் படைத்த குபேரன்கூட தன்னுடைய தனமதத்தை இழந்துவிடும் ஸ்திதியில்

இருந்தான். சீரும்சிறப்புக்களுடன் வந்த ஜானவாஸம் ரொம்ப ரொம்ப சோபிதமாகவிருந்தது. வந்தவர்களுக்கு தங்கும் இடங்களை காட்டிக்கொடுத்து, அவர்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். எங்கு பார்த்தாலும் யாவருக்கும் வேண்டிய சாமான்கள் அநேகவிதமாக அழகாய் வைக்கப்பட்டிருந்தன. (1626)

[தியானம்

ஹே நரசிம்மா, சிங்கத்தின் பிடரிமயிர் போன்ற அழகான சுருள்சுருளான, கருமைநிறம் படைத்த கேசங்களை உடையவரே! என் கிலேசங்களைப் போக்கும் கேசவரே, க. அ. ஈச, எனப்படும் பிரும்ம, விஷ்ணு, சிவசக்திகளுக்கு இருப்பிடமாகிய ஏகரே, என் தாயான சீதைக்கு தன்னைத் தந்து, அவளைக் காப்பாற்றும் இயற்கை ஸ்வபாவமுள்ளவரே, பதுமமலர் போன்ற கண்களை உடையவளும், என் கவிதா பிரசம்ஸைகளால் அஞ்சனம் தீட்டப்பட்டவளும், குளிர்ந்த பார்வையுள்ளவளும் ராமனுடைய காமவிலாஸங்களுக்கு ஏகபோகமான பாக்யமுள்ளவளும், ஜனகரின் பெண்ணாகிய சீதாதேவியை நான் நமஸ்கரிக்கிறேன். ஆனந்தநடராஜனை மனத்தில் நிறுத்தி, உதயசூர்யனைப் போல, சிகப்பு, மஞ்சள் நிறங்கள் கொண்ட தங்கத்தின் நிறமும், பொற்கொடியைப்போல நுண்ணிய இடையுள்ளவளும், மன்மதனுடைய கரும்பு வில்போல புருவங்கள் கொண்டவளும், தாமரை விகஸித்தமாதிரி முகமுடையவளும், பொன்னுடை அணிந்தவளும், ராமனுடைய சிரமங்களைப் போக்கும் ச்யாமையான துடைகள், மார்புகள், கைகள், கால்கள், நிதம்பம், பவழச் செவ்வாய், கண்ணுடிபோல பிரகாசிக்கும் கன்னப்பிரதேசங்கள், அம்ருதம் ஊரும் செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் செல்வத்தை உடையவளும், மனோஹரமான ஸ்ரீராமன் மயங்கிக் கிடக்கும் பேச்சுஸ்வாரஸ்யங்கள் உள்ளவளும், பொற்தாமரையைக் கையில் கொண்டவளும், ராமனின் ப்ரியமே வ்ரதமாகக் கொண்டவளும், சூர்யன், சந்திரன் போன்ற பிரகாசமான கர்ண குண்டலங்களைக் கொண்டவளும், பக்தர்களின் குறைகளை தீக்ஷ்ணயமாகக் கேட்கும் காதுகளை கொண்டவளும், காமேஸ்வரியின் அங்கங்கள் போல காமேஸ்வரனாகிய ராமனுடைய ஸ்ருங்கார அலைகள் பாயும் ஸமுத்திரத்தில் துள்ளும் மத்ஸயம் போலவும், என் பாபங்களைப் போக்கும் அங்குசமும், என் பக்தியாகிற பாசத்தை வைத்திருப்பவளும் ஸ்ரீராமனாகிய சந்திரனுக்கு பிரகா

சத்தைத் தரும் மாணிக்கக் கிரீடமும், சிரித்த முகமும் உள்ள வளும், தியாகராஜர் போன்றவர்கள் மிக்க புகழுடன் பாடிய சீதையை நான் நமஸ்கரிக்கிறேன். கால்களில் கொஞ்சம் சலங்கையும், கைகளில் ஒலிக்கும் பொன் ரத்ன வளையல்களும், மார்பில் முத்துரத்ன பவழம் பொன் ஆபரணங்கள் பூஷிதையான சீதாதேவியை நான் நமஸ்கரிக்கிறேன். அவள் நகங்களின் ஜோதிஸ்களினால் விலகிய என் மன இருள் நாலா பக்கத்திலும் சிதறி, எனக்கு அபயமளித்த மஹா புண்ணியவதியான ஸ்ரீவித்யா ரூபிணியான சாந்தமூர்த்தி, ஸர்வதேவதைகளால் வணங்கப்பட்ட காயாம்பு வண்ணனின் மஹாசெல்வியை, அணிமாதி சக்திகளால் சூழப்பட்ட மஹாதேவியை, ஸ்ரீராமனின் பத்னியை, ஆஞ்சநேயர், லக்ஷ்மணர் போன்ற யோகீந்தரர்களான மஹான்கள் வணங்கிய பாதங்களை நான் அனுதினமும் பக்தி பெரு வெள்ளத்தோடு பூவைப்போட்டு, என்னுடைய காம மஹத் அஹங்காரங்களை ஒழித்து, தனக்கு உரியதான ஸ்வபாவிகமான ஆர்த்தஸம்ரக்ஷணம் என்கிற பந்ததியில் என் அதிகாரிகளாகிய நீங்கள் என்னை உய்விக்கவேண்டும் என்பதான கோரிக்கையை சமர்ப்பிக்கிறேன். நாரதர், மஹேந்திரன், பராசரர், வியாஸர், வால்மீகி, சுகர்போன்ற மஹாத்மாக்கள், வஸிஷ்டர், விஸ்வாமித்திரர், அகஸ்தியர், மைத்ரேயர் ஆகிய பாகவத ஸ்ரேஷ்டர்கள் அடைந்த உங்களுடைய சம்மானமாகிய கருணையை அடைந்து, சதா காலமும் உங்களுடைய குணம் போற்றி, குற்றேவல் செய்து, உங்கள் திருப்பாதங்களைப் பற்றிக்கொண்டு இருப்பேனாக. ஜயஜய ஜகதம்ப ஸ்ரீராமா, ஜய ஜயநித்ய கல்யாண சீலா.]

சீதாதேவி, பராத் ஜனகபுரியாகிய மிதிலையை அடைந்த சமாசாரம் கேட்டு, தன்னுடைய நிஜமகிமைகளை பிரகடனப் படுத்தவேண்டும் என்று எண்ணம்கொண்டவளாக ஆனாள். சகல அணிமாதி ஸித்திகளை தன் ஹ்ருதயத்தில் அழைத்து, ராஜாவும், விருந்தாளியுமான தசரதருக்கு பணிவிடைகள் செய்யுமாறு அனுப்பிவித்தாள். (1627)

சீதாபிராட்டியின் ஆக்ஞையைத் தலையில் தாங்கி ஸகல சித்திகளும் எந்த இடங்களில் மாப்பிள்ளை வீட்டார்கள் வசித்தார்களோ, அந்த இடங்களுக்கு அங்கே ஸகல சம்பத்துக்களையும் சுகபோகங்களையும் அளிக்கும் எண்ணமுடையவர்களாக இந்திர புரியாகிய அமராவதியின் போகவிலாஸங்களை எடுத்துச் சென்றார்கள். (1628)

பராத்தில் இருந்த ஜனங்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கு மிடத்தில் தேவதைகளின் சுகத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் போகசுகங்களைக் கண்டார்கள். அவைகள் சுலபமாகவும், விதவித மாகவும், நூதனமாகவுமிருந்தன. இந்த ஐஸ்வர்ய மஹா சம்பத் துக்கள் சிறந்த வைபவத்தோடிருந்தாலும், அவைகளின் காரண பேதம் யாருக்கும் புலப்படாமலிருந்தன. ஆகையால் எல்லோரும் ஜனக மகாராஜரின் சம்பத் மகிமைகளை வாயாறப் புகழ்ந் தார்கள். (1629)

ஆனால் ஸர்வக்ஞரான ஸ்ரீரகுநாயகர் சீதையினுடைய மகிமைகளை அறிந்து, அவளுடைய பிரேமை ரத்னத்தைப் பார்த்து, மனத்திற்குள் மிக்க சந்தோஷப்பட்டார். தங்கள் பிதா வான தசரதர் வந்துவிட்டார் என்கிற செய்தியைக் கேட்டு, இரு சகோதரர்களான ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் மிக்க சந்தோஷ மடைந்து, ஆனந்தத்துடன் விளங்கினர்கள். (1630)

மிகவும் லஜ்ஜைப்பட்டவர்களாக அவர்கள் தங்கள் குரு வாகிய விஸ்வாமித்திரரிடம் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் தங் கள் மனத்தில் பிதாவாகிய தசரதரைக்காண ஆவலுடன் இருந்தார்கள். கிருபாளுவான விஸ்வாமித்திரர் அவர்களின் வினய சம்பத்துக்களை அறிந்துகொண்டு, அதிப்ரேமை வசம் அடைந்து, அன்பினால் அந்த இருராஜகுமாரர்களை தன்னுடைய விசாலமான மார்பு பிரதேசத்தில் அணைத்துக்கொண்டார். (1631)

அதிகமான சந்தோஷத்தினால் தன் ஹ்ருதயத்தில் அந்த இருவர்களையும் மீண்டும் மீண்டும் தழுவிக்கொண்டார். கிருத கிருத்யரான அவர் ஸ்ரீராமரை உச்சி முகர்ந்தார். அவருடைய பீதவாடையை சுகந்தமாக முகர்ந்தார். பிரேமை ஆனந்த வெள் ளத்தில் மிதந்த அந்த கருணாமூர்த்தியான விஸ்வாமித்திரருடைய சரீரம் ஸ்ரீராமனை மார்பில் அணைத்துக்கொண்ட சந்தோஷத் தினால் கன்றினிடத்தில் ஆசைவைத்த பசுவானது எவ்விதம் ஸ்நேகத்தினால் உருகுமோ, அம்மாதிரி அவருடைய ஹ்ருதயம் உருகி, கண்ணீர் நிரம்பிய கண்களுடன், கண்ணீரால் தழு தழுத்த பேச்சு உள்ளவராகவும், சீக்கிரம் பிரியவேண்டுமே என் கிற சோகதாபத்தை உடையவராய் ஆனார். (பகவானிடத்தில் இருக்கும் ஸ்நேகத்தாலும், ஆப்தன் என்கிற எண்ணத்தாலும், வஸிஷ்டர் தசரதர், ஜனகர், சீதை, லக்ஷ்மணன் இவர்களால் கௌரவிக்கப் பட்டு தசரதரிடம் மீண்டும் ராமனை, கல்யாண ராமனாக ஒப்புவிப் பதற்கு வேகம் கொண்டவராகி, கருத்த

விழிகளும், பருத்த ஸ்தனங்களைக் கொண்ட சீதையை சீக்கிரம் பெருத்த கைகளும், விசாலமான மார்புள்ளவனுமான ஸ்ரீராமனிடம் சேர்க்க ஆவல் கொண்டவராக நினைத்து, நினைத்து அவர் புளகாங்கிதமடைந்தார்.) அவருடைய அங்கங்கள் எல்லாவற்றிலும் அம்ருதமயமான ராம ரஸம் பொங்கி ஓடியது. புருஷோத்தமரான ராமனை மீண்டும் மீண்டும் அனுராகத்துடன் தழுவி, உச்சிமுகந்து, அவ்யயமான நரஸ்ரேஷ்டரை மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார். கொஞ்ச நேரம் சென்றபின்பு அந்த இரு ராஜகுமாரர்களையும் தசரதரிடம் அழைத்துச் சென்றார். அவர்கள் போனது எவ்விதமிருந்தது தெரியுமா? தாகத்தினால் பீடிக்கப்பட்ட ஒருவனுக்கு நிர்மலமானதும், அம்ருதமயமான மானஸஸரோவர் எதிரில் தோன்றுமோ, அது போல அவர்கள் சென்ற காக்ஷி விளங்கிற்று. (1632)

எந்த சமயத்தில் அரசர் தசரதர் அந்த ஸ்ரேஷ்டமான விஸ்வாமித்திரரை தன் புத்ரர்கள் சகிதம் கண்டாரோ, அதே சமயத்தில் ஆனந்த சந்தோஷமடைந்தவராக கிருதக்ஞரான தசரதர் தன் ஆசனத்திலிருந்து எழுந்து, அவரை எதிர்கொண்டு அழைத்து, ஆழமான கடலில் அலைந்து திரிந்து, பேராபத்தில் சிக்கிய ஒருவன் திடீரென்று கரையை தன் பாதங்களால் தொட்டால் எவ்விதம் ஆனந்திப்பானோ, அதுமாதிரி ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்து வாடிய தசரதர் ஸ்ரீராமனைக் கண்டதும் மிக்க ஆனந்தமடைந்தார். (1633)

பூமியில் விழுந்து, சாஷ்டங்கமான சுக்ருத பிரணமம் செய்து, அந்த பரமஸ்ரேஷ்டரான விஸ்வாமித்திர முனிவரின் பாதரேணுக்களை கிருதக்ஞரான தசரதர் தன் தலையில் அணிந்து கொண்டார். தயாளுவான விஸ்வாமித்திரர் அந்த மஹாராஜனை தன் திருக்கைகளால் எழுப்பிவித்து தன் ஹ்ருதயத்துடன் அரசரை இறுக அணைத்துக்கொண்டு, அடிக்கடி புனிதமான ஆசீர்வாதங்களைச் செய்து, அரசருடைய குசல க்ஷேம பாக்யங்களை விசாரித்தார். (1634)

அந்த இரு ராஜகுமாரர்கள் தன்னுடைய பாதங்களில் விழுந்து, நமஸ்கரிப்பதைக் கண்ட தசரத மன்னர் அவர்களை மனத்தில் சந்தோஷத்துடன் தன் கைகளால் எழுப்பி, தன் ஹ்ருதயத்துடன் இறுக ஆனந்தத்துடன் அணைத்துக்கொண்டார். ஸ்ரீராமனுடைய அம்ருதமயமான சரீரம் பட்டவுடன் அவரை இதுவரை விட்டுப்பிரிந்த துக்க வியோகங்கள் நீங்கி, மரித்தவன்

மீண்டும் பிராணனை அடைந்து உயிர் பெறுவதுபோல, தசரதர் மிக்க ஆனந்தமடைந்தார். (1635)

[தியானம்

ஹே விஷ்ணோ, ஷடாக்ஷரம் அஷ்டாக்ஷரம் த்வாதசாக்ஷரம் வித்யைகளினால் உபாஸிக்கப்படும் வைஷ்ணவர்களின் பரமா கதியே, புண்டரீகம் எனப்படும் பரமபத வைகுண்டவாசிகளுக்கு கண் போன்றவரே, பிராட்டியின் புருஷரே, ஸர்வ விபூதிகளால் பிரபஞ்சம் அனைத்திலும் வியாபித்தும், அவைகளில் ஊடுருவி அந்தர்யாமியாக நின்றும், இங்கே காணப்படும் மஹிமைகள் எல்லாம் அந்த விராட்புருஷனின் ஒரு பாகம் என்றும், மீதிமூன்று பாகங்களாகிற அழிவற்றதான பரமபதம், வைகுந்தம் எனப்படும் உலகிற்கு பரமபுருஷனாகிய நீர் இந்த சகல பிரபஞ்சங்களுக்கும் மேலாக விளங்குகிறீர். அதுமாத்திரமின்றி, கடாக்ஷ வர்ஷங்களை வர்ஷித்து, தமது உயர்வையும் உன் அடியார்களின் தாழ்வையும் பாராமல் ஸௌலப்யம், ஔதார்யம் என்கிற குணங்களால், அவர்களை உன்னுடன் சேர்த்து, அவர்களைப் பெருமைப் படுத்தும் காருண்ய ஸிந்தோ, உமது ஸ்வரூபத்தினாலும், ஸ்வபாவத்தினாலும் மூவுலகங்களையும் அளந்து, எளிமைக்கு எளிமையாக பூமியில் அவதாரம் செய்து, எங்களைப்போன்ற சேதனர்களை ஆளவந்தீர் என்கிற சொல்லை மெய்ப்பிக்க வந்த உன் கருணை எப்போது அப்பா கிடைக்கும்? பிரும்ம நாட்டம் உடையவர்களும், வித்வான்களும், தர்மாரண்யத்தில் பிறக்கும் ஞானம், சிஷ்டாசாரம் ஆகிய இரு இறக்கைகளைக் கொண்ட மஹா உத்தம பாகவத ஸ்ரேஷ்ட வைஷ்ணவர்களால் அறியப்படும் பிரபோ, மானிடர் போல அவதரித்து தேவர்களுக்கும் கிட்டாத போக மோக்ஷங்களை அளிக்கும் நீர் என் மனத்தை கலக்குகிறீர். காமக்ரோத, மத, மாத்ஸர்யம், மோகம், லோபம் ஆகிய ஷட்வர்க்க தோஷங்களால் வியாபிக்கப்படும் என்னை என் பரமாசாரியர்களான வஸிஷ்ட, வாமதேவ, விஸ்வாமித்திர, நாத முனிகள், ராமாநுஜ, மணவாள மாமுனிகள், தேசிக, நம்மாழ்வார் பீஷ்மர், பராசரர், வியாஸர், நாரதர், சுகர், தர்மபுத்ரர், அர்ஜுனன், உத்தவர் போன்றவர்களின் திருவடிகளை என் திருமுடி சம்பந்தம் பெற்றதும், ஹே ஸ்வாமி, உன் திருவடி சம்பந்தம் பெற்றதுமாகிய உத்தம வைஷ்ணவப் பெரியோர்களின் வழியில் நடந்துவரும் எனக்கு நீர் அடைக்கலம் கொடுக்கவேண்டும். திருமாலே, கரியவரதரே, தீரரே, புருஷர் என்று சொல்லப்படு

பவரே ஆதித்ய வர்ணமும், இருளுக்கு அப்பால் இருப்பவரு மாகிய உம்மை சீதையுடன் சேர்ந்த ராமனுக நான் அறிவேன். கடாக்ஷ வள்ளலே, கருணை சமுத்திரமே, அருள்வரதனே, பரிதி மதி முகத்தோனே, ஸ்ரீ என்கிற சப்தத்தால் அறியப்படும் மஹா லக்ஷ்மியின் கணவரே, ரங்கசாயி, பிரணவாகாரத்தின் விமானம் கொண்டவரே, ஸ்ரீராஜகோபாலரே, எப்போது என் திருமுடி பெற்ற உன் திருவடிகள், செவ்விய திருக்காப்பு, ஆஞ்சநேயர் தடவிய உன் பாதங்கள், தியாகராஜர் போற்றும் பரமனடிகள், கோதைத் தமிழில் சொல்லிய வேதமனைத்துக்கும் வித்து, என் பாதகங்களைத் தீர்த்து, திருமாலிடம் என்னை எப்போதும் அடைக்கலம் செய்துகொள்ளப் போகின்றனவோ ? பெரும்பூதூர் மாமுனிகளுக்குப் பின் வந்த என்னை எவ்விதம் உன் மேனியால், உன் திருக்கண்ணுல் திருவக்ஷ ஸ்தலத்தால், மென்மையான கைகளால், அருள் சுரக்க அணைப்பீர் ? கரி அமுதே, ஆரா அமுதமே, பேரருளாளரே, என்னை ஆட்கொள்வாயாக.]

தசரதரின் புத்ரர்களாகிய ராம லக்ஷ்மணர்கள் தங்கள் திரு முடிகளை வஸிஷ்டரின் பொற்பாதங்களில் வைத்து, மங்களா சாஸனம் பெற்றுர்கள். குளிர்ந்த மனத்துடன், வாத்ஸல்ய ஸ்வ பாவத்துடனும் விராட்புருஷன் பெரிய அர்ச்சாவதாரமாக பூமி யில் அவதரித்து, மாயையினுல் எல்லோரையும் கட்டி, தானும் உவந்துவந்து எல்லா சேதனர்களையும் ஆட்கொள்ள வந்த கருணை வள்ளலைப் பார்த்து, அறிந்து, வித்வானும், கவி ஸ்ரேஷ்டருமாகிய வஸிஷ்டர், (விஷ்ணுவின் பெருமைகளை தன் அகக்கண்களால் பார்த்த பிரும்மரிஷி ஸ்ரேஷ்டரான வஸிஷ்டர்,) பிரேமையினுல் அதிக மக்னமடைந்து ஆனந்த ஹ்ருதயத்துடன் ராம லக்ஷ்மணர்களை தன் பொற்கைகளால் எழுப்பி, தழுவி மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார். பிறகு அந்த இரு சகோ தரர்களும் அங்கு கூடியிருந்த பிராம்மணர்களுக்கு நமஸ்காரம் செய்து ஆசிர்வாதம் பெற்றுர்கள். (1636)

பரதனும் தன் தம்பியான சத்ருக்கனனுடன் ஸ்ரீராமனை பிரணமம் செய்தான். ஸ்ரீராமன் அவர்களை எழுப்பி, தன் மார்பு பிரதேசத்தில் அவர்களை அணைத்து ஆனந்தப்படுத்தினுன். லக்ஷ்மணன் அந்த இரு சகோதரர்களைக் கண்டு சந்தோஷ மடைந்து, பிரேமையினுல் பரிபூர்ணராகிய சரீரத்துடன் அவர் களை சந்தித்து தழுவிக் கொண்டான். (1637)

அதன் பிறகு பரமகிருபாளு, வினய நம்ரதிகளாகிய அடக்க ஒழுக்கங்களில் தேர்ந்த சக்ரவர்த்தியின் திருக்குமாரன், பிரபு

வாகிய ஸ்ரீராமன் அயோத்யாபுரி வாசிகளையும், தன் குடும்பத்தினர்களையும், பரிஜன இனத்தார்களையும், தீனர்களான யாசகர்களையும் மந்திரிகளையும், மித்ரர்களையும், ஸகல விதமான யோக்ய சீலர்களையும் சந்தித்தார். (1638)

ஸ்ரீராமனை விட்டு இதுகாறும் பிரிந்து துக்கத்தை அனுபவித்து வந்த அயோத்யாபுரி வாஸிகளின் மனது அக்னி குளிர்ந்தது போல, ராமனைக் கண்டதும் குளிர்ந்து, அவர்களின் பிரீதி ராமன்பால் அதிகரித்தது. அந்த அன்பு வெள்ளம் ஒருவராலும் விவரிக்க முடியாதபடி தனிப்பட்ட முறையில் விளங்கியது. அந்த தசரத மஹாராஜரின் சமீபத்தில் நிற்கும் அந்த நான்கு ராஜகுமாரர்கள் ஜனங்கள் சிரமத்துடன் தேடும் தர்மம், அர்த்த, காமம், மோக்ஷம் ஆகிற சதுர்வித புருஷார்த்தங்கள் நேரிலே உருவெடுத்துவந்த விக்ரஹங்கள் போலத் தோன்றினார்கள். (1639)

புத்ரர்களின் சகிதம் தோன்றும் அந்த பாக்யவானுகிற தசரதரைக் கண்டு, அந்த அயோத்யா ஜனகபுரி வாஸிகளான நரநாரிகள் சகலரும் சந்தோஷத்தை அடைந்தார்கள். ஆகாயத்தில் தேவதைகள் சுகந்தமான புஷ்பங்களை வர்ஷித்து, வாத்திய துந்துபிகளை முழக்கி, அப்ஸரஸ்ஸுகள் கீதங்களைப்பாடி நாட்டியங்களினுல் ஆடிப்பாடி, யாவரையும் சந்தோஷிக்கச் செய்தார்கள். (1640)

தசரதரை அழைத்துப்போக வந்த ஜனகரின் கோஷ்டி ஜனங்களைச் சேர்ந்தவரும், வித்வானுமாகிய சதானந்தரையும், இதர விப்ரஸ்ரேஷ்டர்கள் மந்திரி கணங்கள், மாகதர்கள் ஸூதர்கள், விதூஷகர்கள், வந்தி ஜனங்கள் ஆகிய எல்லோரையும் அரசரான தசரதர் மரியாதை செய்து ஸம்மானம் வழங்கி அனுப்பி வைத்தார். அவர்களும் அரசனையும் அவருடைய குமாரர்களையும் ஆசீர்வாதங்கள் செய்து அரசனுடைய அனுமதியைப் பெற்று திரும்பிச் சென்றார்கள். (1641)

அந்த பராத் விவாஹ தினத்திற்கு முந்தின தினத்தில் வந்தபடியால் அந்த ஜனகபுரியில் அதிக ஆனந்தம் ஏற்பட்டது. எல்லா ஜனங்களும் பிரும்மானந்தத்தை அடைந்தவர்களாக பிரும்மாவை நமஸ்கரித்து, இந்த சுதினங்கள் அதிராத்திரி, அதிபகலாக விளங்கவேண்டும், என்று கோரிக்கை செய்த வண்ணமாக விருந்தார்கள். (1642)

"ஸ்ரீராமன், சீதாதேவி ஆகிய இருவர்களின் சோபை லாவண்யங்கள் எல்லையில்லாதவை. அந்த உத்தம ராஜர்களான தசரதர் ஜனகர் ஸுக்ருதம் செய்த மஹா பாக்யவான்கள்,"

என்று யாவரும் சொல்லிக்கொண்டார்கள். அந்த புண்ய பூமி யான மிதிலையில் அந்த தினங்களில்கூடிய நரநாரிகள் அனைவரும் இதைப் பற்றியே மன ஆனந்தத்துடன் சொல்லிக்கொண்டிருந் தார்கள். (1643)

"ஜனக மஹாராஜரின் ஸுக்ருதங்களாகிற புண்யங்கள் மூர்த்தி வடிவமாகிற ஜானகியாக அவதரித்திருந்தன. அது மாதிரி தசரதரின் ஸுக்ருத பாக்யங்கள் தேகமெடுத்து, (புண்ய புருஷரும், பார்த்த மாத்திரத்திலேயே, பாபங்களைப் போக்கு பவரும், நாமசங்கீர்த்தனங்களைச் சொல்வதில் சகல மங்களங் களைக் கொடுப்பவரும், பாபிகளுக்கும் கருணைகொண்டு அருள் புரியும் சரணாகத வத்ஸலரும், அவருடைய புண்ய சரித்திரங் களால் நம்மைப் போன்றவர்களின் பாபக் கூட்டங்களை நாசம் செய்கிறவரும், சுருதிஸ்மிருதிகளில் புகழப்படும் பரந்தாமன் நாராயணன்) ஸ்ரீராமனாக நம் எல்லோரையும் ஆளவந்ததுபோல அவதரித்திருக்கிறார். இந்த பெரும் பாக்யங்களாகிற பகவத் கடாக்ஷம், சிவனை ஆராதியாமல் வந்திருக்க முடியாது. இவர் களைப் போல அந்தரங்க ஏகபக்தி, ஏக தன்மயம் ஆகிய பக்தி ஸ்வரூபங்களால் மஹாதேவரான சம்புவை ஏகாந்த மனத்துடன் தன் ஆத்மாவை சமர்ப்பிவித்தவர்கள் யாவருமில்லை. அதனால் அல்லவோ அவர்களுக்குச் சமமாக பலனையும் ஒருவரும் அடையவில்லை." (1644)

"இவர்களுக்குச் சமமாக இந்த பிரபஞ்சம் முழுவதிலும் யாரும் இருந்ததில்லை; இருக்கிறதாகச் சொல்லப்படவுமில்லை. இனி இருக்கப்போவதாகவும் நாங்கள் எண்ணவுமில்லை. நாம் அல்லவோ பாக்ய விசேஷம் பெற்றவர்கள். ஸகல ஸம்பூர்ண புண்யங்களின் ராசிக் கூட்டங்களுக்கு பிரதிபாத்யதையாகவும் ஜகத் ஸம்ஸாரத்தில் இந்த மாபெரும் ஜனகபுரியில் ஜனனம் எடுத்து, அதுவும் இப்பேற்பட்ட மஹோத்சவத்தின் நல்ல காலத்தில் ஜீவனம் செய்பவர்களாகிய நாமல்லவோ பாக்ய சீலர்கள்." (1645)

"நம்மால் அல்லவோ ஈஸ்வர கடாக்ஷமாகிற ஜானகியையும் ஸ்ரீராமச்சந்திரனையும் ஒருங்கே நேராக பார்க்க முடிகிறது. நம் போன்ற ஸுக்ருத விசேஷ புண்யாத்மாக்கள் பாக்கியவான் கள் யார் இருக்க முடியும்? அடிக்கடி ரகுவீரனாகிற ஸ்ரீராமனையும் வைதேஹியையும் விவாஹ மஹோத்ஸவத்தில் கண்டு, நம் முடைய நேத்ரங்களுக்கு பரமானந்தத்தை நாம் அடைவோம். மேலும் நம் ஜன்மத்தையும் உய்வித்துக் கொள்வோம்." (1646)

[தியானம்

ஹே மஹேஸ்வரரே, ஜடாதரரே, லிங்கம் எனப்படும் மஹத், அஹங்காரம் என்று சொல்லப்படும் தத்வமே, கங்காதரரே, ஸ்திரரே, ஸ்கந்தரே, வைஸ்ரவணரே, ஆதார நிலேயரே, மஹாகோசம் எனப்படும் என்றும் அழியாத மஹாத்மாவாகவும் மஹா பத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்று சொல்லப்படும் ஒன்பது நிதிகளும், ரத்னங்கள் விளையும் கடலும், ரோகண மலைபோன்ற மலைகளும், தமக்கு பொக்கிஷமாக உடையவரே, உமை யெனப்படும் ரத்ன நங்கைக்குப் பதியானவரும், ஆஸ்ரிதர்களுக்கு எக்காலமும் உதவி செய்யும் வள்ளலுமான மஹாதேவரே, மஹாக்ரது என்று ராமனுக்குத் தன்னைத்தானே அர்ப்பணம் செய்து, இனிய சுவையுள்ள செய்கைகள், தியானங்கள், அர்ச்சனை, ஆராத னங்கள் உள்ளவரே, ஆசுதோஷியே, அடியார்களுக்கு எளிமை யானவரே, பீமரே, தர்மத்வஜரே, தாமரை இதழ்போன்ற கண்களை உள்ளவளும், மல்லிகை, சம்பகம் போன்ற கொத்து புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், விநாயகர் குஹர் இவர் களுக்கு மாதாவும், என் பரபிரும்மமும், சந்திரனைச் சூடிய வளும், லாவண்ய செளந்தர்ய சுந்தரியுமான திரபுர சுந்தரியை மணந்த காமேஸ்வரரே, சங்கர்ஷணரே, நாகபூஷணரே, வாஸுகி, ரம்பன் முதலிய மஹா சர்ப்பங்களால் பிரசம்சை செய்யப்படுகிற பலபத்ரரே, மஹா உரகரே, குந்த புஷ்பம் (சுப்ரவர்ணம்) போல நிறமுள்ளவரே, ஆயிரம் தலைகள் உள்ளவரே, ஆயிரம் மங்கள நாமங்கள் உள்ளவரே, மஹா யோகியே, ஸனத் ஸுஜாதர் முதலிய யோகிகளால் ஆஸ்ரயிக்கப் படும் யோகசாங்கிய நிபுணரே. பிரபுல்லமான கமல தளத்தைப் போல விசாலமான நேத்திரங்கள் உள்ளவரே, லலாடாக்ஷரே, சுகந்தமான ஐந்து பூதங்கள் கொண்ட வனமாலையை அணிந்து கொண்டிருப்பவரே, நாக யக்ஞோபவீதத்தை உடையவரே, உமைக்கு கணவரே, லோக குருவே, ஸ்யாமை வஸ்திரம் தரித்திருப்பவரே, கமலங்களால் அலங்கரிக்கப்பட்ட விசாலமான மார்பு பிரதேசத்தை உடையவரே, உமையால் தழுவப்பட்டு மிக்க இன்பமுடையவரே, மனோஹரமான ஏக குண்டலத்தை உடைய வரே, பிறை மதியையும், ருத்ர வீணையையும், சுரக்காய் தம்புருவையும் வைத்து மனோஹரமான ராமசங்கீர்த்தனம் பாடும் ராமசுதாகரரே, விருஷப்த்வஜரே, விருஷபவாகனரே, தண்டி சுக்ரர், உபமன்யு, நாரதர் இவர்களால் பூஜிக்கப்படும் பசுபதியே,

என் குருவே, என்நாதரே, கமலத்தை வைத்திருக்கும் லலிதா தேவியே, புலித்தோலின் மீது உட்கார்ந்திருக்கும் நவயௌவன நித்ய பாலகரே, உமையுடன் வீற்றிருக்கும் நாதரே, என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் உங்கள் பக்தர்களாகக் கருதி, க்ருபா கடாக்ஷத்தினால் திருத்தக்க செல்வமும், ஞான ஒளியும், மனச்சாந்தியும் அடைந்து வருத்தம் நீங்கி, உங்கள் சேவகமும் யாம் பாடி மகிழ்ந்திருக்கச்செய்ய அருள் புரிய வேண்டும். மஹா லக்ஷ்மியும் ஆசைப்படத்தக்க உமது செல்வத்தையும் உமது பராக்ரமச் செய்கைகளையும் வாயாரப் பாடி, எங்கள் இன்னல்களைத்தீர்ந்து சகல புருஷார்த்தங்களையும் சீதாராமனின் கடாக்ஷத்தையும் இன்ப நிலையையும் சதா அடைய வேண்டும். கிரிஜாரமணா, கௌரி நாயகா, செவ்வாய் கொண்ட அன்பினால் சொல்லப்பட்டதும், உபமன்யுவினால் கேட்கப்பட்ட வசனங்களை எவ்விதம் நான் கேட்கப் போகிறேன். பினாகி, திரிசூலி, வேலாயுதா, உமாபதி, சங்கரரே, சம்பு, பவரே, திரயம்பகரெ, மிருத்யுவே, மிருத்யுவுக்கு மிருத்யுவே, அம்ருதரே, மாதவரே, லோஹிதாக்ஷரே, நாராயணப்ரியரே, என் மனத்தைக் கவர்ந்த நாயகரே, உமையை மணந்த கல்யாண சுந்தரேசரே, மீனாக்ஷி, சுவாஸினி, அன்னபூர்ணா, நடராஜரே, சிவகாமசுந்தரி யின் மணாளரே, அம்பலவாணா, திருச்சிற்றம்பலமே, காளத்தீஸ் வரரே, ஈஸானரே, கச்சபேஸ்வரரே, தெரிந்தும் தெரியாமலும் இருக்கும் அரூபரே, என்னை ரக்ஷித்து கிருதார்த்தனாகச் செய்து ஜைகீஷவ்யரிடம் காண்பித்த அன்பையும் என்னிடம் காட்ட வேண்டும்.]

குயில் போன்ற குரல் படைத்த மதுரமான சொற்களைச் சொல்லும் ஸ்திரி ஜனங்கள் தங்களுக்குள் பரஸ்பரம் சொல்லிக் கொண்டார்கள். "அழகான நேத்ரங்களைப் படைத்த சுந்தரியே, இப்பேற்பட்ட சீதாராமனுடைய விவாஹம் ரொம்ப லாபகர மானது. மஹத்தான பாக்யத்தின் விசேஷத்தால் அல்லவா இப்பேற்பட்ட உன்னதமான விவாஹம் நடைபெறவிருக்கிறது. பிரும்மாவினால் ஏற்படுத்தப்பட்ட இந்தப் பெரிய விவாஹம் பெரிய விஷயம். இந்த இரண்டு ராஜகுமாரர்களும் நம் நேத்ரங்களுக்கு விருந்து அளிப்பது போலிருக்கிறார்கள். இவர்கள் பார்ப்பதற்கு அதிக சுகத்தை அளிக்கிறார்கள்." (1647)

"ஜனக மஹாராஜர் அதிக பிரேமையினால் தன் பிரியமான குழந்தை சீதையை அயோத்தியிலிருந்து அழைத்து வருவார். அவளை அடிக்கடி முத்தமிட்டு, உச்சி முகர்ந்து ஆசீர்வாதம்

செய்வார். கோடிக்கணக்கான காமதேவர்களுக்குச் சமானமான அழகு படைத்த அந்த இருசகோதரர்கள் சீதா தேவியை மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் செல்வதற்கு ஜனகபுரிக்கு அடிக்கடி வருவார்கள்.'' (1648)

''அந்த சமயத்தில் நாம் அவர்களுக்கு தகுந்த அன்புக் காணிக்கையைச் செலுத்துவோம். அநேக விதமாக நம் அன்புக்களைக் காட்டுவோம். ஹே சகி, ஜனகரைப் போல மிக்கப் பிரியமுள்ள மாமனுர் யார் இருக்கமுடியும்? அந்த ஒவ்வொரு சமயத்திலும் நம் போன்ற ஜனகபுரிவாசிகள் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை அடிக்கடி பார்க்க சந்தர்ப்பங்கள் ஏற்பட்டு அடிக்கடி சுகத்தை அடைவோம்.'' (1649)

'' அன்புள்ள தோழியே, எவ்விதம் ராம லக்ஷ்மணர் அழகான ஜோடியோ, அதுமாதிரி தசரதருக்கு இன்னும் ஒரு ஜோடி அழகான குமாரர்கள் இருக்கிருர்கள். ஒருவன் ஸ்யாமை நிறம். மற்ருெருவன் சிகப்பு நிறம். அவர்களுடைய அங்கங்களும் ரொம்ப அழகாகவிருக்கின்றன. யார்யார் அவர்களைப் பார்த்தார் களோ, அவர்கள் எல்லோரும் ஒருமிக்க அவர்களுடைய அழகையே சிலாகித்துச் சொல்லுகிருர்கள்.'' (1650)

அந்த ஸ்திரி கூட்டத்தில் ஒருத்தி சொன்னுள் ''நான் இன்றுதான் அவர்களைப் பார்த்தேன். பிரும்மா தன் சிறப்புக்கள் எல்லாவற்றையும் நினைத்து தன் சொந்தக் கைகளினுல் அவர்களை யும் படைத்திருக்கவேண்டும். பரதன் ஸ்ரீராமனை ஒட்டி ஒரே அழகாகவிருக்கிருன். அவர்களை எளிதில் ஸ்திரி புருஷர்கள் அடையாள வித்யாஸங்களால் அறிய முடியாது.'' (1651)

'' லக்ஷ்மணனும் சத்ருக்னனும் ஒரே ரூபம். கால் நகத்தி லிருந்து முடிவரை அவர்கள் ரூபத்தில் ஒத்திருக்கிருர்கள். நமது மனத்தை அவர்கள் கவருகிருர்கள். ஆனுல் அவர்களின் அனுசிதமான அழகை யாரால் வர்ணிக்க முடியும்? அவர் களுக்கும் ஈடாக மூன்று புவனங்களிலும் யாராவது இருக்கிருர் களா? இல்லவே இல்லை.'' (1652)

ராமதாஸரான துளசிதாஸர் சொல்லுகிருர் '' கவிகளோ வித் வான்களோ சொல்லுகிருர்கள், இவர்களுக்கு உபமானமாகச் சொல்லக்கூடியவர்கள் யாவருமே இல்லை. பலத்திலோ, வினயத் திலோ, வித்யை சாமர்த்தியத்திலோ, சீலசம்பன்னத்திலோ, சோபைகளின் சமுத்திரம் என்று சொல்லப்படும் அழகு குவியல் கள் ஆகிய ரத்தின சிறப்புக்களைக்கொண்ட ஸமான புருஷர்கள் அவர்களுக்கு அவர்களேதான்.'' அந்த ஜனகபுரியில் உள்ள

நாரிகள் எல்லோரும் அஞ்சலிபண்ணிய கைகளுடன் துணிகளை பூமியில் விரித்து பிச்சை கேட்பவர்கள் போல விதாதாவை (பிரும்மாவை) வேண்டிக்கொண்டார்கள். "ஹே தெய்வமே, நான்கு சகோதரர்களுக்கும் விவாஹம் இந்த ஜனகபுரியிலேயே நடக்கவேண்டும். நாமெல்லோரும் அவர்களின் விவாஹத்தில் மங்கள கீதங்கள் பாடவேண்டும்." (1653)

நேத்ரங்களில் பிரேமையினால் வளர்ந்த கண்ணீர்கள் ததும்ப, புளகாங்கித சரீரத்துடன் சகல மிதிலாபுரி ஸ்திரிகளும் பரஸ்பரம் பேசிக்கொண்டார்கள். "ஹே சகி, தசரதர், ஜனகர் ஆகிய இரு அரசர்களும் புண்ணியபயோ நிதிகள். திரிபுராரி யாகிய பரமேஸ்வரர் நம்முடைய மனோரதங்களைப் பூர்ணமாக நிறைவேற்றி வைப்பார்." (1654)

இந்த பிரகாரம் மனோரதங்கள் கொண்டவர்களாகி ஒவ்வொரு ஸ்திரியும் உத்ஸாகத்துடன் மன ஆனந்தத்துடனும் பேசிக்கொண்டிருந்தார்கள். எந்த எந்த அரசர்கள் சீதையின் ஸ்வயம்வரத்துக்காக வந்தார்களோ, அவர்களும் அந்த நான்கு சகோதரர்களைக்கண்டு அதிக ஆனந்தமடைந்தார்கள். (1655)

ஒவ்வொரு அரசரும் தங்கள் வீட்டிற்கு திரும்பிச் செல்லும் சமயம் ஸ்ரீராமச்சந்திரனுடைய நிர்மலமானதும் விசாலமானது மான கீர்த்தி பிரபாவங்களைச் சொல்லிக்கொண்டே சென்றார்கள். இந்தவிதமாக சில நாட்கள் சென்றன. ஜனகபுரவாசிகள் தசரதருடன் கூடவந்த அயோத்யாபுரி வாஸிகள் யாவரும் மஹத்தான ஆனந்தத்தை அடைந்தார்கள். (1656)

மங்கள விவாஹ தினமும் வந்தது. சுபமான லக்னத் துடன் விளங்கியது. ஹேமந்தருது, அழகான மார்கழிமாதம், கிரஹம், திதி, நக்ஷத்திரம், யோகம், வாரம், சகலமும் ஸ்ரேஷ்ட மாகவிருந்தன. லக்ன முகூர்த்தம் மிக்க கவனமாக ஆலோசிக்கப் பட்டு பிரும்மாவினால் நிர்ணயிக்கப்பட்டது. (1657)

அந்த விவாஹ லக்ன பத்திரிகை நாரதர் மூலமாக ஜனகருக்கு பிரும்மாவினால் அனுப்பப்பட்டது. ஜனகருடைய ஜோதிஷர்களும் அதே முகூர்த்த லக்னத்தை தீர்மானம் செய்திருந்தார்கள். இதைக் கேட்ட ஸகல ஜனங்களும் "நம்முடைய ஜோதிஷர்களும் பிரும்மாவாகவே ஆகி விட்டார்கள்" என்று சொல்லிக்கொண்டார்கள். (1658)

நிர்மலமானதும் ஸகல மங்களங்களுக்கும் மூலகாரணமான கோதூளிகா என்கிற (சாயந்திரம்) பவித்திரமான முகூர்த்த வேளை, பசுமாட்டு மந்தைகள் வீடுதிரும்பும் சமயம், வந்து

விட்டது. அனுகூலமான சகுனங்கள் ஏற்படுகின்றன. அதைக் கண்டதும் பிராம்மண ஸ்ரேஷ்டர்கள் இதை ஜனக மஹா ராஜரிடம் தெரியப்படுத்தினார்கள். (1659)

அந்த சமயம் ராஜா ஜனகர் தன் புரோஹிதரான சதானந்தரிடம் சொன்னார். "நாம் ஏன் இன்னும் தாமதிக்கவேண்டும்.?" உடனேயே சதாநந்தரும் மந்திரிகளைக் கூட்டி அழைத்தார். அவர்களும் விவாஹத்துக்குரிய சகல மங்கள வஸ்துக்களை தயார்பண்ணினார்கள். (1660)

[தியானம்

ஸ்ரீதேவியின் கணவரானவரும், பால சூரியன்போல அருள் சுரக்கும் கிருபா நிதியும், யோகநித்திரையில் இருக்கும் பாலகிருஷ்ணனை நான் நமஸ்கரிக்கிறேன். தன் மாயையினால் தேவகிக்கு குழந்தையாகப் பிறந்து, யசோதையின் குமாரனாக வளர்ந்து பெயர்பெற்ற கிருஷ்ணனை நான் நமஸ்கரிக்கிறேன். சத்ருவின் வசத்தை அடைந்தும் தன் பிரும்ம ஞானத்தினால், சரதல்பத்தை அடைந்த என் ஆசார்யரான பீஷ்மரால் துதிக்கப் பட்ட நாராயணரை ஸ்துதி செய்கிறேன். வியாஸர், சுகர், மார்க்கண்டேயர் இவர்களால் ஸ்துதி செய்யப்பட்டவரும், ஸுவ்ரதனால் தியானம் ஆராதனம் செய்யப்பட்டவரும், விஸ்வாத் மாவும் சுபமான அங்கங்களை உடையவரும் பிரணவகாற்றினால் நாதமயமாகவிருப்பவரும் வேதங்களை உண்டுபண்ணின மது சூதனரை ஆராதிக்கிறேன். லோகேஸ்வரரும் ஸகல பாபங்களை விநாசனம் செய்கிறவரும்தான் காரணபுருஷராகவிருந்து மஹத் அஹங்கார குணாதிகளால் சகல சராசரங்களையும் ஸ்ருஷ்டித்து தான் விகாரம் ஒன்றும் அடையாத சுத்த ஸத்வ ஸ்வரூபியான நாராயணரை நான் சரணம் அடைகிறேன். குணதோஷங்கள் ஒன்றுமில்லாத கோவிந்தா இவ்வுலகில் ராமகிருஷ்ண அவதா ரங்கள்போலத் தோன்றிய சுடரே, ஸம்ஸார ஸாகரமாகிய கடக்க முடியாத அகழியைத் தாண்டவிக்கும் மஹா கிருபாநிதி, யோகீஸ்தரர்களின் மானஸரோவரில் ஹம்ஸ ராஜபேடாக சஞ் சரிக்கும் உன்னுடைய சுத்தமான பிரபாவத்தை அடிக்கடி நினைத்து கீர்த்தனங்கள் பாடி, சோகங்கள் தீர்ந்து பாகவத கோஷ்டிகளுடன் கூடியிருந்து மகிழ்ந்து இருக்கிறேன். கம்ஸன் போலவிருக்கும் துஷ்டர்களுக்கு நெருப்புபோன்று பாபங்களை சம்ஹரிக்கும் அனிலனே, நெடுமாலே, சீதையின் வசனத்துக்காக உலகங்களை அளந்த திருக்கால்களால் நடந்து ஓடிய ஸ்ரீராம

பிரானே, குருகிருபா கடாக்ஷத்தினுல் தள்ளப்பட்டவனுக சரணம் அடைந்தேன். அகிலபுவனங்களுக்கும் ஸ்தபதியே, ஆதாரஸ்தம்பமே, தேவர்களின் துக்கங்களைப் போக்கும் சந்திரனே, ஸகலலோக குருவே, ஸாதுக்களால் புஷ்ப கந்தங்களால் ஆராதிக்கப்படும் மூர்த்தியே, வித்வான்கள் உம்மை ஸாம கானங்களால் சந்தோஷப்படுத்தி, தங்களை கிருதார்த்தர்களாக நினைக்கிருர்கள். ஜனுர்த்தனரே, தியாகராஜர் தீக்ஷிதர் ஸ்யாமா சாஸ்திரி புரந்தரதாஸர் போன்ற மஹான்களால் ஸீஸ்வரங்களோடு தாளம்ருதங்க தம்புராக்களால் பாடப்படும் ஸ்ரீரங்கா, எங்களுடைய ஏகமான பொருளே, அக்ஞானத்தைப் போக்கும் அஷ்டதள கமலமே, வேங்கடவெற்பே, வேதவெற்பே, அமலனே, உன்னை சீதையை முன்னிட்டு சரணமடைகிறேன். கவிகளின் ஹ்ருதயத்தில் வசிக்கும் ஸம்பூர்ண அம்ருதமே, பூர்ண கலைகளை உடைய பரமார்த்தபொருளே, நித்யமான விஸ்வமே, என் கரங்களைக் குவித்து சுக்ருதபிரணுமம் செய்து, பிரணவ ரூபியான சங்கத்தை வைத்திருக்கும் துருவநாராயணரை சரணமடைகிறேன். வாத்யம், கீதம், தாளம் இவைகளுடன் கூடிய மதுர காவ்யங்களையும் கவிதைகளையும் இயற்றி ஸநாதனுரும் பாலனுன கிருஷ்ணனை சுகர் ஆஸ்ரயித்தது போல நான் ஆஸ்ரயிக்கிறேன்.]

சங்கம பேரிகைகள் டோலாக்குகள் இன்னும் அநேக விதமான அழகான சங்கீத ஒலியை கிளப்பும் வாத்யங்கள் எங்கும் வாசிக்கப்பட்டன. அநேக மங்கள கலசங்களுடன் சுபங்களைத் தரும் தயிர், கந்தமான வாசனை தூபங்கள் ஆகிய வஸ்துக்கள் தயாரிக்கப்பட்டன. அழகான குரல்களைப் படைத்த சுந்தரஸ்திரிகள் ராம சீதா கல்யாணப் பாட்டுக்களை கானம் செய்தார்கள். எங்கு பார்த்தாலும் பவித்ரமான பிராம்மணர்களின் வேத கோஷங்கள் கேட்கப்பட்டன. (1661)

இவ்விதமாக சகல ஜனங்களும் மிக்க மரியாதையுடன் தசரதரின் (மாப்பிள்ளை) வர்க்கத்தினரை ஜானவாஸத்தின் தொடர்ச்சியாக அழைத்துச் செல்ல ஜனகரின் கூட்டங்கள் சென்ருர்கள். கோஸலாதி பதியான தசரதரின் ஸமாஜத்தையும் (கூட்டத்தையும்) அவர்களின் வைபவ சிறப்புக்களையும் கண்டு தேவராஜனுன இந்திரனே தன்னைக் கீழானவனுக நினைத்துக் கொண்டான். அவர்களும் அவ்விதமே எண்ணினுர்கள். (1662)

அந்த கூட்டத்தினர்கள் சொன்னுர்கள். "நேரம் ஆகிவிட்டது. சீக்கிரம் புறப்படுங்கள்." இந்த வார்த்தைகளைக்

கேட்டதும் பேரிகைகள் வாசிக்கப்பட்டன. வஸிஷ்டரின் உத்தரவைப் பெற்று தன்குல ரீதிப்படி வழக்கமாக வந்த ஆசாரங்களுடன் ராஜா தசரதர் முனீஸ்வரர்கள், ஸாதுக்கள் சகிதமாகப் புறப்பட்டார். (1663)

அயோத்தி மன்னராகிய தசரதரின் பாக்யம், வைபவங்களைக் கண்டு, தங்கள் பாக்யங்களும், ஜன்மங்களும் வியர்த்தம் எனக் கருதின தேவர்களும், ஆதிபுருஷனை நாராயணரின் திருப்திக்காக ஆயிரக்கணக்கான வாக்குக்களால் தசரதரைப் புகழ்ந்து பாடினார்கள். (1664)

தேவகணங்கள் சுந்தரமானதும் மங்களங்களைக் கொடுக்கக் கூடியதுமான லக்னம் வந்து விட்டதை அறிந்து துந்துபிகளை முழக்கி, பாரிஜாதம், கற்பகக் கொடிகள், சம்பகம், மல்லிகை போன்ற புஷ்பங்களை வர்ஷித்தார்கள். சிவன், பிரும்மா, தேவேந்திரன், தேவகணங்கள் ஆகிய எல்லோரும் விதவிதமான விமானங்களில் ஏறி ராம கல்யாண வைபவத்தைப் பார்க்க வந்தார்கள். (1665)

பிரேமையினால் வெள்ளமாக ஆவிர்பவிக்கும் புளகாங்கித சரீரம், ஹ்ருதயத்தை உடையவர்களாகவும், உத்ஸாஹங்கள் கொண்டவர்களாகவும், ஆவலுடன் ஸ்ரீராம ஜானகி விவாஹ மஹோத்ஸவத்தை அவர்கள் பார்க்க ஓடிவந்தார்கள். ஜனக புரியைக் கண்டு, தேவர்கள் அனைவரும் நிஜமாகவே அனுராகம் படைத்தவர்களாக மோஹப்பட்டு, தங்களுடைய செல்வங்கள் பொருந்திய லோகங்களை மிகவும் துச்சமாக எண்ணிக் கொண்டார்கள். (1666)

விசித்திரமான மண்டபங்கள், நானு பிரகாரமாய் நேர்த்தி யாக கட்டப்பட்டு அழகாக விளங்கும் கட்டடங்கள் எல்லா வற்றையும் ஆச்சரியத்துடன் கண்டார்கள், ஜனகபுரியில் வசிக்கும் நர, நாரிகளின் ரூபங்கள், அவர்களின் தேஜஸ் வாய்ந்த அழகு குவியல்களான ரூபங்கள், மேன்மையான அழகு, கம்பீரம், ஸ்ரேஷ்டமான தர்ம பழக்கங்கள், சுசீலமான நடத்தைகளுடன் அழகான உள்ளம் படைத்தவர்களாகத் தோன்றினார்கள். (1667)

இப்பேற்பட்ட உத்தமர்களைக் கண்டு, தேவதைகள், தேவ ஸ்திரிகள் அனைவரும் பூர்ணசந்திரன் உதையமான பின்பு ஆகாயத்தில் பிரகாசிக்கும் தாராகணங்கள் எவ்விதம் தங்க ளுடைய பிரபையை இழந்தவர்களாகத் தோன்றுவார்களோ, அவ்விதம் அவர்கள் காணப்பட்டார்கள். பிரும்மாவுக்கு விசேஷமான ஆச்சர்யம் ஏற்பட்டது. தன் கைகளால்

ஸ்ருஷ்டிக்கப்பட்ட படைப்பு பொருள்கள் ஒன்றையும் அங்கே காணப்படவில்லை. சீதா கல்யாண வைபவத்தில் எல்லாமே நூதனமாக விருந்தன. (1668)

இவர்களை இந்த ஸ்திதியில் பார்த்த பகவானும், ஸாது ஸ்ரேஷ்டரான சிவன் எல்லா தேவகணங்களையும் பார்த்துச் சொன்னூர். "தேவர்களே, ஆச்சர்ய கடலில் முழுகி உங்கள் ஆத்மாவை இந்த சமயத்தில் மறக்காதீர்கள். உங்கள் ஹ்ருதயத்தில் தோன்றும் அனுபவங்களை தீரர்களாகவும், வித்வான்களாகவும் அனுபவியுங்கள். (பகவான் நாராயண ருடைய மகிமை பொருந்திய நிஜ பராசக்தியாகிய மஹாலக்ஷ்மி சீதா தேவியாக ஆவிர்பவித்திருக்கிருள். அகில பிரும்மாண்டங் களுக்கும் பரமேஸ்வரர், சகல சராசரங்களுக்கும் லோக குருவு மான ஸ்ரீராமச்சந்திரனை அவள் விவாஹம் செய்து கொள்ளப் போகிருள்.) அப்பேற்பட்ட சீதா ராம விவாஹம் நடக்கப் போகிறது. இதைத் தீர விசாரித்து, விவாஹ மஹோத்ஸவத்தை அனுபவியுங்கள்." (1669)

[தியானம்

ஹே நாராயணு, மஹாலக்ஷ்மி, சீதா ராமா, ஆஸ்ரிதர்களை அன்பு, அழகு, மதுரமான பேச்சுக்கள், சிறந்த உதவி, செல்வம், திருவருள், ஸம்பந்தச் சேர்க்கை, உன்நாம பாராயணங்கள் தன்னையும் தன் பெருமையையும் பகிர்ந்து கொடுக்கும் பெரும் வள்ளல்தன்மை ஆகிய குண ஸம்பத்துக்களை உடைய உங்களை நான் ஸர்வபூதமயமாக நினைத்து, ஸகல பிராணி களிடமும் அவ்யய மானதும், அசையாத பரம ப்ரீதியுடனும் இருக்கிற ஹரி பகவான் என்று நான் பூஜிக்கிறேன். என் ஆசார்யர்களான ராமானுஜர், வேதாந்ததேசிகர், மணவாள மாமுனிகள், துளசிதாஸர், பெரியவாச்சான் பிள்ளை ஆகிய வர்களின் மஹா சேர்க்கையால், உன்னை அர்ஜுனனும் யசோதையும், நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும் கண்டறிந்து, பெரும் ஒன்றே எனக்கருதி நான் வீடு பெற சரணம் என்கிற பிரபத்தியைச் செய்து அடைகிறேன். உன்னை அடையும் விரோதிகளாகிய என் துர்குணங்கள், பாபங்கள், தோஷங்கள் ஆகியவைகளைப் போக்கும் அழகு, வீர்யம் படைத்த சாரங்கபாணியே, கோதண்ட பிரசண்ட ராமா, குறைவில்லாத கோவிந்தா, திருவுக்கும் திருவே, என் ஆசார்யர்களான பிரஹஸ்பதி, சுக்ரர், பீஷ்மர், தருமர், தேசிகன், மஹாலக்ஷ்மி,

மஹா உரகர், நரன் ஏன்கிற அர்ஜுனன், துளசிதாஸர், தியாக ராஜர், நாரதர் போன்ற மஹா உத்தமர்கள் வைஷ்ணவ ஸம்ஸ்காரங்களாகிற பஞ்ச சம்ஸ்காரம் என்கிற நியதியினால் த்வயம் அஷ்டாக்ஷரம், சர்ம ஸ்லோகம் ஆகிய வழிகளில் தள்ளப்பட்டவனாக உன்னைத்துதித்து யாம் பெரும் பாக்யமே, பாக்யம் என்று சந்தோஷப்படுகிறேன். உனது கிருபையாகிய முக்தி நிலையையும், சோகங்கள் விலகினதையும், நாடு புகழும் செல்வமும், ஆடையும் முழங்கை வழிவாற உன் அமுதமும், உன்னுடன் சேர்ந்து உண்ணும் பாக்கியமும் நான் அடையவேண்டும். உமா சங்கரர் தொழும் நாராயணரே, பத்மநாபரே, அஷ்ட தளத்தோடு விருக்கும் கமல நயனரே, அறிந்தும், அறியாமலும் நான் செய்த பாபங்களைப் பொறுக்கும் ஸஹிஷ்ணுவே, நரநாராயண அவதாரத்தில் "கண்டபரசு"வாகச் செய்த சிவனின் பெருமையைக் கண்ட மாதவரே, ப்ராஜிஷ்ணுவே, பரரூபத்தை பக்தர்களுக்கு பகிர்ந்து கொடுக்கும் தயாளுவே, ஜிஷ்ணுவே, சலங்கையினால் கட்டப்பட்ட இடுப்பை உடையவரே, யசோதையினால் கயிற்றினால் கட்டப்பட்ட உன்னுடைய இளம் உருவத்தை நினைத்து, உனக்கு சேஷனாகி உமக்கு பரதந்தரனாகி, நீர் எனக்கு சேஷியாகவும், ஸ்வாமியாகவும், ஆளகிறவருமாக, ஆஞ்சநேயர், சீதா பிராட்டி நினைத்தது போல நினைக்கும் என்னை ஆட்கொள்ளும். தயா மூர்த்தியே, சரணம் சரணம்.]

"எந்த பகவானுடைய திருநாமத்தை உச்சரிப்பதினால், தியானிப்பதால் அர்ச்சிப்பதால் ஆயிரம் நாமாக்களை ஸ்துதி செய்வதால், பக்தியால் அவனுக்கே கட்டுப்படுவதால், நாம் சிறப்பையும், மேன்மையையும், அடைகிறோமோ, அப்பேற்பட்ட அவ்யயமான புருஷோத்தமரின் பிரபாவத்தால் அல்லவா, இந்த ஜகத்தில் ஏற்படும் சகலவிதமான அமங்களங்களும் வேரோடு எரிந்துவிடப்படுகின்றன; அதுமாத்திரமின்றி நாம் இப்புவியில் வாழ்வதற்கும், சகலவிதமான புருஷார்த்தங்களை அடைவதற்கும், தர்ம ஆசரணைகளால் ஏற்படும் பகவானிடமுள்ள ஜீவனின் பாரதந்திரியம், செல்வச் சிறப்புக்கள், மனோபிஷ்டங்களின் இனிது நிறைவேறுதல், இறுதியில் வீடு என்கிற மோக்ஷம் என்கிற பகவானுடைய பெரும்பதம் ஆகியவைகள் எல்லாம் நம் போன்றவர்களுக்கு கைக்கு எட்டும்படி சுலபமாக அளிக்கும் அண்ணல்கள் அன்றோ சீதாராமன். ஜகத்திற்கு மாதா பிதா போன்றவர்கள் அல்லவோ அவர்கள்?" இவ்விதம் பேசினார் மன்மதனை எரித்த சிவன். (1670)

இந்த விதமாக தேவதைகளுக்கு ஸ்ரீ சீதாராமனுடைய பெருமைகளைச் சொல்லி தன்னுடைய ஸ்ரேஷ்டமான விருஷபத்தின்மீது பகவான் சம்பு அந்த பராத்தின் கூடவே சென்றார். தேவதைகள் தசரதர் மனத்தில் மிக்க சந்தோஷத்துடனும் சரீரம் புளகாங்கித ஆனந்தத்துடனும் செல்வதைக் கண்டார்கள். (1671)

அந்த மஹாராஜனுடன்கூட பரம பிரீதியுடன் சாதுக்களும், பிராம்மண ஸமாஜங்களும் சென்றார்கள். அவர்கள் சென்ற அழகு எவ்விதம் சோபையுடன் விளங்கினது தெரியுமா? ஸகல சுகங்களும் (புருஷார்த்தங்களான தர்ம அர்த்த காம மோக்ஷம்) நேரிலேயே உருவெடுத்து அவரைச் சேவை செய்து சுகப்படுத்துவதுபோலத் தோன்றின. அவருடைய நான்கு குமாரர்கள் எவ்விதம் பூரண சோபிதையாக விளங்கினார்கள் தெரியுமா? ஸம்பூர்ண மோக்ஷம் என்கிற ஸாலோக்கியம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் ஆகிய நான்கும் தேகம் எடுத்துக் கொண்டு அவரை அடைந்தது போல விளங்கினார்கள். (1672)

ஒரு ஜோடி மரகத ரத்தினம் போன்ற நிறம், நீலவர்ண ரத்னங்களைப் போல விளங்கிற்று. இன்னொரு ஜோடி தங்க கட்டியின் நிறம். அழகானதும் பார்ப்பதற்கு தித்திக்கும் மனோ ரஞ்சிதமான ஜோடிகளான அந்த நான்கு பேர்களை அடிக்கடி பார்த்து தேவதைகள் அதிக ஆனந்தத்தை அடைந்தார்கள். அவர்கள் ஸ்ரீராமனை அடிக்கடி அடிக்கடி பார்த்து, தங்கள் ஹ்ருதயத்தில் அத்யந்த சந்தோஷமடைந்தவர்களாகி, அந்த அரசனை பல தடவைகள் புகழ்ந்து, அநேக புஷ்பங்களை அடிக்கடி வர்ஷித்தார்கள். (1673)

நகத்திலிருந்து சிகைவரை ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்ய செளந்தர்ய ரூபத்தை அடிக்கடி பார்த்துப் பார்த்து, உமை என்கிற பார்வதியுடன் கூடவிருந்த ஸ்ரீ திரிபுராரியின் சரீரம் புளகாங்கிதமடைந்தது, அவருடைய கமல நேத்ரங்களிலிருந்து பிரேமை கலந்த அன்புக் கண்ணீர்கள் ததும்பின. (1674)

[தியானம்

ஹே நாராயணரே, ஸ்ரீவாஸரே, ஹ்ருஷிகேசரே, ஐம்புலன்களை நடத்துகிறவரும், சந்தோஷம், ஐஸ்வரியம், ஸௌக்யம், இவைகளைக் கொடுப்பவரே, ஆத்மாவாக விருந்து இந்திரியங்களை வசப்படுத்துகிறவரே, சூரியரூபராகவும், சந்திர ரூபராகவும்

விருந்து ஜகமெல்லாம் வாழச்செய்யும் ஜகத்பதியே, உமா சங்கரரின் ஸ்தோத்திரத்திற்கு வசப்பட்டரே, பீஷ்மர், தர்ம நந்தனர் ஆகியவர்களால் கிருஷ்ண த்வாதசியில் கந்தபுஷ்பத் துடன் ஆராதனை செய்யப்பட்ட போக்தா, துரோணயுத்தத்தில் அசுவத்தாமாவினுல் விடப்பட்ட நாராயண அஸ்திரத்தின் பிரயோகத்தினுல் தபிக்கப்படும் பீமனை நமஸ்காரம் பலவந்த மாகச் செய்யச் சொல்லி அவனைக் காப்பாற்றியவரும் அதீந் திரியரும், புலன்களுக்கு எட்டாதவரான பெருமாளே, அதோக்ஷ ஜரே, எல்லா உலகங்களிலும் வியாபித்து, ஆயிரம் கைகள், ஆயிரம் கால்கள், ஆயிரம் கண்கள், ஆயிரம் ஸ்ரோத்திரங்கள், ஆயிரம் வயிறுகள், நாக்குகள் கொண்ட மஹாவிராட், அர்ஜுன னுடைய ஸ்வராட், என் தாபங்களைப் போக்கும் அசோகரே, அப்ரமேயா, பிரும்மா முதலானவர்களுக்கும் தன் இந்திரியங் களால் அறியக்கூடாதவரே, பரமகிருபாளுவாகிய சீதையினுல் சரணுகத தர்மமாகிய சாதுக்களின் ரக்ஷணத்தைப்பற்றி சொல்லப்பட்டு, அக்ரதோ ராமன், மத்யே சீதா, புஷ்டேதனுஷ் பாணியான லக்ஷ்மணன் என்று அணிவகுத்துச் சென்ற ராமா, வைகுண்ட மார்க்கத்தை அளிக்கும் நேயோநய ராமா, என் வைஷ்ணவ ஆசாரியர்களின் பாததூளி பெற்று அஷ்டாக்ஷர மாகிய புருஷார்த்தம், த்வயமந்திரமாகிய உபாயம், சர்மஸ்லோக மாகிய அச்யுத சரணம் என்கிற ஸர்வமஹிமைகள் பொருந்திய எம்பெருமான் ஸர்வஸுலபனுக திடமாக நம்பியிருப்பவனுக்கு பூமிபிராட்டிக்கு வாக்களித்த வராஹ பெருமாள் சொன்னபடி "அர்ச்சராதி கதியால் பரமபதத்திற்கு அழைத்துச் செல்வேன்," என்று கூறிய உறுதியை நினைத்து நான் சரணமடைகிறேன். ராமானுஜரால் கடாக்ஷிக்கப் பெற்ற வைஷ்ணவர்களின் குழாத் தைச் சேர்ந்த என்னை, தன்நிலை காட்டிய ஹ்ருஷிகேசரே, ரக்ஷித்தருளவேண்டும். வேங்கட வேத வெற்பே, வரத வெங்கடேசரே. ரெங்கநாதரே, அமலனே விமலனே, நாற்றத் துழாய் நாரணு, அறிவொன்றுமில்லாத என்னை, ஆயர்குலத்தைக் கடாக்ஷித்தது போல, பிறவியின் பெரும்பயனை அடையவைத்து, சிறியவனுகிய என்னுடைய பூஜையை அங்கீகரித்து, குறை வில்லாமல் கோவிந்தா என்று அழைக்கும் என்னை உன்னேடு ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும். எனக்கும் உனக்கும், லக்ஷ்மி நாராயணு, உறவே ஒழிக்க ஒழியாது என்று என் மனத்தில் தோன்றிய எண்ணத்தை நீர் அங்கீகரிக்க வேண்டும். மாயனே, மணிவண்ணனே, உன் கீர்த்தி புகழ்களை நாரதர்போல் பாடும்

என் பக்திக்கும் சரணுகத தர்மத்திற்கும் ரக்ஷணம் தாரும். நரசிம்மரே, ராமா, மாதவரே.]

ஸ்ரீராமனுடைய சரீரத்தின் நிறம் மயில்கழுத்தின் நீலநிலம் போன்றதும், ஸ்புடம் செய்யப்பட்ட பச்சையுடன் விளங்கும் ஸ்யாமை நிறமுள்ள சரீரம் (கருமுகில் நடுவே மின்னல் போல விளங்கும் ஜோதி ஸ்வரூபம், வரண்ட பூமியை தழைக்கச் செய்யும் அம்ருத மயமான வர்ஷங்களால் சேதன சேதனங்களை பிழைப்பிக்கவைத்து, பொங்கும் மகிழ்ச்சியை செய்விக்கும் மரகத ஸ்யாமை நிறம்). மின்னலை அலக்ஷ்யம் செய்யும் அவருடைய அங்கங்களில் பிரகாசமயமான சுந்தர வர்ணத்துடன் பிரகாசிக்கும் பட்டுப் பீதாம்பரம் சாத்தப்பட்டிருந்தது. சகல சாஸ்திர ரீதியுடன் அலங்கரிக்கப்பட்டதும், விதவிதமான அங்கங்களுக்கு ஏற்ப அழகான ஆபரணங்களும், சீதாராம விவாஹத்திற்காகவே தனிப்பட்டமுறையில் தயாரிக்கப்பட்ட பூஷணங்களும் அவருடைய சரீர மங்கள அழகுகளை அதிநேர்த்தியாக, உன்னதப் படுத்தின. (1675)

அவருடைய திவ்ய வதனம் விமலமான ஆகாயத்தில் பிரகாசிக்கும் பூர்ணசந்திரனைப் போல (ரோஹிணியுடன் கலந்த பூர்ணிமை வந்த சந்திரன் போல) விருந்தது. அவருடைய நயனங்கள் அப்போது அலர்ந்த புதிய கமலபுஷ்பங்கள் போல விசாலமாகவும், கந்தமுள்ளதாயும், குளிர்ச்சியுள்ள பார்வைகளால் கருணை என்னும் குணவிசேஷத்தால், தாமரை மலரையும் மிஞ்சின அழகுடன் பிரகாசித்தன. அவருடைய மூர்த்திரூபம் திவ்ய சச்சிதானந்த அழகுடன் பிரகாசிக்கும் ஸ்வயம் பிரகாச ஜோதியாகவும், அமானுஷ்யமான அழகுக் குவியல்களுடன் சேர்ந்து விளங்கும் ஏக மூர்த்தியாகவிருந்தது. சுருக்கமாக சொல்லுங்கால், ராமனுடைய சௌந்தர்ய தேஜோ மூர்த்தி ஸ்வரூபம் மனத்தில் தோன்றியதைச் சொல்லவும் விசாரிக்கவும் முடியாத அழகின்பமாக விளங்கியது. (1676)

அவருடன் கூடவிருந்த மனோஹரமான சகோதரர்கள் அதி சோபிதமாகவிருந்தார்கள். சபல சித்தமுள்ள உத்தமமான ஜாதியில் பிறந்த குதிரைகளை, வளைந்து செல்லும் மார்க்கங்களில் நேராக இழுத்துக்கொண்டு, அவர்கள் அந்த குதிரைகளின் கதிகளை நடத்தி ஆனந்தித்துக்கொண்டும் வந்தார்கள். அவர்களுடன் கூட ரகுகுல வம்சத்தைப் புகழ்ந்து பாடும் மாகதர்கள் விருதாவளிகளைப் பாடிக்கொண்டு வந்தார்கள். (1677)

எந்த குதிரையின்மேல் ஏறி ஸ்ரீராமன் சவாரி செய்தாரோ, அந்தக் குதிரையின் ஸ்ரேஷ்டமான கதியைக் கண்டு பதகேஸ்வரனுன கருடன்கூட சிறிது பொருமைகொண்டான். அந்தக் குதிரையின் அழகும், கம்பீரமும், வேஷமும் வர்ணனைக்கு அப்பால் விளங்கியது. அழகுபெற்ற மன்மதனே குதிரை வடிவம் எடுத்து வந்ததுபோலத் தோன்றியது. (1678)

காமதேவனை குதிரையாகக் கொண்டு சவாரி செய்யும் கல்யாணராமனுடைய சவாரி என்ன அழகுடன் விளங்கினது தெரியுமா? "ஐயா, ஹே ராமா, உன்னுடைய மேன்மைபெற்ற விராட்ஸ்வரூபம், பலம், அதற்கேற்ற யௌவன ரூபம் இவைகளுக்கு ஒத்த ஸௌசீல்ய குணங்கள் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி வேஷம்பூண்ட அந்தக் குதிரையின் நன்னடத்தை, கதி, போகும் அழகுதிறம், சால் ஆகியவைகளைக் கண்டு ஸமஸ்த லோகங்களும் மோஹமடைந்துவிட்டன. ஹே மோஹன ராமா, அந்தக் குதிரையின் அழகுக்கு ஏற்ப, முத்து, பச்சை ஆகிய ரத்னமணிகள், மாணிக்கங்கள் ஆகிய நவரத்ன மாலைகள் படிந்த அந்த சவாரிசெய்யும் ஆசனமானது சகல ஜோதிகளுடன் கூடிய ஜகத்தை மயக்கவைக்கும் மாயையாக விளங்கிற்று. அதனுடைய அழகையும், லலிதமான லகானில் உள்ள ஜோடனைகளும் கிங்கிணி சப்தம்செய்யும் மணி ஓசைகளையும் கேட்டும், நேரில் கண்டும் தேவதைகளும், மனுஷ்யர்களும், முனிஜனங்களும் எல்லா சராசரங்களும் மோஹித்துப் போய்விட்டார்கள்." (1679)

பிரபுவினுடைய இச்சைப்படி தன் மனத்தை கட்டுப்படுத்தி நடந்துசெல்லும் அந்த நேர்த்தியான குதிரை ரொம்ப அழகாக விருந்தது. ஒரு சுந்தரமான மயில், மின்னல் கொண்ட கார் முகிலைக் கண்டும், அழகான ஒளியுள்ள நக்ஷத்திரங்களைக் கொண்ட வானத்தில் கருமுகிலைக் கண்டும், எவ்விதம் ஆனந்தத்தால் கூத்தாடுமோ, அவ்விதம் அந்த திவ்ய குதிரை நர்த்தனம் ஆடியது. (1680)

[தியானம்

ஹேஸ்வக்ஷரே, திருமகள் வடிவழகென்னும் அமுதக் கடலில் கரைகண்ட திருக் கண்களை உடைய ராமா, க்ஷேத்ரக்ஞரே, முக்தர்களானவர்களுக்கு நித்ய விபூதியை அனுபவிப்பதற்காகக் கொடுப்பவரே, க்ஷேத்திரங்களாகிய பாகவத சரீரங்களில் ஸர்வ சாக்ஷியாக வீற்றிருப்பவரே. அவர்களின் குண தோஷங்களைப் பரிபூர்ணமாக அறிந்திருப்பவரே. பாகவத ஸ்ரேஷ்டர்களை

மகிழ்வித்து தானும் மகிழ்பவரே, இஜ்யரே, இந்திராதி தேவர் களால் வணங்கப்படுபவரே, யக்ஞபலன்களைக் கொடுப்பவரே, யக்ஞங்களினால் ஆராதிக்கப்படுகிறவரே, சாது ஜனங்களாகிய பாண்டவர்களுக்காகவும் திரௌபதிக்காகவும் தூது போவது, ஸாரதியாகவிருப்பது, இன்னும் ஞானத்தை விளக்குவது, இது போன்ற அடியார்கள் விரும்பினவற்றை எல்லாம் குறைவில்லாமல் முடித்துவைக்கிறவரே, நீளா தேவி என்கிற நப்பின்னை பிராட்டி யின் ஸ்தனகிரிகளின் தாழ்வரையில் மகிழ்ந்துகிடக்கும் நாராயணா, உன்னை அனாதிகாலமாக பூஜித்ததின் பலனாக இந்த ஜன்மத் திலும் உனக்குத் தாஸனாகவும், உன் அடியார்களுக்குத் தாஸ னாகவும் உங்களுக்கு கைங்கர்யம் செய்தலும், "நீயே என்னை காக்கவந்த தெய்வம்" என்றுகூறி, தன்னையே காட்டிவைப்பது மாகிய பாக்யத்தை மீண்டும் பிறவிதோறும் வேண்டுகிறேன். நம்முடைய உறவு, ரக்ஷகம், ரக்ஷகனாகிய நீர் ஆகியவை எல்லாம் நீரே உவந்து செய்யவேண்டும், என்று பிரார்த்திக்கிறேன். காசியில் வாழும் உமைசங்கரரால் தொழப்படும் ராமா, உன் திருவடிகளை அடைந்த பூபிராட்டியின் திருமகளாகிய சீதைக்கும், தானாக சேவை செய்ய வந்த கருடனையும், லக்ஷ்மணனையும், ஆஞ்சநேயரையும் அருள் பாலித்தவரே, பிரும்மாவினால் ஸ்துதி செய்யப்பட்ட ஆத்மாராமனே, துளசிதாஸர் சொல்லிய வழிகளில் பின்பற்றிவரும் என்னையும் கடாக்ஷித்து அருளவேண்டும். குஹனையும், வானரர்களையும், விபீஷணனையும் சிறப்பித்த பெருமானே, என்னிடமும் மனமுவந்து நீர் என்னிடம் வர வேண்டும். நவதுளசிமாலை அணிந்த நீர் என்னைக் கடாக்ஷிக்க வேண்டும்.]

எப்பேற்பட்ட ஸ்ரேஷ்டமான குதிரையின்மேல் ஸ்ரீராமன் சவாரி செய்தாரோ, அந்த உத்தம குதிரையின் அழகுகளை பிரும்ம பத்னியாகிய சாரதாதேவியினால்கூட வர்ணிக்கமுடியாது. உமையின் பதியாகிய பகவான் சங்கரர் அந்த ஸ்ரீ ராமச்சந்திர னுடைய திவ்ய மங்களரூபத்தைக் கண்டு, அனுரக்தராகி, ஹ்ருதயம் புளகாங்கிதமாய், தன்னுடைய விசாலமான பதினைந்து கண்களால் (பஞ்சமுக திரிபுராரி) அதிபிரியத்துடன், சமயத்தை நழுவவிடக்கூடாது, பூர்ணமாக அனுபவிக்க வேண்டுமென்று பார்த்து, பார்த்து திருப்தி அடைந்தார். (1681)

பகவான் விஷ்ணுவினால் எப்பொழுது ஸ்ரீராமன் பிரியத் துடன் பார்க்கப்பட்டாரோ, அந்த சமயத்தில் அவருடன் கூட விருந்த ரமாதேவியும் அவரும் ரமணீய மூர்த்தியின் சிகரமாக

விளங்கும் ஸ்ரீராமனைக் கண்டு மோஹம் அடைந்தார்கள். அதே மாதிரி ஸ்ரீராமச்சந்திரனுடைய அங்கங்கள் ஒவ்வொன்றின் அதிக அழகின் சோபைகளையும், அருள்சுரக்கும் பார்வைகளையும் கண்டு, பிரும்மாவானவர் தன்னுடைய சதுர்முகத்துடன் கூடிய எட்டு நேத்திரங்களையும் திறந்து பரிபூர்ணமாகப் பார்த்து, அவருடைய திவ்யரூபத்தை மனத்தில் தரித்துக்கொண்டார். தனக்கு எட்டுக் கண்கள் மாத்திரம் இருக்கிறதே என்றுகூட அவர் அந்த சமயத்தில் வருத்தப்பட்டுக்கொண்டார். (1682)

தேவதைகளின் சேநாதிபதியாகிய ஸ்வாமி கார்த்திகேயர், (அழகின் கடல், உமையின் புதல்வர், ஆறுமுகக் கடவுள்) தன் ஹ்ருதயத்தில் பொங்கும் உத்ஸாஹங்களை அடக்கமுடியாதவராகி, வாய்திறந்து கண்கள் மலர்ந்து, கால்கள் சேர்ந்து, கரங்கள் குவித்து "ரொம்ப நல்லதாய்விட்டது. (பஹுத் அச்சா) நான் பிரும்மாவைவிட அதிருஷ்டக்காரன். என்னுடைய பதினெட்டு லோசனங்களால் ராமதர்சனத்தை, என் பெரிய லாபத்தை இன்று நான் அடைந்தேன்," என்று சொன்னார். நல்ல பாக்யமுள்ள இந்திரன் தன்னுடைய ஆயிரம் கண்களால் ஸ்ரீராமனுடைய பரிபூர்ண அழகை அனுபவித்தவனாக "ரொம்ப நல்லதாகிவிட்டது. மஹாத்மாவான கௌதம ரிஷியினுடைய சாபம் நம் நன்மைக்கே இன்று உபயோகப்படுகிறது," என்று கருதி அவரையும் வாழ்த்தினான். (1683)

ஸகல தேவதைகளும் தங்களுக்குப் பதியான இந்திரனுடைய சிறந்த பாக்யத்தைக் கண்டு அதிக பொறாமையினால் வாய்விட்டு சொல்லுகிறவர்களானார்கள், "இன்று நமது ராஜாவான இந்திரனுக்கு ஸமமான பாக்யவான் எவரும் இல்லை." ஸ்ரீராமனைக் கண்டு தேவகணங்கள் யாவரும் மிக்க பிரஸன்னமடைந்து, அந்த இரு ராஜாக்களான தசரதர், ஜனகர் ஆகியவர்களின் நேயர்கள் என்கிற சேர்க்கை ஆனந்தத்தை அடைந்தார்கள். அவர்களிடம் வசப்பட்டவராகி, அன்பு மிகுந்து, அவர்களுக்கு அடங்கி நடந்து, அவர்களிட்ட கட்டளைப்படி அடங்கி, விசேஷ ஆர்வம் அன்பு காட்டினார்கள். (1684)

அந்த பராத்தின் இருபக்கங்களிலும் ராஜ ஸமாஜங்கள் அத்யந்த சந்தோஷத்துடன் படா ஜோராக வாசிக்கப்பட்ட பேரிகைகள், துந்துபி வாத்ய முழக்கங்களின் சகிதமாக வந்து கொண்டிருந்தார்கள். ஸகல தேவதைகளும் மிக்க பிரஸன்ன முகத்துடன் "ரகுகுலமணி ஸ்ரீ ராமனுக்கு ஜயமங்களங்கள் ஏற்படட்டும். ஸ்ரீராமனுக்கு ஜயங்கள் ஏற்படட்டும். பல்

லாண்டுகள் வாழட்டும்'' என்று மங்கள ஆசீர்வாதங்கள் செய்து, தேவ புஷ்பங்களை வர்ஷித்தார்கள். இந்தபிரகாரம் ஒவ்வொரு வகையிலும் சிறப்புக்கள் பொங்கி விளங்கிய அந்த அழகு மாப்பிள்ளையின் ஜானவாசம் (பராத்) புறப்பட்டது. அந்த ஜானவாஸம் நெருங்குவதை அறிந்து, இன்னும் அநேக விதங் களான வாத்திய முழக்கங்கள் கேட்கப்பட்டன. ஜனகருடைய பட்டமகிஷி ராணி தன்னுடைய ஸ்திரி ஜனங்களை அழைத்து ''மங்கள ஆரத்தியை தயார் செய்யுங்கள்'' என்று கட்டளை யிட்டாள். (1685)

அநேகவிதமான மங்கள ஆரத்திகள் (நெய்தீபம், மஞ்சள் குங்குமம் சுண்ணும்பு, பால் ஆகிய ஆரத்திகள்) எல்லாவற்றையும் தாம்பாளங்களில் தயாரித்து, சந்தோஷத்துடன், மதத்துடன் செல்லும் யானைபோல அழகாக நடந்துசெல்லும் அந்த உத்தம ஸ்திரிகள் அந்த பராத்தை எதிர்கொண்டழைக்கச் சென்றுர்கள். (1686)

அந்த ஸ்திரிகள் எல்லோரும் சந்திரவதனம் போல பாக்ய முள்ள வதனங்களைக் கொண்டவர்கள். அவர்களுடைய கண்கள் சஞ்சலமான மான்களின் கண்களைப்போல அழகாகவிருந்தன. அவர்களுடைய சரீர அவயவ அழகுகள் ரதிதேவியின் மதத்தைப் போக்க வல்லவைகளாகவிருந்தன. அவர்கள் விதவிதமான வர்ணங்களுடன் பிரகாசிக்கும் பட்டுப்புடவைகளை அணிந்திருந் தார்கள். அவைகளின் அழகுகளுக்கு ஏற்ப அவர்கள் ஆபரணங் களும் அணிந்துகொண்டு, இருவித இயற்கை செயற்கை அழகு களுடன் மிக நேர்த்தியாக விளங்கிஞர்கள் அந்த மஹாபாக்ய முள்ள ஸ்திரிகள், (1687)

திவ்யமான தேஜஸ், மஹாபாக்ய சின்னங்கள், லக்ஷணங் களுடன்கூடிய அவர்களுடைய அங்கங்கள், அவைகளில் அழகான மங்களங்களை சூசிப்பிவைக்கும் சுபமான வாசனை வஸ்துக்கள் அலங்கரித்தன. அந்த கன்னிகைகள் சாக்ஷாத்தேவ கணங்கள்போல பிரகாசித்துக்கொண்டு, கோகிலம்போல மதுர மான குரலில் ஸுஸ்வரங்களுடன் மங்கள உபசார கீர்த்தனங் களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய செந்தாமரை கைகளில் வளைகள் ஒலிக்க, கால்களில் சலங்கைகளின் ஓசை படுத்த, இடுப்பில் ஒட்டியாண மணிகள் கிங்கிணி சப்தம் செய்ய, அந்த புண்ய ஸ்திரிகள் நடந்து சென்றுர்கள். அவர்களுடைய நடை அழகைக் கண்டு மன்மதனுடைய யானையானது வெட்கப் படும்படியிருந்தது. (1688)

அநேகப்பிரகாரம் மங்கள வாத்யங்கள் வாசிக்கப்பட்டன. ஆகாசத்திலும் ஜனகபுரியிலும் அழகான மங்கள கீதங்கள் பாடப்பட்டன. இந்திரனின் ப்ரியபத்னியான சசீதேவியும் ஸரஸ்வதியும், லக்ஷ்மியும், பவானியும் இன்னும் ஸ்வாபாவிக மாகவே விருக்கும் பவித்திர ஸுஹ்ருதயமுள்ள தேவ ஸ்திரிகளும், (1689)

கபடமாக ஸ்திரி வேஷங்களைத் தரித்து, சீதை வசிக்கும் அரண்மனையில் வந்து கூடினவர்களாக ஒருவருக்கொருவர் சந்தித்துக்கொண்டு குசலபிரஸ்னம் செய்பவர்களாக விளங்கினார்கள். அவர்கள் மனோஹரமானதும், அநேக மங்கள ஆசீர்வாதங்கள் அடங்கினதுமான இனிமையான கீர்த்தனங்களைப் பாடினார்கள். அங்கு கூடியிருந்த ஸகல ஜனங்களும் மஹத்தானதும் விசேஷமானதுமான ஆனந்தத்தை அடைந்திருந்தபடியால் அவர்கள் ஒருவரையும் அடையாளம் புரிந்துகொள்ளவில்லை. (1690)

அந்தக் கும்பலில் யாரை யாருக்குத் தெரியும்? யார் யாரைத் தெரிந்துகொள்ள வேண்டும்? ஆனந்த பரவசமடைந்த ஸகலரும் பரம பிரும்மமுமான நாராயண அவதாரமாகிய ஸ்ரீராமன் மாப்பிள்ளையாகவிருக்கும் கல்யாண மஹோத்ஸவத்தை அல்லவா கண்டு களித்து பங்கெடுத்துக்கொள்ள விரும்பி வந்திருக்கிறார்கள். மனோஹரமான கீதங்கள் இனிமையான வாத்திய ஓசைகள், தேவதைகளின் புஷ்பவர்ஷங்கள் எல்லாம் மிக்க நேர்த்தியாக விருந்தன. காமித பலத்தைக் கொடுக்கும் நாயகன், ஆனந்தத்தின் கந்த மூலம், (பரம பாகவத அக்ரகண்யர்களாகிய நாரதர், உமை சம்பு, துளசி தாஸர், தியாகராஜர், வால்மீகி, வியாஸர் பிரஹ்லாதர், பராசரர், ராமதாஸராகிய சுகர், ஆஞ்சநேயர் போன்ற மஹான்களின் பக்திக்கு வசமடைந்த) ஸ்ரீராமன், உதாரர் சகல ஸ்திரிகளையும் கண்டு தன் ஹ்ருதயத்தில் சந்தோஷமடைந்தார். தன்னுடைய பரிபூர்ண அழகை தானே காட்டிக்கொடுத்த மாப்பிள்ளையான கல்யாண ராமன் தனக்குள் சிரித்துக்கொண்டார். அந்த மந்தஸ்மித வதனத்தையும் அவருடைய பிரஸன்னமான தாமரைப் புஷ்பங்களுக்குச் சமமான நயனங்களிலிருந்து பொங்கிவரும் கருணை வெள்ளங்களையும் கண்டு, சகல சராசரங்களடங்கிய சேதனர்க்ள், அசேதனர்கள் எல்லோரும் தங்கள் தங்களுடைய அங்கங்களில் புளகாங்கிதமடைந்தார்கள். (கல்யாணராமா, அந்த கருணை கடாக்ஷம் எனக்குக் கிடைக்குமா?) (1691)

ஸர்வ லோகங்களுக்கு மாதாவாகிய ஜகஜ்ஜனனி, மஹாலக்ஷ்மியின் அம்சத்தினவளான சீதை வதுப் பெண்ணாகவும், தேவதேவரும், ஸகலருக்குப் பிதாவும், பகவானுமாகிய ஹரி என்கிற ராமன் கல்யாண வரனாகவும் வேஷங்கள் தரித்து, பக்தர்களின் மனோபிஷ்டங்களை நிறைவேற்றவேண்டும் என்கிற சத்ய சங்கல்பத்துடன் இந்த ஜகத்தில் தோன்றி, நம்மை ஆளவந்த அர்ச்சாவதாரமாகிய சீதாராம மூர்த்திகளாகத் தோன்றியிருக்கிறார்களே, அந்த இருமூர்த்திகளுக்கும் நடக்கவிருக்கும் விவாஹ மஹோத்ஸவத்தின் நிரந்தரமான சுகங்களை யாரால் அப்பா வர்ணிக்கமுடியும்? ஆயிரம் ஸாரதா தேவிகளோ, ஆயிரம் சேஷர்களோ, நூறு ஆயிரம் கல்பங்களில் வர்ணித்தும் முடிவு அடையாமல் களைப்பு அடைவார்களே! (1692)

அப்பேற்பட்ட சுதினந்தின் சுபலக்னத்தில் சுபயோக சுப கரணங்களில் நடக்கப்பெறும் அந்த ஸ்ரீசீதாராமனின் விவாஹத்தின்வேளை நெருங்கிவர, மஹாஉத்தமியும், பாகவத குழாங்களில் அக்ரகண்யை என்று சொல்லக்கூடிய ஜனகரின் பட்டமகிஷி, சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, தன் ப்ரேமை கலந்த கண்ணீர்களை அடக்கிக்கொண்டு, மனம் ஆனந்தத்தால் கட்டுப்பட்டவளாகி, வேதத்தில் சொல்லியபடியும், ஜனககுல ஆசாரப்படியும் ஒவ்வொரு காரியத்தையும் தானே நேரில் அழகாகச் செய்துமுடித்தாள். (1693)

பஞ்ச சப்தங்களாகிற தம்புரா வீணை, போன்ற தந்தி வாத்யங்கள், மிருதங்கம் ஜால்ரா போன்ற இருவகை தாள வாத்யங்கள், பேரிகைகள் போன்று முழங்கும் வாத்யங்கள், நாதஸ்வரம், சஹனாய், புல்லாங்குழல் போன்ற ஊதும் வாத்யங்கள் ஆகிய ஐந்து| வித வாத்யங்களின் சப்தங்கள் கேட்கப்பட்டன. பஞ்சத்வனிகளாகிய வேதகோஷங்கள், வந்திகள் பாடும் ஸ்துதி கீர்த்தனைகள், ஜயத்வனிகள் ஆகிய மங்கள ஆசீர்வாதங்கள், சங்க நாதங்கள், வாயினால் பாடப்படும் மதுர கீதங்கள் ஆகிய சப்தத்வனிகள் எங்கும் கேட்கப்பட்டன. நானாவிதமான ரத்ன கம்பளங்கள் அழகாகத் தரையில் விரிக்கப்பட்டிருந்தன. அந்த பாக்கியவதி ஜனகரின் பட்டமகிஷி விதவிதமான மங்கள ஆரத்திகளை எடுத்து, ஸ்ரீராமனுக்கு அர்க்யம் கொடுத்து, வர வேற்று மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தாள். அதன் பிறகு ஸ்ரீராமன் கல்யாண மண்டபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். (1694)

அந்த மண்டபத்தில் தசரதமஹாராஜர் தன்னுடைய பந்து ஜனங்களுடன் பரம சோபிதத்துடன் வீற்றிருந்தார். அவருடைய வைபவங்களைக் கண்டு அஷ்டதிக் பாலர்களும் வெட்கப்பட்டிருப்பார்கள். ஒவ்வொரு சமயத்தையும் அறிந்து, அறிந்து ஸகல தேவதைகளும் புஷ்பங்களை வர்ஷித்துக் கொண்டிருந்தார்கள். பூமண்டலத்தின் தேவதைகளாக விளங்கும் பிராம்மண ஸ்ரேஷ்டர்கள் சமயத்திற்கு அனுகூல மான சாந்திபாடங்களை நித்யதம்பதிகளுக்கு ஜபித்துக்கொண் டிருந்தார்கள். (1695)

ஆகாயம் ஜனகபுரி ஆகிய இரு இருடங்களிலும் எங்கு பார்த்தாலும் ஒரே கோலாஹலம். ஒருவர் மற்றொருவருடன் பேசியது சரியாகக் கேட்கப்படாமல் எங்கு பார்த்தாலும், ஒரே ஆனந்த கோலாகல சப்தங்கள், பேச்சுக்கள் கேட்கப்பட்டன. இந்த விதமாக ஸ்ரீராமச்சந்திரன் கல்யாண மண்டபத்திற்கு எழுந்தருளினர். அவருக்கு சகலவிதமான அர்க்கியங்கள், புஷ்பங்கள், மரியாதைகள் எல்லாம் கொடுக்கப்பட்டன. அதன் பிறகு அவர் கல்யாண ஆஸனப் பலகையில் அமர்ந்தார். (1696)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, ஸ்வயம்பு, நித்ய யௌவனமுள்ள வரே, ஆதியும் அந்தமும் இல்லாதவர்களே, நித்ய தம்பதிகளே, த்ரைலோக்ய ஜகஜ்ஜனனி, மாயா, பராசக்தி, திரிபுர சுந்தரி, சம்பு என்கிற நாமத்திற்கு ஏற்ப சௌலப்யம் வடிவழகு படைத்து பக்தர்களை இன்ப மூட்டுபவரே, பக்தர்களுக்கு சுகத்தை அளிப்பவரே, பிரஹஸ்பதி, சுக்ராசாரியார் ஆகிய புரோஹிதர் களால் வணங்கப்படுவரே, சூரிய மண்டலத்தில் இருக்கும் ஆதித்யரே, புஷ்கராக்ஷரே, விஸ்வாமித்ரர் பூஜை செய்த ஸர்வ வேத ஸாரமாகிய காயித்ரியின் பொருளாயிருப்பவரே, பிரும்மாவின் புத்ரரும் வேதங்களையே தனது மூச்சாக உடைய வரும், மஹா விரதங்கள் உடையவரும், மஹாவீர்யம் படைத்த வரும், அகஸ்தியரோடு கூடப் பிறந்தவரும், ரகுகுல புரோஹிதரு மான வஸிஷ்ட பகவானை நமஸ்கரிக்கிறேன். ஸனகாதி முனிவர் களும், நாரதர், வால்மீகி, வியாஸர், சுகர், பராசக்தியின் அருளைப் பெற்றவரும் என் ஆசார்யருமான பராசரரையும், மார்க்கண் டேயர், யாக்ஞய வல்கியர், ஏகதர், த்விதர், திரிதர் ஆகிய மஹரிஷி களையும், பிரும்மாவையும், சரஸ்வதியையும் நான் நமஸ்கரிக் கிறேன். உமையாகிய பார்வதியின் புத்ரர்களும் பக்தர்களுக்கு

அருள்சுரக்கும் தெய்வங்களாகிய மஹா கணபதியையும், வள்ளி, தெய்வயானை கணவரான சுப்ரமண்யஸ்வாமியையும் நான் தண்டனிட்டு நமஸ்கரிக்கிறேன். துளசிதாஸர், ஆஞ்சநேயர் தியாகராஜர், மார்க்கண்டேயர், என் வைஷ்ணவ ஆசார்யர் களாகிய ராமானுஜர், தேசிகர், நம்மாழ்வார், நாதமுனிகள், மணவாள மாமுனிகள், குலசேகராழ்வார், ஆண்டாள், விஷ்ணு சித்தன் ஆகிய அடியார்கள் அவர்களின் அடியார்கள், ஆகிய ஸர்வதேவ, ஸர்வரிஷி, ராஜரிஷி, பிரும்ம ரிஷிகூட்டங்களையும், அப்ஸரஸ்கள், நாகர்கள், கந்தர்வர்கள், நதிகள், மலைகள், நக்ஷத் திரங்கள், ஆகாயம், பூமி ஸமுத்திரங்கள், அனந்தன், கருடன் விஷ்வக்ஸேனன், பாஞ்சஜன்யம், சக்கரத்தாழ்வான், கௌ மோதகி, சாரங்கம், ஸர்வ ஆயுத பிரஹரணமாக விளங்கும் நித்யஸூரிகளை நான் நமஸ்கரித்து, அவர்களின் அனுகிரஹம் மேலிட்டவனாக, தண்டி உபமன்யு, துருவன், கஜேந்திரன், பிரஹ் லாதன், அம்பரீஷன் போன்ற பாகவத ஸ்ரேஷ்டர்களின் வழியை பின்பற்றின என்னை கிருதார்த்தனாக ஆக்கவேண்டும். ஹே சீதாராமா, ஸஜ்ஜன ஜீவனா, என் அபராதங்களைப் பொறுத்து, ஸகல லோகங்களின் ஒரே பலனாகிய உன்னை எனக்கு அளித் தருளவேண்டும். தெளிந்த மனத்துடனும், தோஷங்கள், பாபங்கள் விலகின விசுத்த ஆத்மாவினால் பூஜித்து, ஆராதனை செய்யும் எனக்கு உன்னுடைய தாமரைக் கண்களால் கடாக்ஷிக்க வேண்டும். ராமனின் மர்மங்களை அறிந்த சீதா பிராட்டியே, தீனனாகிய என்னை கனகோடி அழகு குணங்களைப் படைத்த ஸ்ரீராமனிடம், ஆனந்த கூத்தன் சிவகாமியோடும் களித்து நடமாடும் ரமணீயத்துடன் என்னை ராமனிடம் சேர்க்கவேண்டும். ராஜீவாக்ஷா, காமாக்ஷி, ஸிம்மாஸனரூடி, மாதுர்ய போஜனத் திற்குப்பின் கனருசியுடன் பேசும் சீதே, லக்ஷ்மணர், பரதர் சத்ருக்ன, ஆஞ்சநேயர்களால் சேவிக்கப்படும் ராமா, சுக்ரீவனின் ஸம்சயத்தைப் போக்க ஸப்த ஸால விருக்ஷங்களின் மேல் வீசின அம்பு, அந்த மரங்களையும் ஸப்தலோகங்களையும் பிளந்து, முகூர்த்த காலத்தில் பிரளயத்தில் ஸகல ஜீவர்களும் லயமடைகிற மாதிரி, மீண்டும் உன்னை வந்தடைந்த கருணை தேஜஸ்ஸுகள் பொருந்திய ராமா, எஜ்ஜன்மத்திலும் உன்னைவிட்டுப் பிரி யாமல் இருக்க கைங்கர்ய சேவைகளும் வேண்டும். கோடி கந்தர்ப்ப லாவண்யம் படைத்த திவ்ய சரீரங்களைக் கொண்ட சீதாராமா, ஜயஜய, சுந்தர ஜகன் மோஹன ரூபமே, ஜயஜய, அர்ஜுனன் தர்மர், பீமன், நகுலன், ஸஹாதேவன், பரிக்ஷித்

தௌம்யர், திரௌபதி நமஸ்கரித்த புண்ணிய மூர்த்தியே, ஜயஜய.]

ஸ்ரீராமச்சந்திரன் மணப் பலகையில் உட்கார்ந்த பின்பு ஆரத்தி எடுத்தார்கள். சகல ஸ்திரி வர்க்கங்களும் மிக்க ஆனந்தத்தை அடைந்தார்கள். அடிக்கடி தீபங்கள் மங்கள ஆரத்திகள், ரத்னமணிகள், பட்டுப் பீதாம்பரங்கள், வாஸனைத் திரவியங்கள், சந்தனம் பன்னீர் போன்ற குளிர்ந்த வஸ்துக்கள், அக்ஷதைகள் இவைகளை ஸ்ரீராமனுக்கு சமர்ப்பித்து, விதவித மான பாட்டுக்களால் அவனை சந்தோஷப்படுத்தி, புஷ்பங்களால் அவனை அலங்கரித்து, அவனைக் கண்குளிரப் பார்த்தார்கள். பிரும்மா முதலிய ஸ்ரேஷ்டமான தேவதைகள் பிராமணர்களின் வேஷங்களைத் தரித்துக்கொண்டு, ரொம்ப ஆர்வத்துடன் கல் யாண விமரிசைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ரகுகுல வம்சத்தின் சிறந்த தாமரைப் புஷ்பத்தை பிரபுல்லமாக் கும் ஆதித்யரைப் போல ஸ்ரீராமச்சந்திரனுடைய அழகு தேஜஸ்ஸுகளைக் கண்டு தங்கள் ஜீவன்களை ஸபலமுடையவர் களாக, க்ருத க்ருத்யர்களாக ஆனந்தமடைந்தார்கள். கிடைக் கப்பெறாத பெரும் பாக்கியத்தை அடைந்துவிட்டதாக தங்களைக் கருதினார்கள். (1697)

க்ஷவரம் செய்பவர்கள், கூலி ஆட்கள், பாடகர்கள், பிறர் களுக்கு சந்தோஷம் விளைவிக்கும் நடனக்காரர்கள், ஸ்ரீராம னுடைய வெகுமதிகளைப் பெற்று, அதனால் ஆனந்த மடைந்து அவனுக்கு நமஸ்கார க்ருத்ஞைகளைச் செய்து, மங்கள ஆசீர் வாதம் செய்தார்கள். அவர்களுடைய சந்தோஷப்பட்ட ஹ்ரு தயம் கட்டுக்கு அடங்காமல் எல்லையற்ற ஆனந்தத்தை அடைந் திருந்தது. (1698)

வைதிக லௌகீக ரீதிகளால் ஜனகரும், தசரதரும் அதிக ப்ரேமையுடன் கலந்து தழுவிக் கொண்டார்கள். ஒருவருக் கொருவர் நமஸ்காரம், அன்பு மொழிகள், இணைபிரியாத ஸ்நே கத்தைக் காண்பித்துக்கொண்டு அந்த இரு மஹாராஜர்களும் விளங்கினார்கள். அவர்களுடைய ஸ்நேகத்தை கவிகள் என்ன உபமானம் கொண்டு வர்ணித்தாலும், சொல்ல முடியாமல் லஜ்ஜையுடன் இருந்தார்கள். (1699)

எப்போது கவிகளுக்கு சரியான உபமானம் கிடைக்க வில்லையோ, அப்போது தங்கள் ஹ்ருதயத்தில் தோல்வியை ஏற்று, "சரி, இந்த உபமானத்தையாவது நிச்சயம் பண்ணு வோம் என்று நினைத்து, இவர்களுக்குச் சமம் இவர்களேதான்,"

என்று முடிவு கட்டினார்கள். சம்பந்திகள் இரு தரப்பினரும் பரஸ்பரம் ஒருவரையொருவர் அதி பிரியத்தினால் தழுவிக் கொண்டதைக் கண்டு தேவர்கள் மிக திருப்தி அடைந்து, புஷ்ப வர்ஷங்களைப் பொழிந்து, அவர்களுடைய கீர்த்திகளை கானம் செய்தார்கள். (1700)

அவர்கள் பரஸ்பரம் சொல்லிக்கொண்டார்கள், "எந்த சமயத்திலிருந்து பிரும்மாவானவர் இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தாரோ அதிலிருந்து நாங்கள் விவாஹங்கள், பல கண்டிருக்கிறோம், கேட்டிருக்கிறோம். ஆனால் எல்லாப் பிரகாரங்களிலும் இவ்வளவு சீர் சிறப்புக்களுடனும், பூர்ண மன ஒற்றுமையுடனும், வெகு நேர்த்தியாகவும், குற்றங்கள் இல்லாத ஒழுங்கான முறையிலும் நடந்துகொண்ட சம்பந்திகள் இருதரப்பிலும் இன்றுதான் முதன் முதலில் பார்த்தோம்." (1701)

தேவதைகளின் சுந்தரமானதும் ஸத்யமானதுமான வசனங்களைக் கேட்டு அந்த இருதரப்பினர்களும் மிக்க சந்தோஷமடைந்தார்கள். அசாதாரணமான நேசத்தை இரு அரசர்களும் அடைந்தார்கள். அழகாக விரிக்கப்பட்டிருந்த ரத்ன கம்பளத்தின் மீது வீற்றிருந்த தசரத மஹாராஜருக்கு அர்க்கியம் முதலியவைகளை ஜனக மஹாராஜர் கொடுத்த பின்பு, அவரை கல்யாண மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார். (1702)

அந்த மண்டபத்தில் விதவிதமானதும் விசித்திரமானதும் செய்யப்பட்டிருந்த ஜோடனைகளைக் கண்டு முனிஸ்ரேஷ்டர்கள் மோஹம் அடைந்துவிட்டார்கள். நல்ல சீலமுள்ள ஜனக மஹாராஜர் தன் கைகளால் எல்லோரையும் அழைத்துக் கொண்டு அவர்களுக்குத் தகுந்த மரியாதைகள் செய்து அதன் பிறகு தகுந்த ஆஸனங்களில் அவர்களை அமர்த்தினார். பிறகு அவர் தன் குலதெய்வத்தை அர்ச்சித்து, பூஜிப்பதுபோல பகவானாகிய வஸிஷ்டரை நமஸ்கரித்து, அதிவினயத்துடன் மரியாதைகள் செய்து அவருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றார். அதன் பிறகு கௌசிக முனிவராகிய விஸ்வாமித்திரரைப் பூஜை செய்து, அதனால் அவர் அடைந்த பரம ப்ரீதியையும் கண்டு, அவர் செய்த பேருபகாரத்துக்கு எப்படி, பகவானிடம் அவித்யையினாலும், கடும் கர்ம வினைகளாலும் ஜீவனுக்கு இயற்கையாகவுள்ள அடிமைத்தனத்தை மறந்து, ஸம்சாரியான அந்த ஜீவன் தற்செயலாக புண்ணிய வசத்தினால் ஏற்பட்ட மஹானுடைய பெரும் உதவியினால் மீண்டும் நல்ல கதியை அடைந்து (நஹுஷன், ராஜரிஷியான தர்மபுத்திரராலும்,

யயாதி தன்னுடைய தௌஹித்ரர்களாலும், நிருகன் பகவான் கிருஷ்ணராலும் நல்லகதியை அடைந்ததுபோல) அதை மறவாமல் பகவானிடம் எவ்விதம் அன்பு கொள்ளுவாரோ, அதுபோல அவர் அடைந்த உத்தம ப்ரீதிக்கு, ஒருவரை, ஒரு அளவு, கால அளவிலோ, மன உள்ளத்தில் ஏற்பட்ட ஆழ அன்பிலோ, எல்லையே காணப்படவில்லை, (1703)

ஜனக மஹாராஜர் மீண்டும் விடாமுயற்சியுடன் அந்த விவாஹத்திற்கு வந்திருந்த வாமதேவரிஷி, அவர்போல பிரபாவங்கள் படைத்த இன்னும் அநேக ரிஷிகள் எல்லோரையும் சரியாக வரவேற்று அவர்களின் மனங்களையும் குளிரவைத்து, ஆஸனங்களில் அமர்த்தினர். ஸகலருக்கும் திவ்யமான ஆஸனங்களைக் கொடுத்து, எல்லோரிடமிருந்து மீண்டும் இப்பெரும் பாக்யங்களை ஜன்மங்கள் தோறும் கல்ப காலங்களில் அடைவிக்கும் மங்கள ஆசீர்வாதங்களைப் பெற்றார். (1704)

அதன் பிறகு அந்த மிதிலாமன்னர் கோஸலராஜரான தசரதரை பலவிதமாகப் பூஜித்து அவரை தனது ஈசர்போல (மஹாதேவரான சம்புவுக்கு ஸமமாக) பாவித்து, அப்பேற்பட்ட உத்தமபாவ அடக்கத்துடன் அவரைப் பூஜித்தார். அதன் பிறகு வெட்கமின்றி வெளிவரும் அன்புள்ள பேச்சுக்களால் மிக்க வினயத்துடன் விக்ஞாபித்துக்கொண்டார். தன்னுடைய பாக்ய விசேஷங்களும் வைபவ விஸ்தாரங்களும் (பெருமைகளும்) அவருடைய ஸ்நேக ஸம்பந்தங்களால் இன்னும் அதிகமாக வளரவேண்டும், என்று கைக்கூப்பிக்கொண்டு தாளும் தடக்கையுடன் ஜனகர் தசரதரிடம் விக்ஞாபித்துக்கொண்டார். (1705)

ராஜா ஜனகர் தசரதருடன் கூடவந்திருந்த ஸகல பந்துக்களையும், மித்ரர்களையும் தசரதரைப்போல எண்ணிக்கொண்டு, ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட முறையில் சிறந்த மரியாதைகளைச் செய்தார். அதன் பிறகு ஒவ்வொருவருக்கும் சரியான ஆஸனங்கள் கொடுக்கப்பட்டன. அப்பேற்பட்ட விசேஷஞானம் படைத்த ஜனகரால் வெகு அழகாகச் செய்யப்பட்ட மரியாதைகளின் ரீதியை நான் ஏகமுகமாக ஒரு வாயின் சொற்களாக எவ்விதம் சொல்லமுடியும்? (1706)

ஸகல பந்துமித்திரர்களுக்கும் ராஜா ஜனகர் ஸம்மானம் செய்து வினயப்ரீதிகளுடன் உத்தம வாணியினால் நல்லரீதியில் சொல்லப்பட்ட வசனங்களாலும், அதன் பிரகாரம் செய்யப்பட்ட காரிய விசேஷங்களாலும் அரசர் எல்லோரையும் உபசரித்தார். பிரும்மா விஷ்ணு மஹேசர் அஷ்டதிக்பாலர்கள்,

தின ராஜனுகிய சூரியன், சந்திரன், மற்றும் ரகுவீரனுடைய மகிமை பிரபாவங்களை அறிந்த தேவகணங்கள், (1707)

கபடமாக அழகான பிராம்மணர்களின் வேஷங்களைத் தரித்தவர்களாக ஆச்சர்யம் கலந்த சந்தோஷத்துடன் கல்யாண வைபவங்கள் ஒவ்வொன்றையும் பகவானுடைய லீலைவிசேஷங்களையும் கண்டு, பரமசுகத்தை அடைந்தார். ஜனகமஹாராஜரும் அந்த பிராம்மண ஸ்ரேஷ்டர்களை தேவதைகளாகவே மதித்து, அவர்களுக்குத் தகுந்த முறையில் மரியாதைகளைச் செய்து, நல்ல ஆஸனங்களைக் கொடுத்தார். (1708)

அந்த கல்யாண கும்பலில் யார் யாரை சரியாக அடையாளம் செய்துகொண்டார்கள்? அங்கு வந்த எல்லா ஜனங்களுக்கும் தங்கள் சுயநினைவும் உணர்ச்சியும் மாயமாக மறைந்து விட்டிருந்தது. சகல ஆனந்தத்திற்கு அடிப்படையான மூலம், பரப்ரும்மத்தை நேரில் கண்டு தரிசித்த பின்பு வதூவர வகுப்பினர்களாகவிருந்த இருதரப்பினர்களும் ஆனந்தத்தின் எல்லையை அடைந்தார்கள். ஸர்வக்ஞரானவரும் ஸர்வ அந்தர்யாமியுமான பகவான் ஸ்ரீராமச்சந்திரன் ஸகல தேவதைகளையும் அடையாளம் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு மானஸீகமாக பூஜைசெய்து ஆஸனங்களைக் கொடுத்தார். ஸௌலப்யம் ஔதார்ய குணங்களின் சிறப்பினுல் எல்லோருடைய மனங்களை கவரும் சக்தியையுடைய பிரபு ஸ்ரீராமனுடைய உன்னதமானதும் மானிடர்போல அவதரித்ததும், சிறிதும் குன்றுத அரிய பெருமைகளை உடைய குணசீல விலாஸங்களை பார்த்துப்பார்த்து தேவ கணங்கள், அவர்களின் பத்தினிகள், பந்து வேலைக்காரர்கள் சகிதமாகவந்து பலவிதமாகவும், விசேஷமாகவும் சிறந்த ஆனந்தத்தை அடைந்தார்கள். (1709)

ஸ்ரீராமச்சந்திரனுடைய முகமாகிய பூர்ணசந்திரனையும் அதிலிருந்து பொங்கிவழியும் அழகு கிருபாகடாக்ஷம், அமுத சுவை ஆகியவைகளைக் கண்டு அழகான லோசனங்களைப் படைத்த சகோரபக்ஷிகள் எவ்விதம் களிப்பு அடையுமோ, அது போல் அல்லவா, வேஷங்களைத் தரித்த தேவகணங்கள் ப்ரேமை ஆனந்தம் ஒன்றும் குறைவில்லாமல் கண்டுகளித்தார்கள். (1710)

[தியானம்

ஹே சீதாராமா, காலாத்மன், தங்களுடைய காலரூபமான சக்ரமானது ஒருவராலும் தடுக்கமுடியாதபடி க்ரூரவேகத்துடன் செல்லுவதால் ஒரு க்ஷணத்தில் உலகங்களை பலாத்கரமாக

நாசம் செய்யக்கூடியதாயும், ஸதா ஓடுகிறதாகவும் இருக்கிறது. பன்னிரண்டு ஆரக்கட்டை ஆகிய மாதங்கள் கொண்டதும் முன்னூற்று அறுபது நாட்களாகிறது பழுக்களை உடையதாகவும், கலாகாஷ்டை, முகூர்த்தம், க்ஷபா, யாமம், க்ஷணம், ருது, அயனம், ஸம்வத்ஸரம் ஆகிய பிரிவைகளைக்கொண்டு சரா சரங்களை நடத்தும் காலாத்மனுக்கு நமஸ்காரம். நாராயணு, க்ரீடாத்மான், உன்னையே நம்பியிருக்கும் என்னை கஷ்டப் படுத்தக்கூடாது. கருணைக்கடலே, அஸ்வினி தேவதைகளால் வணங்கப்படும் சிம்சுமாரசக்ரமே, துருவர் என்கிற சர்வ சக்தி வியாபகரே, ஸ்தூலமாகவிருக்கும் பிரபஞ்சங்களிலும் ஸூக்ஷ்ம மாகவிருக்கும் மூலப்ரகிருதி அடங்கின ரூபத்திலிருந்து சகல சராசரங்களையும், அதன் புலன்களையும், சப்தாதி விஷயங் களையும் இன்னும் பல பிரிவுகளையும் உண்டாக்கிய ஸ்தவிஷ்டரே, ஸகல விஷயங்களையும் ஸங்கல்பிக்கும் மனுவே, எல்லா வற்றையும் நினைப்பவரே, விஸ்வகர்மாவே, உபாதான காரண மாகவும் அதைக் கையாளும் கர்த்தாவாகுமிருக்கிற அக்ராஹ்யரே, த்வஷ்டா என்று பல ரூபங்களாகவும், பிரளயகாலத்தில் அழிப் பவராகவும் இருக்கிற கிருஷ்ணு, லோஹிதாக்ஷரே, தாமரைக் கண்களைப் படைத்த குளிர்ந்த ஸ்வபாவமுள்ள சீதையே, காவேரி ரங்கநாதரே, என் சிறந்த குலதனமே, பரமபுருஷரே, ஸத்பக்தர்களாகிய ஆழ்வார்களுடனும், இருபக்கங்களில் உபய நாச்சிமார்களுடனும், யோகிகள், ரிஷிஸ்ரேஷ்டர்கள் நாரதர், ஸனகாதி முனிவர்களால் வாய்விட்டு புகழப்படும் கருணைரங்கா, உன்னுடைய அழகான பாதுகைகளையும், கிருபாகடாக்ஷங் களையும் உன்கைகளால் அணைத்துக்கொள்ளப் படுவதையும், உன்னுல் ஏவப்பட்ட காரியங்களில் ஸ்ரத்தையும் மன அடக்கமும் உன் புகழைப்பாடும் பாக்கியமும், உன் போக்யங் களும் எனக்கு சதா கிடைக்கட்டும். என்னுடைய தடைகளான சொரூப விரோதி, பரத்வ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, ப்ராப்தி விரோதி ஆகிய ஐந்து விரோதிகள் விலகி, என் ஜீவனை பரமாத்மாவாகிய உன்னை அடையப் படாதபடி காமங்கள் என்கிற தோஷங்கள் போய், உன்னை நான் வந்து அடையவேண்டும்.]

நேரம் ஆவதைக்கண்டு பகவான் வஸிஷ்டர் சதாநந்தரை மரியாதையுடன் அழைத்துவர ஏற்பாடு செய்தார். அதன்படி ஸதானந்தராகிய ஜனகரின் புரோஹிதர் வந்துசேர்ந்தார். வஸிஷ்டர் சொல்ல ஆரம்பித்தார். "உடனே போய், ராஜ

குமாரியை சீக்கிரம் அழைத்து வாருங்கள்". வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி அவர் சந்தோஷத்துடன் சென்றார். (1711)

ஜனகரின் ராணி புரோஹிதரின் குரலைக் கேட்டு தன் சகிமார்களுடன் மிக்க ஆனந்தத்தை அடைந்தாள். அவள் பிராம்மண பத்னி ஸ்திரிகளையும், தன் குலத்தில் வயதான சுமங்கலிகளையும் அழைத்து, "நம் குல ஆசாரத்திற்கு ஏற்ப சுமங்கள கீதங்கள் பாடுங்கள்" என்று சொன்னாள். (1712)

மனுஷ்ய நாரி வேஷங்களைத் தரித்தா ஸ்ரேஷ்ட தேவ கன்னிகைகள் ஸ்வபாவமாக மிக்க அழகு படைத்தவர்களாகவும் "சியாமை" ஆகிய என்றும் பதினாறு வயதினர்களாகவும், குளிர் காலத்தில் மித உஷ்ணமும் கோடைக்காலத்தில் மித சீதளமுள்ள உத்தமமான ஸர்வாங்க சுந்தரிகள் அநேகம்பேர்கள் அந்த கும்பலில் இருந்தார்கள். அப்பேற்பட்ட மஹாபாக்யமுள்ள ஸ்திரிகளைக் கண்டு அரசியின் ஸ்திரி ஜனங்களுக்கு ஏற்பட்ட சுகம் இவ்வளவு என்று சொல்ல முடியாமலிருந்தது. ஒரு விதமாய் பழக்கப்பட்டவர்கள் என்றுகூட சொல்லமுடியாத போதிலும் ஒரு பிரயாசையுமின்றி, நிர்வியாஜத்தினால் எல்லோருக்கும் அந்த உத்தமமான ஸ்திரிகள் மனத்திற்கு மிக்கப் பிடித்தவர்களாகிவிட்டார்கள். அதாவது முன்பே பார்த்துப் பழக்கப்படாமலிருந்தும், எல்லோருடைய மனதைக் கவருகிறபடி அழகாகவும் உயிர் உயிருக்குமேல் நேசிக்கிற சுந்தரிகளாக விருந்தார்கள். (1713)

அந்த ஸ்திரிகணங்களில் பார்வதிதேவி, இந்திராவாகிய லக்ஷ்மி, ஸரஸ்வதி ஆகியவர்களுக்குச் சமமாகவிருக்கும் அந்த ஸ்திரிகளை பலதடவைகள் ஸம்மானித்து, ஜனகரின் ராணி அவர்களை திருப்தி செய்தாள். வதுப்பெண் கூட்டத்தில் இருந்த ஸ்திரி ஜனங்கள் சீதாதேவியை மணப் பெண்ணாக ஸ்ருங்கார அலங்காரங்கள் செய்தனர். அவர்கள் ஜகன்மோஹன சுந்தரியாக தேகம் எடுத்து வந்ததுபோல திவ்ய வஸ்திரங்கள், ஆபரணங்கள், மணமுள்ள புஷ்பகந்தங்கள் இவைகளால் நிகரில்லாத அழகுபடைத்த வதூப்பெண்ணாக சீதையை சிங்காரித்திருந்தனர். அந்த சீதையைச்சுற்றி பெண்கள் கும்பலாகச் சேர்ந்துகொண்டு அந்த ஸ்திரிகள் சீதாதேவியை கைப்பிடித்துக் கொண்டு மணப்பந்தலுக்கு அழைத்து வந்தார்கள். (1714)

அழகான மங்கள வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த ஸ்திரி ரத்னங்கள் தங்கள் சகிமார்களுடன்கூட மிக்க மரியாதையுடன் சீதாதேவியை, என் அன்னை ஜானகியை, அழகாக நடத்தி

  

வந்தார்கள். எல்லா ஸ்திரி ரத்னங்களும் பதினாறு விதங்களாக ஸ்ருங்காரம் செய்துகொண்டிருந்தார்கள். காம கலையில் மிக்கத் தேர்ச்சிபெற்ற பெண் யானைகள் மாதிரி மிக்க மதத்துடன் நடந்து செல்லும் குஞ்சர காமினிகளின் ஒய்யாரமான நடை அழகு எல்லோருடைய மனங்களை அபஹரிக்கின்றதாக விருந்தது. அதற்குமேல் அவர்களுடைய மனோஹரமான கீதங்களைக் கேட்டு, த்யானமே உருக்கொண்ட யோகீஸ்வரர்கள் தங்கள் ஜபதபங்களாகிற த்யானயோகத்தை மறந்தார்கள். காமதேவனுடைய குயில்கள்கூட லஜ்ஜைப்படும்படி அவ்வளவு இனிமையான குரல் படைத்தவர்களாக அவர்கள் இருந்தார்கள். அவர்களின் கால்களிலும், கைகளிலும், இடுப்புக்களிலும் அணியப்பட்ட ஆபரணங்களின் சலங்கை மணிகள், வளை ஓசைகள் ஆகிய கிங்கிணி சப்தங்கள், அவர்களுடைய அழகான நடைக்கு தாளம் போட்டு வாசிப்பதுபோல விளங்கின. (1715)

அந்த அப்சரஸ்வனிதா சிரோண்மணிகளின் நடுவே சீதை தன் இயற்கையான அழகுடன், ஸஹஜமாக கன்னிமார்கள் என்னும் தாராகணத்தின் நடுவே சந்திரனைப்போல பிரகாசித்துக் கொண்டு, அன்னை ஜானகி ராஜாதிராஜனான ஜனகரின் மகள் அனைவருக்கும் கமனீய அழகு கருணையுடன் சேர்ந்து காக்ஷி தந்தாள். அவளுடைய சுந்தரப் பாதங்களும், கால் ரத்ன சிலம்புகளின் ஓசைகளும் ஜோதியாக நிலத்தில் மொய்க்க, அந்த ஸ்திரி கூட்டங்களின் நடுவே ஸ்புடம் போட்ட பொன்னின் ஒளி போலவும், பூர்ணமாக விகஸிக்கப்பட்ட தாமரைப் பூவின் மணம் போலவும் பிரகாசித்துக்கொண்டு, சீதை, என் அன்னை, விளங்கினாள். தன் தாயாகிய பூமியின் மேல் மாந்தளிர் போலவும் மின்னல் ஒளி போலவும் நடந்துவந்தாள். (1716)

சீதா பிராட்டியின் ரூப சௌந்தர்ய லாவண்யங்களை யாரால்தான் வர்ணிக்கமுடியும்? ஏனெனில் நம்முடைய புத்தி ரொம்ப ரொம்ப சிறியது. அது சொல்லவேண்டிய அழகின் குவியல்களோ, ரொம்ப ரொம்ப பெரியவை, மஹத்தானவை. ரூபத்தின் சேர்க்கைகளையா அல்லது எல்லா பிரகாரங்களிலும் புனிதமாகவும், தனிப்பட்ட முறையில் விளங்குகின்றவைகளாகவும் அந்த அழகு கூட்டங்கள் பிரகாஸித்தன. அந்த மாப்பிள்ளை வீட்டு ஜனங்கள் சீதை வரும் அழகையும், அவளை அழகின் ஜோதியாகவும், பரம பாவனமாகவும், பிரணத போஷிணியாகவும் கண்டார்கள். (1717)

எல்லோருடைய மனங்களும் அவளைப் பார்த்ததும் அவர்களை அறியாமல் நமஸ்காரங்கள் செய்தன. தேவேந்திரன் மிக்க பிரயாசைப்பட்டு அம்ருதத்தை பல இன்னல்களுக்குப் பின் அடைந்த சமயம் எவ்விதம் சந்தோஷித்தானோ, அதைப்போல தன் முன்னே சுகந்த மலர்கள், பொன்வளையல்கள், அழகு ஜோதிகள் மொய்க்க தேஜோமயமான சீதையை அந்த ஸ்ரீராமச்சந்திரனும் கண்டு, தாகம் கொண்ட கடைக்கண்களால் கண்டு, அவளுடைய ரூப சௌந்தர்ய வடிவழகுகளைப் பருகிக் கொண்டு, பெரும் முயற்சிக்குப்பின் அடைந்த மஹாஸ்ரீ என்கிற உத்தம ஐஸ்வர்யப் பயனை அடைவது போலவும், பூர்ணகாமனுகவும் கிருதகிருத்யனுகவும் தன்னை நினைத்துக்கொண்டார். ராஜா தசரதர் தன் புத்ரர்களுடன் சீதையைப் பார்த்து அகமகிழ்ந்தார். அவருடைய ஹ்ருதயத்தில் தோன்றிய ஆனந்தம் எவ்வளவு இருந்தது என்று யாருக்கு சரியாகத் தெரியும் ? (1718)

தேவகணங்கள் அந்த மஹாதேவியை சுக்ருத பிரணமம் செய்து, புஷ்பங்களை வர்ஷித்தார்கள். சகல மங்களங்களுக்கு ஆதார மூலமாக விளங்கும் முனிஸ்ரேஷ்டர்கள் யுக்தமான ஸ்ரீஸூக்தம் ஆகிய ஸ்துதிகளை மிக்க பிரஸன்ன மனதுடன் செய்து சீதையை சந்தோஷிப்பித்தார்கள். விஸ்வாவஸ் ஆகிய கந்தர்வ ஸ்ரேஷ்டர்கள் அவளைப்பற்றி கானம் செய்தார்கள். க்ருதாசிபோன்ற பிரமுகர்களான அப்ஸரஸ் கணங்கள் நிருத்ய நடனங்கள் செய்து, எவ்விதம் க்ஷீரசமுத்திரத்தில் மஹாலக்ஷ்மி ஆவிர்பவித்த சமயம், அந்த விஷ்ணுவின் வக்ஷஸ்தலையான மஹாலக்ஷ்மியை கௌரவப்படுத்திஞர்களோ, அதுமாதிரி கோலாஹலமான மங்கள கீதங்கள், நடனங்கள், பேரிகைகளின் சப்தங்கள் எங்கு பார்த்தாலும் கேட்கப்பட்டன. திவ்ய மாலை ஆபரணங்களை அணிந்திருக்கும் ஸ்ரீதேவியைப்போல பிரகாசிக்கும் சீதையைக் கண்டு ப்ரேமை ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினவர்களாக எல்லோரும் சந்தோஷித்தார்கள். (1719)

இந்தப் பிரகாரம் சீதாதேவியானவள் மண்டபத்தில் அனைவருக்கும் தன் வடிவழகைத் தானே தோற்றுவித்து, பிரகடனப்படுத்திக்கொண்டு கடாக்ஷித்து அருளினள். ஆனந்தத்தினுல் துள்ளும் முனிவர்கள், ஸர்வலோக மஹேஸ்வரியானவளும், திவ்யமான கங்கை ஜலங்களால் ஸ்நானம் செய்யப்பட்டு புனிதமானவளும், அங்கங்களில் அழகு, தேஜஸ் மேலிட ஸர்வ ஆபரண பூஷிதையாக விளங்கும் ஜகன்மோஹன ரூபத்தைக் கண்டு, அந்த மங்கள மூர்த்திக்கு கண் எச்சில்படக்கூடாது

  

என்று ஆர்வமேலிட்டவர்களாக சாந்தி பாடங்கள் பாட ஆரம்பித்தார்கள். அந்த சமயத்தில் செய்யவேண்டிய சகல காரியங்களையும் வேதத்தில் சொல்லியபடியும், குலாசாரப்படியாகவும், வஸிஷ்டபகவானும் சதானந்தரும் செய்து முடித்தார்கள். (1720)

இவ்விதமாக குலாசாரப்படி செய்யவேண்டிய காரியங்கள் செய்துமுடிக்கப்பட்ட பின்பு அந்த இரு குரு ஸ்ரேஷ்டர்களும், (வஸிஷ்டரும், சதானந்தரும்) மிக்க சந்தோஷமடைந்து, பிறகு கணபதிக்கு ஸமானமான விஷ்வக்ஸேனர் பூஜை, கௌரி பூஜை, பிராம்மணர்கள் பூஜை ஆகியவைகளைச் செய்தார்கள். (மற்ற பிராம்மணர்களைக் கொண்டு இந்த பூஜைகளைச் செய்து முடித்தார்கள்.) அங்கு கூடியிருந்த தேவகணங்கள் அந்த பூஜைகளை ஏற்றுக்கொண்டார்கள். அத்யந்த சுகத்தை அடைந்த அந்த தேவர்கள் மங்களகரமான ஆசீர்வாதங்களை ஸ்ரீராமனுக்கும் சீதைக்கும் செய்தார்கள். மதுவர்க்கங்கள் (தயிர், வெண்ணெய், ஜலம், தேன், சர்க்கரைப் பதார்த்தங்கள்) எப்போது தேவைப்பட்டனவோ, அந்த சமயங்களில் ஜனகரின் வேலைக்காரர்கள் தங்கத் தாம்பாளங்களிலும் தட்டுக்களிலும் பூர்த்தியாக தயார் செய்துவைத்தார்கள். (1721)

ரகுகுலபதியான சூர்யபகவானே ஸ்வயமாக நேரில் எழுந்தருளி மிக்கப்ரேமையினால் தன்னுடைய குலத்தின் ரீதிகளையும் ஆசாரங்களையும் அன்புக்காகவும், பிறர் நன்மைக்காகவும் எடுத்து உரைத்தார். இந்த பிரகாரம் தேவதைகளின் பூஜைகள் முடிந்த பின்பு மஹரிஷிகள் சீதையை அழகான மணமேடையில் ஸ்ரீராமனுக்கு வலப்புறத்தில் அமர்த்திவைத்தார்கள். (1722)

ஸ்ரீசீதாதேவியும் ஸ்ரீராமனும் ஒருவருக்கொருவர் கடைக்கண்களால் பார்த்துக்கொண்டு, பிரேமைரஸங்கள் பரிமளித்துக்கொண்டு, காமதுக்தரான காமேஸ்வரரிடத்தில், காமகலையின் ஸ்வரூபமான காமாக்ஷியாகிற சீதை காமபீடமாகிற ராம பர்யங்காஸனத்தில் வீற்றிருந்தாள். ஸ்ரீராமன் சீதை ஆகிய இவர்களின் பரஸ்பர மிருதுவானதும், நளினமானதும், மணமுள்ளதும், அழகிய சிறப்புக்களை உள்ளதுமான காமப்ரேமை விலாஸங்களை யார்தான் அறியமுடியும்? அப்பேற்பட்ட விஷயங்களை ஸ்ரேஷ்டமான மனது, புத்தி, குரல் ஆகியவைகளால் அகோசரமான காலம்தோறும் கவிகளால் சிறந்த முறைகளில் கானம் செய்யப்பட்டும், அவைகள் பூர்த்தி ஆகாமல் கரை அற்ற மஹோக்ஷீரததியாகவல்லவா விளங்கியிருக்கின்றன. அவ்விதம்

அவர்கள் இருக்கும் போது, நான் எப்படி இந்த விஷயத்தில் தேர்ச்சிபெறமுடியும்? (1723)

ஹவன் (ஹோமம்) செய்யும் வேளையில் அக்னி தேவன் சரீரம் எடுத்துக்கொண்டு சுகமாக ஆஹுதிகளை ஸ்வீகரித்துக் கொண்டான். சகல வேதங்களும் பிராம்மண வேஷம் தரித்து விவாஹத்தின் சடங்குகள் ஒவ்வொன்றையும் விதிபிரகாரம் சொல்லிக்கொண்டிருந்தார்கள். (1724)

ஜனகருடைய பட்டமஹிஷியும், சீதாதேவியின் மாதாவை யும்பற்றி யாரால் இப்போது வர்ணிக்கமுடியும்? நல்ல கீர்த்திகள் வாய்ந்தவள், சுக்ருதங்கள் பல ஜன்மங்களில் செய்து வந்தவள். அவளுடைய சுகானுபாவங்களையும், அழகு சௌந்தர்யங்களையும் அவளுக்கு என்றே தனிப்பட்ட முறையில் அல்லவா பிரும்ம தேவரே தானே நேரில் உற்பத்தி செய்திருக்கிறார். (1725)

ஸமயத்தை அறிந்து, ஸ்ரேஷ்டமான முனிஸ்ரேஷ்டர்கள் அவளை அழைப்பி வைத்தார்கள். இதைக் கேட்டு சுமங்கலி களான ஸ்திரிகள் அவளை மிக்க மரியாதைகளுடன் அழைத்து வந்தார்கள். ஜனகரின் இடது புறத்தில் அவருடைய பட்ட மஹிஷி, சுநயனாஜி வீற்றிருந்தாள். புண்யமானவளும், மூன்று லோகங்களிலும் பிரக்யாதி பெற்றவளும், ஸர்வ பாபங்களைப் போக்கும் மங்கள மூர்த்தியான ஹிமவான் என்கிற பர்வதராஜன் பக்கத்தில் திவ்ய ஓஷதிகள்போல மைனாதேவி வீற்றிருந்து சோபைதருவது போல, ஜனகரும் அவருடைய மஹிஷியான சுநயனாவும் அச்சமயம் விளங்கினார்கள். (1726)

பவித்திரமானதும் கந்தமுள்ளதுமான ஜலம் நிரம்பின அநேக தங்க கலசங்கள், ரத்ன குவியல்கள் அடங்கின தட்டுத் தாம்பாளங்கள், ஆகியவைகளை ராஜா ஜனகரும், அவருடைய பத்னியும் ஸ்வயமாகவே தாங்களாகவே தங்கள் கைகளால் எடுத்து ஸ்ரீராமனின் முன்பாக வைத்து ஸமர்ப்பித்தார்கள். (1727)

முனிகணங்கள் மங்களவாணியினால் வேதங்களைக் கோஷித் தார்கள். அந்த நல்ல சந்தர்ப்பத்தை அறிந்து ஆகாசத்தி லிருந்து தேவதைகள் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். அந்த ராஜதம்பதிகள் கல்யாண ராமனாகிய மாப்பிள்ளையைக் கண்டு அதிக ப்ரேமைவசம் அடைந்தவர்களாக அவருடைய புனிதமான சரணாரவிந்தங்களை பால், தண்ணீர் இவைகளால் அலம்பி னார்கள். (1728)

பாகவத ஸ்ரேஷ்டர்கள் எந்த அச்சுத சரணங்களை தங்கள் மாபெரும் தவப்பயன் என்று இடைவிடாமல் நேசிக்கிறார்களோ, அந்த ஸ்ரீராமனுடைய திவ்ய சரணாரவிந்தங்களை அலம்பும் வியாஜமாகப் பிடித்து சந்தோஷமுற்றிருக்கும் அந்த ராஜ தம்பதிகள் ப்ரேமைக் கடலில் மூழ்கினவர்களாகவும், வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத பேரானந்தத்தை அடைந்தவர்களாக சரீரமெல்லாம் புளகாங்கிதமடைந்தார்கள். (பிராட்டியின் கருணையால் புருஷகாரம் செய்த சேதனர்கள் இன்று நாம் வேண்டுவது, இதுமட்டுமல்ல, காலமுள்ளவரையும் எங்களுக்கு வாய்க்கும் எல்லா பிறப்புக்களிலும், உம்மோடு உறவு கொண்டவர்களாக விருப்போம், நாங்கள் உமக்கே அடிமை செய்யக் கடவோம், ஆகிய இத்தகைய விருப்பங்களுக்கு மாறான வேறு விருப்பங்கள் எங்களுக்கு உண்டாகாதபடி தடுத்தாட்கொள்ளல் வேண்டும்; கோவிந்தா, எங்களுடைய கைங்கர்ய மனோபிஷ்டங்களை, ஹே ஸ்வாமி அங்கீகாரம் பண்ணாமல் தகாது என்று கெஞ்சிக் கேட்பவர்களாக விளங்கினார்கள்.) அப்போது மதுர கீதங்களும், துந்துபி போன்ற மங்களவாத்திய இசைகளும் அமோகமாக ஆகாயத்திலும் பூமியிலும் கேட்கப்பட்டன. எந்த விமலனுடைய பாதங்களை ஸ்பர்சித்த மாத்திரத்தில், கௌதமருடைய பத்னியான அஹல்யை தோஷங்கள் நீங்கி ஸ்ரீவைஷ்ணவர்கள் விரும்பும் ஸ்ரீவைகுண்ட கதியை அடைந்தாளோ; எந்த பவித்திரமான சரணகமலங்களை பகவான் சம்பு தனது ஹ்ருதயத்தில் தேக்கி வைத்துக்கொண்டு, மிக்க சாந்தத்துடன் பிரகாசிக்கிறாரோ, ராமனுக்கு அடியார், அவன் அடியார்களுக்கு அடியார் என்று பறைசாற்றுவதுபோல ராஜகம்பீரமாக எவ்விதம் சம்பு விற்றிருக்கிறாரோ; எந்தப் பாதங்களை ஸ்மரிப்பதாலே, கலிகாலத்தின் மலங்கள் நாசமடைந்து, யாவரும் பரிசுத்தமாக்கப்படுகிறார்களோ, எந்த பரமாத்மாவாகிய நாராயணன் தமக்கு மேலான ஓர் ஆத்மா இல்லாத ஸர்வேஸ்வரர், தேவமுனியோகிகணங்களால் வண்டு ரூபமாக வலம் செய்து வணங்கப்பட்டு, பெரிய பிராட்டியாகிய சீதையின் ஸ்வயம்வரம் செய்யும்படியிருப்பதினால், தமது பரமேஸ்வர சக்திக்கு தாமே பயன்பட்டிருப்பவர், அப்பேற்பட்ட மஹாத்மாவின் சரணகமலங்களை இடைவிடாது தியானிப்பதால், கலிகாலத்தின் பாபங்களும் தோஷங்களும் விலகி மனோவாஞ்சிதமான கதிகளை ஸகலர்களும் அடைகிறார்களோ, அப்பேற்பட்ட மிகச் சிறந்த பாக்ய முள்ள ஸ்ரீராமனுடைய பாதாரவிந்தங்களை,

(பரம ஐஸ்வரிய லக்ஷ்மி பொருந்தினவரும், மஹாலக்ஷ்மியாகிய சீதையால் பூர்ணகடாக்ஷம் பெற்ற ஸ்ரீமதாம்வரரான] ஜனக மஹாராஜர் அலம்பி நெற்றியிலும், மார்பிலும், தேகத்தின் பல பாகங்களிலும் அந்த ரேணுக்களை தரித்துக்கொண்டார். அந்த பேரானந்த சுகத்தைக் கண்டு தேவமுனி, மானிடர்கள், ஸகல சராசரங்களும் ஜய ஜய சப்தங்களுடன் பகவானையும், பாகவத ஸ்ரேஷ்டர்களான ஜனகராஜ தம்பதிகளை ஆசீர்வதித்தார்கள். (1729)

[தியானம்

ஹே சீதாராமா, தியாகாரஜர் துளசிதாஸர் போன்ற மஹான்களால் ஆஸ்ரயிக்கப்பட்ட ஈஸ்வரரே, சீதை அசோக வனத்தில் தனியாகவிருந்த, சமயம் சொன்னபடி உன்னை தர்சனம் செய்த தேவயக்ஷ, கந்தர்வ, உரகர்கள், மானிடர்கள் யாவரும் மஹா புண்ணியசாலிகள். அரவிந்த நேத்ரரே, புஷ்கராக்ஷரே, நீலக்குன்றுபோல பிரகாசிக்கும் ஸ்யாமளவர்ண, பத்மகந்தினியும் உன் பர்யங்காஸனத்தில் வீற்றிருப்பவளும் கருணையே உருவு எடுத்தவளுமான ஜனக நந்தினியினுடைய பாதங்களில் நமஸ்கரிக்கிறேன். கோதண்டம் என்கிற சாரங்கம் தனுஷ்ஷை வைத்துக்கொண்டிருக்கும் தந்வி, மேதாவியான ஸர்வக்ஞரே, வேதமூர்த்தியான கருடனை வாஹனமாகவும், கொடியாகவும் உள்ளவரே, ஸ்ரேஷ்டரே, ஸர்வசக்தியுள்ள விக்ரமரே, உன்னையே நான் நம்பி தர்மம் என்கிற பரதர்மத்தைச் செய்துகொண்டிருக்கிறேன். ஜயமாலையுடன் வருபவளும் காகாசுரன் வந்துபார்த்த சமயம் ராமனுடன் சரஸ ஸல்லாபங்கள் செய்தவளும், எந்த பாக்யவதிக்காக சேதுவை அணை கட்டினயோ, அப்பேற்பட்ட நீ என்னையும் கட்டிக் காக்க வேண்டும். தசரதரையும், ஜனகரையும் போல மிக்க பாக்யவான்களும், கௌசல்யை சுநயனவைப்போல உத்தம பெண்களும் யார் இருக்க முடியும்? கௌஸல்யையின் அழகான ராமா, ஜனகரின் ப்ரிய நந்தினி, என் சுரபியே, ஸர்வஸஹே, என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் கடாக்ஷித்தருள வேண்டும். நர்மதை, ஸரயு, கங்கை ஆகிய அதிபுண்ணிய க்ஷேத்ரங்களில் இருக்கும் ஜாலேஸ்வரரே, உமாதேவியே பத்மநாபரே, எனக்கு அருள் புரியவேண்டும்.]

இரு குலத்தின் குருக்களும், வரனகிய ஸ்ரீராமனையும் கன்னிகையான சீதையையும், கைகளால் சேர்த்துவைத்து,

  

பாணிக்ரஹணம் செய்துவைத்து, வேதசாஸ்திர மந்திரங்களை உச்சரித்தார்கள். ஆதிதம்பதிகள் பாணிக்கிரஹணம் செய்யும் மஹத்தான சேவையைக் கண்டு, பிரும்மாதி தேவர்கள், மனுஷ்யர்கள், முனிகணங்கள் ஆனந்தம் கொண்டார்கள். சுகத்திற்கு மூலகாரணமாகிய ஆதிதம்பதிகள் ஸகலருடைய நன்மைக்காக வதூவரர்களாக மீண்டும் மணவாழ்க்கை நடத்தும் அந்த விவாஹ சமயத்தில், விவாஹ உத்ஸவத்தில் எல்லா ஜனங்களும் ராஜதம்பதிகளும் அப்பேற்பட்ட காக்ஷியைக் கண்டுகொண்டு சரீரம் புளகாங்கிதமடைந்தவர்களாகவும், ஹ்ருதயம் ஆனந்தத்தினால் பொங்குவதாகவும் இருந்தார்கள். ராஜாக்களின் சமூகத்திற்கே அலங்கார பூஷணமாக விளங்கும் ஜனக மஹாராஜர் லோக ரீதியாகவும், வேதங்களில் சொல்லப்பட்ட கர்மாக்களின் ரீதிப்படியும் சீதையை ஸ்ரீராமனுக்கு கன்யாதானம் செய்து வைத்தார். (1730)

எவ்விதம் ஹிமவானும் மைனாதேவியும் பார்வதியின் பரிணயத்தைச் செய்தார்களோ, எவ்விதம் க்ஷீரசமுத்திர ராஜன் மஹாலக்ஷ்மியை பகவான் விஷ்ணுவுக்கு பாணிக்ரஹணம் செய்துவைத்தாரோ, அதுமாதிரி ஜனகமஹாராஜர் சீதாதேவியை ஸ்ரீராமனுக்கு சமர்ப்பித்து பாணிக்ரஹணம் செய்துவைத்தார். அப்பேற்பட்ட காரிய விசேஷத்தால் அவர்கள் விஸ்வம் முழுவதும், நவீனமும், என்றும் மாருததும் புதியதும், மங்காததுமான கீர்த்திப்பிரபாவங்களை அடைந்தார்கள். விதேஹ மஹாராஜனான ஜனகர் ஸ்ரீராமசீதா தம்பதிகளை மிக்க வினயத்துடன் பூஜித்தார். ஸ்ரீராமனுடைய ஸ்யாமநிறமுள்ள மூர்த்தி வாஸ்தவமாகவே விதேக மஹாராஜனை "விதேஹ" மயமாய் ஆக்கி, உணர்ச்சி இழந்து பரவசமடைந்த ஆத்ம ஸ்வரூபமாகவும், ஸ்வயம் பிரகாசமுள்ள ஆனந்த மூர்த்தியாகவும் ஆக்கிவிட்டது. விதிபூர்வமாக செய்யப்பட்ட ஹவனங்களும் அதற்குப்பின் மாங்கல்யதாரணமும் வஸ்திரமுடிச்சுக்களால் இருவர்களும் சேர்ந்து அணைக்கப்பட்டு, அதன்பின்பு சீதாராமன் அக்னியை வலம்வந்து, (அம்மிமிதித்து இன்னும் இதுபோன்ற வைதிக சடங்குகளும் ஒன்றும் விடாமல்), செய்துமுடித்தார். எல்லாம் சுபமாக நடந்தேறின. (1731)

ஜயத்வனிகள், வேதகோஷங்கள், வந்திஸ்துதிகள், மங்கள கீதங்கள், வாத்தியங்களின் இன்னிசைகள் எங்கு பார்த்தாலும் கேட்கப்பட்டன. தேவகணங்கள் மிக்க ஆனந்தம் அடைந்து, கல்பக விருக்ஷத்தின் புஷ்பங்களை அந்த நித்யதம்பதிகளின் மீதுவீசிப் பொழிந்தார்கள். (1732)

வரனுகிய ஸ்ரீராமன் கன்னிகையான ஸ்ரீ சீதாதேவி ஆகிய இருவர்களும் தங்களுடைய குஞ்சரமான பாதங்களால் அக்னியை வலம்வந்தார்கள். அப்பேற்பட்ட மஹத்தான காக்ஷியைக் கண்ட மஹான்களாகிற ஸகலரும் தங்களை க்ருதபுண்யர்களாக நினைத்து தங்கள் நேத்ரங்களின் பரமலாபமான கல்யாண ராமசீதாவை தர்சனம் பண்ணி ஸந்துஷ்டியை அடைந்தார்கள். அந்த கல்யாண தம்பதிகள் மனோஹரமான ஜோடி. அவர்களுக்கு சமமாக உபமானம் சொல்லி எப்படி வர்ணிக்க முடியும்? எந்த உபமானமும் அதிமிகச் சிறியதாகத்தானே இருக்கும்! ஸ்ரீராம னுடைய அழகிய உருவமும் திரிலோக சுந்தரியாகிய சீதையின் எழில்மிக்க உருவமும், அவ்விரு உருவங்களை ஏற்க ஜகத்தை மயக்க மணிமயமுத்து பச்சை, சிகப்பு, நீலம் ஆகிய விலைமதிக்க முடியாத ஆபரணங்களின் பிரபையினுல் அந்த பளிங்கு மண்டபத்தின் கண்ணுடிபோலவிருக்கும் கம்பங்களிலும் தூண் களிலும், சுவர்களிலும், அவர்களுடைய சாயைகள் தோன்றின. எங்கு பார்த்தாலும் ராமசீதா உருவங்கள் தோன்றின. காம தேவனும் ரதியும் கரும்பும் வில்லுடனும் புஷ்ப பாணங்களுடன் பல ரூபங்களைத் தரித்துக்கொண்டு அநேகவிதமாக, அநேக தடவைகள் பல கோணங்களால் அனுபமமான (உபமான மில்லாத) சீதாராம விவாஹத்தைப் பார்ப்பது போலத் தோன்றி னுர்கள். துளசிதாஸர் சொல்லுகிருர், "அந்த மன்மதனுக் கும் ரதிக்கும் சீதாராமர்களைப் பார்க்க பார்க்க மிக்க ஆசை. ஆனுல் ஸங்கோசத்தினுலும் வெட்கத்தினுலும் அடிக்கடி அவர்கள் தோன்றியும், சீக்கிரமாகவும் மறைந்துகொண்டுமிருந்தார்கள்" யார் யார் அவர்களைப் பார்த்தார்களோ அவர்கள் ஆனந்தமயமாக விளங்கினுர்கள். ஜனகமஹாராஜர் எவ்விதம் சந்தோஷமடைந் தாரோ, அவ்விதமே எல்லோரும் தங்கள் நிலைமையை மறந்து சந்தோஷம் அடைந்தார்கள். (1733)

ஆனந்தமடைந்த முனி ஸ்ரேஷ்டர்கள் ஏழு நாவுள்ள அக்னியை முகமாகக்கொண்டு எல்லாத் தேவதைகளையும் குறித்து ஹோமம்செய்து, ஹவிஸ்ஸுகளை அவர்களைப் பூஜிக்கச்செய்து அதன்பிறகு மிக்க பரிசுத்தமான அக்னியை வலம்வரச் செய்யச் சொன்னுர்கள். ஒவ்வாரு வெகுமதியையும் மரியாதையையும் ஸப்தைதஸ் என்கிற அக்னிக்குச் செய்யவேண்டிய உபசாரங்களை யும், வேதத்தில் சொல்லியபடி குறைவில்லாமல் எல்லாச் சடங்கு களையும் ஸ்ரீராமன் மூலம் செய்துவைத்தார்கள். ஸ்ரீராமன் சீதையின் தலையில் மஞ்சள் குங்குமம் சாற்றி, அவளை மோந்து

  

பார்த்து, (முத்தமிட்டு), உச்சிமுகந்து ஸ்வீகரிப்பது போலத் தோன்றினர். இந்த சோபை நிறைந்த காக்ஷியை எந்தவிதம் வர்ணிப்பது என்று எனக்குத் தெரியவில்லை. (1734)

ரோஹிதமான சிகப்புதுளிகள் ஸஹஸ்ரதளமுள்ள தாமரை புஷ்பத்தின் உள்ளே இருந்து அலங்கரிப்பது போல, சிகப்பு நிறமான குங்குமமும் ஸ்ரீராமனுடைய திருக்கரங்களை சிறப் பித்தது. அந்த ஜகன்மோகினியான சீதையின் அழகைப் பருக வாயின் அம்ருதத்தைப் புஜிக்க, ஸ்ரீராமனுல் தீர்க்கமாக நீட்டப் பட்ட திவ்யகரங்கள் சீதையினுடைய திவ்ய வதனத்தை அடைந்து சோபையுடன் விளங்கச் செய்தன. அந்த குங்கும துளிகளால் நிரம்பப்பட்ட ராமனுடைய கர அஞ்சலிகள் அம்ருதத்தைப் பருக ஆசைகொண்ட தீர்க்கமான ஸர்ப்பங்கள் சந்திரனை அணுகி அழகுசெய்வது போலவிருந்தன. (இந்த இடத்தில் கவி ஸ்ரீராமனின் கைகளை தாமரை புஷ்பங்களுக்கும் குங்குமப் பொடிகளை தாமரையின் உட்புறத்திலுள்ள சிகப்பு நிறங்களுக்கும், ஸ்ரீராமனுடைய சியாமநிறமுள்ள தீர்க்க பாஹுக் களை நீண்ட கருநாகத்திற்கும், சீதையின் முகத்தை சந்திர னுக்கும் உபமானங்களாக செய்திருக்கிறுர்.) வஸிஸ்டரின் ஆக்ஞையின் பேரில் ஸ்ரீராமனுகிய மாப்பிள்ளையும் சீதையாகிய கல்யாணப் பெண்ணும் ஒரு ஆசனத்தின்மீது உட்கார்ந்தார்கள். (1735)

அந்த உத்தமமான ஆஸனத்தின்மீது உட்கார்ந்த ஸ்ரீராமனை யும், ஜானகியையும் கண்டு தசரதரின் மனம் பஹுத் (மிக்க) ஆனந்தத்தினுல் சந்தோஷித்தது. தன்னுடைய பூர்வஜன்மங் களினுல் ஸுக்ருத புண்ணியங்களாகிய கல்பக விருக்ஷத்தில் புதியதாகத் தோன்றிய அழகான பழத்தை நினைத்து, அழகான ராஜலக்ஷ்மியைப் பார்த்து, சரீரம் புளகாங்கிதமடைந்தார். அடிக்கடி சந்தோஷத்தினுல் புளகாங்கிதமடைந்தார். பதினுன்கு லோகங்களிலும் உத்ஸாஹங்கள் நிரம்பி பொங்கிவழிந்தன. எல்லா சராசரங்களும் சேர்ந்து சொன்னுர்கள், "ஸ்ரீராமச்சந்திர னுடைய விவாஹமஹோத்ஸவம் இனிதாக நடந்தேறியது." "நாக்கு ஒன்றுதான் இருக்கிறது. இந்த மங்களகரமான விவா ஹம் மிக்கப் பெரியது. அதைக் கேட்பதாலும், நினைப்பதாலும் மிகுந்த பலன்களைக் கொடுக்கக் கூடியது. அப்பேற்பட்ட மஹத் தான விவாஹத்தை யார் வர்ணித்தபோதிலும், அந்தபிரகாரம் பூர்ணமாக வர்ணனைசெய்து முடிவை அடையமுடியுமா? அப் பேற்பட்ட அதிக ஆச்சரியமுள்ளதும், மங்களங்களைக் கொடுக்

கக் கூடியதுமான ஸ்ரீராமசீதா விவாஹத்தை நான் எவ்விதம் ஒரு நாக்கிஞல் வர்ணிக்க முடியும்?'' (1736)

[தியானம்

ஹே நாராயணு, சீதாராமா, ஸ்ரீதரரே, மணிக்கு ஒளி போலவும் மலருக்கு மணம்போலவும், மதிக்கு நிலவுபோலவும், அம்ருதத்துக்கு சுவைபோலவும் இயற்கையாக உள்ள ஸம்பந்தத்திஞல் எப்போதும் லக்ஷ்மியுடன் சேர்ந்திருப்பவரே, உலக மாதாவான சீதையைவிட்டுப் பிரியேன் என்று சத்தியவாக்கு கொடுத்தவரே, குணப்ருத் என்று சொல்லும்படி எல்லா பொருள்களையும் தமது குணத்தால் தாங்குபவரே, ஈசித்வம் என்னும் என்றும் அழியாத ஐஸ்வர்யம் உடையவரே, ஸாது ஜனங்களின் பரிஜாதமே, ஹேஸ்வாமி, துக்கங்களையும் பயங்களையும் போக்கும் கேசவரே, சீதையிடம் கொண்ட அன்பிஞல் காமி என்றும், பக்தர்களுக்கு சிறந்த பொருள்களைக் கொடுக்கும் மஹாத்மா என்று சொல்லப்படுகிறவரே, தயிர் வெண்ணெய் திருடியது, உரலில் கட்டப்படுவ்து, ராஸகிரீடை செய்தது, சேது அணையைக் கட்டியது, ஸப்த சாலமரங்களை ஒரே பாணத்திஞல் வீழ்த்தியது, ஜடாயுவுக்கு ஸம்ஸ்காரம் செய்துவைத்தது, சபரி போன்றவர்களையும், குஹனையும், வானரர்களையும் அங்கீகரித்து ஸந்தோஷமடையச் செய்த ஸத்க்ருதரே, எல்லா மகிமைகள் கொண்டும், பொற் புதையல்போல விளங்கியும், தம்மைத் தாமே வெளிப்படுத்திக்கொள்ளும் ஸம்பவரே, ஸமர் என்று எல்லோருக்கும் பாரபக்ஷமின்றி பிரியமாயுள்ள காரணத்திஞல், அழைக்கப்படுகிறவரே, ஸ்வாமி, ஸாதுவான என்னையும் தியாகராஜ, துளசிதாஸர், வால்மீகி, நாரதர் போன்ற மஹாத்மாக்களைக் கடாக்ஷித்தது போல நீர்தான் ரக்ஷிக்கவேண்டும். என் குடும்பத்தையும் ரக்ஷிக்கவேண்டும்.]

அந்த ஸமயம் வஸிஸ்டரின் ஆக்ஞையின்பேரில் ஜனகர் விவாஹத்திற்கு வேண்டிய சாமான்களை தரவழைத்து, மாண்டவி, ஸ்ருதகீர்த்தி, ஊர்மிளை ஆகிய மூன்று ராஜகுமாரிகளை அழைத்து அனுப்பிஞர். ஜனகரின் தம்பியான குசகேதுவின் மூத்தபெண் மாண்டவி குணத்திலும், சீலத்திலும், சுகம் தருவதிலும், அழகிலும் மிக்க உத்தமியாகவிருந்தாள், அவளை ப்ரேமை பூர்வமாக வேதங்களில் சொல்லிய கர்மாக்களின்படி ஜனகர் பரதனுக்கு விவாஹம் செய்துவைத்தார். (1737)

  

அந்த நல்லவேளையில், ஜானகியின் தங்கை ஊர்மிளை ஸகல சுந்தரிகளிலும் நாரிமணியாக சிறந்து விளங்கினாள். அவளை அந்த சுபமான முகூர்த்தத்தில் விதிப்படி செய்யப்பட்ட விவாஹ சடங்குகளுடன் லக்ஷ்மணனுக்கு விவாஹம் செய்துவைத்தார். ஸ்ருதகீர்த்தி அழகான நேத்ரங்களுடன்கூடிய அழகிய முகம் உள்ளவள். ஸகல மங்கள குணங்களுக்கும் இருப்பிடமாக விருந்தாள். அவளை ஜனகராஜர் சத்ருக்னனுக்கு விவாஹம் செய்துவைத்தார். (1738)

இவ்விதமாக கலயாண மஹோத்ஸவங்கள் நடைபெற்றன. கல்யாண தம்பதிகள் பரஸ்பரம் உத்தமஜோடிகளாக விளங்கினார்கள். ஒவ்வொரு ஜோடியும் மற்ற ஜோடியைப் பார்த்து, பரஸ்பரம் சந்தோஷமடைந்தார்கள். சகல ஜனங்களும் பிரஸன்னமடைந்து அவர்களுடைய அழகு லாவண்யங்களையும் குணங்களையும் புகழ்ந்தார்கள். தேவகணங்கள் புஷ்பங்களை வாரி இறைத்தார்கள். ஸகல விதத்திலும் அழகான அந்த நான்கு ஜோடி தம்பதிகள் ஒருங்கே அந்த கல்யாண மண்டபத்தில் வீற்றிருக்கும்போது ஸித்தி அடைந்த ஜீவாத்மாவின் ஹ்ருதயத்தில் ஜாக்ரதி (முழிப்புடனிருக்கும் அவஸ்தையில் ஏற்படும் அனுபவம்) ஸ்வப்ன (தூங்கும் சமயம் ஏற்படும் அனுபவம்) ஸுக்ஷுப்தி (நினைவு இல்லாத தூக்கம்) துரியாவஸ்தை (ஸ்வயம் பிரகாசமுள்ள ஆத்மஞான நினைவுபோதம்) ஆகிய நான்கு விதமான அவஸ்தைகள் தங்கள் ஸ்வாமிகளான விஸ்வ, தேஜோமய, பிராக்ஞ, பிரும்ம என்கிற நான்கு நிலைமைகளில் ஏற்படும் அனுபவ ஆனந்தங்கள் ஒருங்கே சேர்ந்து பிரகாசிப்பதுபோல விளங்கினர். (1739)

அயோத்யாபுரி மன்னனாகிய தசரதர் தன்னுடைய நான்கு புத்ரர்களையும் அவர்களின் பத்னிமார்களையும் கண்டு மிக்க ஆனந்தமடைந்தார். ராஜகுலங்களிலேயே சிரோன்மணியாக விளங்கும் அந்த தசரதர் தன்னுடைய யக்ஞகர்மங்கள், சிரத்தையுடனும் நம்பிக்கையுடனும் செய்யப்பட்டதான தர்மகர்மாக்கள், தபஸ், அஹிம்சை, சீலம், தமம் ஆகியவைகளால் செய்த யோக கர்மாக்கள், ஆத்மஞானமாகிய பரபக்தி, பரஞானம் பரமபக்தி, இவைகளின் பரிபூர்ணம் ஆகிய ஞானச் செயல்களுக்கு நான்கு வித புருஷார்த்தங்களாகிற அர்த்ததர்ம காமமோக்ஷம் என்கிற பெரும்பயன்கள் கிடைத்ததுபோல ஆனந்தமடைந்தார். (1740)

ஸ்ரீராமச்சந்திரனுக்கு எந்த தர்மவிதிப்படி விவாஹம் செய்யப்பட்டதோ, அதே தர்மரீதியின் பிரகாரம் நான்கு ராஜகுமாரர்

களுக்கும் விவாஹங்கள் நடந்தன. சீர் சிறப்புக்கள் ஒன்றுக்கும் குறைவில்லாதபடி அதேபோல விமரிசையாக வைக்கப்பட்டிருந்தன. மண்டபம் முழுவதிலும் தங்கமும் ரத்னமணிகளும் வைக்கப்பட்டிருந்தன. (1741)

அநேகவிதமான கம்பளங்கள், பட்டுபீதாம்பரங்கள், விலை மதிக்கமுடியாததும், விசித்திரமானதுமான வெகுமதிகள், அதே மாதிரி, யானைகள், ரதங்கள், குதிரைகள், வேலைக்காரர்கள், வேலைக்காரிகள், அலங்காரம் பண்ணப்பட்டும், காமதேனுவைப் போல சகலவிதங்களிலும் சிறந்து விளங்கும் தேனுக்கள் எல்லாம் அளவுக்குமீறி கொடுக்கப்பட்டன. (1742)

அநேக வஸ்துக்கள் வெகுமதிகளாகவும் சீராகவும் கொடுக்கப்பட்டன. அவைகளை யார் கணக்குப்பார்த்தார்கள்? அவைகளை யாரால்தான் பூர்ணமாக வர்ணிக்கக்கூடும்? அவைகளைப் பார்த்தால்தான் ஒருவேளை நான் சொல்லுவதை நம்பக்கூடும். அவைகளைக் கண்ட லோகபாலர்கள் ஆச்சரியப்பட்டு, பொறுமைகூட கொண்டார்கள் என்று சொல்லலாம். அயோத்யாபுரி மன்னர் தசரதர் எல்லா சீர்சிறப்புக்களை அங்கீகரித்துக்கொண்டு மிக்க பிரஸன்ன மனத்துடன் விளங்கினார். (1743)

பிறகு அவைகளை யார்யார் எதை வேண்டினார்களோ அவைகளை அவர் தானமாகக் கொடுத்தார். மீந்துபோன வஸ்துக்களை தன்னுடைய தங்குமிடத்திற்கு கொண்டுபோய் சேர்த்தார். அந்த சமயத்தில் ஜனகமஹாராஜர் அஞ்சலி பந்தமாகவும் மிக்க ஜாக்ரதையுடனும் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களை தகுதியாக ஸம்மானித்து கோமளமான வசனங்களால் எல்லோரையும் நமஸ்கரித்து, ஒவ்வொருவருடைய ஆசீர்வாதங்களையும் நன்மதிப்பையும் பெற்றுக்கொண்டார். (1744)

மிக்க மரியாதையுடனும், ஜனகமஹாராஜரால் உயர்ந்த பொருள்களை தானம் செய்யும்போது மிக்க வினயத்துடனும் புகழ்ச்சியுடனும், பிரேமை, க்ருதிக்ஞையுடனும் ஸம்மானம் செய்யப்பட்ட பிராம்மணர்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு, க்ருதக்ஞர்களாக ஜனகராஜாவைப் பூஜித்து, பிரேமையுடன் வந்தனம் செய்தார்கள். பிறகு மிதிலை அரசர் அவர்களை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, தேவதைகளை நமஸ்கரிப்பது போல, அஞ்சலி பந்தத்துடன் பிரேமை நிறைந்த வசனங்களை அரசர் சொல்ல ஆரம்பித்தார். ''தேவதைகளும், ஸாதுக்களும் பிரேமையுடன் கலந்த ஹ்ருதயத்தையும், மதுரமான பாவத்தையும், பரிசுத்த ஸ்வரூபத்தையும் அல்லவோ விரும்புகிறார்கள்.

பரிபூர்ண காமர்களாகிற மஹானுபாவர்கள் தங்களுடைய உதார ஹ்ருதயத்தினால் எளியவர்களையும், கொஞ்சமாகக் கொடுக்கப்பட்டிருந்தாலும் கூட, தங்களுடைய மனோபாவத்தினால் ஸந்துஷ்டியுடன் ஸ்வீகரித்துக் கொள்கிறார்கள்.'' ஒரு அஞ்சலி ஜலத்தினால் சமுத்திரம் எவ்விதம் ஸந்துஷ்டியாக்கப் படுமோ, அது போல அல்லவா அந்த காக்ஷிவிருந்தது. (1745)

[தியானம்

ஸ்ரீமாதவரே, சீதாபதி, ஐந்து இந்திரியங்களை தனுஷ்ஷாகக் கொண்ட ஸுதன்வா, தானே ஜனகரின் கிரஹத்திற்கு எழுந்தருளிய ஸ்வயம்ஜாதரே, தேவர்களால் பூஜிக்கப்படுகிறவரும், அதனால் அவர்களை நல்வழியில் திருத்தியவரும், சதருத்ரீயம் போன்றவைகளால் திருப்தி செய்யப்படும் மஹாதேவரின் பிரியமான தெய்வமே,தேகத்தின் ஐந்து இந்திரியங்களின் நடவடிக்கைகளை ஸ்வார்த்தமாகச் செய்யாமல் தன்னுடைய சகல அனுபவங்களையும், ஐஸ்வர்யங்களையும், தேவ பித்ரு ஸர்வபூத பிராம்மண ஹிதார்த்தம், வாழ்ந்த ஜனகமஹாராஜரின் ஜாமாதாவே, ஜனகரின் ஜிக்ஞாசத்தை வியந்த பிராம்மண ரூபியாக வந்த தர்மதேவதையே, விதேஹராஜனின் மணம் பொருந்திய மலராகிய சீதையைக் கைப்பிடித்தவனே, ஜனகரிடமும் காண்பித்த அன்பையும் ஜனகருக்கு அருளிய பெரும் ஞானமாகிய விஷயப் பற்றுதல்களிலிருந்து விடுதலை எனப்படும் ஸ்ரீமதாம்வரரான உன்னை நான் சதா ஆஸ்ரயம் செய்யவேண்டும். ஹே வேதவித், வேதங்களில் சொல்லப்பட்ட அனுஷ்டானங்களை தமது ஆராதனமாகக் கொள்பவரே, தர்மங்களை விளங்கச் செய்பவரே, நடத்துகிறவரே, பரகதியை அடைவதற்காக தர்மத்தைக் கருவியாக உடைய அப்யுபாயம் என்கிற சங்கர்ஷணரே, நல்ல வழிகளில் ஆத்மாவை அழைத்துச் செல்பவரே, பிராம்மணரே, ஆசார்யரே, வேதரே, அளவற்ற பெரிய விபவங்களைச் செய்யும் வேதஸ்ஸே, ஜனகரை முன்னிட்டும் ஜானகியை முன்னிட்டும் உம்மை ஆராதித்து நமஸ்கரித்து, சந்தோஷப்படுத்துகிறேன். சரீரத்தினால் ஆத்மா அறியப்படுவதுபோல, வேதத்தினால் அறியப்படும் வேதாங்கரே, என்னிடம் கிருபையுடன் இருக்கவேண்டும்.]

பிறகு ஜனகமஹாராஜர் தன் சகோதரன்கூடச் சேர்ந்து கைகளை அஞ்சலி செய்துகொண்டு, கோஸல ராஜரான தசரதரைப் புகழ்ந்து அவருடைய ஸ்நேகத்தினால் ஏற்பட்ட நன்மைகளையும் சீலமான நடத்தைகளையும் அழகான தபஸ்,

கல்வி, செல்வம், முயற்சி இவைகளால் சம்பாதிக்கப்பட்ட அழகான ஜிக்ஞாசங்களையும், பிரேமையுடன் கலந்த அன்பினால் கவரப்பட்டவராகி, மனோஹரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். "ராஜன், தங்களுடன்கூட ஸம்பந்தம் செய்வதால் நாங்கள் அதிக தன்யர்களாகவும் பெரும் பாக்யம் கொண்டவர்களாகவும் ஆனோம். எங்களை தாங்கள் தாஸர்களாகவும் உங்கள் மனோவிருப்பம் போல நடப்பவர்களாகவும் கருத வேண்டும். எங்களுடைய ராஜ ஐஸ்வர்யங்கள் ஒருவித பிரதி உபகாரமின்றி உங்களுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கின்றன." (1746)

"இந்த மருமகளாகிற பெண் குழந்தைகளை உங்கள் வீட்டுப் பெண்களாக நினைத்து, புதிய யௌவனம்கொண்டு விளங்கும் சிறு பெண்களாகவும், மாறாத தயையுடனும் இவர்களைப் போஷிக்க வேண்டும். நாங்கள் தங்களை இவ்விதமாக அழைத்து சிரமம் கொடுத்ததற்கு மன்னிக்கவேண்டும். ஏதாவது தவறு தங்களுக்கு நேர்ந்திருந்த போதிலும், எங்களால் செய்யப்பட்ட அபராதங்களைப் பொறுத்தருள வேண்டும். என்னிடமும் இவர்களிடமும் கருணைகாட்டவேண்டும்." என்று வேண்டிக் கொண்டார். (1747)

அதன் பிறகு பானுகுல பூஷணரான தசரதர் தன் ஸம்பந்தியாகிய ஜனகரை எல்லாவித உயர்ந்த மனோபாவனைகளாலும், பெரும் திரவியங்களாலும் பண்பாகச் செய்யப்பட்ட விதிகளாலும் பூஜித்தார். இவ்விதமாய் பரஸ்பர ஸம்பந்தம் செய்து கொண்ட அந்த இரு உத்தமர்களின் ஹ்ருதயங்களில் பிரேமை பரிபூர்ணமாக விளங்கிற்று. (1748)

தேவகணங்கள் புஷ்பங்களை வர்ஷித்தார்கள். தசரதர் தன் சொந்த மாளிகைக்குத் திரும்பினார். வாத்திய இசைகள் ஜய த்வனிகள், வேதகோஷங்கள் எங்கு பார்த்தாலும் கேட்கப்பட்டன. ஆகாயத்திலோ, மிதிலா நகரிலோ எங்கு பார்த்தாலும் கோலாஹலமாக சப்தங்கள் கேட்கப்பட்டன. முனிஸ்ரேஷ்டர்களின் உத்திரவைப் பெற்ற அழகான ஸ்திரீகள் மங்கள கீதங்களுடன் மாப்பிள்ளைகளையும் மணப்பெண்களையும் ஏகாந்த (படுக்கை) அறைக்கு, அவர்கள் ஒருவருக்கொருவர் நெருங்கி சந்திப்பதற்கும் குலதெய்வத்தை வழிபடுவதற்கும் எழுந்தருளப் பண்ணினார்கள். (1749)

[தியானம்

ஹே கமலபுஷ்பத்தை தரித்துக்கொண்டு ராமனின் மடியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் சீதாதேவி, பத்மினி, பத்மகந்தினி, புண்யகந்தினி, நாராயண ஆஸ்ரிதா, சரணம். ராமா, அவளிடம் நீ சேர்ந்ததினால் அல்லவோ சரோஜ தளநேத்ரஞன ராமன் சரோஜ ஹ்ருதயம் உள்ளவனாக ஆனாய்? ஜயலக்ஷ்மியுடன் கூடின ராமன் துராமர்ஷணர் என்கிற பெயரினால் பகைவரால் தாங்க முடியாதவர் என்கிற பெயரும் பெற்றார். ஜனகரின் மகளே, சாஸ்தா என்கிற பெயருடன் வேதங்களால் அறியப்படுகிறவளே, ஸுஹ்ருதுக்களின் விரோதிகளை அழிப்பவளே, ஸ்ரீரங்கதாமேஸ்வரி, லக்ஷ்மி என்கிற காரணமாகிய அகஸ்மாத்தாக உன் திருஷ்டி பட்ட மாத்திரத்தினால் சகல செழிப்புகளும் ஐஸ்வர்யங்களையும் கொடுப்பவளே, யாவராலும் வியந்துகேட்கும்படி திவ்ய மானிட சரீரத்தை உடைய விஸ்ருதாத்மா, வேதங்களில் விசேஷமாக உரைக்கப்பட்ட ஸத்யம், ஞானம் முதலிய இலக்கணங்களுக்கு பொருளாக இருப்பவளே, பிராணன் என்கிற ஸ என்ற எழுத்து த் என்கிற அன்னமும், யம் என்கிற ஆதித்யராகவும் விளங்கும் ஸத்யரான பகவானுக்கு கருணை என்கிற மழையைப் பொழிவிக்கிறவளே, உங்கள் இருவர்களையும் லக்ஷ்மணனாகிய ஆசாரியருடைய உதவியால் சரபங்கர், தேவபிரும்ம லோகபாக்யத்தை தியாஜ்யம் செய்துவிட்டு, உங்கள் மூவரையும் பிரிய அதிதிகளாக வரவேற்று உங்கள் கிருபையால் கிடைத்த ஸர்வஸ்ரேஷ்டமான பதத்தை அடையவில்லையா? என் ஆசார்யரான தியாகராஜரால் உன் கிருபையின்றி கர்ம வாஸனைகள் எவ்வளவு படித்த மேதாவியாகவிருந்த போதிலும், போவதில்லை என்று சொல்லி உன் கருணையை வேண்டவில்லையா? விபீஷணன் எவ்வளவு சிறந்த பக்தனானாலும் ஸ்ரீரங்க விமானத்தை லங்கைக்கு எடுத்துச்செல்ல முடிந்ததா? ஸர்வ ஜனங்களுக்கும் ஆகாரம்போல பிரியமாக என்னிடம் ஜனகஜா ஸமேதஞன ராம, நீ இருப்பாயா? என் ஆசார்யர்களின் கிருபை கிடைக்குமா? சிவசக்தி ஐக்யஸ்வரூபத்தின் சிறந்த கருணை எனக்கு சதா கிடைக்குமா? பஞ்சசயனம் என்கிற அழகு, குளிர்ச்சி, வெண்மை, பரிமளம், மென்மை ஆகிற ஐம்பெருங்குணங்கள் பொருந்திய பஞ்சசயனத்தின் மீது ஏறின சீதாராமா, உங்களையே பெரும்தத்வம் என்று நினைக்கும் எனக்கு திருவாய் மலர்ந்து ஒரு வார்த்தை சொல்லக்கூடாதா?]

சீதாதேவி அடிக்கடி ராமனைப் பார்த்து, தனது சித்தமாகிய அன்பை ராமனிடம் ஸமர்ப்பித்தாள். பேச்சுக்கள், சரஸ ஸல்லா

பங்கள் எல்லாம் வெளிவர மறுத்தன. ராமனுடைய திவ்யமங்கள ஸ்வரூபத்தில் மயங்கி வெட்கத்தினல் சீதை ஒதுங்கி நிற்க, மத்ஸ யம்போல கண்களே உடைய சீதையைப் பார்ப்பதற்கு அடிக்கடி ஆவல்கொண்டு சீதையைப் பார்த்திடும் ராமனும் மனோஹரமாக விளங்கினர். அதனல் அவளுடைய ப்ரேமை ராமனிடம் அதிகரித்தது. (1750)

## மாஸபாராயணம்—பதினொன்றும் நிறுத்தம்

ராமனின் ஸ்யாமையான சரீரம், இயற்கையான அழகுடன் பிரகாசிக்கும் சுபமான அங்கங்கள். அவைகளின் சோபைகள் கோடிக்கணக்கான மன்மதர்களே லஜ்ஜைப்படுத்தக் கூடியதாக விளங்கினது. ஸ்ரீராமனுடைய சரீர அழகு, சிவப்பு அரக்குப் பூசிய செந்தாமரை நிறமுள்ள மலர்பாதங்கள், தாமரைக் காடு களில் சிறந்துவிளங்கும் மஹாபத்மம் என்கிற சுகத்தைக் கொடுக்கக் கூடிய ஸஹஸ்ரதளமுள்ள ஒரு பெரிய தாமரைப் பூவைச் சுற்றும் தேனீக்களேப்போல முனிஜனங்கள் தங்கள் மனங்களே அர்ப்பித்து, அந்த சரண கமலங்களில் ஸதா ஆஸ்ர யித்துக் கொண்டிருந்தார்கள். (1751)

துளசிமாலேகளால் அலங்கரிக்கப்பட்டதாயும், பீத வாடை யுள்ள சரீரம் புனிதமானதாகவும், கண்களுக்கும் மனத்திற்கும் சுகத்தைத் தரக்கூடியதாகவுமிருந்தது. அவர் பட்டு பீதாம்பரங் கள் அணிந்துகொண்டிருந்தார். அவை பிராதக்காலத்தில் உதையமாகும் பாலசூர்யனின் ஜோதிகளே அபஹரிக்கக்கூடிய அழகுகள் கொண்டனவைபோல் அவருடைய த்யுதிபெற்ற சரீர காந்திகள் விளங்கின. இடுப்பில் அழகான கிங்கிணி என்கிற அரிஞள். மனோஹரமான கடிஸூத்ரங்கள், அவருடைய விசால மான புஜங்கள். ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு மிகுந்த சோபையுடன் விளங்கின. (1752)

மஞ்சள் நிறமான யக்ஞோபவீதம் ரொம்ப அழகாய் விளங் கியது. அபயஹஸ்தங்களாகிற கரமுத்ரிகா. கைவிரல்களில் அணி யப்பட்ட மோதிரங்கள் சித்தங்களே அபஹரிப்பதாக விளங்கிற்று. விவாஹத்தின் காரணமாக சகலவித ஆபரணங்களேயும் அணிந்து கொண்டிருந்த ஸ்ரீராமச்சந்திரன் சோபாமூர்த்தியாகி விளங்கி ஞர். அகன்ற மார்பு பிரதேசத்திலும், ஹ்ருதயத்திலும் அழகான ஆபரணங்களே அணிந்துகொண்டிருந்தார். (1753)

அவருடைய இடது தோளில் மஞ்சள் நிறமுள்ள கம்பளி ஷால் துப்பட்டா அங்கவஸ்திரமாக போடப்பட்டு ரொம்ப அழகாக

விளங்கிற்று. அதனுடைய வழவழப்பும், மென்மையும், அதன் மடிப்புகளில் வேலை செய்யப்பட்ட மணிகளும் மோதி முத்துக் களும் அழகுடன் பிரகாசித்தன. விரிந்த கமல புஷ்பங்களுக்குச் சமமான நேத்ரங்கள். காதுகளில் மகர குண்டலங்கள். அவருடைய வதனம் சௌந்தர்ய அழகின் பொக்கிஷமாக விருந்தது. (1754)

மிக்க அழகான கண் புருவங்கள். மனோஹரமான மூக்கு. நெற்றியில் ஊர்த்வ புண்டரமாகிய திலகமானது அழகின் சௌந் தர்யங்களை பிரகாசிக்கச்செய்தது. கல்யாணத்திற்காக தனிமுறை யில் செய்யப்பட்ட கிரீடம் மங்களமயமான மோதிமுத்துக்களால், குணமுள்ள ரத்னமணிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவ ருடைய சிரஸில் பிரகாசித்தது. (1755)

அந்த மணிமகுடம் அநேகவிதமாக அழகானதும், விலை மதிக்க முடியாததான மணிமுத்துக்களால் அலங்கரிக்கப்பட்டிருந் தது. அவருடைய சகல அங்கங்களும் சித்தத்தை அபஹரிக்கும் சௌந்தர்யம் படைத்தவைகளாக விளங்கின. அந்த திவ்ய மங் கள ஸ்வரூப விக்ரஹத்தைப் பார்த்த நகரத்திலுள்ள ஸ்திரிகள், தேவ கந்தர்வர்கள் பகவான் ராமச்சந்திரனுக்கு கண் எச்சில் படக்கூடாதென்று புல்லை ஒடித்து, திருஷ்டி கழித்தார்கள். மணி, வஸ்திரங்கள் இவைகளை வெகுமதிகளாகக்கொடுத்து, மங்கள கீதங்கள் பாடினார்கள். தேவதைகள் புஷ்பங்களை வர்ஷித்து ஆசீர்வாதம் செய்தார்கள். ஸூதர்கள், மாகதர்கள் வந்திகள் பக வானுடைய மங்கள கிர்த்திகளைப் பாடினார்கள். (1756)

[தியானம்

சீதாராமா, ராஜசேகரா, ஸ்ரீகரா, ராஜீவாக்ஷா, ராஜவதனா, நிரஞ்சனா, கருணாநிதே நமஸ்காரம். உன்னுடைய மகிமைகளைப் பாடி நாமஜபம் செய்து உன் தரிசனத்தை அடைந்து உனக்காக வாழ்ந்த தியாகராஜருடைய மகிமையை யாரால் வர்ணிக்க முடியும்? ஹே சம்போ, பஞ்சநததரே, உமது மகிமையினாலும் அம்பிகையின் அருளினாலும் தன்னையே அர்ப்பணம் செய்து கொண்ட மஹானான தியாகராஜரை, என் குருநாதரை என் ஸுஹ்ருத்தை நான் நமஸ்கரிக்கிறேன். அவருடைய தயவினால் உனது சேர்க்கையையும், தரிசனத்தையும் அடைய விரும்பு கிறேன். ராஜ தர்பாரில் உனது தர்தசனத்தையும், சீதையின் இடது தோளில் அணைத்துக்கொண்டிருக்கும் உன் கையையும் வலதுகரமாகிய அபயஞான முத்திரையையும், ஆஞ்சநேயர் வருடிக்கொண்டிருக்கும் ஸ்ரீராம பாதங்களையும் அவர் நோக்கிக்

கொண்டிருக்கும் சீதையின் சரணங்களையும், பரதன் லக்ஷ்மணன் சவுரி சாமரம் வீச இன்னும் அநேகர் ராஜமரியாதைகள் செய்து கொண்டிருக்க, சத்ருக்னன் குடைபிடிக்க, தியாகராஜர் உங்கள் மீது ஈடுபட்டு நிற்க, அவரை கடாக்ஷிக்க ராமா, நீ எண்ணம் கொண்டாய். உடனே பரதனை சாமரம் வீசுவதை நிறுத்தச் சொல்லி தியாகராஜரை அழைத்தாயே. அந்த மஹா கிருபையை, குருவாகிய தியாகராஜர் எனக்கு, துளசிதாஸருக்கு ஆஞ்சநேயர் செய்தது போலவும், நாரதர் வால்மீகிக்குச் செய்தது போலவும், அம்பிகை குஹனுக்கு சொல்லியது போலவும், வியாஸர் விநாயகருக்கு சொன்னது போலவும் எனக்கு அருள்செய்ய மாட்டாரா? அகஸ்தியர், விஸ்வாமித்ர சிஷ்யனுன ஸ்ரீராமா, வஸிஷ்டரின் நன் மதிப்பைப்பெற்ற சீதா, நீங்கள் எப்போது எவ்விதம் கருணை காட்டப் போகிறீர்கள்? உங்கள் நினைவில் ஆஹுதி செய்யப்பட்ட என் பக்திக்ருதம் (நெய்) என்னையும் என்னைப்போன்றவர்களையும் கிருதகிருத்யர் களாக செய்யமாட்டாதா? யக்ஞபிரியா, யக்ஞேசா, நீதான் அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

அந்த தனிப்பட்ட அறையில் ஸ்திரிகள் கும்பல் கும்பலாகக் கூடி அத்யந்த பிரேமையுடன் லௌகிக ரீதியுடன் மங்கள கானங்களைப் பாடினுர்கள். பார்வதி தேவியாகிற அன்னபூர்ணு தேவி வரவதூக்களாகிய ஸ்ரீராமசீதாவுக்கு லஹ்ணகளர் என்கிற பால் பாயஸத்தை, திரட்டுப்பாலைக் கொடுத்து, ஒருவருக்கொருவர் கொடுக்கும்படி ஆக்ஞை செய்து, பரஸ்பர அன்பை திறந்து விட்டாள். சாரதாதேவி அந்த மங்கள காரியத்தை சீதைக்கு விளக்கிச் சொன்னுள். கௌரியும் சரஸ்வதியும் சீதைக்கு உப சாரங்கள் செய்வதையும், ஸ்ரீராமச்சந்திரன் அவர்களின் சொற் படி நடக்கும் சீதையின் உபசாரங்களை ஏற்றுக்கொண்டு, பிரேமை வாத்ஸல்யத்துடன் நின்று கொண்டிருந்த சீதாராமனைக் கண்ட ஸ்திரி ஜனங்கள் தங்கள் ஜன்மத்தின் பலனை அன்று அடைந்த தாகவே நினைத்துக் கொண்டார்கள். (1757)

ஜானகி, ஸ்ரீராமனின் அழகை, மஹா பொக்கிஷமாக விளங்கும் மும்மூர்த்தி ஸ்வரூபத்தை நேரில் பார்ப்பவளாகவும், அதையே லஜ்ஜையினுல் குனிந்தபோது தன் கைகளில் அணிந்துகொண்டிருந்த ரத்னமணி வளைகளில் பிரதிபலிக்கும் ராம பிம்பத்தைக் காண்பவளாகவும், அதையே அவள் மௌனமாக ரமித்துக்கொண்டிருந்தவளாகவும் காணப்பட் டாள். அவளுடைய திவ்யமான கைகளும் கண்களும் இந்த

  

ஆனந்த ரஸத்திலிருந்து வியோகமாகிற பிரிவு பயத்தினுல், தன் கைகளையும் திவ்யமான லோசனங்களையும் அவைகளி லிருந்து எடுக்காமல், ரரமனின் அழகு பிம்பத்தையே நேரிலும் கைளிலும் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்த சமயத்தில் கேலிப்பேச்சுகளினுல் ஏற்பட்ட அவளுடைய குழிந்த கன்னங் கள் வெட்கத்தினுல் சிவந்த நிறமடைந்தன. அவள் தலை குனிந்து, பிரேமையினுல் நிறைந்த பாரமான லோசனங் களுடன், ராமனுடைய அம்ருதமயமான பேச்சுக்களையும், தனி ஸல்லாபங்களையும் அன்புடன் அணைத்துக்கொள்ளப் போகும் பாக்கியமான ரதி விலாசங்களையும் அவைகளை நினைப்பதினுலே ஏற்படப்போகும் விநோதமான ஆனந்தங் களையும் சொல்லித்தீருமோ? அவளுடைய அந்தரங்க சகிகளாகிய கௌரிக்கும், சாரதாவுக்கும், இந்திராணிக்கும் மற்றும் அபசரஸ் களைப் போன்ற மகாபாக்யமடைந்த உத்தம ஸ்திரிகள், திக்பாலர்களின் ராஜ மஹிக்ஷிகள், ஆகியவர்களுக்கன்றே அவள் உள்ளுணர்வுகளைப் பற்றித் தெரியும். அதற்குப் பிறகு அந்த உத்தம சுந்தரிகள் நான்கு மாப்பிள்ளைகளையும் அவர் களின் மனைவிகளையும் கிரஹப்பிரவேசத்திற்காக, காத்துக் கொண்டிருக்கும் தசரதர் மாளிகைக்கு அழைத்துச் சென்றுர்கள். (1758)

அந்த சமயத்தில் மிதிலையிலும் ஆகாயத்திலும் எங்கு பார்த்தாலும் மங்கள ஆசீர்வாதங்களும், ஜயசப்தங்களும் கேட்கப்பட்டன. அந்த ஆனந்தத்தின் ஒலிகள் வெகுகாலம் வரை கேட்கப்பட்டன. எல்லா ஜனங்களும் மிக்க பிரஸன்ன ஹ்ருதயத்துடன் இந்த தம்பதிகள் சிரஞ்சீவிகளாக வாழ வேண்டும் என்று மங்கள ஆசிர்வாதங்கள் செய்தார்கள். யோகிகள், ஸித்த ஜனங்கள் முனீஸ்வரர்கள், தேவகணங்கள் பிரபுவாகிய ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டு தரிசித்து துந்துபி வாத்யங்கள் வாசித்து, மிக்க ஆனந்தத்துடன் புஷ்ப வர்ஷங்களை வர்ஷித்து அதே ஆனந்தத்தால் நித்ய தம்பதிகளுக்கு "ஜயம் ஸர்வதா ஏற்படட்டும், ஜயஜய," என்று மங்கள சப்தங்களால் அவர்களை ஆசீர்வதித்து, விட்டு, தங்கள் லோகங்களுக்குச் சென்றுர்கள். (1759)

அந்த சமயம் நான்கு ராஜகுமாரர்கள் தங்கள் பத்னிகளுடன் பிதாவான தசரதரிடம் அழைத்து வரப்பட்டார்கள். தசரத மஹாராஜருடைய அரண்மனை மிக்க சோபையுடன், மங்களங் களைத் தரும் ஆனந்த வெள்ளம் பொங்கி, எங்கு பார்த்தாலும்

உத்ஸாஹங்களாலும் ஏற்பட்ட பேச்சுக்கள் கேட்கப்பட்டன. அந்த மாளிகை ஒரே ஆனந்த மயமாக விளங்கியது. (1760)

அநேகவிதமான ருசியுள்ள உணவுப் பதார்த்தங்கள் விருந்து ஏற்பாடுகளுடன் வைக்கப்பட்டிருந்தன. ஜனக மஹாராஜர் எல்லோரையும் விருந்திற்கு அழைத்தார். உத்தமமான ரத்ன கம்பளங்கள் எங்குபார்த்தாலும் போடப்பட்டிருந்தன. ராஜா தசரதர் தன் புத்ரர்கள் சகிதம் அவ்விடம் வந்துசேர்ந்தார். (1761)

மிக்க மரியாதையுடன் சம்பந்தி விருந்து நடைபெற்றது. ஜனகர் சம்பந்தியாகிய தசரதரையும், மாப்பிள்ளைகளான ஸ்ரீராமன், பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் யாவரையும் சிரத்தையுடன் வரவேற்று, அவர்களுக்குச் சிறந்த ஆஸனங்களைக் கொடுத்தார். ஜனகர் அயோத்யாபதியான தசரதரின் சரண கமலங்களை அர்ச்சித்து, அவருடைய பாத ரேணுக்களை தனது தலையில் சூட்டிக்கொண்டார். அவர்களுடைய சீலமான நடத்தை யும், ஸ்நேகமான பேச்சுக்களும் வர்ணிக்கமுடியாதபடி அதி க்ரமித்திருந்தன. (1762)

[தியானம்

ஹே சீதாராமா, சீதையின் அணைப்பினுலும் பேச்சு ஸ்வா ரஸ்யங்களிலும், உள்ளன்பிலும் மனஸைக் கொடுத்த ஸ்ரீராமா, ஸ்ருங்கார ராமா, ஸ்ருங்கார காமவிலாசங்களில் தேர்ச்சிபெற்ற ராமா, தங்ககலசம் போல ஸ்தனங்களைப்பெற்ற அமானுஷ்ய மான சீதையை தன் மடியில் ஆரோபித்து என்ன ரஹஸ்யப் பேச்சுக்களைச் சொன்னுயோ, அவைகளைக்கேட்ட ராத்திரியும், சகல பூதங்களும், சந்திரன் தாரை கணங்களும் மிக்க பாக்ய சாலிகள் அல்லவா? அவளுடைய பொற்கரங்களால் கொடுக்கப் பட்ட குழம்புப்பாலை சாப்பிட்டுவிட்டு, குந்தமொக்குபோல பல் வரிசைகளை உடைய சீதையைப் பார்த்த உன் விசாலமான நேத்ரங்களை அடைந்த பாக்யமுள்ள சுகத்தைவிட என்னசுகம் பெரிதாக இருக்கக்கூடும்? நாத, ஸ்வர, லய, மூர்ச்சனை மர்மங்களை அறிந்த சதாசிவனின் வழியைப் பின்பற்றின வரதியாக ராஜகுரு கண்டுபிடித்த உண்மையை என்மனம் தெரிந்துகொண்டிருக் கிறது. வாலியின் மனைவி தாரை சொல்லியபடி அப்ரமேயனுகிய உன்னைப் பூஜிக்காமல், ஹே ஸ்ருங்கார சீதாராமா, சகல சௌபாக் யங்களிருந்தும், பிரயோனம் யாது? தர்மத்திற்கு விரோதமான பாபகார்யத்தைச் செய்து உன்னுல் தண்டிக்கப்படுவதைவிட

உன்னை மிகுந்த பயத்துடன் ஆஸ்ரயித்த சுக்ரீவன் க்ருத க்ருத்யனாக ஆகிவிட்டான் என்று பெரும் ஞானத்துடன் உன்னை நான் வந்து அடைகிறேன். கௌரிக்கும் ஸரஸ்வதிக்கும் மிக்கப் பிரியவளான சீதை என்னைப்பற்றி உன்னிடம் ஒரு நிமிஷமாவது சொன்னாளா? அவள் மேகலையில் பிரகாசிக்கும் முத்துமணியாவது உன் திருஷ்டியில் பட்டதா? உனக்கு கஜேந்திரனின் குரலைக் கேட்டதால் "சப்தஸஹர்" என்றும் உத்தாரணர் என்றும், இன்சொல்லால் அவனைத் தேற்றி, ஸ்பர்சித்து தடவிக்கொடுத்து, உன் விரலின் மோதிர நகங்களின் ஒளியால் அவனுடைய தாபங்களை நீக்கி ஆஸ்வாஸப்படுத்தியதால் தக்ஷிணர் என்றும் நாமாக்கள் உனக்கு ஏற்பட்டன. தியாகராஜர் உன்னை ம்ருது மதுர பூர்வ பாஷண என்று எல்லாம் ஸ்தோத்ரம் செய்தாரே. ஆஞ்சநேயர் கமல பத்ராக்ஷர், என்று சொன்னாரே, பராசரர் ஸோமன் சொன்னதாக, விஷ்ணு பகவான், சீதாராமனாகிய நீர் பாரம், பாரா பாரமானவர், பரத்துக்குப்பரம், பரமார்த்தஸ்வரூபி, பிரும்மாவுக்குக்கூட பாரமான பொருள், தபோநிஷ்டர்களின் யமங்களினால் அடையவேண்டிய உதீர்ணர், அதாவது அவதார காலங்களில் மாத்திரம் வெளிக்கண்ணால் பார்க்கப்படுபவர், வைராக்யத்தால் நிரம்பப்பட்ட ஜீவனுக்கு ஸம்சாரமாகிய கடலைத் தாண்டிவைத்து மோக்ஷத்தைக் கொடுக்கும் உத்பவரென்றும், சர்வரீகரர் என்றும், சரணர் என்றும் நாரதர் பல தடவைகளில் எனக்குச் சொல்லியிருக்கிறாரே. அந்த மஹானுடைய க்ருபையால் ஆஞ்சநேய சமேத பரத லக்ஷ்மண சத்ருக்கனனுடைய அனுக்ரஹத்தால் ஏகாந்த ராமசீதாவினுடைய பேட்டி எப்படி கிடைக்கும்? கோதண்டராமா, கல்யாணராமா, பட்டாபிராமா, மோஹனாங்கா, திரிபுவன சுந்தரி உங்களுக்கு நித்யகல்யாணங்களும், ஜயகீர்த்திகளும், ஜயசுபங்களும் ஏற்பட்டு, என்னையும் உங்கள் தாஸனாக்கிக்கொள்ள வேண்டும். கேசவா, அச்யுதா, உங்கள் திவ்ய சரணங்களுக்கு என்னுடைய வினயமான நமஸ்காரங்கள். உன் பவழச் செவ்வாய்க்கும், விசாலமான மார்பு பிரதேசங்களுக்கும் அகண்ட புஜங்களுக்கும், உன் கை ஸ்பர்ச தடவுதலுக்கும் என்ன நன்றி கூறுவேன்? கமலபுஷ்பத்தை வைத்து சதா ஹரியை த்யானிக்கும் விஷ்வக்ஸேனரான கணபதிக்கு என் மனதைத் திறந்து கூறியிருக்கிறேன். அவரே உங்களிடம் என் பிரார்த்தனையைக் கூறுவார். நானே சொல்கிறேன். வெட்கமின்றி, பயமின்றி கேட்கிறேன். இந்த ஸ்நேகம் அர்ஜுனனிடம் கிருஷ்ணன் காட்டியதுபோல

இருக்கவேண்டும். உமையின் தாஸனுகிய எனக்கு வாணியின் அருளும் உங்கள் கிருபையையும் ஸதா எனக்கு வேண்டும்.]

பிறகு பங்கஜ மலர்களுக்கு சமமான அழகு, குணம் படைத்த ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதகமலங்களை ஜனக மஹாராஜர் அலம்பி, அர்ச்சித்து மனதினுல் ஆசார்யனை முன்னிட்டு, (இஜ்யை என்கிற சுரபி முத்திரை, ஸ்நான ஆசனம், அலங்கார ஆஸனம், அர்க்கியபாத்ய ஆசமனியம், திரு ஒற்றுடை ஆகிய திருமண்காப்பு, சாத்துப்படி, புஷ்பம், திருவாபரணம், தூபம், தீபம், கற்பூரம் முதலியவை ஸமர்ப்பித்தல், திருத்துழாய் சாற்றுவித்தல், ஆசார்யரின் ஸ்ரீ ஹஸ்தத்தால் திருவாராதனம் சமர்ப்பித்தல் என்கிற ஐந்து வட்டில்களால் பகவானுகிய ஸ்ரீராமச்சந்திர மங்களமூர்த்திக்கும், அவருடைய பிராட்டியாருக்கும், அவர்களின் பரிவாரமாகிய அனந்த, கருட, விஷ்வக்ஸேனர், சுதர்சன பாஞ்சஜன்ய முதலானவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி மரியாதைகள் செய்து, அஷ்டாக்ஷர மந்திரம் உச்சாடனம் செய்து, த்வயம் அனுஸந்தித்து, போஜ்யாஸனமாகிய பிரசாதம் கண்டருளப்பண்ணுதல், அடைக்காயமுது செய்வித்தல், திருப்பல்லாண்டினுல் கற்பூரம், சாத்துமுறை செய்து, பிறகு வாழித் திருநாமங்களினுல் அஞ்சலி ஹஸ்தத்துடன் அனுஸந்தித்து, பிறகு சை யாஸனமாகிற உத்திர பூஜையால் திருத்துழாயுடன் திருக்காப்புச் சேர்த்து தண்டன் சமர்ப்பித்து, சுக்ருதபிரணமம் செய்து, பகவானுடைய பிரஸாதமாகிற தீர்த்தம், திருத்துழாய் முதலிவைகளை ஸ்வீகரித்து, அதன்பிறகு எம்பெருமானை கண்டருளப் பண்ணின சேஷத்தை ஆசார்ய மூலமாக ஸ்வீகரித்து, பகவானுடைய விஷயங்களை அஷ்டாதச ரஹஸ்யாதி வியாக்யான காலக்ஷேபம் செய்தல், பிறகு இரவில் பிரஸாதம் கண்டருளப்பண்ணுதல் ஆகிய பல அங்கங்கள் உடைய வைஷ்ணவ பகவத், பாகவத ஆராதனைகளைச் செய்து,) சீதாராம சாக்ஷாத் காரத்தில் தன்னுடைய ஜிக்ஞாஸங்களை ஜனகர் பூர்த்தி செய்துகொண்டார். ஹரனுகிய சிவனுடைய ஹ்ருதய புண்டரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீராம பாதங்களை ஜனகர் அவ்வாறு வைஷ்ணவ ரீதியில் ஆராதனையைச் செய்தார். ஸ்ரீராமனுடைய மூன்று சகோதரர்களையும் அவ்விதமே ராமனுகக் கருதி அவர்களின் பாதங்களையும் அலம்பி பாகவத ஆராதனையையும் செய்துமுடித்தார். (1763)

அவர் அவர்களுக்கு தகுந்த ஆஸனமரியாதைகளைக் கொடுத்து ஜனகர் பரிசாரகர்களைக் கூப்பிட்டு, போஜனம்

செய்விக்க ஏற்பாடுகள் செய்தார். அவர்கள் சுத்தமான இலைகளையும் தட்டுக்களையும் விலை உயர்ந்த ரத்னமிழைத்த தங்கத்தாம்பாளங்களையும் கொண்டு வந்து வைத்தார்கள். (1764)

மிக்க சாமர்த்திய முள்ளர்களும், மரியாதையுடன் நடந்து கொள்ளும் பரிசாரர்கள் மிக்க அழகானதும், ருசியுள்ளதும் பவித்திரமான பருப்புச்சாதம், வாசனைஉள்ள சுரபிநெய் க்ஷணநேரத்தில் எல்லோருக்கும் பறிமாறினார்கள். (1765)

எல்லா விருந்தினர்களும் ஐந்து கவளங்களை பிராணன் அபானன் வ்யானன் உதானன் ஸமானன் ஆகிற மந்திரங்களால் உச்சரித்து ஆஹுதிகளை அளிப்பதுபோல போஜனம் செய்ய ஆரம்பித்தனர். கேலி விளையாட்டுக்களும் பேச்சுக்களும் எல்லோருக்கும் சந்தோஷத்தைக் கொடுத்தன. அநேக விதமாக தயாரிக்கப்பட்டதும் அம்ருதத்திற்கு ஸமமாகச் சொல்லப்படும் மாதுர்ய ஸ்வாதிஷ்டானமான அன்ன வகைகள் தயாரிக்கப் பட்டிருந்தன. அவைகளை வர்ணிப்பதே ரொம்ப கடினம். (1766)

நான்கு விதமான வியஞ்சனங்களை பரிசாரகர்கள் பரிமாறினார்கள். அவைகளின் பெயர்கள் யாருக்குத்தான் தெரியும்? சாவ்யம், சோஷ்யம் லேஹியம் பேயம் ஆகிற சப்பிட்டு சாப்பிடுதல், கடித்துச் சாப்பிடுதல், விண்டு முழுங்குதல் உறிஞ்சுதல் ஆகிய அந்த நான்கு வகைகளால் போஜனம் அருந்தினர். ஒவ்வொரு வகைக்கும் அநேக போஜன பதார்த்தங்கள் இருந்தன. (1767)

ஆறுவிதமான ரஸங்களுடன் ஸ்வாதிஷ்டானமான வியஞ் சனங்கள் அநேகம் இருந்தன. (புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கசப்பு, காரம், இனிப்பு) ஆகிற ஆறு ரஸங்களின் ஏக ஏக ரஸத்திற்கும் அநேக பதார்த்தங்கள் தயாரிக்கப்பட்டன. போஜனம் செய்யும் சமயம் புருஷர்களும் ஸ்திரிகளும் மதுர த்வனியினால் ஒருவரை யொருவர் கேலிப்பேச்சுக்களால் விளை யாட்டுசெய்து கொண்டிருந்தார்கள். (1768)

கேலி விளையாட்டுக்கள் சமயத்திற்கு தகுந்ததாகவும் விநோதமாகவும் இன்பமுள்ளதாகவுமிருந்தன. தசரதர் பந்துக் களுடன் விருந்துக்கு எல்லாப் பேர்களையும் அனுப்பி வைத்தார். இந்த விதிப்படி எல்லா ஜனங்களும் போஜனம் அருந்தினார்கள். அதன் பிறகு உத்தரா போஜனமாகிய ஆசமனீயம் அருந்தினார் கள். (1769)

அதன் பிறகு ஜனகர் அந்த கூட்டத்திற்கும் தசரதருக்கும் தாம்பூலம் வழங்கினார். சகல ராஜாக்களுக்கும் சக்ரவர்த்தியாக

விளங்கும் தசரதர் சந்தோஷமடைந்து தன் இருப்பிடத்திற்குச் சென்றார். (1770)

ஜனகபுரியில் நித்யம் நூதனமான மங்கள உத்ஸவங்கள் நடைபெற்றன. பகலும், இரவும் க்ஷணமாதிரி ஓடியது. அதிகாலையில் அரசர்களுக்கு முகுடமணியாக விளங்கும் தசரதர் எழுந்திருந்தார். யாசகர்கள் அவருடைய குணசமுஹங்களை ஸ்துதி செய்ய ஆரம்பித்தார்கள். (1771)

தன்னுடைய குமாரர்களையும் அவர்களுடைய பத்னிகளையும் கண்டு தசரதர் எவ்விதம் ஆனந்த மடைந்தார் என்று யாவரால் சொல்ல முடியும்? அவருடைய மனம் எவ்விதம் பூர்ண ஆனந்தத்தால் சந்தோஷ மடைந்திருந்தது என்று யாவராலும் நினைக்க முடியுமா? அதன் பிறகு காலைக்கிரியைகளை செய்து முடித்து விட்டு, குருவான வஸிஷ்டரை நமஸ்காரம் செய்வதின் பொருட்டு தசரதர் அவரிடம் சென்றார். அங்கே குரு ஸந்நிதானத்தில் கை கட்டிக்கொண்டு மஹத்தான குரு கடாக்ஷத்தினால் பிரேமை வசப்பட்டவரானார். (1772)

மீண்டும் அவரை நமஸ்கரித்து, பூஜைகள் முதலியவைகளை முடித்துக்கொண்டு தானும் தடக்கையுடன் அம்ருதத்திற்குச் சமமானதும் இனிமையான மொழிகளால் அரசர் அவரிடம் விக்ஞாபித்துக்கொண்டார். "ஹே முனி ராஜ், கேளுங்கள். எங்கள் குலத்தினர் பல வருஷங்களாக தங்களை பூஜித்ததினாலும், நானும் அவர்களுடைய பூஜா பலத்தினால் தங்களை இடைவிடாது ஆராதித்ததின் பலனாக தங்கள் கிருபையினால் பூர்ண காமனாக ஆக்கப்பட்டேன். சகல மனோரதங்களும் நிறைந்தவனாக ஆக்கப்பட்டு விளங்குகிறேன்." (1773)

"ஹே ஸ்வாமி, இப்பொழுது நீங்கள் எல்லா பிராம்மணர்களையும் அழையுங்கள். வஸ்திரங்கள், ஆபரணங்களுடனும் தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளை உடைய கபிலைப் பசுக்களையும் தானமாகக் கொடுங்கள்" என்று சொன்னார். அந்த வசனங்களைக் கேட்டு குருவான வஸிஷ்டர் அரசரை ஆசீர்வதித்து, பிறகு முனிகணங்களை அழைப்பித்தார். (1774)

அந்த சமயம் வாமதேவர், தேவரிஷியான நாரதர், வால்மீகி, ஜாபாலி, விஸ்வாமித்திரர், தபஸ்விகள், முனிஸ்ரேஷ்டர்கள் ஆகிய பிராம்மண சமூஹங்கள் வர ஆரம்பித்தனர். (1775)

அவர்கள் எல்லோருக்கும் அரசர் தண்டப் பிரணாமம் செய்துவிட்டு, பிரேமையுடன் அவர்களைப் பூஜை செய்து உத்தம ஆஸனங்களைக் கொடுத்து கௌரவித்தார். நான்கு

லக்ஷங்கள் கொண்ட உத்தமமான பசுக்களை வரவழைத்தார். அந்தப் பசுக்கள் காமதேனுவுக்கு சமானமாக நல்ல ஸ்வபாவம் படைத்தவைகளாகவும் அழகு, மணம் தோற்றம் உள்ளனவை களாகவும் உதார ஹ்ருதயத்துடன் பாலைச் சொறிந்து, இன்பம் தரும் வள்ளல் பெரும் பசுக்கள் போலவிருந்தன. (1776)

அவைகள் எல்லாவற்றையும் அலங்கரித்து, பிரஸன்ன ஹ்ருதயத்துடனும் அரசர் பூதேவர்களான பிராம்மணர்களுக்கு அன்புடன் வேத விதிப்படி தானம் அளித்தார். அந்த சக்ரவர்த்தி அநேக விதமாக வினயத்துடன் இன்சொல்லால் அவர்களைத் திருப்தி செய்து வைத்து, "இன்றுதான் என் ஜன்ம ஜீவனம் இந்த ஜகத்தில் பரம லாபமடைந்தது," என்று விக்ஞாபித்துக் கொண்டார். (1777)

அரசர் பிராம்மணர்களுடைய சுத்தமானதும் மங்களகர மானதுமான ஆசீர்வாதங்களை ஆனந்தத்துடன் அடைந்தார். அதன்பிறகு யாசகர்களை அழைப்பித்து, அவர்கள் எல்லோருக் கும் அவர்கள் இஷ்டப்படி தங்கம், வஸ்திரம், ரத்னமணிகள் குதிரைகள், யானைகள், ரதங்கள் ஆகியவைகளை சூரிய குல திலகமான தசரதர் அளித்தார். (1778)

[தியானம்

ஹே லக்ஷ்மி சீதா, கமல புஷ்பத்தின் பிரியரான சூரிய குலத்தில் உதித்த சந்திரா, கருணை உள்ளம் கொண்ட காகுத்ஸா, சீதையின் காம விலாஸங்களின் ஹ்ருதயம் போன்ற வரே, முரனையும் கரனையும் கொன்ற தீரனே, கௌஸல்யையின் ஸுபுத்ரனே, கமலையின் லீலாசயனத்தின்மேல் உறங்கும் மார்பா, தேவசத்ருக்களுக்கு சண்டபாஸ்கரன் போல கோதண்டம் வைத்திருக்கும் தனிவீரா, கஜரக்ஷக, ஸாது ஜனங்களின் பாரிஜாதமே, எனக்கு வெப்பம் கொடுக்கும் விமலா, சீதையின் கண்களைப் பார்த்து ரமிக்கும் அரவிந்த லோசன, பத்மநாபரான பெருமாளின் தொப்புளில் தொங்கும் ரத்ன ஆபரணத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் சீதையே, உங்கள் மஞ்ச சயனத்தின் கால்கட்டிலின் பாகமாக நான் இருந்து, அம்மா உங்களை சந்தோஷப்படுத்துவேன். உங்கள் மன எண்ணெங்களை என் மீது எப்படித் திருப்புவேன்? அன்றொரு நாள் ஸனகர், ஸநந்தனர் ஸநாதன, ஸநத்ஸுஜாதர் ஆகியமஹான்களை உங்க ளிடம் தூது அனுப்பி என் குறையைச் சொல்லச் சொன்னேன். வாலகில்யர்களின் தபத்தினால் இந்திரனுக்கு சமமான பலமுள்ள

வரும், வேதக்காற்றை மூச்சாக உள்ளவரும், சந்தோமயமாகிய அழகிய இறக்கைகள் உள்ளவரும், ஞானம், பெரும் இன்பம் ஆகிய இரு இறக்கைகளுடன் கூடிய ஸுபர்ணரே, உன்னிடம் என்னைப்பற்றிச் சொல்லியிருக்கிருர். ஸாங்கியம், யோகம் ஆகிய சாஸ்திரங்களில் தேர்ந்த என் குருநாதர்களான ஸனகாதி முனிவர்களின் பேச்சுக்கள் கூடவா உங்கள் காதுகளில் விழ வில்லையா? தியாகராஜ ஹ்ருதயத்துடன் பக்தி நம்ர வினயாதி களால் ஆயிரம் மங்கள நாமங்களை, ஐயா, சொல்லவில்லையா? சிசுபாலனுக்கும், உத்தவருக்கும், இந்திரனுக்கும், பலிக்கும் பாரபக்ஷமின்றி உன் அனுக்ரஹம் கிடைத்தபடியால் அநிர் தேஸ்யவபுঃ, வாலிக்கும், சுக்ரீவனுக்கும், அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் சிநேக அருளும், காருண்ய அருளும் கொடுத்துக் காக்கவில்லையா? உன்னுடைய லீலை அவதாரங்களின் குண விசேஷங்களையும் திவ்யமங்கள உருவங்கள் நிரூபிக்க முடியாதபடி கணக்கில்லாமல் இருக்கும்போது அப்பேற்பட்ட மஹாத்மியங்களை நான் எவ்விதம் சொல்லமுடியும்? க்ருத, த்ரேதா, த்வாபர கலியுகங்களின் கீர்த்திமூர்த்தியே, என்னை ப்ரேரணை செய்த அநிலரே, பகல் முதலிய பிரிவுகளோடு கால சக்ரத்தைத் தரித்த சக்ரபாணியே, அஹஸ் ஸம்வர்த்தரே, ஆஞ்சநேயராலும், நாரதராலும், வியாஸராலும், வால்மீகியினு லும், ஆசார்ய குருஸ்ரேஷ்டர்களாலும் ஆஸ்ரயிக்கப்பட்ட உன் திவ்ய பாதங்களை நான் சரணம் அடைகிறேன். சரணுகத பாரிஜாதமே, எனக்கு க்ஷேமகரமான கரங்களை உடைய விஸ்வபாஹு, என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்.]

அந்த மஹாத்மாக்களான பிராம்மண ஸ்ரேஷ்டர்கள் மிக்க குண விசேஷங்கள் வாய்ந்த ரகுகுல கீர்த்தியையும், சூர்ய குலத்தின் ஸ்வாமியாக விளங்கும் தசரதமஹாராஜருக்கு, "ஜயமங்களங்கள் ஏற்படட்டும்." "தினகர குலத்திற்கு ஜயமங் களங்கள் உண்டாகட்டும்," "ரகுகுலத்தில் உதித்த சந்திரனுகிற ஸ்ரீராமனுக்கு நித்ய மங்களங்களும் நித்ய ஸ்ரீயும் ஏற்படட்டும்" என்று ஜயமங்கள ஆசிர்வாதங்களைச் செய்தனர். "சீதாராம னுக்கு நித்ய சுபமங்களங்கள் ஏற்படட்டும்," என்று ஆசீர்வதித் தார்கள். இந்தவிதமாக ஸ்ரீராமச்சந்திரனுடைய விவாஹ மஹோ த்ஸவம் நிறைவேறியது. அந்த விவாஹத்தின் சுபமான கட்டங் களையும் அதனுல் பக்தர்களுக்கு ஏற்படும் சுபமான பலன்களையும் ஆயிரம் முகங்கள் கொண்ட சேஷ பகவான் கூட வர்ணிக்க முடியாதே. (1779)

அடிக்கடி அடிக்கடி கௌசிக முனித்திலகமாகிய ஸ்ரீவிஸ்வாமித்திரரை தசரதர் சுக்ருத ப்ரணாமங்கள் செய்து, கிருதக்ஞை, ஞானம் நிறைந்த ஹ்ருதயத்துடனும், இன்பம் பொங்கும் குரலுடன் கை கூப்பின அஞ்சலிகளுடன் மிருதுவாகச் சொல்ல ஆரம்பித்தார். ''ஹே முனிவர்களுள் ரத்னகிரீடமே, நான் இவ் விதம் சந்தோஷம் அடைந்ததற்கு மூலகாரணம் தங்கள் கிருபா கடாக்ஷம்தான். அந்த கடாக்ஷ லக்ஷ்மியின் பிரஸாதம் எப்போதும் என்னிடம் இருக்க வேண்டும்.'' (1780)

ராஜா தசரதர் ஜனகருடைய ஸ்நேகம், சீலம், காரிய கௌரவங்கள், ஐஸ்வர்ய பிரபாவங்கள் இவைகளால் பிரகாசிக்கும் ஆத்ம விபூதிகள் எல்லாவற்றையும் வெட்கமின்றி எல்லோருடைய முன்னிலையிலும் புகழ்ந்தார். பிரதி தினம் தசரதர் அயோத்திக்கு திரும்புவதற்கு ஜனகரிடம் உத்தரவு கேட்டார். ஆனால் அந்த மஹானான ஜனகர் நிர்ப்பந்தப் படுத்தி பிரேமையினால் இன்னும் சில நாட்கள் தங்கும்படி வேண்டிக்கொண்டதின் பேரில் தசரதர் சம்மதித்தார். (1781)

ஒவ்வொரு நாளும் அதிதிமரியாதை சத்காரங்கள் அதிகரித்துக்கொண்டு போயின. ஒவ்வொருநாளும் ஆயிரக்கணக்கான அதிதிகள் சாப்பிடும் விருந்துகள் ஏற்பாடு செய்யப்பட்டன. ஜனகபுரியில் நித்யம் புதிது புதிதான ஆனந்தங்களும் உத்ஸாஹங்களும் நிறைந்த மஹோத்ஸவங்கள் ஏற்பாடு செய்யப்பட்டன. ஒருவரும் தசரத மஹாராஜர் மீண்டும் அயோத்திக்குத் திரும்பிப்போவதை விரும்பவில்லை. (1782)

இந்த விதமாக அநேக தினங்கள் சென்றன. சம்பந்தி வீட்டுக்காரர்கள் ஸ்நேக பாசத்தினால் இறுகக் கட்டப்பட்டார்கள். இருவர்களுடைய சிநேகமும், பரஸ்பர அன்பும் அதிகரித்தது. ஒரு நாள் விஸ்வாமித்திர முனிவரும் சதானந்தரும் ஜனகரிடம் சென்று சொன்னார்கள். (1783)

''உனக்கும் தசரதருக்கும் ஸ்நேகமும், பிரேமை பாசமும் அதிகமாயிருந்தாலும் இப்பொழுது தசரத மன்னருக்கு அயோத்திபோவதற்கு உத்தரவு கொடுக்க வேண்டும்.'' அந்த வசனங்களைக் கேட்ட ஜனகர் ''பஹுத் அச்சா,'' நல்லவார்த்தைகள் சொல்லப்பட்டன, என்று சொல்லிவிட்டு தனது மந்திரிகளை அழைப்பித்தார். அவர்களும் ஆஜராகி ''நீடூழி வாழ்க ஜனக மன்னன்'' என்று ஜய ஜீவ ஆசீர்வாதங்களைச் செய்து, நமஸ்கரித்து நின்றார்கள். (1784)

"அயோத்யா புரியின் ஈஸ்வரரான தசரதர் போக விரும்புகிறார். உள்ளே போய் ராணிமார்களுக்குத் தெரிய படுத்துங்கள்" என்று ஜனகர் ஆக்ஞையிட்டார். மந்திரிகள் பிராம்மணர்கள் சபையோர்கள் ஆகிய எல்லோரும் ஜனக மஹாராஜரும் தசரதரின் அயோத்தி பிரயாணத்தை மனவருத்தத் துடனும் ப்ரேமை கலந்த எண்ணங்களுடனும் எண்ணி கலங்கிக் கொண்டிருந்தார்கள். (1785)

ஜனக புரிவாஸிகளும் இதைக் கேட்டு வியாகுலம் அடைந் தார்கள். இது நிஜமா என்று ஒருவருக்கொருவர் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். அந்த மன்னர் போவது ஸத்யம் என்று தெரிந்த கொண்ட பின்பு, சந்தியா காலத்தில் தாமரை புஷ்பம் இதழ்களை மூடிக்கொள்வது போல வியாகுலம் நிறைந்த வர்களாக விளங்கினார்கள். (1786)

அவர்கள் புறப்படும் சமயமும் நெருங்கினதின் பேரில் ஜனக மஹாராஜர் அநேகவிதமான சாப்பிடும் சாமான்களை வழிப் பிரயோசனத்திற்கு அனுப்பிவைத்தார். அநேக பிரகாரம் பழவரிசைகள், சீர்வரிசைகள், உணவுப் பதார்த்தங்கள், போஜன ஸாமக்ரியைகளை, விவரிக்க முடியாத அளவில் அனுப்பி கௌர வித்தார். அவைகள் எல்லாம் விவரிக்க முடியாதபடி அளவு கடந்து அதிகமாயிருந்தன. (1787)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, தேவாதிதேவா, பூதேவ பக்தர் களிடம் சதா வசிக்கும் பிரபோ, நீதானே ஸத்யம். நீதானே சாஸ்வதம், ஸநாதனன், நீயேதான். சௌர்யம், அத்யந்த அழகு உனக்குத்தானே அப்பா. நித்யோத்ஸவம், மாஸோத்ஸவம் ஸம் வத்ஸரோஸ்தவம் செய்யவேண்டும். ஹனுமத்சமேத சுபலக்ஷ் ணங்களுள்ள லக்ஷ்மணன், பரத சத்ருக்ன ன்இவர்கள் சகிதமாக சீதாராமனாக தியாகராஜருக்கு காக்ஷியைக் கொடுத்து, அத்யந்த சுகத்தையும் தந்தது போல எனக்கு எப்பொழுது மனம் இரங்கி காக்ஷி தருவாய்? சீதையின் கையிலுள்ள தாமரைப் பூவையும் அவள் கண்களையும் பார்த்து ரமித்துக்கொண்டிருக்கும் ராமா; ஹே சீதே, ராமனுடைய அழகான ஊர்த்தவபுண்டரத்தின்மீது அலை அலையாகப் படிந்த சுருள் மயிரின்மீது படிந்து சோபை யைத் தரும் முத்து வரிசைகளைப் பார்த்துக்கொண்டிருக்கும் தாயே சீதே, ராமனுடைய இன் சொற்களாலும், அழகிய செவ் வாயில் இருக்கும் மல்லிகைப் பூவின் மொக்குப்போலிருக்கும்

தந்த வரிசைகளின் காந்தியில் மனத்தைப் பறிகொடுத்த ஹே ஜானகி, என் வேண்டுதல், உங்கள் காதுகளுக்குக் கேட்கப் பட்டதா ? இந்திரனுடைய பதவியைவிட உயர்ந்ததும், பூலோகத்தில் தர்மார்த்தகாம மோக்ஷம் ஆகிற சதுர்வித புருஷார்த்தங்களைவிடச் சிறந்ததும், சதாசிவன் உமையுடன் சேர்ந்து துதிக்கும் உங்கள் பாதங்களும் உங்கள் தர்சனமும் பேச்சுக்களாகிற உங்களது கிருபையும் எப்போது ஐயா கிடைக்கும்? என்னை எவ்வளவு நாட்கள் நம்பிக்கை கொடுத்த பின்பு, தாமதம் செய்விக்கப் போகிருய் ?]

எண்ணிக்கைக்கு மேற்பட்ட எருதுகள், கோவேறு கழுதைகள்மீது சுமத்தப்பட்டு அநேக சாமான்கள் மாப்பிள்ளை சிராக அனுப்பப்பட்டன. அவைகளுடன் அநேக அழகான படுக்கைகள், ஆஸனங்கள் எல்லாம் அனுப்பப்பட்டன. ஒரு லக்ஷம் குதிரைகள், இருபத்தையாயிரம் ரதங்கள் மேலிருந்து கீழ்வரை பூர்ணமாக அலங்கரிக்கப்பட்டு அனுப்பப்பட்டன. (1788)

பதினுயிரம் மிக மதம் பெருகக்கூடிய பெரிய யானைகள் வெகு ஜோராக அலங்கரிக்கப்பட்டு, வெகுமதியாக அனுப்பப் பட்டன. அப்பேற்பட்ட யானைகள் அஷ்டதிக்கஜங்களும் வெட்கப்படும்படி உயர்ந்ததாகவும், நேர்த்தியாகவுமிருந்தன. வண்டிகளில் நிறைய தங்கக்கட்டிகள், வஸ்திரங்கள், ரத்னங்கள், காளைகள், எருமைகள், பசுக்கள், இன்னும் அநேக வஸ்துக்கள் ஜனகரால் வெகுமதியாக அனுப்பப்பட்டன. (1789)

இந்தப்பிரகாரம் அபரிமிதமாக ஜனகர் தன் மாப்பிள்ளைகளையும் தசரதரையும் சம்மானித்தார். சீர்சிறப்புக்களும் வெகுமதிகளும் வர்ணிக்கமுடியாதபடி யிருந்தன. அவைகளைக் கண்ட ஜனங்கள் லோகபாலகர்களின் சம்பத்து ஐஸ்வர்யங்கள்கூட குறைவாகத்தான் இருக்கும் என்று நினைத்தார்கள். (1790)

இந்தப் பிரகாரம் ஜனக மஹாராஜர் அயோத்யாபுரிக்கு கணக்கற்ற சாமான்களை அனுப்பி வைத்தார். கல்யாணத்திற்கு வந்த ஜனங்கள் சொந்த ஊர்களுக்குத் திரும்பிப் போகிருர்கள் என்ற சமாசாரத்தைக் கேட்ட ஜனகரின் எல்லா ராணிமார்களும் ஜலம் வற்றின தடாகத்தில் மீன்களின் கூட்டங்கள் எவ்விதம் வியாகுலம் அடையுமோ, அதுபோல வியாகுலம் அடைந்தார்கள். (1791)

அவர்கள் சீதையை தங்கள் மடிகளின்மீது ஏற்றி வைத்துக் கொண்டு, உச்சி முகந்து, தடவிக் கொடுத்து ஆசீர்வாதங்கள் செய்தார்கள். அவள் புக்ககத்தில் எவ்விதம் நடந்துகொள்ள

வேண்டும் என்று புத்திமதி சொன்னார்கள். "ஸதா உன்னுடைய பதியை ப்ரேமையுடன் பூஜை செய்து, அவருடைய அன்பைப் பெற்றுக்கொள். உங்கள் இருவர்களுடைய ஸ்நேகம் என்றும் பிரியாதபடி அந்நியோன்யமாக விருக்கவேண்டும். நீங்கள் இருவர்களும் நீடூழி வாழ்ந்து, சந்தோஷமாகவிருக்கவேண்டும்" என்று ஆசிர்வாதம் செய்தார்கள். (1792)

"மாமனார் மாமியார் குரு முதலியவர்களுக்கு இடைவிடாது சுஸ்ரூஷைகள் செய். பதியினுடைய மனோரதங்களை இங்கிதங்களால் அறிந்து, அவனுக்கு மனோனுகூலையாக விருந்து காரியா காரியங்களில் அவனைப் பின்பற்றினவளாகவும் அனுசரணையாகவும் இரு" என்று பலவித புத்திமதிகளைச் சொன்னார்கள். சீதையினுடைய தோழிகளும், அவளை வளர்த்த வயதான ஸ்திரிகளும் அத்யந்த ஸ்நேகத்துடன் கோமளமான ஹ்ருதயத்துடனும் அழகான சொற்களாலும் ஸ்திரி தர்மம்பற்றி அவளுக்குச் சிறந்த புத்திமதிகளைச் சொன்னார்கள். (1793)

இதேமாதிரி மிக்க மரியாதை கலந்த அன்புடன் மற்ற ராஜ புத்திரிகளையும் அந்த ராணிமார்கள் அடிக்கடி ஹ்ருதயத்தில் தழுவிக்கொண்டு, பிரேமையுடன் நல்ல வசனங்களைச் சொன்னார்கள். அடிக்கடி அவர்களைத் தழுவிக்கொண்டு, அவர்களின் பிரிவைத் தாங்கமாட்டாமல், அந்த ராணிமார்கள் "பிரும்மாவினால் ஸ்திரி ஜாதி ஏன் படைக்கப்பட்டது?" என்று வியாகுலமடைந்தார்கள். (1794)

அந்த சமயத்தில் ரகுகுலத்தின் உன்னதமாகப் பறக்கும் கொடியைப்போல விளங்கும் ஸ்ரீராமச்சந்திரன் தன் தம்பிமார்களுடன் ஜனகருடைய அரண்மனைக்கு வந்து அவரிடமிருந்து விடைபெற்றுக்கொள்ள வந்தார். (1795)

ஸ்வபாவமாக சுபலக்ஷணங்களை உடைய அந்த நான்கு ராஜ குமாரர்களையும் மீண்டும் பார்க்க ஆவலுடன் நகரத்தின் ஸ்திரி புருஷர்கள் ஓடிவந்தார்கள். அவர்களில் ஒருவன் சொன்னான். "இன்று அவர்கள் புறப்படுவதாக விருக்கிறது. விதேஹ ராஜா அவர்கள் புறப்படுவதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்திருக்கிறார்." (1796)

"நம் ஊருக்கு வந்திருக்கும் அதிதிகளும், தசரதருடைய நான்கு புத்திரர்களுமாகிற ராஜகுமாரர்கள் தங்கள் ஊருக்குப் போகிறார்கள். அவர்களுடைய மனோஹரமான ரூபங்களை பிரியத்துடன் உங்கள் நேத்ரங்களில் நிரப்பிக்கொண்டு சந்தோஷமடையுங்கள். தோழியே, எந்த பூர்வபுண்ணிய பாக்கியத்தாலோ

பிரம்மாவானவர் நம்மிடம் குளிர்ந்து நம்மை ஆனந்தப்படுத்து வதற்காக இந்த ராஜகுமாரர்களை நம்மிடம் அனுப்பிவைத்தாரோ அந்த பிரும்மாவுக்கு நன்றி.'' (1797)

"மரணம் அடையப்போகும் மனிதன் எவ்விதம் அம்ருதத்தை அடைந்து சந்தோஷிப்பானோ, நித்யதரித்திரனாக இருப்பவன் ஒருவன் கல்பக விருக்ஷத்தை அடைந்து எவ்விதம் சுகங்களை அனுபவிப்பானோ, அப்பேற்பட்ட சரணர், சர்வரிகரர், சாந்தர் ஸ்ரீநிதியாகிய பரம்பொருள் ஸ்வயமாகதானே நேரில் வந்து, தன்னை காட்டிக்கொடுத்து, நமக்கெல்லாம் சீதையின் காரணமாக தர்சனம் மனமுவந்து கொடுக்கிறார். அந்த பாக்யத்தை நாம் அவருடைய கிருபையால் அனுபவிப்போம்.'' (1798)

"நிரதிசயமான ஸ்ரீராமனுடைய சௌந்தர்யலாவண்யங்களை நம் ஹிருதயத்தில் தரித்து, நம்முடைய மனங்களை ஸர்ப்ப மாகவும் இந்த உதார ஹ்ருதயம் படைத்த மூர்த்தியின் ரூபத்தை அந்த ஸர்ப்பத்தின் மீது அழகாக வீற்றிருக்கும் ரத்னமணி யாகவும் வைத்துக்கொள்வோம்.'' இந்தவிதமாக சகல ராஜகுமாரர்களும் அங்கு கூடியிருக்கிற ஜனங்களுக்கு நேத்ர ஆனந்தத்தை உண்டுபண்ணி, ஜனகரின் மாளிகைகளில் பிரவேசித்தார்கள். (1799)

[தியானம்

ஹே ராமநாராயணா, சீதாலக்ஷ்மி, சீதையின் சிவந்த கால் களின் விரல்களில் பிரகாசிக்கும் ரத்னமயமான வெள்ளை சிமிட்டையைப் பார்த்து ரமித்துக்கொண்டிருக்கும் ராமா, அவளுடைய உதட்டின் அழகையும் ரத்னஒளியுடன் ஒப்பிட்டுப் பார்த்தும், அத்துடன், ஆஞ்சநேயரின் மென்மையான மலர் களின் அர்ச்சனையாலும், லக்ஷ்மணனுடைய அர்ச்சனை புஷ்பங் களாலும் சிவந்துபோயிருக்கும் சீதையின் பாதங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் ரமித்துக்கொண்டிருக்கும் ராமா, தனக்குக்கிடைத்த சீதையின் வாய் அம்ருதத்தின் சுவையினால் இன்புற்றிருக்கும் ராமா, என்னைப்பற்றி நீ நினைக்க உனக்கு ஏதப்பா அவகாசம்? ஹே வனமாலி, சீதையின் நோக்குதலான திருஷ்டி எல்லாம் உன்மார்பு பிரதேசத்திலிருக்கும் அந்த ப்ருகுவின் பாதத்தையும் உன்னிடமிருந்துவரும் பீத வாடையையும், உன்னை அலங் கரித்துக்கொண்டிருக்கும் துளசிமாலையையும் தானே. ஹே வனமாலி ராமா, பக்தர்களால் ஆஸ்ரயிக்கப்பட்ட சீதே, உங்கள்

திருஷ்டிகளில்படும் வனமாலையாகவாவது ரத்னகொலுசாக வாவது, அல்லது ஹே சீதை உன்கால் ஜிமிட்டியாவது நான் இருக்கக்கூடாதா? ஆஞ்சநேயர், லக்ஷ்மணர் ஆகிய மஹானு பாவர்கள் கேட்ட ரஸமான சம்பாஷணைகளை நானும் கேட்கக் கூடாதா? காமதேவரே, அப்ஸரஸ்கள் என்கிற என் ஹிருதயத் தில் குடிகொண்டிருக்கும் மன்மதனே, பிரும்மா முதலானவர் களாலும் அறியமுடியாதபடி அப்ரமேயரே, அவிநாஸியாகிற ஆத்மாவே, ஸம்பூர்ணபூதங்களைத் தாங்கும் பூதப்ருத், கோட்டைகள் போல சூழ்ந்திருக்கும் என்பாபக்கூட்டங்களையும் அக்ஞானக் கூட்டங்களையும் அழித்து, எனக்கு ஞானபலம் கொடுத்து, உங்களிடத்தில் சேர்த்துக்கொள்ளமாட்டாயா? தீப்தமூர்த்தி, பராசரரால் பலதடவைகள் ஸ்துதிசெய்யப்பட்ட ஸ்ரீவிஷ்ணோ, ஒவ்வொரு பதார்த்தத்தின் குணவிசேஷமாகிய அம்சம் எடுத்து, இவ்விதம் சராசரமனைத்தும் ஒளியாக விளங்கும் ஞானதிவாகரனே, எப்போது உங்கள் இருவர் களுடைய கிருபை கிடைக்கும்? உங்களுடைய பரபரப்பை கஜேந்திரன் திரௌபதி கண்டமாதிரி நான் எப்போது காண்பேன்?]

ரூபத்தின் கம்பீரம், அழகு, குளிர்ச்சி ஆகிய ஸர்வ அம்சங் களின் சேர்க்கை பெற்ற சமுத்திரம். அப்பேற்பட்ட நான்கு ராஜகுமாரர்களைக் கண்டு சகல ராணிமார்களும் சந்தோஷத் துடன் எழுந்திருந்து பரபரப்புடன் வரவேற்றார்கள். மாமி களான அவர்கள் எல்லோரும் மனத்தினால் ஆசீர்வதித்து அவர் களை மங்கள ஹாரத்தி எடுத்தார்கள். (1800)

ஸ்ரீராமனுடைய அதிப்பிரேமை அடைந்த ரூபத்தைக் கண்டார்கள். அவர்களும் மிக்க ப்ரேமையுடன் கலங்கினவர்க ளாக, அடிக்கடி அவருடைய கிருபையை வேண்டுபவர்கள் போல, அவளுடைய பாதசரணங்களை மனத்தால் அணுகினார் கள். ஹ்ருதயத்தில் ப்ரீதி அதிகரிக்க, அதை அடக்க முடியாமல் லஜ்ஜையற்றவர்களாக, கண்களில் தாரைதாரையாக ஜலத்தைப் பெருக்கிக் கொண்டு, (கோபஸ்திரீகள் "தங்கள்" கண்ணனை விட்டுப் பிரிந்த சமயம் எவ்விதம் ஸ்நேக வசத்தால் துடித்தார் களோ,) அதுபோல பரம காருண்யத்தாலும் பாக்ய கர்மங்களா லும் ஏற்பட்ட ஸஹஜமான ஸ்நேகத்தைத் தாண்டமுடியாமல் தத்தளித்தார்கள். (1801)

அந்த மஹாராணிகள் அந்த நான்கு ராஜகுமாரர்களையும் மங்கள வாசனைத்ரவியங்களால் ஸ்நானம் செய்வித்து, ஷட்ரஸங்

களுடன் விருந்து செய்வித்தார்கள். பிரேமையுடன் வெட்கமின்றி ஸ்ரீராமச்சந்திரனுடைய சீல நடத்தைகளையும் ஸ்நேக காருண்யத்தையும், அழகான குரலில் மதுரமாகப் புகழ்ந்தார்கள். அது மாதிரி பாக்யம் யாருக்குக் கிடைக்கும்? எப்படி விஸ்தாரமாக சொல்ல முடியும்? அச்சமயம் ஸ்ரீராமன் மிக்க வினயத்துடன் சொல்ல ஆரம்பித்தார். (1802)

"மஹா ராஜர் தசரதர் அயோத்திக்கு திரும்பச் செல்ல விரும்புகிறார். உங்களிடமிருந்து விடைபெற்றுக்கொள்ள எங்களை அனுப்பியிருக்கிறார். ஹே மாதாக்களே, பிரஸன்னமான மனத்துடன் எங்களுக்கு ஆசிர்வாதங்களுடன் உத்தரவு கொடுங்கள். எங்களை உங்கள் புத்ரர்களுக்கு சமமாகப் பாவித்து, ஸதா ஸ்நேக பான்மையுடன் இருக்கவேண்டும்." (1803)

இப்பேற்பட்ட வசனங்களைக் கேட்ட மஹாராணிகள் வியாகுலமடைந்தார்கள். பிரேமை வசம் அடைந்த அவர்களால் பேசமுடியவில்லை. தங்களுடைய குமாரிகளை ஹ்ருதயத்தில் தழுவிக்கொண்டு, அவர்களை அவர்களுடைய பதிகளான நான்கு ராஜகுமாரர்களிடம் ஒப்பிவித்து, மிக்க வினயத்துடன் அவர்களின் ரக்ஷண பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார்கள். (1804)

அதே வினய பாவங்களுடன் அவர்கள் சீதையை ஸ்ரீராமச்சந்திரனிடம் ஸமர்ப்பித்து கூப்பிய அஞ்சலியுடன் அடிக்கடி தழுதழுத்த குரலில் பிரேமை கலந்த வசனங்களைச் சொன்னார்கள். சீதையின் தாயார் ராமனைப் பார்த்துச் சொன்னாள், "எங்கள் அருமையான புத்ரனே, நல்ல ஞானம், பலம், குலம் ஆகிய ஸம்பத்துக்கள் கொண்ட ராஜகுமாரா, நாங்கள் சொல்வதை தயவு செய்து கேளு. உனக்கு எல்லோருடைய நடத்தையும் மனோரதங்களும் தெரியும். எங்கள் பரிவாரங்களாகிய ஸ்திரீ ஜனங்களுக்கும், மிதிலா நகர்வாழும் ஸகலருக்கும் எனக்கும், மஹாராஜர் ஜனகருக்கும், சீதையானவள் பிராணனுக்குச் சமம். இப்பேற்பட்ட ப்ராண ப்ரியையான சீதையை உன்னிடம் ஒப்பிவித்து, ஆகாரம், ஆரோக்யம், சுகம் ஆகியவைகளால் திருப்தி அடையப்படும் சரீரத்தைப் போல நாங்களும் உன்னிடத்தில், சீதையாகிய பிராணனை ஒப்பிவித்து, அழகாகக் காப்பாற்றுதல் என்கிற உனது உத்தமச் செய்கைகளினால் நாங்கள் எங்கள் சரீரங்களைக் காப்பாற்றி திருப்தி அடையச் செய்வோம். ஹே துளசிவனமாலி, ஸ்வாமி, இந்த ரத்னப்

பெண்ணின் சீலம், ஸ்நேகம் இவைகளைக் கண்டு இந்தப் பெண்ணை உன் வக்ஷஸ்தலத்தில் ஹிருதயபூர்வமாக ஏற்றுக் கொள். அவளும் உன் பதங்களை நாடும் கைங்கர்ய லக்ஷ்மியாக விளங்குவாள்.'' (1805)

'' நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் குண சமூகங்களால் நிரப்பிக்கொண்டு பூர்ண காமர்களாக இருங்கள். ஸௌலப்யம், ஔதார்யம், தயை ஆகிய குணங்களால் எல்லோராலும் விரும்பத் தக்கபடி இருங்கள். மனத்திற்குப்பிடித்த அன்னம் எவ்விதம் சரீரத்திற்கு ஸர்வ ஸம்மதமாவும், ஏற்றதாகவுமிருக்குமோ, அதுபோல நீங்கள் இருவர்களும் ஸர்வசம்மதராக, எல்லோ ராலும் விரும்பப்படுகிறவர்களாக, காமப்ரதர்களாக, இருங்கள். தாழ்ந்தவர்கள்கூட விரும்பும் பெரிய மனோரதங்களைப்பூர்த்தி செய்யும் பிரபுவாகவும் சிரோண் மணியாகவுமிருங்கள். உங்கள் இருவர்களுக்கும் பாவப்ரியம், அன்யோன்ய ஸ்நேகம், அனன் யார்ஹசேஷத்வம், அனன்ய போக்யத்வம் கொண்ட பரஸ்பர பிரேமை பாசம் என்றும் மங்களகரமாக விளங்கட்டும். உங்க ளுடைய பக்தர்களின் குணதோஷங்களைப் பார்க்காமல், குறை வின்றி எல்லா விஷயங்களிலும் அனுக்ரஹ சிந்தையுடனும், தயை யுடனும் விளங்கும் கருணைநாயகர்களாக நீங்கள் இருங்கள்.'' (1806)

[தியானம்

ஹே புருஷோத்தமராமா, ருத்ரரால் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீராமா, தியாகராஜரால் ராகரத்னமாலையாகிய உபநிஷத் அர்த்தங்கள், ஸுஸ்வரமாகச் செய்யப்பட்ட ராக ம்ருதங்க தாளங்களுடன்கூடிய கீர்த்தனைமாலையை ஆபரணமாகக் கொண்ட மஹா விபூஷணா, என்னால் சிறந்த பண்டங்களால் அர்ப்பிக்கப்பட்டு சேவைசெய்யப்பட்ட சீதாராமா, வஸிஷ்டர் அகஸ்தியர் ஆகிய இவர்களுக்குப் பிதாவான வருணனால் ஆராதிக்கப்பட்ட மஹா மூர்த்தியே, வருணனுடைய அம்சமான நீலன் என்கிற வானரத்தினால் சமுத்திரத்தை ஸேது பந்தனம் செய்தும், ஸ்ரீராமா, பிரஹஸ்தனை வதைத்தல் ஆகிய சிறந்த ராமகாரியங்களைச் செய்தும், எவ்விதம் உங்களுடைய நன் மதிப்பையும் அன்பையும் வருணன் பெற்றுக்கொண்டாரோ, அந்த வருணனுடைய சிபார்சினாலாவது உன் பெருமைகளை என்னிடம் ஒளிக்காமல் பிரத்யக்ஷமாக காண்பிக்கமட்டாயா? தர்மத்வஜரே, கருடவாஹனரே, ஹனுமத்வாஹனரே, ஆயர்பாடி

பெண்களும், நீளாதேவி எனப்படும் நப்பின்னையாலும், ஜாம்பவதி போன்ற பெண்ணரசிகளாலும் வலிய வரிக்கத்தக்க வடிவழகை உடைய மஹாபாகா, சீதைக்கு மிக்கப் பிரியமானதும், யாக்ஞ்யவல்கியரால் சிறந்த பிராம்மண மந்திரங்களால் அர்ச்சிக்கப் பெற்றதும், ஜனகரால் கொடுக்கப்பட்டதுமான கணையாழியை அணிந்துகொண்டு அழகாயிருக்கும் விரல் உடைய ஸ்ரீராமா, கோதண்டத்தால் அடையாளம் செய்யப்பட்ட விரல்களை உடைய உன்னுடைய விஸ்வபாஹுக்களை நான் நமஸ்கரிக்கிறேன். ஸ்ரீராமனால் கங்கணம் செய்யப்பட்ட சிறந்த மணிக்கட்டுள்ள சீதாதேவி, தவழும் சீலமாகவுமுள்ள உன் பாதங்களை நான் நமஸ்கரிக்கிறேன். எந்த சீதையின் ஹ்ருதயத்தில் ராமன் ஹம்ஸபக்ஷியாகவும் கையில் கிளியாகவும், வார்த்தை வசனங்களில் கோகிலமாகவும், நடை அழகில் சிம்மம், தோகை விரித்த மயிலாகவும், கம்பீரத்தில் கருடனைப்போல விளங்கும் ஸ்ரீராமனை, ஹே சீதே, உன் சகாக்களின் பெருமையால் வந்தடைகிறேன். ஸர்வ மேன்மைகளுக்கும் பிரமாணமாகவிருக்கும் சீதாராமா, என்னிடம் தயையுடன் இருக்கவேண்டும்.]

இவ்விதம் சொல்லிவிட்டு ஜனகரின் பட்டமகிஷி ஸ்ரீராம சரணங்களில் விழுந்து நமஸ்கரித்து, பேசாமல் நின்றாள். அவளுடைய வசனங்கள் பிரேமை என்கிற பொதிமணலில் சிக்குண்டு, மேலே வராமல் நின்றன. மாமியின் பிரேமை நிறந்த வசனங்களைக் கேட்டு ஸ்ரீராமன் மனதில் அதிக சந்தோஷமடைந்து அவளை அனுக்ரஹித்தார். (1807)

அடிக்கடி கைகளை கூப்பினவராக ஸ்ரீராமன் தன் மாமியை நமஸ்கரித்து அவளிடம் விடை கேட்டார். அவளுடைய ஆசிர்வாதங்களை அடைந்த பின்பு தன் தம்பிமார்கள் சகிதம் மீண்டும் நமஸ்கரித்து அவளிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். (1808)

அவர்கள் சென்ற பிறகு ஸ்ரீராமனுடைய அழகான மதுர பத்ரமூர்த்தியை ஹ்ருதயத்தில் தரித்துக்கொண்டு அந்த ராணிமார்கள் ஸ்நேக வசத்தினால் குளிர்ந்து போய்விட்டார்கள். பிறகு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அவர்கள் தன் குமாரிகளை அழைத்து தங்கள் ஹ்ருதயங்களோடு தழுவிக் கொண்டார்கள். (1809)

புத்ரிகளை அழைத்துக்கொண்டும் மறுபடியும் மறுபடியும் தழுவிக்கொண்டார்கள். அந்த தாய்மார்களுக்குள்ள ப்ரேமை ஸ்நேகம் கொஞ்சநஞ்சமில்லை. ராணிகளின் சகிமார்கள் அந்த

புத்ரிகளை தாய்மார்களிடமிருந்து பிரித்து அழைத்துச்சென்றுர் கள். இளம் கன்றுகளை நக்கிக்கொண்டிருக்கும் பசுக்களை எவ் விதம் பிரிப்பார்களோ, அதுபோல அவர்கள் அந்த கன்னிகை களை தாய்மார்களிடமிருந்து பிரித்தார்கள். (1810)

அந்த பிரிவு சம்பவங்களைப்பார்த்த சகல ஸ்திரி புருஷர்கள் கள் வேலைக்காரர்கள் அந்தப்புரத்தில் உள்ள ஸ்திரிகள் யாவரும் பிரேமையினுல் கலக்கப்பட்டு, சீதையின் பிரிவைத் தாங்கமாட் டாமலிருந்தார்கள். விதேஹபுரியே கருணையாலும் விரஹதாபத் தினுலும் அலங்கரிக்கப்பட்ட மாதிரியாக விளங்கியது. (1811)

ஜானகி தேவியினுடைய உயிர் சகாக்களான கிளி, மைனு பக்ஷிகள் தங்கள் கூட்டில்களிலிருந்து தங்கள் வியாகுலத்தை தெரிவிப்பதற்காக கத்த ஆரம்பித்தன. ''வைதேஹி எங்கே இருக் கிருள்?'' அந்த வசனங்களைக் கேட்ட ஸாது ஜனங்களின் ஹ்ருத யம் பிரேமை கலந்த சோகத்தினுல் தளர்ந்தது. அவர்கள் மிக்க தைரியத்துடன் தங்கள் மனத்தை கட்டுப்படுத்திக்கொண்டார் கள். (1812)

பக்ஷி, மிருகங்கள் இவ்விதம் வியாகுலப்பட்டு தவித்துக் கொண்டு இருக்கும்போதும் மனுஷ்யர்களின் தீனதசையப்பற்றி எவ்விதம் வர்ணிக்கமுடியும்? அந்த சமயம் தன் பந்துக்களுடன் ஜனகர் அவிடம் வந்தார். ப்ரேமை வெள்ளம் அவர் கண்களில் பொங்க, குரல் தழுக்க அவர் நின்றுகொண்டிருப்பதை எல்லோ ரும் கண்டார்கள். (1813)

அந்த ஜனகர் பரம வைராக்யவான் என்று சொல்லப்படு கிருர். அப்பேற்பட்ட வைராக்யமனிதன் சீதையைக்கண்டு மிக்க தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, அவர்களையும் மனம் தேற்றி வைத்துக்கொண்டிருந்தார். ஜானகியை அவர் மார்பில் தழுவிக்கொண்டு விட்டுப்பிரியும்போது ப்ரேமை பாசத்தினுல் கட்டப்பட்டு, அவருடைய பலமாகிய ஞானத்தையுமிழந்து, அவர் வாய்விட்டு கதற ஆரம்பித்தார். அவருடைய அந்தஸ்தையும் ஞானத்தையும் மறந்து வெட்கமில்லாமல் அழுதார். (1814)

மஹாபுத்திமான்களாகிய மந்திரிகள் அவரைத் தேற்றினுர் கள். சமயத்தை அறிந்துகொண்டு அந்த உத்தம அரசர் தன் வருத்தங்களை அடக்கிக்கொண்டார். அடிக்கடி தன் புத்ரிகளை ஹ்ருதயத்தில் தழுவிக்கொண்டு மிக்க அழகாக அலங்கரிக்கப் பட்ட பல்லக்குகளை வரவழைத்தார். (1815)

சகல பரிசாரக ஜனங்களும் ப்ரேமை வசம்அடைந்தவர் களாகத் தோன்றினுர்கள். பிறகு ராஜா அழகான முகூர்த்த

  

வேளையில் சித்த ஜனங்களால் சேவிக்கப்படும் கணேச மூர்த்தியை தியானம் செய்துகொண்டு கன்னிகைகளை பல்லக்குகளில் ஏற்றிவைத்தார். (1816)

[தியானம்

ஹே ராமா சீதாராமா, உலகங்களை வயிற்றில் வைத்துக் காப்பாற்றும் வாசுதேவா, விளையாட்டாக ரக்ஷணம் செய்தும், அழித்தும் காப்பாற்றியும், உனக்கு விரோதமானவர்களை அழித்தும், அவர்களின் கர்வங்களைப் போக்கும் புரந்தரா, உன் பக்தர்களிடம் விசேஷமாக அன்பு வைத்து அனுக்ரஹிக்கும் தேவா, கருடனுடைய வேதமயமாகிய உடம்பை தனது வாகனமாகக்கொண்ட ராமா, பிருஹஸ்தன் வதத்திற்குப்பின் யுத்தம் தீவிரமாகச் செய்ய வந்த ராவணின் கர்வத்தையும், பலத்தையும் நஷ்டப்படுத்தின கோதண்டராமா, என் பர்த்தாவே, பானுவே உன் பக்தனுகிற வசுமஹாராஜனை பிராம்மண ரிஷியினுடைய சாபத்திலிருந்து காப்பாற்றி அவனை மீண்டும் கருடனுடைய உதவியினால் உபரிசரிசுவாகப்பண்ணிய வாயுவாஹனரே, ஹே விஷ்ணோ, உன் தாஸனுன என்னிடமும் கருணையுடன் இரும். த்ரயீமயி ரூபமாக விருக்கும் ருக்யஜுர் ஸாம வேதங்களை சக்தியாக உடைய ஆதித்ய ரூபரே, பராசக்தியாகிய வேதமயி, வைஷ்ணவ சக்தியுடன் பிரகாசிக்கும் பானுவே, என்னைப் போன்றவர்களைக் காக்கும் பிருஹத், என்னுடைய பாரத்தை வகிப்பவரே, அமுதத்தில் ஆசை வைத்த இந்திரனை திருப்தி பண்ணுவதற்காக அவதரித்த உபேந்திரரே, இந்திரனுக்குத் தோழர்களான மருத்துக்களைக் காப்பாற்றின மஹா உத்தமரே, காஸ்யப பிரியரே, என்னிடம் சதாகாருண்யத்துடன் இரும்.]

ஜனக மஹாராஜர் தன் புத்திரிகளனைவரையும் வாழ்த்தி நல்ல புத்திமதிகள் சொல்லி, ஸ்திரிதர்மத்தின் நுட்பங்களையும் ஆசார குல வழக்கங்களையும் எடுத்துச் சொன்னர். அநேக வேலைக்காரர்கள், வேலைக்காரிகள் ஆகியவர்களை வெகுமதியாகக் கொடுத்தார். சீதைக்கு அவள் நம்பிக்கைக்குப் பாத்திரமாக உள்ள சேவகர்களையும் வேலைக்காரிகளையும் பிரியமாகக் கொடுத்தார். அவர்கள் சீதையிடம் மிகுந்த அன்பு பாராட்டி அவளை விட்டு பிரிய மனமில்லாதவர்கள். (1817)

சீதை புறப்பட்டுப் போகிருள் என்கிறதைப் பார்த்த மிதிலை ஜனங்கள் அதிவியாகுலமடைந்தனர். சுபமங்களங்களைத்தரும்

நல்ல சகுனங்கள், ஏற்பட்டன. பிராம்மணர்கள், மந்திரிக் கூட்டங்கள் எல்லோரும் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். ராஜா ஒவ்வொருவரிடமும் சீதையை விடை பெற்றுக்கொள்ளச் செய்தார். அவர்கள் சீதையை ஆசீர்வதித்தார்கள். (1818)

குறித்த நல்ல நேரத்தை அறிந்து பேரிகை வாத்யங்கள் முழங்கின. மறுபடியும் கல்யாணத்திற்கு வந்தவர்கள் ரதங்கள், யானைகள், குதிரைகள் எல்லாவற்றையும் அணிவகுத்து நிறுத்தினார்கள். தசரதர் எல்லா பிராமணர்களையும் அழைத்து, அவர்களுக்கு யாத்ராதானம் கொடுத்து, அவர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்தைப் பெற்றுக்கொண்டார். (1819)

தாமரை மலருக்குச் சமமான அவர்களுடைய சரண கமலங்களில் தசரதர் நமஸ்கரித்து, அவர்களின் பாததுளிகளை தன் தலையில் அணிந்துகொண்டு, பிராம்மண ஆசீர்வாதங்களால் ஆனந்தமடைந்தார். அதன் பிறகு முதற்கடவுளான கஜானனை ஸ்மரணை செய்து, பிரயாணத்தைத் துவக்க ஆரம்பித்தார். சுபமான மங்களங்களை அளிக்கும் அநேக நல்ல சகுனங்கள் ஏற்பட்டன. (1820)

தேவதைகள் மிக்க சந்தோஷமடைந்து புஷ்பவர்ஷங்களைச் செய்தனர். அப்சரஸ்கள் நாட்டிய மாடினார்கள். அயோத்யா புரி ராஜனான தசரதர் துந்துபி வாத்யங்கள் முழக்கத்துடன் ஆனந்த பூர்வ அயோத்யாபுரிக்கு திரும்பிச் சென்றார். (1821)

மஹா ராஜர் தசரதர் மிக்க வினயத்துடன் மிதிலாபுரி ஜனங்களை திரும்பிப் போகும்படி வேண்டிக்கொண்டார். மிக்க மரியாதையுடன் ஏழைகளை அழைத்து, அவர்களுக்கு ஏராளமாக வஸ்திரங்கள், குதிரைகள், யானைகள் ஆகியவைகளை வெகுமதிகளாகக் கொடுத்தனர். எல்லோரையும் பிரேமையினால் திருப்தி படுத்தி இன் சொல்லாலும் மதுரமான குரலில் சொல்லப் பட்டவார்த்தை வசனங்களாலும் எல்லோரையும் ஆனந்தப் படுத்தினார். (1822)

அவர்களும் விதவிதமாகவும் விருதாவளி குலகீர்த்திகளைப் பாடி அரசரையும் ஸ்ரீராமச்சந்திரனையும் புகழ்ந்து, தங்களுடைய சுத்தமான ஹ்ருதயத்தில் ஸ்ரீராமனுடைய பேருருவத்தைத் தரிசித்துக் கொண்டார்கள். கோஸலாதிபதியான தசரதர் அவர்களை கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, தங்கள் ஊருக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக்கொண்டார். ஆனால் ஜனக மஹாராஜர் பிரேமை வசம் அடைந்தவராக திரும்பிச் செல்வதற்கு இஷ்டப் படவில்லை. (1823)

தசரதர் மீண்டும் அவரைக் கெஞ்சி வார்த்தைகளைச் சொன்னார், "ஹே ராஜன், ரொம்ப தூரம் வந்துவிட்டீர்கள். இப்போழுது நீங்கள் திரும்பிச் செல்லவேண்டும்." பிறகு அரசர் தசரதர் ரதத்திலிருந்து கீழே இறங்கினார். அவருடைய கண்களில் பிரேமையினால் நிரம்பப்பட்ட ஆனந்தக் கண்ணீர் கள் உதிர்ந்தன. அந்த ப்ரேமை பிரவாஹத்தைக் கண்டார் ஜனகர். (1824)

அப்பொழுது ஜனகர் கைகளைம் கூப்பிக் கொண்டு ஸ்நேக மாகிற அமிர்தத்தை கடைந்து எடுப்பதுபோல அழகான வசனங்களைச் சொன்னார். "நான் எவ்விதம் பேருபகாரம் செய்தவரும் உதார ஹ்ருதயம் படைத்த உங்களுக்கு எந்த வார்த்தைகளால் என் கிருதக்ஞதையை தெரிவித்துக் கொள் வேன்? ஹே மஹராஜ் உம்மால் நான் பெரிய ஸ்ரீமானாக ஆக்கப்பட்டேன்." (1825)

அயோத்யா நாதரான தசரதர் தன் பந்துவான ஜனகரை தகுந்தபடி சம்மானம் செய்தார். அவர்களுடைய பரஸ்பர பிரியமும், ஸ்நேகமும் அதிகமாயிருந்தன. அந்தப்ரியம் அவர் களுடைய ஹ்ருதயங்களால் அணைகட்ட முடியாதபடி பிரவாக மாக வெளிவந்தது. (1826)

ஜனக மஹாராஜர் அங்கே கூடியிருந்த முனிஜனங்களை நமஸ்கரித்து, அவர்களிடம் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண் டார். பிறகு வெகு மரியாதையுடன் அந்த நான்கு ராஜகுமாரர் களான மாப்பிள்ளைகளைத் தழுவிக் கொண்டார். அந்த நான்கு மாப்பிள்ளைகளும் ரூபத்திலும் சீலத்திலும், குண பொக்கிஷத் திலும் சிறந்தவர்களாக விளங்கினார்கள். அவர்களை தகுந்த வார்த்தைகளால் கௌரவப்படுத்தி அன்புடன் தழுவிக் கொண் டார். (1827)

அழகான பங்கஜமலருக்குச் சமமான கரங்களை உடைய ஜனகர் அஞ்சலி பண்ணிக்கொண்டு பிரேமையே ரூபமெடுத்து வசனங்கள் சொல்வதுபோல அழகான வார்த்தைகளை ஜனகர் சொல்ல ஆரம்பித்தார். "ஹேராம், நான் எவ்விதம் உன்னையும் உன் கீர்த்திகளையும் புகழுவேன்? அப்பா நீதானே, முனிஜனங் கள், உமையின் பதியாகிய மஹேஸர் ஆகியவர்களின் மனமாகிற மானஸ ரோவரில் ஹம்ஸபக்ஷியாக அழகாக நடந்து, அழகாக புன்சிரிப்பு செய்து, அவர்களை ஆனந்தப்படுத்துகிறாய். நானே அவன் (அஹம்ஸஃ) என்று ஒன்றாக தியானிப்பவர்களுக்கு ஸம்சார பந்தத்தை ஒழிப்பவராக இருக்கிறாய். ஸர்வபூதமாகிய

மஹேஸ்வரருக்கு ஆத்மாவாகவும் சொல்லப்படும் ஹம்ஸரும் நீரே. (1828)

"ஹே ஸ்வாமி, யோகி ஜனங்கள் உம்மைப் பார்த்த பின்பு க்ரோதம், மோஹம், அஹங்காரம் எல்லாவற்றையும் அறவே தியாகம் செய்துவிட்டு, ஸாயுஜ்யமாகிய முக்திக்கு உபாயமாக வைத்துக்கொண்டு, பக்தியோகத்தை அவலம்பித்தவர்களாக விருக்கிருர்களே, எந்த ஸர்வவியாபகர், உலகமெல்லாம் தமது உடம்பாகவும் அந்த உடம்பில் உமக்கே இயற்கையாகவுள்ள மங்கள ரூபங்களையும், சிறப்புக்களாகிய அத்யத்புதமான திவ்யாத்மஸ்வரூபம், திவ்யமங்கள விக்ரஹம், கல்யாண குணங்கள், மஹிமைகள் ஆகியவற்றைப் பரிபூர்ணமாகக் தரித்துக் கொண்டு, கடாக்ஷிக்கும் விஷ்ணு பகவானே, உமது ஸ்ருஷ்டியிலுள்ள சேதனர்கள் எல்லோரையும் உமது கல்யாண குணங்களாகிற பெருமைகளால் மேன்மை பண்ணி, அந்த அபிவிருத்தி அடைந்த கௌரவ மேன்மைகளால் தானும் மேன்மைப்பட்டு ஸர்வஸ்வதந்திரராக யிருக்கிறீர். வேத வேதாந்தங்களில் அறியப்படும் எந்த பிரும்மம் இருக்கிறதோ, அந்த பிரும்மமே நீர். நீர் மானிட வேஷம் தரித்த போதிலும், உமது மகிமைகள் அதனுல் மறைக்கப்பட்டிருந்த போதிலும், என் மனதில் எப்பேற்பட்ட மஹா கருணையால், என்னுடைய ஜிக்ஞாஸங்களின் பூர்ண பலனுக, ப்ருகிருதி, மஹத், அஹங்காரம், ஐந்து பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், புருஷன் எனப்படும் ஜீவாத்மா ஆகிய இவ்விருபத்தைந்து தத்வங்களின் முடிவில் இருபத்தாருவது தத்வமாக கருதப்படும் அவ்யக்த புருஷராக விளங்கும் ஸ்ரீமந் நாராயணரே, ஜனனமில்லாதவரும் என்றும் சாஸ்வதமானவரும் ஸநாதனருமான அவிநாஸியே, வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத ஆனந்த ரூபரே, ஸ்ருஷ்டிஸ்திதி, ஸம்ஹாரம் ஆகியவைகளுக்கு காரணமாகிற ஸத்வரஜஸ் தமஸ் குணங்களை வகிப்பவரே, தமது குணம்போல உன் தாஸர்களையும் தம்மிடத்தில் தங்கவைத்து தம்மிடம் ப்ராக்ருத குணங்கள் ஒன்றும் பற்ருத வண்ணம் இருக்கும் நிர்குணஸ்வரூபமே, குற்றமற்ற நிராமயரே, என்னிடம் மிகுந்த க்ருபையுடனும், அனுக்ரஹ புத்தியுடனும் சதா இருக்கவேண்டும்," (1829)

"மனதில் தியானம் செய்யப்பட்டும், வாக்குக்கு எட்டாத பரமாத்மாவே, விஸ்வரூபங்களாகிற பல ரூபங்களை எடுப்பதால் பிரமாணம் செய்ய முடியாமலும், புத்தியினுல், அதுவும் கிருபா

கடாக்ஷத்தினுல், (சஞ்சயன், திருதாஷ்டிரன், பீஷ்மர், துரோணர் போன்றவர்களுக்கு கடாக்ஷிக்கப்பட்ட) அருள் ஒன்றினுல் மாத்திரமே அனுமானம் செய்யப்படும் ஹ்ருஷீகேசரே, உம்முடைய மஹாசமுத்திரமாகிய மகிமைகளை வேத சாஸ்திரங்கள் வர்ணனை செய்ய முடியாமல் களைத்துப்போய் நிற்கின்றனவே; ஹே சச்சிதானந்தமே, சென்றது நடப்பது நடக்கப்போவது என்கிற மூன்று காலங்களிலும் ஏகரஸமாகியும், மகிமைகளினுல் தமக்கு ஒப்பாக யாவரும் இல்லாதவரும், சேதன சேதனங்கள் அனைத்துக்கும் ஸ்வாமியும், ஸர்வசேஷியும் ஸகலரையும் ஆளுகிறவரும், ஆதரிப்பவருமாகிய ஒருவர் என்று சொல்லப்படும் என் நாராயணரே.'' (1830)

''அப்பேற்பட்ட மஹாபுருஷராகிய நீர் என்னுடைய சமஸ்த சுகங்களுக்கு மூலகாரணமாகவிருக்கிறீர். என்னுடைய த்யான புருஷனுகவும், இப்பொழுது நேத்ரங்களுக்கு மஹானந்தத்தை உண்டுபண்ணுவதுமாகவும் நீர் விளங்குகிறீர். ஹே ஸ்வாமி, உம்முடைய பரதத்வத்தைப் பாராட்டாமல், வியப்பும் கர்வமும், அஹங்காரமும் இல்லாமல் உம்முடைய ஐஸ்வர்யங்களுக்கு எல்லாம் வரம்பு மீறுது, சீதையாகிற எல்லா சம்பத்துக்களையும் கொடுத்து, எனக்கு அனுகூலராகி, ஆஸ்ரிதனுன என்னை கடாக்ஷித்த கேசவரே, நீரே உம்முடைய பத்னிசகிதமாக என் கிருஹத்திற்கு எழுந்தருளி, எளியவனுன என்னையும், என் குலத்தையும், என் நகரத்தையும் மேன்மைப்படுத்தினவரே, உங்களைப் பெண்ணுகவும், மாப்பிள்ளையாகவும் அடைந்த பின்பு இந்த ஜகத்தில் என் ஜீவனுக்கு வேறு என்ன லாபம் வேண்டியிருக்கும்?'' (1831)

''ஐயா, என்னிடம் மிக்க ஊக்கத்துடனும், சிரத்தையுடனும் மஹா கருணையைக் காட்டின வள்ளலே, என்னை உன் பொருள் என்று நீரே தயையுடன் ஆட்கொண்ட ஸ்ரீதரரே, உம்முடைய கற்பக வனமாயிருக்கும் கீர்த்தி பிரபாவங்களை நாதரூபமெடுத்த சாரதாதேவி, பக்தி, கைங்கர்யம் ரூபமெடுத்த ஆதிசேஷன் கோடிக்கணக்கான கல்பங்களில் கானம் செய்தும்கூட பூர்த்தி அடையமாட்டார்கள்.'' (1832)

''அப்பேற்பட்ட மஹாத்மாவாகிய ரகுநாதரே, தயவு செய்து பொறுமையுடன் என் வார்த்தைகளை அங்கீகரியுங்கள். என்னுடைய சௌபாக்யங்களான ஸ்ரீநிதிகளையோ, உம்முடைய பரஸ்வருபத்தின் வ்யூகவிபவ அவதாரங்களின் லக்ஷ்மி சம்பத்துக்களையோ நான் வர்ணனை செய்து அக்கரை அடைய முடியுமா?

ஏதோ எனக்குத் தெரிந்தவரையில் சொன்னேன். அதுவும் அத்யந்த சிறிதளவில் காட்டப்பட்ட ப்ரேமையை பெரிய உபகார பூஜையாக நினைக்கும் கிருதக்ஞரே, என்னிடம் பிரஸன்னமான மனத்துடன் இரும். உமக்கு அடிமை பூண்டிருப்பதே என் இயற்கை என்பதை அறிந்து, ஸம்சாரியான என்னால் தற்செயலாகச் செய்யப்பட்ட உபசாரத்தை மறவாமல் நினைத்துக் கொண்டு என்னை ரஷித்து அருளவேண்டும்.'' (1833)

''அடிக்கடி கைகளைக் கூப்பி நான் பிரார்தித்துக்கொள் கிறேன். என் நிலை மறந்து உம்முடைய அச்யுத பாதசரணங் களில் சுக்ருத ப்ரணமம் செய்கிறேன். நான் என்ன அபராதம் செய்தபோதிலும் என் நல்வினையை மாத்திரம் அறிந்து, என்னை சதா ரக்ஷிக்கவேண்டும்,'' என்று ஸர்வார்த்த காமனகச் சொல் லப்பட்ட ஜனகருடைய வசனங்களை பிரபு ஸ்ரீராமச்சந்திரன் கேட்டு அவைகளை அங்கீகரித்தார். புன்முறுவலுடன் அனுக்ரஹ பார்வையுடனும் ஜனகரை, ஸ்வாமி, புஷ்டிபண்ணினார். தாம் அனுகிரஹிக்கத்தக்கவர்களுக்கு தாமே அடையாளம் செய்த ஸ்ரீராமன் ஜனகரை மீண்டும் தம்மைப் பூஜிக்க எண்ணம் உண்டாவதற்கு காரணமாகிய ஸுக்ருதத்தையும் அவர்மேல் வர்ஷித்தார், அனுகிரஹித்தார். ஆச்சரியம், ஆச்சரியம். (1834)

[தியானம்

ஹே சீதாராமா, பக்தர்களை ஆபரணமாகக்கொண்ட கனகாங்கதி, தாபத்ரயங்களைப் போக்கும் சந்தனாங்கதி, ஸாது ஜனஜீவனா, உள்ளன்புடன் தியாகராஜர் துளசிதாஸர் போன்ற மஹான்களால் பூஜிக்கப்படும் சரணாகதவத்ஸலா, தியாகராஜ கிருதபாமாலை, துளசிதாஸர் செய்த ராமசரித மானஸரோவர் என்கிற ராமாயண காவியம் இவைகளால் விராஜித நவமணி, சீதையின் ப்ரியநாயகா, குமரக்கடவுளைத் தாங்கும் ஸ்கந்ததரரே, தோஷமில்லாதவரும், தோஷங்களைப் போக்கும் சூன்யரே, நாரத வால்மீகி ஆஞ்சநேயர்களால் பூஜாபலன் என்று கருதும் படி அவர்களிடம் நாடின மனதை உடைய பாவரே, துன்பங் களைப் போக்கி இன்பங்களைக் கொடுக்கும் தசரத நந்தனா, ஜனகருடைய தவப்பயனே, என்னை நீங்கள்தான் ரக்ஷிக்க வேண்டும். தேவகிக்கும் வசுதேவருக்கும் காட்டின சதுர்புஜங் களுடன் எனக்கு எப்போது உன் தரிசனம் கிடைக்கும்? சத்திரம் சாமரம்த்வஜம் சங்கு அங்குசம் போன்ற லக்ஷணங்களை உடைய உன் உள்ளங்கால்களையும், அம்ருதமுத்திரையாகிற

உன் அபய ஹஸ்தத்தையும், அரவிந்த லோசனங்களையும் எப்போது நான் காண்பேன்? பரதன் பூஜித்த சதுர்தச புவனங்களின் பேரழகை நான் எவ்விதம் அடைவேன்? அர்ஜுனனுக்கு ஸ்தாணுவாக நின்ற ஸ்திரரை நான் எவ்விதம் காண்பேன்? மிருதுபாஷண, எப்போது என்னிடம் பேசப்போகிறாய்?]

ஜனகருடைய பக்தி பூர்ணமான வினயதிகளையும் ஸ்ரீராமனுடைய அனுக்ரஹ பார்வையையும் கண்ட பிதா தசரதர், குரு விஸ்வாமித்திரர், குலகுரு வஸிஷ்டர் ஆகிய எல்லோரும் " நல்லது, நல்லது " என்று ஆமோதிக்க, ஜனக மஹாராஜரை வெகுவாக சம்மானித்தார்கள். பிறகு ஜனகர் பரதனைத் தழுவிக் கொண்டு, உச்சிமுகந்து ஆசீர்வதித்தார். (1835)

லக்ஷ்மணனையும் சத்ருக்னனையும் சந்தித்து, அவர்களையும் தழுவிக்கொண்டு ஆசீர்வதித்தார். அவர்கள் இருவர்களும் ஜனகரிடம் மிக்க அன்பைக்காட்டி, அவரிடமிருந்து உத்தமமான (பாகவத) ஆசீர்வாதங்களைப் பெற்றார்கள். (1836)

ஜனகர் எல்லோரையும் அடிக்கடி வினயம் செய்கிறவராகவும், மீண்டும் ரகுபதியின் ஸ்நேகத்தை விரும்புகிறவராக அவரிடம் சென்றார். ரகுநாதனும் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு, தன் தம்பிமார்களுடன் சென்றார். ஜனகரின் புண்யங்களினால் சம்பாதிக்கப்பட்ட குரு கிருபை என்கிற சொல்லுக்கு மூர்த்தியாக விளங்கும் விஸ்வாமித்திரருடைய பாதசரணங்களைப் பற்றிக் கொண்டு தன் முடியினால் அவரை நமஸ்கரித்து, கண்களில் ஆனந்த கிருதக்ஞை ஜலங்கள் வழிய, தழுதழுத்த குரலில் சொல்ல ஆரம்பித்தார். (1837)

" ஹே முனிவரதரே, ஸ்ரேஷ்டரே, தங்களுடைய சுபமான தரிசனத்தால் கிடைக்கக்கூடாதது ஒன்றுமில்லை. பாவனரே, கங்கை யமுனை புஷ்கர தீர்த்தங்களைப்போல தீர்த்தகரரே, என் பாவங்களைப்போக்கி, சுக்ருத பலன்களை அளிக்கும் அஸ்வினி குமாரர்களைப்போல என் மனதில் மஹத்தான விஸ்வாச நம்பிக்கையை அளித்த வேதஸ்வரூபரே, மனிதன் விரும்பும் பரமசுகம், பரிசுத்தமான கீர்த்தி பிரபாவங்கள், லோகபதித்வம் ஆகியவைகளில் ஸர்வசம்மதராகவிருந்து எல்லோராலும் அன்புடனும், வெகுமானத்துடனும் ஒப்புக்கொள்ளப்படும் ஸ்ரேஷ்டராக விருப்பவரும், இந்திரனுக்குக்கூட கிடைக்காத மனோரதங்களும் அடையப் பெற்று தங்கள் கிருபாதிருஷ்டியினால் ஹே ஸ்வாமி, நான் அலங்கரிக்கப்பட்டேன்." (1838)

"என் ஸ்வாமியே, குலநாயகா, எப்பேற்பட்ட மஹத்தான பாக்கியங்கள் தங்களால் எனக்கு கிடைத்திருக்கின்றன, தங்களுடைய திவ்யமூர்த்தியின் பின்னல் சர்வசித்திகளும் அனுசரித்து பின்வருகின்றன. ஹே தயாநிதி, நான் எவ்விதம் உம்மை புகழுவேன்? எவ்விதம் என் கிருதக்ஞதையை தெரிவிப்பேன்? என் மனது, என்வினயம், என்சரீரம் தங்கள் பாதங்களை நாடி தங்களை கௌரவிக்க விரும்புகிறது." இந்த பிரகாரம் ஜனகமஹாராஜர் அதிவினயத்துடன் பூமியில் விழுந்து அவரை சுக்ருதப்ரணமம் செய்து, அவரால் வெகுமானிக்கப்பட்டார். கௌசிக முனிவர் அதிக ஸ்நேகத்துடன் அவரை ஆசீர்வதித்தார். அதன்பிறகு ஜனகர் திரும்பிச் சென்றார். (1839)

அதன் பிறகு பராத் ஊர்வலம் அயோத்திக்குப் புறப்பட்டது. சிறியவர்கள், பெரியவர்கள் எல்லோரும் சந்தோஷத்துடனும் சென்றார்கள். போகும் வழியிலுள்ள கிராமத்து ஸ்திரி புருஷர்கள் ஸ்ரீராமனுடைய நிரதிசயமான அழகைக் கண்டு தங்கள் நேத்ரங்களை அவனுடைய ரூபத்தினல் நிரப்பிக் கொண்டார்கள். (1840)

நடு நடுவே தங்குபவர்களையும், மார்க்கத்தில் உள்ள சகல ஜனங்களுக்கும் சுகத்தை தருபவர்களாகவும் இருந்த பராத் ஜனங்கள் பவித்திரமான தினத்தில் அயோத்யாபுரி சமீபம் சென்றார்கள். (1841)

பேரிகைகள் பலமாக முழங்கின. மத்தளங்கள் டோலக்குகள் எல்லா வாத்தியங்களும் வாசிக்கப்பட்டன. குதிரை யானை இவைகளின் கர்ஜனை சத்தங்கள் கேட்கப்பட்டன. விசேஷமாக த்வனிக்கும் ஜால்ரா, தாளவாத்தியங்கள், ஒருபக்கம் வாசிக்கும் மத்தளங்கள், காதுக்கும் மனத்திற்கும் இனிமையானதும் சுகமான ராகங்களில் ரம்யமாக வாசிக்கப்பட்டன. (1842)

[தியானம்

ஹே சாகேதராமா, ஸாது ஜனஜீவனு, மஹா புருஷ லக்ஷணங்கள் வாய்ந்தவனே, திருமகளின் வடிவழகில் மூழ்கியிருக்கும் ஸ்வக்ஷரே, பிராட்டியே ஆசைப்படத்தக்க திவ்ய மங்கள ரூபரே, உன்ரூபத்தைப்பார்த்த பின்புகூட என்மனது லயமடையமாட்டேன் என்று மறுக்கிறதே, சுபேக்ஷணர் என்கிற உம்முடைய ஸௌலப்ய ஸ்வரூப மேன்மைக்குத் தகுந்த குளிர்ந்த பரந்த நீண்டுமிருக்கிற ஸரஸிருஹேக்ஷணு, அந்த கண்களுக்கு

  

விலக்ஷணமாகவுள்ள கடாக்ஷமே யாவருக்கும் மங்களங்களை விளைவிக்கும் ஸ்வபாவம். அப்பேற்பட்ட அரவிந்த லோசனங்களை என்மீது திருப்பமாட்டேன்கிருயே. சம்சாரத்தில் தப்த கர்மங்களிலிருந்தும் மனோவாஞ்சைகளிலிருந்தும் எப்போது எப்படி விடுபடுவேன்? காமாக்ஷி, நீ எவ்வளவு ஞானபலத்துடன் சிவனுடன் சேர்ந்து ஐக்கியமாகிற ஸ்தூலசூக்ஷ்ம சரீரத்தையும் ஹ்ருதயத்தையும் விரும்பி அடைந்தாய்? நாரதர் எவ்வளவு சிரமப்பட்டு உன்சேர்க்கையே மிகச் சிறந்தது என்று கண்டு பிடித்து தன் சிஷ்யர்களுக்குச் சொன்னுர். அந்த சிஷ்யரில் ஒருவரான தியாகராஜர் உன் பக்திதான் ஒரு பெரிய மஹாதபஸ் என்றும், உன்னுடைய கார்ய காரணங்களை அறிந்து, நாம் செய்யும் கர்மாக்களை ஆதிகாரணமாகிய உன்னிடம் அடக்கி, சமர்ப்பித்து, உனக்கு என்போன்ற சேதனர்களை விட்டு ஸர்வக்ஞத்வம் என்கிற பட்டத்தை கொடுக்கச் சொன்னுர். அதுமாதிரி, என் ஆசாரியர்களும் சொன்னுர்கள். சம்புவும் ஆலகால விஷத்தைக் குடிக்கும் சமயம் கூட "நாராயண பிரியத்திற்காகக் குடிக்கிறேன்," என்று சொன்னுர். அவ்விதம் மனப்பான்மையுடன் வரும் என்னையும், தாயே, திரிபுரசுந்தரி, கௌரி, சீதா ஸ்ரீபதிராமா, ரமாரமணு, ஸ்ரீவத்ஸா, மாரீசனுக்குக்கூட மஹா ஞானம் அளித்த தயாளா, என்னிடம் கருணையை காட்ட உனக்கு எப்போது பரபரப்பு வரப்போகிறது? நான்படும் துன்பங்கள் உன்காதில் விழவில்லையா? உன்னை விஸ்வபுக் என்று அழைக்கிருர்களே, அதன் காரணத்தை நீயும் அறிவாய்; நானும் அறிவேன்.]

அயோத்தியாபுரி ஜனங்கள் "பராத்" வந்துவிட்டது என்று கேட்டதும் பிரசன்ன மனத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். சகலருடைய மனங்களும் புளகாங்கிதமடைந்து, எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். அவர் அவர்கள் தங்கள் வீதிகள், வீடுகள், ஆர்ச்சுகள், கடைகள், சந்துகள், ராஜபாட்டைகள் உள்ள சதுரங்கள், நகரத்வாரம், வெளிக்கோட்டை வாயில்கள் எல்லாவற்றையும் நேர்த்தியாக அலங்கரித்தார்கள். (1843)

சகல தெருக்களிலும் அரகஜாபோல வாசனை திரவியங்களால் தெளித்து, அலங்கரித்தார்கள். எங்கே பார்த்தாலும் அழகாக விளங்கும் சதுரக்கட்டங்கள். தோரணங்கள், த்வஜங்கள், கொடிகள், மண்டபங்களுடன் கடைத்தெருக்கள் விளங்கின. அவைகளின் அழகுகளை வர்ணிப்பது ரொம்ப கடினம். (1844)

வழியில் பழங்கள் சகிதம் பாக்கு மரங்கள் வாழை மரங்கள் நடப்பட்டிருந்தன. தேங்காய் கொத்துக்கள், மாம்பழங்களும் மாமரங்களும் வகுளமாலைகள், கதம்ப புஷ்பங்கள், கமுகு பனை, தென்னை போன்ற தமால புஷ்பங்களின் காய்கள் மரங் களில் காய்த்து தொங்குவது போல வழிகளில் நடப்பட்டிருந்தன. எல்லாம் என்னென்ன பழங்களுடன் ப்ருதிவியில் விருக்ஷங்கள் அழகாக காய்த்து மலருமோ, அவை எல்லாம் அழகுடன் நடப் பட்டு அங்கு காணப்பட்டன. ஒவ்வொரு செடியின் அடியிலும் மிக்க வேலைப்பாட்டுடன் செய்யப்பட்ட மண்தொட்டிகள் மணி முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. (1845)

அநேக விதமான மங்கள கலசங்கள் ஒவ்வொரு வீட்டிலும் அழகாய் வைக்கப்பட்டிருந்தன. ஸ்ரீரகுநாதனுடைய வாசஸ்தல மாகிய அயோத்யாபுரியில் இருந்த அழகை தேவர்கள் பிரும்மா முதலான தேவதைகள்கூட பார்த்து ஆச்சரியப்படும்படி இருந் தது. (1846)

அந்தநேரத்தில் ராஜாவினுடைய மஹால் ரொம்ப சோபித மாக விளங்கியது. அதனுடைய அழகின் வேலைப்பாடுகள் காம தேவனைக்கூட மோஹிக்க வைக்கும்படி இருந்தன. எப்போதும் மங்கள சகுனங்கள் ஏற்பட்டுக்கொண்டும், மனத்தை அபஹரிக் கும் அழகுகள், விகஸித்துக்கொண்டும், திருப்தி ஏற்பட்டும் மேன் மேலும் ஐஸ்வர்யங்கள் விருத்தி அடைவிக்கக்கூடிய ருத்தி, ஸித்தி, ஸம்விருத்தி சுகங்கள், லக்ஷ்மி சம்பத்துக்களாகிற சிரத்தை, ஐஸ்வர்யங்கள், த்ருதி, துஷ்டி, புஷ்டி, மேதா, கிரியை கள், புத்தி, கெட்டகாரியத்தில் லஜ்ஜை, அழகிய தேஜஸ், கீர்த்தி கள், உத்தம சாந்தி ஆகிய அனுத்தம ஐஸ்வர்யங்கள் பிரபாவங் கள் நிரம்பினதாகவிருந்தன. (1847)

அந்த இடத்தில் எல்லாவிதமான உத்ஸாஹங்களும் ஆனந் தத்துடன் ஏற்பட்டன. ஒவ்வொரு ஐஸ்வர்யத்தின் அம்சமும் அழகான உருவம் எடுத்துக்கொண்டு தசரதரின் அரண்மனையில் தங்களுக்கு சீதாராமனின் அனுக்ரஹம் கிடைப்பதற்கு தபஸ் கிடப்பதுபோல விளங்கியது. ஸ்ரீராமச்சந்திரன் சீதை ஆகிய இவர்களின் கிருபாகடாக்ஷம் அவர்களுக்கு அதிக மேன்மையைக் கொடுக்கும் அல்லவா? அவர்களை தரிசனம் செய்வதற்கு பெரும் ஆசையிருக்காதா? (1848)

ஸுவாஸினியாகிற மணம் செய்த பெண்கள் கூட்டம் கூட்ட மாகச் சேர்ந்து ராம சீதாவை வரவேற்கச் சென்றார்கள். ஒவ் வொருவருடைய அழகும் காமதேவனுடைய பத்னியாகிய ரதியை

அலக்ஷ்யம் பண்ணும்படி அவ்வளவு நேர்த்தியாகவிருந்தது. சகல சுகமங்களங்களையும் அடைந்த ஸ்திரிகள். வெகுநேர்த்தியாக மங்கள திரவியங்களையும் ஹாரத்தியையும் கையில் வைத்துக்கொண்டு அழகாகப் பாடிக்கொண்டும் சென்றுர்கள். அவர்களைப் பார்த்தால் பாரதிதேவி (சரஸ்வதி) பல உருவங்கள் எடுத்துக்கொண்டு வந்தார்களோ என்று தோன்றியது. (1849)

ராஜாவினுடைய அரண்மனையில் எங்கு பார்த்தாலும் கோலாஹல சப்தங்கள் ஏற்பட்டன. அந்த மஹாசுபமானவேளையையும், அந்த நேரத்தில் ஏற்பட்ட அத்யந்த சுகங்களையும் யாரால் வர்ணிக்கமுடியும்? கௌஸல்யாதேவி, ஸ்ரீராமச்சந்திரனுடைய மாதா, மற்ற மாதாக்கள், எல்லோரும் ப்ரேமை வசம் அடைந்தவர்களாக மஹத்தான ஆனந்தமடைந்து, தங்களுடைய ஸ்திதிகளை மறந்தவர்களாகவுமிருந்தார்கள். (1850)

அவர்கள் கணேசமூர்த்தி, திரிபுராரியான சம்பு முதலிய தேவர்களுக்கு பூஜைசெய்து அதன் பிறகு பூதேவர்களான பிராமணர்களுக்குப் பூஜை செய்து அநேகவிதமான தான தர்மங்களைச் செய்தார்கள். தேவமனுஷ்யர்களை சந்தோஷிப்பிக்க வைக்கும் சகல மங்கள காரியங்களும் செய்யப்பட்டன. அந்த ராணிமார்கள் ஒரு பரமதரித்ரன் நான்கு புருஷார்த்தங்களை பகவத் கடாக்ஷத்தால் ஒரு சிரமமுமின்றி அடைந்தால் எவ்விதம் ஆனந்திப்பானே அவ்விதம் ஆனந்தமடைந்தார்கள். (1851)

சுகம், மஹத்தான ஆனந்தம், இவைகளில் மூழ்கி, மக்னப்பட்டகாரணத்தால் சகல மாதாக்களும் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை புளகாங்கிதத்தினுல் குளிர்ந்துபோய், அடியெடுத்து வைக்கமுடியாதபடி சிரமப்பட்டார்கள். சுபேக்ஷணரராகிய ஸ்ரீராமதர்சனம் கிடைப்பதற்கு அத்யந்த அனுராகம் படைத்தவர்களாகி அந்த ஸம்பவரான மஹாபுருஷனுடைய கிருஹப்பிரவேசமாகிற உத்ஸவத்தை ஆவலுடன் எதிர்பார்த்தவர்களாக ஒவ்வொரு சாமானையும் அழகாக எடுத்துவைத்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள் (1852)

அநேகவிதமான சங்கீதசப்தங்கள், வாத்திய இசைகள் கேட்கப்பட்டன. சுமித்திராதேவி ஆனந்தபூர்வமாக மங்கள ஹாரத்தி ஏற்பாடுகளைச் செய்தாள். மஞ்சள், தர்ப்பை, தயிர், இலைகள், புஷ்பங்கள், வெற்றிலை, பாக்கு இன்னும் மங்கள மூலவஸ்துக்கள் அநேகம் தயார் செய்தார்கள். (1853)

மங்களாக்ஷதைகள், நெற்கதிர்கள், கோரோசனை, அவல் பொறி, துளசி தளங்கள் கொண்டதும் அழகாகச் செய்யப்பட்ட

பொன்பூமாலைகள் எல்லாம் அழகாகவும், நேர்த்தியாகவும் வித விதமான வர்ணங்களால் சித்தரிக்கப்பட்டதும், ஸஹஜமான அழகுடன் விளங்குவதுமான சுவர்ண கலசங்களில் வைக்கப் பட்டு பரம மனோஹரமாக விளங்கினது. அவைகளைப்பார்த்தால், மதனதேவனுடைய அழகான பக்ஷிகள் வசிப்பதற்குப் பண்ணின கூண்டுகள் கட்டினமாதிரி தோன்றின. (1854)

மங்களகரமான சகுனங்களை சூசிப்பிவிக்கும் வஸ்துக்களைச் சொல்லிமுடியாது. சகல ராணிமார்களும் ஸம்பூர்ண மங்களங் களைத்தரும் ஸாமக்கிரியைகளை தயார் செய்தார்கள். ஆரத்தி வகை களும் சொல்லமுடியாதபடி பல விதங்களாயிருந்தன. அவர் களுடைய மனங்களும் ஆனந்தத்தால் சந்தோஷமடைந்தது. அவர்கள் மங்கள கீதங்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். (1855)

மங்கள வஸ்துக்களை தங்கத் தாம்பாளங்களில் நிரப்பி தங் களுடைய கமல புஷ்பத்திற்கு சமமான கோமளமான கைகளில் ஏந்திக்கொண்டு, அந்த தாய்மார்கள் ஆனந்த எல்லையை அடைந்து, அவர்கள் மங்கள ஆரத்திகளை எடுக்க மிக்க ஆவலு டன் இருந்தார்கள். அவர்களுடைய இளம் செடி கொடிபோல விருக்கும் சரீரங்கள் புளகாங்கிதமடைந்து, ஆவலுடன் ராம சீதாவை அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். (1856)

மங்கள தூபங்களின் புகை ஆகாசத்தில் பரவி எங்கு பார்த் தாலும் கருமையாகவிருந்தது. அதைப்பார்த்தால் சிராவண மாதத்தின் மேகக்கூட்டங்கள் கனரஹிதமாகச் சேர்ந்து விளங்கு வது போலிருந்தது. தேவதைகள் கல்பகவிருக்ஷத்தின் புஷ்பங் களின் மாலைகளை வர்ஷித்துக்கொண்டிருந்தார்கள். அந்த புஷ்ப விருஷ்டிகள் கொக்கு நாரைகளின் கூட்டங்கள் ஆகாயத்தில் அழகாக பறந்து சென்றுகொண்டு மனங்களை அபஹரிக்கும் அழகுபோல விளங்கின. (1857)

அழகான மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தோரணங்கள் இந்திரதனுஷ்போல அதிசுந்தரமாய் பல வர்ணங்களுடன் விளங் கின. வீடுகளின் பால்கனிகளில் தங்கிநிற்கும் அந்த சுந்தரிகள் சபல சித்தமுள்ள ஒய்யார அழகுகளுடன் தோன்றி மறையும் மின்னல்கொடிகள் போல பிரகாசித்துக்கொண்டிருந்தார்கள். (1858)

துந்துபி த்வனிகள் அடர்ந்த மேகக்கூட்டங்களின் கர்ஜனை களைப்போல கேட்கப்பட்டன. யாசக கூட்டங்கள் குயில்கள் போலவும், தவளைகள், மயில்கள் போலவும் ஆனந்தத்துடன் விளங்கினார்கள். தேவதைகள் சுகந்தமானதும் பவித்திரமானது

மான அம்ருத தாரையை வர்ஷித்துக்கொண்டிருந்தார்கள். அந்த அம்ருததாரையை எவ்விதம் வயல்கள் ஆசையுடன் விரும்புமோ, அதுமாதிரி ஸகல ஸ்திரிபுருஷர்களும் ராமசீதாவை தர்சனம் செய்ய ஆவலாக சுகத்துடன் காத்திருந்தார்கள். (1859)

[தியானம்

ஹேராமா, நரவ்யாக்ரா, விஸ்வாவஸு முதலிய கந்தர்வர்களாலும், க்ருதாசி போன்ற அப்சரஸ்களாலும் சேவிக்கப்பட்ட சீதா, நாராயணு, மதுசூதனு, அக்னிஷ்வார்த்தா, பரிஹிர்ஷிதாக்களால் ஆராதனை செய்யப்படும் ஸோமரே, ஒவ்வொரு யாகத்திலும் அதற்குத் தகுந்தபடி ஸோமரஸத்தை குடிக்கும் யஜமான ரூபியாகிய ஸோமபரே, சரதல்பத்தை அடைந்தவரும், மஹா மேதாவியும் தர்மபக்தி சாஸ்திரங்களில் நிபுணரும், எனக்கும், தர்மநந்தனருக்கும், பாண்டவர்களுக்கும், கிருஷ்ணன் முன்னிலையில் ஸநாதன தர்மமாகிய உன்னைப்பற்றிச் சொல்லிய பீஷ்மருக்கு விசேஷ ஞானக்கண்களையும், புறக்கண்களையும் அளித்த அர்ச்சிஷ்மான் என்று சொல்லப்படுகிறவரே, அர்ச்சராதி மார்க்கத்தில் அழைத்துச்செல்லும் சூரியன், சந்திரன், அக்னி ஸ்வரூபமாகவிருக்கும் அமானவரே, யமுனையில் ஜலக்ரீடை ராஸக்ரீடை முதலிய லீலைகளைச் செய்த ஸுயாமுனிவரே, கங்கை, கோதாவரி, யமுனை, காவேரி, வைகை போன்ற நதிகளால் சேவிக்கப்படும் சதிதேவியே, என் பதிதெய்வமே, மீனுக்ஷியாகிய உன் உருவத்தால் தாய்மீன் தன் குஞ்சுகளைக் கடாக்ஷிப்பது போல என்னையும் கடாக்ஷிக்கவேண்டும். பிரும்ம இந்திராதி தேவதைகளால் சேவிக்கப்படும் கோவிந்தா, சுரபியினுல் ஆஸிரிதமாக அடையப்பட்ட கோவிந்தரே, என் சரணுகதத்தை ஏற்றுக்கொண்டு ராஜ வரதராக என்னிடம் நாரதர், வால்மீகி, வியாஸர் இவர்களிடம் இருந்தமாதிரியும், ஸாரஸ்வதரிடம் இருந்ததுமாதிரியும் ஐயா. என்னிடமும் இருக்கவேண்டும், ராஜசேகரா, ராஜ திவாகரா, இந்துவதனு, ரவிலோசனு, கோமள ஹ்ருதயா, என்னை நீர்தான் ரக்ஷிக்கவேண்டும். வஸிஷ்டர் விஸ்வாமித்திரர் அகமரிஷணுதிகள் என்னை கடாஷிக்கவேண்டும்.]

நல்ல சமயத்தை அறிந்து குருவான வஸிஷ்டர், ஆக்ஞை தந்தார். அதைக்கேட்டு ரகுகுலமணியான ஸ்ரீராமன் சீதையுடனும் தன் தகப்பனுர், சகோதரர்களுடனும், அவர்களின் பார்யைகளுடனும் அயோத்யாபுரி பிரவேசம் செய்தார். மஹாராஜா தசரதர் சம்புவையும், கிரிஜாவையும், கணேசரையும்

ஸ்மரணே செய்தார். தன் பரிவார சகிதம் ஆனந்தத்துடன் நகரத்தில் பிரவேசம் செய்தார். (1860)

நல்ல சகுனங்கள் ஏற்பட்டன. தேவதைகள் துந்துபி வாசித்துக்கொண்டு புஷ்பங்களை வர்ஷித்தார்கள். அழகான மங்கள கீதங்களைப்பாடி, அதற்கேற்ப நாட்டிய நடனங்களும் ஆடினுர்கள். (1861)

மாகதர்கள், சூதர்கள், வந்திகள், நடநாட்யர்கள் அனைவரும் மூன்று லோகங்களையும் பரம பிரகாசமயமாகவும், சகலருக்கும் ஆனந்தத்தையும் விளைவிக்கும் ஸ்ரீராமச்சந்திரனின் புகழைப் பாடினுர்கள். ஜயத்வனிகள் வேதகோஷங்கள் அழகான வாணி யில் கேட்கப்பட்டன. (1862)

அநேக விதவிதமான வாத்யகோஷங்கள் கேட்கப்பட்டன. ஆகாசத்தில் தேவதைகளும் பூமியில் நகரத்து ஜனங்களும் ராமசீதா தர்சனத்தில் மிக்க பிரஸன்னமடைந்தார்கள். அந்த நகர ப்ரவேச ஊர்வலம் எவ்விதம் அழகுடனிருந்தது என்று யாரால் வர்ணிக்கமுடியும்? பரம ஆனந்தத்துடன் சுகத்தை அனுபவிக்கும் அவர்களுடைய மனம் எப்படியிருந்தது என்று யாரால் சொல்லமுடியும். (1863)

அந்தப்புரவாஸிகள் தங்கள் அரசரான தசரதருக்கு வந்தனம் செலுத்தினுர்கள். அதன்பிறகு ஸ்ரீராமனைக் கண்டு சந்தோஷித் தார்கள். நவரத்ன மணிகளையும் பட்டு பீதாம்பரங்களையும் ஸ்ரீராமன் முன்பு காணிக்கையாகக் கொடுத்தார்கள். நேத்ரங் களில் பிரேமை கண்ணீர்கள் நிரம்பினவர்களாகவும் சரீரங்கள் புளகாங்கிதமடைந்தவர்களாகவுமிருந்தார்கள். (1864)

நகரத்தின் ஸ்திரிகள், மங்கள ஆரத்தியை எடுத்தார்கள். அவர்களோடு இருந்த அழகான நான்கு குமாரர்களையும் கண்டு ஆனந்தித்தார்கள். அந்த பல்லாக்குகளின் அழகான படுதாக் களை விலக்கி நான்கு கல்யாணப் பெண்களைக் கண்டு ஆனந்தித் தார்கள். (1865)

இந்தப் பிரகாரம் சகலருக்கும் சுகத்தைக் கொடுக்கும் அவர்கள் அரண்மனைவாயிலுக்கு வந்துசேர்ந்தார்கள். ராஜ மாதாக்கள் மிக்க ஆனந்தமடைந்து பத்னிகளுடனிருந்த ராஜ குமாரர்களுக்கு தீபமங்கள ஆரத்திகளை எடுத்தார்கள். (1866)

அதன் பிறகு அடிக்கடி மங்கள ஆரத்திகளை எடுத்தார்கள். அவர்களுடைய ப்ரேமையையும் ஆனந்த வெள்ளத்தையும் யாரால் வர்ணிக்கமுடியும்? அநேக பிரகாரமான பூஷணங்கள், ரத்னமணிகள் பட்டு, வஸ்திரங்கள், அதே மாதிரி எண்ணிக்கை

யில் அடங்காத வெகுமதிகளை தாராளமனதுடன் கொடுத்தார்கள். (1867)

நான்கு அழகான குமாரிகளுடன் நான்கு ராஜகுமாரர்களைக் கண்டு தாய்மார்கள் ஆனந்தத்தில் மூழ்கி பிரும்மானந்தத்தை அடைந்தார்கள். அடிக்கடி சீதாராமர்களை அழைத்து அவர்களுடைய சுந்தர எழில்களை பருகினுர்கள். அவர்கள் தங்கள் ஜீவனம் சபலமாய்விட்டது, பூர்ணமாக சந்தோஷத்தை அனுபவித்தாய்விட்டது என்று கருதினுர்கள். (1868)

சீதையினுடைய பரம சௌந்தர்யத்தை அடிக்கடி பார்த்து சகிகள் எல்லோரும் அவளை ரொம்ப புகழ்ந்தார்கள். தங்களுடைய சுகிருதங்களாகிற புண்ணிய பாக்யங்களால் அப்பேற்பட்ட சீதையை பார்க்க முடிந்தது என்று கருதினுர்கள். தேவகணங்கள் க்ஷணபரம் புஷ்பங்களை வர்ஷித்துக்கொண்டு நடனம் ஆடிக்கொண்டும், அவரவர்களுடைய மேன்மை பொருந்திய சேவை சிஸ்ருஷைகளை பகவானுக்கு ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தனர். (1869)

நான்கு மனோஹரமான ஜோடிகளைக்கண்டு வாக்கு தேவதையான சரஸ்வதி தன் அறிவுப் பொக்கிஷத்தை அவர்களுக்கு உபமானமாகச் சொல்வதற்காக தேடினுள். ஒன்றும் சரியாக அவளுக்கு அகப்படவில்லை. ஒவ்வொன்றும் அந்த ஜோடிகளின் அழகைக்கண்டு துச்சமாகவும் லகுவாகவும் தோன்றியது. அவளுடைய கண்கள் ஸ்ரீராமச்சந்திரனுடைய உத்தம சௌந்தர்ய பாக்யங்களை எண்ணிக்கொண்டு அதன்மேலே லயித்தபடி தோள் கண்டார் தோளே கண்டார் என்று சொல்லும்படி ஒன்ருக இருந்தன. (1870)

வேதத்தின் பிரகாரமும் குலரீதியின் பிரகாரமும் அர்க்கிய பாத்திரங்கள் எடுக்கப்பட்டன. பிறகு பலவித உபசாரங்களுக்குப் பின்பு நான்கு புத்ரர்களையும் அவர்களுடைய மனைவிமார்களையும் அந்த தாய்மார்கள் ராஜ மஹாலுக்கு அழைத்துச் சென்ருர்கள். (1871)

நான்கு சிம்மாஸனங்கள் அழகாக சிங்காரிக்கப்பட்டிருந்தன. அவைகள் மன்மதனுல் வெகுசிரமத்துடன் தன் சொந்த கரங்களால் பண்ணப்பட்டதுபோல விளங்கின. அவைகளின் மீது அந்த மாதாக்கள் தங்கள் புத்ரர்களாகிற ராஜகுமாரர்களையும் உட்காரவைத்துக்கொண்டு, மிக்க மரியாதையுடன் அவர்களுடைய பவித்திர சரணங்களை அலம்பினுர்கள். (1872)

தூபங்கள், தீபங்கள், நைவேத்யங்கள் ஆகியவைகளுடன் அவர்கள் வேதவிதிப்படி பூஜை செய்தார்கள். அவர்களின் பாக்யலக்ஷ்மியான அந்த நான்கு மருமகப்பெண்களேயும் மங்கள கீதங்களால் ஆராதித்து, சகலவிதமான மரியாதைகளேச் செய்தார்கள். மாதாக்கள் கண் எச்சிலே அலம்புவதற்காக அடிக்கடி ஆரத்தி எடுப்பவர்களாகவும், அவர்களின் தலேகளின் மேல் மங்களமானதும் வாசனேயுள்ளதுமான வஸ்துக்களேச் சுற்றி வலம் செய்து, அழகான சாமர விசிறிகள், குடை பிடித்தல் முதலிய ராஜமரியாதைகளேச் செய்தார்கள். (1873)

[தியானம்

ஹே லக்ஷ்மணனுல் சேவிக்கப்பட்ட ராமா, சாகேத ராமா, தசரத நந்தனு, வெள்ளிமலேபோல நிறத்தை உடைய ஹலாயுதரே, தரணிதரனே, தாதா, விதாதா, தாதுருத்தமரே உம்மை தரிசித்தால் மூன்று லோகங்களேயும் பார்த்தது மாதிரி என்று சொல்லுகிருர்களே. அஹிர்புதன்யரே, அனுதிநிதனர் என்றும் யௌவன ரூபமாக இருந்து, பிறப்பு மூப்பு முதலிய மாறுதலில்லாமல் நித்யமான திவ்யரூபம் உடையவரே, ஹலாயுதரே, பலபத்ரரே, கருடனுல் உமது மகிமைகள் பூராவும் பார்க்கப்பட்ட அனந்தரே, ராமானுஜரே, என்பரமாசாரியரே, பகவானுடைய பாதுகைகளாகவும், ஓங்கார ரூபமாகவுள்ள விமானமாகவும், மஹா ஸயனமாகவும், குடையாகவுமிருப்பவரே, ராஜசிம்மாஸனமே, உமது மூச்சுக்காற்றுக்களாகிற மஹா கிருபையால் என் குண தோஷங்கள் நீங்கி பரம சுத்தஸத்வமான பகவானேயும் பிராட்டியையும் அடையவைக்க வேண்டும். என் தாபங்கள் நீங்கி நல்ல மனதுடனும் திடமான புத்தியினுலும் பகவானே அடையும்படி நீர் கிருபை செய்யவேண்டும். என் புண்யங்களாகிற பகவத் சேவைகளே ஏற்றுக்கொண்டு உமது ஆசீர்வாதத்தால் பகவத் கிருபையை அடையவிக்க வேண்டும். பவனரே, வனத்திலுள்ள மஹரிஷிகளின் தவங்களேப் பெற்ற ராமா, சீதா, என்மீது கிருபையுடன் இருக்கவேண்டும்.]

அநேக வஸ்துக்களே வெகுமதியாகவும் காணிக்கைகளாகவும் அளித்தார்கள். சகல மாதாக்களும் ஆனந்தத்திஞல் நிரம்பப்பட்டு அதிபாரத்துடன் விளங்கினர்கள். அவர்களுடைய ஆனந்தம் ஒரு யோகியினுல் சிரமப்பட்டு பரம தத்வத்தை அடைந்த பின்பு எவ்விதம் ஆனந்தமடைவாரோ, அதுபோல விருந்தது. சதா ரோகியாகவிருப்பவன் அம்ருதத்தை அடைந்து

அதை குடித்த பின்பு எவ்விதம் மனோ தேக நோய்கள் தீர்ந்து, எவ்விதம் சந்தோஷிப்பானோ, அதுபோல அவர்கள் விளங்கினார்கள். (1874)

ஒரு ஜன்ம தரித்திரன் சிந்தாமணி போன்று எதையும் கொடுக்கக்கூடிய ரத்னத்தை அடைந்தால் எவ்விதம் சந்தோஷிப்பானோ, ஒரு பிறவிக் குருடன் கண்திருஷ்டி லாபத்தை அடைந்து எவ்விதம் சந்தோஷிப்பானோ; மூடனான ஒருவன் சாரதா தேவியின் அனுக்ரஹம் பெற்று, உத்தம கவியினுடைய பிரபாவங்களை அடைவானோ; ஒரு சூர வீரன் கடும்யுத்தத்தில் ஜயித்து எவ்விதம் சந்தோஷிப்பானோ, அதுமாதிரி ராணிமார்களும் ஆனந்தத்தை அடைந்தார்கள். (1875)

நான் சொல்லும் வசனங்களால் ஏற்படும் ஆனந்தத்தைவிட கோடிக் கணக்கான குணமடங்குகளால் அந்த ராணிமார்கள் ஆனந்தமடைந்தார்கள். ஏனென்றால் ரகுகுலத்தின் சந்திரன் போல விளங்கும் ஸ்ரீராமன் தானும் விவாஹம் செய்துகொண்டு தன் ப்ரிய சகோதரர்களுக்கும் விவாஹம் செய்துவைத்து சொந்த வாசஸ்தலமாகிய அயோத்திக்கு அவர்களுடன் வந்தார். (1876)

லோக ரீதிப்படி அந்த தாய்மார்கள் அவர்களை வரவேற்று உபசாரங்கள் செய்ததைப் பார்த்த அந்த ராஜகுமாரர்கள் வெட்கப்பட்டார்கள். அவர்களுக்கு இது விநோதமாகவிருந்தது. ஆனால் பரம சௌசீல்யரான ஸ்ரீராமன் தன் தாய்மார்கள் காட்டிய பரம ப்ரேமையை மிக்க நல்லமனத்துடன் ஏற்றுக்கொண்டு, மனத்திற்குள் அவர்களை இவ்விதம் ஆனந்தப்படுத்தினதற்காக தானும் சந்தோஷம்கொண்டு சிரிக்கவும் செய்தார். (1877)

பூர்வ வாசனையால் ஒவ்வொரு ஜன்மந்தோறும் எழும்பும் சகல மனோரதங்களும் பூர்த்தி பெற்றவர்களான அந்த தாய்மார்கள் விதிப்படி தேவபித்ருக்களின் பூஜைகளைச் செய்தார்கள். தங்கள் ராமன், அவனுடன் கூடவிருந்த சீதை, அவனுடைய சகோதரர்கள், அவர்களின் மனைவிமார்கள் யாவரும் சந்தோஷமாயும் நித்ய மங்களமாயும், நித்ய ஸ்ரீயுடன் இருக்கவேண்டும் என்கிறதுதான் அவர்கள் மிக்க பிரேமையுடன் வேண்டிய வரம். (1878)

தேவதைகள் அதி சுந்தரத்துடன் அந்தரிக்ஷத்திலிருந்து மிக்க ப்ரேமையுடன் ஆசீர்வாதம் செய்தார்கள். மாதாக்கள் தங்கள் மேலாடையினால் தேவதைகளின் பிரசாதங்களையும் ஆசீர்வாதங்களையும் பெற்றார்கள். அதன் பிறகு தசரதர் எல்லா பராத் ஜனங்களையும் அழைத்து அவர்களுக்கு சவாரிசெய்வதற்கு

வாகனங்கள், வஸ்திரங்கள், மணிஆபரணங்கள் எல்லாம் வெகுமதியாகக் கொடுத்தார். (1879)

தசரதரின் ஆக்ஞையாகிற விடை பெற்றுக்கொண்டு ஒவ்வொருவரும் ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை ஹ்ருதயபுண்டரத்தில் தரித்துக்கொண்டு, அதனால் பரம லாபமாகிய ஆனந்தத்தை அடைந்து, தங்கள் வீடுகளை அடைந்தார்கள். அந்த அயோத்தியாபுரி வாசிகள் ஸ்திரி புருஷர்கள் யாவரும் ராஜாவினால் கொடுக்கப்பட்ட வஸ்திர ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களாக தங்கள் கிரஹத்திற்குச் சென்று ரகுகுல கீர்த்திகளை பலவிதமான கீர்த்தனங்களாலும் வாத்திய இசைகளாலும் பாடினார்கள். (1880)

யாசகர்கள் எதைஎதை வேண்டினார்களோ, அரசர் தசரதர் மிக்க பிரஸன்ன மனத்துடன் அவைகளை அவர்களுக்கு நிறையக் கொடுத்தார். ஸம்பூர்ணமாகக் கொடுக்கப்பட்ட ராஜசேவகர்கள் சகல வாஞ்சிதங்களும் நிறைவேறப்பட்டு, மிக்க ஸந்துஷ்டியை அடைந்தார்கள். (1881)

எல்லோரும் அரசரையும் ராஜகுமாரர்களையும் வந்தனம் செய்துவிட்டு அவர்களுக்கு ஆசீர்வாதம் செய்துவிட்டு அவர்களின் குணஸமூகங்ளின் பரந்த கீர்த்திகளையும் புகழ்ந்து பாடிக் கொண்டு சென்றார்கள். அந்தசமயத்தில் தசரதமஹாராஜர் பரம குருவான வஸிஷ்டர், பிராம்மணர்களுடன் சகிதமாக ராஜ க்ருஹத்திற்கு எழுந்தருளினார். (1882)

வஸிஷ்டரால் என்ன ஆக்ஞைகள் சாஸனங்கள் கொடுக்கப் பட்டதோ, அவைகள் எல்லாவற்றையும் தசரதர் செய்து முடித்தார். லோக வழக்கத்தின்படியும் வேத ரீதிப்படியும் எல்லாவற்றையும் அவர் செய்துமுடித்தார். பிராம்மணர்களின் கூட்டங்களைக் கண்டு தங்களுடைய சிறந்த பாக்யங்கள் என்று அறிந்து, அந்த ராணிமார்கள் அவர்களை மிக்க மரியாதையுடன் எழுந்திருந்து வரவேற்றார்கள். (1883)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, நேற்று இரவு நான் கொடுத்த பக்ஷணங்கள், பால் எல்லாவற்றையும் சாப்பிட்டீர்களா? பிரும்ம தேவருக்கும் மேலான தத்துவமே, பீஷ்மர் அடிக்கடி எனக்கும் தர்மபுத்ரருக்கும் உபதேசித்து நான் அறியவேண்டிய பரம் பொருளே, சந்திரனாகவும், ராகுவாகவும், இந்திரனாகவும் இருப்பவரே, என் நற்கருமங்களையும் தோஷங்களையும் அறிந்த

ஸர்வக்ஞரே, திரிநாபி எனப்படும் குளிர், வெப்பம், மழை ஆகிற மூன்று காலங்களையும், திரிஸாமா எனப்படுவரும், சத்வம் ரஜஸ் தமஸ் ஆகிற முக்குணங்களையும், பிரகிருதி, புருஷன், காலம் என்கிற மூன்று தலைகளையும் உடைய ரதம் உடையவரே, அறம் பொருள், இன்பம், வீடு என்கிற நான்கு குதிரைகள் உள்ளவரே, காடுகளையும், மலைகளையும், நதி, சமுத்திரங்கள், யாவையும் தாண்டிச் சென்று தர்மத்தின் பகைவர்களை அழித்த என் சத்குண ராமா, தமஸ் என்னும் குணத்திற்கு வெகுதூரத்தில் இருப்பவரே, கலியுகத்தில் அதர்மமாகவிருப்பவரே, சராசரங்கள் அனைத்தும் தாங்கும் கிருஷ்ணு, வர்ஷம், ருது, மாதம் பக்ஷம் இரவு பகல்கள் இவைகளில் உள்ளடங்கியதும் க்ஷணம்வரை உள்ளதுமான காலஸ்வரூபியே, சக்ரதரரே, மஹேந்திரரே, யாவராலும் அவமானப்படுத்த முடியாதவரே, கஹனரே, ஜீவன்களுடைய சுகதுக்கங்களை உம்முடைய நினைப்பினுல் நடத்துகிறவரே, என் ஈசரே, குண்டலங்கள் தரித்த காதுக்களால் என் ஸ்துதிகளைக் கேளும். உம் கருணையை வேண்டிநிற்கும் என்னை கடாக்ஷியும். சீதையின் லலாடத்தில் உள்ள கஸ்தூரி திலகத்தைப் பார்த்துக்கொண்டு ஸ்ருங்கார லீலைகள் செய்யும் ராமா, என் பசுபதியே, நிஜமான ம்ருகமான என்னை உன் கிருபைக்கு பாத்திரமாக்கி சீதைக்குக் கொடும். மாயமிருகத்தை வதைத்த ராமா, நாரதரால் உணரப்பட்ட புராண ரிஷியாகிய நாராயணு, நீர்தான் என் தஞ்சம்.]

சகல ராணிமார்களும் அந்த பிராம்மணர்களை ஸ்நானம் செய்வித்து, அதன் பிறகு ராஜா செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களையும் பூஜைகளையும் நிறைவேற்றி, அவர்களுக்கு விருந்து செய்து எல்லோரையும் திருப்தி செய்துவைத்தார்கள். அவர்களும் மனத்தில் திருப்தி அடைந்து ஸந்துஷ்டர்களாக எல்லோரையும் ஆசீர்வாதங்கள் செய்துவிட்டு வீடுதிரும்பினுர்கள். (1884)

பிறகு தசரதர் விதிப்படி காதிபுத்ரரான விஸ்வாமித்திரரை அநேகவிதமாகவும் அநேகதடவைகளும் ஆராதித்து, அவரை மிக்க வினயத்துடன் தண்டனிட்டு, கைகள் கூப்பி பிரேமை கிருதக்ஞதை நிறைந்த மொழிகளால் அன்பாகச் சொன்னுர். "ஹே ஸ்வாமி, (என் குலதீபமே, குலத்தின் அக்ரரே) உம்முடைய மஹாகிருபையினுல் நானும் என் குலமும், என் பாரியையும், என் குழந்தைகளும் சிறந்த பாக்யத்தை அடைந்தோம். என் மாதிரி பாக்யவான் யாரும் இருக்கமுடியாது. நான் எவ்விதம்

உம்முடைய பரமஞானத்தையும், கிருபையையும் எனக்குச் செய்த பேருபகாரத்தையும் புகழ்ந்து, உம்மிடமிருந்து எவ்விதம் கடன் விடுபட்டவன் ஆவேன்? தயாநிதே, உம்முடைய சரண தூள்கள் எங்கள் சிரங்களில் சதா அணியப்பட்டு உங்களுக்கு எக்காலத்திலும், எந்த சமயத்திலும், எந்த அவஸ்தையிலும் இருந்தாலும் அனுகூலர்களாகவும், அடங்கி நடப்பவர்களாகவும் உமது கிருபையை வேண்டுபவர்களாகவும், தாஸ்யர்களாகவும் இருப்போம். அதை தாங்கள் மிக்க கருணையுடன் அனுகிரஹிக்க வேண்டும்.'' (1885)

அவருக்கு ராஜமஹாலில் நல்ல வாசஸ்தலம் ஏற்பாடு செய்து கொடுத்தார். தன் சொந்த மேற்பார்வையில் ராணிகள் சகிதம் அவரை உபசரித்து நடத்தினார்கள். அதன் பிறகு தன் குலகுருவாகிய வஸிஷ்டரை நமஸ்கரித்து, கமல புஷ்பங்கள் மாதிரி இருக்கும் அவர் பாதங்களை மிக்க வினயத்துடன் பூஜை செய்து அவரையும் மிக்க திருப்தி செய்து வைத்தார்கள். (1886)

புது மாட்டுப்பெண்கள் சகிதம் உள்ள தன் ராஜகுமாரர்களை அவரை அடிக்கடி நமஸ்கரிக்கச் செய்து, ராஜாவும் ராணிமார்களும் வஸிஷ்டபகவானுடைய எல்லையில்லாத பிரபாவங்கள் உள்ள மங்கள ஆசிர்வாதங்களைப் பெற்றார்கள். (1887)

அரசர் மிக்க வினயத்துடனும் அத்யந்த பிரேமையுடனும் தன் புத்ரர்களையும் சகல சம்பத்துக்களையும், பகவான் வஸிஷ்டரிடம் ஸமர்ப்பித்து, அவருடைய மஹாப்ரீதிக்கு மிக்க முயற்சி செய்து பரம லாபங்களை அடைய விருப்பம் கொண்டவராக அவரை அடிக்கடி நமஸ்கரித்து, தாளும் தடக்கையுடன் நின்றுகொண்டிருந்தார். ஆனால் முனிநாயகரானவரும் பரம தயாளுவும், மிக்க மேலானவரும், ஜிதக்ரோதரும், ஆத்மவானுமாகிய பகவான் வஸிஷ்டர் தனக்கு எது தேவையோ, அவசியமோ அதை ஸ்வீகரித்துக்கொண்டு, எல்லோரையும் ஆசிர்வாதங்கள் செய்தார். (1888)

பிறகு சீதாதேவி சகிதமிருக்கும் ஸ்ரீராமச்சந்திரனை தன் ஹ்ருதயப் பெட்டியில் நிதியைப்போல கட்டிக்காத்து, குரு வஸிஷ்டர் மிக்க சந்தோஷத்துடன் பகவானுக்குச் செய்ய வேண்டிய பரம கைங்கர்ய பாக்யத்தை பிராட்டிக்கும் விஸ்வாமித்ரர் மூலம் அடைந்ததாகக் கருதி மனசந்தோஷத்துடன் சென்றார். விஸ்வாமித்திரரும் அவரிடம் அதே ப்ரீதியுடன் கிருதக்ஞதை செலுத்தியதையும் கண்டு, அதி ஆனந்தத்துடன் ராஜாவையும் அவர் குடும்பத்தினரையும் மங்கள ஆசிர்வாதங்கள்

செய்துவிட்டு தன் சொந்த கிருஹம் ஏளினுர். அதன் பிறகு அரசர் சகல ஸ்ரேஷ்ட பிராம்மணர்களையும் அவர்களின் ஸ்திரிகளையும் அழைப்பிவித்து, அவர்களுக்கும் சுந்தர வஸ்திரங் களையும் ஆபரணங்களையும் வெகுமதிகளாகக்கொடுத்து எல்லோரையும் திருப்தி செய்தார். (1889)

அதன் பிறகு நகரத்தில் உள்ள சௌபாக்யவதிகளான சுவாஸினிகளை (மணம் செய்தவர்களும் பாலையாகவிருப்பவர் களையும்) அழைப்பிவித்து, அவர்களுக்கும் அவரவர்கள் இஷ்டப் படி வேணும்கிற வஸ்துக்களையும் அளித்தார். அவர்களும் மிக்க வினயத்துடன் வேணும்கிற வஸ்துக்களை பெற்றுக்கொண்டு அரசரையும் அவர் குடும்பத்தினர்களையும் நன்ருக வாழ்த்தி ஞர்கள். (1890)

எந்த எந்த மரியாதைக்குரிய அதிதிகள் கல்யாணத்திற்காக வந்தார்களோ, அவர்களையும் நன்ருகத் தெரிந்துகொண்டு அழகாகவும் சரியான ரீதியிலும் பூஜைசெய்து அவர்களையும் கௌரவப்படுத்திஞர். தேவகணங்கள் ஸ்ரீரகுநாதனுடைய விவாஹ மஹோத்ஸவத்தை ஆனந்தத்துடன் கண்டு, புஷ்பங் களை வர்ஷித்தவண்ணமாக விருந்தார்கள். (1891)

வாத்திய துந்துபிகளை முழக்கிக்கொண்டு, பரம சுகத்தை அடைந்தவர்களாக, நிஜமான பாக்யவான்களாக தங்களை நினைத்துக்கொண்டு, தங்கள் லோகங்களுக்கு தேவகணங்கள் திரும்பிச் சென்ருர்கள். ஒவ்வொருவரும் பரஸ்பரம் ஸ்ரீராமச் சந்திரனுடைய மங்கள யசசுகளைப் பாடிக்கொண்டு, ஹ்ருதயத் தில் அத்யந்த ப்ரேமை விஸ்வாசத்துடன் சென்ருர்கள். (1892)

எல்லா விதிப்படியும் மிக்கப் ப்ரேமையுடனும் மரியாதைகளை எல்லோருக்கும் செய்துமுடித்து, பிறகு அவர்களுடைய பிரீதியை யும் கிருதக்ஞதையும் மங்கள ஆசிர்வாதங்களையும் அரசர் பூர்ண மாகப் பெற்றுக்கொண்டு அதிஉத்ஸாஹத்துடனிருந்தார். பிறகு அவர் அந்தப்புறத்திற்குச் சென்று அங்கு பத்னிமார்களுட னிருந்த தன் புத்ரர்களைப்பார்த்தார். (1893)

ஆனந்தத்துடன் தன் புத்ரர்களை மடியில் வைத்துக்கொண் டார். அந்த சமயம் அவர் அனுபவித்த பாக்ய சுகங்களை யாவரா லும் வர்ணிக்கஇயலாது. பிறகு தன் மருமகப்பெண்களையும் தன் மடியில் வைத்துக்கொண்டு அவர்களையும் பிரேமையுடன் உச்சி முகர்ந்து, அடிக்கடி சந்தோஷத்தால் தழுவிக்கொண்டு அவர் களையும் சந்தோஷிப்பித்தார். (1894)

[தியானம்

ஹே ராமா, தசரதநந்தனு, சீதாராமா, லக்ஷ்மி நாராயணு, பிராம்மணப்ரியா, அச்சுதரே, துர்வாஸ மஹரிஷியினுல் அனுக்ர ஹிக்கப்பட்டவரே, இனிய மணமுள்ள சீதையே, மூப்பு, பிணி, நிறமாறுதல் இவைகளின் துன்பங்களுக்கு அப்பாற்பட்ட மகிமை பொருந்திய சீதையே, பிராம்மணர்களை சொல்லாலும் கொடை யாலும் பூஜித்தவரே, பகதேவதையின் கண்களை உதிர்த்தவரும் சௌமியம், ரௌத்ரம் என்கிற சந்திர, அக்னி, முன்ருல் சூர்யன் என்கிற மும்மூர்த்தி ஸ்வரூபங்கள் உள்ளவரும், தமது லிங்கம் என்றும் அழியாமல் இருப்பதால் ஸ்தாணு என்று சொல்லப்பட்ட வரும், நித்ய பிரும்மசாரி வ்ரதத்தோடு இருப்பதாலும் பக்தர்களை அனுக்ரஹிப்தாலும் கூடலிங்கரென்றும், நாள்தோறும் சகல சரா சரங்களால் பூஜிக்கப்படும் மஹாலிங்கமாகிய சங்கரரை நான் உங்கள் ஸந்நிதியில் நமஸ்கரிக்கிறேன். அவருடைய மகிமைகளை யும் நாமங்களையும் வித்வான்களாகிற பிராம்மணர்கள் அறிகிருர் கள். கிருஷ்ணர் அடிக்கடி அந்த சர்வசக்திபடைத்த ஈஸ்வரரை பீஷ்மர் முன்னிலையில் தர்மபுத்ரருக்குச் சொல்லியிருக்கிருர். அவ ருடைய ஐஸ்வர்யம்தான் இந்திராதி தேவர்களிடம் இருப்பதாக சொல்லப்படுகிறது. வியாஸரால் பலதடவைகளால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டும் சதருத்ரீயத்தால் திருப்தி அடைபவரும் அந்த உமாமஹேஸ்வரர்களை தேவர்களுக்கு முதல்வர் என்கிறபடியால் ஜ்யேஷ்டர் என்று சொல்லுகிருர்கள். பெரும்சக்தி படைத்ததால் ஈஸ்வரர் என்றும், எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரராகவிருப்பதால் மஹேஸ்வரர் என்றும், ஆயுள், புஷ்டி, ஸந்துஷ்டி கொடுப்பதால் திரியம்பகர் என்றும் சொல்லப்படுகிருர். உமையினுல் சேவிக்கப் படுவதால் உமாபதி என்றும் அழைக்கப்படுகிருர். அப்பேற்பட்ட உமாபதி உங்கள் இருவர்களையும் சதா மனதில் தரித்து த்யானம் செய்கிருருமே. ஹே சீதாராமா, நீங்கள்தான் என்னிடம் சதா கருணையுடன் இருக்கவேண்டும்.]

எல்லோரும் ஒன்றுகூடி யிருந்ததைக்கண்டு சகல ராணிமார் களும் ஆனந்தமடைந்தார்கள். சகலருடைய மனத்திலும் ஆனந்தம் நிரம்பியது. பிறகு அரசர் சகல ராணிமார்களுக்கும் அங்குள்ள ஸ்திரி ஜனங்களுக்கும் எவ்விதம் விவாஹம் நடந்தேறி யது என்பதை விவரித்துச்சொன்னுர். எல்லோரும் விருப்பத் துடனும் ஆச்சரியத்துடனும் கேட்டு மகிழ்ந்தார்கள். (1895)

ராஜா ஜனகரின் குணசீல மஹத்துவங்களையும் அவருடைய ப்ரீதியான செய்கைகளையும், விதிப்படிக்கும், அழகாய் விவாஹம்

செய்த முறைகளையும், ஸம்பத்தின் விலாஸங்களையும் தசரதர் வந்திகள் புகழ்வதுபோல புகழ்ந்தார். சீதையின் முன்னிலையில் அவ்விதம் புகழப்பட்ட ஜனகரின் மேன்மைகளை எல்லோரும் கேட்டு ஆனந்தித்தார்கள். (1896)

பிறகு புத்ரர்களை ஸ்நானம் செய்துவைத்து, அரசர் பிராம்மண குரு பந்து ஜனங்கள் ஆகிய எல்லோரையும் இரவு விருந்திற்கு அழைத்து, பலவித உபசாரங்களுடனும், பலவகை அன்ன விசேஷங்களாலும் திருப்தி செய்துவைத்தார். இவ்விதம் மணி போனது தெரியாமல் விடியும்வரை அவர்களை இனிய அமுதுகளால் திருப்தி செய்துவைத்தார். (1897)

அழகான ஸ்திரிகள் மங்கள கானங்களைச் செய்தார்கள். அந்த விசேஷமான இரவு அதிசுகத்தைத் தருவதாயும், நினைத்துப்பார்ப்பதற்கு அதிமனோஹரமாயுமிருந்தது. விருந்திற்குப் பின் சகலரும் ஆசமனியம் செய்து, வெற்றிலை போட்டுக் கொண்டு சுகந்தமான சந்தன வாசனைத் திரவியங்களை பூசிக் கொண்டு மாலைகளையும் அணிந்துகொண்டு அதிஅழகாய் விளங்கினார்கள். (1898)

ஸ்ரீராமச்சந்திரனின் திவ்யமங்கள விக்ரஹத்தை அடிக்கடி பார்த்து மனத்தில் சந்தோஷமடைந்து, அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, ஒவ்வொருவரும் வீடு சென்றனர். அந்த பரம சுந்தர புருஷனைப்பார்த்து, ப்ரேமை, ஆனந்த வெள்ளம், ஹாஸ்ய பேச்சுக்கள், நூதனமாய் சொல்லப்பட்ட விஷயங்கள், மஹத்வம் வாய்ந்த சமாசாரங்கள், சமயத்திற்கு தகுந்தாற்போல சொல்லப் பட்ட விஷயங்கள் மனோஹரமாகிய உல்லாஸ அட்டஹாஸ பேச்சுக்கள் அவைகள் எல்லாவற்றையும், (1899)

ஆயிரக்கணக்கான சாரதாதேவி, சேஷபகவான், வேதங்கள் பிரும்மா, மஹாதேவர், கணேசபவான் ஆகியவர்கள் கூட எவ்வளவு சொன்னாலும் திருப்தி அடையமுடியாதபடி அந்த நேரம் விளங்கியது. (ராஸகிரிடையின் சமயம் கோபிகளுடன் கிருஷ்ணன் செய்த விளையாட்டுக்களும், அந்த சரத்காலத்தின் பூர்ண சந்திரனுடைய இரவும் இருந்தாற்போல, பகவான் ராமச்சந்திரன் தன் பாரியையுடன் சகல சேதனங்களையும் அனுக்ரஹித்தார்) அந்த சௌந்தர்ய லாவண்யங்களையும், சௌலப்ய ஔதார்ய விலாஸங்களையும் பரமகாருண்யகரான பகவான் சேதனர்களின் பால் தானே ஸ்வயமாகக்காட்டும் அன்பை கிருதக்ஞதையை நான் எவ்விதம் சொல்லக்கூடும்? ஆதிசேஷனாகிய மஹா உரகன்

செய்யும்·வேலையாகிய உலகங்களை தன் தலையில் சுமத்தல் என்கிற வேலையை ஒரு மண்புழு செய்து காண்பிக்குமா ? (1900)

அந்த அரசர் சகலருக்கும் விசேஷமாக ஸம்மானம் செய்து, இனிய மிருதுவான வசனங்களால் தன் ராணிமார்களை அழைத்துச் சொன்னார். "நம்மருமகப் பெண்கள். சிறியபெண்கள். புது வீட்டிற்கு முதன்முதலாக வந்திருக்கிறார்கள். இந்தப் பெண்களை நயனங்களைக் காப்பதுபோல நீங்கள் இவர்களை பரிபாலிக்க வேண்டும். உங்களால் இவர்கள் சுகத்தை அடையவேண்டும்." (1901)

"நமது புத்ரர்களும் அதிக களைப்பு அடைந்திருக்கிறார்கள். தூக்கம் அவர்களுக்கு வந்துவிட்டது. அவர்களை படுப்பதற்கு அழைத்துச் செல்லுங்கள்." இவ்விதம் சொல்லிவிட்டு அரசர் தன் சயனத்திற்கு எழுந்தருளினார். அவருடைய மனதில் ராம சரணங்களை நன்றாக பதிய வைத்துக்கொண்டு தன் விஸ்ராமத்தைப் போக்கும் விஸ்ராம பவனுக்கு எழுந்தருளினார். (1902)

அரசர் ஸ்வபாவமாகவே இன்சொல் சொல்பவர். இந்த சமயம் அவரால் அதிக ஆனந்தத்துடன், சொல்லப்பட்ட வசனங்களைக் கேட்ட ராணிமார்கள் தங்கத்தினாலும் ஜரிகைகளாலும் மணிகளாலும் அலங்காரம் செய்யப்பட்ட அழகான மஞ்சங்களை தயாரித்தார்கள். அதன் மேல் சுரபியினுடைய பால் நுறைகளைப் போல இனிமையானதும், ருசியுள்ளதும், பார்ப்பதற்கும், தொடுவதற்கும் மென்மையானதும், வெளுப்பானதுமான அழகிய படுக்கை விரிப்புக்களை அதிசுந்தரமாக விரித்தார்கள். அதுமாதிரி அநேக விரிப்புக்களைப் பிரித்து அந்த பஞ்சசயனத்தை மென்மையாக்கினார்கள். (1903)

அவைகளுடன் அழகான தலையணிகளும் வைக்கப்பட்டன. அவைகள் வார்த்தையால் சொல்லமுடியாதபடி அழகாக இருந்தன. மணிகளால் அலங்கரிக்கப்பட்ட பள்ளி அறையில் வாசனைப் புஷ்பங்களின் மாலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. வாசனைத் திரவியங்கள் எங்கு பார்த்தாலும் சுகந்தமான வாசனையைப் பரப்பிக்கொண்டிருந்தன, ரத்னதீபங்கள் அழகான ஆர்ச்சுக்கள் போல அழகாக சோபையை பன்மடங்கு அதிகரிக்கும்படி வைக்கப்பட்டன. அந்த திவ்ய தம்பதிகளின் இன்பச் சேர்க்கைக்காக செய்யப்பட்ட ஏற்பாடுகளை பார்த்தவர்களுக்குத்தானே தெரியும். பேசினாலோ, எழுத்தினாலோ, பிறருக்கு அறிவிக்க முடியாது. (1904)

இந்த விதமாக அழகான படுக்கை ஆஸனத்தில் ஸ்ரீராமச் சந்திரனை அழைத்துக்கொண்டு அதிப்ரேமையுடன் உட்கார வைத்தார்கள். அதன் பிறகு பிரபு ராமர் தன் தம்பிமார்களை அழைத்து அவர்களுக்கு உத்தரவு கொடுத்த பின்பு தன் சொந்த சயனத்திற்கு எழுந்தருளினர். அந்த உரகசயனுன க்ஷீராப்தி நாதன் திருமகளுடன் ஓங்கார விமானத்தினடியில் தன் பொற் பாதங்களை அழகாக நீட்டி பக்தர்களை கடாக்ஷிக்கும் ஸ்திரமான ஆசனமாகிய யோக நித்ரையை அடைந்தார். (1905)

[தியானம்

ஹே சீதா ராமா, ரெங்கநாயகி சமேதரங்க ராஜா, சுகந்த மான பள்ளியாஸனத்தில் என் குருநாதர்களான விஸ்வாமித்திரர் அகஸ்தியர், சுக்ரர், இந்திரன், இந்திராணி, லோபா முத்திரை, அத்ரி, அனுஸூயை, பீஷ்மர், தர்மபுத்ராதிகள், வஸிஷ்டர், அருந் ததி இவர்களால் சேவிக்கப்படும் பரம்பொருளே, மஹாலிங்கர் எனச் சொல்லப்படுபவரும் ஊர்த்வரேஜஸ்ஸூமான சங்கர ஹ்ருதயத்தில் ஹம்ஸப்பேடுபோல விளையாடுபவரே, தர்மத்தைக் கொடியாகக் கொண்டவளும், மிக்க அழகானவளும், மனோன் மணியும், என் அபிமான தேவதையுமான உமையால் ஆராதிக் கப்படுகிறவளே, மஹாலக்ஷ்மி அம்மா, நாராயணு, ஸத்யம் அஹிம்சை, பொறுமை, தானம், இவைகளை என் ஆசரணைகளாக வும், தர்மம், காலம் இரண்டும் அந்த ஒன்றே ஒன்று ஸநாதன மான கிருஷ்ணரைத்தான் குறிக்கும் என்று நாரதர், பிரும்மா, வாணி, வேதங்கள், பிரஹஸ்பதி போன்ற மஹாத்மாக்கள் புகழு வதுபோல உன்னை சொற் சுத்தத்தாலும் மனசுத்தத்தாலும் ஆராதிக்கிறேன், என்னிடம் விளையாடும் லலிதா தேவியே, கன ஸ்தனி, திரிபுரமாலினி, திரிபுரசுந்தரி, அஷ்ட மாதாக்களால் திரைலோக்ய மோஹன சக்ரத்தில் சேவிக்கப்படும் என் ஹ்ருதய ராணி, வால்மீகி பகவானுல் போற்றப்படும் தர்மவத்ஸலையே, ஆஞ்சநேயரால் கணையாழியின் மூலம் உன்னையும் உன் புருஷ ரான ராமனையும் சேர்த்து வைக்கப்பட்டு நீங்கள் இருவர்களும் இன்பத்தைப் பெற்ற மஹா உத்தம உத்தமியே, நள தமயந்தி களால் சேவிக்கப்பட்ட நளினி, கருடனை வாகனமாகக் கொண்ட வளே, இயற்கையாகப் பூக்கும் மல்லிகைப் பூப்போல என்னிடம் தயை செய்து, பாவங்களையும் அபராதங்களையும் நினைக்காமல் புஷ்பஹாஸம் செய்யும் நீங்கள் நான் கொடுக்கும் பக்ஷணங்களை யும் பூஜை முதலிய உபசாரங்களையும் ஏற்றுக்கொள்ளும்.]

ஸ்ரீ சீதாராமனின் சியாமள நிறத்தையும் கோமளமான அங்கங்களுடன் வெகு அழகுடனும் சோபிக்கும் நித்ய தம்பதிகளையும் ஹரியினுடைய நித்யானபாயினியாகிய லக்ஷ்மி சமேதராக விளங்கும் ஸ்ரீராமனின் ஆஜானுபாஹுவான திவ்ய சரீரத்தையும் கண்ட சகல தாய்மார்களும், பிரேமை சகிதம் பார்த்து, ஆனந்தமடைந்து, மிருதுவான வசனங்களைச் சொன்னார்கள். "உன் மார்க்கத்தில் வந்தவளும், மிக்க க்ரூரமானவளும், பயத்தை உண்டுபண்ணக்கூடிய கொடிய ராக்ஷஸியுமான தாடகையை உன் மிருதுவான அங்கங்களால் எவ்விதம் கொன்றாய்? புஷ்பத்தைவிட மென்மையான உன் சரீரம் அத்தகைய கொடிய செய்கையை எவ்விதம் செய்தது?" (1906)

"பயத்தை உண்டுபண்ணக்கூடிய கொடிய நிசாசரர்கள் யுத்தத்தில் நிபுணர்களாகவும், யுத்த தர்மங்களைப் புறக்கணித்து கபடமாக யுத்தம் செய்பவர்களுமான துஷ்ட மாரீசன் சுபாஹு அவர்களின் கூட்டங்கள் எல்லாவற்றையும் எவ்விதம் நீ கொன்றாய்?" (1907)

"ஹே பிரியமான புத்ரனே, நாங்கள் சத்யமாகச் சொல்கிறோம். பரமகுருவாகிய விஸ்வாமித்திரருடைய கிருபையினால் அல்லவா, உனக்கு விபத்துக்கள் நீங்கி குருகிருபா கடாக்ஷத்தாலும், ஈஸ்வர க்ருபையினாலும் நீயும் உன் தம்பியாகிய லக்ஷ்மணனும் சௌக்யமாக விருக்கிறீர்கள். நீங்கள் யாகத்தை ரக்ஷித்தீர்கள். அதனால் சந்தோஷமடைந்த விஸ்வாமித்திரரிடமிருந்து வித்யாபிரஸாதத்தையும் அடைந்தீர்கள்." (1908)

"உன்னுடைய சரண தூசிகள் பட்டமாத்திரத்தில் முனி பத்னியாகிய அஹல்யை தன் கஷ்டங்களைத் தாண்டி தன் பதியினிடம் சேர்ந்தாள். உங்களுடைய கீர்த்திபுகழ் பூர்ணமாக பதினான்கு புவனங்களிலும் பரவியிருக்கிறது. ஹேராமா, ராஜ சமூகத்தின் முன்பு ஆமையின் முதுகுபோல கெட்டியானதும், வஜ்ரம்போல தேஜஸ் பொருந்தியதும், பர்வதம்போல கடினமானதும், மிகப் பெரியதுமான சிவதனுஸ்ஸை உன்னுடைய கோமளமான கைகளால் எவ்விதம் ஒடித்தாய்?" (1909)

"விஸ்வங்களை ஜயித்ததுமாதிரி, சிகப்பு உதடு உள்ளவளும் அழகான அங்க அடையாளங்கள் உள்ளவளும், சுபாஷிணியும், ஜனக மஹாராஜரின் தவப் பயனான ஜானகியை நீ அடைந்தாய். உங்களுடைய மஹாகிருபையால் உன் சகோதரர்களும் மணம் புரிந்துகொண்டு சௌக்யமாக வீடு வந்துசேர்ந்தார்கள். (யசோதை தேவகி பார்த்து அனுபவித்தமாதிரி,) உங்களுடைய

காரியங்கள், அமானுஷ்யமாகவும், தேவத்தன்மை உள்ளதாகவும் இருக்கின்றன. விஸ்வாமித்திர முனியின் கிருபை பிரஸாதத்தினால் அல்லவா உங்களுடைய அமானுஷ்யசெய்கைகள் சகலருக்கும் நன்மையை விளைவிப்பதாகவும் அம்ருதமயமான சுகத்தைத் தருவதாகவும் இருக்கின்றன.'' (1910)

''ஹே பிரியபுத்திரனே, எங்கள் தாபங்களைப் போக்கும் சந்திரன் போன்ற உன் முகத்தைக் கண்டு எங்கள் ஜன்மம் இத்துடன் சாபல்யமாகி, அர்த்த பலனாக ஆகிவிட்டது. எங்கள் பூர்வ ஜன்மங்களின் புண்ய பலன்களை இப்போதுதான் நாங்கள் பூர்ணமாக அனுபவிக்கிறோம். ஐயா, உன்னுடைய சுப தர்சனத்தை இவ்வளவு நாட்கள் பாராமல், வீணாக கழிந்து வ்யர்த்தமாகிப் போய்விட்டதே. அந்த தினங்களை விரிஞ்சியாகிய பிரும்மதேவர் எங்கள் வாழ்நாட்களாக எண்ணாமல் இருக்கட்டும், எங்கள் ஆயுளின் கழிந்த நாட்களாக அவர் எண்ணிக்கை கொள்ள வேண்டாம்.'' (1911)

ராமச்சந்திரன் தன் மாதர்களின் ஸ்ரேஷ்டமான வார்த்தைகளை அங்கிகரித்து, அவர்களை ஆஸ்வாசப்படுத்தி மிக்க வினயத்துடன் அவர்களை அனுப்பிவித்தார். அதன்பிறகு சம்புபகவான், உமாதேவி, குரு ஸ்ரேஷ்டர்கள், பிராம்மண உத்தமர்கள் இவர்களின் சரணங்களை தியானித்து பகவான் ராமச்சந்திரன் யோக நித்ரையை அடைந்தார். (1912)

[தியானம்

ஹே சீதாராமா, பிரும்மா, விஷ்ணு, சிவன் என்கிற மூன்று அம்ஸங்களையும் சேர்த்து கடல்போல விளங்கும் அமேயாத்மா என்று சொல்லப்படுகிறவரே, தர்மரூபியாக உள்ளவரே, தாபத்ரயத்தைப் போக்கும் குளிர்ந்த செய்கை உள்ளவரே, பக்தர்களின் குறைகளைப் போக்குபவரே, தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக வந்த ராமா, ரங்கநாதா, என் நாதரே, உமா சம்புவினால் ஸேவிக்கப்படுகிறவரே, கௌஸல்யையின் ஸுப்ரஜரே, நரசார்தூலரே, கோவிந்தா, கருடத்வஜரே, கமலாகாந்தா, ஸ்ரீயக்காந்தா, எல்லோருக்கும் மங்களங்களைச் செய்விப்பவரே, யோக நித்ரையிலிருந்து எழுந்து சுரபியினால் பூஜை செய்யப்பட்டு, என்னைக் கடாக்ஷித்தருளும். பசுளை என்கிற பசு சொற்சுத்தத்தினாலும் மனசுத்தத்தினாலும் தன் கன்றுக்கு பால் கொடுத்தபின்பு புலியினிடம் திரும்பிவந்து தன்னையும் புலியையும் உய்வித்தது போல, ஹேசுரபி என்னையும் உய்விக்கவேண்டும். வியாஸரைக்

கண்ணுகவும் உன்னை என் ஆதாரமாகவும் நான் வைத்திருக்கிறேன். பீஷ்மர் சொல்லிய வசனங்கள் யாவற்றிலும் நம்பிக்கை வைத்து, குயுக்தி வாதம் செய்யாமல் உன்னையும் தர்மத்தையும் தவத்தையும் அவைகளுக்காகவே பூஜை செய்கிறேன். தர்மத்திறல் தூக்கிக்கொண்டு போக விரும்புகிறேன். தர்மம் அழியாது. காலமும் அழியாது. காலம் தர்மத்துடன் சேர்ந்து உலகத்தை நடத்துகிறது. காலத்தின் சக்தியாகவிருக்கும் சீதே, உலகம் யாவருக்கும் ஆசார்யனுக நினைக்கப்படுகிறதுபோல, நான் நீங்கள் காட்டிய வழிகளில் போகிறேன். மனத்தை அடக்கின என்னையும் எல்லா ஜனங்களையும் த்ரை லோகங்களையும் காப்பாற்று. மங்களங்களைச் செய். வேங்கடேசா, ராமசீதா.]

பகவான் ராமச்சந்திரன் நித்ரை செய்யும் அழகு எவ்விதம் இருந்தது தெரியுமா? அவருடைய லோசனங்கள் சந்தியா சமயத்தில் சிகப்பு கமல புஷ்பங்கள் தூங்குவதுபோலிருந்தது. அரவிந்த லோசனுகிய பகவான் தன் நேத்ரங்களை மூடி தீர்க்கமான நித்ரையின் வசம் அடைந்ததைக் கண்டு, சகிமார்கள் சத்தம் செய்யாமல் வெளிவந்து ஒருவருக்கொருவர் மங்களமான கேலி விளையாட்டுக்களைச் செய்துகொண்டிருந்தனர். (1913)

ராணிமார்கள் சொன்னுர்கள். "இந்த இரவின் சோபை எவ்விதம் மறக்க முடியாத இரவாக விருக்கிறது. அயோத்யாபுரி ஜனங்களுக்கே ஸ்ருங்காரமயமான நாளாக வல்லவா இந்த சுதினம் விளங்குகிறது." அதன் பிறகு மாமியார்கள் தங்கள் மருமகப் பெண்களை தூங்கும்படி செய்துவிட்டு தங்கள் இருப்பிடம் சென்றுர்கள். அவர்களை விட்டபின்பு அந்த ராணிமார்கள், எவ்விதம் நாகமணியை தன் தலையிலிருந்து கீழிறக்கி, சர்ப்பமானது தன் ஹ்ருதயத்துடன் அதை தழுவுவதுபோல, ஆனந்தமாக விருந்தார்கள். ராணிமார்கள் சீதையை தழுவி அவ்விதம் சந்தோஷமடைந்தார்கள். (1914)

பிராதக்காலம் வந்ததும் பிரபு எழுந்திருந்தார். அருணன் உதையமாயிற்று. கோழிகள் கத்த ஆரம்பித்தன. வந்தி பாடகர்கள் பகவானுடைய ஸுப்ரபாதம் என்கிற மங்கள கீர்த்திகளைப் பாடி எழுப்பினுர்கள். புரஜன புருஷர்கள் பகவானை எழுப்புவதற்கும் வந்தனம் செய்வதற்கும் வந்து கூடினுர்கள். (1915)

பிராமணர்கள், தேவகணங்கள், குருஸ்ரேஷ்டர்கள் அத்ரியாதி ஸப்த ரிஷிகள், பிதா மாதாக்கள் சுபமான மங்கள

ஆசீர்வாதங்களைச் செய்தனர். ராமன் சீதா, அவருடைய பிராதாக்கள், அவர்களின் பத்னிகள் எல்லோரும் சந்தோஷத்துடன் பிரசன்னமடைந்தார்கள். தாய்மார்கள் அவர்களுடைய சுமுகங்களை, சுந்தரவதனங்களை மரியாதை கலந்த அன்புடன் கண்டார்கள். அரசர் அவர்களை அழைத்துக் கொண்டு வெளி வாசலுக்கு வந்தார். (1916)

ஸ்வபாவமாகவே பரிசுத்த ஆத்மாக்களாகிய அந்த நான்கு அரச குமாரர்களும் சௌசம் முதலியவைகளைச் செய்து கொண்டு, புனிதமான ஸரயு நதியில் தீர்த்தமாடி பிராதக்கிரியாவாகிய சந்தியா வந்தனுதிகளைச் செய்து தங்கள் பிதாவிடம் வந்து சேர்ந்தார்கள். (1917)

## நவாஹ பாராயணம்—மூன்றுவது அத்தியாயம்

அரசர் அவைகளைக் கண்டு மிக்க சந்தோஷமடைந்தார். தன் ஹ்ருதயத்துடன் அவர்களைத் தழுவிக் கொண்டார். அவருடைய உத்தரவு பெற்றுக் கொண்டு, அந்த நான்கு குமாரர்களும் ஆஸனத்தில் அமர்ந்தார்கள். ராமதர்சனத்தைக் கண்டு அந்த ராஜதர்பார் முழுவதும் மிக்க சந்தோஷம் அடைந்து தங்கள் புண்யமான நேத்ரங்களுக்கு பரம ஸ்ரேஷ்டமான லாபம் என்று கருதினுர்கள். அவர்களைப் பார்த்ததும் அந்த புண்யாத்மாக்களின் தாபத்ரயங்களும் குளிர்ந்து, அவர்கள் பரம சந்தோஷத்தை அடைந்தார்கள். (1918)

[தியானம்

ஹே ராமா, சீதா ராமா, வாசுதேவரே, நீர் ஆதிதேவதை. த்ரிவிக்ரமரே, தேவர்களாலும் அசுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே, தாமரைக் கண்ணரே, மனஸ் தத்வமாகிய சக்கரத்தையும், அஹங்காரதத்வமாகிய சங்கத்தையும் புத்தி தத்வமாகிய கதையையும், ஸகல உலகங்களுமாகிய பத்மத்தையும் கைகளில் தரித்திருப்பவரே, உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். பொன் உருவம் உள்ளவரும், தேகங்களில் இருப்பவரும், எல்லாவற்றையும், உலகங்களையும் படைக்கும் ஸவிதாவே, விராட் புருஷரே, எக்காலமும் இருப்பவரும் பக்தர்களாகிய பீஷ்மர் ஆஞ்சநேயர், நாரதர், வியாஸர் ஆகியவர்களால் புதிதுபுதிதாக கிடைத்த அனுபவங்களைக் கொண்டு, ஆவலுடன் அனுபவிக்கத் தக்கவரே, எக்காலத்திலும் உம்மிடத்தில் பக்தி உள்ளவனும், நீரே கதியாக விருப்பவனும், ஆசையற்று பற்றுக்களை விட்டு

ஜீவித்திருக்கும் என்னைக் காப்பாற்றும். புருஷோத்தமரே, கிருஷ்ணா, வைகுண்டரே, பாண்டவர்களைக் காப்பாற்றின புண்டரீகாக்ஷரே, நரனுடைய ஸ்நேகிதனான நாராயணா, நாரதரும், வியாஸரும், வஸிஷ்டரும், விஸ்வாமித்திரரும், பதரி காஸ்ரமத்தில் உம்மை பலவிதமாகப் புகழ்ந்து உம்மிடமிருந்து சிறந்த அனுக்ரஹம் பெற்றார்கள். நீரே தர்மம். நீர் எங்கு இருக் கிறீரோ, அங்கு தர்மம் இருக்கும். தர்மம் எங்கு இருக்கிறதோ அங்கு ஜயம் இருக்கும். நீரே விஷ்ணு. நீர் மனிதராகப் பிறந்திருக்கிறீர் என்று பலமுறைகள் பீஷ்மராலும் தர்ம புத்ரராலும் சொல்லப்பட்டு நான் உம்மிடம் சரணம் அடைந்து பல முறைகள் சரணம் அடைந்திருக்கிறேன். எப்போதும் மன அடக்கம் உள்ளவனாகவும், தயையை என் கவசமாகவும் அணிந்து கொண்டும், ஐயா, உம்மிடம் உம்முடைய தயையை எதிர்பார்க்கிறேன். நான் பிராம்மணர்களையும், அறிஞர்களையும், ஆசார்யர்களையும், ரித்விக்குகளான ஸப்தரிஷிகளையும் நான்கு திசைகளிலும் உள்ள ஆசார்ய ஸ்ரேஷ்டர்களையும் எப்போதும் பூஜிக்கிறேன். அர்ஜுனனுடைய சகாவே, சத்யத்தை முயன்று கொண்டு, அதையே என் பலமாக ஜிக்ஞாசுகள் செய்து உம்மை வந்து அடைந்து, உமது பிரஸாதத்தை வேண்டுகிறேன். பகவானே, க்ஷத்திரிய தர்மத்திலும், ராஜ தர்மத்திலும் பற்றுள்ள வராகவும், ரகுகுலத்திற்கும் ஜனகரின் குலத்திற்கும் ஆபரணம் போன்ற நீங்கள் பெரியோர்களைப் பூஜித்து, பித்ருபக்தியில் சிறந்து, எடுத்த விரதத்தைவிடாமல் பரசுராமர் போன்ற சிறந்த வில்லாளிகளை ஜயித்து, ராவணனை ஒருவித சகாயமின்றி வதம் பண்ணின மஹாவீரர். இரண்டாவது மார்க்கண்டேயரைப் போல என் மனதில் எப்பொழுதும் இருக்கிறீர். பரிசுத்தமான க்ஷீராப்தி போல மனமுள்ளவனும், உம் கட்டளையில் நிற்பவனும், பிறருக்கு தீங்கு செய்யாமையை முதன்மையாகக் கொண்டவனும், பெரியோர்களிடம் பக்தி உள்ளவனுமாகிய என்னை ஹே ஸ்வாமி, அனுக்ரஹியும்; தவத்தை தனமாகக் கொண்ட யுதிஷ்டிரனை வாசுதேவர் அனுக்ரஹித்ததுபோல என்னை கிருதார்த்தனாகச் செய்யும். விஸ்வாமித்திரரே, வஸிஷ்டரே, கோபத்தையும் பொருளாசையையும் விட்டவனும், பொறுமையைத் தவிர்த்தவனும், ஒழுக்கங்கள் உள்ளவனுமான என்னைப்பற்றி ராமனிடம் சொல்லவும். ஆசார்ய சம்பந்தம் பெற்ற என்னை ராமா சீதா உங்கள் கிருபைக்கு பாத்ரமாக்க வேண்டும். உங்களால் அனுக்ரஹிக்கப்பட்டு பரமாம் கதியை

அடையக்கடவேன். மோக்ஷத்தைக் கொடுக்கும் உத்தமரே, கிருஷ்ணரே, மனிதராக அவதரித்த ஸம்பூதரே, புண்டரீ காக்ஷரே, புராண ரிஷியே, தியாகராஜர் துளசிதாஸர் ஹ்ருதயத்தில் நடமாடும் ஹம்ஸபேடே, சரதல்பத்தில் படுத்திருந்து பீஷ்மருக்குப் பரிந்து பேசிய கங்கையை ஆஸ்வாசப்படுத்தியவரே, க்ஷத்திரிய தர்மத்தினுல் உலகத்தை பரிபாலனம் செய்த மஹா உத்தமரே, பிராம்மணர்களையும் யக்ஞங்களையும் தவத்தையும் ஸத்யத்தையும் பாதுகாத்த ராஜ ரிஷியே, துர்வாஸ மஹரிஷியினுல் கொடுக்கப்பட்ட சாப தோஷத் தினுலும் தேவர்களின் காரியத்தின் பொருட்டும், என்னைப் போன்ற பக்தர்களிடம் அர்ச்சாவதாரமாக அன்பு காட்டுவதற்கா கவும் அனுக்ரஹிப்பதற்காகவும் அவதரித்த மனித அவதாரம் எடுத்த ராமா, நீயும் ஜானகியும், சம்பு எவ்விதம் உமையிடம் பிரியமாக இருக்கிருரோ அது போலவும், அகஸ்தியர் லோபா முத்ரை எவ்விதம் உங்கள் இருவர்களையும் கௌரவித்தார்களோ, அதுபோலவும் என்னிடம் கிருபையைக் காட்டும்.]

அந்த தர்பாருக்கு வஸிஷ்டர் விஸ்வாமித்திரர் வந்தார்கள். தசரதரால் கொடுக்கப்பட்ட உத்தமமான ஆஸனங்களில் அவர்கள் அமர்ந்தார்கள். அரசர் புத்ரர்கள் சகிதம் அவர்களைப் பூஜித்தார். அந்த இரண்டு முனி ஸ்ரேஷ்டர்களும் ஸ்ரீராமனை பிரேமை கலந்த அனுராகத்துடன் பார்த்து சந்தோஷமடைந்தார்கள். (1919)

வஸிஷ்ட பகவான் ஸ்ரேஷ்டமான தர்மத்தின் நுட்பங்களை இதிஹா ஸத்துடன் அருளிச் செய்தார். அரசர் தன் பரிவாரங் களுடன் அந்த ஸ்ரேஷ்டமான புத்திமதிகளைக் கேட்டு அதன்படி செய்தார். வஸிஷ்டர், முனிகணங்களுக்குக் கூடத் தெரியாத பல அரும் கீர்த்தி புகழ் வாய்ந்த காதி வம்ஸத்தைச் சேர்ந்த குலரத்ன தீபமாகிற விஸ்வாமித்திரரின் ஸ்ரேஷ்டமான கார்ய கௌரவங் களைப் பற்றிச் சொன்னுர். அந்த விஸ்வாமித்திரரின் ஆச்சர்ய மானதும் புண்ய ஸ்ரவண கீர்த்தனமான செய்கைகளைக் கேட்டு, அரசர், அவர் பத்னிகள், தர்பாரில் இருந்த பக்தர்கள், ராம லக்ஷ்மணர்கள், பரத சத்ருக்னன் ஜானகி, அவளுடன் கூட விருந்த தோழிகள் எல்லோரும் கிருதாஞ்சலியுடன் (தவத்தினுல் மேன்மையை அடைந்தவரும், சகல அஸ்திரங்களை அறிந்த வரும், அகங்காரம், மமகாரம், காமம், க்ரோதங்கள், பசி, குறி முதலியவைகளை ஜயித்தவரும், விஸ்வபந்துவும், சரணுகதர்களை கோபம் வைக்காமல் அவர்களின் விரோதிகளிடமிருந்து

காப்பாற்றினவரும் பாபங்களைப் போக்குகிறவரும், தியாகியும், தர்ம ஸ்வரூபமுள்ளவரும் மனம் தளர்ந்த எனக்கு ஸ்வாமியாகிற) விஸ்வாமித்திரரைப் புகழ்ந்துபாடி 'சுக்ருத பிரணமம் செய்தார் கள். (1920)

இந்திரனுக்கும் ஆசார்யரான வாமதேவர் சொன்னர். "காத்புத்ரரான விஸ்வாமித்திரரின் கீர்த்திகளைப்பற்றிய வஸிஷ்ட ருடைய வசனங்கள் யாவும் சத்யமானவை. அவருடைய களங்கமில்லாத கீர்த்தி பிரபாவங்கள் மூன்று லோகங்களிலும் பரவியிருக்கின்றன.'' இந்த ஸத்யமான புகழ் வசனங்களைக் கேட்டு எல்லோரும் ஆனந்தித்தார்கள். பரம சிஷ்யர்களான ராமனும் லக்ஷ்மணனும் எல்லோரையும் விட அதிகமாக ஆனந்தித்தார்கள். (1921)

நிதிய மங்களங்கள் ஏற்படக்கூடிய உத்ஸவங்கள், ஆனந்தத்தைத்தரும் செய்கைகள் மறக்க முடியாத தினங்கள் இரவு பகல்கள், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விசேஷமான சந்தோஷத்துடன் சென்றுகொண்டிருந்தன. அயோத்தியா புரியே ஆனந்த சமுத்திரத்தின் அலைகளால் வீசப்பட்டு, சசல ஜீவராசிகளுக்கும் உத்ஸாஹங்கள் பெருகி, ஆனந்தம் அதிகரிக்க அதிகரிக்க ஒவ்வொரு நாளும் சீதாராம கிருபையினால் மேன்மை பெற்று விளங்கினர்கள். இவைகளை யாரால் சொல்லி விரிவாக விவரிக்க முடியும்? (1922)

நல்லதினத்தில் சுபமுகூர்த்தத்தில் அரச குமாரர்கள் தங்கள் கங்கணங்களை கழட்டினர்கள். மங்களங்கள், ஆனந்தங்கள் விநோதமான சந்தோஷங்களுக்கு குறைவு ஒன்றும் இல்லை. இந்த விதமான புதிய புதிய சுகங்களையும், அனுபவங்களையும், ராம சீதா கிருபையினால் சகல அயோத்யாபுரி வாஸிகளும் அடைந் தார்கள். இதைக் கண்டு தேவதைகள் பிரும்மாவிடம் அயோத் தியில் ஜன்மம் அடைவதற்கு யாசித்தார்கள். (1923)

விஸ்வாமித்திரர் பிரதி தினம் தன் சொந்த ஆஸ்ரமத்திற்குச் செல்ல விரும்பினர். ஆனல் பரம கிருபாளுவான ஸ்ரீராமன் அதிஸ்நேகத்துடனும் கிருதக்ஞையுடனும் தனக்குப் பேருப காரம் செய்ததை மறவாதவரும் உதாரஹ்ருதயத்துடன் அவரைத் தங்கும்படி வேண்டிக்கொண்டதின் பேரில், விஸ்வாமித்திரர் அயோத்தியில் தங்கினர். அரசருடைய அன்பும் விஸ்வாஸமும் நாளுக்கு நாள் அதிகரிக்க, மஹா முனிவர் தசரதரையும் அவருடைய பண்புகளையும் புகழ்ந்தார். இவ்விதமாக சில மாதங்கள் சென்றன. (1924)

ஒரு நாள் விஸ்வாமித்திரர் அரசரிடம் விடைபெற்றுக் கொள்ள அரண்மனை வந்துசேர்ந்தார். அந்த சமயம் அரசர் தன் புத்ரர்களை அழைத்து, அவர்களுடன் பத்தினிமார்களையும் அவரை நமஸ்கரிக்கச்செய்து, பிறகு சொல்ல ஆரம் பித்தார், "ஹே ஸ்வாமி, என்னுடைய ஸகல சம்பத்துக்களும் உங்கள் சொத்து. நாங்கள், எங்களுடைய ஸ்திரீகள் சகிதம் உங்களுடைய சேவகர்கள்." என்று பரம பரீதியுடனும் மன சுத்தத்துடனும் சொன்னார். (1925)

"ஹே முனிரோஜ், என்புத்ரர்களிடம் அதிவாத்ஸல்யத் துடன் இரும். அடிக்கடி தங்களுடைய சுபதர்சனத்தை எங்களுக்குத் தாரும். எங்களை அடிக்கடி ஆனந்தப் படுத்தி அனுக்ரஹம் செய்யும்," என்று சொல்லி அரசர் விஸ்வா மித்திரருடைய சரண கமலங்களை தன் ராணிகள் சகிதம் அவலம் பித்து நமஸ்கரித்தார். பிரேமை வெள்ளம் பொங்குவதின் காரணமாக வார்த்தைகள் வெளிவர மறுத்தன. தழு தழுத்த குரலுடன் தர்மாத்மாவான அவருடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டு அரசர் வணங்கினர். (1926)

பகவானும் தீனர்களிடம் மஹா கருணை உள்ளவரும் பெரிய மனம் உடைய மஹரிஷி விஸ்வாமித்திரர், அரசர், அவருடைய பத்தினிகள், அவருடைய பிள்ளைகள், குடும்பத்தினர் யாவரை யும் பலவிதமாக மங்கள ஆசீர்வாதங்கள் செய்துவிட்டு, தன் சொந்தகிருஹம் சென்றார். அவருடைய ப்ரீதிக்கும் அதற்கேற்ப அவர் நடந்த ரீதிகளையும் கண்டு ஆச்சரியப்படவேண்டும். பிரேமை வாத்ஸல்யத்துடன் கூடின ஸ்ரீராமன் தன்சகோதரர் களோடு அவரை வெகுதூரம் நடத்தி அழைத்துச்சென்று வழி அனுப்பி விட்டு, அவர் உத்தரவின் பேரில் அரண்மனைக்குத் திரும்பிச் சென்றார். (1927)

காதிகுலத்தின் சந்திரன் போல விளங்கும் விஸ்வாமித்திரர் அதிக ஆனந்தத்துடன் ஸ்ரீராமச்சந்திரன் சீதாதேவி இவர் களுடைய ரூபம், ஸ்வபாவங்கள், தசரதருடைய பக்திவினயத் துடன் செய்யப்பட்ட விஸ்வாசம், நான்கு புத்ரர்களுக்கும் ஏற்பட்ட விவாஹமாகிற கௌரவகாரியங்கள், (பரமாத்மாவாகிற ஸவிதாவினுடைய கிருபையால் அங்கீகரிக்கப்பட்ட) சுக்ருத பிரணமங்கள், சேவைகள், சுபதர்சனங்கள் இவைகளால் ஏற்பட்ட மனஉத்ஸாஹங்கள் ஆகியவைகளால் மிக்க ஆனந்த மடைந்து, மனத்தில் அதிபூரித்தவராகி எல்லோருடைய கிருதக் ஞதையையும், அடைந்து, தனது மஹாபாக்யத்தை நினைத்து,

பகவானுடைய பரம ஸௌலப்ய குணங்களில் மூழ்கினவராகி மேலும் அதி ஆனந்தமடைந்தார். (1928)

வாமதேவர், ரகுகுல குருவாகிய வஸிஷ்டபகவான் விஸ்வாமித்திரருடைய அனந்தமான புகழ்பெற்ற கீர்த்திகள் அடங்கிய பலகதைகளைச் சொன்னார்கள். அவைகளைக்கேட்ட அரசர் அதிக ஆனந்தமடைந்து, தன்னுடைய பூர்வ புண்யங்களால் மஹாதீர்த்தமாகிய விஸ்வாமித்திரருடைய கிருபையை அடைந்ததற்கு மிக்க சந்தோஷப்பட்டார். (1929)

அரசரின் ஆணையின்பேரில் எல்லோரும் அவர் அவர்களின் கிருஹம் சென்றனர். ராஜா தசரதரும் தன் புத்ரர்கள் சகிதம் தன் அந்தப்புரத்திற்குச் சென்றார். எங்கு பார்த்தாலும் ஸ்ரீராமனுடைய விவாஹ மஹோத்ஸவங்களின் பெருமைகளையே பற்றி சொல்லிக் கொண்டிருந்தார்கள். இவ்விதமாக சீதாராமனுடைய பவித்திரமான யசஸ்ஸும், மற்றவர்களின் புகழும் மூன்று உலகிலும் பரவியது. (1930)

சீதையுடன் விவாஹம் ஆகி ஸ்ரீராமன் அயோத்திக்கு வந்த பின்பு, அது முதற்கொண்டு சகலவிதமான ஆனந்த சந்தோஷங்கள் உருவம் எடுத்துக்கொண்டு அயோத்திக்குவந்து, அந்த ஊர்வாசிகளை சந்தோஷப்படுத்தியன. பக்தர்களான அந்த அயோத்யாபுர வாஸிகள் ஆனந்தமடைவதைக்கண்டு ஸ்ரீராமனும் சீதையும் மிக்க ஆனந்தமடைந்தார்கள். ராமனும் சீதையும் அதி ஆனந்தமடைந்தவர்களாகவும், ரதிவிலாஸங்களில் அதிஉத்ஸாஹமடைந்தவர்களாகவும், சகலரையும் திருப்தி செய்விப்பவர்களாகவுமிருந்தார்கள். அந்த நித்ய யசஸ் உள்ள திவ்ய தம்பதிகளின் ஆனந்தங்களை சரஸ்வதிதேவியோ சர்ப்பராஜனான ஆதிசேஷன்கூட விவரிக்கமுடியாது. (1931)

துளசிதாஸர் சொல்லுகிறார் :—" என் பிரபு சீதாராமன் சகல மங்களங்களுக்கும் ஆதார நிலையர்கள். அவர்களுடைய விவாஹ மஹோத்ஸவம் எல்லோருக்கும் நித்ய மங்களங்களை விளைவிக்கும். அவர்களுடைய அழகான கீர்த்தி விலாஸங்கள் கவிகளின் குலத்திற்கே அழியாத குல தனம். சகல பாபங்களையும் போக்கி, சகலவிதமான மனோரதங்களையும் நிறைவேற்றும். நானும் என் வாக்கினால் சொல்லி, என்னுடைய ஹ்ருதயத்தையும் சொற்களையும், பக்தி வினயங்களையும், என் கிருதக்ஞதைகளையும் தெரிவித்து என் தோஷங்களையும் பாபங்களையும் விலக்கி என் பவித்திரமான வாழ்க்கையை மீண்டும் சுத்தப்படுத்திக் கொள்கிறேன். என்னால் ஆனது வரை சொல்ல முயன்றேன்.

அவைகளை ஏற்றுக்கொண்டு பகவான் ஸ்ரீராமச்சந்திரன் பரம கிருபையை அடைந்தவராக என்னிடம் ப்ரீதி அடைய வேண்டும்.'' (1932)

தன்னுடைய பவித்திரமான மன, சொற் சுத்தங்களில் இன்னும் அதிகமாகப் புனிதமாக்கப்பட்டு, துளசிதாஸர் இந்த பவித்திரமானதும், நிஜஸத்யபாவனம் பண்ணக்கூடியதுமாகிய ஸ்ரீராமனுடைய பரந்த கீர்த்திகள் அடங்கிய ஸ்ரீராமசீதா விவாஹம் என்கிற கதையைச் சொன்னார். இதனால் அவர் "தான்" சுத்த மடைந்ததாகச் சொன்னார். ஸ்ரீராமச்சந்திரனுடைய புகழ் பெற்ற சரித்திரம் அபாரமான சரித்திரமாகவிருக்கிறது. எந்த கவியினாலாவது எப்பொழுதாவது அப்பேற்பட்ட மஹார்ணவ சமுத்திரத்தின் அக்கரை அடையப்பட்டதா ? இல்லை ; இருக்கவே முடியாது. ஸ்ரீராமனுடைய யக்ஞோபவீதம், விவாஹம் ஆகிற மங்களமயமான உத்ஸவங்களை மிக்க சிரத்தையுடன் கேட்டு, கேட்கவித்து, எவர்கள் ஆனந்தமடைகிறார்களோ, அவர்கள் ஸர்வ காலத்திலும் வைதேஹி ராம பிரசாதமாகிற மஹா கிருபையை நிச்சயமாக அடைவார்கள். (1933)

ஸ்ரீசீதையினுடைய விவாஹ மஹோத்ஸவங்களும் ரகுவீரனுடைய விவாஹமும் அடங்கிய பிரஸங்கங்களை எந்த மனிதர்கள் பிரேமை பக்தியுடன் கீர்த்தனம்பாடி பிறர்களை மகிழ்விக்கிறார்களோ, அவர்களுக்காக பகவான் தானும் உத்ஸாஹம் அடைந்து, அமோகமான ஆனந்தங்களை உண்டுபண்ணுகிறார். இதற்கு காரணம் என்னவென்றால் ஸ்ரீசீதாராமச்சந்திர நாமங்களே சுந்தரயசசின் ஆணிவேர்கள். அவர்களுடைய விசாலமான கீர்த்திகளே சகல மங்களங்களுக்கும் இருப்பிடம். ஆகையால் எல்லோரும் மங்களத்தை அதிகமாக அடைகிறார்கள். (1934)

**மாஸபாராயணம், பன்னிரண்டாவது திறுத்தம்**

**ஜயராம ஜயசீதா, ஜயராம் ஜயசீதா ஜய ஜய**

**கலியுகத்தின் ஸம்பூர்ண பாபங்களை நாசம் செய்யும்**

**ஸ்ரீமத் ராமசரித மானஸ்ஸின் முதல் சோபானமாகிய**

**பாலகாண்டம் முற்றிற்று.**

**சுபம்**

[தியானமும், 1934 ஸ்லோகங்களும்]

